ஸ்ரீரஸ்து.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த

# முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம்

அழகியமணவாளப்பெருமாள் நாயனுர்

அருளிச்செய்த

# ஆசார்யஹ்ருதயம்

ஆகிய இவைநான்கும்

விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள்
அருளிச்செய்த வியாக்கியானத்தையடியொற்றி

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

விளக்கவுரையுடன் கூடியவை.

---

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு நிறைவு நினைவு
மலராகப் பதிப்பிக்கப்பட்டவை.

---

ஸாதாரண ௵

விலை 1௨-00

*1970, 1971.*

ஸ்ரீரஸ்து.
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.
பிள்ளையுலகாசிரியர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம்முநிம்

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே
ஸம்ஸாரபோகிஸந்தஷ்டஜீவஜீவாதவே நம:.

# முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகையின் முன்னுரை.

*மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து துன்பக்கடலுள் துவள்கின்ற நம்போலியர் நல் வீடு பெறுவதற்கு உறுப்பாகத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் பலபலவுண்டு. அவற்றுள் அர்த்த பஞ்சகஜ்ஞானம் மிகவும் முக்கியமானது.

1. பரப்ரஹ்ம ஸ்வரூபஜ்ஞானம், 2. ஜீவாத்ம ஸ்வரூபஜ்ஞானம்,
3. உபாய ஸ்வரூபஜ்ஞானம், 4. புருஷார்த்த ஸ்வரூபஜ்ஞானம்,
5. விரோதி ஸ்வரூபஜ்ஞானம்.

என்கிற இவ்வைந்து விஷயவுணர்ச்சியே அர்த்தபஞ்சகஜ்ஞான மெனப்படும்.

இவ்வர்த்த பஞ்சக ஜ்ஞானத்தைத் **திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம்** என்கிற மூன்று ரஹஸ்யங்களும் வெகு விசதமாகவுண்டாக்குகின்றபடியால் முமுக்ஷுக்களுக்கு இந்த ரஹஸ்ய த்ரயமே முக்கியமாக அறியத்தக்கதாயிற்று

இந்த ரஹஸ்யத்ரயம் அவதரித்த க்ரமம் யாதெனில்; பெரிய திருமந்த்ரமென்றும் மூலமந்த்ரமென்றும் சொல்லப்படுகிற திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமானது பதரிகாச்ரமத்தில் அவதரித்தது. அதாவது, நாராயணமூர்த்தி நரமூர்த்திக்கு இதனை உபதேசித்ததாகச் சொல்லப்படுகிறது. மந்த்ரரத்நமாகிய த்வயமானது ஸ்ரீவிஷ்ணு லோகத்திலே பிராட்டிக்காக வெளியிடப்பட்டதென்று சொல்லப்படுகிறது. சரமச்லோகமென்பது ஸ்ரீபகவத்கீதையிற் சேர்ந்ததாகையாலே திருத்தேர்த்தட்டிலேயிருந்து அர்ஜுநனுக்காக அவதரிப்பிக்கப்பட்டதாம். ஆகவே இம்மூன்று ரஹஸ்யங்களுக்கும் ப்ரவர்த்தகன் ஸர்வேச்வரனேயாவன். இக்காரணத்தினால் ஆசார்ய பரம்பரையில் முதல் ஸ்தானம் ஸர்வேச்வரனுடையதாக ஆயிற்று. "**லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்...... வந்தே குருபரம்பராம்**" என்று கூரத்தாழ்வான் அருளிச் செய்ததும் இது பற்றியேயாம்.

ஆகவிப்படி மஹாதயாளுவான ஸர்வேச்வரனாலே இந்நிலவுலகத்தில் ப்ரவர்த்திப்பிக்கப்பட்ட இந்த ரஹஸ்யத்ரயமானது சொல்வடிவத்தில் சுருங்கியிருந்தாலும் மிகவும் கம்பீரமான அரிய பெரிய பொருள்களையுடையதாதலால் ஸகல சாஸ்த்ர ப்ரவீணர்களான நம் பூருவாசாரியர்கள் இதில் பிரவேசித்து இதன் அர்த்த விசேஷங்களையெல்லாம் அருமருந்தாக உபதேசித்து வந்தார்கள்.

எம்பெருமானார்க்கு முன்புள்ள பூருவாசாரியர்கள் இந்த ரஹஸ்யத்ரயப் பொருள்களை மிகவும் சேமித்து வைத்துக்கொண்டிருந்து வெகு ஏகாந்தமாகவே உபதேசித்து வந்தார்கள். இப்படி வருகையில், எம்பெருமானார் தமது விசாலமான திருவுள்ளத்தினால் ஸகல ஸம்ஸாரிகள் பக்கலிலும் கருணை கரைபுரண்டு, வரம்பு கடந்து தாம் உபதேசித்தும், தம்முடைய சிஷ்யர்களைக்கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். இவ்விஷயம்

**"ஓராண்வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில்**
**ஆசையுடையோர்க்கெல்லா மாரியர்காள் கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின்"**

என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினாலும் அறியத்தக்கது.

எம்பெருமானார் காலம் தொடங்கி ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் விரிவாகவே உபதேசிக்கப்பெற்றாலும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்த விசேஷங்களை அவ்வெம்பெருமானார் காலத்தில் ஏடுபடுத்தினவர்கள் யாருமில்லையென்றே சொல்லலாம்.

ரஹஸ்யத்ரய வியாக்கியானமாகக் கூரத்தாழ்வான் ஒரு க்ரந்தம் அருளிச் செய்திருந்தாரென்று ஊஹிக்க இடமுண்டு; ஸ்ரீமத் வேதாந்த வாசிரியர் அருளிச்செய்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே "ஆழ்வானுடைய சரமச்லோக வ்யாக்கியானத்திலும் இவ்வளவே விவக்ஷிதமாகையால் ஒரு விரோதமுமில்லை" என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுதலால், கூரத்தாழ்வான் ரஹஸ்ய வ்யாக்கியானம் அருளிச் செய்ததாகப் புலப்படுகின்றதன்றோ. ஆனால் அந்த க்ரந்தம் லுப்தம் [மறைந்து விட்டது] என்றே சொல்லப்படுகிறது.

ஆழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் ரஹஸ்யத்ரய வியாக்கியானமாக அருளிச் செய்தது **அஷ்டச்லோகீ** என்கிற ஸம்ஸ்க்ருதக்ரந்தம். இது ஸுப்ரஸித்தமானதே. எட்டு ச்லோகங்கள்கொண்ட இச்சிறிய க்ரந்தத்தில் அர்த்த விசேஷங்கள் பலவும் "பெரிய கனகவரையைச் சிறிய கடுகினில் அடைத்து வைப்பன்" (திருவரங்கக் கலம்பகம்) என்ற கணக்கிலே தொகுத்து வைக்கப்பட்டுள்ளன.

தேவப் பெருமாளுடைய அபராவதாரமென்று ப்ரஸித்தரும், வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரும் ஸர்வஜ்ஞருமான பிள்ளை லோகாசாரியர் தாமே ரஹஸ்ய க்ரந்தங்களை மிக விரிவாகவும் அழகாகவும் அநவத்யமாகவும் அருளிச்செய்தவ ராவர். **அஷ்டாதச ரஹஸ்யம்** என்று ஸுப்ரஸித்தமான க்ரந்தஜாலம் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்ததேயாம்.

இவர்க்குப் பிறகு ஆச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யம் முதலான சில நூல்களை யிட்டருளி ரஹஸ்யார்த்தங்களை வெளியிட்டார். அஷ்டாதசரஹஸ்யங்களுள், **யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ச்ரிய:பதிப்படி** என்னும் க்ரந்தங்கள் ரஹஸ்யத்ரய வ்யாக்கியான மாக அவதரித்தவைகள் இருந்தாலும், **முமுக்ஷுப்படி** என்னும் திவ்ய க்ரந்தமே பலபடி யாலும் பெருமை பெற்றதாயிற்று. மற்ற க்ரந்தங்களானவை அதிஸங்க்ரஹம், அதிக விஸ்தரம், ஸம்ஸ்க்ருத வாக்ய பாஹுள்யம் முதலியவற்றால் குறை பெற்றிருக்குமென்றும் அவ்வகைக் குறைகளுக்கு இடமின்றியே அவை யெல்லாவற்றுக்கும் பின்பு முமுக்ஷுப்படி யென்னும் இந்த க்ரந்தம் அருளிச் செய்யப்பட்டதென்றும், இதன் சீர்மையைக் கண்டு ஆஸ்திகர்கள் அனைவரும் இந்த க்ரந்தத்தையே விசேஷித்துப் பரிக்ரஹிக்கலாயினர் என்றும் அறியக் கிடக்கின்றது. மற்ற க்ரந்தங்களில் அருளிச் செய்யப்படாத பல அபூர்வ விஷயங்களும் இதனில் குடிகொண்டிருக்கின்றனவென்பதும் ஓர் ஏற்றம்.

**முன்னுரை முற்றிற்று.**

ஸ்ரீ:

பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்த

# முமுக்ஷுப்படி

ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்,
மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவி
எளிய நடையில் தெளிய எழுதிய

## ஸாரார்த்த தீபிகையுடன்.



**1. முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.**

**பதவுரை.**

முமுக்ஷுவுக்கு - மோக்ஷத்திலே விருப்பமுடையவனுக்கு,
அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று - அவச்யம் அறியத்தக்க ரஹஸ்யங்கள் மூன்றாகும்.

**விசேஷ விவரணம்**

எம்பெருமானுடைய திருவடிகளைப் பெறவேணுமென்னும் விருப்பத்தினால் ஸம்ஸாரநிலத்தில் ஜிஹாஸை பிறந்தவன் முமுக்ஷு எனப்படுவான். அன்னவனுக்கு மிக அவசியமாக அறியவேண்டியவை மூன்று ரஹஸ்யங்களாம். ஒவ்வொருவரும் ஸ்வரூபத்தையும் உபாயத்தையும் புருஷார்த்தத்தையுமே முக்கியமாக அறிதல்வேண்டும். அம்மூன்றையும் ரஹஸ்யத்ரயமே உள்ளபடி அறிவிக்க வல்லதாதலால் இதுவே முமுக்ஷுக்களுக்கு முக்கியமாக அறியவேண்டுவது என்னக் குறையில்லை. திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்னுமவையே ரஹஸ்யத்ரயமென்று உத்தேசிக்கப்படுகிறது. முமுக்ஷு என்னும் வடசொல் "மோக்தும் இச்சு:" என்கிற வ்யுத்பத்தியினால் தேறும். ஸம்ஸாரவிமோசநத்தில் இச்சைபிறந்தவன் என்றதாயிற்று. ஆத்மப்ராப்தியாகிற கைவல்ய மோக்ஷத்தில் இச்சை பிறந்தவனுக்கும் 'முமுக்ஷு' என்கிற பெயர் உண்டாயினும் இந்த ஸ்தலத்தில் அவனைப்பற்றின விவக்ஷை இல்லை; ஏனென்றால், "அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்று மேலே சொல்லுகிறபடிக்கு அவனுக்கு (இது) அறியவேண்டுவதன்றே. ... ... ... (1)

**2. அதில் ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்.**

அதில் - அந்த ரஹஸ்யத்ரயத்தினுள், ப்ரதமரஹஸ்யம் - இவ்வதிகாரிக்கு முந்துற முன்னம் அறியவேண்டியதான ரஹஸ்யம். திருமந்த்ரம் - திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரம்.

2. முமுக்ஷுவுக்கு அறியவேண்டியவையாகச் சொல்லப்பட்ட மூன்று ரஹஸ்யங்களுக்குள், முந்துற முன்னம் அறியவேண்டியதான ரஹஸ்யம் திருமந்த்ரம்

என்கிற திருவஷ்டாக்ஷரம். இதுவே முந்துற அறியவேண்டுவதென்பானேன்? என்னில்; ஸ்வஸ்வரூபத்தின் உண்மையை நன்கு தெரிந்துகொண்ட பின்பே மற்றவையான உபாயோபேயங்களைத் தெரிந்துகொள்ள முயலவேண்டும் ஆகவே உபாயோபேயங்களைத் தெரிவிப்பனவான மற்றையிரண்டு ரஹஸ்யங்களிற்காட்டிலும் ஸ்வரூபவுண்மையை நன்கு தெரிவிப்பதான திருமந்திரமே முந்துற அறியத்தக்கதென்னத் தட்டில்லை. "ஜீவாத்மா எம்பெருமானுக்கே சேஷப்பட்டவன், எம்பெருமானையே உபாயமாக வுடையவன், எம்பெருமானையே போக்யமாகக் கொள்ளவுரியவன்" என்று தெரிந்து கொள்வதே ஸ்வஸ்வரூபவுண்மையைத் தெரிந்து கொண்டபடியாம். இதனைத் தெரிவிப்பதிலேயே முழுநோக்குடையதான திருமந்திரம் முற்படுவது உசிதமேயாகும்.

திருமந்திரமானது **ப்ரணவமென்றும் மந்த்ரசேஷமென்றும்** இரண்டு பகுதியாயிருக்கும். ஓம் என்பது ப்ரணவமாகும்; **நமோநாராயணாய** என்பது மந்த்ரசேஷமாகும். ப்ரணவத்தை மந்த்ரசேஷம் விவரிக்கின்றது; அப்படியே மந்த்ரசேஷத்தை த்வயமென்கிற ரஹஸ்யம் விவரிக்கிறது; த்வயத்தை சரமச்லோக ரஹஸ்யம் விவரிக்கிறது; ஆக இந்த ந்யாயத்தாலும் திருமந்திரமே முற்படத் தகுவதாயிற்று.

**மந்த்ரம்** என்னும் வடசொல் "**மந்தாரம் த்ராயதே**" என்கிற வ்யுத்பத்தியினால் தேறுகின்றது தன்னை அநுஸந்திக்குமவர்களை ரக்ஷிக்குமது மந்த்ரம் என்றதாயிற்று. மந்த்ரம் செய்கிற ரக்ஷணம் இருவகைப்பட்டதாகும்; 1. சப்தசக்தியாலே ரக்ஷித்தல். 2. அர்த்தத்தை யுணர்த்தி அவ்வழியாலே ரக்ஷித்தல்

(1) திருமந்திரத்தைக்கொண்டு ஜபம் பண்ணியும் ஹோமம் பண்ணியும் காரியங்கொள்ளப் பார்க்கின்ற உபாஸகர்கள் பெறும் ரக்ஷணம் சப்த சக்தியாலே விளையும் ரக்ஷணமாம். (2) எம்பெருமானே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நர்கள் பெறும் ரக்ஷணம் அர்த்த போதநத்தாலே விளையும் ரக்ஷணமாகும். இரண்டாவதான இந்த ரக்ஷணக்ரமத்தை அஷ்டச்லோகியில் பட்டர் ஒரு ச்லோகத்தினால் அருளிச் செய்துள்ளார்; அதாவது—*தேஹாஸக்தாத்மபுத்திர் யதி பவதி பதம் ஸாது வித்யாத் த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோ யதி ஸ்யாத் ப்ரதமம் இதரசேஷத்வதீச்சேத் த்விதீயம், ஆத்மத்ராணோந்முகச் சேத் நம இதி ச பதம் பாந்தவாபாஸலோல: சப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீச் சேத் சதுர்த்தீம் ப்ரபந்ந:" என்பதாம்.

இந்த ச்லோகத்தின் கருத்தாவது:—'தேஹமே ஆத்மா' என்று ஒருவன் பிரமித்தால் அவன் ப்ரணவத்தில் மூன்றாவது பதமாகிய **மகாரத்தை** நோக்கவேண்டும்; மகாரமானது அறிவுள்ளவனான ஆத்மாவைச் சொல்லுவதாதலால், அறிவு இல்லாத தேஹம் ஆத்மாவாக இருக்கமுடியாதென்று அதனால் உணரலாகும். 'தேஹத்திற் காட்டில் வேறுபட்டவன் ஆத்மா' என்று அறியப்பெற்றாலும், 'அந்த ஆத்மா சுதந்திரனே யல்லது பரதந்திரனல்லன்' என்று பிரமிக்கவுங் கூடுமாகையாலே அத்தகைய ப்ரமம் உண்டானால் அப்போது முதற்பதமாகிய **அகாரத்தை** நோக்கவேண்டும். சதுர்த்தீவிபக்தி [நான்காம் வேற்றுமை] ஏறிக் கழிந்திருக்கப்பெற்ற அந்த அகாரமானது 'ஜீவாத்மா பரமாத்மாவுக்கு சேஷப்பட்டவன்' என்கிற பொருளை யுணர்த்துதலால் ஜீவாத்மா

சுதந்திரனல்லன் என்று அதனால் உணரலாகும். எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தாலும் அவனுக்குப் போலவே பிறர்க்கும் அடிமைப்பட்டிருக்கலாமாதலாலும், உலகத்தில் ஒருவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருப்பதான நியமம் காணாமையாலும் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருப்பதோடு கூடவே பிறர்க்கும் அடிமைப்பட்டிருக்கலாமென்கிற ப்ரமம் உண்டானால் அப்போது இரண்டாவது பதமாகிய **உகாரத்தை** நோக்கவேண்டும். உகாரமானது பிரிநிலைப்பொருளதாய் 'எம்பெருமானுக்கே உரியவன்' என்னும் பொருளைக் காட்டுதலால் அந்யசேஷத்வப்ரமம் அதனால் தொலைந்ததாகும். பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கையின்றிக்கே எம்பெருமானொருவனுக்கே அடிமைப்பட்டிருந்தாலும் தன்னை ரக்ஷித்துக்கொள்ளும் விஷயத்தில் தானே முயற்சிசெய்து கொள்ளலாமன்றோ என்று நினைக்குமளவில் **நம:** என்கிற பதத்தை நோக்கவேணும்; தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தனக்கு உரிமையில்லாமையை அந்த **நம:பதம்** காட்டுகையாலே நம்மை ரக்ஷிக்கும் கடமையும் எம்பெருமானையே சேர்ந்தது என்கிற உறுதி அதனாலுண்டாகும். *கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறருமான ஆபாஸ பந்துக்களிடத்தே பற்று உண்டாகுமளவில் நாராயணபதத்தை நோக்கவேணும்; எல்லாவுறவு முறையும் நாராயணனேயென்று அறிதல் வேண்டுமென்கை, அற்ப விஷயங்களிலே ஊற்றம் உண்டாகுமளவில் நாராயணபதத்தின் மேலுள்ள **சதுர்த்தீவிபக்தியை** நோக்கவேணும்; அதனால் எல்லா வடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணுமென்று அபேக்ஷிக்கிறதாகையாலே விஷய ப்ராவண்யத்திற்கு அவகாசம் அறும். ஆக இவ்வளவு அர்த்தங்களைத் திருமந்திரம் தெரிவிக்கின்றதாகையாலே, இப்படிப்பட்ட அர்த்தங்களை யுணர்த்தும் வழியால் இது ப்ரபந்நர்களுக்கு ரக்ஷகமாகுமென்றுணர்க. (2)

**3. திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்.**

**திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி - இத்திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தின் பெருமைக்குத் தகும்படி, ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்கவேணும் - தனக்குண்டான ஆதரம் தோற்ற அசலறியாதபடி மறைத்துக்கொண்டிருந்து அநுஸந்திக்கவேணும்.**

3. இத்திருமந்திரத்தினுடைய பலவகையான பெருமைகள் இனிமேல் சொல்லப்படப்போகின்றன. இதனை அநுஸந்திக்கவேண்டிய முறைமையைத் தெரிவிக்கும் முகத்தால் ஒரு வைபவம் முந்துற முன்னம் காட்டப்படுகிறது. *ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச. ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம்." [ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், ஆதர்வணவேதம் ஆகிய நான்கு வேதங்களும் மற்று எல்லாமும் திருவஷ்டாக்ஷர மந்திரத்திற்குள் அடங்கியுள்ளன] என்று சொல்லியிருக்கிறபடியே ஸகல வேத ஸங்க்ரஹமாயும், *மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம், பவித்ரஞ்ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாதந:* [மந்த்ரங்களுக்குள்ளே சிறந்த மந்த்ரம்; ரஹஸ்யங்களுக்குள்ளே உத்தமமான ரஹஸ்யம்; பவித்ரங்களான வஸ்துக்களுக்குள்ளே பரமபவித்ரம்—திருமந்திரம்] என்று சொல்லுகிறபடியே பரம மந்த்ரமாயும் பரமரஹஸ்யமாயும் பரமபவித்ரமாயும் விளங்குகின்றமையாகிய சீர்மைக்குத் தகும்படியாக, கனிந்த நெஞ்சுடனும் அதிகாரிகளல்லாதாருடைய செவியிலே

விழாதபடியும் இதனை அனுஸந்திக்கவேணும். நெஞ்சு கனிவில்லாமல் சுஷ்கஹ்ருதயனாய் [அதாவது—ஈரமில்லாத நெஞ்சுடனே] அநுஸந்திப்பதும் பிறர் காதிலேபட அநுஸந்திப்பதும் ஆகாது என்கிற நியமமும் இதிலே உறைந்திருக்கும். ... ... (3)

**4. மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது.**

**மந்த்ரத்திலும்** - இத் திருமந்த்ரத்திலும், **மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும்**-இந்த மந்த்ரத்தின் உட்பொருளாயிருக்கின்ற ஸர்வேச்வரன் விஷயத்திலும், **மந்த்ர ப்ரதனான ஆசார்யன் பக்கலிலும்** - இந்த மந்த்ரத்தைத் தனக்கு உபகரித்த ஆசார்யன் விஷயத்திலும், **ப்ரேமம் கனக்க உண்டானால்** - அன்பு அதிசயித்து விளைந்தால், **கார்யகரமாவது** - இம்மந்த்ரம் இவனுக்குக் காரியஞ் செய்யும்.

4. நெஞ்சுகனிந்த அன்புடன் அநுஸந்திக்கவேணுமென்று கீழே சொல்லப்பட்டது, அந்த அன்பு திருமந்திரத்தில் மாத்திரம் உண்டானால் போதுமோ வென்னில், போதாது; இத் திருமந்திரத்திலும் இதற்குப் பொருளாயிருக்கின்ற ஸர்வேச்வரன் விஷயத்திலும் இந்த மந்திரத்தைப் பரம கருணையோடு தனக்கு உபதேசித்த ஆசார்யன் திறத்திலும் அன்பு அதிகரித்திருக்குமாயின், அப்போதுதான் மந்திரம் கார்யகரமாகும். இவ்விஷயத்திற்கு *"மந்த்ரே தத்தேவதாயாம் ச ததா மந்த்ரப்ரதே குரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதமஸாதநம்" என்கிற வசனம் பிரமாணமாக அநுஸந்திக்கவுரியது. ... ... ... ... ... (4)

**5. ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து ஈச்வர கைங்கர்யத்தையுமிழந்து இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன், தன் க்ருபையாலே, இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும்படி தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்.**

**ஸம்ஸாரிகள்** - இவ்விருள்தருமாஞாலத்தில் கட்டுண்டுகிடக்கிற பத்த சேதநர்கள், **தங்களையும் ஈச்வரனையும் மறந்து** - அடிமையே வடிவான தங்களையும் ஸ்வாமித்வமே வடிவான எம்பெருமானையும் அறியாமல் (தங்களுடைய சேஷத்வத்தையும் எம்பெருமானுடைய சேஷித்வத்தையும் அறியாமல் என்றபடி) **ஈச்வரகைங்கர்யத்தையும் இழந்து** - எம்பெருமானுக்கு அடிமைசெய்து வாழப்பெறாமல், **இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே** - முக்கியமானதை இழந்துவிட்டோமேயென்கிற அனுதாபமுமில்லாமல், **ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட** - கடக்கவரிதான ஸம்ஸார ஸாகரத்திலே விழுந்து கிலேசப்படா நிற்கையில், **ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே** - எம்பெருமானானவன் தனது நிர்ஹேதுக கருணையாலே (இதற்கு திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான் என்பதிலே அந்வயம்.) **இவர்கள்** - இந்த ஸம்ஸாரிகள், **தன்னையறிந்து கரைமரம் சேரும்படி** - ஸர்வேச்வரனாகிய தன்னையறிந்து ஸம்ஸாரக் கடலைக்கடந்து அக்கரைப் படும்படியாக, **தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று** - நரநாராயணனான தானே நரனானகோலத்தில் சிஷ்யனாயும் நாராயணனான கோலத்தில் ஆசார்யனாயும் நின்று; **திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்** - அர்த்த பஞ்சக ப்ரதிபாதகமான திருமந்த்ரத்தை ப்ரகாசிப்பித்தருளினான்.

5. இனி இத்திருமந்திரம் அவதரித்த அடைவைக் கூறும் முகத்தால் இதினுடைய வைபவம் விளக்கப்படுகிறது. அநாதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் இடையறாது வருகின்ற பொய்ந்நின்ற ஞானம் பொல்லாவொழுக்கம் அழுக்குடம்பு கட்குப் பரவசப்பட்டுப் பிறப்பிறப்பு முதலிய வருத்தங்களையடைந்து உழல்கின்ற ஸம்ஸாரி சேதநர்கள், தங்களையும் ஈச்வரனையும் மறந்து கிடந்தார்கள். தங்களை மறக்கையாவது-*தாஸபூதா: ஸ்வதஸ் ஸர்வே ஹி ஆத்மாந: பரமாத்மந:, நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவச *[ஸகல ஆத்மாக்களும் இயற்கையாகவே பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவர்கள்; இங்கிலவுலகில் இருக்கிற காலத்தோடு விண்ணுலகமெய்திய காலத்தோடு வாசியற எப்போதும் தாஸத்வமே ஆத்மாக்களுக்கு லக்ஷணம்; வேறுவிதமாக லக்ஷணமில்லை] என்று சொல்லியிருக்கிறபடி இயற்கையாகவே அமைந்த தங்களுடைய ஈச்வர சேஷத்வத்தை மறந்தொழிகையே தங்களை மறக்கையாம். ஈச்வரனை மறக்கையாவது—*பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் சாச்வதம் சிவமச்யுதம். *ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்.* என்பது முதலிய ப்ரமாணங்களிற் சொல்லுகிறபடி எம்பெருமானுக்குள்ளதான ஸர்வேச்வரத்வத்தை அறியாதொழிகையாம்.

இப்படி ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை மறந்ததனாலே எம்பெருமான் விஷயத்தில் கைங்கர்யம் பண்ணுகையாகிற பரம புருஷார்த்தத்தையும் இழந்தார்கள். இழந்தார்களா யினும் 'ஐயோ! இழந்துவிட்டோமே!' என்கிற அநுதாபமாகிலும் உண்டானால் குறை யில்லை; அவ்வநுதாபந்தானுமில்லாதே யிருந்தார்கள். இப்படியிருந்துகொண்டு ஸம்ஸார மாகிற பெருங்கடலினுள்ளே விழுந்து பலவகைக் கஷ்டங்களையும் அநுபவித்துக் கொண்டிருக்கிறபடியைக்கண்ட ஸர்வேச்வரன், *ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்ய மாணே ஸ்வகர்மபி:, ஜீவே து:க்காகுலே விஷ்ணோ: க்ருபாகாப்யுபஜாயதே * [இவ்விதமாக ஜீவாத்மவர்க்கங்கள் ஸம்ஸார சக்ரத்திலே கிடந்து தம் கருமங்களாலே சுழன்றுழன்று வருமளவில், எம்பெருமானுக்கு ஒரு கருணையுண்டாகிறது] என்று சொல்லியுள்ளபடியே தன் திருவுள்ளத்தில் இரக்கங்கொண்டான். அதனால், 'இந்த ஸம்ஸாரிகள் நம்மையறிந்து பிறவிக் கடலைக்கடந்து அக்கரைப்படவேணும்," என்று சிந்தை கொண்டான். அதனால் "நரநாரணனாய் உலகத்து அறநூல் சிங்காமை விரித்தவன்" என்கிறபடியே நரநாராயண ரூபேண இரண்டுபடியாக அவதரித்து நரனை தான் சிஷ்யனுமாய் நாராயணனை தான் ஆசார்யனுமாய் நின்று, ஸகல சாஸ்த்ர ஸங்க்ரஹமாயும் அர்த்த பஞ்சகத்தை ஸ்பஷ்ட மாகக் காட்டுமதாயுமுள்ள திருமந்திரத்தை வெளியிட்டருளினான். ... ... (5)

**6. சிஷ்யனாய் நின்றது—சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை யறிவிக்கைக்காக.**

**சிஷ்யனாய் நின்றது - ஆசார்யர்களில் தலைவனான தான் சிஷ்யத்வத்தையும் ஏறிட்டுக்கொண்டு நின்றதானது. (எதற்காகவென்னில்,) சிஷ்யனிருக்கு மிருப்பு நாட்டாரறியாமையாலே - சிஷ்யனிருக்கவேண்டிய ரீதியை இவ்வுலகத்தவர்கள் அறியாமையாலே, அத்தை அறிவிக்கைக்காக - அதனை ஸ்வாநுஷ்டானத்தாலே அறிவிப்பதற்காகவே.**

6. திருமந்திரத்தை வெளியிடவேண்டிய அவசியம் நேர்ந்தால் ஆசார்யனாக மாத்திரம் நின்று வெளியிட்டால் போராதோ? தானே சிஷ்யனாகவும் ஒரு கோலம்

பூணவேணுமோ? என்னில்; சிஷ்யனிருக்கவேண்டிய இருப்பை உலகத்தார் அறியாமை யாலே அந்த சிஷ்ய லக்ஷணத்தைத் தன்னுடைய அனுட்டான முகத்தாலே அறிவிக்க வேண்டியே சிஷ்யனுமாய்க்கொண்டு நின்றது. சிஷ்ய லக்ஷணத்தை நாட்டார்க்கு அறிவிக்கவேண்டுமாகில் உபதேசத்தாலே அறிவிக்கலாகாதோ? அனுட்டானத்தாலேயே அறிவிக்கவேண்டுமோவெனில்; உபதேசத்தாலே அறிவிக்குமளவில் "தனக்கு ஒரு பெருமை தேடிக்கொள்ள வந்தான்போலும்" என்று நினைத்துவிடவுங்கூடும்; அப்படியல்லாமல் அனுட்டானத்தாலே அறிவிக்குமளவில் 'நமக்கும் இது வேணும்' என்று விரும்பிப் பற்றவுடலாயிருக்கும்: ஆனது பற்றியே சிஷ்யனுமாய் நின்றது.

சிஷ்யனிருக்கவேண்டியவிதம் யாதெனில்; *ஆஸ்திகோ தர்மசீலச் ச சீலவாந் வைஷ்ணவச் சுசி:, கம்பீரச் சதுரோ தீரச் சிஷ்ய இத்யபிதீயதே* என்கிறவிது சிஷ்ய லக்ஷணம் கூறுகிற ஒரு பிரமாணம்; (இதன் பொருள்) சாஸ்த்ரவிச்வாஸ முடையவனும், சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட தருமங்களை அனுட்டிக்க வேணுமென்கிற மனமுடைய வனும், அதற்குத் தக்கபடி ஆசாரமுடையவனும், விஷ்ணுபக்தியுடையவனும், இவ்வளவால் வந்த தன் பெருமை நெஞ்சில் தட்டாதவனும், ஆசார்ய விஷயத்தில் தனக்குண்டான அன்பு பிறரால் அளவிடவொண்ணுதபடியிருப்பானும், ஆசார்யனை அனுவர்த்திப்பதில் சதுரனும், ஆசார்ய கைங்கர்யத்தில் துணிவு உடையவனுமிருப்பான் யாவன் அவனே சிஷ்யனென்று சொல்லப்படுவானென்கை. *சரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம குணாந் அஸூந், குர்வர்த்தம் தாரயேத் யஸ்து ஸ சிஷ்யோ நேதரஸ் ஸ்ம்ருத:.* என்பதும் ஒரு பிரமாணம். தன்னையும் தனது உடைமைகளையும் ஆசார்யனுக்கென்றே வைத்துக்கொண்டிருப்பவன் யாவனோ அவனே சிஷ்யனுவான் என்றபடி.

*ஸத்புத்திஸ் ஸாதுஸேவீ ஸமுசிதசரித: தத்வபோதாபிலாஷீ சுச்ரூஷு: த்யக்த மாந: ப்ரணிபதநபர: ப்ரச்நகாலப்ரதீக்ஷ:, சாந்தோ தாந்தோநஸூயு: சரணமுபகத: சாஸ்த்ர விச்வாஸசாலீ சிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவிதபிமதம் தத்வதச் சிக்ஷணீய:* என்பது ந்யாஸவிம்சதியில் ச்லோகம். இதுவும் சிஷ்யலக்ஷணத்தை விரிவாகத் தெரிவிக்குமது. (இதன் பொருள்.) இன்னது த்யாஜ்யம் இன்னது உபாதேயம் என்கிற பகுத்தறிவு உடையவனும் அதுக்கடியாகப் பெரியோர்களைப் பணியுமவனும், ஞானத்திற்குத்தக்க அனுட்டானத்தையுடையவனும், உண்மைப் பொருளையுணர விருப்ப முடையவனும் ஆசார்யனுக்குக் குற்றேவல் செய்பவனும், அஹங்கார மற்றவனும் ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்பவனும், கேட்கும் ஸமயத்தை எதிர்பார்த்திருப்பவனும், உள் இந்திரியங்களையும் வெளியிந்திரியங்களையும் அடக்கியிருப்பவனும், அஸூயை யில்லாதவனும், குருகுலவாஸம் பண்ணுமவனும், சாஸ்த்ரங்களில் நம்பிக்கையுள்ளவனும், நன்றியறிவுள்ளவனுமான சிஷ்யன் பரீக்ஷாபூர்வகமாகத் திருத்திப் பணி கொள்ளப்பட வேண்டியவன் என்கை. ஆக இப்படிப்பட்ட சிஷ்ய லக்ஷணத்தை உலகத்தவர்களுக்கு உணர்த்துகைக்காகவே தானே சிஷ்யனுமாய் நின்றுனென்றதாயிற்று. ... (6)

**7. ஸகல சாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞானம் ஸ்வயமார்ஜிதம் போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞானம் பைத்ருகதனம் போலே.**

**ஸகல சாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞானம் - ச்ருதிகள் ஸ்மிருதிகள் முதலான எல்லா சாஸ்திரங்களாலும் சேதநனுக்கு உண்டாகின்ற ஞானமானது, ஸ்வயமார்ஜிதம் போலே - தானாகவொருவன் சிரமப்பட்டுச் சம்பாதிக்கும் பொருள்போலே மிகவும் ஆயாஸ ஸாத்யமாயிருக்கும்; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞானம் - திருவஷ்டாக்ஷரமந்திரத்தினால் ஆசார்யோபதேசமடியாகப் பிறக்கும் ஜ்ஞானமானது, பைத்ருகதனம் போலே - பித்ருபிதாமஹ பரம்பரையாய்வந்த பொருள்போலே எளிதாயிருக்கும்.**

7. உலகில் எம்பெருமான் காட்டிக்கொடுத்த பலபல சாஸ்த்ரங்கள் இல்லையோ? அவற்றை அதிகரித்து ஞானம் பெற்றாலாகாதோ? *ஞானக்கலைகள்* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே அந்த சாஸ்த்ரங்களும் ஞானத்திற்கு ஸாதனமாகத்தானேயிருக்கின்றன; அவற்றைவிட்டுத் திருமந்த்ரத்தினாலேயே ஞானம் பெறவேணுமென்று நியதியுண்டோவென்ன; அந்த சாஸ்த்ரங்களினால் ஸம்பாதிக்கப்படும் ஞானத்திற் காட்டிலும் திருமந்த்ரத்தினால் ஸம்பாதிக்கப்படும் ஞானமே மிகச் சிறந்தது என்னுமிடம் த்ருஷ்டாந்தத்துடன் மூதலிக்கப்படுகிறது. ஒருவன் தானே தேஹச்ரமங்கள் பட்டுப் பொருளீட்டுகின்றான்; மற்றொருவன் தான் சிறிதும் சிரமப்படவேண்டாதே தன்னுடைய முன்னோர்கள் சேமித்துவைத்த பொருளையநுபவிக்கின்றான்; இவ்விருவரும் பொருளை அநுபவிக்கின்றார்களெனினும் முதல்வன் அநுபவிப்பது ஆயாஸபூர்வமாகவும், பிந்தினவன் அநுபவிப்பது அநாயாஸமாகவுமுள்ளது. அதுபோலவே சாஸ்த்ரங்களால் பெறும் ஞானம் மிகவும் ஆயாஸப்பட்டுப் பெறவேண்டியிருத்தலால் வருத்தம் விஞ்சியிருக்கும்; அருளே வடிவெடுத்த ஆசார்யன் நிஷ்க்ருஷ்டமாக உபதேசித்தருளும் அர்த்த விசேஷங்கள் திருமந்த்ரம் மூலமாக நமக்குக் கிடைக்கின்றமையால் இவ்வர்த்த ஜ்ஞானம் வருத்தமற்றிருக்கும். ... ... ... ... (7)

**8. பகவத் மந்த்ரங்கள் தானநேகங்கள்.**

**பகவந்மந்த்ரங்கள் தான் அனேகங்கள்-எண்ணிறந்த பகவத் குணங்களையும் அக்குணங்களுக்குப் பரீவாஹ ரூபங்களான அவதாரங்களையும் சார்ந்திருக்கின்ற மந்த்ரவிசேஷங்களானவை எல்லையில்லாதவையாயிருக்கும்.**

8. சாஸ்த்ரங்களின் மூலமாக அறிவு ஸம்பாதிப்பதில் ஆயாஸமுண்டு என்கிற விஷயத்தை அப்படியே இசைந்துகொள்வோம்; மந்த்ரோபதேசம் மூலமாகவே அறிவு பெறவேணுமானாலும், திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தையே கொள்ளவேணுமென்று என்ன நிர்ப்பந்தம்? மற்றும் பல பல மந்த்ரங்கள் இல்லையோ? என்று கேள்வியுண்டாக; ஸகல மந்த்ரங்களிற் காட்டிலும் திருமந்த்ரத்திற்குண்டான ஏற்றத்தைத் தெரிவித்தருள விரும்பி, எம்பெருமான் விஷயமான மந்த்ரங்கள் அனேகம் உள்ளனவென்பதை முந்துற இசைந்து அவற்றை இரண்டு வகுப்பாகப் பிரித்து ஒரு வகுப்பிலே நமக்கு ஊற்றமில்லாமையைக் காட்டி, மற்றொரு வகுப்பிலே திருமந்த்ரமே பலபடியாலுஞ் சிறப்புற்று விளங்குவதென்பதை விரிவாக அருளிச்செய்கிறபடி.

எம்பெருமானுடைய திருக்குணங்கள் எண்ணிறந்தவை; அந்தத் திருக்குணங்களடியாக ஏற்படுகின்ற அவதாரங்களும் எண்ணிறந்தவை. இதுபோலவே திருக்

குணங்களைப்பற்றின மந்த்ரங்களும் எண்ணிறந்தவை, திருவவதாரங்களைப்பற்றின் மந்த்ரங்களும் எண்ணிறந்தவை. மந்த்ரங்களானவை எம்பெருமானுடைய திருக் குணங்களைப்பற்றித் தெரிவிப்பனவாகச் சில இருக்கும்; திருவவதாரங்களைப்பற்றித் தெரிவிப்பனவாகச் சில இருக்கும். அந்தத் திருக்குணங்களுக்கும் திருவவதாரங்களுக்கும் தொகையில்லையென்றபோதே அவற்றைப்பற்றின மந்த்ரங்களுக்கும் தொகையில்லை என்பது விளங்கிற்று. ... ... ... ... (8)

**9. அவைதான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம்.**

**அவைதான்** - அந்த அஸங்க்யேயங்களான பகவன் மந்த்ரங்களானவை, **வ்யாபகங்களென்றும்** - ஸர்வவ்யாபகமான பகவத் ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கையாலே வ்யாபகமந்த்ரங்க ளென்றும், **அவ்யாபகங்களென்றும்** - பகவதவதாரகுணசேஷ்டிதங்களில் ஓரொன்றை ப்ரதிபாதிக்கையாலே அவ்யாபகங்களென்றும், **இரண்டுவர்க்கம்** - இருவகை வகுப்பாகப் பிரிக்கப்படும்.

9. எம்பெருமானைப்பற்றின மந்த்ரங்களெல்லாம் ஒரே வகுப்பாக இருப்பதில்லை; வ்யாபகமந்த்ரங்களென்றும், அவ்யாபகமந்த்ரங்களென்றும் ஆக இரண்டு வகையாக வகுக்கப்படுகின்றன. 'எம்பெருமானுடைய ஸ்வரூபம் ஸர்வவ்யாபகம்' என்னுமிடத்தைக் காட்டுகின்ற மந்த்ரங்கள் வ்யாபக மந்த்ரங்களாகவும், அங்ஙனன்றிக்கே, எம்பெருமா னுடைய அவதாரங்களோ குணங்களோ சேஷ்டிதங்களோ இவற்றில் ஓரொன்றைக் காட்டுகின்ற மந்த்ரங்கள் அவ்யாபக மந்த்ரங்களாகவும் வகுக்கப்படுகின்றன. ... (9)

**10. அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்.**

**அவ்யாபகங்களில்** – கீழே காட்டிய விவரணப்படி அவ்யாபகங்களான ஸகல மந்த்ரங்களிற் காட்டிலும், **வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்** - நாராயண வாஸுதேவ விஷ்ணுநாமங் களைக்கொண்ட அஷ்டாக்ஷரி, த்வாதசாக்ஷரி, ஷடக்ஷரி என்கிற மூன்று வ்யாபக மந்த்ரங்களும் சிறந்தவை.

10. கீழ் இரண்டு வகுப்பாகப் பிரிக்கப்பட்ட மந்த்ரங்களுள் அவ்யாபக வகுப்பிற் சேர்ந்த மந்த்ரங்களிற்காட்டிலும் வ்யாபக வகுப்பில்சேர்ந்த மந்த்ரங்கள் சிறந்தவை. அந்த வ்யாபக வகுப்பிலும் மூன்று மந்த்ரங்களே ச்ரேஷ்டங்கள். ***நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்*** என்கிறவிது காயத்ரியென்று ப்ரஸித்தம். இதில் நாராயண, வாஸுதேவ, விஷ்ணு என மூன்று திருநாமங்கள் ஓதப்பட்டுள்ளன. இவை மூன்றும் ஸர்வ வ்யாபகமான பகவத் ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கின்றனவாதலால் வ்யாபக மந்த்ரங்களாகும். அவ்யாபக மந்த்ரங்களிற் காட்டிலும் இம்மூன்று வ்யாபக மந்த்ரங்களும் சிறந்தவைகளாம்.

மேலே எடுத்துக்காட்டிய விஷ்ணு காயத்ரியில் நாராயண வாஸுதேவ விஷ்ணு சப்தங்கள் உள்ளனவேயன்றி மந்த்ரங்கள் இல்லையேயென்று சங்கை பிறக்கக்கூடும். உள்ளவை நாமங்களேயானாலும், அவை அந்த மூன்று மந்த்ரங்களுக்கும் உள்ளீடான நாமங்களேயாகையாலும், ஸகல மந்த்ரங்களுக்கும் பொதுவான ப்ரணவம், நமஸ்ஸு,

சதுர்த்தி ஆகிய இவைகளை இவற்றோடே சேர்த்தால் மந்த்ரங்களாக ஆக்கக்கூடியவை யாகையாலும் விஷ்ணு காயத்ரியிலுள்ள அந்த மூன்று நாமங்களும் மூன்று மந்த்ரங் களுக்கும் உபலக்ஷணமாகுமென்று கொள்க. ... ... ... (10)

**11. இவை மூன்றிலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதானம்.**

**இவை மூன்றிலும் வைத்துக் கொண்டு - அவ்யாபகமந்த்ரங்களிற் காட்டிலும் சிறந்தவையான வ்யாபகமந்த்ரங்கள் மூன்றினுள்ளும், பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம் - திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரம் ப்ரதானமாயிருக்கும்.**

**11. *ஓம் நமோ நாராயணாய* ஓம் நமோ பகவதே வாஸுதேவாய* ஓம் நமோ விஷ்ணவே*** என்கிற வ்யாபக மந்த்ரங்கள் மூன்றினுள்ளும், பெரிய திருமந்த்ரம் என்று சொல்லப்படுகிற ஸ்ரீமதஷ்டாக்ஷர மஹாமந்த்ரமே மேம்பட்டிருக்கும். *யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத் பர:, ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷ ராத்பர:. என்று நாரதீய—அஷ்டாக்ஷர ப்ரஹ்மவித்யையில் சொல்லிற்று. தெய்வங் களுக்குள்ளே நாராயணனுக்கு மேற்பட்ட தெய்வமில்லாதாப் போலவே மந்த்ரங்களுக் குள்ளே அஷ்டாக்ஷரிக்கு மேற்பட்ட மந்த்ரமில்லையென்பது இதன் பொருள். *பூத்வோர்த்வபாஹுரத்யாத்ர ஸத்யபூர்வம் ப்ரவீமி வ:, ஹே புத்ர சிஷ்யா:! ச்ருணுத ந மந்த்ரோஷ்டாக்ஷராத் பர:.* என்று நாரஸிம்ஹபுராணத்தில் சொல்லிற்று. ஓ மக்களே! மாணுக்கர்களே! உங்களுக்கு ஆணையிட்டுக் கைதூக்கிச் சொல்லுகின்றேன்; திருவஷ்டாக்ஷர மந்த்ரத்திற்கு மேற்பட்ட மந்த்ரமில்லை—என்றபடி. விஷ்ணு காயத்ரியில் நாராயண மந்த்ரத்தை முந்துற முன்னம் எடுத்திருக்கையாலும் இதன் ஏற்றம் அறியவெளிது. ... ... ... ... ... (11)

**12. மற்றையவை யிரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு.**

**மற்றையவையிரண்டுக்கும் - அஷ்டாக்ஷரமஹாமந்த்ரம் தவிர்ந்த த்வாதசாக்ஷரியும் ஷடக்ஷரியு மாகிய இரண்டு வ்யாபகமந்த்ரங்களுக்கும், அசிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு - குத்ருஷ்டிகள் மிகவும் ஆதரித்துப் போருகையாகிற அசிஷ்டபரிக்ரஹமும், அத்யா ஹாரம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாகிற அபூர்த்தியுமுண்டு.**

**12.** வாஸுதேவ மந்த்ரமும் விஷ்ணு மந்த்ரமும், நாராயண மந்த்ரம் போலவே வ்யாபக மந்த்ரங்களாகப் பேர்பெற்றிருக்கச் செய்தே அவை யிரண்டிற்காட்டிலும் இதுவே சிறந்தது என்னும்படியாக அவற்றுக்குண்டான தாழ்வு ஏதென்ன; அவை யிரண்டுக்கும் அசிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு என்று காரணம் கூறப்படுகிறது.

அசிஷ்டபரிக்ரஹமாவது நிர்விசேஷ சின்மாத்ர வஸ்துவாதிகளான குத்ருஷ்டிகளால் ஆதரிக்கப்படுகை. அபூர்த்தியாவது—ப்ரதிபாதிக்கப்படவேண்டிய அர்த்தங்களெல்லாம் குறையற ப்ரதிபாதிக்கப்படாமல் ஸ்வல்பமாகம் ப்ரதிபாதிக்கப் பெற்றிருக்கை. விஷ்ணு மந்த்ரத்தையும் வாஸுதேவ மந்த்ரத்தையும் குத்ருஷ்டிகள் அதிகமாக ஏன் ஆதரித்துப் போருகிறார்களென்றால்; கேண்மின்; அவர்களோ நிர்விசேஷ சின்மாத்ர ப்ரஹ்மவாதிகள், பகவானுக்கு விசேஷணமாகக்கூடிய குணவிக்ரஹ விபூதிகளொன்றையும் ஸத்யமாகக்

கொள்ளாமல் [விசேஷண சூந்யமாய்] வ்யாபகமான ஸ்வரூபமாத்திரத்தையே அங்கீகரிப்பவர்கள் என்றபடி. விஷ்ணு வாஸுதேவ சப்தங்கள் விசேஷணங்களான குணவிக்ரஹ விபூதிகளைக்காட்டாமல் வ்யாபகமான ஸ்வரூபமாத்திரத்தையே காட்டுகின்றனவாதலால் இவற்றிலே அவர்களுக்கு ஆதரம் மிக்கது

அசிஷ்டர்கள் பரிக்ரஹித்துவிட்டாலென்ன? நாம் உண்ணுகிற வஸ்துவை அசிஷ்டர்களும் உண்பர்களானால் அதுகொண்டு அதற்கு ஒரு குறை சொல்லலாகுமோ? என்று சிலர் கேட்கக்கூடுமாதலால் இரண்டாவது காரணம் அருளிச்செய்கிறார்.— **அபூர்த்தியுமுண்டு** என்று.

வ்யாப்தியைச் சொன்னமாத்திரத்தில் த்ருப்தி பிறவாது; வியாபிக்கப்படும் பொருள் இன்னதென்று காட்டவேணும்; வியாபிக்கிறவிதம் இன்னதென்று காட்டவேணும்; வியாபிப்பதற்குப் பலன் இன்னதென்று காட்டவேணும்; வியாபகனுடைய குணங்களையும் காட்டவேணும். விஷ்ணுமந்த்ரம் இவற்றைக் காட்டவில்லை. வாஸுதேவ மந்த்ரமோ வென்னில்; [**வஸதீதி வாஸு:**] என்கிற வ்யுத்பத்தியாலே அந்தர்யாமித்வத்தைத் தெரிவிக்கிறபடியால் வியாபிக்கிறவிதத்தைக் காட்டிற்றாக ஆனாலும் வியாபிக்கப்படுகிற வஸ்துவுக்கு வாசகமான சப்தம் இல்லை; குணங்களைக்காட்டுகிற சப்தம் அடியோடு இல்லை. அதற்காகவே '**பகவதே**' என்று வேறொரு சப்தம் இதில் கூட்டிக்கொள்ளப்பட வேண்டியதாகிறது எதற்காக வ்யாப்தி? என்று வ்யாப்தியின் பலனும் சொல்லப்பட வில்லை; ஆகையாலே த்வாதசாக்ஷரியான வாஸுதேவ மந்த்ரமும் அபூர்த்தியையுடைய தாயிற்று. திருவஷ்டாக்ஷர மந்த்ரத்திற்கு இப்படி அபூர்த்தி சொல்லவொண்ணாது; நாரசப்தத்தாலே வியாபிக்கப்படும் வஸ்துக்கள் சொல்லிற்று. நாராயணபதத்தில் பஹுவ்ரீஹிஸமாஸத்தாலே அந்தர்யாமித்வம் சொல்லிற்று தத்புருஷ ஸமாஸத்தாலே தாரகத்வம் சொல்லிற்று. அயந சப்தத்தில் கரணே வ்யுத்பத்தியால் உபாயத்வமும், கர்மணி வ்யுத்பத்தியால் உபேயத்வமும் சொல்லிற்று. ஆக, வ்யாப்ய பதார்த்தங்கள், வ்யாபந ப்ரகாரம், வ்யாப்திபலன் வ்யாபகனுடைய குணங்கள் ஆகிய எல்லாமும் சொல்லப்பட்டனவாதலால் இதுவே அர்த்தபூர்த்தியை யுடையதாயிற்று. ... (12)

**13. இத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்.**

**இத்தை - இத்திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை, வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள் - நாராயணாநுவாகம், ஸுபாலோபநிஷத்து, மஹோபநிஷத்து, அந்தர்யாமிப்ராஹ்மணம் முதலான வேதங்களும், வேதார்த்தங்களை விசதீகரிக்கத் தோன்றிய வ்யாஸர் முதலான பரமர்ஷிகளும், பொய்கையார் முதலாகத் திருமங்கை யாழ்வாரீறாகவுள்ள ஆழ்வார்களும், ஸ்ரீமந்நாதயாமுநயதிவராதிகளான ஆசாரியர்களும் மிகவும் ஆதரித்திருப்பது காணாநின்றோம்.**

13. பெரிய திருமந்த்ரம் தவிர்ந்த மற்ற மந்த்ரங்களுக்கு அபூர்த்தி காரணமாகவே அசிஷ்ட பரிக்ரஹம் ஏற்பட்டதுபோல, திருமந்த்ரத்திற்கு அர்த்த பூர்த்தி காரணமாகவே சிஷ்ட பரிக்ரஹாதிசயம் ஏற்படவேண்டியது ப்ராப்தமாதலால் அங்ஙனம் ஏற்பட்டிருக்கின்றமை நிரூபிக்கப்படுகிறது. வேதங்கள் என்றது வேதங்களின் மௌலி

பாகமாகிய உபநிஷத்துக்கள் என்றபடி. பல உபநிஷத்துக்களிலும், மஹர்ஷிகள் பணித்த இதிஹாஸ புராணங்களிலும் ஆழ்வாரருளிச் செயல்களிலும் ஆசாரியர்களின் உபதேச பரம்பரையிலும் திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரப் பெருமை ஸுப்ரஸித்தமேயாம். (13)

**14. வாச்யப்ரபாவம் போலன்று, வாசகப்ரபாவம்.**

**வாசகப்ரபாவம்** - பகவானுக்கு வாசகமான மந்த்ரத்தினுடைய பெருமை, **வாச்யப்ரபாவம் போலன்று** - தனக்கு வாச்யனுயிருந்துள்ள எம்பொருமானுடைய பெருமை போன்றதன்று; (அதைவிட அதிகமானது என்றபடி.)

14. மற்ற மந்த்ரங்களிற்காட்டிலும் திருமந்த்ரம் மிகச்சிறந்ததென்று இது வரையில் நிரூபிக்கப்பட்டது; எம்பொருமானைக்காட்டிலுங்கூட இத்திருமந்த்ரம் சிறப்புற்றதென்கிறது இனி.

**வாச்யன்** எம்பெருமான்; **வாசகம்** திருமந்த்ரம். எம்பெருமானுடைய பெருமை எவ்வளவோ அவ்வளவேயன்று திருமந்த்ரத்தினுடைய பெருமை. இஃது அதிற்காட்டிலும் விஞ்சியது என்க. ... ... ... (14)

**15. அவன் தூரஸ்த்தனானாலும் இது கிட்டி நின்று உதவும்.**

**அவன் தூரஸ்தனானாலும்** - வாச்யனான எம்பெருமான் ஸமீபஸ்தனாகவல்லாமல் தூரஸ்தனாயிருந்தாலும், **இது கிட்டி நின்று உதவும்** - வாசகமானவிது அணுகியிருந்து, தன்னைச் சொன்னவர்களுடைய அபேக்ஷிதங்களை ஸாதித்துக் கொடுக்கும்.

15. வாச்யனான எம்பெருமானுடைய பெருமையிற்காட்டிலும் வாசகத்தினுடைய பெருமை அதிகம் என்பது எத்தாலே தெரிகிறதென்னில், வாசகமான விதற்கு வாச்யனான எம்பெருமான் ஸமீபஸ்தனல்லாமல் தூரத்திலிருந்தானாகிலும் அக்காலத்திலும் வாசகமானவிது ஸமீபஸ்தமாக இருந்துகொண்டு, தன்னை உச்சரித்தவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுக்குமதனால் தெரிகின்றதென்கை (15)

**16. த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே.**

**த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே** - ஸதஸ்ஸிலே துச்சாஸநனால் பரிபவிக்கப்பட்ட த்ரௌபதிக்கு அவ்வாபத்திலே சேலையை வளர்த்துக் கொடுத்து ரக்ஷணம் பண்ணினது கோவிந்த நாமமேயன்றோ.

16. வாச்யனான எம்பெருமான் வெகுதூரத்திலிருக்கச் செய்தேயும் வாசகமானது ஸமீபஸ்தமாய்க் கொண்டு உதவுகிறபடிக்கு ஒரு உதாஹரணம் காணலாம்; பாண்டவர்கள் சூதிலே தோற்று த்ரௌபதியை இழந்தமை ப்ரஸித்தம்: அவளைப் பெரியதொரு ஸதஸ்ஸிலே துச்சாஸநன் வஸ்த்ராபஹாரம் பண்ணத் தொடங்கினான், அப்போது த்ரௌபதியானவள் தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ள முயன்று பார்த்தும் அந்த முயற்சி பயன்படாமை கண்டாள். 'மஹத்தான ஆபத்து உண்டானால் பகவானான ஹரியை ஸ்மரிக்கக்கடவது' என்று ஏற்கெனவே ஒருகால் தனக்கு வஸிஷ்ட முனிவர் சொல்லி

வைத்திருந்ததை ஸ்மரித்த அவள் *சங்கசக்ரகதாபாணே! த்வாரகா நிலயாச்யுத!, கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம்* (இதன் பொருள்; - சங்குசக்கரம் கதை ஆகிய இவற்றைத் திருக்கையிலேந்தியுள்ளவனே! த்வாரகாபுரியில் வாழ்பவனே! அடியவர்களை ஒரு காலும் நழுவவிடாதவனே! கோவிந்தனே! செந்தாமரைக்கண்ணனே! அடைக்கலம் புகுந்த என்னைக் காப்பாற்றியருளவேணும்.) என்று சொல்லிச் சரணம் புகுந்தாள். அந்த ஸமயத்தில் கண்ணபிரான் அருகிலின்றிக்கே நெடுந்தூரத்திலிருந்தானென்பது 'கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம், ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி.'' (இதன் பொருள்; த்ரௌபதியானவள் நெடுந்தூரத்திலிருந்த வென்னை கோவிந்த புண்டரீகாக்ஷ! என்று சொல்லிக் கதறினாளே, அஃது என்னெஞ்சை விட்டு ஒரு நாளும் அகலமாட்டாத வருத்தம்; வட்டியேறின கடன்போலவே அது என்னை வருத்தா நின்றது) என்கிற பகவத் வசனத்தினால் விளங்குகின்றது. வாச்யனான பகவான் இங்ஙனம் தூரஸ்தனாயிருக்கச் செய்தேயும் த்ரௌபதிக்குப் புடவையை வளர்த்திக் கொடுத்து மாந ஸம்ரக்ஷணம் பண்ணினது அந்த அவதாரத்திற்கு வாசகமான கோவிந்த நாமமேயன்றோ.

நாராயண நாமத்தின் பெருமையை நிரூபிக்க வேண்டியதான இவ்விடத்தில் **கோவிந்த** நாமத்தைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்வது எதற்காகவென்று சிலர் **சங்கிக்கக்கூடும்**; நாராயண நாமத்தின் பொருள்களில் ஏகதேசத்திற்கு வாசகமான **கோவிந்த**நாமம் செய்ததே இதுவானால் அந்த நாராயண நாமத்தின் பெருமை சொல்லவும் வேணுமோவென்று கைமுதிகந்யாயத்தாலே காட்டினபடி.

17. சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது.

**சொல்லும் க்ரமமொழிய** - தன்னைத் தஞ்சமாக விச்வஸித்துச் சொல்லுகையாகிற க்ரமம் தப்பி, **சொன்னாலும்** - ஸங்கேதஹேளநாதிவகைகளினாலே சொன்னாலும், **தன் ஸ்வரூபம் கெட நில்லாது** - தன்னைச் சொன்னவர்களைத் தான் ரக்ஷிக்கையாகிற ஸ்வரூபத்தில் நழுவநில்லாது

17. மற்றுமொருவகையாகவும் திருநாமத்தின் வைபவம் கூறப்படுகிறது. மந்த்ரங்கள் அனேகங்கள் என்று ஏற்கெனவே சொல்லப்பட்டுளது. எந்த மந்த்ரமும் தன்னைப் பரிபூர்ணமாக நம்பி பக்திச்ரத்தைகளோடு உச்சரிப்பவர்களுக்குக் காரியம் செய்யுமே யல்லது மற்றையோர்க்குக் காரியம் செய்யமாட்டாது. இத்திருமந்த்ரமோ வென்னில், தன்னைத் தஞ்சமாக நம்பிச் சொல்லுகையாகிற அடைவுதவறி ஏதேனுமொருபடி சொன்னாலுங்கூட சொன்னவர்களை க்ரமத்திலே ரக்ஷித்தே தீரும். ரக்ஷிப்பதாகிற தன் ஸ்வரூபத்தில் நின்று நழுவமாட்டாது. ... ... ... (17)

18. இதுதான் *குலந்தருமென்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.

**இதுதான்** - இம்மந்த்ரமானது, ***குலந்தருமென்கிறபடியே** - * குலந்தரும் செல்வந்தந்திடும்* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே, **எல்லாவபேக்ஷிதங்களையும் கொடுக்கும்** - அதிகாரராநுகுணமான அபேக்ஷிதங்களை யெல்லாம் கொடுக்கும்.

18. அவரவர்களுக்கு அபேக்ஷிதங்களான அசேஷபலன்களேயும் அளிக்கவல்லது இந்தத் திருமந்த்ரம் என்று இவ்வழியாலும் இதினுடைய வைபவம் இனி நிரூபிக்கப் படுகின்றது. ... ... ... ... ...

**"குலந்தரும் செல்வம் தந்திடுமடியார் படுதுயராயினவெல்லாம்**
**நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும்**
**வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும்**
**நலந்தருஞ்சொல்லை நான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்"**

என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். இதன் பொருளாவது - நாராயண நாமமானது தன்னே அநுஸந்திக்குமவர்கட்கு உயர்ந்த குலத்தைக் கொடுக்கும்; ஐச்வர்யத்தை யளிக்கும்; அடியவர்கள் அநுபவிக்கிற துக்கமென்று பேர் பெற்றவை யெல்லாவற்றையும் தரைமட்டமாக்கி விடும்; பரமபதத்தைக் கொடுக்கும்; எம்பெருமானுடைய க்ருபையையும் உண்டாக்கும்; பகவதநுபவத்திற்குப் பாங்கான சக்தியைக் கொடுக்கும்; இன்னமும் வேண்டிய நன்மைகளே யெல்லாம் செய்து கொடுக்கும் என்கை. ஆகையாலே அதிகாராநுகுணமாக அபேக்ஷிதங்களே யெல்லாம் இத்திருமந்த்ரம் தருமென்றதாயிற்று. ... ... ... ... (18)

**19. ஐச்வர்ய கைவல்ய பகவல்லாபங்களே ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.**

**ஐச்வர்யகைவல்யபகவல்லாபங்களே ஆசைப்பட்டவர்களுக்கு** – இஹலோகபரலோக ஐச்வர்யங்களேயும், ஆத்மபோகமாகிற கைவல்யத்தையும், பரமபுருஷார்த்தமான பகவதநுபவத்தையும் ஆசைப்பட்டவர்களுக்கு, **அவற்றைக் கொடுக்கும்** - ஜபஹோமாதிகளாலே **தான்** ஸாதனமாயிருந்துகொண்டு அவ்வோ புருஷார்த்தங்களைக் கொடுக்கும்.

19. எல்லாவபேக்ஷிதங்களேயுங் கொடுக்குமென்று கீழ்ச்சொன்னது விசதீகரிக்கப்படுகிறது. ஐச்வர்யமானது இஹலோகத்துச் செல்வமென்றும் பரலோகத்துச் செல்வமென்றும் இருவகைப்படும். இந்நிலவுலகின் கண் ராஜாதிராஜனுய் விளங்குவது இஹலோகத்துச் செல்வமாகும். சுவர்க்கம் முதலிய மேலுலகங்களில் பல பதவிகளே நிர்வஹிக்கப்பெறுவது பரலோகத்துச் செல்வமாகும். ஆக இவ்விருவகையான ஐச்வரியங்களேயும், பரிசுத்தாத்ம ஸ்வரூபத்தை யநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தையும், பரம புருஷார்த்தமான பகவத் ப்ராப்தியையும் ஆசைப்பட்டவர்களுக்கு இத்திருமந்திரமானது ஜபம் ஹோமம் முதலிய வழிகளாலே தானே ஸாதனமாயிருந்து கொண்டு அந்தந்தப் பேறுகளேக் கொடுக்குமென்றதாயிற்று. ***ஐஹலௌகிகமைச்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம், கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி.*** என்ற பிரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. ... ... ... (19)

**20. கர்மஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும்.**

**கர்மஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு** - கர்மயோகத்திலோ ஜ்ஞாநயோகத்திலோ பக்தியோகத்திலோ அந்வயித்தவர்களுக்கு, (தன்னே ஸஹாயமாகக்கொள்ளுமளவில்)

விரோதியைப் போக்கி - அந்தந்த போகங்களை ஆரம்பிப்பதற்கு விரோதியான பாபத்தைப் போக்கி, அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும் - அந்தந்த யோகங்களை நிறைவேற்றித் தரும்.

20. கர்மயோகம் முதலான உபாயங்கள் நிறைவேறுவதற்குத் துணையாயிருக்கையாகிற வைபவமும் இத்திருமந்திரத்திற்கு உண்டென்று இனி நிரூபிக்கப்படுகிறது. கர்மயோகமாவது, *கர்மயோகஸ் தபஸ்தீர்த்த தாநயஜ்ஞாதிஸேவநம்* என்று கீதார்த்த ஸங்க்ரஹத்தில் ஆளவந்தார் அருளிச்செய்தபடி, தவம், வேள்வி முதலானவற்றைப் பலன் பெறுமளவும் ஆதரத்தோடும் நியமத்தோடும் நிரந்தரமாகப் பரிக்ரஹிக்கையாம். ஜ்ஞாநயோகமாவது, *ஜ்ஞாநயோகோ ஜிதஸ்வாந்தை: பரிசுத்தாத்மநி ஸ்திதி:* என்கிறபடியே இந்த்ரியஜய பூர்வகமாய் நிரந்தர சிந்தந ரூபாமாகப் பரிசுத்தாத்மத்யானத்திலே ஊன்றியிருக்கையாம். பக்தியோகமாவது *பக்தியோக: பரைகாந்தப்ரீத்யா த்யாநாதிஷு ஸ்திதி:* என்கிறபடியே பரமபுருஷனிடத்திலே ஐகாந்திகமான ப்ரீதியோடே த்யானம் அர்ச்சனம் ப்ரணமம் முதலியவற்றிலே நிலைத்திருக்கையாம். ஆக இப்படிப்பட்ட யோகங்களுக்குள்ளே, கர்மயோகத்தில் சிலர் இழிந்தால் அவர்கள் ஜபம் ஹோமம் முதலியவற்றாலே இத்திருமந்த்ரந்தன்னைத் துணைகொள்ளுமளவில், கர்மயோகத்தை ஆரம்பிப்பதற்கே இடையூறாய் நிற்கும் பாபங்களைப்போக்கி அந்தயோகம் இடையறாது செல்லும்படியாக அதனை நிறைவேற்றிக் கொடுக்கும் இத்திருமந்த்ரம். கர்மயோகத்தில் இழியாதே முதலிலேயே ஜ்ஞானயோகத்தில் இழிந்தால் அவர்கள் இத்திருமந்த்ரத்தைத் துணை கொள்ளுமளவில், கர்மயோகஸாத்யமான ஜ்ஞான யோகத்தின் ஆரம்பத்திற்கு இடையூறான பாபங்களைப்போக்கி அந்தஞானயோகம் நாடோறும் அதிசயம் பெறும்படி பண்ணி நின்று கொண்டு அதைத் தலைக்கட்டிக் கொடுக்கும் பக்தியோகத்திலே யிழிந்தால் அவர்கள் இத்திருமந்த்ரத்தைத் துணை கொள்ளுமளவில் பக்தியோகத்தை ஆரம்பிக்கவொட்டாமல் தடைசெய்யும் பாவங்களைப் போக்கி பக்தியோகம் வளரும்படி செய்வதாய்க் கொண்டு அதை நிறைவேற்றும். ... ... ... (20)

**21. ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.**

ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு - ஸ்வரூபாநுரூபமான ப்ரபத்தியிலே யிழிந்தவர்களுக்கு. ஸ்வரூபஜ்ஞானத்தைப் பிறப்பித்து - அதுக்குறுப்பான பகவத்பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்தை யுணர்த்தி, காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும் - அர்த்தாநுஸந்தாநாதிகளாலே போது போக்குகைக்கும் ஹேதுவாய், ஸ்வயம் பரமபோக்யமாயிருக்கையாலே போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

21. கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞான பக்தியோகங்கள் அனுட்டிக்க அரியனவாயும், ஸ்வரூபவிருத்தங்களாயுமிருப்பது கண்டு அவற்றில் இழியாமே எளிதாயும் ஸ்வரூபாநுரூபமாயுமுள்ள ப்ரபத்தியிலே யிழிந்தால் அவர்களுக்கு அதற்குத் தகுதியான பகவத்பாரதந்திரியமாகிற ஸ்வரூபத்தின் உணர்ச்சியைப் பிறப்பித்து அர்த்தாநுஸந்தானம் முதலியவற்றால் போது போக்குகைக்குக் காரணமாயும், *எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம், நானுஞ் சொன்னேன் நமருமுரைமின் நமோ

நாராயணமே* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ் சோலைக்கோனே* என்கிற எம்பெருமானைப் போலே இதுதானும் ஸ்வயம் பரமபோக்யமாயிருக்கையாலே போகத்துக்கு ஹேதுவாயு மிருக்கும். ... ... ... ... (21)

22. மற்றெல்லாம் பேசிலுமென்கிறபடியே அறியவேண்டுமர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு.

*மற்றெல்லாம் பேசிலுமென்கிறபடியே - ''நின் திருவெட்டெழுத்துங்கற்று மற்றெல்லாம் பேசிலும்'' என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே, அறிய வேண்டுமர்த்தமெல்லாம் - ஆத்மோஜ்ஜீவனத்திற்காக அறியவேண்டிய அர்த்த விசேஷங்களெல்லாமும், இதுக்குள்ளே உண்டு - இத்திருமந்த்ரத்திலடங்கியுள்ளன.

22. அறியவேண்டிய அர்த்தங்களையெல்லாம் தன்னிலே உடைத்தாயிருக் கையாகிற பெருமையும் இதற்குண்டென்னுமிடம் நிரூபிக்கப்படுகிறது. திருமங்கை யாழ்வர் *மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடுற்றிலேன், உற்றதும் உன்னடியார்க் கடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங்கற்று நான் கண்ணபுரத் துறையம்மானே!* என்றார். இதன் பொருளாவது:- திருக்கண்ணபுரத்தெம்பெருமானே! உன்னைக்காட்டிலும் வேறொரு தெய்வம் ஆச்ரயிக்க உரியதாகவுண்டு என்று நினைத்திருப் பவர்களோடே நான் இணங்கமாட்டேன்; உனது திருவஷ்டாக்ஷர மந்திரமானது அறிய வேண்டிய எல்லாப் பொருள்களையும் சொல்லுகின்றதாகிலும் அப்பொருள்களிலே நெஞ்சு செலுத்தாமல் பாகவத சேஷத்வமொன்றையே திருமந்திரப் பொருளாக நான் தெரிந்து கொண்டேனென்கை இதில் ''மற்றெல்லாம் பேசிலும்'' என்றபடியாலே ஆத்மா உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பான அர்த்தங்களெல்லாம் இத்திருமந்த்ரத்திலே உண்டென்பது ஸித்தமாயிற்று. ... ... ... ... (22)

23. அதாவது அஞ்சர்த்தம்.

அதாவது அஞ்சர்த்தம் - அறிய வேண்டுமர்த்தமெல்லாம் எவை யென்னில்; இறைநிலை, உயிர் நிலை, உபாயநிலை, விரோதிநிலை, பேற்றின் நிலையாகிய அர்த்தபஞ்சகம்.

23. வேதங்களும் வேதாங்கங்களுமெல்லாம் ஐந்து அர்த்தங்களையே முக்கியமாக ப்ரதிபாதிக்கின்றன; அவையாவன-ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூபம், ப்ராப்தாவான சேதநனுடைய ஸ்வரூபம், எம்பெருமானை யடைதற்குறுப்பான உபாயத்தின் ஸ்வரூபம், அடைந்து பெறவேண்டிய பேற்றின் ஸ்வரூபம், அப்பேற்றைப் பெறவொட்டாத பிரதிபந்தகத்தின் ஸ்வரூபம் என்பனவாம். இவையே அர்த்த பஞ்சக மெனப்படும். 'மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர்நிலையும், தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்'' (திருவாய்மொழித்தனியன்) என்கிறபடியே திருவாய்மொழியாயிரத் தினுள்ளும் இவ்வர்த்த பஞ்சகமே விவரிக்கப்பட்டுள்ள தென்பதும் இங்கு உணரத்தக்கது. திருமந்த்ரத்தில் ப்ரணவத்தாலே சேதநஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோதியி

னுடையவும் உபாயத்தினுடையவும் ஸ்வரூபத்தையும், நாராயண பதத்தாலே பரம புருஷனது ஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தியாலே புருஷார்த்த ஸ்வரூபத்தையும் பிரதிபாதிக்கையாலே திருமந்திரம் அர்த்த பஞ்சக ப்ரதிபாதகம் என்னுமிடம் தேறிநிற்கும். ... ... ... ... (23)

**24. பூர்வாசார்யர்கள் இதில் அர்த்தம் அறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்தஜ்ஞாநம் பிறந்த பின்பு *பிறந்தபின் மறந்திலேனென்கிற படியே இத்தை யொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.**

**பூர்வாசார்யர்கள்** - ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான நம் பூருவாசாரியர்கள், **இதில் அர்த்தமறிவதற்கு முன்பு** - இத்திருமந்திரத்தின் பொருளையுணரப் பெறுதவளவில், **தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்** - *அன்று நான் பிறந்திலேன்* என்கிற திருமழிசையாழ்வார் பாசுரத்தின் படியே தங்களை அஸத்கல்பராகவே நினைத்திருந்தார்கள்;

**இதில் அர்த்தஜ்ஞானம் பிறந்த பின்பு** - திருமந்த்ரார்த்தஜ்ஞான முண்டான பின்பு, ***பிறந்த பின் மறந்திலே னென்கிறபடியே** - *பிறந்தபின் மறந்திலேன்* என்ற அத்திருமழிசைப்பிரான் பாசுரப்படியே, **இத்தை யொழிய வேறொன்றால்காலக்ஷேபம் பண்ணியறியார்கள்** - இத்திருமந்த்ரார்த்தம் தவிர வேறொன்றாலும் போது போக்கியறியார்கள்,

24. இத்திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்தின் பெருமையைப் பொதுவாக அருளிச் செய்கிறார். ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் முதலான நம்முடைய பூருவாசார்யர்கள் திருமந்திரத்தின் பொருளைத் தாங்கள் அறிவதற்கு முன்னம் *அன்று நான் பிறந்திலேன்* என்கிற திருமழிசை யாழ்வாரருளிச் செயலின்படி தங்களைப் பிறந்தவர்களாகவே நினைத்திருக்கமாட்டார்கள்; இதன் பொருளை நன்குணர்ந்த பின்பு* பிறந்த பின் மறந்திலேன் என்கிற அவ்வாழ்வாரருளிச் செயலின் படியே இத்திருமந்திரத்தின் அர்த்தத்தைத் தவிர்த்து வேறு எது கொண்டும் போது போக்கியறியார்கள்.

"அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்கிற பாசுரம் திருச்சந்த விருத்தத்தில் அறுபத்துநான்காவது ஞானமில்லாதபோது ஆத்மாவுக்கு ஸத்தையில்லை. யென்கிற நூற்கொள்கையைக் கொண்டு *அன்று நான் பிறந்திலேன் என்றது. எம்பெருமான் மயர்வற மதிநலமருளின பின்பு ஸத்தைபெற்று சாச்வதமாக உஜ்ஜீவிக்கப் பெற்றபடியைக் கொண்டு* பிறந்தபின் மறந்திலேன் என்றது திருமந்த்ரப் பொருளின் உணர்ச்சியில்லாமை ஸத்தாஹானி அந்த ஞானத்தின் இடையறுதநிகழ்ச்சி - ஸத்தை என்றதாயிற்று.

"பூர்வாசாரியர்கள் இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்" என்று சொல்லத்தகுமோ? வேதசாஸ்த்ரங்களாலும் ஆழ்வாரருளிச் செயல்களாலும் போது போக்குவதில்லையோ? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; அஃது உண்மையே; அவற்றால் போது போக்கும் போதும் இத்திருமந்த்ரத்தின் அர்த்தத்தை உட்கொண்டே அநுஸந்திக்கையாலே இங்ஙனே சொல்லக் குறையில்லை யென்றுணர்க. ... ... ... ... ... (24)

25. **வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கு அடி - ஈச்வரனே உபாயோ பேயமென்று நினைத்திருக்கை.**

வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கு அடி - கீழே உபபாதித்தபடி வாச்யனை எம்பெருமானிற்காட்டிலும் அதிகமான ப்ரபாவம் பொலிந்த வாசகம் (திருமந்த்ரம்) இருக்க, இதிலுங்காட்டில் இம்மந்த்ரத்தின் வாச்யனை எம்பெருமானளவிலே நம் முதலிகள் அதிகமாக அபிநிவேசங் கொண்டிருப்பதற்குக் காரணமென்னவென்றால் ; ஈச்வரனே உபாயோபேய மென்று நினைத்திருக்கை - இதரபலன்களை மேவி இத்தை உபாயமாகக்கொண்டு ஸாதிப்பதோ, வேறு உபாயங்களை மேவி இத்தை ஸஹகாரியாகக் கொள்ளுதலோ இவை யொன்றுமில்லாதபடி உபாயமும் உபேயமும் ஈச்வரனே யென்று திண்ணிய அத்யவஸாயங் கொண்டிருக்கையேயாம்.

25. திருமந்த்ரத்தினுடைய சக்திவிசேஷங்கள் கீழே பரக்க உபபாதிக்கப்பட்டன ; திருமந்த்ரந்தானே ஸகல பலன்களுக்கும் ஸாதனமாயிருக்குமென்றும் கர்மஜ்ஞான பக்தி முதலிய யோகங்களுக்கும் இதுவே துணையாய் நின்று அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்குமென்றும் சொல்லப்பட்டதே ; ஆக திருமந்த்ரத்திற்கு இவ்வளவு சக்தி அமைந்திருக்கும் போது அனைவரும் இந்த மந்த்ரத்திலேயே ஊன்றியிருக்கலாமே ; அப்படியில்லையே ; நம் பூருவர்கள் மந்த்ரத்திற்காட்டிலும் மந்த்ரப்ரதிபாத்யனை எம்பெருமான் பக்கலிலே அதிகமாக, ஊன்றியிருக்கிறார்களே ; இதற்குக் காரணம் ஏதென்னில் : அநந்யோபாயத்வம், அநந்யோபேயத்வம் என்கிற இரண்டும் நம்மவர்களுக்கு அஸாதாரணமானவை. வேறொரு பலனை விரும்பி அதற்கு ஸாதனமாகத் திருமந்த்ரத்தைக் கொண்டு அந்தப்பலனை ஸாதித்துக்கொள்கின்றவர்களாயும். (அல்லது) எம்பெருமானையே உபேயமாகக் கொண்டு கருமயோகம் ஞானயோகம் முதலான உபாயாந்தரங்களை அனுட்டிப்பவர்களாய் அவற்றுக்கு இத்திருமந்த்ரத்தைத் துணையாகக் கொள்ளுகின்றவர்களாயுமிருக்கின்ற மற்றையோர்களைப் போலன்றிக்கே நம்மவர்கள் எம்பெருமானையே உபாயமாகவும் உபேயமாகவும் ப்ரதிபத்தி பண்ணியிருக்கின்றவர்களாதலால், இது காரணமாகவே வாசகமான மந்த்ரத்திலுங் காட்டில் வாச்யனை எம்பெருமான் பக்கலிலே அதிகமாக ஊன்றுகின்றார்கள். ஆக இவ்வளவும் இத்திருமந்த்ரத்தினுடைய வைபவம் பலபடியாக நிரூபிக்கப்பட்டதாயிற்று. ... ... (25)

26. **இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் – ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் ; ஸ்வரூபமும் உபாயமும் பலமுமென்னவுமாம்.**

இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் - இத்திருமந்த்ரத்தில் சொல்லப்படுகிற பொருளாவது, ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் - இவ்வாத்மாவின் சேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபத்துக்கு ஏற்ற கைங்கர்யமாகிற ப்ராப்யமுமாம். (அன்றிக்கே) ஸ்வரூபமும் உபாயமும் பலமும் என்னவுமாம் - ப்ரணவத்தாலே சேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே தான் கையொழிந்திருக்கையாகிற உபாயமும், நாராயணாயவாலே பலமும் சொல்லுகிறது என்று நிர்வஹிப்பதுமுண்டு.

26. இனிமேல் இத்திருமந்த்ரத்தினுடைய அர்த்தங்கள் அலகலகாகப் பிரதிபாதிக்கப்படும். முதலில் ஸமுதாய வாக்யார்த்தம் இரண்டு வகையாகப் பிரதிபாதிக்கப்

படுகிறது. ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் இத் திருமந்த்ரத்தில் ப்ரதி பாதிக்கப்படுவதாக ஒரு வாக்கியார்த்த யோஜனை. ஸ்வரூபமும் உபாயமும் பலனும் பிரதிபாதிக்கப் படுவதாக மற்றொரு வாக்யார்த்த யோஜனை. இவ்வாத்மாவினுடைய சேஷத்வமும் பாரதந்திரியமும் ஸ்வரூபமெனப்படுகிறது. கைங்கர்யமானது ப்ராப்ய மெனப்படுகிறது. திருமந்த்ரத்தில் முதலிலுள்ள ப்ரணவமும் அதற்கடுத்தபடியுள்ள நமஸ்ஸும் ஸ்வரூபமாகிய சேஷத்வ பாரதந்த்ரியங்களைக் காட்டுகின்றன. **நாராயணாய** என்பதனாலே ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம் [அதாவது, கைங்கரியம்] காட்டப்படுகிறது. ஆகவே "**ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் இது தன்னிற்சொல்லுகிற அர்த்தம்.**" என்று முதல் வாக்யார்த்த யோஜனை பணிக்கப்பட்டது. இனி, "ஸ்வரூபமும் உபாயமும் பலமுமென்னவுமாம்" என்கிற இரண்டாவது யோஜனைக்குச் சார்பாகத் திருவுள்ளம் பற்றினபடி என்னென்னில் :— ப்ரணவம் நமஸ்ஸு ஆகிய இரண்டாலும் ஸ்வரூபம் ப்ரதிபாதிக்கப்பட்டதாகக் கொள்ளுகை யன்றிக்கே, ப்ரணவத்தாலே சேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே உபாயமும், **நாராயணாய** என்பதாலே பலனும் பிரதிபாதிக்கப் பட்டதாகக் கொள்ளக்கடவது.

நமஸ்ஸாலே உபாயம் எப்படி பிரதிபாதிக்கப்படுகின்றதென்னில், தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே உபாயமாதலால், அதற்கு உறுப்பாக ஸ்வஸ்வா தந்திரியம் கழியவேண்டுதலால் அது நமஸ்ஸாலே கழியுண்டபடியால் உபாயம் பிரதி பாதிக்கப்பட்டதாகத் தேறுகின்றது. ... ... ... (26)

**27. பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்.**

**பலம் இருக்கும்படி** - இவ்வாத்மாவுக்கு ப்ராப்யமான பலன் இப்படிப்பட்டதென்பதை. **ப்ரமேய சேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்** - ப்ரமேய சேகரமென்கிற ரஹஸ்யத்தில் சுருக்கமாகவும், அர்ச்சிராதி யென்னும் ரஹஸ்யத்தில் விரிவாகவும் சொன்னோம்.

27. கீழ்ச்சொன்ன வாக்யார்த்த யோஜனையில் நாராயண பதத்தாலே பலன் சொல்லுகிறதாக ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கிறதே; அந்த பலஸ்வரூபம் எப்படியிருக்கு மென்று அறிய விருப்பமுண்டாமளவில் இதைப்பற்றி ஏற்கெனவே இரண்டு ரஹஸ்ய க்ரந்தங்களில் சுருக்கமாகவும் விரிவாகவும் அருளிச்செய்திருக்கையாலே அதை இங்கு நினைப்பூட்டியருளுகிறார் "பலமிருக்கும்படி ப்ரமேய சேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்" என்று முமுக்ஷுத்வமுண்டாவது தொடங்கி நலமந்தமில்லதோர் நாட்டிலே அத்தாணிச் சேவகம் பெறுவது ஈறாகவுள்ள பலன்களை ப்ரமேய சேகரமென்னும் ரஹஸ்யத்திலே சுருக்கமாகவும், அர்ச்சிராதிகதியென்னும் ரஹஸ்யத்திலே விரிவாகவும் அருளிச்செய்திருக்கையாலே அங்கே கண்டுகொள்வது என்றாராயிற்று. ... (27)

**28. இதுதான் எட்டுத்திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்.**

**இதுதான்** - இத்திருமந்த்ரமானது. **எட்டுத்திருவக்ஷரமாய்** - எட்டெழுத்துக்களை யுடையதாயும், **மூன்று பதமாய் இருக்கும்** - மூன்று பதங்களையுடையதாயுமிருக்கின்றது

28. இத்திருமந்திரத்தினுடைய அக்ஷரஸங்க்யையையும் பதஸங்க்யையையும் கூறினபடி. மேலே ப்ரதிபதம் பொருள் விவரிக்கைக்காக.

சிலர் ஸமஸ்தபதமான நாராயண பதத்தில் நாரபதத்தைப் பிரித்து ஷடக்ஷரமாக்கி [அதாவது 'நார அயநாய' என்று ஆறு அக்ஷரமாகக்கொண்டு] ப்ரணவமில்லாமலே அஷ்டாக்ஷரமாய் விடுகிறதென்று சொல்லுவர்கள்; அது *ஓமித்யேகாக்ஷரம். நம இதி த்வே அக்ஷரே. நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி* என்கிறச்ருதிக்கு நேர்விருத்தமாகையாலே அந்த பக்ஷம் அவைதிகமென்றிட்டு அநாதரணீயமென்பது இங்கே ஸூசிதம். ... (28)

**29. மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது.**

**மூன்று பதமும் - ப்ரணவமும் நமஸ்ஸூம் நாராயணாயவுமாகிற மூன்று பதங்களும், மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது - (அடுத்த சூர்ணையில் விவரிக்கிறபடி) மூன்று அர்த்தங்களைத் தெரிவிக்கிறது.**

29. கீழே "இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்" என்றருளிச் செய்த யோஜனைக்குச் சேர 'மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது' என்று கொள்க. ... ... (29)

**30. அதாவது சேஷத்வமும், பாரதந்த்ரியமும், கைங்கரியமும்.**

**அதாவது - அந்த மூன்று அர்த்தம் எவையென்னில்; சேஷத்வமும் பாரதந்த்ர்யமும் கைங்கர்யமும் - ப்ரணவத்தின் அர்த்தம் சேஷத்வம்; நமஸ்ஸின் அர்த்தம் பாரதந்த்ரியம்; சரமபதத்தின் அர்த்தம் கைங்கரியம்.**

30. அந்த அர்த்தங்கள் எவையென்னில், சேஷத்வமும் பாரதந்த்ரியமும் கைங்கர்யமுமாகும். சேஷத்வ பாரதந்த்ரியங்களிரண்டும் சேர்ந்து ஸ்வரூபம்; கைங்கர்யம் பலன்; ஆகையாலே 'ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்' என்றயோஜனை விவரிக்கப்பட்டதாயிற்று ப்ரணவமாகிற முதற்பதத்தாலே சேஷத்வமும், நமஸ்ஸாகிற இரண்டாவது பதத்தாலே பாரதந்த்ரியமும், ஆக இரண்டாலும் ஸ்வரூபமும்; நாராயணாய வென்கிற மூன்றுவது பதத்தாலே கைங்கர்யமும் சொல்லப்பட்டதாக உணர்க ... (30)

**31. இதில் முதற் பதம் ப்ரணவம்.**

**இதில் - இம்மூன்று பதத்தினுள். முதல் பதம் ப்ரணவம் - முதற்பதம் ப்ரணவமென்பதாம்.**

31.*ஓம் என்கிற ப்ரணவமானது திருமந்திரத்தில் முதற்பதமாகவுள்ளது. சிலர் ப்ரணவத்தை விட்டும், அதன் ஸ்தானத்தில் 'அம்' என்று சொல்லியும் அஷ்டாக்ஷர மந்த்ரமாகக் கொள்வதுண்டாகையாலே அந்தக் கொள்கையைத் தவிர்ப்பதற்காக 'இதில் முதல் பதம் ப்ரணவம்' என்றருளிச்செய்கிறார் போலும். 'ஓம்' என்று எடுத்துக் காட்டாமல் ப்ரணவம் என்றே காட்டினது அது உபதேசமுகத்தாலேயே பெறவேணு மென்பதற்காக. ... ... ... ... ... (31)

**32. இது அ என்றும் உ என்றும் ம என்றும் மூன்று திருவக்ஷரம்.**

**இது - இந்த ப்ரணவமானது, அ என்றும் உ என்றும் ம என்றும் மூன்று திருவக்ஷரம் - அகாரோகார மகாரங்களாகிற மூன்றெழுத்தானது.**

32. இனிமேல் ப்ரணவத்தின் அக்ஷரங்கள் பிரித்துக் காட்டப்படுகின்றன. அகாரமும் உகாரமும் சேர்ந்து குணஸந்தி பெற்று 'ஓ' என்றுகுமாதலாலும், அதற்கு அடுத்தபடியாக மகாரம் இருக்கிறபடியாலும், இந்த ப்ரணவமானது அ என்றும் உ என்றும், ம என்றும் மூன்று திருவக்ஷரமாக இருக்கின்றதென்று கொள்க. ச்ருதியில் *ஓமிதி ஏகாக்ஷரம்* என்று ப்ரணவத்தை ஒரு அக்ஷரமாகவே சொல்லியிருக்க மூன்று அக்ஷரமாகப் பிரிப்பது தகுதியோ என்று சிலர் சங்கிக்கக்கூடும். இதில் ஸம்ஹிதாகாரம், அஸம்ஹிதாகாரம் என்று இரண்டு படியுண்டு. ஸந்திபெற்ற ஆகாரத்தை ஸம்ஹிதாகார மென்றும், ஸந்திபெறாத ஆகாரத்தை அஸம்ஹிதாகாரமென்றும் சொல்லுவது. அஸம்ஹிதாகாரத்தையிட்டுப் பார்க்கும்போது ப்ரணவமானது ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பதமாகையாலே மூன்று பதமாயும் மூன்று அர்த்தங்களைத் தெரிவிப்பதாயு மிருக்கும். ஸம்ஹிதாகாரத்தையிட்டுப் பார்க்கும்போது ஒரே எழுத்தாய் ஒரே பதமாய் ஒரே பொருளைத் தெரிவிப்பதாயிருக்கும்; ஆகவே, "ஓமித்யேகாக்ஷரம்" என்று ச்ருதி சொன்னதானது ஸம்ஹிதாகாரத்திலே நோக்காகச் சொன்னதென்று கொள்ளக் கடவது. ... ... ... (32)

**33. மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையுமெடுத்தது.**

**34. ஆகையால் இது ஸகல வேதஸாரம்.**

**மூன்றுதாழியிலே** - மூன்று பாத்திரங்களிலே, **தயிரை நிறைத்து**; **கடைந்து** - தனித்தனியே கடைந்து, **வெண்ணெய் திரட்டுமாபோலே** - வெண்ணெயை வாங்கித் திரட்டினாப்போலே, **மூன்று வேதத்திலும்** - மூன்று வேதங்களிலிருந்தும், **மூன்று அக்ஷரத்தையுமெடுத்தது** - பூ: புவ: ஸுவ: என்ற வ்யாஹ்ருதித்ரயத்தின் பரிணாமமான அகாரோகாரமகாரங்களை யெடுத்தது.

**ஆகையால்** - மூன்றக்ஷரமும் மூன்று வேதத்தினுடைய ஸாரமாக எடுக்கப்பட்டதாகையாலே, **இது** - இந்த ப்ரணவமானது, **ஸகல வேதஸாரம்** - எல்லா வேதங்களினுடையவும் ஸாரமாயிருக்கும்.

33, 34. *ஓமித்யேகாக்ஷரம்* என்று ஸ்பஷ்டமாக ச்ருதி சொல்லியிருக்க, ஸம்ஹிதாகாரம் அஸம்ஹிதாகாரம் என்று இருவகையிட்டு அஸம்ஹிதாகாரத்தாலே மூன்று அக்ஷரங்கள் என்று சொல்லிப் பிரிப்பது கூடுமோ? என்று சிலர் சங்கித்துக் கொண்டேயிருக்க, மூன்று அக்ஷரமாகப் பிரிப்பதும் ச்ருதி ஸம்மதந்தான் என்பதும் இம்மூன்றக்ஷரங்களும் மூன்று வேதங்களின் ஸாரம் என்பது நிரூபிக்கப்படுகிறது.

இந்த பிரணவத்தின் அக்ஷரங்களான அகார உகார மகாரங்களானவை ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் என்கிற மூன்று வேதங்களில் நின்றும் தோன்றினவையா யிருக்கும். எங்ஙனேயென்னில், அந்த மூன்று வேதங்களில் நின்றும் பூ:, புவ:, ஸுவ: என்கிற வ்யாஹ்ருதிகளென்னப்படுகிற மூன்றையும் ஸர்வேச்வரன் தோன்றுவித்து, அவற்றைத் தன் ஸங்கல்பத்தாலே ஓடவைத்து, அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களையும் அடைவே தோன்றும்படி பண்ணி இப்படி

ஸமுத்தரித்தபடியைப் பார்த்தால். மூன்று தாழிகளிலே தயிரை நிறைத்து அதைத் தனித் தனியே கடைந்து அதன் ஸாரமான வெண்ணெயை வாங்கித் திரட்டினால் அந்த வெண்ணெயானது மூன்று தாழித் தயிரினுடைவும் ஸாரம் என்று சொல்லலாமன்றே; அப்படியே இம்மூன்றக்ஷரங்களும் மூன்று வேதங்களினுடையவும் ஸாரம் என்னத் தட்டில்லை. இவ்விஷயத்தில் பிரமாணமுண்டோவென்னில், *பூரிதி ருக்வேதாத்* இத்யாதியான ச்ருதியே ப்ரமாணமென்று கொள்க. ... (33, 34)

**35. இதில் அகாரம் ஸகல சப்தத்துக்கும் காரணமாய் நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே, ஸகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது.**

**இதில் அகாரம்** - இம்மூன்றக்ஷரங்களுள் முதலக்ஷரமான **அகாரமானது**, **ஸகல சப்தத்துக்கும் காரணமாய்** - லௌகிகங்களான ஸகல சப்தங்களுக்கும் காரணமாயும், **நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே** - ஸர்வரக்ஷகனென்னுமர்த்தமுடைய நாராயண பதத்துக்கும் ஸங்க்ரஹமாயிருக்கையாலே, **ஸகல ஜகத்துக்கும் காரணமாய்** - ஸகல ஜகத் காரண பூதனாயும், **ஸர்வரக்ஷகனான** - எல்லார்க்கும் ரக்ஷகனாயுமிருக்கிற, **நாராயணனைச் சொல்லுகிறது** - எம்பெருமானைச் சொல்லுகிறது.

35. இனி அகாரத்தின் அர்த்தம் பிரதிபாதிக்கப்படுகிறது. ஸகல ஜகத் காரணபூதனாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமான் அகாரத்திற்கு அர்த்தம். இவ்விரண்டு அர்த்தங்களும் [காரணத்வம் ரக்ஷகத்வம் என்பவை] அகாரத்தினால் எங்ஙனே தெரிய வருகின்றனவென்னில், ப்ரக்ருதி சக்தியென்றும் தாது சக்தியென்றும் இரண்டு சக்திகள் கொள்ளப்படுகின்றன. ப்ரக்ருதி சக்தியினால் காரணத்வமும், தாது சக்தியினால் ரக்ஷகத்வமும் பொருளாகத் தேறுகின்றன. ப்ரக்ருதியாவது ஸ்வபாவம். அகாரத்தின் ஸ்வபாவம் எப்படிப்பட்டதென்றால், *அகர முதலவெழுத்தெல்லாம்* என்கிறபடியே ஸகல சப்தங்களுக்கும் தான் காரணமாயிருக்கை அகாரத்தின் ஸ்வபாவமாகும். இந்த ஸ்வபாவத்துக்குச் சேர்ந்ததான ஸ்வபாவம் எம்பெருமான் பக்கலிலே யிராநின்றது; அதாவது, எல்லா ஜகத்துக்கும் தான் காரணமாயிருக்கை. ஆக, இந்த ஸ்வபாவஸாம்யத்தை யிட்டு ஸகல ஜகத் காரணபூதனான நாராயணன் அகாரார்த்தம் என்று கொள்ளுவதானது ப்ரக்ருதி சக்தியினாலே ஸித்தித்த அர்த்தமாகும்.

இனி, தாது சக்தியினாலே ஸித்திக்கிறபடி எங்ஙனேயென்னில், *அவ-ரக்ஷணே* என்கிறபடி ரக்ஷணத்தைப் பொருளாகவுடைத்தான 'அவ' என்னும் தாதுவடியாக அகாரம் நிஷ்பத்தியடைந்தபடியாலே ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லக் குறையில்லை. ... ... ... (35)

**36. ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.**

**ரக்ஷிக்கையாவது** - எம்பெருமான் சேதநர்களை ரக்ஷிக்கையாவதென்னவென்றால், **விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்** - அநிஷ்ட நிவாரணமும் இஷ்ட ப்ராபணமுமாகும்,

36. ஸகல ஜகத் காரணபூதனும் ஸர்வரக்ஷகனுமான எம்பெருமான் அகாரத்திற்கு அர்த்தம் என்று சொல்லி நின்றது கீழ் இதில் ஸர்வரக்ஷகத்வ ரூபமான அர்த்தமே மிகவும் முக்கியமாகையாலே ரக்ஷகத்வமாவது என்ன? என்று விவரிக்கவேண்டியது அவசிய மாயிற்று. உலகத்தில் ஒருவனை ரக்ஷிப்பதாவது—அவனுக்குண்டான அநிஷ்டங்களைப் போக்கி இஷ்டங்களைத் தருகையேயாம். ஆகவே, அநிஷ்ட நிவர்த்தகத்வமும் இஷ்ட ப்ராபகத்வமுமாகிற இவையிரண்டும் சேர்ந்து ரக்ஷணமெனப்படும். அநிஷ்ட நிவாரண பூர்வகமாய் இஷ்டப்ராபணம் பண்ணுவதே ரக்ஷணம் என்றதாயிற்று. துக்கங்களைத் தரும்படியான விரோதியைப் போக்குகையும் ஸுகத்தைத் தரும்படியான அபேக்ஷி தத்தைக் கொடுக்கையும் ரக்ஷகத்வமென்கை. ... ... (36)

**37, இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்.**

இவை இரண்டும் - எம்பெருமான் சேதநர்களுக்குப் போக்கும் விரோதியும் கொடுக்கும் அபேக்ஷிதமும், சேதநர் நின்ற நின்றவளவுக்கீடாயிருக்கும் – அவரவர்களின் நிலைமைக்குத் தக்கபடியிருக்கும்,

37. ரக்ஷ்யவர்க்கங்களுக்கு விரோதிகள் எவை? அபேக்ஷிதங்கள் எவை? என்கிற கேள்வி அடுத்தபடியாக உண்டாகும். ரக்ஷ்யவர்க்கங்கள் ஸம்ஸாரிகளென்றும் முமுக்ஷுக்களென்றும் முக்தர்களென்றும் நித்யர்களென்றும் நான்குவகைப்பட்டிருக்கையாலே அவரவர்களுடைய நிலைமைக்குத் தக்கவாறு இஷ்டங்களும் அநிஷ்டங்களும் வெவ்வேறுபட்டிருக்குமென்று கொள்ளக்கடவது. ... (37)

**38. ஸம்ஸாரிகளுக்கு விரோதி—சத்ருபீடாதிகள், அபேக்ஷிதம் அந்ந பாநாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி—ஸம்ஸாரஸம்பந்தம், அபேக்ஷிதம்—பரமபதப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி—கைங்கர்யஹாநி, அபேக்ஷிதம்—கைங்கர்யவ்ருத்தி.**

ஸம்ஸாரிகளுக்கு விரோதி சத்ருபீடாதிகள் - அஸ்மதாதிகளான ஸம்ஸாரிகளுக்கு சத்துருக்களால் வரும் பீடை முதலானவையே விரோதியாயிருக்கும்; அபேக்ஷிதம் அந்நபாநாதிகள் - சோறு தண்ணீர் முதலானவை வேண்டப்படுவனவாயிருக்கும். முமுக்ஷுக்களுக்கு விரோதி ஸம்ஸாரஸம்பந்தம் - ஸம்ஸாரத்திலடிக்கொதிப்பாலே மோக்ஷத்திற்குப்போக விரும்புமவர்களுக்கு இவ்விருள்தருமாஞாலத்தில் வாஸம் அநிஷ்டமாயிருக்கும்; அபேக்ஷிதம் பரமபதப்ராப்தி - திருநாடு சேருகை இஷ்டமாயிருக்கும்; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்ய ஹாநி - நித்ய முக்தர்களுக்கு அநிஷ்டம் கைங்கர்ய விச்சேதம், அபேக்ஷிதம் கைங்கர்யவ்ருத்தி - மேன்மேலும் அடிமை செய்துகொண்டு போகை இஷ்டமாயிருக்கும்.

38, அதை வ்யக்தமாகச் சொல்லலாகாதோவென்ன, வ்யக்தமாகச் சொல்லுகிறது. தேஹத்திற்குமேற்பட ஆத்மாவென்று ஒரு பொருள் இருப்பதாக நினையாதவர்களாய் சப்தாதி விஷயபோகமே போது போக்காயிருப்பவர்களான பத்தஸம்ஸாரிகளுக்கு நிவர்த்திப்பிக்கப்படவேண்டிய விரோதி—சத்துருக்களால் வரும் பீடைகளும், தேஹ வியாதி மனோவியாதி முதலியவற்றால் வரும் பீடைகளுமாம். சோறு, தண்ணீர், வெற்றிலை, பாக்கு முதலானவை அபேக்ஷிதங்களாம். ஆகவே சத்ருபீடாதிகளைப் போக்கி அன்னபாநாதிகளைக் கொடுப்பது ஸம்ஸாரிகளுக்குச் செய்யும் ரக்ஷணமாகும்.

*இருள் தருமாஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்* என்றும் *ஆதலால் பிறவி வேண்டேன் *என்றும் ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலே *நலமந்த மில்லதோர் நாடு புக விரும்பி *தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக் கொள்ளுங்காலம் இன்னங் குறுகாதோ* என்றிருக்கும் முமுக்ஷுக்களுக்கு *பொய்ந் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமாய் இவ்விருள் தருமா ஞாலத்திலே யிருக்குமிருப்பு விரோதியாயிருக்கும். எம்பெருமானை யதேஷ்டமாக அநுபவிக்கைக் குறுப்பான பரமபத ப்ராப்தியானது அபேக்ஷிதமாயிருக்கும், எனவே, ஸம்ஸாரபந்தத்தைப் போக்கி, பரமபத ப்ராப்தி பண்ணிவைப்பது முமுக்ஷுக்களுடைய ரக்ஷணமென்றதாயிற்று.

நெடுங்காலம் ஸம்ஸார வாழ்க்கையிலிருந்து *வினைபற்றறுக்கும்* என்கிறபடியே ஸம்ஸாரப்பற்று அற்றுப் பரமபதம் சென்று சேர்ந்தவர்களான முக்தர்களுக்கும், ஒரு நாளும் ஸம்ஸார நிலத்திற்கு வாராதே *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்து கொண்டிருக்கும் நித்யஸூரிகளுக்கும் விரோதி—எம்பெருமான் திருவடிகளிலே தாங்கள் பண்ணிக்கொண்டு போகிற கைங்கர்யத்திற்கு நேரும் இடையூறு; அப்படி இடையூறின்றிக்கே மேன்மேலும் தொடர்ச்சியாகவே கைங்கரியம் செய்து கொண்டு போவதாகிற கைங்கர்யாபிவிருத்தியே அவர்களுக்கு அபேக்ஷிதமாகும். ஆகவே இங்ஙனம் அவரவர்களுடைய அதிகாரத்திற்குத் தகுந்தபடி விரோதிகளைப் போக்கி அபேக்ஷிதங்களைக் கொடுப்பவன் எம்பெருமானேயாதலால் அவனே ஸர்வரக்ஷகனென்பது அறியத்தக்கது. ... ... ... (38)

**39. 'ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்,**

**ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்ல ரென்னுமிடம் - ஸர்வேச்வரனொருவன் தவிர மற்ற யாரும் ரக்ஷிக்க சக்தரல்லரென்பதை, ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம் - ப்ரபந்ந பரித்ராண மென்னும் ரஹஸ்யத்திலே சொன்னோம்.**

39. எம்பெருமானொருவனே ரக்ஷகன் என்று சொல்லவொண்ணுமோ? உலகத்தில் மற்றும் பல ரக்ஷகர்களை நாம் காணா நின்றோமே; புத்திரனுக்குப் பிதா ரக்ஷகன்; தம்பிக்குத் தமையன் ரக்ஷகன், மனைவிக்குக் கணவன் ரக்ஷகன்; குடிமக்களுக்கு அரசன் ரக்ஷகன். மற்றும் இந்திரன் ஸூர்யன் வருணன் என்று சொல்லப்படுகிற தேவதைகளும் ரக்ஷகர்கள்; என்று இங்ஙனே ரக்ஷகராகச் சொல்லக்கூடியவர்கள் பலரும் இல்லையோவென்ன, அஷ்டாதசரஹஸ்யங்களுள் ஒன்றான **ப்ரபந்நபரித்ராணம்** என்கிற ரஹஸ்யத்திலே இதைப் பற்றி விசதமாக அருளிச்செய்து வைத்திருக்கையாலே அங்கே கண்டு கொள்வதென்று அருளிச்செய்கிறார். நிருபாதிக பந்துவாயும் ஒருபோதும் கைவிடாதே நோக்கிக்கொண்டு போருமவனுயுமிருக்கிற ஸர்வேச்வரனொருவன் தவிர, மற்றைப்படி ஔபாதிக பந்துக்க ளான மாதா, பிதா முதலானவர்களும் மற்றுள்ள தேவதாந்தரங்களும் ரக்ஷிக்க சக்தி யுடையரல்லர் என்னுமிடம் அனேக இதிஹாஸபுராண வரலாறுகளைக் காட்டி ஸப்ரமாணமாக ஸமர்த்திக்கப்பட்டிருக்கிற படியை அந்த ரஹஸ்ய க்ரந்தத்திலே கண்டுகொள்வது.

அதிலிருந்து சில ஸ்ரீஸூக்திகளை இங்கெடுத்துக் காட்டுகிறோம்; "மாதாக்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் வாலி பக்கலிலும் ராவணன் பக்கலிலும் காணலாம். புத்ரர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ருத்ரன் பக்கலிலும் கம்ஸன் பக்கலிலும் காணலாம். மாதா பிதாக்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் கைகேயி பக்கலிலும் ஹிரண்யன் பக்கலிலும் காணலாம். மாதா பிதாக்கள் யௌவந விரோதியென்று உபேக்ஷித்தல் க்ஷாமகாலம் வந்தவாறே ஆள்பார்த்துத் தூற்றிலே பொகடுதல், விலைகூறி விற்றல் ஆபத்து வந்தவாறே நெகிழ நினைத்தல், அர்த்தக்ஷேத்ராதிகளுக்காக எதிரிட்டுக் கொல்லுதல் முடியுமவஸ்தையிலே *சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து* என்கிறபடியே ஈச்வரனை ஸ்மரித்துக் கரைமரஞ் சேரவொட்டாதபடி யலைத்தல் முடித்தல் செய்யா நிற்பர்கள். ஸ்திரீகளுக்கு பர்த்தாக்கள் ரக்ஷகரல்ல ரென்னுமிடம் தர்மபுத்திரன் பக்கலிலும் நளன் பக்கலிலும் காணலாம்......சந்திராதித்யர்களும்...... ஹிரண்ய ராவணாதிகள் கையிலே அகப்பட்டு அவர்களுக்கு இழிதொழில் செய்து திரிவார் சிலராகையாலே ரக்ஷகராகமாட்டார்கள்...... ப்ரஹ்மாவும் மதுகைடபர்கள் கையிலே யகப்பட்டு வேதங்களைப் பறிகொடுத்து 'கண்ணிழந்தேன் தனமிழந்தேன்' என்று நிலம் துழாவுகையாலும் ருத்ரன் கையிலே தலையறுப்புண்கையாலும் ரக்ஷகனாகமாட்டான்"— இத்யாதி. ... ... ... (39)

**40. ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே, இதிலே ஸ்ரீஸம்பந்தம் அநுஸந்தேயம்,**

**ரக்ஷிக்கும்போது** - எம்பெருமான் சேதநர்களை ரக்ஷிக்குமிடத்தில், **பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே** - பிராட்டி உடனிருந்தே தீர வேண்டுதலால், **இதிலே** - ரக்ஷகனைச் சொல்லுகிற இவ்வகாரத்திலே; **ஸ்ரீ ஸம்பந்தம் அநுஸந்தேயம்** - பிராட்டியின் ஸம்பந்தம் அநுஸந்திக்கத் தக்கது. ('ஸ்ரீஸம்பந்தமுமநுஸந்தேயம்' என்று மூலத்திலும் வியாக்கியானத்திலும் உம்மைசேர்ந்த பாடமுமுண்டு)

40. ப்ரணவத்தில் முதற்பதமான அகாரத்தின் பொருளை நிரூபித்து வருகையில் ஸர்வ ரக்ஷகனான எம்பெருமான் அகாரத்திற்குப் பொருள் என்பதும், ரக்ஷிக்கையாவது இன்னது என்பதும், இன்னின்னாரை இன்னின்னவிதமாக ரக்ஷிப்பதும், அவனொருவனுக்கே ரக்ஷகத்வம் ஏற்கும் என்பதும் நிரூபிக்கப்பட்டனவாயின. இந்த அகாரத்தில் லக்ஷ்மீஸம்பந்தம் அனுஸந்திக்கப்படவேணுமென்பது இனி நிரூபிக்கப்படுகிறது. ரக்ஷிக்கும் விஷயத்திலே எம்பெருமான் யாதொரு ஸஹாயாந்தரத்தையும் அபேக்ஷியாதபடி தானே ஏகாகியாய் ரக்ஷிக்கவல்லவனானாலும், பிராட்டியைத் துணைவியாகக்கொண்டு ரக்ஷிக்கிறானென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. *லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷகஸ் ஸர்வ ஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே* என்று இது முதலான பல ப்ரமாணங்கள் பகவச்சாஸ்த்ரம் முதலியவற்றில் காணப்படுகின்றன. காருண்யமே வடிவெடுத்தவளான பிராட்டியோடு கூடியே எம்பெருமான் ரக்ஷித்தருளுகிறானென்று ஸகல சாஸ்திரங்களிலும் முறையிடப்படுகின்றதென்பது மேலெடுத்துக்காட்டிய ப்ரமாண வசனத்தின் பொருள். அடிபணிகின்ற சேதநர்களுடைய குற்றங்குறைகளைக் கண்டும் தன் ஸ்வாதந்த்ரியத்தைக்கொண்டும் ரக்ஷியாதே எம்பெருமான் உபேக்ஷித்து

விடவும் கூடுமாகையாலே, அப்படி உபேக்ஷியாமல் விஷயீகரிக்கைக்கு உறுப்பான க்ருபையைப் பிறப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டியினுடைய ஸந்நிதானம் எம்பெருமான் ரக்ஷிக்கும்போதைக்கு வேண்டியிருக்கையாலே ரக்ஷகனானவனைச் சொல்லுகிற இந்த அகாரத்திலே அவனுடைய லக்ஷ்மீ ஸம்பந்தம் அனுஸந்திக்கப்பட வேணும். அதாவது—பிராட்டியோடு இணைபிரியாதவனான நாராயணன் அகாரார்த்தமாகக் கொள்ளப்படவேணுமென்கை.

நாராயணன் ஸித்திக்கும்போதே லக்ஷ்மீ விசிஷ்டனாகவே ஸித்திக்கின்றவனாகையாலே 'இதிலே ஸ்ரீஸம்பந்தம் அநுஸந்தேயம்' என்று விசேஷித்துச் சொல்லவேணுமோ? என்று சிலர் நினைக்கக்கூடும்; உள்ளதாயிருந்தாலும் நினைப்பூட்டவேணுமிறே. ... (40)

**41. அத்ர பகவத்ஸேநாபதிமிச்ரர் வாக்யம்:—"அவன் மார்பை விட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது."**

அத்ர - இவ்விடத்திலே, பகவத் ஸேநாபதி மிச்ரர் வாக்யம் - மஹாஜ்ஞாதாவான ஸ்ரீ ஸேநாபதி ஜீயர் அருளிச்செய்யும் வார்த்தை யொன்றுண்டு; (அதாவது என்னென்னில்;) அவன் மார்வை விட்டுப் பிரியில் - (பிராட்டி) எம்பெருமானுடைய திருமார்பை விட்டுப் பிரிவது உண்டானால், இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது - இவ்வகாரத்தை விட்டுப் பிரிவதுமுண்டாம் - என்பதாம்.

41. ஸ்ரீஸேநாபதி ஜீயர் என்றொரு ஸ்வாமி பண்டைக்காலத்தவர்; அவர் ஸாதிப்பராம்—"அவன் மார்வைவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது" என்று. அதாவது — *அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா* என்கிறபடியே பிராட்டி எம்பெருமான் திருமார்பை ஒரு க்ஷணகாலமும் விட்டுப்பிரிவது எப்படியில்லையோ அப்படியே அந்த எம்பெருமானுக்கு ப்ரதிபாதகமான இந்த அகாரத்தையும் அவள் விட்டுப்பிரிவதில்லை என்றபடி. எம்பெருமான் திருமார்பிலே அவள் நித்ய ஸம்பந்தம் பெற்றிருப்பதுபோலே அகாரத்திலும் நித்ய ஸம்பந்தம் பெற்றேயிருக்கின்றாளென்றதாயிற்று. ... ... ... (41)

**42. பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே ப்ரதம சரமபதங்களை விடாதே யிருக்குமிருப்பு.**

பர்த்தாவினுடைய படுக்கையையும் - கணவனுடைய சயனத்தையும், ப்ரஜையினுடைய தொட்டிலையும் - குழந்தையினுடைய தொட்டிலையும்; விடாதேயிருக்கும் மாதாவைப்போலே - விடாமல் இரண்டையும் அநுவர்த்தித்திருக்கிற தாயைப்போல, ப்ரதம சரமபதங்களை விடாதேயிருக்குமிருப்பு - முதற்பதமான அகாரத்தையும் கடைப்பதமான மகாரத்தையும் பிராட்டி விடாதே இரண்டிலும் அன்வயித்திருக்கிறபடி.

42. உலகில் தத்வத்ரயமேயுள்ளது; பிராட்டி எந்த தத்துவத்தில் சேர்ந்தவள்? அசித் தத்வத்திலே சேர்ந்தவளென்கைக்கு ப்ரஸக்தியேயில்லை. ஈச்வர தத்வத்தில் சேர்ந்தவள்போலத் தோன்றுகிறது கீழே நிரூபித்தபடியை நோக்குமிடத்தில். அப்படியாகில் ஈச்வரத்வித்வம் ப்ரஸங்கிக்குமே. பிராட்டி சேதநகோடியிற் சேர்ந்தவள்

என்றன்றோ ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தமாயிருக்கிறது; அதற்குச் சேர நிர்வஹிக்கும்படி எங்ஙனே? என்ன, ஈச்வரவாசகமான அகாரத்திலும் சேதநவாசகமான மகாரத்திலும் ஆக இரண்டிலும் இவளுக்கு அந்வயமுண்டென்று அருளிச்செய்கிறார். பிராட்டிக்கு ரக்ஷக கோடியிலும் அந்வயமுண்டு; ரக்ஷ்யகோடியிலும் அந்வயமுண்டு என்கை. இவ்வர்த்தத்தை ஒரு த்ருஷ்டாந்த முகத்தாலும் மூதலிக்கிறார். உலகத்தில் மாதாவாயிருப்பவள் தன் கணவனைப்பற்றத் தான் அடியவளாயும், தன் குழந்தையைப்பற்றத் தான் தலைவியாயுமிருப்பள். அப்படியிருந்துகொண்டு தன்னுடைய சேஷத்வ ஸ்வரூபத்திற்குச் சேரும்படி கணவனை ரஸிப்பிக்கைக்காக அவனுடைய படுக்கையையும் விடாதேயிருப்பள்; ப்ரஜையின் விஷயத்தில் தனக்குள்ள ரக்ஷகத்வஸ்வரூபத்துக்குச் சேரும்படி அந்த ப்ரஜையை ரக்ஷிக்கைக்காக அதனுடைய தொட்டிலையும் விடாதேயிருப்பள். இவ்வண்ணமாகவே பிராட்டி தானும் தன்னுடைய பர்த்தாவான ஈச்வரனுக்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள அகாரத்தையும் விடமாட்டாதவளாய், தன் ப்ரஜைகளான சேதநர்க்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள மகாரத்தையும் விடமாட்டாதவளாயிருப்பள். இரண்டிடத்திலும் தனக்கு ஸம்பந்தமிருக்கையாலே ஈச்வரனை ரஸிப்பிக்கைக்காக அங்கும் அந்வயமுற்றிருப்பள்; சேதநர்களை ரக்ஷிக்கைக்காக இங்கும் அந்வயமுற்றிருப்பள். ஆகவே ரக்ஷக வகுப்பிலும் ரக்ஷ்ய வகுப்பிலும் பிராட்டிக்கு அந்வயம் கண்ணழிவற்றிருக்கையாலே ரக்ஷக வாசகமான அகாரத்தையும் விடமாட்டாள், ரக்ஷ்யவாசகமான மகாரத்தையும் விடமாட்டாள் என்றதாயிற்று பிராட்டிக்கு அகாரத்திலே அந்வயம் அர்த்த பலத்தாலே: இவளுக்கு சப்த சக்தியினால் போதகம் மகாரமேயாகையாலே ஜீவகோடியில் இவளுக்கு அந்தர்ப்பாவம் குறையற்றதென்று முடிந்து நின்றது. ... (42)

## 43. ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப்போலே.

**ஸ்ரீ நந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத** - (திருப்பாவையில் *அம்பரமே தண்ணீரே என்கிற பாட்டிற்படியே) பர்த்தாவான நந்தகோபரையும் குழந்தையான கண்ணனையும் விட்டு நீங்காத, **யசோதைப் பிராட்டியைப்போலே** - நந்தகோபருடைய மனைவியும் கண்ணனுடைய தாயுமான யசோதையைப்போலே.

43. *பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே* என்று கீழே காட்டின ஸாமாந்யத்ருஷ்டாந்தம் ஒரு விசேஷ நிஷ்டமாகக் காட்டப்படுகிறது. திருப்பாவையில் *அம்பரமே தண்ணீரே* என்கிற பாசுரத்தில் *எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்* என்று முதலில் நந்தகோபரை யெழுப்பி, பிறகு *அசோதாய் அறிவுறாய்* என்று யசோதைப் பிராட்டியை யெழுப்பி, அதன் பிறகு *உம்பர்கோமானே! உறங்காதெழுந்திராய்* என்று கண்ணபிரானை யெழுப்பியிருக்கிறது. இதில் யசோதைப் பிராட்டி இடையிலே வர்த்திக்கிறாளாகத் தெரிகின்றது. அவள், பார்யையான தன் ஸ்வரூபத்துக்குத் தகுதியாக ரஸிப்பிக்கும் பொருட்டுத் தன் கணவனான நந்தகோபரையும் விடாமல், மாதாவான தன் ஸ்வரூபத்துக்குச் சேரும்படி ரக்ஷிக்கும்பொருட்டு புத்திரனான கண்ணனையும் விடாமல் இடையிலே வர்த்திக்கிறாள் போலும். அதுபோலவே பிராட்டியும் ப்ரணவத்தில் முதல் பதத்தின் பொருளான ஈச்வரனையும் கடைப்பதத்தின் பொருளான சேதநரையும் விடாதேயிருக்கும் என்று கண்டுகொள்வது. ... ... (43)

**44. ஒருவனடிமை கொள்ளும்போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணையோலை யெழுதுவது; ஆகிலும், பணிசெய்வது க்ருஹிணிக்கிறே; அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி.**

**ஒருவன் அடிமைகொள்ளும்போது** - உலகில் ஒரு ப்ரபுவானவன் வேலைக்காரர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்ளும்போது, **ஆவணையோலை எழுதுவது** - உடன்படிக்கைச் சீட்டு எழுதி வாங்கிக் கொள்வதானது, **க்ருஹிணிக்கென்று அன்றே** - புருஷன் தானிட்ட வேலைகளைச் செய்வதாகவே யொழிய, தன் மனையாளிட்ட வேலைகளைச் செய்வதாகவு மல்லவே; **ஆகிலும்** - ஓலைச் சீட்டில் மனைவியின் ப்ரஸ்தாவம் செய்யாதிருந்தாலும் **பணி செய்வது க்ருஹிணிக்கிறே** - அடிமைத் தொழில் செய்வது மனைவிக்கன்றோ; **அதுபோலே** – இந்த நிதர்சனத்தின் படியே, **நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி** - (பிராட்டிக்கு நேரே வாசகமான சொல் இங்கு இல்லையாகிலும்) நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கத் தட்டில்லை.

44. சேதநன் எம்பெருமானுக்கு சேஷப்பட்டவன் என்கிற இவ்வளவு மாத்திரமேயன்றோ ப்ரணவத்தில் தேறுகின்ற பொருள்; இப்படியிருக்க, பிராட்டிக்கும் சேஷப்பட்டதாகக் கூறுகிற பொருள் எங்ஙனே தகும்? என்று பின்னையும் சங்கிப்பவர்களுக்கு ஸாமானியமாக லோகத்திற்காணும் ஒரு நியாயத்தைக்கொண்டு ஸமாதானம் சொல்லப்படுகிறது. உலகத்தில் பெரிய ப்ரபுக்களாயிருப்பவர்கள் தம்மிடத்தில் சில வேலைக்காரர்களை அமைத்துக்கொள்ளும் போது (கரார்நாமா என்று இக்காலத்தில் சொல்லுகிற ரீதியிலே) ஒரு சீட்டு எழுதுவிப்பது வழக்கமுண்டு அதற்கு ஆவணையோலை என்று பெயர்; அந்த விலையோலையை ஆண்மக்கள் தங்கள் பேருக்கு எழுதி வாங்கிக் கொள்ளுவதுண்டே தவிர, தங்கள் பெண்பெண்டாட்டியையும் அதில் சேர்த்து எழுதி வாங்கிக்கொள்வது கிடையாது "நீங்கள் காலாலேயிட்ட வேலையைத் தலையாலே செய்து கொண்டு உங்களிடம் பணிசெய்திருக்கக்கடவேன்" என்றுதான் எழுதுவது வழக்கம்; மனையாளுடைய பெயர் அதில் இருக்கமாட்டாது; ஆனாலும் அந்தப் பணிவிடைக்காரன் அதிகமாகப் பணிசெய்வது மனையாளுக்கே யென்பதை நாம் உலகில் ப்ரத்யக்ஷமாகக் கண்டு வருகிறோம்: அதுபோலவே, இந்த அகாரமும் 'நாம் ஸர்வேச்வரனுக்கு சேஷபூதர்கள்' என்னுமளவையே சொல்லிற்றானாலும் பிராட்டிக்கு அடிமையா யிருக்கக் குறையில்லை யென்றுணர்க. ... ... ... (44)

**45. ஆகப் பிரித்து நிலையில்லை.**

**ஆக** - ஆகவே, **பிரித்து நிலையில்லை** - பெருமாளுக்கும் பிராட்டிக்கும் தனிப்பட்ட இருப்பென்பது கிடையாது.

45. ஆக, கீழே உபபாதித்த காரணங்களை யெல்லாம் சேரப்பிடித்து நிகமநம் செய்யுமளவில், ஈச்வரனும் பிராட்டியுமாகிற இந்த திவ்ய தம்பதிகளுக்கு எப்போதும் சேர்த்தியுண்டே தவிர, பிரித்து நிலையில்லை என்று ஸித்தாந்தம் செய்யப்பட்டதாகிறது. ... ... ... ... (45)

**46. ப்ரபையையும் ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே.**

**ப்ரபையையும் ப்ரபாவானையும் - ஸூர்யாதி தேஜஸ்ஸுக்கும் ஸூர்யாதிகளுக்கும் பிரித்து நிலையில்லாதாப் போலவும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே - பூவுக்கும் பரிமளத்திற்கும் பிரித்து நிலையில்லாதாப்போலவும் (இதனைக் கொள்க).**

46. திவ்ய தம்பதிகளுக்கு ஒருகாலும் பிரித்து நிலையில்லை யென்னுமிடம் இரண்டு த்ருஷ்டாந்தங்களினால் மூதலிக்கப்படுகிறது. ஸூர்யன் முதலிய தேஜ: பதார்த்தங்களையும் அவற்றின் கிரணமாகிய ப்ரபையையும் எடுத்துக்கொள்வோம்; இவற்றுக்கு ஒருபோதும் பிரித்து நிலை கிடையாது; அங்ஙனமே பூவையும் பரிமளத்தையும் எடுத்துக்கொள்வோம்; அவற்றுக்கும் ஒருபோதும் பிரித்து நிலை கிடையாது. இவ் வண்ணமாகவே பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒருபோதும் பிரித்து நிலை கிடையாதென்று கொள்ளத் தக்கது இந்த இரண்டு த்ருஷ்டாந்தங்களும் ஏற்கெனவே பூருவர்களின் க்ரந்தங்களில் காட்டப்பட்டிருக்குமவையே யாகும். அசோக வனத்திலே இராவணன் பிராட்டி பக்கலில் வந்து பல வகையான ப்ரலோபந வார்த்தைகளைப் பிதற்றினபோது, பிராட்டி ஒரு துரும்பைக் கிள்ளி எதிரே போட்டு மறுமாற்ற மருளிச்செய்து வருகையில் *சக்யா லோபயிதும் நாஹம் ஐச்வர்யேண தநேநவா, **அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா.** உபதாய புஜம் தஸ்ய லோகநாதஸ்ய ஸத்க்ருதம், கதம் நாமோபதாஸ்யாமி புஜமந்யஸ்ய கஸ்யசித்* என்று அருளிச்செய்தாள், இதில் ப்ரபாவான் ஸ்தானத்திலே பெருமாளையும், ப்ரபையின் ஸ்தானத்திலே தன்னையும் வைத்துப் பேசினாள் பிராட்டி.

பிராட்டி அக்நி ப்ரவேசம் செய்தருளித் தமது சுத்தியை நிரூபித்த பின்பு பெருமாளும் *அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா* என்று இந்த த்ருஷ்டாந்தத்தை யிட்டே அருளிச்செய்தார். பூவும் மணமும் என்கிற திருஷ்டாந்தத்தை ஸ்ரீ குணரத்நகோசத்திலே பட்டர் அருளிச் செய்தார் *ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷு:* என்று. ஆக, ப்ரபைக்கும் ப்ரபாவானுக்கும், பரிமளத்திற்கும் புஷ்பத்திற்கும் பிரித்து நிலையில்லாதாப்போலே எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் ஒருகாலும் பிரித்து நிலையில்லையென்றதாயிற்று. ... ... ... (46)

**47. ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது.**

**ஆக, - இங்ஙனே பிரித்து நிலையில்லாமையாலே, இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது - திவ்ய தம்பதிகளான சேர்த்தியே நமக்குத் தஞ்சமாயிற்று.**

47. இங்ஙனே திவ்யதம்பதிகளுக்கு ஒருபோதும் பிரித்து நிலையில்லாமையாலே நமக்கெல்லார்க்கும் இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது. இவர்களைத் தனித்தனியே விரும்புகை தகாது என்றும், அப்படி விரும்பினால் ராவணனும் சூர்ப்பணகையும் பட்ட பாடுதான் படநேருமென்றும், இருவரையும் சேரப் பற்றினால் தான் ஸ்ரீவிபீஷணாழ்வானைப் போலே வாழலாமென்றும் தெரிவித்தவாறாயிற்று. ... (47)

48. இதிலே சதுர்த்தியேறிக் கழியும்.

இதிலே - இந்த அகாரத்திலே, சதுர்த்தி ஏறிக்கழியும் - நான்காம் வேற்றுமை ஏறியிருந்து லோபித்து விட்டதாகக் கொள்ளவேணும்.

48. ஆக இவ்வளவும் அகாரத்தின் பொருளை விவரித்தாயிற்று. இனி, அந்த அகாரத்தின் மீது ஒரு விபக்தியிருப்பதாகக் கொண்டு அதற்குப் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, அந்த விபக்தியானது சாஸ்த்ரப்படி லோபித்துவிட்டதென்று அருளிச்செய்கிறார். அதாவது, அகாரத்தின் மேல் சதுர்த்தி விபக்தி ஏறியிருந்து, அது [வைதிகப்ரக்ரியைக்குரிய] ஒரு ஸூத்ரத்தினால் லோபமடைந்திருப்பதாகக் கொள்ளவேணுமென்கை. ... ... ... ... (48)

49. 'சதுர்த்தியேறினபடி யென்?' என்னில்.

50. நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே.

சதுர்த்தி ஏறினபடி என்னென்னில் - மற்ற வேற்றுமைகள் கிடக்க நான்காம் வேற்றுமையே ஏறியிருந்து லோபித்ததாகக் கொள்வதற்கு நியாமகமேதென்னில், நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே - மேலேயுள்ள 'நாராயணாய' என்கிற பதத்திற்கு இது ஸங்க்ரஹமாகையாலே, அதில் நான்காம் வேற்றுமை ஸ்பஷ்டமாகக் காண்கையாலே.

49, 50. விபக்திகள் பல இருக்க, சதுர்த்திவிபக்திதான் ஏறிக்கழிந்ததென்று கொள்ளவேண்டியநியாமகம் ஏதென்னில்; மேலேயுள்ள நாராயண பதத்திற்கு இந்த அகாரம் ஸங்க்ரஹமென்றும், இந்த அகாரத்திற்கு நாராயணபதம் விவரணமென்றும் ஏற்பட்டிருக்கையாலே, விவரணமான அதில் சதுர்த்திவிபக்தி வ்யக்தமாக இருக்கக்காண்கையாலே, அதன் ஸங்க்ரஹமான அகாரத்திலும் அந்த சதுர்த்தி விபக்தியேதான் இருக்கத்தகும். ஆகவே இதுவே நியாமகமென்று கொள்ளக்கடவது. ... ... (49, 50)

51. இத்தால் ஈச்வரனுக்கு சேஷமென்கிறது.

இத்தால் - இந்த லுப்தசதுர்த்தியாலே, ஈச்வரனுக்கு சேஷமென்கிறது - பகவச்சேஷத்வம் சொல்லப்படுகிறது.

51. இங்கு ஏறிக்கழிந்த சதுர்த்திவிபக்திக்கு என்ன அர்த்தமென்னில், [தாதர்த்யம்] என்பது அர்த்தம்; அதாவது சேஷத்வம். அகாரவாச்யனான ஈச்வரனுக்கு சேஷம் என்கை. ... ... ... (51)

52. சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டிற்காண்கிறதென்னில்:—

53. அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே.

நாட்டில் - உலகத்திலே, சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ காண்கிறதென்னில் - ஒருவனுக்கு அடிமைப்பட்டிருப்பது துக்கமாகக் காணப்படுகிறதே யென்னில்; அந்த நியமமில்லை -

அடிமைத்தனமெல்லாம் துக்க ரூபமாகவே யிருக்குமென்கிற நியதியில்லை. உகந்த விஷயந்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு - அபிமதவிஷயங்களிலே அடிமைத்தொழில் செய்திருக்குமிருப்பானது, ஸுகமாகக் காண்கையாலே - ஸுகரூபமாகக் காணப்படுகையாலே.

52, 53. ஒருவனுக்கு அடிமைப்பட்டிருப்பதானது வருத்தமாக உலகில் காணப்படுகின்றதே; ஆகவே அது ஹேயமன்றோ; ஹேயமான சேஷத்வத்தை விதிக்கலாமோ வென்னில்; 'அடிமைப்பட்டிருப்பதெல்லாம் வருத்தம்' என்று ஒரு நியமம் கிடையாது; அபிமத விஷயங்களிலே அடிமைப்பட்டிருப்பதானது பேரின்பமாக உலகிற் காணப்படாநின்றது. *ஸம்வாஹயாமி சரணாவுத பத்மதாம்ரௌ* என்று துஷ்யந்தன் சகுந்தலையை நோக்கிச் சொல்லுகிறான். 'உன் கால்களை என் மடியிலே இட்டுக்கொண்டு இனிதாக வருடட்டுமா? ஆலவட்டம் பணிமாறட்டுமா?' என்றிப்படி அபிமத விஷயங்களை நோக்கி நாயகன் சொல்லுவது ஜகத்ப்ரஸித்தம் ஆகவே உகப்புண்டான விஷயங்களில் அடிமைப்படுவது ஆனந்தமாயிருக்கையாலே 'சேஷத்வம் துக்கரூபம்' என்று நியமமில்லை யென்றதாயிற்று. ... ... ... (52, 53)

**54. அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது.**

அகாரத்திலே - ஈச்வரன் ரக்ஷகனென்பதைச் சொல்லுமதான அகாரத்திலே, கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே - அந்த ரக்ஷணத்திற்கு இன்றியமையாத திருக்குணங்களும் அர்த்தஸித்தமாகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது - லுப்தசதுர்த்தியின் பொருளாகக் கீழே சொல்லப்பட்ட சேஷத்வமும் குணப்ரயுக்தமேயாம்.

54. அடிமைப்பட்டிருப்பது இன்பமாகவும் உலகத்தில் காண்கிறதென்பது உண்மையே; தான் உகக்குமிடத்தில் ஏதோ சில குணங்கள் இருப்பதாக எண்ணுவதனாலன்றோ அங்கு அடிமை ரஸிக்கிறது; இங்கு அப்படி யுண்டோவென்ன; "அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது" என்கிறார். அகாரமானது எம்பெருமான் ரக்ஷகன் என்னுமிடத்தைச் சொல்லுகிறதென்று கீழே நிரூபிக்கப்பட்டது. ரக்ஷணத்திற்குவேண்டிய கல்யாண குணங்களும் சொல்லப்பட்டனவாதலால் பகவத் விஷயத்திலுண்டாகிற சேஷத்வமும் குணப்ரயுக்தமேயென்று அறியலாம். ஆகவே இதுவும் ஸுகரூபமாகவேயிருக்குமென்றதாயிற்று. ... (54)

**55. சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.**

சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் - சேஷத்வம் ஆத்மாவுக்கு ஔபாதிகமன்றிக்கே ஸ்வரூபமே யாயிருக்கும்.

55. சேஷத்வம் குணப்ரயுக்தமென்னும் பக்ஷத்தில் ஔபாதிகம் என்றதாகவன்றோ தேறிற்று; அப்போது இது ஸ்வரூபமாகமாட்டாதே யென்ன; சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்கிறார். உலகத்தார் உகந்த விஷயங்களில் அடிமைப்படுவதை ஸுகரூபமாக நினைப்பதானது அங்கேயுள்ள குணங்கள் காரணமாக — என்று பேச்சு வந்தபடியாலே, அவ்வண்ணமாகவே இங்கும் குணங்கள் உண்டு என்று சொல்லிற்றே

தவிர, உண்மையை நோக்கினுல் சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று சாஸ்திரங்களில் அறுதியிடப்பட்டிருக்கிறதென்கை. ... ... (55)

**56. சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை.**

**57. ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்.**

சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை – சேஷத்வத்தையிட்டே நிரூபிக்கத் தக்கது ஆத்மஸ்வரூபம். ஆத்மாபஹாரமாவது - சாஸ்த்ரங்களில் ஸகலபாபங்களுக்கும் மூலமாகச் சொல்லப்பட்ட ஆத்மாபஹாரமாவது, ஸ்வதந்த்ரமென்கிற நினைவு - சேஷத்வத்திற்கு எதிர்த்தட்டான ஸ்வாதந்த்ர்யப்ரதிபத்தி. ஸ்வதந்த்ரமாம் போது - அந்த ஸ்வாதந்த்ர்ய ப்ரதிபத்தி நடக்குமளவில், இல்லையாய்விடும் - ஆத்மஸ்வரூபஸத்தைக்கே அபாயமாம்.

56, 57. "சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்" என்பானேன்? ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுகச் சொல்லப்படுகின்ற ஆத்மாவுக்கு சேஷத்வமில்லாதபோதும் ஸ்வரூபமில்லையோ என்ன; இல்லை என்று நிஷ்கர்ஷிக்கிருர். சேஷத்வமில்லையென்ருல் தன் ஸ்வரூபம் ஸ்வதந்திரம் என்று நினைத்தபடியாயிற்று. இந்த நினைவு தான் ஆத்மாபஹாரக் களவு எனப்படுகிறது. அந்த ஆத்மாபஹாரந்தான் ஸகல பாபங்களுக்கும் வேர்ப்பற்ருகச் சொல்லப்பட்டுளது. தன்னை ஸ்வதந்த்ரன் என்று நினைத்தபோதே ஸ்வரூபம் இல்லையாய் விடும். ஆகவே 'சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை' என்றது கல்வெட்டாயிற்று. ஆக இவ்வளவும் அகாரார்த்த விவரணம் ... ... (56, 57)

**58. ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணர்த்தம்.**

ஸ்தானப்ரமாணத்தாலே - ஏவகார ஸ்தானத்தில் உகாரம் ப்ரயோகிக்கப் பட்டுவருகிற கணக்காலே, உகாரம் அவதாரணர்த்தம் - உகாரமானது அவதாரணத்தைப் பொருளாகவுடையது. (அவதாரணம்-பிரிநிலை.)

58. உகாரத்திற்கு '**அவதாரணம்**' அர்த்தம்; ஏவ என்றிருந்தால் என்ன அர்த்தம் கொள்ளக்கூடுமோ அந்த அர்த்தமே உகாரத்திற்குக் கொள்ளவேணும். வேதத்தில் ஏவகாரஸ்தானத்திலேயே உகாரத்தை ப்ரயோகிப்பது வழக்கமாகக் காண்கிறது. ***ததேவாக்நிஸ் தத்வாயுஸ் தத்ஸூர்யஸ் தது சந்த்ரமா:*** இத்தியாதி ஸ்தலங்கள் காணத் தக்கன. இப்படிப்பட்ட ஸ்தாந ப்ரமாணத்தைக்கொண்டு உகாரத்திற்கு அவதாரணம் அர்த்தமாகக்கொள்ளக் குறையில்லை. ... ... (58)

**59. இத்தால் பிறர்க்கு சேஷமன்றென்கிறது.**

இத்தால் - பிரிநிலைப் பொருளதான இவ்வுகாரத்தால், பிறர்க்கு சேஷமன்று என்கிறது – அந்ய சேஷத்வ நிவ்ருத்தி காட்டப்படுகிறது.

59. அவதாரணத்தினுல் சில இடங்களில் அயோகவ்யவச்சேதம் பலிக்கும்; சில இடங்களில் அந்யயோகவ்யவச்சேதம் பலிக்கும். 'சங்கு வெண்ணிறமுடையதே' என்ருல் இவ்விடத்து அவதாரணம் அயோகவ்யவச்சேதத்தைக் காட்டும்; அதாவது, சங்கில்

வெண்மை நிறமேயிருக்கிறது என்று காட்டுவது அயோகவ்யவச்சேதமாகும். 'வெண்மை நிறம் சங்கில் தவிர வேறொன்றில் இல்லை' என்பதானால் இது அந்யயோகவ்யவச்சேதமாகும். அப்படிச் சொல்ல ப்ரஸக்தியில்லாமையாலே அங்கு அந்யயோகவ்யவச்சேதமென்ன ப்ரஸக்தியில்லை; அயோகவ்யவச்சேதமேயுள்ளது. 'அர்ஜுனனே வில்வல்லான்' என்றால் வில்வல்லமை அர்ஜுனனுக்குத் தவிர வேறொருவனுக்கில்லையென்று காட்டப்படுவதால் இங்கு அந்யயோகவ்யவச்சேதம் கொள்ளப்படும். ப்ரக்ருதத்தில், உகாரத்திற்கு அர்த்தமாகச் சொல்லப்பட்ட அவதாரணம் அந்யயோக வ்யவச்சேதத்தையேகாட்டிநிற்கும். சேதநர்க்குக் கூறப்படும் சேஷத்வமானது எம்பெருமான் விஷயத்திலேயன்றி மற்றொருவர் விஷயத்திலேயன்று என்றதாகத் தேறிநிற்கும். "ப்ருதிவ்யாமேவ கந்த:" என்று சொன்னால், மணமென்கிற குணம் ப்ருதிவியில் தவிர வேறொன்றிலில்லையென்று காட்டி அந்யயோக வ்யவச்சேதம் தேறுகிறாப்போல, இங்கும் "ஜீவ: ஆயைவ" என்றதாகி, சேதநன் எம்பெருமானொருவனுக்கே சேஷப்பட்டவன், பிறர்க்கு உரியவனல்லன் என்று அந்யயோக வ்யவச்சேதமே தேறி நிற்கும்.

லுப்தசதுர்த்தியாலே 'எம்பெருமானுக்கு சேஷபூதன்' என்னுமிடம் தெரிவிக்கப் படா நிற்க, வேறொருவனுக்கு சேஷபூதனா அல்லனா என்கிற விசாரத்திற்கே உதய மில்லாமலிருக்கையில் அந்யசேஷத்வத்தையெடுத்துக் கழிக்கவேணுமோவென்று சிலர் சங்கிப்பர்கள்; உலகத்தில் ஒருவனுக்கு சேஷப்பட்டவஸ்துவே மற்றொருவனுக்கும் சேஷப்பட்டிருக்கிறபடியை நாம் க்ருஹம், க்ஷேத்ரம், புத்ரன், தாஸன் முதலான விஷயங்களிலே காணாநின்றோமாகையாலே அப்படிப்பட்ட அந்ய சேஷத்வம் இங்குமுண்டோவென்று சங்கையுண்டாக ப்ரஸக்தியிருக்கையாலே எடுத்துக் கழிப்பது பொருந்துமென்று கொள்க. ... ... (59)

**60. பெரிய பிராட்டியார்க்கு சேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்.**

பெரிய பிராட்டியார்க்கு சேஷமென்கிறது என்றும் சொல்லுவர்கள்—உகாரத்திற்குப் பிராட்டியைப் பொருளாகக்கொண்டு அவளுக்கு அடிமையென்கிறதென்பதாகவும் சிலர் நிர்வஹிப்பர்கள்.

60. உகாரத்திற்கு அவதாரணமென்னும் பொருள் கீழே சொல்லப்பட்டது; அங்ஙனன்றிக்கே லக்ஷ்மீ என்கிற பொருளும் சிலர் கூறுவதுண்டு; பகவச் சாஸ்திரத்தில் உகாரத்திற்கு லக்ஷ்மி அர்த்தமென்றும், பகவானுக்கும் லக்ஷ்மிக்கும் சேதநன் சேஷபூதன் என்று ப்ரணவத்தினால் சொல்லப்படுகிறது என்றும் ஸ்பஷ்டமான வசனங்கள் காணப்படு கையாலே அதையடியொற்றி அகாரத்தாலே அர்த்தாத் லக்ஷ்மீ ஸம்பந்தம் அநுஸந்திக்க வேண்டா; உகாரத்தில் ஸ்பஷ்டமாகவே லக்ஷ்மீசேஷத்வம் அர்த்தமாக அநுஸந்திக்கப் படலாம் என்றதாயிற்று. இது சில ஆசாரியர்களுடைய நிர்வாஹம். ... (60)

**61. அதிலும் அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.**

அதிலும் - லக்ஷ்மீசேஷத்வமாகிற பொருளிலுங்காட்டில், அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதானம் - அந்யசேஷத்வ நிவ்ருத்திப் பொருளே சிறக்கும்.

61. உகாரத்திற்கு லக்ஷ்மியைப் பொருளாகக்கொண்டு நிர்வஹிப்பதிற் காட்டிலும், முந்துற நிர்வஹித்தபடி அவதாரணத்தைப் பொருளாகக் கொள்வதே சிறக்கும். அவ்வர்த்தந்தான் முக்கியமாக அபேக்ஷிதம். அகாரத்திலேயே லக்ஷ்மீஸம்பந்தம் ஸித்தித்துவிட வழியுண்டு; அந்யசேஷத்வம் கழியும்படியான அவதாரணப்பொருள் கொள்வதற்குப் பாங்கான வேறு இடம் இல்லாமையாலே உகாரத்திலே அதனைக் கொள்வதுதான் நன்று. ... ... (61)

62. தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கிடுமாபோலே, ஈச்வர சேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை.

**தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை** - வேள்விகளில் இந்திராதி தேவர்களுக்கு உரித்தாக இடப்படுகிற ஹவிஸ்ஸை, **நாய்க்கு இடுமாபோலே** - நிஹீநஜந்துவான நாய்க்கு இடுவது போலே யிருப்பதொன்று, (எது வென்னில்) - **ஈச்வர சேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை** - எம்பெருமானுக்கே அடிமைப்பட்டதான ஆத்மவஸ்துவை ஹேயரான ஸம்ஸாரிகளுக்கு அடிமைப்படுத்துகை.

62. அந்ய சேஷத்வத்தை அவசியம் கழித்தே தீரவேண்டும்படி அது அவ்வளவு கொடிதோவென்னில்; மிகக் கொடியதேயாம். வகுத்த சேஷியான எம்பெருமானுக்கு உரியதான ஆத்ம வஸ்துவை, பலபடியாலும் ஹேயரான ஸம்ஸாரிகளுக்கு சேஷப் படுத்துவது எதுபோன்ற தென்றால், "வானிடை வாழுமவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த அவி" என்கிறபடியே இந்திரன் முதலிய தேவர்களுக்கு போக்யமாய் சேஷமாகக் கல்பிக்கப்பட்டதான ஹவிஸ்ஸை, அதிநிஹீந ஜந்துவான நாய்க்கு இடுவது போன்றதாகும். ஆகவே, இவ்வளவு கொடிதான அந்ய சேஷத்துவத்தைக் கழிக்க வேண்டியது மிகவும் அவசியமாகையாலே உகாரத்திற்குப் பிராட்டியைப் பொருளாகக் கொள்வதிற்காட்டிலும், அந்யசேஷத்வத்தைக் கழிப்பதற்குறுப்பான அவதாரணத்தைப் பொருளாகக்கொள்வதே பாங்கு என்றதாயிற்று ... ... (62)

63. பகவச்சேஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.

**பகவச் சேஷத்வத்திலும்** - எம்பெருமானுக்கு சேஷமாயிருக்குமதிலுங் காட்டில், **அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதானம்** - பிறர்க்கு அடிமைப்படாதொழிகையே முக்கியமானது.

63. அறுபத்தோராவது சூர்ணையில் தெரிவிக்கப்பட்ட அர்த்தம் மீண்டும் ஸ்திரமாக நியமிக்கப்படுகிறது. கீழே உபபாதித்தபடி மிகவும் க்ரூரமான அந்யசேஷத்வம் கழிகையே ஆத்மாவுக்கு மிகவும் முக்கியமாதலால், எம்பெருமானுக்கு சேஷப்பட்டிருப் பதிலுங்காட்டில் பிறர் பக்கலில் அடிமைப்படாதிருக்கையே மிகவும் உத்தேச்யம். உகாரத்திற்கு, பிராட்டிக்கு சேஷப்படுகையென்கிற அர்த்தத்திற்காட்டிலும் அவதாரணார்த்தம் கொள்வது முக்கியம் என்கிற இவ்வளவேயன்று. பகவச் சேஷத்வத்திற்காட்டிலுங்கூட அந்ய சேஷத்வம் கழிகை தான் அவச்யாபேக்ஷித மென்றதாயிற்று. ... ... ... (63)

**64. "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கையாலே.**

*மறந்தும் புறந்தொழா மாந்தர்* என்கையாலே – 'எம்பெருமானுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்றொருவருக்கு அடிமைப்படாதவர்கள்' என்று திருமழிசைப் பிரானருளிச் செய்கையாலே.

64. கீழ்ச்சொன்ன விஷயத்திற்கு ஒரு ப்ரமாணம் காட்டவேணுமேயென்ன, *மறந்தும் புறந்தொழா மாந்தர்* [நான்முகன் திருவந்தாதி—68] என்கிற திருமழிசைப் பிரான் பாசுரமே இதற்குச்சிறந்த ப்ரமாணமென்று காட்டப்படுகிறது. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (3-7. 14)* ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே, பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்* என்ற சுலோகத்திற்கு மொழிபெயர்ப்பாகத் திருமழிசைப்பிரான் *திறம்பேல்மின்கண்டீர் திருவடி தன்நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர் இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்களென்றான் நமனும் தன் தூதுவரைக் கூவிச் செவிக்கு* என்ற பாசுரத்தை யருளிச்செய்தார். இதில் "திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்றது மிகவும் ஸாரமானது. 'அடி' என்றும் 'அடிகள்' என்றும் 'திருவடி' என்றும் ஸ்வாமிக்கு வாசகம். ஸ்வாமியான எம்பெருமானுடைய திருநாமத்தை மறந்திருந்தாலுமிருக்கலாம்; (அதாவது) பகவத்பஜனத்தைத் தவிர்ந்திருந்தாலுமிருக்கலாம்; புறம் தொழுகை (அதாவது, அந்ய சேஷத்வம்) ஆகாது என்பது இங்குக் காட்டப்பட்டது. ஒருத்தி தன் கணவனிடத்தில் அன்பு கொள்ளாதிருக்கினுமிருக்கலாம்; நாளடைவில் ஆநுகூல்யம் ஏற்படக்கூடும்; வேறு புருஷனிடத்தில் அன்புகொண்டால் அவத்யமாகுமே; அதுபோல, ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் பராசரமஹர்ஷி *மதுஸூதநப்ரபந்நாந்* என்றதை ஆழ்வார் *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்ற சொல்லாலே மொழிபெயர்த்திருக்கையாலே அந்ய சேஷப்படாமலிருக்குமளவே பாகவதர்களென்கைக்குப் போரும் — என்று ஸித்திக்கின்றது. ஆகவே, இந்தப் பாசுரத்தினால் பகவச் சேஷத்வத்திற்காட்டிலும் அந்ய சேஷத்வம் கழிகையே முக்கியமென்னுமிடம் மூதலிக்கப்பட்டதாயிற்று. ... (64)

**65. இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது.**

**இத்தால்** – அந்ய சேஷத்வநிவ்ருத்தியைத் தெரிவிக்குமதான இவ்வுகாரத்திலே, **தனக்கும், பிறர்க்கும் உரித்தன்று என்கிறது** - இவ்வாத்ம வஸ்துவானது தனக்கும் உரித்தன்று, பிறர்க்கும் உரித்தன்று என்று சொல்லி நிற்கிறது.

65. "அந்யசேஷத்வம் கழிகை" என்பது வியாக்கியானிக்கப்படுகிறது. இவ்வாத்ம வஸ்துவானது தன்னையொழிந்த ஸம்ஸாரிகளுக்கு உரித்தன்று என்பது மாத்திரம் பொருளல்ல; 'தனக்கும் உரித்தன்று' என்கிறவரையில் பொருள்பட்டு நிற்கும். அந்யர் என்று சொன்னால் அந்யரில் தானும் சேர்ந்தவனேயாகையாலே, தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்பதுதான் அந்ய சேஷத்வம் கழிகையாவது. ஸ்வசேஷத்வத்தைக் கழிப்பதற்காகத் தனியே ஒரு முயற்சி வேண்டியதில்லை; அந்ய சேஷத்வத்தைக் கழிக்கிற உகாரத்திலேயே ஸ்வசேஷத்வமும் அர்த்தாத் கழியுண்டதென்றதாயிற்று ஆக இவ்வளவும் உகாரார்த்தம். ... ... ... (65)

**66. மகாரம் இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே ஆத்மாவைச் சொல்லுகிறது.**

மகாரம் - உகாரத்திற்கடுத்த மகாரமானது, இருபத்தஞ்சாமக்ஷரமாய் - ககாரம் தொடங்கி, இருபத்தைந்தாவது எழுத்தாயும், ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே - ஞானப் பொருளதான தாதுவினின்றும் தேறி ஞானத்தைச் சொல்லுமதாயுமிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது - இருபத்தைந்தாவது தத்வமாய் ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஜ்ஞான குணகனுமாயிருக்கிற ஆத்மாவுக்கு வாசகமாம்.

66. இனி, ப்ரணவத்தில் மூன்ருவது அக்ஷரமான மகாரத்தின் பொருள் விவரிக்கப்படுகிறது. அக்ஷரராசியில் (ஹல்லெழுத்துக்களில்) ஒவ்வொரு அக்ஷரத்தினுலும் ஒவ்வொரு தத்துவம் கூறப்படுகிறதாகச் சொல்லிவருமடைவில், ககாரம் முதல் ஹகாரம் வரையிலுமுள்ள இருபத்துநான்கு அக்ஷரங்களாலும்* பொங்கைம் புலனும்பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானுங்காரமனங்களே* என்னப்பட்ட இருபத்துநான்கு தத்துவங்கள் கூறப்பட்டனவாகவும், இருபத்தைந்தாவது அக்ஷரமான மகாரமானது இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவாத்மாவைச் சொல்லுகிறதாகவும் கூறப்பட்டிருக்கிறது அன்றியும், மகாரமானது "மந—ஜ்ஞாநே" (அல்லது) "மநு—அவபோதநே" என்கிற தாதுவடியாகத் தேறினதாகையாலும் ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஞானத்தையே குணமாகவுடையனுமான ஆத்மாவைச் சொல்லிற்றுகிறது. ... ... ... (66)

**67. இதுதான் ஸமஷ்டி வாசகம். 68. ஜாத்யேகவசநம்.**

இதுதான் - ஆத்மாவைச் சொல்லுமதான இம் மகாரமானது, ஸமஷ்டிவாசகம் - ஆத்மஸமுதாயங்களுக்கெல்லாம் வாசகமாயிருக்கும். ஜாத்யேகவசனம் - ஆத்மஜாதியிலே நோக்கான ஏகவசனமென்க.

67, 68. ப்ரணவத்திலுள்ள மகாரமான்து ஏகவசனமாயிருக்கையாலே ஒரு ஆத்மாவைத்தானே சொல்லும்; இங்குச்சொல்லப்படுகிற பகவச்சேஷத்வம் ஒரு ஆத்மாவுக்கு உள்ளதாகத்தானே இதனுல் தேறுகின்றது. இது பொருந்துமோ? பத்தர், முக்தர், நித்யர் என்று சொல்லப்படுகிற ஆத்ம வகுப்புக்கள் மூன்றிலுமுள்ள ஸகல ஆத்மாக்களுக்குமன்றே பகவச்சேஷத்வம் லக்ஷணமாகவுள்ளது; இங்கு ஏகவசனமே உள்ளபடியாலே அது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கையுண்டாக, இது ஜாத்யேக வசனமாகையாலே ஆத்ம ஸமுதாயங்களெல்லாவற்றையும் சொல்லக் குறையில்லை என்று நிர்ணயிக்கப்படுகிறது. 'இந்தக் கடையில் குடை விற்கப்படுகிறது' என்றால், ஒரு குடைதான் விற்கப்படுகிறதென்று பொருள்படுமோ? அந்த ஏகவசனம் ஜாதிபரம் என்று கொள்ளப்படுவதுபோல இங்கும் (ம்) என்கிற ஏகவசனம் ஆத்ம ஜாதிபரம் என்றதாயிற்று ... ... ... (67, 68)

**69. இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.**

இத்தால் - இந்த மகாரத்தினுல், ஆத்மா ஜ்ஞாதா என்று - சேஷத்வத்திற்கு இருப்பிடமான ஆத்மாவானவன் ஞானத்திற்கும் கொள்கலமானவனென்று காட்டி, தேஹத்தில்

**வ்யாவ்ருத்தி சொல்லிற்றுயிற்று** - அறிவிலியான தேஹத்திற்காட்டில் ஆத்மாவுக்குள்ள வேறுபாடு சொல்லப்பட்டதாயிற்று.

69. ஆத்மாவுக்கு சேஷத்வம் ஜ்ஞாத்ருத்வம். ஆநந்தித்வம் முதலாகவுள்ள தருமங்களில் இப்போது மகாரத்திஞல் எவ்விதமான தருமம் சொல்லப்பட்டதென்னில், இருபத்தைந்தாவது அக்ஷரமாயும் ஞானத்தைச் சொல்லுமதாயுமிருக்கின்ற இந்த மகாரத்திஞல் ஆத்மாவின் ஜ்ஞாநாச்ரயத்வம் சொல்லப்படுகிறது; இது சொன்னதஞல் என்ன தேறுகிறதெனில், அசேதநமான தேஹத்திற்காட்டில் ஆத்மா வாசி பெற்றதென்னுமிடம் தேறுகிறது. ... ... ... (69)

**70. தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வசேகரத்திலே சொன்னேம்.**

**தேஹத்தில் வ்யாவ்ருத்தி**-தேஹத்திற்காட்டில் ஆத்மாவுக்குள்ள வேறுபாட்டை. **தத்வசேகரத்திலே சொன்னேம்** - தத்வசேகரமென்னும் ரஹஸ்யத்திலே பரக்கச் சொன்னேம்.

70. தேஹமே ஆத்மாவென்றும், தேஹத்திற்காட்டில் வேறுபட்ட ஆத்மா இல்லையென்றும் சிலர் வாதிக்கின்ருர்களே; அப்படியிருக்க, ஆத்மா தேஹத்திற்காட்டில் வேறுபட்டவனென்று எப்படி நிர்வஹிக்கமுடியுமென்ன; இதைப்பற்றின விரிவு இவ்விடத்தில் வைத்துக்கொள்ளவில்லை: ஏற்கெனவே தத்வசேகரமென்னும் பெரிய க்ரந்தத்தில் அது மிக விரிவாக விசாரித்து முடிக்கப்பட்டுள்ளது, அங்கே கண்டுகொள்வது என்ருராயிற்று. ... ... ... (70)

**71. மணத்தையும் ஒளியையுங்கொண்டு பூவையும் ரத்நத்தையும் விரும்புமாபோலே, சேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது; அல்லாதபோது "உயிரிஞற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற சேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.**

**மணத்தைக்கொண்டு பூவை விரும்புமாபோலேயும்** - மணத்திற்கிருப்பிடமானதென்கிற காரணத்திஞல் புஷ்பத்தை விரும்புவது போலவும், **ஒளியைக்கொண்டு ரத்னத்தை விரும்புமாபோலேயும்** - சிறந்த ப்ரகாசத்திற்கு இருப்பிடமானதென்கிற காரணத்திஞல் ரத்னத்தை விரும்புவதுபோலவும், **சேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது** - சேஷத்வத்திற்கு இருப்பிடமானதென்கிற காரணத்திஞல் ஆத்மாவை விரும்புகிறது. **அல்லாதபோது** - சேஷத்வத்திற்கு ஆச்ரயமன்ருகில், **உயிரிஞல் குறைவில மென்கிறபடியே** - *தடம் புனல சடைமுடியன் தனியொரு கூறமர்ந்துறையு முடம்புடையான் கவராத உயிரிஞல் குறைவிலமே* என்கிற நம்மாழ்வார் பாசுரத்தின்படியே, [அதாவது, பகவச் சேஷத்வ மற்ற ஆத்மா அநபேக்ஷிதமென்று சொன்னபடியே] **த்யாஜ்யம்** - ஆத்மா த்யாஜ்யஞவன்.

71. தர்மியின் ஸ்வரூபத்தை முற்படச்சொல்லிப் பிறகு அதன் தர்மத்தைச் சொல்லுவது முறைமை; ப்ரக்ருதத்தில் அந்த ரீதியிலே சொல்லுவதாஞல் (இந்த ப்ரணவத்திலே) முன்னே ஆத்மாவைச்சொல்லி, பின்னே சேஷத்வத்தைச்சொல்லவேணும்; அங்ஙனே சொல்லாமல், முன்னம் சேஷத்வத்தைச்சொல்லி பின்னை (மகாரத்தாலே) ஆத்மாவைச்சொல்லியிருக்கிறதே, இதற்கு என்ன காரணம்? என்ன, அது சொல்லுகிறது.

உலகில் புஷ்பத்தை விரும்புகிறவன் அது நறுமணமுடையது என்கிற காரணத்தை யிட்டே விரும்புகிருப்போலவும், ஒரு ரத்னத்தை விரும்புகிறவன், அது ஒளியுடையது என்கிற காரணத்தையிட்டே விரும்புகிருப்போலவும், ஆத்மாவை விரும்புகிறதும் சேஷத்வமென்கிற செல்வத்தை யிட்டேயாகும். அந்தச் செல்வத்திற்கு ஆத்மா ஆச்ரயமல்லாவிடில் அவ்வாத்மா த்யாஜ்யனேயாகின்ருன்; அங்ஙனே கண்டதுண்டோ வென்னில், *தடம் புனல சடைமுடியன் தனியொரு கூறமர்ந்துறையும் உடம்புடையான் கவராத உயிரினுல் குறைவிலமே* (திருவாய்மொழி 4—8—10) என்று ஆழ்வார் பாசுரம் காண்பது. எம்பெருமானுக்கு உறுப்பல்லாத ஆத்மா தொலைந்துபோகட்டு மென்பது இப்பாசுரத்தின் தாத்பரியம். ஆளவந்தாரும் ஸ்தோத்ர ரத்நத்தில் *தவசேஷத்வ விபவாத், பஹிர்ப்பூதம் நாத ! க்ஷணமபிஸஹே யாது சததா விநாசம் தத் ஸத்யம் மதுமதந ! விஜ்ஞாபநமிதம்.* என்றருளிச்செய்தார். அறிவுடையார் இங்ஙனே பேசும்படிக் கீடாகவுள்ள சேஷத்வத்தின் உறைப்பு தோற்றுவதற்காகவே சேஷத்வத்தை முந்துற முன்னம் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொன்னது. ... ... (71)

**72. ஆக, ப்ரணவத்தால் "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனே" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று.**

ஆக - இவ்வளவும் சொன்னவற்ருல், ப்ரணவத்தால் - ப்ரணவத்தால் சொல்லித் தலைக்கட்டின வர்த்தம் என்னவென்ருல், *கண்ணபுர மொன்றுடையானுக்கடியேனொருவர்க்குரியேனே என்கிற படியே - இத்திருமங்கையாழ்வார் பாசுரப்படியே, ஜீவபரஸமபந்தம் சொல்லிற்று - ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுண்டான சேஷ சேஷிபாவமாகிற ஸம்பந்தம் சொல்லப்பட்டதாயிற்று.

72. ஆக இவ்வளவும் ப்ரணவத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று. ப்ரணவத்தின் பிண்டிதார்த்தம் என்ன வெனில், அது சொல்லுகிறது இப்போது. ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள சேஷசேஷித்வரூபமான ஸம்பந்தம் ப்ரணவத்தினுல் சொல்லப்பட்டதாயிற்று. இதற்குச்சார்பாக *கண்ணபுரமொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்கு உரியேனே* என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயல் அநுஸந்திக்க ப்ராப்தம். இந்தச்சந்தை ப்ரணவமே வடிவெடுத்தது போன்றுள்ளது. '**கண்ணபுர மொன்றுடையானுக்கு**' என்றதனுல் (லுப்தசதுர்த்தியோடு கூடின) அகாரத்தின் அர்த்தம் சொல்லிற்று. **அடியேன்** என்றதனுல் சேஷத்வத்திற்கு ஆச்ரயமான வஸ்துவைச் சொல்லுமதான மகாரத்தின் அர்த்தம் சொல்லிற்று. **ஒருவர்க்கு உரியேனே** என்றதனுல் அந்ய சேஷத்வத்தைக் கழிக்குமதான உகாரத்தின் அர்த்தம் சொல்லிற்று. ஆகவே இந்தச் சந்தை ப்ரணவமாக அநுஸந்திக்கப்படும். ... ... ... (72)

**73. இத்தால், * "தாமரையாள் கேள்வனெருவனையே நோக்கு முணர்வு" என்றதாயிற்று.**

இத்தால் - இந்த ப்ரணவத்தினுல், தாமரையாள் கேள்வனெருவனையே நோக்கு முணர்வு என்றதாயிற்று - பொய்கையாழ்வாருடைய இந்த ஸ்ரீ ஸூக்தியின்படியே ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்ருயிற்று.

73. "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீ ஸம்பந்தமநுஸந்தேயம்" என்று கீழே அருளிச்செய்ததற்கு இணங்க, திவ்ய தம்பதிகளே சேஷத்வ ப்ரதிஸம்பந்தி யென்னுமிடம் தோற்ற ஜீவபரஸம்பந்தம் அருளிச் செய்யப்படுகிறது *ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு* என்கிற பொய்கையார் பாசுரத்தைக் கொண்டும் ப்ரணவத்தின் பொருளை அநுஸந்திக்கலாம். **தாமரையாள் கேள்வன்** என்றதனால் அகாரவாச்யனாய் சேஷத்வப்ரதிஸம்பந்தியான திருமால் சொல்லிற்று. **ஒருவனையே நோக்கும்** என்றதனால், சதுர்த்தியாலும் உகாரத்தாலும் சொல்லப்படுகிற அநந்யார்ஹ சேஷத்வ ப்ரயுக்தமான ஆத்மாவின் ததேகபரத்வம் சொல்லிற்று **உணர்வு** என்றதனால் அந்த சேஷத்வத்துக்கு இருப்பிடமாக மகாரத்தினால் சொல்லப்பட்ட ஜ்ஞானைக நிரூபணீயமான ஆத்மவஸ்து சொல்லிற்று. ஆகவே லக்ஷ்மீஸம்பந்தமும் தோற்றும்படியாக ப்ரணவார்த்தத்தை அநுஸந்திக்கவேண்டில் பொய்கையாழ்வாருடைய இந்தப் பாசுரத்தை அநுஸந்திக்கலாமென்றதாயிற்று. (73)

**74. அகாரத்தாலும் மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும் உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று.**

அகாரத்தாலே ரக்ஷகனைச் சொல்லிற்று; மகாரத்தாலே ரக்ஷ்யத்தைச்சொல்லிற்று; சதுர்த்தியாலே ரக்ஷணஹேதுவான ப்ராப்தியைச் சொல்லிற்று; உகாரத்தாலே பலத்தை சொல்லிற்று—(என்று அந்வயிப்பது)

74. கீழே எழுபத்திரண்டாவது சூர்ணிகையிலும் எழுபத்து மூன்றாவது சூர்ணிகையிலும் ப்ரணவத்தின் ஸாரமான பொருள் ஒருவாறு தொகுத்துக் காட்டப்பட்டது. அகாரத்தின்மேல் ஏறிக்கழிந்திருக்கிற லுப்த சதுர்த்திவிபக்தியின் அர்த்தமான சேஷத்வத்தை ப்ரதானமாக வைத்துஅந்தத் தொகுத்தல் காட்டப்பட்டது. இப்போது தாதுவின் அர்த்தத்தை ப்ரதானமாகவைத்து ப்ரணவத்திற்கு இன்னமுமொரு ஸாரார்த்தயோஜனை காட்டப்படுகிறது. அகாரமானது 'அவ—ரக்ஷணே' என்கிற தாதுவிலிருந்து நிஷ்பந்நமானதாகையாலே அந்த தாதுவின் அர்த்தமான ரக்ஷணத்தை ப்ரதானமாக வைத்து ப்ரணவார்த்தம் தொகுத்துரைக்கப்படுகின்றது என்றவாறு. எங்ஙனேயென்னில்; அகாரத்தாலே ரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லிற்று; மகாரத்தாலே அந்த எம்பெருமானால் ரக்ஷிக்கப்படவேண்டியதான ஆத்மவஸ்துவைச் சொல்லிற்று; 'இவன் நமக்கு சேஷப்பட்டவன்' என்கிற காரணத்தாலேயே எம்பெருமான் நம்மை ரக்ஷிக்கக்கடவனாகையாலே ரக்ஷிக்கைக்கு ஹேதுவான சேஷத்வமாகிற ப்ராப்தியை சதுர்த்தியாலே சொல்லிற்று. இப்படி ரக்ஷிப்பதற்குப் பலன் இந்த ஆத்ம வஸ்துவானது அத்தலைக்கே விநியோகப்படுகையாகையாலே அந்த அநந்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லுமதான உகாரத்தாலே ரக்ஷண பலன் சொல்லிற்று. ஆக ப்ரணவத்தாலே ரக்ஷகவஸ்துவும் ரக்ஷணீய வஸ்துவும் ரக்ஷண ஹேதுவும் ரக்ஷண ப்ரயோஜனமுமாகிற நான்கும் சொல்லப்பட்டனவென்க. ... (74)

**75. இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.**

இனிமேல் - ப்ரணவத்திற்கு மேலுள்ள பதங்கள், ப்ரணவத்தை விவரிக்கிறது - ப்ரணவவிவரணமாயிருக்கும்.

75. மந்த்ர சேஷமென்னப்படுகிற நம: பதத்திற்கும் நாராயணுயவுக்கும் இனி அர்த்தம் விவரிக்கப்பட வேண்டியதாகிறது. அந்த மந்த்ர சேஷமானது ப்ரணவத்திற்கு வியாக்கியான ரூபம் என்று முன்னம் சொல்லப்படுகிறது. மூலத்திலுள்ள சொற்களை யெடுத்துப் பொருள் விவரிப்பதன்றோ வியாக்கியானமென்று கூறப்படுகிறது; ப்ரணவத்தி லுள்ள ஒரு சொல்லையுமெடுத்து மந்த்ரசேஷம் வியாக்கியானித்திருக்கவில்லையே; அப்படியிருக்க "இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது" என்று எங்ஙனே சொல்லலா மென்று சிலர் சங்கிக்கக்கூடும். கேண்மின்; மூலத்திலுள்ள பதங்களையெடுத்துப் பொருள் கூறுவிடினும், ப்ரஸ்துதமான அர்த்தத்திற்கு உபயுக்தமான [இன்றியமையாத] அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு முன்னே சொன்ன அர்த்தத்தை விசதப்படுத்துகையும் விவரணமாதலால் 'ப்ரணவத்தை மந்த்ரசேஷம் விவரிக்கிறது' என்னத்தட்டில்லை. ப்ரணவத்தில் தொகுத்துரைக்கப்பட்ட அர்த்தமானது மேலிரண்டு பதங்களில் மிக விளக்கமாகக் காட்டப்படுகிறதென்கை. ... ... (75)

**76. உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.**

**உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு** - அவதாரணப் பொருளதாய்க்கொண்டு அந்ய சேஷத்வத் தைக்கழிக்குமதான உகாரத்தை விவரிப்பது நம: பதம்; **அகாரத்தை விவரிக்கிறது நாராயண பதம்** - ரக்ஷகனைச் சொல்லுமதான அகாரத்தை விவரிப்பது நாராயணபதம். **மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி** - சேஷத்வம் ஸித்திப்பதற்குறுப்பான கிஞ்சித்காரத்தைச் சொல்லும தான சதுர்த்தியானது சேஷத்வத்திற் கிருப்பிடமான ஆத்மாவைச் சொல்லுகிற மகாரத்தை விவரிக்கிறது; **நாரபதமென்றும் சொல்லுவர்கள்** - மகாரத்தை விவரிக்கிறது நாரபதம் என்கிற பக்ஷமுமொன்றுண்டு.

76. மந்த்ர சேஷமானது ப்ரணவத்தை விவரிக்கிறதென்று கீழே சொன்னபடி இன்னத்தை இன்னது விவரிக்கிறதென்று விளக்கிக் காட்டப்படுகிறது. [**உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு**] எப்படியென்றால், அவதாரணத்தைப் பொருளாகவுடைத்தான உகாரமானது அந்ய சேஷத்வத்தைக் கழிக்கிறதென்று முன்னமே சொல்லிற்றன்றோ; அந்யசேஷத்வத்தில் ஸ்வசேஷத்வமும் உள்ளீடாகையாலே அதை வெளிப்படையாக எடுத்துக்கழிக்கிற நமஸ்ஸானது உகாரத்தை விவரித்ததாகிறது. [**அகாரத்தை விவரிக்கிறது நாராயண பதம்.**] நாராயணபதமானது ரக்ஷகனுன எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும், ரக்ஷிக்கப்படும் பொருளான சேதநாசேதநங்களையும், ரக்ஷிக்கைக்கு அவசியமான குணம் முதலியவற்றையும், ரக்ஷிக்கின்ற ப்ரகாரத்தையும் விசதமாகச் சொல்லுமதாகையாலே அது அகாரத்தை விவரிக்கிறதாயிற்று. [**மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி.**] ஏதேனுமொரு கிஞ்சித்காரம் செய்யாதவளவில் சேஷத்வம் ஸித்திக்கமாட்டாதாகையாலே அது ஸித்திப்பதற்கு உறுப்பான கிஞ்சித்காரத்தைத் தெரிவிக்குமதான (வ்யக்த) சதுர்த்தியானது, சேஷத்வத்திற்கு ஆச்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற மகாரத்தை விவரிக்கிற தாயிற்று. [**நாரபதமென்றும் சொல்லுவர்கள்**] மகாரார்த்தமான ஆத்மா நித்யன் என்பதையும், ஏகரூபன் என்பதையும், பஹு என்பதையும் நாரபதம் விவரிக்கின்ற தாகையாலே மகாரத்தை விவரிக்கிறது நாரபதமென்றும் சொல்லுவர்கள். ஆத்மாவினுடைய நித்யத்வ, ஏகரூபத்வ, பஹுத்வாதிகள் நாரபதத்தாலே எங்ஙனே

தெரிகின்றன வென்னில்: (ரிங்-க்ஷயே) என்கிற தாதுவிலிருந்து (ர) என்றாகிறது; நசிக்கக் கூடியது என்று அர்த்தம். (நர) என்றால் நசிக்காமல் நித்யமாயிருக்கக்கூடியதென்கை. ஆகவே நித்யத்வம் தெரிந்தது. ஸமூஹம் என்னும் பொருளில் அண் ப்ரத்யயம் வந்து, (நார) என்றானமையாலே பஹுத்வம் தெரிந்தது. இங்ஙனமே மற்றும் கண்டு கொள்வது. ... ... ... (76)

77. அடைவே விவரியாதொழிகிறது. விரோதிபோய் அநுபவிக்கவேண்டுகையாலே.

அடைவே விவரியாதொழிகிறது - ப்ரணவத்திலுள்ள அக்ஷரங்களின் வரிசை க்ரமத்திலே விவரண மில்லாதிருப்பதற்கு என்ன காரணமென்றால், விரோதிபோய் அநுபவிக்கவேண்டுகையாலே - எம்பெருமானை யநுபவிப்பதற்கு இடையூறான அஹங்காரமமகாரம் முதலியவை கழிந்தே அநுபவிக்கவேண்டுகையாலே உகாரவிவரணமாக நமஸ்ஸு முற்பட்டது.

77. ப்ரணவத்தில் அகார உகார மகாரங்கள் வரிசையாக இருக்கும்போது அந்த வரிசைக்ரமத்திலேயே மந்த்ரசேஷம் விவரணம் செய்யலாகாதோ? க்ரமம் தப்பி விவரணம் செய்திருப்பதாகவன்றோ கீழே நிரூபிக்கப்பட்டது; ஏன் இப்படி அடைவுகெட விவரிக்க வேணுமென்னில்; கேண்மின்; வரிசைக்ரமமாக விவரிப்பதாயிருந்தால், அகாரத்தை விவரிப்பதான நாராயணபதம் முந்துற முன்னம் இருக்கவேண்டும் என்றதாகிறது. அப்படியில்லை யென்பது வாஸ்தவமே. அகாரவிவரணமான அந்த நாராயணபதத்தில் உண்டாகவேண்டிய பகவதநுபவத்துக்கு இடைச்சுவரான அஹங்காரம் மமகாரம் முதலானவைகள் நமஸ்ஸாலே கழியுண்டுபோனால் பிறகு பகவதநுபவம் சாலப் பாங்காகு மாகையாலே அடைவுகெட விவரித்ததென்று கொள்க. மக்ஷிகா நிரஸநம் செய்து மதுபானம் பண்ணுகை அடைவாதலால், நமஸ்ஸாலே மக்ஷிகாநிரஸநம் செய்து, நாராயணபதத்தாலே மதுபானம் பண்ணுவதான விது முறைமையே. ... (77)

78. நமஸ்ஸு ந என்றும், ம: என்றும் இரண்டுபதம்.

78. இனி நடுப்பதமான நமஸ்ஸுக்குப்பொருள் விவரிக்க வேண்டி. ஒருபதமான அது தானும் இரண்டு பதமாகப் பிரிகிறபடி காட்டப்படுகிறது. "நமஸ்ஸு ந என்றும் ம: என்றும் இரண்டுபதம்" என்று இது அவாந்தரவிபாக மென்றுகொள்க. ... (78)

79. ம: என்கிற வித்தால், தனக்கு உரியன் என்கிறது; ந என்று அத்தைத் தவிர்க்கிறது.

80. ஆக நம: என்கிற வித்தால் தனக்கு உரியனன்றென்கிறது.

79, 80. அவ்விரண்டு பதங்களுக்கும் பொருள் கூறப்படுகிறது. ம: என்பது ஷஷ்டீவிபக்தியை முடிவாகவுடைத்தான மகாரமாதலால், **தனக்கு** என்று பொருள்பட்டு நிற்கிறது. எனவே ஸ்வார்த்தத்வம் தோற்றி நின்றது எனக்கு நான் உரியன் என்று சொன்னதாக ஆயிற்று. ந என்று அது கழிக்கப்பட்டு, எனக்கு நான் உரியேனல்லேன் என்றதாயிற்று ... ... ... (79, 80)

**81. பிறர்க்குரியனுனவன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்யதையும் கூட அழியும்.**

**(நமஸ்ஸானது அந்யசேஷத்வத்தைத் தவிர்க்கிற உகாரத்தை விவரிக்கிறதாகில் அந்யசேஷத்வத்தை விலக்காமல் ஸ்வசேஷத்வத்தை மாத்திரமே விலக்குவது ஏனென்னில்:) பிறர்க்கு உரியனுனவன்று - யாரேனுமொருவர்க்கு சேஷப்படுவதென்று வைத்துக் கொண்டால், (அப்படி சேஷத்வத்திற்கு இசைந்தவனை) தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம் - தனக்குண்டான வாசியைக் காட்டி அந்யசேஷத்வத்தில் நின்று திருப்பமுடியும்; தனக்கென்னுமன்று - ஒருவர்க்கும் அடிமைப்பட இசையாமல் 'அஹம் மே' என்றேயிருந்தால், யோக்யதையுங்கூட அழியும் - ஈடுபடுத்திக்கொள்ள வழியேயில்லையாம். (ஆகவே நமஸ்ஸால் விசேஷத்வத்தைக் கழித்தது யுக்தம் என்று கருத்து.)**

81. கீழே "உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு" என்னப்பட்டது; அந்யசேஷத்வத்தையன்றோ உகாரம் கழித்திருக்கிறது. தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்று காட்டியிருக்கிற உகாரத்தை நமஸ்ஸு விவரிக்கிறதாகில், தனக்குரியனன்று என்கிற இவ்வளவையே சொல்லா நின்றால் போதுமோ? பிறர்க்கு உரித்தன்று என்றத்தையும் விவரிக்கவேண்டாவோ வென்று பிறக்கக்கூடிய சங்கைக்குப் பரிஹாரம் செய்யப்படுகிறது.

தனக்கு சேஷப்படுகை, பிறர்க்கு சேஷப்படுகை என்ற இரண்டில் மிகவும் கொடியது எதுவென்றால் தனக்கு சேஷப்படுகையேயாகும். பிறர்க்கு சேஷப்படுவானாகில் ஒருவர்க்கு சேஷப்படுகிறது என்கிற அர்த்தத்திற்கு இசைந்தவனாகையாலே எம்பெருமான் தன்னுடைய பலவகையான வைலக்ஷண்யத்தைக் காட்டி, அந்யசேஷப்பட்ட அவனை ஸ்வசேஷப்படுத்திக்கொள்ள எளிதாகும். 'பிறரொருவர்க்கும் நான் சேஷப்பட்டவனல்லேன், எனக்கே நான் உரியேன்' என்றிருக்கும் பக்ஷத்தில் சேஷத்வத்திற்கு அடியோடு இசையாமையாலே அந்த வ்யக்தியை ஸ்வசேஷப்படுத்திக்கொள்ளுகை எம்பெருமானுக்கு மிகவும் கடினமேயாகும். ஆகவே அந்யசேஷத்வ நிவ்ருத்தியிற் காட்டிலும் ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியே மிகவும் முக்கியமாதலால் நமஸ்ஸில் அது செய்யப்படுகிறது என்றதாயிற்று. ... ... (81)

**82. இத்தால், விரோதியைக் கழிக்கிறது. 83. விரோதிதான் மூன்று.**

**84. அதாவது - ஸ்வரூப விரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும்.**

**இத்தால் விரோதியைக் கழிக்கிறது - விரோதியைக் கழிப்பதற்காக நமஸ்ஸு தோன்றிற்று.**

82, 83, 84. நமஸ்ஸானது விரோதியைக் கழிப்பதாகும். விரோதிகள் மூன்று வகையாக இருக்கின்றன. 1. ஸ்வரூபவிரோதி. 2. உபாயவிரோதி. 3. ப்ராப்யவிரோதி என்று மூவகைப்படும். கீழே ப்ரணவத்தினால் தேறின ஸ்வரூபத்திற்கு எது விரோதியோ அது ஸ்வரூப விரோதியெனப்படும். ப்ரக்ருதமான நமஸ்ஸில் அர்த்தாத் ஸித்திக்கிற உபாயத்திற்கு எது விரோதியோ அது உபாயவிரோதியெனப்படும், மேற்பதமாகிய 'நாராயணாய' என்பதில் சொல்லப்படுகிற உபேயத்திற்கு எது விரோதியோ அது உபேய

விரோதியெனப்படும். [உபேயமென்றாலும் ப்ராப்யமென்றாலும் பலன் என்றாலும் புருஷார்த்தம் என்றாலும் ஒன்றே] திருமந்த்ரத்தில் ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்தம் என்ற மூன்றும் நிரூபிக்கப்படுகின்றன வென்பது ஏற்கனவே தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. அந்த ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் மூன்றுக்கும் விரோதிகளும் உண்டாதலால் அந்த மூன்று விரோதிகளையும் கழிக்கின்றதாயிற்று இந்த நமஸ்ஸு (1) சேஷத்வமாகிற ஸ்வரூபத்திற்கு அஹங்காரமமகாரங்கள் விரோதி. (2) எம்பெருமான் கையையே பார்த்திருக்கையாகிற உபாயத்திற்கு ஸ்வரக்ஷணத்தில் தான் அந்வயிப்பது விரோதி. (3) பகவத்கைங்கர்யமாகிற புருஷார்த்தத்திற்கு—அதில் ஸ்வபோக்யதா புத்தி செல்லுவது விரோதி. ஆக இம்மூன்று விரோதிகளையும் இந்த நமஸ்ஸு எங்ஙனே கழிக்கின்றதென்றால் ; அஷ்டச்லோகியில், *-மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸ: ஸ்வரூபம்கதி: கம்யம் சிக்ஷிதமீக்ஷிதேநபுரத: பச்சாதபி ஸ்தாநத:* என்று பட்டர் அருளிச் செய்தபடியே இத்த நமஸ்ஸானது காகாக்ஷிந்யாயத்தாலே கீழோடே அந்வயித்தும் மேலோடே அந்வயித்தும் ஸ்வஸ்தானத்திலிருந்துகொண்டும் மூன்று விரோதிகளையும் கழிக்கின்றதாயிற்று. (1) கீழோடே அந்வயிக்கும்போது 'ஓம் நம:' என்றும்; (2) மேலோடே அந்வயிக்கும்போது 'நாராயணாய நம:' என்றும்; (3) ஸ்வஸ்தானத்தையே நோக்கும் போது 'நமோநம:' என்றும். ... ... (82, 83, 84)

**85. ஸ்வரூபவிரோதி கழிகையாவது-யானே நீ என்னுடைமையும்நீயே என்றிருக்கை; உபாய விரோதி கழிகையாவது *களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் என்றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது—* மற்றை நங்காமங்கள் மாற்றென்றிருக்கை.**

ஸ்வரூப விரோதி கழிகையாவது - ஸ்வரூப விரோதியான அஹங்காரமமகாரங்கள் கழிந்ததாவது. யானே நீ என்னுடைமையும் நீயே யென்றிருக்கை - இப் பாசுரத்தின் அநுஸந்தானமேயாயிருக்கை. உபாயவிரோதி கழிகையாவது - ஸித்தோபாயத்திற்கு விரோதியான ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் கழிந்ததாவது களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேனென்றிருக்கை - இப் பாசுரத்திற்படி நிஷ்டையோடிருக்கை. ப்ராப்ய விரோதி கழிகையாவது - பலனுக்கு விரோதியான ஸ்வப்ரயோஜனபுத்தி கழிந்ததாவது. மற்றை நங் காமங்கள் மாற்றென்றிருக்கை - இப் பாசுரத்தின் பொருளில் ஊன்றியிருக்கை.

85. கீழ்ச்சொன்ன மூன்று விரோதிகளும் கழியப்பெற்றவர்களின் அனுஸந்தான முறைமையைக்காட்டினால் விரோதிகளின் வேஷம் தெளிவாகத் தெரிந்துக்கொள்ளலாகுமாதலால் அந்த அனுஸந்தாநக்ரமங் காட்டப்படுகின்றன. (1) *யானே நீ என்னுடைமையும் நீயே* என்றிருக்கை ஸ்ரூபவிரோதி கழிகையாகும் இதனால் " யானே யென்றனதே யென்றிருந்தேன் " என்று ஆழ்வாரருளிச் செய்தபடி அஹங்காரமமகாரங்களோடு கூடியிருத்தல் ஸ்வரூப விரோதி யென்றதாயிற்று. " என்னையு மென்னுடைமையையும் உன் சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு நின்னருளே புரிந்திருந்தேன் " என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே ஆத்மாத்மீயங்களிரண்டும் எம்பெருமானுக்கே சேஷமென்றிருக்கை ஸ்வரூப விரேதி கழிந்த நிலைமை என்றதாயிற்று.

(2) " களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் " என்றிருக்கை உபாயவிரோதி கழிகையாகும். தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தானும் ஒருதலைப்பற்றி

நிற்கை உபாயத்துக்கு விரோதியாகையாலே [அதாவது, ஸித்தோபாயமான எம்பெருமான் காரியம் செய்வதற்கு இடையூருகையாலே] அந்த ஸ்வயத்நம் கழிந்த நிலைமையை ' உனக்குப் பணிசெய்திருக்குந் தவமுடையேன். இனிப்போய் ஒருவன் தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின்சாயை யழிவுகண்டாய் '' என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே வேறொரு ரக்ஷகன் மனையைத்தேடிச் செல்வேனல்லே னென்றிருக்கை உபாய விரோதி கழிந்த நிலைமை யென்றதாயிற்று.

(3) '' மற்றைநங்காமங்கள் மாற்று '' என்றிருக்கை உபேய விரோதி கழிகை யாகும். கைங்கர்யந்தான் உபேயமெனப்படுகிறது அதுதன்னிலே ஸ்வப்ரயோஜந புத்தி நடையாடிற்றாகில் அது தான் அதற்கு விரோதி. கைங்கரியத்திறுல் விளைகின்ற ஆனந்தத்தில் தனக்கு அந்வயமற்றிருக்க வேணும். நிலா தென்றல் புஷ்பம் சந்தனம் முதலானவை பிறர்க்கு உபயோகப்படுமளவில் அவற்றுக்கு ஸ்வப்ரயோஜன மென்பது சிறிதுமில்லாதாப்போலே யிருக்கவேணும். '' மற்றை நங்காமங்கள் மாற்று '' என்கிற திருப்பாவைப் பாசுரத்தில் இதுவே விவக்ஷிதம். ' வழுவிலாவடிமை செய்யவேண்டும் '' என்கிறவிடத்திலும் 'வழு' என்கிற சொல்லால் இதுதான் விவக்ஷிதம். ஆகவே கைங்கர்யத்தில் ஸ்வப்ரயோஜநபுத்தி கழிந்த நிலைமைதான் உபேயவிரோதி கழிகை யென்றதாயிற்று. ... ... ... (85)

## 86. ம: என்கை-ஸ்வரூபநாசம், ; நம: என்கை-ஸ்வரூபோஜ்ஜீவநம்.

ம: என்கை ஸ்வரூபநாசம் – அஹங்காரமமகாரங்களிலே அந்வயமுடைமை ஸ்வரூபக்கேடு : நம: என்கை ஸ்வரூபோஜ்ஜீவனம்- அஹங்கார மமகாரங்களில் அந்வய மற்றிருக்கை ஸ்வரூப வாழ்வு.

86. கீழே வகுத்துக் காட்டப்பட்ட விரோதிகள் மூன்றும் அஹங்காரமமகா ரங்களேயாக நிற்கையாலே அவற்றின் கொடுமையிருக்கும்படியும், அவை கழிந்தால் உண்டாகக் கூடியதான நன்மையும் காட்டப்படுகிறது. [ம: **என்கைஸ்வரூபநாசம்.**] 'ம:' என்கிறவிதிலே அஹங்காரமமகாரங்களிரண்டும் அடங்கியிருக்கும். தன்னிடத்திலே உண்டாகிற மமதை அஹங்காரமென்றும், தன்னுடையதான வஸ்துவிலே உண்டாகிற மமதை மமகார மென்றும் சொல்லப்படுகையாலே, ம: என்பதிலே அஹங்காரமமகாரங் களிரண்டு முண்டாயிருக்குமென்னக் குறையில்லை. அவையிரண்டும் ஸ்வரூபநாசகங்களா கையாலே, **ம: என்கை ஸ்வரூபநாச** மெனப்பட்டது. அந்த அஹங்காரமமகாரங்களிலே அந்வயமற்றிருக்கை ஸ்வரூபத்திற்கு உஜ்ஜீவனமாகையாலே **நம: என்கை ஸ்வரூபோஜ்ஜீவந** மெனப்பட்டது. ... ... (86)

## 87. இதுதான் ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்.

இதுதான் ஸ்வரூபத்தையும் உபாயத்தையும் பலத்தையும் காட்டும் - இந்த நமஸ்ஸானது (விரோதி நிரஸனம் பண்ணுகிற வளவேயல்லாமல்) ஸ்வரூபோபாய பலங்களைக் காட்டுதலும்செய்யும்.

88. * தொலைவில்லிமங்கலந் தொழுமென்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று;* வேங்கடத்துறைவார்க்கு நம: என்கையாலே உபாயம் சொல்லிற்று; *அந்தி தொழுஞ் சொல் என்கையாலே பலம் சொல்லிற்று.

**தொலைவில்லிமங்கலம் தொழுமென்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று—ஆழ்வாருடைய ஸ்வரூபத்தைத் தெரிவிக்குமதான *துவளில் மாமணிமாட மோங்கு தொலைவில்லி மங்கலம் தொழுமிவளை* என்கிற பாசுரத்தில் நமஸ்ஸுக்குப் பர்யாயமான 'தொழும்' என்ற சொல்லை இட்டிருக்கையாலே (அகண்ட) நமஸ்ஸு ஸ்வரூபவாசகமாயிற்று. வேங்கடத்துறைவார்க்கு நம. என்கையாலே உபாயம் சொல்லிற்று - உபாய நிஷ்டையைத் தெரிவிக்குமதான *வேங்கடத்துறைவார்க்கு நம.* என்கிற பாசுரத்தில் நமஸ்ஸை ப்ரயோகித்திருக்கையாலே (அகண்ட) நமஸ்ஸு உபாய வாசகமுமாயிற்று; *அந்தி தொழுஞ் சொல் என்கையாலே பலம் சொல்லிற்று - ப்ராப்தி தசையில் வ்ருத்தியைச் சொல்லுமதான *மேலைத் தொண்டு உகளித்து அந்தி தொழுஞ் சொல்லுப் பெற்றேன்* என்கிற பாசுரத்தில் நமஸ்ஸுக்குப் பர்யாயமான தொழுஞ் சொல்லையிட்டுச் சொல்லியிருக்கையாலே (அகண்ட) நமஸ்ஸு பலவாசகமுமாயிற்று.**

87, 88. கீழே விவரித்தபடி இந்த நமஸ்ஸானது ஸ்வரூபோபாய புருஷார்த்த விரோதிகளைக் கழிக்கும் மாத்திரமே யல்லாது அந்த ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் மூன்றுக்கும் வாசகமாகவுமிருக்கும் எங்ஙனேயென்னில் *துவளில் மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம் தொழுமிவளை* என்றவிடத்து, அவனுகந்தருளின நிலத்தளவுஞ் செல்ல சேஷமாயிருக்கையாகிற ஸ்வரூபத்தைச் சொல்லுகையாலே, இவ்விடத்தில் நமஸ்ஸுக்குப் பர்யாயமான **தொழும்** என்கிற சொல் பிரயோகிக்கப் பட்டிருக்கையாலே, நமஸ்ஸு ஸ்வரூபத்தைக் காட்டிற்றாயிற்று. 'வேங்கடங்கள்' என்ற பாசுரத்தில் "வேங்கடத்துறைவார்க்கு நமவென்னலாங் கடமையது சுமந்தார்கட்கே" என்றவிடத்து ஸ்வரக்ஷணத்தில் அந்வயமறுகையைச் சொல்லும் முகத்தால் அவனே உபாயமென்னுமிடம் காட்டப்படுகிறது; இங்கு நம: என்று பிரயோகிக்கப்பட்டிருக்கையாலே உபாயத்தைக் காட்டிற்றாயிற்று. *உண்டு களித்தேற்கு* என்கிற பாசுரத்தில் கைங்கர்யரஸம் அதிசயிக்கிற காலத்தில் அதனுடைய மேலெல்லையிலே சொல்லுகிற சொல் நமஸ்ஸு— என்பதை "அந்தி தொழுஞ் சொல்லுப் பெற்றேன்" என்பதனால் ஆழ்வார் காட்டியருளினார். ஆகவே, 'தொழுஞ் சொல்' என்று நமச்சப்தத்தைச் சொல்லுகையாலே நமஸ்ஸு பலனையும் காட்டிற்றாம். ... ... ... (87, 88)

89. "உற்றதுமுன்னடியார்க்கடிமை" என்கிறபடியே, இதிலே பாகவதசேஷத்வமும் அநுஸந்தேயம்.

**உற்றது முன்னடியார்க்கடிமை யென்கையாலே - "கண்ணபுரத்துறையம்மானே! நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றதும் உன்னடியார்க்கடிமை" என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்திருக்கையாலே, இதிலே - இந்த நமஸ்ஸிலே, பாகவத சேஷத்வமும் அநுஸந்தேயம் - விரோதிநிவ்ருத்திமட்டு மன்றிக்கே பகவச்சேஷத்வத்தின் எல்லை நிலமான பாகவத சேஷத்வமும் அநுஸந்திக்கத் தக்கது.**

89. இந்த நமஸ்ஸிலே பாகவதசேஷத்வமும் அர்த்தாத் அநுஸந்திக்கவேண்டுமாகையாலே அது சொல்லப்படுகிறது. அஹங்கார மமகாரங்கள் அறு போனால் தொலைந்து

பகவச் சேஷத்வம் உள்ளபடி விளங்க நிற்கும் இந்த நமஸ்ஸிலே அந்த பகவத் சேஷத்வத்திற்கு எல்லை நிலமான பாகவத சேஷத்வமும் அநுஸந்திக்கப்படவேணும். திருமங்கையாழ்வாருடைய அருளிச் செயலே இதற்கு ப்ரமாணம். "மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடுற்றிலேன். உற்றது முன்னடியார்க் கடிமை, மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங் கற்று நான், கண்ணபுரத்துறையம்மானே." (8-10-3) என்ற பெரிய திருமொழிப் பாசுரம் காண்க. ... ... (89)

**90. இது - அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள் ; உகாரத்திலே யென்றுஞ் சொல்லுவர்கள்.**

**இது-கீழ்ச்சொன்ன பாகவத சேஷத்வாநுஸந்தானமானது, அகாரத்திலேயென்றும் சொல்லுவர்கள்-லுப்தசதுர்த்தியோடு கூடின அகாரத்திலேயாகலாமென்று சொல்லுவாருமுளர் : உகாரத்திலே யென்றும் சொல்லுவர்கள் - அநந்யார்ஹ சேஷத்வ ஸ்தாபகமான உகாரத்திலேயாகலாமென்று சொல்லுவாருமுளர்.**

90, அநுஸந்தேயமாகச் சொன்ன பாகவத சேஷத்வம் இந்த நமஸ்ஸில் அல்லாமல் கீழே அகாரத்திலேயே அநுஸந்திக்கப்படலாமென்று சிலரும், உகாரத்திலே அநுஸந்திக்கப்படலாமென்று சிலரும் சொல்லுவதுண்டாகையாலே அந்தப் பக்ஷங்களும் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன. ப்ரணவத்தில் முதற்பதமான அகாரத்தில் ஏறிக்கழிந்த சதுர்த்தியினாலே ஆத்மாவினுடைய பகவச் சேஷத்வம் சொல்லப்படுகையாலே அந்த சேஷத்வத்தின் எல்லையான பாகவத சேஷத்வத்தின் அநுஸந்தானமும் அந்த அகாரத்திலேயே பண்ண ப்ராப்தம் என்று சிலர் சொல்லுவர்கள்.

அகாரத்திற்கு அடுத்ததான உகாரமானது அநந்யார்ஹசேஷத்வத்தை பிரதிபாதிக்கிறது. அந்த அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு எல்லை பாகவத சேஷத்வமாகையாலே இதினுடைய அநுஸந்தானம் அநந்யார்ஹத்வப்ரதிபாதகமான அந்த உகாரத்திலேயே பண்ண ப்ராப்தம் என்று சிலர் சொல்லுவர்கள்.

இந்த பாகவத சேஷத்வமென்பது ஸாக்ஷாத் சப்தத்திலிருந்து கிடைக்காமல் அர்த்தபலத்தாலே கிடைப்பதொன்றாகையாலே இதை எந்த இடத்திலே அநுஸந்தித்தாலும் குறையில்லை. ஆனாலும் அஹங்கார மமகாரங்களாகிற கந்தல் நன்றாகக் கழிந்தவிடமாகிய நமஸ்ஸிலே அதை யநுஸந்திப்பது மிகப் பொருந்துமென்று ஆசிரியருடைய திருவுள்ளம். ... ... (90)

**91. ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்குமென்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே *தனக்கேயாக எனைக்கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்.**

**முற்பட்ட நினைவு - நமச் சப்தார்த்தம் நெஞ்சிற்படிவதற்கு முன்பு உண்டான நினைவு எப்படிப் பட்டதென்னில்: ஈச்வரன் தனக்கேயாயிருக்கும் - ஸ்வாதந்த்ர்யமே வடிவான ஸர்வேச்வரன் ஸ்வார்த்த பரனாயே யிருப்பன்; அசித்து பிறர்க்கேயாயிருக்கும் - பாரதந்த்ர்யமே வடிவான அசித்து பரார்த்தமாயே யிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் - ஆத்மா ஜ்ஞானமுடைமையாலே ஸ்வார்த்த பரனாயும், சேஷத்வமுடைமையாலே பரார்த்தனாயு**

மிருப்பன், என்று - இவ்விதமாயிருக்கும் (முற்பட்ட நினைவு). அங்ஙனன்றிக்கே - அப்படியல்லாமல், நமஸ்ஸால் - இந்த நம. பதத்தினுல், அசித்தைப்போலே தனக்கேயாக எனைக் கொள்ளவேணுமென்கிறது - பரார்த்தத்வமே வடிவான அசித்தைப் போலே 'தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே' என்ற ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியின்படியே அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகம் கொள்ளவேணுமென்கிறது.

91. நமஸ்ஸின் பொருளை உணர்வதற்கு முன்னே சேதநர்கட்கு இருக்கக்கூடிய நினைவும், அதற்குப் பின்னே உண்டாகக்கூடிய நினைவும் காட்டப்படுகின்றன சித்து அசித்து, ஈச்வரன் என்று மூன்று தத்துவங்களாதலால் இவற்றுள் ஈச்வரன் ஸ்வதந்திரனேயாதலால் அவன் தனக்கேயாயிருப்பன் என்றும், அசித்தானது சைதந்யமற்றதாகையாலே தனக்கேயாயிருக்க யோக்யதையற்றுப் பரார்த்தமாயே யிருக்குமென்றும், சேதநனானவன் லுப்த சதுர்த்தியில் சொன்ன சேஷத்வத்தையும் மகாரத்தில் சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தையுமுடையனுகையாலே சேஷத்வத்திற்கு அநுகுணமாகப் பரார்த்தனுயிருக்கவும், ஜ்ஞாத்ருத்வத்திற்கு அநுகுணமாக ஸ்வார்த்தனுயிருக்கவும் ஆக இரண்டுக்கும் பொதுவான யோக்யதையை யுடையவன் என்றும் நமஸ்ஸுக்கு முன்னே பிறக்கக்கூடிய நினைவு. நமஸ்ஸின் பொருள் நெஞ்சிலே ஊறினபிறகோ வென்னில்; சைதந்யமற்ற அசித்தானது எப்படி தனக்கென் றிருக்கை யன்றிக்கே பரார்த்தமே யாயிருக்குமோ அப்படியே சேதநனும் ஸ்வார்த்தத்வ ப்ரதிபத்தி லேசமுமற்று *தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான் கொள்சிறப்பே* என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகங்கொள்ள வேணுமென்கிற இத்தகைத்தான நினைவாயிற்று. நமச்சப்தார்த்தஜ்ஞானத்திற்கு இவ்விதமான நினைவே பலன் என்றவாறு. ... ... ... (91)

92. **அதாவது போகதசையில் ஈச்வரன் அழிக்கும்போது நோக்கவேணுமென்று அழியாதொழிகை.**

**அதாவது - அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகப் படுகையாவது (என்னவென்றால்), போக தசையில் - தன்னோடே கலந்து பரிமாறுகிற ஸமயத்தில், ஈச்வரன் அழிக்கும் போது - தன் வியாமோஹத்தாலே தாழ நின்று பரிமாறுகிற எம்பெருமான் நம்முடைய சேஷத்வத்தை யழிக்குமளவில், நோக்கவேணுமென்று - 'நமது சேஷத்வ ஸ்வரூபத்தை நாம் காப்பாற்றிக் கொள்ளவேண்டாவோ' என்று நினைத்து (நைச்சியம் பாவித்து இருப்பது), அழியா தொழிகை - அப்பெருமானுடைய போகத்தை அழிக்காமலிருப்பதுதான் [அவனுடைய பரிமாற்றங்களுக்கு ஸர்வாத்மநா உடன்பட்டிருக்கை].**

92. கீழே "தனக்கேயாக எனைக் கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்" எனப்பட்டது; அதில் *தனக்கேயாக* என்றதை நன்கு விவரிக்கிறது இப்போது. அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகப்படுகையாவது என்னவென்றால், போக்தாவான எம்பெருமான் தன்னோடு கலந்து பரிமாறுகிற சமயத்தில் *வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினன்* என்னுமாப்போலே தலைதடுமாறான அபிநிவேசத்தாலே தாழநின்று பரிமாறி இத்தலையில் சேஷத்வத்தை யழிக்க நேர்ந்தால், 'நம்முடைய சேஷத்வத்தை நாம் நோக்கிக் கொள்ளவேணுமே' யென்றெண்ணி நைச்சியம் பாவித்து

இருய்த்து அப்பெருமானுடைய போகத்தை அழிப்பதென்று ஒன்றுண்டாகும்; அது உண்டாகப்பெறுமல் *செய்த்தலை யெழுநாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள* என்று பெரியாழ்வாரருளிச் செய்த புடையிலே எதற்கும் இசைந்து நிற்கையாயிற்று—அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகப்படுகையாவது. ... (92)

**93. அழிக்கைக்கு ஹேது கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்.**

அழிக்கைக்கு ஹேது - எம்பெருமான் மேல் விழுந்து பரிமாறுமளவில் இவன் நைச்சியம் பாவித்து இருய்த்து அவனுடைய போகத்தை யழிப்பதற்கு எது ஹேதுவோ அதுவானது. கீழே சொல்லிற்று - 'சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்று அறுதியிடுமதான ப்ரணவத்திலே சொல்லிற்று. மேலும சொல்லும் - மேலே வ்யக்த சதுர்த்தியிலும் சொல்லும்.

93. போகதசையில் எம்பெருமான் தலைதடுமாருக அநுபவிக்கிற ஸமயத்தில் அப்படிப்பட்ட போகத்தை அழிக்காம லிருக்கவேணுமென்று கீழே சொல்லிற்று. *ப்ரஸக்தஸ்யைவ ஹி ப்ரதிஷேத:* என்கிற நியாயத்தாலே அழிக்கைக்கு ப்ரஸக்தியிருந்தாலன்றோ அதை நிஷேதிக்கவேணும்; ப்ரஸக்திதானுண்டோ? என்று கேள்வியுண்டாகுமளவில், அதுக்கு உத்தரம் சொல்லுகிறது. சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று கீழே ப்ரணவத்தில் சொல்லி யிருக்கையாலே அந்த சேஷத்வமே எம்பெருமானுடைய தலைதடுமாருன போகத்தை அழிக்க நினைப்பதற்கு ஹேதுவாகையாலே அது கீழே சொல்லப்பட்டது; மேல் சதுர்த்தியிலும் அது சொல்லப்படும் என்றதாயிற்று. (93)

**94. இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவு இல்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம்; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு; இதின்றிக்கேயிருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜனங்கள்; இதுதன்னுலே எல்லாப் பாபங்களும் போம்; எல்லாப்பலன்களும் உண்டாம்.**

இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன் - இந்த பாரதந்த்ரிய ப்ரதிபத்தி பிறந்தவாறே இவன் தன்னுடைய ஹிதத்துக்காகச் செய்யவேண்டுவதெல்லாம் செய்துமுடித்தவனுகிருன். இந்நினைவில்லாதபோது - இப்பாரதந்த்ரிய ப்ரதிபத்தியில்லாவிடில், எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம் - எல்லாப்பாபங்களும் இவனுலே செய்யப்பட்டதாய்முடியும். இந்நினைவிலேஎல்லா ஸுக்ருதங்களுமுண்டு - இப்பாரதந்த்ரிய ப்ரதிபத்தியொன்று இருக்குமாகில் ஈச்வர ப்ரீதி ஹேதுவான ஸகல ஸுக்ருதங்களும் செய்யப்பட்டதாய் முடியும். இது இன்றிக்கேயிருக்க-இந்நினைவு இல்லாமல், பண்ணும் யஜ்ஞாதிகளும் - இவன் பண்ணுகிற யாகம் முதலிய கருமங்களும், ப்ராயச்சித்தாதிகளும் - ப்ராயச்சித்தம் முதலானவைகளும், நிஷ்ப்ரயோஜனங்கள் - பழுதேயாம். இதுதன்னுலே - இந்நினைவிஞல், எல்லா பாபங்களும் போம் - ஸகலபாபங்களும் தொலையும்; எல்லா பலன்களும் உண்டாம் - பிறப்பிறப்பு நீங்குதல் முதலாக அத்தாணிச் சேவகமீருக ஸகல பலன்களுமுண்டாகும்.

94. நமச் சப்தத்தின் பரமதாத்பர்யமான பாரதந்த்ரியத்தின் உணர்ச்சியினுல் விளையும் நன்மைகள் இனிக் கூறப்படுகின்றன. ஒருவன் தன்னுடைய ஹிதத்துக்காகச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைக்கட்டினவனுக ஆகவேண்டுமானுல் "தனக்கேயாக எனைக்கொள்ளவேணும்" என்கிற இந்த அத்யந்த பாரதந்த்ரிய வுணர்ச்சியைப் பெற்றவனுக ஆதல்வேண்டும். இவ்வுணர்ச்சி உண்டாய்விட்டால் அவன் க்ருதக்ருத்யனே

யாவன். இவ்வுணர்ச்சி உண்டாகாதவளவில் ஸகலவிதமான பாவங்களும் அவனால் செய்யப்பட்டனவேயாகும். *கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேண ஆத்மாபஹாரிணா* என்பது இதற்குப் பிரமாணமாக அநுஸந்திக்கவுரியது. இவ்வுணர்ச்சியிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு என்றது - எல்லா ஸுக்ருதங்களும் பண்ணினால் எம்பெருமானுக்கு எப்படிப்பட்ட உகப்பு விளையுமோ அப்படிப்பட்ட உகப்பு இப்பாரதந்திரியவுணர்ச்சியுண்டாகவே விளையுமென்றபடி. இந்தப் பாரதந்த்ரியவுணர்ச்சி இல்லாமலிருக்கச் செய்தே எம்பெருமானுடைய திருவுள்ளவுகப்புக்காக இவன் பண்ணும் யாகம் முதலிய கருமங்களும் தன் பாபங்கள் தொலைவதற்காகப் பண்ணும் க்ருச்ச்ரம் சாந்த்ராயணம் முதலிய ப்ராயச்சித்தங்களும் எம்பெருமானுடைய உகப்புக்கும் தன் பாவம் தொலைவதற்கும் உறுப்பல்லாமையாலே பயனற்றவையாம். இப் பாரதந்த்ரிய வுணர்ச்சியினாலே எம்பெருமான் இவன் திறத்தில் மிக்க அநுக்ரஹத்தைப் பண்ணுகையாலே அவனது நிக்ரஹரூபமான ஸகல பாபங்களும் தொலையும்; ஸம்ஸாரநிவ்ருத்தி முதலாக நித்ய கைங்கரிய மளவாகவுண்டான ஸகல பலன்களுமுண்டாம். ஆக இவ்வளவும் நடுவில் பதமான நமஸ்ஸின் அர்த்தம் விவரித்தபடி. ... ... (94)

**95. நாராயண னென்றது - நாரங்களுக்கு அயநமென்றபடி.**

95. இனி நாராயணபதத்தின் அர்த்தம் விவரிக்கப்படுகிறது. நாராயணனென்கிற திருநாமத்திற்கு இரண்டு வகையான வ்யுத்பத்தி செய்ய இடமுண்டு. தத்புருஷஸமாஸம், பஹுவ்ரீஹிஸமாஸம் என இரண்டுவகையான ஸமாஸங்கள் இங்கே கொள்ளலாம். **"நாராணம் அயநம் நாராயண:"** என்பது தத்புருஷஸமாஸம் **"நாரா: அயநம் யஸ்ய ஸ:"** என்பது பஹுவ்ரீஹி ஸமாஸம். இவற்றுள் முந்துறமுன்னம் தத்புருஷஸமாஸத்தைக் கொண்டு "நாராயணனென்றது நாரங்களுக்கு அயநமென்றபடி" என்று கூறப்பட்டது. ... ... ... (95)

**96. நாரங்களாவன — நித்யவஸ்துக்களினுடைய திரள்.**

**97. அவை யாவன — ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாநசக்த்யாதிகளும், வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்ய பூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்ய ஸூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசல் காக்கும் முதலிகளும், கணநாதரும், முக்தரும், பரமாகாசமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும், காலமும், மஹதாதி விகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்கு உட்பட்ட தேவாதி பதார்த்தங்களும்.**

**அவையாவன** - நாரபதார்த்தமான நித்ய வஸ்துக்களினுடைய திரள்களாவன (எவையென்னில்;) **ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்** - ஸ்வரூப நிரூபகதர்மங்களான இவையும், **ஜ்ஞாநசக்த்யாதிகளும்** - நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான ஞானம் முதலிய ஷட்குணங்களும், **வாத்ஸல்யஸௌசீல்யாதிகளும்** - அந்த ஆறு திருக்குணங்களடியான அனந்த கல்யாணகுணங்களும். **திருமேனியும்** - திவ்யமங்கள விக்ரஹஸமூஹமும், **காந்தி ஸௌகுமார்யாதிகளும்**-திவ்யமங்களவிக்ரஹ குணங்களான இவையும், **திவ்யபூஷணங்களும்**-திருவாபரணங்களும், **திவ்யாயுதங்களும்** - திருவாழி தொடக்கமான ஆயுதவிசேஷங்களும், **பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும்** -; **நித்யஸூரிகளும்** - அநந்த கருட

விஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளும், சத்ரசாமராதிகளும் - கைங்கர்யோபகரணங்களான குடை சாமரம் முதலானவைகளும், திருவாசல் காக்கும் முதலிகளும் - சண்டப்ரசண்டாதிகளான த்வாரபாலகர்களும், கணதிபரும் - குமுத குமுதாக்ஷாதிகளான கணதிபர்களும், முக்தரும் – இங்கிருந்து அக்கரைப்பட்டவர்களான முக்தாத்மாக்களும், பரமாகாசமும் - பரமபதமும, ப்ரக்ருதியும் - ஸத்வரஜஸ் தமோ குணமயமான மூலப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும் - இந்நிலத்தில் கட்டுண்டுகிடக்கிற ஆத்மாக்களும், காலமும் - பகல், இரவு முதலிய பகுதிகளோடு கூடின காலமும், மஹதாதிவிகாரங்களும்-மஹத்தத்வம் முதலான இருபத்துமூன்று தத்துவங்களும், அண்டங்களும் - எண்ணிறந்துள்ள அண்டவிசேஷங்களும், அண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்களும் - அண்டத்துக்குள்ளேயிருக்கிற தேவமநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களும்; ஆகிற இவையே நாரங்களாம்.

96, 97, நாரங்களென்றால் என்ன? என்னில்; நித்ய வஸ்துக்களின் ஸமூஹமே நாரமெனப்படும். அவைதாம் எவையென்னில்; பகவத்ஸ்வரூப நிரூபகதர்மங்களான ஜ்ஞான ஆநந்த அமலத்வ அநந்தத்வங்கள், நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான ஜ்ஞாநசக்தி பல ஐச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஷட்குணங்கள், வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸ்வாமித்வ ஸௌலப்யங்கள் முதலிய எண்ணிறந்த கல்யாணகுணவிசேஷங்கள் அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹம், இச்சையினால் பரிக்ரஹிக்கும் பல பல விக்ரஹங்கள். அந்த விக்ரஹகுணங்களான ஸௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாதி குணங்கள், அத்திருமேனிக்குச் சாத்தும் எண்ணிறந்த திருவாபரணங்கள், அழகுக்கும் அடியவர் வினை கெடுக்கைக்கும் உடலாயிருந்துள்ள திவ்யாயுத விசேஷங்கள், பெரிய பிராட்டியார் முதலான நாச்சிமார்கள், அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிவர்க்கங்கள், கைங்கரியத்திற்கு உபகரணங்களான குடை சாமரம் திருவாலவட்டம் வட்டில் படிக்கம் முதலானவை, சண்டப்ரசண்ட பத்ரஸுபத்ர ஜய விஜயாதிகளான திருவாசல் காக்கும் முதலிகள், குமுத குமுதாக்ஷர் முதலான கணதிபதிகள், ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்பட்ட முக்தர்கள், பரமபதம், மூலப்பிரக்ருதி, இந்த பிரக்ருதிக்குள்ளே உருமாய்ந்து கிடக்கிற ஸம்ஸாரிகளான ஆத்மாக்கள், பகல் இரவு முதலிய பாகுபாடுகளுடன் கூடின காலம், மஹத்தத்வம் முதலாக பிருதிவியளவாகவுண்டான இருபத்து மூன்று தத்துவம், அண்ட விசேஷங்கள். அண்டத்துக்குட்பட்ட தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவர விசேஷங்கள் ஆக இவ்வளவும் நாரங்களெனப்படும்.

"நாரங்களாவன நித்யவஸ்துக்களினுடைய திரள்" என்று முன்னே சொல்லிவைத்து, மேலே விவரிக்கும்போது அநித்யவஸ்துக்களையும் சேர்த்து எண்ணியிருப்பது எங்ஙனே பொருந்துமென்று சிலர் சங்கிக்கக்கூடும். கேண்மின்; அநித்யவஸ்துக்கள் எதுவுமில்லை; எல்லாம் நித்யவஸ்துக்களேயாம். ஸ்வரூபதோ நித்யங்களென்றும் ப்ரவாஹதோ நித்யங்களென்றும் நித்யவஸ்துக்கள் இரு வகைப்படும். "ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்" என்று தொடங்கி "காலமும்" என்னுமளவும் ஸ்வரூபநித்யங்களான வஸ்துக்கள் சொல்லப்பட்டன; அதற்குமேல் ப்ரவாஹ நித்யங்களான வஸ்துக்கள் சொல்லப்பட்டன. ஒரு நாளும் உற்பத்திவிநாசமேயில்லாத வஸ்துக்கள் ஸ்வரூப நித்யங்களெனப்படும். உற்பத்தி விநாசங்கள் இருக்கச்செய்தேயும் முன்புண்டான நாமரூபலிங்காதிகள் மாறுமலிருக்கப்பெற்ற வஸ்துக்கள் பிரவாஹநித்யங்களெனப்படும். ஆக நாரபதார்த்தம் விவரிக்கப்பட்டதாயிற்று. ... ... ... (97)

**98. அயநமென்றது - இவற்றுக்கு ஆச்ரய மென்றபடி.**

98. இனி அயநபதார்த்தம் கூறப்படுகிறது. அயநமாவது **ஆச்ரயம்**; நாரங்களுக்கு இருப்பிடமானவன் நாராயணன் என்றதாயிற்று. ... ... (98)

**99. அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆச்ரயமாகவுடைய னென்னவுமாம்.**

**அங்ஙனன்றிக்கே** - கீழே சொன்ன தத்புருஷ ஸமாஸார்த்தம் தவிர, **இவை தன்னை ஆச்ரயமாக வுடைய னென்னவுமாம்** - பஹுவ்ரீஹி ஸமாஸார்த்தமும் கொள்ளலாம்.

99. நாராயண பதத்திற்கு தத்புருஷஸமாஸமும் பஹுவ்ரீஹி ஸமாஸமும் **ஆக** இரண்டு வகைப்பட்ட ஸமாஸங்கள் செய்யலாமென்று முன்னம் சொல்லப்பட்டது. அதில் தத்புருஷ ஸமாஸஸித்தமான அர்த்தம் கீழே விவரிக்கப்பட்டது. பஹுவ்ரீஹி ஸமாஸஸித்தமான அர்த்தம் இப்போது கூறப்படுகிறது. நாராயணனென்கிற பதத்திற்கு நாரங்களை ஆச்ரயமாகவுடையவன் என்கிற பொருளும் கொள்ளலாமென்றதாயிற்று. நாரங்களெனப்படுகிற நித்யவஸ்துக்கள் எம்பெருமானிடத்திலே யிருக்கின்றனவென்று தத்புருஷஸமாஸத்தால் தேறும். அவற்றிலே எம்பெருமான் இருக்கிறானென்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தால் தேறும். ... ... (99)

**100. இவையிரண்டாலும் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்.**

**இவை யிரண்டாலும் பலித்தது** - கீழே காட்டிய இருவகைப்பட்ட ஸமாஸங்களினாலும் தேறிய தென்னவென்றால், **பரத்வ ஸௌலப்யங்கள்** - தத்புருஷனால் பரத்வமும், பஹுவ்ரீஹியினால் ஸௌலப்யமுமாம்.

100. மேற்சொன்ன இரண்டு ஸமாஸங்களாலும் பலித்தது இன்னதென்கிறது. 'நாரங்களுக்கு அயநம்' என்று தத்புருஷ ஸமாஸஸித்தமான அர்த்தத்தினால் பரத்வம் பலித்ததாகும். ஸகல வஸ்துக்களுக்கும் தான் ஆதாரமாயிருக்கையென்பது தானே பரத்வம் 'நாரங்களை ஆச்ரயமாகவுடையவன்' என்று பஹுவ்ரீஹிஸமாஸஸித்தமான அர்த்தத்தினால் - மிகப் பெரியனான தான் ஸகல சேதநா சேதநங்களிலும் தன்னை அமைத்துக்கொண்டு புக்கிருக்கையாகிற ஸௌலப்யம் பலித்ததாகும். ... (100)

**101. அந்தர்யாமித்வமும் உபாயத்வமும் உபேயத்வமுமாகவுமாம்.**

**அந்தர்யாமித்வமும் உபாயத்வமும் உபேயத்வமுமாகவுமாம்** - உபய ஸமாஸங்களாலும் பலித்தவை அந்தர்யாமித்வ உபாயத்வ உபேயத்வங்களென்றும் கொள்ளலாம்.

101. கீழ்ச்சொன்ன இரண்டு வகையான ஸமாஸங்களாலும் பரத்வஸௌலப்யங்கள் பலித்தனவாகச் சொல்லுவதும் தவிர, அந்தர்யாமித்வம் உபாயத்வம் உபேயத்வம் ஆக இம்மூன்றும் பலித்தனவாகச் சொல்லுவதுமுண்டு. எங்ஙனே யென்னில்; நாரங்களிலே தான் இருக்கிறான் என்பதனாலே அந்தர்யாமித்வம் ஸித்தம். அயநபதமானது கரணே வ்யுத்பத்தியாலும் ஸித்திக்கக்கூடியது, கர்மணிவ்யுத்பத்தியாலும் ஸித்திக்கக்கூடியது. "ஈயதே அநேநேத்யயநம்" என்பது கரணேவ்யுத்பத்தி. "ஈயதே

**அஸௌ இதி அயநம்** " என்பது கர்மணி வ்யுத்பத்தி. முந்தினவ்யுத்பத்தியில் எம்பெருமான் உபாயமாக நிற்பவன்; பிந்தின வ்யுத்பத்தியில் உபேயமாக நிற்பவன்; ஆகவே அந்தர்யாமித்வமும் உபாயத்வமும் உபேயத்வமும் பலித்தனவாகும். ... (101)

**102. எம்பிரானெந்தை யென்கையாலே, ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும்.**

**எம்பிரானெந்தை யென்கையாலே - (நாராயண சப்தார்த்த மநுஸந்திக்கிற திருமங்கை யாழ்வார்) "எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றமென்கிற பாசுரமருளிச் செய்திருக்கையாலே, ஈச்வரனே - ஸர்வேச்வரன் தானே, எல்லாவுறவு முறையுமென்று - (சேதநர்க்கு) ஸகலவித பந்துவுமென்று, சொல்லும் - இந்த நாராயண பதத்திலே சொல்லப்படும்.**

102 கீழே நிரூபித்த கர்மணிவ்யுத்பத்தியினுல் பலித்த உபேயத்வத்துக்கு ஸங்கோசமில்லாமையாலே அந்த உபேயத்வமானது *தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் *என்னும்படி மாத்ருத்வம் முதலான ஸர்வப்ரகார விசிஷ்டமாயிருக்கையாலும், பந்துலாபமும் ப்ராப்யமாகையாலும் ஈச்வரன் ஸர்வவித பந்து என்பது நாராயணபதத்திலே ஸித்தம். ஆனது பற்றியே இந்த நாராயண சப்தத்தின் அர்த்தத்தை அநுஸந்திக்கிற திருமங்கை யாழ்வாரும் *எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றமெனக்கரசென்னுடைவாணுள்* என்று ஸகலவித பந்துத்வத்தையும் அருளிச்செய்தார். (102)

**103. நாம் பிறர்க்கானவன்றும் அவன் நமக்காயிருக்கும்.**

**நாம் பிறர்க்கு ஆனவன்றும் - நாம் எம்பெருமானுறவை மறந்து ஸம்ஸாரிகளோடு உறவு கொண்டாடினுலும், அவன் நமக்காயிருக்கும் - எம்பெருமான் நமக்கு ஹிதபரனுயே நடந்து போருவன்.**

103. எம்பெருமானே ஸகலவித பந்துவுமாகில் அவன் நமக்குச் செய்யும் நன்மை ஏதென்னில்; நாம் அப்பெருமானுேடு ஸம்பந்தமற்று அந்யபரராக இருக்குமிடத்தும் நமக்கு ஆபிமுக்கியமுண்டாகும்படியை எதிர்பார்த்துக் கொண்டு நம் பக்கலிலே ஊற்றமுற்றிருக்கையே. ... ... ... (103)

**104. இரா மடமூட்டுவாரைப்போலே உள்ளேபதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரும்.**

**இரா மடமூட்டுவாரைப் போலே - (துர்மானத்தாலே வீட்டைவிட்டு அகன்ற மக்களுக்கு இராக் காலங்களிலே அசலறியாதபடி மடங்களிலே புஜிப்பிப்பாரைப் போலே, உள்ளே பதிகிடந்து - கண்காணுமே அந்தராத்மாவாயிருந்து, ஸத்தையே பிடித்து - சேதநர்களின் ஸத்தை ஏற்பட்ட காலந்தொடங்கி, நோக்கிக் கொண்டு போரும் - ரக்ஷித்துக் கொண்டு போருவன்.**

104 நாம் அந்யபரராயிருக்கவும் எம்பெருமான் நமக்கேயாயிருந்துகொண்டு செய்வதுதான் ஏதென்னில்; சில பிள்ளைகள் தாய்தகப்பன்மாரிடத்தில் விரோதங்கொண்டு அவர்களோடே கூடியிருந்து உண்ணமாட்டாதே பட்டினிகிடந்து திரியுமளவில், அத்தாய் தந்தையர் அவர்களையும் விடமாட்டாமல் அசலறியாதபடி இராக்காலங்களிலே

மடங்களில் மறைந்திருந்து பிறரைக் கொண்டு உண்பிப்பது போல், எம்பெருமானும் தன் பக்கலில் தலைசாய்க்கமாட்டோமென்று ஸ்வாதந்திரியங் கொண்டாடித் திரிகிற சேதநர்கள் கண்காணுதபடி அந்தராத்மாவாய் இவர்கள் ஸத்தையே பிடித்து ரக்ஷித்துக்கொண்டு போருவதுண்டே, அது காண்மின்.

ஆக இந்த நாராயண பதத்தாலே கைங்கரியத்திற்கு உத்தேச்ய பூதனை எம்பெருமான் படியைச் சொல்லியாயிற்று.

**105 'ஆய' என்கிற வித்தால், *சென்றாற் குடையாமென்கிறபடியே எல்லா வடிமைகளும் செய்யவேணுமென்றபேக்ஷிக்கிறது.**

**ஆயவென்கிற வித்தால்**-நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்திவிபத்தியாலே, **சென்றாற்குடையா மென்கிறபடியே** - *சென்றாற் குடையாமென்கிற பொய்கையார் பாசுரத்தின் படியே, **எல்லாவடிமைகளும் செய்யவேணுமென்றுஅபேக்ஷிக்கிறது** - ஸகலவித கைங்கரியங்களும் செய்யப்பெற வேணுமென்கிற பிரார்த்தனை காட்டப்படுகிறது.

105. நாராயண பதத்தின்மேல் ஏறிக்கிடக்கிற சதுர்த்திவிபக்தியானது கைங்கர்ய பிரார்த்தனை பண்ணுகிறபடியைத் தெரிவிக்கின்றதென்கிறது இனி. *சென்றாற்குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும், புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கு அரவு * என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தின்படியே திருவனந்தாழ்வானைப்போலே எவ்வகைப்பட்ட கைங்கரியங்களும் செய்ய வேணுமென்கிற அபேக்ஷை சதுர்த்தி விபக்தியினால் பிரகாசிப்பிக்கப்படுகிற தென்றதாயிற்று.

[மூலத்தில் "ஆயவென்கிறவித்தால்" என்றிருப்பதில் சிலர் சங்கிப்பதுண்டு; அதாவது, வியாகரண சாஸ்த்ரப்படி (ஆய) என்று கிடையாதே; *ஙேர்ய:* என்கிற பாணிநிஸூத்திரத்தினால் ஙே என்பதற்கு 'ய' என்பது ஆதேசமாக வந்து ஸ்தாநிவத் பாவத்தாலே தீர்க்கம் பிராப்தமாயிருக்கிறவத்தனை போக்கி ஆய என்கிற ரூப மில்லையே; அப்படியிருக்க (ஆயவென்கிறவித்தால்) என்று அருளிச் செய்தது எப்படி பொருந்தும்? என்று சங்கிப்பர்கள்; இதற்கு ஸமாதானமாவது, இது மந்த்ரமாகையாலே மந்த்ர சாஸ்த்திரத்தில் உத்தாரக்ரமத்தில் (ஆய) என்று எடுத்திருக்கையாலே அதையடி யொற்றி அருளிச்செய்ததாகையாலே பொருந்தாமை யொன்றுமில்லை] ... (105)

**106. நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லையென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ வென்னில்,-**

**நமஸ்ஸாலே**-கீழில் நம: பதத்தாலே, **தன்னோடு உறவில்லை என்று வைத்து**-தனக்கென்று ஒன்றை விரும்பமுடியாதபடி அத்யந்த பாரதந்த்ரியம் சொல்லியிருக்கும்போது, **கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ வென்னில்**:- கைங்கர்யத்தை தான் விரும்பி அபேக்ஷிக்கை யுக்தமாகுமோ வென்றால்;

**107. "படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தனை வந்தேறி யன்று: ஸ்வரூபப்ரயுக்தம்.**

படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே என்கிறபடியே - இக்குலசேகராழ்வார் ஸ்ரீ ஸூக்தியில் 'படியாய்க்கிடந்து' என்று அத்யந்த பாரதந்திரியம் சொல்லியிருப்பதோடு கூடவே கைங்கர்யப்ரார்த்தனையையும் சொல்லியிருக்கையாலே இப்பாசுரத்தின்படியே. கைங்கர்ய ப்ரார்த்தநை வந்தேறியன்று - கைங்கரியத்தை யபேக்ஷிக்கையானது வந்தேறியானதன்று ஸ்வரூபப்ரயுக்தம் - அத்தலைக்கு அதிசயத்தை விளைத்தல்லது நிற்கவொண்ணாதபடியான தன் ஸ்வரூபத்தைப்பற்றி வந்தது.

106, 107. கீழே நமஸ்ஸூக்கு அத்யந்த பாரதந்திரியமன்றோ பொருளாகச் சொல்லப்பட்டிருக்கிறது தனக்கென்று ஒன்றை விரும்புகைக்கு யோக்யதையில்லாமை யன்றோ அத்யந்த பாரதந்திரியமாவது; அப்படிப்பட்ட பாரதந்திரியத்திற்கு விருத்தமாக இப்போது கைங்கர்யத்தை விரும்பி அபேக்ஷித்தால் யுக்தமோவென்னில்; யுக்தமே. கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பதானது ஸ்வபோக்த்ருத்வ ரூபமான அஹங்காரத்தாலே விளைவதாய்க்கொண்டு வந்தேறியானதன்று: சேஷிக்கு அதிசயத்தை விளைத்தே தான் தரிக்கவேண்டியவனாகையாலே சேஷிக்கு அதிசயத்தை விளைத்தல்லது தான் தரியாத படியான தன் ஸ்வரூபத்தைப் பற்றினதேயாம். ஆனதுபற்றியே "படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேன்" என்று குலசேகராழ்வார் அத்யந்த பாரதந்திரியத்தோடே கைங்கர்ய ப்ரார்த்தனையும் பண்ணியிருக்கிறார். ஆக ஸ்வரூப ப்ரயுக்தமாகையாலே கைங்கர்யத்தை பிரார்த்தித்தல் யுக்தம்.

[* படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே* என்கிற விதில் கைங்கர்ய பிரார்த்தனை எங்கே கிடக்கிறது? என்னில்; "உன்பவளவாய் காண்பேன்" என்பதில் அது உணரத்தக்கது. நாம் சேஷிக்கு அதிசயத்தை விளைத்தோமா என்பதை சேஷியினுடைய முகவிகாஸம் கண்டே அறியவேண்டுதலால் அதற்காகவே "உன்பவளவாய் காண்பேனே" என்றாராழ்வார். ஆகவே அது கைங்கர்ய பிரார்த்தனை பண்ணின படியேயாம் என்று கொள்க.] ... ... ... (106, 107)

**108. ஆகையால் *வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம் என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது.**

ஆகையால் - கைங்கர்ய ப்ரார்த்தநையானது வந்தேறியல்லாமல் ஸ்வரூபப்ரயுக்தமேயாதலால். வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம் என்கிற ப்ரார்த்தநையைக் காட்டுகிறது—கைங்கர்யத்தில் நழுவாதபடி எல்லாக் கைங்கர்யங்களும் நாம் செய்யவேண்டுமென்று நம்மாழ்வார் ப்ரார்த்தித்த ப்ரார்த்தநையை இந்த சதுர்த்தி காட்டுகிறது.

108. கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பதானது வந்தேறியல்லாமல் ஸ்வரூபப்ரயுக்தமா கையாலே * ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம் * என்று ஆழ்வார் விரும்பியபடியே அடிமையில் ஒன்றும் நழுவாதபடி ஸகல கைங்கரியங்களும் செய்ய வேண்டுமென்கிற ப்ரார்த்தனையை இந்த சதுர்த்தீவிபக்தி விளக்கிற்றாயிற்று. ... ... ... (108)

**109. *கண்ணாக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலென்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் *ஸதா பச்யந்தி யாகையாலே உறக்கமில்லை.**

* கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலென்கிறபடியே - இந்தத் திருவிருத்தப் பாசுரத்தின் படியே, காண்பதற்கு முன்பு உறக்கமில்லை - பகவத் விஷயத்தைக் காண்பதற்கு முன்பு உறங்க ப்ரஸக்தியில்லை. கண்டால் - காணப்பெற்றுவிட்டாலோ, * ஸதா பச்யந்தியாகையாலே உறக்கமில்லை - ஸதா அநுபவம் பண்ணுவதாக உபநிஷத்து சொல்லுகையாலே உறக்கத்திற்கு அவகாசமேயில்லை.

109. மேற்கூறிய கைங்கர்ய ப்ரார்த்தனை நிரந்தரமாக நடக்கும்படியான ருசியுடையார்படி பேசப்படுகிறது. *இமையோர்கள் குழாம் தொழுவதுஞ் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே *என்னுமாபோலே எம்பெருமானை ஸேவிப்பதற்கு முன்பு ஜ்ஞான ஸங்கோசமாகிற உறக்கம் கிடையாது, கண்டகாலத்திலே *தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:* என்று உபநிஷத்து ஓதினபடியே நித்யாநுபவம் பண்ணுகையாலே பின்பும் உறக்கமில்லை. இப்படி எப்போதும் உறக்கமில்லாதபடியாகவாயிற்று ப்ராப்யருசியுடையார் படியிருப்பது. ... ... (109)

**110. *பழுதே பல பகலும் போயினவென்று இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை.**

*பழுதே பல பகலும் போயின வென்று- இந்த பொய்கையாழ்வார் பாசுரப்படியே இழந்த நாளைக் குக் கூறப்பிடுகிறவனுக்கு - அநுபவத்தை இழந்திருந்த கீழ்நாளைக் குறித்துக் கிலேசப் படுகிறவனுக்கு, உறங்க விரகில்லை - மேலுள்ள நாளில் உறக்கம் வர வழியில்லை.

110. உறக்கமில்லாமைக்கு மற்றொரு காரணமுமுண்டு; *பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சியழுதேன்* என்று பொய்கையாழ்வாரருளிச் செய்தபடியே, பகவத் விஷயத்தை இப்போது அநுபவிக்குமாபோல பண்டெல்லாம் அநுபவியாமல் அநேககாலம் வியர்த்தமாய்க் கழிந்துபோய் விட்டதே! என்று இழந்த நாளை நினைத்து வருந்தி ஆக்ரந்தனம் பண்ணுமதிகாரிக்கு மேலுள்ள காலத்தில் உறக்கம் வர அவகாசமில்லை. ... (110)

**111. *அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேனென்று நின்றார்களிறே.**

111. அன்றியும் *அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன் * என்கிற திருமழிசையாழ்வாருடைய படியிலே யிருப்பார்க்கு பகவத் விஷயத்தில் அறிவு பிறந்த பின்பு மறப்பதற்கு ப்ரஸக்தியே கிடையாது.

ஆக இவ்வளவால் — பகவத்விஷய வைலக்ஷண்ய முணர்ந்தவர்களின்படி இப்படிப் பட்டதாகையாலே இந்த கைங்கர்ய ப்ரார்த்தனை இடையறாமல் நடக்குமென்றதாயிற்று. ... ... ... (111)

**112. இவ்வடிமைதான் *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி என்கிறபடியே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்.**

இவ்வடிமைதான் - இந்தக் கைங்கர்யமானது. *ஒழிவில் கால மெல்லாமுடனாய் மன்னி யென்கிற படியே - இந்த நம்மாழ்வார் பாசுரப்படியே, ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும் - எல்லாவிடங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் நடந்து செல்லும்.

112. இனிமேல் இந்த கைங்கரியத்திற்கு தேசநியமம் காலநியமம் ஒன்று மில்லாமை கூறப்படுகிறது. * ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம் * என்று எல்லாக் காலங்களிலும் எல்லா தேசங்களிலும் எல்லா அவஸ்தையிலும் பிரியாது நின்று கைங்கர்யம் பண்ணப்பெறவேணுமென்று ஆழ்வார் ப்ரார்த்தித்தபடியே இவ்வடிமை ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் தொடர்ந்து செல்லும். ... ... ... (112)

**113. எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம் போலே திருமந்த்ரம்.**

எட்டிழையாய் - எட்டுத் திருவக்ஷரங்களையும் எட்டு இழையாகக் கொண்டதாய், மூன்று சரடாய் - மூன்று பதங்களையும் மூன்று சரடாகக் கொண்டதாய், இருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம் - இப்படி லோகவிலக்ஷணமாயிருப்பதொரு மங்கலநாண் போன்றதாம் இத்திருமந்த்ரம்.

113. உலகத்தில் ஸ்த்ரீகள் மங்களஸூத்ரம் தரிப்பதானது 'இவள் புருஷனுக்கு அநந்யார்ஹை' என்று காட்டுவதற்கு ஆகிறாப்போலே இந்தத் திருமந்த்ரத்தைத் தரிப்ப தானது சேதநர்கள் எம்பெருமானுக்கு அநந்யார்ஹ பூதர்கள்' என்பதை ப்ரகாசிப் பிக்கிறது என்பது தோற்ற இத்திருமந்த்ரம் ஒரு மங்களஸூத்ரமாக நிரூபிக்கப்படுகிறது. உலகத்தில் மங்களஸூத்ரமானது பதினாறு இழையாய் இரண்டு சரடாயிருக்கும்; இது அப்படியல்லாமல் விலக்ஷணமான ரீதியிலே எட்டு இழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம் போலேயாம். எட்டு அக்ஷரமிருப்பது எட்டு இழையாகவும், மூன்று பதமிருப்பது மூன்று சரடாகவும் கொள்ளப்பட்டது. ... ... (113)

**114 இத்தால் ஈச்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கு மென்கிறது.**

இத்தால் - இதனை மங்கலநாணாகச் சொன்னவிதனால், ஈச்வரன் - எம்பெருமானானவன், ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று - ஆத்மாக்களுக்குக் கணவனாயிருந்துகொண்டு, ரக்ஷிக்கு மென்கிறது - ரக்ஷிப்பதாகத் தெரிவிக்கப்படுகிறது.

114. திருமந்த்ரத்தை மங்களஸூத்ரமாக நிரூபித்துச் சொன்னதனால் என்ன தேறிற்று? என்னில்; இந்தத் திருமந்த்ரத்தோடு ஸம்பந்தமுடைய சேதநர்களுக்கு எம்பெருமான் பதியாயிருந்துகொண்டு ரக்ஷணத்தொழிலை நிர்வஹித்துக்கொண்டு போரு மென்பதே. ... ... ... (114)

**115. ஆகத்திருமந்த்ரத்தால், எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கு உரியனன்றிக்கே யொழியவேணும்; ஸர்வசேஷியான நாராயணனுக்கே எல்லாவடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணுமென்றதாயிற்று.**

**முமுக்ஷுப்படியில் திருமந்த்ரப்ரகரணம் முற்றிற்று.**

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஆக - நிகமன மென்ன வென்றால், திருமந்த்ரத்தால் - திருவஷ்டாக்ஷரத்தினால் (சொல்லப்படுவதாவது), எம்பெருமானுக்கே உரியேனான நான் - பகவானுக்கே சேஷப்பட்டவனான நான், எனக்குரியனன்றிக்கேயொழியவேணும் - ஸ்வசேஷத்வம் தவிரப் பெறவேணும்; ஸர்வசேஷியான நாராயணனுக்கே - எல்லாவடிமைகளையும் கொள்ள இட்டுப்பிறந்தவனான திருமாலுக்கே, எல்லாவடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேணும் என்றதாயிற்று—.

115. இத்திருமந்த்ரத்தின் அர்த்தம் ஸங்க்ரஹித்து நிகமிக்கப்பட்டது. (115)

திருமந்த்ர ப்ரகரணம் முற்றிற்று

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

# முமுக்ஷுப்படி—த்வயப்ரகரணம்

116. புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும்நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப்போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்.

### த்வயப்ரகரணம்—பதவுரை.

புறம்பு உண்டான பற்றுக்களை யடைய - எம்பெருமான் தவிர மற்ற விஷயங்களிலுண்டான ஸங்கங்களை யெல்லாம், வாஸனையோடே விடுகையும் - மறுபடியும் அதில் பற்று உண்டாக வழியில்லாதபடி ஸவாஸநமாக விடுகையும்; எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும் - வேறொன்று தஞ்சமென்கிற நினைவு கலசாதபடி ஸர்வேச்வரனையே தஞ்சமாகப் பற்றுகையும்; பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் - பலன் தப்பாமல் ஸித்திக்குமென்று திட நம்பிக்கை கொண்டிருக்கையும்;

பேற்றுக்கு த்வரிக்கையும் - பேறு கிடைக்கிறபோது கிடைக்கட்டுமென்றிராமல் பதறுகையும்,

இருக்கும் நாள் - இவ்வுடம்போடே இங்கிருக்கிறவரையில், உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் - திவ்யதேசங்களிலே ஊற்றமுடையனாய், குணாநுபவகைங்கர்யங்களே போது போக்காகையும் - பகவத்குணாநுபவமும் பகவத்கைங்கர்யமுமே போது போக்காம்படியிருக்கையும்.

இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்ற மறிந்து உகந்திருக்கையும் - கீழ்ச் சொன்ன தன்மைகளெல்லா முடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சிலர் இருப்பரேல் அவர்களது பெருமையை யநுஸந்தித்து உள்ளம் பூரித்திருக்கையும்,

திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனுகையும் - திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்திலும் அதன் பொருளை விவரிக்குமதான த்வயத்திலும் நிஷ்டனுயிருக்கையும்.

ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும் - கீழ்ச் சொன்ன தன்மைகளையெல்லாம் உபதேசமுகத்தாலே தனக்குண்டாக்கின ஆசார்ய விஷயத்தில் அன்பு அதிசயித்திருக்கையும்;

ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனுய்ப் போருகையும் - தன்னைத் திருத்திப் பணிகொண்ட ஆசார்யனிடத்திலும், அவ்வாசார்யனையுபகரித்த எம்பெருமானிடத்திலும் நன்றியுடையவனு யிருத்தலும்;

ஜ்ஞாநமும் விரக்தியும் சாந்தியு முடையனுயிருக்கும் பரமஸாத்விகனேடே ஸஹவாஸம் பண்ணுகையும்- ஜ்ஞான வைராக்ய சாந்தியுக்தனுன பரமஸாத்விக பாகவதனேடே கூட வர்த்தித்துப் போருகையும், வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம் - ஆக இவையித்தனையும் ஸ்ரீ வைஷ்ணவ னென்றிருக்குமோரதிகாரிக்கு அவச்யமுண்டாகவேணும்.

(அவ) திருமந்த்ரம், த்வயம் சரமச்லோகம் என்ற ரஹஸ்யங்கள் மூன்றுள் திருமந்த்ரமானது மந்த்ரராஜமென்றும், த்வயமானது மந்த்ரரத்னமென்றும் ப்ரஸித்திபெற்றிருக்கும். ஆசாரியர்கள் திருமந்த்ரத்திற்காட்டிலும் த்வயத்தில் அதிகமாக ஊன்றிப் போருவர்கள். "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைக நிஷ்டரானீர்" என்று ஆசாரியர்கள் ஆசாஸிப்பர்களாம். மணவாளமாமுனிகளின் திநசர்யையில், *மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்ததஸ்புரிதாதரம், ததர்த்ததத்வ நித்யாந ஸந்நத்த புலகோத்கமம்* என்றுள்ளது ப்ரஸித்தம். மணவாளமாமுனிகளின் திருவதரம் எப்போதும் த்வயாநுஸந்தானத்திஞல் ஸ்புரித்துக் கொண்டிருக்குமென்றும், அதன் அர்த்தாநுஸந்தானத்திஞல் திருமேனி புளகாஞ்சிதமாயிருக்குமென்றும் சொல்லப்பட்டுளது. இப்படிப்பட்ட பெருமை த்வயத்திற்கு உள்ளதொன்றும், ஸ்ரீ வைஷ்ணவனுயிருப்பானெருவனுக்கு த்வயரஹஸ்யம் மிகவும் உபாதேயம்.

116. இந்த ப்ரஸங்கத்திலே வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களானவற்றை முந்துற முன்னம் தெரிந்துகொள்ள வேண்டுவதும் முக்கியமாகும். பத்து விஷயங்கள் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களென்று ஆசாரியர்கள் நிரூபித்தருளுகிருர்கள். அவையாவன :—

*பிதரம் மாதரம் தாராந்* இத்யாதிப்படியே பாஹ்ய விஷய ஸங்கங்களையடைய மறுவலிடாதபடி ஸவாஸநமாக விடுகை.

வேறென்று தஞ்சமென்கிற நினைவு கலசாதபடி நிருபாதிகரக்ஷகனுன ஸர்வேச்வரனையே தஞ்சமாகப் பற்றுகை.

பேறு கனத்திருப்பதையும் அதற்குரிய உபாயம் நம்பக்கலில் இல்லாமையையும் நாம் செய்யும் பாபங்கள் அளவு கடந்திருப்பதையும் நோக்கித் தளும்பாமல் பலன் தப்பாமல் கைபுகும் என்று விச்வஸித்திருக்கை.

இப்படி விச்வஸித்து 'பேறு ஸித்தித்தபோது காண்கிறோம்' என்று ஆறியிராமல் *தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்காலமின்னங் குறுகாதோ* *மாகவைகுந்தங் காண்பதற்கு என் மனமேகமெண்ணும்* என்கிறபடியே க்ரமப்ராப்தி பற்றாமல் பதறுகை.

பரமபதத்திலே போய் பகவதநுபவகைங்கரியங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் பதற்றம் நடவா நிற்கச்செய்தேயும் இந்த வுடம்போடேயிருக்கும் நாள் திவ்ய தேசங்களிலே *கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டுகையாகிற ப்ராவண்யத்தை யுடையனாய், அந்த திவ்ய தேசங்களிலே நிற்கிறவனுடைய கல்யாண குணாநுபவமும், அது அடியாகக் கரணத்ரயத்தாலும் அவன் விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமுமே காலக்ஷேப விஷயமாம்படியிருக்கை.

கீழ்ச்சொன்ன விவையெல்லா முடையராயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டால் 'இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த விபூதியிலே இப்படியும் சில மஹான்கள் உண்டாவதே!' என்று அவர்களது வைபவத்தையறிந்து உகந்திருக்கை.

இதர மந்த்ரங்களின் அருகே மறந்தும் செல்லாமல், த்யாஜ்யோபாதேயங்களைத் தெளியவறிவிக்கும் திருமந்த்ரத்திலும் அதின் அர்த்தத்திற்கு விவரணமான த்வயத்திலும் நிஷ்டனாயிருக்கை.

கீழ்ச் சொன்னவற்றையெல்லாம் உபதேசத்தாலே தனக்குண்டாக்கின ஆசார்யன் விஷயத்தில் பக்தி அதிசயித்திருக்கை.

நித்ய ஸம்ஸாரியான தன்னை நித்ய ஸூரிகள் பெறும் பேற்றுக்கு உரியனாம்படி இரும்பைப் பொன்னுக்குவாரைப்போலே திருத்தின அந்த ஆசார்யனிடத்திலும், அந்த ஆசார்ய ஸம்பந்தத்தை யுண்டாக்கின எம்பெருமானிடத்திலும் இடையறாது நன்றி பாராட்டுகை.

தான் கலங்கினாலும் கலங்காமல் நோக்குவதற்காகவும் கீழ்ச் சொன்னவை தனக்கு வளர்ந்து செல்லுகைக்காகவும் ஜ்ஞாநவிரக்தி சாந்தி ஸம்பந்நனாய் பரமஸாத்விகனாயிருப்பானொரு பாகவதனோடே ஸஹவாஸம் பண்ணுகையும்—ஆக இவை யித்தனையும் வைஷ்ணவனென்றிருப்பானொரு அதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்கள். ... ❋

## 117. இந்தவதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமுமநுஸந்தேயம்

இந்தவதிகாரிக்கு - கீழ்ச்சொன்ன தன்மைகளையுடையனாயிருக்குமதிகாரிக்கு: ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம் - ஜ்ஞாநாநுஷ்டானங்களை வளர்க்குமதான ரஹஸ்யத்ரயமும் அநுஸந்திக்கப்படவேணும்.

117. இவ்வதிகாரிக்கு அந்த ஜ்ஞாநாநுஷ்டானங்களை வளர்க்குமதான ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தான விஷயமாகவேணும்.

118. **எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமச்லோகத்தில் ஈச்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது.**

**எல்லாப்ரமாணங்களிலும் தேஹத்தாலே பேறு என்கிறது** - ரஹஸ்யத்ரயம் தவிர்ந்த மற்ற ஸகல சாஸ்த்ரங்களுக்கும் சேதநனுடைய தேஹ விசிஷ்ட வேஷத்திலே நோக்காகையாலே அவற்றில் ஸாதநாநுஷ்டானத்திற்குரிய தேஹத்தாலே இவனுக்குப் புருஷார்த்த லாப மென்று சொல்லப்படுகிறது. **திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறு என்கிறது** - ஆத்மஸ்வரூப மொன்றிலேயே நோக்கான திருமந்த்ரத்தில் ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தாலே புருஷார்த்த லாபமென்று சொல்லப்படுகிறது. **சரமச் லோகத்தில் ஈச்வரனாலே பேறு என்கிறது** - ஈச்வர ஸ்வாதந்த்ரியத்திலே நோக்கான சரம ச்லோகத்தில் அவ்வீச்வரனாலே புருஷார்த்த லாப மென்று சொல்லப்படுகிறது **த்வயத்தில் பெரிய பிராட்டியாராலே பேறென்கிறது** - (இப்போது விவரிக்கப் புகும்) த்வயத்திற்கு லக்ஷ்மீவிசிஷ்ட வேஷத்திலே நோக்காகையாலே இதில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியாலே புருஷார்த்தலாபமென்று சொல்லப்படுகிறது.

118. இனி த்வயத்திற் சொல்லுகிற அர்த்தத்தின் அதிசயத்தை யறிவிப்போம். ஸகல சாஸ்த்ரங்களிலும் இன்னது சொல்லுகிறது, திருமந்திரத்தில் இன்னது சொல்லு கிறது சரம ச்லோகத்தில் இன்னது சொல்லுகிறது என்று தெரிந்துகொண்டு பிறகு த்வயத்திற் சொல்லுகிறது இன்னது என்று தெரிந்துகொண்டால் நலமாகும். ஸகல சாஸ்திரங்களுக்கும் சேதநனுடைய விசிஷ்ட வேஷத்திலே நோக்கு. விசிஷ்ட வேஷமா வது தேஹவிசிஷ்ட வேஷம். ப்ராஹ்மணாதி வர்ணதர்மங்களைப் பற்றியும் ப்ரஹ்மாசர் யாதி ஆச்ரமதர்மங்களைப் பற்றியும் பேசுவதே ஸகல சாஸ்திரங்களுக்கும் விஷயமாகை யாலும் அந்த வர்ணாச்ரமங்கள் தேஹத்தைப் பற்றி நிற்கையாலும் சாஸ்திரங்களுக்கு தேஹவிசிஷ்ட வேஷத்திலே நோக்கு என்னத் தட்டில்லை. அப்படிப் பட்ட ஸகல சாஸ்திரங்களிலும் தேறுகிற அர்த்தமாவது—ஸாதநாநுஷ்டாந யோக்யமான தேஹத் தாலே இவனுக்குப் புருஷார்த்த லாபம் என்பதாம்

திருமந்திரத்திற்கு சேதநனுடைய நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்கு. (அதாவது, சுத்த ஆத்மவஸ்துவிலே நோக்கு என்றபடி.) திருமந்திரமானது ஸகலாத்மாக் களுக்கும் பொதுவான தன்மையைத் தெரிவிப்பதே யன்றி ஜாத்யாச்ரம ஸம்பந்தியான விஷய மொன்றையும் தெரிவிப்பதல்லாமையாலே திருமந்திரத்திற்கு நிஷ்க்ருஷ்ட வேஷத்திலே நோக்கு என்னத் தட்டில்லை. அப்படிப்பட்ட திருமந்திரத்தில்-இவன் தன்னைத்தான் ரக்ஷித்துக்கொள்வதில் நின்றும் கைவாங்கினாலொழிய ஈச்வரனுடைய ரக்ஷகத்வம் ஜீவியா மையாலே அந்த ஈச்வரனுடைய ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியை விட்டிருக்கும் ஆத்மாவாலே புருஷார்த்தலாபம் என்கிறது.

ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்திலே நோக்கான சரமச்லோகத்தில் - இவனுடைய ஸ்வீகாரமும் மிகையாம்படி தானே கைக்கொண்டு ப்ராப்தி ப்ரதிபந்தகங்களான ஸகல பாபங்களையும் தள்ளிப் பொகட்டுத் தன் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளும் ஈச்வரனாலே புருஷார்த்தலாப மென்கிறது.

ஈச்வரனுடைய லக்ஷ்மீ விசிஷ்ட வேஷத்திலே நோக்கான த்வயத்திலோ வென் னில், விசேஷண பூதையான பெரிய பிராட்டியாராலே புருஷார்த்த லாபமென்கிறது.

பேறுபெறுவதற்கு தேஹமும் வேணும், ஆத்மாவும் வேணும், ஈச்வரனும் வேணும், பிராட்டியும் வேணும் முக்கியமாக வேண்டுவது பிராட்டியாகையாலே அவளாலே புருஷார்த்தலாபமென்று தெரிவிக்கிற த்வயம் மிகச் சிறந்தது என்றதாயிற்று.

**119. பெரிய பிராட்டியாராலே பேறுகையாவது இவன் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யம் செய்யானென்கை.**

பெரிய பிராட்டியாராலே பேறுகையாவது - புருஷார்த்த ப்ராபகன் எம்பெருமானேயாயிருக்க, பெரியபிராட்டியாராலே பேறு என்கைக்குக் கருத்தென்னென்னில், இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யம் செய்யானென்கை - இப்பிராட்டி புருஷகாரக்ருத்யம் பண்ணினாலொழிய எம்பெருமான் புருஷார்த்த ப்ராபகனாக மாட்டானென்பதேயாம்.

119. உபாயம் எம்பெருமானாயிருக்க, பெரிய பிராட்டியாராலே புருஷார்த்தலாபமென்றால் என்ன அர்த்தம்? என்னில், இவனுடைய குற்றங்களைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகாரமானாலொழிய எம்பெருமான் இவனுக்கு காரியம் செய்யானென்பதே தாற்பரியம்.

**120. த்வயத்துக்கதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமுடையவன்.**

த்வயத்துக்கு அதிகாரி - த்வயமென்னு மிந்த ரஹஸ்யத்துக்கு அதிகாரியாகக் கூடியவன் யாவனென்னில், ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் உடையவன் - உபாயாந்தரமொன்றுமில்லாமையாகிற ஆகிஞ்சந்யமும், வேறொரு ரக்ஷகனை நெஞ்சிலும் நினையாமையாகிற அநந்யகதித்வமுமுடையவன்.

120. ஸித்தோபாய வரணத்தைக் கூறுமதான த்வய ரஹஸ்யத்திற்கு அதிகாரிகள் கிடைப்பது அரிது. ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமுமாகிற இரண்டு முடையவனே த்வயாதிகாரியாவான். ஆகிஞ்சந்யமாவது—*நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்* என்கிறபடியே ஒருவிதமான கைம்முதலுமில்லாமை அநந்யகதித்வமாவது—*புகலொன்றில்லாவடியேன்* களைகண் மற்றிலேன்* என்கிறபடியே வேறு ரக்ஷகனை நெஞ்சிலும் நினையாமை. ஆக இவ்விரண்டும் வாய்க்கப்பெற்ற அதிகாரியே த்வயாதிகாரியாவான்.

**121. இவையிரண்டும் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.**

121. உபாயாந்தர மில்லாமையாகிற ஆகிஞ்சந்யத்தின் வேஷமும், வேறு ரக்ஷகனில்லாமையாகிற அநந்யகதித்வத்தின் வேஷமும் ப்ரபந்நபரித்ராண மென்கிற ரஹஸ்யத்திலே பரக்கவருளிச் செய்யப்பட்டிருக்கின்றது; அங்கே கண்டுகொள்க.

**122. இதில் முற்கூற்றால் பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியில் அடிமை இரக்கிறது.**

இதில் முற்கூற்றால் - இந்த த்வயத்தில் பூர்வகண்டத்தினாலே, பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது - பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகை சொல்லப்படுகிறது பிற்கூற்றால் - உத்தரவாக்யத்தினாலே. அச்சேர்த்தியில் அடிமையிரக்கிறது - பெருமானும பிராட்டியுமான அச்சேர்த்தியிலே கைங்கர்ய ப்ரார்த்தனை பண்ணும்படியானது சொல்லப்படுகிறது.

122. இனி த்வயத்தின் வாக்யார்த்தம் விவரிக்கப்படுகிறது இரண்டு கூறுக [கண்டங்களாக] இருக்கின்ற இந்த த்யைத்தில் முதற்கண்டத்தினுல்—பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. [**ஸ்ரீமத்** என்பதனுல் பெரிய பிராட்டியாரை முன்னிடுகிறது; **நாராயண சரணௌ சரணம ப்ரபத்யே** என்பதனுல் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது ] உத்தர கண்டத்தாலே, பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கர்யம் பண்ண வேணுமென்கிற ப்ரார்த்தனை காட்டப்படுகிறது [**ஸ்ரீமதே** என்று பிராட்டியுமவனுமான சேர்த்தி; நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தி கைங்கர்ய ப்ரார்த்தனையைக் காட்டும். நமஸ்ஸு கைங்கர்ய விரோதி நிவ்ருத்தியைக் காட்டும்.]

**123. ஸ்ரீ என்று பெரியபிராட்டியார்க்குத் திருநாமம்.**

123 இனி ப்ரதிபதார்த்தம் விவரிக்கப்படுகிறது. ஸ்ரீ என்கிற சொல்லுக்கு ஸம்பத்து முதலியவைகளும் பொருளானுலும் இங்கே இச்சொல் பிராட்டியார்க்குத் திருநாமமாயிரா நின்றது. ***ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்ய:*** என்கிற ப்ரமாண வசனமும் இங்கே அநுஸந்தேயம்.

**124. ஸ்ரீயதே-ச்ரயதே.**

124. இந்த ஸ்ரீ சப்தமானது, ***ச்ரீஞ்*—ஸேவாயாம்*** என்கிற தாதுவிலே இரண்டு வகையான வ்யுத்பத்தியால் நிஷ்பந்நமாகும். ஸ்ரீயதே இதி ஸ்ரீ:. (இது கர்மணி வ்யுத்பத்தி,) ச்ரயதே இதி ஸ்ரீ:. (இது கர்த்தரி வ்யுத்பத்தி.)

**125. இதுக்கர்த்தம்-எல்லார்க்குமிவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள் தனக்கு மவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்குமென்று.**

இதுக்கு அர்த்தம்—ஸ்ரீயதே, ச்ரயதே என்ற இவ்விரண்டு வ்யுத்பத்திகளாலும் தேறின அர்த்தம் என்னவென்றுல்; எல்லார்க்கும் இவளைப்பற்றி ஸ்வரூப லாபமாய்—'ஸ்ரீயதே' என்கிற வ்யுத்பத்தியினுலே 'எல்லாராலும் ஆச்ரயிக்கப்படுகிருள்' என்கையாலே ஸகல சேதநர்களுக்கும் பிராட்டியைப் பற்றியே ஸ்வரூபஸித்தியாகு மென்கை; இவள் தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கு மென்று—'ச்ரயதே' என்கிற வ்யுத்பத்தியினுலே இவள் எம்பெருமானை ஆச்ரயிக்கிருளென்கையாலே இப்பிராட்டிக்கும் அவனைப்பற்றி ஸ்வரூப ஸித்தியாகுமென்கை.

125. கர்மணி வ்யுத்பத்தியில் எல்லாராலும் ஸேவிக்கப்படாநின்றுள் என்று பொருள் படுகின்றது. ஸகல சேதநர்கட்கும் இவளைப்பற்றியே தங்களுடைய சேஷத்வ ரூபமான ஸ்வரூபம் ஸித்திக்குமென்றவாறு. கர்த்தரி வ்யுத்பத்தியில் ஈச்வரனை இவள் ஸேவியா நின்றுளென்று பொருள்படுகிறது. இவள் தனக்கும் ஈச்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூப லாபமாயிருக்கு மென்றவாறு ஸகல சேதந விஷயத்திலும் சேஷித்வத்தையும், ஈச்வர விஷயத்தில் சேஷத்வத்தையும் உடையவள் என்று ஸ்ரீ சப்தார்த்தம் தேறிற்றுயிற்று.

**126 இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.**

இப்போது இவளைச் சொல்லுகிறது—பிராட்டியை இப்பூர்வ வாக்யத்தில் நிர்தேசிப்பதானது. புருஷகாரமாக-புருஷகாரத்வமர்கிற தன்மையையிட்டு.

126 எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டானாப் போலே இவளுக்கும் புருஷகாரத்வமும் உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகளுண்டு; புருஷகாரத்வமென்கிற தன்மையை நினைத்து இப்போது இவளைச் சொல்லுகிறது உபாய வஸ்துவில் விசேஷணமாயிருக்கிற தன்மையையிட்டு இவளுக்கும் உபாயத்வமுண்டென்கிற பக்ஷம் யுக்தியுக்தமன்றென்க.

**127. நீரிலே நெருப்புக்கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.**

நீரிலேநெருப்புகிளருமாலே—குளிர்ந்த ஜலத்திலும் (பாடபாக்நி) அணுகவொண்ணாத படியான நெருப்பு தோன்றுவது போல, குளிர்ந்த திருவுள்ளத்திலே—ஸௌப்ரஸந்நமாயிருக்கிற திருவுள்ளத்திலே. அபராதத்தாலே சீற்றம் பிறந்தால்—சேதநர்களின் குற்றமடியாகச் சீற்றமுண்டானால், பொறுப்பது இவளுக்காக—அக்குற்றத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக.

127. எம்பெருமானுடைய நாராயணத்வப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தத்தைத் தெரிந்துகொண்டு அவனை ஆச்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியம் என்ன? என்னில்; குளிர்ந்த ஜலத்திலுங் கூடக் கொடிதான நெருப்பு கிளருமாபோலே, ஸர்வ பூத ஸௌஹ்ருத்தானவன் திருவுள்ளத்திலே சேதநன் அளவுகடந்து பண்ணின அபராதமடியாகச் சீற்றம் பிறப்பதுமுண்டே; அங்ஙனே சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது இப்பிராட்டிக்காக. தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி தயையை ஜநிப்பிக்கும் இவள். ஆகையாலே ஸம்பந்த வுணர்ச்சியுள்ளவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை அவசியமே யென்க. ... ... (127)

**128. இவள் தாயாய் இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய் இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்.**

இவள்—இப்பிராட்டியானவள். தாயாய்—ஸகல சேதநர்களுக்கும் மாதாவால் இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே—இவர்கள் படும் கஷ்டங்களைக் கண்டு ஸஹித்திருக்கமாட்டாமல். அவனுக்குப் பத்நியாய் இனிய விஷயமா யிருக்கையாலே-அவனுக்கு ஸஹதர்மசாரிணியாயும் பரம போக்யையாயுமிருக்கையாலே. கண்ணழிவற்ற புருஷகாரம்-தட்டுத் தடங்கலொன்றுமில்லாத புருஷகாரமாகக் கூடியவள்.

128 பிராட்டியின் புருஷகாரம் அவ்வளவு காரியம் செய்யுமோவென்னில், ***அகில ஜகந்மாதரம*** என்கிற படியே சேதநர்கட்கு இவள் மாதாவாய், அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய வருத்தம் கண்டு பொறுத்திருக்கமாட்டாதே யிருக்கிற வொரு தன்மையும், எம்பெருமானுக்குப் பத்நியாய் *பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு* என்கிற

படியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன் சொற்படி நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கிற வொரு தன்மையும் உடையளாகையாலே ஒருவகையாலும் விபலமாக மாட்டாத புருஷகாரம். உலகில் புருஷகாரம் செய்பவர்களுக்கு இரண்டு தன்மைகள் வேண்டும்; எவர் விஷயத்தில் புருஷகாரம் செய்யவேணுமோ அவர் விஷயத்தில் நெஞ்சார்ந்த அன்பு இருக்கவேண்டியது ஒன்று. யாரிடத்தில் புருஷகாரம் செய்ய வேணுமோ அவரிடத்தில் தம் வாக்கு வெற்றி பெற்றே தீரும்படியான வால்லப்யமிருக்க வேண்டியது மற்றொன்று. இவ்விரண்டும் பிராட்டியிடத்தே புஷ்கலமென்று நிரூபிக்கப் பட்டதாயிற்று. ... ... ... (128)

129. திருவடியைப் பொறுப்பிக்குமவள் தன்சொல்வழிவருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே.

திருவடியைப் பொறுப்பிக்கு மவள்—ராக்ஷஸிகளை சித்ரவதம் பண்ண முயன்ற மாருதியையும் பொறுப்பித்தவள், தன்சொல்வழி வருமவனை—தான் சொன்னபடி கேட்கும் கணவனை, பொறுப்பிக்கச்சொலல் வேண்டாவிறே—பொறுப்பிக்கவல்லவள் என்பது கைமுதிகந்யாய ஸித்தமன்றோ

129. இதெல்லாம் வாஸ்தவந்தான்; ஈச்வரனோ கேட்பாரற்ற ஸ்வதந்திரன்; அன்னவன் சேதநருடைய குற்றங்களை நிறுத்து அவற்றுக்குத் தக்கபடி தண்டனை செலுத்தியே தீர்வேன் என்று நிற்குமளவில் பிராட்டிதான் என்ன செய்ய முடியும்? என்னில்; இது இவளுடைய செய்தியறியாதார் செய்யும் ஆக்ஷேபமாகும். இவள் சிறையிருந்த காலத்தில் இவளைப் பத்து மாதம் இடைவிடாது படாத பாடுகளும் படுத்தின ராக்ஷஸிகளின் கொடுமையை மரத்தின்மேல் மறைந்திருந்து கண்ட அநுமான் "பெருமாள் வெற்றி பெற்ற பின்பு இவர்களைப் பார்த்துக் கொள்வோம்" என்று ஆறியிருந்து, ராவணவதமான பின்பு ஓடிவந்து, "இவ்வரக்கிகளின் அபராதங்களைக் கணக்கிட்டு சித்திரவதம் பண்ண நினைத்திருக்குமெனக்கு இடமளிக்க வேணும்" என்று (பிராட்டியை நோக்கிக்) கேட்டவளவிலே, சொல்மிறுங்களை அவ்வனுமானையுமுட்பட இவள் உபதேசத்தாலே பொறுப்பித்தாளென்பது ஸ்ரீராமாயண பிரஸித்தம். அப்படிப் பட்ட விவள் *அல்லிமலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்* என்கிறபடியே தன் போக்யதையிலே மிகவும் ஈடுபட்டிருப்பவனாய், *நின்னன்பின் வழிநின்று சிலைபிடித் தெம்பிரானேக* என்கிறபடியே 'மாயாமிருகத்தின் பின்னே போ' என்றாலும் விளைவதறியாதே அதின் பின்னே தொடர்ந்து போமவனாய் இப்படி தனக்கு விதேயனாய் ரஸிகனாயிருக்குமவனைப் பொறுப்பிக்க வல்லளென்பதுபற்றிக் கேட்கவேணுமோ? ... (129)

130. மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது.

மதுப்பாலே - ஸ்ரீசப்தத்திற்கு அடுத்தபடியுள்ள மதுப் ப்ரத்யயத்தாலே, இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது - இந்த திவ்ய தம்பதிகளின் சேர்த்தி எப்போதுமுள்ளதென்று காட்டப் படுகிறது.

130 'ஸ்ரீமத்' என்கிற பதத்தில் ப்ரக்ருதியான ஸ்ரீ என்பதன் பொருள் விவரிக்கப் பட்டதாயிற்று; அதன்மேல் ஏறிக்கிடக்கும் மதுப்பென்கிற பிரத்யயத்தின் பொருள்

இனிமேல் விவரிக்கப்படுகிறது. 'எப்போதும் கூடியிருத்தல்' என்னும் பொருளில் 'மதுப்பு' வந்திருப்பதாகக் கொள்க. இத்தால் புருஷகாரபூதையான பிராட்டியும் ஈச்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டென்பது சொல்லப்பட்டதாயிற்று.

**131. இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.**

**இவளோடே கூடியே** - இப்பிராட்டியோடு கூடியே. **வஸ்துவினுடைய உண்மை** - ஈச்வரஸத்பாவம்

131. இந்த நித்ய யோகம் எப்படிப்பட்டதென்னில், ஸ்வரூபாநுபந்தித்வ ப்ரயுக்தமான நித்யயோகமென்று கொள்ளக்கடவது. ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூப நிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர வஸ்துவின் ஸத்தையுளதாகக் கொள்க. ... (131)

**132. ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும் சேதனனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்.**

**ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தைக் கண்டும்** - எம்பெருமான் கேட்பாரற்ற ஸ்வதந்திரன் என்பதைக் கண்டும். **சேதநனுடைய அபராதத்தைக் கண்டும்** - வந்துபணிகிற சேதநன் மஹாபராதி என்பதைக்கண்டும். **அகலமாட்டாள்** - ஒரு நொடியும் எம்பெருமானைவிட்டுப் பிரிய மாட்டாள்.

132. இவளுடைய குணப்ரயுக்தமாகவும் நித்யயோகமுண்டு; அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தையும் சேதனர் செய்யும் குற்றங்களின் அளவில்லாமையையுங்கண்டு "ஐயோ என்னாகுமோ!" என்கிற பயத்தாலே ஈச்வரனைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாள். ... (132)

**133. சேதனனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா.**

**சேதநனுக்கு** - அபராதியாய் வந்து பணிகிற சேதநனுக்கு, **இவையிரண்டையும் நினைத்து** - ஈச்வர ஸ்வாதந்த்ர்யமும் தன்னபராதமுமாகிற இரண்டையும் நினைத்து, **அஞ்சவேண்டா** - பயப்பட ப்ரஸக்தியில்லை.

133. இப்படி இவளிருந்து நோக்குகையாலே, ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ரியத்தைக் கண்டோ தன்னுடைய அபராதங்களை நினைத்தோ சேதநன் அஞ்சவேண்டிய ப்ரஸக்தியில்லை. ... ... ... (133)

**134 இத்தால் ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது. காலம் பார்க்க வேண்டாவென்கிறது.**

**இத்தால்** - இந்த மதுப் ப்ரத்யயத்தினால், **ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது** - எம்பெருமானைப் பணியுமிடத்தில் பணியவேணுமென்கிற ருசிதான் வேண்டுவது, **காலம் பார்க்க வேண்டா என்கிறது** - ஸமய ப்ரதீக்ஷை பண்ணவேண்டிய அவசியமில்லை என்று தெரிவிக்கப் படுகிறது.

134. அன்றியும், பிராட்டியானவள் எப்போதும் எம்பெருமானோடு கூடியேயிருக்கின்றாளென்று தெரிந்துகொள்ளுமளவில், எந்த ஸமயத்திலும் எம்பெருமானை

ஆச்ரயிக்கலாம் என்பது தேறிற்றுகும். 'புருஷகாரம் செய்பவள் அருகேயிருக்குங்காலம் பார்த்து ஆச்ரயிக்கவேணும்' என்று ஸமயப்ரதிக்ஷை வேண்டியதில்லை; ஆச்ரயிக்கவேணுமென்கிற ருசி பிறக்கவேண்டுவதத்தனையே. ருசி பிறந்தபோதே ஆச்ரயிக்கலாமென்கை.

**135. இவள் ஸன்னிதியாலே காகம் தலைபெற்றது; அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்.**

இவள் ஸந்நிதியாலே - பிராட்டி கூடியிருந்தபடியினுலே, காகம் தலைபெற்றது - ராவணனிற் காட்டிலும் மஹாபராதியான காகம் உயிர்தப்பிற்று; அது இல்லாமையாலே – பிராட்டியின் சேர்த்தியில்லாமையாலே. ராவணன் முடிந்தான் - காகத்திற்காட்டிலும் குறைந்த அபராதியான ராவணன் மாண்டுபோனுன்.

135. பிராட்டியின் புருஷகாரம் அவசியம் வேண்டியதேயென்பதை விபவாவதார காலத்துச் செய்தியாலும் தெரிந்துகொள்ளலாம்; ராமாவதாரத்தில். அளவுகடந்த அபராதத்தைச்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு இலக்காய் தலையறுப்புண்ண வேண்டின காகம் க்ருபைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனது பிராட்டியின் ஸந்நிதியினுலேயாம். அவ்வளவு அபராதியல்லாத ராவணன் ராமசரத்துக்கு இலக்காய் முடிந்துபோனது இவளுடைய ஸந்நிதியில்லாமையினுலேயாம். ஆகவே பிராட்டியின் ஸந்நிதானம் பழுதுபடாதென்று உணர்க. ஆக இவ்வளவும் ஸ்ரீமத் பதார்த்தம் சொல்லிற்றுயிற்று.

**136. புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்.**

**137 அவையாவன-வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும் ஜ்ஞானமும் சக்தியும்.**

புருஷகாரபலத்தாலே - பிராட்டிசெய்கிற புருஷகார க்ருத்ய விசேஷத்தாலே, ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் - ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியம் தலை மடிந்தவாறே, தலையெடுக்கும் குணங்களை - முன்பு தலையெடுக்கமாட்டாமலிருந்து பிறகு தலையெடுக்கவல்ல வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்யாதி திருக்குணங்களை. சொல்லுகிறது நாராயணபதம் - நாராயண பதம் தெரிவிக்கிறது. [இங்குள்ள நாராயண பதத்திற்கு கல்யாண குணசாலித்வத்திலே முழுநோக்கு என்றபடி.]

136, 137. இனி நாராயண பதத்தின் பொருள் விவரிக்கப்படுகிறது. '**நாராயணன்**' என்பதற்குப் பல பல பொருள்கள் உண்டு; ஆங்காங்கு ஸந்தர்ப்பாநுகுணமாகப் பொருள்கொள்ள வேண்டியதாகும். இங்கு, வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஜ்ஞாநம் சக்தி ஆகிற இத்திருக் குணங்களையுடையவன் என்கிற பொருள் கொள்ளக்கடவது ஏனெனில். ஆச்ரயிக்க ருசியுடைய சேதநன் அநாதிகாலமாகப் பண்ணின அபராதங்களைப் பார்த்துச் சீற்றங்கொண்டு 'இவனை அங்கீகரிக்கமாட்டேன்' என்றிருக்கும் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது, உபதேசத்தாலும் அழகாலும் வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல புருஷகாரபலத்தாலே தலைமடிந்தொழிந்த பிறகு, அந்த ஸ்வாதந்திரியத்தின் கீழ் தலையெடுக்கப் பெறுமலிருந்த கஷ்டம் தீர்ந்து தலையெடுக்குமவையான குணங்கள் இவையாதலால் இக்குணங்கள் இங்கு நாராயண பதத்திற்கு அர்த்தமாகக் கொள்ளப்படவேணும்.

138. குற்றம்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம் செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வம் கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநசக்திகள்.

குற்றம் கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம் - தன் குற்றங்களைத் தான் கண்டு அஞ்சாமைக்கு அவனுடைய வாத்ஸல்யகுணம் உதவும். கார்யம் செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம் - நம் காரியம் அவசியம் செய்வனென்று உறுதிகொண்டிருப்பதற்கு ஸ்வாமித்வ குணமுதவும். ஸ்வாமித்வம் கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம் - மிக்க பெருமை பொருந்திய ஸ்வாமித்வத்தைக் கண்டு நைச்யாநுஸந்தானம் பண்ணிப் பின்வாங்கா மைக்கு ஸௌசீல்யமுதவும் கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம் - கண்ணாலேகண்டு ஆச்ரயிக்கைக்கு ஸௌலப்யமுதவும் விரோதியைப்போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாந சக்திகள் - ப்ராப்தி விரோதிகளைக் கழித்து ஸ்வப்ராப்தியைப் பண்ணிவைப்பதற்கு ஜ்ஞாநசக்திகள் உதவும்.

138. இக்குணங்களுக்கு இவ்விடத்தில் விநியோகம் என்னவெனில்; ஆச்ரயிக்க வந்த இந்த சேதநன் தன் தோஷங்களைப் பார்த்து அஞ்சாமைக்கு உறுப்பு **வாத்ஸல்யம்**; வாத்ஸல்யமாவது கன்றினிடத்திலே பசு இருக்குமிருப்பு; அதாவது அதனுடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளுகையும் பாலைக் கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலுங்கொண்டு நோக்குகையுமாம். அப்படியே எம்பெருமானும் ஆச்ரிதருடைய தோஷத்தை [*என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்* என்கிறபடியே] போக்யமாகக்கொண்டு; *பாலேபோல் சீர்* என்கிற குணங்களாலே தரிப்பித்து, ***ந த்யஜேயம் கதஞ்சந*** என்று ஒருநிலைநின்று ரக்ஷித் தருள்வன். ஆகவே இந்த வாத்ஸல்ய குணமானது தன் குற்றங்களைக்கண்டு அஞ்சாமைக் குடலாம். 'நமது காரியம் செய்வனோ மாட்டானோ'வென்று சங்கியாமல் 'அவசியம் காரியம் செய்வன்' என்று நம்பியிருப்பதற்குறுப்பு **ஸ்வாமித்வம்**. உடைமையை உடையவனாயிருக்குமிருப்புதான் ஸ்வாமித்வமென்பது. சேதநன் விமுகனான தசையிலும் விடாமல் நின்று ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான உறவுமுறை யாம். ஆகவே, இழவு பேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வமானது, எம்பெருமான் நம் காரியத்தைச் செய்தே தீருவனென்று துணிகைக்கு உடலாம். உபய விபூதிக்கும் கடவனா யிருக்கும் பெருமைக்கு ப்ரகாசகமான ஸ்வாமித்வத்தைக்கண்டு (சேதநன்) தன் தாழ்வை யநுஸந்தித்து அகலாமைக்கு உறுப்பு **ஸௌசீல்யம்**. எல்லாரோடுமொக்க மேல்விழுந்து புரையறக் கலக்கையே ஸௌசீல்யமாதலால் இது ஸ்வாமித்வங்கண்டு பின்வாங்காமைக்கு உடலாம். அதீந்த்ரியன் [அதாவது கண்ணுக்கு விஷயமாகாதவன்] என்று பிற்காலியாமல் கண்ணாலேகண்டு ஆச்ரயிக்கைக்கு உறுப்பு **ஸௌலப்யம்**. தன் வடிவைக் கண்ணுக்கு இலக்காக்குவதேயன்றோ ஸௌலப்யமாவது. *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* என்கிறபடியே ப்ராப்தி விரோதியைப் போக்கி ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு **ஜ்ஞாந சக்திகள்**. இந்த சேதநன் கீழ் நின்ற நிலையையும் மேல் போக்கடியையும் எம்பெருமானறிந்து கொள்ளுகைக்கு **ஜ்ஞாநம்** உறுப்பு; அறிந்தபடியே செய்து தலைக் கட்டுகைக்கு **சக்தி** உறுப்பு; ஆகவே விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநசக்திகள் உடலாம்.

**139. இங்குச்சொன்ன ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம்.**

**இங்குச் சொன்ன ஸௌலப்யத்துக்கு**—இந்த குணவளியிலே சொல்லப்பட்ட ஸௌலப்யகுணத்திற்கு: **எல்லை நிலம்**—முடிந்த நிலம் எதுவென்றால், **அர்ச்சாவதாரம்**—தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவமாயிருக்கும் நிலை.

139. கீழ்ச் சொன்ன குணங்களில் ஸௌலப்யம் மிக முக்கியமானது; அந்த ஸௌலப்யத்திற்கு எல்லை நிலம் எதுவென்றால் *தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந் தானே* என்கிறபடியே அன்பர்கள் உகந்ததொன்றைத் திருமேனியாகக் கொண்டு நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கும் அர்ச்சாவதாரமாம்.

**140. இதுதான் பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படியிருக்கும்.**

**141. இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.**

**இதுதான்**—இவ்வர்ச்சாவதாரமானது, **பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே**—இப்போது உதவாத பரவ்யூஹ விபவங்கள் போலல்லாமல், **கண்ணாலே காணலாம்படியிருக்கும்**—ஸதாஸாக்ஷாத்கார யோக்யமாயிருக்கும்.

**இவையெல்லாம்**—கீழ்ச்சொன்ன இக்குணங்களெல்லாம், **நமக்கு**—இவை காண விரும்பும் நமக்கு **நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.**

140. 141. இந்த அர்ச்சாவதாரமானது தேச விப்ரகர்ஷத்தாலே கண்ணுக்கு இலக்காகாத ப்ரவ்யூஹங்கள் போலல்லாமல், காலவிப்ரகர்ஷத்தாலே கண்ணுக்கிலக்காகாதபடி போன விபவாவதாரங்கள் போலுமல்லாமல் அணித்தாகி ஸதா ஸந்நிதி பண்ணிக் கொண்டிருக்கையாலே எப்போதும் கண்ணாலே காணலாம்படி யிருக்கும்.

**142. திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும் வைத்தஞ்சலென்ற கையும் கவித்த முடியும் முகமும் முறுவலும் ஆஸனபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்.**

**திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும்**—திருக்கைகளிலே தரித்திருக்கிற திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களும், **வைத்தஞ்சலென்ற கையும்**—['அஞ்சலென்று வைத்த கையும்' என்று அந்வயிப்பது.] அபய முத்ரையோடு கூடின திருக்கையும், **கவித்த முடியும்**—திருமுடியிலணிந்து கொண்டிருக்கிற திருவபிஷேகமும, **முகமும் முறுவலும்**—திருமுகமண்டலமும அதில் தோன்றும் புன்சிரிப்பும், **ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய்**—(*தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானென்கிறபடியே) கீழுள்ள ஆஸன பத்மத்திலே யழுத்தின திருவடிகளுமாய்க் கொண்டு, **நிற்கிற நிலையே**—எழுந்தருளி நிற்கிற நிலைதான், **நமக்குத் தஞ்சம்**—ஸம்ஸாரிகளான நமக்கு ரக்ஷகம்.

142. ஆச்ரயண ஸௌகர்யாபாதகமாகவும் ஆச்ரித கார்யாபாதகமாகவும் கீழ் விவரித்த திருக்குணங்களெல்லாம் இவை காண விருப்பமுடையார்க்கு நம்பெருமாள் பக்கலிலே காணத்தகும். (எங்ஙனே யென்னில்;) ஜ்ஞாந சக்திகளுக்கு ப்ரகாசகமாம்படி திருக்கைகளிலே தரித்துக் கொண்டிருக்கிற திருவாழி திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்களும், வாத்ஸல்யத்திற்கு ப்ரகாசகமாம்படி வைத்த அபய ஹஸ்தமும், ஸ்வாமித்வப்ரகாசகமாகக் கவித்த திருவபிஷேகமும், ஸௌசீல்யப்ரகாசகமான திருமுகமும்

18

முறுவலும், அனைவர்க்கும் கண்டு பற்றலாம்படியான ஸௌலப்யத்திற்கு ப்ரகாசகமாக ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய்க் கொண்டன்றோ நம்பெருமாள் எழுந்தருளியிருக்கிறபடி. இந்த நிலையே நமக்கு ரக்ஷகம். ... ... 142

143. ரக்ஷகத்வபோக்யத்வங்களிரண்டும் திருமேனியிலே தோற்றும்.

**ரக்ஷகத்வ போக்யத்வங்கள் இரண்டும்**—(திவ்யாயுதங்களும் கிரீடமும் ரக்ஷிக்கைக்கு உடலாகவும் போக்யங்களாகவும் காண்கையாலே) ரக்ஷகத்வமும் போக்யத்வமுமாகிற இவையிரண்டும், **திருமேனியிலே தோற்றும்**— கீழ்ச்சூர்ணிகையில் சொன்ன நிலைகொண்ட திருமேனியிலே நமக்குத் தோற்றும்

143. எம்பெருமானையே உபாயமாயும் உபேயமாயும் கொள்ளுகிறவர்களுக்கு உபாயத்வத்திற்கு அபேக்ஷிதமான ஆகாரம் ரக்ஷகத்வம்; உபேயத்வத்திற்கு அபேக்ஷிதமான ஆகாரம் போக்யத்வம்; இவையிரண்டும் நம்பெருமாள் திருமேனியிலே அநுபாவ்யமாகும். ரக்ஷண பரிகரமான திவ்யாயுதங்களோடும் ரக்ஷணத்துக்குக் கவித்த முடியோடும் கூடியிருக்கையாலே ரக்ஷகத்வம் தோற்றும்; அவைதானே அழகுக்கும் உடலாய், அபயஹஸ்தமும் முகமும் முறுவலும் திருவடிகளும் ஒரொன்றே அழகுக்கு எல்லை நிலமாயிருக்கையாலே போக்யத்வம். ஆக இவ்வளவும் நாராயணபதத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று.

144. சரணௌ—திருவடிகளை.

145. இத்தால் சேர்த்தியழகையும் உபாயபூர்த்தியையும் சொல்லுகிறது.

**இத்தால்**— 'சரணௌ' என்கிற த்விவசநத்தால், **சேர்த்தியழகையும் உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது**— இணைத்தாரை யென்னலாம்படியான சேர்த்தியழகையும், இரண்டுக்கு மேல் மற்றொன்றை ஸஹியாமையாகிற உபாயபூர்த்தியையும் சொல்லுகிறது.

144, 145. இனி 'சரணௌ' என்கிற பதமுள்ளது. 'திருவடிகளை' என்று அதற்குப் பொருள். இது த்விவசநாந்த பதமாகையாலே இரண்டு திருவடிகளைச் சொல்லிற்றுகிறது. இரண்டு திருவடிகளையும் சொல்லுகிற வித்தால் *இணைத்தாமரையடியெம்பிரான்* என்கிறபடியே இரண்டு தாமரைப் பூவை ஒழுங்குபடச்சேர்த்து வைத்தாற்போலே யிருக்கிற சேர்த்தியழகு சொல்லப்படுகிறது. அதுவன்றியும் உபாய பூர்த்தியும் சொல்லப்பட்டதாகிறது. அது எங்ஙனே யென்னில்; ஏகவசந ப்ரயோகம் பண்ணுமிடங்களில் ஜாத்யேகவசநமென்று கொண்டு பல வ்யக்திகள் பொருளாகவுங் கூடும்; பஹுவசந ப்ரயோகம் பண்ணுமிடங்களில் 'பூஜாயாம் பஹுவசநம்' 'ஆத்மநி பஹுவசநம்' என்கிற முறைகளாலே ஒரு வ்யக்தியே பொருளாகவுங் கூடும். த்விவசநமோ வென்னில், இரண்டுக்குக் குறைவாகவும் இரண்டுக்கு மேற்படவும் கொள்ளுவதற்கு இடந்தரமாட்டாதாகையாலே, உபாயமாமளவில் ஸஹாயாந்தரத்தை அபேக்ஷியாமையாகிற பூர்த்தியைச் சொல்லுகிறது.

146. பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலா யிருக்கும்.

**பிராட்டியும் அவனும் விடிலும்**— புருஷகாரபூதையான பிராட்டியும் ஸர்வதா ரக்ஷகனை அப்பெருமானும் கைவிட்டாலுங்கூட, **திருவடிகள் விடாது**—திருவடிகள் ஒருபோதும்

விடமாட்டா: திண்கழலாயிருக்கும்— பற்றினவர்களை நழுவவிடாமையாகிற திண்மையை யுடைத்தாயிருக்கும்.

146. ஸ்ரீமந் நாராயணனைப் பற்றுகிறேனென்னுமல் ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளைப் பற்றுகிறேனென்று சொல்லுகையாலே உபாயத்துக்கு உற்றதான குணச்சிறப்பு திருவடிகளுக்குள்ளதென்னுமிடம் தோன்றுகிறது. கீழே புருஷகாரமாகச் சொல்லப்பட்ட பிராட்டியும், ரக்ஷகனாகச் சொல்லப்பட்ட எம்பெருமானுங்கூட கைவிட்டாலும் திருவடிகள் கைவிடமாட்டா; *வண்புகழ் நாரணன் திண்கழல்* என்கிற படியே பற்றினாரை ஒருகாலும் நழுவவிடாத திண்மையையுடைத்தாயிருக்கும். *அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்* என்று நின்றார்களன்றோ.

147. சேஷிபக்கல் சேஷபூதனிழியும் துறை; ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே.

சேஷி பக்கல் சேஷபூதன்—ஸர்வ சேஷியான எம்பெருமானிடத்திலே ஆச்ரயிக்க விருக்கிற சேஷபூதன், இழியும் துறை—தன் ஸ்வரூபத்துக்குத் தக்கபடி வந்து புகும் துறை திருவடிகள். ப்ரஜை முலையிலே வாய் வைக்குமாபோலே—குழந்தை தாயின் முலையிலே வாய்வைக்குமா போலேயாம் இது

147. திருவடிகளுக்கு இப்படிப்பட்ட குணச்சிறப்பு இருப்பதுந்தவிர, இவ னுடைய ஸ்வரூபத்துக்குச் சேரவும் திருவடிகளிலே யிழிகை ப்ராப்தம். ஸ்தநந்தய ப்ரஜை யானது தாயினுடைய அவயவமெல்லாங் கிடக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள முலையிலே வாய் வைக்குமாபோலே சேஷிபக்கல் ஆச்ரயிக்க விழியும் சேஷபூதன் தன் ஸ்வரூபத்துக்குச் சேர இழியும் துறை திருவடிகளாம்.

148. இத்தால் பிராட்டிக்கிருப்பிடமாய் குணப்ரகாசகமுமாய் சிசுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது.

இத்தால்—திருமேனியில் ஏகதேசமான திருவடிகளைச் சொன்னவித்தால், [திருமேனியை நினைக்கிறது' என்றவிடத்தில் இதற்கு அந்வயம். அந்தத் திருமேனி எப்படிப்பட்ட தென்னில்:] பிராட்டிக்கு இருப்பிடமாய்—ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாய், குணப்ரகாசகமுமாய்—திருக்கல்யாண குணங்களை ப்ரகாசிப்பதாகக் காட்டுமதாய், சிசுபாலனையு மகப்படத் திருத்திச் சேர்த்துக் கொள்ளும்—தூஷிப்பதே தொழிலான சிசுபாலனையுங்கூட ஏடுபடுத்திக் கொள்ளுமியல்வினதான, திருமேனியை நினைக்கிறது—திவ்யமங்கள விக்ரஹத் தளவும் அர்த்தமாகும்.

148. திருவடிகளைச் சொன்ன விது திருமேனிக்கு உபலக்ஷணமாகும். விக்ர ஹத்தில் ஏகதேசமான திருவடிகளைச் சொன்னபோதே புருஷகாரபூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய், நாராயணபதத்திற்சொன்ன குணங்களுக்கு ப்ரகாசகமாய் *பலபலநாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலனையுங்கூடத் திருத்தி *சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி தாட் பாலடைந்த* என்கிறபடியே சேர்த்துக் கொள்ளுமியல்வினதான திவ்ய மங்கள விக்ரஹத்தை நினைக்கிறதென்கை.

149. 'சரணம்'—இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.

சரணம்—'சரணம்' என்கிற பதத்திற்கு இனிப் பொருள் விவரிக்கப்படுகிறது (இதன் பொருள் யாதெனில்;) இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக -

வேண்டியவற்றைப் பெறுதற்கும் வேண்டாதவற்றைப் பரிஹரிப்பதற்கும் தப்பாத ஸாதநமாக என்பது பொருள்.

149. த்வயத்தில் இரண்டாவது பதம் 'சரணம்' என்பது. இஷ்டத்தைப் பெறுகைக்கும் அநிஷ்டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்று இதன் பொருளாம். அவித்யையென்ன, அதடியாக வரும் ராகத்வேஷங்களென்ன, புண்யபாப ரூப கருமங்களென்ன அவற்றின் பயனான தேவாதி சரீரங்களென்ன, பலவகைப்பட்ட துக்க பரம்பரைகளென்ன—ஆகிய இவை அநிஷ்டங்களாம். அர்ச்சிராதி மார்க்கத்தாலே செல்லுகையும் பரம பதத்தை ப்ராபிக்கையும் பரமபுருஷனைக் காண்கையும் குணாநுபவ கைங்கரியங்களுமாகிய இவை இஷ்டங்களாம். ஆக இந்த இஷ்டங்களைப் பெறுகைக்கும் அந்த அநிஷ்டங்களைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்றதாயிற்று. ... 149

## 150. இத்தால் ப்ராப்யம்தானே ப்ராபகமென்கிறது.

இத்தால் - திருவடிகளை உபாயமாகச் சொன்னவிதனால்; ப்ராப்யந்தானே - முடிவில் பேறாகப் பெறவேண்டிய வஸ்துவே, ப்ராபகம் என்கிறது - உபாயம் என்பது தெரிவிக்கப்படுகிறது.

150. திருவடிகளையே உபாயமாகச் சொல்லுகிற வித்தால் உபேயமானது தானே உபாயமென்பது சொல்லிற்றாயிற்று. உபாயம் வேறும் உபேயம் வேறுமாயிருக்கிறபடி கிடையாதென்க. ... ... ... ... ... 150

## 151. கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே.

கீழ்ச் சொன்ன மூன்றும் - முன்னேயுள்ள 'ஸ்ரீமந்நாராயண சரணௌ' என்கிற ஸமஸ்தபதத்தில் சொன்னவையான பிராட்டியோடு கூடியிருத்தல், கல்யாணகுணமுடைமை, திவ்ய மங்கள விக்ரஹமுடைமையாகிற மூன்றும், ப்ராப்யமிறே - திருநாட்டிலே இவனுக்கு அநுபவிக்கப்படவேண்டிய விஷயங்களாகச் சொல்லுகையாலே ப்ராப்யமன்றோ.

151. கீழே உபேய ப்ரஸங்கமுண்டோ வென்னில், *ஸ்ரீமந்நாராயணசரணௌ* என்று ஸமஸ்தமான கீழ்ப்பதத்தில் 1. லக்ஷ்மியோடு கூடியிருத்தல், 2. கல்யாண குணங்களுடைமை, 3. திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடியிருத்தல் ஆக மூன்று விஷயங்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன வன்றோ; இவை மூன்றும் சேதநனுக்கு அநுபவ விஷயமாகச் சொல்லப்படுமவை யாகையாலே அவை உபேயங்களா மென்றுணர்க. 151

## 152. இவன் செயலறுதியாலே உபாயமாக்குகிறனித்தனை.

இவன் - இவற்றை ப்ராப்யமாகவே கொள்ளவேண்டிய இந்த சேதநன், செயலறுதியாலே- தான் வேறு செய்யலாவதொன்றில்லாமையாலே, உபாயமாக்குகிறனித்தனை - அவற்றை உபாயமாகக் கொள்ளவேண்டியதாயிற்று.

152. ஆனால் இத்தை உபாயமாக்குகிறது ஏனென்னில்; அகிஞ்சநனாய் அநந்ய கதியாயிருக்கிறவிவன் தன் செயல்மாட்சியாலே உபேயமானதுதன்னையே உபாயமாக்கு கிறனித்தனை. உலகில், போக்யமான பாலையே மருந்தாக்கும்படியாக நேர்ந்துவிடுகிற தன்றோ, அதுபோல.

153. *சரணௌ சரணமென்கையாலே உபாயாந்தரவ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது.

சரணௌ சரணமென்கையாலே - உபேயமான திருவடிகளையே உபாயமாகச் சொல்லுகிற வித்தாலே, உபாயாந்தரவ்யாவ்ருத்தமான உபாயமென்கிறது - உபாயோபேயங்கள் வெவ் வேறாயிருக்கிற இதர விஷயங்களிற்காட்டிலும் வாசிபெற்ற உபாயம் இது என்பது தெரிவிக்கப்படுகிறது.

153. உபேயமான வஸ்துவையே உபாயமாகச் சொல்லுகையாலே உபேயம் வேறும் தான் வேறுமாயிருக்கிற உபாயாந்தரங்களிற் காட்டில் விலக்ஷணமான வுபாயம் இது என்றதாயிற்று.

154. ப்ரபத்யே—பற்றுகிறேன்.

155. வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு இழவில்லை; *ஜ்ஞாநாத் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது.

வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் - வாக்காலே மாத்திரம் பிரார்த்திப்பதும் கைகூப்பு வதுமாகிய இவற்றைச் செய்தாலும், பேற்றுக்கு இழவு இல்லை - பேறு பெறக் குறையில்லை; (ஆனாலும்) *ஜ்ஞாநாத் மோக்ஷமாகையாலே - ஞானத்தாலே முக்தியென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே, மாநஸமாகக் கடவது - அத்யவஸாய ரூபமான பற்றுதலாகக் கடவது.

154, 155. ப்ரபத்யே என்றது பற்றுகிறேனென்றபடி. ரக்ஷித்தருள வேணு மென்று வாயினால் பிரார்த்திக்கையாகிற கேவல வாசிகமாகவும், கைகூப்புதல் நமஸ் கரித்தல் முதலியவையாகிற கேவலகாயிகமாகவும் பற்றினாலும் பலன் ஸித்திக்கக் குறை யில்லை; ஆனாலும், *தத்வஜ்ஞாநாத் முக்தி:* என்று ஞானத்தாலே மோக்ஷ மென்கையாலே இங்கு மாநஸமான பற்றுதலே சொல்லிற்றாகக் கடவது. எம்பெருமானுடைய ரக்ஷகத் வத்தை இசைகையாகிற ஒரு அத்யவஸாயமே இந்த ஞானமாம்.

156. உபாயம் அவனாகையாலும் இவை நேரே உபாயமல்லாமையாலும் இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை.

உபாயம் அவனாகையாலும் - பேற்றுக்கு உபாயம் எம்பெருமானே யாகையாலும், இவை நேரே உபாயமல்லாமையாலும் - மனமொழி மெய்களாலே யாகும் பற்றுதல்கள் ஸாக்ஷாத்தாக உபாயமல்லாமையாலும், இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை - மாநஸிக வாசிக காயிகங்களான மூன்று பற்றுதல்களும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை

156. மாநஸிகம் மாத்திரமே போதுமோ? *சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே...அடைந்த* என்கிறபடியே மனமொழி மெய்கள் மூன்றாலும் ஸ்வீகரிக்க வேண்டாவோ வென்னில், இம்மூன்றும் வேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. ஏனென்னில், பற்றப்படுகிற ஈச்வரனே பலன் ஸித்திக்கைக்கு உபாய மாகையாலும், மனமொழி மெய்களாலுண்டான பற்றுதல்களான இவை மேலெழ உபாயம்போல் தோன்றிக் கழிந்து போமதொழிய ஸாக்ஷாத் உபாயமல்லாமையாலும், பலன் ஸித்திப்பதற்கு அத்யவஸாயரூபமான ஸ்வீகாரமொன்றுமே போதுமானது.

157. வர்த்தமாந நிர்த்தேசம் ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது அநுஸந்திக்கைக்காக.

வர்த்தமாநநிர்தேசம் - பற்றுகிறேனென்று நிகழ்காலமாகச் சொல்லி யிருப்பதானது, ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது - ஸத்வகுணம் தலையெடுத்து அநுதபித்து பயப்பட்டபோது, அநுஸந்திக்கைக்காக - அநுஸந்திப்பதற்குறுப்பாக.

157. *நின்னடியிணையடைந்தேன்* *அடிக்கீழமர்ந்து புகுந்தேன்* என்றாப் போலே இறந்த காலமாகச் சொல்லுகையன்றிக்கே [ப்ரபத்யே - பற்றுகிறேன்] என்று நிகழ்காலமாகச் சொல்லுகிறது ஏதுக்காகவென்னில், ப்ரக்ருதியோடே யிருக்கிறவிவன் ரஜோகுணதமோகுணங்களாலே கலங்கி உபாயாபாயங்களில் ஏதேனுமொன்றிலே அந்வயித்து, பின்னை ஸத்வகுணம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரமில்லாமையாலும், அதுதான் ஒருகால் செய்தற்ற பின்பு மீண்டும் செய்யலாகாமையாலும் முந்துற்ற ப்ரபத்தியை அநுஸந்திக்கைக்காகக் கொழுந்துபடக் கிடக்கிறபடி.

**158. உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும் காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்.**

உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும்—இதரோபாயங்களில் மனஸ்ஸு ஓடாதபடிக்கும், காலக்ஷேபத்துக்கும்—வேறொன்றாலே போதுபோக்கவரிதாகையாலே இதையேகொண்டு காலக்ஷேபம் செய்யவும், இனிமையாலே விட வொண்ணாமையாலும்—இதனுடைய பரம போக்யதையாலே விடவொண்ணாமையாலும், நடக்கும்—இவ்வநுஸந்தானமே நிரந்தரமாக நடக்கும்.

158. முன் வாஸநையாலே அவசமாக உபாயாந்தரங்களிலே நெஞ்சு செல்லாமைக்காகவும், இவ்வநுஸந்தானத்தாலொழியப் போதுபோக்க வரிதாகையாலே இதைக் கொண்டு காலக்ஷேபத்துக்காகவும், இதினுடைய இனிமையாலே விடமாட்டாமையாலும் இவ்வநுஸந்தானம் இடைவிடாமல் நடக்கக் கடவதாம். இதற்காகவும் 'ப்ரபத்யே' என்று நிகழ்காலமாகக் கூறிற்றென்று கொள்க.

**159. பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்.**

பேற்றுக்கு— பலன் கைபுகுவதற்காக, பலகாலும்வேணுமென்று நினைக்கில்— பலகாலும் அநுஸந்திக்க வேணுமென்று நினைத்தால், உபாயம் நழுவும்— ஸித்தோபாயம் குலையும்.

159. ஆகக் கீழ்ச்சொன்ன ப்ரயோஜனங்களுக்காக வல்லாமல் பேற்றுக் குறுப்பாகப் பலகாலும் அநுஸந்திக்க வேணுமென்று நினைத்தால் ஸஹாயாந்தரத்தின் சேர்க்கையை ஸஹிக்கமாட்டாததான ஸித்தோபாயமானது சணற்கயிறு கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே தன்னைக் கொண்டு நழுவிப்போம். [அதாவது- தான் கார்ய காரியாக மாட்டாதென்கை.] ஆக இவ்வளவும் த்வயத்தின் பூர்வவாக்யத்தின் பொருள் விவரிக்கப்பட்டதாயிற்று.

**160. உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது.**

உத்தரவாக்யத்தாலே— த்வயத்தில் உத்தரகண்டத்தாலே, ப்ராப்யம் சொல்லுகிறது—கைங்கரியமாகிற பலன் சொல்லப்படுகிறது

160. (இனி உத்தரவாக்யத்திற்கு அர்த்தமுரைக்கப்படுகின்றது.) ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேச்வரனது திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே உத்தர வாக்யத்திற்குத் திரண்ட பொருள்.

**161. ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை.**

ப்ராப்யாந்தரத்துக்கு அன்று என்கை—கைங்கர்யந்தவிர வேறொரு பலனுக்காக வன்று இவ்வநுஸந்தானம் என்று கருத்து.

161. பூர்வ வாக்யத்தில் உபாயஸ்வீகாரம் பண்ணி இப்போது உபேயம் சொல்லுகிறவிதனால் என்ன தேறுகிறதென்னில்; பூர்வ வாக்கியத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஸாதநம் ஸகல பலன்களுக்கும் பொதுவாகையாலே கீழ்ப்பண்ணின உபாயவரணம் வேறொரு பலனுக்காகவன்று, பகவத் கைங்கர்ய ஸித்திக்காகவே என்றதாகத் தேறுகின்றது.

**162. உபாயாந்தரங்களைவிட்டு சரமோபாயத்தைப் பற்றினாப்போலே உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது.**

உபாயாந்தரங்களை விட்டு—கர்மஜ்ஞாந பக்திகளாகிற இதரோபாயங்களை விட்டு, சரமோபாயத்தைப் பற்றினாப்போலே — இதற்கு மேலில்லை யென்னும்படியான ஸித்தோபாயத்தை (கீழ் வாக்யத்தாலே) பற்றினாப்போலே, உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு—இதர பலன்களான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு, எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது—இனி இதுக்கு மேலில்லை யென்னலாம்படி சரமமான பலனை (கைங்கர்யத்தை) ப்ரார்த்திக்கிறது.

162. மற்ற பலன்களைவிட்டு இந்தப் பலனை அபேக்ஷிக்க வேண்டுவானென்னென்னில்; உபாயவரணம் பண்ணுகிறவளவில் அநந்யோபாயத்வரூபமான ஸ்வரூபத்துக்குத் தகுதியாக கர்மஜ்ஞாந பக்திகளாகிற உபாயாந்தரங்களைவிட்டு சரமமான ஸித்தோபாயத்தைப்பற்றினாப்போலே, உபேய ப்ரார்த்தனை பண்ணுகிற வளவிலும் அநந்யபோக்யத்வரூபமான ஸ்வரூபத்துக்குத் தகுதியாக உபேயாந்தரமான ஐச்வர்ய கைவல்யங்களை விட்டு சரமமான உபேயத்தை [பகவத் கைங்கர்யத்தை] வேண்டுவது ப்ராப்தமேயன்றோ.

**163. இவனர்த்திக்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ வென்னில்,**

**164. இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்.**

இவன் அர்த்திக்கவேணுமோ?—அஜ்ஞனான இந்த சேதநன் பிரார்த்திக்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில் — எல்லாமறிந்த ஸர்வேச்வரன் இவனுடைய நினைவிலுள்ளதை யறிந்து தரமாட்டானோ வென்னில், (அதிலொரு குறையில்லை: ஆனாலும்) இவன் பாசுரம் கேட்டவாறே — இவன் வாய் திறந்து அபேக்ஷிக்குமது கேட்டால், திருவுள்ளம் உகக்கும் — நெஞ்சு குளிரும். (அதற்காக ப்ரார்த்திக்கவேணுமென்கை)

163. 164. *உள்ளுவாருள்ளிற் றெல்லா முடனிருந்தறிதி* என்கிறபடியே நினைவறியுமவனான எம்பெருமான் பக்கலிலே பிரார்த்தனை வேணுமோ? ஸர்வஜ்ஞனான அவன் இவனது நினைவை அறிய மாட்டானோ வென்னில், நெடுங்காலமாக இதர பலன்களில் நசையாகிற நோய்கொண்டு இந்த உபேயத்தில் நசையற்றுக் கிடந்தவன், இதிலே ருசிபிறந்து தன் பக்கலிலே வந்து இத்தையபேக்ஷிக்கிற பாசுரம் கேட்டவாறே சேஷியான அவனுடைய திருவுள்ளம் உகக்கும்; அதுக்காகவே அபேக்ஷிக்கிறதித்தனை. ரோகத்தாலே சோற்றில் ஆசையற்றுக்கிடந்த குழந்தை, ரோகம்தீர்ந்து பசிவிளைந்து சோறு வேணும் தாயே! என்றபேக்ஷிக்குமது கேட்டால் பெற்றதாய் உகக்குமா போலே இதனைக் கொள்க.

**165. ஸ்ரீமதே. 166. பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.**

பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு—இது 'ஸ்ரீமதே' என்பதன் அர்த்தம் சொன்ன படி.

165. 166. இனி ஸ்ரீமதே என்கிற பதத்திற்கு அர்த்தம் சொல்லுகிறது. ஸ்ரீசப்தத்திற்குப் பூர்வ வாக்கியத்தை விவரிக்கும்போது சொன்ன இரண்டு வ்யுத்பத்திகளும் அர்த்தமும், மதுப்புக்கு அர்த்தமான நித்யயோகமும் அப்படியே அநுஸந்திக்கத் தக்கது. ஆகவே ஸ்ரீமதே என்பதற்கு-பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்குமவனுக்கு என்று பொருளாம்.

**167. அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய் கைங்கர்ய வர்த்திகையுமாயிருக்கும்.**

அவன் உபாயமாமிடத்தில்—ஈச்வரன் மோக்ஷமளிப்பவனும் போது, தான் புருஷகாரமாயிருக்கும்—பிராட்டியானவள் (உபாயத்வத்தில் அந்வயமற்று) புருஷகார க்ருத்யத்திலே ஊன்றியிருப்பள். அவன் ப்ராப்யனுமிடத்தில் — அப்பெருமான் கைங்கரியத்தைக் கொள்ளுகிற உபேயனும்போது, தான் ப்ராப்யையுமாய் — பிராட்டி தானும் கைங்கரியம் கொள்ளுமவளாயும், கைங்கர்யவர்த்திகையுமாயிருக்கும் — சேதநன் செய்யுங்கைங்கரியத்தை எம்பெருமான் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாக்குமவளாயு மிருப்பள்.

167. பிராட்டியின் நித்ய யோகமானது இரண்டிடத்திலும் ஒரே விதமாக இருந்தாலும் அந்தந்த நிலைமைக்குத் தக்கபடி இவளிருக்குமிருப்பை நிஷ்கர்ஷித்துக் கொள்ளவேணும். எம்பெருமான் சேதநர்களுக்கு அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளைக் குறித்து உபாயமாமளவில் இவள் புருஷகாரமாயிருப்பள். அவன் சேதநர்க்கு கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாய் ப்ராப்யனுமளவில் தானும் அவனைப்போலே கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாய்க்கொண்டு ப்ராப்யையுமாய், இவர்கள் செய்யும் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப்படுத்தி உகப்பிக்குமவளாயுமிருப்பள் ஆகவே, பூர்வ வாக்யத்தில் சொன்ன நித்யயோகம் புருஷகாரத்வோபயுக்தமென்றும், இப்போது உத்தர வாக்யத்தில் சொல்லுகிற நித்யயோகம் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாகைக்காகவும் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்துகைக்காகவும் அமைந்ததென்றும் சொல்லிற்றாயிற்று. ... ... ... (167)

**168. இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது.**

இதிலே — இந்த உத்தரவாக்யத்திலே, திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை—திருவஷ்டாக்ஷரத்தில் *நாராயணாயவில் அஸ்பஷ்டமாகச்சொன்ன கைங்கர்யத்தை, விசதமாக அநுஸந்திக்கிறது—(பிராட்டியும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியென்று காட்டுகையாலே) ஸுஸ்பஷ்டமாக அநுஸந்திக்கிறது.

168. முதல் ரஹஸ்யமான திருமந்த்ரத்திலே 'நாராயணாய' என்று சொல்லிற்று. நாராயணனுக்கே அடிமை செய்யப் பெறுவேனாகவேணும் என்கிற இவ்வளவொழிய, அடிமை கொள்ளுமவன் பெரிய பிராட்டியாரோடு கூடியிருப்பவனாக வேணுமென்றும், அடிமை செய்யுமவன் மமகாரமற்றவனாக வேணுமென்றும் அங்குச் சொல்லிற்றில்லையே.

அவையிரண்டும் இங்கே ஸுஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே திருமந்திரத்தில் உத்தர பதத்திற்கு இவ்வுத்தரவாக்கியம் விவரணமாயிருக்குமென்று கொள்ளக்கடவது. (168)

168. இளையபெருமாளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறை.

இளையபெருமாளைப்போலே—(காட்டிலே சேர்த்தியிலே கைங்கர்யம் பண்ணின) லக்ஷ்மணனைப் போலே, இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறை— திவ்யதம்பதிகளைக் குறித்து அடிமை செய்வதுதான் ஸ்வரூபமாகும்.

169. இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்யவேணு மென்கிற நிர்ப்பந்தந் தான் என்னென்னில்; இளையபெருமாள் சேர்த்தியிலே அடிமை செய்யப் பாரித்து அப்படியே அடிமை செய்து காட்டினராகையாலே, அவரைப் போல இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை இவ் வாத்மாவுக்கு ஸ்வரூப ப்ராப்தமென்க. மிதுந சேஷத்வம் ஸ்வரூபமானால் மிதுந கைங்கர்யமன்றோ ஸ்வரூபப்ராப்தம் ... (169)

170. அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே.

அடிமைதான்— சேதநன் தான் செய்யவேணு மென்று கோருகிற கைங்கரியமானது, ஸித்திப்பதும் ரஸிப்பதும்— தனக்கு லபிப்பதும் ரஸ்யமாவதும், அச்சேர்த்தியிலே— பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தியிலே.

170. இன்னமும், ஸ்வதந்த்ரனான ஈச்வரன் உபேக்ஷியாமல் கைங்கர்யம் கொண்டருளும்படி பண்ணுமவள் பிராட்டியாகையாலே இவள் முன்னிலையாகத் தம்முடைய ஸ்வரூபாநுரூபமான அடிமையை அபேக்ஷித்துப் பெற்றுக்களித்த இளைய பெருமாளுக்குப் போலே இவன் பிரார்த்திக்கிற அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் பிராட்டியுமவனுமான சேர்த்தியிலேயாம். ... (170)

171. 'நாராயணாய' 172. ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு.

ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு— இவ்விடத்தில் நாராயணபதம் ஸர்வ சேஷியாயுள்ளவனென்கிற பொருளைச் சொல்லுகிறதென்கை. (கைங்கர்ய ப்ரார்த்தநாப்ரகரணமாகையாலே இதுதான் ஏற்றபொருள்.)

171, 172. இனி 'நாராயணாய' என்கிற பதத்துக்குப் பொருளுரைக்கப்படுகிறது. நாராயணத்வமாவது உபயவிபூதி நாதத்வமாகையாலே ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு என்றபடி. கைங்கர்ய ப்ரகரணமாகையாலே இப்பொருள் தான் பொருந்தும். கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியாவான் சேஷியேயன்றோ. [சேஷி-ப்ராப்தனான ஸ்வாமி.]

173. இதிலே திருமேனியையும் குணங்களையும் சொல்லும்.

இதிலே— இந்த உத்தரவாக்யஸ்த நாராயணபதத்திலே, திருமேனியையும் குணங்களையும் சொல்லும்— (கைங்கர்ய ருசிக்குமுன்னே அநுபாவ்யமான) திவ்யமங்கள விக்ரஹங்களும் திருக்கல்யாண குணங்களும் விவக்ஷிதமாகும்.

173. கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியைச் சொல்லுகிற இப்பதத்திலே, கைங்கர்யத்துக்கு முன்னடி நேரும் அநுபவத்துக்கு இலக்கான திவ்யமங்கள விக்ரஹத்தையும் கல்யாண குணங்களையும் சொல்லும். ... ... ... (173)

174. சேஷித்வத்திலே நோக்கு.

சேஷித்வத்திலே நோக்கு— (ஆனாலும்) சேஷித்வமென்கிற ஒரு குணம் மிகவும் விவக்ஷிதமாயிருக்கும்.

174. ஸகல குணங்களும் அநுபவிக்கப் படுமவையானாலும் இவ்விடத்தில் சேஷித்வமென்கிற குணத்திலே முக்யமான நோக்கு என்று கொள்ள வேணும். ஏனென்னில், இங்குச் சொல்லுகிற கைங்கர்யத்திற்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது சேஷித்வமாகையாலே. ... ... ... (174)

175. ப்ராப்த விஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.

ப்ராப்த விஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது— ஸ்வரூபாநுரூப விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமேயன்றோ ரஸித்திருக்கும்.

175. அப்ராத விஷயத்தில் கைங்கர்யம் சாஸ்த்ரங்களிலே நிஷேதிக்கப்பட்டிருக்கும்; அதுபோலல்லாமல் விஹிதமான ப்ராப்த விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமன்றோ இவனுக்கு ரஸிப்பது. ஆகவே சேஷித்வத்திலே நோக்கென்றது நன்று. (175)

176. இந்த சதுர்த்தி கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது.

இந்த சதுர்த்தி— நாராயணபதத்தின் மேலுள்ள சதுர்த்தியானது, கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது— கைங்கர்ய ப்ரார்த்தநையைச் சொல்லுகிறது.

176. இனி, நாராயண பதத்தின் மேலுள்ள சதுத்திக்கு அர்த்தஞ் சொல்லுகிறது. இந்த சதுர்த்தி கைங்கர்ய ப்ரார்த்தனையைக் காட்டுகிறது. சேஷத்வஜ்ஞானகார்யமான உபாயபரிக்ரஹத்துக்கு அடுத்தபடியாக ப்ராப்தமான இந்த சதுர்த்தியானது, பரிக்ரஹித்த உபாயத்தினுடைய பலமான கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கின்றதென்கை மிகவும் உசிதம். ... ... ... ... (176)

177. கைங்கர்யந்தான் நித்யம்.

கைங்கர்யந்தான் நித்யம்— கைங்கர்யமானது ஆத்மாவுள்ளவரையில் ஒழிக்கவொழியாதது.

177. சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலும், அந்த சேஷத்வமானது கைங்கர்ய மில்லாதபோது ஸத்தைபெற்றதாகாமையாலும் கைங்கர்யம் ஆத்மாவுக்கு நித்யமாயிருக்கும். ... ... ... ... (177)

178. நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்.

நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்— (ப்ரார்த்தநையின்றிக்கே கைங்கரியம் ஸித்தியாமையாலே) நித்யமாக வேண்டியே இது பெறத்தக்கது.

178. நித்யமாயிருக்குமாகில் பிரார்த்திக்க வேணுமோ வென்னில்; பிரார்த்தநா விசேஷமில்லாதபோது கைங்கர்யம் ஸித்தியாமையாலே அதை நித்தியமாக பிரார்த்தித்தே பெறவேணும். ... ... ... ... ... (178)

179. சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும் ப்ராப்யமும்.

சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை—சேஷியான ஈச்வரனுக்கு ப்ரீதி ரூபமான ஒரு சிறப்பையுண்டு பண்ணுகை, சேஷபூதனுக்கு—சேஷப்பட்ட ஆத்மாவுக்கு, ஸ்வரூபலாபமும் ப்ராப்யமும்— தன் ஸ்வரூபத்தை நிறம் பெறுவிப்பதும் அவனுக்கு முகோல்லாஸகரமுமாயிருக்கும்.

179. சேஷிக்கு அதிசயாவஹமல்லாத வஸ்துவுக்கு சேஷத்வமில்லாமையாலே, சேஷியான எம்பெருமானுக்குத் தன்னுடைய வ்ருத்தி விசேஷங்களாலே ப்ரீதி ரூபமான அதிசயத்தை விளைப்பது சேஷபூதனானவனுக்குத் தன் ஸ்வரூபலாபமுமாய், அவனுடைய முகோல்லாஸாநுபவத்துக்கு உறுப்பாயிருப்பதுபற்றி ப்ராப்யமுமாயிருக்கும்; ஆகையாலே இது நித்யமாக ப்ரார்த்திக்கத் தக்கது. ... ... (179)

**180. 'நம:' 181. கைங்கர்யத்தில் களையறுக்கிறது.**

நம:—கைங்கர்யத்தில் களையறுக்கிறது—நம: பதமானது கைங்கர்ய விரோதியைக் கழிக்கிறதாயிருக்கும்.

180. 181. இனி நம: பதத்திற்குப் பொருள் கூறப்படுகின்றது. நமச் சப்தமானது பொதுவாக அஹங்கார மமகாரங்களைக் கழிக்குமதாகையாலே திருமந்த்ரத்தில் நடுவிலுள்ள நமச் சப்தம் போலே ஸ்வரூபவிரோதி உபாயவிரோதி புருஷார்த்த விரோதி ஆக மூன்றையும் கழிக்க வல்லதாயிருந்ததேயாகிலும் இங்கு அப்படியல்லாமல் கைங்கர்ய ப்ரார்த்தனைக்கு அடுத்தபடியாகவுள்ள தாகையாலே இந்த கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது. ... ... ... ... (180, 161)

**182. களையாவது தனக்கென்னப் பண்ணுமது.**

களையாவது— (நம: பதத்தினால் கழிக்கப்படுகிற) கைங்கர்ய விரோதியாவதென்னென்னில், தனக்கென்னப்பண்ணுமது— தன்னுடைய ஆனந்தத்திற்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகை.

182. கைங்கர்யத்தைத் தன்னுடைய ரஸத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகையே இங்கு விரோதியாகும். அங்ஙனே நினைத்துப் பண்ணலாகாது. "பகவந்முகவிகாஸ ஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம்" என்கிற ப்ரதிபத்தியே நடக்கக் கடவது. இதில் தான் போக்தா என்கிற ப்ரதிபத்தியும தன்னுடையது என்கிற ப்ரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாகும். ... ... (182)

**183. இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்.**

இதிலே— (விரோதி நிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிற) இந்த நமஸ்ஸிலே, அவித்யாதிகளும் கழியுண்ணும்— அவித்யை கர்மம் ப்ரக்ருதிஸம்பந்தம் ஆகிற எல்லா விரோதிகளின் நிவ்ருத்தியும் விவக்ஷிதம்.

183. இன்னமும் இந்த கைங்கர்ய ப்ராப்திக்கு விரோதிகளானவையும் இந்த நமஸ்ஸிலே தள்ளுண்டுபோம். அவையாவன—கர்மோத்பத்திக்குக் காரணமாயிருந்துள்ள அவித்யை, அதன் கார்யமான கர்மங்கள், அதடியாகவரும் ப்ரக்ருதி ஸம்பந்தம் ஆகிய எல்லாம். ... ... ... (183)

**184. *உனக்கே நாமாள் செய்வோமென்னும் படியேயாகவேணும்.**

*உனக்கே நாமாள் செய்வோமென்னும்படியே யாகவேணும்— உனக்கே உகப்பாக நாங்களடிமை செய்யவேணுமென்கிற அத்யவஸாயமுண்டாக வேணும்.

184. ஆனாலும் நமஸ்ஸுக்கு ப்ரதானமான அர்த்தம் கைங்கர்யத்தில் ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தியாகையாலே அந்த அநுஸந்தானமே நெஞ்சில் அதிகமாகச் செல்லவேணும். கைங்கர்யம் பண்ணுமளவில் [*உனக்கே நாமாட் செய்வோம்*] உனக்குமெங்களுக்கு மாயிருக்குமிருப்பு தவிர்ந்து உனக்கே உகப்பாக நாங்கள் அடிமை

செய்யவேணும் என்கிறபடியே சேஷிக்கே உகப்பாகப் பண்ணவேணும். *தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே* என்று நம்மாழ்வாருமருளிச் செய்தார். ... (184)

185. ஸௌந்தர்யமந்தராயம்; கீழ்ச்சொன்னகைங்கர்ய முமப்படியே.

ஸௌந்தர்யம் அந்தராயம்—அவனுடைய வடிவழகிலீடுபடுகை கைங்கர்யத்திற்கு இடையூறாயிருக்கும். கீழ்ச்சொன்ன கைங்கர்யமும் அப்படியே— நம: பதார்த்தாநுஸந்தானம் கலசாத கைங்கர்யமும் அவத்யமே.

185. இந்த கைங்கர்யத்துக்கு விக்னங்களுண்டு. எம்பெருமானுடைய திருமேனி யழகும் சித்தாபஹாரியாய் கைசோரப் பண்ணுகையாலே கைங்கர்யத்துக்கு இடையூறாகும். இந்த நமஸ்ஸுக்குக் கீழே சதுர்த்தியில் சொன்ன கைங்கர்யமும் அபிமத விஷயத்தில் செய்யும் பணிவிடைபோலே தன்னுடைய ரஸத்துக்கு உடலாயிருக்கையாலே அவனுடைய முகமலர்த்தியையே புருஷார்த்தமாகக் கொள்ளக் கடமைப்பட்டவிவனுக்கு அதுவும் இடையூறுதான். ... ... ... ... (185)

186. கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே இப்பதத்தில் ப்ரார்த்தனையுமென்றுமுண்டு.

கைங்கர்யப்ரார்த்தனை போலே— கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பது நித்யமாய்ச் செல்லுவது போலே. இப்பதத்தில் ப்ரார்த்தனையும்—நமஸ்ஸிலாகும் விரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனையும், என்றுமுண்டு— பந்ததசையில் மாத்திரமன்றிக்கே முக்தி தசையிலுமுண்டு.

186. இப்படியாகையாலே இவ்விரோதி நிவ்ருத்தி பிரார்த்தனை இடைவிடாமல் நடக்கும். அதாவது—சதுர்த்தியில் சொல்லுகிற கைங்கர்ய பிரார்த்தனையானது ஏதோ வொருகாலுண்டாமதல்லாமல் நித்யமாய்ச் செல்லுமாபோலே இந்த நம: பதத்தில் சொல்லுகிற கைங்கர்ய விரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனையும் இங்கிருக்கும் காலத்தோடு பிராப்யபூமியில் போனகாலத்தோடு வாசியற எல்லாக் காலத்திலும் நடக்கக்கடவதா யிருக்கு மென்கை. ... ... ... (186)

187. *மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு* என்னு நின்றதிறே.

*மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு என்னு நின்றதிறே—நித்யஸூரிகள் பேசும் பாசுரமாக ஆழ்வா ரெடுத்துக் காட்டின பாசுரத்திலே இந்த விரோதி நிவ்ருத்திப்ரார்த்தனையும் காணலா யிருந்தது என்கை.

187. கந்தல் கழிந்த விடமான நித்யவிபூதியிலுங்கூட கைங்கர்யத்தில் ஸ்வபோக்த்ருத்வ பிரதிபத்தியாகிற விரோதி விளையுமோ வென்னில்; *மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்* என்று நம்மாழ்வார் அருளிச்செய்யுமது கண்டால், விஷய வைலக்ஷண்ய மடியாக வரும் ஸ்வபோக்த்ருத்வ புத்தி அங்கும் விளையுமென்று தெரியாநின்றதே. "நங்கள்போக மகிழ்ச்சிக்கு மருந்தே!" என்றன்றோ நித்யஸூரிகளும் சொல்லும் பாசுரம். "உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆனந்தத்துக்கு ஸ்வபோக்த்ருத்வ புத்தியை விளைவித்து ஸ்வரூபத்தை அழியாதபடி ஸாத்மிப்பிக்கும் பேஷஜமானவனே!" என்பது பாசுரத்தின் பொருள். இதனால் பரமபதத்திலும் நமஸ்ஸின் அநுஸந்தானத்திற்கு ப்ரஸக்தி யுண்டென்பது காட்டப்பட்டது. ... ... ... (187)

த்வயப்ரகரணம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

# முமுக்ஷுப்படி—சரமச்லோகப்ரகரணம்.

188. கீழே சில உபாயவிசேஷங்களையுபதேசிக்க, அவை துச்சகங்களென்றும் ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்து சோகாவிஷ்டனான அர்ஜுனனைக்குறித்து அவனுடைய சோக நிவ்ருத்த்யர்த்தமாக இனி இதுக்கவ்வருகில்லை யென்னலாம்படியான சரமோபாயத்தை யருளிச்செய்கையாலே சரமச்லோகமென்று இதுக்குப் பேரா யிருக்கிறது.

## சரமச்லோகார்த்த ஸாரஸங்க்ரஹம்.

(அவ.) கீழே த்வயார்த்தம் விவரிக்கப்பட்டது. அந்த த்வயத்தில் பூர்வவாக்யத்தினால் உபாயவரணமன்றோ சொல்லப்படுகிறது. அதனை ஸர்வேச்வரன் தானே விதிக்கிறானதலால் அது அவனுக்கு அபிமதமாயிருக்கும் என்பதுதான் கீதையில் ஸாரமான *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:* என்கிற ச்லோகத்தினால் நன்கு விளங்குவதால் இந்த ச்லோகத்தை நம்முன்னோர்கள் மூன்றாவது ரஹஸ்யமாக அநுஸந்திக்க நியமித்தருளினார்கள். இந்த ச்லோகத்தில் சரணவரணம் ஸர்வேச்வரனாலேயே விதிக்கப்படுகிறதென்பது மாத்திரமேயல்ல; வரணத்திற்கு அங்கமான உபாயாந்தர பரித்யாகமும், வரணத்தில் உபாயத்வ புத்தியைத் தவிர்த்தலும், ப்ராப்தி ப்ரதிபந்தக ஸகல பாபவிமோசனமுமாகிய இவையும் பிரதிபாதிக்கப்படுகையால் இந்த ச்லோகம் த்வயத்திற்கு விவரணமாயுமுள்ளது. பஞ்சம வேதஸாரமான கீதோபநிஷத்தின் தாத்பர்ய ஸாரமாயுமுள்ளது. இந்த ச்லோகத்தின் அர்த்தம் கேட்கைக்காகவே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளினதாக ஸம்பிரதாயம். நம்பிதாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகள் இல்லாமையையும் பார்த்து எம்பெருமானாருடைய ஆஸ்திக்யத்தையும் ஆதரத்தையும் பரீக்ஷிக்கைக்காகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி மாஸோபவாஸங்கொண்டு ப்ரதிஜ்ஞையும் பெற்றுக்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்ததாகவும் ப்ரஸித்தம்.

188. இதற்கு சரம ச்லோகமென்று எதனால் திருநாமமாயிற்றென்னில்; சரமமான உபாயத்தைப் பிரதிபாதிக்கும் ச்லோகம் சரமச்லோகம் என்று விவக்ஷிதம். இந்த ச்லோகத்துக்குக் கீழே பல அத்யாயங்களிலே கருமயோகம் ஞானயோகம் முதலிய சில உபாய விசேஷங்களை மோக்ஷஸாதனமாக விரிவாய் உபதேசித்தருளினான் கண்ணபிரான்; அதைக்கேட்ட அர்ஜுனன் அவை அநுஷ்டிக்க எளியனவல்லவென்றும், பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வ ப்ரயத்ந ரூபங்களான இவை விரோதிகளென்றும் நினைத்து 'இவற்றாலே எம்பெருமானைப் பெறுவதென்று ஒன்றுண்டோ; இனி இழந்தே போமித்தனை' என்று சோகித்து நின்றான். அன்னவனைக்குறித்து அவனுடைய அந்த சோகம் போகைக்காக, அநுஷ்டிக்கவெளிதாய் ஸ்வரூபாநுரூபமான இந்த சரமோபாயம்

அருளிச்செய்யப்பட்டதாகையாலே, சரமோபாய ப்ரதிபாதகமான ச்லோகம் சரமச்லோகம் என்று கொண்டு வழங்கலாயிற்று. (சாகபார்த்திவபதம் போலே மத்யம லோபி ஸமாஸ மென்க.) ... ... ... ... (188)

**189. இதில் பூர்வார்த்தத்தாலே அதிகாரிக்ருத்யத்தை அருளிச்செய்கிறுன். உத்தரார்த்தத் தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறுன்.**

189. இந்த ச்லோகமானது பூர்வார்த்தமென்றும் உத்தரார்த்தமென்றும் இரண்டு படியாக வகுப்புண்டிருக்கும். இவ்வுபாயத்துக்கு அதிகாரியானவன் செய்யவேண்டுமது பூர்வார்த்தத்தாலே சொல்லப்படுகிறது; உபாயபூதனுன ஸர்வேச்வரன் இவனுக்குச் செய்யுமது உத்தரார்த்தத்தாலே சொல்லப்படுகிறது. ... (189)

**190. அதிகாரிக்கு க்ருத்யமாவது உபாயபரிக்ரஹம்.**

190. அதிகாரியானவன் செய்யவேண்டுமது இவ்வுபாயத்தை ஸ்வீகரிப்பதேயாகும்; (அதுதான் பூர்வார்த்தத்தால் பிரதிபாதிக்கப்படுகிறதென்க.) ... (190)

**191. அத்தை ஸாங்கமாக விதிக்கிறுன்.**

191. ஆனுல் அந்த உபாய ஸ்வீகாரத்தை மாத்திரம் சொல்லாதே *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்று உபாயாந்தரங்களை விடுகையும் சொல்லப்படுகிறதே, அது எதற்காக வென்னில்; அங்கியான உபாய ஸ்வீகாரத்திற்கு அங்கமும் சொல்லப்படவேண்டுகை யாலும் உபாயாந்தர பரித்யாகமே அங்கமாகையாலும் அந்த அங்கத்தோடேகூட விதிக்கிறபடி. ஆசமனம் முதலியவற்றுக்கு அங்கமாகச்சொன்ன கைகாலலம்புகை முதலானவற்றையொழிய அவை (ஆசமநாதிகள்) அனுட்டிக்கவொண்ணுதாப்போலே இங்கும் அங்கமாகச் சொல்லுகிற உபாயாந்தரபரித்யாகத்தையொழிய சரணவரணம் ஆகாதென்பது தேறிற்று. ... ... ... (191)

**192. ராகப்ராப்தமான உபாயந்தானே வைதமானுல் கடுகப் பரிக்ரஹிக்கைக்கு உடலா யிருக்குமிறே.**

192. இந்த சரணவரணமானது அனுட்டிக்கவெளிதானபோதே ராகப்ராப்தமாய் வருமன்றே; இதுக்கு விதி வேணுமோவென்னில்; ராகப்ராப்தமானதுக்கு விதியும் ஏற்பட்டால் விரைந்து பற்றுகைக்கு உடலாகுமன்றே. ... (192)

**193. இதில் பூர்வார்த்தம் ஆறு பதம்.**

**194. ஸர்வ தர்மாந்.** 195. **எல்லா தர்மங்களையும்.**

**196. தர்மமாவது பலஸாதநமாயிருக்குமது.**

**197. இங்குச் சொல்லுகிற தர்மசப்தம் த்ருஷ்டபலஸாதநங்களைச் சொல்லுகையன்றிக்கே மோக்ஷபலஸாதநங்களைச் சொல்லுகிறது.**

193—197. இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தமானது ஆறு பதங்களைக்கொண்டது. அவற்றுள் முதற்பதமான **'ஸர்வதர்மாந்'** என்பதற்கு 'எல்லா தர்மங்களையும்' என்று பொருள். ஒரு பலனுக்கு ஸாதனமாயிருக்குமது எதுவோ அதுவே தருமமெனப்படுவது. மோக்ஷோபாயங்களை உபதேசித்துவருகிற ப்ரகரணமாகையாலே இவ்விடத்திலுள்ள தர்ம

சப்தமானது—ஐஹிகமாயும் ஸ்வர்க்காதி ஆமுஷ்மிகமாயுமிருந்துள்ள த்ருஷ்டபலன்களுக்கு ஸாதனங்களானவற்றைச் சொல்லுகையன்றியே பகவத் ப்ராப்திரூபமான மோக்ஷபலத்துக்கு ஸாதனமாயுள்ளவற்றைச் சொல்லுகிறது.

**198. அவைதான் ச்ருதிஸ்ம்ருதிவிஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசந ப்ரயோகம் பண்ணுகிறது.**

198. அந்த மோக்ஷபலஸாதனங்கள் ச்ருதிகளாலும் ஸ்ம்ருதிகளாலும் விதிக்கப்பட்டவையாய்க்கொண்டு அநேகங்களாயிருக்கையாலே (**தர்மாந்**) என்று பஹுவசநமுள்ளது. ... ... ... (198)

**199. அவையாவன - கர்மஜ்ஞான பக்தியோகங்களும் அவதாரரஹஸ்யஜ்ஞாநம் புருஷோத்தம வித்யை தேசவாஸம் திருநாமஸங்கீர்த்தநம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை தொடக்கமான உபாயபுத்த்யா செய்யுமவையும்.**

199. அவை எவையென்னில்; ***கர்மணைவ ஹி ஸம்ஸித்திம்*** இத்யாதிகளால் ஸ்வதந்த்ரஸாதநமாகச் சொல்லப்பட்ட கர்மயோகமும், ***ஸர்வம் கர்மாகிலம் பார்த்த! ஜ்ஞாநே பரிஸமாப்யதே*** என்று சொல்லப்பட்ட கர்ம ஸாத்யமான ஜ்ஞாநயோகமும், ***மந்மநா பவ மத்பக்த:*** இத்யாதிகளாலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாந ஸஹக்ருதமான பக்தியோகமுமாகிற இவையும், ***ஜந்ம கர்ம ச மே திவ்யம்*** இத்யாதிகளால் பகவத் ப்ராப்திக்கு ஸாதனமாகச் சொல்லப்பட்ட அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், ***ஏதத் புத்த்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச் ச பாரத*** என்றவிடத்துச் சொல்லப்படுகிற புருஷோத்தம வித்யை, ***தேசோயம் ஸர்வகாமதுக்*** என்று சொல்லும் புண்ய க்ஷேத்ரவாஸம், ***ஸர்வபாப விசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்*** என்று பகவத் ப்ராப்திஸாதநமாகச் சொல்லப்படுகிற திருநாமஸங்கீர்த்தனம், திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முதலாக ஸாதநபுத்தியோடு செய்யப்படுமவையும் இங்கு (**தர்மாந்**) என்பதனாலே விவக்ஷிதங்கள். ... ... (199)

**200. ஸர்வசப்தத்தாலே அவ்வவ ஸாதநவிசேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்ய கர்மங்களைச் சொல்லுகிறது.**

200. பஹுவசநமே போதுமாயிருக்க, தர்ம சப்தத்திற்கு விசேஷணமாக ஸர்வசப்தமுமொன்று இருக்கிறதே, இதனால் சொல்லுகிறது என்னென்னில்; பஹுவசநத்தால் சொல்லப்பட்ட அந்தந்த உபாய விசேஷங்களை அனுஷ்டிக்குமளவில் அவற்றுங்கு யோக்யதாபாதகங்களான ஸந்தியாவந்தந பஞ்ச மஹாயஜ்ஞாதிகளான நித்யகருமங்கள் ஸர்வ சப்தத்தால் விவக்ஷிதங்களென்க. ... (200)

**201. ஆக ச்ருதிஸ்ம்ருதி சோதிதங்களாய் நித்யநைமித்திகாதிரூபங்களான கர்மயோகாத்யுபாயங்களை யென்றபடி.**

201. ஆக **ஸர்வதர்மாந்** என்பதற்குத் தேறின பொருள் யாதென்னில்; ச்ருதிஸ்ம்ருதிகளாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய் நித்யம் நைமித்திகம் முதலானவற்றை வடிவாகவுடைத்தான கர்மயோகம் முதலான உபாயங்களை என்றதாயிற்று. ... ... ... (201)

**202. இவற்றை தர்மமென்கிறது ப்ரமித்த அர்ஜுனன் கருத்தாலே.**

202. ஸ்வரூப விருத்தமாகையாலே அதர்மமென்று சொல்லவேண்டுமிவற்றை தர்மமென்கிறது எதனுலென்னில்; ஸ்வதர்மமான யுத்தத்தை அதர்மமென்றும் இவற்றை தர்மமென்றும் ப்ரமித்த அர்ஜுனனுடைய நினைவாலேயாம். ... (202)

**203. பரித்யஜ்ய. 204. த்யாகமாவது உக்தோபாயங்களை அநுஸந்தித்து சுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப்போலேயும் விபரீததிசாகமனம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினேமென்கிற புத்தி விசேஷத்தோடே த்யஜிக்கை.**

203, 204. இனி பரித்யஜ்ய பதத்திற்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. த்யாகமாவது விடுகை. இவ்விடத்திற்சொல்லுகிற த்யாகமாவது வெறும் விடுகையன்று. கீழ்ச் சொல்லப்பட்ட உபாயங்களின்படியை நன்கு நோக்கி, வெள்ளியல்லாததொரு சிப்பியிலே வெள்ளியென்கிற புத்தியைப் பண்ணுவாரைப்போலேயும், ஒரு திக்கிலே போக விரும்பி வேறொரு திக்கை அதுவாக நினைத்துப் போவாரைப்போலேயும்—பகவத் ப்ராப்திக்கு உபாயத்தை விரும்புகின்ற நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயபுத்தி பண்ணினேமே! என்கிற அநுதாப புத்தி விசேஷத்தோடே விடுகை.

**205. பரியென்கிற உபஸர்க்கத்தாலே பாதகாதிகளை விடுமாபோலே ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடும்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது.**

205. பரி என்கிற வுபஸர்க்கம் மிகுதிக்கு வாசகமாய்க்கொண்டு இங்குத் தெரிவிப்பதென்னவென்றல், ப்ரஹ்மஹத்யை ஸுராபானம் முதலிய பாதகங்களையும் மற்றும் நிஷித்தமானவற்றையும் விடுமளவில், அவற்றில் மறுபடியும் அந்வயிப்பதற் குறுப்பான ருசிவாஸனைகள் கூட இல்லாதபடி வெள்கி விடுமாபோலே, உபாயாந்தரங்களை விடுமளவில் மீளவும் அவற்றில் அந்வயம் வாராதபடி விடவேணுமென்பது தெரிவிக்கப்படுகிறது. ... ... ... (205)

**206. ல்யப்பாலே *ஸ்நாத்வா புஞ்ஜீத* என்னுமாபோலே உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணுமென்கிறது.**

206. ......த்யஜ்ய என்கிற ல்யப்பாலே ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹிக்குமளவில் த்யாஜ்யமான உபாயாந்தரங்களைவிட்டே பரிக்ரஹிக்கவேணுமென்கிற நியமம் காட்டப்படுகிறது. ... ... ... (206)

**207. *சசர்ஜ சாபம் ச முமோச வீர:* என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்கட்டென்கிறது.**

207. இப்படி விட்டே பற்றவேணுமென்கிற நியமம் என்னென்னில்; உபாயாந் தரங்களான இவற்றிலே சிறிது அந்வயம் கிடந்தாலும் இவை பேற்றுக்கு ஸாதநமாகாத மாத்திரமன்றிக்கே பேற்றுக்குப் பிரதிபந்தகமாயும் நிற்கும். இதற்கொரு த்ருஷ்டாந்த முண்டு; இராவணன் ராமசரங்களாலே மிகவும் நொந்து நிலைகலங்கி எதிரம்பு கோக்க முடியாமே நின்றான்; அப்போதும் ராமபாணங்கள் மேன்மேலும் விழுந்துகொண்டிருந்தன. தரும யுத்தஞ் செய்யுமிராமன், நாம் அம்புவிடாமலிருக்கவும் தான் அம்புகளை விடுவதற்கு

என்ன காரணமென்று இராவணன் சிந்தித்தான்; தன் கையில் வில் இருப்பதுதான் காரணமென்று தெரிந்துகொண்டு பிறகு அந்த வில்லையும் பொகட்டான். அப்போது பெருமாள் பாணப்ரயோகத்தை நிறுத்தி அவனுக்கு விடை கொடுத்தனுப்பினர் என்று ஸ்ரீ ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. இராவணன் பொகட்ட அந்த வில் அவனது கையிலிருந்தபோது எதிரியை வெல்வதற்கு ஸாதநமாகாமலிருந்தவளவே யனறிக்கே தன்னைப் பெருமாள் வாட்டுவதற்கும் ஹேதுவாயிருந்தது. ***கச்சாநுஜாநாமி*** (இராவணா! புறப்பட்டுப் போ; விடைதருகிறேன்) என்கிற திருவாக்கு அப்போது அவதரிக்காமல் வில்லைப் பொகட்ட பின்பே அவதரித்தமையால் அந்த வில்லே இராவணனுக்குக் கால்கட்டாயிருந்ததென்று தெளிவாயிற்று. அதுபோலவேயாம் உபாயாந்தரங்களும். உபாயாந்தரப்பற்று உள்ளவரையில் பகவதநுக்ரஹம் அவகாசம் பெறுதென்றவாறு. ... ... ... (207)

**208. சக்ரவர்த்தியைப்போலே இழங்கைக்குறுப்பு.**

208. உபாயாந்தரங்களில் அங்வயம் இழவுக்கு உடலாம் என்பதை மற்றொரு த்ருஷ்டாந்தத்தாலும் அறியலாம். தசரத சக்ரவர்த்தியானவன் ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப்பற்றி நின்றமை யாலன்றோ பெருமாளோடே கூடிவாழவிருந்த பேற்றை இழந்தான். ***ராமோ விக்ரஹவாந் தர்ம:*** என்கிற ஸித்ததர்மமான பெருமாளைப்பற்றி ஆபாஸதர்மமான ஸத்யவசனத்தை தசரதன் விட்டிருக்கவேண்டுமன்றோ. 'முன்பே வரம் கொடுத்துவைத்து இப்போதாக மறுக்கவொண்ணாது' என்று ஆபாஸமான ஸத்யதர்மத்தைப்பற்றி நின்றமையாலன்றோ பெருமாளையிழந்தான். அதுபோலே, ஆபாஸமான உபாயாந்தரங்களிலே அங்வயித்து நிற்கையானது ***க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்*** என்று ஸநாதநதர்மமான பகவத் விஷயத்தோடே கூடிவாழுகையாகிற பேற்றை இழப்பதற்கு உறுப்பாய்விடும். ... ... (208)

**209. ஸர்வதர்மங்களையும்விட்டு என்று சொல்லுகையாலே சிலர் அதர்மங்கள் புகுருமென்றார்கள்.**

**210. அது கூடாது; அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே.**

**211. தன்னடையே சொல்லிற்றாகாதோவென்னில்.**

**212. ஆகாது; தர்மசப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே.**

**213. காட்டினாலும் அத்தையொழிந்தவற்றைச் சொல்லிற்றுமித்தனை.**

**214. தன்னையுமீச்வரனையும் பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை.**

209—214. இங்குச் சொன்ன ஸர்வதர்ம பரித்யாகத்தின் கருத்தறியாதார் சிலர் சொல்லும் தூஷணமொன்றுண்டு; (அதாவது—) 'இதைச் செய், இதைச் செய்யாதே' என்று விதி நிஷேத விஷயமாகவன்றோ தர்மமிருப்பது; இங்கு 'ஸர்வதர்மங்களையும்விட்டு' என்று சொல்லுகையாலே விஹிதங்களானவற்றின் அநுஷ்டானத்தை விடுவதுபோலவே நிஷித்த பரிஹாரத்தையும் விடவேண்டிவருமாகையாலே, நிஷித்த பரிஹாரத்தை விடுவதாவது நிஷித்தங்களைச் செய்வதேயாதலால் அதர்மங்களான நிஷித்த ப்ரவ்ருத்திகளை அனுமதித்ததாயிற்று என்று தூஷணம் சொல்லுவர்கள். இந்த தூஷணம் ஏறாது. ஸர்வதர்மங்களையும் விடச்சொன்னவித்தால் அதர்மங்கள் புகுருமென்கிறவிது ஸம்பவிக்க

மாட்டாது. தர்மங்களை விடச்சொன்ன மாத்திரமொழிய அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே, அதேன்? அதர்ம நிவ்ருத்தியும் தர்மசப்தவாச்யமாகையாலே 'தர்மத்தைவிடு' என்றால் அதர்ம நிவ்ருத்தியைவிடு என்றதாகாதோ? ஆகவே அதர்மத்தைச் செய்யென்னுமிடம் அர்த்தாத் ஸித்தமாகமாட்டாதோவென்னில்; மாட்டாது. தர்மங்களை விடச்சொன்னவித்தால் அதர்மங்களைச் செய்யென்னுமிடம் தன்னடையே சொல்லிற்றாகாது; தர்மசப்தமானது அதர்ம நிவ்ருத்தி முதலிய அங்கங்களோடு கூடினதாய் ப்ரதாநமாயிருந்துள்ள விஹிதாநுஷ்டானத்தைக் காட்டுமதொழிய, பொதுவிலே அதர்ம நிவ்ருத்தி மாத்திரத்தைக் காட்டாதாகையாலே. நநு, அதர்மநிவ்ருத்திக்கு தர்மசப்த வாச்யத்வம் முக்கியமாகவில்லையேயாகிலும் இங்கு ஸர்வசப்தம் கூடியிருக்கையாலே, தர்மசப்தமானது விசேஷண பூதமான அதர்ம நிவ்ருத்தியையும் காட்டாதோவென்னில்: அப்படி காட்டிற்றாகிலும் அது இவ்விடத்தில் விவக்ஷிதமல்லாமையாலே அது தவிர்ந்த விஹிதாநுஷ்டாந ரூப தர்மங்களானவற்றைச் சொல்லிற்றுமித்தனை. எதைக்கொண்டு இப்படி யொதுக்குகிறதென்னில், தன்னைப் பார்த்தாலும் ஈச்வரனைப் பார்த்தாலும் பலனைப் பார்த்தாலும் அந்த அதர்மங்கள் புகுர வழியில்லை. அதர்மங்களைச் செய்வது எம்பெருமானுக்கு அநிஷ்டமாகையாலே அவனுக்கு அநிஷ்டம் செய்யக்கடவனல்லாத தன்னைப் பார்த்தாலும் அவை புகுர வழியில்லை. இத்தலையில் ஸ்வயத்ந நிவ்ருத்தியைத் தவிர ப்ரவ்ருத்தியாக ஒன்றையும் பொறாத ஈச்வரனைப் பார்த்தாலும் அந்த அதர்ம ப்ரவ்ருத்திகள் புகுர வழியில்லை. இவனுடைய ப்ரவ்ருத்திக்குப் பலன் அவனுடைய ப்ரீதியாகையாலே அந்தப் பலனைப் பார்த்தாலும் அதற்கு இடையூறான அதர்மப்ரவ்ருத்தி புகுர வழியில்லையென்க. ஆகையால் தர்மசப்தம் அதர்மநிவ்ருத்தியைக் காட்டிற்றாகிலும் இது தள்ளுண்டதாகக் கடவது. ... ... (209-214)

**215. மாம். 216. ஸர்வரக்ஷகனாய் உனக்குக் கையாளாய் உன்னிசைவு பார்த்து உன் தோஷங்களை போக்யமாகக்கொண்டு உனக்குப் புகலாய், நீர் சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.**

**217. இத்தால் பரவ்யூஹங்களையும் தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது.**

215—217. இனி மாம் என்கிற மூன்றாவது பதத்திற்குப் பொருள் விவரிக்கப் படுகிறது. எல்லாரையும் ரக்ஷிப்பதிலே தீக்ஷிதனாய், உனக்கு இஷ்டமானபடி ஏவிக் காரியம் கொள்ளலாம்படி கையாளாய், ரக்ஷ்யபூதனான உன்னுடைய இசைவுபார்த்து உன் குற்றங்களுக்கு நீ அஞ்சவேண்டாதபடி அவற்றையே பச்சையாகக்கொண்டு உனக்குப்புகலாய், *தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்* என்கிறபடியே புருஷகாரம் செய்யக்கடவ பிராட்டியே குற்றத்தைக்காட்டி அகற்றப் பார்க்குமிடத்திலும் விடமாட்டாதே *என்னடியார் அது செய்யார்* என்று மறுதலைத்து ஒருதலை நின்று ரக்ஷிக்குமவனான என்னையென்றபடி. அவதரித்துக் கண்ணுக்கிலக்காய் அணுகி நிற்கிற விபவரூபனான தன்னை மாமென்று குறிப்பிட்டு வரணீயனாகச்சொன்னவித்தாலே—தேச விப்ரகர்ஷத்தாலே காணவும் கிட்டவுமொண்ணாதபடியிருக்கிற பரவ்யூஹங்களையும், அஸாதாரண விக்ரஹ யுக்தமல்லாமல் உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேச்யமாயிருக்கிற அக்நீந்த்ராதி தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது. அவற்றிற்காட்டிலுமுண்டான வாசியைக் காட்டுகிறதென்றபடி. ... ... (215-217)

**218. தர்மஸம்ஸ்தாபனம் பண்ணப்பிறந்தவன்தானே ஸர்வதர்மங்களையும் விட்டென்னைப் பற்றென்கையாலே ஸாக்ஷாத்தர்மம் தானே யென்கிறது.**

218. ***தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி*** என்று தர்மங்களை ஸ்தாபிப்ப தற்காக வந்து பிறக்கிறேனென்று சொல்லிப் பிறந்தவன் தானே இங்கு மோக்ஷஸாதன மாக சாஸ்த்ரஸித்தங்களான எல்லா தர்மங்களையும்விட்டுத் தன்னைப்பற்றச்சொல்லுகை யாலே ஒரு அர்த்த விசேஷம் பலிக்கின்றது அதாவது—அவை ஸாக்ஷாத் தர்மங்களன்று; ஸ்தாபநீயமான ஸாக்ஷாத் தர்மம் தானே என்று தெரிவிப்பதாம். ... (218)

**219. இத்தால், விட்ட ஸாதனங்களிலேற்றம் சொல்லுகிறது.**

**220. அதாவது—ஸித்தமாய் பரமசேதனமாய் ஸர்வசக்தியாய் நிரபாயமாய் ப்ராப்யமாய் ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை.**

**221. மற்றையுபாயங்கள் ஸாத்யங்களாகையாலே ஸ்வரூபஸித்தியில் சேதனனை யபேக்ஷித்திருக்கும். அசேதனங்களுமாய் அசக்தங்களுமாயிருக்கையாலே கார்யஸித்தியில் ஈச்வரனை யபேக்ஷித்திருக்கும். இந்த வுபாயம் அவற்றுக்கெதிர்த்தட்டாயிருக்கை யாலே இதர நிரபேக்ஷமாயிருக்கும்.**

219—221. இப்படிச் சொன்னவித்தால் கீழேவிட்ட ஸாதனங்களிற்காட்டில் இந்த ஸாதனத்துக்கு உண்டான ஏற்றம் சொல்லுகிறது. அதாவது என்னென்னில்; அந்த தர்மங்களானவை சேதநப்ரவ்ருத்தியாலே ஸாதிக்கப்படுமவையாகையாலே தம் ஸ்வரூபம் சேதநனாலே ஸித்திக்கவேண்டும்படியிருக்கும்; இது ஸநாதந தர்மமாகையாலே ஸித்தமாயிருக்கும். அவை அறிவும் ஆற்றலுமற்றிருக்கும். இது ஸர்வஜ்ஞவிஷயமாகை யாலே பரம சேதநமாய் ஸர்வ சக்தியாயிருக்கும். அவை சேதந ஸாத்யமாய் நடுவே அபாயங்கள் புகுகைக்கு அவகாசம் பெற்றிருக்கும்; இது ஸித்த வஸ்துவாகையாலே நிரபாயமாயிருக்கும். அவை பரதந்த்ரனான இச்சேதநனுடைய ஸ்வரூபத்துக்கு அப்ராப்தமா யிருக்கும். இது ப்ராப்தமாயிருக்கும். அவை அசேதநத்வாதிகளாலே ஸஹாயாந்தரஸா பேக்ஷமாயிருக்கும்; இது பரமசேதநத்வாதிகளாலே ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கும்.

**222. இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யங்களாகிற குணவிசேஷங்கள் நேராக ப்ரகாசிக்கிறது.**

222. இந்த மாம் என்கிற பதத்திலே ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களான குண விசேஷங்களெல்லாம் விளங்கும். அவையாவன: வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும். அதர்ம புத்தியாலே தர்மத்தில் நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநனுக்கு குற்றம் பாராதே அர்த்தங்களையெல்லாம் அருளிச்செய்கையாலே வாத்ஸல்யம் பிரகாசிக்கிறது; தன்னுடைய பரத்வத்தைப் பலகாலுமருளிச்செய்த மாத்திரமன்றிக்கே அர்ஜுநன் நேரே காணும்படி பண்ணுகையாலே ஸ்வாமித்வம் பிரகாசிக்கிறது. *ஹே க்ருஷ்ண ஹே யாதவ !* என்று அர்ஜுநன் தானே சொல்லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே ஸௌசீல்யம் பிரகாசிக்கிறது. அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கிலக்காம்படி பண்ணுகையாலே ஸௌலப்யம் பிரகாசிக்கிறது.

**223. கையுமுழவுகோலும் பிடித்த சிறுவாய்க்கயிறும் ஸேநா தூளி தூஸரிதமான திருக்குழலும் தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை மாமென்று காட்டுகிறுன்.**

223. இவையெல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு மிகவும் அபேக்ஷிதம் ஸௌலப்யமாகையாலே அவதாரப்ரயுக்தமான ஸௌலப்யமேயல்லாமல் ஸாரதியாயும் நிற்கிற ஸௌலப்யாதிசயம் மாமென்று உறுத்திக் காட்டப்படுகிறது. குதிரைகளை நடத்துகைக்காகத் திருக்கையிலே பிடித்த உழவுகோலும் சிறுவாய்க்கயிறும், திருமுடியில் ஒன்றும் அணியாமல் நிற்கையாலே சேனைத்துகளாலே புழுதிபடைத்த திருக்குழலும், சாத்தின சிறு சதங்கையுடனே தேருக்குக் கீழே தொங்கவிட்ட திருவடிகளுமாய் நிற்கிற ஸாரதிவேஷத்தை மாமென்று காட்டுகிறுனென்க. ... (223)

**224. ஏகம். 225. இந்த ஏகசப்தம் ஸ்தானப்ரமாணத்தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது. 226. *மாமேவ யே ப்ரபத்யந்தே* தமேவ சாத்யம் *த்வமேவோபாய பூதோ மே பவ* ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந் தொழிந்தாய் என்றும் சொல்லுகிறபடியே.**

**227. இத்தால் 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது.**

224—227. இனி ஏகம் என்கிற நான்காவது பதத்திற்குப் பொருள் விவரிக்கப் படுகிறது. இவ்வுபாய விசேஷத்தைச் சொல்லுமிடங்களில் பலவிடங்களிலும் *மாமேவ யே ப்ரபத்யந்தே* என்பது முதலானவிடங்களில் அவதாரண ப்ரயோகமுண்டாகையாலே உகாரம்போலே இந்த ஏக சப்தமும் ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணமாகிற பொருளைக் காட்டுகிறது. இந்த அவதாரணத்தினுல் எது வ்யாவர்த்திக்கப்படுகிறதென்னில்; உபாயாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறதென்னில் புநருக்தி ப்ரஸங்கிக்கையாலும், தேவதாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறதென்னில் மாம் என்று அஸாதாரணாகாரத்தைச் சொல்லுகையாலே அந்த வ்யாவ்ருத்தி கீழே ஸித்தமாகையாலும் இந்த அவதாரணத்தால் வ்ரஜ என்று மேலே சொல்லுகிற சரணவரணத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது. இந்த ஸ்வீகார முண்டானுல் பேறு; இல்லையாகில் இழவு என்று அந்வயவ்யதிரேகங்களாலே இதில் ஸாதநத்வ புத்தி நடையாட ப்ரஸக்தியுண்டாகையாலே இதின் ஸாதநத்வம் அவச்யம் கழிக்கப்படவேணுமன்றே. ... ... (224-227)

**228. ஸ்வீகாரந்தானும் அவனுலே வந்தது.**

228. அந்வய வ்யதிரேகங்களாலே உபாயமென்று திண்ணமாகத் தோற்றுகிற ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடிதான் எங்ஙனேயென்னில்; ஸ்வீகாரமான பிறகு இவனுக்கு அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் பண்ணுகை அவனுலேயானுப் போலே, அதற்குமுன்னம் நேருகின்ற ஸ்வீகாரந்தானும் அவனுலேயுண்டாமது என்பதே பரமார்த்தம். ஆகவே ஸ்வீகாரம் உபாயகார்யமேயொழிய உபாயமன்றென்க. (228)

**229. ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்.**

229. ஸ்வீகாரம் அவனுலே வருகையாவதென்னென்னில்; கரணகளேபரங்க ளொன்று மின்றிக்கே அசித்துப்போலே கிடக்கிற தசையிலே கரணகளேபரங்களைக்

கொடுத்து ஸ்ருஷ்டிபண்ணி *எதிர் சூழல்புக்கு* என்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அவன் அநேகாவதாரங்களைப்பண்ணி, அவதரித்தவிடங்களிலே ஆச்ரயிப்பதில் ருசிவிச்வாஸங்களை விளைப்பதான தன் குணசேஷ்டிதம் முதலியவற்றைப் பிரகாசிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்ததன்றோ இந்த ஸ்வீகாரம். ஆகையாலே இது அவனாலே வந்ததென்னத் தட்டுண்டோ? ... (229)

230. ***அதுவு மவனதின்னருளே*.**

230. இவ்வர்த்தத்தில் ப்ரமாணமுண்டோவென்னில்; *அதுவுமவனதின்னருளே* என்கிற அருளிச்செயலே ப்ரமாணம். *உணர்விலும்பரொருவனை அவனதருளாலுறல் பொருட்டு என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்* என்று ஆழ்வார் தம்முடைய ஸ்வீகாரத்தை யருளிச்செய்தவுடனே *அதுவுமவன தின்னருளே* என்று அந்த ஸ்வீகாரந்தானும் அவனுடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயுண்டானதென்று அருளிச்செய்கையாலே ஸ்வீகாரமும் அவனுடைய க்ருஷிபலமென்றே கொள்ளவேணுமென்கை.

231. **இத்தையொழியவும் தானே கார்யம் செய்யுமென்று நினைக்கக் கடவன்.**

232. **அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது.**

233. **இது ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தம்; புத்தி ஸமாதாநார்த்தம் சைதந்யகார்யம் ராகப்ராப்தம் ஸ்வரூபநிஷ்டம் அப்ரதிஷேதத்யோதகம்.**

231—233. இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே க்ருஷி பண்ணுவானொருவனாகை யாலே அவன் இதுக்காகவன்று நமக்குக் காரியம் செய்கிறது. இது இல்லாமற்போனாலும் இவ்வாத்மாவை உய்விப்பதிலே நோக்குடையனான தானே நம்முடைய இஷ்ட ப்ராப்தி அநிஷ்ட பரிஹாரரூபமான காரியத்தைச் செய்வனென்று நினைக்கவேண்டும். இப்படி நினைக்காவிடில் [அதாவது—நம் ஸ்வீகாரமில்லையானாலும் காரியம் செய்வனென்று நினையாதே அவன் காரியம் செய்கைக்கு இதுவும் வேணுமென்று நினைக்குமளவில்] ஸித்தோபாயமானது ஒரு ஸஹாயத்தையும் எதிர்பாராததென்கிற பெருமை குலைந்ததாகும். ஆனால் இந்த ஸ்வீகாரந்தான் ஏதாவதென்னில்; [**இது ஸர்வ முக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தம்**] இத்தலையில் ஒன்றுமேயில்லாமல் ஈச்வரன் தானே காரியம் செய்யுமளவில் பின்னையெல்லோரும் முக்தராகவேண்டாவோவென்கிற ஸர்வமுக்தி ப்ரஸங்கத்தின் பரிஹாரத்துக்கு உறுப்பு, [**புத்தி ஸமாதாநார்த்தம்**] 'நெடுங்காலம் நம்மை ரக்ஷியாதவன் இன்று நம்மை ரக்ஷிப்பனென்று நாம் எதைக்கொண்டு விச்வஸித்திருப்பது' என்று இவன் தளும்பாமல் புத்தி ஸமாதானம் பிறந்திருக்கைக்கு உறுப்பு. [**சைதந்ய கார்யம்**] இவன்தான் அசேதநமல்லாமல் சேதநனாகையாலே அவனே உபாயமென்கிற இந்த அத்யவஸாயம் இவனது சைதந்ய கார்யமாக வந்ததத்தனை. [**ராகப்ராப்தம் ஸ்வரூப நிஷ்டம்**] விதிப்ரயுக்தமாகவல்லாமல் இதில் ரஸமறிந்த இவனுடைய ராகத்தாலே விளைந்தவிது ஸ்வரூபத்திற்காட்டில் வேறுபட்டதன்றிக்கே ததேகரக்ஷ்யத்வரூபமான ஸ்வரூபத்திலே நிற்குமது. [**அப்ரதிஷேதத்யோதகம்**] நெடுங்காலமாக இவன் ஸ்வப்ரவ்ருத்திகளாலே, அவன் செய்யும் ரக்ஷணத்தை விலக்கிப் போந்தவனாகையாலே இன்று அது தவிர்ந்தமைக்கு பிரகாசகம் இது. இவ்வளவேயொழிய உபாயமன்று என்கை.

**234. கீழ் தானும் பிறருமான நிலையைக் குலைத்தான். இங்குத் தானுமிவனுமான நிலையைக் குலைக்கிறான்.**

234. கீழே *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாம்* என்கையாலே—தானும் உபாயாந்தரங்களுமாய்க் கூடிநிற்கிற நிலையைக் குலைத்தான். மாம் ஏகம் என்கிறவிதனால்—தானும் தன் ஸ்வீகாரத்தில் உபாயபுத்திபண்ணி நிற்கிற இவனுமான நிலையைக் குலைக்கிறான். ஸாதநாந்தரங்களும் உபாயமன்று, ஸித்தோபாயஸ்வீகாரமும் உபாயமன்று என்று காட்டினபடி சொல்லிற்றாயிற்று. [*உன்னாலல்லால் யாவராலும்* என்கிற அருளிச்செயல் ஸமாதியாலே (இங்கு மூலத்தில்) உபாயாந்தரங்களைப் பிறர் என்றது.]

**235. அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம்.**

**236. அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்.**

235, 236. ஸாதனமென்கிற நினைவோடே இவன் பண்ணும் ஸ்வீகாரம் துஷ்டமென்று காட்டப்படுகிறது. நிருபாதிகரக்ஷகனான அவனை அவன் கையையே பார்த்திருக்குமிவன் தன் ரக்ஷணத்திற்காக ஸ்வீகரிக்கிற ஸ்வீகாரமானது 'நாம் செய்வது' என்கிற அஹங்காரத்தோடு கூடியதாய் பிதாவுக்குப் புத்ரன் எழுத்து வாங்குமாபோலே அவத்யகரமுமாயிருக்கும். ஆனால் ரக்ஷகமாவதுதான் ஏதென்னில்; இவ்வாத்மாவினுடைய ரக்ஷணத்துக்குக் கடவனான அவன் 'இவனை நாம் ரக்ஷிக்கக் கடவோம்' என்று அபிமாநித்துக் கொள்ளுகையாகிற ஸ்வீகாரமே இவனுக்கு ரக்ஷகமாம். (235, 236)

**237. மற்றையுபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம்; இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்.**

237. இந்த ஸித்தோபாயமானது சேதநப்ரவ்ருத்தியில் ஒன்றையும் ஸஹியாதென்பதைத் தெளிவிக்கைக்காக உபாயாந்தரங்களுக்கும் இவ்வுபாயத்துக்குமுண்டான வாசி காட்டப்படுகிறது. ஸித்தோபாயமான இது தவிர்ந்த மற்ற உபாயங்களுக்கு சேதநப்ரவ்ருத்தியாலே ஸ்வரூப ஸித்தியாக வேண்டுகையாலே இவனுடைய முயற்சி குலைந்தால் குற்றமாகும். இந்த வுபாயத்துக்கு வேறொரு துணையின் சேர்க்கை அஸஹ்யமாகையாலே இச்சேதநனுடைய ப்ரவ்ருத்தியென்பதொன்றே குற்றமாகும். (237)

**238. "சிற்றவேண்டா."**

238. சேதநப்ரவ்ருத்தியொன்றும் வேண்டாவென்பதற்கு ப்ரமாணமுண்டோவென்னில்; *சிற்றவேண்டா* என்கிற திருவாய்மொழிப் பாசுரமே ப்ரமாணமென்க. ஸித்தோபாய ஸ்வீகாரம் சொல்லுகிற *மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம்* என்கிற பாட்டிலே *சிற்றவேண்டா* என்றது. சிற்றுதல்—சிதறுதலாய், விஸ்தாரமாகவொரு வியாபாரம் பண்ணவேண்டாவென்கையாலே இவ்வுபாயத்திலிழியுமவனுக்கு ஒரு வியாபாரமும் பண்ணவேண்டாவென்னுமிடம் சொல்லிற்று. ... (238)

**239. நிவ்ருத்தி கீழே சொல்லிற்று.**

239 நிவ்ருத்தியைப்பற்றி வேறொரு பிரமாணம் தேடவேண்டிய அவசியமில்லை. இந்த சரம ச்லோகத்திலேயே கீழே *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்று ஸகல ப்ரவ்ருத்தியினுடையவும் நிவ்ருத்தியே இவனுக்கு வேண்டுவதென்னுமிடம் சொல்லிற்று. (239)

**240. உபகாரஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது; உபாயத்தில் அந்தர்ப்பவியாது.**

240. ஆனால் உபகாரஸ்ம்ருதிதான் வேணுமே, அது உபாயத்தில் முதலிடாதோ வென்னில்; முதலிடாது. *என்னைத்தீமனங்கெடுத்தாய்* *மருவித்தொழும் மனமே தந்தாய்* இத்யாதியாலே இவ்வுபாய விஷயத்தில் இவன் பண்ணும் உபகாரஸ்ம்ருதியும் இவனுடைய சைதந்யப்ரயுக்தமாய் வந்ததித்தனை. 'இது உண்டாகையாலேயன்றோ எம்பெருமான் கார்யம் செய்தது' என்று உபாயத்தில் உட்புகாது. ஆக இவ்வளவும் ஏக பதார்த்தம் சொல்லிற்று. ... ... ... (240)

**241. சரணம். 242. உபாயமாக.**

**243. இந்த சரணசப்தம் ரக்ஷிதாவையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதே யாகிலும் இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது; கீழோடே சேரவேண்டுகை யாலே.**

241—243. இனி **சரணம்** என்பதற்குப் பொருள் 'உபாயமாக' என்கை. ***உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம், வர்த்ததே*** என்கிறபடியே சரண சப்தமானவிது ரக்ஷகனையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும் இந்த ஸ்தலத்திலே உபாயத்தையே காட்டுகிறது. ஸர்வதர்மங்களையும்விட்டுத் தன்னையே பற்றச் சொல்லுகிற ப்ரகரணமாகையால் கீழோடே சேரவேண்டுமன்றோ. (241-243)

**244. வ்ரஜ. 245. புத்திபண்ணு.**

**246. கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய் அத்யவஸியென்றபடி.**

244—246. இனி, **வ்ரஜ** என்பதற்கு 'புத்தி பண்ணு' என்று அர்த்தம். "வ்ரஜ—கதௌ" என்று தாதுபாடமாகையாலே வ்ரஜதாதுவுக்கு கதி அர்த்தமாகி, (**கத்யர்த்தா புத்த்யர்த்தா:**) என்கிற ந்யாயத்தாலே அத்யவஸாயம்செய் என்றபடி. **மாமேகம் சரணம் வ்ரஜ**—என்னையே உபாயமாக நெஞ்சிற்கொள்க என்றதாயிற்று. (244-246)

**247. வாசிககாயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களா யிருக்கச்செய்தேயும் *ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டானத்தைச் சொல்லுகிறது.**

247. *சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்* என்கிறபடியே மனமொழிமெய்கள் மூன்றினாலுமுண்டான ஸ்வீகாரம் அதிகார பூர்த்திக்கு உடலாகை யாலே வாசிகமும் காயிகமும் இந்த ஸ்வீகாரத்திற்கு வேண்டியிருக்கச்செய்தேயும், ***ஜ்ஞாநாத் மோக்ஷ*** மென்கையாலே அவையிரண்டையுமொழிய மாநஸமான அனுஷ்டான மாத்திரத்தைச் சொல்லுகிறது. ... ... (247)

**248. ஆக, த்யாஜ்யத்தைச்சொல்லி த்யாகப்ரகாரத்தைச்சொல்லி பற்றப் படுமுபாயத்தைச் சொல்லி உபாயநைரபேக்ஷ்யம்சொல்லி உபாயத்வம்சொல்லி உபாய ஸ்வீகாரம் சொல்லுகிறது.**

248. ஆக பூர்வார்த்தத்தால் சொல்லிற்றாயிற்றென்னென்னில்; **ஸர்வதர்மான்** என்று த்யாஜ்யத்தைச்சொல்லி **பரித்யஜ்ய** என்று த்யாக ப்ரகாரத்தைச்சொல்லி **மாம்** என்று பற்றப்படுமுபாயத்தைச்சொல்லி, **ஏகம்** என்று அந்த உபாயம் இதர நிரபேக்ஷ

மென்பதைச்சொல்லி, **சரணம்** என்று உபாயத்வம்சொல்லி, **வ்ரஜ** என்று உபாயஸ்வீகாரம் சொல்லிற்ரும். ... ... ... (248)

249. **அஹம்.** 250. **ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிருன்.**

251. **ஸர்வஜ்ஞனுய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனுன நான்.**

249—251. இனி உத்தரார்த்தம் விவரிக்கப்படுகிறது. பூர்வார்த்தத்தில் அதிகாரி க்ருத்யமன்றோ சொல்லிற்று. உபாய பூதனுன தன்னுடைய க்ருத்யம் சொல்லுகிறது உத்தரார்த்தத்தில். **அஹம்**—எல்லாமறிந்தவனுய் எதுவும் செய்யவல்லவனுய் சேஷியாகை யாலே ப்ராப்தனுயிருக்கிற நான் என்கை. ... ... (249-251)

252. **இவன் கீழ் நின்ற நிலேயும் மேல்போக்கடியுமறிகைக்கும் அறிந்தபடியே செய்து தலேக்கட்டுகைக்கும் ஏகாந்தமான குணவிசேஷங்களேயுமீ தன்பேருகச்செய்து தலேக்கட்டுகைக்கீடான பந்த விசேஷத்தையும் காட்டுகிறது.**

252. அல்லாத குணங்களெல்லாம் கிடக்க இந்த குண விசேஷங்களே இந்த **அஹம்** சப்தம் காட்டுகிறதென்பானேன்? என்னில்; இந்த சேதநனுக்கு அநிஷ்ட நிவ்ருத்தியையும் இஷ்டப்ராப்தியையும் பண்ணுமளவில், இவன் இதற்குமுன்னே நின்ற நிலேயையும் மேல் போகத்தக்க வழியையும் அறிவதற்கும், அறிந்தபடியேசெய்து தலேக் கட்டுவதற்கும் தக்கவையாயிருப்பவை ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வங்கள். காரியம் செய்யுமிடத்தில் இவனுக்காகவன்றிக்கே தன் பேருகச்செய்து தலேக்கட்டுகைக் கீடானது சேஷித்வம். ஆகவே இம்மூன்று குண விசேஷங்களேயும் இது ப்ரகாசிப்பிக்கிறதென்பது பொருந்தும். ... ... ... (252)

253. **தனக்காகக்கொண்ட ஸாரத்யவேஷத்தை அவனேயிட்டுப் பாராதே தன்னேயிட்டுப் பார்த்து அஞ்சின அச்சம் தீர, தானுன தன்மையை அஹமென்று காட்டுகிருன்.**

253. கீழ் மாம் என்றதில் ஸாரதியாய் நின்ற பாரதந்திரியம் காட்டப்பட்டதே; அதற்கு எதிர்த்தட்டான தன் ஸ்வாதந்திரியம் இந்த **அஹம்** பதத்தில் பிரகாசிப்பிக்கப் படுகிறதென்றும் கொள்க. மாம் என்று ஸாரதிவேஷத்தோடே நிற்கிற தன்னேப்பற்றச் சொன்னபோது, அர்ஜுநன் தன்னுடைய ரக்ஷணத்துக்காக ஏறிட்டுக்கொண்ட ஸாரதி வேஷத்தை "ஸர்வாதிகனுனவன் இங்ஙனே தாழநின்றது தன் குணத்தாலேயன்றோ" என்று அவனேயிட்டுப் பாராதே, 'நமக்கு இழிதொழில்செய்து ஸாரதியாய் நிற்கிறவ னன்றோ' என்று தன்னேயிட்டுப்பார்த்து, இவன் ஸர்வதர்மங்களேயும்விட்டுத் தன்னேப் பற்றச் சொல்லுகிருனே! இது என்னுகுமோ! என்று அஞ்சின அச்சம்தீர, ஸர்வேச் வரனுய்க்கொண்டு நிரங்குச ஸ்வதந்த்ரனுயிருக்கிற தனது உண்மையுருவத்தை **அஹ**மென்று காட்டுகிருனென்க. ... ... (253)

254. **கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லே நிலமிறே.**

254. இப்படி ஸர்வேச்வரனுய்க்கொண்டு நிரங்குச ஸ்வதந்த்ரனுயிருக்கிறவன் ஸாரதியாய் நின்று பரதந்திரனுனதும் தனக்கு ஸ்வரூபமாய்ச் செய்ததன்று; நிளேத்தது செய்யுமளவில் தன்னேத் தடுப்பாரில்லாதபடியான இந்த ஸ்வாதந்திரியத்தினுலானதத்தனே.

**255. த்வா. 256. அஜ்ஞனுய் அசக்தனுய் அப்ராப்தனுய் என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற வுன்னே.**

255, 256. இனி, த்வா என்பதற்கு அர்த்தம்—உன் காரியங்களை அறிகைக்குத் தக்க ஞானமில்லாதவனுய், அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக் கொள்ளுகைக்கு சக்தி யில்லாதவனுய், சக்தியுண்டானாலும் ஸ்வரக்ஷணே ப்ராப்தியற்றவனுய், இப்படியிருக்கை யாலே ஸர்வ தர்மங்களையும்விட்டு என்னையே உபாயமாகப் பரிக்ரஹித்திருக்கிறவுன்னை என்றபடி. ... ... ... (255, 256)

**257. ஸர்வபாபேப்ய:. 258. மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்களென்று யாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சுகிருய், அவ்வோ பாபங்களெல்லாவற்றில் நின்றும்.**

**259. *பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்* என்கிறபடியே அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களைச் சொல்லுகிறது.**

**260. த்ருணச்சேத கண்டூயநாதிகளைப்போலே ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்குமவை யென்ன, லோகாபவாத பீதியாலும் கருணையாலும் கலக்கத்தாலும் செய்யுமவை யென்ன, இவையெல்லாவற்றையும் நினைக்கிறது.**

257—260. இனி **ஸர்வபாபேப்ய:** என்பதற்கு அர்த்தம்—இஷ்ட விரோதியாயும் அநிஷ்ட ஹேதுவாயுமிருக்குமது பாபம்; மோக்ஷப்ரகரணமாகையாலே எம்பெருமானை யடைவதற்கு விரோதிகள் எவையோ அவையே இஷ்ட விரோதிகள். ஆகவே நீ என்னையடைவதற்கு விரோதிகளென்று எங்கெந்த பாபங்களில் நின்றும் பயப்படுகிருயோ அந்தந்த பாபங்களெல்லாவற்றில் நின்றுமென்றவாறு. **பாபேப்ய:** என்கிற பஹுவசனம்—அவித்யை கருமம் வாஸனை ருசி ப்ரக்ருதிஸம்பந்தம் ஆகிற இவற்றைச் சொல்லுகிறது. [அவித்யையாவது அஜ்ஞானம். கர்மமாவது புண்யபாபம். வாஸநையாவது அஜ்ஞாந வாஸநையும் கர்ம வாஸநையும் ப்ரக்ருதிஸம்பந்த வாஸநையும்.] இனி ஸர்வ சப்தத் தாலே விவக்ஷிதமேதென்னில், துரும்பு நறுக்குகை தினவு சொரிகை முதலானவைபோலே அபுத்தி பூர்வகமாக ப்ரக்ருதி வாஸநையாலே அநுவர்த்திக்கும் உத்தராகங்களென்ன, 'நாம் இவற்றைச் செய்யாவிடில் லோகம் நம்மை அபவாதம் சொல்லுமே' என்கிற பயத்தாலும், 'நம்மைக் கண்டு லௌகிகர்கள் இவற்றைத் தவிருவர்களாகில் அவர்களுக்கு விநாசமாமே! ஐயோ!' என்கிற க்ருபையாலும் செய்கிற நித்யநைமித்திக கருமங்களென்ன, ரஜோகுண தமோகுணங்களாலே கலங்கி முன்னம்விட்ட வுபாயங்களிலே மீண்டும் அந்வயித்தலென்ன ஆக இவை யெல்லாவற்றையும் நினைக்கிறது. ... (257-260)

**261. உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்ராமப்ராப்தி போலே த்யஜித்த வுபாயங்களிலே இவை அந்விதங்களாமோவென்று நினைக்கவேண்டா.**

261. (ஸாதநமென்கிற புத்தியோடே செய்யாதவையும் வஸ்துகத்யா ஸாதந கோடியிலே அந்வயிக்குமென்று நிரூபிக்கப்படுகிறது.) சித்தப்ரமமுடையவனொருவன் இன்னவூருக்குப் போகிறோமென்கிற நினைவின்றிக்கே ஒரு வழியே போகா நின்ருல் அவ்வழிக்கு ஏதேனுமோர் ஊரோடே ஸம்பந்தமுண்டாயிருக்கையாலே அவ்வூரிலே சென்று சேருமாபோலே ஸாதநமென்கிற எண்ணமில்லாமே லோகாபவாத பீதி

முதலியவற்றாலே செய்யப்படுகிற இவை, விட்ட வுபாயங்களிலே அந்வயித்ததாகுமோ வென்று சங்கிக்கவேண்டா ; அந்வயித்ததாகியே தீரும். ஆகவே அவையும் பாபசப்த வாச்யங்களே. ... ... ... (261)

**262. கலங்கி உபாய புத்த்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடொக்கும்.**

262. (புந:ப்ரபத்தியும் பாபசப்த வாச்யமென்கிறது.) ஒருகால் அனுஷ்டான மொழிய மீண்டு மனுஷ்டானத்தை ஸஹியாத ப்ரபத்தியின் ஸ்வபாவத்தையறியாதே கலங்கி அநிஷ்ட நிவ்ருத்திக்காகவோ இஷ்ட ப்ராப்திக்காகவோ உபாயமென்கிற நினைவோடே மீண்டு பண்ணும் ப்ரபத்தியும் உபாயாந்தரம்போலே பாதகஸமம்.

**263. மோக்ஷயிஷ்யாமி. 264. முக்தனும்படி பண்ணக்கடவேன்.**

**265. ணிச்சாலே—நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையேவிட்டுப் போங்காணென்கிறான்.**

263—265. இனி **மோக்ஷயிஷ்யாமி** என்பதற்கு அர்த்தம்—இவற்றில் நின்றும் விடுபட்டவனும்படி பண்ணக் கடவேனென்பதாம். நானும் இதுக்கொரு முயற்சி செய்யவேண்டா ; நீயும் இதுக்கு ப்ரார்த்திக்கவேண்டா ; நீ என்னைப் பணிந்த பெருமை யாலே உன்னைக்கண்டு தானே பயப்பட்டு, போனவழி தெரியாதபடி தன்னடையே விட்டுப்போம் அவை என்பது ணிச்சாலே தெரிவிக்கப்படும். **"அஹம் தே ஸர்வபாபாநி நிஹநிஷ்யாமி !"** என்று சொல்லாமல் **"த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"** என்று ணிஜந்த ப்ரயோகம் பண்ணினவிதனால் தேறின அர்த்தமிது.

**266. என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நானிரங்கினால் கிடக்குமோவென்கை.**

**267. அநாதிகாலம் பாபங்களைக்கண்டு நீ பட்டபாட்டை அவைதாம் படும்படி பண்ணுகிறேன்.**

266, 267. 'அவை தன்னடையே விட்டுப் போம்' என்றதின் கருத்து யாதெனில்; பாபமென்று ஒரு வஸ்து கிடக்கிறதன்றே ; குப்பையில் ஆமணக்குபோலே யெழுந்து பாம்புபோலே பிடுங்குவதன்றே பாபமென்பது. சேதநன் பண்ணின கருமங்கள் ஒரு நொடிப்பொழுதில் நசித்துப் போம் ; கர்த்தாவான இவன் அஜ்ஞனாகையாலே மறந்து போவன் ; ஸர்வஜ்ஞனாய் ஒன்றொழியாமல் நினைத்திருந்து ஸமயங்களிலே தப்பாமல் பலாநுபவம் பண்ணுவிக்கிறவன் ஸர்வேச்வரன். ஆகவே அப்படி அநுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹ ரூபமாகையாலே அந்த நிக்ரஹ பலமாய் வந்தவை நிக்ரஹத்துக்கு ப்ரதி கோடியான அநுக்ரஹத்தை நான் பண்ணினால் பின்னையும் கிடக்குமோ வென்கை. நெடுங்காலமாக அப்பாபங்களைக்கண்டு நீ நடுங்கின நடுக்கமெல்லாம் உன்னைக் கண்டு அவை தாம் குடல்கரிந்து நடுங்கும்படி பண்ணக்கடவேன் என்றவாறு.

**268. இனி உன் கையிலுமுன்னைக் காட்டித்தாரேன் ; என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ.**

268. இத்தனை காலமும் நம் கார்யத்துக்கு நாம் கடவோமென்று நீ திரிகையாலே தன் காரியம் தானே செய்து கொள்ளுகிறானென்றிருந்தேனத்தனை. எனக்கு நீ சரீரதயா சேஷமென்றறிந்து என்னைச் சரணமடைந்த பின்பு 'உன்னுடைய பாபம் போகைக்கு

யத்னம் நீ பண்ணிக்கொள்' என்று உன் கையிலும் உன்னைக்காட்டித் தரமாட்டேன். என்னுடலான வுன்னுடைய அவித்யை யாகிற அழுக்கை சரீரியான நானே போக்கிக் கொள்ளமாட்டேனோ? ... ... ... (268)

**269. மா சுச: 270. நீ உன் கார்யத்திலே அதிகரியாமையாலும் நான் உன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் உனக்கு சோகநிமித்தமில்லை காணென்று அவனுடைய சோகநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிறான்.**

269, 270. இனி **மாசுச:** என்றது சோகப்படாதேகொள் என்றபடி. நீ உன் கார்யத்தில் கைவைத்து நின்றாயாகில் 'நம் கார்யத்துக்கு என் செய்வோம்' என்று நீ கரைந்து சோகிக்கலாம்; நான் உன் காரியத்திலே கைவைத்திலேனாகில் "நம் காரியத்தில் இவன் உதாஸீநனாயிருக்கிறானே! நாம் எப்படி உஜ்ஜீவிக்கப் போகிறோம்" என்று நீ சோகிக்கலாம்; இப்படியல்லாமல் உன்னுடைய ஸ்வரூபத்தை யுணர்ந்து நீ உன் ரக்ஷண காரியத்திலே கைவைக்காமையாலும் ஸ்வாமியான நான் உன்னுடைய ரக்ஷண கார்யத்திலே ஊன்றிப் போருகையாலும் உனக்கு சோகிக்கைக்கு நிமித்தமில்லை காணென்று முன்பு சோகித்து நின்ற அவனுக்கு சோக நிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கிறானாயிற்று. ... ... ... (269, 270)

**271. நிவர்த்தகஸ்வரூபத்தைச் சொல்லி நிவர்த்யங்கள் உன்னை வந்து மேலிடாதென்று சொல்லி உனக்கு சோகநிமித்தமில்லைகாணென்கிறான்.**

271. அஹம் என்று ஸர்வஜ்ஞத்வாதி குண விசிஷ்டனாய்க்கொண்டு விரோதி நிவர்த்தகனாயிருக்கிற தன் ஸ்வரூபத்தைச் சொல்லி, **த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி** என்று நிவர்த்தநீயங்களான பாபங்கள் உன்னைக்கண்டு தானே அஞ்சி யோடிப் போமதொழிய உன்னை வந்து மேலிடாதென்னுமிடம் சொல்லி, **மாசுச:** என்று—இப்படியான பின்பு உனக்கு சோகிக்க நிமித்தமில்லை யென்றதாயிற்று. ... (271)

**272. *எத்தினாலிடர்க்கடல் கிடத்தி யேழை நெஞ்சமே என்கிறான்.**

272. திருமழிசைப்பிரான் தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து 'ஸர்வேச்வரன் நமது விரோதியைப் போக்கி அடிமைகொள்வதாக வந்து புகுந்திருக்க இனி நீ ஏதுக்காக துக்க ஸாகரத்திலே அழுந்துகிறாய்?' என்றார். *எத்தினாலிடர்க்கடல் கிடத்தி யேழை நெஞ்சமே* என்ற பாசுரத்தினால், அப்படியே கண்ணபிரானும் அர்ஜுநனை நோக்கி அருளிச்செய்தபடி. ... ... ... (272)

**273. பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடாநிற்க, நீ சோகிக்கக் கடவையோ?**

273. நீ செய்த பாபங்களை நான் முந்துற என்னுடைய க்ஷமைக்கு விஷயமாக்கி, பின்னை உன் பக்கல் எனக்குண்டான வாத்ஸல்யத்தாலே அவற்றைப் பாபமாக நினையாதே புண்யமென்றே நினைப்பிடா நிற்க இனி நீ சோகிக்கலாமோவென்றும் தெரிவிக்கிறபடி. ... ... ... (273)

**274. உய்யக்கொண்டார் விஷயமாக உடையவரருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

274. [இதில் ஒருவனுக்கு ருசி பிறக்கையிலுள்ள அருமையைக் காட்டுவதற்காக ஒரு ஐதிஹ்யம் காட்டப்படுகிறது.] எம்பெருமானார் காலத்திலேயிருந்த உய்யக்கொண்டாரென்னுமொருவர் பக்திநிஷ்டராயிருந்தார்; அவரை ப்ரபத்தி நிஷ்டராம்படி பண்ணவேணுமென்று கருதிய உடையவர் அவருக்கு இந்த ச்லோகத்தின் பொருளை யருளிச்செய்தார். அவர் கேட்டு 'அர்த்தம் அழகியதே; ஆகிலும் அத்தைவிட்டு இத்தைப்பற்றத்தக்க ருசி எனக்கில்லை' என்றார். அதற்கு உடையவர் அருளிச்செய்த வார்த்தை. "வித்வானுகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய்; பகவத் பிரஸாதமில்லாமையாலே ருசி யுண்டாகப் பெற்றிலை" என்று. அந்த வார்த்தை இங்கே ஸ்மரிக்கத்தக்கது. ... (274)

**275. இதுக்கு ஈச்வரஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு.**

275. சாஸ்த்ரங்களெல்லாமொரு தலையும் தானொரு தலையுமாக இந்த ச்லோகம் இராநின்றதே; இதற்கு எதில் நோக்கு என்னில்; ஈச்வரஸ்வாதந்த்ரியத்திலே நோக்கு. சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ஸகல தர்மங்களையும் ஸவாஸநமாக விடுவித்து இச்சேதநனுக்குத் தானே நிரபேக்ஷஸாதநமாய் ப்ராப்திக்கு இடையூறான ஸகல பாபங்களையும் தள்ளிப் பொகட்டு ஸ்வ ப்ராப்தியைப் பண்ணிக் கொடுக்கும்படியான ஈச்வர ஸ்வாதந்திரியம் இதனால் வெளியிடப்பட்டதாகுமென்க. ... (275)

**276. இதுதான் அநுவாதகோடியிலேயென்று வங்கிப்புரத்து நம்பி வார்த்தை.**

**277. அர்ஜுனன் க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ரிஷிகள் வாக்யங்களாலும் க்ருஷ்ணன் தன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் இவனே நமக்குத் தஞ்சமென்று துணிந்த பின்பு தன்னைப்பற்றச் சொல்லுகையாலே.**

276; 277. அர்ஜுநன் இளமை தொடங்கி க்ருஷ்ணனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும், அவனுடைய பெருமையைப் பேசின மஹர்ஷிகளின் வாக்யங்களினாலும், எப்போதுமே க்ருஷ்ணன் தன் காரியத்துக்குக் கடவனாய் நோக்கிக்கொண்டு போருகையாலும் "இவன் சொல்லுகிற உபாயங்களெல்லாம் நமக்குத் தஞ்சமன்று; இவனே நமக்குத் தஞ்சம்" என்று அவனாகவே விச்வஸித்த பின்பு 'ஆனால் என்னைப் பற்று' என்று சொல்லுகையாலே இந்த ச்லோகம் அநுவாதரூபம் என்று ஆப்ததமரான வங்கிப்புரத்து நம்பி அருளிச்செய்வராம். ... (276, 277)

**278. புறம்பு பிறந்ததெல்லாம் இவன்னெஞ்சை சோதிக்கைக்காக.**

278. இதனை முந்துற முன்னம் உபதேசியாதே உபாயாந்தரங்களைப் பரக்க நின்று உபதேசித்ததெல்லாம் "அவ்வளவிலே நின்று விடுகிறானோ? அல்லது இவ்வுபாயோபதேசத்துக்கு அதிகாரியாகிறானோ?" என்று இவனுடைய ஹ்ருதயத்தை சோதிக்கைக்காக. ... ... ... (278)

**279. வேதபுருஷன் உபாயாந்தரங்களை விதித்தது கொண்டிப்பசுவுக்குத் தடிகட்டிவிடுவாரைப் போலே அஹங்கார மமகாரங்களால் வந்த களிப்பற்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்காக.**

279. கண்ணன் உபாயாந்தரங்களை உபதேசித்தது அர்ஜுநனுடைய ஹ்ருதய சோதநார்த்தமாகவானுலாகுக; வேத புருஷனும் உபாயாந்தரங்களை மோக்ஷஸாதனமாக விதித்திருக்கிருனே, அது ஏன்? என்னில்; பட்டி தின்று திரிகிற பசுவை வசப்படுத்துகைக்காக அதன் கழுத்திலே தடியைக் கட்டி விடுவாரைப்போலே அஹங்காரமமகார வச்யனுய்க் களித்துத் திரிகிற இவனுக்கு அவற்ருல்வந்த களிப்புப்போய் பகவத் பாரதந்த்ரிய மாகிற ஸ்வரூபத்தின் உணர்ச்சி உண்டாகைக்காக. ... (279)

**280. ஸந்ந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாபோலே இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது.**

280. ஆனுல் இப்படி ஸ்வரூபஜ்ஞானம் பிறப்பதற்கு ஹேதுவான இவற்றை விட்டால் குற்றமாகாதோவென்னில்; சரமாச்ரமத்திலே அந்வயித்தவன் முந்தின ஆச்ரம தர்மங்களை விடுகிருப்போலே, உபாயாந்தரங்களின் ஸ்வரூப விரோதித்வம் முதலிய வற்ருலே ஸித்தோபாயத்திலே யிழியும்படி இவ்வளவான ஜ்ஞான பரிபாகம் பிறந்தவன் இவ்வுபாயாந்தரங்களைவிட்டால் குற்றம் வாராது. ... (280)

**281. இவன்தான் இவை தன்னை நேராக விட்டிலன்.**

**282. கர்மம் கைங்கர்யத்திலே புகும். ஜ்ஞாநம் ஸ்வரூபப்ரகாசத்திலே புகும்; பக்தி ப்ராப்ய ருசியிலே புகும்; ப்ரபத்தி ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும்.**

281, 282. உபாயாந்தரங்களைவிட்டு ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹித்த இவ்வதிகாரி இவற்றை அடியோடு விட்டவனுக ஆகிருனுமல்லன். எங்ஙனேயென்னில்; தன் வர்ணத்துக்கும் தன் ஆச்ரமத்துக்கும் தகுதியாக இவன் அனுஷ்டிக்கிற நித்ய நைமித்திக கருமம் ஸாதன புத்தியினுலன்றிக்கே கருணையாலே பரார்த்தமாக அநுஷ்டிக்கையாலே எம்பெருமானுக்கு மிகவுமுகப்பாகையாலே அவனுடைய ப்ரீதிக்கு உடலாகப் பண்ணும் கைங்கர்யத்திலே சேர்ந்ததாகும். ஸ்வஸ்வரூபஜ்ஞான பூர்வகமாக பரஸ்வ ரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கைக்குறுப்பான *நுண்ணறிவு என்கிற ஸூக்ஷ்மஜ்ஞானம் ஸாதனமென்கிற புத்தியில்லாதவளவில் ஸ்வரூபப்ரகாசத்திலே சேர்ந்ததாகும். பகவத் பிராப்திக்கு ஸாதனமான பக்தி அந்த ஸாதனபுத்தி போனவாறே, உணவுக்குப் பசி போலே பிராப்யமான கைங்கர்யத்துக்கு முன் க்ஷணத்திலே அநுவர்த்திக்கக் கடவதான ருசியிலே சேர்ந்ததாகும். ஸித்தோபாய வரணமாகிற ப்ரபத்தி ஏகபதத்தில் சொல்லுகிற படியே ஸாதநத்வபுத்தி கழிந்தவாறே அத்யந்த பரதந்த்ரமாய் அநந்ய சரணமாயிருந்துள்ள ஸ்வரூபத்தினுடைய உண்மையுணர்விலே சேர்ந்ததாகும். ஆகவே இவன்தான் இவை தன்னை நேராக விட்டிலன் என்னக் குறையில்லை. ... (281, 282)

**283. ஒரு பலத்துக்கு அரிய வழியையும் எளிய வழியையும் உபதேசிக்கையாலே இவை யிரண்டுமொழிய பகவத்ப்ரஸாதமே உபாயமாகக் கடவது.**

283. பக்தி ப்ரபத்திகளிரண்டையும் கழித்தால் இவனுக்குப் பலஸாதனமாவது ஏதென்னில்; பகவத் ப்ரஸாதமே உபாயமாகக் கடவது. பகவத் பிராப்தியாகிற ஒரு பலனுக்கு அரிதாயிருந்துள்ள பக்திமார்க்கத்தையும், ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியுடன்

ஒருகால் அநுஷ்டேயமாகையாலே எளிதாயிருந்துள்ள பிரபத்திமார்க்கத்தையும் உபதேசிக்கையாலே, ஸாதனத்தினுடைய அருமை யெளிமைகளிலே தாற்பரியமின்றிக்கே அதை வியாஜமாகக்கொண்டு பலனளிக்கும் எம்பெருமானுடைய ப்ரஸாதமே முக்கிய மாதலால் பக்தி பிரபத்திகளாகிற இவையிரண்டுமொழிய பகவானுடைய ப்ரஸாதமே உபாயமாகக் கடவதென்கை. ... ... (283)

**284. பேற்றுக்கு வேண்டுவது விலக்காமையும் இரப்பும்.**

284. ஆனாலும் பேற்றுக்கு இவன் பக்கலிலும் ஏதேனுமுண்டாக வேண்டாவோ வென்னில்; அவன் பண்ணும் ரக்ஷணத்தை ஸ்வயத்நத்தாலே விலக்காதொழிகையும் அந்த ரக்ஷணம் புருஷார்த்தமாகைக்குக்குறுப்பான இரப்புமே வேண்டுவது.

**285. சக்ரவர்த்தி திருமகன் பாபத்தோடே வரிலும் அமையுமென்றான்; இவன் புண்யத்தைப் போகட்டு வரவேணுமென்றான்.**

285. இப்படியல்லாமல் இவன் பக்கலிலும் சில ஸுக்ருத முண்டானால் ஆகாதோவென்னில்; அது உபாயபூதனுக்கு அநிஷ்டமாகும். இது எங்ஙனே தெரிகிற தென்னில், இராமபிரான் ஸுக்ரீவ மஹாராஜரையிட்டு விபீஷணாழ்வானை யழைப்பிக்கிற காலத்திலே *யதி வா ராவண: ஸ்வயம்* என்று பாபிஷ்டனான ராவணன் தானே வந்திருந் தானாகிலும் அவனையும் விடாதே அழைத்து வருக என்று சொல்லுகையாலே, பாபம் பேற்றுக்கு ஹேதுவாக நினைக்கைக்கு உடலல்லாமையாலே பாபத்தோடே வரிலும் அமையுமென்றதாகத் தேறிற்று. இக்கண்ணபிரான் *ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய* என்கை யாலே பேற்றுக்கு ஹேதுவாக நினைக்கைக்கு உடலான புண்யத்தைக் கழித்துவிட்டு வரவேண்டுமென்றான். ஆகையால் ஸஹாயாந்தர ஸம்ஸர்க்கத்தைப் பொறாதவனான உபாய பூதனுக்கு இவன் பக்கல் ஸுக்ருதம் அநிஷ்டமாயிருக்குமென்று கொள்க.

**286. ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசிவிச்வாஸங்களையுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்தி கனாய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லை யென்று பட்டருக்கு எம்பாரருளிச்செய்த வார்த்தை.**

286. பகவத் ப்ரபாவத்தை நோக்கி இந்த ச்லோகார்த்தத்தைப் பூர்த்தியாக நம்பி உஜ்ஜீவித்துப்போவதோ; அல்லது, சாஸ்த்ரங்களெல்லாம் ஒரு தட்டும் இதுவொரு தட்டு மாய் இப்படியிருப்பதொன்றுண்டோ? என்று அநாதரித்து நசித்துப்போவதோ ஆக இவ்விரண்டிலொன்று தவிர நடுவேயொரு நிலையில்லையென்று பட்டருக்கு எம்பாரருளிச் செய்தபடி.

**287. வ்யவஸாயமில்லாதவனுக்கு இதில் அந்வயம் ஆமத்தில் போஜனம் போலே.**

287. இந்த ச்லோகத்திற் சொல்லுகிற ஸர்வதர்மத்யாகத்துக்கும் ஸித்தோபாய ஸ்வீகாரத்துக்கும் தகுதியான அத்யவஸாயமில்லாதவன் இதில் அந்வயிப்பது அஜீர்ண தசையில் பண்ணின போஜநம் போலே விநாச ஹேதுவாய்த் தலைக்கட்டும்.

288. ***விட்டுசித்தர் கேட்டிருப்பர்* என்கிறபடியே அதிகாரிகள் நியதர்.**

288. *செம்மையுடைய திருவரங்கர்தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டு இருப்பர்* என்று ஆண்டாளருளிச் செய்தபடியே இது கேட்டால் இதின்படியே நியதராயிருக்குமவர்களே இவ்வர்த்தத்துக்கு அதிகாரிகள். [மேலே குறித்த பாசுரத்தின் பொருளாவது - திருவரங்கர்தாம் திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்த *மாமேகம் சரணம் வ்ரஜ* என்கிற வார்த்தையைப் பெரியாழ்வார் கேட்டு அதன்படியே நியதராயிருப்பர் என்கை.]

289. ***வார்த்தையறிபவர்* என்கிறபாட்டும் *அத்தனாகி* என்கிற பாட்டும் இதுக்கர்த்தமாக அநுஸந்தேயம்.**

289. இவ்வர்த்த நிஷ்டரான ஆழ்வாருடைய அருளிச் செயல்களில் இதுக்குச் சார்பாக அநுஸந்திக்கவுரிய பாசுரங்கள் இரண்டு: *வார்த்தை யறிபவர் மாயவற்காளன்றி யாவரோ? போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பவை பேர்த்து, பெருந் துன்பம் வேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச்சேர்த்து, அவன் செய்யும் சேமத்தை யெண்ணித் தெளிவுற்றே* என்கிற திருவாய்மொழிப் பாசுரமும் *அத்தனாகி யன்னையாகி யாளுமெம் பிரானுமாய், ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மையாட்கொள்வான், முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார், எத்தினாலிடர்க் கடல் கிடத்தி யேழை நெஞ்சமே* என்கிற திருச்சந்தவிருத்தப் பாசுரமும். இப்பாசுரங்களின் அரும்பெரும் பொருளைக் குருமுகமாகக் கேட்டு, பிறகு நம்முடைய திவ்யார்த்ததீபிகை யுரையைக்கொண்டு மனனம் செய்வது. .... ... ... 

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ப்ரதிவாதிபயங்கரம் ஜகதாசார்ய.
**ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியர்**
தொகுத்த
முமுக்ஷுப்படி தாத்பர்யஸாரம்
முற்றுப்பெற்றது.

# ஸ்ரீ வைஷ்ணவஸம்பிரதாய புத்தக விளம்பரம்

**ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர் ஸ்வாமிகளின் பதிப்பு**

சின்ன காஞ்சீபுரம், தென்னண்டை மாடவீதி, 29-நெ. கிரந்தமாலா ஆபீசில் கிடைப்பவை.

1. நாலாயிர திவ்யப் பிரபந்தங்களெல்லாவற்றுக்கும் திவ்யார்த்த தீபிகையென்கிற விரிவான உரை தனித்தனியாகவும் முழுமையாகவும் கிடைக்கும். ரூ. 70-00

2. பூருவாசாரியர்கள் அருளிச்செய்த ஸகல ஸ்தோத்ர பாடங்களுக்கும் மிக வெளிய தமிழுரை. (அதாவது) முகுந்தமாலை, ஆளவந்தார், உடையவர், கூரத்தாழ்வான், பட்டர், தேசிகர், மணவாளமாமுனிகள், அஷ்டதிக்கஜா சாரியர்கள் மற்றுமுள்ள சில ஆசாரியர்கள் அருளிய ஸகல ஸ்தோத்ரங் களுக்கும், பதவுரை, பொழிப்புரை விசேஷவுரைகள் ரூ. 25-00.

3. முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம், ஆசார்யஹ்ருதயம் இந்த நான்கு ரஹஸ்யங்களுக்கும் விரிவான ஸாரார்த்தவுரை ரூ. 10-00.

4. ஈடு முப்பத்தாறுயிரப்படியென்கிற பகவத் விஷயம் நித்ய பாராயணத்திற்கு உதவியாக இரண்டு வால்யம் ரூ. 25-00. (தெலுங்கு லிபியிலுமுண்டு.)

5. வான்மீகி ராமாயணம் உத்தரகாண்டமுட்பட பூர்த்தியாக வசனநூல். ரூ. 8-00. ஆழ்வாராசாரியர்களின் வைபவ நூல்கள் ரூ. 3-00. தேவப் பெருமாள் வைபவமும் தேவப்பெருமாள் ஸன்னிதி வரலாறுகளும் ரூ. 2-50. தென்னுசார்ய ஸம்பிரதாய ஸாரார்த்தங்களடங்கிய 10 நூல்கள் ரூ. 10-00. பலவகைப்பட்ட விவாதங்களைப் பரிசீலனைசெய்த நூல்கள் இருபது ரூ. 15-00. கம்பரின்பக் கவித்திரட்டு (பால—அயோத்யா காண்டங்கள்.) ரூ. 2-00. க்ருஷ்ண யஜுர் வேதத்தில் பலவகை யாராய்ச்சிகள் வடமொழி யிலும் தென்மொழியிலும் ரூ. 5-00. அறுபத்திரண்டு உபந்யாஸமாலை, அறுபத்துமூன்று உபந்யாஸமாலை, அறுபத்துநான்கு உபந்யாஸமாலை, உபந்யாஸ சதத்வயம், அஷ்டாத சாஷ்டாதச மஹார்த்த நிதியென்கிற 324 மஹார்த்தங்கள்......இவையெல்லாம் உபந்யாஸகர்களுக்கு மஹோபகார மளிப்பவை ரூ. 10-00. விரிவான கியாடலாக் தருவித்துப் பார்க்கவேண்டியது.

தமிழ், ஸம்ஸ்கிருதம், ஹிந்தி, தெலுங்கு ஆகிய நான்கு பாஷைகளிலும் பல நூல்களும் மாதப் பத்திரிகைகளும் உண்டு.

இப்படிக்கு,

1—11—1965

**P. B. அண்ணங்கராசாரியர்.**

சின்ன காஞ்சீபுரம்.

மாமுனிவனறுநூற்றாண்டு நினைவு மாலையில் மூன்றாவது மலர்

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

மாமுனிவன் திவ்யஸூக்திஸாரார்த்தமாலிகையில்

— இரண்டாவது மலர் —

# தத்வத்ரய ஸாரார்த்த தீபிகை

விசதவாக்சிகாமணிகளான மணவாள மாமுனிகள்

அருளிச்செய்த வியாக்கியானத்தையடியொற்றி

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்யதாஸன்

எழுதியது

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

சென்னை ரத்தினம் கிளை அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது

இதன் விலை 1—50

ஸாதாரண ஸம்வத்ஸர ஆனித் திருமூலம்

1970

# தத்வத்ரய சூர்ணைகளின் அட்டவணை

[லக்கம்—சூர்ணைகளின் வரிசை லக்கம்]

# தத்வத்ரய சூர்ணிகளின் அட்டவணை



தத்வத்ரய சூர்ணிகளின் அட்டவணை முற்றிற்று.

---

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸர்வஜ்ஞரான

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாதசரஹஸ்யங்களுள்

# த த் வ த் ர ய ம்

விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளருளிச்செய்த வியாக்கியானத்தைத் தழுவி

ஸ்ரீ காஞ்சீ- பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய
ஸாரார்த்ததீபிகையுடன் கூடியது.

## மு ன் னு ரை

நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் மஹோபகாரகர்களாகத் திருவவதரித்தருளின ஆசார்யர்களில் பிள்ளைலோகாசார்யர் ப்ரதாந பரிகணிதராவர். இவ்வாசிரியர் ஸர்வஜ்ஞராக எழுந்தருளியிருந்தது பெரிதன்று; பரமகாருணிகராயெழுந்தருளியிருந்ததே இவர்க்குத் தன்னேற்றம். ஸம்ஸாரிகளை முமுக்ஷுக்களாக்கவும், முமுக்ஷுக்களை முக்தப்ராயர்களாக்கவும், முக்தப்ராயர்களை முக்தர்களாக்கவும் வல்ல திவ்ய ஸூக்திகளை யருளிச்செய்தவர் இவ்வாசிரியரொருவரே யாவர். இவருடைய தனியனில்தான் * ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம: * என்கிற விலக்ஷணமான வாக்விந்யாஸம் அமையக் காண்கிறோம். ஸம்ஸாரமாகிற கொடிய ஸர்ப்பத்தினால் கடியுண்ட சேதநர்கள் உஜ்ஜீவிக்கப் பெறவேணுமாகில் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டே உஜ்ஜீவிக்கவேணுமென்று பூருவர்கள் அறுதியிட்டிருந்தார்கள். அரிய பெரிய ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்திவைத்து உலகத்தை வாழ்விக்க முந்துற முன்னம் ப்ரவர்த்தித்தவர் இவ்வாசிரியரே. இவருடைய ரஹஸ்ய க்ரந்தங்களைத் தழுவி ஆச்சான்பிள்ளை முதலானோர் சிலர் சில ரஹஸ்ய க்ரந்தங்களை இட்டருளினர். ஸூத்ரம்போன்ற இவ்வாசார்ய திவ்ய ஸூக்திகளின் ஆழ்பொருளைத் தேனும் பாலுமமுதுமாக வெடுத்துரைத்துப் பரமோபகாரம் செய்தருளினவர் மணவாளமாமுனிகள். விசதவாக் சிகாமணிகளென்னும் விருது அவரொருவர்க்கே ஏற்கும். அவருடைய அமுதமென்மொழிகளான வியாக்யானங்கள் அவதரித்திராவிடில் பிள்ளைலோகாசார்யருடைய பரம கருணையும் பயனற்றதாகும். உபயவேதாந்த ஸாரார்த்தங்களை நாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்துதான் தெளிவாகத் தெரிந்துகொள்ளமுடியும்.

நமக்கு, திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகமாகிற ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தஜ்ஞானம் எப்படி ஆவச்யகமோ, அப்படியே சித்து அசித்து ஈச்வரனாகிற தத்வத்ரயத்தின் ஸ்வரூப ஸ்வபாவஜ்ஞானமும் மிகவுமாவச்யகமாகும். ஏற்கெனவே பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த தத்வசேகரம் முதலான சில திவ்ய க்ரந்தங்களிருந்தாலும் தத்வத்ரயமென்கிற இந்த க்ரந்தமே சிதசிதீச்வர ஸ்வரூபஸ்வபாவவிசேஷங்களை ஸுக்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் வெளியிட்டது. இந்த திவ்ய க்ரந்தம் த்ராவிட பாஷையில் அமைந்ததாயினும் விஷயங்கள் மிகவும் கஹனங்களாகையாலே விவரித்துரைக்க வேண்டுவது இன்றியமையாததாகும். ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஸ்ரீ வசநபூஷணஸாரம், முமுக்ஷுப்படிஸாரம் என்னும் நூல்களை அடியேன் எளிய தெளிய நடையில் எழுதியிருப்பதுபோலவே தத்வத்ரயார்த்த ஸாரமான விதனையும் மணவாளமாமுனிகளின் திருவடிகளைச் சிந்தனை செய்துகொண்டே எழுதப்புகுகின்றேன். — ... *

முன்னுரை முற்றிற்று.

ஸ்ரீரஸ்து.
பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்
ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே,
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நமஃ.

# தத்வத்ரயம் — சித்ப்ரகரணம்

## 1. முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம் போது தத்வத்ரயஜ்ஞான முண்டாகவேணும்.

1. ஸம்ஸார பந்தத்தில் நின்றும் விடுபடவேணுமென்னுமிச்சையும் சைதந்ய ப்ரயோஜநம் பெறவேணுமென்னு மிச்சையுமுடைய விலக்ஷணாதிகாரிக்கு மோக்ஷ மாகிற புருஷார்த்தம் ஸித்திக்கும் போதைக்கு தத்வத்ரயத்தினுணர்ச்சி இன்றி யமையாததாகும். தத்வஜ்ஞாநாத் முக்திஃ'' என்பது வேதாந்திகளின் கொள்கை. பெரும்பாலும் இதுவே ஸகல ஸித்தாந்த ஸாதாரணமான வார்த்தை. தத்வம் என்றால் எது? தத்வங்கள் எத்தனை? மோக்ஷமாவது என்ன? என்று உட்புகுந்து விசாரிக்குமளவில் பல பல மதவேற்றுமைகள் விளையுமானாலும் 'தத்வஜ்ஞானத்தி னால் தான் மோக்ஷம்' என்னுங்கொள்கையில் பல மதங்கள் ஒன்று சேர்ந்திருக் கின்றனவென்று காண்கிறோம். தத்துவங்களை ஏற்றக் குறைவாகக் கொள்ளுகிற பாஹ்ய குத்ருஷ்டிகள் போலன்றியே மூன்றே தத்துவமென்பது ஸித்தாந்திகளின் கொள்கையாகும். * போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஜுஷ்டஸ் ததஸ் தேந அம்ருதத்வமேதி * என்று உபநிஷத்து ஓதுகையாலே சேதநன் அசேதநம் ஈச்வரன் என்கிற மூன்று தத்துவங்களையும் அறிந்தே—அவற்றின் ஸ்வரூபஸ்வ பாவங்களை யறிந்தே முத்திபெற முடியும் என்பது நம் ஆசாரியர்களின் கொள்கை. ஆனால்: * பசுர் மநுஷ்யஃ பக்ஷீ வா யே ச வைஷ்ணவஸம்ச்ரயாஃ, தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோஃ பரமம் பதம் * என்று ஒரு வைஷ்ணவனோடு ஸம் பந்தம் பெற்ற பசு பக்ஷி முதலியனவும் அந்த வைஷ்ணவாபிமாநத்தினாலேயே முக்திபெற முடியுமென்றும்; * யம் யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம் யம் பச்யதி சக்ஷுஷா, ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம்புநர் பாந்தவா ஜநாஃ* என்று, ஒரு வைஷ்ணவனுடைய கையால் தொடப்படுதலும் கண்ணால் கடாக்ஷிக்கப்பெறுதலு மான பாக்கியம்பெற்ற திர்யக் ஸ்தாவரங்களுக்கும் மோக்ஷமுண்டாகுமென்றும் இப்படி சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஜ்ஞாநயோக்யதையில்லாத திர்யக்ஸ்தாவரங் களுக்கும் வைஷ்ணவ ஸம்பந்தத்தாலே மோக்ஷஸித்தியென்று தெரியாநிற்க, தத்வஜ்ஞானமுண்டானாலல்லது மோக்ஷமுண்டாக மாட்டாதென்று சொல்லக் கூடுமோவென்று சங்கிக்கவேண்டா; மோக்ஷத்தில் இச்சையுடைய சேதநனுக்கே

தத்வஜ்ஞான முண்டாகவேணு மென்றன்றோ இங்குச் சொல்லியுள்ளது. வைஷ்ண வாபிமாநத்தாலே மோக்ஷம் பெறுகிற திர்யக் ஸ்தாவரங்களுக்கு முமுக்ஷுத்வமும் தத்வஜ்ஞானமுமாகிற இரண்டுமில்லையாகிலும் அபிமாநிக்கிற விலக்ஷணாதிகாரிக்கு இவையிரண்டும் குறையற்றிருக்க வேண்டுமாகையாலே நியமபங்கம் யாதுமில்லை. இங்கே மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தி காண்மின் ;—"அபிமாநியானவனுடைய ஜ்ஞாநவிசேஷத்தைக் கடாக்ஷித்தே அபிமாநாந்தர்ப்பூதமான இவற்றுக்கும் [—திர்யக் ஸ்தாவரங்களுக்கும்] ஈச்வரன் கார்யம் செய்கையாலே 'தத்வஜ்ஞாநாந்மோக்ஷ' மென்கிறவிது அவ்விடத்திலும் ஸத்வாரகமாக ஸித்திக்கும்" என்று.

இனி, மோக்ஷஸித்திக்காக மூன்று தத்துவங்களையும் அறியவேணுமென்கிற நிர்ப்பந்தம் ஏதுக்கு? "தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி! நாந்ய: பந்தா அயநாய வித்யதே" என்று வேதாந்தங்கள் ஈச்வர தத்வத்தைப்பற்றின ஜ்ஞான மொன்றுமே மோக்ஷ ஸாதனமென்று ஓதியிருக்க, மற்றையிரண்டு தத்துவங்களையுங்கூட அவசியம் அறியவேணுமென்கிற நிர்ப்பந்தம் பொருந்துமோ? என்று சிலர் சங்கிப்பர்கள். கேண்மின், ஈச்வரதத்துவ மொன்றை நன்றாக அறிந்தால் போதும்; ஆனால் அந்த தத்துவத்தை யறியும்போது அதை ஸகல சேதநாசேதந விலக்ஷணமாகவும் அந்தஇரண்டு தத்வங்களுக்குக் காரணமாகவும் வ்யாபகமாகவும் தாரகமாகவும் நியாமகமாகவும் சேஷியாகவும் அறியவேண்டுமன்றோ; அவற்றின் ஸ்வரூப ஸ்வபாவங்களை யறியாதபோது இப்படியெல்லா மறிந்துகொள்ள இயலாதாகையாலே மூன்று தத்வங்களையும் அறியவேணுமென்றது மிகப்பொருந்தும். * தமேவம் வித்வாந் * என்ற ச்ருதியே * போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா * என்றும் * ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா * என்றும் ஓதியிருக்கையாலே இவ்விஷயத்தில் வேதாந்த விரோதப்ரஸங்கமுமில்லை யென்றுணர்க. ... (1)

**2. தத்வத்ரயமாவது - சித்தும், அசித்தும், ஈச்வரனும்.**

**3. சித்தென்கிறது - ஆத்மாவை.**

2 - 3. * முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரய ஜ்ஞானமுண்டாகவேணும் * என்று கீழே சொல்லிற்று; தத்வத்ரயமென்கிற சொல்லால் விவக்ஷிதங்களான மூன்று தத்துவங்கள் இன்னவையென்று தெரிந்துகொள்ள வேணுமே; அவை எவை யென்னில் சித்தும் அசித்தும் ஈச்வரனுமாகிற மூன்று தத்வங்களே தத்வத்ரய மெனப்படுவன வென்கிறது. சைதந்யத்திற்கு [அறிவுக்கு] ஆதாரமானவஸ்து சித்து எனப்படும். அறிவையுடைத்தாகாத வஸ்து அசித்தெனப்படும். [சேதநன் என்பதும் சித்து என்பதும் பர்யாயம்: அசேதநம் என்பதும் அசித்து என்பதும் பர்யாயம்.] சேதநா சேதநப் பொருள்களுக்கு நியாமகனானவன் ஈச்வரனெனப்படுவன். சித்து என்பது ஜீவாத்மாவை. ... ... (2 - 3)

**4. ஆத்மஸ்வரூபம் — "சென்றுசென்று பரம்பரமாய்" என்கிறபடியே, தேஹேந்த்ரிய மந: ப்ராண புத்தி விலக்ஷணமாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்யமாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகாரமாய், ஜ்ஞாநாச்ரயமாய், ஈச்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், சேஷமாயிருக்கும்.**

5. **ஆத்மஸ்வரூபம் தேஹாதி விலக்ஷணமானபடி யென்? என்னில் ;**

6. **தேஹாதிகள் "என்னுடைய தேஹாதிகள்" என்று, ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், 'இதம்' என்று தோற்றுகையாலும், ஆத்மா "நான்" என்று தோற்றுகையாலும், இவை யொருகால் தோற்றி யொருகால் தோற்றுமை யாலும், ஆத்மா எப்போதுந் தோற்றுகையாலும், இவை பலவாகையாலும், ஆத்மா ஒருவனுகையாலும், ஆத்மா இவற்றில் விலக்ஷணனென்று கொள்ளவேணும்.**

4-6. ஜீவாத்மாவின் ஸ்வரூப மிருக்கும்படி யெங்ஙனேயென்னில், *சென்று சென்று பரம்பரமாய்* என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே தேஹத்திற் காட்டிலும் இந்த்ரியத்திற்காட்டிலும் மநஸ்ஸிற்காட்டிலும் ப்ராணனிற்காட்டிலும் ஜ்ஞாநத்திற் காட்டிலும் வேறுபட்டதாய் அஜடமாய் ஆனந்தரூபமாய் நித்யமாய் அணுவாய் அவ்யக்தமாய் அசிந்த்யமாய் நிரவயவமாய் நிர்விகாரமாய் ஜ்ஞானத்துக் கிருப்பிட மாய் ஈச்வரனுக்கு சரீரமாயிருக்கும் இந்த ஆகாரங்கள் மேலே க்ரமேண விவ ரிக்கப்படும்.] தேஹமே ஆத்மாவென்றும் இந்த்ரியங்களே ஆத்மாவென்றும் மநஸ்ஸே ஆத்மாவென்றும், ப்ராணனே ஆத்மாவென்றும் ஜ்ஞானமே ஆத்மா வென்றும்—இப்படிப் பலர் பலவகையாகச் சொல்வதுண்டு ; இவையொன்றும் ஆத்மாவல்ல ; இவையெல்லாவற்றிலும் வேறுபட்டு 'அஹம்' (நான்) என்கிற வ்யவஹாரத்திற்கு இலக்கான பொருளே ஜீவாத்மாவெனப்படும். தேஹம் இந்த்ரியம் முதலானவை ஆத்மாவல்ல என்பதை எங்ஙனே தெரிந்துகொள்ளும்படி யென்னில், என்னுடைய தேஹம், என்னுடைய இந்த்ரியம், என்னுடைய மனம், என்னுடைய ப்ராணன் ; என்னுடைய ஜ்ஞானம் என்றிப்படி 'என்னுடையது' என்கிற புத்திக்கும் அப்படிப்பட்ட வ்யவஹாரத்திற்கும் விஷயமாய்க்கொண்டு தேஹாதிகள் தோற்றுகின்றன ; 'என்னுடைய' என்கிற சொல்லானது நான் என்பதன் ஆறும் வேற்றுமை; நான் என்பதற்கு எது அர்த்தமோ அதுவே தேஹம் இந்திரியம்...என்பவற்றுக்கும் அர்த்தமாக இருக்கமுடியாது. 'நான் தேஹம், நான் இந்திரியம்' என்றிப்படி வ்யவஹாரமிருந்தால்தான் அஹமர்த்தமும் தேஹாதிகளும் ஒன்றேயாயிருக்கமுடியும். 'என்னுடைய மகன், என்னுடைய பிதா' என்றால் மகனும் பிதாவும் அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவர்களேயன்றி அஹமர்த்த மல்லவென்று எப்படித் தெரிந்துகொள்ளுகிறோமோ, அப்படியே 'என்னுடைய தேஹம் என்னுடைய இந்திரியம்' இத்யாதி வ்யவஹாரங்களினால் 'தேஹாதிகள் அஹமர்த்தமல்ல—அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவை' என்று தெரிந்து கொள்ளக் குறையில்லை. அன்றியும், 'என்னுடைய தேஹம் என்னுடைய இந்திரியம்' என்று தோற்றுவதுபோல 'இது தேஹம் இது இந்திரியம்' என்றிப்படி தேஹாதிகள் இதம்புத்தி வ்யவஹாரங்களுக்கும் விஷயமாய்க் கொண்டு தோற்றுகின்றன. இதனாலும் அஹமர்த்தத்திற்காட்டில் அவை வேறுபட்டவையென்று அறுதியிடப் படும். இப்படியல்லாமல் ஆத்மாவானவன் நானென்கிற சொல்லுக்கு விஷயமாய்க் கொண்டே தோற்றுகையாலே தேஹம் முதலியவற்றிற் காட்டில் (ஆத்மா) வேறு பட்டவனுவன். இங்கே சிலர் சங்கிக்கக் கூடும் :—ஆத்மா எப்படி அஹம்புத்தி விஷயமாய்க் கொண்டு தோற்றுகிறானே அப்படியே தேஹமும் 'ஸ்தூலோஹம்,

க்ருசோஹம்' என்று அஹம்புத்திக்கு விஷயமாகித் தோற்ற வில்லையோ? நான் ஸ்தூலனுயிருக்கிறேன், நான் க்ருசனுயிருக்கிறேன் என்கிற வ்யவஹாரங்கள் அபலபிக்க முடியாதவைகளன்றே; ஸ்தூலத்வமோ க்ருசத்வமோ ஆத்மாவுக்குக் கிடையாதே; தேஹத்திற்குத் தானே யுள்ளது. ஆக, ஸ்தூலோஹம் க்ருசோஹம் என்கிற வ்யவஹாரங்களில் தேஹம் அஹமர்த்தமாய்க்கொண்டு தோற்றுகையாலே இது ஆத்மாவாயிருக்கத் தட்டென்? என்று சங்கிக்கக்கூடும். இந்த சங்கைக்குப் பரிஹாரம் கேண்மின்; 'ஸ்தூலஃ அஹம்' என்பதற்கு நான் ஸ்தூல சரீரத்தோடு கூடியவன் என்றும், 'க்ருசஃ அஹம்' என்பதற்கு நான் க்ருசமான சரீரத்தோடு கூடியவன் என்றும் பொருள். 'அஹம் மநுஷ்யஃ, அஹம் தேவ;' என்றால் நான் மநுஷ்ய சரீரயுக்தன். நான் தேவசரீர விசிஷ்டன் என்று பொருள் படுவது போல இதனைக் கொள்க. அன்றியும், தேஹமானது 'ஸ்தூலோஹம், க்ருசோஹம்' என்று அஹம்புத்தி வ்யவஹார விஷயமாய்க் கொண்டு ஆத்மத்வேந தோற்றுவது ஜாக்ரத் தசையில் மட்டுமேயன்றே; ஸுஷுப்தி தசையில் இல்லையே. ஜாக்ரத் தசையோடு ஸுஷுப்தி தசையோடு வாசியற எப்போதும் ஆத்மா தோற்றுகிற படியைக் காணலாம். எங்ஙனே காணலாமென்னில்; 'உறங்குவதற்கு முன்பு இவையெல்லாமறிந்திருந்த நான் உறங்குகிறபோது என்னுடம்புமுட்பட அறிந்திலேன்' என்று ஸர்வஸம்ப்ரதிபன்னமான வ்யவஹாரமுள்ளது. இதனால் இரண்டவஸ்தையிலும் தேஹத்திற்காட்டில் வேறுபட்ட ஆத்மாவுளனென்பது தேறிநிற்கும். அன்றியும் ஜனன மரணங்களை யடையுந் தன்மையினாலே தேஹம் ஒருக்கால் தோற்றி ஒருக்கால் தோற்றாதிருக்கக் காண்கிறோம்; ஆத்மா ஜனன மரண ரஹிதனாய்க் கொண்டு எப்போதும் தோற்றா நின்றான். 'நான் முற்பிறவியில் பண்ணினவதினுடைய பலன் இது' என்கிற லோக வ்யவஹாரமும் இங்குச் சான்றாகும். இத்தகைய ஹேதுக்களாலே தேஹாதி விலக்ஷணனாத்மா என்னுமிடமறியத்தக்கது. (6)

**7. இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டேயாகிலும், சாஸ்த்ரபலத்தாலே ஆத்மா தேஹாதி விலக்ஷணனாகக் கடவன்.**

7. இங்ஙனே யுக்திகொண்டு ஸாதிப்பது ஒருபுறமிருக்க, சாஸ்த்ர பலத்தாலும் இது ஸித்திக்கக் கடவது. நாம் எதையும் யுக்தி கொண்டே ஸாதிப்பவர்களல்லோம்; யுக்திக்கு ஒருகால் கண்ணழிவு விளையவுங் கூடும்; எதற்கும் நமக்கு சாஸ்த்ரமே ப்ரபல ப்ரமாணம். * பஞ்சவிம்சோயம் புருஷஃ * பஞ்சவிம்ச ஆத்மா பவதி. * ஆத்மா து ஸ மகாரேண பஞ்சவிம்சஃ ப்ரகீர்த்திதஃ * என்றிப்படி ச்ருதி ஸ்ம்ருதிகள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களாலும் ஆத்மா தேஹாதிகளிற் காட்டிலும் வேறுபட்டவனென்று அறுதியிடப்பட்டிருக்கிறது. ... .... (7)

**8. அஜடமாகையாவது—ஜ்ஞானத்தை யொழியவும் தானே தோற்றுகை.**

8. இப்படி தேஹாதி விலக்ஷணமான ஆத்மவஸ்துவானது அஜடமென்றும் ஆனந்தரூபமென்றும் நித்யமென்றும் அணுவென்றும் அவ்யக்தமென்றும் அசிந்த்யமென்றும் நிரவயவமென்றும் நிர்விகாரமென்றும் ஜ்ஞாநாச்ரயமென்றும் ஈச்வரனுக்கு சரீரபூதமென்றும் சொல்லிற்று கீழ்; இவற்றையெல்லாம் விசதமாகத் தெரிந்துகொள்வதே ஆத்மஸ்வரூபஜ்ஞானமாகும். இனி அடைவே இவை

விவரிக்கப்படும். ஆத்மா அஜடமாயிருக்கையாவது ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை. (அதாவது) தன்னுடைய தோற்றத்திற்கு இன்னொரு வஸ்துவை எதிர்பார்க்க வேண்டாதபடியிருக்கை. ஒரு தீபமானது இன்னொரு தீபத்தை அபேக்ஷியாமலே தன் வ்யவஹாரத்திற்குத் தான் ஹேதுவாகிறுப்போலே ஆத்ம வஸ்துவானது ஜ்ஞானத்தைக்கூட அபேக்ஷியாமல், தானே தோற்றிக்கொண்டிருப்பதுதான் அஜடத்வமாவது. "**அத்ராயம் புருஷ: ஸ்வயம்ஜ்யோதிர் பவதி**" என்பது முதலான ப்ரமாணங்கள் இங்கே காணத்தக்கன. .... ... .... (8)

**9. ஆநந்தரூபமாகையாவது—ஸுகரூபமாயிருக்கை.**

**10. உணர்ந்தவன் ஸுகமாக வுறங்கினேனென்கையாலே ஸுகரூபமாகக்கடவது.**

9, 10. ஆத்மவஸ்து ஆனந்தரூபமுமாயிருக்குமென்று சொல்லிற்று; அது எங்ஙனேயென்னில்; ஆத்மஸ்வரூபம் தனக்குத்தானே ஸுகரூபமாயிருக்கும். இதை நாம் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டியதற்கு சாஸ்த்ர ப்ரமாணமொன்றுந் தேடவேண்டா; உறங்கியெழுந்தவன் 'நான் ஸுகமாக வுறங்கினேன்' என்று சொல்லுவது ஸர்வ ஸம்ப்ரதிபன்னம். உறக்க நிலைமையில் வெளி விஷயங்களின் அநுபவம் சிறிதுமில்லையென்றும், கேவலம் ஆத்ம ஸ்வரூபம் மட்டுமே ஸ்புரித்துக் கொண்டிருக்கிறதென்றும் தெரிந்துகொண்டிருக்கிறோம். அத்தகைய உறக்கத்தை விட்டு எழுந்தவன் 'ஸுகமாகவுறங்கினேன்' என்றால் அந்த ஸுகம் ஸ்வரூப ஸுகமேயாகவேணுமேயல்லது வேறொரு ஸுகத்திற்கு ப்ரஸக்தியில்லையே. 'ஸுகமாகவுறங்கினேன்' என்பதற்கு இப்போது ஸுகமுண்டாகும்படி யுறங்கினேனென்று பொருள் கொள்ளலாகாதோவென்னில், உள்ளதான சொல்வடிவத்திற்கு இங்ஙனம் பொருளாக வழியில்லையே. ஒருவன் நன்றாகப்பாடிவிட்டு, பிறகு 'இனிதாகப் பாடினேன்' என்கிறான். இதற்குப் பொருளென்ன? பாடினபிறகு இனிமையுண்டாகும்படி பாடினேனென்பதா பொருள்? பாடும்போதே இனிமையுண்டாகும்படி பாடினேனென்று பொருளல்லவா? அதுபோல ஸுகமாக வுறங்கினேனென்ற விடத்திலும் உறங்கும்போதே ஸுகமுண்டாகும்படி யுறங்கினேன் என்று பொருள் படுவதுதான் நியாயமானது. இதனால் ஆத்மாவினுடைய ஆனந்தரூபத்வம் ஸுஸ்பஷ்டமாகக் குறையில்லை. * **நிர்வாணமய ஏவாய மாத்மா** * **ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா** * **ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம்** * இத்யாதி ப்ரமாணங்களும் இங்கே அநுஸந்திக்கவுரியன. .... ... ... ... (9, 10)

**11. நித்யமாகையாவது—எப்போது முண்டாகை.**

**12. எப்போதுமுண்டாகில் ஜந்ம மரணங்களுண்டாகிறபடி என்? என்னில்; ஜந்மமாவது—தேஹஸம்பந்தம். மரணமாவது—தேஹவியோகம்.**

11, 12 ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்குமென்று சொல்லிற்று; நித்யத்வமாவது—ஒருகால் இருந்து மற்றொருகால் இல்லாமற்போகையன்றிக்கே எப்போதுமுண்டாயிருக்கை. எப்போதுமுண்டாயிருக்குமாகில், சாஸ்த்ரங்களால் ஆத்மாவுக்குச் சொல்லப்படுகிற ஜன்ம மரணங்கள் கூடும்படி எங்ஙனேயென்னில்; ஜனிக்கிறான் மரிக்கிறானென்றால் ஆத்மாவுண்டாகி ஆத்மா இல்லையாகிறான்

என்றதாக அர்த்தமன்று. ஆத்மா தேஹத்தோடு ஸம்பந்திப்பது ஜன்மமெனப் படுகிறது; தேஹத்தைவிட்டுப் பிரிந்துபோகை மரணமெனப்படுகிறது. ஆகவே ஆத்மா எப்போதுமுளனென்னத் தட்டில்லை. * ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித் * இத்யாதி ப்ரமாணங்களை இங்கே அநுஸந்திப்பது. ... (11, 12)

**13. அணுவானபடி என்னென்னில்;**

**14. ஹ்ருதப ப்ரதேசத்தில் நின்றும் உத்க்ரமித்துப் போவது வருவதாமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஆத்மா அணுவாகக் கடவது.**

13, 14 ஆத்மஸ்வரூபம் அணுவாயிருக்குமென்று சொல்லிற்று; இதை யறியும்படி எங்ஙனே யென்னில்; ஆத்மாவுக்கு ஹ்ருதயத்திலிருப்பையும், அங்கிருந்து உத்க்ரமணமாவதையும், மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குத் திரும்பி வருகையையும் சுடர்மிகு கருதி சொல்லுகையாலே அணுவென்னுமிட மறியலாம். விபுவாகில் இவையொன்றும் கூடாதே. *உத்க்ராந்திகத்யாகதீநாம்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமும் அதற்கு அவஷ்டம்பமான ப்ரமாணங்களுமிங்கேஅநுஸந்திப்பது. (14)

**15. அணுவாய், ஹ்ருதயத்தளவிலே நிற்குமாகில், சரீரம் எங்குமொக்க ஸுக துக்கங்களை புஜிக்கிறபடி யென்? என்னில்;**

**16. மணித்யுமணிதீபாதிகள் ஓரிடத்திலே யிருக்க ப்ரபை எங்குமொக்க வ்யாபிக்குமாபோலே ஜ்ஞாநம் எங்குமொக்க வ்யாபிக்கையாலே அவற்றை புஜிக்கத் தட்டில்லை**

**17 ஒருவன் ஏககாலத்திலே அநேக தேஹங்களைப் பரிக்ரஹிக்கிறதும் ஜ்ஞாந வ்யாப்தியாலே.**

15 - 17. ஆத்ம வஸ்து அணுபரிமாணமுடையதாய் ஹ்ருதயப்ரதேசத்தில் மட்டும் நின்றுவிடுமாகில் 'எனக்குக் காலில் நோவு; எனக்குத் தலையில் நோவு; எனக்குக் காலில் ஸுகம். எனக்குத் தலையில் ஸுகம்' என்றிப்படி காலே பிடித்துத் தலையளவும் சரீரமெங்கு மொக்க ஸுக துக்கங்களை புஜிக்கிறபடி கூடுமோ வென்னில், ரத்னம் ஸூர்யன் விளக்கு முதலான சுடர்ப்பொருள்கள் ஓரோ விடங்களிலே இருக்கச் செய்தேயும் அவற்றின் ஒளியானது சுற்றெங்கும் வியாபிக்கிருப்போலே. ஆத்மா ஹ்ருதயப் பிரதேசத்திலிருக்கச் செய்தேயும் ஆத்மாவின் தர்மமான ஜ்ஞானம் எங்கும் பரம்புகையாலே சரீரமெங்கு மொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கைக்கு ஒரு குறையுமில்லை. * குணாத் வா ஆலோகவத் * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்திலே இவ்வர்த்தம் ஸப்ரமாணமாகக் காணத்தக்கது. ஒரு சரீரத்தில் ஸுகதுக்கங்களை புஜிக்கிறபடிக்கு இங்ஙனே கொண்டாலும் ஸௌபரி போன்ற சிலர் ஏககாலத்திலே அனேக தேஹங்களைப் பரிக்ரஹிப்பது ஜ்ஞான வியாப்தியாலன்றிக்கே ஸ்வரூப வ்யாப்தியாலே யாகவேண்டாவோ வென்னில்; அங்கும் ஜ்ஞான வ்யாப்தியைக் கொண்டே நிர்வஹிக்கக் குறையில்லை. (15–17)

**18. அவ்யக்தமாகையாவது - கடபடாதிகளை க்ரஹிக்கிற சக்ஷுராதிகளால்தோற்றுதிருக்கை.**

18. ஆத்ம ஸ்வரூபம் அவ்யக்தமென்றும் சொல்லிற்று. அவ்யக்தத்வமாவது என்னென்னில்; உலகில் காணும் பொருள்களை க்ரஹிக்கின்ற கண் முதலியவற்றால் தோற்றுதிருக்கைதான் அவ்யக்தத்வமாவது. ''ச்சேதநாதியோக்யாநி

கடபடாதீநி வஸ்தூநி யைः பரமாணைர் வ்யஜ்யந்தே, தைः அயமாத்மா ந வ்யஜ்யதே-இதி அவ்யக்தः'' என்கிற கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். 'ஒரு ப்ரமாணத்தாலும் தோற்றுதிருக்கைதான் அவ்யக்தத்வம்' என்று சொல்லலாகாதோ வென்னில்' அங்ஙனம் சொன்னால் வஸ்துவே இல்லையென்றதாகும். முயற்கொம்பு ஆகாசத்தாமரை மலடிமகன் என்பன போலே ஆத்ம ஸ்வரூபமும் துச்சமென்ன வேண்டிவரும். மாநஸஜ்ஞானத்திற்கு விஷயமாமத்தனை யல்லது இந்த்ரியஜ்ஞானத்திற்கு விஷயமாமதன்று என்று கொள்க. திருவாய்மொழியில் * சென்று சென்று பரம்பரமாய் * என்று ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிற ஆழ்வாரும் 'ஞானம் கடந்ததே' என்று, இந்த்ரியஜ்ஞானத்திற்கு அகோசரமாயிருக்கையையே அருளிச்செய்தாரென்பதும் இங்கு அறியத்தக்கது. ... (18)

**19. அசிந்த்யமாகையாவது - அசித்தோடு ஸஜாதீய மென்று நினைக்கவொண்ணுதிருக்கை.**

19. ஆத்மஸ்வரூபத்தை அசிந்த்யமென்றும் சொல்லிற்று. அசிந்த்யமென்பதற்கு நினைக்கவொண்ணுததென்று பொருள். ஒருபடியாலும் நினைக்கவொண்ணுததென்று இதற்குப் பொருள்கொள்ளலாகாது. அங்ஙனம்கொண்டால் ஆத்மஸ்வரூப விஷயமான ச்ரவணம் மநநம் எல்லாம் வ்யர்த்தமாக வேண்டிவரும். ஆகையால் அங்ஙனம் பொருள் கொள்ளத்தகாது; அசித்தோடு ஸஜாதீயமாக நினைக்கவொண்ணுதிருக்கையே அசிந்த்யத்வமென்று கொள்ளவேணும் பகவத்கீதையிலே இரண்டாமத்யாயத்தில் *அவ்யக்தோயம் அசிந்த்யோயம்* என்றவிடத்து ஸ்வாமியின் பாஷ்யமும் காணத்தக்கது. .... ... ... (19)

**20. நிரவயவமாகையாவது - அவயவ ஸமுதாய மன்றிக்கே யிருக்கை.**

20. ஆத்மஸ்வரூபம் நிரவயவமாகவும் சொல்லிற்று, நிரவயவத்வமாவது—அவயவ ஸமுதாயமல்லாதபடியிருக்கை. * **விஜ்ஞாநமயः** * என்றும் * **விஜ்ஞாநகநः** * என்றும் சொல்லுகிறபடியே ஜ்ஞானமே வடிவெடுத்ததாகையாலே அசித்தான பொருள்களைப் போலே அவயவஸங்காத ரூபமாக இராது ஆத்மவஸ்து என்று கொள்க. ... ... .. .. ... . (20)

**21. நிர்விகாரமாகையாவது- அசித்துப்போலே விகரிக்கை யன்றிக்கே ஒருபடிப் பட்டிருக்கை.**

21. கீழே உதாஹரித்துக் காட்டிய பகவத் கீதா ச்லோகத்தில் * **அவிகார்யோயமுச்யதே** * என்று நிர்விகாரமாகவும் ஆத்மஸ்வரூபம் சொல்லப்பட்டது அசித்துப்போலே விகாரப்படுகையன்றிக்கே ஒருபடிப்பட்டிருக்கும் ஆத்மஸ்வரூபம் என்க. * **அம்ருதாக்ஷரம் ஹரः** * என்றும் * **ஆத்மா சுத்தோக்ஷரः** * என்றும் அக்ஷர சப்தத்தினால் சொல்லப்படுகிற வஸ்து வாகையாலே—க்ஷணந்தோறும் விகாரப் படுவதையே இயல்வாக வுடைத்தாய் க்ஷரசப்தவாச்யமான அசித்துப்போலே விகாரப்படாமல் ஸதா ஏகரூபமாயிருக்குமென்றதாயிற்று. ... .... (21)

**22. இப்படியிருக்கையாலே சஸ்த்ரம், அக்நி, ஜலம், வாதம், ஆதபம் தொடக்கமானவற்ருல் ச்சேதித்தல், தஹித்தல், நனைத்தல், சோஷிப்பித்தல் செய்கைக்கு அயோக்யமா யிருக்கும்.**

22. ஆக இப்படியிருக்கையாலே சஸ்த்ரத்தால் ச்சேதித்தல், அக்நியால் தஹித்தல் ஜலத்தால் நனைத்தல் காற்று வெயில் முதலியவற்ருல் உலர்த்தல் செய்

கைக்கு இலக்காகாம லிருக்குமிவ்வாத்மவஸ்து. சஸ்த்ரமானது ஒன்றைச் சேதிக்க வேணுமானாலும் அக்நியானது ஒன்றை தஹிக்கவேணுமானாலும் அந்தந்த வஸ்துக்களிலே வியாபித்துச் செய்யவேண்டுமன்றோ; ஆத்மா ஸர்வ அசித்தத்வ வ்யாபகனாகையாலே அவற்றிற்காட்டில் மிகவும் ஸூக்ஷ்ம பூதனாகையாலும். வ்யாப்யமாயும் ஸ்தூலமாயுமிருக்கிற இவை [சஸ்த்ரம் அக்நி முதலானவை] வ்யாபகமாயும் ஸூக்ஷ்மமாயுமிருக்கிற ஆத்மவஸ்துவை வியாபித்து விகாரப்படுத்தமாட்டாமையாலே சஸ்த்ரம் முதலியவற்றினாலாகும் வெட்டுதல் கொளுத்தல் முதலானவற்றிற்கு (ஆத்மவஸ்து) அநர்ஹமாயிருக்கு மென்றதாயிற்று. * நைநம் ச்சிந்தந்தி சஸ்த்ராணி * * அச்சேத்யோயம் அதாஹ்யோயம் * இத்யாதி கீதாவசனங்கள் இங்குக் காணத்தக்கன. .... ... ... ... (22)

**23. ஆர்ஹதர் ஆத்மாவை தேஹபரிமாணன் என்றார்கள். 24. அது ச்ருதிவிருத்தம். 25. அநேக தேஹங்களைப் பரிக்ரஹிக்கிற யோகிகள ஸ்வரூபத்துக்கு சைதில்யம் வரும்.**

23 - 25. ஜைனர்கள் ஆத்மாவை தேஹபரிமாணன் என்கிறார்கள். (தேஹத்தின் அளவோடொத்த அளவையுடையவன் என்றபடி.] "பாதத்தில் எனக்கு வேதனை; தலையில் எனக்கு ஸுகம்" என்கிறாப்போலே ஆபாதசூடம் தேஹத்திலுண்டாகும் ஸுக துக்காநுபவமானது ஆத்மா தேஹபரிமாணனல்லாதபோது கூடாதென்றும், ஆத்மா தன் கருமங்களுக்கிணங்கப் பரிக்ரஹிக்கும் கஜ பிபீலிகாதி சரீரங்களுக்கு அநுகூலமாகப் பரிணமித்து அந்தந்த தேஹத்தளவாக இருக்குமென்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். அது பொருந்தாது. ச்ருதியானது ஆத்மாவை நிர்விகாரனென்று முறையிடுகையாலே அந்த ச்ருதியோடு விரோதிக்கும். * **அம்ருதாக்ஷரம் ஹர:** * என்கிற ச்ருதியே நிர்விகாரத்வத்தை யோதுகின்ற ச்ருதியாகும். * **ஏஷோணுராத்மா** * **வாலாக்ரசதபாகஸ்ய** * இத்யாதி ச்ருதிகளும் 'ஆத்மா தேஹபரிமாணன்' என்கிற வாதத்திற்கு விரோதிகளே. ஆத்மா தேஹபரிமாணனென்கிற பக்ஷம் ச்ருதிவிருத்தம் என்பதுமட்டுமே யன்று; யுக்தி விருத்தமுமாகும். எங்ஙனே யென்னில்; யோகஸித்தி வாய்ந்தவர்களாய், ஸௌபரியைப் போலே ஏக காலத்திலே பற்பல தேஹங்களைப் பரிக்ரஹிக்குமவர்களுக்கு, தங்களுடைய ஸ்வரூபத்தை அநேகமாகச் சின்ன பின்னமாக்கிக்கொண்டு அந்தந்த தேஹங்களைப் பரிக்ரஹிக்கவேண்டி வருமாதலால் தேஹபரிமாணனென்னும் பக்ஷத்தில் யோகிகளின் ஸ்வரூபத்திற்கு சைதில்யம் வரும். பரகாயப்ரவேச முகத்தாலே அனேக சரீரங்களைப் பரிக்ரஹிக்கிற யோகிகளின் ஸ்வரூபத்திற்கு—ஸ்தூலமான சரீரத்தை விட்டு ஸூக்ஷ்மமான சரீரத்தைப் பரிக்ரஹிக்குமளவில் இதுக்கெல்லாம் அது அவகாசம் போதாமையாலே சைதில்யம் வருமென்றுமுணர்க. * **ஏவஞ்சாத்மா அகார்த்ஸ்ந்யம்** * என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தில் சொல்லுகிறபடியே அல்பமஹத்பரிமாணங்களான கஜபிபீலிகாதி சரீரங்களை ஸ்வகர்மாநுகுணமாகப் பரிக்ரஹிக்குமவர்களுக்கு, கஜ சரீரத்தைவிட்டுப் பிபீலிகா சரீரத்தைப் பரிக்ரஹிக்குமளவில் யானையுடலோடொத்த பரிமாணமாயிருக்குமந்த ஸ்வரூபத்துக்கு எறும்பு சரீரம் அவகாசம் போதாமையாலே சைதில்யம் வருமென்றுமுணர்க. (23 - 25)

**26. ஜ்ஞாநாச்ரயமாகையாவது - ஜ்ஞாநத்துக்கிருப்பிடமாயிருக்கை.**

26. "ஜ்ஞானமே ஆத்மா" என்றும், ஜ்ஞானத்திற்கு ஆச்ரயம் ஆத்மா என்றும் உபநிஷத்து முதலிய பிரமாணங்களினுல் அறிகின்றோம். ஜ்ஞானமே ஆத்மா என்பதைப்பற்றிப் பிறகு பேசலாகும். ஜ்ஞானத்திற்கு ஆச்ரயம் ஆத்மா என்பதுபற்றி இப்போது நிருபணமாகின்றது. ஆத்மா ஞானத்திற்கு இருப்பிடமாயிருக்கும். தீபமும் அதன் ஒளியுமாகிய இரண்டும் தேஜோத்ரவ்யமாயிருக்கச் செய்தேயும் தீபமானது ஒளிக்கு ஆச்ரமாயிருப்பதுபோல, ஆத்மா தானும் ஜ்ஞாந ஸ்வரூபனுயிருக்கச்செய்தே தன்னுடைய தருமமான ஞானத்திற்குத் தன்னை யொழியத் தனிப்பட்டிருத்தலாவது, தனிப்பட்டுத் தோன்றுதலாவது இல்லாதபடி தான் ஆதாரமாயிருத்தலே ஜ்ஞாநாச்ரயத்வமாகும். * விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத் * ஜாநாத்யேவாயம் புருஷ: * என்பவை முதலான பிரமாணங்களினுல் ஆத்மா ஜ்ஞாநாச்ரய பூதனென்பது திண்ணமாக அறியப்படும். .. ... (26)

**27. ஆத்மா ஜ்ஞாநத்துக்கிருப்பிடமன்றிக்கே ஜ்ஞாந மாத்ரமாகில்.**

**28. நானறிவு என்று சொல்லவேணும், நானறியாநின்றே னென்னக்கூடாது.**

27, 28. [ஆத்மா ஜ்ஞான மாத்ரமே யல்லனென்பது நிருபிக்கப்படுகிறது] பௌத்தர் முதலான சில புறமதத்தவர்கள் இப்படி ஆத்மா ஜ்ஞாநாச்ரயபூதனென்பதை இசையாதே ஜ்ஞாந மாத்ரமென்று சொல்லுவதுண்டு; அது பிசகு. ஆத்மாவுக்கு ஜ்ஞாநாச்ரயத்வ மன்றிக்கே கேவலம் ஞானமாயிருக்குமதுவே யுள்ளதாகில் 'நான் இதை யறியா நின்றேன்' என்று உலகத்தில் ஸர்வ ஸம்ப்ரதிபந்நமாகக் காண்கிற வ்யவஹாரம் அஸங்கதமாக வேண்டிவரும். 'நான் அறிவு' என்று தன்னை ஜ்ஞாந மாத்ரமாகவன்றே சொல்லிக்கொள்ளவேண்டும். இப்படிப் பட்ட வியவஹாரம் ஒரு வ்யக்தியினிடத்தும் காண்பதில்லை. 'இவ்வர்த்தத்தை நானறியா நின்றேன்' 'இவ்விஷயத்தை நானறிந்துகொண்டேன்' என்றிப்படியே வ்யவஹாரங்கள் எங்கும் காண்கையாலே, இவ்விஷயத்தை க்ரஹிப்பதானதொரு ஜ்ஞாநத்திற்குத் தான் ஆச்ரயமென்னுமிடம் நன்கு தெரிகின்றதன்றே. இப்படி ஆத்மாவினுடைய ஜ்ஞாத்ருத்வம் ப்ரத்யக்ஷ ஸித்தமாகையாலே கண்ணழிவற்றதென்று கொள்ளக்கடவது. * அஹமிதமபிவேத்மீதி ஆத்மவித்த்யோர் விபேதே ஸ்புரதி யதி ததைக்யம் பாஹ்யமப்யேகமஸ்து * [ஸ்ரீரங்கராஜஸ்தவம் உத்தர சதகம்-16] என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம். .... (27, 28)

**29. ஜ்ஞாதாவென்ற போதே, கர்த்தா போக்தா வென்னுமிடம் சொல்லிற்றுய்த்து.**

**30. கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் ஜ்ஞாநாவஸ்த்தா விசேஷங்களாகையாலே.**

29, 30. ஆத்மாவை ஜ்ஞாதாவென்று தெரிந்துகொண்டபோதே கர்த்தா வென்றும் போக்தாவென்றும் தெரிந்துகொள்ளவேணும். இன்னது ஹேயம். இன்னது உபாதேயம் என்கிற ப்ரதிபத்திக்கு ஜ்ஞாத்ருத்வமானது ஹேதுவாயிருக்குமாகையாலே ஹேயங்களை விடுகையிலும் உபாதேயங்களைப் பற்றுகையிலும் சிகீர்ஷையுண்டாகி [முயற்சியுண்டாகி என்றபடி] அது அடியாகக் கர்த்ருத்வ முண்டாகிறது. எவன் ஒரு காரியத்தைச் செய்கிருனே அவன் அதனுலுண்டாகும்

பலனை யனுபவிப்பவனுமாகிறுன். ஆகவே கர்த்தாவானபோதே போக்தாவாகிறுன். ஆனபின்பு ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வம் சொன்னது கர்த்ருத்வ போக்த்ருத்வங்களும் சொன்னபடியாகக் குறையில்லை. ... ... ... (29, 30)

31. சிலர், குணங்களுக்கே கர்த்ருத்வமுள்ளது, ஆத்மாவுக்கில்லை யென்றுர்கள்.

32. அப்போதிவனுக்கு சாஸ்த்ரவச்யதையும், போக்த்ருத்வமும் குலையும்.

31, 32. [கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கன்று, ஆத்மாவுக்கே யென்று நிருபிக்கப் படுகிறது] இப்படி ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமா யிருந்துள்ள கர்த்ருத்வத்தை ஸாங்க்யர்கள் ப்ரக்ருதிக்கேயுள்ளதாகக் கொள்ளுகின்றுர்கள்; பகவத்கீதையில் * கார்ய காரணகர்த்ருத்வே ஹேது; ப்ரக்ருதி ருச்யதே, புருஷஸ் ஸுகதுஃக்காநாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே * என்று சொல்லுகையாலே கர்த்ருத்வமுள்ளது ப்ரக்ருதிக்கே; ஆத்மாவுக்குக் கர்த்ருத்வமன்றிக்கே போக்த்ருத்வமேயுள்ளது என்று ஸாங்க்யர்கள் நிருபிக்கின்றுர்கள் அது பிசகு. ப்ரக்ருதிக்கே கர்த்ருத்வமாய் ஆத்மாவுக்கு அது இல்லையாகில் ஆத்மாவுக்கு சாஸ்த்ர வச்யத்வமும் போக்த்ருத்வமும் குலைந்ததாகும். சாஸ்த்ர வச்யத்வமாவது—விதி நிஷேத ரூபமான சாஸ்த்ரத்துக்குத் தான் அதிகாரியாய்க் கொண்டு அதின் வசத்திலே நடக்க வேண்டுகையாம். சாஸ்த்ரங்களானவை ஒரு புறத்திலே 'இதைச் செய், இதைச் செய்' என்று கர்த்தவ்யங்களை விதிக்கும்; மற்றொரு புறத்திலே 'இதைச் செய்யாதே; இதைச் செய்யாதே' என்று நிஷித்தங்களை விலக்கும். முறையே * ஸத்யம் வத, தர்மம் சர * இத்யாதிகளையும் * நாப்ஸு மூத்ரபுரீஷம் குர்யாத், ந நஷ்டவேத், ந விவஸநஃ ஸ்நாயாத் * இத்யாதிகளையும் காண்பது. இத்தகைய விதி நிஷேதங்கள் சேதநனைப்பற்றி அவதரித்தனவே யல்லது ப்ரக்ருதியைப்பற்றி அவதரித்தனவல்ல. ப்ரக்ருதிக்கேதான் கர்த்ருத்வமென்னில், சாஸ்த்ரங்களில் காணும் விதிநிஷேதங்கள் ப்ரக்ருதியை நோக்கியவை யென்னவேணும். ஆகவே சாஸ்த்ரவச்யத்வம் சேதநனுக்குக் குலைந்ததாகும். அன்றியும் விஹிதங்களான ஸத்கருமங்களைச் செய்து, நிஷித்தங்களான துஷ்கருமங்களை விலக்கி வர்த்திக்கின்ற சேதநன் நல்ல பலன்களை யனுபவிக்கையும் விஹிதங்களை விட்டு நிஷித்தங்களைச் செய்து திரியும் சேதநன் தீய பலன்களை யனுபவிக்கையும் ஸர்வ ஸம்ப்ரதிபந்நமாயிருக்கின்றது; இப்படிப்பட்ட ஸுக துக்க ரூப பலபோக்ருத்வமும் சேராமற் போகும். பலசொல்லி என்? சேதநன் கர்த்தாவாகாதபோது சாஸ்த்ரமே வீண் என்னவேண்டி வரும். * சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி * என்ற பூர்வமீமாம்ஸாந்யாயமும், * கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * என்ற சாரீரக மீமாம்ஸா ஸூத்ரமும் இங்கு அநுஸந்தேயம். அன்றியும், *ஸ்வர்க்ககாமோ யஜேத * என்றும். * முமுக்ஷுஃ ப்ரஹ்ம உபாஸீத * என்றும் பல பல வகையான விதிகளைக் காணு நின்றேம். ஸ்வர்க்கம் மோக்ஷம் முதலிய பலன்களை எந்த சேதநன் அநுபவிக்க வேண்டியவனே அவனையேயன்றே கர்த்தாவாக சாஸ்த்ரம் நியோகிக்கிறது ஆகவே பலனைப் புசிப்பவனே கர்த்தாவாக வேணுமென்பது புநருக்தம். அசேதனத்துக்குக் கர்த்ருத்வமாகில் சேதனனைக் குறித்து விதிக்கவேகூடாது. சாஸநம் பண்ணுவது எதுவோ அதற்கு சாஸ்த்ரமென்று பெயர். சாஸனமாவது ப்ரவர்த்தநம்; சாஸ்த்ரம்

ப்ரவர்த்தநம் பண்ணுவதாவது அறிவையுண்டு பண்ணும் முகத்தாலேயாம். அசேதநமான ப்ரக்ருதிக்கு அறிவையுண்டுபண்ண முடியா தன்றே. ஆகவே சாஸ்த்ரம் ஸார்த்தகமாக வேணுமானல் போக்தாவான சேதநனுக்கே கர்த்ருத்வ மாக வேணும். இவ்விஷயமெல்லாம் * கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் விசதம். .... .... .... (31, 32)

### 33. ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளில் கர்த்ருத்வம் ஸ்வரூப ப்ரயுக்தமன்று.
### 34. குண ஸம்ஸர்க்க க்ருதம்.

33, 34. ஆனல் இந்த சேதனனுக்கு எல்லா விதமான கர்த்ருத்வமும் ஸவரூப ப்ரயுக்தமாமோ வென்னில்; அன்னபாநாதிகளான லௌகிக போகங்களை யுத்தேசித்துப் பண்ணும் ஸ்வவ்யாபாரங்களில் கர்த்ருத்வம் ஔபாதிகமாகையாலே ஸ்வரூப ப்ரயுக்தமன்று. ஆனல் அது இவனுக்கு வந்தபடி தான் என்னென்னில்; ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களினுடைய ஸம்ஸர்க்கத்தாலே யுண் டானதென்று சாஸ்த்ரம் சொல்லும். * ப்ரக்ருதே: க்ரியமாணுநி குணை: கர்மாணி ஸர்வச;, அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே * என்கிற கீதாவசனம் இங்கே அநுஸந்திக்கத் தக்கது. ... ... ... (33)

### 35. கர்த்ருத்வந்தா னீச்வராதீநம்.

35. ஸாங்கியர்களின் பக்ஷத்தை நிராகரித்து ஆத்மாவுக்கே கர்த்ருத்வ முள்ளதென்று ஸாதிக்கப்பட்டது கீழ்; இனி இந்த கர்த்ருத்வமானது ஸ்வாதீநமா? பராதீனமா? என்கிற சங்கையிலே சொல்ல வேண்டியவை சொல்லப்படுகின்றன. ஆத்மாவின் கர்த்ருத்வம் ஈச்வராதீனமென்று நிரூபிக்கப்படுகிறது. சாஸ்த்ரம் அர்த்தவத்தாக வேண்டியதற்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ள வேணும். அந்த கர்த்தாவுக்கு தர்மமான ஜ்ஞானம் இச்சை ப்ரயத்னம் ஆகிறவிவை பகவானுக்கு அதீனங்களா யிருக்கையாலும், பகவானுடைய அநுமதியில்லாமல் அந்த ஞானம் முதலியவை க்ரியா ஹேதுவாக மாட்டாமையாலும் இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீநமென்று கொள்ளவேணும். இங்ஙனே கொண்டால் புண்ய பாபங்கள் ஈச்வரனுக்கேயாக வேண்டாவோ? சேதநனுக்கு ஆக இடமில்லையே! என்கிற சங்கை உதிக்கக்கூடும். "சேதனனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தை யபேக்ஷித்து ஈச்வரன் அநுமதி பண்ணுகையாலே அந்த க்ரியையைப் பற்றி வரும் புண்ய பாபங்களும் சேதநனுக்கேயாகின்றன" என்று நம் பூருவாசாரியர்கள் அருளிச் செய்கின்றனர். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் * பராத் து தச்ச்ருதே: * என்கிற ஸூத்ரத்தினல் ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்று சொல்லப்பட் டிருப்பதும், * க்ருதப்ரயத்தாபேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்த அவையர்த்யாதிப்ய: * என்கிற ஸூத்ரத்தினல் சங்கா பரிஹாரம் செய்யப்பட்டிருப்பதும் குறிக்கொள்ளத் தக்கது. விதி நிஷேத சாஸ்த்ரங்கள் வீணுகாமைக்காக இச்சேதநன் பண்ணின ப்ரதம ப்ரயத்நத்தை யபேக்ஷித்துக் கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கிருனென்ற தாயிற்று. இதைச் சிறிது விவரிப்போம் எல்லா சேதநர்களுக்கும் ஜ்ஞாத்ருத்வம் இயல்பாகையாலே பொதுவாக ப்ரவ்ருத்தியிலும் நிவ்ருத்தியிலும் உரிமை தடையற் றிருக்கும். இத்தகைய உரிமையை நிர்வஹிக்கைக்காக ஈச்வரன் அந்தராத்மாவாய்க்

கொண்டு நிற்பன. அவனாலே யுண்டாக்கப்பட்ட ஸ்வரூப சக்தியை யுடையவனை சேதநன் அந்தந்த பதார்த்தங்களிலே ஜ்ஞான சிகீர்ஷா ப்ரயத்நங்களை யுண்டாக்கிக்கொண்டிருப்பன். அவ்விடத்திலே மத்யஸ்தனாகையாலே உதாஸீநரைப் போலே யிருக்கிற பரமாத்மாவானவன் அந்த சேதநனுடைய பூர்வ வாஸநாநுரூபமான ப்ரவ்ருத்தி நல்லதோ தீயதோ, அதில் அநுமதியையும் அநாதரத்தையுமுடையனாய்க் கொண்டு. இவன் நல்லது செய்யுமளவில் அநுக்ரஹத்தையும், தீயது செய்யுமளவில் நிக்ரஹத்தையும் பண்ணா நிற்பானாய் ஸுகதுக்கங்களை அவ்வோ சேதநர்களுக்குக் கொடா நிற்பன்.

நடாதூரம்மாளருளிச் செய்த தத்வஸார மென்னும் க்ரந்தத்தில் * ஆதாவீச்வர தத்தயைவ புருஷஸ் ஸ்வாதந்த்ர்ய சக்த்யா ஸ்வயம தத்தத்ஜ்ஞாந சிகீர்ஷணப்ரயதநாநி உத்பாதயந் வர்த்ததே. தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய விததத் தந்நிக்ரஹா நுக்ரஹௌ தத்தத்கர்மபலம் ப்ரயச்சதி ததஸ் ஸர்வஸ்ய பும்ஸோ ஹரி: * என்கிற ச்லோகத்தின் பொருள் இவ்விடத்தில் நன்கு தெளிவு பிறப்பிக்கும், [இதன் பொருள் வருமாறு :—ஸர்வ நியாமகனாய் ஸர்வாந்தராத்மாவான ஸர்வேச்வரன் ஆதியிலே தனக்கு உண்டாக்கிக் கொடுத்த ஜ்ஞாத்ருத்வ ரூபமான ஸ்வாதந்த்ரிய சக்தியாலே சேதநன்தானே அவ்வோ விஷயங்களிலே ஜ்ஞான சிகீர்ஷாப்ரயத்நங்களை உண்டுபண்ணிக் கொண்டிருப்பன். அவ்விடத்தில் அசாஸ்த்ரீய ப்ரவ்ருத்திகளிலே உபேக்ஷித்தும், சாஸ்த்ரீய ப்ரவ்ருத்திகளிலே அநுமதி பண்ணியும் அவ்வோ விஷயங்களிலே நிக்ரஹாநுக்ரஹங்களைப் பண்ணா நின்று கொண்டு அவ்வோ கர்ம பலனையும் ஸர்வேச்வரன் கொடா நிற்பன் என்கை ]

## விசேஷ சங்கைக்குப் பரிஹாரம்

* ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி யம் ஏப்யோ லோகேப்ய உந்நிநீஷதி; ஏஷ ஏவ அஸாது கர்ம காரயதி, யம் அதோ நிநீஷதி * என்று உபநிஷத்தில் ஓதப்பட்டிருக்கிறது. இதன் பொருளாவது-எம்பெருமான் எந்த சேதநனை உயர்கதியை யடைவிக்க விரும்புகிறானோ; அவனைக்கொண்டு நல்ல காரியங்களைச் செய்விக்கிறான்; எந்த சேதநனை நீச கதியை யடைவிக்க விரும்புகிறானோ, அவனைக்கொண்டு கெட்ட காரியங்களைச் செய்விக்கிறானென்பதாம். ஆகவே நல்ல எண்ணத்தாலும் கெட்ட எண்ணத்தாலும் ஸர்வேச்வரன் தானே ஸாதுவாயும் அஸாதுவாயுமுள்ள கருமங்களைப் பண்ணுவியா நிற்குமென்கிற விது எங்ஙனே பொருந்துமென்று சங்கை உதிப்பதுண்டு. இதற்குப் பரிஹாரம் ஸ்ரீபாஷ்யகாரரே நிரூபித்தருளினார். கேண்மின். மேலே காட்டின உபநிஷத்தின் விஷயம் ஸர்வஜன ஸாதாரணமன்று. யாவனொருவன் பகவத் விஷயத்தில் மிக மிக அதிகமான ஆநுகூல்யத்திலே ஒருப்பட்டவனாய்க் கொண்டு ப்ரவர்த்திக்கின்றானோ, அவனை அநுக்ரஹியா நின்று கொண்டு பகவான் தானே தன்னைப் பெறுவதற்கு ஸாதனங்களாயும் அதிகல்யாணங்களாயுமுள்ள கருமங்களிலே ருசியை ஜநிப்பிக்கிறானென்றும், யாவனொருவன் மிக மிக ப்ராதிகூல்யத்திலே ஒருப்பட்டவனாய்க்கொண்டு ப்ரவர்த்திக்கின்றானோ அவனை ஸ்வப்ராப்தி விரோதிகளாயும் அதோகதி ஸாதனங்களாயுமுள்ள கருமங்களிலே ஸக்தனாக்குகிறானென்றும் அந்த உபநிஷத் வாக்யத்திற்குப் பொரு

ளாம். ஆகவே பொருந்தாமை யொன்றுமில்லை யென்பர். ஆனபின்பு சேதன ப்ரவ்ருத்தியில் எம்பெருமானுக்கு அநுமந்த்ருத்வமே [அதாவது அநுமதி யளிக்குந் தன்மையே] ஸர்வஜந ஸாதாரணம்: ப்ரயோஜகத்வம் விசேஷ விஷயம் என்று கொள்ளக்கடவது. ... ... ... ... ... (35)

**36. ஜ்ஞாநாச்ரயமாகில் சாஸ்த்ரங்களிலே யிவனை ஜ்ஞானமென்று சொல்லுவானென் னென்னில்.**

**37. ஜ்ஞாநத்தை யொழியவும் தன்னையறிகையாலும், ஜ்ஞாநம் ஸாரபூத குணமாய் நிரூபக தர்மமாயிருக்கையாலும் சொல்லிற்று.**

36, 37. [ஆத்மாவை ஜ்ஞானமென்கைக்குக் காரணம் சொல்லுகிறது,] ஆத்மா ஜ்ஞானத்திற்கு ஆச்ரயமாயிருக்குமாகில் சாஸ்த்ரங்களில் இவனை ஜ்ஞாநம் என்கிற சொல்லாலேயே சொல்லியிருப்பது ஏன்? * யோ விஜ்ஞாநே * விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே * என்பவை முதலான ச்ருதிகளில் கேவலம் விஜ்ஞாநமென்றே ஆத்மாவைச் சொல்லியிருக்கிறதே; இது எதனாலே? என்னில்; ஜ்ஞானமானது தன்னுடைய ஆச்ரயத்திற்குத் தான் ப்ரகாசகமாயிருப்பதுபோல ஜ்ஞானத்தை யபேக்ஷியாமல் தனக்குத்தானே ப்ரகாசிக்கையாலும், ஜ்ஞானம் இவனுக்கு ஸார மான குணமாகையாலே ஸ்வரூபாநுபந்தியாய் ஸ்வரூப நிரூபக தர்மமாகையாலும் அங்ஙனே சொல்லிற்று. .... ... ... ... (36, 37)

**38. நியாம்யமாகையாவது - ஈச்வரபுத்த்யதீநமாக எல்லா வ்யாபாரங்களு முண்டாம்படி யிருக்கை.**

38. கீழ் நாலாவது சூர்ணையில் ஆத்ம ஸ்வரூபமிருக்கும்படியை ப்ரதிஜ்ஞை பண்ணுகையில் "தேஹேந்த்ரிய மநஃ ப்ராண புத்தி விலக்ஷணமாய் அஜடமாய் ஆனந்தரூபமாய் நித்யமாய் அணுவாய் அவ்யக்தமாய் அசிந்த்யமாய் நிரவயவமாய் நிர்விகாரமாய் ஜ்ஞாநாச்ரயமாய், ஈச்வரனுக்கு நியாம்யமாய் தார்யமாய் சேஷமா யிருக்கும்" என்று சொல்லிற்று. அதில் "ஜ்ஞாநாச்ரயமாய்" என்ற வளவும் விவரித் தாயிற்று. இனி "ஈச்வரனுக்கு நியாம்யமாய்" என்றவிடம் விவரிக்கப்படுகிறது. சேதநன் ஈச்வரனுக்கு நியாம்யமாயிருக்கை யாவதென்னென்னில்; சரீரத்தினுடைய ஸகல ப்ரவ்ருத்திகளும் சரீரியினுடைய புத்த்யதீநமாக வுண்டாகிருப்போலே, சரீர பூதமான இவ்வாத்ம வஸ்துவினுடைய ஸகல வ்யாபாரங்களும் சரீரியான பரமாத் மாவினுடைய புத்த்யதீநமாகவே யுண்டாம்படியிருக்கை. .... .... (38)

**39. தார்யமாகையாவது - அவனுடைய ஸ்வரூப ஸங்கல்பங்களை யொழிந்தபோது தன் ஸத்தையில்லையாம்படி யிருக்கை.**

39. ஆத்மலக்ஷணசூர்ணையில் "ஈச்வரனுக்கு நியாம்யமாய்" என்ற வனந் தரம் "தார்யமாய்" என்றுள்ளது. 'ஈச்வரனுக்கு' என்றது இங்கும் அந்வயிக்கக் கடவது; ஈச்வரனுக்கு தார்யமாய் என்றதாயிற்று. அதாவது, ஈச்வரனுடைய ஸ்வரூப ஸங்கல்பங்களில்லாதபோது தன்ஸத்தை இல்லையாம்படியிருக்கை; ஈச்வரன் ஸகல சேதநாசேதநங்களையும் தன் ஸ்வரூப ஸங்கல்பங்களாலே நியமேந தரித்துக்கொண்டிருப்பதாக நூற் கொள்கை. இவ்வாத்மவஸ்து, தனக்கு நியமேந

தாரகமாய்க்கொண்டு தன் ஸத்தா ஹேதுவாயிருக்கிற அவனுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையும் ஸங்கல்பத்தையுமொழிந்தபோது தன் ஸத்தாஹாநி பிறக்கும்படியிருக்கையே ஈச்வரனுக்கு தார்யமாயிருக்கையாம். .... ... (39)

**40 சேஷமாகையாவது - சந்தநகுஸுமதாம்பூலாதிகளைப் போலே அவனுக்கு இஷ்ட விநியோகார்ஹமாயிருக்கை.**

40. ஆத்ம லக்ஷண சூர்ணையில் "சேஷமாயிருக்கும்" என்று முடிவாகச் சொல்லிற்று. சேஷமாயிருக்கையாவதென்னென்னில்; சந்தனம் புஷ்பம் தாம்பூலம் முதலான வஸ்துக்கள் ஸ்வார்த்தமாயிருக்கை யென்பதில்லாமல் பிறர்க்கே உறுப்பாய் அவர்களுக்கு இஷ்ட விநியோகத்திற்கு உரித்தாயிருக்குமாபோலே ஆத்மாவும் சேதநப்பொருளாயிருக்கச் செய்தேயும் எம்பெருமானுக்கு இஷ்ட விநியோகார்ஹமாயிருக்கை. ஒருவனுக்கு சந்தன புஷ்ப தாம்பூலாதிகள் கிடைத்தால் அவற்றை அவன் தான் உபயோகப்படுத்திக் கொள்வதோடு நில்லாமல் தனக்கு வேண்டினவர்களுக்கும் உபயோகப்படுத்திக்கொள்ளக் கொடுப்பதுண்டே; இதுவாயிற்று யதேஷ்ட விநியோகார்ஹத்வம். இவ்வண்ணமாகவே எம்பெருமான் தானும் சேதநனைத் தனக்கு அதிசயகரனாக உபயோகப்படுத்திக் கொள்வதோடு நில்லாமல் * அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன் * என்கிறபடியே தனக்கு வேண்டினவர்களுக்கும் உறுப்பாக்கலாம்படி யிருக்கையாயிற்று இது. சேதநனான ஜீவாத்மாவுக்கு அசேதநங்களான சந்தன குஸும தாம்பூலாதிகளை த்ருஷ்டாந்தமாகச் சொன்னது பாரதந்த்ரியாதிசயத்தைத் திருவுள்ளம்பற்றியென்க. முமுக்ஷுப்படியில் திருமந்த்ர ப்ரகரணத்தில் நமச்சப்தார்த்த விவரணத்தில் (91) "ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்து பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்குமென்று மறப்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே அசித்தைப்போலே * தனக்கேயாக எனைக் கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்" என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம். .... ... ... (40)

**41. இதுதான் க்ருஹ க்ஷேத்ர புத்ர களத்ராதிகளைப் போலே, ப்ருதக்ஸித்த்யாதிகளுக்கு யோக்யமாம்படி யிருக்கையன்றிக்கே, சரீரம் போலே அவற்றுக்கு அயோக்யமாயிருக்கை.**

41. ஆத்மவஸ்து ஈச்வரனுக்கு சேஷமாமிடத்தில் எங்ஙனே யிருக்கும்படி? ஒருவனுக்கு க்ருஹம் க்ஷேத்ரம் முதலானவையும் சேஷமாகின்றன. தன்னுடைய சரீரமும் சேஷமாகின்றது ஆகச்செய்தேயும் க்ருஹ க்ஷேத்ராதிகள் தனிப்பட்டிருக்கைக்கு அர்ஹங்களாய், சரீரம் அப்படி யிருக்கைக்கு அநர்ஹமாய் இருக்கக் காண்கிறோம்; இவ்வாத்ம வஸ்து எம்பெருமானுக்கு சேஷமாமிடத்தில் இருக்கும்படி யெங்ஙனே? என்னில்; க்ருஹம் க்ஷேத்ரம் புத்ரன் களத்ரம் தனதான்யங்கள் ஆராமங்கள் தாஸதாஸீவர்க்கங்கள் சேஷியானவனை விட்டுப் பிரிந்தும் காணப்படுவது போலல்லாமல் சரீரம் போலே தனியிருப்புக்கு உரித்தாகாமலிருக்கும். ஆத்ம லக்ஷண சூர்ணையில் பரமாத்மாவுக்கு சரீரமாயிருக்குமென்னுமது சொல்லப்படாமலிருந்தாலும், சரீர லக்ஷணமான நியாம்யத்வ தார்யத்வ சேஷத்வங்கள் சொன்னபோதே சரீரத்வம் அர்த்தாத் சொல்லப்பட்டதாயிற்றென்று கொள்ளக்கடவது. ஆக இவ்வளவும் ஆத்ம ஸ்வரூப சோதநம் பண்ணிற்று. .... (41)

**42. ஆத்ம ஸ்வரூபந்தான் பத்த முக்த நித்யரூபேண மூன்றுபடிப் பட்டிருக்கும்.**

**43. பத்தரென்கிறது ஸம்ஸாரிகளை.**

**44 முக்தரென்கிறது ஸம்ஸார ஸம்பந்தமற்றவர்களை.**

**45. நித்யரென்கிறது - ஒருநாளும் ஸம்ஸரியாத சேஷசேஷாசநாதிகளை**

42 - 45. ஆத்மஸ்வரூபமானது மூன்றுபடிப்பட்டிருக்கும்; அநாதியான அசித்ஸம்பந்தத்தை யுடையவர்களாய் ஸம்ஸாரிகளாயிருக்குமவர்கள் பத்தாத்மாக்களெனப்படுவர். ஸம்ஸாரஸம்பந்தமற்று நலமந்தமில்லதோர் நாட்டிலே சென்று சேர்ந்தவர்கள் முக்தாத்மாக்களெனப்படுவர். ஒரு நாளும் ஸம்ஸார நிலத்தை எட்டிப் பாராதவர்களான அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகள் நித்யாத்மாக்களெனப்படுவர். பகவதநுபவத்தில் ருசியற்றவர்களாய் எம்பெருமானை யடிபணிந்து ஸம்ஸார நிவ்ருத்தியை யுண்டாக்கிக்கொண்டு தேசவிசேஷத்திலே போய் ஸ்வ ஸ்வரூபாநுபவம் பண்ணியிருக்கும் கேவலரும் முக்தாத்மாக்களாகப் பரிகணிக்கப்படுவர்கள். ... ... .. ... (42, 45)

**46. ஜலத்துக்கு அக்நி ஸம்ஸ்ருஷ்ட ஸ்தாலீஸம்ஸர்க்கத்தாலே ஔஷ்ண்ய சப்தாதிகளுண்டாகிருப்போலே, ஆத்மாவுக்கும் அசித் ஸம்பந்தத்தாலே அவித்யாகர்ம வாஸநா ருசிகளுண்டாகின்றன.**

46. இயற்கையில் ஜ்ஞாநாநந்தாமல ஸ்வரூபனான ஆத்மாவுக்கு ஸம்ஸார பந்த ஹேதுவான அவித்யை முதலிய தோஷங்கள் ஸம்பந்திக்கிறபடி எங்ஙனே யென்னில்; இயற்கையால் விகார மற்றதாய்க் குளிர்ச்சிபெற்றிருக்குமதான ஜலத்திற்கு நெருப்போடே சேர்ந்தவொரு பாண்டத்தினுடைய சேர்க்கையினாலே சூடும் ஒலியுமாகிற விகாரங்கள் உண்டாகிருப்போலே, இயற்கையில் ஜ்ஞாநாநந்தாமல ஸ்வரூபனான ஆத்மாவுக்கு ஸத்வரஜஸ் தமோகுணங்களுக்கிருப்பிடமான அசித்தின் ஸம்பந்தத்தாலே அவித்யை, கருமம், வாஸனை, ருசி ஆகிற இவை உண்டாகின்றன ... .. ... ... ... ... (46)

**47. அசித்துக் கழிந்தவாறே அவித்யாதிகள் கழியுமென்பர்கள்.**

47. இங்ஙனே ஆத்மாவுக்கு வந்தேறியான அவித்யை முதலானவை எப்போது கழிவதென்னில்; 'காரணம் நிவ்ருத்தமானல் கார்யம் நிவ்ருத்தமாகும்' என்பது முறைமையாதலால் அசித்ஸம்பந்தம் காரணமாக வந்த இந்த அவித்யாதிகள் அந்த அசித்ஸம்பந்தம் கழிந்தவாறே கழியுமென்பர் தத்வ வித்துக்கள். (47)

**48. இம் மூன்றும் தனித்தனியே அனந்தமாயிருக்கும்.**

48. கீழே மூவகைப்பட்டவர்களாகச் சொல்லப்பட்ட ஆத்மவர்க்கம் இத்தனை சேதநரென்று எண்ணிச் சொல்லக்கூடியதாயிருக்குமோ வென்னில்; இராது. ஒவ்வொரு வகுப்பும் தனித்தனியே எண்ணித் தலைக்கட்ட முடியாதபடி அனந்தமாயிருக்கும். ... ... ... ... ... (48)

**49. சிலர் ஆத்மபேதமில்லை; ஏகாத்மாவேயுள்ளதென்றார்கள்.**

**50. அந்த பக்ஷத்தில், ஒருவன் ஸுகிக்கிற காலத்திலே வேறே யொருவன் துஃகிக்கக்கூடாது.**

49, 50. கீழே சொல்லப்பட்டதான 'ஜீவாத்மாக்கள் அனந்தர்களாயிருப்பர்கள்' என்னும் விஷயத்திற்கு விரோதியாக, ஆத்மாக்களில் பேதமில்லையென்றும் ஒரே ஆத்மாதானுள்ள தென்றும் சில குத்ருஷ்டிகள் சொல்லுவதுண்டு; அது அயுக்தம், ஏனெனில், அப்படி ஆத்மபேதமில்லாத பக்ஷத்தில் ஒருவன் ஸுகப்பட்டுக்கொண்டிருக்கிற காலத்தில், மற்றொருவன் துக்கப்பட்டுக்கொண்டிருப்பதாகக் காண்கிறவிது கூடாமற்போகும். ஸுகமும் துக்கமுமாகிற விரண்டும் ஒரே ஆச்ரயத்தைப்பற்றி யிருக்குமாகில் அவ்விரண்டையும் அனுபவிப்பவன் ஒருவனேயாகவேணுமன்றோ. அப்படி காணப்படவில்லையே. ஆக ஸுக துக்கங்கள் நியதங்களாகக் காண்கையாலே 'ஆத்ம பேதமில்லை, ஏகாத்மாவே யுள்ளது' என்பது பிசகு; ஆத்ம பேதம் அங்கீகரித்தேயாகவேணும். ... — (49, 50)

51. அது தேஹ பேதத்தாலே யென்னில்.

52. ஸௌபரி சரீரத்திலுமது காணவேணும்.

51, 52. கீழ்ச் சொன்ன ஆபத்திக்கு தேஹ பேதத்தைக் கொண்டு பரிஹாரம் செய்து விடலாம்; ஸுக துஃக்க வ்யவஸ்தைக்காக ஆத்ம பேதம் கொள்ள வேண்டிய ஆவச்யகதையில்லை, தேஹ பேதம் கொள்ளுகிறோமாகையாலே அந்த தேஹ பேதமே ஸுக துஃக்க வ்யவஸ்தைக்கு ஹேதுவாகலாம் என்னில்; அதுவும் அஸாது; தேஹ பேதம் ஸுக துஃக்க நியமத்துக்கு ஹேதுவாகில், அநேக தேஹங்களைப் பரிக்ரஹித்த ஸௌபரியின் சரீரத்திலும் அந்த நியமம் காணவேண்டியதாகும். அங்கு அப்படியில்லையே. ஆதலால் தேஹ பேதத்தைக் கொண்டு நிர்வாஹம் பண்ணமுடியாது. ஆத்ம பேதம் கொண்டேயாகவேணுமென்றதாயிற்று. (52)

53. ஒருவன் ஸம்ஸரிக்கையும், ஒருவன் முக்தனுகையும், ஒருவன் சிஷ்யனுகையும், ஒருவன் ஆசார்யனுகையும் கூடாது.

54. விஷம ஸ்ருஷ்டியுங்கூடாது.

53, 54. ஆத்மபேதம் கொள்ளவேணுமென்கைக்குக் கீழ்ச் சொன்ன அநுபபத்தி தவிர மற்றுஞ் சில அநுபபத்திகளுமுண்டு; 'ஆத்ம பேதமில்லை, ஆத்மா வொருவனே யுளன்' என்னும் பக்ஷத்தில், ஒருவன் ஸம்ஸாரியாயிருக்கையும் ஒருவன் முக்தனுகையும், ஒருவன் சிஷ்யனுய் வந்து உபஸத்தி பண்ண ஒருவன் ஆசார்யனுயிருந்து அவனுக்கு உபதேசிக்கையுமாகிற இவை கூடாது. ஏகாத்மாவாகில் தேவதிர்யங் மநுஷ்யாதி ரூபத்தாலே ஸுகோத்தரமாகச் சிலவும், துஃக்கோத்தரமாகச் சிலவும்; ஸுக துக்க மிச்ரமாகச் சிலவும் ஆக விப்படி லோகத்தில் பதார்த்தங்களை விஷமமாக ஸர்வேச்வரன் ஸ்ருஷ்டித்திருப்பதும் பொருந்தாது. ஜீவபேதமும் கர்ம தாரதம்யமுமன்றோ விஷம ஸ்ருஷ்டிக்கு ஹேது. ... (53, 54)

55. ஆத்மபேதம் சொல்லுகிற ச்ருதியோடும் விரோதிக்கும்.

55. கீழே யுக்தியாலே அநேக விரோதங்களைக் காட்டினது கிடக்க; சாஸ்த்ர விரோதமும் ப்ரபலமாகவுண்டு. ஏகாத்மா வென்கிற பக்ஷமானது *நித்யோ நித்யாநாம் சேதநச் சேதநாநாம் ஏகோ பஹூநாம் யோ விததாதி காமாந்* என்று ஆத்ம பேதத்தைச் சொல்லுகிற ச்ருதிக்கும் சேராது. ... ... (55)

**56. ச்ருதி. ஔபாதிக பேதத்தைச் சொல்லுகிறதென்ன வொண்ணுது.**
**57. மோக்ஷ தசையிலும் பேதமுண்டாகையாலே**

56, 57. ச்ருதிகளில் பெரும்பாலும் ஆத்மாவைச் சொல்லுமிடங்களில் ஏகவசந நிர்தேசமே காண்கையாலே ஜீவைகத்வ ப்ரதிபாதநம் பண்ணுகிற அனேக ச்ருதிகளோடு விரோதிக்குமதான கீழே காட்டப்பட்ட ச்ருதிக்கு ஔபாதிக பேதத்தைச் சொல்லுவதில் தாத்பர்யம் கொள்ள வேணும்; (அதாவது தேவமநுஷ்யாதி பேதமும் காமக்ரோதாதி பேதமும்) என்னில்; இதுவும் சாஸ்த்ர விருத்தம், ஸர்வோ பாதிகளும் விடுபட்ட தசையான மோக்ஷ தசையிலும் 'ஸதா பச்யந்தி ஸூரயঃ' என்று ஆத்ம பாஹுள்யத்தை சாஸ்த்ரம் சொல்லுகையாலே. (56, 57)

**58. அப்போது தேவமநுஷ்யாதி பேதமும். காமக்ரோதாதி பேதமும் கழிந்து ஆத்மாக்கள் ஸ்வரூபம் அத்யந்தம் ஸமமாய் ஒருபடியாலும் பேதம் சொல்ல வொண்ணுதபடியிருந்ததேயாகிலும்;**
**59. பரிமாணமும் எடையும் ஆகாரமுமொத்திருக்கிற பொற்குடங்கள், ரத்னங்கள் வ்ரீஹிகள் தொடக்கமானவற்றுக்கு பெதமுண்டாகிறப்போலே ஸ்வரூபபேதமும் ஸித்தம்.**

58, 59. மோக்ஷத்தில் ஆத்ம பஹுத்வம் சாஸ்த்ரங்களால் தேறுவதாகக் கீழே சொல்லிற்று. இதன்மேல் ஒரு சங்கை யுண்டாகிறது. பல ஆத்மாக்கள் உண்டென்று நினைப்பதற்கு ஹேதுவாய் ஔபாதிகங்களாயிருந்துள்ள தேவ மநுஷ்யாதி பேதமும் காம க்ரோதாதி பேதமும் கழிந்து, ஆத்மாக்களின் ஸ்வரூபம் அத்யந்தம் ஸமமாய் ஒரு ப்ரகாரத்தாலும் பேதம் சொல்லுவதற்கு யோக்யதையில்லாத படியுள்ள மோக்ஷதசையில் ஆத்ம பேதம் எங்ஙனே ஸித்திக்கும்? என்று; இதற்குப் பரிஹாரமேதென்னில்; அளவும் எடையும் வடிவும் ஒத்திருக்கிற பொற் குடங்கள் ரத்னங்கள் நெற்கள் முதலான பொருள்களுக்கு பேதஸாதகமாயிருப்பதொரு லக்ஷணமில்லையே யாகிலும் அவற்றிலே பன்மை, காணப்படுவது அபலபிக்க முடியாதது: அதுபோலவே ஒருபடியாலும் பேதம் சொல்லவொண்ணுதபடி ஏகாகாரமாயிருக்கின்ற முக்தாத்மாக்களுக்கும் ஸ்வரூப பேதம் ஸித்திக்கக் குறையில்லை. [இப்படி த்ருஷ்டாந்த முகத்தாலே பேதம் ஸாதிக்கப்பட்டதாகும்.] 58,59.

**60. ஆகையாலாத்மபேதம் கொள்ளவேணும்.**

60. ஆகையாலென்றது கீழ்ச் சொன்ன ஹேதுக்களாலென்றபடி. ஒரு ஆத்மாவேயுள்ளதென்றும், ஆத்மபேதம் கிடையாதென்றும் பிறர்செய்த வாதத்தை யுக்தியாலும், சாஸ்த்ரத்தாலும் பஹுமுகமாக நிராகரித்தபடியாலே ஆத்மபேதம் ஸித்தமென்றதாயிற்று. ... ... ... .... (60)

**61. இப்போதிவர்களுக்கு லக்ஷணம். சேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்.**

61. கீழே ஆத்மாவுக்கு லக்ஷணம் விரிவாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. (ஸூ. 4) "ஆத்மஸ்வரூபம் *சென்று சென்று பரம்பரமாய்* என்கிறபடியே தேஹேந்த்ரிய மநঃ ப்ராண புத்தி விலக்ஷணமாய் அஜடமாய் ஆநந்தரூபமாய் நித்யமாய்அணுவாய்அவ்யக்தமாய் அசிந்த்யமாய் நிரவயவமாய் நிர்விகாரமாய் ஜ்ஞாநாச்ரயமாய் ஈச்வரனுக்கு நியாம்யமாய் தார்யமாய் சேஷமாயிருக்கும்"

என்று ஸாதித்து, மேல் விரிவாக விவரணமும் செய்தாயிற்று. அதில், 'தேஹேந்த்ரிய மநநப்ராண புத்தி விலக்ஷணமாய்' என்பதனுல் அசித்திற் காட்டில் வேறுபட்டிருக்குந் தன்மையன்றே சொல்லப்பட்டதாகிறது; இதுவும் அஜடத்வமும் ஆநந்த ரூபத்வமும் அவ்யக்தத்வமும் அசிந்த்யத்வமும் நிரவயவத்வமும் நிர்விகாரத்வமும் ஜ்ஞாநாச்ரயத்வமும் ஆகிறவிவை ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பொதுவானவை. 'ஈச்வரனுக்கு நியாம்யமாய் தார்யமாய் சேஷமாயிருக்கும்'' என்னப்பட்ட நியாம்யத்வம் முதலான மூன்றும் சேதநனுக்கும் அசேதநத்துக்கும் பொதுவானவை. 'நித்யமாய்' என்னப்பட்ட நித்யத்வமானது சித்து அசித்து ஈச்வரன் ஆகிற மூன்று தத்வங்களுக்கும் பொதுவானது. 'அணுவாய்' என்னப்பட்ட அணுத்வமானது அசித் பரமாணு ஜீவர்களுக்குப் பொதுவானது. ஆகவே இவை யித்தனையும் ஒன்றுகூடி ஆத்மஸ்வரூபத்துக்கு அஸாதாரண லக்ஷணமாகக் குறையில்லை. அசேதநத்திற் காட்டிலும் ஈச்வரனிற் காட்டிலும் வேறுபாட்டை ஸாதித்துக் கொடுக்குமதன்றே ஜீவாத்ம லக்ஷணமாகும். மேலே சொல்லப்பட்டவை யெல்லாம் சேரக்கூடி அப்படிப்பட்ட லக்ஷணமாகுமென்பதில் தட்டில்லை. அப்படியன்றிக்கே ஆத்மாவுக்கு எளிதாக வொரு லக்ஷணம் சொல்லவேண்டுமானுல் ''சேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்'' என்று இவ்வளவே லக்ஷணமாகச் சொல்லவடுக்கும். இது பத்தர் முக்தர் நித்யர் என்று மூவகைப்பட்ட சேதநர்களுக்கும் லக்ஷணமாகும் இதில் சேஷத்வம் மட்டும் சொன்னுல் அது அசித்துக்கு முள்ளதொன்றுகையாலே அசித் தத்வத்திற் காட்டில் வேறுபாடு ஸித்திக்க மாட்டாது. ஜ்ஞாத்ருத்வமென்பது மட்டும் சொன்னுல் அது ஈச்வரனுக்குமுள்ளதாகையாலே அவனிற்காட்டில் வேறுபாடு ஸித்திக்க மாட்டாது ஆகவே இரண்டத்தொன்று லக்ஷணமாக வழியில்லை; ஆக சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வமே லக்ஷணமாகக் கூடியது. ... .... .... ... (1)

62. இவர்களுடைய ஜ்ஞாநந்தான் ஸ்வரூபம்போலே நித்ய த்ரவ்யமாய், அஜடமாய், ஆனந்தரூபமாயிருக்கும்.

63. ஆனுல், ஜ்ஞாநத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் வாசி யென்னென்னில்.

64. ஸ்வரூபம் - தர்மியாய், ஸங்கோச விகாஸங்களுக்கு அயோக்யமாய், தன்னை யொழிந்தவற்றை ப்ரகாசிப்பியாமலே தனக்குத்தான் ப்ரகாசிக்கக்கடவதாய், அணுவாயிருக்கும் ஜ்ஞானம் - தர்மமாய். ஸங்கோசவிகாஸங்களுக்கு யோக்யமாய், தன்னை யொழிந்தவற்றை ப்ரகாசிப்பிக்கக்கடவதாய், தனக்குத் தான் ப்ரகாசியாதே ஆத்மாவுக்கு ப்ரகாசிக்கக் கடவதாய் விபுவாயிருக்கும்.

62—64. ஆத்மா ஜ்ஞாதாவென்று சொல்லப்பட்டது கீழ் ஆத்மா ஜ்ஞானத்திற்கு ஆச்ரயமாயிருப்பது மட்டுமல்லாமல் ஜ்ஞாநஸ்வரூபமாயுமிருக்குமென்றும் சொல்லிற்று. ஆக ஸ்வரூபமான ஜ்ஞானமொன்றும், தர்மமான ஜ்ஞானமொன்றுமாக இரண்டு வகையான ஜ்ஞானம் ஸித்தித்தது. ஜ்ஞாதாவான ஆத்மாவினுடைய ஜ்ஞானத்துக்கும் ஸ்வரூபத்துக்கும் என்ன வாசியென்று கேள்விபிறக்குமே. அது சொல்லுகிறதிப்போது. சில அம்சங்களாலே ஒற்றுமையுண்டு, சில அம்சங்களாலே வேற்றுமை யுண்டென்கிறது. எந்த அம்சங்களினுல் ஒற்றுமை யென்னில்,

நித்யத்வம் த்ரவ்யத்வம் அஜடத்வம் ஆநந்தரூபத்வம் ஆகிய இவற்ருல் ஒற்றுமை. இவை ஸ்வரூபத்திற்கும் ஜ்ஞானத்திற்கும் துல்யமென்றபடி. இனி, ஜ்ஞானத்திற்கும் ஸ்வரூபத்திற்கும் எந்த அம்சங்களினுல் வேற்றுமையென்னில்; கேண்மின், தர்மியாயிருத்தல், ஸங்கோச விகாஸங்களுக்கு யோக்யமல்லாமலிருத்தல், தன்னை யொழிந்த விஷயங்களை ப்ரகாசிப்பிக்க மாட்டாதிருத்தல், தனக்குத் தானே ப்ரகாசித்தல், அணுவாயிருத்தல்—ஆகிய விவை ஸ்வரூபத்திற்கு விசேஷம். தர்மபூதமாயிருத்தல், ஸங்கோச விகாஸங்களுக்கு யோக்யமாயிருத்தல், தன்னை யொழிந்த மற்ற பதார்த்தங்களை ப்ரகாசிப்பிக்க வல்லதாயிருத்தல், தனக்குத்தான் ப்ரகாசியாதே ஆத்மாவுக்கு ப்ரகாசிக்கக் கடவதாயிருத்தல், எங்கும் வியாபிக்குமதாயிருத்தல்—ஆகிய விவை ஜ்ஞானத்திற்கு விசேஷம். ... (62, 64)

**65. அதில் சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும் விபுவாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் எப்போதும் அவிபுவாயிருக்கும்; சிலருடைய ஜ்ஞாநம் ஒருக்கால் விபுவாய் ஒருக்கால் அவிபுவாயிருக்கும்.**

65. கீழ்ச் சூர்ணையில் (64-ல்) ஜ்ஞானம் விபுவாயிருக்குமென்று சொன்னது ஜ்ஞானத்திற்கு இயற்கையான வடிவத்தைச் சொன்னபடியாமத்தனை. ஸகல சேதநருடையவும் ஜ்ஞானம் விபுவாயிருக்கும்படி கண்டிலோம். சிலருடைய ஜ்ஞானம் எப்போதும் அஸங்குசிதமா யிராநின்றது; சிலருடைய ஜ்ஞானம எப்போதும் ஸங்குசிதமாயிராநின்றது; சிலருடைய ஜ்ஞானம் ஒருகால் ஸங்குசிதமாய் மற்றொருகால் அஸங்குசிதமாயிராநின்றது. இப்படிப்பட்ட தாரதம்யத்தை எங்கெங்கே காணுநின்றேமென்னில், *அயர்வறுமமரர்கள்* என்கிறபடியே பகவத் விஷயகமான ஜ்ஞானத்திற்கு ஒருநாளும் சுருக்கமின்றிக்கே பகவானுடைய ஸ்வரூப குண விபூதிகளை ஸதா அநுபவம் பண்ணுகிற நித்ய ஸூரிகளின் ஜ்ஞானம் எப்போதும் விபுவாயிருக்குமென்று கொள்வது. *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்குமழுக்குடம்புமாயிருக்கிற ஸம்ஸாரிகளின் ஜ்ஞானம் கர்மாநுகுணமாக ஸங்கோச விகாஸங்களோடே கூடிக்கொண்டு எப்போதும் அவிபுவாயிருக்கும். *கரைகண்டோர்* என்கிறபடியே எம்பெருமானுடைய அநுக்ரஹத்தாலே பிறவிக் கடலைக் கடந்து அக்கரைப்பட்ட முக்தாத்மாக்களின் ஜ்ஞானம் பூர்வாவஸ்தையில் அவிபுவாயும், உத்தராவஸ்தையில் *ஸர்வம் ஹ பச்ய: பச்யதி* என்கிறபடியே விபுவாயிருக்கும். ... .... .... ... ... (65)

**66. ஜ்ஞாநம் நித்யமாகில் "எனக்கு ஜ்ஞாநம் பிறந்தது, நசித்தது" என்கிறபடி யென்னென்னில்;**

**67. இந்த்ரியத்வாரா ப்ரஸரித்து விஷயங்களை க்ரஹிப்பது மீளுவதாகையாலே அப்படி சொல்லக் குறையில்லை.**

66, 67. ஜ்ஞானம் நித்யமென்று கீழே சொல்லிற்று; அதன்மேலுண்டாகும் சங்கையும் அதற்குப் பரிஹாரமும் கேண்மின், எனக்கிப்போது ஜ்ஞானம் பிறந்தது, எனக்கிப்போது ஜ்ஞானம் நசித்தது, என்று ஒருகால் உற்பத்தியோடும், ஒருகால் விநாசத்தோடுங் கூடியதாகச் சொல்லப்படுகிற ஜ்ஞானத்திற்கு நித்யத்வம் எங்ஙனே கூடும்? உற்பத்தியும் விநாசமுமில்லாம லிருக்கையன்றோ நித்யத்வம், ஜ்ஞானம்

பிறந்தது, ஞானம் நசித்தது என்று உத்பத்திவிநாச முடையதாகச் சொல்லப்படுகிற ஞானம் நித்யமாகச் சொல்லப்படுவதற்கு யோக்யதை யில்லையென்று சங்கை; இதற்குப் பரிஹார மென்னென்னில்; "ஸர்வம் ஹ பச்ய: பச்யதி* ஸ ச ஆநந்த்யாய கல்பதே* என்கிற ப்ரமாணங்களின்படியே மோக்ஷாவஸ்தையில் ஞானமானது ஸர்வ விஷயமாகச் சொல்லப்படுகையாலே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்க யோக்யமாயிருக்கச்செய்தேயும், ஸம்ஸார தசையில் கருமத்தாலே ஸங்குசிதமாய் கர்மாநுகுணமாக தாரதம்யத்தை யுடைத்தாய்க்கொண்டு இந்த்ரியங்கள் வழியாகப் புறப்பட்டு விஷயங்களை க்ரஹிப்பதும் மீள்வதுமாயிருக்கையாலே அப்படிப்பட்ட விகாஸத்தாலும் ஸங்கோசத்தாலும் வந்த ப்ரகாச-அப்ரகாசங்களையிட்டு 'ஞானம் பிறந்தது, ஞானம் நசித்தது' என்னக் குறையில்லை. இத்தால் ஞானத்தின் நித்யத்வத்திற்கு ஹாநியில்லை யென்க. .. .... .... (67)

**68. இதுதான் ஏகமாயிருக்கச்செய்தே நாநாவாய்த் தோற்றுகிறது, ப்ரஸரண பேதத்தாலே.**

68. இப்படி இந்திரியங்களின் வழியாக வெளிவருகிற ஞானமானது ஒன்றாயிருக்கச்செய்தேயும் விஷயங்களை க்ரஹிக்கிற காலத்தில் பிரகாசிக்கும்போது காண்பது, கேட்பது, சுவைப்பது முதலான வெவ்வேறு ஸம்ஜ்ஞைகளை யுடைத்தாய்க் கொண்டு அநேகமென்னும்படி ப்ரகாசிக்கின்றமை எங்ஙனேயென்னில்; கேண்மின்; ஞானம் ஒரு வழியாகவே ப்ரஸரிக்கை யன்றிக்கே கண் செவி முதலான பல இந்திரியங்களின் வழியாக ப்ரஸரித்து, ரூபம், சப்தம் முதலான அனேக விஷயங்களை க்ரஹிக்கிற விதுக்கு—காண்கை கேட்கை முதலான ஸம்ஜ்ஞைகளின் பேதத்தாலே தோற்றுகிற அநேகத்வமானது ப்ரஸரண பேதத்தினாலானதத்தனை. ... (68)

**69. த்ரவ்யமானபடி யென்னென்னில்;**

**70. க்ரியாகுணங்களுக்காச்ரயமாய், அஜடமாயிருக்கையாலே த்ரவ்யமாகக் கடவது.**

69, 70. ஞானமானது த்ரவ்யமென்றும் சொல்லப்பட்டதன்றோ கீழ்; அது எங்ஙனே பொருந்தும்? தனிப்படப் பிரித்தெடுக்கக் கூடியதன்றோ த்ரவ்யமாவது; அங்ஙனமல்லாத ஞானத்தை த்ரவ்யமென்று எங்ஙனே சொல்லலாம்? என்று சங்கை யுதிக்கக்கூடும்; அதற்குப் பரிஹாரம் கேண்மின். த்ரவ்யத்திற்கு என்ன லக்ஷணமோ அந்த லக்ஷணம் ஞானத்தில் ஸமந்வயம் பெறுகிறதா இல்லையா? என்று பார்க்கவேணும். "க்ரியைக்கு ஆச்ரயமாயிருப்பது எதுவோ அது த்ரவ்யம்" "குணத்திற்கு ஆச்ரயமாயிருப்பது எதுவோ அது த்ரவ்யம்" "அஜடமாயிருப்பது எதுவோ அது த்ரவ்யம்" என்றிங்ஙனே த்ரவ்ய லக்ஷணம் சொல்லப்படுகையாலே ஜ்ஞானம் த்ரவ்யமாகக் குறையில்லை. ஜ்ஞானமானது ஸங்கோச விகாஸங்களாகிற க்ரியைக்கு ஆச்ரயமாயிராநின்றது. ஸம்யோக வியோகங்களாகிற குணத்திற்கும் ஆச்ரயமாயிராநின்றது. அஜடமாயுமிராநின்றது. ஆகவே * க்ரியாச்ரயோ த்ரவ்யம் * குணாச்ரயோ த்ரவ்யம் * என்று சொல்லப்படுகிற த்ரவ்ய லக்ஷணம் ஜ்ஞானத்தில் ஸமந்வயம் பெற்றதாயிற்று. க்ரியாச்ரயத்வமும் குணாச்ரயத்வமும் ஓரொன்றே த்ரவ்யத்வத்தை ஸாதித்துக் கொடுக்கக்கூடியது. இவற்றோடே அஜடத்வத்தையும் கூட்டி அருளிச்செய்திருக்கையாலே அதுவும்

த்ரவ்யத்வத்தை ஸாதித்துக் கொடுக்கவல்லதென்று இவ்வாசிரியர் திருவுள்ளம். இங்குச் சிறிது விவரிக்க வேண்டியதுண்டு; ஜடவஸ்துக்களிலே த்ரவ்யங்களுமுண்டு, அத்ரவயங்களுமுண்டு; அஜடவஸ்துக்களிலே த்ரவ்யமாயிருப்பதுண்டேயல்லது அத்ரவ்யமாயிருப்பது கிடையாது. ஆகவே "ஜ்ஞாநம் த்ரவ்யம் அஜடத்வாத்; யத் அஜடம் தத் த்ரவ்யம்; யதா ஆத்மாதி" என்று அஜாடத்வத்தைக் கொண்டே த்ரவ்யத்வத்தை ஸாதிக்கலாமன்றோ. "எது எது ஜடமோ அதெல்லாம் அத்ரவ்யம்" என்று நியமம் சொல்லமுடியாமற் போனாலும் 'எது எது அஜடமோ அதெல்லாம் த்ரவ்யமே' என்று நியமம் சொல்லக் குறையில்லாமையாலே அஜடமான ஜ்ஞானத்தை த்ரவ்யமென்னத் தட்டில்லையென்று கொள்க. இவ்வாசிரியர் தாமே தத்வசேகரத்திலும் 'இதுதான் அஜடமுமாய் ஸங்கோச விகாஸங்களுக்கும் ஸம்யோக வியோகாதிகளுக்கும் ஆச்ரயமுமா யிருக்கையாலே த்ரவ்யம்" என்றருளிச்செய்தது காண்க. இதற்குமேல் ஒரு சிறு சங்கை தோன்றும்; (அதாவது) ஜ்ஞானமானது த்ரவ்யமாயிருக்குமாகில் இது ஆத்மாவுக்கு குணமாகச் சொல்லப்படுவது பொருந்துமோவென்று. எப்போதும் ஆத்மாவை ஆச்ரயித்திருக்கையாலே குணத்வமும் கூடுமென்று கொள்வது. ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்திலே * ஜ்ஞாநாத் மநஸ் தவ ததேவ குணம் க்ருணந்தி * என்று ஆழ்வானருளிச்செய்திருப்பது இங்கே அநுஸந்தேயம். ... .... ... 69, (70)

**71. அஜடமாகில் ஸுஷுப்தி மூர்ச்சாதிகளில தோற்றவேண்டாவோவென்னில்**

**72. ப்ரஸரண மில்லாமையாலே தோற்றது**

71, 72. ஜ்ஞானமானது அஜடமென்று கீழே சொல்லப்பட்டது. அதில் தோன்றுமொரு சங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறது மேல். அஜடத்வமானது ஸ்வயம் ப்ரகாசத்வந்தானே; ஜ்ஞானம் ஸ்வயம்பிரகாசமாயிருக்குமாகில் எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டே யிருக்கவேணுமே; ஸுஷுப்தி முதலிய அவஸ்தைகளில் ப்ரகாசிப்பதில்லையே; அது ஏன்? என்று சங்கை; இதற்குப் பரிஹாரமாவது, ப்ரஸரணமில்லாமையாலே தோன்ருதென்று. ஜ்ஞானமானது தன்னுடைய ஆச்ரயத்திற்குத் தானே ப்ரகாசிப்பது விஷயங்களை க்ரஹிக்கிற வேளையிலத்தனையன்றோ; ஸுஷுப்தி முதலான அவஸ்தைகளிலே ப்ரஸரணமில்லாமையாலே ப்ரகாசிப்பதில்லை யென்றுணர்க. ... ... .... ... (71, 72)

**73. ஆனந்த ரூபமாகையாவது - ஜ்ஞாநம் ப்ரகாசிக்கும்போது அநுகூலமாயிருக்கை.**

73. கீழ் (சூர்ணை 62ல்) "அஜடமாய் ஆநந்தரூபமாயிருக்கும்" என்றதில் ஆனந்த ரூபத்வம் சொன்னது உபபாதிக்கப்பட வேண்டுகையாலே அதை உபபாதித்து இந்தப்ரகரணம் நிகமிக்கப்படுகிறது. ஜ்ஞானத்திற்கு ஆநந்த ரூபத்வமானது என்னென்னில்; ஞானம் ப்ரகாசிக்கும்போது அநுகூலமாயிருக்கைதான் அது "ஜ்ஞானம் ப்ரகாசிக்கும் போது" என்றது—ஞானமானது தன்னுடைய ஆச்ரயத்துக்கு விஷயங்களைக் காட்டும்போது என்றபடி. அப்போதுதானே ஞானம் ப்ரகாசிப்பது. அந்த நிலைமையில் அநுகூலமாயிருக்கையாவது—அந்தந்த விஷயங்

களெல்லாம் அநுகூலமாய்த் தோற்றுகையாலே அவற்றைப்பற்றின இந்த ஞானம் தன்னுடைய ஆச்ரயத்திற்கு ஸுகரூபமாயிருக்கை. ... ... (73)

**74. விஷ சஸ்த்ராதிகளைக் காட்டும்போது ப்ரதிகூலமாயிருக்கைக்கடி தேஹாத்ம ப்ரமாதிகள்.**

74. "அந்தந்த விஷயங்களெல்லாம் அநுகூலமாய்த் தோன்றுகையாலே" என்று கீழே சொல்லிற்று. அப்படி சொல்லலாகுமோ? விஷம் சஸ்த்ரம் முதலான வற்றைக் காட்டும்போது அவற்றை விஷயீகரித்த ஞானம் அநுகூலமாக இல்லையே; ப்ரதிகூலமாகவன்றோ (அதாவது, துக்கரூபமாகவன்றோ) இருக்கிறது. இதற்கு என்ன காரணம்? என்னில்; தேஹாத்மப்ரமமும் கர்மமும் 'எல்லாம் ஈச்வராத்மகம்' என்கிற ஜ்ஞானமில்லாமையுமே விஷ சஸ்த்ராதிகளில் பாதகத்வபுத்திக்கு மூல மானவை யென்றதாயிற்று. ... ... .... .... (74)

**75. ஈச்வராத்மகமாகையாலே யெல்லாப் பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம்; ப்ராதிகூல்யம் வந்தேறி.**

75. * ஜகத் ஸர்வம் சரீரம் தே * * தாநி ஸர்வாணி தத்வபுঃ * * தத் ஸர்வம் வை ஹரேஸ் தநுঃ * இத்யாதி ப்ரமாணங்களாலே ஸகல பதார்த்தங்களும் பகவானுக்கு சரீரமாயிருப்பவையென்று சொல்லப்படா நின்றது. அப்படி பகவத் ஸ்வரூபமாகக் காணும்போது எப்பொருளும் அநுகூலமாய்க் கொண்டு காணப்படுமே யல்லது ப்ரதிகூலமாகக் காணப்படாது ஆகவே ஸகல பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யமே இயற்கை; இவற்றில் தோற்றுகிற ப்ராதிகூல்யம் தேஹாத்மப்ரமம் முதலியவற்றால் வந்ததாகையாலே இயற்கையன்று, வந்தேறி. ... (75)

**76. மற்றையாநுகூல்யம் ஸ்வாபாவிகமாகில், ஒருவனுக்கொருக்காலோரிடத்திலே அநுகூலங்களான சந்தந குஸுமாதிகள், தேசாந்தரே காலாந்தரே இவன் தனக்கும், அத்தேசத்திலே அக்காலத்திலே வேறே யொருவனுக்கும் ப்ரதிகூலங்களாகக் கூடாது.**




76. கீழ்ச்சூர்ணையில் "ஈச்வராத்மகமாகையாலே எல்லாப் பதார்த்தங்களுக் கும் ஆநுகூல்யமே ஸ்வபாவம்" என்று சொல்லிற்று; பதார்த்தங்களின் ஆநுகூல் யத்திற்கு ஈச்வராத்மகத்வத்தை ஹேதுவாகச் சொல்லவேணுமோ? சந்தனம் புஷ்பம் முதலானவற்றிலுண்டான ஆநுகூல்யம் ஸ்வாபாவிகமன்றோ? என்கிற சங்கைக்குப் பரிஹாரம் சொல்லப்படுகிறது. அந்தந்த பதார்த்தங்களில் காணும் ஆநுகூல்யம் பகவதாத்மகத்வத்தாலன்று; ஸ்வபாவத்தாலேதான் என்னில்; அந்த பதார்த்தங்களை யநுபவிப்பானொருவனுக்கு ஒரு ஸமயத்தில் ஓரிடத்திலே அநுகூலங் களாயிருந்தவை காலாந்தரத்திலேயோ தேசாந்தரத்திலேயோ இவனுக்கு ப்ரதி கூலங்களாவதும்; இவனுக்கு அநுகூலங்களாயிருக்கிறபோது வேறே யொருவ

னுக்கு ப்ரதிகூலங்களாவதும் கூடாது. ஆநுகூல்ய ப்ராதிகூல்யங்களை அவ்யவஸ்திதங்களாகக் காணுநின்றோமே. ஆகையால் பகவாத்மகத்வ மூலகமான ஆநுகூல்யமே இயற்கை. மற்றையாநுகூல்யம் இயற்கையன்று என்பது தெளியலாகும். இவ்வர்த்தம் ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலே' வஸ்த்வேகமேவ து:க்காய ஸுகாய ஈர்ஷ்யாகமாய ச, கோபாய ச யதஸ் தஸ்மாத் வஸ்து வஸ்த்வாத்மகம் குத: ? ததேவ ப்ரீதயே பூத்வா புநர்து:க்காய ஜாயதே '' இத்யாதி ச்லோகங்களாலே சொல்லப்பட்டது. ஆகத் தேறினது என்னவென்னில்; விஷம் சஸ்த்ரம் முதலானவை ப்ரதிகூலங்களாயும் சந்தனம் புஷ்பம் முதலானவை அநுகூலங்களாயும் தோற்றுகிறது தேஹாத்மப்ரமம் முதலான காரணங்களினாலத்தனை; ஈச்வராத்மகமாகையாலே எல்லாப் பதார்த்தங்களுக்கும் ஆநுகூல்யந்தான் ஸ்வபாவம்; ஆகவே அவ்வாகாரத்தாலே காணும்போது ஞானமானது தன்னுடைய ஆச்ரயத்திற்கு எந்த விஷயத்தையும் காட்டும்போதும் அது ஆனந்தரூபமாகவே யிருக்குமென்றதாயிற்று .... (76)

**இந்த சித்ப்ரகரணத்திலே சொல்லப்பட்ட விஷயங்களின் ஸங்க்ரஹம் வருமாறு :—**

முமுக்ஷுக்களுக்கு தத்வத்ரய ஜ்ஞானம் ஆவச்யகம்.

தத்வத்ரய மென்பது சித்தும் அசித்தும் ஈச்வரனும்.

சித்தென்னப்படுகிற ஆத்மவஸ்துவின் ஸ்வரூபமும் லக்ஷணமும்.

ஆத்மஸ்வரூபம் பத்தர் முக்தர் நித்யரென்று மூன்றுபடிப்பட்டது.

ஆத்மாக்கள் அனந்தங்களல்ல; ஏகாத்மாவே உள்ளது என்கிற வாதம் யுக்திக்கும் சாஸ்த்ரங்களுக்கு மொவ்வாது

ஆத்மாக்களுக்கு, விரிவானதல்லாமல் மிக வெளிதான லக்ஷணம்.

ஜ்ஞானத்திற்கும் ஸ்வரூபத்திற்குமுண்டான ஸாதர்ம்ய வைதர்மியங்கள்.

மூவகைப்பட்ட சேதநருடையவும் ஜ்ஞானத்திற்கு உண்டான விசேஷம்.

ஜ்ஞானத்தின் நித்யத்ரவ்யத்வ அஜடத்வ ஆனந்த ரூபத்வங்களின் விவரணம்.

இவற்றாலேசேதநதத்வத்தினுடையவேஷம் நிரூபித்துத் தலைக்கட்டப்பட்டதாயிற்று



தத்வத்ரயத்தில் சித்ப்ரகரணம்

முற்றிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

# தத்வத்ரயம்—அசித்ப்ரகரணம் (2.)

**77. அசித்து - ஜ்ஞாநசூந்யமாய், விகாராஸ்பதமாயிருக்கும்.**

77. இந்த ரஹஸ்யத்தின் தொடக்கத்தில் "தத்வத்ரயமாவது-சித்தும் அசித்தும் ஈச்வரனும்" என்று உத்தேசித்தவடைவிலே முந்துறமுன்னம் சித்தாகிய ஆத்மாவினுடைய ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்கள் விசதமாக உபபாதிக்கப்பட்டன கீழ்; இனி அசித்வஸ்துவினுடைய ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்கள் உபபாதிக்கப் படுகின்றன. அதில் முந்துற அசித்தின் லக்ஷணம் தெரிவிக்கப்படுகிறது. அறிவுக்கு இருப்பிடமல்லாதது அசித்தெனப்படும்; அசேதநமென்பது மிதுவே. இது ஜ்ஞாந சூந்யமாயிருப்பதோடு விகாரத்துக்கு இருப்பிடமாயுமிருக்கும். ஒரு அவஸ்தையி னின்று மற்றோரவஸ்தையை யடைவதுதான் விகாரமென்பது. கீழே விவரிக்கப் பட்ட சேதந வஸ்துவுக்கு விகாரமென்பது கிடையாது. அது எப்போதும் ஏக ரூபமாகவே யிருக்கும். அசித்தத்வம் அங்ஙனன்றிக்கே விகாரப்பட்டுக் கொண் டிருக்குமென்றதாயிற்று. .... ... ... ... (77)

**78. இது சுத்தஸத்வமென்றும், மிச்ரஸத்வமென்றும், ஸத்வசூந்யமென்றும் த்ரிவிதம்.**

78. கீழ்ச் சூர்ணையில் அசித்தத்வத்தின் லக்ஷணம் கூறப்பட்டது; * ஜ்ஞானசூந்யத்வே ஸதி விகாராஸ்பதத்வம் அசித்த்வம் * என்றதாகக் கொள்க. இப்போது இவ்வசித்தத்வத்தின் பாகுபாடு காட்டப்படுகிறது. ஸத்வகுணமொன் றுக்கே ஆதாரமாயிருப்பது, ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களாகிற மூன்று குணங்களுக் கும் ஆதாரமாயிருப்பது. ஸத்வம் முதலிய குணங்களில் ஒன்றுக்கும் ஆதாரமன் றிக்கே யிருப்பது - என்று இங்ஙனே மூன்று வகையாயிருக்கும் அசித்தத்வம். ஸத்வ குணமொன்றுக்கே ஆதாரமாயிருப்பதை சுத்த ஸத்வமென்கிறது. மூன்று குணங் களுக்கும் ஆதாரமாயிருப்பதை மிச்ரஸத்வமென்கிறது. ஒரு குணத்திற்கும் ஆதார மல்லாமலிருப்பதை ஸத்வசூந்யமென்கிறது. முறையே, பரமபதமும் ப்ரக்ருதியும் காலமுமாக மூவகையென்று மேல் நிரூபணத்தினால் அறியப்படும். ... (78)

**79. இதில் சுத்த ஸத்வமாவது—ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே கேவலஸத்வமாய் நித்யமாய், ஜ்ஞாநாநந்த ஜநகமாய், கர்மத்தாலன்றிக்கே கேவல பகவதிச்சை யாலே விமாந கோபுர மண்டப ப்ராஸாதாதி ரூபேண பரிணமிக்கக் கடவதாய், நிரவதிக தேஜோ ரூபமாய், நித்யமுக்தராலும் ஈச்வரனாலும் பரிச்சேதிக்க வரிதாய் அத்யத்புதமா யிருப்பதொன்று.**

79. கீழ் உத்தேசித்த அடைவிலே மூவகைப்பட்ட அசித்தினுடையவும் ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்கள் இனி விவரிக்கப்படப் போகின்றன. அதில் முன்னம் சுத்த ஸத்வத்தின்படி நிரூபிக்கப்படுகிறது. வேறொரு குணம் கலசாத ஸத்வ குணத்தை யுடையது சுத்தஸத்வம். * க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே * என்றும் * தமஸஸ் து பாரே * என்றும் * தமஸ: பரஸ்தாத் * என்றும் ச்ருதி

சொல்லுகையாலே ரஜஸ்ஸும் தமஸ்ஸும் கலசாத கேவல ஸத்வமென்கிறது. இது நித்யமாயுமிருக்கும் ஒரு காலத்திலே உண்டாகி மற்றொரு காலத்திலே நசிப்பதென்கிற உத்பத்தி விநாசங்களற்றிருக்கும் இன்னமும் ஜ்ஞானத்தையும் ஆனந்தத்தையும் பிறப்பிக்குமதாயுமிருக்கும். இன்னமும் எம்பெருமான் தன்னுடைய போகத்துக்காக இச்சிக்க அந்த இச்சையினாலே விமானம் கோபுரமண்டபம் முதலானவையாகப் பரிணமியா நிற்கும். சேதநன் தன்னுடைய கருமத்திற்குத் தக்கபடி இச்சிக்க, அந்த இச்சைக்குத் தக்கவாறு எம்பெருமானது ஸங்கல்பத்தாலே இருபத்து நான்கு தத்துவமாய்க் கொண்டு பரிணமித்து சேதநர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தானங்களாக ஆகிற ப்ரக்ருதி தத்வம் போன்றதன்று இது. இன்னமும், அக்நி ஸூர்யன் முதலான சுடர்ப் பொருள்களையும் மின்மினியோ டொப்பாக்க வல்லதாம்படி அளவிறந்த தேஜஸ்ஸே வடிவாயிருக்கும். * சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதி * என்றும், * சுழிபட்டோடுஞ் சுடர்ச் சோதி வெள்ளம் * என்றும் ஆழ்வாருமருளிச் செய்தது காண்க. இன்னமும், இதினுடைய பரிமாணம் முதலியவை நித்யர்களாலும் முக்தர்களாலும் ஈச்வரனாலுங்கூடப் பரிச்சேதிக்க வொண்ணாததாயுமிருக்கும். இன்னமும், க்ஷணந்தோறும் அபூர்வமாய்க்கொண்டு ஆச்சர்யா வஹமாயுமிருக்கும். ஆக இப்படிப்பட்ட ஸ்தாந விசேஷந்தான் சுத்த ஸத்வமென்பது—என்றதாயிற்று. .... (79)

**80. இத்தைச் சிலர் ஜடமென்றார்கள். சிலர் அஜடமென்றார்கள்.**

80 இந்த சுத்த ஸத்வத்தைப் பற்றி நம் தர்சநஸ்தர்களிலேயே ஒரு வகையான அபிப்ராய பேதமுண்டு; அதாவது, இது அஜடமா? ஜடமா? (அதாவது ஸ்வயம்ப்ரகாசமா ? அன்று ?] என்னும் விசாரத்தில், சிலர் ஜடமென்று சொன்னார்கள். சிலர் அஜடமென்று சொன்னார்கள். தத்வமுக்தா கலாபத்திலே * இஹ ஜடாமாதிமாம் கேசிதாஹு: * என்று, ஜடமென்கிற பக்ஷம் சிலருடையதாகக் காட்டப்பட்டது. அஜடமென்பதே பெரும்பான்மையான அபிப்ராயமென்பது இதனால் விளங்கும். அடுத்த சூர்ணையாலும் இது விளங்கும். ... (80)

**81. அஜடமானபோது, நித்யர்க்கும் முக்தர்க்கும் ஈச்வரனுக்கும் ஜ்ஞானத்தையொழியவும் தோற்றும்.**

**82. ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாது.**

81, 82. சுத்த ஸத்வத்தை ஜடமென்கையன்றிக்கே அஜடமென்று கொள்ளுமளவில், நித்ய ஸூரிகளுக்கும் முக்தாத்மாக்களுக்கும் ஸர்வேச்வரனுக்கும் ஜ்ஞானத்தாலே தன்னையறிய வேண்டாதபடி தானே ப்ரகாசிக்குமென்று கொள்ளக் கடவது. இப்படி சுத்த ஸத்வம் ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரிகளுக்கு மட்டும் தானே தோற்றுகிறதில்லை; சாஸ்த்ரத்தைக் கொண்டு அறிய வேண்டும்படியாகத்தானுள்ளது. ஸம்ஸாரிகளுக்குத் தோற்றாதவளவால் அதனுடைய ஸ்வயம் ப்ரகாசத்வத்திற்குக் கொத்தையில்லையென்று கொள்க. இவ்விடத்தில்—'' தர்மபூதஜ்ஞானத்தினுடைய ஸ்வாத்ம ப்ரகாசந சக்தியானது விஷய ப்ரகாசமில்லாத காலத்தில் கர்ம விசேஷங்களாலே ப்ரதிபந்திக்கப்படுகிறாப்போல சுத்த ஸத்வத்தினுடைய ஸ்வாத்ம ப்ரகாசந சக்தியும் பந்த தசையில் ப்ரதிபந்திக்

கப்படுகையாலே சுத்த ஸத்வம் பத்தர்க்கு ப்ரகாசியாதொழிகிறது" என்கிற ரஹஸ்யத்ரய ஸார வாக்யம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. ... ... (81, 82)

**83. ஆத்மாவிலும் ஜ்ஞானத்திலும் பிந்நமானபடியென்னென்னில்,**

**84. நானென்று தோற்றாமையாலும், சரீரங்களாய்ப் பரிணமிக்கையாலும், விஷயங்களையொழியவும் தானே தோற்றுகையாலும், சப்த ஸ்பர்சாதிகளுண்டாகையாலும் பிந்நமாகக் கடவது.**

83, 84. கீழே சேதந ப்ரகரணத்தில்— ஆத்மாவும் அஜடமாய் ஜ்ஞானமும் அஜடமாயிருக்கச் செய்தே பரஸ்பரம் பேதப்பட்டிருக்கும்படியை [சூர்ணை – 64ல்] நிருபித்துக் காட்டினாப்போலே, இங்கும் சுத்தஸத்வமும் அஜடமாயிருக்கச் செய்தே ஆத்மாவைக்காட்டிலும் ஜ்ஞானத்தைக் காட்டிலும் பேதித்திருக்கும்படியை நிருபித்துக் காட்டவேண்டியது ப்ராப்தமாகையாலே அது பல ஹேதுக்களாலே காட்டப்படுகிறது. ஆத்மவஸ்து ப்ரத்யக்காகையாலே நானென்று ப்ரகாசியா நிற்கும். இது பராக்காகையாலே நானென்று ப்ரகாசிக்க வழியில்லாமல் இதுவென்றே ப்ரகாசிக்குமதாகவுள்ளது. ஆகவே ஆத்மாவைக் காட்டிலும் இது வேறுபட்டிருக்கும்படி அறியலாயிற்று. (சுத்த ஸத்வம்) சரீராதிகளாய்ப் பரிணமிக்கையாலே ஆத்மாவைக் காட்டிலும் ஜ்ஞானத்தைக் காட்டிலும் பேதப் பட்டிருக்கும். ஆத்மா ஏகரூபனாகையாலே அவனுக்கு ஒருவிதத்திலும் பரிணாமமில்லை; ஜ்ஞானத்துக்குப் பரிணாமமுண்டேயாகிலும் சரீராதிகளாய்ப் பரிணமிப்பதென்பது கிடையாது; ஆகவே சரீரங்களாய்ப் பரிணமிக்கையென்கிற ஹேதுவைக் கொண்டு ஆத்மாவைக் காட்டிலும் ஜ்ஞானத்தைக் காட்டிலும் பேதப்பட்டிருக்குமென்னக் குறையில்லை. ஜ்ஞானத்திற் காட்டிலும் பேதப்பட்டிருக்கைக்கு இன்னமும் இரண்டு ஹேதுக்களுண்டு. ஜ்ஞானமானது விஷய ஸந்நிதானமிருந்தாலொழிய ப்ரகாசியாது; சப்தாதிகளுக்கு ஆச்ரயமாகாமல் அவற்றை க்ரஹிக்குமதாக மட்டுமிருக்கும். சுத்த ஸத்வமோவென்னில், விஷயத்தை அபேக்ஷியாமலே ப்ரகாசிக்குமதாய் சப்தம் ஸ்பர்சம் முதலானவற்றுக்கு ஆச்ரயமாயுமிருக்குமது. ஆக இந்த ஹேதுக்களாலே இங்ஙனல்லாத ஜ்ஞானத்திற் காட்டிலும் பேதப்பட்டிருக்குமென்னக் குறையில்லை (83,84)

**85. மிச்ரஸத்வமாவது - ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் மூன்றுங் கூடி பத்த சேதனருடைய ஜ்ஞாநாநந்தங்களுக்குத் திரோதாயகமாய், விபரீதஜ்ஞாந ஜநகமாய் நித்யமாய், ஈச்வரனுக்கு க்ரீடாபரிகரமாய் ப்ரதேசபேதத்தாலும் காலபேதத்தாலும் ஸத்ருசமாயும் விஸத்ருசமாயுமிருக்கும் விகாரங்களை யுண்டாக்கக்கடவதாய் ப்ரக்ருதி, அவித்யை, மாயை யென்கிற பெயர்களை யுடைத்தாயிருக்குமசித்விசேஷம்.**

85. கீழே 79 முதல் 84 வரையிலுமுள்ள சூர்ணைகளாலே சுத்த ஸத்வத்தினுடைய ப்ரகாரம் நிருபிக்கப்பட்டதாயிற்று. இனி மிச்ர ஸத்வத்தின் ப்ரகாரம் நிருபிக்கப்படுகிறது. மிச்ரஸத்வமென்கிற சொல்லுக்கு ரஜஸ் தமஸ்ஸுக்களோடே கூடின ஸத்வகுணத்தையுடைத்தானதென்று பொருள். இதுதான் ப்ரக்ருதியென்றும் அவித்யை யென்றும் மாயை யென்றும் பெயர்களால் வழங்கப்படுமது. இது முக்குணங்களும் கலசப் பெற்றிருக்கையாலே ரஜோ குண தமோ குணங்களின் அம்சத்தாலே ஸம்ஸாரிகளின் ஜ்ஞாநாநந்தங்களுக்கு மறைவை யுண்டு பண்ணக்

கூடியதாயிருக்கும். இன்னமும் இது விபரீத ஜ்ஞான ஜநகமுமாயிருக்கும். (அதாவது) ஆத்மாவல்லாத தேஹத்திலே ஆத்மாவென்கிற புத்தி; ஸ்வதந்திர மன்றிக்கே பரதந்த்ரமான ஆத்ம வஸ்துவில் ஸ்வதந்த்ர மென்கிற புத்தி; அந்ய சேஷமன்றிக்கே எம்பெருமானொருவனுக்கே சேஷப்பட்டதான அவ்வஸ்துவில் அந்யசேஷமென்கிற புத்தி; ஈச்வர ரல்லாதவர்களிடத்திலே ஈச்வரத்வ புத்தி; புருஷார்த்தமல்லாத ஐச்வர்யகைவல்யாதிகளிலே புருஷார்த்தத்வபுத்தி; உபாய மல்லாதவற்றிலே உபாயமென்கிற புத்தி—ஆகவிப்படிப்பட்ட விபரீத வுணர்ச்சிகளை ஸம்ஸாரிகளுக்கு உண்டாக்குமதாயிருக்கும். ஒருகால் உத்பத்தியும் ஒருகால் விநாசமுமற்றிருக்கும் ஸர்வேச்வரன் உலகங்களைப் படைத்தல் முதலான செயல் களைச் செய்து விளையாடுவதுண்டே, அதற்கு உபகரணமாயுமிருக்கும். இன்னமும், ப்ரதேச பேதத்தாலும் கால பேதத்தாலும் ஸத்ருசமாயும் விஸத்ருசமாயுமிருக்கிற விகாரங்களை யுண்டாக்கக் கடவதுமாயிருக்கும். குண வைஷம்யமில்லாதவிடத் தையும் குண வைஷம்ய முள்ளவிடத்தையும் கருதி ப்ரதேச பேதமென்கிறது. கார்யத்திற்கு உந்முகமான ஸ்தூலாவஸ்தையிலே குணவைஷம்யமுள்ளது. அல் லாதவிடமெல்லாம் குண ஸாம்யமுள்ளது. அதில் குண வைஷம்யமில்லாதவிடம் ஸத்ருச விகாரமாயிருக்கும்; குண வைஷம்யமுள்ளவிடம் விஸத்ருச விகாரமா யிருக்கும், ஸத்ருச விகாரமாவது நாமரூபவிபாக நிர்தேசத்திற்கு அநர்ஹமாயிக்கிற ஸூக்ஷ்ம விகாரம். விஸத்ருச விகாரமாவது நாமரூபவியாக நிர்தேசத்திற்கு யோக்ய மாயிருக்கும் ஸ்தூல விகாரம். ஆக, குண வைஷம்யமில்லாத ப்ரதேசத்தில் ஸத்ருசவிகாரத்தை யுண்டாக்கக் கடவதாயும், குணவைஷம்யமுள்ள ப்ரதேசத்தில் விஸத்ருச விகாரத்தையுண்டாக்கக் கடவதாயுமிருக்குமென்றதாயிற்று. இனி கால பேதமாவது ஸ்ருஷ்டி காலம் ஸம்ஹாரகாலமென்கிற வாசி. ஸம்ஹார காலத்தில் இது அவிபக்த தமஸ்ஸாய்க் கிடக்கையாலே ஓரிடத்திலும் குணவைஷம்யத்திற்கு ப்ரஸக்தியில்லாமையாலே எல்லாவிடத்திலும் ஸத்ருச விகாரமாயிருக்கும். ஸ்ருஷ்டி காலத்திலே பகவானுடைய அதிஷ்டாந விசேஷத்தாலே விபக்தமாய் கார்யத்திற்கு உந்முகமாய் குண வைஷம்யம் பிறந்தவாறே விஸத்ருச விகாரத்தையுடைத்தாகா நிற்கும். ஆக இப்படிப்பட்ட அசித் விசேஷம் மிச்ரஸத்வமென்று கொள்ளக்கடவது.

**86. ப்ரக்ருதியென்கிறது - விகாரங்களைப் பிறப்பிக்கையாலே; அவித்யையென்கிறது- ஜ்ஞாநவிரோதியாகையாலே; மாயை யென்கிறது - விசித்ரஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே.**

86. கீழ்ச்சூர்ணையில் மிச்ரஸத்வத்திற்கு ப்ரக்ருதி, அவித்யை, மாயை—என்கிற பெயர்களிருப்பதாகச் சொல்லிற்று. அப்பெயர்களின் பொருள் விவரிக்கப் படுகின்றதிங்கு; இதனுடைய ஸ்வபாவங்களைப் பற்ற வந்த பெயர்கள் இவை; மஹான் முதலான விகாரங்களைத் தன் பக்கல் நின்றும் பிறப்பிக்கையாலே ப்ரக்ருதி யென்கிறது. ப்ரக்ருதி சப்தம் காரணத்தைச் சொல்லுமது. இதுதான் உபாதாந காரணத்தையே சொல்லுமதாயிருக்கும் பரப்ரஹ்மமே ஜகத்துக்கு உபாதாந காரணமென்பதைச் சொல்லா நின்ற ஸூத்ரகாரர் *ப்ரக்ருதிச ப்ரதிஜ்ஞா த்ருஷ் டாந்தாநுப ரோதாத்* என்கிற ஸூத்ரத்தில் உபாதாந காரண வாசகமாக ப்ரக்ருதி

சப்தத்தை ப்ரயோகித்திருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது. இனி, அவித்யை யென்கிற பெயர் வந்ததற்குக் காரணமென்னென்னில், ஜ்ஞானத்திற்கு விரோதியா யிருப்பது பற்றி அவித்யை யென்கிறது. அவித்யை யென்கிற சொல்லானது— ஜ்ஞானமில்லாமை, ஜ்ஞானத்திற் காட்டிலும் வேறுபட்டது. ஜ்ஞானத்திற்கு விரோதியாயிருப்பது என்கிற பொருள்களைத்தரும்; விஷயத்திற்குத் தக்கபடி தானே ப்ரயோகமிருக்கும். ஆகவே இங்கு ஜ்ஞானவிரோதி யென்கிற பொருளில் அவித்யை யென்றது-என்று கொள்ளக்கடவது. இது ஜ்ஞானவிரோதி யென் பது கீழ்ச் சூர்ணையில் 'ஜ்ஞாநாநந்தங்களுக்குத் திரோதாயகமாய்" என்பத னாலும் தெரிவிக்கப்பட்டது. இனி மாயை யென்கிறது எத்தாலே யென்னில்; அரக்கரசுரர் முதலானார் செய்யும் செயல்களை 'ஆச்சர்யகரம்' என்பது பற்றி மாயா சப்தத்தாலே சொல்லுவதுண்டன்றோ; அதுபோலவே இதனையும் மாயை யென் கிறது—விசித்திர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே. அதாவது ஒன்று போலே ஒன்று இருக்கையன்றிக்கே வியக்கத்தக்க காரியங்களைப் பிறப்பிக்கை. ... (86)

**87. இதுதான் "பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதமிங் கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்கள்" என்கிறபடியே, இருபத்துநாலு தத்வமாயிருக்கும்.**

87. இப்படிப்பட்ட அசித்தானது கார்ய ரூபத்தாலும் காரண ரூபத்தாலும் அநேக தத்வமாயிருக்கும்; *பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம் பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்காரமனங்களே* என்று திருவாய்மொழியில் நம்மாழ்வாரருளிச்செய்தபடி இருபத்து நான்கு தத்வமாயிருக்கும். உதாஹரித்த பாசுரத்தில், ஐம்புலன்களாவன—சப்தாதி விஷயங்கள் ஐந்து; பொறியைந்தாவன— ச்ரோத்ரம் முதலிய ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்து; கருமேந்திரியங்களாவன—வாக்கு முதலானவை ஐந்து, ஐம்பூதங்களாவன—ஆகாசம் முதலிய பஞ்சபூதங்கள், பிரகிருதி யென்றது—ப்ரக்ருதி. மானாங்காரமனங்களாவன—மஹான் அஹங்காரம், மனஸ்—ஆகியவை. .... ... ... ... (87)

**88. இதில் ப்ரதம தத்வம் ப்ரக்ருதி.**

88 கீழேயெடுத்துக்காட்டிய திருவாய்மொழிப் பாசுரத்தில் மொத்தமாகத் தத்துவங்களைச் சொல்லிற்றே யொழிய அவற்றின் அடைவு சொல்லிற்றில்லை யாதலால் அவற்றில் முதல் தத்துவம் இன்னதென்று தெரிவிக்கலாகிறது. ப்ரக்ருதி யென்றும் ப்ரதாநமென்றும் அவ்யக்த மென்றும் மூலதத்துவத்திற்குப் பெயர். ப்ரக்ருதி யென்று சொல்லுகைக்கு ஹேது முன்னே (86ல்) சொல்லிற்று. ப்ரதாந மென்கிறது எம்பெருமானுடைய லீலைக்கு ப்ரதானமான உபகரணமாயிருக்கையாலே; அவ்யக்த மென்கிறது குணங்களின் பாகுபாடு வ்யக்தமாகத் தெரியாமைபற்றி. (88)

**89. இது அவிபக்த தமஸ்ஸென்றும், விபக்ததமஸ்ஸென்றும், அக்ஷரமென்றும் சில அவஸ்தைகளை யுடைத்தாயிருக்கும்.**

89. முதல் தத்வமான ப்ரக்ருதிக்குண்டான அவஸ்தா விசேஷங்கள் பேசப்படுகின்றன. இந்த ப்ரக்ருதியானது அவிபக்த தமஸ்ஸென்றும் விபக்த

தமஸ்ஸென்றும் அக்ஷரமென்றும் சில அவஸ்தைகளைக் கொண்டிருக்கும். ஸம்ஹார ஸமயத்தில் நாமரூப விபாகத்துக்கு அர்ஹமன்றிக்கே யிருக்கையாலே அவிபக்த தமஸ்ஸென்பது அப்போது, ஸ்ருஷ்டி ஸமயம் வந்தவாறே நாமரூப விபாகத்திற்கு உரித்தாம்படி விபக்தமாய் கார்யோந்முகமாகையாலே விபக்ததமஸ்ஸென்பது அப்போது. பிறகு பகவத் ஸங்கல்ப விசேஷத்தாலே தமோவஸ்தை குலைந்து புருஷ ஸமஷ்டி கர்ப்பத்வம் தோன்றும்படியான அவஸ்தையை யடைந்து நிற்கையாலே அது அக்ஷராவஸ்தையெனப்படும். .... ... (89)

**90. இதில் நின்றும், குணவைஷம்யத்தாலே மஹதாதி விகாரங்கள் பிறக்கும்.**

**91. குணங்களாகிறன - ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்கள்.**

90, 91. இந்த ப்ரக்ருதியில் நின்றும் மஹான் முதலான விகாரங்கள் தோன்றுவதற்கு மூலம் சொல்லப்படுகிறது. இதில் நின்று மென்றது—இந்த ப்ரக்ருதியில் நின்று மென்றபடி. குண வைஷம்யத்தாலே யென்றது ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற குணங்களின் பரஸ்பர உத்ரேகத்தாலே யென்றபடி. அதனால் மஹதாதி விகாரங்கள் பிறக்குமென்றதாயிற்று. .... ... ... (90, 91)

**92. இவை ப்ரக்ருதிக்கு ஸ்வரூபாநுபந்திகளான ஸ்வபாவங்களாய் ப்ரக்ருத்யவஸ்தையில் அநுத்பூதங்களாய், விகாரதசையில் உத் பூதங்களாயிருக்கும்.**

92. இந்த ஸத்துவரஜஸ் தமோ குணங்கள் இருக்கும்படி எங்ஙனேயென்னில்; இவை ப்ரக்ருதிக்கு வந்தேறியான குணங்களன்றிக்கே இயற்கையாமவையாய், ப்ரக்ருத்யவஸ்தையில் ஸாம்யாபந்நங்களாயிருக்கையாலே இவற்றின் ஸ்வரூப விபாகம் தோற்றாமலும், விக்ருத்யவஸ்தையில் வைஷம்யாபத்தியாலே இவற்றினுடைய ஸ்வரூப விபாகம் தோற்றியுமிருக்கும். ... .... (92)

**93. ஸத்வம்—ஜ்ஞாநஸுகங்களையும், உபயஸங்கத்தையும் பிறப்பிக்கும்.**

**94. ரஜஸ்ஸு—ராக த்ருஷ்ணு ஸங்கங்களையும் கர்மஸங்கத்தையும பிறப்பிக்கும்.**

**95. தமஸ்ஸு—விபரீதஜ்ஞானத்தையும், அநவதாநத்தையும் ஆலஸ்யத்தையும் நித்ரையையும் பிறப்பிக்கும்.**

93, 94, 95. விகாரதசையில் கார்யத்தைக்கொண்டே இவற்றை நிரூபிக்க வேண்டுகையாலே கார்யங்களைத் தெரிவிக்கும் முகத்தால் இவற்றினுடைய ஸ்வரூபங்கள் காட்டப்படுகின்றன. ஸத்வகுணம் நிர்மலமாகையாலே ஞானத்தையும் சுகத்தையும் மறைத்திடாமலும் அவற்றை யுண்டாக்குமதாயுமிருந்து, அவற்றின் பேற்றுக்கு முயலும்படி அவை யிரண்டிலும் ஸங்கத்தையுமுண்டாக்கும். ரஜோ குணமானது ஸ்த்ரீ புருஷர்களுக்குப் பரஸ்பரம் ஸ்ப்ருஹையையும், ஶப்தாதி ஸர்வ விஷய ஸ்ப்ருஹையையும் க்ரியைகளில் ஸ்ப்ருஹையையும் பிறப்பிக்கும். தமஸ்ஸானது-உள்ளதை உள்ளபடியறியாமையாகிற விபரீத ஜ்ஞானத்தையும், செய்யும் செய்கைகளில் குறிக்கோளில்லாமையாகிற அநவதாநத்தையும், ஒரு காரியத்திலும் ஆரம்பமில்லாமலிருக்கையாகிற ஆலஸ்யத்தையும், ஸர்வேந்த்ரிய ப்ரவர்த்தநோபரதியாகிற நித்திரையையும் பிறப்பிக்கும். .... ... (93, 94, 95)

**96. இவை ஸமங்களானபோது விகாரங்கள் ஸமங்களுமாய், அஸ்பஷ்டங்களுமாயிருக்கும்; விஷமங்களானபோது விகாரங்கள் விஷமங்களுமாய், ஸ்பஷ்டங்களுமாயிருக்கும்.**

96. இந்த ஸத்வ ரஜஸ் தமோ குணங்களினுடைய ஸமதசையிலும் விஷம தசையிலும் ப்ரக்ருதியின் விகாரங்களிருக்கும்படி இனிச் சொல்லப்படுகிறது. இந்த குணங்களானவை உத்ரிக்த்மாகாமல் ஸமநிலையிலிருந்தபோது ப்ரக்ருதியினுடைய விகாரங்கள் நாமரூபவிசேஷங்களின்மையாலே தன்னில் ஸமங்களாய், அஸ்பஷ்டங்களுமா யிருக்கும். இக்குணங்கள் உத்ரிக்தங்களாகி விஷமங்களானபோது ப்ரக்ருதியின் விகாரங்களும் நாமரூப விசேஷங்களோடே கூடி, தன்னில் விஷமங்களுமாய் ஸ்பஷ்டங்களுமாய் இருக்கும். ... .... .... (96)

**97. விஷம விகாரங்களில் ப்ரதம விகாரம் மஹான்.**

97 இந்த குண வைஷம்யத்தாலே விஷம விகாரங்கள் ஏற்படும்போது முதல் விகாரம் ஏதென்னில் ; அது மஹத்தத்துவமாமென்க. ... ... (97)

**98. இது ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று த்ரிவிதமாய் அத்யவஸாய ஜநகமாயிருக்கும்.**

98. மஹாந் என்கிற இத்தத்வமானது "ஸாத்விகோ ராஜஸச் சைவ தாமஸச் ச த்ரிதா மஹாந்" என்கிறபடியே ஸாத்விக ராஜஸ தாமஸ பேதத்தாலே மூவகைப்பட்டதாய் புத்தி ஸ்வரூபமாயிருக்கையாலே அத்யவஸாயத்தை யுண்டு பண்ணுமதாயிருக்கும் ... .... .... .... .... (98)

**99, இதில்நின்றும், வைகாரிகம், தைஜஸம், பூதாதியென்று த்ரிவிதமான அஹங்காரம் பிறக்கும்.**

99 [இனி மற்றுமுண்டான விகாரங்களும் அடைவே சொல்லப்படுகின்றன ] இந்த மஹானில் நின்றும் ஸாத்விக ராஜஸ தாமஸ ரூபபேதத்தாலே வைகாரிக மென்றும் தைஜஸமென்றும் பூதாதி யென்றும் மூவகைப்பட்ட அஹங்காரமும் பிறக்கும். இத்தால் குணத்ரயாத்மகமான மூலப்ரக்ருதியில் நின்றும் பிறந்ததாகையாலே மஹானும் குணத்ரயாத்மகமா யிருக்குமென்றும், அப்படியே குணத்ரயாத்மகமான மஹானில் நின்றும் பிறந்ததாகையாலே அஹங்காரமும் குணத்ரயாத்மகமாயிருக்கு மென்றும் சொல்லிற்றாயிற்று. ... ... (99)

**100. அஹங்காரம் அபிமாநஹேதுவாயிருக்கும்.**

100. அஹங்காரத்தினுடைய க்ருத்யமேதென்னில் ; இது தேஹாத்மாபிமாநம் முதலியவற்றைப் பிறப்பிக்குமென்க .. ... ... (100)

**101. இதில் வைகாரிகத்தில் நின்றும் ச்ரோத்ரத்வக் சக்ஷுர் ஜிஹ்வாக்ராணங்களென்கிற ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், வாக்பாணிபாதபாயூபஸ்தங்களென்கிற கர்மேந்த்ரியங்களைந்தும், மநஸ்ஸுமாகிற பதினோரிந்த்ரியங்களும் பிறக்கும்.**

101. வைகாரிக—தைஜஸ—பூதாதிபேதத்தாலே மூவகைப்பட்டதாக வன்றோ அஹங்காரம் சொல்லப்பட்டது; இப்படி மூவகைப்பட்ட அஹங்காரத்தில் வைகாரிகமாவது—ஸாத்விகாஹங்காரமாகையாலே இதில் நின்றும் ஸத்வகார்யமான இந்த்ரியங்கள் பதினொன்றும் பிறக்கும்; கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்தும் மனஸ்ஸுமாகிறவை அவையாம். ... .... (101)

**102. பூதாதியில் நின்றும் சப்ததந்மாத்ரை பிறக்கும், இதில்நின்றும் ஆகாசமும் ஸ்பர்சதந்மாத்ரையும் பிறக்கும். இதில் நின்றும் வாயுவும் ரூபதந்மாத்ரையும் பிறக்கும். இதில்நின்றும் தேஜஸ்ஸும் ரஸதந்மாத்ரையும் பிறக்கும். இதில் நின்றும் அப்பும் கந்ததந்மாத்ரையும் பிறக்கும். இதில் நின்றும் ப்ருதிவி பிறக்கும்.**

102. இனி பூதாதியென்னப்படுகிற தாமஸாஹங்காரத்தில் நின்றும் ஐந்து தந்மாத்ரைகளும் அவற்றின் விசேஷமான ஐந்து பூதங்களும் பிறக்குமடைவு சொல்லப்படுகிறது. பூதாதியென்கிற தாமஸாஹங்காரத்தில் நின்றும் ஆகாசத்தினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ஶப்ததந்மாத்ரை பிறக்கும்; இந்த ஶப்ததந்மாத்ரையில் நின்றும் இதினுடைய ஸ்தூலாவஸ்தையாயும் ஶப்தகுணம் வ்யக்தமாயிருக்கப் பெற்றதாயுமுள்ள ஆகாசமும் வாயுவினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ஸ்பர்ஶ தந்மாத்ரையும் பிறக்கும்; இந்த ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும் இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ஸ்பர்ஶகுணகமான வாயுவும் தேஜஸ்ஸினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ரூபதந்மாத்ரையும் பிறக்கும். இந்த ரூபதந்மாத்ரையில் நின்றும் இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ரூபகுணகமான தேஜஸ்ஸும் அப்பினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான ரஸதந்மாத்ரையும் பிறக்கும். இந்த ரஸதந்மாத்ரையில் நின்றும் இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் ரஸகுணகமான அப்பும் ப்ருதிவியினுடைய ஸூக்ஷ்மாவஸ்தையான கந்ததந்மாத்ரையும் பிறக்கும். இந்த கந்த தந்மாத்ரையில் நின்றும் இதினுடைய ஸ்தூலாவஸ்தையாய் கந்தத்தை குணமாகவுடைத்தான ப்ருதிவி பிறக்கும். ... ... ... (102)

**103. ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும் ஆகாசம் தொடக்கமான நாலு பூதங்களுக்கும் கார்யமாய், வாயு தொடக்கமான நாலு பூதங்களுக்கும் காரணமாயிருக்கு மென்றுஞ் சொல்லுவர்கள்.**

103. தந்மாத்திரத்தில் நின்றும் தந்மாத்ரம் பிறக்கிறபடி கீழே சொல்லிற்று. பூதத்தில் நின்றும் தந்மாத்ரோத்பத்திக்ரமமும் சாஸ்த்ரஸித்தமாகையாலே அதுவும் ஸங்க்ரஹேண சொல்லப்படுகிறது. பூதாதியில் நின்றும் சப்ததந்மாத்ரை பிறக்கும். ஶப்ததந்மாத்ரையில் நின்றும் ஆகாஶம் பிறக்கும். ஆகாஶத்தில் நின்றும் ஸ்பர்ஶ தந்மாத்ரை பிறக்கும். ஸ்பர்ஶதந்மாத்ரையில் நின்றும் வாயு பிறக்கும். வாயுவில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும். ரூபதந்மாத்ரையில் நின்றும் தேஜஸ்ஸு பிறக்கும். தேஜஸ்ஸில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும் ரஸதந்மாத்ரையில் நின்றும் அப்பு பிறக்கும். அப்பில் நின்றும் கந்ததந்மாத்ரை பிறக்கும். கந்த தந்மாத்ரையில் நின்றும் ப்ருதிவி பிறக்கும் என்றபடி. .... .... .... (103)

**104. தந்மாத்ரங்களாவன பூதங்களினுடைய ஸூக்ஷ்மாவஸ்தைகள்.**

104. பூததந்மாத்ரோத்பத்திக்ரமம் கீழே சொல்லிற்று. அதில் தந்மாத்ரங்கள் தான் எவையென்னச் சொல்லுகிறது. ஶாந்தத்வ கோரத்வ மூடத்வ ரூபமான விசேஷங்களை யுடைத்தல்லாத ஶப்தாதிமாத்ரத்தை குணமாகவுடைத்தாயிருக்கிற ஆகாஶாதி பூதஸூக்ஷ்மங்களுக்கு தந்மாத்ரமென்று பெயர் தந்மாத்ரையெனினுமொக்கும். ஶாந்தத்வமாவது அநுகூலமாகக் கொள்ளப்படுகை.

கோரத்வமாவது ப்ரதிகூலமாகக் கொள்ளப்படுகை. மூடத்வமாவது இவையிரண்டு மன்றிக்கே உதாஸீனமாகக் கொள்ளப்படுகை. இதில் பூமியும் அப்பும் இயற்கையாகவே ஶாந்தங்களாயிருக்கும். தேஜஸ்ஸும் வாயுவும் கோரங்களாயிருக்கும். ஆகாஶம் மூடமாயிருக்கும். இவை ஒன்றோடொன்று கூடினால் ஶாந்தத்வ கோரத்வ மூடத்வங்களையுடையனவாயிருக்கும். தந்மாத்ரங்களுக்கு இந்த ஶாந்தத்வாதி விஶேஷமில்லாமையாலே அவை அவிஶேஷங்களென்று சொல்லப்படுகின்றன. ஆகவே தந்மாத்ரங்களென்றும் அவிஶேஷங்களென்றும் பர்யாயம். (104)

**105. மற்றையிரண்டஹங்காரமும் ஸ்வகார்யங்களைப் பிறப்பிக்கும்போது, ராஜஸாஹங்காரம் ஸஹகாரியாயிருக்கும்.**

105. இனி ராஜஸாஹங்காரத்தினுடைய கார்யம் சொல்லுகிறது. ஸாத்விகாஹங்காரம் தாமஸாஹங்காரம் என்கிற விரண்டும் தன் தன் காரியங்களையுண்டாக்கும்போது பீஜத்தினுடைய அங்குரத்திற்குத் தண்ணீர்போலவும், அக்நி ஜ்வலிப்பதற்குக் காற்றுப் போலவும் ராஜஸாஹங்காரம் துணைசெய்து நிற்கும்.(105)

**106. ஸாத்விகாஹங்காரம் சப்ததந்மாத்ராதிபஞ்சகத்தையுமடைவே ஸஹகாரியாய்க் கொண்டு ச்ரோத்ராதி ஜ்ஞானேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும்; தத்ஸஹ க்ருதமாய்க்கொண்டு வாகாதிகர்மேந்த்ரியங்களைந்தையும் ஸ்ருஷ்டிக்கும்; இவற்றை யொழியத் தானே மநஸ்ஸை ஸ்ருஷ்டிக்குமென்றும் சொல்லுவர்கள்.**

106. கீழ் ஸாத்விகாஹங்காரத்திற்கும் தாமஸாஹங்காரத்திற்கும் ஸாதாரணமான ஸஹகாரி சொல்லப்பட்டது. இனி ஸாத்விகாஹங்காரத்திற்கு அஸாதாரணமாயிருப்பன சில ஸஹகாரி விசேஷங்கள் சொல்லப்படுகின்றன. ஸாத்விகாஹங்காரம் இந்திரியங்களை யுண்டாக்குமளவில் இவற்றினுடைய விஷயங்கள் வ்யவஸ்திதங்களாயிருப்பதற்காக ஶப்ததந்மாத்ரத்தை ஸஹகாரியாகக்கொண்டு ச்ரோத்ரத்தை ஸ்ருஷ்டிக்கும். ஸ்பர்ஶதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக்கொண்டு த்வகிந்திரியத்தை ஸ்ருஷ்டிக்கும். ரூபதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக்கொண்டு சக்ஷுஸ்ஸை ஸ்ருஷ்டிக்கும். ரஸதந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு ஜிஹ்வையை ஸ்ருஷ்டிக்கும். கந்ததந்மாத்ரத்தை ஸஹகாரியாகக் கொண்டு க்ராணேந்த்ரியத்தை ஸ்ருஷ்டிக்கும். இப்படி சப்ததந்மாத்ரம் முதலான ஐந்தையும் அடைவே துணையாகக் கொண்டு ச்ரோத்ரம் முதலிய ஐந்து ஜ்ஞாநேந்திரியங்களையும் படைத்த பிறகு, இந்த ஜ்ஞாநேந்திரியங்கள் ஐந்துக்கும் ஶேஷமாய்க்கொண்டு ஶப்தாதிகளான ஐந்தையும் அநுபந்தித்திருக்கின்ற கருமேந்திரியங்களைந்தையும் படைக்குமளவில் ச்ரோத்ரத்தைத் துணையாகக் கொண்டு வாக்கையும், த்வக்கைத் துணையாகக்கொண்டு பாணியையும், சக்ஷுஸ்ஸைத் துணையாகக்கொண்டு பாதத்தையும் ஜிஹ்வையைத்துணையாகக் கொண்டு உபஸ்த்தத்தையும் க்ராணத்தைத் துணையாகக்கொண்டு பாயுவையும் ஸ்ருஷ்டித்து, ஜ்ஞாநேந்திரியங்களுக்கும் கருமேந்திரியங்களுக்கும் துணையான மனஸ்ஸைத் துணையொன்று மின்றிக்கே தானே ஸ்ருஷ்டிக்குமென்று தத்வதர்ஶிகள் சொல்லுவர்கள். ஆக ஸாத்விகாஹங்காரத்தின் கார்யமும் அதன் ஸஹகாரி விசேஷங்களும் சொல்லப்பட்டன. ... (106)

**107. சிலர், இந்த்ரியங்களிலே சிலவற்றை பூதகார்ய மென்றார்கள்.**

**108. அது சாஸ்த்ர விருத்தம். 109. பூதங்கள் ஆப்யாயகங்களித்தனை.**

107-109. கீழ்ச் சொன்ன இந்த்ரியோத்பத்திக்ரமத்துக்கு விரோதியான பக்ஷம் நிரஸிக்கப்படுகிறது. க்ராணம் முதலான இந்திரியங்களை ப்ருதிவி முதலான பூதங்களின் காரியமாகவே கொள்ளுகிறார்கள் நையாயிகர் முதலானோர். அவர்கள் தாம் ஆநுமாநிகராகையாலே அநுமாநத்தாலேயாயிற்று அர்த்தத்தை ஸாதிப்பது. அப்படி இந்திரியங்களை பூதகார்யமாகச் சொல்லுவதானது இவற்றை அஹங்கார கார்யமாகச் சொல்லுகிற இதிஹாஸ புராணாதிகளோடு விரோதிக்கும். இதிஹாஸாதிகளிலுங்கூட இந்திரியங்களுக்கு பூதகார்யத்வம் (மோக்ஷ தர்மத்திலே) சொல்லப் பட்டிருக்கையாலே பூதங்கள் இவற்றுக்குக் காரணமாக வேணுமே யென்னில், அவற்றில் இந்திரியங்களுக்குச் சொன்ன பௌதிகத்வம் பூதங்களினாலுண்டான ஆப்யாயநமாத்ரத்தையிட்டு - என்று கொள்க. (ஆப்யாயநமாவது போஷணம்.) ஆக இந்திரியங்களுக்கு பூதங்கள் காரணங்களல்ல என்றதாயிற்று. ... (107-109)

**110 இவை கூடினாலல்லது கார்யகரமல்லாமையாலே, மண்ணையும் மணலையும் நீரையும் சேர்த்து ஒரு த்ரவ்யமாக்கிச் சுவரிடுவாரைப்போலே, ஈச்வரனிவற்றை யெல்லாம் தன்னிலே சேர்த்து ஓரண்டமாக்கி, அதுக்குள்ளே சதுர்முகனை ஸ்ருஷ்டித்தருளும்.**

110. ஆக விப்படி மஹான் முதலான பதார்த்தங்களினுடைய உத்பத்தி க்ரமம் சொல்லிற்றாயிற்று. இவற்றைக்கொண்டு ஈச்வரன் அண்ட ஸ்ருஷ்டி முதலியன செய்யும்படி சொல்லுகிறதுமேல். பலவகைப்பட்ட சக்தியோடே கூடித் தனித்தனியேயிராநின்ற இந்த மஹதாதிபதார்த்தங்கள் ஒன்றோடொன்று கூடினாலல்லது அண்ட ரூபமான காரியத்தை யுண்டாக்கமாட்டாமையாலே, தனிப்பட்ட சக்தியோடு தனித்தனியே யிருக்கின்ற மண் மணல் நீர்களை யொன்றுசேர்த்து ஒருபொருளாக்கிச் சுவராகிற கார்யத்தைச் செய்வாரைப்போலே, ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி கர்த்தாவான ஈச்வரன் இவற்றையெல்லாம் ஒன்றோடொன்று திரட்டி இவற்றாலே அண்ட ஸ்ருஷ்டியைப் பண்ணி அதுக்குள்ளே நான்முகனைப் படைப்பன். இனி மேலுள்ள ஸ்ருஷ்டியெல்லாம் ஸத்வாரக ஸ்ருஷ்டி யென்று கொள்க. ... (110)

**111. அண்டத்தையும் அண்டகாரணங்களையும் தானே யுண்டாக்கும்; அண்டத்துக் குட்பட்ட வஸ்துக்களை சேதநர்க்கந்தர்யாமியாய் நின்றுண்டாக்கும்**

111. ஸமஷ்டி ஸ்ருஷ்டியிலும் வ்யஷ்டி ஸ்ருஷ்டியிலும் ஸர்வேச்வரன் செய்யும் க்ரமம் சொல்லுகிறது இனி. [பஞ்சீகரணத்திற்கு முற்பட்ட ஸ்ருஷ்டி ஸமஷ்டி ஸ்ருஷ்டியென்றும், அதற்குப் பிற்பட்ட ஸ்ருஷ்டி வ்யஷ்டி ஸ்ருஷ்டி யென்றும் கொள்க] ஸமுதாய கார்யமான அண்டத்தையும் அதன் காரணமான மஹதாதி பதார்த்தங்களையும் ஸத்யஸங்கல்பனான ஸர்வேச்வரன் தன்னுடைய ஸாக்ஷாத்ஸங்கல்பத்தாலே யுண்டாக்குவன். நான்முகன் முதலான சேதநருடைய ஹ்ருதயங்களிலேயிருந்து ஸங்கல்பஜ்ஞாநாதிகளை ஜனிப்பித்துக்கொண்டு அண்டத்துக்குட்பட்ட ஸகல பதார்த்தங்களையும் உண்டாக்குவன். ... (111)

112. அண்டங்கள்தானநேகங்களாய், பதினாலுலோகங்களோடேகூடி, ஒன்றுக்கொன்று பதிற்று மடங்கான ஏழாவரணங்களாலும் சூழப்பட்டு, ஈச்வரனுக்கு க்ரீடாகந்துக ஸ்தாநீயங்களாய், ஜலபுத்புதம் போலே ஏககாலத்திலே ஸ்ருஷ்டங்களாயிருக்கும்.

112. ஸர்வேச்வரன் அண்டஸ்ருஷ்டியைப்பண்ணுமிவ்வளவே கீழ்ச் சொல்லிற்று; இப்போது அவ்வண்டங்களின் பன்மையும்அ வற்றினுடைய கட்டளையிருக்கும்படியும் அவைதான் ஸர்வேச்வரனுடைய இன்ன விநியோகத்துக்குறுப்பென்னுமிடமும் அவற்றினுடைய பரிணாமப்ரகாரமும் சொல்லுகிறது. * அண்டாநாம் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச, ஈத்ருசாநாம் ததா தத்ர கோடிகோடி சதாநி ச * என்கிறபடியே அண்டங்கள்தான் கணக்கில்லாதவையாயிருக்கும். [பதினான்கு லோகங்களோடே கூடியிருக்கும்.] தைத்யதாநவபந்நக ஸுபர்ணாதிகள் வர்த்திக்கும் தேசமான அதல விதல நிதல தலாதல மஹாதல ஸுதல பாதாலங்களாகிற கீழுலகங்களேழும் மநுஷ்யாதிகள் வர்த்திக்கும் தேசமான பூலோகமும், கந்தர்வாதிகள் வர்த்திக்கும் தேசமான புவர்லோகமும், அதிகாரத்திலிருக்கும் க்ரஹ நக்ஷத்ர இந்த்ராதிகள் வர்த்திக்கும் தேசமான ஸ்வர்லோகமும், அதிகாரம் கழிந்து அதிகாராபேக்ஷையோடு கூடியிருக்கிற இந்த்ராதிகள் வர்த்திக்கும் தேசமான மஹர்லோகமும், ப்ரஹ்ம புத்ரர்களான ஸநகாதி பரம யோகிகள் வர்த்திக்கும் தேசமான ஜநர்லோகமும், வைராஜரென்னும் ப்ரஜாபதிகள் வர்த்திக்கும் தேசமான தபோலோகமும், ப்ரஹ்ம விஷ்ணுசிவர்களும் அவர்களை யுபாஸித்து அவர்களை பிராபித்தவர்களும் வர்த்திக்கும் தேசமான ஸத்யலோகமுமாகிற பதினான்கு லோகங்களோடே கூடியிருக்கும். [ஒன்றுக்கொன்று பதிற்று மடங்கான ஏழாவரணங்களாலும் சூழப்பட்டு] ஜலம், அக்நி, வாயு, ஆகாசம் பூதாதி மஹான் அவ்யக்தம் என்கிற ஏழாவரணங்களும் ஒன்றுக்கொன்று பதின்மடங்கு பெருத்து ஆவரித்திருக்கும் [ஈச்வரனுக்கு க்ரீடாகந்துகஸ்தாநீயங்களாய்] க்ரீடாரஸமநுபவிக்கவிரும்பிய ஈச்வரனுக்கு லீலோபகரணங்களாயிருக்கும். [ஜலபுத்புதம் போலே ஏககாலத்திலே ஸ்ருஷ்டங்களாயிருக்கும்] ஓரொரு படையாக இட்டு வீட்டையுயர்த்திக் கட்டுமாபோலே க்ரமேண பரிணமிக்கையன்றியே நீர்க்குமிழி போலே ஒருகாலே உத்பந்நங்களாம். .... ... ... .... (112)

113. பூதங்களில் ஆகாசம் அவகாசஹேது; வாயு வஹநாதிஹேது; தேஜஸ்ஸு பசநாதிஹேது; ஜலம் ஸேசநபிண்டீகரணாதிஹேது; ப்ருதிவி தாரணாதி ஹேது வென்பர்கள்.

113 பஞ்சபூதங்களுக்கும் தனித்தனியே விநியோகம் காட்டப்படுகிறது. ஸகல பதார்த்தங்களுக்கும் இருக்கை போகை வருகை முதலானவற்றுக்கு இடமளித்துக் கொண்டிருப்பது ஆகாசத்துக்கு விநியோகம். வாயு வஹிக்கை முதலானவற்றுக்கு ஹேதுவாயிருக்கும். ஜலம் நனைத்தல் முதலானவற்றுக்கு ஹேதுவாயிருக்கும். ப்ருதிவி தரிப்பது முதலானவற்றுக்கு ஹேதுவாயிருக்கும். இப்படி தத்துவ வித்துக்கள் சொல்லுவர்கள். ... ... ... (113)

114 ச்ரோத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்துக்கும் அடைவே சப்தாதிகளைந்தையும் க்ரஹிக்கை தொழில்; வாகாதி கர்மேந்த்ரியங்களைந்துக்கும் விஸர்க்க சில்ப கத்யுக்திகள் தொழில்; மநஸ்ஸு இவை யித்தனைக்கும்பொது.

114. பஞ்சேந்திரியங்களினுடையவும் வ்ருத்தி பேதம் சொல்லுகிறது இனி; ச்ரோத்ரம் சப்தத்தை க்ரஹிக்குமது; த்வக்கு ஸ்பர்சத்தை க்ரஹிக்குமது; சக்ஷுஸ்ஸு ரூபத்தை க்ரஹிக்குமது; ஜிஹ்வை ரஸத்தை க்ரஹிக்குமது. க்ராணம் கந்தத்தை க்ரஹிக்குமது; வாக்குக்கு உக்தியும், பாணிக்கு சில்பமும், பாதத்துக்கு கதியும், உபஸ்தபாயுக்களுக்கு ஜலமல விஸர்ஜனமும் தொழில். ஜ்ஞானேந்திரியங்கள் தம்தமக்குரிய விஷயங்களை க்ரஹிக்கும் போதும், கருமேந்திரியங்கள் தம்தம் தொழில்களை நடத்தும்போதும் மனத்தின் உதவி இன்றியமையாததாதலால் மனஸ்ஸு இவையித்தனைக்கும் ஸாதாரணமாயிருக்கும். ... .... (114)

115. ஆகாசாதி பூதங்களுக்கு அடைவே சப்தாதிகள் குணங்களாயிருக்கும்.

115. ஜ்ஞானேந்திரியங்களுக்கு விஷயங்களாகச் சொல்லப்பட்ட சப்தம் முதலியன ஐந்தும் ஆகாசாதி பஞ்சபூதங்களுக்கும் வயவஸ்தித குணங்களாயிருக்கும். ஆகாசகுணம் சப்தம்; வாயுகுணம் ஸ்பர்சம்; அக்நிகுணம் ரூபம்; ஜலகுணம் ரஸம்; ப்ருதிவிகுணம் கந்தம் என்றிப்படி ப்ரதிநியதமாயிருக்குமென்கை. .... (115)

116. குண விநிமயம் பஞ்சீகரணத்தாலே.

116. ஒரு பூதத்தில் மற்ற பூதங்களின் குணங்களும் காணலாம்படி பூதங்களில் குணக்கலப்பு ஏற்பட்டிருப்பது பஞ்சீகரணத்தாலே. குணங்களாகையாலே ஆச்ரயத்திற்காட்டில் வேறிடத்திலிருப்பு இவற்றுக்கு ஸம்பவிக்கமாட்டாது. ஆகையால் த்ரவ்யத்தினுடைய கலப்பே குணக்கலப்புக்கு ஹேதுவென்க. பஞ்சீகரணமாவது—ஆகாசம் முதலிய பஞ்ச பூதங்களையும் தனித்தனியே [ஒவ்வொன்றையும்] இரண்டு கூறாக்கி, அவற்றிலே ஒரு கூறுதன்னை நாலு கூறாக்கி அந்த கூறுகளை இதர பூதங்களிலே கூட்டி ஸர்வ பூதங்களிலும் ஸர்வமுமுண்டாம்படிபண்ணுகை. இப்படியானால் ஆகாசாதி பூத பேத வ்யவஹாரம் எங்ஙனே பொருந்து மென்னில்; அவிபக்தமானவை ப்ரதானங்களாய் நிற்கையாலே பொருந்தும். .... (116)

117. ஆகாசம் - கறுத்துத் தோற்றுகிறதும் அத்தாலே.

117. அதிஸூக்ஷ்மமாகையாலே கண்ணுக்குத் தோற்றுதபடியிருக்குமாகாசமானது கட்புலனுக்கு இலக்காகையும், "யத் க்ருஷ்ணம் தத் ப்ருதிவீ" என்று பூமிக்கு உள்ளதொன்றாகச் சொல்லப்படுகிற கறுப்புநிறத்தையுடையதாய்க் காணப்படுவதும் பஞ்சீகரணத்தாலே. ஆக, பஞ்சீகரணத்தாலே ஸகல பூதங்களும் ஒன்றோடொன்று சேருமாகையாலே சப்தாதி குணங்களைந்தும் பஞ்சபூதங்களிலுமுண்டாயிருக்குமென்று குணக் கலப்பின் காரணம் சொல்லிற்றாயிற்று. ... (117)

118. முன்புத்தை தந்மாத்ரைகளோடே கூடிக்கொண்டு உத்தரோத்தர தந்மாத்ரைகள் ஸ்வவிசேஷங்களைப் பிறப்பிக்கையாலே, குணாதிக்யமுண்டாயிற்றென்றும் சொல்லுவர்கள்.

118. இனி ஆகாசாதிகளில் பூர்வபூர்வ தத்வத்திற்காட்டிலும் உத்தரோத்தர தத்வத்துக்கு குணாதிக்யமுண்டாகைக்கு அடி சொல்லுகிறது. ஸ்பர்சதந்மாத்ரமானது சப்ததந்மாத்ரத்தாலே ஆவரிக்கப்பட்டு ஸ்வவிசேஷமான வாயுவைப்

பிறப்பிக்கையாலே வாயுவுக்கு ஸ்பர்ஶ ஶப்தங்களிரண்டும் குணமாயிற்று. இப்படி சப்ததந்மாத்ரத்தாலே ஆவரிக்கப்பட்ட ஸபர்ஶதந்மாத்ரத்தாலே ஆவரிக்கப்பட்டு அவையிரண்டோடுங்கூடி நின்று ரூபதந்மாத்ரமானது ஸ்வவிசேஷமான தேஜஸ்ஸைப் பிறப்பிக்கையாலே அந்த தத்துவத்துக்கு ஶப்த ஸ்பர்ச ரூபங்களாகிற மூன்று குணங்களுமுண்டாயின. இப்படியே கண்டுகொள்ளுமளவில் உத்தரோத்தர பூதங்களில் குணுதிக்யம் தம் தம் தந்மாத்ரங்களுக்குண்டான ஆவரண ப்ரயுக்தமென்பது தெளியலாகும். .... .... .... .... (118)

## 119. ஸத்வ சூந்யமாவது—காலம்.

119. உபக்ரமத்தில் "இது சுத்த ஸத்வமென்றும் மிச்ரஸத்வமென்றும் ஸத்வசூந்யமென்றும் த்ரிவிதம்" (78) என்றருளிச் செய்து, (79) "இதில் சுத்த ஸத்வமாவது" என்று தொடங்கி சுத்தஸத்வத்தை விவரித்து, மேலே (85) "மிச்ர ஸத்வமாவது" என்று தொடங்கி அதை விவரித்தாயிற்று; இப்போது ஸத்வ சூந்யமென்பது விவரிக்கப்படுகிறது ஸத்வசூந்யமென்றது ஸத்வகுணமில்லாதது என்றபடி. இதனுல் ரஜோகுணதமோகுணமுள்ளது என்றபடியன்று. ஸத்வ குணம் ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கும் உபலக்ஷணமாய் ஸத்வசூந்ய மென்றது ஸத்வம் முதலிய மூன்று குணமுமில்லாதது என்றபடி. இத்தால் கேவலஸத்வமாயிருக்கிற ஓர் அசித்தைக்காட்டிலும், குணத்ரயாச்ரயமாயிருக்கிற மற்றோர் அசித்தைக் காட்டிலும் வ்யாவ்ருத்த ஸ்வரூபமாயிருக்கும்படி சொல்லிற்று. இதுதான் காலமென்பது.

**120. இது, ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய பரிணுமங்களுக்கு ஹேதுவாய், கலா காஷ்டாதிரூபேண பரிணமிக்கக்கடவதாய், நித்யமாய், ஈச்வரனுக்கு க்ரீடா பரிகரமாய், சரீரபூதமாயிருக்கும்.**

120. இதினுடைய ப்ரகாரமேதென்னில்; [**ப்ரக்ருதி ப்ராக்ருதங்களினுடைய பரிணுமங்களுக்கு ஹேதுவாய்**] அவ்யக்தமாகிற ப்ரக்ருதியென்ன, வ்யக்தமாகிற ப்ராக்ருதமென்ன இவற்றினுடைய பரிணுமங்களுக்கு ஹேதுவாயிருக்கை காலதத்வத்தினுடைய ஒரு ப்ரகாரம். அவற்றுக்கு இது ஹேதுவாயிருக்கையாவதென்னென்னில்; அவற்றைத் தன்னுடைய ஸங்கல்பாதிகளாலே பரிணமிப்பிக்கின்ற ஸர்வேச்வரன் காலத்தினுடைய அவஸ்தாவிசேஷங்களைப் பார்த்துக்கொண்டிருந்து அந்தந்த காலங்கள் வந்தபோது இவற்றை நிர்வஹிக்கையாலே இதையிட்டு அவற்றின் பரிணுமங்களுக்கு இது ஹேதுவென்கிறது. ஜகத் ஸ்ருஷ்டி பண்ணுகிறபோது அக்காலம் வருமளவும் பார்த்துக்கொண்டிருந்தன்றே ஸ்ருஷ்டித்தது. ஸ்ருஷ்டியைச் சொன்னது ஸ்திதிலயங்களுக்கு மொக்கும். இப்படி காலப்ரதாநமாக ஸர்வேச்வரன் நிர்வஹித்தருளுகையாலே இவ்விபூதியில் எல்லாப் பொருள்களும் காலக்ருதபரிணுமமுடையனவாயிருக்கும். [**கலாகாஷ்டாதிரூபேண பரிணமிக்கக்கடவதாய்**] நிமேஷம் பதினைந்து கொண்டது காஷ்டை; காஷ்டை முப்பது கொண்டது கலை, கலை முப்பது கொண்டது முஹூர்த்தம்; முஹூர்த்தம் முப்பதுகொண்டது திவஸம்; திவஸம் முப்பது கொண்டது மாஸம்; மாஸமிரண்டு கொண்டது ருது; ருது மூன்று கொண்டது அயனம்; அயனமிரண்டுகொண்டது ஸம்வத்ஸரம்.........." இத்யாதி

யாக ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே காலத்தினுடைய பரிணாம விசேஷம் ஸ்ரீபராசர பகவானாலே பேசப்பட்டுள்ளது. இதுவாயிற்று காலத்தினுடைய பரிணாம விசேஷம். [**நித்யமாய்**] ஆதியும் அந்தமுமில்லாததாயிருக்கை. [**ஈச்வரனுக்கு க்ரீடாபரிகரமாய்**] ப்ரக்ருதி புருஷ காலங்கள் மூன்றும் ஈச்வரனுக்கு லீலோபகரணமாயிருக்கும். அதில் ப்ரக்ருதி புருஷர்கள் ஸ்ருஷ்டி முதலானவற்றுக்கு விஷயபூதமாய்க்கொண்டு லீலோபகரணம்; காலமோவென்னில் ஸஹகாரியாயிருந்துகொண்டு லீலோபகரண மாகிறது. ஸத்யஸங்கல்பனான ஈச்வரன் ஸ்ருஷ்டி முதலானவற்றை நிர்வஹிக்கு மிடத்தில் தான் அடியிற் பண்ணிவைத்த காலநியமம் தப்பாதபடி அவ்வவகாலம் வருகையைப் பார்த்திருந்தே நிர்வஹிக்கையாலே இது ஸ்ருஷ்டி விஷயமாயிருக்கும். இப்படிகளாலே ஈச்வரனுக்கு க்ரீடாபரிகரமாயிருக்குமாயிற்று. இத்தை க்ரீடா பரிகரமென்றே சொல்லுகையாலே—காலக்ருத பரிணாமமேயாய்ச் செல்லுகிற லீலா விபூதியிலே இதுக்கு விநியோக மென்றும், அகாலகால்யமான நித்யவிபூதியில் இது கொண்டு அபேக்ஷையில்லை யென்றும் தெரிவிக்கப்பட்டதாயிற்று. [**சரீரபூதமாயிருக்கும்**] ஈச்வரனுக்கு அப்ருதக்ஸித்த விசேஷணமாயிருக்குமென்றபடி. கீழே ஈச்வர னுக்கு க்ரீடாஸஹகாரியாயிருக்கு மென்கையாலே 'ஸஹகாரிகாரணமுமீச்வரனே' என்கிற ஸித்தாந்தத்திற்கு விரோதமாமோவென்கிற சங்கைக்கு இடமில்லாதபடி இது சொல்லிற்று. ... ... ... ... (120)

**121. மற்றையிரண்டசித்தும், ஈச்வரனுக்கும் ஆத்மாவுக்கும் போக்யபோகோபகரண போக ஸ்தாநங்களாயிருக்கும்.**

121, உபக்ரமத்தில் உத்தேசித்தபடி மூன்றுவிதமான அசித்தையும் பற்றிச் சொல்லி வருமிடத்தில் அவனுக்கு போகோபகரணமான கௌரவத்தையிட்டு சுத்தஸத்வத்தை முந்துறவருளிச் செய்தார்; அவனுடைய லீலைக்கு ப்ரதாநோப கரணமாய்க் கொண்டு ப்ரதாந சப்தவாச்யமான மிச்ரஸத்வத்தை அனந்தரம் அருளிச்செய்தார். அந்த ப்ரதாந பரிணாமத்துக்கு ஸஹகாரியாய்க் கொண்டு லீலோபகரணமாயிருக்கும் ஸத்வசூந்யத்தை அனந்தரம் அருளிச்செய்தார். இங்ஙனமே மூன்று அசித்தையும் சொல்லுகிறவிடத்தில் ''ப்ரக்ருதி ப்ராக்ருதங்களி னுடைய பரிணாமங்களுக்கு ஹேதுவாய்'' என்று கால தத்துவத்துக்கு விநியோகம் சொன்னதுபோல முந்தின இரண்டு அசித்துக்கும் விநியோகம் சொல்லப்பட்ட தில்லை; அது இப்போது சொல்லப்படுகிறது. சுத்த ஸத்வமும் மிச்ரஸத்வமுமாகிற மற்றையிரண்டு அசித்தும் ஈச்வரனுக்கும் ஆத்மாவுக்கும் போக்யபோகோபகரண போகஸ்தானங்களாயிருக்கும் 'ஆத்மாவுக்கும்' என்ற ஏகவசநம் ஜாத்யேகவசன மாகையாலே பத்த முக்த நித்யர்களான மூவகைப்பட்ட சேதநர்களையும் சொல்லு கிறது. அசேதநத்துக்கு போக்தாக்கள் சேதநர்களேயாகையாலும், சேதநர்களாக வுள்ளது ஈச்வர ஜீவர்களாகையாலும் இவ்வுபயர்க்கும் இருவகையசித்தும் போக்ய போகோபகரண போகஸ்தானங்களா யிருக்கக் குறையில்லை. இப்படியிருந்ததே யாகிலும், சுத்தஸத்வமானது [நித்யவிபூதி] கேவலம் ஈச்வரனுடைய இச்சையாலே அவனுடைய போகத்துக்காகப் பரிணமிக்கையாலும், ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை நன்கு கண்டிருக்கிற நித்ய முக்தரில் 'அஹம் மம' என்றிருப்பாரில்லாமையாலும்

அதினுடைய விநியோகம் ஈச்வரப்ரதாநமாயிருக்கும். மிச்ரஸத்வமானது [லீலா விபூதி] அங்ஙனன்றிக்கே சேதநர்களின் கருமங்களுக்கேற்ப பகவத் ஸங்கல்பத்தாலே பரிணமிக்கையாலும், சேதநரெல்லாரும் தேவாதி சரீரங்களிலே அஹம் மமதா புத்தியைப் பண்ணி ஸ்வதந்த்ரபோக்தாக்களாயிருக்கையாலும் ஈச்வரனுக்கு இந்த விபூதியில் லீலாரஸமே மிக்கதாய் போகரஸம் அத்யல்பமாகையாலும் இதினுடைய விநியோகம் பத்தசேதநப்ரதானமாயிருக்கும். .... ... (121)

**122 போக்யங்களாகிறன-விஷயங்கள்; போகோபகரணங்களாகிறன-சக்ஷுராதி கரணங்கள் போகஸ்த்தாநங்களாகிறன - சதுர்தசபுவநமும் ஸமஸ்த தேஹமும்.**

122. உபயவிபூதியிலும் போக்யபோகோபகரண போகஸ்தானங்களின் விவேகம் செய்யப்படவேண்டும். நித்யவிபூதியில் போக்யங்களாவன—அப்ராக்ருதமான ஶப்தாதிகள். போகோபகரணங்களாவன—திவ்யமால்யாதிகளும் ச்சத்ர சாமராதிகளும். போகஸ்தானங்களாவன—அப்ராக்ருத ரத்நமயமான மண்டபங்களும் மாளிகைகளும் பஞ்சோபநிஷந்மயமான திவ்ய விக்ரஹங்களும்—என்றிப்படி நித்யவிபூதிப்ரக்ரியையும் இவ்விடத்திலே அருளிச்செய்ய வேண்டியிருக்க ஸங்கோசித்து லீலாவிபூதிப்ரக்ரியைமட்டும் அருளிச்செய்யப்படுகிறதிங்கு. இங்கு சேதநர்க்கு போகமாவது ஸுகதுːக்க ரூபமான அநுபவஜ்ஞானம். அந்த ஜ்ஞானத்திற்கு விஷயமாகின்ற சப்தாதிகள் போக்யங்கள். இந்த்ரியங்கள் அந்த ஜ்ஞானத்திற்கு உபகரணங்களாகையாலே போகோபகரணங்கள். போகஸ்தாநமென்று லோகங்களையும் தேஹங்களையும் சொல்லுகிறது. சேதநனுக்கு எந்த அதிகரணத்திலே ஸுகதுக்க ரூபமான அநுபவஜ்ஞானம் பிறக்கிறதோ அதுதானே போகஸ்தானமென்று சொல்லத்தக்கது. ஆகவே பதினுன்கு லோகங்களையும் ஸுரநர திர்யக் ஸ்தாவராத்மகமான ஸமஸ்த தேஹங்களையும் போகஸ்தானமாகச் சொல்லிற்று. ஈச்வரனுக்கு இந்த விபூதியிலுண்டான போக்ய போகோபகரணாதிகளையும் அவதாரகந்தமான க்ஷீரார்ணவசயனம், அவதார விசேஷங்கள், அர்ச்சாவதாரங்கள் ஆகிய இவற்றிலுண்டான விநியோக விஶேஷங்களாலறிவது. .... (122)

**123. இதில், முற்பட்ட அசித்துக்குக் கீழெல்லையுண்டாய் சுற்றும் மேலுமெல்லையின்றிக்கேயிருக்கும்; நடுவிலசித்துக்குச் சுற்றுங் கீழுமெல்லையின்றிக்கே, மேலெல்லையுண்டாயிருக்கும்; கால மெங்குமொக்கவுண்டாயிருக்கும்.**

123. இதில் மூவகைப்பட்ட அசித்தினுடையவும் பரிமாணங்கள் சொல்லப்படுகின்றன. சுத்தஸத்வமான முந்தின அசித்துக்குக் கீழெல்லையுண்டு; எதனுல்? மிச்ரஸத்வாவதியாகையாலே. அந்த மிச்ரஸத்வத்துக்கு மேலெல்லையுண்டு; எதனுல்? சுத்தஸத்வாவதியாகையாலே. காலத்துக்கு அப்படியொரு அவச்சேதமில்லாமையாலே அது எங்குமுண்டாயிருக்கும். .... .... (123)

**124. காலந்தான் பரமபதத்தில் நித்யம், இங்கு அநித்யமென்றுஞ் சொல்லுவர்கள்.**

124. எங்குமுண்டான காலந்தான் உபய விபூதியிலும் நித்யமென்று இவ்வாசிரியர்தமக்குத் திருவுள்ளம். இங்ஙனன்றிக்கே இதுக்கு விபூதிவிபாகத்தையிட்டு ஒரு பேதம் சொல்லுவாருமுண்டு; அதாவது, காலம் பரமபதத்திலே நித்யம், இங்கு அநித்யமென்றுஞ் சொல்லுவர்களென்பதாம். நம்முடைய தர்சனஸ்தர்கள் தங்களிலேயுண்டான மத பேதம் காட்டினபடி. ... ... (124)

**125. சிலர் காலத்தை யில்லை யென்றார்கள்.**

**126. ப்ரத்யக்ஷத்தாலும், ஆகமத்தாலும் ஸித்திக்கையாலே அது சொல்லவொண்ணாது.**

125, 126. பௌத்தாதிகள் காலத்தை யொப்புக்கொள்ளாமல் இல்லை யென்கிறார்கள். அது தவறு; ஸ்தாவரஜங்கமரூபமான எல்லாப் பொருள்களும் காலக்ருத பரிணாமமுடையனவாகவே காணப்படுகையாலே காலமுண்டென்பது ப்ரத்யக்ஷஸித்தம். தவிர, ச்ருதி முதலிய ப்ரமாணங்களினாலும் ஸித்தம். விசேஷித்து ஜ்யோதிச் சாஸ்த்ரம் கால நிர்ணயத்தையே ஜீவநாடியாகக் கொண்டதென்பது முணரத்தக்கது. ... . .. (125, 126)

**127. பலரும் திக்கென்று தனியேயொரு த்ரவ்யமுண்டென்றார்கள்.**

**128 பல ஹேதுக்களாலும், ஆகாசாதிகளிலே அந்தர்ப்பூதமாகையாலே அதுவுஞ் சேராது.**

127, 128. வைசேஷிகாதிகள் ப்ருதிவி முதலானவைபோலே திக்கென்றும் தனியேயொரு த்ரவ்யமுண்டென்கிறார்கள்; இதுவும் தவறு. நாலுபேர் நாலுதிக்கிலும் நின்றால் நால்வர்க்கும் நடுவானவிடம் ஒருவனுக்குக் கிழக்காய் ஒருவனுக்கு மேற்காய் ஒருவனுக்கு வடக்காய் ஒருவனுக்குத் தெற்காய்த் தோற்றாநின்றது. இதனால் ப்ரதியோகிக்குத் தகுந்தபடி கல்பித்துக்கொள்ளுகையேயொழிய தனிப்பட்ட த்ரவ்யமொன்றில்லை யென்பது புலனாகும்; இங்ஙனே மற்றும் பலஹேதுக்களுமுண்டு. ஆகவே ஆகாசத்திலோ பூமியிலோ திக்குஅந்தர்ப்பூதமென்று கொள்வது. ஸூர்யனுடைய உதயாதிகளுக்கேற்ப ப்ருதிவ்யாகாசங்களுக்குள்ளே திக்விபாகத்தைக் கல்பித்துக்கொள்ளுமத்தனை யென்றதாயிற்று. .... (127, 128)

**129. சிலர் ஆவரணாபாவம் ஆகாசமென்றார்கள்.**

**130. பாவரூபேண தோற்றுகையாலே அதுவுஞ்சேராது.**

129, 130. பஞ்சபூதங்களென்று சொல்லப்படுமதில் ப்ருதிவிமுதலான நான்கு பூதங்களைப்போலே ஆகாசத்தையும் பாவரூபபதார்த்தமாகக் கொள்ளாதே ஆவரணாபாவரூபமாகக்கொள்ளுவர் பௌத்தர்; *ஆவ்ரியதே அநேந'' என்கிற கரணவ்யுத்பத்தியாலே ப்ருதிவி முதலான ஸ்தூலபதார்த்தங்கள் ஆவரணங்களாய் அவற்றினுடைய அபாவமே ஆகாசசப்தவாச்யமல்லது 'இது ஆகாசம்' என்று காட்டலாம்படி பாவரூபமானதொரு பதார்த்தமன்று என்பது பௌத்தர்களின் மதம். இதுவும் அஸாது "அத்ர ச்யேநঃ பததி, அத்ர க்ருத்ரঃ பததி" என்று ச்யேநாதிகளினுடைய பதநத்திற்கு இடமாய்க்கொண்டு ஆகாசமும் பாவரூபேண தோற்றுகையாலே இத்தை ஆவரணாபாவரூபமாகச் சொல்லுவது சேராது. ... (129, 130)

**131. வேறே சிலர் இதுதன்னை நித்யம் நிரவயவம் விபு அப்ரத்யக்ஷமென்றார்கள்.**

**132. பூதாதியிலே பிறக்கையாலும், அஹங்காராதிகளில் இல்லாமையாலும், கண்ணுக்கு விஷயமாகையாலும் அவை நாலுஞ் சேராது.**

131, 132. ஆகாசத்தை நித்யமென்றும் நிரவயவமென்றும் விபுவென்றும் அப்ரத்யக்ஷமென்றும் சொல்லுவர்கள் நையாயிகவைசேஷிகர்கள். அதுவும் சேராது. பூதாதியென்கிற தாமஸாஹங்காரத்தில் நின்றும் (ஆகாசம்) உண்டானதாகையாலே நித்யமென்னவொண்ணாது. ஒன்றில் நின்று முண்டானதொன்றுக்கு ஸாவயவத்வம் ஸித்தமாகையாலே நிரவயவமென்னவொண்ணாது; விபுவாகில் ஸர்வத்ர இருக்கவேணும்; தன்காரணமான அஹங்காராதிகளில் இதுக்கு வியாப்தியில்லாமையாலே விபுவென்னப்போகாது. பஞ்சீகரணப்ரயுக்தமான ரூபமுடைமையினால் கட்புலனுக்கு விஷயமாகையினாலே அப்ரத்யக்ஷமென்கையும் சேராது.

**133. த்வகிந்த்ரியத்தாலே தோற்றுகையாலே, வாயு அப்ரத்யக்ஷமென்கிற வதுவுஞ் சேராது.**

133. "வாயுவும் ப்ரத்யக்ஷமன்று; ஸ்பர்சத்தைக்கொண்டு அநுமிக்குமித்தனை" என்றுயிற்று அவர்கள் சொல்லுவது, அதுவும் சேராது. ஜ்ஞாநேந்திரியங்களிலே ஏதேனுமொன்றுக்கு இலக்கானபோதே ப்ரத்யக்ஷத்வம் ஸித்தமாகையாலே த்வகிந்த்ரியத்தாலே தோற்றுகிற வாயுவை அப்ரத்யக்ஷமென்னவொண்ணுது. .... ... ... .. ... (133)

**134. தேஜஸ்ஸு பௌமாதி பேதத்தாலே பஹுவிதம்.**

134. இனி, பரஸ்பர விலக்ஷணஸ்வபாவங்களான பூத விசேஷங்களில் அறியவேண்டும் அம்சங்கள் முக்யமானவை யெடுத்துரைக்கப்படுகின்றன. தேஜஸ்ஸானது, பௌமம் திவ்யம் ஔதர்யம் ஆகரஜம் என்கிற பேதத்தாலே அநேகவிதமாயிருக்கும்; தீபாதிகளை பௌமதேஜஸ்ஸென்கிறது; ஆதித்யாதிகளை திவ்ய தேஜஸ்ஸென்கிறது. ஜாடராக்நியை ஔதர்யமென்கிறது. ஸுவர்ணுதியை ஆகரஜமென்கிறது. ... . ... .... (134)

**135. அதில் ஆதித்யாதி தேஜஸ்ஸு ஸ்திரம்; தீபாதிதேஜஸ்ஸு அஸ்திரம்.**

135. இதில் ஸ்திர அஸ்திரவிபாகம் செய்யப்படுகிறது. நெடுங்காலமுள்ளதென்னுங் காரணத்தினுல் ஆதித்யாதி தேஜஸ்ஸு ஸ்திரமென்கிறது. விரைவில் நசிக்குங் காரணத்தினுல் தீபாதிதேஜஸ்ஸு அஸ்திரமென்கிறது. ... (135)

**136. தேஜஸ்ஸுக்கு நிறம் சிவப்பு; ஸ்பர்சமௌஷ்ண்யம்.**

136. தேஜஸ்ஸுக்கு இயற்கையான நிறம் சிவப்பு, தேஜஃபதார்த்தங்களில் நிறவேற்றுமை காணப்பட்டால் அது வேறு பதார்த்தங்களின் ஸம்ஸர்க்கத்தினுலானதென்று கொள்ளக்கடவது. உஷ்ணஸ்பர்சம் சீதஸ்பர்சம் அநுஷ்ணுசீதஸ்பர்சமென்று மூவகைப்பட்ட ஸ்பர்சத்திலும் இதுக்கு ஸ்பர்சம் ஔஷ்ண்யம். தேஜஃபதார்த்தங்களான ஸுவர்ணுதிகளில் ஔஷ்ண்யம் ப்ரபலஸஜாதீயத்ரவ்யங்களினுல் அபிபூதமாகையாலே தோன்ருது. ... .... ... (136)

**137. ஜலத்துக்கு நிறம் வெளுப்பு; ஸ்பர்சம் சைத்யம்; ரஸம் மாதுர்யம்**

137. ஜலத்திற்கு இயற்கையான நிறம் வெளுப்பு; வர்ணபேதம் ஔபாதிகம். சீதஸ்பர்சமே இதற்குள்ளது. ஸ்பர்சபேதமுண்டாவது அந்யஸம்ஸர்க்கத்தாலே. இதற்கு இயற்கையான ரஸம் மாதுர்யம். ... ... (137)

**138. பூமிக்கு நிறமும் ரஸமும் பஹுவிதம்.**

138. உலகில் காணப்படுகிற நாநாவித வர்ணங்களுக்கும் நாநாவித ரஸங்களுக்குமெல்லாம் உத்பத்திஸ்தானம் பூமியென்றவாறு. ... (138)

**139. ஸ்பர்சம் இதுக்கும் வாயுவுக்கும் அநுஷ்ணுசீதம்.**

139. பூமிக்கும் வாயுவுக்கும் ஸ்பர்சம்—உஷ்ணமும் சீதமுமன்றிக்கேயுள்ளதான அநுஷ்ணுசீதம். இவற்றிலும் காதாசித்கமாகக் காணப்படுகிற ஸ்பர்சபேதம் உபாதி ப்ரயுக்தமென்க. ... ... .... (139)

**140. இப்படி, அசித்து மூன்றுபடிப்பட்டிருக்கும்.**

140. ஆக இங்ஙனே விவரித்த ரீதியில் அசித்தத்வம் மூவகைப்பட்டிருக்குமென்று சொல்லி இந்த ப்ரகரணம் தலைக்கட்டப்பட்டது. .... ... (140)

**தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரணம் முற்றிற்று.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

**ஜீயர் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:
பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

# தத்வத்ரயத்தில் மூன்றாவதான ஈச்வரப்ரகரணம்.

## அவதாரிகை

இந்த ரஹஸ்ய க்ரந்தத்தின் உபக்ரமத்திலே 'முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரய ஜ்ஞானமுண்டாக வேணும்' என்றருளிச் செய்து, "தத்வத்ரயமாவது சித்தும் அசித்தும் ஈச்வரனும்" என்று அடுத்தபடியாக அம்மூன்று தத்வங்கள் இன்னவையென்று விபஜித்துக்காட்டி, சித்தும் அசித்து மாகிற இரண்டு தத்வங்களினுடையவும் ஸ்வரூப ஸ்வபாவவிசேஷங்களை ஸுவ்யக்தமாக அருளிச்செய்தாராயிற்று—கீழ். இனி. அவ்விரண்டு தத்வங்களுக்கும் நியாமகனான ஈச்வரனுடைய ஸ்வரூபாதிகள் தெளியவருளிச் செய்யப்படுகின்றன. ... *

**141. ஈச்வரன், அகிலஹேய ப்ரத்யநீகாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய், ஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணகணபூஷிதனாய் ஸகலஜகத்ஸர்க்கஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாய், "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ" என்கிற சதுர்வித புருஷர்களுக்கு மாச்ரயணீயனாய், தர்மார்த்தகாம மோக்ஷாக்க்ய சதுர்வித பலப்ரதனாய், விலக்ஷணவிக்ரஹ யுக்தனாய், லக்ஷ்மீ பூமி நீளா நாயகனாயிருக்கும்.**

*141.* இதில் ஈச்வரனுடைய ஸ்வரூபாதிவைலக்ஷண்யம் ஸங்க்ரஹேண பேசப்படுகிறது. [அகில ஹேயப்ரத்யநீக-அநந்த-ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனாய்] அகிலஹேயப்ரத்யநீகஸ்வரூபனாய், அநந்த ஸ்வரூபனாய், ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனாய் என்று யோஜித்துக்கொள்வது. ஈச்வரஸ்வரூபமானது ஸமஸ்தஹேயப்ரதிபடமாயிருக்கு மென்றும், த்ரிவிதபரிச்சேதரஹிதமாயிருக்கு மென்றும், ஸ்வயம்ப்ரகாசத்வமும் ஸுகரூபத்வமுமே வடிவாயிருக்குமென்றும் சொன்னபடி. [ஜ்ஞாந சக்த்யாதி கல்யாணகுணகண பூஷிதனாய்] ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு தயை வாத்ஸல்யம் ஸௌசீல்யம் முதலான பரமபோக்ய குண ஸமூஹங்களாலே அலங்க்ருதனாய் [ஸகல ஜகத் ஸர்க்கஸ்திதி ஸம்ஹாரகர்த்தாவாய்] ஸமஷ்டி வ்யஷ்டி ரூபங்களான ஸகல கார்ய வஸ்துக்களையும் படைத்தளித்து அழிப்பவனாய். [*ஆர்த்தோ.... சதுர்வித புருஷர்களுக்கும் ஆச்ரயணீயனாய்] ப்ரஷ்டைச்வர்யகாமன் கேவலன், அபூர்வைச்வர்யகாமன், பரமபுருஷார்த்த லக்ஷண பகவத் ப்ராப்திகாமன் என்று கீதையில் சொல்லப்பட்ட நால்வகை யதிகாரிகளுக்கும் பஜிக்கத் தக்கவனாய். [தர்மார்த்த காமமோக்ஷாக்க்ய சதுர்வித பலப்ரதனாய்] அறம் பொருளின்பம் வீடென்கிற நால்வகைப் புருஷார்த்தங்களையுமளிப்பவனாய். [விலக்ஷணவிக்ரஹயுக்தனாய்] "விக்ரஹந்தான் ஸ்வரூப குணங்களிலுங் காட்டில் அத்யந்தாபிமதமாய்' (181) என்று தொடங்கி மேலேயருளிச்செய்கிற வைலக்ஷண்யத்தையுடைய விக்ரஹத்தோடே கூடியிருக்குமவனாய். [லக்ஷ்மீபூமி நீளாநாயகனாயிருக்கும்] *கூந்தல் மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வனாயிருப்பவன் ஈச்வரன் என்றதாயிற்று. .... (141)

**142. அகில ஹேய ப்ரத்யநீகனுகையாவது—தமஸ்ஸுக்குத் தேஜஸ்ஸு போலேயும், ஸர்ப்பத்துக்கு கருடனைப்போலேயும் விகாராதி தோஷங்களுக்கு ப்ரதிபடமாயிருக்கை.**

142. கீழ்ச் சூர்ணையில் சொல்லப்பட்டவை விரிவாக உபபாதிக்கப்படுகின்றன மேல். முதலில் "அகில ஹேயப்ரத்யநீக—அநந்த—ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபனுய்" என்றதில் அகில ஹேயப்ரத்யநீகத்வம் உபபாதிக்கப்படுகிறது. தேஜஸ்ஸு இருக்குமிடத்தில் தமஸ்ஸு எப்படியணுகாதோ, கருடனிருக்குமிடத்தில் ஸர்ப்பம் எப்படியணுகாதோ அப்படி த்ரிவித சேதநாசேதந தோஷங்களும் தன்பக்கலில் அணுகவொண்ணுதபடி யிருக்கைதான் அகில ஹேயப்ரத்யநீகத்வமாவது. (142)

**143. அநந்தனுகையாவது - நித்யனுய், சேதநாசேதநங்களுக்கு வ்யாபகனுய், அந்தர்யாமியாயிருக்கை.**

143. அநந்தத்வம் உபபாதிக்கப்படுகிறது. தேஶபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்துபரிச்சேதமாகிய மூவகைப் பரிச்சேதங்களுமில்லாமைதான் அநந்தத்வமாவது. நித்யனுகையாலே 'இன்னகாலத்திலுள்ளான், மற்ருெரு காலத்தில் இலன்' என்கிற கால பரிச்சேதமில்லாமை; ஸகல சேதநாசேதநங்களுக்கும் வியாபகனுய்க் கொண்டு விபுவாயிருக்கையாலே 'இன்ன தேஶத்திலுள்ளான், மற்ருெரு தேஶத்தில் இலன்' என்கிற தேஶ பரிச்சேந மில்லாமை. ஸர்வாந்தர்யாமியாகையாலே ஸர்வத்துக்கும் தான் ப்ரகாரியாய், தனக்கு வேருெரு ப்ரகாரியில்லாதபடியிருக்கையாலே இன்ன வஸ்துபோலேயென்கிற வஸ்து பரிச்சேதமில்லாமை. .... (143)

**144. அந்தர்யாமியானுல் தோஷங்கள் வாராதோவென்னில் ;**

**145. சரீரகதங்களான பால்யாதிகள் ஜீவாத்மாவுக்கு வாராதாப்போலே, த்ரிவித சேதநாசேதந தோஷமுமீச்வரனுக்கு வாராது.**

144, 145. ஸகல சேதநாசேதநங்களோடும் தான் ஒட்டற்றிருக்கையன்றிக்கே அந்தர்யாமியாயிராநின்ருனென்ருல் அவ்வவற்றின் தோஷங்கள் இவனுக்கு வாராதோவென்னில்; ஜீவாத்மாவானவன் இந்த ஶரீரத்தை அதிஷ்டித்து ஸ்வாதீநமாக நிர்வஹித்துக்கொண்டிரா நிற்கச் செய்தேயும் சரீரத்தினுடைய இளமை முதுமை முதலான விகாரங்கள் உள்ளுறையுமந்த ஜீவாத்மாவுக்கு வாராதாப்போலே, ஈச்வரன் த்ரிவித சேதநாசேதனங்களுக்கும் அந்தர்யாமியாய் இவற்றை ஶரீரமாகக் கொண்டிராநிற்கச் செய்தேயும் அவற்றின் தோஷம் ஈச்வரனுக்கு வாராது. (இதற்கு மேலும் ஒரு ஶங்கை தோன்றும்.) ஶரீரியான ஜீவாத்மாவுக்கு ஶரீரத்தின் பால்ய யௌவநாதிகள் வந்ததில்லையேயாகிலும் ஶரீர ஸம்பந்தமடியாக துக்கம் அஜ்ஞானம் முதலியன வருகிறுப்போலே ஈச்வரனுக்கும் ஶரீரபூதங்களான இவற்ருேடுண்டான சேர்க்கையினுலே இங்ஙனே சில தோஷங்கள் வாராதோ வென்று சங்கிக்க நேரும் ; வாராது. ஜீவாத்மா ஶரீரத்தினுள்ளே ப்ரவேசிப்பதற்கு ஹேது கருமம்; ஈஶ்வரன் ப்ரவேசிப்பதற்கு ஹேது கருமமன்று, அநுக்ரஹம். ஆக ப்ரவேஶஹேதுவிசேஷத்தாலே ஶரீரங்களின் தோஷம் ததந்தர்யாமியான ஈச்வரனுக்கு வாராது. ... ... ... ... (144, 145)

**146. ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனுகையாவது - ஆநந்தரூப ஜ்ஞாநனு யிருக்கை.**

**147. அதாவது - கட்டடங்க அநுகூலமாய், ப்ரகாசமுமாயிருக்கை.**

146, 147. [இப் பிரகரணத்தின் முதல் சூர்ணையில் "ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபனுய்" என்றது உபபாதிக்கப்படுகிறது. ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபத்வமாவது என்னென்னில்; ஆனந்தரூபமான ஞானத்தை யுடையனுயிருக்கை என்னப்படுகிறது. 'ஞானத்தையும் ஆநந்தத்தையுமே ஸ்வரூபமாகவுடையனுயிருக்கை' என்று ஸப் தார்த்தம் சொல்லவேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாது, 'ஆனந்த ரூபஜ்ஞானனு யிருக்கை' என்றது ஏனென்னில்; ஞானமென்றும் ஆனந்தமென்றும் பிரித்துச் சொல்ல இரண்டு அவஸ்தையின்றிக்கே, ஞானமே ஸ்வரூபமாய் அதுதான் அநுகூலமாயிருக்கை ஆனந்தமாகையாலே. அதாவது ஸ்வரூபமுள்ள பரப்பெங்கும் அநுகூலமாயும் ப்ரகாஶமாயுமிருக்கையே ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூபத்வமென்றதாயிற்று. ஸ்வரூபத்தில் அநுகூலமல்லாததும் ப்ரகாஶமல்லாததுமான இடமே கிடையாதென்றுணர்க. அநுகூலத்வமாவது ஆஹ்லாதகரத்வம்; ப்ரகாசத்வமாவது—அந்யாதீந ப்ரகாசமாயிருக்கை யன்றிக்கே தனக்குத்தானே ப்ரகாசிக்கை.

**148. இவனுடைய ஜ்ஞாந சக்த்யாதி கல்யாண குணங்கள் நித்யங்களாய், நிஸ்ஸீமங்களாய், நிஸ்ஸங்க்யங்களாய், நிருபாதிகங்களாய் நிர்த்தோஷங்களாய், ஸமாநாதிக ரஹிதங்களா யிருக்கும்.**

148. [ஆகக் கீழே ஸ்வரூப வைலக்ஷண்யம் உபபாதிக்கப்பட்டது; இனி, ஸ்வரூபத்தைப் பற்றியிருக்கும் திருக்கல்யாண குணங்களினுடைய வைலக்ஷண்யம் உபபாதிக்கப்படுகிறது.] இப்பெருமானுடைய ஜ்ஞானம் ஶக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு வாத்ஸல்யம் ஸௌசீல்யம் ஶௌர்யம் வீர்யம் முதலான ஸகல குணங்களும் உத்பத்தி விநாசங்களுடையன வல்லாமல் ஸ்வரூபத்தைப் பற்றியிருக்கையாலே நித்யங்களாயிருக்கும். ஓரொன்றே அவதிகாணவொண்ணுதிருக்கும். எண்ணித் தலைக்கட்ட முடியாதிருக்கும். ஒருஉபாதியால் உண்டாகையன்றிக்கே ஸ்வாபாவிகங்களாயிருக்கும், ஹேயகுணங்களோடே கலசியிருக்கையாகிற குற்றமில்லாதே யிருக்கும். ஒப்புயர்வுமற்றிருக்கும். ... ... (148)

**149. இவற்றில் வாத்ஸல்யாதிகளுக்கு விஷயமநுகூலர், சௌர்யாதிகளுக்கு விஷயம் ப்ரதிகூலர்; இவற்றுக்குக் காரணமான ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கெல்லாரும் விஷயம்.**

149. கீழே சொல்லப்பட்ட கல்யாண குணங்களுக்கு மூன்று வகுப்புகளிலே சேர்க்கையுள்ளது; வாத்ஸல்யாதிகளென்று ஒரு வகுப்பு; ஶௌர்யாதிகளென்று ஒரு வகுப்பு; ஜ்ஞாநசக்த்யாதிகளென்று ஒரு வகுப்பு; ஆக இம் மூன்று வகுப்புகளிலும் சேர்ந்த குணங்களை யெடுத்து இவற்றுக்கு விஷயம் காட்டப்படுகிறது. (அதாவது, இன்ன குணம் இன்னுரிடத்திலே உபயோகப்படுமென்பது காட்டப்படுகிறதென்கை.) வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணங்களுக்கு ஆச்ரிதர்கள் விஷயபூதர்கள். ஶௌர்ய வீர்ய பராக்ரமங்களுக்கு ஆச்ரித விரோதிகள் விஷயபூதர்கள். கீழ்ச்சொன்ன வாத்ஸல்யாதி குணங்களுக்கும் சௌர்யாதி குணங்களுக்கும் ஊற்றுவாயான ஜ்ஞானசக்த்யாதி குணங்களுக்கு எல்லாரும்

விஷயபூதர்கள். ஆச்ரித ரக்ஷணாதிகள் செய்யவேணுமானாலும், ஆச்ரித விரோதி நிரஸநாதிகள் செய்யவேணுமானாலும், ஜ்ஞானம் சக்தி முதலிய ஆறு குணங்களோடு கூடியே நிர்வஹிக்க வேண்டுகையாலே யென்க. ... ... (149)

**150. ஜ்ஞானம் அஜ்ஞர்க்கு ; சக்தி அசக்தர்க்கு ; க்ஷமை ஸாபராதர்க்கு ; க்ருபை துக்கிகளுக்கு ; வாத்ஸல்யம் ஸதோஷர்க்கு ; சீலம் மந்தர்க்கு ; ஆர்ஜவம் குடிலர்க்கு ; ஸௌஹார்தம் துஷ்டஹ்ருதயர்க்கு ; மார்த்தவம் விச்லேஷ பீருக்களுக்கு ; ஸௌலப்யம் காணவாசைப் பட்டவர்களுக்கு; இப்படி யெங்கும் கண்டு கொள்வது.**

150. திருக்குணங்களை மூன்று வகையாக்கி அவற்றுக்கு விஷயங்கள் காட்டப்பட்டன கீழ்; குணங்களுக்குத் தனித்தனியே விஷய நியமமுண்டாகையாலே அதுதன்னையும் காட்டவேண்டி, கீழெடுத்த குணங்களிலே சிலவற்றுக்குத் தனியே விஷயங்கள் காட்டப்படுகின்றன. [ஜ்ஞானம் அஜ்ஞர்க்கு] சேதநருடைய ஹிதாஹித நிருபணத்திற்கு உடலான ஞானமானது, தங்களுடைய ஹிதாஹிதநிருபணாதிகளில் ஞானமற்றிருக்குமவர்களுக்கு உறுப்பாயிருக்கும். [சக்தி அசக்தர்க்கு] அகடிதகடந ஸாமர்த்தியமாகிற சக்தியானது தங்களுடைய இஷ்டாநிஷ்ட ப்ராப்திபரிஹாரங்களில் சக்தியற்றவர்களினுடைய கார்யஸித்திக்கு உறுப்பாயிருக்கும். [க்ஷமை ஸாபராதர்க்கு] குற்றங்களைப் பொறுப்பதாகிற க்ஷமையானது குற்றவாளர்களாகத் தங்களை அநுஸந்தித்திருக்குமவர்களுக்கு உறுப்பாயிருக்கும். [க்ருபை துஃக்கிகளுக்கு.] பிறர்படுந்துயரத்தைப் பொறுக்கமாட்டாதிருக்கையாகிற க்ருபையானது *ஆவாரார் துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்று துளங்குகை முதலான துக்கமுடையவர்களுக்கு உறுப்பாயிருக்கும். [வாத்ஸல்யம் ஸதோஷர்க்கு] அன்றீன்ற கன்றினுடம்பின் வழுவை விரும்பி புஜிக்கும் பசுவைப்போல் ஆச்ரிதருடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளுகையாகிற வாத்ஸல்யமானது அவித்யாகர்மாதி தோஷ விசிஷ்டர்களாகத் தங்களை யநுஸந்தித்திருக்குமவர்களுக்கு உறுப்பாயிருக்கும். [சீலம் மந்தர்க்கு] பெரியவன் தாழ்ந்தவர்களோடே புரையறக் கலக்கும் ஸ்வபாவமாகிற சீலமானது தங்களுடைய தண்மையை அநுஸந்தித்திருப்பார்க்கு உறுப்பாயிருக்கும். [ஆர்ஜவம் குடிலர்க்கு]கரணத்ரயத்தாலும் செவ்வியனாயிருக்கையாகிற ஆர்ஜவமானது தங்களுடைய கரணத்ரயத்திலும் நேர்மையில்லாமையை அநுஸந்தித்திருப்பார்க்கு உறுப்பாயிருக்கும். [ஸௌஹார்தம் துஷ்டஹ்ருதயர்க்கு] எப்போதும் நன்மையைச் சிந்தித்திருக்கையாகிற ஸௌஹார்தமானது எப்போதும் தீமையையே சிந்தித்திருக்கும் துஷ்டஹ்ருதயர்களாகத் தங்களை யநுஸந்தித்திருப்பார்க்கு உறுப்பாயிருக்கும். [மார்தவம் விச்லேஷபீருக்களுக்கு] ஆச்ரித விச்லேஷம் பொறுத்திருக்கமாட்டாமையாகிற ஸௌகுமார்யகுணம் தன்னைப் பிரிந்திருக்க அஞ்சுமவர்களுக்கு உறுப்பாயிருக்கும். [ஸௌலப்யம் காணவாசைப்பட்டவர்களுக்கு] அதீந்த்ரியமான விக்ரஹத்தைக் கண்ணுக்கிலக்காகும்படி பண்ணுகையாகிற ஸௌலப்யகுணம் தன்னைக் காணவேணுமென்றாசைப்பட்டவர்களுக்கு உறுப்பாயிருக்கும். இவ்வகையாலே மற்ற திருக்குணங்களுக்கும் விஷயம் கண்டுகொள்க, ... (150)

**151.** இப்படி, ஈச்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர் நோவு கண்டால், ஐயோ! என்றிரங்கி, அவர்களுக் கெப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து, தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே, நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னையாச்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே. தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாய், ஸாந்தீபிநிபுத்ரனையும் வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாப்போலே அரியன செய்தும், அவர்களபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு த்ருவபதம்போலே பண்டில்லாதவற்றையு முண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்க தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினுல் தான் க்ருதக்ருத்யனுய் தான் செய்த நன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்து, அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி யெல்லா தசையிலும் இனியனுய், பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணுக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே. குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினுலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனுய் நின்று ரக்ஷித்து, காமிநியுடைய அழுக்கு உகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோஷங்களை போக்யமாகக் கொண்டு அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனுய், பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனுய், அன்றீன்றகன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலு மேற்குமாபோலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக் கொண்டு போரும்.

**151.** ஸர்வேச்வரன் இத்தகைய திருக்குணங்களோடு கூடினவனுகையாலே அடியார் பக்கலில் பரிமாறிப்போரும்படிகளைப் பரக்கப் பேசுகிறது. பிறர் நோவுபடக் கண்டால் காருணிகனுகையாலே ஐயோவென்றீடுபட்டிருப்பன்; ஸௌஹார்தவானுகையாலே ஆச்ரிதர்கள் அறிந்த காலத்தோடு அறியாத காலத்தோடு வாசியற எல்லாக் காலத்திலும் அவர்களுக்கு ஸகலவித மங்களங்களையும் ஆசம்ஸிப்பவனுயிருப்பன்; ஆச்ரித பரதந்த்ரனுகையாலே நிலாத் தென்றல் சந்தனம் தண்ணீர் முதலான அசேதநப் பொருள்களைப் போலே, தனக்கேயாயிருப்பதும் தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருப்பதுமன்றிக்கே பிறர்க்கேயாயிருப்பன்; ஸாம்ய குணயுக்தனுகையாலே அடியார்கள் திறத்தில் பிறப்பு அறிவு நடத்தை முதலியவற்ருலுண்டான தண்மை பாராமல் பரிமாறுவன்; அசரண்யசரண்யனுகையாலே 'தாங்களும் தங்களுக்கு ரக்ஷகரன்று, பிறரும் தங்களுக்கு ரக்ஷகரன்று, என்று அறுதியிட்ட நிலைமையில் 'பற்றிலார் பற்ற நின்ருனே!' என்கிறபடியே தான் ரக்ஷகனுயிருப்பன்; ஸத்யகாமனுகையாலே *மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை* என்கிறபடியே நெடுங்காலத்திலே கடல்கொண்டுபோன ஸாந்தீபநிபுத்ரனையும், * பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் * என்கிறபடியே ஜனித்தபோதே பெற்றதாயும் காணப்பெருதபடி நாய்ச்சியார் தங்கள்

ஸ்வாதந்த்ரியத்தாலே ஆழைப்பிக்கக் கைதப்பிப்போய் *சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியிலே கிடந்த வைதிகன் பிள்ளைகளையும் அவ்வவரூபங்களோடே மீட்டுக்கொண்டு வந்து கொடுத்தாப்போலே அரியன செய்தும் அடியார் விரும்பினவற்றைத் தலைக்கட்டுவன் ; ஸத்ய ஸங்கல்பனாகையாலே, உத்தாநபாத புத்ரனை த்ருவனுக்கு ஸ்வர்க லோகத்தினுடைய மேலெல்லையிலே அபூர்வமாயிருப்பதொரு ஸ்தானத்தைக் கல்பித்துக் கொடுத்தாப்போலே அடியார்களுக்கு முன்பில்லாதவற்றையு முண்டாக்கிக் கொடுப்பன் ; இது அபூர்வ போக்யங்களை ஸ்ருஷ்டிக்க வல்ல அமோக ஸங்கல்பனாகையாலே. [தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலே யிருக்கத் தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி] தங்கள் தங்கள் உடைமையைத் தாங்கள் தாங்கள் எடுத்து விநியோகம் கொள்ளுமா போலே கொள்ளலாம்படி ஆத்மாத்மீயங்களைக் கொடுத்தருள்வன். இது ஔதார்ய குணத்தின் காரியம். [அவர்கள் காரியம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய்] அடியார்களின் காரியம் நிறைவேறினால் அவர்கள் க்ருதக்ருத்யராகையன்றிக்கே தான் க்ருதக்ருத்யனானதாக அபிமானிப்பன். இது 'க்ருதீ' என்னும் குணத்தின் காரியம். [தான் செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்து], தன் பக்கலிலே 'சரணம்' என்கிற உக்தி மாத்ரமாகிற ஸுக்ருத லேசத்தைப்பண்ணினால் அவர்களுக்குத்தான் எல்லா நன்மைகளும் செய்தாலுங் கூட அவற்றை ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்திருப்பன். இது க்ருதஜ்ஞதா கார்யம். [அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா தசையிலும் இனியனாய்] நெடுங்காலமே பிடித்துக் கொளுத்திக்கிடக்கிற ப்ராக்ருத விஷய ரஸங்களை அறவே மறக்கும்படி ஸர்வாவஸ்தையிலும் இனியனாயிருப்பன். இது மாதுர்யமென்னும் குணத்தின் காரியம். [பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணாக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே] மக்கள் மனைவியருடனே கூடிவர்த்திப்பானொரு புருஷன் அவர்கள் செய்கிற குற்றங்களைக் கண்டிருக்கச் செய்தேயும் காணாதாரைப் போலே யிருக்குமா போலே அடியார்கள் செய்த குற்றங்களைக் கண்டிருக்கச் செய்தேயும் திருவுள்ளத்தால் நினையாதிருப்பன். இது சாதுர்ய கார்யம். அடியார்களின் குற்றங்களைத் தெரியாதபடி மறைக்க வல்லவனாகையே சாதுர்யம். [குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து] சொன்னது செய்யவேண்டும்படி தனக்கு அபிமதையாய் சேதநர் குற்றங்களைப் பொறுப்பித்துச் சேரவிடுமவளான பெரியபிராட்டி * தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் * என்கிறபடியே குற்றங்களைக்காட்டினாலும் *என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் * என்று அவளோடே மறுதலைத்து நிலைகுலையாதே நின்று ரக்ஷிப்பன். இது ஸ்தைர்யமென்னும் குணத்தின் காரியம். [காமினியுடைய அழுக்குகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோஷங்களை போக்யமாகக்கொண்டு] காதலியின் திறத்தில் ப்ராவண்யத்தாலே அவளுடம்பிலழுக்கை விரும்பும் காமுகனைப் போலே அடியார்களானவர்களின் பரக்ருதி ஸம்பந்தாதிகளான தோஷங்களை போக்யமாகக் கொள்ளுவன். இது ப்ரணயித்வமென்கிற

குணத்தின் கார்யம், [அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய்] மன மொழி மெய்கள் மூன்றிலும் செவ்வைக் கேடராயிருக்குமவர்கள் திறத்தில்; நீர் ஏருத மேட்டு நிலங்களிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அமைத்து த்ரிகரணங்களாலும் செவ்வியனாய்ப் போருவன். இது ஆர்ஜவமென்னும் குணத்தின் காரியம். [பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படியென்னும்படி தானீடுபட்டு] * ஊர்த்வம் மாஸாந் நஜீவிஷ்யே * என்றால் * நஜீவேயம் க்ஷணமபி * என்கிறபடியே, தன்னைப் பிரித்தால் அடியார்படும் வ்யஸனமானது, கடல்போன்ற தன் வ்யஸனத்துக்கு ஒரு குளப்படி மாத்திரமென்னும்படி தான் கிலேசப்படுவன். இது மார்தவமென்னும் குணத்தின் காரியம். [அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு] பிறப்பு அறிவு முதலானவற்றால் தண்ணியராயிருக்கு மவர்களுக்கு அநுகூலமாக ஸர்வோத்க்ருஷ்டனான தன்னைத் தாழவிடுவன். இது ஸௌசீல்ய குணத்தின் கார்யம். [அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாய்] அவதார தசையிலே நவநீத சௌர்ய வ்யாஜத்தாலே ஓர் நெடுங்கயிற்றால் ஊரார்களெல்லாரும் காணவுரவோடே தீராவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்து அடிப்ப * என்கிறபடியே யசோதாதிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாயிருப்பன். இது ஸௌலப்யகார்யம். [அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிடவந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் ஏற்குமாபோலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்.] அன்று தான் பெற்ற கன்றுக்குத் தாயான பசுவிரங்கி, முன்பு தான் ஸ்நேஹித்துக்கொண்டு போந்த முன்னணைக் கன்றையும், தனக்கு போக்யமான புல்லையிட வந்தவர்களையுங்கூட மூசிக் கொம்பிலே கோத்தெடுப்பது குளம்பாலே மிதிப்பதாமாபோலே வல்லபையான பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹ விஷயமாய்ப் போந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு இன்று ஆச்ரயித்தவர்களை ஸ்நேஹித்துக்கொண்டு போருவன். இது வாத்ஸல்ய கார்யம். ... ... ... (151)

### 152. இவனே ஸகலஜகத்துக்கும் காரணபூதன்.

152. ஆக இவ்வளவும் "ஜ்ஞான ஶக்த்யாதிகல்யாணகுணகண பூஷிதனாய்" என்றது விவரிக்கப்பட்டதாயிற்று. இனி "ஸகல ஜகத்ஸர்க்கஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாய்" என்றது விவரிக்கத் தொடக்கமாகிறது. [இவனே ஸகல ஜகத்துக்கும் காரணபூதன்.] கீழ்ச்சொன்ன விலக்ஷண ஸ்வரூப குணவிஶிஷ்டனான ஸ்ரீமந்நாராயணனே ஸமஷ்டிவ்யஷ்டி ரூபங்களான ஸமஸ்த கார்யங்களுக்கும் காரணபூதனாயிருப்பன். ... .... .... ... (152)

### 153. சிலர் பரமாணுவைக் காரணமென்றார்கள்.

### 154. பரமாணுவில் ப்ரமாணமில்லாமையாலும், ச்ருதி விரோதத்தாலும் அதுசேராது.

153, 154. பௌத்தர் ஆர்ஹதர் வைஶேஷிகர் முதலானார் ஈச்வரனை ஜகத்காரணமென்று கொள்ளாதே பரமாணுவை ஜகத்காரணமாகக் கொள்ளுவர்கள். அது சேராது. ஏனென்னில்; ஜகத்காரணமாக அங்கீகரிக்கப்படுகிற பரமா

ணுக்கள் ப்ரத்யக்ஷஸித்தமுமல்லாமல் ஆகமஸித்தமுமல்லாமல் அநுமாநத்தாலே ஸாதிக்கப்பார்த்தால் அது ஆகமவிருத்தமான அர்த்தத்தை ஸாதிக்கமாட்டாமை யாலே அநுமாநஸித்தமுமல்லாமலிருக்கையாலே பரமாணுஸத்பாவத்தில் ஒரு ப்ரமாணமுமில்லாமையாலும், ஈச்வரனையே ஜகந்காரணமாகச் சொல்லுகிற ச்ருதிக்கு விரோதமாகையாலும் பரமாணுக்கள் ஜகத்காரணமென்பது சேராது. (153, 154)

**155. காபிலர் ப்ரதாநம் காரணமென்றார்கள்.**

**156. ப்ரதாநம் அசேதந மாகையாலும் ஈச்வரன் அதிஷ்டியாதபோது பரிணமிக்க மாட்டாமையாலும், ஸ்ருஷ்டி ஸம்ஹார வ்யவஸ்தை கூடாமையாலும் அதுவும் சேராது.**

*155, 156.* இனி, ஜகத்துக்கு ப்ரக்ருதியே ஸ்வதந்த்ரகாரணமென்று சொல்லுகிற காபிலமதம் [அதாவது ஸாங்க்யமதம்] நிராகரிக்கப்படுகிறது. கபிலமத நிஷ்டரான ஸாங்க்யர்கள், மண்ணுருவமான பானைக்கு மண்தானே காரணமாகி ருப்போலே ஸத்வ ரஜஸ்தமோமயமாயும் ஸுகதுக்க மோஹாத்மகமாயுமிருக்கிற ஜகத்துக்கு குணத்ரயத்தினுடைய ஸாம்யரூபமான ப்ரதாநமே ஸ்வதந்த்ரமான காரணமாயிருக்குமென்று சொல்லுவர்கள்; அதுவும் சேராது. ஏனென்னில், விசித்ர ஜகத்தின் வடிவமாகப் பரிணமிக்குமிடத்தில் இன்னபடி பரிணமிப்போமென்றிருக் கைக்கு யோக்யதை யில்லாதபடி ப்ரதாநம் சைதந்யமற்ற வஸ்துவாகையாலும், ஈச்வரன் அதிஷ்டித்த போதொழியப் பரிணமிக்க மாட்டாமையாலும், அவனுடைய அதிஷ்டாந மொழியவும் பரிணமிக்குமாகில் ஸதாஸ்ருஷ்டியேயாய்ச் செல்ல வேண்டுமதொழிய ஸம்ஹ்ருதமாய்க் கிடப்பதென்பது கூடாமையாலே காலபேதத் தால் வருகிற ஸ்ருஷ்டி ஸம்ஹாரவ்யவஸ்தை கூடாமையாலும் என்று கொள்க.

**157. சேதநனும் காரணமாகமாட்டான்.**

**158. கர்ம பரதந்த்ரனுமாய் துக்கியுமா யிருக்கையாலே.**

*157, 158.* அசேதநமான ப்ரதாநத்தைஜகத்காரணமாகக் கொள்ளுகிற பக்ஷத்தை நிரஸித்தபின் சேதநனை ஜகத்காரணமாகக் கொள்ளும் பாசுபதாதிமதம் நிரஸிக்கப்படுகிறது. ஆகமஸித்தனான ஈச்வரன் நிமித்தகாரணமென்றும், ஆநுமாநிகனான ஈச்வரன் நிமித்தகாரணமென்றும், பாசுபதவைசேஷிகாதிகள் சொல்லுகிற ருத்ரன் சேதநரிலே ஒருவனே; *ஹிரண்ய கர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே* இத்யாதி வாக்யங்களைக் கொண்டு ப்ரஹ்மாவை ஜகத்காரணமாகச் சொல்லுவாரு முளர். இவனும் சேதநரிலே ஒருவனே. ஆக இப்படிப்பட்டவர்கள் ஜகத்காரண மாவதற்கு யோக்யதையுடையரல்லர்; எத்தாலேயென்னில்; ஜ்ஞாந சக்திகளின் ஸங்கோசத்தாலே தான் நினைத்தபடி ஒன்றும் செய்யமாட்டாமல் கர்மபரதந்திர னுயும், ஆநந்த சாலியாய்க்கொண்டு ஜகத்வ்யாபாரத்திலே மூளுகைக்கு யோக்யதை யில்லாதபடி துக்கியாயுமிருக்கையாலே, தலையறுப்பாரும் அறுப்புண் பாருமாய்க் கொண்டு கர்மபரவசர்களாயும் துக்கிகளாயுமிருப்பார்க்கு ஜகத்ஸ்ருஷ்டி

முதலிய வ்யாபாரம் எங்ஙனே பொருந்தும். அகர்மவச்யனும் ஆநந்தமயனும் அஸங்குசிதஜ்ஞாந ஶக்திகனுமான ஸர்வேச்வரனுக்கே இது கூடுமென்றதாயிற்று.

159. ஆகையால் ஈச்வரனே ஜகத்துக்குக் காரணம்.

159. சேதநாசேதநங்களிரண்டும் காரணமாவதற்கு யோக்யதையில்லை யென்று நிரூபிக்கப்பட்டுத் தீர்ந்தபடியாலே முதலில் ப்ரதிஜ்ஞை செய்தபடி ஈச்வரனே ஜகத்துக்குக் காரணம் ... .... ... (159)

160. இவன் காரணமாகிறது-அவித்யா கர்ம பரநியோகாதிகளாலன்றிக்கே ஸ்வேச்சையாலே.

160. லோகத்திலே அவித்யாகர்மங்களடியாகவும் பிறருடைய கட்டளை யடியாகவும் காரணமாகை உண்டாகையாலே அவற்றைக் கழித்து ஸர்வேச்வரன் காரணமாவதற்கு ஹேது சொல்லப்படுகிறது. அவித்யாகர்ம நிபந்தனமான காரணத்வம் ஸகல ஜந்துக்களிடத்திலும் காண்பதாகும். அதாவது உலகத்தில் ஒன்றுக்கொன்று உத்பாதகமாய்க் கொண்டுவருகிற காரணத்வம் விஷயஸங்க ப்ராவண்யஹேதுவான அஜ்ஞானத்தாலும் கருமத்தாலுமன்றோ அதில் ஶாஸ்த்ர வச்யமானவற்றினுடைய உத்பாதகத்வம் கர்மப்ரதாநமாயிருக்கும்; அப்படியல் லாதது அவித்யா ப்ரதாநமாயிருக்கும். இரண்டும் ஒன்றையொன்று விட்டிராது. அதிகாரி புருஷர்களான பிரமன் முதலானோருடைய காரணத்வம் பரநியோகத்தையே பிரதானமாகக் கொண்டிருக்கும். அவித்யை முதலான அவத்யங்கள் தட்டாத வனாய் தனக்கொரு நியாமகரின்றிக்கேயிருப்பவனான ஸர்வேச்வரனுடைய காரணத் வத்திற்கு அவன்தன்னுடைய இச்சையொழிய வேறு ஹேதுவில்லை. ... (160)

161. ஸ்வஸங்கல்பத்தாலே செய்கையாலே இதுதான் வருத்தமற்றிருக்கும்.

161. ஸ்ருஷ்டி முதலானவை இச்சையாலே யானாலும் இதுதான் ஆயாஸ ரூபமாயிருக்குமோவென்னில்; இராது. யத்நரூபமான காயிகவ்யாபாரத்தாலன் றிக்கே அயத்நமான மாநஸவ்யாபாரரூபமான ஸங்கல்பத்தாலே செய்கையாலே இந்த ஜகத்ஸ்ருஷ்டியாகிற வியாபாரந்தான் அவனுக்கு அநாயாஸமாயிருக்கும்; *நினைந்த வெல்லாப் பொருள்களுக்கும் வித்தாய் முதலிற் சிதையாமே, மனஞ்செய் ஞானத்துன்பெருமை* என்ற ஆழ்வாரருளிச்செயலை இங்கு நினைப்பது. ... (161)

162. இதுக்கு ப்ரயோஜநம் கேவல லீலை.

162. அநாயாஸமாயிருந்ததேயாகிலும், அவாப்த ஸமஸ்தகாமனாய்ப் பரிபூர்ணனா யிருக்குமவனுக்கு இந்த வியாபாரத்தினால் ப்ரயோஜநமென்னென்னில். *மன்பல்லுயிர்களுமாகிப் பல பல மாய மயக்குக்களால் இன்புறுமிவ் விளையாட்டுடை யான்* என்றும், *நளிர் மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும்* என்றும் சொல்லுகிறபடியே கேவலம் லீலையாகவே நடக்குமிது. ஸார்வபௌமரான ராஜாக் களுக்குச் சூது சதுரங்கமாடுதல் முதலியன போலவும், சிறுவர்களுக்கு மணற் கொட்டகமிழைத்தல் முதலியன போலவுமாகக் கொள்க. ... ... (162)

## இங்கே ஒரு சங்கையும் ஸமாதானமும்

ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் கேவலலீலை யென்று சொல்லி விடலாமோ? * சென்று சென்றாகிலுங் கண்டு சன்மங்கழிப்பானெண்ணி ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் * என்றும் * உய்யவுலகு படைத்து * என்றும் * விசித்ரா தேஹ ஸம்பத்திரீச்வராய நிவேதிதும் * என்றும் சேதநருடைய உஜ்ஜீவநம் ப்ரயோஜநமாக ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுவதாகச் சொல்லுகிற இவ்வசனங்களுக்குப் போக்கு என்? என்று சங்கையுண்டாகக் கூடியது. (இதற்கு ஸமாதானம்) சேதநோஜ்ஜீவநமாகிற அதுவும் ப்ரயோஜநமாயிருக்கச் செய்தேயும் லீலையே முக்ய ப்ரயோஜநமாயிருக்கும். நினைத்தபடி செய்யவல்ல சக்திமானான ஸர்வேச்வரன் ஸகலாத்மாக்களையும் ஏககாலத்திலேயே முக்தி பெறுவிக்க வல்லவனாயிருக்கச் செய்தேயும் ஸர்வாத்மநா ஸ்வாதீநரான ஆத்மாக்களை கருமத்தை வ்யாஜமாக்கிக் கைகழிய விட்டு சாஸ்த்ரமர்யாதையிலே வரவர அங்கீகரிப்பேனென்றிருக்கிற விது லீலா ரஸத்தில் விருப்பத்தாலேயன்றோ. லீலா விபூதியென்றே இதற்குப் பெயராயுமிரா நின்றதே. ஆக இவ்விபூதியில் லீலையே ப்ரசுர ப்ரயோஜநமாய்ச் செல்லுகையாலே ப்ரஹ்மஸூத்ரகாராதிகளெல்லாரும் ஸ்ருஷ்டி ப்ரயோஜநம் லீலையேயாகச் சொன்னவிது பொருந்து மென்க. ... ... ... *

**163. ஆனால், ஸம்ஹாரத்தில் லீலை குலையாதோ வென்னில்?**

**164. ஸம்ஹாரந்தானும் லீலையாகையாலே குலையாது.**

163, 164. இப்படி ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுகிறது லீலார்த்தமாகவானால் ஸம்ஹார தசையில் லீலை குலையாதோவென்னில், மணற் கொட்டகமிழைத்து விளையாடுகிற சிறுவர்களுக்கு இழைத்த கொட்டகத்தை அழித்துப் பொகடுகைதானும் லீலையாயிருக்குமாபோலே ஸ்ருஷ்டித்த ஜகத்தை ஸம்ஹரிப்பதுதானும் ஸ்ருஷ்டி போலவே லீலையா யிருக்குமாதலால் அப்போதும் லீலை குலையாது. ஆக, இவ்வளவாலும் சொல்லிற்றாயிற்று-ஈச்வரனே ஜகத்துக்குக் காரணமென்றும், பரமாணுவோ ப்ரதாநமோ ப்ரஹ்மருத்ராதி சேதநர்களோ காரணமாக மாட்டார்களென்றும், ஸர்வேச்வரன் காரணமாகிறதும் வேறு ஹேதுக்களாலன்றிக்கே ஸ்வேச்சையாலேயென்றும், ஸங்கல்ப மாத்ரத்தாலே செய்கையாலே இதுதான் அநாயாஸமாயிருக்குமென்றும், இது தனக்கு ப்ரயோஜநம் லீலை யென்றும் (சொல்லி நின்றது.) (163, 164)

**165. இவன் தானே, ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமாயிருக்கும்.**

165. ஈச்வரன் ஜகத்காரணமாமிடத்தில் நிமித்தகாரண மாத்ரமன்று. உபாதாந காரணமும் இவனே யென்கிறது. உலகில் ஒரு காரியம் உண்டாக வேணுமானால் அதற்குக் காரணமிருந்து தீரவேணும். அந்த காரணம் நிமித்த காரணமென்றும் உபாதாந காரணமென்றும் ஸஹகாரி காரணமென்றும் மூவகையாயிருக்கும். அதில் உபாதானகாரணமாவது—கார்யரூபேண விகாரப்படுகைக்கு உரித்தான வஸ்து. (பானைக்கு மண்; வஸ்த்ரத்திற்குப் பஞ்சு என்று காண்க.) அந்த உபாதாந வஸ்துவை கார்யரூபேண விகாரப்படுத்தவல்ல கர்த்தாவை நிமித்த காரண மென்கிறது. (பானைக்குக் குயவன்: வஸ்த்ரத்திற்கு நசவுகாரன்—என்று

காண்க.) இனி ஸஹகாரி காரணமாவது—காரியமுண்டாகைக்கு உபகரணமான வஸ்து. பாணைக்கு சக்கரம் தடி முதலியன; வஸ்த்ரத்திற்கு துரீ வேமாதிகள் காண்க.) கடபடாதிகளாகிற கார்யவர்க்கங்களுக்கு ஏற்படுகிற காரணங்கள் வெவ்வேறுபட்டிருக்குமாயிற்று. இப்படியல்லாமல் ஜகத்தாகிற காரியத்தின் உத்பத்தியில் ஈச்வரனே மூவகைக் காரணமாயுமிருப்பன். எங்ஙனேயென்னில்; * பஹுஸ்யாம் * என்கிற ஸங்கல்பத்தோடே கூடி நின்று நிமித்தகாரணமாயும், நாமரூப விபாகத்திற்கு உரித்தல்லாதபடி தன்னுடனே கூடிக் கிடக்கிற ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனைக்கொண்டு உபாதாநகாரணமாயும், ஜ்ஞானம் சக்தி முதலியவற்றோடு கூடினவனைக் கொண்டு ஸஹகாரி காரணமாயு மிருப்பன். ஆகையாலே உபாதாந காரணமும் இவனே யாவன். கீழே நிமித்தகாரணமாகச் சொல்லப்பட்ட ஈச்வரனே இவனென்பதற்குப் பொருள்; சேதநாசேதநங்களிரண்டும் அப்ருதக்ஸித்த விசேஷணமாய்க்கொண்டு தானென்கிற சொல்லுக்குள்ளே அந்தர்ப்பூதமாம்படியிருக்கையாலே தானே ஜகத்தாய்ப் பரிணமிப்பதாகச் சொல்லப்பட்டது. ... (165)

166. ஆனால், நிர்விகாரனென்னும்படி யென்னென்னில்?
167. ஸ்வரூபத்துக்கு விகாரமில்லாமையாலே.

166, 167. தானே ஜகத்தாய்ப் பரிணமிக்குமாகில் இவ்வீச்வரனை விகாரமற்றவனென்று சாஸ்த்ரங்கள் சொல்லியிருப்பது எங்ஙனே பொருந்து மென்னில்; நன்கு பொருந்தும். சேதநாசேதநங்களாகிற விசேஷணங்களோடு விசிஷ்டனான தானே ஜகத்தாய்ப் பரிணமிக்குமிடத்தில் விசேஷ்யமான ஸ்வரூபத்திற்கு விகாரமில்லாமையாலே விகாரமற்றவனென்னக் குறையில்லை. ... (166, 167)

168. ஆனால், பரிணாம முண்டாம்படி யென்னென்னில்?
169. விசிஷ்டவிசேஷண ஸத்வாரகமாக.

168, 169. ஸ்வரூபத்துக்கு விகாரமில்லையாகில் இவன் தானே ஜகத்தாய்ப் பரிணமிக்கிறானென்ற பரிணாமம் இவனுக்கு உண்டாம்படி எங்ஙனேயென்னில், தன்னை விட்டுப் பிரியகில்லாத விசேஷணத்வாரா பரிணாம முண்டாகின்றதத்தனை. அப்ருதக் ஸித்தமான சேதநாசேதநரூப விசேஷணத்வாரா பரிணாமமுண்டாகின்றதென்றதாயிற்று. ... ... ... ... (168, 169)

170. ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக் கூடாதொழியாதிறே.

170. இப்படி ஸ்வரூபத்துக்கு விகாரமின்றிக்கேயிருக்க, தனக்கு சரீரபூத விசேஷண த்வாரா கார்யவர்க்கங்களுக்கெல்லாம் இவனே உபாதானமாகை கூடுமோவென்னில், சிலந்திப்பூச்சியின் தன்மையை யறிபவர்கள் இங்ஙனம் சங்கிக்க இடமில்லை. அல்ப சக்தியுள்ள சிலந்திக்கு ஸ்வரூப விகாரமின்றிக்கேயிருக்கச்செய்தே தன் சரீரமாகிற விசேஷணத்தின் வழியாக நூல்திரளாகிற கார்யஜாதத்திற்குத் தான் உபாதானமாம்படி யுண்டான ஸ்வபாவமானது "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே" என்று ஓதப்படுகிற ஸர்வசக்தி யுக்தனான ஸர்வேச்வரனுக்குக் கூடாமையில்லையே. இந்தச் சிலந்தி த்ருஷ்டாந்தம் வேதாந்தங்களிலும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளதன்றே. ... ... ... (170)

**171. ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கையாவது அசித்தைப் பரிணமிப்பிக்கையும், சேதநனுக்கு சரீரேந்த்ரியங்களைக் கொடுத்து ஜ்ஞாந விகாஸத்தைப் பண்ணுகையும்.**

171. ஜகத்துக்கு மூவகைக் காரணமும் ஈச்வரனே யென்னுமிடம் ஸாதிக்கப்பட்டது கீழ். தன்னைப்போலவே நித்ய வஸ்துக்களாக சாஸ்த்ரங்களில் ஓதப்பட்டுள்ள அசித்தையும் சித்தையும் ஈச்வரன் ஸ்ருஷ்டிக்கிறுனென்பது எப்படி? என்னு மாகாங்க்ஷயிலே சொல்லப்படுகிறது. அசித்தைப் பரிணமிக்கச் செய்கையும் சேதநனுக்கு சரீரத்தையும் இந்த்ரியங்களையும் கொடுத்து ஜ்ஞானவிகாஸத்தைப் பண்ணுகையுமே யாயிற்று ஸ்ருஷ்டிக்கையாவது. .... ... (171)

**172. ஸ்திதிப்பிக்கையாவது ஸ்ருஷ்டமான வஸ்துக்களிலே, பயிருக்கு நீர்நிலைபோலே, அனுகூலமாக ப்ரவேசித்து நின்று ஸர்வ ரக்ஷைகளையும் பண்ணுகை.**

172. ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களென்கிற அடைவில் ஸ்ருஷ்டிக்கு அடுத்தது ஸ்திதியாகையாலே ஸ்திதிப்பிக்கையாவது என்னென்னில்; 'தன்னுலே ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களிலே பயிருக்கு ரக்ஷகமாய்க்கொண்டு அநுகூலமாய் நிற்கும் நீர்நிலை போலே அவற்றை ரக்ஷிப்பதற்கு அநுகூலமாக உள்ளே பிரவேசித்து நின்று அந்தந்த வஸ்துக்களுக்கு ஏற்றவாறு ஸர்வரக்ஷைகளையும் பண்ணுகை.

**173. ஸம்ஹரிக்கையாவது அவிநீதனுன புத்ரனைப் பிதா விலங்கிட்டு வைக்குமா போலே, விஷயாந்தரங்களிலே கைவளருகிற கரணங்களைக் குலைத்திட்டு வைக்கை.**

173. இனி ஸம்ஹரிக்கையாவதென்னென்னில்; தன்னை வழிபட்டு உய்வதற்குறுப்பாகத் தான் கொடுத்த கரணங்களைக்கொண்டு தன்னை வழிபடுகையன்றிக்கே விஷயாந்தர ப்ரவணனுய்ப் போகப்புக்கவாறே, விதி நிஷேதங்களுக்கு உட்பட்டு ஒடுங்கி வர்த்தியாமல் மனம் போனபடி திரியும் மகனை ஹிதபரனுன தந்தையானவன் ஒரு வியாபாரத்துக்கும் உரியனல்லாதபடி விலங்கிட்டு ஒடுக்கி வைக்குமா போலே; விஷயாந்தரங்களிலே அதிப்ரவணமாய் நடக்கிற கரணகளேபரங்களைக் குலைத்து ஒடுக்கியிட்டு வைக்கை. ... ... .... (173)

**174. இம்மூன்றும் தனித்தனியே நாலு ப்ரகாரமாயிருக்கும்.**

**175. ஸ்ருஷ்டியில், ப்ரஹ்மாவுக்கும் ப்ரஜாபதிகளுக்கும், காலத்திற்கும், ஸகல ஜந்துக்களுக்கும் அந்தர்யாமியாய்; ரஜோகுணத்தோடே கூடி ஸ்ருஷ்டிக்கும்.**

**176. ஸ்திதியில், விஷ்ண்வாதி ரூபேண அவதரித்து, மந்வாதிமுகேந சாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து, நல்வழிகாட்டி காலத்துக்கும் ஸகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாய் ஸத்வகுணத்தோடே கூடி ஸ்திதிப்பிக்கும்.**

**177. ஸம்ஹாரத்தில் ருத்ரனுக்கும், அக்ந்யந்தகாதிகளுக்கும், காலத்துக்கும், ஸகல பூதங்களுக்கும் அந்தர்யாமியாய், தமோ குணத்தோடே கூடி ஸம்ஹரிக்கும்.**

174—177. கீழ்ச்சொன்ன ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் தனித்தனியே நாலுபடிப்பட்டிருக்கும். பதினுன்கு லோகங்களையும் படைக்குமவனுய் ஸமஷ்டி புருஷனுன பிரமனுக்கும், அவனுலே ஸ்ருஷ்டிக்கப்பட்டு நித்ய

ஸ்ருஷ்டியைச் செய்யுமவர்களான தஶ ப்ரஜாபதிகளுக்கும், ஸ்ருஷ்டிக்கு இன்றியமையாததான காலத்துக்கும், ஒன்றுக்கொன்று உத்பாதகங்களான ஸகல ஜந்துக்களுக்கும் அந்தராத்மாவாய் ப்ரவ்ருத்தி ஹேதுவான ரஜோ குணத்தோடே கூடியிருந்து ஸ்ருஷ்டிக்கை—ஸ்ருஷ்டியில் நான்கு ப்ரகாரம், "மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதாரः" என்கிற விஷ்ணுவவதாரம் தொடக்கமாக *எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்* என்கிறபடியே அநேகாவதாரங்களைப் பண்ணி மநு யாஜ்ஞவல்க்ய பராஶர வால்மீகி ஶௌநகாதிகள் முகமாக ஸ்மிருதீதிஹாஸ புராணங்களாகிற ஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து சேதநர்கள் தப்பு வழிகளில் ப்ரவர்த்தியாமல் ஈடேறுகைக்குறுப்பான நல்வழிகளைக்காட்டி, ரக்ஷணோபயோகியான காலத்துக்கும், லோகத்தில் ஒன்றுக்கொன்று ரக்ஷகமான ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாய் ஸத்வகுணத்தோடு கூடியிருந்து ஸ்திதிப்பிக்கை இதில் நான்கு ப்ரகாரம். ஸம்ஹரிப்பவர்களில் தலையான ருத்ரனுக்கும், அவாந்தர ஸம்ஹார கர்த்தாக்களான அக்நி யமன் முதலானவர்களுக்கும் ஸம்ஹாரத்திற்குரிய காலத்திற்கும், ஒன்றுக்கொன்று நாஶகமான ஸகல பூதங்களுக்கும் அந்தராத்மாவாய், கண்பாராமல் செய்கைக் குறுப்பான தமோகுணத்தோடே கூடிக்கொண்டு ஸம்ஹரிக்கை—இதில் நான்கு பிரகாரம். ... .... ... ... (174—177)

**178. சிலரை ஸுகிகளாகவும், சிலரை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈச்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராதோ வென்னில்?**

**179. கர்மமடியாகச் செய்கையாலும், மண்தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனுய்ச் செய்கையாலும் வாராது.**

178, 179. ஈச்வரன் விஷம ஸ்ருஷ்டியைப் பண்ணுவதாகக் காண்கையாலே அது அடியாக மந்தமதிகளுக்கு உண்டாகக்கூடிய ஶங்கை பரிஹரிக்கப்படுகிறது. ஸ்ருஷ்டிக்குமளவில் ஸர்வாத்மாக்களையும் ஒரே படியாக வல்லாமல் தேவமநுஷ்யாதி விபாகம் பண்ணிச் சிலவாத்மாக்களை ஸுகிகளாகவும் சிலவாத்மாக்களை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால், ஸர்வஸமனுகவும் பரமதயாளுவாகவும் சொல்லப்பட்டிருக்கு மீச்வரனுக்கு எல்லார் திறத்திலும் ஒத்திராமையாகிற வைஷம்யமும், துக்கிகளாக ஸ்ருஷ்டிக்கையாலே பரதுःக்காஸஹிஷ்ணுத்வமாகிற க்ருபையில்லாமையும் வாராதோவென்னில்; வாராது. சிலரை ஸுகிகளாகவும் சிலரை துக்கிகளாகவும் ஸ்ருஷ்டிக்கிற விது—விஷம ஸ்ருஷ்டிக் குறுப்பான சேதநருடைய கருமமடியாகச் செய்கையாலும், துக்கிகளாக ஸ்ருஷ்டிக்கிறவிது—ரோக ஹேதுவான மண்ணை விரும்பித்தின்ற ப்ரஜையை மேலே தின்னுதபடி நாக்கிலே குறியிட்டு மண்தின்ன அஞ்சும்படி பண்ணும் ஹிதபரையான மாதாவைப்போலே, இவர்கள் மேல் துக்க ஹேதுவான கருமங்களைப் பண்ண அஞ்சும்படி ஹிதபரனுய்ச் செய்கையாலும் வைஷம்ய நைர்க்ருண்யங்களிரண்டும் இவனுக்கு வாராது. (178, 179)

**180. இவன்றன் "முந்நீர்ஞாலம்படைத்த வெம்முகில்வண்ணன்" என்கிறபடியே; ஸவிக்ரஹனுய்க் கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணும்.**

180. இந்த ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் "ஸகல ஜகத் ஸர்க்க ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாய்" என்ற விஶேஷணம் இவ்வளவும் உபபாதிக்கப்பட்

டது. இனி "விலக்ஷண விக்ரஹ யுக்தனாய்" என்ற விசேஷணம் உபபாதிக்கப்படுகிறது இடையில் இரண்டு விசேஷணங்களை உபபாதியாமல் விட்டது அவற்றில் விசேஷ வக்தவ்ய மில்லையென்பதுபற்றி. இப்படி ஜகத்ஸ்ருஷ்டி முதலானவற்றுக்குக் கர்த்தாவாகச் சொல்லப்பட்ட வீச்வரன் "மூந்நீர் ஞாலம் படைத்த எம் முகில் வண்ணனே" என்கிற ஆழ்வாரருளிச் செயலின்படியே விக்ரஹத்தோடே கூடினவனாய்க் கொண்டு ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றையும் பண்ணுவன். .. ... .... ... ... (180)

**181. விக்ரஹமதான் ஸ்வரூப குணங்களிலுங் காட்டில் அத்யந்தாபிமதமாய், ஸ்வாநுரூபமாய், நித்யமாய், ஏகரூபமாய் சுத்தஸத்வாத்மகமாய், சேதந தேஹம் போலே ஜ்ஞானமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே, மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டு வைத்தாற்போலேயிருக்க, பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்திற்கு ப்ரகாசகமாய், நிரவதிக தேஜோரூபமாய், ஸௌகுமார்யாதி கல்யாணகுண கண நிதியாய், யோகித்யேயமாய், ஸகலஜந மோஹநமாய், ஸமஸ்தபோக வைராக்ய ஜநகமாய் நித்யமுக்தாநுபாவ்யமாய், *வாசத்தடம் போலே ஸகல தாபஹரமாய், அநந்தாவதார கந்தமாய் ஸர்வ ரக்ஷகமாய், ஸர்வாபாச்ரயமாய் அஸ்த்ர பூஷணபூஷிதமாயிருக்கும்.**

181. இனி விக்ரஹத்தினுடைய வைலக்ஷண்யம் விஸ்தரித்து உபபாதிக்கப்படுகிறது. [விக்ரஹந்தான் ஸ்வரூபகுணங்களிலுங் காட்டில் அத்யந்தாபிமதமாய்] ஆனந்தமயமான ஸ்வரூபமும் ஆனந்தாவஹமான குணங்களும் போலல்லாமல் எல்லைகடந்த ஆனந்தாவஹமாயிருக்கையாலே அவற்றிற் காட்டிலும் மிகவும் அபிமதமாயிருக்கும்

(ஸ்வாநுரூபமாய்) சில அநுரூபமல்லாமலிருந்தாலும் அபிமதமாயிருக்கும்; சில அநபிமதமாயிருந்தாலும் அநுரூபமாயிருக்கும்; அவைபோலன்றிக்கே தனக்கு அநுரூபமாயிருக்கும்.

[நித்யமாய்] ஸ்வரூபம் போலவும் திருக்குணங்கள் போலவும் உற்பத்தி விநாசங்களின்றியே யிருக்கும்.

[ஏகரூபமாய்] வ்ருத்திக்ஷயாதி விகாரங்களின்றியே ஒருபடிப்பட்டிருக்கும். * ஸதைக்ரூபரூபாய * என்கிறபடியே.

[சுத்தஸத்வாத்மகமாய்] இதர குணக் கலப்பில்லாத ஸத்வத்துக்கு ஆச்ரயமாயிருக்கிற அப்ராக்ருதத்ரவ்யமே வடிவாயிருக்கும்.

[சேதந தேஹம்போலே ஜ்ஞாநமயமான ஸ்வரூபத்தை மறைக்கையன்றிக்கே மாணிக்கச் செப்பிலே பொன்னையிட்டு வைத்தாற் போலேயிருக்கப் பொன்னுருவான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாசகமாய்] சுத்த ஸத்வாத்மகமாகையாலே முக்குணங்களுக்கும் இருப்பிடமான சேதந தேஹம்போலே, ஜ்ஞானமாய்த் தேஜோரூபமான ஸ்வரூபத்தைப் புறந்தோற்றுதபடி மறைக்கையன்றிக்கே, மாணிக்கத்தைச்

செப்பாகச் சமைத்து அதிலே பொன்னையிட்டு வைத்தால் உள்ளிருக்கிற பொன்னை அது புறம்பே நிழலெழும்படி தோற்றுவிக்குமாபோலே * எண்ணும் பொன்னுருவாய் * என்கிறபடியே ஸ்ப்ருஹணீயதயா பொன்னுருவென்று சொல்லப்படுமதான திவ்யாத்ம ஸ்வரூபத்துக்குத் தான் ப்ரகாசகமாயிருக்கும்.

[நிரவதிக தேஜோரூபமாய்] நித்ய முக்தர்களின் விக்ரஹங்களும் இதுவும் ஒரே ஜாதியான த்ரவ்யமாயிருக்கச்செய்தே, ஏகஜாதீய த்ரவ்யாத்மகமான † கத்யோத சரீர தேஜஸ்ஸிற் காட்டில் ஆதித்ய சரீரத்திற் குண்டான தேஜः ப்ரபாவம் போலே இவை பரிச்சிந்ந தேஜஸ்ஸாம்படி தான் அபரிச்சிந்ந தேஜஸ்ஸை வடிவாக வுடைத்தாயிருக்கும். († கத்யோதம்—மின்மினி.)

[ஸௌகுமார்யாதி கல்யாணகுண நிதியாய்] ஸௌகுமார்யம் ஸௌந்தர்யம் லாவண்யம் ஸௌகந்த்யம் யௌவனம் முதலான கல்யாண குணஸமூஹத்துக்குக் கொள்கலமாயிருக்கும்.

[யோகித்யேயமாய்] பகவத்த்யாந பரரான பரமயோகிகளுக்கு சுபாச்ரயமாய்க் கொண்டு எப்போதும் த்யாநவிஷயமாயிருக்கும்.

[ஸகலஜநமோஹநமாய்] அஜ்ஞர் ப்ராஜ்ஞர் என்கிற வாசியின்றிக்கே ஸகல ஜனங்களையும் தன் வைலக்ஷண்யத்தாலே பிச்சேற்றுமதாயிருக்கும்.

[ஸமஸ்த போக வைராக்ய ஜநகமாய்] தன் வைலக்ஷண்யத்தைக் கண்டவர்களுக்கு தன்னில் வேறுபட்ட ஸகல விஷயாநுபவத்திலும் ஆசையறுக்குமதாயிருக்கும்.

[நித்ய முக்தாநுபாவ்யமாய்] அபரிச்சிந்ந ஜ்ஞாநாதி குணங்களை யுடையரான நித்யராலும் *ஸதாபச்யந்திப்படியே அநவரதம் அநுபவிக்கப்படுமதாயிருக்கும்.

[வாசத்தடம் போலே ஸகலதாபஹரமாய்] "கண் கைகால் தூய செய்ய மலர்களா சோதிச்செவ்வாய் முகிழதா சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா தாமரைநீள் வாசத்தடம் போல்வருவானே!" என்று ஆழ்வார் வருணித்தபடியே திவ்யாவயவங்களும் திருமேனியுமான சேர்த்தியாலே பரப்பு மாறத் தாமரைபூத்துப் பரிமளம் அலையெறியா நிற்பதொரு தடாகம்போலே யிருக்கையாலே தன்னைக் கிட்டினவர்களுடைய ஸாம்ஸாரிக நாநாவித தாபத்தோடு விரஹதாபத்தோடு வாசியற ஸகல தாபத்தையும் போக்குமதாயிருக்கும்.

[அநந்தாவதாரகந்தமாய்] * எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயென்று சொல்லப்படுகிற எண்ணிறந்த அவதாரங்களும் அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தை இதர ஸஜாதீயமாக்கிக்கொண்டு தீபாதுத்பந்நப்ரதீபம் போலே வருகிறவையாகையாலே அவையெல்லாவற்றுக்கும் மூலமாயிருக்கும்

[ஸர்வரக்ஷகமாய்] ஐச்வர்யார்த்திகள் கைவல்யார்த்திகள், பகவச்சரணார்த்திகளில் உபாஸகர் ப்ரபந்நர் அநுபவ கைங்கர்யபரர் நித்யமுக்தர் என்கிற வாசியற ஸர்வருடையவும் அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளைப் பண்ணுவது திவ்ய மங்கள விக்ரஹத்தோடு கூடியாகையாலே எல்லார்க்கும் ரக்ஷகமாயிருக்கும்.

[ஸர்வாச்ரமாய்] உபய விபூதிக்கும் ஆச்ரயமாயிருக்கும்.

[அஸ்த்ரபூஷண பூஷிதமாய் இருக்கும்] கீழ்ச்சொன்ன ஸர்வாச்ரயத்வ ஸூசகமாய் அஸ்த்ரபூஷணுத்யாயத்தில் சொல்லுகிறபடியே விபூதிக்கு அபிமாநிகளான திவ்யாயுதங்களாலும் திவ்யாபரணங்களாலும் அலங்கரிக்கப் பட்டிருக்கும். ஆக, ''விக்ரஹந்தான்'' என்று தொடங்கி இவ்வளவாலும் திவ்யமங்கள விக்ரஹத்தினுடைய வைலக்ஷண்யம் அருளிச்செய்யப்பட்டதாயிற்று. ... (181)

**182. ஈச்வர ஸ்வரூபந்தான், பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்றுஅஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும்.**

182. இந்த ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் ''விலக்ஷண விக்ரஹ யுக்தனுய்'' என்றது கீழே உபபாதிக்கப்பட்டதாயிற்று. இந்த விக்ரஹ யோக ப்ரயுக்தமான ஈச்வரனுடைய பரத்வாதிபஞ்ச ப்ரகாரத்தையும் இனி தனித்தனியே விவரிக்கவேண்டி அதனுடைய ப்ரஸ்தாவம் இங்குச்செய்யப்படுகிறது. ஈச்வர ஸ்வரூபமானது பரத்வமென்றும் வியூஹமென்றும் விபவமென்றும் அந்தர்யாமித்வமென்றும் அர்ச்சாவதாரமென்றும் அஞ்சு ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். திருவாய்மொழியில் ''விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய், மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்'' (6–9 5) என்கிற பாசுரத்தில் இவ்வைந்து ப்ரகாரங்களும் தெரிவிக்கப்பட்டிருப்பது காண்க. .... (182)

**183. அதில் பரத்வமாவது—அகாலகால்யமான நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யமுக்தர்க்கு போக்யனுய்க் கொண்டெழுந்தருளியிருக்கு மிருப்பு.**

183. பரவ்யூஹ விபவாந்தர்யாம்யர்ச்சாவதாரங்களென்கிற ஐந்தினுள்ளும் பரத்வமாவது. * ந காலஸ் தத்ர வை ப்ரபுః * யத் காலாத் அபசேலிமம் * இத்யாதிப்படியே காலத்தாலாகும் பரிணுமமில்லாத தேசமா யிருப்பதாய், * நலமந்தமில்லதோர் நாடு* என்னும்படியே ஆனந்தம் அளவிறந்திருக்கும் நாடாகிய ஸ்ரீவைகுண்டத்திலே * அயர்வறுமமரர்களான அநந்த கருட விஷ்வக்ஸேநாதி நித்யஸூரிகளுக்கும், சேறு கழுவின மாணிக்கம்போன்று நிவ்ருத்த ஸம்ஸாரர்களான முக்தர்களுக்கும் அநுபவ விஷயபூதனுய்க் கொண்டு எழுந்தருளி யிருக்குமிருப்பு. (183)

**184. வ்யூஹமாவது-ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரார்த்தமாகவும் ஸம்ஸாரிஸம்ரக்ஷணுர்த்தமாகவும் உபாஸகாநுக்ரஹார்த்தமாகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த ரூபேண நிற்கும் நிலை.**

184. இனி வ்யூஹமாவதென்னென்னில்; வ்யூஹத்துக்கு விநியோகம் லீலாவிபூதியிலாகையாலே இவ்விபூதியினுடைய ஸ்ருஷ்டியென்ன ஸ்திதியென்ன ஸம்ஹாரமென்ன இவற்றை நிர்வஹிக்கைக்காகவும், புபுக்ஷுக்களான ஸம்ஸாரிகளுக்கு அநிஷ்ட நிவாரணமும் இஷ்டப்ராபணமுமாகிற ரக்ஷணம் செய்கைக்காகவும், முமுக்ஷுக்களாய் உபாஸிக்குமவர்கள் ஸம்ஸாரத்தை விட்டொழித்துத் தன்னை வந்து சேர்வதற்குடலான அநுக்ரஹத்தைப் பண்ணுகைக்காகவும் ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாய்க் கொண்டு நிற்கும் நிலை. இதில் இன்ன

வ்யூஹத்தாலே இன்னது செய்யுமென்னுமிடம் மேல் உபபாதனத்திலே கண்டு கொள்வது. ... .... ... .... . (184)

**185. பரத்வத்தில் ஜ்ஞாநாதிகளாறும் பூர்ணமாயிருக்கும், வ்யூஹத்திலிவ்விரண்டு குணம் ப்ரகடமாயிருக்கும்.**

185. மேலே நிருபித்த பரவ்யூஹங்களிரண்டுக்கும் தன்னில் விசேஷமே தென்னச் சொல்லுகிறது. வாஸுதேவ ரூபமான பரத்வத்தில் ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸாகிற ஆறு குணங்களும் பரிபூர்ணமாயிருக்கும். ஸங்கர்ஷணாதி ரூபமான வ்யூஹத்தில் ஒவ்வொரு மூர்த்தியில் இரண்டிரண்டு குணமே ப்ரகாசமாயிருக்கும். .... .... ... (185)

**186. அதில் ஸங்கர்ஷணர். ஜ்ஞாநபலங்களிரண்டோடுங்கூடிஜீவதத்வத்தை யதிஷ்டித்து அதை ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து, ப்ரத்யும்நாவஸ்த்தையையும் பஜித்து, சாஸ்த்ர ப்ரவர்த்தநத்தையும் ஜகத்ஸம்ஹாரத்தையும் பண்ணக்கடவராயிருப்பர்.**

**187. ப்ரத்யும்நர் ஐச்வர்யவீர்யங்களிரண்டோடும் கூடி மநஸ் தத்வத்தை யதிஷ்டித்து, தர்மோபதேசத்தையும் மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்தவர்க்க ஸ்ருஷ்டியையும் பண்ணக்கடவராயிருப்பர்.**

186, 187. இனி இந்த ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிற மூவரிடத்திலும் விளங்காநின்ற குண விசேஷங்களும், இவர்கள்தாம் இன்னின்ன க்ருத்யங்களுக்குக் கடவர்களா யிருப்பர்களென்பதும் தெரிவிக்கப்படுகின்றது. வ்யூஹத்ரயத்திலும் வைத்துக்கொண்டு ஸங்கர்ஷணர் ஸர்வகுணங்களோடுங் கூடியிருக்கச் செய்தேயும் செயலுக்குத் தக்கபடி ஜ்ஞானம் பலம் என்கிற இரண்டு குணங்களோடுகூடி, ப்ரக்ருதிக்குள்ளே மயங்கிக்கிடக்கிற ஜீவதத்வத்தை அதிஷ்டித்து, அந்த அதிஷ்டாந விசேஷத்தாலே இத்தை ப்ரக்ருதியில் நின்றும் நாமரூப விசேஷம் தோற்றும்படி விவேகித்து ப்ரத்யும்நாவஸ்தையையும் அடைந்து வேதம் முதலிய சாஸ்த்ரங்களின் ப்ரவர்த்தனத்தையும் ஜகத்ஸம்ஹாரத்தையும் பண்ணக் கடவராயிருப்பர். ப்ரத்யும்நர் தம் செயலுக்குத் தக்கபடி ஐச்வர்யம் வீர்யம் என்னுமிரண்டு குணங்களோடேகூடி ஜ்ஞாநப்ரஸரணத்வாரமான மநஸ் தத்வத்தை யதிஷ்டித்து, சாஸ்த்ரார்த்தங்களின் அநுஷ்டாந ரூபமான தர்மங்களினுடைய உபதேசத்தையும் மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்தவர்க்க ஸ்ருஷ்டியையும் பண்ணக் கடவராயிருப்பர். மநுசதுஷ்டயமாவதென்? அது தொடக்கமான சுத்தவர்க்க ஸ்ருஷ்டி யாவதென்? என்னில்; அது விஷ்வக்ஸேந ஸம்ஹிதையில் பரக்கச் சொல்லப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு:—முகம் பாஹு ஊரு பாதம் ஆகிற அவயவங்களில் நின்று முண்டாகி மிதுநமாயிருக்கிற ப்ரஹ்ம க்ஷத்ரிய வைச்ய சூத்ர சதுஷ்டயம் மநுசதுஷ்டயமெனப்படும். இந்த மநுக்களிடத்தினின்றும் மிதுநங்களாய்க்கொண்டு தனித்தனியே வர்ண பேதத்தாலுண்டான மாதவசதமும்; அப்படியே ஸத்ரீபுருஷ மிதுநங்களாய்க்கொண்டு அந்த மாதவர் பக்கல் நின்றுமுண்டான வானவரும், அவர்கள் பக்கல் நின்று முண்டான மநுஷ்ய ரூபமாய்க்கொண்டு சுத்த ஸாத்விகர்களாய்ப் பரமைகாந்திகளாய் எவ்வித

மான பலனையும் விரும்பாமல் பகவத்ஸமாராதனமென்கிற ப்ரதிபத்தியோடு கருமங்களை யனுட்டிப்பவர்களாய் வேதாந்தத்திலூக்க முடையவர்களாய் த்வாதசாக்ஷரீமந்த்ரத்தை முன்னிட்டு அத்யாத்மசிந்தை பண்ணுமவர்களாய் முடிவில் எம்பெருமானையே அடைபவர்களாயிருக்கு மவர்களின் வகுப்பு சுத்தவர்க்கமெனப்படும். ஆக மநுசதுஷ்டயம் தொடக்கமான சுத்தவர்க்கத்தின் ஸ்ருஷ்டியை ப்ரத்யும்நர் பண்ணுவரென்றதாயிற்று. ... ... .. ... (186, 187)

188 அநிருத்தர், சக்தி தேஜஸ்ஸுக்களிரண்டோடுங் கூடி ரக்ஷணத்துக்கும், தத்வஜ்ஞாந ப்ரதாநத்துக்கும் காலஸ்ருஷ்டிக்கும், மிச்ரஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர்.

188. அநிருத்தர் ஸர்வகுணங்களோடுங் கூடியிருக்கச் செய்தேயும் செயலுக்குத் தகுதியாக சக்தியும் தேஜஸ்ஸுமாகிற இரண்டு குணங்களோடேகூடி ஜகத்ரக்ஷணத்துக்கும் உஜ்ஜீவந ஹேதுவான தத்வஜ்ஞானத்தைக் கொடுப்பதற்கும் த்ருடிமுதலாக த்விபரார்த்த மளவான காலத்தின் ஸ்ருஷ்டிக்கும், கீழே ப்ரத்யும்நருடைய செயலாகச் சொல்லப்பட்ட சுத்தவர்க்க ஸ்ருஷ்டிக்கு நேர்மாறுன மிச்ரவர்க்க ஸ்ருஷ்டிக்கும் கடவராயிருப்பர். மிச்ரவர்க்கமாவது, ப்ராஹ்மணுதி வர்ணங்களிலே பிறந்தவர்களாய் ரஜோகுணம் மிக்கவர்களாய் வேதத்தின் கர்மகாண்டத்தில் ஊன்றினவர்களாய் ஸர்வேச்வரனை யொழிந்தவர்களை ஆராதிப்பவர்களாய் பகவானை நிந்திப்பதுஞ் செய்து பகவத்ஜ்ஞாந பக்திகளில் அந்வயமின்றிக்கே ஸ்வர்க்காதிகளிலே ரமியா நின்றுகொண்டு ஸம்ஸார மார்க்கத்திலேயே திரியுமவர்களின் வகுப்பு. ... ... ... ... ... (188)

189. விபவம், அநந்தமாய் கௌணமுக்ய பேதத்தாலே பேதித்திருக்கும்.

189 ஆக வ்யூஹத்தின்படி உபபாதிக்கப்பட்டு முடிந்தது கீழ்; இனி விபவத்தின்படி விரிவாக உபபாதிக்கப்படுகிறது. விபவமானது எண்ணித் தலைக்கட்ட வொண்ணுதபடி அநந்தமாய் கௌணமென்றும் முக்கியமென்றும் இருவகையாயிருக்கும். கௌணமென்பது தாழ்ந்தது. முக்கியமென்பது ச்ரேஷ்டமானது. இதர ஸஜாதியமாய்க்கொண்டு ஆவிர்ப்பவிக்கைதான் விபவமென்பது. இதில் ஆவேசாவதாரம் கௌணமென்றும், ஸாக்ஷாதவதாரம் முக்கியமென்றும் சொல்லப்படும் ஆவேசமானது ஸ்வரூபாவேசமென்றும் சக்த்யாவேசமென்றும் இருவகைப்படும் ஸ்வம்மானரூபத்தாலே ஆவேசிக்கை ஸ்வரூபாவேசமாகும். பரசுராமாதிகளான சேதநருடைய சரீரங்களிலே தன்னுடைய அஸாதாரண விக்ரஹத்தோடே ஆவேசித்து நிற்கை. சக்த்யாவேசமாவது கார்யத்தின்போது விதிசிவாதிகளான சேதநர் பக்கலிலே சக்திமாத்திரத்தினுல் ஸ்புரித்துநிர்கை ... (189)

190. மநுஷ்யத்வம், திர்யக்த்வம், ஸ்தாவரத்வம்போலே கௌணத்வமும் இச்சையாலே வந்தது ; ஸ்வரூபேணவன்று.

190. இனி, முக்கிய விபவத்தோடு கௌணவிபவத்துக்குண்டான ஸாம்யமும் வைஷம்யமும் தெரிவிக்கப்படுகின்றன ; ராமக்ருஷ்ணத்வாதியான மநுஷ்யத்வம், மத்ஸ்ய கூர்மத்வாதியான திர்யக்த்வம், தண்டகாரண்யத்திலே குப்ஜாம்ரமாக (மிகச்சிறிய மாமரமாக) அவதரித்ததாகச் சொல்லப்படுகிற ஸ்தாவரத்வமாகிற

இவை இச்சையாலேயாளுப்போலே ஆவேசரூபமான கௌணத்வமும் இச்சை யாலேவந்த தெஃகிறவிது ஸாம்யம். அப்ராக்ருதமாயிருந்துள்ள அஸாதாரண விக்ரஹத்தோடே வந்ததல்லாமை வைஷம்யம். .... ... (190)

**191. அதில் அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜஹத்ஸ்வபாவங்களுமாய், தீபாதுத் பந்நப்ரதீபம்போலே யிருக்கக்கடவதான முக்க்ய ப்ராதுர்ப்பாவங்களெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களாயிருக்கும்.**

**192. விதி சிவ பாவக வ்யாஸ ஜாமதக்ந்யார்ஜுந வித்தேசாதிகளாகிற கௌண ப்ராதுர்ப் பாவங்க ளெல்லாம் அஹங்கார யுக்த ஜீவர்களை யதிஷ்டித்து நிற்கையாலே, முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யங்கள்.**

191, 192. இன்னது உபாஸ்யம், இன்னது அநுபாஸ்யம் என்று பகுத்துத் தெரிவிக்கும் முகத்தால் இரண்டுக்கு முண்டான விசேஷம் காட்டப்படுகிறது. உபயவிதமான விபவத்திலும் வைத்துக்கொண்டு *ஆதியஞ்சோதியுருவையங்கு வைத்திங்குப் பிறந்ததாகையாலே அப்ராக்ருத விக்ரஹங்களுமாய், அஜத்வம் அவ்யயத்வம் ஸர்வேச்வரத்வம் முதலான ஸ்வபாவ விசேஷங்களை விடாதவையு மாய், அதஏவ தீபத்தில்நின்று முண்டான ப்ரதீபம் தனக்குக் காரணமான தீபத்தி னுடைய ஸ்வபாவங்களையுடைத்தாயிருக்குமாபோலே தன் காரணமான மூர்த்தி யோடு துல்யமான ஸ்வபாவத்தையுடைத்தாயிருக்கிற முக்க்ய ப்ராதுர்ப்பாவங்க ளெல்லாம் முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களாயிருக்கும். ஸ்ருஷ்டி கர்த்தாவான பிரமனும், ஸம்ஹார கர்த்தாக்களான சிவபாவகர்களும், வேதங்களைப் பகுத்த வியாஸனும், துஷ்டக்ஷத்ரிய நிரஸநம் பண்ணின பரசுராமனும் ஜகத்ரக்ஷகர்களில் ப்ரஸித்தனாயிருந்த கார்த்த வீர்யார்ஜுநனும், ஔதார்யத்தில் புகழ்பெற்ற வித்தேசனும், மற்றும் ககுத்ஸ்த முசுகுந்த ப்ரப்ருதிகளுமாகிற கௌணப்ராதுர்ப் பாவங்களெல்லாம்—ஸ்வாதந்த்ர்ய ரூபமான அஹங்காரத்தோடு கூடிய ஜீவர்களை கார்யார்த்தமாக ஆவேசமுகத்தாலே அதிஷ்டித்து நிற்கையாலே புபுக்ஷுக்களா யிருப்பார்க்கொழிய முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யங்களன்று. .... (191, 192)

**193. நித்யோதித சாந்தோதிதாதி பேதமும் ஜாக்ரத்ஸம்ஜ்ஞாதியான சாதுராத்ம்யமும் கேசவாதி மூர்த்யந்தரமும், ஷட்த்ரிம்சத்பேத பிந்நமான பத்மநாபாதி விபவமும், உபேந்த்ர த்ரிவிக்ரம ததிபக்தஹயக்ரீவ நரநாராயண ஹரி க்ருஷ்ண மத்ஸ்ய கூர்ம வராஹாத்யவதார விசேஷங்களும், அவற்றினுடைய புஜாயுதவர்ண க்ருத்ய ஸ்தாநாதிபேதங்களும் துரவதரங்களுமாய், குஹ்யதமங்களுமா யிருக்கையாலே சொல்லுகிறிலோம்.**

193. ஆக, விபவங்கள் அனந்தமென்னுமிடமும், அதில் கௌணமுக்க்ய விபாகமும், அந்த கௌண முக்க்யங்களுக்குண்டான பரஸ்பர விசேஷமும் பேசப் பட்டன கீழ்; இனி கீழ்ச்சொன்ன பரவ்யூஹங்களிலும் முக்க்ய விபவங்களிலுமுண் டான அவாந்தர பேதங்களும் அவற்றினுடைய புஜ ஆயுதவர்ணாதி பேதங்களும் சொல்லவேண்டியிருக்கச் செய்தேயும் சொல்லாமைக்கு ஹேது இரண்டு; அவை யெல்லாம் சொன்னாலும் ஒருவர்க்கும் க்ரஹிக்கவும் தரிக்கவும் எளிதாயிராமையும், அவதார ரஹஸ்யங்களாகையாலே மிகவும் குஹ்யமா யிருக்கையும். .... (193)

**194. அவதாரங்களுக்கு ஹேது-இச்சை. 195 பலம்-ஸாது பரித்ராணாதி த்ரயம்.**

194, 195. உலகத்தில் ஜன்மங்களுக்கு ஹேது புண்யபாபரூப கருமங்களாயன்றோ இருப்பது; பகவானுடைய அவதாரத்துக்கு ஹேது ஏதென்னில்; இப்படியவதரிப்போமென்னும் ஸ்வேச்சையொழிய வேறொரு ஹேதுவில்லை. அவதாரத்திற்குப் பலனேதென்றால், *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே* என்று அவன் தானே அருளிச்செய்தபடியே, தன்பக்கல் அன்பு பூண்டவராய் பகவதநுபவத்தாலன்றித் தரிக்ககில்லாதவர்களாய், தன்னைக் காணவேணுமென்று ஆசைப்பட்டிருக்குமவர்களான ஸாது ஜனங்களை, தன்னுடைய ரூபசேஷ்டிதங்களைக் காட்டியும் ஸல்லாபாதிகளைத் தந்தும் ரக்ஷிக்கையும், அவர்களுக்கு விரோதிகளான துஷ்டர்களை நசிப்பிக்கையும், க்ஷீணமாய்க்கிடக்கிற ஸ்வாராதன ரூபமான வைதிக தருமத்தை ஸ்தாபிக்கையுமாகிற இம்மூன்றுமே பலன். .... (194, 195)

**196. பலப்ரமாணங்களிலும் ப்ருகுசாபாதிகளாலே பிறந்தானென்கையாலே, அவதாரங்களுக்கு ஹேது கர்மமாக வேண்டாவோ வென்னில்.**

**197. அவைதன்னிலே சாபம் வ்யாஜம்; அவதாரம் ஐச்சமென்று பரிஹரித்தது.**

196, 197. இதிஹாஸபுராணங்களான பலப்ரமாணங்களிலும் ப்ருகுசாபம் முதலானவற்றாலே பிறந்தானாகச் சொல்லுகையாலே அவதாரத்திற்கு ஹேது இச்சையென்று எப்படி சொல்லலாம்? கருமமே அவதார ஹேதுவாக வேண்டாவோ வென்னில்; வேண்டா; அந்த இதிஹாஸ புராணங்கள் தன்னிலேயே சாபம் வியாஜமாத்ரமென்றும் அவதாரம் இச்சையால் வந்ததத்தனையென்றும் சொல்லி வைத்திருப்பது காணலாம். ... ... ... (196, 197)

**198. அந்தர்யாமித்வமாவது - அந்த:ப்ரவிச்ய நியந்தாவா யிருக்கை.**

198. விபவம் உபபாதிக்கப்பட்டது கீழ்; இனி அந்தர்யாமித்வம் உபபாதிக்கப்படுகிறது. *** அந்தஃப்ரவிஷ்டச்சாஸ்தா ஜநாநாம் *** இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே சேதநர்க்குள்ளே பிரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியந்தாவாயிருக்கை அந்தர்யாமித்வமாம். .... ... .... .... (198)

**199. ஸ்வர்க்க நரக ப்ரவேசாதி ஸர்வாவஸ்தைகளிலும் ஸகல சேதநர்க்கும் துணையாய், அவர்களைவிடாதே நிற்கிற நிலைக்கு மேலே சுபாச்ரயமான திருமேனியோடே கூடிக்கொண்டு அவர்களுக்கு த்யேயனாகைக்காகவும், அவர்களை ரக்ஷிக்கைக்காகவும், பந்து பூதனாய்க்கொண்டு ஹ்ருதய கமலத்திலே யெழுந்தருளி யிருக்குமிருப்பு.**

199. அந்தர்யாமித்வமானது ஆத்மாவினுள்ளே தன் ஸ்வரூபத்தாலே வியாபித்து நின்று நியமிப்பதாயும், விக்ரஹத்தோடே கூடியிருந்து ஹ்ருதயத்திலே வியாபித்திருந்து நியமிப்பதாயும் இருவகைப்பட்டிருக்கையாலே இவ்விருவகையும் நிரூபிக்கப்படுகிறது. புண்யமடியாக ஸ்வர்க்கத்தை ப்ரவேசிக்கையும், பாபமடியாக

நரகத்தை ப்ரவேசிக்கையும், இரண்டுமடியாகக் கருக்குழியிலே பிரவேசிக்கையும் முதலான எல்லாவவஸ்தைகளிலும் எல்லாச்சேதநர்கட்கும் *இராமடமூட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போருகை யாலே துணையாய் அவர்களை ஒருக்காலும் விடாதே அந்தராத்மாவாய் நிற்கிற நிலைக்குமேலே * அங்குஷ்டமாத்ரः புருஷோ ஜ்யோதிரிவாதூமகः * என்றும், * நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரவு * என்றும் இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே சோதியுருவாய், சாமளமான தன்னை முட்டாக்கிடும்படி செம் பொனே திகழுகிற புகராலே நீலமேகத்தை விழுங்கின மின்னற்கொடிபோலே யிருக்கையாலே புறம்பே பரந்து திரிகிற மனஸ்ஸை அதில் நின்றும் பற்றற்றுத் தன் பக்கலிலே ப்ரவணமாக்கிக்கொள்ளும்படி சுபாச்ரயமான திருமேனியோடே அந்த சேதநர்க்கு தியானிக்கவேணுமென்று ருசி பிறந்தபோது தியானிக்க வுரியனுகைக் காகவும், புத்தி முதலானவற்றுக்கு நியாமகனுய்க்கொண்டு அவர்களை ரக்ஷிக்கைக் காகவும் நாராயணத்வ ப்ரயுக்தமான குடல்துடக்காலே உறவினனுய்க் கொண்டு ஹ்ருதய கமலத்திலே யெழுந்தருளி யிருக்குமிருப்பு. ... ... (199)

**200. அர்ச்சாவதாரமாவது "தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம்" என்கிறபடியே சேதநர்க் கபிமதமான த்ரவ்யத்திலே விபவவிசேஷங்கள் போலன்றிக்கே தேச காலாதிகாரி நியமமில்லாதபடி ஸந்நிதிபண்ணி அபராதங்களைக் காணுக்கண்ணிட்டு அர்ச்சகபரதந்த்ரமான ஸமஸ்த வியாபாரங்களையு முடையனுய்க்கொண்டு, கோயில்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளி நிற்கும் நிலை.**

200. ஆக அந்தர்யாமித்வமுபபாதிக்கப்பட்டது கீழ்; இனி அர்ச்சாவதார முபபாதிக்கப்படுகிறது. *தமருகந்த தெவ்வுருவமவ்வுருவந்தானே* என்கிறபடியே ஆச்ரிதரான சேதநர்க்கு அபிமதமான ஸ்வர்ணரஜதசிலாதிகளான ஏதேனுமொரு த்ரவ்யத்திலே அயோத்யை மதுரை முதலான தேச நியமமில்லாதபடியும், பதினே ராயிரமாண்டு நூருண்டு என்ருப்போலே யுண்டான காலநியமமில்லாதபடியும், தசரதபுத்ரத்வ வஸுதேவாத்மஜத்வாதி நிர்ப்பந்தங்களில்லாதபடியும் (ராமக்ருஷ் ணுதி விபவவிசேஷங்கள் போலல்லாமல்) எந்த இடத்தில் விருப்பமோ அந்த இடத்தில் அர்ச்சகருடைய அபேக்ஷாகால மொழியத் தனக்கென்ருெரு காலநியம மில்லாதபடியாகவும். ருசியுடைய எல்லார்க்குமாகையாலே இன்னுரென்பதொரு அதிகாரி நியமமில்லாதபடியாகவும் ஸந்நிதி பண்ணி ஸர்வஸஹிஷ்ணுவாகையாலே அவரவர்கள் செய்யுமபராதங்களைக் காணுக்கண்ணிட்டு, அர்ச்சகபராதீனமான ஸ்நான அசநாதி ஸமஸ்தவ்யாபாரங்களையு முடையனுய்க் கொண்டு எழுந்தருளி யிருக்கும் நிலை அர்ச்சாவதாரமாம். ... .... ... (200)

**201. ருசிஜநகத்வமும் சுபாச்ரயத்வமும், அசேஷலோக சரண்யத்வமும் அநுபாவ்ய த்வமு மெல்லாம் அர்ச்சாவதாரத்திலே பரிபூர்ணம்.**

201. இவ்வர்ச்சாவதாரத்தினுடைய ருசிஜநகத்வம் முதலான குணபூர்த்தி சொல்லப்படுகிறது. ஸ்ரீவசநபூஷணத்தில் (40, "இதுதான் சாஸ்த்ரங்களால்

திருத்தவொண்ணுதே விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராயப் போரும் சேதநர்க்கு வைமுக்க்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய்'', என்றருளிச்செய்தபடியே ஹிதாநுஶாஸநம் பண்ணுகிற ச்ருதி ஸ்ம்ருதி முதலான ஶாஸ்த்ரங்களானவை அருசி பிறக்கும்படி இதர விஷயங்களினுடைய பொல்லாங்குகளையும், ருசி பிறக்கும்படி பகவத் விஷயத்தினுடைய நலன்களையும் உபதேசித்தாலும்அவற்ருலே இதர விஷயங்களை விட்டு பகவத் விஷயத்திலே முகம் வைக்க இசையாதே வர்த்திக்கும் சேதநர்க்கு வைமுக்கியத்தை மாற்றித் தன்வடிவழகு முதலானவற்ருலே சித்தாபஹாரம் பண்ணி, தன்னைக் காணவேண்டோமென்றிருக்கு மிருப்பைக் குலைத்துத் தன் பக்கலிலே ருசியை ஜநிப்பிக்கையும், ருசி பிறந்த பின்பு தன்னை பஜிக்குமவர்களுக்குக் கண்ணுக்கும் நெஞ்சுக்கு மினிதாம்படி சுபாச்ரயமாயிருக்கையும், அவ்வளவேயன்றியே தன்னையே உபாயமாக ஸ்வீகரிக்குமளவில் குணதோஷ நிரூபணம் பண்ணுதே ஸகல லோகங்களிலுள்ளவர்களுக்கும் ஶரண்யமாயிருக்கையும், வைலக்ஷண்யத்தில் வாசியறிந்தவர்களுக்கு *என்னமுதினைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே* என்னும்படி அநுபாவ்யமாயிருக்கையுமாகிற இவையெல்லாம் அர்ச்சாவதாரத்திலே பரிபூர்ணமாயிரும்கும். .... ... (201)

**202. ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொண்டு அஜ்ஞரைப் போலேயும் அசக்தரைப் போலேயும் அஸ்வதந்த்ரரைப்போலேயும் இருக்கச்செய்தேயும், அபார காருண்ய பரவசனுய்க்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையுங் கொடுத்தருளும்.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஈச்வரப்ரகரணம் முற்றிற்று.

தத்வத்ரயம் முற்றிற்று.

202. இன்னமும் இவ்வர்ச்சாவதாரத்தின் குணமிகுதியைக் கூறி இப் பிரபந்தம் தலைக்கட்டப்படுகிறது. ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொள்வது அர்ச்சாவதாரத்திலே விசேஷம். அதாவது, சேதநன் உடைமையாயும் தான் உடையவனுயுமிருக்குமிருப்பு வ்யவஸ்திதமாயிருக்கச் செய்தேயும் இவன் தன்னுடைமைகளைக் கணக்கிடும்போது தன்னையும் கணக்கிடும்படி அவனை ஸ்வாமியாகவும் தன்னை ஸொத்தாகவும் தன்னிச்சையாலே மாருடிக் கொள்வது. அதற்கு மேலே அஜ்ஞரைப்போலேயும் அஶக்தரைப்போலேயும் அஸ்வதந்த்ரரைப்போலேயுமிருப்பது மற்ருெரு விசேஷம். அதாவது, ஸர்வஜ்ஞனுயிருக்கச் செய்தேயும் ஒன்றுமறியாதவன் போலவும், ஸர்வசக்தியுக்தனுயிருக்கச் சேய்தேயும் தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ளமாட்டாத அசக்தரைப் போலேயும், நிரங்குச ஸ்வதந்த்ரனுயிருக்கச்செய்தேயும் தனக்கென்ன வொரு முதன்மையில்லாத அஸ்வதந்த்ரரைப் போலேயிருப்பது, ஆக இங்ஙனேயிரா நிற்கச் செய்தேயும் விமுகரையுமுட்பட விடமாட்டாதபடி கரைபுரண்டு செல்லுகிற காருண்யமிட்ட வழக்காய்க் கொண்டு கண்கொடுத்தல் மக்கள் கொடுத்தல் முதலாக மோக்ஷமளித்தலளவாக அதிகாராநுகுணம் சேதநர்க்கு ஸகலாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளும்.

ஆக, எம்பெருமானுடைய ஸ்வரூபவைலக்ஷண்ய மென்ன, அந்த ஸ்வரூபத்தையும் நிறம்பெறுத்தவல்ல குணவைலக்ஷண்ய மென்ன, அந்த குணங்களடியாக அவன் பண்ணும் ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்களென்ன, அப்படி காரணபூதனானவனுடைய ஸர்வ ஸமாச்ரயணீயத்வமென்ன, அவனுடைய ஸர்வ பலப்ரதத்வமென்ன, காரணத்வாதிகளுக்கு உபயுக்தமான விலக்ஷண விக்ரஹ யோகமென்ன, அந்த விக்ரஹ வைலக்ஷண்யத்திற்குத் தகுதியான லக்ஷ்மீபூமிநீளாநாயகத்வமென்ன, அந்த விக்ரஹ யோகமடியாக வந்த பரத்வாதி பஞ்சப்ரகாரமென்ன ஆகிய இவற்றைக் கூறி ஈச்வரதத்வம் தலைக்கட்டிற்றாயிற்று. .... (202)

பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த தத்வத்ரயத்தில்

ஈச்வரப்ரகரணம் முற்றிற்று.



பெருமாள்கோயில் ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தொகுத்த

மாமுனிவன் திவ்யஸூக்தி ஸாரார்த்தமாலிகையில்

**தத்வத்ரய ஸாரார்த்ததீபிகை**

முற்றுப்பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

மாமுனிவன் திவ்யஸூக்தி ஸாரார்த்தமாலிகையில்

மூன்றாவது மலர்

# ஸ்ரீ வசனபூஷண தாத்பர்ய ஸாரம்

விசதவாக்சிகாமணிகளான மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

வியாக்கியானத்தையடியொற்றி

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசார்யதாஸன்**

எழுதியது

ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு

சென்னை ரத்தினம் கிளை அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது

இதன் விலை ரூ. 3.

ஸாதாரண ஸம்வத்ஸர ஐப்பசித் திருமூலம்

1970.

ஸ்ரீரஸ்து.

## ஸ்ரீவசநபூஷண சூர்ணைகளின் அட்டவணை

(லக்கம்—சூர்ணைகளின் வரிசை லக்கம்)

(லக்கம்—சூர்ணைகளின் வரிசை லக்கம்)

(லக்கம—சூர்ணைகளின் வரிசை லக்கம்)

## ஸ்ரீவசநபூஷண சூர்ணைகளின் அட்டவணை

(லக்கம்—சூர்ணைகளின் வரிசை லக்கம்)





ஸ்ரீ:



# முன்னுரை

ஸத்ஸம்ப்ரதாயத்திற் படிந்து ஸகல சாஸ்த்ரங்களிலும் வல்லமை பெற்றுப் பரம தயாளுக்களான பூர்வாசார்யர்கள் வேதவேதாந்தப் பொருள்களைச் சுருக்கி மந்தமதிகளும் எளிதாக உணரும்படி தெளிவாக உபதேசித்து வந்ததுமன்றி க்ரந்த் மூலமாகவும் வெளியிட்டருளினார்கள். அப்படிப்பட்ட க்ரந்தங்களிலே ரஹஸ்ய க்ரந்தங்கள் தலைசிறந்தவை.

திவ்யப்ரபந்தங்களில் சில பாகங்கள் நித்யாநுஸந்தானத்தில் சேர்க்கப்பட்டிருப்பதுபோலவே, ரஹஸ்யங்களில் சில பாகங்கள் நம்முடைய நித்யமான அநுஸந்தானத்தில் இருக்கவேணுமென்று முன்னோர்களின் நியமனமாதலால், பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களுள் மிக முக்கியமான ஸ்ரீ வசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்கிற மூன்று ரஹஸ்யங்களும், அவருடைய திருத்தம்பியார் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்கிற ரஹஸ்யமும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நித்யாநுஸந்தேயங்களாகவுள்ளன.

இந்த நான்கு ரஹஸ்யங்களுக்கும் விசதவாக்சிகாமணிகளான மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியானம் தேனும் பாலுங் கன்னலு மமுதுமாக வுள்ளது. அதை அவகாஹித்துக்கொள்வது ஸதாசார்ய ஸன்னிதானத்தில் காலக்ஷேப முறையாலன்றி அரிதாதலால் அந்த ச்ரமத்திற்கு அவகாசமில்லாதவர்கள் ஒருவாறு மூலத்தின் கருத்தைத் தெரிந்துகொள்ளும் வண்ணம் சுருக்கமானதோர் உரை [தாத்பர்யஸாரம்] அடியேனால் எழுதப்பட்டிருக்கின்றது. அவற்றுள் ஸ்ரீ வசநபூஷண தாத்பர்யஸாரமிது.

பிள்ளைலோகாசார்யர் ஸம்ஸாரிகளின் இழவை ஸஹிக்கமாட்டாத பரம க்ருபையாலே அவர்களை உய்விக்கும் பொருட்டுப் பல ப்ரபந்தங்களை அருளிச்செய்து, ஆசார்ய பரம்பரையாற்பெற்ற அர்த்தங்களில் அவ்வாசார்யர்கள் தாங்கள் கௌரவாதிசயத்தினால் ரஹஸ்யமாக உபதேசித்துக்கொண்டிருந்த மற்றும் பல அர்த்த விசேஷங்களனைத்தையும் ஒரு ப்ரபந்தமாக வெளியிட்டருளவேணுமென்ற திருவுள்ளத்தை ஸ்வப்நத்தில் பேரருளாளனுடைய திருவாணையினால் பெற்று "ஸ்ரீவசநபூஷணம்" என்கிற ப்ரபந்த ரத்நத்தை அருளிச்செய்தார்.

ரத்நங்களை நிறைத்துச் சமைத்ததொரு பூஷணத்திற்கு "ரத்னபூஷணம்" என்று பெயராகிருப்போலே, பூர்வாசார்யர்களுடைய சிறந்த வசநங்களை நிறைத்துச் செய்தருளப்பட்டதாய் அநுஸந்திக்குமவர்களுக்கு அழகுபெறுவிக்குமதாயிருக்கையாலே இதற்கு "ஸ்ரீவசநபூஷணம்" என்று திருநாமமாயிற்று.

"முன்னங் குரவோர் மொழிந்த வசனங்கள்
தன்னை மிகக்கொண்டு கற்றோர் தம்முயிர்க்கு—மின்னணியாச்
சேரச் சமைத்தவரே சீர்வசனபூடணமென்
பேரிக் கலைக்கிட்டார் பின்."

என்ற உபதேசரத்தினமாலை காண்க.

இங்ஙனம்:

ஸ்ரீ வைஷ்ணவதாஸன்,

ப்ர. அண்ணங்கராசார்ய தாஸன்.

ஸ்ரீரஸ்து

# ஸ்ரீவசனபூஷணத் தனியன்கள்

ஸ்ரீ சைலேச தயாபாத்ரம் + ஸ்ரீமத் பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே.
ஸம்ஸாரபோகிஸம்தஷ்ட ஜீவஜீவாதவே நம: ||

லோககுரும் குருபிஸ் ஸஹ பூர்வை: கூரகுலோத்தமதாஸமுதாரம்.
ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ தீப்ரசயம் வரயோகிநமீடே ||

புருஷகாரவைபவஞ்ச ஸாதநஸ்ய கௌரவம் தததிகாரிக்ருத்ய மஸ்ய [ஸத்குருபஸேவநம்.
ஹரிதயாமஹைதுகீம் குரோருபாயதாஞ்ச யோ வசநபூஷணேவதஜ் ஜகத்குரும் [தமாச்ரயே ||

ஸாங்காகிலத்ரவிட ஸம்ஸ்க்ருதரூபவேத ஸாரார்த்தஸங்க்ரஹ மஹாரஸவாக்ய [ஜாதம்.
ஸர்வஜ்ஞலோககுருநிர்மிதமார்யபோக்யம் வந்தே ஸதா வசநபூஷணதிவ்ய [சாஸ்த்ரம் ||

அகுண்டோத்கண்டவைகுண்ட ப்ரியாணும் கண்ட பூஷணம்.
குருணு ஜகதாமுக்தம் வ்யாப்தம் வசநபூஷணம் ||

பேறுதருவிக்குமவள் தன்பெருமை யாறுபெறுவான் முறையவன்
கூறுகுருவைப்பனுவல் கொள்வதிலையாகிய குளிர்ந்தவருள்தான்
மாறில்புகழ்நற்குருவின் வண்மையொடெலாம் வசனபூடணமதில்
தேறிடநமக்கருள் முடும்பையிறைவன் கழல்கள் சேரென்மனனே.
திருமாமகள்தன் சீரருளேற்றமும் திருமால்திருவடி சேர்வழிநன்மையும்
அவ்வழியொழிந்தனவனைத்தின்புன்மையும்மெய்வழியூன்றிய மிக்கோர்பெருமையும்
ஆரணம்வல்லவ ரமரும்நன்னெறியையும் நாரணன்தாள்தரு நற்குருநீதியும்
சோதிவானருள் தூயமாகுருவின் பாதமாமலர் பணிபவர்தன்மையும்
தீதில்வானவர் தேவனுயிர்களை ஏதுமின்றி யெடுக்கும்படியையும்
மன்னியவின்பமும் மாகதியும் குருவென்னுநிலைபெறு மின்பொருள்தன்னையும்
அசைவிலாவேத மதனுள்ளனைத்தையும் வசனபூடண வழியாலருளிய
மறையவர் சிகாமணி வண்புகழ்முடும்பை யிறையவனெங்கோ னேருலகாரியன்
தேமலர்ச்சேவடி சிந்தைசெய்பவர் மாநிலத்தின்பமதெய்திவாழ்பவரே.

லோகாசார்யக்ருதே லோகஹிதே வசநபூஷணே.
தத்த்வார்த்ததர்சிநோ லோகே தந்நிஷ்ட்டாச்ச ஸுதுர்லபா: ||
ஜகதாசார்யரசிதே ஸ்ரீமத்வசநபூஷணே.
தத்த்வஜ்ஞாநஞ்ச தந்நிஷ்டாம் தேஹி நாத யதீந்த்ர!மே ||

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.
பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# ஸ்ரீ வ ச ந பூ ஷ ண ம்

மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவி
அண்ணங்கராசார்யதாஸன் எளிய நடையில் தெளிய எழுதிய
ஸாரார்த்த விவரணத்துடன் கூடியது.

## முதல் ப்ரகரணம்

**1. வேதார்த்த மறுதியிடுவது ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே.**

1. கர்மகாண்டமென்றும் ப்ரஹ்ம காண்டமென்றும் இரண்டு பாகுபாடுகளை யுடைய வேதத்தின் பொருளை நிர்ணயிக்க வேண்டுமானால், மநு, அத்ரி, யாஜ்ஞ வல்க்யர் முதலான மஹர்ஷிகளாற் செய்யப்பட்ட தர்ம சாஸ்திரங்களாலும், ஸ்ரீரா மாயணம், மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாலும், ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம் முதலான புராணங்களாலுமே நிர்ணயிக்கவமையும். ... (1)

**2. ஸ்ம்ருதியாலே பூர்வபாகத்திலர்த்தம் அறுதியிடக்கடவது ; மற்றை யிரண்டாலும் உத்தர பாகத்திலர்த்தம் அறுதியிடக்கடவது.**

2 ஸ்மிருதிகள் கர்மகாண்டத்தை விவரிப்பதற்காகவும் இதிஹாஸ புரா ணங்கள் ப்ரஹ்ம காண்டத்தை விவரிப்பதற்காகவும் ஏற்பட்டனவாகையால், வேதத்திற் பூர்வ காண்டத்தின் பொருளை ஸ்ம்ருதிகளாலும், உத்தரகாண்டத்தின் பொருளை இதிஹாஸ புராணங்களாலும் நிர்ணயிக்கக் கடவதாம். [தர்ம சாஸ்தி ரங்கள் ஆசார வியவஹார ப்ராயச்சித்தாதிகளைக் கூறுநின்றமையாலும், இதிஹாஸ புராணங்கள் எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபாதிகளைக் கூறுநின்றமையாலும் இங்ஙனே வகுத்துக் கூறலாயிற்று.] ... ... .... (2)

**3. இவை யிரண்டிலும் வைத்துக்கொண்டு இதிஹாஸம் ப்ரபலம்.**

3. ப்ரஹ்ம காண்டத்தை விவரிக்கப் பிறந்த இதிஹாஸ புராணங்கள் இரண்டினுள் புராணத்திற்காட்டில் இதிஹாஸம் ப்ரபலமென்று அறுதியிடப்பட்டது.

**4. அத்தாலே அது முற்பட்டது.**

4. இப்படி புராணத்திற் காட்டில் இதிஹாஸம் ப்ரபலமாகையால்தான், * "அப்யர்ஹிதம் பூர்வம்" [சிறந்ததை முற்கூறுவது] என்றவிதிப்படி "இதிஹாஸ புராணங்களாலே" என்று இதிஹாஸம் முற்படக் கூறப்பெற்றது இங்ஙனன்றாகில் வியாகரண விதிப்படி "புராணேதிஹாஸங்களாலே" என்று கூறவேண்டியதாகும்.

**5 இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றஞ் சொல்லுகிறது ; மஹாபாரதத்தால் தூதுபோனவனேற்றஞ் சொல்லுகிறது.**

5. இதிஹாஸங்களுக்குள் சிறந்ததான ஸ்ரீ ராமாயணம் தேவ மாதர்களின் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்த க்ருபாபரவசையான பிராட்டியின் ஏற்றத்தைச் சொல்லுகின்றது ; ஸாக்ஷாத் பகவதவதாரமான ஸ்ரீவேதவ்யாஸராலே அருளிச்செய்யப்பட்ட மஹாபாரதம் பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன ஆச்ரித பரதந்த்ரனான எம்பெருமானுடைய ஏற்றத்தைச் சொல்லா நிற்கும். ... ... ... ... ... (5)

**6. இவையிரண்டாலும் புருஷகாரவைபவமும் உபாயவைபவமும் சொல்லிற்றாயிற்று.**

6. ஆக, இவ்விதிஹாஸங்களிரண்டாலும், குற்றமே வடிவான சேதநர்களை எம்பெருமானுடைய விஷயீகாரத்திற்கு இலக்காக்கி அங்கீகரிப்பிக்கின்ற புருஷகார பூதையான பிராட்டியின் வைபவமும், அப்பிராட்டியாலே சேர்விக்கப்பட்ட சேதநர்களை அங்கீகரித்து ரக்ஷித்தருளவல்ல உபாயபூதனான எம்பெருமானுடைய வைபவமும் சொல்லப்பட்டதாயிற்று. .... ... ... ... (6)

**7. புருஷகாரமாம்போது க்ருபையும் பாரதந்த்ர்யமும் அநந்யார்ஹத்வமும் வேணும்.**

7. புருஷகாரமாமளவில் க்ருபை, பாரதந்த்ரியம், அநந்யார்ஹத்வம் என்ற இம்மூன்று குணங்களும் வேணும. (ஏனெனில்) க்ருபையாவது—பிறர்படும் துக்கத்தைப் பொறுக்கமாட்டாமை, சேதநர் ஸம்ஸாரத்திற் படுகிற துக்கத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமல் எம்பெருமானோடு இவர்களைச் சேர்ப்பதற்கு உறுப்பான முயற்சி பண்ணுவதற்கு க்ருபை வேணும் பாரதந்திரியமாவது பரம புருஷனுக்கு உரிமைப் படுகை ; ஸ்வதந்த்ரனான அவனை அநுவர்த்தித்து வசப்படுத்த வேண்டியிருப்பதால் பாரதந்திரியம் வேணும். இனி அநந்யார்ஹ சேஷத்வமாவது அவனுக்கன்றி மற்றொருவனுக்கும் உரிமைப்படாதொழிகை, பிராட்டி எம்பெருமானிடத்திற் சென்று "இந்த சேதநனை நீ அங்கீகரிக்கவேணும்" என்றால் "இவள் நம்மைத்தவிர வேறொரு விஷயத்துக்கு சேஷப்படாமல் நமக்கே அதிசயத்தை விளைவிக்கு மவளாகையாலே நம்முடைய காரியத்தையன்றோ இவள் சொல்லுகிறாள்" என்று அவன் நினைத்து, அவள் சொன்னபடி செய்கைக்குறுப்பாக அநந்யார்ஹத்வமும் வேண்டுமாயிற்று. ஆகையால் இம்மூன்று குணங்களும் புருஷகாரத்வத்திற்கு இன்றியமையாதனவாம். ... .... .... (7)

**8. பிராட்டி முற்படப்பிரிந்தது தன்னுடைய க்ருபையை வெளியிடுகைக்காக.**
**நடுவிற் பிரிந்தது பாரதந்த்ர்யத்தை வெளியிடுகைக்காக.**
**அநந்தரம் பிரிந்தது அநந்யார்ஹத்வத்தை வெளியிடுகைககாக**

8. இம்மூன்று குணங்களும் புருஷகாரபூதையான பிராட்டிபக்கல் இருக்கும் படியை நாம் அறிவதெப்படி என்னில்; பிராட்டி ஜநகராஜன் திருமகளாய்த்தோன்றி அப்பெருமானை மூன்றுதடவை பிரிந்து இம்மூன்று குணங்களையும் வெளிப்படுத்தினளாதலால் அதுகொண்டு அறியலாம். எப்பிரிவில் எக்குணம் வெளியாயிற்றென்னில், 'இராவணன் பிரித்தான்' என்றொரு வ்யாஜத்தாலே முதலில் பெருமாளைப் பிரிந்து இலங்கைக்கு எழுந்தருளினவிடத்து க்ருபை வெளியாயிற்று ; தேவமாதர்களின் சிறையை விடுவிக்கைக்காகத் தான் சிறையிருந்தமையாலும், அச்சிறை

யிருப்பிலே தன்னை இரவும் பகலும் ஹிம்ஸித்த ராக்ஷஸிகள், இராவணன் தோல்வி யடைந்ததாகவும் பெருமாள் வெற்றிபெற்றதாகவும் 'த்ரிஜடை' என்பவள் கனாக் கண்டமை பற்றி மிகவுமஞ்சி நடுங்குகிறவளவில் பிராட்டி அவர்களை நோக்கி 'நானிருக்க நீங்கள் அஞ்சுவதென்? அஞ்சவேண்டா' என்று அபய ப்ரதாநம் பண்ணினமையாலும், இது வெறும்வாய்ச்சொல்லாய் ஒழியாமல் இராவண ஸம்ஹாரத்திற்குப்பின் தனக்கு சோபநஞ்சொல்லவந்த திருவடி அந்த ராக்ஷஸிகளை சித்ர வதம் பண்ணப்புக, அவனோடே மன்றாடி அவர்களைக் காத்தருளினமையாலும் க்ருபாகுணம் விளங்கிற்று; இக்குணத்தை வெளியிடுவதற்காகவேயாம் பிராட்டிக்கு நேர்ந்த முதற் பிரிவு.

இனி, இரண்டாவது பிரிவாவது - லோகாபவாத பரிஹாரத்திற்காகப் பெருமாள் அவளைக் காட்டிற்குப் போகவிட அப்போது பிரிந்தது. இப்பிரிவுக்குப் பயன் பெருமாள் தன்னை அந்தஃபுரத்திலே வைத்த போதோடு காட்டிலே விட்ட போதோடு வாசியின்றி அவருடைய திருவுள்ளத்தையே பின்செல்லவேண்டும்படியான பாரதந்திரியத்தை வெளியிடுதலாம். பெருமாள் நியமனத்தின்படி இளைய பெருமாள் பிராட்டியைத் தேரேற்றிக் கொண்டுபோய்க் கங்கைக்கரை ஏறினபின் பிராட்டியைக் காட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்த நிமித்தத்தை மிக்க பரிதாபத்துடனே விண்ணப்பஞ்செய்ய, பிராட்டி அதைக்கேட்டுக் கதறிஅழுது, "லக்ஷ்மணா! இஃது எனக்குப் பொறுக்கத்தக்க துயரமன்று; யான் இப்பொழுதே இக்கங்கையில் வீழ்ந்து உயிரை ஒழித்துவிடலாம், அங்ஙனஞ் செய்வேனாயின் அது மஹாகுல ப்ரஸூதரான பெருமாளுக்கு ஒரு பெரிய பழிப்பாகும். [கர்ப்பிணியான நான் இப்பொழுதே உயிரைத் துறந்தேனாகில், ஸந்தாநமே நசித்துவிடும்; இரகுவம்சம் பாழாம்; ப்ரஸவித்தபின் முடிந்தேனாகில், 'குற்றமுள்ளவளாகையாலன்றோ தன்னைத்தானே முடித்துக்கொண்டாள்' என்று உலகம் கோஷிக்க, குற்றமும் திண்ணிதாக, பிறந்த ஸந்தாநமும் ரகுகுலத்தில் அந்வயமற்றொழியும்; 'பெருமாள் ஸ்த்ரீஹத்திசெய்தார்' என்கிற அபகீர்த்தியும் பரவும்] என்றிப்படி பலவாறாகச் சொல்லி, உயிரைவிடவேண்டிய ஸமயத்தும் அது செய்யமாட்டாமல் பெருமாள் நினைவைப் பின்சென்று தன் உயிரை நோக்கிக்கொண்டிருக்கும்படியான பாரதந்திரியமன்றோ இப்பிரிவில் நன்கு வெளியாயிற்று. ஆகவே இக்குணத்தை வெளியிடுவதற்காகவாம் இப்பிரிவு.

இனி, மூன்றாம் பிரிவாவது மறுபடியும் பிராட்டி பெருமாள் ஸந்நிதியிலே வந்திருக்கச்செய்தே பிரிந்து பிறந்தகத்திலே [பூமியிலே] புகுந்துவிட்டதாம். இப்பிரிவுக்குப் பயன் அநந்யார்ஹத்வமாகிய குணத்தை ஸர்வஸம்மதமாம்படி ப்ரகாசப்படுத்துகையாம்; பிராட்டி கையுமஞ்ஜலியுமாய்க் கவிழ்தலையிட்டுக்கொண்டு நின்று, "அடியேன் பெருமாளையன்றி மற்றெவரையும் மனத்தினாலுஞ் சிந்தியாதவளாயின் இப்பூமிப்பிராட்டி எனக்கு இடங்கொடுக்கக் கடவள்" என்றிப்படி பலவாறாகச் சொல்லி சபதம் பண்ண, அவ்வளவிலே பூமியில்நின்றும் ஓர் திவ்ய ஸிம்ஹாஸநம் வந்துதோன்ற, அதிலே ஸ்ரீ பூமிப்பிராட்டி இவளை இரண்டு கையாலுமெடுத்துக் கொண்டுபோய் வைக்க, அவ்வாஸநத்தில் வீற்றிருந்தவாறே பிராட்டி

பூதலத்தினுள் பிரவேசிக்க, அதுகண்டு விண்ணவர்கள் பிராட்டியின்மீது பூமாரி பொழிந்து புகழ்ந்தனர் என்று (உத்தர ஸ்ரீராமாயணத்தில்) சொல்லுகையாலே இப்பிரிவில் அநந்யார்ஹத்வம் ப்ரகாசமாயிற்று. இக் குணத்தை வெளியிடுவதற்காக வாயிற்று இப்பிரிவு. இப்படி இம்மூன்று பிரிவும் இம்மூன்று குணங்களை வெளியிடு தற்காக வன்றிகில் அபாயமற்றவளாய்க் கருமங்களுக்கு வசப்படாதவளான பிராட்டிக்கு, கர்மவச்யர்க்குப் போலே இப்படி பிரிவு வரக்கூடாதென்க. ... (8)

### 9. ஸம்ச்லேஷ விச்லேஷங்களிரண்டிலும் புருஷகாரத்வம் தோற்றும்.

9. இப்படிப்பட்ட குணங்களோடு கூடிய பிராட்டியின் புருஷகாரத்வம் எங்கே தோற்றுமென்னில், அது இவளுக்கு அவனோடு கூடியிருக்கும் தசையிலும் பிரிந்திருக்கும் தசையிலும் விளங்கும். ஸம்ச்லேஷதசையில் விளங்கினவாறு காகவிருத்தாந்தம் முதலியவற்றில் காணலாம். விச்லேஷதசையில் விளங்கின வாறு ராக்ஷஸிகளைக் காக்கவேண்டித் திருவடிபக்கலிலே மன்றாடினதுகொண்டு காணலாம். ... ... .... ... ... (9)

### 10. ஸம்ச்லேஷ தசையில் ஈச்வரனைத்திருத்தும்; விச்லேஷதசையில் சேதநனைத் திருத்தும்.

10. இவ்விரண்டுதசையிலும் பிராட்டி தன் புருஷகாரத்வத்தைச் செலுத்தும்விதம் யாதெனில்; ஈச்வரன் சேதநருடைய குற்றங்குறைகளையே பார்த்துச் சீறி அவர்களைப் படுகுழியிலே தள்ளவேணுமென்றிருக்கும் நிலைமையைக் குலைத்து அவர்களை அங்கீகரித்துக் கொள்ளும்படியாக ஸம்ச்லேஷதசையில் எம்பெருமானைத் திருத்துவள். ஈச்வரன் அங்கீகரிப்பதற்கு ஆள்தேடித் திரியாநிற்க, இச் சேதநன் கர்மாநுகுணமாகப் பராங் முகனாயிருக்குமளவில் அந்த நிலைமையை மாற்றி ஆச்ரயணத்திலே ருசி பிறக்கும்படி விச்லேஷ தசையில் சேதநனைத் திருத்துவள். . (10)

### 11. இருவரையும் திருத்துவது முபதேசத்தாலே.

11. இப்படி பிராட்டி, ஈச்வரசேதநர்கள் இருவரையும் திருத்துவது எவ்வழியாலே யென்னில்:—இருவரையும் உபதேசத்தாலே திருத்துவள். ஈச்வரனை உபதேசத்தாலே திருத்தும் வழியாவது—“இச்சேதநனுடைய குற்றங்களைக் கணக்கிட்டு நீர் இப்படி தள்ளிக் கதவடைத்தால் இவனுக்கு வேறொரு போக்கிட முண்டோ? உமக்கும் இவனுக்குமுள்ள ஸம்பந்தம் ஒழிக்கவொழியாததொன்றன்றோ? இவனைப் பெறுகை உம்முடைய பேறன்றோ? ‘நம் வலையில் யார் அகப்படுவார்’ என்று தேடித்திரிகிற உமக்கு நான் சொல்லவேணுமோ? பராங்முகராய்த் திரிகின்றவரிடத்தில் சிக்ஷா சாஸ்த்ர விதியையும், அபிமுகரான சேதநரிடத்தில் க்ருபாதிகுணங்களையுஞ் செலுத்தினீராகில் மிக்க பொருத்தமாயிருக்கும்; ஆனபின்பு இவனைக் கடுகக் காத்தருளீர்” என்றிப்படி பலபலசொல்லித் திருத்துதலாம். இனி, சேதநனை உபதேசத்தாலே திருத்தும் வழியாவது “உனக்கு எங்கும் காலூன்ற இடமில்லை; ஈச்வரன் ஸ்வதந்த்ரனாகையால் அவன் உன் குற்றங்களை ஒன்று விடாமற் கணக்கிட்டுக் குற்றங்கட்குத் தக்கபடி தண்டிப்பான்; இந்த அநர்த்தத்தை நீ தப்பவேண்டில் அவன் திருவடிகளிற்சென்று தலை சாய்க்கையொழிய வேறு வழியில்லை. நீ சுகமாக வாழவேண்டில் சிறிது வணங்கினவாறே குற்றங்களனைத்தை

யும் பொறுத்துக்கொள்வதற்கும் போக்யமாகக்கொள்வதற்கும் ஈடான கல்யாண குணங்களால் பரிபூர்ணனென்று ப்ரஸித்தனுயிருக்குமவனது திருவடியைச் சென்று சேர்'' என்பதாம். ... ... .... ... (11)

**12. உபதேசத்தாலே இருவருடையவும் கர்மபாரதந்த்ர்யம் குலேயும்.**

12. இவ்வுபதேசத்தால் சேதநரிடத்தும் ஈச்வரனிடத்தும் பலிக்கும் அம்சம் யாதெனில்; புண்ணிய பாபங்களாகிற ஊழ்விணைகட்கு வசப்பட்டு ஈச்வரவிமுகனுய்த்திரிகையாகிற சேதநனுடைய கர்மபாரதந்த்ரியமும், இவன் பண்ணின கருமத்தையே முக்கியமாக்கி அதற்குத் தக்கவாருகவே செய்வேனென்று சேதந ரக்ஷணத்தில் விமுகனுயிருக்கையாகிற ஈச்வரனது கர்மபாரதந்திரியமும் ஒழியும். [பிராட்டியின் உபதேசத்தைப் பெற்றபின் சேதநன் கர்மங்களுக்கு வசப்படமாட்டான், ஈச்வரனும் சேதநனுடைய கருமங்களை ஒரு பொருளாக மதியான் என்றபடி.]

**13. உபதேசத்தாலே மீளாதபோது சேதநனை அருளாலே திருத்தும்; ஈச்வரனை அழகாலே திருத்தும்.**

13. இப்படிப்பட்ட பலன் இவ்வுபதேசத்தாலே நேராவிடில் பிறகு பிராட்டி என்செய்வளென்னில்; உபதேசத்தாலே சேதநன் திருந்தாமற் போவதற்குக் காரணம்—அநாதி துர்வாஸனை; ஈச்வரன் மீளாமைக்குக் காரணம்—கேட்பாரற்ற ஸ்வாதந்திரியம்; இவ்விரண்டும் பிராட்டியின் உபதேசத்தாலே நிவர்த்தியாதொழியில் "ஐயோ இவனுடைய துர்ப்புத்தி நீங்கி அநுகூலபுத்தி உண்டாக வேணும்'' என்று சேதநன்திறத்தில் தான் பண்ணுகிற பரமகிருபையாலே அவனைத் தீமனங்கெடுத்து வழிப்படுத்தப் பார்ப்பள்; ஆகையாலே சேதநனை அருளாலே திருத்துவள்; ஈச்வரனை அழகாலே திருத்துவள்; (அதாவது) சேதநனது குற்றங்களைப் பாராமல் அவனை அங்கீகரிக்கவேணுமென்று பிராட்டியின் வார்த்தையைக் கேட்ட ஈச்வரன் "ஆமாம் போ, உனக்கு வேறு வேலை என்ன?'' என்று அவளது உபதேசத்தை உதறினவாறே, கண்ணைப் புரட்டிக் கச்சை நெகிழ்த்தித் தன் அழகாலே அவனைப் பிச்சேறும்படி பண்ணி, தான் சொன்னபடி செய்தன்றி நிற்கமாட்டாதபடி பண்ணி அங்கீகரிக்கச் செய்கை. ... ... (13)

**14. அறியாத வர்த்தங்களையடைய அறிவித்து ஆசார்ய க்ருத்யத்தையும் புருஷகார க்ருத்யத்தையும் உபாய க்ருத்யத்தையும் தானே யேறிட்டுக்கொள்ளுகை யாலே மஹாபாரதத்தில் உபாய வைபவம் சொல்லிற்றுயிற்று.**

14. ஆக இப்படி ஸ்ரீராமாயணத்தில் புருஷகார வைபவஞ் சொல்லப்பட்டாப்போல மஹாபாரதத்தில் உபாய வைபவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. எங்ஙனே யென்னில்; அர்ஜுநனுக்கு முன்பு தெரியாதிருந்த அர்த்தங்களையெல்லாம் கண்ணபிரான் தான் கீதையின் முகமாக அறிவித்தமையாலே ஆசார்யன் தொழிலை ஏறிட்டுக்கொண்டான்; அவனை விஷயீகரிக்குமளவில் புருஷகாரத்திற்காகப் பிராட்டியைத் தேடி ஓடவேண்டாதபடி இவனுடைய அபராத நிமித்தமான திருவுள்ளக் கலக்கத்தையும் தானே தணித்துக்கொண்டு இவனைச் சேர்த்துக் கொள்ளுகையாலே புருஷகாரத்தின் தொழிலையும் ஏறிட்டுக்கொண்டான்; "நீயே

எனக்கு உபாயமாகவேணும்'' என்று இவன் வேண்டினால் பின்பு தான் காரியம் செய்ய வமைந்திருக்க, 'நாமே இவனுக்கு உபாயமாய் நின்று அநிஷ்டங்களைத் தவிர்த்து இஷ்டங்களைத் தரக்கடவோம்' என்று தானே ஏன்றுகொண்டு 'மாமேகம் சரணம் வ்ரஜ ; ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்று அருளிச்செய்கையாலே உபாய க்ருத்யத்தையும் எம்பெருமான் தானே ஏறிட்டுக்கொண்டான்; என்கிறவிதைச் சொல்லுகையாலே மஹாபாரதத்தால் உபாய வைபவம் சொல்லிற்றாயிற்று. ஆசாரியன் அறியாதவற்றை அறிவித்தானபின்பு பிராட்டி புருஷகாரஞ் செய்தானபின்பு தன்னை வந்து பற்றுமவனுக்குத் தான் காரியஞ் செய்யவேண்டியிருக்க, இவை எல்லாவற்றையும் தானே ஏறிட்டுக்கொண்டது வைபவமன்றோ? .... (14)

**15. புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும் வைபவமாவது—தோஷத்தையும் குணஹாநியையும் பார்த்து உபேக்ஷியாதவளவன்றிக்கே அங்கீகாரத்துக்கு அவை தன்னையே பச்சையாக்குகை,**

15. புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும் வைபவமாவது—சாஸ்த்ரங்களில் 'செய்யேல்' என்று விலக்கப்பட்ட காரியங்களைச் செய்கையாகிற தோஷத்தையும், விஹிதங்களைச் செய்யாமையாகிற குணஹாநியையும் சேதநனிடத்தில் பார்த்து, 'இவற்றைப் பொறுக்கமாட்டேன், உன்னை நரகங்களில் தள்ளுவேன்' என்று சீறி உபேக்ஷியாமல் தயை, க்ஷாந்தி முதலிய குணங்களால் அவனை அங்கீகரிப்பது வைபவமன்று; அந்த தோஷத்தையும் குணஹாநியையுமே உபஹாரமாகக்கொண்டு வாத்ஸல்ய குணத்தை விளங்கச்செய்து சேதநனை அங்கீகரிப்பதே வைபவமாம்.

**16. இரண்டு மிரண்டுங் குலையவேணுமென்றிருக்கில் இரண்டுக்குமிரண்டும் உண்டாயிற்றதாம்.**

16. இப்படி தோஷமும் குணஹாநியும் கழிவதற்கு முன்னே அங்கீகரிப்ப தேன்? 'அவை கழிந்த பிறகே அங்கீகரிப்போம்' என்றிருந்தாலென்ன? எனில்: திவ்ய தம்பதிகள் சேதநனை அங்கீகரிக்கும்போதைக்கு ''இவனுடைய தோஷ-குணஹாநிகளிரண்டும் கழிந்தபிறகே கைக்கொள்வோமென்று நினைத்து ஆச்ரயண ருசியுடையவிவனை அங்கீகரியாதொழியில் அந்த தம்பதிகளிருவர்க்கும் தோஷ குணஹாநிகளிரண்டும் வரும்; ஸகல சேதநர்க்கும் இவர்கள் தாயும் தகப்பனுமா யிருக்கையாலே இச்சேதநனுடைய நன்மை தீமைகளிரண்டும் தங்களுடையதாம் படியான உறவு இருக்க, இச்சேதநனுடைய குற்றங்குறைகளைப் பார்த்து அங்கீகரி யாமையாலே அப்படிப்பட்ட ஒழிக்க வொழியாத உறவுக்குக் கெடுதி விளைகையாலே தோஷம் வரும்; இவனுடைய துயர் கண்டு இரங்காமையாலும், குற்றத்தை நற்ற மாகக் கொள்ளாமையாலும் க்ருபா வாத்ஸல்யங்களுக்குக் கெடுதி விளைகையாலே குணஹாநி வருமென்க. [மூலத்தில், இருவர் என்னுதே இரண்டு என்றது—புருஷ காரமும் உபாயமுமாகிற இரண்டு தத்துவங்களென்றபடி.]

இத்தோஷ குணஹாநிகளை இங்ஙனன்றி வேறொரு வகையாகவும் உபபாதிக் கலாம். (அதாவது) தோஷமாவது - அக்ருத்யஞ் செய்கை; குணஹாநியாவது - க்ருத்யத்தைச் செய்யாமை ; புருஷகாரத்திற்கு அக்ருத்யஞ் செய்கையாவது- எம்பெருமானையுங்கூட சேதநன் விஷயத்தில் குறறங் காணவொட்டாத தான்

'குற்றம் முதலியவை குலைந்தாலொழிய அங்கீகரிக்கமாட்டேன்' என்றிருக்கை க்ருத்யம் செய்யாமையாவது இவனுடைய தோஷாதிகளைப் பாராமல் கைக்கொண்டு ஈச்வரனோடு சேர்ப்பிக்கையாகிற தன் காரியத்தைச் செய்யாமை. இனி, ஈச்வரனுக்கு அக்ருத்யஞ் செய்கையாவது - ஸம்ஸாரியான சேதநனுடைய குறைகளைப் பார்த்துக் கைவிடாமல் இயற்கையான உறவு முறையே காரணமாக எல்லா நன்மைகளையுஞ் செய்வதற்கு *எதிர்சூழல்புக்குத் திரிகிற ஸர்வபூதஸுஹ்ருத்தான தான் இச்சேதநனை அங்கீகரிக்குமளவில் 'இவன் குறைகள் குலைந்தாலொழிய அங்கீகரிக்க மாட்டேன்' என்றிருக்கை. க்ருத்யஞ் செய்யாமையாவது-இவனுடைய குறைகளைப் பாராமல் கைக்கொண்டு தான் செய்யவேண்டிய ரக்ஷணத்தைச் செய்யாமை.

[திவ்ய தம்பதிகளிருவர்க்கும் இப்படி உபபாதித்த தோஷமும் குணஹாநியும் சாஸ்த்ரத்தை அவலம்பித்துச் சொல்லுகிறவையல்ல; இவர்களுடைய ஸ்வபாவத்தை அவலம்பித்துச் சொல்லுகிறவை எனக் கொள்க.] .... .... (16)

17. இரண்டுங் குலைந்ததென்றிருக்கில் இத்தலைக்கிரண்டும் உண்டாயிற்றதாம்.

17. இப்படிப்பட்ட தோஷமும் குணஹாநியும் வாராமைக்காகப் பிராட்டியும் பெருமாளும் சேதநனை அங்கீகரித்தபின், "ஓ! இத்தனை நாளும் நம்மை அங்கீகரியாது விட்டவர்கள் இன்று அங்கீகரித்தது-நம்முடைய தோஷாதிகள் கழிந்தமையாலன்றோ, ஆகையால் அவை நமக்கில்லை" என்று அச்சேதநன் நினைத்தால், அவனுக்கு க்ருத்யாகரணமும், அக்ருத்யகரணமுமாகிற தோஷமும் குணஹாநியும் ஸம்பவித்துவிடும். "நெடுநாள் நம்மை உபேக்ஷித்தவர்கள் இன்று கைப்பற்றியது நம்முடைய தோஷ குணஹாநிகளிரண்டும் குலைந்தமைபற்றியன்றோ? என்று தப்பாக நினைக்கை அக்ருத்யகரணம். 'நீசனேன் நிறைவொன்றுமிலேன்' இத்யாதிகளிற்படியே தன்னுடைய நைச்யாதிசயத்தையும், அவர்களின் குண கௌரவத்தையும் உள்கனிந்து அநுஸந்திக்கவேண்டியது க்ருத்யமாயிருக்க, அத்தைச் செய்யாமை-க்ருத்யாகரணம். .... ... ... ... (17)

18. ராக்ஷஸிகள் தோஷம் ப்ரஸித்தம்.

18. புருஷகாரமும் உபாயமும் [அதாவது பிராட்டியும் பெருமாளும்] இப்படி தோஷாதிகளையே உபஹாரமாகக்கொண்டு அங்கீகரித்த விடமுண்டோவென்னில்; உண்டு; பத்து மாதம் தன்னை அஸஹ்யமாக ஹிம்ஸித்த ராக்ஷஸிகளைக் குறித்துக் குற்றத்தையே நற்றமாக உபபாதித்துச் சிறிய திருவடியோடே மன்றாடி பிராட்டி ரக்ஷித்தாளாகையாலே, தோஷமே பச்சையாக அங்கீகரித்தமைக்கு இஃதொன்று போராதோ? (இது புருஷகாரத்தின் [-அதாவது பிராட்டியினுடைய] அங்கீகாரத்திற்கு நிதர்சநம்.) ... ... .... (18)

19. ஜிதேந்த்ரியரில்தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் "கேசவஸ்யாத்மா" என்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுனனுக்கு தோஷமேதென்னில், பந்துக்கள் பக்கல் ஸ்நேஹமும் காருண்யமும் வதபீதியும்.

19. (இனி உபாய பூதனான எம்பெருமானுடைய அங்கீகாரத்திற்கு நிதர்சநம்) அர்ஜுநனுடைய தோஷங்களைப் பச்சையாகக் கொண்டு அவனை அங்கீகரித்

தருளியது மஹா பாரதத்தில் ப்ரஸித்தம். இப்படி அர்ஜுநனை துஷ்டனென்ன லாமோ? அழகிற் சிறந்த ஊர்வசி தானே வந்து மேல்விழச் செய்தேயும் முறைகூறி வணங்கி ஒதுங்கி நின்றவனுகையாலே இந்திரியங்களை வென்றவர்களில் தனக்கு மேற்பட்டாரில்லை என்னும்படி யிருப்பவனுய், தர்மம், அதர்மம், பரலோகம், சேதநன், ஈச்வரன் என்றிவை முதலானவற்றைக் கூறுகின்ற சாஸ்த்ரங்களில் ப்ராமாண்ய புத்தியுடைய ஆஸ்திகர்களுக்குத் தலைவனுய், 'இவனைப் பிரிந்தால் க்ருஷ்ணன் உயிர்தரித்திருக்கமாட்டான்' என்னும்படி கண்ணபிரானுக்கு மிகவும் அபிமதனுயிராநின்ற அர்ஜுநனுக்குமா தோஷமுண்டு? என்னில்; யுத்தஞ் செய்வ தாக இரண்டு வகுப்பும் வந்தணைந்து நின்ற பின்பு யுத்தமே நடத்தவேண்டியிருக்க, அப்போது அர்ஜுனன் சுற்றத்தார்மேல் காட்டிய அன்பும், இரக்கமும், கொலை செய்வதில் அஞ்சி நின்றதும் தோஷமன்ருே? இம்மூன்றும் க்ஷத்திரியனுன தன் வர்ணத்திற்கு விருத்தங்களன்ருே? ஸ்வவர்ணத்திற்கு உரிய தர்மங்களை அதர்ம மென்று நினைப்பதும், இடமல்லாதவிடத்திற் பண்ணும் ஸ்நேஹ காருண்யங்களும் தோஷமேயா மெனக்கொள்க. ... ... ... ... (19)

## 20. த்ரௌபதீபரிபவங்கண்டிருந்தது க்ருஷ்ணுபிப்ராயத்தாலே ப்ரதாந தோஷம்.

20. மேலும் இவை அற்ப தோஷமென்னும்படி வேருெரு பெரிய தோஷ மும் அர்ஜுநனுக்கு உண்டு; அதாவது—த்ரௌபதியைத் துர்யோதநாதிகள் மஹா ஸபையில் துகிலுரிந்து அவமானப்படுத்தியதைக் கண்டிருக்கச்செய்தே சூதிலே தோற்றபடியை நினைத்துப் பொறுத்திருந்தாலும், கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணுகதாம்' என்று அவள் கிருஷ்ணனை சரணமடைந்த பின்பு பரிபவிக்கிற வளவில், 'எம்பெருமானடியார்களைப் பிறர் பரிபவப்படுத்தக்கண்டால் சக்தியுள்ளவ னுகில் விலக்கவேணும், சக்தியற்றவனுகில் வருத்தத்துடனே கண்மறையப் போக வேணும்' என்கிற விசேஷ சாஸ்த்ர மர்யாதையை நோக்கியாவது, தன்னிடத்தில் கண்ணபிரானுக்குள்ள ஸ்நேஹ பக்ஷபாதங்களை நினைத்து, 'அவனைச் சரணமடைந் தவள் பரிபவப்படுவதை நாம் பார்த்திருந்தால் நாளைக்கு அவன் முகத்தில் எப்படி விழிப்பது?' என்ருவது விரைந்தெழுந்து விலக்கவேண்டி யிருக்க, அது செய்யாமல் ஆடாது அசங்காது உட்கார்ந்திருந்தது இவனுடைய தோஷங்களெல்லாவற்றிற் காட்டிலும் முக்கியமாகக் கிருஷ்ணன் திருவுள்ளத்திற்பட்டுக் கிடந்தது. ஆகை யால் அர்ஜுநனை துஷ்டனென்னத் தடையில்லை; அவனை ரக்ஷித்தருளியது— எம்பெருமான் தன்னுடைய வாத்ஸல்யத்தாலே யென்பது மிக்க பொருத்தமுடைத் தேயாமென்க. .... .... ... ... ... (20)

## 21. பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க, வைத்தது, த்ரௌபதியுடைய மங்களஸூத்ரத்துக்காக.

21. த்ரௌபதீபரிபவத்தைக் கண்டிருந்த தோஷம் பஞ்சபாண்டவர்கட்கும் ஒத்திருக்குமாகையாலே, பரிபவஞ்செய்த துர்யோதநாதிகளைப்போலே பரிபவங்கண் டிருந்த இவர்களையும் தலையறுத்துப் பொகடவேண்டியிருக்க, அவர்களை மாத்திரம் உயிரோடே வாழும்படி வைத்தது—த்ரௌபதிக்கு அபிமதமான திருமங்கலியம்

போகாமைக்காகவாம். அவளுடைய விரிந்த தலையைக் காணமாட்டாத கண்ணன் வெறுங்கழுத்தை எப்படி காண்பன்? [இத்தால்—அடியார்களைப் பரிபவிக்கின்ற வர்களைப்போலவே அப்பரிபவத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களும் கண்டிக்கத் தக்கவர்கள் என்பதும், அப்படி தண்டனைக்கு உரியவர்கள் தாமே அடியார்களோடு விடவொண்ணாத ஒரு ஸம்பந்தமுடையவர்களாகில் அவர்களும் அவ்வடியார்களுக் காக அவனாலே ரக்ஷிக்கப்படுவர்கள் என்பதும் விளக்கப்பட்டது.] .... (21)

**22. அர்ஜுநனுக்கு தூத்யஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக.**

22. ஆனால், இப்படி தலையறுத்துப் பொகடவேண்டிய அர்ஜுநனுக்கு கிருஷ்ணன் இழிதொழில் செய்ததும் பரம ரஹஸ்யத்தை உபதேசித்ததும் ஏதுக் காகவென்னில்; இந்த த்ரௌபதிக்காகத்தான் அத்தனையுஞ் செய்தது. தூது போனது யுத்தத்தை விளைப்பதற்காக; ஸாரதியாய் நின்றது, தேர்க்காலாலே ப்ரதி பக்ஷத்தை அழிப்பதற்காக; ப்ரதிபத்தியை உபதேசித்தது –'யுத்தம் பண்ண மாட்டேன்' என்றிருந்தவனை "உன்சொற்படி செய்கிறேன்" என வணங்குவித்து யுத்தத்திலே ஆஸக்தனுக்குவதற்காக ஆக இவையெல்லாம் செய்தது சரணா கதையான இவளுடைய ஸங்கல்பத்தின்படியே துர்யோதநாதிகளை ஒழித்து இவள் கூந்தலை முடியச்செய்வதற்காக வாதலால், க்ருஷ்ணன், அர்ஜுநனுக்குத் தூது போனது முதலியவை த்ரௌபதிக்காக வென்னத் தட்டில்லை. .... (22)

**23. ப்ரபத்திக்கு தேசநியமமும் காலநியமமும் ப்ரகாரநியமமும் அதிகாரிநியமமும் பலநியமுமில்லை. 24. விஷய நியமமேயுள்ளது.**

**25. கர்மத்துக்குப் புண்யக்ஷேத்ரம் வஸந்தாதிகாலம் சாஸ்த்ரோக்தங்களான தத்தத் ப்ரகாரங்கள் த்ரைவர்ணிகர் என்றிவையெல்லாம் வ்யவஸ்திதங்களாயிருக்கும்.**

23–25. அர்ஜுநனுக்கு ப்ரபத்தியை உபதேசிக்குமளவில், யுத்த பூமியிலே ஒரு கால விசேஷம் பாராமல் ஸ்நாநம் முதலானவையுமில்லாமலிருக்க உபதேசிப் பானேன்? இதற்கு தேசகாலாதி நியமங்களில்லையோவென்னில்; 'புண்ய க்ஷேத்ரத்தில் செய்யவேணும்; வேறிடத்தில் செய்யலாகாது' என்கிற தேச நியமமும், 'வஸந்தாதி காலங்களிலே செய்யவேணும், மற்ற காலங்களிலாகாது' என்கிற கால நியமமும், 'ஸ்நாநம் பாதப்ரக்ஷாளநம் முதலியவற்றைச் செய்தபின் செய்யவேணும், வேறுபடியாகச் செய்யக்கூடாது' என்கிற ப்ரகார நியமமும், 'த்ரைவர்ணிகராயிருக்கவேணும், அத்ரைவர்ணிகர் கூடாது' என்கிற அதிகாரி நியமமும், 'இன்னபலனைத்தான் இது தரும்; மற்ற பலனைத்தாராது' என்கிற பல நியமுமாகிற இவையெல்லாம் ஜ்யோதிஷ்டோமம் முதலிய கருமங்களுக்கு ஏற்பட் டிருக்கின்றனவேயொழிய ப்ரபத்திக்கு இந்த நியமங்களொன்றுமில்லை; ஆனால் 'இன்ன விஷயத்திலே செய்யவேணு' மென்கிற விஷய நியமமொன்று மாத்திரம் இதற்குண்டு. ... .... ... .... (23 - 25)

**26. "ஸ ஏஷ தேசः காலः" என்கையாலே இதுக்கு தேசகால நியமமில்லை.**

26. [விஷய நியமமொழிய மற்ற நியமமில்லை யென்னும் விஷயம் உப பாதிக்கப்படுகிறது.] ஸ்ரீ விபீஷணாழ்வான் கடற்கரையிலே பெருமாளைச் சரணம்புக

வந்தபோது 'இவன் அஸ்தாநத்திலே அஸமயத்திலே வந்தவனாகையாலே சங்கிக்கத்தக்க நிலைமையிலிரா நின்றான்' என்று பெருமானைக் குறித்துக்கூறிய மந்திரிகளின் பக்ஷத்தைத் தூஷிக்கிற சிறிய திருவடி "ஸ ஏஷ தேசஃ காலச்ச" இத்யாதியாகச் சொன்ன வார்த்தைகளை நோக்குங்கால், கருத்தில் தூய்மையுடைய ஸ்ரீவிபீஷணாழ்வான் 'சரணம்' என்று வந்த தேச காலங்களில் குறைபார்க்கக்கூடாது, அவன் வந்ததுவே தேசமும் காலமுமாம் என்கிற ஸித்தாந்தம் ஏற்படுகிறபடியால் ப்ரபத்திக்கு தேச கால நியமமில்லை யென்க, ... ... ... (26)

27. இவ்வர்த்தம் மந்த்ரரத்நத்தில் ப்ரதமபதத்திலே ஸுஸ்பஷ்டம்.

27. இவ் வர்த்தம் மந்த்ரரத்நமென்கிற த்வயத்தின் முதற் பதத்திலே நன்கு விளங்கும். எங்ஙனேயென்னில் ;—"ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ; ஸ்ரீமதே நாராயணாய நமஃ" என்பது த்வயம். இது ப்ரபத்தியின் அநுஷ்டான ரூபம் ; இதில் முதற்பதம் 'ஸ்ரீமத்' பதம். ஸ்ரீ சப்தத்தின்மேல் 'மதுப்' ப்ரத்யயம் ஏறி 'ஸ்ரீமத்' என்றாயிற்று. 'மதுப்' ப்ரத்யயத்திற்கு நித்திய ஸம்பந்தம் அர்த்தம். ஆகவே 'ஸ்ரீமத்' என்பதற்கு 'பிராட்டியோடு நித்திய ஸம்பந்தமுடைய' என்று பொருளாயிற்று. இந்த நித்திய ஸம்பந்தத்திற்கு ப்ரயோஜநம் ஏதென்னில் ; ஏதேனுமோரிடத்திலே ஏதேனுமொரு காலத்திலே ஒரு ஸம்ஸாரி சேதநனுக்கு எம்பெருமானை ஆச்ரயிக்க ருசி பிறந்தால் சுழல்காற்றுப்போலே க்ஷணந்தோறும் சுழன்று வருகிற நெஞ்சிற் பிறந்த அந்த ருசி மற்றொரு க்ஷணத்தில் மாறிவிடக்கூடுமாதலால் அப்படி மாறுவதற்கு முன்னமே அந்த ருசி பிறந்த க்ஷணத்திலேயே ஆச்ரயிக்கும்படி ஸௌகரியமாயிருப்பதற்காக எம்பெருமானோடே பிராட்டி நித்திய ஸம்பந்தமுடையவளாயிருக்கிறாள். ஆகையாலே ப்ரபத்திக்கு தேசகால நியமமில்லை யென்பது அந்தப்பதத்திலே நன்கு விளங்கக் குறையில்லை. [தேசகால நியமமுள்ளதாகில் ஸ்ரீமத் பதத்தில் மதுப் ப்ரத்யயம் நிஷ்ப்பலமாயொழியுமென்க.] .... (27)

28. ப்ரகார நியதியில்லையென்னுமிடம் எங்குங் காணலாம்.

28. ப்ரபத்திக்கு இப்படி தேசகால நியமமில்லாததுபோலே ப்ரகார நியமமுமில்லை என்பதைப் பலவிடங்களிலுங் காணலாம். (அது அடுத்த சூர்ணையில்.) (28)

29. த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று; அர்ஜுனன் நீசர்நடுவேயிறே இவ்வர்த்தங் கேட்டது.

29. அஃது எங்கே கண்டதென்னில்; த்ரௌபதியானவள் துச்சாஸநனாலே இழுக்கப்பட்டுச் சபையில் வருகிறபோது ரஜஸ்வலையாயிருந்தவள் ஸ்நாநம் பண்ணியோ ப்ரபத்தி பண்ணினாள் ? அவ்வசுத்தியோடே யன்றோ 'கோவிந்த புண்டரீகாக்ஷ ! ரக்ஷ மாம் சரணாகதாம்' என்று கண்ணபிரானை நோக்கி ப்ரபத்தி பண்ணினாள். (இத்தால்; ப்ரபத்தி பண்ணுவார் சுத்தராய்ப் பண்ணவேணுமென்கிற நியமமில்லாமை காட்டப்பட்டது.) எம்பெருமான் பக்கல் விமுகரான நீசர் நிறைந்த திரளிலேயன்றோ அர்ஜுநன் கண்ணபிரானிடத்தில் ப்ரபத்தியைக் கேட்டுணர்ந்தான்; (இத்தால், ப்ரபத்தி ச்ரவணம்பண்ணும்போது அது நீசர் நடுவே ஆகாதென்கிற நியமமில்லாமை காட்டப்பட்டது.) ... ... (29)

**30. ஆகையால் சுத்த்யசுத்திகளிரண்டும் தேடவேண்டா, இருந்தபடியே அதிகாரியாமித்தனை.**

30. இத்தால் பலித்ததென் எனில்; ப்ரபத்தியின் அநுஷ்டாந தசையிலும் ச்ரவண தசையிலும் அவர்களிருவரும் இப்படிச் செய்கையாலே, ப்ரபத்தியில் அந்வயிக்குமளவில் அசுத்தனுயிருக்குமவனுக்கு சுத்தி ஸம்பாதிக்கவேண்டா, சுத்தனுயிருக்குமவனுக்கு அசுத்தி ஸம்பாதிக்கவேண்டா; ப்ரபத்தி பண்ணுங்காலத்தில் சுத்தனுகவோ அசுத்தனுகவோ யாதொருபடி இருப்பான், அப்படியே இந்த ப்ரபத்திக்கு அதிகாரியாகலாமென்றதாயிற்று. .... .... .... (30)

**31. இவ்விடத்திலே வேல்வெட்டிப்பிள்ளைக்குப் பிள்ளை அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது**

31. இவ்வர்த்த விஷயமாக வேல்வெட்டிப் பிள்ளைக்கு நம்பிள்ளை அருளிச் செய்ததொரு வார்த்தையுண்டு; அதாவது—'சக்ரவர்த்தி திருமகன் கடலைச் சரணம் புகுகிறவிடத்தில் கிழக்குமுகமாயிருக்கை முதலிய நியமங்களோடே கூடினவராய் சரணம் புகுகையாலே மற்ற உபாயங்களுக்குப்போலே ப்ரபத்திக்கும் சில நியமங்கள் வேண்டியிருக்கின்றனவோ? என்று வேல்வெட்டிப்பிள்ளை நம்பிள்ளையைக் கேட்க; 'பெருமாள்பக்கல் கண்ட நியமம் இவ்வுபாயத்துக்கு அவச்யாபேக்ஷிதமா யிருப்பதொன்றன்று, உபாய பரிக்ரஹம் பண்ணின அப்பெருமாளுடைய ஆசாரசீலதையாகிற ஸ்வபாவத்தாலே வந்ததித்தனை; கடலைச் சரணம் புகும்படி பெருமாளுக்கு உபதேசித்த ஸ்ரீ விபீஷணுழ்வான் பெருமாளைச் சரணம் புகும்போது கடலிலே ஒரு முழுக்கிட்டு வந்தானென்றில்லையே; இத்தால் பெருமாள் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்து ஆசாரப்ரதாநராயிருக்கையாலே தம்முடைய நியமங்களோடே தாம் சரணம் புகுந்தார்; விபீஷணன் ராக்ஷஸ ஜாதியனுகையாலே தான் நின்ற நிலையிலே சரணம் புகுந்தான். ஆகையால் யோக்யனுக்கு அயோக்யதை ஸம்பாதிக்கவேண்டா; அயோக்யனுக்கு யோக்யதை ஸம்பாதிக்கவேண்டா; நின்றநின்ற நிலைகளிலே அதிகாரிகளாமித்தனை என்று விளங்காநின்றது' என்று நம்பிள்ளை அருளிச்செய்தார். அதை இங்கே நினைப்பது. .... .... (31)

**32. அதிகாரிநியமமின்றிக்கே யொழிந்தபடி யென்னென்னில், தர்ம புத்ராதிகளும் த்ரௌபதியும் காகமும் காளியனும் ஸ்ரீகஜேந்த்ராழ்வானும் ஸ்ரீவிபீஷணுழ்வானும் பெருமாளும் இளைய பெருமாளும் தொடக்கமானவர்கள் சரணம் புகுருகையாலே அதிகாரிநியமமில்லை.**

32. இனி, இப்ரபத்திக்கு அதிகாரிநியமமில்லை யென்றது எது கொண்டு? என்னில்; க்ஷத்ரியரான தர்மபுத்திராதிகளும், ஸ்த்ரீயான த்ரௌபதியும், தேவரூபத்தை மறைத்து மஹாபராதத்தைப் பண்ணின காகமும், திர்யக்யோநியிற் பிறந்தவனும் ப்ரதிகூலனுமான காளியனும், திர்யக்யோநியிற் பிறந்து அநுகூலனுன ஸ்ரீ கஜேந்த்ராழ்வானும், ராக்ஷஸ ஜாதீயனுன ஸ்ரீ விபீஷணுழ்வானும், ஸர்வசரண்யரான பெருமாளும், இளைய பெருமாளும் முதலானவர்களெல்லாரும் சரணம் புகுகையாலே ப்ரபத்திக்கு இன்னுர்தான் அதிகாரிகள் என்று ஒரு நியதியில்லை; ருசி யுடையாரெல்லாரும் அதிகாரிகளே. ... ... ... (32)

**33. பலநியமமின்றிக்கே யொழிந்தபடி யென்னென்னில்; தர்மபுத்ராதிகளுக்குப் பலம் ராஜ்யம்; த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்; காகத்துக்கும் காளிய னுக்கும் பலம் ப்ராணம்; ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குப் பலம் கைங்கர்யம்; ஸ்ரீ விபீஷணாழ்வானுக்குப் பலம் ராமப்ராப்தி; பெருமாளுக்குப் பலம் ஸமுத்ரதரணம்; இளைய பெருமாளுக்குப் பலம ராமாநுவ்ருத்தி.**

33. இந்த ப்ரபத்தி இன்ன பலனைத்தான் தரும் என்கிற நியமமில்லை யென்றது எதுகொண்டென்னில்; கீழ் அதிகாரி நியமமில்லாமைக்கு உடலாகக் காட்டப்பட்ட தர்மபுத்ரர் முதலான ப்ரபந்நர்கள்—அடைவே, ராஜ்யத்துக்காகவும், சேலைக்காகவும், உயிர்க்காகவும், கைங்கரியத்துக்காகவும் இராமபிரானை அடை வதற்காகவும், கடலைத் தாண்டுவதற்காகவும் இராமபிரானை அநுவர்த்திப்பதற்காக வும் ப்ரபத்தி பண்ணுகையாலே ப்ரபத்திக்குப் பலனில் நியமமில்லை. ... (33)

**34. விஷயநியமமாவது குணபூர்த்தியுள்ளவிடமே விஷயமாகை; பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே.**

34. "ப்ரபத்திக்கு விஷய நியமம்மாத்திர முண்டு" என்று சொன்ன விஷய நியமமாவது—பரத்வாதிகள் ஐந்தினுள்ளும் ஸௌலப்யாதிகுணங்கள் பூர்ணமா யிருக்கப்பெற்ற இடமே விஷயமாகை. அந்த குணபூர்த்திதான் உள்ளது எங்கே யென்னில்; ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனை எம்பெருமான் தானே சொல்லப்புக்காலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி குணங்கள் பூர்ணமாயிருப்பது அர்ச்சாவதாரத் திலே என்று ப்ரஸித்தமன்றோ? ... ... ... (34)

**35. ஆழ்வார்கள் பலவிடங்களிலும் ப்ரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே.**

35. *மயர்வறமதிநலமருளப் பெறுகையாலே பரத்வாதிகளையெல்லாம் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டிருக்கிற ஆழ்வார்கள் ப்ராப்ய த்வராதிசயத் தாலே பலகாலும் ப்ரபத்தி பண்ணுகிற வளவில் பலவிடங்களிலும் அர்ச்சாவ தாரத்திலேயன்றோ [திவ்யதேசங்களிலன்றோ] ப்ரபத்தி பண்ணிற்று. .... (35)

**36. "பூர்ணம்" என்கையாலே யெல்லாகுணங்களும் புஷ்கலங்கள்.**

36. இப்படி இவ்வாழ்வார்கள் ப்ரபத்தி பண்ணுமிடங்களில் பரத்வாதிக ளெல்லாமிருக்க அர்ச்சாவதாரத்திலே பண்ணுகைக்கடி இதின் குணபூர்த்தியே யாய்த்து; ச்ருதிதன்னிலும்—"பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே, ஸர்வம் பூர்ணம் ஸஹோம்" என்று சொல்லியிருக்கையாலே ஸகல கல்யாண குணங்களும் அர்ச்சாவதாரத்திலே பூர்ணமென்னுமிடம் நிர்விவாதம் .... ... (36)

**37 ப்ரபத்திக்கபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பதிங்கே.**

37. ஆனால் 'வாஸுதேவோஸி பூர்ண:' என்கிற பரத்வத்திற்காட்டில் அர்ச் சாவதாரத்திற்கு ஏற்றமென்னென்னில்; உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டுமவை யான ஸௌலப்ய வாத்ஸல்யாதி குணங்கள் பரத்வத்திலும் உண்டாயினும் அது பரமஸாம்யாபந்நர்க்கு முகங்கொடுத்திருக்கிற விடமாகையாலே அங்கு அக்குணங்

கள் பகல்விளக்குப்போலே ஒளிமழுங்கப் பெற்றிருக்கும்; அர்ச்சாவதாரமானவிடத்தில் நைச்சியத்துக்கு எல்லைநிலமான ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கையாலே அக்குணங்கள் இங்கு இருட்டறையில் விளக்குப்போலே பேரொளி பெற்று விளங்கும்; இதுவே ஏற்றம். ... ... .... (37)

**38. பூர்த்தியையும் ஸ்வாதந்த்ர்யத்தையும் குலைத்துக்கொண்டு தன்னை அநாதரிக்கிறவர்களைத் தானாதரிந்து நிற்கிறவிடம்.**

38. அவாப்த ஸமஸ்தகாமனுயிருக்கு மிருப்பு தவிர்ந்து, ஸம்ஸாரிகளிட்டது கொண்டு வயிறு நிறைய வேண்டும்படி ஸாபேக்ஷனாய், அர்ச்சகபராதீநமான ஸ்வரூபஸ்தித்யாதிகளையுடையனாய், தானிப்படி எளியனாய் வந்துநின்றால் இந்த ஸௌலப்யத்துக்கு வியந்து விரும்பி மேல்விழவேண்டியிருக்க அதுசெய்யாமல் அந்த ஸௌலப்யமே ஹேதுவாக உபேக்ஷிக்கிற ஸம்ஸாரிகளைத் தான் விடமாட்டாத வளவன்றிக்கே அவர்களையொழியச் செல்லாமை தோற்றும்படி நிற்கிற விடமாய்த்து அர்ச்சாவதாரம். .... ... ... ... (38)

**39. பூகதஜலம்போலே அந்தர்யாமித்வம்; ஆவரணஜலம்போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறுபோலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்.**

39. பரத்வாதிகள் துர்லபமென்பதும், அர்ச்சாவதாரம் ஸுலபமென்பதும் த்ருஷ்டாந்தமுகமாகக் காட்டப்படுகிறது:—அப்போதே தண்ணீரைப் பருகி விடாயைத் தீர்த்துக்கொள்ளவேண்டிய தாஹமுடையவனுக்கு, கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினாலல்லது குடிக்கக் கிடையாதபடி பூமிக்குள் பதிந்திருக்கும் நீரும் பயனற்றது; அண்டத்துக்கு வெளியே பெருகிக்கிடக்கிற ஆவரணஜலமும் பயனற்றது; அண்டத்துக்குட்பட்டிருந்தும் கிட்டவரிதான பாற்கடலும் பயனற்றது; என்றைக்கோ ப்ரவஹித்தொழிந்த பெருக்காறுகளும் பயனற்றவை; பின்னைப் பயன் படுவது எதுவென்னில், அப்போதே விடாய்தீரப் பருகலாம்படி தேங்கியிருக்கிற மடுக்களே பயன்படும்; இதுபோல, அப்போதே கண்டு பற்றவேணுமென்று ஆசைப் பட்ட முமுக்ஷுக்களுக்கு அந்தர்யாமித்வமும் பரத்வமும் வ்யூஹமும் ராமக்ருஷ்ணாதி விபவங்களும் பயன்படாதவையாய், கோயில்களிலும் க்ருஹங்களிலும் கண்ணுக்கிலக்காகி நிற்கிற அர்ச்சாவதாரமே பயன்படுவதாம். .... ... (39)

**40. இதுதான் சாஸ்த்ரங்களால் திருத்தவொண்ணாதே, விஷயாந்தரங்களிலே மண்டி விமுகராய்ப்போரும் சேதநர்க்கு வைமுக்யத்தை மாற்றி ருசியை விளைக்கக் கடவதாய், ருசிபிறந்தாலுபாயமாய், உபாயபரிக்ரஹம் பண்ணினால் போக்யமுமாயிருக்கும்.**

40. ஹிதங்களை விதிக்கிற ச்ருதிஸ்ம்ருதி முதலிய சாஸ்த்ரங்களானவை விஷயாந்தரங்களிலே அருசி பிறக்கும்படி அவற்றின் குற்றங்களையும், பகவத் விஷயத்தில் ருசி பிறக்கும்படி அதின் மேன்மையையும் உபதேசித்தாலும் அவற்றாலே விஷயாந்தரங்களை விட்டு பகவத் விஷயத்தைப் பற்றமுடியாமல் துர்வாஸநா பலத்தாலே விஷயாந்தரங்களிலே அளவற்ற அபிநிவேசத்தை வைத்து 'பகவத் விஷய'

மென்றால் கண்ணெடுத்தும் பார்க்க இசையாதிருக்கிற சேதநர்கட்கு, தன் அழகு முதலியவற்றாலே நெஞ்சைக் கவர்ந்து, தன்னைக் காணவேண்டாமென்றிருந்த வைமுக்க்யத்தை மாற்றி, கண்ட கண் மாறவைக்கமாட்டாதபடி ருசியை உண்டு பண்ணக் கடவதாய், இப்படி தன் வைலக்ஷண்யத்தைக் காண்கையாலே தன்னை 'நித்யாநுபவம் பண்ணப் பெறவேணும்' என்கிற ருசி பிறந்தபின், ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமாகத் தன்னை அடைகைக்குத் தானே ஸாதநமாய், தன்னை ஸாதநமாகப் பரிக்ரஹித்தால் ஸாத்யம் கைபுகுவதற்கு ஒரு தேசவிசேஷத்திலே போமளவும் பார்த்திருக்க வேண்டாதே "எனக்குத் தேனே பாலே கன்னலேயமுதே திருமாலிருஞ் சோலைக் கோனே" என்கிறபடியே போக்யமாயிருக்கையாலே தானே உபேயமுமாயிருக்கும்—இவ்வர்ச்சாவதாரம். ... ... ... (40)

**41. இதில் ப்ரபத்திபண்ணு மதிகாரிகள் மூவர்.**

**42. அஜ்ஞரும், ஜ்ஞாநாதிகரும், பக்திபரவசரும்.**

41, 42. ஸௌலப்யாதி குணபூர்த்தியாலே ப்ரபத்திக்கு நியதவிஷயமான இவ்வர்ச்சாவதாரத்திலே ப்ரபத்தி பண்ணுமதிகாரிகள் மூன்றுவகைப்பட்டிருப்பர்கள். அவர்கள் யாரென்னில்; (1) எம்பெருமானைப் பெறுதற்குறுப்பாக ஸாதநாநுஷ்டாநனம் பண்ணுகைக்கீடான ஞானமில்லாதவர்களும், (2) ஜ்ஞாந சக்திகளுண்டாயிருக்கச் செய்தேயும் எம்பெருமானுக்கு அத்யந்த பரதந்த்ரமான ஸ்வரூபத்தின் உண்மையுணர்ச்சியாலே உபாயாந்தரங்களை ஸ்வரூப விருத்தங்களென்று விடுகைக் கீடான ஜ்ஞாநபூர்த்தியை யுடையவர்களும், (3) ஒன்றையும் கிரமமாக அநுஷ்டிக்க வல்லவரல்லாதபடி எம்பெருமான் பக்கலுள்ள மிக்க ப்ரேமத்தாலே சிதிலகரணராயிருக்கும் பக்திபரவசர்களுமாவர். ... ... (41, 42)

**43. அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நர் அஸ்மதாதிகள்; ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர் பூர்வாசார்யர்கள்; பக்திபாரவச்யத்தாலே ப்ரபந்நர் ஆழ்வார்கள்.**

43. உபாயாந்தரங்களை அநுஷ்டிப்பதில் ப்ரவர்த்திக்கைக் கீடான ஜ்ஞாநாதிகளில்லாமையாலே பகவத் விஷயத்தில் பரந்யாஸம் பண்ணினவர்கள் அஸ்மதாதிகள்; உபாயாந்தரங்கள் ஸ்வரூபநாசகங்களென்று நடுங்கும்படியான ஸ்வரூப ஜ்ஞாநபூர்த்தியாலே அநந்யகதிகளாய்க் கொண்டு ஸ்வரூபாநுரூபமாக எம்பெருமானிடத்தில் பரந்யாஸம் பண்ணினவர்கள் நாதயாமுநயதிவராதிகளான பூர்வாசார்யர்கள்; எம்பெருமானிடத்தில் ப்ரேமபூர்த்தியாலே "காலாழும் நெஞ்சழியுங் கண் சுழலும்" என்கிறபடியே சிதிலகரணராயிருக்கையாலே ஸாதநாநுஷ்டாநத்துக்கு ஆளல்லாமல் அநந்யகதிகளாய்க்கொண்டு அவன் பக்கலிலே பரஸமர்ப்பணம் பண்ணினவர்கள் ஆழ்வார்கள். ... ... ... (43)

**44. இப்படிச் சொல்லுகிறதும் ஊற்றத்தைப்பற்ற.**

44. அஜ்ஞாநாசக்திகளும், ஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநமும் பகவத் பக்தியுமாகிற இம்மூன்றினுடைய அநுஸந்தாநமும் கீழ்க்கண்ட மூவர்க்கும் ஒருவாறு உண்டாயிருக்கச் செய்தே ஓரொன்றே இவர்களுக்கு ப்ரபத்தி நிமித்தமாகச்

சொல்லுகிறது எதனுலேயென்னில்; இவற்றில் ஒரொன்றே இவ்வதிகாரிகளிடத்தில் அநுஸந்தானமுறையில் உறைத்திருக்கையாலே யென்க. ... ... (44)

**45. இம்மூன்றும் மூன்று தத்வத்தையும் பற்றிவரும்.**

45. இந்த அஜ்ஞாநாதிகள் மூன்றும் சிதசிதீச்வரரூப தத்வ த்ரயத்தையும் பற்றி வரும்; எங்ஙனேயென்னில்; (1) உபாயாநுஷ்டாநத்தில் அஜ்ஞாநாசக்திகளுக்குக் காரணம் அசித்ஸம்பந்தமாகையாலே அஜ்ஞாநம் அசித்தத்வத்தைப் பற்றிவரும். (2) உபாயாந்தரங்களை ஸ்வரூபவிருத்தமென்று விடுகைக்குடலான ஜ்ஞாநபூர்த்திக்குக் காரணம் ஆத்மஸ்வரூபத்தின் உண்மையுணர்ச்சியாகையாலே ஜ்ஞாநாதிகயம் ஆத்ம தத்துவத்தைப் பற்றிவரும். (3) ஒன்றையும் க்ரமமாக அநுஷ்டிக்க மாட்டாதபடி கரணங்களைச் சிதிலமாக்குகின்ற பக்திவளர்ச்சிக்குக் காரணம் "காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி" என்கிற பகவத் விக்ரஹ வைலக்ஷண்யமாகையாலே பக்திபாரவச்யம் பகவத் தத்துவத்தைப் பற்றிவரும்.(45)

**46. "என்னுன் செய்கேன்" என்கிறவிடத்தில் இம்மூன்றுமுண்டு.**

46. கீழ்ச்சொன்ன அதிகாரிகள் மூவர்க்கும் அஜ்ஞாநாதிகள் மூன்றிலும் அந்வயமுண்டாயிருக்க ஒரொன்றே ப்ரபத்தி நிமித்தமாகச் சொல்லுகிறது.—ஊற்றத்தைப்பற்ற என்று சொல்லிற்றே; இப்படி ஒரு அதிகாரியிடத்தில் இம்மூன்று முண்டென்னுமிடத்தைக் காணக்கூடிய இடமுண்டோ? என்னில், "என்னுன் செய்கேன்" [திருவாய்மொழி 5, 8, 3] என்கிற இடத்தில் அது காணலாம்; எங்ஙனே என்னில், எம்பெருமான் ஆழ்வாருடைய ஆர்த்தியைக்கண்டு இரங்கக் காணுமையாலே தன்னைப் பெறுகைக்குச் சில உபாயாநுஷ்டாநம் பண்ணவேணுமென்றிருந்தாளுகக் கருதின ஆழ்வார் "என்னுன் செய்கேன்" என்ருர்; உபாயாந்தரங்களை அநுஷ்டிப்பதற்கு யோக்யதையில்லாதபடி அஜ்ஞனை நான் என் செய்வேன்?' என்றபடி. இதைக்கேட்ட எம்பெருமான் ஆழ்வீர்! உமக்கு நாம் ஞானம் தந்தோமே' என்ருன்; நீ தந்த ஞானத்தாலே ஸ்வரூப பாரதந்த்ரியத்தையுணர்ந்து 'ஸாதநாநுஷ்டாநம் தகாது' என்றிருக்கிற நான் என்செய்வேன் என்ருர்; ஸ்வரூபத்திற்குச் சேராதாகிலும் அதனுல் உன்னைப்பெற முடியுமாகில் அதனை அநுஷ்டிக்கலாம், பக்திரூபாபந்நஜ்ஞாநத்தை நீ தந்தபடியாலே ஒன்றையும் க்ரமமாக அநுஷ்டிக்க முடியாதபடி பக்திபரவசனை நான் என் செய்வேன் என்ருர்—என்று இப்படி மூன்று வாக்யார்த்தமாக உரைப்பது ஆழ்வார் திருவுள்ளத்துக்கு இசைந்ததாகையாலே அவ்விடத்திலே இம்மூன்றுங் காணக் குறையில்லை யென்க. ... (46)

**47. அங்கு ஒன்றைப்பற்றி யிருக்கும். 48. முக்ய்யம் அதுவே.**

47, 48. ஆனுல் இம்மூன்று மவ்விடத்தில் ப்ரபத்திக்குக் காரணமாகிறதோவென்னில்; அவ்விடத்தில் ப்ரபத்தியானது ப்ரசுரமான பக்திபாரவச்யத்தையே தனக்கு ஹேதுவாகப் பற்றியிருக்கும். இந்த மூன்று காரணங்களடியாக வருகிற ப்ரபத்திகளில் எது முக்கியமென்னில்; பக்திபாரவச்யமடியாக ப்ரபத்தி பண்ணுமிடத்தில் உபேயத்தில் ருசி நன்ருக உண்டாகுமாகையால் பக்திபாரவச்யமே ப்ரபத்திக்கு முக்கிய ஹேது. ... ... ... ... (47, 48)

**49. "அவித்யாதஃ" என்கிற ச்லோகத்திலே இம்மூன்றும் சொல்லிற்று.**

49. இம்மூன்று அதிகாரிகளுக்கும் ப்ரமாண முண்டோ வென்னில், "அவித்யாதோ தேவே பரிப்ருடதயாவா விதிதயா ஸ்வபக்தேர் பூம்நாவா ஜகதி கதிமந்யா மவிதுஷாம் - கதிர்கம்யச் சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ: ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸகலு பகவாந் சௌநகமுநி:" என்று பட்டர் அருளிச்செய்த ச்லோக முண்டிறே. ... ... ... ... ... (49)

**50. "இதம் சரணமஜ்ஞாநாம்".**

50. அன்றியும் லக்ஷ்மீ தந்த்ரத்தில் [' இதம் சரண மஜ்ஞாநா மிதமேவ விஜாநதாம், இதம் திதீர்ஷதாம் பாரமிதமாநந்த்ய மிச்சதாம்.] என்று பிராட்டியருளிச்செய்த ச்லோகமுமுண்டு. ... ... ... (50)

**51. பக்திதன்னிலே அவஸ்தாபேதம் பிறந்தவாறே இதுதான் குலையக்கடவதாயிருக்கும்.**

51. இப்படிப்பட்ட ப்ரபத்தியில் நிஷ்டையுடையவர்கள் அந்த நிஷ்டை குலைந்து எம்பெருமானைப் பெறுதற்பொருட்டுத் தாமாக முயற்சி செய்வதும், அவன் வந்தவாறே அவனை உபேக்ஷிப்பதுமாகிற விவற்றுக்குக் காரணமேதென்னில்; கரணங்கள் சிதிலமாய், தாமாக ஒரு முயற்சி செய்ய மாட்டாமல் அவனையே உபாயமாக அத்யவஸித்து அவன் வரவைப் பார்த்திருக்குமிருப்பு தவிர்ந்து, கண்ணுஞ்சுழலையிட்டு ஏதேனுமொரு வகையாலாயினும் அவனை இப்போதே பெறவேணுமென்கிற விரைவு மிகுந்தால், "என்னுன் செய்கேன்" என்று ஸ்வப்ரவ்ருத்தியில் பற்றற்று எம்பெருமானிடத்தில் பரந்யாஸம் பண்ணியிருக்குமிருப்பு குலையப்பெறும். ... ... ... ... (51)

**52. தன்னைப் பேணவும்பண்ணும் தரிக்கவும்பண்ணும்.**

52. இப்படி ப்ரபத்திநிஷ்டை குலையும்படி பிறந்த பக்தியானது (1) 'காறை பூணுங் கண்ணுடி காணும்' இத்யாதியிற்படியே அவன் வரவுக்குடலாகத் தன்னை அலங்கரிக்கும்படி பண்ணி எம்பெருமானைப் பெறுதற்காக ஸ்வயத்நத்திலே மூட்டும்; அரைக்ஷணம் அவனை யொழியத் தரிக்கமாட்டாமையாலே அவன் வரவுக்குடலாக ஸ்வயத்நத்திலே மூட்டின அதுதானே அவன் வந்தவாறே விளம்ப ரோஷத்தாலே (2) 'போகு நம்பீ!' (3) 'கழகமேறேல் நம்பீ!' என்று அவனை உபேக்ஷித்துத் தள்ளித் தரித்திருக்கவும் பண்ணும். ... ... (52)

**53. இந்த ஸ்வபாவ விசேஷங்கள் கல்யாண குணங்களிலும் திருச்சரங்களிலும் திருநாமங்களிலும் திருக்குழலோசையிலுங் காணலாம்.**

53. அநுபவிக்கப்படுகிற விஷயம் ஒருபடிப்பட்டிரா நிற்கச் செய்தே அத்தை அநுபவிக்கிறவிவர்களுக்கு தாரகமாகவும் பாதகமாகவுந் தோற்றுகையாகிற இப்படிப் பட்ட ஸ்வபாவ விசேஷங்கள் திருக்கல்யாண குணங்களிலும் அம்புகளிலும் திருநாமங்களிலும் திருக்குழலோசையிலுங் காணலாகும்; (4) 'குளிரருவி வேங்கடத்தென்

(1) பெரியாழ்வார் திருமொழி 3, 7, 8. (2) திருவாய்மொழி 6, 2, 2.
(3) திருவாய்மொழி 6, 2, 6. (4) நாச்சியார் திருமொழி 8, 3.

கோவிந்தன் குணம்பாடி ..........ஆவிகாத்திருப்பேனே' என்று தாரகமாகவும்' (1) "வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையாய்" என்று பாதகமாகவுஞ் சொல்லுகையாலே கல்யாண குணவிஷயமாகவும், (2) "சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக்கன்றி என் மனம் தாழ்ந்து நில்லாதே" என்று தாரகமாகவும், (3) "சரங்களே கொடிதாயடுகின்ற" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே, திருச்சர விஷயமாகவும், (4) "திருமாலைப் பாடக்கேட்டு ....... மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" என்று தாரகமாகவும், (5) கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருநாம விஷயமாகவும், (6) "எங்களுக்கே ஒருநாள் வந்தூத உன் குழலின்னிசை போதராதே" என்று தாரகமாகவும், (7) "அவனுடைத் தீங்குழலீருமாலோ" என்று பாதகமாகவும் சொல்லுகையாலே திருக்குழலோசை விஷயமாகவுங் காணலாம். (53)

**54. இதுதன்னைப்பார்த்தால் பிதாவுக்குப் புத்ரன் எழுத்துவாங்குமாபோலே யிருப்பதொன்று.**

54. எம்பெருமான் தன்னை ரக்ஷிக்கைக்கு ஹேதுவாக இச் சேதநன் பண்ணும் ப்ரபத்தியை நிரூபித்தால் ஸர்வாவஸ்தைகளிலும் தன்னை ரக்ஷித்துக் கொண்டு போருந் தகப்பனுக்குப் பிள்ளையானவன் தானறிந்த தசையிலே 'என்னை நீ ரக்ஷிக்கவேணும்' என்று எழுத்து வாங்கினால் இரண்டு தலைக்குமுண்டான உறவு விரஸப்படுமாப்போலே ஸர்வேச்வரனுக்கும் இவனுக்குமுண்டான ஸம்பந்தத்துக்கு அவத்யாவஹமாயாயிற்றிருப்பது இந்த ப்ரபத்தி. ... ... (54)

**55. இதுதனக்கு ஸ்வரூபம் தன்னைப் பொருதொழிகை.**

55. ஆனால் இந்த ப்ரபத்திக்கு அஸாதாரணமான ஆகாரமேதென்னில்; உபாய வரணஸ்வரூபமான தன்னை உபாயமென்ன ஸஹியாதபடியிருக்கை; அதாவது உண்மையாக நிரூபித்தால் தன்னை உபாயமாக நினைக்கக்கூடாமலிருக்கை.

**56. அங்கம் தன்னையொழிந்தவற்றைப் பொருதொழிகை.**

56. ஸ்வீகாரரூபமான தன்னைத் தவிர்த்து மற்றொரு சேதநப்ரவ்ருத்தியையும் ஸஹியாதபடியிருக்கை இதுக்கு அங்கம்; [ஸாதநரூபமான ஸகல ப்ரவ்ருத்திகளையும் பற்றற விடுகை இதுக்கு அங்கமென்றதாயிற்று.] ... ... (56)

**57. உபாயம் தன்னைப் பொறுக்கும். 58. உபாயாந்தர மீரண்டையும் பொறுக்கும்.**

**59. இது இரண்டையும் பொருது.**

57—59. ஸித்தோபாயமான ஸர்வேச்வரன் இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தானே கடவனாகையாலே தன்னை உபாயமென்றால் அதுக்குத்

(1) திருவாய்மொழி 8, 1, 8.
(2) பெரியதிருமொழி 7, 3, 4.
(3) பெரிய திருமொழி 10, 2, 9.
(4) திருநெடுந்தாண்டகம் 14.
(5) திருவாய்மொழி 9, 8, 8.
(6) பெருமாள் திருமொழி 6, 9.
(7) திருவாய்மொழி 9, 9, 5.

தகுதியாயிருக்குமந்த ஸித்தோபாயத்திற்காட்டில் வேறுபட்ட ஸாத்யோபாயம் [கர்மஜ்ஞாநபக்திகள்] பாரதந்திரிய உணர்ச்சியற்று ஸ்வயத்நபரராயிருப்பவர்கட்கு மோக்ஷஸாதநமாக சாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகையாலே தன்னை உபாயமென்னப் பொறுக்குமதாய், ப்ரவ்ருத்தி ரூபமான அங்கங்களை அபேக்ஷித்திருக்கையாலே தன்னையொழிந்தவற்றையும் ஸஹிக்குமதாயிருக்கும். ஸித்தோபாயஸ்வீகாரரூபமான இந்தப்பிரபத்தி, தன்னையும் தன்னையொழிந்தவற்றையும் உபாயமென்ன ஸஹிக்கமாட்டாது. [ஆகையால் ஸித்தோபாயத்திற்காட்டிலும் ஸாத்யோபாயத்திற் காட்டிலும் வேறுபட்ட வடிவுடைத்தான இந்த ப்ரபத்திக்கு உபாயத்வம் ஸம்பவிக்கக்கூடியதன்று என்றதாயிற்று. ... ... (57—59)

### 60. பலத்துக்கு ஆத்மஜ்ஞாநமும் அப்ரதிஷேதமுமே வேண்டுவது.

60. இப்படி இந்த ப்ரபத்தி உபாயமல்லாவிட்டால் பேறு கிடைப்பதற்கு இவன் பக்கலிலும் சில வேண்டாவோவென்னில்; எம்பெருமானொருவனுக்கே சேஷபூதனும் அவனொருவனுடைய ரக்ஷணத்திற்கே ஆட்பட்டவனுமியிருக்கையாகிற தன் ஸ்வரூபத்தை அறிகையும், நிருபாதிக ரக்ஷகனான அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காமையுமாகிற இவையிரண்டுமொழிய வேறொன்றும் பலஸித்திக்கு வேண்டுவதில்லை. ... ... ... ... (60)

### 61. அல்லாதபோது பந்தத்துக்கும் பூர்த்திக்கும் கொத்தையாம்.

61. இப்படியல்லாமல் பலத்துக்கு ஸாதனமாக இவனும் சில செய்ய வேண்டுமென்றால், சேதந ரக்ஷணத்தைத் தன் பேறாகக் கொள்வதற்கீடான அவனுடைய நிருபாதிக சேஷித்வத்துக்கும், சேதநப்ரவ்ருத்தியில் ஒன்றையுமபேக்ஷியாதபடியிருக்கையாகிற நிரபேக்ஷோபாயத்வத்துக்கும் கேடு விளைந்ததாகும். ... ... ... ... ... (61)

### 62. ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறேனென்று ப்ரமித்து அத்தை விளைத்துக் கொள்ளா தொழிகையே வேண்டுவது.

62. ஆனாலும் பிறவிக்கடலிலே அழுந்திக்கிடந்து அலைகிற தன்னுடைய ஆபத்தை உணர்ந்தால் ஆபந்நிவர்த்தகனான எம்பெருமானைத் தன் ப்ரவ்ருத்தியாலே வசப்படுத்தி அவனுடைய ப்ரஸாதத்தாலே இத்தைக் கழித்துக்கொள்ள வேண்டாவோவென்னில்; எம்பெருமான் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணி ஸம்ஸாரமாகிற ஆபத்தைப் போக்கிக்கொள்ளுகிறேனென்று தான்பண்ணுகிற ப்ரபத்தியாலே தன் ஆபத்தைப் போக்கிக்கொள்வதாக ப்ரமித்து ஸ்வரூப நாசமாகிற ஆபத்தை விளைத்துக்கொள்ளா தொழிகையே இவன் செய்யவேண்டுவது; ஓராபத்தைப் பரிஹரித்துக்கொள்ள முயன்று மற்றோராபத்தை விளைத்துக்கொள்ளாதே இவன் ஸ்வயத்நத்தில் நின்றும் விலகியிருக்கவே எம்பெருமான் தானே ரக்ஷிக்குமென்று கருத்து. ... ... ... ... ... 62

### 63. ரக்ஷணத்துக்கபேக்ஷிதம் ரக்ஷ்யத்வாநுமதியே.

63. ஆனாலும் "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்று ரக்ஷகனான ஸர்வேச்வரன் இச்சேதநனுடைய அபேக்ஷையை எதிர்பார்த்திருப்பானென்கையாலே அவன்

பண்ணும் ரக்ஷணத்துக்கு இவனுடைய அபேக்ஷையும் வேண்டியன்றோ இருப்பது என்னில்; நிருபாதிக ரக்ஷகனானவன் பண்ணும் ரக்ஷணத்துக்கு இச்சேதநன் பக்கல் வேண்டுவது அவனுடைய ரக்ஷணத்தில் நின்றும் விலகிப் போகாமல் அந்த ரக்ஷணத்துக்கு உடன்பட்டிருக்கையேயாம். ... ... ... (63)

**64. எல்லா வுபாயத்துக்கும் பொதுவாகையாலும், சைதந்ய கார்யமாகையாலும், ப்ராப்தி தசையிலு மநுவர்த்திக்கையாலும், ஸ்வரூபாதிரேகியல்லாமையாலும் அசித்வ்யாவ்ருத்த வேஷத்தை ஸாதநமாக்கவொண்ணாது.**

64. இப்படி அநுமதியை அபேக்ஷித்து ரக்ஷிக்குமாகில் இந்த அநுமதிதான் ஸாதநமாகமாட்டாதோ வென்னில்; ஐஹிகாமுஷ்மிக பலங்களுக்கு உபாயமானவற்றில் ஏதேனுமொன்றிலே இறங்குமவனுக்கும் "நீ இவ்வுபாயத்தை அனுஷ்டிக்க வேணும்' என்றால், 'ஆம் அப்படி செய்கிறேன்' என்னும் அநுமதியை முன்னிட்டு அதில் இழியவேண்டுகையாலே எல்லாவுபாயங்களுக்கும் பொதுவாயிருக்கிறபடியாலும், அசேதநம் போலன்றியே சேதநனான வாசியைப் பற்ற வந்ததாகையாலும், உபாய தசையளவன்றியே உபேயதசையிலும் அவனுடைய வ்யாமோஹத்துக்குத் தகுதியாகக் கொள்ளும் விநியோக விசேஷங்களில் 'திருவுள்ளப்படி கொண்டருளவேணும்' என்னுமனுமதி நடந்து வருகையாலும், சேஷிசெய்யுமதுக்கு உடன்பட்டிருக்கை சேஷத்வ பாரதந்திரிய கார்யமாகையாலே இவ்வநுமதியானது ஸ்வரூபத்துக்குப் புறம்பல்லாமல் ஸ்வரூபமாயிருக்கையாலும் ஜ்ஞாநரஹிதமான அசித்திற்காட்டில் ஜ்ஞாத்ருத்வத்தாலே வேறுபட்டிருக்கிற ஆத்மாவினுடைய ஜ்ஞாநகார்யமான அநுமதியை ஸாதநமாகக் கற்பிக்கமுடியாது. ... ... (64)

**65. அசித்வ்யாவ்ருத்திக்குப்ரயோஜநம், உபாயத்திலுபகாரஸ்ம்ருதியும் உபேயத்திலுகப்பும்.**

65. ஆனால் அசித்திற்காட்டில் வேறுபட்டிருக்கைக்கு ஒரு ப்ரயோஜநம் வேண்டாவோ வென்னில்; "என்னைத் தீமனங்கெடுத்தாய்" "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்கிறபடியே எம்பெருமான் தன்பக்கல்பண்ணின உபகாரங்களை அநுஸந்திக்கையும், அவன் திருவடிகளில் தான் பண்ணும் கைங்கர்யங்களில் உகப்பும், அத்தால் அவனுக்கு உண்டாகிற ப்ரீதியைக்கண்டு தனக்கு உண்டாகிற ப்ரீதியுமே ப்ரயோஜநம். ... ... .... ... (65)

**66. "உன்மனத்தாலென்னினைந்திருந்தாய்" என்கிறபடியே ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு. 67. அதுதானெப்போதுமுண்டு.**

**68. அது பலிப்பது இவன்னினைவு மாறினால்.**

66—68 இப்படி இவன் பக்கல் உள்ளதொன்றும் உபாயமன்றாகில் இவன் எம்பெருமானை அடைதற்கு உபாயந்தானேதென்னில்; "உன்மனத்தாலென் நினைந்திருந்தாய்" என்று ஆழ்வார் அநுஸந்தித்தபடியே இச்சேதநன் உஜ்ஜீவிப்பதற்கான அவனுடைய நினைவே அவனைப் பெறுதற்கு உபாயம்; அந்நினைவு அவனுக்கு ஸர்வ காலத்திலுமுண்டு. ஆனால் அது இந்நாள்வரை பலியாதிருப்பானேன் என்னில்; இச்சேதநனுடைய ஸ்வரக்ஷண சிந்தை மாறினால் தான் அவனுடைய நினைவு இவனுக்குக் காரியகரமாகும். ... .... (66—68)

**69. "அந்திம காலத்துக்குத் தஞ்சம்-இப்போது தஞ்சமென் என்கிற நினைவு குலைகை" என்று ஜீயரருளிச்செய்வர்.**

69. நஞ்சீயர், நோயாளியாய்க் கிடந்த ஒரு சிஷ்யரை விசாரிக்கைக்கெழுந்தருள, அந்த ஸ்ரீ வைஷ்ணவர் 'அடியேனுக்கு அந்திம காலத்துக்குத் தஞ்சமாயிருப்பதொன்றை அருளிச் செய்யவேணும்' என்று ஜீயரை பிரார்த்திக்க, "இப்போது நமக்குத் தஞ்சம் எது? என்கிற ஸ்வரக்ஷண சிந்தையற்றிருப்பதுதான் அந்திம காலத்துக்குத் தஞ்சமாவது" என்றருளிச் செய்தார். ஆகையால் இவ்வாத்மாவின் உஜ்ஜீவநத்துக்கு உறுப்பாக எம்பெருமான் பண்ணும் சிந்தனை பலிப்பதற்கு இவனுடைய ஸ்வரக்ஷண சிந்தை மாறவேணுமென்றதாயிற்று. .... ... (69)

**70. ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானு மவனே.**

70. அடைவிக்கிறவன் ஈச்வரனானாலும், அடைகிறவனும் அடைந்து உகக்குமவனும் இவனன்றோ; ஆனபின்பு இவனுடைய நினைவை இப்படி அடியோடு துடைக்கலாமோ வென்னில்; அடைகிறவனும் அடைந்து உகப்பவனும் இச்சேதநனல்லன்; உடைமையை அடைகின்ற உடையவனைப்போலே ஸ்வம்மான இவ்வாத்மாவை அடைபவன் ஸ்வாமியான அவனே; இழந்த பொருளைப்பெற்றால் அதை அனுபவிக்கிற ஸ்வாமியே களிக்குமாபோலே இவ்வாத்மாவைப் பெற்றால் உகக்குமவனும் அவ்வெம்பெருமானே யாவன். ... ... (70)

**71. ஸ்வயத்ந நிவ்ருத்தி பாரதந்த்ர்ய பலம்; ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தி சேஷத்வ பலம்.**

71. ஆனால் இச்சேதநன் ஞானமுடையவனாகையால் அந்த ஞானமடியாகக் கர்த்தாவாகவும் போக்தாவாகவுமிருப்பதால் தானாக ஒரு முயற்சி செய்வதற்கும் அதனால் ஒரு பயன் பெறுவதற்கும் உரியவனாயிருக்க ஸ்வயத்நமும் ஸ்வப்ரயோஜநமும் இவனுக்கு எவ்வழியாலே கழியக்கூடுமென்னில்; பாரதந்த்ரியமும் சேஷத்வ முமாகிற இரண்டும் ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலே அவ்வாகாரங்களை யறியவே ஸ்வயத்ந ஸ்வப்ரயோஜநங்களிரண்டும் தன்னடையே கழியும். [அதாவது பாரதந்திரிய ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் எம்பெருமானைப் பெறுதற்குத் தான் ஒரு யத்நம் பண்ணுகையாகிற ஸ்வயத்நம் குலையும். சேஷத்வத்தை அநுஸந்தித்தால் ஸ்வப்ரயோஜநருசி குலையுமென்றபடி.] ... ... (71)

**72. பரப்ரயோஜந ப்ரவ்ருத்தி ப்ரயத்நபலம்; தத்விஷயப்ரீதி சைதந்ய பலம்.**

72. ஆனால் இவன் இப்படி ஸ்வயத்நத்திலும் ஸ்வப்ரயோஜநத்திலும் பற்றற்றிருக்குமாகில் இவனுடைய ப்ரயத்நத்துக்கும் சைதந்யத்துக்கும் என்னபயன்? என்னில்; "உனக்கே நாமாட் செய்வோம்" என்கிறபடியே பரனுக்கு ப்ரயோஜநமாகப் பண்ணும் கைங்கரியமாகிற ப்ரவ்ருத்தி-இவனுடைய ப்ரயத்நத்துக்குப் பயன்; அவனுடைய உகப்புக்கு உறுப்பாகத் தான் பண்ணுகிற கைங்கர்யத்தாலே மிகவும் மகிழ்ச்சிகொண்டிருக்கிற அவ்வெம்பெருமானை விஷயமாகவுடைத்தான ப்ரீதி [அதாவது, அவனுடைய உகப்பைக் கண்டு அதற்காக உகந்திருக்கை] இவனுடைய சைதந்யத்துக்குப் பயன். ... ... .... ... (72)

73. அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்.

73. சேஷத்வாதிகளும் ஜ்ஞாத்ருத்வாதிகளும் ஆத்ம தர்மங்களாயிருக்கச் செய்தே சேஷத்வாதிகளை முக்கியமாக்கி ஜ்ஞாத்ருத்வாதிகளைச் சேஷத்வாதிகளுக்குத் தகுதியாக யோஜிப்பதற்கு நியாமகமேதென்னில்: ஜ்ஞாத்ருத்வத்தை மாத்திரம் ஆத்மாவுக்கு லக்ஷணமாகச் சொன்னல் ஈச்வரனுக்கும் அந்த ஜ்ஞாத்ருத்வமுண்டாகையாலே அவ்விடத்தில் அதிவ்யாப்திவரும்; அதைப் பரிஹரிப்பதற்காகச் சேஷத்வத்தையும் லக்ஷண கோடியிற் சேர்க்கவேண்டும்; சேஷத்வத்தை மாத்திரம் லக்ஷணமாகச் சொல்லுவோமென்றல், அசித்துக்கும் சேஷத்வமுண்டாகையாலே அங்கு அதிவ்யாப்தி வரும்; அதைப் பரிஹரிப்பதற்காக ஜ்ஞாத்ருத்வமுங்கூட நிவேசிக்க வேண்டும்; ஆகவே ஜ்ஞாத்ருத்வத்தோடு கூடின சேஷத்வம் ஆத்மலக்ஷணமென்றதாயிற்று. இதில் ஜ்ஞாத்ருத்வத்திற் காட்டில் சேஷத்வமே ஆத்மாவுக்கு முக்கியமான நிரூபகம்; ஏனெனில்; ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவிற்காட்டில் வேறுபடுத்துகை நிரூபகத்வமாவது; கீழ் உபபாதித்தபடி சேஷத்வமும் ஜ்ஞாத்ருத்வமுமாகிற இரண்டு நிரூபகங்களும் ஆத்மாவுக்கு அபேக்ஷிதங்களாயிருக்கச்செய்தே, எம்பெருமானுக்கு அடிமைப்பட்டே ஸத்தை பெறக்கடவதான இவ்வாத்ம வஸ்துவுக்கு அசித்திற்காட்டில் வாசியை அறிவிக்கிற ஜ்ஞாத்ருத்வம் முக்கியமாகக் கூடுமா? ஈச்வரனிற்காட்டில் வாசியை அறிவிக்கிற சேஷத்வம் முக்கியமாகக் கூடுமா? என்று ஆராயுமளவில், ஜ்ஞாத்ருத்வம் ஆத்மாவுக்குப் புறவிதழென்னும்படி சேஷத்வமே அந்தரங்க நிரூபகமெனக்கொள்ள வேண்டுமன்றோ? ஆத்ம லக்ஷணத்தில் சேஷத்வத்தை நிவேசியாதொழியில் ஜ்ஞாத்ருத்வமாத்ரத்தால் ஆத்மாவும் ஈச்வரனும் ஒன்று; என்னவேண்டி வருகிற அத்வைதத்தை சேஷத்வமிறே கண்டிக்கிறது. அதுவன்றோ முக்கியமாகக் கடவது. (73)

74. இதுதான் வந்தேறியன்று.

74. இந்த சேஷத்வம் ஆத்மாவுக்கு ஸ்வரூப நிரூபகமாகில் ஆத்மா உள்ள போதே தொடங்கி இதுவும் உண்டாயிருக்க வேண்டாவோ? இதுக்கு முன்பில்லாமல் இடையிலே யுண்டாகையாலும் உலகத்தில் இது ஒரு உபாதியைப் பற்றிவரக் காண்கையாலும் சேஷத்வமானது ஆத்மாவுக்கு வந்தேறியன்றோ வென்னில் அன்று; இது ஆத்மாவுக்கு இயற்கையாயுள்ளது. "திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்றதிறே. ... .... ... ... ... (74)

75. ஸ்வாதந்த்ர்யமும் அந்யசேஷத்வமும் வந்தேறி.

75. "நான் எனக்கு உரியவன்" என்றிருக்கையாகிற ஸ்வாதந்திரியமும், எம்பெருமானைத் தவிர்த்துப் பிறவிடங்களிலே தொண்டு பட்டிருக்கையாகிற அந்ய சேஷத்வமுமே ஆத்மாவுக்கு வந்தேறியானவை; ஏனென்னில்; அவை இவனுக்கு ஸ்வாபாவிகமன்றியே அவித்யாதிகள் காரணமாக வருகையாலே. ... (75)

76. சேஷத்வவிரோதி ஸ்வாதந்த்ர்யம்; தச்சேஷத்வ விரோதி ததிதர சேஷத்வம்.

76. "நான் எனக்கு உரியேன்" என்றிருக்குமளவில் ஒரு விஷயத்திலும் சேஷத்வத்திற்கு இசையாமை தோற்றுகையாலே அந்த ஸ்வாதந்திரியமானது

சேஷத்வத்தைத் தலையெடுக்கவொட்டாமல் தடை செய்யும்; ஸ்வாதந்திரியம் குலைந்து சேஷத்வத்துக்கு இசைந்தாலும், எம்பெருமானைத் தவிர்த்த விஷயங்களில் ஒன்றுக்குத் தன்னை சேஷமென்றிருப்பது நிருபாதிக சேஷியான அவன் பக்கல் சேஷத்வத்தைத் தலையெடுக்க வொட்டாமல் தடை செய்யும். [ஆகையாலே வந்தேறிகளான ஸ்வாதந்திரியமும் அந்ய சேஷத்வமும் நமக்கு விரோதிகள் என்றதாயிற்று.] ... ... ... ... (76)

**77. அஹங்காரமாகிற ஆர்ப்பைத்துடைத்தால் ஆத்மாவுக்கழியாதபேர் அடியானென்றிறே.**

77. ஸ்வாதந்திரிய ரூபமான அஹங்காரமாகிற ஆவரணத்தை ஸதாசார்யோபதேசம் முதலியவற்றால் வாஸனையோடே போக்கினால் ஆத்மாவுக்கு "அடியான்" என்கிற பேரன்றோ சிரஞ்ஜீவியாயிருக்குமது. ... ... (77)

**78. க்ராமகுலாதிகளால் வரும் பேர் அநர்த்தஹேது. 79. "ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:"**

78, 79. பாகவதாபிமானத்துக்குப் புறம்பான க்ராமங்களையும் குலங்களையுமிட்டுப் பண்ணுகிற வ்யபதேசம் அஹங்காரத்தைப் பிறப்பிக்குமதாகையாலே ஸ்வரூபஹாநியாகிற அநர்த்தத்தை உண்டாக்கும்; அவற்றால் இவன் வ்யபதேசிக்கத் தக்கவனல்லன்; "**ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராமகுலாதிபி:, விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம் ஸஏவ ஹி**" என்கிற ஸ்ரீபாஞ்சராத்ரவசநம் இவ்விஷயத்தில் ப்ரமாணமாகும். ... ... ... ... (78, 79)

**80. உபாயத்துக்கு, பிராட்டியையும் த்ரௌபதியையும் திருக்கண்ணமங்கையாண்டானையும் போலே யிருக்கவேணும்; உபேயத்துக்கு, இளையபெருமாளையும் பெரியவுடையாரையும் பிள்ளைதிருநறையூரரையரையும் சிந்தயந்தியையும் போலே யிருக்கவேணும்.**

80. உபாயத்துக்கு அதிகாரியாம்போது பிராட்டி, த்ரௌபதி, திருக்கண்ணமங்கையாண்டான் இவர்களை ஒத்திருக்க வேண்டும்; உபேயத்துக்கு [பலனுக்கு] அதிகாரியாம்போது இளையபெருமாள், பெரியவுடையார் (ஜடாயு), பிள்ளை திருநறையூரரையர், சிந்தயந்தி (ஓர் இடைப்பெண்) இவர்களை ஒத்திருக்க வேணும். .... (80)

**81. பிராட்டிக்கும் த்ரௌபதிக்கும் வாசி, சக்தியும் அசக்தியும்.**

81. "இராமபிரானே எழுந்தருளி இலங்கை பாழாளாகப் படைபொருது என்னைக் கைக்கொள்வனாகில் அதுவாய்த்து அவனுக்குத் தகுதியாவது" என்றிருந்த பிராட்டிக்கும், "**கோவிந்த புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம்**" என்றிருந்த த்ரௌபதிக்கும் தம்மில் வாசி—சக்தியும் அசக்தியும்; அதாவது—"**சீதோ பவ ஹநூமத:**" என்று திருவடியின் வாலைப்பற்றின நெருப்பை நீராக்கினாற்போலே "பஸ்மீபவ" என்றொரு வார்த்தை சொல்லி ராவணாதிகளைச் சாம்பலாக்கித் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவல்ல சக்தியுண்டு பிராட்டிக்கு; பெரிய ஸபையிற் பரிபவித்த துச்சாஸநன் முதலிய விரோதிகளை ஸ்வயத்நத்தாலே தள்ளித் தன்னை ரக்ஷித்துக் கொள்ளப் பார்த்தாலும் அப்படிக்கொத்த சக்தி இல்லையாய்த்து த்ரௌபதிக்கு, ஆகவே சக்தியும் அசக்தியும் இவ்விருவர்க்கும் தம்மில் வாசி. .... (81)

**82. பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள் ; த்ரௌபதி லஜ்ஜையைவிட்டாள் ; திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்.**

82. கீழ்க்கூறிய பிராட்டி முதலிய உபாயாதிகாரிகள் செய்ததென் என்னில்; பிராட்டி—"நாயகரான பெருமாள் நம்மை ரக்ஷிக்கவேணுமேயன்றி நம்முடைய சக்தியால் நாம் நம்மை ரக்ஷித்துக்கொள்ளுகை நம்முடைய பாரதந்திரியத்துக்குக் கெடுதியை விளைக்கு" மென்று தன் சக்தியைக் கொண்டு காரியங்கொள்ளா தொழிந்தாள்.

துச்சாஸநன் மிக்க பெருஞ்சபை நடுவில் துகிலை உரிகிறவளவில் த்ரௌபதி துகிலை இடுக்கிக்கொள்ளவேண்டிய லஜ்ஜையைத் துறந்து இரண்டு கையையும் விட்டாள்.

ஒரு ஸேவகனுடைய நாயை மற்றொரு ஸேவகன் அடிக்க அவன் அது பொறுமல் நாயை அடித்தவனோடே எதிர்த்துப் பொருது அவனைக்கொன்று தானும் குத்திக்கொள்வதாக இருக்கிறபடியைக் கண்ட திருக்கண்ணமங்கையாண்டான் "ஒரு க்ஷுத்ர சேதநன் "இந்த நாய் நம் அபிமானத்திலே ஒதுங்கிக்கிடக்கிறது' என்னுமவ்வளவுக்காகத் தன்னை அழியமாறினபடி கண்டால், பரம சேதநனை எம்பெருமானுடைய அபிமாநத்திலே ஒதுங்கிக் கிடந்தால் அவன் அந்த ஆச்ரிதனுக்காக எவ்வளவு பரியக்கூடுமோ" என்று அநுஸந்தித்து அன்றுமுதல் தாம் ஸ்வரக்ஷணவ்யாபாரங்களை யெல்லாம் விட்டுவிட்டு அந்த நாயைப்போலே தம்மை அநுஸந்தித்துக்கொண்டு அப்போதே வந்து திருக்கண்ணமங்கையில் பத்தராவிப் பெருமாள் திருவாசலில் கைப்புடையில் [கோபுரவாசலிலுள்ள சிறிய அறையில்] புகுந்து கண்வளர்ந்தருளினர். ஆகவே, பிராட்டி தன் சக்தியை விட்டாள்; த்ரௌபதி லஜ்ஜையைவிட்டாள்; திருக்கண்ண மங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான் என்றதாயிற்று. ... .... ... (82)

**83, பசியராயிருப்பார் அட்டசோறு முண்ணவேணும் அடுகிறசோறு முண்ணவேணு மென்னுமாபோலே, காட்டுக்குப் போகிறபோது இளையபெருமாள் பிரியில் தரியாமையை முன்னிட்டு, அடிமை செய்யவேணும் எல்லாவடிமையும் செய்யவேணும் ஏவிக்கொள்ளவும் வேணும் என்றார், படைவீட்டில் புகுந்தபின்பு, காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே, ஒப்பூணுண்ண மாட்டாதே, ஒரு திருக்கையாலே திருவெண்கொற்றக்குடையையும், ஒரு திருக்கையாலே திருவெண்சாமரத்தையும் தரித்து அடிமை செய்தார்.**

83. இனி உபேயாதிகாரிகளில் தலைவரான இளையபெருமாள் செய்ததென் என்னில்; மிக்க பசியுடையவர்கள் தங்கள் பசியின் கனத்தாலே "முன்பு சமைத்த சோறும் இப்போது சமைக்கிற சோறும் எல்லாம் நாமே உண்ணவேணும்" என்று பாரிப்பதுபோல், பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது இளையபெருமாள் தாமும் கூடப் புறப்படுவதாக முயன்றபடியைக் கண்டு "நீர் நில்லும்" என்ன, "அடியேனையுங்கூடக் கிங்கரனாகக்கொண்டு போகவேணும்" என்றும்; பிறகு

கங்கையைக் கடந்து சென்றவளவிலே இவரைத் திருவயோத்திக்குத் திருப்பிப் போகவிடுவதாகப் பல அருளிச்செய்ய "பிராட்டியும் நானும் தேவரைப் பிரிந்தால் உடனே நீரைப்பிரிந்த மீன் படுவது படுவோம்" என்றும் சொல்லுகையாலே, பிரியில் தாம் ஸத்தை பெற்றிருக்கமாட்டாமையை முன்னிட்டு, தமது சேஷத்வத்துக்குத் தகுதியாக அடிமைசெய்ய வேணுமென்றும், அதுதன்னிலும் இன்ன அடிமை யென்று ஒரு நியதியின்றியே எல்லா வடிமையும் செய்யவேணுமென்றும், அப்படி அடிமைசெய்யுமளவில் ஸ்வாதந்திரியமாகிற குற்றம் கலசாதபடி உசிதமான கைங்கரியங்களிலே ஏவிக்கொள்ளவும் வேணும் என்றும் ப்ரார்த்தித்தார். பிறகு வநவாஸம் முடிந்து திருவயோத்தியில் எழுந்தருளிப் பெருமாள் திருவபிஷேகம் பண்ணியருளினபோது இவ்விளையபெருமாள், தம்மோடு கூட அடிமைசெய்கைக்கு ஒருவருமில்லாத தனிக்காட்டிலே தாம் ஒருவராகவே அடிமைசெய்து கைங்கர்ய ருசியைப் பெருக்கிக்கொண்டபடியாலே ஸ்ரீபரதாழ்வான் முதலானுரோடு ஸமமாகத் தாமும் ஓரடிமை செய்து நிற்கமாட்டாமல் திருவெண் கொற்றக்குடை யெடுக்கை, திருவெண்சாமரம் பணிமாறுகையாகிற இரண்டு அடிமையையும் ஏககாலத்திலே தாமே செய்தார். [இந்த வ்ருத்தாந்தம் ஸ்ரீராமாயணத்தில் இல்லை; பாத்மபுராண உத்தரகண்டத்தில் நாற்பத்தொன்பதாம் அத்தியாயத்தில் உள்ளது.]

இவ்விடத்து மூலத்திலே "காட்டில் தனியிடத்தில் ஸ்வயம்பாகத்திலே வயிற்றைப் பெருக்கினபடியாலே ஒப்பூணுண்ணமாட்டாதே" என்றதற்குப் பொருள்:—தாநொருவனே புஜிக்கத் தான் பண்ணிக்கொள்ளுகிற தளிகையிலே கொஞ்சம் ப்ரஸாதம் அதிகமாகி அது சேஷித்தால் வ்யர்த்தமாகப் போகவொண்ணு தென்று கஷ்டப்பட்டு புஜிக்க, இங்ஙனே புஜித்து வருகையாலே கனங் குழையிடக் காது பெருக்குகிற நியாயத்தாலே வயிற்றைப் பெருக்கினவன் பங்க்திபோஜநம் பண்ணமாட்டாதாப்போலே என்று த்ருஷ்டாந்த முறையிலே கொள்ளவேணும்.

**84. பெரியவுடையாரும் பிள்ளைதிருநறையூரரையரும் உடம்பை யுபேக்ஷித்தார்கள்; சிந்தயந்திக்கு உடம்பு தன்னடையே போயிற்று.**

84. "பெரியவுடையார் என்கிற ஸ்ரீஜடாயுமஹாராஜர்—பெருமாள் பஞ்சவடியிலெழுந்தருளித் தம்மை அங்கீகரித்த நாள் தொடங்கித் திருவடிகளுக்கு மிகவும் அணுக்கராய்ப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற ஆச்ரமத்துக்கு அருகிலே வஸியாநிற்கச் செய்தே அசிந்திதமாக ராவணன் வந்து பிராட்டியைப் பிரித்துக் கொண்டுபோக, அப்போது பிராட்டி இவரை ஒரு மரத்தின்மேலே கண்டு "என்னை இவன் இப்படி அபஹரித்துக்கொண்டு போகாநின்ருன்" என்று இவர் பேரைச்சொல் லிக்கூப்பிட, உறங்கிக்கொண்டிருந்த இவர் அக்கூக்குரல்கேட்டு உணர்ந்து ராவ ணன் கொண்டுபோகிற படியைக் கண்டு "உனக்கு இந்த அநீதி ஆகாதுகாண்" என்று தர்மோபதேசம் பண்ணினவளவில் அவன் கேளாமையாலே "நம் உயிரோடே இந்தப் பரிபவத்தைக் கண்டிருக்கக் கடவோமல்லோம்; யுத்தம்பண்ணி மீட்குதல், இல்லையாகில் மரணமடைதல், ஆகிய இரண்டத்தொன்று செய்யக்கடவோம்" என்று துணிந்து அவனேடே பெரிய யுத்தத்தைப் பண்ணி அவன் கையாலே அடிபட்டு விழுந்து தம் திருமேனியை விட்டார்.

பிள்ளை திருநறையூரரையர், கீழ்நாட்டில் (தொட்டியம்) திருநாராயணபுர மென்கிற திவ்ய தேசத்திலே வேதநாராயணப் பெருமாளை ஸேவிக்கவேணுமென்று ஸகுடும்பமாக அங்கு எழுந்தருளின வளவிலே சில ப்ரதிகூலர்கள் அந்த ஸந்நிதியிலே நெருப்பைப் பற்றவைக்க,உள்ளிருப்பவர்களெல்லாரும் புறப்பட்டு ஓடிப்போகச் செய்தே அந்த எம்பெருமான் திருமேனிக்கு அழிவு வருகிறபடியைக் கண்டு பொறுக்கமாட்டாத ப்ரேமத்தின் கனத்தாலே தாமும் கூட முடிவதாக இவர் நிற்கையாலே மக்களும் இவரை விட்டுப் போகோம் என்றிருக்க ஸகுடும்பமாக திவ்ய மங்கள விக்ரஹத்தைக் கட்டிக்கொண்டு திருமேனியை விட்டார்.

க்ருஷ்ணவதாரத்தில் ராஸக்ரீடா ஸமயத்தில் திருக்குழலோசையைக்கேட்ட ஆயர்மாதர் ஸ்ரீ ப்ருந்தாவநத்தேறப் போகப் புறப்பட்ட வளவிலே மாமியார் மாமனார் கட்டளையை மீறிப்போவார் சிலரும் அதற்கு அடங்கி நிற்பார் சிலருமாயிருக்க, ஒரு ஆய்ப்பெண் மாமனாரை மீறிப்போகமாட்டாமல் நின்று கண்ணபிரானைத் தியானம் பண்ணி அவனிடத்தே நெஞ்சு பதிந்திருக்கையாலே வந்த நிர்மல ஸுகத்தாலும், அவனைக் கிட்டப் பெறாமையாலுண்டான அளவற்ற துக்கத்தாலும் ஸகல புண்ய பாபங்களும் கழியப்பெற்று அவனைப்பெறுது தரிக்கமாட்டாமல் மூச்சடங்குகையாலே இவளுக்குத் தான் உபேக்ஷிக்க வேண்டாதபடி தேஹம் தன்னடையே வீடுபெற்றது.

[இந்த ஆய்ப்பெண்ணுக்கு ஒரு பெயர் கூறப்படவில்லை; இவளைப்பற்றி ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் சொல்லப்புக்க இடத்தில் "காசித்" என்று தொடங்கி "சிந்தயந்தீ ஜகத் ஸூதிம் பரப்ரஹ்ம ஸ்வரூபிணம், நிருச்ச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா" என்று கூறப்பட்டிருத்தலால் "சிந்தயந்தீ" என்ற குண நாமத்தால் இவளை நம் பூருவாசாரியர்கள் வ்யபதேசித்தருளினர்.] .... (84)

**85. உபாயத்துக்கு, சக்தியும் லஜ்ஜையும் யத்நமும் குலையவேணும்: உபேயத்துக்கு ப்ரேமமும் தன்னைப் பேணாமையும தரியாமையும் வேணும்.**

85. "உபாயத்துக்குப் பிராட்டியையும் த்ரௌபதியையும் திருக்கண்ண மங்கையாண்டானையும்போலே இருக்கவேணும்; உபேயத்துக்குப் பெரியவுடையாரையும் பிள்ளை திருநறையூரரையரையும் சிந்தயந்தியையும்போலே இருக்க வேணும்" என்று சொன்னதின் கருத்து யாதெனில்; (1) உபாயத்தில் அதிகரிக்கும் போது—தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளுகைக் குறுப்பான சக்தி குலைய வேணும் (பிராட்டிக்குப்போலே). (2) நான் பற்றுகிற உபாயத்துக்கு விரோதிகளானவற்றை விடுமளவில் "நாட்டார் சிரிப்பர்களே" என்று கூசும்வெட்கத்தை விடவேணும் (த்ரௌபதிபோலே). (3) தன் பாரதந்திரியத்துக்கு விரோதியாகத் தான் பண்ணும் முயற்சி மாளவேணும் (திருக்கண்ணமங்கையாண்டானுக்குப் போலே) இனி உபேயத்தில் அதிகரிக்கும்போது (1) சேஷியைப் பிரியாதே "எல்லாவடிமையும் அவன் ஏவினபடி செய்யவேணும்" என்னும் ப்ரேமம் பிறக்க வேணும் (இளையபெருமாளுக்குப் போலே). (2) அத்தலைக்கு ஒரு கெடுதி வந்தால் அதுகண்டு ஆற்றுமல் தன் உடம்பை உபேக்ஷிக்கைவேணும் (பிள்ளை திருநறையூரரையர்க்குப்போலே). (3) அத்தலையோடே கூடி அநுபவிக்கப் பெறுவிடில் தரித்திருக்கமாட்டாமல் மூச்சடங்கும்படியான நிலைமை நேரவேணும் (சிந்தயந்

திக்குப்போலே) ஆகையாலே, அவர்களைப்போலே இருக்கையாவது—இவ்வதிகாரங்களை உடையராகை என்று கருத்து. ... ... .... (85)

**86. இவனுக்கு வைதமாய் வருமதிறே த்யஜிக்கலாவது, ராகப்ராப்தமாய் வருமது த்யஜிக்கவொண்ணாதிறே.**

86. "எம்பெருமானுக்காகத் தன் உடம்பை முடித்துக்கொள்வது மோக்ஷத்துக்கு ஸாதநமாம்" என்று ஆக்நேயம், வாயவ்யம், வாமநீயம் முதலிய புராணங்களிலும் ஸ்ரீ மஹாபாரதாதி இதிஹாஸங்களிலும் கூறப்பட்டிருப்பதால் இப்படி மோக்ஷஸாதநமாகக் கூறப்பட்டிருக்கிற பகவதர்த்தமான ஸ்வதேஹத்யாகமானது வேறொன்றை உபாயமாகப் பற்றாத ஸித்தோபாய நிஷ்டனுக்குக் கூடாதே; ப்ரபன்னரான பிள்ளை திருநறையூரரையர் இதை அநுஷ்டிப்பானேன்? என்னில்; "இதம் குர்யாத்" என்று ஒரு விதியடியாகவருகிற ஸாதநாநுஷ்டாநம் விவேகிகளுக்கு விடத்தக்கதேயன்றி, பிரிந்து ஆற்ற முடியாதபடி பரம போக்யமுமாய் வகுத்ததாயுமுள்ள விஷயத்தில் விதிப்ரயுக்தமல்லாமல் ராகப்ரயுக்தமாக வரும் அநுஷ்டானம் வருந்தியும் விடப்போகாது. ... ... ... (86)

**87. உபாயத்வாநுஸந்தாநம் நிவர்த்தகம்; உபேயத்வாநுஸந்தாநம் ப்ரவர்த்தகம்.**

87. விதிப்ரயுக்தமாய் வருமளவில் விடக்கூடியதாகவும், ராகப்ராப்தமாய் வருமளவில் விடமுடியாததாகவும் ஆகைக்குக் காரணம் யாதெனில்; விதிப்ரயுக்தமாய் வருமளவில் தேஹத்தை விடுகையாகிற ஒரு ப்ரவ்ருத்தியில் "இது ஸாதநம்" என்கிற அநுஸந்தாநம் நடக்கையாலே அந்த அநுஸந்தாநமானது-ஸாதநமாக ஏற்பட்டிருக்கிற அந்த ப்ரவ்ருத்தியில் நின்றும் இவனை மீள்விக்கும்; ராகப்ராப்தமாய் வருமளவில், எம்பெருமானுக்கு ஒரு தீங்குவரக் கண்டிருப்பதிற் காட்டிலும் நாம் முடிந்துபோகையே நல்லது என்று தேஹத்யாகத்தைப் புருஷார்த்தமாக அநுஸந்திக்கையாலே அந்த அநுஸந்தாநமானது இவனை அந்த ப்ரவ்ருத்தியிலே கொண்டு மூட்டும். ... ... .... ... .... (87)

**88. அப்ராப்த விஷயங்களிலே ஸக்தனானவன் அது லபிக்கவேணும் என்றிரா நின்றால், ப்ராப்தவிஷயப்ரவணனுக்குச் சொல்லவேண்டாவிறே.**

88. இப்படி ஸாதந புத்தியில்லாமல் ஸ்வயம் புருஷார்த்த புத்தியாலே தேஹத்தை விடும்படியான நிலைமை விளையக்கூடுமோ வென்னில்; ஸ்வரூபப்ராப்தமல்லாத ஹேய விஷயங்களிலே ஆழ்ந்தவன் தன்னை அழியமாறியாகிலும் அவ்விஷயத்தைப் பெறவேணும் என்று தன் உடம்பை விடும்படி கண்டால் ஸ்வரூப ப்ராப்தமான விலக்ஷண விஷயத்திலே ஆழ்ந்தவனுக்கு அந்த விலக்ஷண விஷயத்துக்காகத் தன்னை அழியமாறுகையாகிறவிது கூடும் என்பதை விசேஷித்துச் சொல்லவேணுமோ?

[ஒரு தாஸியினிடத்தில் ஒருவன் மிக்க அன்பு உடையவனாயிருக்கையில் அவளுக்குக் கடுமையான நோய் விஞ்சினவளவிலே "இவள் நோய் தீர்ந்து எழுந்தால் நான் என் தலையை அரிந்து தருகிறேன்" என்று ஒரு தேவதைக்குப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு பின்பு அப்படியே தன் தலையை அரிந்து கொடுத்தான் என்ற கதையை இங்கு நினைக்க.] .... ... .... .... (88)

**89. அநுஷ்டாநமும் அநநுஷ்டாநமும் உபாய கோடியில் அந்வயியாது**

89. உபாயத்தில் அதிகரிப்பதற்கும் உபேயத்தில் அதிகரிப்பதற்கும் உடலாக மற்றும் சொல்லப்பட்ட அநுஷ்டாநங்கள் போலல்லாமல் இந்த தேஹத்யாகமானது உபாயமாக சாஸ்த்ரங்களிலே ஏற்பட்டதாகையால் ராகப்ராப்தமாய்க் கொண்டு விட முடியாததா யிருந்தபோதிலும் உபாயகோடியில் அந்வயித்தல்லது நில்லாதே என்னில்; உபாயாதிகாரிக்கு அநுஷ்டாநமாகச் சொல்லப்பட்ட சக்தித்யாகம் முதலானவையும், உபேயாதிகாரிக்கு அநுஷ்டாநமாகச் சொல்லப்பட்ட ப்ரேமம் முதலியவையும் உபாயாதிகாரத்திலும் உபேயாதிகாரத்திலும் உள்ளடங்குகையாலே அவை எப்படி உபாயகோடியில் சேரமாட்டாவோ, அப்படியே அநநுஷ்டாநமாகச் சொல்லப்பட்ட தேஹத்யாகமும் உபாய புத்தியோடே அநுஷ்டிக்கப் படாமல் ராகப்ராப்தமாகையாலே உபாய கோடியில் சேராது உபேயாதிகாரத்தினுள்ளடங்குமத்தனை. [இத்தால், ஒன்று உபாயமாக சாஸ்த்ரத்தில் ஏற்பட்டபோதிலும் உபாய புத்தியோடே அநுஷ்டித்தால்தான் அதற்கு உபாயத்வம் உண்டு; இப்படி கொள்ளாவிடில் ப்ரபந்நனானவன் உபாய புத்தியில்லாமல் உபேய புத்தியோடே பண்ணுகிற புண்ய தேசவாஸம் முதலியவைகளும் உபாயகோடியிலே சேரவேண்டிவரும் என்றதாயிற்று.] ... ... ... ... (89)

**90. அநந்யோபாயத்வமும் அநந்யோபேயத்வமும் அநந்யதைவத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்தி காணாநின்றோமிறே.**

90. அதவா—தேஹத்யாக ரூபமான இந்த ப்ரவ்ருத்தி உபாயகோடியிலே அந்வயித்தாலும் குற்றமில்லை; ஏன் குற்றமில்லை? அநந்யோபாயத்வம் என்கிற ஸ்வரூபம் குலைவது குற்றமன்றோ? என்னில், அது ப்ரேமபரவசர்க்குக் குற்றமன்று; நம் ஆழ்வார்கள் ப்ரபந்நசிகாமணிகளா யிருந்துவைத்தும் தங்களுடைய அநந்யோபாயத்வ ஸ்வரூபம் குலையும்படியாக நோன்பு நோற்கை, மடலெடுக்கை முதலியவற்றில் வியாபரித்தபடியாலும், அத்தலைக்கு அதிசயத்தை விளைக்கையே புருஷார்த்தமென்றிருக்கையை விட்டு "பாதநாளும் பணிவோம் நமக்கே நலமாதலில்" என்றும் "தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றும்அநந்யோபேயத்வம் குலையும்படி தனக்குஅதிசயம் தேடத்தொடங்குகையாலும், அநந்யதைவத்வம் குலையும்படி காமன்காலிலே விழுந்தபடியாலும் இவ்வளவு அதிப்ரவ்ருத்தி செய்ததும் பகவத் விஷயத்திலேயுள்ள அளவற்ற அன்பினாலாதலாலும் ப்ரேமபரவசர்க்கு இவையொன்றும் குற்றமன்றென்று கொள்ளவேண்டும்.

**91. ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞானத்தாலேவருமவையெல்லாம் அடிக்கழஞ்சுபெறும்.**

91. நம் ஆழ்வார்கள் செய்தவை என்று எடுத்துக்காட்டினபோதிலும் குற்றம் நற்றமாய்விடுமோ? ஆழ்வார்கள் செய்தவையாகக் கீழ்க்கூறிய செய்திகளெல்லாம் கலக்கத்தாலே வந்தவைதானே; அஜ்ஞாநமடியாக வருமவை ஒன்றும் ஆதரிக்கத்தக்கதன்றே என்னில், அப்படியன்று; 'ஞானம் கனிந்த நலம்" என்கிறபடியே ஞானத்தினுடைய பழுத்த அவஸ்தையாகிய பக்தியின் முதிர்ச்சி

யாலே விளைகிற அவிவேகத்தாலே உண்டாகின்ற ப்ரவ்ருத்திவிசேஷங்களெல்லாம் மிகவும் புகழத்தக்கனவேயாம். [ஊழ்வினையடியாக உண்டாகிற அஜ்ஞாநத்தாலே செய்யப்படும் செய்திகளே இகழத்தக்கனவாம் என்றுணர்க. .... (91)

**92. உபாய பலமாய் உபேயாந்தர்ப்பூதமாயிருக்குமது உபாய ப்ரதிபந்தகமாகாது.**

92. ஆனாலும் இந்த அதிப்ரவ்ருத்தியானது சேதநனிடத்தில் ஒரு ப்ரவ்ருத்தியையும் ஸஹிக்கமாட்டாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்தைத் தடுக்கமாட்டாதோ? என்னில், மாட்டாது. "மயர்வற மதிநல மருளினன்" என்றும், "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனி நங்கண்ணன்" என்றும், இப்படிப்பட்ட அதிப்ரவ்ருத்திக்குக் காரணமான பக்தியை உண்டாக்கினவனும் அதனை வளரச்செய்தவனும் எம்பெருமானேயாகையாலே பக்திபாரவச்யமடியாக வருகிற இந்த அதிப்ரவ்ருத்தியானது ஸித்தோபாயமான அவனுடைய க்ருஷியின் பயனாயிருக்கும்; உபேயத்தைக் கடுகப் பெறவேணுமென்ற விரைவினாலே கண்ணுஞ் சுழலையிட்டு இத்தலை படும் பாடெல்லாம் "நம்மை ஆசைப்பட்டு இப்படிப் படப்பெறுவதே!" என்று அவன் முகம் மலருகைக்கு உறுப்பாகையாலே மடலெடுக்கை முதலான இந்த அதிப்ரவ்ருத்திகள் அவன் முகமலர்த்திக்காகப் பண்ணும் கைங்கரியம்போன்று உபேயத்திலே உள்ளடங்கும்; ஆகையாலே ஸித்தோபாயத்தின் க்ருஷிபலமாய் உபேயத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கிற இந்த அதிப்ரவ்ருத்தியானது ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்தைத் தடுக்கமாட்டாது.

**93. ஸாத்ய ஸமாநம் விளம்பாஸஹமென்றிறே ஸாதநத்துக்கேற்றம்; ஸாத்யப்ராவண்ய மடியாகவிறே ஸாதநத்தில் இழிகிறது.**

93. இன்னமும்; மற்ற உபாயங்களை விட்டிட்டு ஸித்தோபாயத்தைப் பற்றுகிறது ஏதுக்காக? பால்தானே மருந்தாகிறுப்போலே உபேயமானது தானே உபாயமாகையாலே போக்யதையில் உபேயத்தோடு ஒத்திருக்குமென்றும், உபேயத்தைப் பெறுவிக்குமளவில் காலதாமதம் பொறுமல் கடுகப் பெறுவித்துவிடுமென்றுமன்றோ உபாயாந்தரங்களிற் காட்டில் ஸித்தோபாயத்துக்கு ஏற்றம். ஆகையாலே உபேயத்தைக் கடுகப் பெறவேணுமென்ற ப்ராவண்யாதிசயத்தால் கண்ணுஞ்சுழலையிட்டுச் செய்கிற இந்த அதிப்ரவ்ருத்திகள் எம்பெருமான் மேல்விழுந்து காரியம் செய்கைக்கு உடலாகுமேயொழிய அதற்குத் தடையாகமாட்டாது. ... (93)

**94. இவனுக்குப் பிறக்கும் ஆத்மகுணங்களெல்லாவற்றுக்கும் ப்ரதாந ஹேது இந்த ப்ராவண்யம்.**

94. இச்சேதநனுக்கு உண்டாகத்தக்க ஆத்ம குணங்கள் பல உண்டு; அவை உண்டாவதற்கு அநுகூல ஸஹவாஸம், சாஸ்த்ரப் பயிற்சி, ஆசார்யோபதேசம், ஆஹாரசுத்தி முதலானவை காரணமென்று நினைக்கக்கூடும். ஆனால் அவற்றிற் காட்டிலும் கீழ்க்கூறிய ப்ராவண்யாதிசயமே முக்கியமான காரணமாகும் பகவத் விஷயத்தில் ப்ராவண்யம் விஞ்ச விஞ்ச ஆத்மகுணங்கள் கொழுந்துவிடுமென்கை, .... ... ... ... ... (94

**95. "மாற்பால் மனஞ் சுழிப்ப," "பரமாத்மநி யோ ரக்த:" "கண்டு கேட்டுற்றுமோந்து."**

95. "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு" என்றும் "பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோபரமாத்மநி" என்றும் ஒண்டொடியாள் திரு மகளும் நீயுமே நிலாநிற்பக் கண்ட சதிர்கண்டு—கண்டு கேட்டுற்று மோந்து உண்டுழலு மைங்கருவி கண்ட வின்பம் தெரிவரியவளவிலாச் சிற்றின்பம்—ஒழிந் தேன்" என்றும் உள்ள ஸூக்திகள் இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணமாக அநுஸந் திக்கத்தகும். ... .... ... ... ... (95)

**96. ஆத்மகுணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்.**

96. அந்த:கரணத்தை அடக்குகையாகிற சமமும், பஹிரிந்திரியங்களை அடக்குகையாகிற தமமும் ஆத்ம குணங்களெல்லாவற்றினுள்ளும் முக்கியமாம்.

**97. இவை யிரண்டுமுண்டானால் ஆசார்யன் கைபுகுரும்; ஆசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரம் கைபுகுரும்; திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈச்வரன் கைபுகுரும்; ஈச்வரன் கைபுகுந்தவாறே, "வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே" என்கிற படியே ப்ராப்யபூமி கைபுகுரும்.**

**98. ப்ராப்யலாபம் ப்ராபகத்தாலே; ப்ராபகலாபம் திருமந்த்ரத்தாலே: திருமந்த்ரலாபம் ஆசார்யனாலே; ஆசார்யலாபம் ஆத்மகுணத்தாலே.**

97, 98. இந்த சமதமங்கள் இரண்டும் அமையப்பெற்றால் இவ்வாத்ம குணத்தைக்கண்டு உகந்த ஆசார்யன் பெரிய திருமந்த்ரத்தை இவனுக்கு அர்த்தத் தோடே உபதேசிக்கும்படி வசப்படுவன். திருமந்த்ரம் ஆசார்யனுக்கு அதீநமாகை யாலே அவ்வாசார்யன் கைபுகுந்தவாறே திருமந்த்ரம் இவன் நெஞ்சிலே நன்கு பதிந்துவிடும். எம்பெருமான் திருமந்த்ரம் இட்ட வழக்காயிருக்குமவனாகையாலே அத்திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈச்வரன் இவனுக்கு ஸர்வாபீஷ்ட பலப்ரதனும் படி கைபுகுவன். உபய விபூதியும் ஈச்வரனிட்ட வழக்காகையாலே அவன் கைபுகுந்தவாறே ஸ்ரீவைகுண்டம் இவனுக்கு மிகவும் எளிதாய்விடும். ஆகவே, உபேயத்தைப் பெறுவிப்பது உபாயம்; உபாயத்தைப் பெறுவிப்பது திருமந்த்ரம்; திருமந்த்ரத்தைப் பெறுவிப்பவன் ஆசார்யன்; ஆசார்யனைப் பெறுவிப்பது ஆத்ம குணம் என்றதாயிற்று. .... .... ... .... (97, 98)

**99. இதுதான் ஐச்வர்யகாமர்க்கும் உபாஸகர்க்கும் ப்ரபந்நர்க்கும் வேணும்.**

99. இந்த சமதமங்கள் ஐச்வர்யத்தை விரும்புமவர்கட்கும் உபாஸகர் கட்கும் ப்ரபந்நர்கட்கும் வேணும்; "படிமன்னு பல்கலன் பற்றோடறுத்து ஐம்புலன் வென்று" "புன்புலவழி யடைத்து அரக்கிலச்சினைசெய்து, நன் புலவழி திறந்து ஞானநற்சுடர் கொளீஇ," "அடக்கரும் புலன்களைந்தடக்கி ஆசையாமவை, துடக்கறுத்து வந்துநின் தொழிற்கணின்ற வென்னை" என்னுமிப் பாசுரங்கள் மூன்றும் இவ்வர்த்தத்துக்கு க்ரமேண ப்ரமாணம். ... (99)

**100. மூவரிலும் வைத்துக்கொண்டு மிகவும் வேண்டுவது ப்ரபந்நனுக்கு.**

100. இக்குணங்கள் கீழ்க்கூறியபடி மூவர்க்கும் வேணுமேயாகிலும் ப்ரபந்நாதிகாரிக்குத்தான் மிகவும் அதிகமாக வேண்டும். ... ... (100)

**101. மற்றையிருவர்க்கும் நிஷித்தவிஷய நிவ்ருத்தியே யமையும்; ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம்.**

101. சப்தாதி போகத்தில் விருப்பமுள்ளவனான ஐச்வர்யகாமனுக்கும் உபாயாந்தர நிஷ்டனான உபாஸகனுக்கும் சாஸ்த்ரத்தில் மறுக்கப்பட்டுள்ள பரஸ்த்ரீ ஸங்கமாதிகள் மாத்ரம் தவிர்ந்தால் போரும்; அவ்விருவர்களிற் காட்டிலும் நெடுவாசி பெற்றிருக்கிற ப்ரபந்நாதிகாரிக்கோவென்னில் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டிருக்கிற தன்மனைவிப்புணர்ச்சியையும் தவிர்ந்திருப்பது அவர்களிற்காட்டில் ஏற்றம்.

[ப்ரபந்நனுக்கு "அநந்ய போக்யத்வம் என்று ஒரு ஸ்வரூபம். அதாவது எம்பெருமானைத் தவிர்த்து மற்றொன்றையும் போக்யமாகக் கொள்ளாமை. தன் மனைவிப் புணர்ச்சியில் தர்ம புத்தியினாலே ப்ரவர்த்தித்தாலும் அதில் போக்யதா புத்தியானது எவ்வகையினாலாவது வந்து சேர்ந்துவிடுமாகையால் அப்போது அநந்ய போக்யத்வ ஸ்வரூபம் குலைந்துவிடுமென்று "ப்ரபந்நனுக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி தன்னேற்றம்" என்றருளிச் செய்யப்பட்டது. இந்த ப்ரகரணத்திலே "ஆர்வசன பூடணத்தின் ஆழ்பொருளெல்லாமறிவார், ஆரதுசொன்னேரிலனுட்டிப் பார்—ஓரொருவ, ருண்டாகிலத்தனை காணுள்ளமே யெல்லார்க்கு மாண்டாததன் றேவது" என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் ஸ்மரிக்கத்தக்கது.] ... (101)

**102. இதுதான் சிலர்க்கழகாலே பிறக்கும்; சிலர்க்கருளாலே பிறக்கும்; சிலர்க்கு ஆசாரத்தாலே பிறக்கும்.**

102. ஸ்வதாரத்தில் போக்யதா புத்தியால் ப்ரவர்த்திக்கை தவிர்ந்தாலன்றோ தர்ம புத்தியால் ப்ரவர்த்திக்கைக்குப் பரிஹாரம் பண்ணக்கூடும்; நெடுநாளாக வாஸநை பண்ணிவந்த விஷயங்களில் வெறுப்புத்தான் எப்படி பிறக்கக்கூடும்? என்னில்; "பக்திபாரவச்யத்தாலே ப்ரபந்நர்" என்று சொல்லப்பட்டவர்களும் பகவத் தத்வத்தை ஸாக்ஷாத்கரித்தவர்களுமான ஆழ்வார்களுக்கு இவ் விஷய ப்ரவ்ருத்தியின் நிவ்ருத்தியானது எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற வடிவழகில் ஈடுபாட்டாலே பிறக்கும். "ஜ்ஞாநாதிக்யத்தாலே ப்ரபந்நர்" என்று சொல்லப்பட்ட பூர்வாசார்யர்களுக்கு விஷயப்ராவண்யம் அறும்படி எம்பெருமான் பண்ணும் பரம கிருபையாலே நிவர்த்திக்கும். "அஜ்ஞானத்தாலே ப்ரபந்நர்" என்று சொல்லப்பட்ட அஸ்மதாதிகளுக்கு முன்னோருடைய ஆசாரங்களை அநுஸந்திக்க நிவர்த்திக்கும். .... ... .... — (102)

**103. பிறக்கும் க்ரமமென் என்னில்; அழகு அஜ்ஞாநத்தை விளைக்கும்; அருள் அருசியை விளைக்கும்; ஆசாரம் அச்சத்தை விளைக்கும்.**

103. ஆக மூன்று அதிகாரிகளுக்கும் மூன்று ஹேதுக்களாலே விஷயப்ராவண்ய நிவ்ருத்தி பிறக்குமளவில் அது பிறக்கும் விதம் என்னென்னில்; எம்பெரு

மானுடைய வடிவழகில் ஈடுபடுகிற ஆழ்வார்களுக்கு அந்தவடிவழகு சித்தாபஹாரி யாகையாலே விஷயாந்தரத்தை ஒரு சரக்காக அறியாதபடி ஆக்கிவிடும். ஆசார்யர்களுக்கு எம்பெருமானுடைய அருளானது விஷயாந்தரங்களைக் காணும்போது அருவருத்துக் காரித்துமிழ்ந்துபோம்படி பண்ணும். அஸ்மதாதிகளுக்கு முன்னோருடைய ஆசாரத்தின் அநுஸந்தாநமானது—அவர்கள் ஆசரித்தபடி செய்யாவிடில் நமக்கு அநர்த்தமே பலிக்குமென்று விஷயஸ்பர்சத்தில் இழிய நடுங்கும்படி பண்ணும். ... ... .... (103)

104. இவையும் ஊற்றத்தைப்பற்றச் சொல்லுகிறது.

104. இப்படி ஒவ்வொருவர்க்கு ஒரொன்றைக் காரணமாகச் சொல்லுகிறதும் அவ்வவற்றில் அவ்வவர்களுக்குண்டான உறைப்பைப்பற்றச் சொல்லுகிறது.

105. அருசி பிறக்கும்போதைக்கு தோஷதர்சநமபேக்ஷிதமாயிருக்கும்.

106. அது ப்ராதன ஹேதுவன்று. 107. அப்ராப்ததையே ப்ரதாந ஹேது.

105—107. பகவத் விஷயத்தின் வைலக்ஷண்யாதிசயத்தாலே விஷயாந்தரங்களை ஒரு பொருளாகவே அறியாமலிருக்கை கூடும்; ஆப்தரான சிஷ்டர்களுடைய ஆசாரத்தின் அநுஸந்தானத்தாலே நிஷித்த விஷயஸ்பர்சத்திலும் விஹித விஷய ஸ்பர்சத்திலும் அச்சம் விளையக்கூடும்; நெடுநாளாக ஆசைப்பட்டு மேல் விழுந்து போந்த விஷயங்களில் த்வேஷமாகிற அருசி பிறப்பது அரிதன்றோ? அப்படிப்பட்ட அருசியானது எம்பெருமானது அருளாலே பிறக்கவேணும். அப்படி பிறக்கும்போது—போக்யதா புத்தியோடே அணைக்கப்படுகிற ஸ்திரீகளின் சரீரம் தீண்டாவழும்பும் செந்நீரும் சீயுநரம்பும் செறிதசையும் வேண்டாநாற்றமும் மிகுந்திருக்கிறதென்றும், போகந்தான் அல்பமாயும் அநித்யமாயும் துன்பத்தோடு கூடினதாயும் அநர்த்தத்தை விளைவிக்கக்கூடியதாயு மிருக்கிறதென்றும் தோஷங்களைப் பகுத்தறியவேணும். ஆனால் விஷயாந்தரத்தில் அருசி பிறப்பதற்கு இந்த தோஷதர்சனம் முக்கிய காரணமன்று. இதுவும் ஒரு ஹேதுவென்னலாம், பின்னை முக்கியகாரணமேதென்னில்; அநந்ய போக்யத்வமாகிற ஸ்வரூபத்துக்குச் சேராமையே முக்கியமான ஹேதுவாம் ... .... ... (105—107)

108. பகவத் விஷயத்திலிழிகிறதும் குணங்கண்டன்று; ஸ்வரூப ப்ராப்த மென்று.

108. பகவத்விஷயத்தில் குணங்கண்டு இழிகிறப்போலே விரக்திக்கும் தோஷதர்சனமே காரணமானாலோவென்னில்; பகவத்விஷயத்தைப் பற்றுகிறதும் அத்தலையிலுள்ள கல்யாண குணங்களடியாகவன்று; இவ்வாத்மாவுக்கு வகுத்த விஷயமென்னுமத்தாலேயாம். ... ... ... (108)

109. இப்படி கொள்ளாதபோது, குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷய ப்ரவ்ருத்தியும், தோஷாநுஸந்தாநதசையில் ஸம்ஸாரத்தில் ப்ரவ்ருத்தியும்கூடாது.

109. இப்படி கொள்ளாமல் பகவத்விஷய ப்ராவண்யத்துக்கு குண தர்சநமும், விஷயவிரக்திக்கு தோஷதர்சநமுந்தான் காரணமென்று கொண்டால் வரும் கேடு என் என்னில்; பிரிவாற்றாமை கரைபுரண்டு பெருவிடாய்ப்பட்டுத் துடித்து

வருந்தும்போது சடக்கென வந்து முகங்காட்டாமையாலே "பகவத் விஷயம் குண ஹீநம்" என்று சிந்திக்கும்படி நேர்ந்துவிடுகிறது; அத்தசையில் பின்னையும் 'அவனையல்லது அறியேன்' என்று அவன் பக்கலிலே அதிக விருப்பத்தைப் பண்ணும்படியா யிருக்கிறதேயொழிய அடியோடு விட்டிடும்படியாயில்லை; ஆகவே, குணங்கண்டுதான் பகவத்விஷயத்தில் இழிகிறது என்று கொண்டால் கீழ்க் கூறியபடி குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷயத்தை விட்டுவிட வேண்டிவரும்; அப்படி காணாமையாலே பகவத்விஷய ப்ரவ்ருத்திக்கு குணதர்ச னத்தைக் காரணமாகக்கொள்வது சேராது. இவ்வாறுகவே விஷயாந்தரத்தில் அருசிபிறப்பதற்கும் தோஷ தர்சநத்தைக் காரணமாகக்கொள்வது கூடாது; *கொண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறருமாய் க்ருஹக்ஷேத்ராதிகளுமாய் சப்தாதி போகங்களை அநுபவித்திருக்கையாகிற ஸம்ஸாரத்தில் துயர் துன்பம் அல்லல் துக்கம் தளர்வுமயமான தோஷமிகுதியை ப்ரத்யக்ஷமாக அறிந்து அநுஸந்தியா நிற்கச்செய்தேயும்,அந்தஸம்ஸாரத்தில் அபிநிவேசம்விஞ்சுகின்றதே யன்றி ஒழியக்காணோம்; ஆகவே, விஷயாந்தர விரக்திக்கு தோஷதர்சநம் காரண மென்று சொண்டால் கீழ்க்கூறியபடி தோஷதர்சநமுள்ளவிடத்தும் விரக்திபிறக்கக் காணாமையாலே அதனைக் காரணமாகக் கொள்ளக்கூடாது. ப்ராப்தியும் அப்ராப்தியுமே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்குக் காரணமென்று தேறியதாம் (109)

**110. "கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்" "அடியேன் நான் பின்னுமுன் சேவடி யன்றி நயவேன்" என்றுநின்றார்களிறே.**

110. குணஹீநமென்று நினைத்த தசையில் பகவத்விஷய ப்ரவ்ருத்தி எங்கே கண்டிருக்கிறதென்னில்; "கடியன் கொடியன் நெடியமால் உலகங் கொண்டவடியன், அறிவருமேனிமாயத்தன்" என்று—அவன் ஸ்வகார்யபரன், பிறர்நோவு அறியாதவன், ஒருவர்க்குமெட்டாதவன், வஞ்சகன், ஒருவர்க்குமறிய முடியாத தன்மையையுடையவன் என்றிப்படியாக அவனுடைய குணக்கேடுகளைச் சொல்லி, "ஆகிலுங்கொடிய என்னெஞ்ச மவனென்றே கிடக்குமெல்லே" என்று—இப்படியிருந்தாலுகிலும் மிகவும் க்ரூரமான என் நெஞ்சு அவனையல்லது அறியாதே யிராநின்றதீ! என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடியும்; "வேம்பின் புழு வேம்பன்றி யுண்ணாது, அடியேன் நான் பின்னுமுன் சேவடியன்றி நயவேன்" என்று—வேம்புக்கு இட்டுப் பிறந்த புழுவானது அந்த வேம்பையே உண்ப தொழியக் கரும்பைக்கண்டாலும் விரும்பாது; அப்படியே "கள்வா கடல்மல்லைக் கிடந்த கரும்பே!" என்னும்படி பரம போக்யனுன நீதானே வேம்புபோலே விரஸப் பட்டபோதிலும் வகுத்த சேஷியான உனது திருவடிகளையொழிய விரும்பமாட்டேன் என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடியும் நோக்குக. ... (110)

**111. குணக்ருத தாஸ்யத்திலுங்காட்டில் ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்ய மிறே ப்ரதாநம்.**

111. இப்படி பகவத்விஷய ப்ரவ்ருத்திக்கு குணதர்சநம் காரண மன்றென்று அடியோடு மறுத்துவிடலாமா? "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்ய முபாகத:" என்ற இளையபெருமாள் வார்த்தையை நோக்குமிடத்து, பெருமாளிடத்தில்

குணங்களைக் கண்டுதான் இளையபெருமாள் அவர்க்கு ஆட்பட்டார் என்று விளங்குகின்றதே; இதற்குப் போக்கு என்? எனின்; குணங்களுக்குத்தோற்று அடிமையாயிருக்கை யென்கிற விஷயம் உலகத்திலேயே கிடையாதென்று சொல்லவரவில்லை; சேஷத்வத்தைக்கொண்டே நிரூபிக்க வேண்டியதான தன் ஸ்வரூபத்தைப் பார்த்து அடிமையாயிருக்கையாகிற ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யத்திற்காட்டிலும் குணப்ரயுக்தமான தாஸ்யம் தாழ்ந்தது; ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்யமே முக்கியமாகும். ஆனால் இளையபெருமாளுடைய அடிமை தாழ்ந்ததோ என்று சங்கிக்கவேண்டா; பெருமாள் குணங்களிற் சிறந்தவராகையாலே குணப்ரயுக்தமான தாஸ்யமும் தமக்கு அவர் பக்கலிலே உண்டென்னுமிடத்தைச் சொன்னரத்தனை. "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்று—திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாபோலே ராம பக்தியோடே கூடப்பிறந்தவரிறே இளையபெருமாள். ... .... (111)

[குணப்ரயுக்தமான தாஸ்யமானது ஔபாதிகமாகையாலே அப்ரதாநம்; மற்றையது நிருபாதிகமாகையாலே ப்ரதாநம் என்பது ஸாராம்சம்.]

**112. அநஸூயைக்குப் பிராட்டியருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

112 இவ்வர்த்தத்துக்கு ஸம்வாதமாகப் பிராட்டியருளிச் செய்த வார்த்தையுமொன்றுண்டு, அதாவது அத்ரிபகவானுடைய ஆச்ரமத்திலே பெருமாள் எழுந்தருளி மஹர்ஷியை அனுவர்த்தித்திருந்த பின்பு அவருடைய பத்தினியான அநஸூயையைப் பிராட்டி அநுவர்த்தித்திருக்கிற வளவிலே, அவள் பிராட்டியைப் பார்த்து 'உற்றுரையும் செல்வத்தையும் விட்டுப் பெருமாள்பின்னே காட்டுக்கு வந்தவிது தைவயோகத்தாலே உமக்கு நன்றாகக் கூடிற்று; நகரத்திலிருக்கிலுமாம்; காட்டிலிருக்கிலுமாம், நல்லவனாகிலுமாம், தீயவனாகிலுமாம்; பெண்டிர்க்குத் தைவம் பர்த்தாவே கிடீர். நீர் இப்படியே எப்போதும் பெருமாள் விஷயத்தில் அநுகூலித்திரும்' என்று சொல்ல; பிராட்டி வெட்கமடைந்து கவிழ்தலையிட்டிருந்து "எனக்குப் பெருமாள் பக்கல் அநுராகம் ஸ்வரூபமாகவே உண்டாயிருக்கச்செய்தே அவர் தாம் குணங்களிற் சிறந்தவராகையாலே என்னுடைய அநுராகத்தை குண ப்ரயுக்தமாக நினைப்பர் நாட்டார்; எப்போதாவது ஒரு ஸமயம் அவரைக் குணங்களை விட்டுப் பிரித்துக் காட்டக் கூடுமாகில் அப்போது என்னுடைய அநுராகம் ஸ்வரூப ப்ரயுக்தமென்பது நன்கு விளங்கும்; அப்படி ஒரு நொடிப்பொழுதும் காட்ட முடியாதபடி அவர் எப்பொழுதும் ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததியாக இருப்பதால் நான் அவர் பக்கல் இருக்குமிருப்பை அறிவிக்கப் பெறுகின்றிலேன்; அவர் குணஹீநருமாய் விரூபருமாயிருந்தபோதிலும் நான் அவர் பக்கல் இப்படியே காணுமிருப்பது என்றாள் - என்பதாகும். ... ... ... (112)

**113. பகவத்விஷய ப்ரவ்ருத்தி பின்னைச் சேருமோ வென்னில், அதுக்கடி ப்ராவண்யம்; அதுக்கடி ஸம்பந்தம்; அதுதான் ஔபாதிக மன்று; ஸத்தாப்ரயுக்தம்.**

**114. அந்த ஸத்தை ப்ராவண்யகார்யமான அநுபவமில்லாதபோது குலையும்; அது குலையாமைக்காக வருமவையெல்லாம் அவர்ஜநீயங்களுமாய் ப்ராப்தங்களுமாயிருக்கும்; ஆகையாலே பகவத்விஷய ப்ரவ்ருத்தி சேரும்.**

113, 114. இப்படி ஸ்வரூப ப்ரயுக்தமான அடிமையே ப்ரதாநமாகில், சேஷிசெய்தபடி கண்டிருக்குமதொழிய அநந்யோபாயத்வம் முதலிய ஸ்வரூபம் குலையும்படி அவ்விஷயத்தைக் குறித்துப் பண்ணுகிற ஸ்வப்ரவ்ருத்தி கூடுமோ வென்னில்; கூடும். பகவத் விஷயத்தில் ஸ்வப்ரவ்ருத்தி உண்டாவதற்குக் காரணம் அவ்விஷயத்திலுள்ள ப்ராவண்யம்; அதாவது—அளவற்ற அன்பு. அந்த ப்ராவண்யத்துக்குக் காரணம் சேஷசேஷிபாவமாகிற ஸம்பந்தம். அந்த ஸம்பந்தந்தான் குணப்ரயுக்தமாய் வருவதன்று; இவ்வாத்மாவினுடைய ஸத்தையே பிடித்து உள்ளதொன்று. ஆகவே, ஸத்தாப்ரயுக்தம் ஸம்பந்தம்; ஸம்பந்த ப்ரயுக்தம் ப்ராவண்யம் என்றதாயிற்று. அந்த ப்ராவண்யத்தின் காரியம் பகவதநுபவம். அந்த அநுபவமில்லாதபோது ஸத்தையானது க்ஷணகாலமும் நில்லாது, அந்த ஸத்தை அழியாமைக்கு உறுப்பாக வருகிற மடலெடுக்கை முதலான ஸகல ப்ரவ்ருத்திகளும்—பகவதநுபவமொழியத் தரிப்பில்லாமையாலே தவிருவோமென்றாலும் தவிரப்போகாதவையுமாய், எல்லாம் சேஷிக்கு அதிசயத்தை விளைக்குமவையாகையாலே ஸ்வரூப ப்ராப்தங்களுமாயிருக்கும். ஆகையாலே பகவத் விஷயத்தில் ஸ்வப்ரவ்ருத்தி கூடுமென்றதாயிற்று. ... (113, 114)

[எம்பெருமானுக்கும் தனக்கும் ஸத்தையே பிடித்து உள்ள ஸம்பந்தத்தை உணர்ந்து அன்புமீதூர்ந்து அதனால் அவ்வெம்பெருமானை க்ஷணகாலம் அநுபவியாதிருந்தாலும் நீரை விட்டுப் பிரிந்த மீன்போலே ஸத்தை அழியும்படி பரம பக்தி விளையப்பெற்ற உத்துங்காதிகாரி விஷயத்தில் ஸ்வப்ரவ்ருத்தியானது "அத்யந்த பக்தியுக்தாநாம் நசாஸ்த்ரம் நைவசக்ரம:" என்கிற கணக்கிலே அடிக்கழஞ்சு பெறும் என்பது ஸத்ஸம்ப்ரதாய ஸார ஸங்க்ரஹம்.] ... ... *

முதல் ப்ரகரணம் முற்றுப்பெற்றது.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

குறிப்பு;—ஸ்ரீவசனபூஷணத்திற்கு ஆறு ப்ரகரணமாகவோ ஒன்பது ப்ரகரணமாகவோ விச்சேதந்தான் மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தில் காண்பது. அதற்குச் சேரவே தனியன்களும் அவதரித்துள்ளன. அப்படியிருந்தும், நான்கு ப்ரகரணமான விச்சேதம் மூலம் சந்தை சொல்லிக்கொள்வதற்குப் பாங்காக அமைந்ததென்று பெரியார் கூறுவர். ... ... ... *

ஸ்ரீ
ஸ்ரீமல்லோககுரவே நமஃ

# இரண்டாம் ப்ரகரணம்

**115. ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கும் அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ராதன ஹேது. 1**

115- [விஷயாந்தரங்களை விடுவதற்கும் பகவத் விஷயத்தைப் பற்றுவதற்கும் முக்கிய காரணம் இன்னதென்பது கீழே சொல்லப்பட்டது; இந்த ப்ரஸ்தாவத்திலே, உபாயாந்தரங்களை விடுவதற்கும் முக்கிய காரணம் இன்னதென்று சொல்லப்படுகிறது இங்கு:—]ப்ரபத்தி தவிர மற்ற கர்மஜ்ஞான பக்திகளாகிற உபாயங்களுக்கு ‘உபாயாந்தரம்’ என்று பெயர், அவற்றை விடுவதற்குக் காரணம்—அவற்றை அறிவதற்கும் அநுஷ்டிப்பதற்கும் உறுப்பான ஜ்ஞான சக்திகளில்லாமையன்று; எம்பெருமானுக்கு மிகவும் பரதந்த்ரமாயிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னு மதுவே முக்கிய காரணம். [அதாவது:—உபாயாந்தரங்களை ஸ்வரூப விருத்தமென்கிற காரணத்தாலே விடுமத்தனையொழிய ஜ்ஞாந சக்திகளில்லாமையாகிற காரணத்தாலே விடக்கடவதல்ல; அப்படி விட்டால் ஒருகால் ஜ்ஞாந சக்திகளுண்டாகில் அவ்வுபாயாந்தரங்களைப் பற்ற வேண்டிவரும்; ஸ்வரூப விரோதமென்று விட்டாலன்றோ மறுபடியும் எப்போதும் பற்றமுடியாதொழிவது.] ... 115

**116. ப்ராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம். 2**

116. இப்படி உபாயாந்தரங்களை விரோதியென்று தள்ளிவிடலாமோ? அவையும் மோக்ஷஸாதநமாயன்றோ உள்ளன; பின்னை அவை ஆர்க்கு உபாயமென்னில், தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் தன் முயற்சியைக் கொஞ்சமும் ஸஹிக்கமாட்டாத ஸ்வரூபத்தை உள்ளபடி அறியப்பெறாதவர்களுக்கு அவை உபாயமாயிருக்கும்.

**117. ஜ்ஞாநிகளுக்கு அபாயம். 3**

**118. அபாயமாய்த்தது ஸ்வரூப நாசகமாகையாலே. 4**

117, 118. ஆனால் ஞானிகளுக்கு இவை எப்படி யிருக்குமென்னில்; ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்த ஞானிகளுக்கு இவை அபாயமாயேயிருக்கும். ஞானிகளுக்கு இவை அபாயமாவானேன்? என்னில்; அத்யந்த பாரதந்த்ரியமாகிற ஸ்வரூபத்துக்கு—தன் முயற்சி ரூபமான உபாயாந்தரம் கெடுதியை விளைக்குமதாகையாலே அபாயமென்னக் குறையில்லை. ... ... (117, 118)

**119. “நெறிகாட்டி நீக்குதியோ” என்றுநின்றதிறே. 5**

119. “நெறிகாட்டி நீக்குதியோ?” என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரம் இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணமாகும்; “நெறிகாட்டி”—உன்னையொழிய வேறொரு உபாயத்தைக்காட்டி, “நின்பால் நீக்குதியோ”—உன் பக்கலில் நின்றும் அகற்றப் பார்க்கிறாயோ? என்கையாலே உபாயாந்தரம் அபாயமென்பது ஸித்தம். [நீக்குகையாவது—பரதந்த்ரமான வஸ்துவை ஸ்வதந்த்ரச் செயலாகிய உபாயாநுஷ்டானத்திலே மூட்டித் தனக்கு அசலாக்குகை யென்று கருத்து.) ... ... 119

**120. "வர்த்ததே மே மஹத் பயம்" என்கையாலே பயஜநகம்; "மா சுச:" என்கையாலே சோக ஜநகம். 6**

120. "காலேஷ்வபிச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாச்யுத, சரீரேச கதௌ சாபி வர்த்ததே மே மஹத்பயம்" (ஜிதந்தா) என்று உபாயாந்தரங்களை அநுஷ்டிப்பதற்கு உரிய காலம், தேசம், தேஹம் இவற்றின் விஷயமாகவும், அவ்வுபாயாந்தர விஷயமாகவும் எனக்கு அச்சம் அதிகமாயிராநின்றது என்கையாலே ஸ்வரூப விரோதியான உபாயாந்தரம் ஞானிகளுக்கு அச்சத்தை விளைக்கக்கடவதாயிருக்கும். இன்னமும் கீதையிலே கண்ணபிரான் அர்ஜுநனுக்கு உபாயாந்தரங்களை உபதேசிக்க அவற்றைக்கேட்ட அர்ஜுநனுக்கு மிக வருத்தமுண்டாக, அதனைக்கண்ட கண்ணபிரான் (சரமச்லோகத்தாலே) ஸ்வரூபத்துக்கு அநுரூபமான உபாயத்தை உபதேசித்து "மாசுச:—துக்கப்படாதே" என்று வருத்தத்தைத் தணித்தருளக் காண்கையாலே இவ்வுபாயாந்தரம் ஞானிகளுக்கு வருத்தத்தைப் பிறப்பிக்குமவையுமாம். .... (120)

**121. இப்படி கொள்ளாதபோது ஏதத்ப்ரவ்ருத்தியில் ப்ராயச்சித்தவிதி கூடாது. 7**

121. கீழ்ச்சொன்னபடியே உபாயாந்தரத்தை ஸ்வரூபநாசகமென்று கொள்ளாவிடில், "அபாயஸம்ப்லவே ஸத்ய: ப்ராயச்சித்தம் ஸமாசரேத்" இத்யாதி லக்ஷ்மீதந்த்ர வசநங்களாலே ப்ரபந்நனானவனுக்கு அநவதாநத்தாலே உபாயாந்தரத்தில் ப்ரவ்ருத்தி வந்துவிட்டால் (முன் செய்த ப்ரபத்தியை ஸ்மரிக்கையாகிற) புந:ப்ரபத்தியை ப்ராயச்சித்தமாக விதித்திருப்பதுகூடாதொழியும். [ஸுராபாநத்துக்கு இன்னது ப்ராயச்சித்தமென்று விதிக்கப்பட்டிருந்தால் ஸுராபாநம் விருத்தமென்று விளங்குவதுபோல், உபாயாந்தர ப்ரவ்ருத்திக்கு இன்னது பிராயச்சித்தமென்று விதிக்கப்பட்டிருக்கும்போது உபாயாந்தரம் ஸ்வரூபநாசகம் என்று ஏன் விளங்காதொழியும்?] .... .... . (121)

**122. திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிக்கும்படி—மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்த ஸலிலம்போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம். 8**

122. இப்படி ஸ்வரூபநாசகமான உபாயாந்தரம் மிகவும் நிஷித்தமென்னுமிடத்துக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச் செய்ததொரு பாசுரமுமுண்டு:—அதாவது "மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலம் போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்" என்பதாம். இதன் கருத்து:—தன்னோடு ஸ்வல்ப ஸம்பந்தமுடைய வஸ்துக்களையும் தன்னைப்போலே நிஷித்தமாக்கக் கூடியது ஒரு மத்யபிந்து; தீர்த்த ஜலமானது ஸ்வத: பரிசுத்தம்; கெட்டிப் பொன்னாலாகிய ஒரு குடத்தில் உள்ள அந்தத் தீர்த்த ஜலத்தின் தூய்மை சொல்லவே வேண்டா. இப்படி பரமபாவநமாகிய தீர்த்த ஜலமானது கீழ்க்கூறிய ஒரு மத்யபிந்துவோடே சேர்ந்தாற்போலாயிற்று அஹங்காரத்தோடு கூடிய உபாயாந்தரம். உபமேயத்தில் மத்ய பிந்துஸ்தானத்தில் அஹங்காரம்; பொற்குடஸ்தாநத்தில் ஆத்ம வஸ்து; தீர்த்தஜல ஸ்தாநத்தில் பக்தி. ஆத்மா உணர்முழு நலமாதலாலும் எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷமாதலாலும் பரம பரிசுத்தமாயிருப்பதால்

பொற்குடத்தோடு ஒக்கும். அவ்வாத்மாவினிடத்திலுள்ள பக்தியும் எம்பெருமானையே பற்றினதாகையாலே பரிசுத்தமாதலால் தீர்த்த ஜலத்தோடு ஒக்கும். பொற்குடத் தீர்த்தத்தில் மத்யபிந்து கலசாதிருந்தால் போக்யமேயாயிருக்கும். அப்படியே இந்த பக்தியிலும் அஹங்காரம் கலசாதிருந்தால் ஒரு குறையில்லை. அது கலசியே தீருமே. மதுராமிச்ரமான என்னுதே மதிராபிந்து மிச்ரமானவென்ற நுட்பமறிக. ... ... ... ... ... (122)

**123. ரத்நத்துக்குப் பலகறைபோலேயும் ராஜ்யத்துக்கு எலுமிச்சம்பழம் போலேயும் பலத்துக்கு ஸத்ருசமன்று. 9**

123. [இன்னமும் பலத்துக்குத் தகுதியாயிராமை என்கிற தூஷணமும் இதற்கு உண்டு] த்வீபாந்தரத்திலே சிலர் பலகறையை ஆபரணமாகப் பூண்கையாலே பலகறையைக் கொடுத்தவர்களுக்கு ரத்நத்தைக் கொடுப்பார்கள்; உதாரரான அரசர்கள் ராஜ்யம் வேண்டி வந்து ஓர் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்தவனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பர்கள். இப்படி கொடுப்பார்களென்றால் விலையுயர்ந்த ரத்நத்துக்கும் மிகப்பெருஞ் செல்வமான ராஜ்யத்துக்கும் பலகறையும் எலுமிச்சம் பழமும் நேரான ஸாதனமாகமாட்டா; அதுபோல, பக்திசபலனாய்ப் பரமோதாரனான எம்பெருமான் இச்சேதநன் பக்கல் பக்திமாத்திரமே பற்றாசாகப் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைத் தந்தருளினாலும் இந்த பக்தியானது பலத்துக்கு ஸத்ருசமான ஸாதநமல்லவாம். ... ... ... ... (123)

**124. தான் தரித்ரனாகையாலே தனக்குக் கொடுக்கலாவதொன்றில்லை. 10**

124. ஆனால் பலத்துக்கு ஸத்ருசமல்லாத பலகறையையும் எலுமிச்சம் பழத்தையும் உபஹாரமாகக்கொடுத்து ரத்நத்தையும் ராஜ்யத்தையும் பெறுகிறவர்கள்தான் பெறுகிறபடி என்? இங்கும் அதுபோலே யாகிறதென்னில், அப்படி சொல்லவொண்ணாது; த்ருஷ்டாந்தஸ்தலத்தில் தானும் தனக்குரியனாய் தனக்கென்ன ஒருபலகறையும் எலுமிச்சம் பழமும் உண்டாகையாலே கொடுத்து வாங்கிக் கொள்ளலாம்; இங்கு அப்படியின்றியே "யானே நீ என்னுடைமையும் நீயே" (திருவா. 2-9-9) என்றபடி தானும் தன்னுடைமையுமாகிற இரண்டும் ஈச்வராதீனமாகையாலே தனக்கென்ன ஒன்றுமில்லாத தரித்ரனாகையாலே பேற்றுக்கு உறுப்பாக அவன் விஷயத்தில் தனக்கு ஸமர்ப்பிக்கக்கூடியது ஒன்றுமில்லை. .... (124)

**125. அவன் தந்தத்தைக் கொடுக்குமிடத்திலே, அடைவிலே கொடுக்கில் அநுபாயமாம்; அடைவுகெடக் கொடுக்கில் களவு வெளிப்படும். 11**

125. சௌளத்தில் பிதாவுக்குப் புத்திரன் தக்ஷிணை கொடுப்பதுபோல், எம்பெருமான் கொடுத்ததையே அவனுக்குக் கொடுத்தாலோ வென்னில்; அப்படி அவன் கொடுத்ததுதன்னையே கொடுக்குமிடத்தில் "இது எம்பெருமானுடையது" என்னும் நினைவாலே ஸமர்ப்பித்தால் அவனுடையதை அவனுக்கே கொடுத்த வித்தனையொழிய தான் ஒன்று கொடுத்ததாகாமையாலே அது பேற்றுக்கு ஸாதநமாகமாட்டாது. அன்றி, "இது நம்முடையது" என்னும் நினைவாலே ஸமர்ப்பித்தால் எம்பெருமானுடைய பொருளைக் களவுசெய்தமை விளங்கும். [அழகிய மணவாளன் திருமார்பிலிருக்கிற "ராஜமஹேந்த்ரன்படி" என்கிற திருவாபரணத்தை

ரஹஸ்யத்திலே களவுசெய்து ஸதஸ்ஸிலே "பெருமாளுக்கு இஃது அடியேனுடைய ஸமர்ப்பணை" என்று கொணர்ந்து கொடுக்குமாபோலே யாகுமன்றே இவன் கொடுப்பது,] .... ... ... ... .... (125)

**126. பர்த்ருபோகத்தை வயிறு வளர்க்கைக்கு உறுப்பாக்குமாபோலே, இருவர்க்கு மவத்யம் 12**

126. மனைவியானவள் தன் கணவனோடே கலவி செய்கையை ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொள்ளாமல் வயிறு வளர்க்கைக்கு உறுப்பாக்கினால் (அதாவது) கணவனோடே கலவிசெய்து விடிவோறே கைக்கூலி தரவேணுமென்று வளைத்தால், தன்னை மனைவியாக விரும்பின கணவனுக்கும் அவனுடைய மனைவியென்று பேரிட்டிருக்கிற தனக்கும் கொத்தையாகிறப் போலே, எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தை அநுபவிப்பதனால் விளைந்த போகரூபையான பக்தியை மோக்ஷத்துக்கு ஸாதநமாக்குமளவில் தன்னைச் சேஷபூதனாக விரும்பித் தன்னோடே கலந்து பரிமாறின எம்பெருமானுக்கும் அவனுடைய அடியானென்று பேரிட்டிருக்கிற தனக்கும் கொத்தையா யொழியும். ["ராத்ரி பர்த்தாவோடே ஸம்ச்லேஷித்து விடிவோறே "கைக்கூலி தரவேணும்" என்று வளைக்குமாபோலே யாய்த்து பக்தியை உபாயமாகக்கொள்ளுகை" என்றிறே பிள்ளானுமருளிச்செய்தது.]

**127. வேதாந்தங்கள் உபாயமாக விதிக்கிறபடியென் என்னில்; 13**

**128. ஔஷதஸேவை பண்ணாதவர்களுக்கு அபிமத வஸ்துக்களிலே அத்தைக் கலசியிடுவாரைப்போலே ஈச்வரனைக் கலந்து விதிக்கிறவித்தனை. 14**

127, 128. இப்படி ஸ்வரூப விரோதம் முதலிய குற்றங்கள் நிரம்பின இதனை ஹிதாநுசாஸநம் பண்ணுகிற வேதாந்தங்கள் "ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" இத்யாதிகளாலே இச்சேதநனுக்கு மோக்ஷோபாயமாக விதிக்கிறதற்குக் காரணமென் என்னில்; மிகக் கொடிய நோய் பிடித்துத் திரியாநிற்கச்செய்தே அந்நோயை விரைவில் போக்கவல்ல நல்ல மருந்தை உண்ணச் சொன்னால் அதுக்கு இசையாத சிறுவர் முதலானவர்கட்கு அவர்கள் விரும்பிப் பற்றுகிற மதுர பதார்த்தங்களிலே அந்த மருந்தைக் கலசி இடுகிற வத்ஸலரான தாய்மார் முதலானவரைப்போல், சீக்ரமாக ஸம்ஸார வியாதியைத் தீர்க்கும் ஸித்தோபாயமாகிற *நச்சுமாமருந்தை ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி பூர்வகமாக ஸேவிக்கச் சொல்லி முதலிலே உபதேசித்தால், நெடுநாளாய் வருகிற ஸ்வயத்ந வாஸநையாலே அதுக்கு இசையாத சேதநரையும் விடமாட்டாமையாலே அவர்கட்கு அபிமதமான ஸ்வயத்ந ரூபமாயிருக்கிற உபாஸநத்திலே அதற்கு அங்கமாக ஸித்தோபாயமான எம்பெருமானைக் கலந்து அப்படிப்பட்ட உபாஸநத்தை அவர்களுக்கு மோக்ஷோபாயமாக விதிக்கிற வித்தனை. (த்ருஷ்டாந்தத்தில் மருந்துக்கு மேல்பூச்சாயிருக்கிற மதுரபதார்த்தமானது நோயைப் போக்கக்கூடிய தன்றியே அதனுட் கலந்து ப்ரயோகித்த மருந்தே வ்யாதியை ஒழிக்குமாபோலே; தார்ஷ்டாந்திகத்திலும் உபாஸநம் உபாயமன்று, அத்துடன் கலசின எம்பெருமானே உபாயமென்பது விளங்கும். மருந்தை மற்றொன்றோடு கலசாமல் அப்படியே

உட்கொண்டால் நோயைக் கடுகப் போக்கும்; அன்றி மதுரபதார்த்தத்திலே கலசி உண்டால் பலம் விளம்பிக்கும்; அதுபோலவே ஈச்வரனை உபாஸநத்தோடு கலசாமல் பற்றினால் விளம்பமின்றிப் பேறு பெறலாம். உபாஸநமிச்ரமாகப் பற்றும் போது பலன் விளம்பிக்கும் என்பதும் இதன் கருத்து.) ... (127, 128)

**129. இத்தை ப்ரவர்த்திப்பித்தது பரஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காக.** 15

**130. இதுதான் பூர்வவிஹிதஹிம்ஸைபோலே; விதிநிஷேதங்களிரண்டுக்கும் குறையில்லை.** 16

**131 அத்தை சாஸ்த்ர விச்வாஸத்துக்காக விதித்தது. இத்தை ஸ்வரூப விச்வாஸத்துக்காக விதித்தது.** 17

129—131. பெற்ற தாயானவள் குருடர், செவிடர், கூனர், குறளர் முதலிய குறைமக்களோடு நிறைமக்களோடு வாசியற எல்லா மக்களிடத்திலும் ஒத்த வாத்ஸல்ய முடையவளா யிருக்குமாபோலே சாஸ்த்ரமும் ‘ **த்ரைகுண்ய விஷயா வேதா:**” என்கிறபடியே தாமஸரோடு ராஜஸரோடு ஸாத்விகரோடு வாசியற அவர்கள் தீயவழியிற் புகுந்து நசிக்கும்படி விடமாட்டாதாகையாலே சேதநர் திறத்தில் பல்லாயிரம் மாதாபிதாக்களிற்காட்டிலும் சிறந்த வாத்ஸல்யமுடையதாய் அவ்வவர்களுடைய குணங்கட்குத் தக்கபடி புருஷார்த்தங்களையும் அவற்றின் ஸாதனங்களையு முபதேசித்து, கொள்கொம்பிலே ஏற்றுகைக்குச் சுள்ளிக்கால் நாட்டுவாரைப் போலே இவ்வோ முகங்களாலே தன்னுடைய பரம தாத்பரியமான தொரு அம்சத்திலே ஏற்றுகைக்காக ப்ரவர்த்திப்பிக்கிறதாகையாலே **ச்யேநவிதி** தொடங்கி ப்ரபத்தியளவும் வர, சேதநர்களுடைய அதிகாரத்துக்கு ஏற்ப மேல் மேல் புருஷார்த்த ஸாதநங்களை ப்ரவர்த்திப்பித்துக் கீழ்க்கீழ்ப் புருஷார்த்த ஸாதநங்களை நிவர்த்திப்பிக்கக் கடவதாயிருக்கும். ஆகையாலே இவ்வுபாஸநத்தை ப்ரவர்த்திப் பித்தது ச்யேநவிதிக்கு மேலாக விதிக்கப்பட்ட அக்நீஷோமீய பசு ஹிம்ஸையை நிவர்த்திப்பிக்கைக்காகவாம். இதன் கருத்து:—சாஸ்த்ரத்தில் “**ச்யேநேநாபிசரந் யஜேத**”—[“சத்ருவைக் கொல்லக் கருதியவன் ச்யேந யாகம் என்கிற ஒரு யாகத்தைச் செய்யவேண்டியது”] என்று முதலில் விதிக்கப்பட்டது. பின்பு மற்றோரிடத்தில் உபநிஷத் பாகத்தில் “**ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:**” இத்யாதிக ளாலே மோக்ஷார்த்தியைக் குறித்துப் பரமாத்மாவின உபாஸநம் விதிக்கப்பட்டது.” பின்பு மற்றோரிடத்தில் “**முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே**” இத்யாதிகளாலே அந்த மோக்ஷார்த்தியைக் குறித்தே ப்ரபத்தியானது விதிக்கப்பட்டது. இப்படி படிப்படியாக சாஸ்த்ரம் பலவற்றையும் விதித்தது எதற்காக? என்னில்; சாஸ்த்ரத் தில் விச்வாஸமில்லாத நாஸ்திகனையும ஆஸ்திகனாக்குவதற்காக; முதலில் ச்யேந யாகம் முதலிய அபிசார ஸாதநங்களை விதித்தது. நாஸ்திகனாயிருப்பவன் சத்ரு ஹிம்ஸைக்காக ச்யேநயாகத்தைச் செய்து அதனால் தன் இஷ்டம் நிறைவேறக் கண்டால் “சாஸ்த்ரம் சொல்வதெல்லாம் இங்ஙனமே உண்மையாகத்தானிருக்கும்; இனி நாம் சாஸ்த்ரத்தை நம்பக்கடவோம்” என்று ஆஸ்திகனாவதற்கு ஒரு வழியா யிருக்கும். தன்னை ஸ்வதந்த்ரனென்றும் பிறர்க்கு உரியவன் என்றும் மாறுபாடாகக்

கருதி மயங்கிக்கிடந்த சேதநனைத் திருத்தி வழிப்படுத்துவதற்காக உபாஸநத்தை விதித்தது. உபாஸநத்தில் ஊன்றவே 'ஸ்வாதந்த்ரியமும் அந்ய சேஷத்வமும் வந்தேறி; பகவச் சேஷத்வமொன்றே நிலைநின்ற வேஷம்'' என்ற ஸ்வருப விச்வாஸம் பிறக்கும். ஆகையாலே ஒவ்வொரு அதிகாரியைப்பற்ற ஒவ்வொரு விதி அவதரித்தது. தாமஸரான நாஸ்திகர்க்காக விதிக்கப்பட்ட அபிசாரகர்மம் —ஆஸ்திகராயும் காரீரீஷ்டி முதலிய காம்ய கர்மங்களில் ப்ரவர்த்திக்கக் கடவரு மான ராஜஸரைப்பற்ற நிஷேதிக்கப்படுகிறுப்போலே உபாஸநமும் ஸ்வாதந்திரியத் தையும் அந்ய சேஷத்வத்தையும் நிவர்த்தித்துக்கொண்டு பகவச்சேஷத்வத்திலே ஊன்றுகைக்கு யோக்யரான ஸாத்விகரைப்பற்ற விதிக்கப்பட்டு; பாரதந்திரிய ஜ்ஞாநம் பிறந்து எம்பெருமானொருவனையே உபாயமாக அத்யவஸிப்பதற்கு உரிய ரான பரம ஸத்வ நிஷ்டரைப்பற்ற நிஷேதிக்கப்படவும் குறையில்லை. ஆக இவ்வளவால் தேறினது யாதெனில்; சேதநர்கள் தாமஸர், ராஜஸர், ஸாத்விகர், பரமஸாத்விகர் என்றிப்படி பலவகைப்பட்டிருப்பர்கள். இப்படிப்பட்டவர்களெல் லார்க்கும் சாஸ்த்ரம் பொதுவாகையாலே தாமஸர்க்காக அபிசார கருமங்களை விதித்தது. ராஜஸர்க்காக காரீரீஷ்டி முதலியவற்றை விதித்தது; ஸாத்விகர்க்காக உபாஸநத்தை விதித்தது; பரமஸாத்விகர்க்காக ப்ரபத்தியை விதித்தது; தாமஸ ராஜஸர்களுக்கு விதிக்கப்பட்ட காம்யகர்மம் ஸாத்விகர்க்கு விலக்காகிறுப்போலே அந்த ஸாத்விகர்க்கு விதிக்கப்பட்ட உபாஸநம் பரம ஸாத்விகர்க்கு விலக்காகு மென்றதாயிற்று. எனவே, உபாஸநம் சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறதென்ற காரணத்தினாலேயே அது ஸ்வரூபத்துக்குச் சேர்ந்ததாய் விடமாட்டாதென்க. (131)

**132. அது தோல்புரையே போம்; இது மர்மஸ்பர்சி.** 18

32. இப்படி ஒவ்வொரு விச்வாஸத்துக்காக விதித்து நிஷேதிக்கப் பட்டமை ஒத்திருந்தாலும் மோக்ஷத்தையே பலமாகவுடையதான இவ்வுபாஸநத்தை விடாமல் பற்றிநின்றால் அபிசார கருமம்போலே இது கொடியதன்றே என்னில்; பரஹிம்ஸா ரூபமான அந்த அபிசார கருமம் தேஹாத்மாபிமாநியினுடைய செயலாய் வர்ணாச்ரமாதி விசிஷ்ட வேஷத்துக்கு விரோதியாய் அத்தால் வரும் பலமும் சில துக்காநுபவம் மாத்திரமேயாய் மேலெழப் போய்விடும். அஹங்கார கர்ப்பமான இந்த உபாஸநம் ஆத்மஜ்ஞானம் பிறந்தவனுடைய செயலாய், எம்பெருமானுக்கு அதிசயத்தை விளைக்கையாகிற சேஷத்வரூபமான நிஷ்க்ருஷ்ட வேஷத்துக்கு விரோதியாய், எம்பெருமானொருவனுக்கே பரதந்த்ரமாயிருக்கையாகிற ஸ்வரூபத் துக்கு நாசகமாயிருக்கும். ஆகையாலே தோல்புரையே போமதான அபிசார கர்மத்திற்காட்டிலும் மர்மஸ்பர்சியான உபாஸநமே கொடியதெனக்கொள்க. (132)

**133. இதுதான் கர்மஸாத்யமாகையாலே துஷ்கரமுமாயிருக்கும்.** 19

33. இவ்வளவேயன்று; இப்படி ஸ்ரூப விரோதியாயிருக்கிற இவ்வுபாஸனம் மானது உடலை மிகவும் வருத்தப்படுத்திச் செய்யவேண்டிய கருமங்களை அநுட்டித்து அதனால் ஸாதிக்கப்படுமதாகையாலே அசக்தனான இவனால் செய்து தலைக்கட்டவும் முடியாததாயிருக்கும். ... .... ... .... (133)

**134. ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை. 20**

134. உபாயாந்தரங்கட்கு ஸ்வரூபநாசகத்வம், அபாயத்வம், பயஜநகத்வம், சோகஜநகத்வம், பலவிஸத்ருசத்வம், துஷ்கரத்வம் முதலிய குற்றங்கள் சொல்லப்பட்டாற்போல, ப்ரபத்திக்கும் சொல்லக்கூடிய குற்றமொன்று மில்லையோ வென்னில்; இதின் பக்கல் அப்படிப்பட்ட குற்றமொன்றுமில்லை. (ஆனால் ஒரு குற்றமுண்டு; அதாவது உண்மையில் இதுதனக்கு உபாயத்வம் இல்லாமலிருக்கச் செய்தே மேலெழுந்த தோற்றத்திலே உபாயத்வ ப்ரதிபத்திக்கு அர்ஹமாய்க் கொண்டு "ப்ரபத்த்யுபாயம் என்று வ்யவஹரிக்கலாம்படியிருக்கிற குற்றமொன்றே யுள்ளது.) .... ... ... .... ... (134)

**135. ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநகார்ய மாகையாலே, ஸ்வரூபத்துக்கு உசிதமுமாய், "சிற்றவேண்டா" என்கிறபடியே நிவ்ருத்தி ஸாத்யமாகையாலே ஸுகரமுமாயிருக்கும். 21**

135. ப்ரபத்திக்கு இக்குற்றங்கள் இல்லாமைக்குக் காரணமென்? என்னில் இப்பிரபத்தியானது—திருவஷ்டாக்ஷரியில் நடுப்பதத்திற் சொல்லுகிறபடியே ஆத்மாவினுடைய உண்மையான வேஷமாகிய அத்யந்த பாரதந்திரியத்தை உணருகையால் வந்ததாகையாலே அந்த பாரதந்திரிய ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயும் "சிற்றவேண்டா சிந்திப்பேயமையும்" (திரு. 9-1-7) என்ற ஆழ்வார்பாசுரத்தின்படி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாலே ஸாதிக்கப்படுமதாகையாலே எளிதாகச் செய்யக் கூடியதாயுமிருக்கும். (ஆக ஸ்வரூபாநு ரூபத்வம், ஸுகரத்வம் என்ற இவ்விரண்டு குணங்களுள்ளமை கூறியவித்தால், உபாயாந்தரங்களுக்குள்ள தோஷங்களொன்றும் இதற்குக் கூடாமையை உய்த்துணர்க) ... ... (135)

**136 பூர்ண விஷயமாகையாலே பெருமைக்கீடாகப் பச்சையிட வொண்ணாது. 22**

136. இப்படி அவனே உபாயமென்று துணிந்து தன் முயற்சியில் நின்றும் ஒழிந்துவிடக்கூடுமோ? அவனுடைய உகப்புக்காக இவன் சில பச்சையிட வேண்டாவோ? என்னில்; உலகில் பச்சையிடுமவர்கள் அவ்வவ் விஷயங்களின் யோக்யதைக்கு ஈடாகப் பச்சையிடுவது தகும்; இங்கும் பச்சையிடப் பார்த்தால் அப்படி இடவேணும்; அவன் * குறையொன்றுமில்லாத கோவிந்தனாகையாலே அவனுடைய மேன்மைக்கு ஈடாக இவனாலொரு பச்சையிட முடியாது. (136

**137. ஆபிமுக்ய ஸூசகமாத்ரத்திலே ஸந்தோஷம் விளையும். 23**

137. ஆனால் அவனுக்கு இவன் விஷயத்தில் ஸந்தோஷம் எங்ஙனே விளையும்? என்னில்; நெடுநாளாக *யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை யேறிட்டுக் கொண்டு தன்பக்கல் பராங்முகனாய்க் கழிந்த இவன் அந்த நிலைமாறித் தன்பக்கல் அபிமுகனானமைக்கு ஸூசகமானதொரு வியாபாரம் செய்யப்பெற்றவளவிலே "இத்தனை காலம் அகன்றுபோன இவன் இன்று அபிமுகனாகப் பெறுவதே!" என்று அவன் திருவுள்ளம் மிகவும் உகக்கும். ... ... ... (137)

**138. பூர்த்தி கைவாங்காதே மேல்விழுகைக்கு ஹேது வித்தனை. 24**

138. அவன் அப்படியிருந்தாலும் அவ்வெம்பெருமானுடைய அவாப்த ஸமஸ்த காமத்வமடியாக உள்ள பரிபூர்த்தியைப் பார்த்தால் "இப்படி பரிபூர்ண

ஞனவனை அகிஞ்சநரான நாம் உகப்பித்து அணுகுவது எங்ஙனேயாம்!" என்று இவன் கைவாங்கும்படியாயிராதோ வென்னில்; இராது. "நாம் இட்டதுகொண்டு திருப்தியடையவேண்டாதபடி ஸ்வதஃ பரிபூர்ணனுகையாலே "இவன் இவ்வளவு கொடுத்தான். அவன் அவ்வளவு கொடுத்தான்" என்று கணக்குப் பாராமல் நாம் இட்ட அளவே கொண்டு ஸந்தோஷிப்பன்" என்று மேல்விழுந்து பற்றுகைக்கு உடலாமத்தனை. .... ... ... .... ... (*)

(138.) [இந்த ஸூத்ரத்துக்கு மற்றொருபடியாகவும் பொருள் கூறலாம்:— அதாவது, அவ்வெம்பெருமானுடைய பரிபூர்த்தியானது அவனை இப்படி ஸந்தோஷிக்க வொட்டுமோ? உபேக்ஷித்துக் கைவாங்கப்பண்ணுதோவென்னில்; பண்ணுது; அவனுடைய பூர்த்தியானது "இவன் நமக்குப் பச்சையிட்டிலன்" என்று அநாதரித்து அங்கீகாரத்தில் நின்றும் கைவாங்காதே "ஆபிமுக்க்யஸூசநமாத்ரத்துக்கு மேற்பட நமக்கிவன் செய்ய வேண்டுவதுண்டோ?" என்று விரும்பிக் கைக்கொள்ளுகைக்கு உடலாமித்தனை யென்கை. முன் யோஜநையில் "கைவாங்காதே மேல்விழுகைக்கு ஹேதுவித்தனை" என்ற மூலஸூக்திக்கு—ஈச்வரன் பக்கல் சேதநன் மேல்விழுகைக்கு என்று கருத்து. பிந்தின யோஜநையில்—சேதநன் பக்கல் ஈச்வரன் மேல்விழுகைக்கு என்று கருத்து] ... ... (138)

139. "பத்ரம் புஷ்பம்" "அந்யத் பூர்ணுத்" "புரிவதுவும் புகை பூவே." 25

139. இப்படி எம்பெருமான் அல்பஸந்துஷ்டன் என்பதற்கு ப்ரமாணமுண்டோவென்னில்; "பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மநஃ" என்று பகவத்கீதையிலே அவன்தானே அருளிச்செய்திருப்பது காண்க. இலையையோ, பூவையோ, பலத்தையோ, ஜலத்தையோ யாவனொருவன் எனக்கு பக்தியாலே தருகிருன், அநந்ய ப்ரயோஜநத்வமாகிற சுத்தியோடே கூடின மநஸ்ஸையுடையவனுனவனுடைய அப்படிப்பட்ட பக்தியாலே தரப்பட்ட அத்தை அவாப்த ஸமஸ்த காமனுன நான் வ்யாமோஹத்தாலே கலங்கி அடைவுகெட விநியோகம் கொள்ளுவேன்—(பழத்தையும், ஜலத்தையும், "அச்நாமி—உண்கிறேன்" என்னலாம்; இலையையும் பூவையுங்கூட உண்கிறேன் என்றபடியால் வ்யாமோஹாதிசயம் ஸூசிதமாகிறது) என்பது இதன் பொருள். அன்றியும், "அந்யத் பூர்ணுதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத், அந்யத் குசலஸம்ப்ரச்நாத் நசேச்சதி ஜநார்தநஃ" என்று மஹாபாரதத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது கண்ணபிரான் தூது எழுந்தருளுகிறபோது த்ருதராஷ்ட்ரனுனவன் "பாண்டவ பக்ஷபாதியாயிருக்கிற கண்ணன் வருகிருன்; அவனுக்குச் சில நாட்டையும் பொன்னையும் கொடுத்து ஸ்வாதீநப்படுத்திக்கொள்ளுவோம்" என்றாற்போலே சில வார்த்தைகளைச் சொல்ல, இந்த வஞ்சக் கருத்தை யறிந்த ஸஞ்ஜயன் "அப்பா! வருகிறவன் அப்படிப்பட்டவனல்லன்காண்; அவன் அதையெல்லாமொன்றும் விரும்பமாட்டான். அவனுக்கு வேண்டியது இவ்வளவே; அதாவது ஒருவன் தான் குடிக்கும் தண்ணீரை ஒரு குடத்திலே நிறைத்துக் குளிர வைப்பனே, அந்தத் தண்ணீரை அவன் வருகிற வழியிலே வாசலிலே வைத்தால் போதுமானது! தன் வீட்டிலே ஒரு அதிதிவந்து புகுந்தால் காலைக் கழுவவேண்டு

மென்று ஸாமாந்ய சாஸ்த்ரம் விதித்திருக்கிறதே, அவ்வாறாக அவன் திருவடிகளை விளக்கினால் போதுமானது; நெடுந்தூரம் வந்தவனை க்ஷேமம் விசாரிப்பதென்று ஒன்றுண்டே, அப்படியே இவன் விஷயத்திலும் ஓர் இன்சொல் சொன்னால் போதுமானது. ஏற்றமாக ஒன்றும் வேண்டா, இவ்வளவுகளையொழிய மற்றொன்றையும் அவன் விரும்பமாட்டான்காண் என்கை, இத்தால், நீ கொடுக்க நினைக்கிற நாட்டையும் பொன்னையும் அவன் ஒரு சரக்காகவும் நினைக்கமாட்டான்; வல்லையாகில் உன் ஆபிமுக்ய ஸூசகமாக இவ்வளவுகளைச் செய்யப்பார் என்றபடி. அன்றியும், "பரிவதிலீசனைப் பாடி விரிவதுமேவலுறுவீர்!, பிரிவகையின்றி நன்னீர்தூய்ப் புரிவதுவும் புகைபூவே" (திருவா. 1, 7, 1.) என்று ஆழ்வாரும் அருளிச்செய்தார். ... 139

**140. புல்லைக்காட்டி யழைத்துப் புல்லையிடுவாரைப்போலே பலஸாதநங்களுக்கு பேதமில்லை. 26**

140. [கீழ் 136-வது சூர்ணை முதல் இவ்வளவும் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக வந்தது; உபாயாந்தரங்களிற்காட்டில் ப்ரபத்திக்குண்டான வைலக்ஷண்யம் சொல்லுகைக்காக ஸித்தோபாயத்துக்கும் பலத்துக்குமுள்ள ஒற்றுமை முன்னம் கூறப்படுகிறது.] ஒரு பசுவை அழைத்துப் பின்பு அதற்கு உணவுகளை இட்டு நோக்க நினைப்பவர்கள் அதுக்கு போக்யமான புல்லையே அப்பசுவை வசீகரிப்பதற்கு ஸாதநமாக முன்னிட்டழைத்துக்கொண்டு, பிறகு அதற்கு இடுவதும் அந்தப் புல்லேயாம்; ஆமளவில் பலத்துக்கும் ஸாதநத்துக்கும் பேதமில்லாதாப்போலே, விலக்ஷணகுண விக்ரஹங்களுடனே கூடிய தானே முந்துற இவனைச் சேர்த்துக் கொள்ளுகைக்கு உபாயமாய், பின்னை எப்போதும் இவனுக்கு உபேயமும் தானேயாயிருக்கையாலே பல ஸாதநங்களிரண்டும் ஒரே வஸ்துவாயிருக்கும். ... (140)

**141. ஆகையாலே ஸுகருபமாயிருக்கும். 27**

141. இத்தால், ப்ரபத்திக்கு வைலக்ஷண்யம் ஸித்தித்தபடியென்? என்னில்; உபேயமான வஸ்துதானே உபாயமாயிருக்கையாலே அந்த உபாய வரண ரூபமான இந்த ப்ரபத்தி கஷ்டமான காரியமாயிராமல் ஸுக ரூபமாயிருக்கும். "பலஸாதநங்களுக்கு பேதமில்லை" என்ற மூலத்துக்கு மற்றொருபடியாகவும் பொருள் கூறலாம்:— அதாவது, அஞ்ஜலி பண்ணுகை முதலானவற்றையே வடிவாகவுடைய ப்ரபத்தியை முன்னிட்டு எம்பெருமானை வசீகரித்தால் பிற்பாடு அவனுக்கு உகப்பாகச் செய்யும் அடிமையும் தன் ஸ்வரூபமான அஞ்சலி முதலிய வ்ருத்தி விசேஷங்களேயாகையாலே பலஸாதநங்களுக்கு பேதமில்லை என்கை.] ஆக இவ்வளவால் ப்ரபத்தியின் குற்றமின்மையும் குணபூர்த்தியும் சொல்லிற்றாயிற்று. ... .... (141)

**142. இவனவனைப்பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியு முபாயமன்று. 28**

142. (இவனுடைய ப்ரபத்தி உபாயமன்று; அவ்வெம்பெருமானே இவனைப் பற்றும் பற்றுதான் உபாயமென்கிற விஷயம் முகாந்தரத்தாலும் மூதலிக்கப்படுகிறது) உடைமையை உடையவன் சென்று கைக்கொள்வது போலே ஸ்வாமியான அவன்தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்க வேண்டிய பரதந்த்ரனான இச் சேதநன் பலத்தைப் பெறுகிறவன் தான்போலே தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ர

ஞன அவனைப்பெற நினைக்குமளவில், அவ்வெம்பெருமானுடைய நினைவுங்கூடக் கூடாதாகில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் பேற்றுக்கு ஸாதநமாக மாட்டாது. ... ... ... ... ... ... [142)

**143. அவனிவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று.** 29

143. ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன்தானே உடைமையாய்ப் பரதந்த்ரனாயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில், பாபங்களில் முக்கியமாக எண்ணப்படும் பாதகமும் குறுக்கே நிற்கமாட்டாது, "சிதஃ பரமசில் லாபே ப்ரபத்திரபி நோபதிஃ, விபர்யயே து நைவாஸ்ய ப்ரதிஷேதாய பாதகம்" என்பதை இவ்வர்த்தத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது. .... .... (143)

**144. இவையிரண்டும் ஸ்ரீபரதாழ்வான் பக்கலிலும் ஸ்ரீகுஹப்பெருமாள் பக்கலிலும் காணலாம்.** 30

144. இப்படி இவையிரண்டும் எங்கே காணலாமென்னில் ஸ்ரீ பரதாழ்வான் பக்கலிலும் ஸ்ரீ குஹப்பெருமாள் பக்கலிலும் காணலாம். ... ... (144)

**145. ஸ்ரீபரதாழ்வானுக்கு நன்மைதானே தீமையாய்த்து, ஸ்ரீகுஹப்பெருமாளுக்குத் தீமைதானே நன்மையாய்த்து.** 31

145. அவர்கள் பக்கலில் இவை கண்டபடி என்னென்னில்; பெருமாளை மீட்டுக்கொண்டு வந்து திருவபிஷேகம் பண்ணுவித்துத் தன் ஸ்வரூபாநுரூபமான அடிமையைப்பெற்று வாழ்கைக்காக வழியே பிடித்து மநோரதித்துக்கொண்டு சென்று மஹத்தான ஆர்த்தியோடே அவர் திருவடிகளில் பண்ணின ப்ரபத்தியாகிற நன்மைதானே பெருமாள் திருவுள்ளத்துக்குப் பாங்கல்லாமையாலே தீமையாய் முடிந்தது; பெருமாள் தாமே வந்து அங்கீகரிக்கப்பெற்ற ஸ்ரீ குஹப்பெருமாளுக்கு, தோஷமே பச்சையாக அங்கீகரிக்கையாலே பாதகமாகிற தீமைதானே நன்மையாய்விட்டது. ["யத் த்வத்ப்ரியம் ததிஹ புண்ய மபுண்ய மந்யத்" என்று—எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பானது புண்யம், வெறுப்பானது பாவம் என்றிறே புண்ய பாப லக்ஷணம் ஆழ்வான் அருளிச்செய்தது.] ... ... (145)

**146. ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமான ப்ரபத்திதானும் அபராத கோடியிலேயாய் க்ஷாமணம்பண்ணவேண்டும்படி நில்லாநின்றதிறே.** 32

146. இவன் பண்ணும் ப்ரபத்தி எம்பெருமான் திருவுள்ளத்துக்குப் பாங்கல்லாதபோது அபராத கோடியிலே சேருமென்னுமிடம் கீழே சொல்லப்பட்டது; இன்னமும் இச்சேதநனுடைய முன்புற்ற சரித்திரத்தைப் பார்த்தாலும் இது அபராத கோடியிலே யாகுமென்பதை வெளியிடுவதற்காக எம்பெருமானாருடைய அநுஷ்டாந ப்ரகாரம் கூறப்படுகிறது:—]குற்றங்கட்கெல்லாம் கொள்கலமாயிருக்கிற இச்சேதநன் ப்ரபத்தியைப் பண்ணவே இவனளவில் எம்பெருமான் திருவுள்ளம் ப்ரஸந்நமாய் விடுகையாலே ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமாயாயிற்று இப்பிரபத்தி இருப்பது. இப்படியிருந்துள்ள ப்ரபத்தியை கத்யத்தாலே பண்ணியருளின எம்பெருமானார் தமது பூர்வ வ்ருத்தத்தை அநுஸந்தித்தவாறே அந்த ப்ரதிபத்திதானும் அபராத

கோடியிலேயாய்த் தோற்ற, "த்வமேவ மாதா ச பிதா த்வமேவ" என்று தொடங்கி அபராதங்களைப் பொறுக்கைக்கு உறுப்பான ஸம்பந்த விசேஷங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்துகொண்டு "தஸ்மாத்ப்ரணம்ய ப்ரணிதாய காயம்" இத்யாதியாலே —"இப்படி திருமுன்பே கூசாமல் வந்து நின்று ப்ரபத்திபண்ணின இவ்வபராதத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று க்ஷாமணம் பண்ணிக்கொள்ள வேண்டும்படியாயன்றோ இப்பிரபத்தியின் தன்மை இருப்பது. ஆகையால் இவ்வழியாலும் இது அபராதகோடியிலே சேர்ந்ததாம். ... ... ... (146)

**147. நெடுநாள் அந்யபரையாய்ப் போந்த பார்யை லஜ்ஜாபயங்களின்றிக்கே பர்த்ருஸகாசத்திலே நின்று என்னையங்கீகரிக்கவேணுமென் றபேக்ஷிக்குமா போலே யிருப்பதொன்றிறே யிவன் பண்ணும் ப்ரபத்தி. 33**

147. (இவன் பண்ணும் ப்ரபத்தியானது தன் பூர்வவ்ருத்தத்தை அநுஸந்தித்தால் அபராதகோடியிலேயா யிருக்குமென்பது த்ருஷ்டாந்தமுகத்தால் காட்டப்படுகிறது) நெடுநாள் கணவனோடு ஒட்டற்று வியபிசாரம் செய்த ஒரு மனைவியானவள் 'இப்படிப்பட்ட நாம் அவன் முன்னே கூசாமற் சென்று நிற்கும்படியென்?' என்கிற வெட்கமில்லாமலும், 'இத்தனை காலமும் நாம் செய்து திரிந்ததெல்லாம் கண்டிருக்கின்றவன் "இப்போது நம்மை வந்து இப்படி அபேக்ஷிப்பதே!" என்று தண்டித்தால் செய்வதென்?' என்கிற அச்சமுமில்லாமல் அவன் முன்னே சென்று நின்று 'என்னை அங்கீகரிக்கவேணும்' என்று அபேக்ஷிக்குமளவில் எவ்வளவு அபராதமுண்டோ, அப்படியே இருப்பதொன்றாய்த்து நெடுநாள் பகவத் ஸம்பந்தத்தைவிட்டு அந்யபரனாய்ப் போந்தவன் தனது பூர்வ சரிதத்தை யநுஸந்திக்க வரும் வெட்கமும், ஸ்வதந்த்ரனானவன் தண்டித்தால் செய்வதென்' என்ற அச்சமுமின்றி அவன் ஸந்நிதியிலே சென்று நின்று தன்னை அங்கீகரிக்கவேணுமென்று பண்ணுகிற சரணவரணம்.

[ஆக இவ்வளவும்—அவனை இவன் தானாகப் பற்றும் பற்று உபாயமன்றென்பதும், இவனை அவன் தானாகப்பற்றும் பற்றே உபாயமென்பதும் ஸ்தாபிக்கப்பட்டது]

**148. க்ருபையாலே வரும் பாரதந்த்ரியத்திற்காட்டில் ஸ்வாதந்த்ரியத்தாலே வரும் பாரதந்த்ரியம் ப்ரபலம். 34**

148. எம்பெருமான் ஸ்வதந்த்ரனா யிருந்தபோதிலும் அவனுக்கு அடியார் திறத்தில் பாரதந்திரியமுண்டு; அதாவது தான் அடியாரிட்ட வழக்காயிருப்பவன். இப்படிப்பட்ட ஆச்ரித பாரதந்திரியத்துக்கு இரண்டு காரணங்களுண்டு. அவை யாவன—க்ருபையும் ஸ்வாதந்திரியமும். அதாவது—வேறு புகலற்றுத் தன்னை வந்து பற்றினவர்களிடத்தில் தனக்குண்டான கருணையாலே அவர்கள் சொன்னதே செய்யும்படி பரதந்த்ரனாயிருப்பது—க்ருபையாலேவரும் பாரதந்திரியமெனப்படும்; இங்ஙனன்றியே, கேட்பாரற்ற தனது ஸ்வாதந்திரியத்தாலே நிர்ஹேதுகமாகச் சிலரை அங்கீகரித்து தான் அவர்களிட்ட வழக்காயிருப்பது—ஸ்வாதந்திரியத்தாலே வரும் பாரதந்திரிய மெனப்படும். இவ்விரண்டுள் க்ருபையாலே வரும் பாரதந்திரியமானது சில ஸமயங்களில் ஸ்வாதந்திரியத்தாலே தடைபட்டுப் போகவுங் கூடுமாதலாலும், ஸ்வாதந்திரியத்தாலே வரும் பாரதந்திரியத்துக்கு ஒருகாலும் தடை நேராதாகையாலும் பிற்பட்ட இப்பாரதந்திரியமே மேம்பட்டதாம். ... (148)

**149. இவ்வர்த்தத்தை வேதபுருஷ னபேக்ஷித்தான். 35**

149. இப்படி ப்ரபலமாகச் சொல்லப்பட்ட பரகத ஸ்வீகாரத்தை "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" என்று கடவல்லியிலும் முண்டகோபநிஷத்திலும் ஓதிக் கிடக்கையாலே வேதபுருஷன் ஆதரிக்கப்பெற்றஅர்த்த விசேஷம் இதுஎன்க. (149)

**150. அபேக்ஷாநிரபேக்ஷமாகத் திருவடிக்கும் ஸ்ரீகுஹப்பெருமாளுக்கும் இதுண்டாய்த்து. 36**

150. இத்தலையில் விருப்பமில்லாமலிருக்கையில் இந்த எம்பெருமானுடைய விஷயீகாரம் ஸித்திக்கப்பெற்றவர்களுண்டோ வெனில்; பம்பா நதிக்கரையிலும் கங்கா நதிக்கரையிலும் பெருமாள் தானேசென்று அங்கீகரிக்கப்பெற்ற திருவடிக்கும் ஸ்ரீகுஹப்பெருமாளுக்கும் இப்பரகதஸ்வீகார முண்டானபடி காணலாம். ... (150)

**151. இவன் முன்னிடுமவர்களை அவன் முன்னிடுமென்னுமிடம் அபய ப்ரதாநத்திலும் காணலாம். 37**

151. இப்படி ஸ்வதந்த்ரனாய் இவர்களை அங்கீகரித்தவன், திருவடியை அங்கீகரிக்கும்போது இளையபெருமாளை முன்னிடுதலும் ஸ்ரீகுஹப்பெருமாளை அங்கீகரிக்கும்போது பிராட்டியை முன்னிடுதலும் செய்தாற்போலே மற்றும் புருஷகாரத்தை முன்னிட்டு அங்கீகரித்தவிடம் காணலாமோவென்னில், இச்சேதநன் தான் ஆச்ரயிக்கும்போது புருஷகாரமாக முன்னிடுமவர்களை, அவனும் அவர்களை அங்கீகரிக்கும்போது முன்னிடுவான் என்னுமிடம் திருவடியையும், ஸ்ரீ குஹப்பெருமாளையும் அங்கீகரித்தவிடங்களில் மாத்திரமேயன்றியே ஸ்ரீவிபீஷணாழ்வானை அங்கீகரித்தவிடத்திலும் காணலாம். எங்ஙனேயென்னில், "புறம்புண்டான பற்றுக்களை அறுத்துக் கொண்டு நான் பெருமாளை சரணமடைந்தேன்" என்று சொல்லிக்கொண்டுவந்து நின்ற விபீஷணாழ்வானை அபயமளித்து அங்கீகரித்தருளும்போது முதலிகளுக்கெல்லாம் தலைவரான ஸுக்ரீவமஹாராஜரை முன்னிட்டிறே அங்கீகரித்தது. [திருவடியையும் விபீஷணாழ்வானையும் அங்கீகரிக்கும்போது பிராட்டி அருகேயில்லாமையாலே அவளைமுன்னிட்டமை தோற்றவில்லையேயாகிலும், பிராட்டி லங்கைக்கு எழுந்தருளுகிறபோது ஸுக்ரீவ மஹாராஜரும் திருவடியும் நிற்கிற இடத்திலே திருவாபரணங்களை வீசியெறிந்து கடாக்ஷித்து வைத்துப்போகையாலும், லங்கையில் எழுந்தருளின பின்பு விபீஷணாழ்வானைப் பெருமாள் திருவடிகளிலே சென்று சேரும்படி கடாக்ஷித்தருளுகையாலும் இவ்விருவரையும் பெருமாள் அங்கீகரிக்கும்போது பிராட்டியை முன்னிட்டே அங்கீகரித்தாரென்று கொள்ளவேணும்.] ... ... (151)

**152. இருவர் முன்னிடுகிறதும் தந்தாம் குற்றங்களை சமிப்பிக்கைக்காக. 38**

152. சேதநன் நிருபாதிக சேஷபூதனாய் ஈச்வரன் நிருபாதிக சேஷியாயிருக்கையாலே சேதநன் தானே ஸாக்ஷத்தாக ஆச்ரயிக்கவும் ஈச்வரன் தானே ஸாக்ஷாத்தாக அங்கீகரிக்கவும் அமைந்திருக்க இப்படி இருவரும் புருஷகாரத்தை முன்னிடுவது ஏதுக்காக? என்னில், நெடுநாளாக ஈச்வரன் பக்கல் விமுகனாய் விஷயாந்தரங்களில் ஊன்றி அவனுடைய ஆஜ்ஞையை மீறிநடப்பதே தொழிலாய்ப் போந்த சேதநன் இப்படி கூடுபூரித்துவைத்த குற்றங்களைக்கண்டு ஈச்வரன் சீறுதபடி

பண்ணுகைக்காகச் சேதநன் ஆச்ரயண வேளையில் புருஷகாரத்தை முன்னிட வேண்டிற்று. ஈச்வரனுக்குச் சேதநனோடு ஒழிக்கவொழியாத உறவு உண்டாயிருக்க, குற்றங்களையே கணக்கிட்டு நெடுநாள் இவனை தூரத்திலே தள்ளிவைத்திருந்த தன் குற்றத்தைக் கண்டு சேதநன் வெருவாதபடி பண்ணுகைக்காக ஈச்வரன் அங்கீகார வேளையில் புருஷகாரத்தை முன்னிட வேண்டிற்று. ... (152)

153. ஸ்வரூபஸித்தியுமத்தாலே. 39

153. சேதந ஈச்வரர்களிருவரும் புருஷகாரத்தை முன்னிடுவதற்குக் கீழ்ச் சொன்ன ப்ரயோஜநம் தவிர மற்றொரு ப்ரயோஜனமுமுண்டு: அதாவது-இருவரும் புருஷகாரத்தை முன்னிட்டால்தான் இருவருடைய ஸ்வரூபமும் நிறம்பெறும். சேதநனுக்கு பாகவத பாரதந்திரியமும் ஈச்வரனுக்கு ஆச்ரிதபாரதந்திரியமும் ஸ்வரூபமாயிருக்கையாலே இருவரும் புருஷகாரத்தை முன்னிட்டால்தான் இந்த ஸ்வரூபம் ஸித்திக்கும். .... ... ... ... (153)

**154. ஔபாதிகமுமாய் நித்யமுமான பாரதந்திரியம் இருவர்க்கு முண்டிறே. 40**

154. (கீழ்ச்சொன்ன ஸ்வரூபத்தை உபபாதிக்கிறது.) சேதநனுக்கு பாகவதர் திறத்திலுள்ள பாரதந்திரியம் "இவர்கள் பகவானைப் பற்றியவர்கள்" என்பது காரணமாக உண்டாமதாகையாலே ஔபாதிகமுமாய், இந்த உபாதி (பகவத்ப்ராவண்யமாகிற உபாதி) நித்யமாகையாலே தத்ப்ரயுக்தமான (பாகவத) பாரதந்திரியமும் பகவத் பாரதந்திரியம் போலே நித்யமுமாயிருக்கும். ஈச்வரனுக்கு ஆச்ரிதர் திறத்திலுள்ள பாரதந்திரியம் ''இவர்கள் நம்மைப் பற்றியவர்கள்'' என்பது காரணமாக உண்டாமதாகையாலே ஔபாதிகமுமாய், அந்த உபாதி (ஸ்வப்ராவண்யமாகிற உபாதி) நித்யமாகையாலே தத்ப்ரயுக்தமான (ஆச்ரித) பாரதந்திரியமும் நித்யமுமாயிருக்கும். ... ... ... ... (154)

**155. அநித்யமானவிருவர் பாரதந்த்ரியமும் குலைவதும் அத்தாலே. 41**

155. (இவ்வளவேயுமன்று; இன்னமுமொரு ப்ரயோஜநமுண்டு.) சேதந ஈச்வரர்களிருவர்க்குமுள்ள அநித்யமான கர்ம பாரதந்திரியமும் புருஷகாரத்தை முன்னிடுவதனால்தான் குலையும். சேதநனுக்குக் கர்ம பாரதந்திரியமாவது— அவச்யமநுபவித்தே தீரவேண்டும்படியான நல்வினை தீவினைகளின் வசத்திலே யிழுப்புண்டு ஸம்ஸாரத்திலே அழுந்துகை. ஈச்வரனுக்குக் கர்ம பாரதந்திரியமாவது—"அவனவன் செய்த கருமங்களின் பலனை அவனவன் அநுபவித்துத் தீரக் கடமைப்பட்டிருக்கிறான்! நாம் செய்யவேண்டியது என்ன இருக்கிறது" என்று இவன் செய்த கருமத்தையே முக்கியமாக்கி அதற்கீடாகவே நடத்திக் கொண்டு போருகை. இப்படிப்பட்ட இருவருடைய கர்ம பாரதந்திரியமும் நடப்பது "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்னும் வரையில்தானுகையாலே இவற்றை அநித்யமென்கிறது. [இப்படி அநித்யமான இருவருடைய கர்ம பாரதந்திரியமும் புருஷகார புரஸ்கரணத்தால் குலைகையாவது—சேதநன் புருஷகாரத்தை முன்னிடு மளவிலே ஈச்வரனைத் திருத்தியும், ஈச்வரன் புருஷகாரத்தை முன்னிடுமளவில் சேதநனை ஸமாதானப்படுத்தியும் இப்படி இரண்டு தலையும் ரக்ஷ்ய ரக்ஷகங்களாகப் பொருந்தும்படி பண்ணுகையாலே இவை தன்னடையே ஒழிகை.] .... (155)

**156. ஸஸாக்ஷிகமாகையாலே இப்பந்தத்தை யிருவராலு மில்லைசெய்யப்போகாது.** 42

156. நெடுநாளாக ஸ்வதந்த்ரனாய் *யாதானும்பற்றி நீங்கித்திரிந்த இச் சேதநன் இன்றைக்கன்றோ இசைந்துவந்தது; ப்ரக்ருதியோடே இருக்கையாலே துர்வாஸனை மேலிட்டு, கீழ்ப்பொருந்திய ரக்ஷ்ய ரக்ஷகபந்தத்தை இல்லைசெய்து பழையபடியே நீங்கிப்போகப் பார்க்குதல், கேட்பாரற்ற ஸ்வதந்த்ரனாகக் கருமங் களுக்குத் தக்கபடி இவனை லீலையாலே நெடுங்காலம் விநியோகங்கொண்டு போந்த ஈச்வரன்தான் இந்த பாபத்தை இல்லைசெய்து முன்புபோலே இவனைக் கருமானு குணமாக நிர்வஹிக்கப்பார்க்குதல் செய்தாலோவென்னில், இந்த ரக்ஷ்ய ரக்ஷகபாவ ஸம்பந்தமானது சேதந ஈச்வரர்களாகிற இருதலையுமறிய வந்ததாகமட்டுமல்லாமல் புருஷகாரமாகிற ஸாக்ஷியோடுங் கூடினதாகையாலே இது இருவராலும் அழிக்கப் போகாது. ... ... ... ... .... (156)

**157. "என்னை நெகிழ்க்கிலும்" "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய."** 43

157. "என்னை நெகிழ்க்கிலும்" (திருவா. 1.7.8.) என்கிற பாட்டும் "கோலமலர்ப் பாவைக்கன்பாகிய" (திருவா. 10. 10. 7.) என்கிற பாட்டும் இவ் வர்த்தத்திற்கு ப்ரமாணமாக அநுஸந்திக்கத் தகும். [முந்தின பாட்டு—நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக நித்யஸூரிகள் நடுவே என்னை அங்கீகரித்த பின்பு ஸர்வ சக்தனான தானும் கைவிடமாட்டான் என்கையாலே, ஈச்வரனால் இந்த ஸம்பந்தம் இல்லைசெய்யப் போகாதென்பதற்கு அப்பாசுரம் பிரமாணம். பிந்தினபாட்டு— பெரிய பிராட்டியார்க்கு நண்பனாகையாலே அவள் பரிக்ரஹமான என்பக்கலிலே மிகவும் நண்பனாய் அருமையான காரியங்களைச் செய்துவந்து என்னோடே கலந்த உன்னைப் பெற்றுவைத்து இனி நழுவவிடுவேனோ? என்கையாலே, புருஷகாரம் முன்னாக வந்த இந்த ஸம்பந்தத்தைச் சேதநனாலும் இல்லைசெய்ய முடியாதென் பதற்கு அந்தப் பாசுரம் பிரமாணம்.] ... ... ... (157)

**158. கர்மணி வ்யுத்பத்தியில் ஸ்வரூபகுணங்களால் வருகிற கர்த்ரு ஸங்கோசராஹித்யத்தை நினைப்பது.** 44

158. (156-வது ஸூத்ரத்தில்) "ஸாக்ஷியோடு கூடினதாக வந்த இந்த ஸம்பந்தத்தை இருவராலும் இல்லை செய்யமுடியாது" என்றது—ஸாக்ஷியான புருஷகார விஷயத்தில் சேதந ஈச்வரர்களிருவர்க்குமுள்ள நித்ய பாரதந்திரியத்தைப் பற்றவாகையாலே இருவர்க்கும் புருஷகார விஷயத்திலுண்டான நித்ய பாரதந்திரி யத்தில் ப்ரமாணம் காட்டுகிறார் மேல்—"**கர்மணிவ்யுத்பத்தியில் ஸ்வரூப குணங்களால் வருகிற கர்த்ருஸங்கோசராஹித்யத்தை நினைப்பது**" என்று. அதாவது— ஸ்ரீசப்தத்துக்குப் பலவித வ்யுத்பத்திகள் பண்ணும்போது, "ஸ்ரீங்—ஸேவாயாம்" என்கிற தாதுவில் "ஸ்ரீயதே" என்று பண்ணுகிற வ்யுத்பத்தி கர்மணி வ்யுத்பத்தி யெனப்படும். "ஸேவிக்கப்படாநின்றாள்" என்பது இதன் பொருள். சேஷத்வமாகிற ஸ்வரூபத் தால் சேதநனுக்கு இவள் விஷயத்திலுண்டான ஸேவையும் ப்ரணயித்வமாகிற குணத்தால் ஈச்வரனுக்கு இவள் விஷயத்திலுண்டான ஸேவையும் அவிச்சிந்ந மாய்ச் செல்லுகையாலே இப்படி இவ்விஷயத்தில் இரண்டு தலைக்குமுண்டான பாரதந்திரியத்தை இங்கே நினைப்பதென்றபடி. ... ... (158)

159. அதிகாரித்ரயத்துக்கும் புருஷகார மவர்ஜநீயம். 45

159. இப்படியிருக்கையால் இப்புருஷகாரமானது—அஜ்ஞானிகள், ஜ்ஞாநாதிகர், பக்தி பரவசர் என்று மூவகைப்பட்ட ப்ரபந்நாதிகாரிகளுக்கும் அவச்யம் வேண்டும்; குற்றத்தைத் தணிக்கை முதலானவற்றுக்குப் புருஷாகாராந்வயம் வேணுமிறே.

(அன்றியே;) இப்புருஷகாரமானது அநந்ய ப்ரயோஜநராய் ப்ரபத்திபண்ணுமதிகாரிகட்கு மாத்திரமேயல்ல; ப்ரயோஜநாந்தரபரராய் ப்ரபத்திபண்ணுகிற ஐச்வர்யகைவல்ய பகவச்சரணார்த்திகளான மூவர்க்கும் தங்கள் தங்கள் இஷ்டம் தலைக்கட்டுவதற்காக ஈச்வரனை உபாயமாக ஸ்வீகரிக்குமளவில் இவர்கள் குற்றங்களைப் பொறுத்து அவன் அங்கீகரிக்கும்படி பண்ணுகைக்குப் புருஷகாரம் அவச்யம் வேண்டுமென்றதாகவுமாம். ... ... .... .... (159)

160. தனக்குத்தான் தேடும் நன்மை தீமையோபாதி விலக்காயிருக்கும். 46

160. சேஷியானவன் போகதசையில் தனது வ்யாமோஹத்தாலே சேதநன் பக்கல் மிகவும் தாழநின்று பரிமாறுமளவில், "நாம் சேஷபூதரன்றோ; நம் சேஷத்வத்தை நோக்கவேண்டாவோ" என்று நைச்யாநுஸந்தாநத்தாலே இருய்த்து தனக்குத்தான் தேடிக்கொள்ளுகிற சேஷத்வமாகிற நன்மையானது—நெடுநாள் "ஸ்வதந்த்ரோஹம்" என்றிருந்த தீமைபோலே அவனுடைய போகத்துக்கு ப்ரதிபந்தகமா யிருக்கும். ... ... .... ... (160)

161. அழகுக்கிட்ட சட்டை அணைக்கைக்கு விரோதியாமாப்போலே. 47

161. சேஷியினுடைய விருப்பத்துக்கு உடலாய் ஆத்மாவுக்கு அலங்காரமாயிருக்கிற சேஷத்வம் போகவிரோதியாக எப்படி ஆகுமென்னில்; ஸ்திரீகள் அழகுக்காக இட்டுக்கொள்ளும் சட்டையானது நாயகனுடைய உகப்புக்கு இலக்காய் அவளுக்கு அலங்காரமுமா யிருந்ததேயாகிலும் போகதசையில் ஆலிங்கநத்திற்கு விரோதியாகிறுப்போலே இந்த சேஷத்வமும் போகவிரோதியாகக் குறையில்லை.

162. "ஹாரோபி." 48

162. அழகுக்கு உடலானது அநுபவத்துக்கு விரோதியாமென்னுமிடம் ப்ரமாணத்தாலும் ஸித்திக்கும்; ["ஹாரோபி நார்ப்பித꞉ கண்டே ஸ்பர்சஸம்ரோத பீருணா"] என்றருளிறே சக்ரவர்த்தி திருமகனார். அதாவது—ஸம்ச்லேஷகாலத்தில் அணைக்கைக்கு விரோதியாமென்னு மச்சத்தாலே பிராட்டி திருக்கழுத்தில் ஒரு முத்துவடங்கூட அணிவதில்லை என்றபடி. ... ... (162)

163. புண்யம்போலே பாரதந்த்ரியமும் பராநுபவத்துக்கு விலக்கு. 49

163. ஆனால் பின்னை பாரதந்திரியந்தான் நல்லதோவென்னில், கீழ் "நன்மை" என்கிற சொல்லாலே சொல்லப்பட்ட சேஷத்வமானது கீழ்ச்சொன்னபடியே நைச்யாநு ஸந்தாநத்தாலே பின்வாங்குகைக்கு உறுப்பாய்க்கொண்டு எப்படி போக விரோதியாயிருக்குமோ, அப்படியே போகதசையில் அவனுக்கு எதிர்விழி கொடாமல் அசித்துப்போலே கிடக்கைக் குறுப்பான வெறும் பாரதந்திரியமும் எம்பெருமானுடைய போகத்துக்கு விரோதியாயிருக்கும் ... ... (163)

**164. குணம்போலே தோஷநிவ்ருத்தி- 50**

164. ஆத்மாவுக்கு அந்தரங்க நிருபக குணமாயிருக்கிற சேஷத்வ பாரதந்திரியங்கள், கீழ்ச்சொன்னபடி பராநுபவத்துக்கு விலக்காகிருப்போலே—இவன் நிர்ப்பந்தித்துப் பண்ணுவித்துக்கொள்ளுகிற ப்ரக்ருதி ஸம்பந்த நிவ்ருத்தியும் சரம சரீரத்தோடே சிறிது நாள் வைத்து அநுபவிக்க இச்சிக்கிற அவனுடைய அநுபவத்துக்கு விலக்காம். ... ... ... .... ... (164)

**165. ஆபரணம் அநபிமதமாய் அழுக்கு அபிமதமாயிராநின்றதிறே. 51**

165. ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற தோஷம் கழிந்தால் ஆத்ம ஸ்வரூபம் மிகவும் பரிசுத்தமாய் போக்யமாயிருக்குமன்றோ; ஆனபுன்பு, ப்ரக்ருதி ஸம்பந்த நிவ்ருத்தி அநபிமதமாகவும் தோஷம் அபிமதமாகவும் இருக்குமோவென்னில்,—லோகத்தில் விஷயப்ரவணராயிருப்பார்க்கு அபிமத விஷயத்தினுடைய ஔஜ்ஜ்வல்ய ஹேதுவான ஆபரணம் அநபிமதமாய் மாலிந்ய ஹேதுவான அழுக்கு அபிமதமாயிரா நின்றதிறே; அதுபோலக் கொள்க. ... ... (165)

**166. 'ஸ்நாநம் ரோஷ ஜநகம்' என்கிற வார்த்தையை ஸ்மரிப்பது. 52**

166. (இது லௌகிகத்தில் மாத்திரமன்றிக்கே பிராட்டி விஷயத்தில் பெருமாளுக்கும் இப்படியிருந்தமைக்கு ஸூசகமானதொரு வார்த்தை ஸ்மரிப்பிக்கப் படுகிறது.) ராவண ஸம்ஹாரமான பிறகு பிராட்டி பெருமாளைக் காண நின்றபோது ஸ்நாநம் செய்து வந்தது பெருமாள் திருவுள்ளத்துக்கு அநபிமதமாயிருந்ததிறே, "**தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருவம்**" என்றிறே பெருமாளுடைய வார்த்தை. [பத்துமாஸம் ராவணபவநத்திலேயிருந்த பிராட்டி "சிறையிருந்த வேஷத்தோடே சென்று காணவேண்டுமேயன்றி ஸ்நாநம் செய்து நிற்கலாகாது" என்றிருக்கவேண்டியிருக்க, அப்படி இராமல் (பெருமாளுடைய உட்கருத்தையுமறியாமல்) சடக்கென திருமஞ்சனம் பண்ணி வந்தது அழுக்குக்கோலங்காண விரும்பியிருந்த பெருமாளுக்கு ரோஷஹேதுவாயிற்றென் றுணர்க.] ... (166)

**167. "வஞ்சக்கள்வன்" "மங்கவொட்டு." 53**

167. இப்படி அபிமத விஷயத்தில் அழுக்கை உகப்பதுபோல, விவேகிகள் அழுக்குடம்பு என்று கழிக்கிற இந்த தேஹத்தை ஈச்வரன் விரும்பக் கண்டவிடமுண்டோவென்னில் உண்டு; திருவாய்மொழியில் "வஞ்சக் கள்வன்" (திருவா. 10-7-1) என்று தொடங்கி "மங்க வொட்டு" (திருவா, 10-7-10) என்னுமளவாக ஆழ்வார் தம்முடைய திருமேனியிலே எம்பெருமான் மிக விரும்பி அநுபவித்த படிகளையும், அதுவுந்தவிர இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொண்டு போவதாக அவன் பேராசை கொண்டிருக்கிறபடியையும் கண்டு 'பிரானே இப்படி நீ செய்யலாகாது' என்று நிர்ப்பந்தித்து இதனுடைய தோஷத்தை அவனுக்கு அறிவித்து, இப்படி ஹேயமான இவ்வுடல் இவ்விடத்திலேயே மங்கும்படி இசைய வேணுமென்று கால்கட்டி அவன் இதை விடுவித்துக்கொண்டு போம்படி வருந்தி இசைவித்துக் கொண்டபடியையு மருளிச் செய்தாரிறே ஆழ்வார். ... (167)

**168. வேர்சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப்போலே ஜ்ஞாநியை விக்ரஹத்தோடே ஆதரிக்கும். 54**

168. அபிமத விஷயத்தில் அழுக்கை விரும்புவதுபோல் மாத்திரமல்லாமல் இவனுடைய ஞான பரிமளம் இவ்வுடலில் கமழ்கின்றமையாலும் அதைப்பற்றியும் எம்பெருமான் இவ்வுடலை ஆதரிப்பவன் :—மணத்தின் வாசியை அறிந்து குருவேர் சூடிக்கொள்பவர் மண்ணை உதறிவிட்டால் மணம் குறைந்துவிடுமென்று மண் பற்றைக் கழற்றாமல் சூடுவதுபோல, பரமபோகியான எம்பெருமானும் ஞானியான விவனை விரும்பி யநுபவிக்கும்போது இவனுடைய ஞான மணமெல்லாம் தோற்றும் படியிருக்கிற சரீரத்தோடு கூட விரும்புவன். ... ... (168)

**169. பரமார்த்தனான விவனுடைய சரீரஸ்திதிக்கு ஹேது கேவல பகவதிச்சையிறே. 55**

169. "எந்நாள் யானுன்னை யினிவந்து கூடுவன்" (திருவா. 3. 2. 1.) என்றும் "கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ" (திருவா. 6. 9. 9) என்றும் சொல்லிக் கதறும்படி ஸம்ஸாரத்தில் அடிக் கொதித்து, பகவதநுபவத்தில் பெரு விடாய்ப்பட்டு அளவிறந்த ஆர்த்தி விளைந்தவனுடைய சரீரம் இந்நிலத்தில் சிலநாள் தங்கி யிருப்பதற்குக் காரணம் அவனுடைய ப்ராரப்த கருமமென்ன முடியாது; "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று எம்பெருமான் தானே சோதி வாய் திறந்து சொன்னபடியாலே. ஆகையால் இவனுடைய சரீரம் இங் கிருப்பதற்குக் காரணம் எம்பெருமானுடைய இச்சா மாத்திரமேயாம். ... (169)

**170. "திருமாலிருஞ்சோலை மலையே" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லா வற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைகதேசத்திலே பண்ணும்.**

170. திவ்ய தேசங்களெல்லாவற்றிலும் எம்பெருமானுக்கு எவ்வளவு அபி நிவேசமுண்டோ அவ்வளவு அபிநிவேசம் ஞானியினுடைய சரீரத்தில் அவனுக்கு உண்டென்பது "திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலே யென்தலையே" (திருவா. 10 7. 8.) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தினால் விளங்கும். ... (170)

**171. அங்குத்தைவாஸம் ஸாதநம்; இங்குத்தைவாஸம் ஸாத்யம். 57**

171. திவ்ய தேசங்களிற் காட்டிலும் ஞானிகளுடைய சரீரத்தில் எம்பெரு மான் பண்ணும் அபிநிவேசத்திற்கு வாசியு முண்டு; எம்பெருமான் திவ்ய தேசங் களில் விரும்பி எழுந்தருளியிருப்பது தக்க உபாயங்களாலே சேதநரை அகப்படுத்திக் கொள்ளுகைக்காகையாலே அந்த திவ்ய தேசவாஸம் ஸாதநம்; இச்சேதநன் திருந்தி இவனுடைய ஹ்ருதயத்தினுள்ளே தான் வஸிக்கப்பெற்ற அது அத்திவ்ய தேசவாஸமாகிற க்ருஷியின் பயனாகையாலே ஞானிகளிடத்தில் வாஸமே பரம ப்ரயோஜநம் ["மலைமேல் தான் நின்று என் மனத்து ளிருந்தானை" (திருவா. 10. 4. 4.) "பனிக் கடலுள் பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்து என் மனக் கடலுள் வாழவல்ல மாயமணாளன்" (பெரியாழ், 5 4. 9.) இத்யாதி பாசுரங்களில் இவற்றின் ஸாதந ஸாத்யத்வங்கள் நன்கு விளங்கும்.] .... ... (171)

172. "கல்லும் கனைகடலும்" என்கிறபடியே இது ஸித்தத்தால் அவற்றிலாதரம் மட்டமாயிருக்கும். 58

172. ஆழ்வார்போல்வாருடைய ஹ்ருதயத்திலே எம்பெருமானுக்கு வாஸம் ஸித்தித்துவிட்டால் திருப்பாற்கடல் பரமபதம் முதலான விடங்களில் அவனுக்கு ஆதரம் மட்டமாம் என்பது "கல்லுங் கனைகடலும் வைகுந்த வானுடும், புல்லென் ரொழிந்தன கொல் ஏபாவம்—வெல்லநெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்." (பெரிய திருவந்தாதி 68.) என்ற பாட்டினுல் விளங்கும்.

173. "இளங்கோயில் கைவிடேல்" என்று இவன் ப்ரார்த்திக்க வேண்டும்படியாயிருக்கும். 59

173. "என்னுடைய ஹ்ருதயத்திலே புகுருகைக்கு பாலாலயம் போன்றிருந்த திருப்பாற்கடல் முதலியவற்றில் ஆதரத்தைக் குறைத்துக் கொள்ளக்கூடாது; அவற்றைக் கைவிடக்கூடாது" என்று சேதநன் எம்பெருமானை நோக்கிப் பிரார்த்திக்க வேண்டும்படியாகும். "வெள்ளத்திளங்கோயில் கைவிடேல்" என்ற பூதத்தாழ்வாருடைய (இரண்டாந் திருவந்தாதி. 54) பாசுரங் காண்க, .... (173)

174. ப்ராப்யப்ரீதிவிஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பு அவை அபிமதங்களாயிருக்கும். 60

174. பரமபதம், திருப்பாற்கடல், அர்ச்சாவதாரங்கள் முதலிய ஸ்தானங்களிற் காட்டிலும் சேதநருடைய ஹ்ருதயமே எம்பெருமானுக்குப் பரம புருஷார்த்தமாகில், பரமபதாதிகளை எம்பெருமான் விட்டுவிட வேண்டாவோ? அவற்றையும் உகந்து வர்த்திப்பதற்கு ஹேது என்னென்னில், எம்பெருமான் தனக்கு ப்ராப்யபூதனை சேதநன் "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினர்" [திருக்குறுந்தாண்டகம் 19] என்கிறபடியே உகந்திருக்கும்படியான ஸ்தலங்கள் என்கிற காரணத்தாலும், "இத்தேசங்களில் வாஸமன்றோ நமக்கு சேதநலாபத்தைத் தந்தது" என்கிற நன்றியுணர்ச்சியாலும் அவனுக்கு அவ்வோ தேசங்கள் அபிமதங்களா யிருக்கும். ... ... .... .... (174)

175. ஆகையாலே தோஷ நிவ்ருத்திபோலே ஆந்தரகுணமும் விரோதியாயிருக்கும். 61

175. நம் தோஷங்கள் கழிவதானது ஸ்வரூப ப்ரகாசத்திற்குக் காரணமாயிருந்தாலும் தோஷங்களையே போக்யமாக விரும்பும் எம்பெருமானுக்கு அபிமதமல்லாமையாலே அந்த தோஷ நிவ்ருத்தியானது எப்படி பராநுபவத்துக்கு விரோதியாகிறதோ அதுபோல பாரதந்திரியமும் பராநுபவத்துக்கு விரோதியாகிறது. (175)

176. தோஷ நிவ்ருத்திதானே தோஷமாமிறே. 62

176. காமினியானவள் தன் உடம்பிலழுக்கைக் கழித்து போகத்திலே அந்வயிக்க விரும்புவதுபோல, ஸ்வதஃ பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபத்துக்கு வந்தேறியான தோஷத்தைக் கழித்து சேஷிக்கு போக்யமாக விநியோகிக்கப்பட

வேணுமென்று தானாகவே ஒரு நிர்ப்பந்தம் வைத்துக்கொண்டு இச்சேதநன் பண்ணுவித்துக்கொள்ளுகிற தோஷ நிவ்ருத்தி தானே தோஷத்தோடே தன்னை புஜிக்க நிற்கிற பரம புருஷனுடைய போகத்துக்கு விலக்காகையாலே தோஷமாகுமிறே. ... ... .. ... ... (176)

**177. "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே; அவனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று பிள்ளான் வார்த்தை. 63**

177. எம்பெருமானை யொழியத் தான் தனக்கு நன்மை தேடிக்கொள்வது தப்பு; எம்பெருமானே நமக்குத் தேடித்தரும் நன்மைதான் உபாதேயம் என்ற கருத்தை உள்ளடக்கிப் பிள்ளான் அருளிச்செய்யும் வார்த்தை ஒன்றுண்டு— **"தன்னால் வரும் நன்மை விலைப்பால்போலே; அவனால் வரும் நன்மை முலைப்பால்போலே"** என்று. தன் முயற்சியாலே தான் தனக்கு உண்டாக்கிக்கொள்ளும் நன்மையானது விலைகொடுத்து வாங்கின பால்போலே ஔபாதிகமுமாய் விரஸமுமாய் அப்ராப்தமுமாயிருக்கும். ஸ்வாமியான எம்பெருமான் தானே "இவனுக்கு இது வேணும்" என்று விரும்பி உண்டாக்கும் நன்மையானது முலைப்பால் போலே நிருபாதிகமுமாய் ஸரஸமுமாய் ப்ராப்தமுமாயிருக்கு மென்றபடி. ... ... (177)

**178. அவனை யொழியத் தான் தனக்கு நன்மை தேடுகையாவது—ஸ்தநந்தய ப்ரஜையை மாதாபிதாக்கள் கையில் நின்றும்வாங்கி காதுகனான ஆட்டு வாணியன் கையிலே காட்டிக் கொடுக்குமாபோலே யிருப்பதொன்று. 64**

178. [எம்பெருமானைத் தவிர்த்துத் தான் தனக்கு நன்மைதேட முயன்றால் தனக்கு விநாசமே பலிக்கும்.] ப்ராப்தனுமாய் ஆப்தனுமானவன் இச்சேதநனுக்கு நன்மை தேடவேண்டியிருக்க அதுக்கு எதிர்த்தட்டாகத் தான் தனக்கு ஸ்வோஜ்ஜீவநார்த்தமான நன்மை ஸம்பாதிக்கையாவது எப்படியிருக்கிறதென்றால், ஒரு சிறு குழந்தையை ரக்ஷகரான தாய்தந்தையர் கையில் நின்றும் பலாத்காரமாக வாங்கி, கொலைக்குக் கூசாதே கொன்று மாம்ஸங்களோடே கலந்து விற்றுவிடும் ஆட்டு வாணியன் கையிலே "இக்குழந்தையைப் பார்த்துக்கொள்" என்று கொடுக்குமா போலே யிருப்பதாய்த்து. [இத்தால், ஸர்வேச்வரனே ரக்ஷகன், தான் தனக்கு நாசகன் என்பது சொல்லப்பட்டது. .... ... ... (178)

**179. தன்னைத்தானேயிறே முடிப்பான். 65**

179. தானே தனக்கு நாசகனாவனே வென்னில்; எம்பெருமான் இச்சேதநனை உய்விப்பதற்கு ஸமயம் எதிர்பார்த்துக் கொண்டிருப்பவனாகையாலே இவனுடைய விநாசத்துக்கு அவ்வெம்பெருமான் ஒருநாளும் காரணமாகமாட்டான்; தன்னை நசிப்பித்துக்கொள்ளுவான் தானேயாவன். ... ... (179)

**180. தன்னைத்தானே முடிக்கையாவது—அஹங்காரத்தையும் விஷயங்களையும் விரும்புகை. 66**

180. சேதநன் தன்னைத் தானே நசிப்பித்துக்கொள்ளுகையாவது என்னென்னில், அஹங்கார யுக்தனாயிருக்கையும் சப்தாதி விஷயங்களை விரும்புகையுமாம்.

**181. அஹங்கார மக்நிஸ்பர்சம் போலே. 67**

181. அஹங்காரத்தின் கொடுமை சொல்ல முடியாதது. தீயானது தான் பட்ட விடமெங்கும் சுட்டு உருவழிக்குமாபோலே இவ்வஹங்காரமும் ஆச்ரயாசியாய் ஸ்வரூபத்தை நேராக உருவழித்துவிடும். ... ... ... (181)

**182. "ந காமகலுஷம் சித்தம்" "நஹிமே ஜீவிதேநார்த்தः" "ந தேஹம்" "எம்மா வீட்டுத் திறமும்" 68**

182. "ந காமகலுஷம் சித்தம் மம தே பாதயோஸ் ஸ்திதம்—"இத்யாதி ஜிதந்தா ச்லோகத்திலும், "நஹி மே ஜீவிதேநார்த்தः" இத்யாதி ஸ்ரீராமாயண ச்லோகத்திலும், "ந தேஹம் ந ப்ராணந்" இத்யாதி ஸ்தோத்ரரத்ந (57) ச்லோகத்திலும் "எம்மாவீட்டுத் திறமும் செப்பம்" என்ற திருவாய்மொழிப் (2-9-1) பாசுரத்திலும் அஹங்காரத்தின் கொடுமை சொல்லப்பட்டமை காண்க. (182)

**183. ப்ரதிகூல விஷயஸ்பர்சம் விஷஸ்பர்சம் போலே, அநுகூல விஷயஸ்பர்சம் விஷமிச்ர போஜநம் போலே. 69**

183. அஹங்காரத்தின் கொடுமை தெரிந்தது; இனி விஷயங்களின் கொடுமை எப்படிப்பட்ட தென்னில்; ப்ரதிகூல விஷயமென்றும், அநுகூல விஷய மென்றும் விஷயம் இருவகைப்படும். ப்ரதிகூல விஷயமாவது—லோக விருத்த மாயும் நரக ஹேதுவாயுமிருக்கிற நிஷித்த விஷயம். அநுகூல விஷயமாவது—லோகவிருத்தமுமல்லாமல் நரகஹேதுவுமல்லாமல் விசிஷ்ட வேஷத்துக்கு அநுகூல மாயிருக்கிற விஹித விஷயம். இவற்றுள், ப்ரதிகூல விஷய ஸ்பர்சமானது விஷ ஸ்பர்சம் போலேயாம்; அநுகூல விஷய ஸ்பர்சமானது விஷங் கலந்த சோற்றை யுண்பதுபோலேயாம். [ஒன்றில் ப்ராதிகூல்யம் ஸ்பஷ்டமாயிருக்கும்; மற்றொன்றில் மறைந்திருக்கும் என்பது வாசி.] ... ... ... (183)

**184. அக்நிஜ்வாலையை விழுங்கி விடாய்கெட நினைக்குமாபோலேயும் ஆடுகிற பாம்பின்நிழலிலே யொதுங்க நினைக்குமாபோலேயும், விஷய ப்ரவணனாய் ஸுகிக்க நினைக்கை. 70**

184. இப்படி விநாச ஹேதுக்களான விஷயங்களிலே ஊன்றி ஸுகமடைய நினைப்பதானது, தண்ணீர் குடித்து தாஹம் தீரவேண்டியவன் ப்ரமத்தினாலே அக்நி ஜ்வாலையை விழுங்கி தாஹம் தீர நினைப்பதுபோலவும், ஸூர்ய கிரணங்க ளாலே மிகவும் தபிக்கப்பட்டவன் அந்தத் தாபத்தை ஆற்றுகைக்காக கோபத்தோடு படத்தை விரித்து நின்றாடுகிற பாம்பின் நிழலிலே யொதுங்க நினைப்பது போலவுமாம்.

**185. அசுணமா முடியுமாபோலே பகவதநுபவைக பரனாய் ம்ருதுப்ரக்ருதியா யிருக்குமவன் விஷய தர்சநந்தாலே முடியும்படி. 71**

185. எம்பெருமானை அநுபவிப்பதொன்றிலேயே ஊன்றின நெஞ்சுடையனாய் அவனுடைய குண ரஸத்திலே நைந்து விஷயாந்தரங்களின் பேர் காதில் விழுந்தாலும் பரிதபிக்கும்படி ம்ருதுப்ரக்ருதியா யிருக்குமவன் அநந்ய போகத்வ

மாகிற ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல விஷயங்களைக் கண்ணால் கண்ட மாத்திரத்திலே ஏங்கி முடிந்து போவன்; எப்படி போல வென்றால்; ''அசுணமா'' என்கிற ஒரு பறவையானது மிகவும் இனிதானவொரு பாட்டைக் கேட்டு அதனால் நெஞ்சு நீர்ப்பண்டமாய் இளகியிருக்கிற நிலைமையில் மிகக் கொடிய பறை அடிக்கப்பட்டு அதன் ஒலி அப்பறவையின் காதில் விழுந்தால் உடனே அது மாண்டு போவது இயல்பு; அதுபோலவாம். ... ... ... ... (185)

186. ''காட்டிப்படுப்பாயோ'' என்னக் கடவதிறே. 72

186. ''ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம், பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ'' (திருவாய் 6, 9, 9,) என்ற அருளிச்செயலை நோக்கினால், விஷயாந்தரங்களின் காட்சியே ஞானிகளை முடிக்கவல்லது என்னுமிடம் விளங்கும்.

187. அஜ்ஞனை விஷயப்ரவணன் கேவல நாஸ்திகனைப்போலே; ஜ்ஞாநவானை விஷயப்ரவணன் ஆஸ்திக நாஸ்திகனைப்போலே. 73

187. விஷயங்களினுடைய தோஷங்களையும் ஸ்வரூப விரோதத்தையும் அறியாமல் அவற்றை ஆசைப்பட்டு மேல் விழுகிறவன் வெறும் நாஸ்திகனோடு ஒப்பன்; விஷயங்களின் தோஷங்களையும் ஸ்வரூப விரோதத்தையும் அறிந்து வைத்தே அவற்றை விரும்பி மேல்விழுகிறவன் ஆஸ்திக நாஸ்திகனோடொப்பன். [சாஸ்த்ரத்தில் ப்ராமாண்ய புத்தி இல்லாமல் தான்தோன்றியாகச் செய்து திரிகிறவன்—வெறும் நாஸ்திகனெனப்படுவன். சாஸ்த்ரங்களை ப்ரமாணமாக இசைந்து ஆஸ்திகனென்று சொல்லத் தக்கவனாயும் அந்த சாஸ்த்ர வரம்பில் அடங்காமல் தோன்றினபடியே செய்துதிரிவதுபற்றி நாஸ்திக ஸமனாயும் இருப்பவன் ஆஸ்திக நாஸ்திகனெனப்படுவன்.] ... ... ... (187)

188. கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ்திக நாஸ்திகனை யொருநாளும் திருத்தவொண்ணாது. 74

188. இவ்விருவர்கட்கும் வாசியுண்டோவென்னில்; உண்டு;—சாஸ்த்ரமே இல்லை யென்றெண்ணி மனம்போனபடி செய்து திரியும் கேவல நாஸ்திகனுக்கு சாஸ்த்ரங்களில் ஆஸ்திக்யம் பிறப்பதற்கீடான உபதேசங்களைப்பண்ணி விதி நிஷேதங்களுக்கு வசப்படும்படி அவனை ஒருகால் திருத்த முடியும்; சாஸ்த்ரங்களை அறிந்துவைத்தே பாவங்களுக்கு அஞ்சாமல் நாஸ்திகனைப்போலே மனம்போனபடி செய்து திரிகிறவனுக்குச் சொல்லித் தெரிவிக்கவேண்டிய தொன்றுமில்லாமையாலே அவனை உபதேசத்தாலே ஒருநாளும் திருத்தமுடியாது. .... (188)

189. இவையிரண்டும் ஸ்வரூபேண முடிக்குமளவன்றிக்கே பாகவத விரோதத்தையும் விளைத்து முடிக்கும். 75

189. அஹங்காரமும் விஷய ப்ராவண்யமுமாகிற இவையிரண்டும் தானான தன்மையாலே நின்று கெடுக்குமளவே யன்று; பாகவதாபசாரமாகிற பெரிய அநர்த்தத்தையும் விளைத்து ஸ்வரூபத்தைக் கெடுக்கும். — ... (189)

**190. நாமரூபங்களையுடையராய் பாகவத விரோதம் பண்ணிப் போருமவர்கள் தக்தபடம் போலே.** 76

190. பாகவதாபசாரம் ஸ்வரூபத்தைக் கெடுக்குமாகில், பாகவதாபசாரமே போதுபோக்காயிருக்கும் எத்தனையோ பேர்கள் நாமரூபங்களை யுடையராய்க் கொண்டு திரியக் காண்கிறோமே, இஃது எங்ஙனே யெனில்; வெந்துபோன துணியை யொப்பர் இவர்கள். துணியானது உருவம் குலையும்படி வெந்திருக்கச் செய்தேயும் உருவுள்ளதுபோலத் தோற்றியிருக்கும்; அப்படியே இவர்களும். (190)

**191. மடிபுடவை வெந்தால் உண்டையும் பாவுமொத்துக் கிடக்கும்; காற்றடித்தவாறே பறந்துபோம்.** 77

191. தட்டி மடித்திருக்கிற துணி மொத்தமும் வெந்திருக்கச் செய்தேயும் உண்டையும் பாவும் முன்பு போலவே ஒத்திருக்கும்; ஒரு காற்றுவந்து சிதறவடித்த வாறே உருக்காண வொண்ணுதபடி பாறிப் பறந்துபோம். அப்படியே, பாகவதாபசாரமாகிற நெருப்பினுல் வெந்தவர்கள் நாமரூபங்களோடே கூடியிருந்தாலும் எம்பெருமானுடைய நிக்ரஹமாகிற காற்று அடிக்கும்போது ஒழிந்திடுவரென்று கொள்க. (உண்டை—குறுக்கிழை; பாவு—நெட்டிழை.) ... ... (191)

**192. "ஈச்வரனவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொருமை" என்று ஜீயரருளிச்செய்வர்.** 78

192. பாகவதாபசாரப்பட்டால் எம்பெருமான் ஸஹியாமல் தண்டிப்பா னென்பதற்கு ஆப்த வசநமும் ஒன்றுண்டு;—**ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொருமை"** என்று நஞ்சீயரருளிச்செய்வர். அதாவது—ஸங்கல்பத்தாலேயே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வேச்வரன் தன் ஸ்வரூபத்தை மாற்றிக்கொண்டு பல யோனிகளிலும் பிறந்து இரணியன், இராவணன் முதலியவர்களைக் கையாலே தொட்டுக் கொன்றதெல்லாம்— ப்ரஹ்லாதன், மஹர்ஷிகள் முதலான பாகவத விஷயங்களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹிக்க முடியாததாகையாலே "இவர்களை ஸங்கல்ப மாத்திரத்தினுல் அழிப்பது போராது, கை தொட்டுச் சித்ரவதை பண்ணவேணும்" என்ற எண்ணத் தினுலாம் என்பது நஞ்சீயர் திருவாக்கு. ... ... ... (192)

**193. "அவமாநக்ரியா"** 79

193. **"யா ப்ரீதிர் மயி ஸம்வ்ருத்தா மத்பக்தேஷு ஸதா அஸ்து தே—அவமாநக்ரியா தேஷாம் ஸம்ஹரத்யகிலம் சுபம்."** என்று எம்பெருமான் தானே அருளிச் செய்தான். (இதன் பொருள்:—என்பக்கல் வைக்கும் அன்பு என் அடியவர்கள் பக்கலிலும் ஆகுக; அவர்களிடத்தில் அபசாரப்படுவது எல்லா நன்மைகளையும் குலைத்துவிடும்.) ... ... ... ... ... (193)

**194. பாகவதாபசாரந்தான் அநேகவிதம்.** 80

**195. அதிலே யொன்று அவர்கள் பக்கல் ஜந்ம நிரூபணம்.** 81

**196. இதுதான் அர்ச்சாவதாரத்திலுபாதாநஸ்ம்ருதியிலுங்காட்டில் க்ரூரம்.** 82

194—196. பாகவதாபசாரம் ஒருவிதமல்ல; அவர்களுடைய பிறப்பை நிரூபித்தல், அறிவை நிரூபித்தல், ஆசாரத்தை நிரூபித்தல், தேஹ நிலைமையை நிரூபித்தல், உறவினரை நிரூபித்தல், இருப்பிடத்தை நிரூபித்தல் என்றிப்படி பலபடிப்பட்டிருக்கும். நிஹீந குலங்களிலே பிறந்த பாகவதர்களை பகவத் ஸம்பந்தத்தால் வந்த மேன்மை பாராதே பிறப்பையே பார்த்து அவமதிக்கை இவ்வபசாரங்களுள் ஒன்று. எம்பெருமானுடைய அர்ச்சாவதாரத் திருமேனியில் உபாதாந த்ரவ்யத்தை நிரூபிப்பதிற் காட்டிலும் இந்த பாகவத ஜன்ம நிரூபணம் மிகவும் கொடியது. .... ... .... ... (194—196)

197. அத்தை மாத்ருயோநி பரீக்ஷையோடொக்கும் என்று சாஸ்த்ரம் சொல்லும். 83

197. "அர்ச்சாவதாரோபாதாநவைஷ்ணவோத்பத்திசிந்தநம் — மாத்ருயோநி பரீக்ஷாயாஸ் துல்யமாஹுர் மநீஷிணः" என்று—அர்ச்சாவதாரத்தில் உபாதாநத்ரவ்ய நிரூபணத்தையும் பாகவத ஜந்ம நிரூபணத்தையும் மாத்ருயோநி பரிக்ஷைக்கு ஸமமாக சாஸ்த்ரம் சொல்லாநின்றதேயாகிலும் பாகவத ஜன்ம நிரூபணமென்பது அதிற்காட்டிலும் மிகவும் கொடியதேயாம். .... .... ... (197)

198. த்ரிசங்குவைப்போலே கர்மசண்டாலனுய் மார்விலிட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய்விடும். 84

198. இவ்வபசாரமுண்டானபோதே கர்ம சண்டாளத்வம் வந்து விடும்; இதற்கு த்ரிசங்குவே த்ருஷ்டாந்தம். ... ... ... (198)

199. ஜாதிசண்டாலனுக்கு காலாந்தரத்திலே பாகவதனுகைக்கு யோக்யதையுண்டு; அதுவுமில்லை யிவனுக்கு. 85

199. பிறவிச் சண்டாளனுக்கு அந்த ஜந்மத்திலேயோ மறு ஜந்மத்திலோ பகவத் கடாக்ஷம் பெற்று பாகவதனுகைக்கு உரிமையுண்டு; பாகவதாபசாரமாகிற கருமத்தாலே சண்டாளனுகும் பாவிக்கு அந்த யோக்யதையுமில்லை. ... (199)

200. ஆரூடபதிதனுகையாலே. 86

200. அதற்குக் காரணமேதென்னில், பாகவதத்வமாகிற உயர்ந்த நிலத்திலேயேறி மிகக் கொடிதான பகவந் நிக்ரஹத்துக்கு ஹேதுவான பாகவதாபசாரத்தாலே அடியுண்டு கீழே விழுந்தவனுகையாலே. ... ... (200)

201, இது தனக்கு அதிகாரிநியமமில்லை. 87

201. பிறவியினுலும் அறிவினுலும் தாழ்ந்தவர்கள் அவற்றுலுயர்ந்தவர்கள் விஷயத்திலே அபசாரப்பட்டாலும் சரி; இவற்றுலுயர்ந்தவர்கள் இவற்றுல் தாழ்ந்தவர்கள் விஷயத்திலே அபசாரப்பட்டாலும் சரி; எல்லாம் கொடியதே "தாழ்ந்தவர்கள் தாம் அபசாரப்படக் கூடாது. உயர்ந்தவர்கள் அபசாரப்படலாம்" என்பதில்லை யென்றபடி. .. — ... ... (201)

202. "தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும்" என்கையாலே. 88

202. "அமரவோரங்கமாறும் வேதமோர் நான்குமோதித், தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும், நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோரளவிலாங்கே,

அவர்கள்தாம் புலையர்போலும் அரங்கமா நகருளானே!" என்ற திருமாலைப் பாசுரம் இதற்குப் பிரமாணமாம். ... ... ... ... (202)

**203. இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தையும் பிள்ளைப் பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது. 89**

203. இதற்குச் சில இதிஹாஸங்களும் கேண்மின்;— விச்வாமித்ரனிடத்தில் வித்யைகளையெல்லாம் அதிகரித்த காலவனென்னு மந்தணன் முடிவில் "குரு தக்ஷிணை கொடுத்தாலொழிய நமக்கு இந்த வித்யைகள் நிலைநில்லா" என்றெண்ணி "அடியேன் என்ன தக்ஷிணை ஸமர்ப்பிக்கவேணும்?" என்று கேட்டான்; அதற்கு அவர், நான் உன்னுடைய பக்தியினாலும் சுச்ரூஷையினாலும் ப்ரஸந்நனாயினேன்; எனக்கு நீ ஒன்றும் ஸமர்ப்பிக்கத் தேவையில்லை" என்றார். அப்படி அவர் பலகால் சொல்லியும் காலவன் கேளாமல் "ஏதாவதொரு தக்ஷிணை நியமித்தே யாகவேணும்" என்று நிர்ப்பந்திக்கவே, அவர் சீற்றங்கொண்டு "உடம்பெல்லாம் சந்திர மண்டலம் போலே வெளுத்து ஒரு காது பச்சையாயிருக்கப்பெற்ற எண்ணூறு குதிரைகள் கொண்டு தா" என்றார். காலவன் இதைக்கேட்டு வியாகுலனாய் என் செய்வதென்று சிந்தித்து, ஸர்வாபேக்ஷிதங்களையு மளிக்கவல்ல எம்பெருமானை உபாஸிக்க முயன்ற வளவிலே முன்பே யிவனுக்கு ஆப்தனாயிருந்த கருடன் வந்து முன்னின்றான்; அவனை இவன் ஸ்தோத்ரம் பண்ணி, தன் வியாகுலத்தைச் சொல்லி இதற்கென்ன செய்யலாமென்று கேட்க; "உன்னை நான் சுமந்துகொண்டு இப்பூமண்டலமெங்கும் திரிகிறேன், இருவருமாய்த் தேடிப் பார்க்கலாம் வா" என்றான் கருடன். அப்படியே இருவருமாய்த் திரியும்போது மேல் ஸமுத்ரத்தில் ரிஷபமென்னும் மலையின்மீது இளைப்பாற நின்றவளவிலே அங்கே வஸிப்பவளும் அறிவிற் சிறந்தவளுமான சாண்டில்யை என்கிற ஒரு வைஷ்ணவியைக் கண்டு சென்று வணங்கி அவளால் ஸத்காரமும் பெற்று இவர்கள் அங்கே படுக்கும்போது "இப்படி விலக்ஷணையா யிருக்கிற இவள் விலக்ஷணமான வொரு திவ்ய தேசத்திலே வஸிக்கலாகாதா?" என்று கருடன் நினைத்து "இவளை இங்குநின்றும் ஒரு திவ்ய தேசத்திலே கொண்டுபோய் வைக்கக்கடவோம்" என்றெண்ணி யிருக்கையில்— அந்த வைஷ்ணவி இருந்த இடத்தை இழிவாக நினைத்த இவ்வபசாரத்தாலே சிறகுகள் உதிர்ந்து ஒன்றும் செய்ய முடியாமற் போய்விட, இதைக் காலவன் கண்டு 'மாநஸமாக ஏதேனும் அபசாரப் பட்டதுண்டோ? என்று கேட்க, அவன் உண்மையைச் சொல்லி அவளிடத்திலும் பொறுமை வேண்ட, அவளது அநுக்ரஹத்தாலே அவ்வபசாரம் நீங்கி முன்புபோலே யானான். (இக்கதை மஹாபாரதத்தில் உத்யோக பர்வத்தில் 112-ஆம் அத்தியாயத்திலுள்ளது)

பிள்ளைப் பிள்ளையாழ்வானென்கிற ஒரு சிஷ்யர்க்குக் கூரத்தாழ்வானருளிச் செய்ததொரு வார்த்தையுமுண்டு; பிள்ளைப் பிள்ளையாழ்வானென்பவர் ஆபிஜாத்யம் முதலியவற்றால் மேம்பட்டவராகையாலே பாகவத விஷயங்களில் விநயமில்லாமல் அபசாரப்பட்டுக்கொண்டே யிருந்தார்; ஆழ்வான் இதைக்கண்டு "ஐயோ! இவர்க்கு இந்த பாகவதாபசாரம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தித் தானே மேலாகி விநாசத்தை விளைத்திடுமே!, அதுக்கு வேலி

யிட்டு வைக்கவேணும்'' என்று திருவுள்ளம்பற்றி ஒரு புண்யகாலத்திலே நீராட்ட மானபின் இவரை நோக்கி "எல்லாரும் தானம் பண்ணுகிற இக்காலத்திலே நீரும் நமக்கொரு தானம் பண்ணமாட்டீரோ?" என்ன, "அடியேன் எத்தை தானம் பண்ணுவது, எல்லாம் ஸ்வாமியினுடையதே யன்றோ'' என்ன; 'அஃது இருக்கட்டும், மநோ வாக்காயங்கள் மூன்றாலும் பாகவதாபசாரப் படாமல் வர்த்திக்கக் கடவேன் என்று நம் கையிலே உதககதானம் பண்ணவேணும்' என்று ஆழ்வான் அருளிச்செய்ய, அப்படியே இவரும் உதக தானம் பண்ணித்தந்த பின்பு ஒரு நாள் பூர்வ வாஸநையாலே பாகவதாபசாரப்பட நேர்ந்தவாறே "நாம் இனி முடிந்தோம்'' என்று பயப்பட்டு அன்று ஆழ்வான் ஸந்நிதிக்கு விடைகொள்ள வெள்கித் தம் திருமாளிகையிலேயே இருந்துவிட, இவர் வழக்கப்படி வருகிற காலத்தில் வரக் காணாமையாலே ஆழ்வான் இவர் திருமாளிகையிலே யெழுந்தருளி வினவியருள, அவர் தமக்கு மாநஸிகமாகப் பாகவதாபசாரம் நேர்ந்தமையை விண்ணப்பம் செய்து "கரணத்ரயத்தாலும் அபசாரம் விளையாதபடி இத்தேஹத்தோடு வர்த்திக்கை அரிதாயிருக்கின்றது!, என் செய்வேன்?'' என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து வருந்த "இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாயிற்றே!'' என்று உகந்தருளி "மாநஸிகமான அபசாரத்திற்கு அநுதாப முண்டாகவே ஈச்வரன் பொறுத்தருள்வன், ப்ரத்யக்ஷத்தில் ராஜ தண்டனை கிடைக்குமென்ற பயத்தாலே காயிகமாக ஒருவரையும் நலியமாட்டீர்; இனி வாக்கொன்றையும் நன்றாகக் குறிக்கொண்டு இரும்'' என்றருளிச் செய்தார். .... ... ... (203)

**204. ஜ்ஞாநாநுஷ்டானங்களை யொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள் பக்கல் ஸம்பந்தமே யமைகிறப்போலே அவையுண்டானாலு மிழவுக்கவர்கள் பக்கல் அபசாரமே போரும். 90**

204. ஒருவனுக்குப் பேறு கிடைக்க வேணுமானால் ஜ்ஞாநாநுஷ்டாநங்களில்லாவிட்டாலும் ஒரு பாகவதருடைய ஸம்பந்தம் கிடைத்ததாகில் அதுவே போதும் என்று ஏற்பட்டிருப்பதுபோல், ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் பரிபூர்ணமாக இருந்தாலும் பாகவதாபசாரமுண்டாகில் அஃதொன்றே விநாசத்துக்கு ஹேதுவாகுமென்பதும் சாஸ்த்ர ஸித்தம். ... .... .... (204)

**205. இதில் ஜன்ம வ்ருத்தாதி நியமமில்லை. 91**

205. "பேற்றுக்கு பாகவத ஸம்பந்தமே போரும், விநாசத்துக்கு பாகவதாபசாரமே போரும்'' என்ற இவை யிரண்டிலும்—"பிறவியாலும் ஆசாரத்தாலும் உத்க்ருஷ்டரான பாகவதர்களோடுண்டான ஸம்பந்தமே பேற்றுக்கு ஹேதுவாகும், அவற்றால் நிக்ருஷ்டரானவர்களோடுண்டான ஸம்பந்தம் பேற்றுக்கு ஹேது வாகாது'' என்கிற நியதியும் "அவற்றால் உத்க்ருஷ்டரானவர்கள் விஷயத்தில் பண்ணும் அபசாரமே விநாசத்துக்கு ஹேதுவாம்; நிக்ருஷ்டரானவர் விஷயத்தில் பண்ணுமபசாரம் அப்படி விநாசத்துக்கு ஹேதுவாகாது, என்கிற நியதியுமில்லை; ஜந்மமும் ஆசாரமும் ஏதுவாயினுமாகுக. பகவத் ஸம்பந்தமுடையவர்கள் பாகவதர்கள்; அவர்களுடைய ஸம்பந்தம் பேற்றுக்கு ஹேது; அவர்கள் திறத்திலபசாரம் இழவுக்கு ஹேது—என்றிவ்வளவே யுள்ளது. .... ... (205)

296. இவ்வர்த்தம் கைசிக வ்ருத்தாந்தத்திலும், உபரிசரவஸு வ்ருத்தாந்தத்திலும் காணலாம். 92

206. இவ்விஷயம் நிஹீந குலத்திற் பிறந்த நம்பாடுவான் சரிதையிலும், உத்க்ருஷ்ட ஜாதியிற் பிறந்த உபரிசரவஸுவின் சரிதையிலும் காணலாம். சண்டாள யோநியில் பிறந்து பகவத் பக்தர்களில் தலைவனுயிருந்த நம்பாடுவான் தான் பாடின கைசிகமென்னும் பண்ணின் பலனை ஒரு ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸுக்குக் கொடுத்து ; அதனை உஜ்ஜீவிப்பித்த விஷயம் கைசிகமாஹாத்மியத்தில் விசதம். தேவர்களாலும் முனிவர்களாலும் அநுவர்த்திக்கப்பட்டு மஹா வைபவ சாலியாய், தனது தவ வலிமையினல் பரிவாரங்களோடு கூட ஆகாயத்தில் திரியும் திறலுடையனுன உபரிசரவஸு வென்கிற ஒரு அரசனிருந்தான்; ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் யாகத்துக்குரிய பசு விஷயமாக விவாதம் நேர்ந்த காலத்து அவ்விரு வகுப்பினரும் ஸம்சயம் தீர்த்துக்கொள்ள இவ்வரசனிடம் வந்து தம் தம் பக்ஷங்களைச் சொல்லி வினவினபோது தேவர்கள் பக்கல் பக்ஷபாதத்தாலே அவர்கட்கு அநுகூலமாக முடிவு சொல்ல, ரிஷிகள் கோபித்து "இப்படி பக்ஷபாதியான நீ கீழே விழக் கடவாய்; இனிமேல் உனக்கு ஆகாச யாத்திரை இல்லையாகக் கடவது" என்று சபிக்க, அப்படியே அரசன் அதோகதியடைந்துவிட்டானென்பது மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் விசதம். .... ... .... ... (206)

207. ப்ராஹ்மண்யம் விலைச்செல்லுகிறது வேதாத்யயநாதி முகத்தாலே பகவல்லாப ஹேதுவென்று; அதுதானே யிழவுக்குறுப்பாகில் த்யாஜ்யமாமிறே. 93

207. சாஸ்த்ரங்களெல்லாம் ப்ராஹ்மண்யத்தைச் சிறப்பித்துச் சொல்லாநிற்க, பிறப்பால் வரும் மேன்மை உபயோகமற்றது என்றிப்படி சொல்லிவிடலாமோ வென்னில், வேதங்களை ஓதி அவற்றின் பொருள்களையும் நன்குணர்ந்து எம்பெருமானைப் பெறுவதற்கு உறுப்பாயிருக்குந் தன்மையினலேயே ப்ராஹ்மண்யம் சிறப்பித்து கூறப்படுகின்றதேயன்றி, எக்கேடுகெட்டிருந்தாலும் ப்ராஹ்மண்யம் சிறந்ததேயாமென்று எங்கும் சொல்லப்படவில்லை; ஆகவே எம்பெருமானைப் பெறுவதற்குறுப்பான ப்ராஹ்மண்யந்தானே அவனை இழப்பதற்கு உறுப்பாகில் த்யாஜ்யமாகுமே யொழிய உபாதேயமாகுமோ? ஆகாது. .. ... (207)

208. ஜன்ம வ்ருத்தங்களினுடைய உத்கர்ஷமும் அபகர்ஷமும் பேற்றுக்கு மிழவுக்கு மப்ரயோஜகம். 94

208. உத்க்ருஷ்டமான பிறப்பும் அனுட்டாநமுமே இழவுக்கு உறுப்பாய் விடில் நிக்ருஷ்டமான ஜந்மாநுஷ்டாநங்கள் பேற்றுக்கு உறுப்பாக வழியுண்டோ? என்னில், கேண்மின்; ஜந்மாநுஷ்டானங்களில் சிறந்தவர்களிலும் சிலர் பேறு பெறுகிருர்கள், சிலர் இழக்கிருர்கள்; இப்படியே ஜந்மாநுஷ்டாநங்களால் தாழ்ந்தவர்களிலும் சிலர் பெறுகிருர்கள்; சிலர் இழக்கிருர்கள்—என்பதை நாம் சாஸ்த்ரங்களில் காண்கிருேம்; ஆகையாலே ஜந்மாநுஷ்டாநங்களினுடைய சிறப்பும் தாழ்வும் பேற்றுக்கும் இழவுக்கும் உறுப்பன்று. .... ... (208)

209 ப்ரயோஜகம் பகவத் ஸம்பந்தமும் ததஸம்பந்தமும். 95

209. பின்னை எதுதான் உறுப்பென்னில், எம்பெருமானுக்கு உரிய தொண்டாயிருக்கையாகிற பகவத் ஸம்பந்தம் பேற்றுக்கு உறுப்பு; அப்படிப்பட்ட பகவத் ஸம்பந்தமில்லாமை இழவுக்கு உறுப்பு. ... .... (209)

210. பகவத் ஸம்பந்தமுண்டானால் இரண்டு மொக்குமோ என்னில். 96

211. ஒவ்வாது. 97

212. உத்க்ருஷ்டமாக ப்ரமித்த ஜன்மம் ப்ரம்சஸம்பாவனையாலே "சரீரேச" என்கிறபடியே பய ஜநகம். 98

213. அதுக்கு ஸ்வரூப ப்ராப்தமான நைச்யம் பாவிக்கவேணும். 99

214. அபக்ருஷ்டமாக ப்ரமித்த உத்க்ருஷ்ட ஜந்மத்துக்கு இரண்டு தோஷமுமில்லை. 100

215. நைச்யம் ஜன்மஸித்தம். 101

216. ஆகையாலே உத்க்ருஷ்ட ஜந்மமே ச்ரேஷ்டம். 102

210—216. உத்க்ருஷ்ட ஜன்மமுடையவர்களும் நிக்ருஷ்ட ஜன்மமுடையவர்களுமான இருவகுப்பினர்க்கும் பகவத் ஸம்பந்தமுண்டானால் அவ்விரு வகுப்பினர்க்கும் பாகவதத்வம் துல்யமானதன்றோ; அத்தோடே உத்க்ருஷ்ட ஜன்மமுடையவன் நிக்ருஷ்ட ஜந்மமுடையவனிற் காட்டிலும் ஜந்மப்ரயுக்தமான சிறப்பையுமுடையவனன்றோ? என்னில், உத்க்ருஷ்ட ஜந்மமென்றும் நிக்ருஷ்ட ஜந்மமென்றும் வ்யவஹரிக்குமவர்கள் ப்ரமத்தாலே ஒன்றை ஒன்றாக நினைத்து வ்யவஹரிக்கிறார்கள். மோக்ஷத்வத்துக்கு அநுகூலமான ஜந்மம் எதுவோ அது உத்க்ருஷ்டம்; அங்ஙனல்லாத ஜந்மம் நிக்ருஷ்டம் என்னுமிவ்வளவே சாஸ்த்ரஸித்தம்; உத்க்ருஷ்ட ஜந்மாவாகில் ஸ்வரூப விருத்தமான உபாயாந்தரங்களிலே இழிந்து அநர்த்தப்படுகைக்கு உடலாகவுங்கூடும்; தவிரவும், அவனுக்கு அஹங்கார யோக்யதை குறையற்றதாகையாலே, இயற்கையான நைச்சியம் செயற்கையாக வேண்டி வருகின்றது. நிக்ருஷ்ட ஜன்மாவுக்கு இக்குற்றங்கள் நேரிட ப்ரஸக்தியில்லை; உபாயாந்தரத்தில் ப்ரவ்ருத்தி யோக்யதையும் அஹங்காரமும் இல்லாததோடு நைச்யம் ஜந்மஸித்தமாயிருக்கும்; ஆகையாலே உத்க்ருஷ்டமான நிக்ருஷ்ட ஜந்மமே ச்ரேஷ்டதரமாகும். .... .... ... (210—216)

217. "ச்வபசோऽபி மஹீபால" 103

217. இவ்வர்த்தத்திற்கு ப்ரமாணம் காண்மின்—"ச்வபசோऽபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:" என்பதாம். எத்தனையேனும் நிக்ருஷ்ட ஜந்மாவாயிருந்தானேயாகிலும் பகவத் பக்தனானவன் அந்தணனிற் காட்டில் அதிகன்; உத்க்ருஷ்ட ஜந்மாவான மாத்திரமன்றிக்கே உத்தமாச்ரமியுமாயிருந்தானேயாகிலும் பகவத் பக்தியில்லாதவளவில் சண்டாளனிற் காட்டில் தண்ணியன்—என்று வர்ணாச்ரமங்களில் சரக்கறுத்து பகவத் ஸம்பந்தமே உத்கர்ஷ ஹேதுவாகச் சொல்லிற்று. .... ... ... (217)

**218. நிக்ருஷ்ட ஜந்மத்தால் வந்த தோஷம் சமிப்பது விலக்ஷண ஸம்பந்தத்தாலே. 104**

218. ஆக, நிக்ருஷ்ட ஜந்மம் இன்னதென்றும் உத்க்ருஷ்ட ஜந்மம் இன்னதென்றும் நிச்சயிக்கப்பட்டது; அதில் நிக்ருஷ்ட ஜந்மத்தில் வந்த தோஷம் எத்தாலே தணியுமென்னில்; விலக்ஷணரான ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஸம்பந்தத்தாலே தணியும். ... ... ... .. (218)

**219. ஸம்பந்தத்துக்கு யோக்யதை யுண்டாம்போது ஜன்மக் கொத்தை போகவேணும். 105**

219 விலக்ஷணருடைய ஸம்பந்தமுண்டாவதற்கு தன்னுடைய ஜன்மத்திலுள்ள தோஷம் கழியவேண்டுவது அவசியம். ... ... .... (219)

**220. ஜந்மத்துக்குக் கொத்தையும் அதுக்குப் பரிஹாரமும் "பழுதிலா வொழுகல்" என்கிற பாட்டிலே யருளிச் செய்தார். 106**

220. ஜந்மத்துக்குக் கொத்தையாவது ஆபிஜாத்யம் முதலியவற்றாலுண்டாகும் அஹங்காரம்; அந்த அஹங்காரமில்லாத விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்தில் பண்ணும் அநுவர்த்தந விசேஷம் அதற்குப் பரிஹாரம் என்பது "பழுதிலா வொழுகல்" என்கிற திருமாலைப் பாசுரத்தில் (40) விசதம். ... (220)

**221. வேதகப் பொன்போலே யிவர்களோட்டை ஸம்பந்தம். 107**

221. ஜந்மக் கொத்தை கழிந்து விலக்ஷணரோடே ஸம்பந்தமுண்டாகவே இவனும் விலக்ஷணனாய்விடுவனோவென்னில், ஆம்; வேதகப் பொன்போலே யன்றோ இவர்களோடுண்டான ஸம்பந்தம். (பல ஸித்தௌஷதங்களையிட்டுப் பலகாலுருக்கி குளிகையாகப்பண்ணி ரஸவாதிகள் கையிலிருக்கும் பொன்—வேதகப் பொன்; அது ஸ்பர்சமாத்திரத்தாலே இரும்பைப் பொன்னாக்கும். அதுபோலே விலக்ஷணருடைய ஸம்பந்தம் நிக்ருஷ்ட ஜந்மத்தால் வந்த தோஷத்தைப்போக்கி இவனையும் விலக்ஷணனாக்கிவிடும். ... .. — (221)

**222. இவர்கள் பக்கல் ஸாம்யபுத்தியு மாதிக்ய புத்தியும் நடக்கவேணும். 108**

**223. அதாவது—ஆசார்யதுல்யரென்றும் ஸம்ஸாரிகளிலும் தன்னிலு மீச்வரனிலும் அதிகரென்றும் நினைக்கை. 109**

222, 223. இப்படிப்பட்ட விலக்ஷண ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆசார்ய துல்யராகவும் தன்னையும் ஈச்வரனையுங் காட்டிலும் மேற்பட்டவர்களாகவும் நினைக்கவேணும். ... .. ... ... (222, 223)

**224. ஆசார்ய ஸாம்யத்துக்கடி ஆசார்ய வசநம். 110**

224. ஆசார்யரோடு துல்யராக ஒருவரையும் நினைக்கக்கூடாதென்றிருக்க இவர்களை ஆசார்ய துல்யராக எப்படி நினைக்கலாமென்னில், "ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் நம்மைக் கண்டாற்போலே காணும்" என்று ஆசார்யன் உபதேசிக்குமதுவே இதற்கு மூலம். ... ... ... ... (224)

225. இப்படி [illegible]தொழிகையு மபசாரம். 111

225. ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல் பிறப்பு முதலியவற்றையிட்டுத் தாழ்வு நினைப்பது அபசாரமானாற்போலே கௌரவித்து நினையாதொழிகையும் அபசாரமாய்த் தலைக்கட்டும். ... ... ... ... (225)

226. இவ்வர்த்தம் இதிஹாஸ புராணங்களிலும் *பயிலுஞ்சுடரொளி * நெடுமாற்கடிமையிலும் *கண்சோர வெங்குருதியிலும்*நண்ணாத வாளவுணரிலும் * தேட்டருந்திறற்றேனிலும்,* மேம்பொருளுக்கு மேலில்பாட்டுக்களிலும் விசதமாகக் காணலாம். 112

226. இவ்விஷயம் இதிஹாஸ புராணங்களிலும், "பயிலுஞ் சுடரொளி" (திருவா. 3—7.) "நெடுமாற்கடிமை" (திருவா. 8—10.) என்கிற திருவாய்மொழிகளிலும், "நண்ணாதவாளவுணர்" (பெரிய திருமொழி 2, 6) "கண்சோர வெங்குருதி" என்கிற (பெரியதிருமொழி 7—4) திருமொழிகளிலும், "தேட்டருந் திறல் தேனினை" என்கிற (பெருமாள் திருமொழி 2) திருமொழியிலும் திருமாலையில் "அடிமையிற் குடிமை யில்லா" என்கிற பாசுரம் (36) முதலாக ஆறு பாசுரங்களிலும் விரிவாகக் காணத்தகும். ... .... .... (226)

227. க்ஷத்ரியனான விச்வாமித்ரன் ப்ரஹ்மர்ஷியானான். 113

228. விபீஷணனை ராவணன் குலபாம்ஸநனென்றான்; பெருமாள் இக்ஷ்வாகு வம்சயனாக நினைத்து வார்த்தை யருளிச்செய்தார். 114

229. பெரிய வுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார். 115

230. தர்மபுத்ரர் அசரீரி வாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையும்கொண்டு ஸ்ரீ விதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார். 116

231. ருஷிகள் தர்மவ்யாதன் வாசலிலே துவண்டு தர்ம ஸந்தேஹங்களை சமிப்பித்துக் கொண்டார்கள். 117

232. க்ருஷ்ணன் பீஷ்மத்ரோணாதிகள் க்ருஹங்களைவிட்டு ஸ்ரீ விதுரர் திருமாளிகையிலே அமுது செய்தான். 118

233. பெருமாள் ஸ்ரீ சபரி கையாலே யமுதுசெய்தருளினார். 119

227—233. இதிஹாஸாதிகளிலே பாகவத வைபவம் சொல்லியிருந்தாலும் "**நசூத்ரா பகவத்பக்தாः விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதாः**" என்றும் "ஸ விப்ரேந்த்ரோ முநிः **ஸ்ரீமாந் ஸ யதிஸ் ஸ ச பண்டிதः**" என்றும் சொன்ன விப்ரத்வாதிகள் அர்த்தவாதமாகுமேயொழிய அபக்ருஷ்ட ஜந்மத்திற் பிறந்தவன் அந்த சரீரத்திலேயே உத்க்ருஷ்டனாகக் கூடுமோவென்று சிலர் சங்கிப்பர்கள்; அந்த சங்கை தீருமாறு சில உதாஹரணங்கள் காட்டப்படுகின்றன; க்ஷத்திரிய குலத்திற் பிறந்த விச்வாமித்ரன் தபோவிசேஷமடியாக வஸிஷ்ட வாக்யத்தாலே ப்ரஹ்மர்ஷியாய்விட்டான்; இராவணனாலே ஸ்வகுலத்தில் நின்றும் மறுத்துத் தள்ளப்பட்ட விபீஷணனை

இராமபிரான் இக்ஷ்வாகு வம்சத்தவனாக நினைத்து வார்த்தை சொன்னான்; [அதாவது—"ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்=ராக்ஷஸர்களுடைய பலாபலமிருக்கும்படியை நமக்குச் சொல்லு" என்ற வார்த்தையில் "உன் இனத்தாருடைய" என்ன வேண்டுமிடத்தில் அப்படிச் சொல்லாமல் "ராக்ஷஸர்களுடைய" என்கையாலே, விபீஷணனை ராக்ஷஸ ஜாதீயனாக நினையாமல் திருத்தம்பிமாரைப் போலே அபிமானித்து வார்த்தை சொன்னமை விளங்கும். இதில், விபீஷணனை இராவணன் விட்டமையும் பெருமாள் அங்கீகரித்தமையும் சொல்லுகையாலே பகவதாநுகூல்ய முண்டாகவே "இவன் நம்முடையனல்லன்" என்று ஸாமாந்யர்கள் கைவிடுவர்களென்பதும், எம்பெருமான் விரும்பி மேல்விழுந்து திருவுள்ளம் பற்றுவனென்பதும் சொல்லிற்றுகிறது.]

ஜடாயுவென்னும் பெரியவுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார். தர்மபுத்ரர் விதுரரை ஸம்ஸ்கரிக்கிற காலத்தில், அவருடைய ஜாதியைப் பார்ப்பதும் ஞானப் பெருமையைப் பார்ப்பதுமாய் "என் செய்வோம்" என்று வியாகுலப்படா நிற்கையில் "இவர் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்துக்கு அர்ஹர்" என்று சொன்ன அசரீரி வாக்யத்தாலே ஸந்தேஹமற்று வைதிகோத்தமர்களுக்குச் செய்யத்தக்க ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரத்தாலே ஸம்ஸ்கரித்தார். ரிஷிகளெல்லாரும் நிஹீந ஜந்மாவான ஒரு தர்ம வ்யாதனுடைய வாசலிலே துவண்டு தர்ம ஸந்தேஹங்களைத் தீர்த்துக்கொண்டார்கள். கண்ணபிரான் தூதுபோம்போது பீஷ்மர் த்ரோணர் முதலான உத்க்ருஷ்ட ஜந்மாக்களின் க்ருஹங்களை விட்டு சூத்ர யோனியிற் பிறந்தவரான விதுரருடைய திருமாளிகையிலே அமுதுசெய்தான். இராமபிரான் சபரியின் கையாலே அமுது செய்தான்,

### 234. மாறனேரிநம்பி விஷயமாகப் பெரியநம்பி உடையவர்க் கருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. 120

234. ஆளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்த மாறனேரிநம்பி தம்முடைய அந்திம காலத்திலே "ஆளவந்தார் அபிமாநித்தருளின இந்த தேஹத்தைப் பிரகிருதி பந்துக்கள் ஸ்பர்சித்தால் என்ன செய்வது" என்று அதிசங்கை பண்ணி, (தம்மோடுகூட வேதாந்தங்களை அதிகரித்தவரான) பெரிய நம்பியைப்பார்த்து "புரோடாசத்தை நாய்க்கு இடாமல் காக்கவேணும்" என்று சொல்லித் திருநாட்டுக்கெழுந்தருள, பெரிய நம்பியும் அப்படியே பிறர்கையில் காட்டிக்கொடாமல் தாமே சரம கைங்கரியங்கள் செய்து வந்தெழுந்தருளியிருக்க, இதை உடையவர் கேட்டு பெரிய நம்பியிடம் வந்து "சாஸ்த்ர வரம்பு குலையாமல் காரியம் செய்யவேணுமன்றோ? யாரையாவது கொண்டு செய்திருக்கலாமே; தேவரீரே செய்திருக்க வேணுமோ?" என்ன, அதற்கு அவர் ஸந்த்யாவந்தனத்திற்கு ஆளிடுவதுண்டோ? நான் சக்ரவர்த்தி திருமகனைக் காட்டில் சிறந்தவனோ? இவர் ஜடாயுவைக்காட்டிலும் தாழ்ந்தவரோ? *பயிலுஞ்சுடரொளி, *நெடுமாற்கடிமை முதலிய அருளிச்செயல்கள் கடலோசையோ? ஆழ்வாரருளிச்செய்த அர்த்தத்தைச் சிறிது குறைவாகிலும் அநுஷ்டிக்க வேண்டாவோ?" என்றருளிச்செய்தார். .... ... (234)

**235. "ப்ராதுர்ப்பாவை:" இத்யாதி. 121**

235. **"ப்ராதுர்ப்பாவை ஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா: ஜாத்யா வ்ருத்தை ரபிச குணதஸ் தாத்ருசோ நாத்ர கர்ஹா—கிந்து ஸ்ரீமத், புவநபவநத்ராணத:; அந்யேஷு வித்யா வ்ருத்தப்ராயோ பவதி விதவாகல்ப கல்ப: ப்ரகர்ஷ:"** என்கிற ச்லோகமும் அநுஸந்திப்பது:—எம்பெருமான் தேவ மநுஷ்யாதி ஸஜாதீயனுய்ப் பல யோநிகளிலும் அவதரிப்பதுபோல அவ்வெம்பெருமா னடியவர்களும் ஜாதியாலும் ஆசாரத்தாலும் குணத்தாலும் அப்படியே இதரர்களோடு ஒத்திருப்பர்; இதனுல் இழிவு இல்லை; இழிவில்லையென்பதுமட்டுமல்ல; சிறப்புமுள்ளது. எம்பெருமானும் பாகவதர்களும் இப்படி இதர ஸஜாதீயராய் நிற்பது இந்த லோகஸம்ரக்ஷணர்த்தமாகவேயன்றே. பாகவதரல்லாதவர்களிடத்திலுண்டான ஏற்றமெல்லாம் விதவைகளின் அலங்காரம் போலே நிந்தைக் குடலாமத்தனை என்றவாறு. .. ... (235)

**236. பாகவதனன்றிக்கே வேதார்த்த ஜ்ஞாநாதிகளையுடையவன் குங்குமம் சுமந்த கழுதையோபாதி யென்று சொல்லாநின்றதிறே. 122**

236. பாகவதர்களல்லாவிடில் அவர்களுக்குண்டான பாண்டித்யம் முதலியவை வீணுய்விடுமோ வென்னில்; **"சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் நவிந்தத்-வேதபாரபராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மண கர்த்தப:"** என்று சாஸ்த்ரம் சொல்லா நின்றது. அதாவது—பகவத் பக்தியை யுடையவனுகாமல் வேதாந்த ஜ்ஞாநம் முதலியவற்றை யுடையவன் குங்குமஞ் சுமந்த கழுதைபோல்வன் என்கை. (236)

**237. ராஜாவான ஸ்ரீகுலசேகரப்பெருமாள் திர்யக் ஸ்தாவர ஜந்மங்களை யாசைப்பட்டார். 123**

237. பகவத் ஸம்பந்தமில்லாத ஜந்மம் முதலியவை ஸத்துக்களால் இகழப்படுமென்பது நிரூபித்தாயிற்று. இனி பகவத் ஸம்பந்தமுள்ள திர்யக் ஜந்மங்களும் ஸத்துக்களால் விரும்பப்படுமென்பது காட்டப்படுகிறது. ஸ்ரீ குலசேகரப் பெருமாள் தம்முடைய திவ்யப்ரபந்தத்திலே "ஊனேறு செல்வத்து" என்னுந் திருமொழியிலே 'வேங்கடத்துக் கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே" என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களிலும் பகவத் ஸம்பந்தத்துக்கு அநுகூலமாக திர்யக்ஜந்மத்தையும் ஸ்தாவரஜந்மத்தையும் விரும்பினுர். ... (237)

**238. ப்ராஹ்மணேத்தமரான பெரியாழ்வாரும் திருமகளாரும், கோபஜநமத்தை யாஸ்தாநம் பண்ணினுர்கள். 124**

238 பிராமணர்தலைவரான பெரியாழ்வாரும் அவரது திருமகளாரான ஆண்டாளும் * அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தை ஏறிட்டுக்கொண்டார்கள்.

**239. கந்தல் கழிந்தால் ஸர்வர்க்கும் நாரீணமுத்தமையுடைய அவஸ்தை வரக்கடவதாயிருக்கும் 125**

239. இப்படி நிஹீந ஜன்மங்களை ஆசைப்பட்டாலும் ஏறிட்டுக்கொண்டாலும் ஸ்வரூபத்தினுண்மை இருக்கும்படி என்? என்னில்; வந்தேறியான அவித்யை முதலிய தோஷங்கள் கழிந்துவிட்டால் ஸகல ஆத்மாக்களுக்கும் பெரிய பிராட்டியாருடைய நிலை தன்னடையே வந்துவிடும். ... ... (239)

**240. ஆறுப்ரகாரத்தாலே பரிசுத்தாத்ம ஸ்வரூபத்துக்கு<br>தத்ஸாம்ய முண்டாயிருக்கும். 126**

240. அஃது எப்படி உண்டாய்விடு மென்னில் :— அநந்யார்ஹ சேஷத்வம், அநந்ய சரணத்வம், அநந்யபோக்யத்வம், ஸம்ச்லேஷத்தில் ஆறியிருக்கை, விச்லேஷத்தில் ஆறியிராமை, ததேக நிர்வாஹ்யத்வம் ஆகிற ஆறு ப்ரகாரங்களாலே அவித்யாதி தோஷங்கள் மிச்சமின்றிக் கழிந்து பரிசுத்தமாகப்பெற்ற ஆத்ம ஸ்வரூபத்துக்கு இந்த ஆறு படிகளாலும் நிறைந்துள்ள பிராட்டியோடு ஸாம்யம் இயற்கையாகவே உண்டாயிருக்கும். [239, 240—இவ்விரண்டு விஷயங்களும் ப்ரஸங்காத் வந்தவை.] ... ... ... ... ... (240)

**241. த்ருஷ்டத்தி லுத்கர்ஷ மஹங்காரத்தாலே; அத்ருஷ்டத்தி லுத்கர்ஷம்<br>அஹங்கார ராஹித்யத்தாலே. 127**

241. இனி. குலசேகரப் பெருமாள் முதலியவர்கள் உத்க்ருஷ்ட ஜந்மங்களை விட்டு நிக்ருஷ்ட ஜந்மங்களை விரும்புவானென் என்னில் ; ஆபிஜாத்யம் ஐச்வர்யம் முதலிய ஐஹிக புருஷார்த்தங்களில் உண்டாகிற உயர்த்தியானது விச்வாமித்ராதிகளைப் போலே தான் நின்ற நிலைக்கு மேலே உத்கர்ஷத்தைத் தேடிக்கொள்ள முயலப் பண்ணுகிற அஹங்காரத்தாலே யுண்டாம்; கைங்கர்ய ஸம்பத்தாகிற அத்ருஷ்ட புருஷார்த்தத்தில் உண்டாகிற உயர்த்தியானது படிப்படியாகக் கீழே இழியப்பண்ணுகிற அஹங்காரத்தின் ராஹித்யத்தாலே உண்டாம். .... (241)

**242. ப்ரஹ்மாவா யிழந்துபோதல் இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல்<br>செய்யும்படியாயிருக்கும்.**

242. அஹங்காரத்தில் தலைவனை பிரமனாய்ப் பிறந்து "நேரே கடிக் கமலத்துள்ளிருந்தும் காண்கிலான், கண்ணனடிக்கமலந்தன்னை அயன்" (முதல் திரு. 56) என்கிறபடியே இழந்துபோகக் காண்கிறோம். அஹங்கார ஹேதுக்கள் ஒன்றுமில்லாமல் இடக்கை வலக்கை யறியாத இடைச்சியான சிந்தயந்தியாய்ப் பிறந்து எம்பெருமான் திருவடிகளைப் பெற்றுவிடவும் காண்கிறோம். [ஆக, அஹங்காரமும் அஃதிலாமையும் எம்பெருமானையிழப்பதற்கும் பெறுவதற்கும் ஹேதுவாகையாலே ஸ்ரீ குலசேகரப் பெருமாள் முதலானவர்கள் அஹங்கார ஹேதுவான ஜந்மங்களை அநாதரித்து அஹங்காரமிருப்பதற்கு அவகாசமற்ற ஜந்மங்களை ஆதரித்தார்களென்றதாயிற்று.] .... ... ... ... ... (242)

**243. இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவான வஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷய ப்ராவண்யத்துக்கும் விளைநிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற்போலேயும்; அவற்றுக்கு வர்த்தகரான ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலேயும்; அவற்றுக்கு நிவர்த்தகரான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் பந்துக்களைக் கண்டாற் போலேயும் ஈச்வரனைக் கண்டால் பிதாவைக் கண்டாற்போலேயும், ஆசார்யனைக் கண்டால், பசியன் சோற்றைக் கண்டாற்போலேயும்,**

சிஷ்யனைக் கண்டால் அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலேயும் நினைத்து, அஹங்காரார்த்த காமங்கள் மூன்றும் அநுகூலர் பக்கல் அநாதரத்தையும் ப்ரதிகூலர் பக்கல் ப்ராவண்யத்தையும் உபேக்ஷிக்குமவர்கள் பக்கலபேக்ஷையையும் பிறப்பிக்கு மென்றஞ்சி, ஆத்மகுணங்கள் நம்மாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ளவொண்ணாது, ஸதாசார்ய ப்ரஸாதமடியாக வருகிற பகவத் ப்ரஸாதத்தாலே பிறக்குமத்தனையென்று துணிந்து தேஹயாத்திரையிலுபேக்ஷையும் ஆத்மயாத்திரையி லபேக்ஷையும் ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதாபுத்தி நிவ்ருத்தியும் தேஹதாரணம் பரமாத்ம ஸமாராதன ஸமாப்தி ப்ரஸாதப்ரதிபத்தி யென்கிற புத்தி விசேஷமும் தனக்கொரு க்லேசமுண்டானால் கர்மபல மென்றாதல் க்ருபாபல மென்றாதல் பிறக்கும் ப்ரீதியும், ஸ்வாநுஷ்டானத்தில் ஸாதநத்வ புத்தி நிவ்ருத்தியும்; விலக்ஷணருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களில் வாஞ்சையும், உகந்தருளின நிலங்களி லாதராதிசயமும், மங்களாசாஸநமும், இதரவிஷயங்களில் அருசியும், ஆர்த்தியும், அநுவர்த்தந நியதியும்; அநுகூல ஸஹவாஸமும், ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன். 129

243. [இனி, ப்ரபந்நாதிகாரியின் திநசர்யாவிசேஷம் சொல்லப்படுகிறது.] இப்படி எல்லாப்படியாலும் ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல அஹங்காரத்துக்கும் அதனாலே உண்டாகக்கூடிய விஷயப்ராவண்யத்துக்கும் பிறப்பிடம் தானாகையாலே, தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற்போலே குடல் கரித்துத் தன்னையே தனக்கு நாசகனாக நினைக்கவேணும்; அந்த அஹங்காரத்தையும் விஷய ப்ராவண்யத்தையும் துர்ப்போதனைகளாலே வளரச் செய்கிற ஸம்ஸாரிகளைக் கண்டால் ஸர்ப்பத்தைக் கண்டாற்போலே அஞ்சி நடுங்கிப் பிற்காலித்திருக்கவேணும்; அக்குற்றங்களை உபதேசாதிகளாலே போக்கவல்ல ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் ஆப்த பந்துக்களைக் கண்டாற்போலே "இவர்கள் நமக்கு நல்துணையாவர்கள்" என்று ஆதரிக்கவேணும்; எப்போதும் நம்முடைய ஹிதமே பார்த்துப் போருகிற ஈச்வரனைத் திருப்பதிகளிலே ஸேவிக்கப் பெற்றால் ஹிதைஷியான பிதாவைக் கண்டாற்போலே பக்தி பீதி விநயங்களை யுடையனாயிருக்கவேணும்; ஜ்ஞாந பக்தி விரக்திகளை விளைத்து பகவத் விஷயத்தைக் காட்டித் தரும் மஹோபகாரகனான ஆசார்யனைக் கண்டால் பெரும்பசியன் சோற்றைக் கண்டாற்போலே மிக விருப்பத்தோடே அநுபவித்து உகந்திருக்கவேணும்; தன் சொல்வழி யொழுகும் சிஷ்யனைக் கண்டால் அபிமத விஷயத்தைக் கண்டாற்போலே நினைத்து உள் குழைந்திருக்கவேணும்; அஹங்காரம், அர்த்தம், காமம் இவை மூன்றின் கெடுதல்களை நன்கு சிந்திக்கவேணும்; அஹங்காரமானது அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலே அநாதரத்தைப் பண்ணுமென்றும்; அர்த்தமானது ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளோடே உறவு பண்ணுவிக்குமென்றும், காம [விஷய ஸம்போக ஸுக]மானது—தன்னை இகழ்ந்து பிடரியைப் பிடித்துத் தள்ளுகிறவர்களிடத்திலும் விருப்பம் பிறப்பிக்குமென்றும் நன்கு ஆய்ந்து ஓய்ந்து உணர்ந்து பயப்படவேணும்; "சமம் தமம் முதலிய ஆத்ம குணங்கள் நம்முடைய முயற்சியாலும் கர்மவச்யராயிருக்கிற

பிறருடைய முயற்சியாலும் பிறப்பித்துக்கொள்ள முடியாது; ஆசார்யனுடைய அநுக்ரஹ மூலமாக வருகிற எம்பெருமானுடைய அருளாலேதான் பிறக்கவேணும்'' என்று துணிவு உண்டாகவேணும்; ''தேஹ ரக்ஷணத்துக்கு உறுப்பான வியாபாரங்களில் விருப்பமற்றிருக்கவேணும்; பகவத் குணாநுபவ கைங்கர்ய ப்ரவ்ருத்திகளை மேன்மேலு மாசைப்பட்டிருக்கவேணும்; சோறு கூறை முதலிய ப்ராக்ருத வஸ்துக்களில் போக்யதா புத்தி தவிர்ந்திருக்கவேணும்; தேஹம் தரித்திருப்பதற்குப் போதுமான அளவு புஜிப்பதானது எம்பெருமானுடைய திருவாராதநத்தின் ஸமாப்தி ரூபமான ஒரு ப்ரதிபத்திகர்மம் என்று நினைத்திருக்கவேணும்; இந்த சரீரத்தோடேயிருக்கிற தனக்குத் தாபத்ரயத்தினுள் ஏதேனுமொரு வருத்தமுண்டானால் ''இது அநுபவித்தே தீரவேண்டிய ப்ராரப்த கர்மத்தின் பலமன்றோ; இப்படிப்பட்ட க்ருமங்கள் உள்ளவை கழியும்வரையிலன்றோ இந்த சரீரத்தோடு எம்பெருமான் நம்மை வைக்கிறது; அவனை அணுகுவதற்குத் தடையானவற்றிலே ஒன்றாகிலும் கழியப்பெற்றோமே!'' என்று அநுஸந்தித்தாவது (அல்லது) ''துர்வாஸனையாலே இவ்வுடம்பை விடமாட்டாமல் சுவையற்ற விஷயங்களை யநுபவித்துக்கொண்டு ஸம்ஸாரத்துக்குள்ளே பொருந்தியிருக்கிற நம்மை இதில் நின்றும் கொண்டுபோக நினைக்கிற ஈச்வரன் இந்த சரீரத்தில் நமக்கு வெறுப்பு உண்டாவதற்காகவன்றோ இப்படி துக்கங்களை அநுபவிப்பிக்கிறான்; அவனுடைய க்ருபையின் பலமன்றோ இது'' என்று அநுஸந்தித்தாவது தேறியிருக்கவேணும்; ப்ரபந்நனான தன்னுடைய அதிகாரத்துக்குத் தகுதியாக அநுஷ்டித்துக்கொண்டு போருகிற நல்லொழுக்கங்களைப் பேற்றுக்கு உபாயமாக நினையாதிருக்க வேணும், விலக்ஷணருடைய ஞானமும் அனுட்டானமும் நமக்கு உண்டாக வேணுமென்று ஆசைப்படவேணும்; திவ்ய தேசங்களில் அபிநிவேசம் கரைபுரண்டிருக்கவேணும்; மங்களாசாஸநத்தில் ஊற்றமுற்றிருக்கவேணும்; விஷயாந்தரங்களைக் காறி உமிழவேணும்; ''கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ'' என்று ஆர்த்தியோடே யிருக்கவேணும்; பகவத் பாகவத விஷயங்களில் தனது சேஷத்வத்துக்குத் தகுதியாகச் செய்யும் இழி தொழில்களையும் விநியோக்திகளையும் ஸம்ஸாரிகள் விஷயத்திலே மறந்தும் செய்யாதொழியவேணும்; எம்பெருமானுடையவும் பாகவதருடையவும் ப்ரஸாதங்களான வஸ்துக்களையே ஆஹாரமாகக் கொள்ளுவது தவிர மற்றவற்றைக் கொள்ளக் கடவோ மல்லோம் என்றிருக்கவேணும்; ஜ்ஞாநாநுஷ்டாநங்களை வளர்க்கவல்ல அநுகூலரை ஒருநொடிப் பொழுதும் விட்டுப் பிரியாமலும், ஸ்வரூபத்தைக் கெடுக்கவல்ல ப்ரதிகூலரைக் கண்ணெடுத்துப் பாராமலுமிருக்கவேணும்; ஆக இவையித்தனையும் ஆசார்யனுடைய அநுக்ரஹத்தாலே விளையக் கூடியவை யாதலால் அவ்வநுக்ரஹம் பரிபக்வமாம்படி சுச்ரூஷையிலே ஊன்றி நடந்து கொண்டால் இவையெல்லாம் கைகூடும். .... .... .... (243)

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

இரண்டாம் ப்ரகரணம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்

## மூன்றும் ப்ரகரணம்

**244. மங்களாசாஸநம் ஸ்வரூப விருத்தமன்றோ வென்னில்; ஜ்ஞாநதசையில் ரக்ஷ்யரக்ஷக பாவம் தன்கப்பிலே கிடக்கும்; ப்ரேமதசையில் தட்டுமாறிக் கிடக்கும்.** 1

244. [கீழ் திநசர்யையில் சொன்னவற்றில் விவரிக்க வேண்டியவற்றை விவரிக்க நினைத்து, முதலில் மங்களாசாஸநம் விவரிக்கப்படுகிறது.] எம்பெருமான் ஒரு குறையுமில்லாதவன்; ஸகல மங்களங்களுக்கும் இருப்பிடமானவன்; அவனைக் கொண்டு நமக்குள்ள அமங்களங்களைப் போக்கிக்கொள்வதும் இல்லாத மங்களங்களை உண்டாக்கிக்கொள்வதும் யுக்தம்; அவனால் ரக்ஷிக்கப்பெறவேண்டிய நாம் அவனுக்கு ரக்ஷையிடுவது [அதாவது—மங்களாசாஸநம் பண்ணுவது] அவனுடைய ரக்ஷகத்வத்துக்கும் நம்முடைய ரக்ஷ்யத்வத்துக்கும் விருத்தமன்றோ வென்னில், அன்று;—அவன் ரக்ஷகனாகவும் நாம் ரக்ஷ்யராகவும் தெளியக்கண்டு அநுஸந்திக்கையாகிற ஜ்ஞாநதசையென்றும், அவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களை யநுஸந்தித்து "இவ்விஷயத்திற்கு என்னகெடுதி விளைகிறதோ!" என்று அதிசங்கை படுவதாகிற ப்ரேமதசை யென்றும் இரண்டு அவஸ்தைகளுண்டு. இவற்றுள் முந்தின ஜ்ஞாநதசையில் "களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்" என்கிறபடியே, தன்னுடைய அநிஷ்ட நிவ்ருத்தி முதலியவற்றுக்கு அவனே கடவனென்றிருக்கையாலே ரக்ஷ்யரக்ஷக பாவம் இடம்மாறாதே யிருக்கும்; பிந்தின ப்ரேம தசையிலோ வென்னில், ஈச்வரனை ரக்ஷிக்க வழிதேடித் தடுமாறுகையாலே, ரக்ஷ்யத்வம் ஈச்வரன் பக்கலிலும் ரக்ஷகத்வம் தன்பக்கலிலுமாய் இப்படி ரக்ஷ்ய ரக்ஷகபாவம் மாறாடிப்போம். ... ... (244)

**245. அவன்ஸ்வரூபத்தை யநுஸந்தித்தால் அவனைக் கடகாகக் கொண்டு தன்னை நோக்கும், ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தால் தன்னைக் கடகாகக் கொண்டு அவனை நோக்கும்.** 2

245. ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தனும் ஸர்வ ரக்ஷகனுமான அவனுடைய ஸ்வரூபத்தை நோக்குமளவில் அவனைத் தனக்கு ரக்ஷகனாகக்கொண்டு தன்னைக் காப்பாற்றிக் கொள்ளலாகும்; அவனுடைய ஸர்வசக்தித்வம் முதலிய குணங்களை மறந்து அவனுடைய ஸௌகுமார்யத்தை நோக்குமளவில், அவனுக்குத் தன்னை ரக்ஷகனாகக் கொண்டு மங்களாசாஸநம் பண்ணி அவனை ரக்ஷிக்கலாகும். (245)

**246. இவ்வர்த்தம் சக்ரவர்த்தி ஸ்ரீஜநகராஜன்திருமகள் விச்வாமித்ரன் ஸ்ரீதண்டகாரண்ய வாஸிகளான ருஷிகள் திருவடி மஹாராஜர், ஸ்ரீநந்தகோபர் ஸ்ரீவிதுரர் பிள்ளையுறங்காவில்லிதாஸர் தொடக்கமானவர்கள் பக்கலிலே காணலாம்.** 3

246. இப்படி ஸௌகுமார்யாதிகளைக் கண்டு கலங்கி, ரக்ஷகனை அவனுடைய சக்திவைபவத்தை மறந்து தான் அவனை ரக்ஷிக்கப் பார்க்கையாகிற இவ்வர்த்தம் அநுஷ்டாநத்தில் எங்கே கண்டோமென்னில்: தசரத சக்ரவர்த்தி, ஸீதாபிராட்டி, விச்வாமித்திரன், தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகள், திருவடி, ஸுக்ரீவ மஹாராஜர், நந்தகோபர், விதுரர், பிள்ளை யுறங்காவில்லிதாஸர் முதலானவர்கள் பக்கலிலே கண்டோம்; இவர்கள் அதிசங்கையாலே பெருமாளுக்கு மங்களாசாஸநம் பண்ணினமை ஸ்ரீ ராமாயண, ஸ்ரீ விஷ்ணுபுராண, ஸ்ரீ மஹாபாரதாதிகளிலே காணத்தக்கது. ... ... .... ... (246)

247. இளையபெருமாளை ஸ்ரீகுஹப்பெருமாள் அதிசங்கை பண்ண இருவரையுமதிசங்கைபண்ணி ஸ்ரீகுஹப்பெருமாள்பரிகரம் பெருமாளை நோக்கிற்றிறே 4

247. விஷய வைலக்ஷண்யம் எல்லாரையும் மங்களாசாஸநத்திலே மூட்டும்; பெருமாள் ச்ருங்கிபேரபுரத்திலே யெழுந்தருளி குஹப்பெருமாளை விஷயீகரித்தருளினவன்று இளைய பெருமாள் பாங்காக அமைத்த பர்ணசயனத்திலே பெருமாளும் பிராட்டியும் பள்ளிகொண்டருளாநிற்க, இச்சேர்த்திக்கு என்ன தீங்கு விளையுமோவென்று அதிசங்கை பண்ணின இளைய பெருமாள் முதுகிலிட்ட அம்பருத்தூணியும் கையிற்பிடித்த வில்லுமாய் உலாவிக்கொண்டு நிற்க, இதைக் கண்ட குஹப்பெருமாள் "ஒரு தம்பி தாயைக் கொண்டு பெருமாளை நாட்டிலிருந்து காட்டிலே துரத்தினான்; இத்தம்பி தனியிடத்திலே என்ன செய்யப்பார்க்கிருனோ தெரியவில்லை" என்று இளையபெருமாள் பக்கலிலும் அதிசங்கை பண்ணி "இவன் அப்படி ஏதேனுமொரு தீங்குசெய்யில் இவனையே தீர்த்து விடக்கடவோம்" என்று தானும் வில்லுமம்புமாய்க்கொண்டு உடன் நிற்க, குஹப்பெருமாளுடைய ஏவல் தொழிலாளர் "இவர்களிருவருமாகக் கூடிப் பெருமாளுக்கு என்ன தீங்கு விளைவிக்க நினைக்கிறார்களோ" என்று அதிசங்கை பண்ணித் தனித் தனியே கையும் வில்லுமாய்க்கொண்டு பெருமாளை ரக்ஷித்தார்களன்றோ. .... ... (247)

248. ஒருநாள் முகத்திலே விழித்தவர்களை வடிவழகு படுத்தும் பாடாயிற்றிது. 5

248. குஹப்பெருமாளும் அவருடைய ஏவலாளரும் பெருமாளை அன்றே முதலாகக் கண்டார்களே யொழிய அதற்கு முன்பு கனவிலும் கண்டார்களில்லையே; ஒருநாள் திருமுக மண்டலத்தை ஸேவிக்கப் பெற்றவர்களையும் எம்பெருமானுடைய வடிவழகு இப்பாடு படுத்துமாயிற்று. ... ... ... (248)

249. இவர்கள் நம்முடைய கோடியிலே யென்னும்படியாயிற்று ஆழ்வார்கள் நிலை. 6

249. மங்களாசாஸநத்தில் ஆழ்வார்களுக்குள்ள ஊற்றத்தை நோக்குங்கால், கீழே சொல்லப்பட்ட மங்களாசாஸநபராகளெல்லாரும் பகவத் விஷயத்தில் ப்ரேமமற்ற நம்முடைய வகுப்பிலே சேர்ந்தவர்கள் என்ன வேண்டியிருக்கும். (249)

250. ஆழ்வார்களெல்லாரையும் போலல்லர் பெரியாழ்வார். 7

250. மங்களாசாஸநத்தில் மற்ற ஆழ்வார்களெல்லாம் ஒருதட்டும் பெரியாழ்வார் ஒருதட்டுமாயிருப்பர். .... ... ... (250)

**251. அவர்களுக்கிது காதாசித்கம்; இவர்க்கிது நித்யம்.** 8

251. பெரியாழ்வார்க்கு ஏற்றமென்னென்னில்; மற்ற ஆழ்வார்களுக்கு மங்களாசாஸநம் எப்போதுமின்றிக்கே ஏதோவொரு தசையில் தேடிப்பிடிக்க வேண்டியிருக்கும்; பெரியாழ்வார்க்கோ வென்னில் அது நித்யமாய்ச் செல்லும்.

**252. அவர்களுடைய ஆழங்கால்தானே இவர்க்கு மேடாயிருக்கும்.** 9

252. அதற்குக் காரணமேதென்னில்; எம்பெருமானுடைய ஸௌந்தர்ய மானது மற்ற ஆழ்வார்களுடைய நெஞ்சையும் கண்ணையும் கொள்ளைகொண்டு ஆழங்கால் படுத்தும்; ஆகையாலே அவர்கள் வடிவழகிலே ஆழ்ந்து ஈடுபட்டுப் பேசுகிறமாத்திரமே யுள்ளது; அங்ஙனன்றிக்கே பெரியாழ்வார் "இவ்வடிவழகுக்கு என்ன தீங்கு வருகிறதோ!" என்று அஞ்சி மேன்மேலும் மங்களாசாஸநம் பண்ணும்படி அந்த வடிவழகையே மேட்டு நிலமாகக்கொண்டு அதிலே தரித்து நிற்பர். .... (252)

**253. அவர்களுக்கு உபய சேஷத்வத்தையு மழித்து ஸ்வரூபத்தைக் குமிழ்நீருண்ணப் பண்ணுமது, இவர்க்கு உபய வ்ருத்திக்கும் ஹேதுவாய் ஸ்வரூபத்தைக் கரையேற்றும்.** 10

253. பகவச் சேஷத்வம், பாகவத சேஷத்வம் என்கிற இரண்டும் ஆழ்வார்களெல்லார்க்கும் ஸ்வரூபமாயிருக்கச் செய்தேயும், எம்பெருமானுடைய வடிவழகானது மற்ற ஆழ்வார்களுக்குச் சில ஸமயங்களில் அந்த ஸ்வரூபத்தை அழித்துவிடுகின்றது; "மின்னிடை மடவார்கள்" என்கிற திருவாய்மொழியிலும், "ஏர்மலர்ப்பூங்குழல்" என்கிற பெருமாள் திருமொழியிலும் "காதில் கடிப்பிட்டு" என்கிற பெரிய திருமொழியிலும் விளம்ப ரோஷத்தாலே எம்பெருமானையும் அடித்துத் துரத்துகிற பாசுரங்கள் (மற்ற ஆழ்வார்களிடத்தில்) காண்கையாலே பகவச் சேஷத்வம் குலையக் காண்கிறது. "உங்களோடெங்களிடையில்லை" (திருவா. 8-2-7) என்றும், "வெஞ்சிறைப்புள்" (திருவா. 1-4-1.) என்றும் பாகவதர்களை வெறுத்து வார்த்தை சொல்லுவிக்கக் காண்கையாலே பாகவத சேஷத்வமும் குலையக்காண்கிறது. இப்பெரியாழ்வார்க்கோ வென்னில் அப்படியில்லை; எம்பெருமானுடைய வடிவழகானது இவர்க்கு பகவத் பாகவத சேஷத்வங்களை ஒருபோதும் அழிக்கிறதில்லை; பின்னையோவென்னில்; "உன்சேவடி செவ்வி திருக்காப்பு" என்று பகவத் விஷயத்துக்கும் "மங்கையும் பல்லாண்டு" "சுடராழியும் பல்லாண்டு" "அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டு" என்று பாகவத விஷயத்துக்கும் மங்களாசாஸநம் பண்ணுவிக்கையாலே உபய சேஷத்வமும் வளர்வதற்கு ஹேதுவாய் ஸ்வரூபத்தைத் தளிர்ப்பிக்கும். ... ... (253)

**254. பயநிவர்த்தகங்களுக்கு பயப்படுவது ப்ரதிகூலரையு மநுகூலராக்கிக் கொள்ளுவது, அதீத காலங்களி லபதாநங்களுக்கு உத்தரகாலத்திலே வயிறெரிவது ப்ராப்திபலமு மிதுவே யென்பது அநிமிஷரைப்பார்த்து உறகலுறகல் என்பதாய்க் கொண்டு இதுதானே யாத்ரையாய் நடக்கும்.** 11

254. எம்பெருமானுடைய நிகரற்ற பராக்ரமம், திவ்யாயுதங்களோடே கூடியிருத்தல் முதலியவற்றைக் கண்டு நிர்ப்பயராயிருக்கவேண்டியிருக்க, 'இவற்றுக்கும் என் வருகிறதோ!' என்று பயப்படுதலும், ப்ரதிகூலர்களான ஐச்வர்யார்த்தி கைவல்யார்த்தி முதலானவர்களையும் மங்களாசாஸநத்துக்கு அநுகூலராக்கிக் கொள்ளுதலும், என்றைக்கோ கழிந்த ஹிரண்ய வதம், ராவண வதம் முதலியவற்றை இன்று சிந்தித்து வயிறெரிந்து காப்பிடுதலும், பரமபதத்திலும் மங்களாசாஸநமே பலன் என்று சொல்லுதலும், ஒருகாலும் உறங்காத நித்ய ஸூரிகளையும் நோக்கி "உறகலுறகலுறகல்" (பெரியா. 5-2-9) [கண் மூடாமலிருந்து மங்களாசாஸநம் பண்ணுங்கள்] என்று பலகாலும் சொல்லுவதுமாய்க் கொண்டு மங்களாசாஸநமே போது போக்காயிருப்பது இப் பெரியாழ்வாரொருவர்க்கேயாம். (254)

**255. அல்லாதவர்களைப் போலே கேட்கிறவர்களுடையவும் சொல்லுகிறவர்களுடையவும் தனிமையைத் தவிர்க்கை யன்றிக்கே ஆளுமாளாரென்கிறவனுடைய தனிமையைத் தவிர்க்கைக்காகவாயிற்று பாஷ்யகாரருமிவருமுபதேசிப்பது.** 12

255. ஆழ்வார்களில் மற்ற ஆழ்வார்களுடைய உபதேசத்திற்காட்டில் இப் பெரியாழ்வாருடைய உபதேசத்திற்கும், ஆசார்யர்களில் மற்ற ஆசார்யர்களுடைய உபதேசத்திற்காட்டில் எம்பெருமானாருடைய உபதேசத்திற்கும் வாசியுண்டு; (அதாவது) மற்றவர்கள் உபதேசித்தது—உபதேசம் கேட்கிற ஸம்ஸாரிகளின் தனிமையையும் உபதேசம் பண்ணுகிற தங்களுடைய தனிமையையும் போக்கி அவர்களுக்கும் தங்களுக்கும் துணையுண்டாக்கிக் கொள்வதற்காகவாம்; பெரியாழ்வாரும் எம்பெருமானாரும் உபதேசிப்பது எம்பெருமானுடைய தனிமையைத் தவிர்க்கைக்காகவாம். "ஆளுமாளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம், வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை" (திருவா. 8-3-3) என்றாற்போலே எம்பெருமானைத் துணையற்றிருப்பவனாக நினைத்து அவனுக்குத் துணைவர் உண்டாக வேணுமென்றே ஆள்களைத் திருத்திச் சேர்க்குமவர்களா மிவர்கள். ... (255)

**256. அல்லாதார்க்கு ஸத்தாஸம்ருத்திகள் தர்சநாநுபவ கைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்களாசாஸநத்தாலே.** 13

256. மற்ற ஆழ்வார்கள் எம்பெருமானை ஸேவிப்பதனாலும் அவனை அநுபவிப்பதனாலுமே தங்களுக்கு ஸத்தையுள்ளதாகவும் அவனுக்குக் கைங்கரியம் பண்ணினால்தான் தங்களுக்குத் தழைப்பு உள்ளதாகவும் நினைத்திருப்பர்கள்; இவ்வாழ்வார்க்கு அவையெல்லாம் மங்களாசாஸநத்தாலே. ... ... (256)

**257. உகந்தருளின நிலங்களை யநுஸந்தித்தால் ஊணுமுறக்கமுமின்றிக்கே இவருடைய யாத்ரையே நமக்கெல்லார்க்கும் யாத்ரையாகவேணும்.** 14

257. கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள எம்பெருமானுடைய நிலைமையை அநுஸந்தித்தால் நாமெல்லாரும் "அபாயங்களுக்கு இடமான இவ்விருள்தருமா ஞாலத்திலே எழுந்தருளி நிற்கிற நிலைக்கு என்ன தீங்கு நேரிடுமோ!" என்னும் வயிற்றெரிச்சலாலே உண்ப

தையும் உறங்குவதையுங்கூட விட்டொழிந்து இவ்வாழ்வாருடைய மங்களாசாஸந யாத்ரையையே தொழிலாகக் கொள்ள வேண்டும். ... ... (257)

258. ஆகையாலே மங்களாசாஸநம் ஸ்வரூபாநுகுணம். 15

258 ஆகவிப்படி சேஷபூதரானவர்களுக்கெல்லாம் அவச்யகர்த்தவ்ய மான காரியமாயிருக்கிற இந்த மங்களாசாஸநம் ஸ்வரூபத்துக்குச் சேருவதேயாம்.

259. அநுகூலராகிறர் ஜ்ஞானபக்தி வைராக்யங்கள் இட்டுமாறினுற்போலே, வடிவிலே தொடை கொள்ளலாம்படி யிருக்கும் பரமார்த்தர். 16

259. [243-ஆம் ஸூத்ரத்தில்—அநுகூல ஸஹவாஸமும் ப்ரதிகூல ஸஹவாஸ நிவ்ருத்தியும் வேணுமென்கிற விஷயம் இனி விவரிக்கப்படுகிறது.] ஸஹவாஸ யோக்யரான அநுகூலர் யாரென்னில்; ஜ்ஞானம் பக்தி விரக்தி ஆகிய இவை நான்கும் விளங்கப்பெற்று ஸம்ஸாரத்தில் ஆர்த்தியுமுள்ளவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள். .... ... 259)

260. ஒரு செய் நிரம்ப நீர் நின்றல் அசல்செய் பொசிந்து காட்டுமாபோலே இவையில்லாதார்க்கு மிவர்களோட்டை ஸம்பந்தத்தாலே உருவுதல் தீரக்கடவதாயிருக்கும். 17

260. இப்படிப்பட்ட அநுகூலர்களுடைய ஸஹவாஸத்தால் எது ஸித்திக்குமென்னில், ஒரு வயலிலே நீர் நிரம்பியிருந்தால் நீரில்லாமல் வாடிக்கிடக்கிற அசல் வயலும் வாட்டமற்றுப் பொசிந்து கிடப்பதுபோல, ஜ்ஞான பக்தி வைராக்யங்களில்லாமையாலே ஸ்வரூபம் வாடிக்கிடப்பவர்களுக்கும் இவர்களுடைய ஸஹவாஸத்தாலே இவற்றில் சிறிது அந்வயமுண்டாகி இவை நேராக இல்லாமையாலுண்டான வாட்டம் தீரும்படியாயிருக்கும். .... (260)

261. ஆறுநீர் வரவணித்தானல் அதுக்கீடான அடையாளங்களுண்டாமா போலே ப்ராப்தி யணித்தானவாறே இந்த ஸ்வபாவவிசேஷங்கள் தன்னடையே விளையக்கடவதாயிருக்கும் 18

261. அவ்வளவு மாத்திரமேயன்று; வற்றிக்கிடக்கிற ஆற்றில் வெள்ளம் வரப்போகிறதானல் அதற்கு முன்னே தத்ஸூசகமான மணல்பொசிவு முதலான அடையாளங்கள் உண்டாவதுபோல, எம்பெருமானுடைய ப்ராப்தி ஸமீபிக்கும்போது இவர்களுக்கு இந்த ஜ்ஞாந பக்தி விரக்திகள் தன்னடையே விளையவும் பெறும். ... .... .... ... ... (261)

262. இவற்றைக்கொண்டு சரம சரீரமென்று தனக்குத்தானே அறுதியிடலாயிருக்கும். 19

262. இப்படி மேன்மேலும் புதுக்கணித்து விளைந்து வருகிற ஜ்ஞாந பக்தி வைராக்யங்களைக்கொண்டு, "இனிமேல் நமக்கு ஸம்ஸார ஜந்மமில்லை; இதுவே நமக்குக் கடைசியான சரீரம்" என்று தன் மனஸ்ஸுக்கே நிச்சயித்துக்கொள்ளலாயிருக்கும், ... ... ... ... ... (262)

263. ப்ரதிகூலராகிறார் தேஹாத்மாபிமாநிகளும் ஸ்வதந்த்ரரும் அந்யஶேஷபூதரும் உபாயாந்தரநிஷ்டரும் ஸ்வப்ரயோஜநபரரும். 20

263. [அநுகூலர்களைப்பற்றி விவரித்தாயிற்று; இனி, ஸஹவாஸத்துக்குத் தகாத ப்ரதிகூலர்களைப்பற்றிச் சொல்லுகிறது. ப்ரதிகூலரென்பவர்கள் யாரென்னில், தேஹமே ஆத்மா என்றிருப்பவர்களும், தேஹத்திற்காட்டில் வேறுபட்ட ஆத்மா வுண்டென்று இசைந்தாலும் தனக்குத்தானே அரசன் என்று கொண்டு ஒரு விஷயத்திலும் சேஷப்படுவதற்கு இசையாதவர்களும், சேஷத்வத்துக்கு இசைந்தாலும் தகாத விடங்களிலே சேஷப்பட்டிருப்பவர்களும், தகுந்த பகவத் விஷயத்தில் சேஷப்பட்டுவைத்தே பகவத் ப்ராப்திக்கு உபாயமாக கர்ம ஜ்ஞாநாதி உபாயாந்தரங்களைப்பற்றி நிற்பவர்களும், உபேயமான கைங்கரியத்தை ஸ்வபோக்யமாக நினைத்திருப்பவர்களுமாவர். ... ... ... (263)

264. இவர்களுக்கு உத்தேச்யரும் உபாயோபேயங்களும் பேதித்திருக்கும். 21

265. தேஹாத்மாபிமானிகளுக்கு உத்தேச்யர் தேஹவர்த்தகரான மநுஷ்யர்கள், உபாயமர்த்தம், உபேயமைஹிகபோகம்; ஸ்வதந்த்ரர்க்கு உத்தேச்யர் ஸ்வர்க்காதிபோகப்ரதர், உபாயம் கர்மாநுஷ்டாநம்; உபேயம் ஸ்வர்க்காதி போகம். அந்ய சேஷ பூதர்க்கு உத்தேச்யர் ப்ரஹ்மருத்ராதிகள், உபாயம் தத்ஸமாச்ரயணம், உபேயம் தத்ஸாயுஜ்யம்; உபாயாந்தரநிஷ்டர்க்கு உத்தேச்யன் தேவதாந்தர்யாமியான ஸர்வேச்வரன், உபாயம் கர்மஜ்ஞாந பக்திகள் உபேயம் பகவதநுபவம்; ஸ்வப்ரயோஜநபரர்க்கு உத்தேச்யன் *நெஞ்சினால் நினைப்பான்யவனென்கிறவன்; உபாயம் ஸ்வகீய ஸ்வீகாரம், உபேயம் ஸ்வார்த்த கைங்கர்யம். 22

264, 265 [இவர்களுடைய ப்ராதிகூல்யம் நன்கு விளங்குமாறு இவர்களுடைய உத்தேச்யர் உபாயம் உபேயம் என்னுமிவை வேறுபட்டிருக்கும்விதம் உபபாதிக்கப்படுகிறது] கீழ்ச்சொன்ன தேஹாத்மாபிமாநிகள் ஸ்வதந்த்ரர் அந்ய சேஷ பூதர் உபாயாந்தர நிஷ்டர் ஸ்வப்ரயோஜநபரர் என்னுமிவர்களுக்கு உத்தேச்யரும் உபாயோபேயங்களும் பரஸ்பரம் வேறுபட்டே யிருக்கும்; தேஹாத்மாபிமாநிகளுக்கு தேஹத்தை நன்றாக வளர்த்துக்கொண்டு போகிற மநுஷ்யர் உத்தேச்யர்; பொருள் உபாயம்; இவ்வுலகத்துச் சிற்றின்பங்கள் உபேயம். தங்களை ஸ்வதந்த்ரராக நினைத்திருக்குமவர்களுக்கு—ஸ்வர்க்கம் முதலிய ஆமுஷ்மிக போகங்களைக் கொடுக்கிற அக்நி இந்திரன் முதலிய தேவதைகள் உத்தேச்யர்; பலனை விரும்பிச் செய்கிற யாகம் முதலிய கர்மாநுஷ்டாநம் உபாயம்; ஸ்வர்க்காதி லோகங்களின் அநுபவம் உபேயம். அந்ய சேஷ பூதர்களுக்கு ப்ரஹ்மருத்ராதி தேவர்கள் உத்தேச்யர்; அந்த தேவதைகளின் ஆராதநம் உபாயம்; அவர்களோடு போகம் ஒத்திருக்கையாகிற தத்ஸாயுஜ்யம் பலன்; உபாயாந்தரங்களில் ஊன்றினவர்களுக்கு தேவதாந்தர்யாமியான எம்பெருமான் உத்தேச்யன்; கருமம் ஞானம் பக்தி என்னுமிவை உபாயம்; பகவானை அநுபவித்தல் உபேயம்; உபாயாந்தரங்களை விட்டு ப்ரபத்தியிலே இழிந்த ஸ்வப்ரயோஜநபரர்க்கு அர்ச்சாவதாரமான ஸர்வேச்வரன் உத்தேச்யன்; அவனை உபாயமாக நினைத்துத் தான் பற்றின பற்று உபாயம்; தனக்கு உகப்பாகப் பண்ணும் கைங்கர்யம் உபேயம். ... (265)

266. முதல் சொன்ன மூவரும் நிக்ரஹத்துக் கிலக்கு,
மற்றையிருவருமநுக்ரஹத்துக்கிலக்கு. 23

266. ஆகக் கீழ்ச்சொல்லப்பட்ட ஐந்து வகையான அதிகாரிகளில், பகவத் விஷய ஸம்பந்தம் அடியோடு இல்லாத முந்தின மூவரும் [தேஹாத்மாபிமாநிகளும் ஸ்வதந்த்ரரும் அந்யசேஷபூதரும்] எம்பெருமானுடைய நிக்ரஹத்துக்கு இலக்கானவர். மற்ற இருவரும் அநுக்ரஹத்துக்கு இலக்கானவர். ... (266)

267. மூவருடைய கர்மமநுபவ விநாச்யம், நாலாமதிகாரிக்கு ப்ராயச்சித்த
விநாச்யம்; அஞ்சாமதிகாரிக்குப் புருஷகார விநாச்யம். 24

267. நிக்ரஹத்துக்கு இலக்காகச் சொல்லப்பட்ட முந்தின மூவருடைய புண்யபாபரூப கருமங்கள் அநுபவித்தே தொலையக்கடவன; அநுக்ரஹத்துக்கு இலக்காகச் சொல்லப்பட்ட இருவரில் உபாயாந்தரநிஷ்டனான அதிகாரிக்கு—(கர்மஜ்ஞாநபக்திகளாகிற உபாய விசேஷங்களில் ஒன்றை அநுஷ்டித்தால் அத்தை ப்ராயச்சித்த ஸ்தாநத்திலேயாக்கி எம்பெருமான் ஸர்வ கர்மங்களையும் கழிக்கிறபடியாலே) ப்ராயச்சித்தத்தாலே தொலையக்கடவன; ப்ரபத்திநிஷ்டனான ஐந்தாவது அதிகாரிக்கு—(ஆச்ரயிக்கிறபோது எல்லா அபராதங்களையும் பொறுப்பதற்கு உறுப்பாகப் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டு ஆச்ரயிக்கையாலே அவளுக்காக இவனுடைய அபராதங்களையெல்லாம் பொறுத்து அங்கீகரித்து இவனுடைய ஸகல கருமங்களையும் தள்ளிவிடுகையாலே) புருஷகாரத்தாலே தொலையக்கடவன.

268. உபாயம் ஸ்வீகாரகாலத்தில் புருஷஸாபேக்ஷமுமாய் புருஷகாரஸாபேக்ஷமுமாய்
இருக்கும்; கார்யகாலத்தில் உபயநிரபேக்ஷமாயிருக்கும். 25

268. ஸித்தோபாயமான எம்பெருமான் புருஷகாரத்தை எதிர்பார்த்திருப்பனாகில் 'தான் இதரநிபேக்ஷமான உபாயம்' என்பதற்கு ஹாநிவாராதோவென்னில்? சரணவரணமாகிற ஸ்வீகாரகாலத்தில் ஸ்வீகரிக்கும் புருஷனையும், ஸ்வீகரிப்பிக்கிற புருஷகாரத்தையும் அபேக்ஷித்திருந்தாலும், ஸ்வீகரித்த பிறகு தான் அநிஷ்டங்களைப்போக்கி இஷ்டங்களைத் தருகையாகிற காரியம் செய்தருளுங்காலத்தில் அவ்விருவரையும் அபேக்ஷியாமல் தானே செய்து தலைக்கட்டிவிடுவன்; காரியம் செய்யும்போது துணைதேடினால்தான் நிரபேக்ஷோபாயத்வத்துக்கு ஹாநி வருமென்று கொள்க. ... ... ... ... (268)

269. ஸ்வப்ரயோஜநபர ரெல்லாரையும் ப்ரதிகூலராக நினைக்கலாமோவென்னில்; 26

270. இங்கு ஸ்வப்ரயோஜந மென்கிறது ஆச்ரயதோஷ ஜந்யமானத்தை. 27

271. ஆகையாலே தோஷமில்லை. 28

272. விஷய தோஷத்தால் வருமவையெல்லாம் துஸ்த்யஜமாயிறேயிருப்பது. 29

273. "ஊமையரோடு செவிடர் வார்த்தை" "கதமத்ய தீச்சதி." 30

269—273. (கீழ் 263ஆம் ஸூத்ரத்தில் ப்ரதிகூலர்கள் இன்னாரின்னாரென்று சொல்லும்போது ஸ்வப்ரயோஜநபரரையும் பொதுவாக ப்ரதிகூலரென்று சொல்லியிருக்கிறது.) அநுகூலர்களான ஆழ்வார்களிடத்திலும் சிற்சில பாசுரங்

களில் ஸ்வப்ரயோஜந பரத்வம் உண்டாயிருப்பதாகக் காண்கிறோம்; "ஓதிநாமம் குளித்து உச்சிதன்னுலொளி மாமலர்ப் பாதம் நாளும் பணிவோம் நமக்கே நலமாதலில்" (பெரிய திருமொழி 9, 3, 9) என்றும் "நாம் கண்டுகந்து கூத்தாட ஞாலத்தூடே நடவாயே" (திருவா. 6, 9, 2) என்றும், "கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச் சூட்ட வாராய்" (பெரியாழ்வார் 2, 7, 9) என்றும் இப்படிப்பட்ட பல பாசுரங்களாலும் *மடலூர்வேனென்கை முதலியவற்றுலும் ஆழ்வார்களுக்கும் ஸ்வப்ரயோஜநபரத்வ முண்டாயிருப்பதாகக் காண்கிறோமே; ஆனபின்பு ஸ்வப்ரயோஜநபரரெல்லாரையும் ப்ரதிகூலரென்று சொல்லப்பார்த்தால் ஆழ்வார்களையும் அப்படி நினைக்வேண்டி வருமேயென்னில், வாராது; "ப்ரதிகூலராகிறுர்" என்று தொடங்கிச் சொன்ன வாக்கியத்திலுள்ள ஸ்வப்ரயோஜந சப்தத்திற்கு அர்த்தம்—அநுபவ கைங்கர்யங்களுக்கு இருப்பிடமான சேதநனுடைய அவித்யை, ருசி, வாஸநை முதலியவற்ருல் வந்த ஸ்வப்ரயோஜநமே யொழிய விஷயதோஷத்தால் வரும் ஸ்வப்ரயோஜநமன்று; ஆழ்வார்களுக்குள்ள ஸ்வப்ரயோஜநபரத்வம் விஷயதோஷத்தால் வருமதேயொழிய அவித்யாதி தோஷத்தால் வருமதன்று. விஷய தோஷமாவது—அநுபவத்துக்கு விஷயபூதனுன அவனுடைய விக்ரஹ வைலக்ஷண்யமாகிற தோஷம். வயிர வுருக்காய் ஆண்களையும் பெண்ணுடை யுடுத்தும்படியான அவனுடைய வடிவழகில் ஈடுபாட்டாலே ஆழ்வார்கள் வாக்கிலே ஸ்வப்ரயோஜந பரத்வஸூசகமான பாசுரங்கள் வருகின்றனவேயன்றி அவித்யாதி தோஷங்களால் வருகின்றனவன்று. மேற்சொன்ன விஷயதோஷத்தால் வரும் ஸ்வப்ரயோஜன பரத்வம், அதற்கு ஹேதுவான ப்ராவண்யம், அது ஸித்திப்பதற்கான வ்யாபாரங்கள் ஆகிற இவையெல்லாம் ஸ்வரூப விருத்தமென்று விடப்பார்த்தாலும் விடமுடியாதவையாயிருக்கும். *மற்றிருந்தீர்கட்கறியலாகா மாதவ னென்பதோரன்பு தன்னை உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தை* (நாச்சியார் திருமொழி, 12, 1) என்று ஆண்டாளும், *தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேசிதாத்மா கதமந்யதிச்சதி?" (ஆளவந்தார் ஸ்தோத்ரம் 27) என்று ஆளவந்தாரும் அருளிச்செய்கையாலே விக்ரஹவைலக்ஷண்யத்தைக் கண்டு பகவத் விஷயத்தில் ஆழ்ந்தவர்களை மீட்கமுடியாதென்று தோற்றுகையாலே விஷய தோஷத்தால் வருமது அவர்ஜநீயமென்னுமிடம் ஸித்தம். ... (273)

**274. இப்படி யிவை யித்தனையும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும் போதைக்கு வஸ்தவ்யமாசார்ய ஸந்நிதியும் பகவத் ஸந்நிதியும்; வக்தவ்யமாசார்ய வைபவமும் ஸ்வநிகர்ஷமும்; ஜப்தவ்யம் குருபரம்பரையம் த்வயமும்; பரிக்ராஹ்யம் பூர்வாசார்யர்களுடைய வசநமுமநுஷ்டாநமும்; பரித்யாஜ்யமவைஷ்ணவ ஸஹவாஸமு மபிமாநமும்; கர்த்தவ்ய மாசார்ய கைங்கர்யமும் பகவத் கைங்கர்யமும். 31**

274. ஆகக்கீழ்ச்சொன்ன ஸ்வபாவ விசேஷங்களெல்லாம் நல்ல ஆசார்யனுடைய அநுக்ரஹத்தாலே கொழுந்துவிட்டு வளர்ந்துவரும் போதைக்கு, ப்ரபந்நன் வஸிக்கவேண்டுமிடம் ஆசார்ய ஸந்நிதியும் பகவத் ஸந்நிதியும்; வாய்விட்டுச் சொல்லவேண்டுவது ஆசார்யனுடைய வைபவமும் தன்னுடைய தாழ்வும், காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கு முறுப்பாக ரஹஸ்யமா யநுஸந்தித்துக்கொண்டு

போரவேண்டுவது குருபரம்பரையும் த்வயமும். பரிக்ரஹிக்கவேண்டுவது ஸ்ரீமந் நாதமுனிகள் முதலான பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளும் அவற்ருேடிணங்கிய அநுஷ்டாநங்களும். விடவேண்டுவது அவைஷ்ணவ ஸஹவாஸமும் அவர்களுடைய அபிமாநத்துக்குப் பாத்திரமாயிருக்கையும். செய்யவேண்டுவது ஆசார்ய கைங்கரியமும் பகவத்கைங்கரியமும். ... ... ... (274)

**275. கீழ்ச்சொன்ன பகவத் கைங்கர்ய மறிவது சாஸ்த்ரமுகத்தாலே. ஆசார்ய கைங்கர்யமறிவது சாஸ்த்ரமுகத்தாலு மாசார்ய வசநத்தாலும். 32**

275. பகவத்கைங்கரியத்தை நாம் எப்படி அறிவது; பகவான் நமக்கு இப்போது வாய்திறந்து ஒன்றையருளிச் செய்யாமையாலே எதுகொண்டு அறிவது? என்னில், ச்ருதி ஸ்மிருதி முதலிய சாஸ்த்ரமுகத்தாலே அறியவேணும். ஆசார்ய விஷயத்தில் சுச்ருஷை பண்ணவேண்டிய விதங்களையறிவது சாஸ்த்ரமுகத்தாலும் நம்மால் பிரார்த்திக்கப்பட்டு அருளிச்செய்கிற ஆசார்யனுடைய திருவாக்கிஞலும்.

**276. கைங்கர்யந்தானிரண்டு. 33**

**277. அதாவது இஷ்டம் செய்கையு மநிஷ்டம் தவிருகையும். 34**

**278. இஷ்டாநிஷ்டங்கள் வர்ணுச்ரமங்களையு மாத்மஸ்வருபத்தையு மவலம்பித்திருக்கும். 35**

276—8. இஷ்டமானதைச் செய்வதென்றும் அநிஷ்டமானதைத் தவிருவதென்றும் கைங்கர்யம் இருவகைப்படும். எது இஷ்டம்? எது அநிஷ்டம்? என்னில், அது வர்ணுச்ரமங்களைப் பொறுத்திருக்கும்; ஆத்மஸ்வருபத்தையும் பொறுத்திருக்கும். ஸ்வவர்ணுச்ரமங்களுக்கு உசிதமானவற்றைச் செய்கை இஷ்டம்; அவற்றுக்கு விருத்தங்களைச் செய்கை அநிஷ்டம். ஆத்மஸ்வருபத்துக்கு உசிதமானவற்றைச் செய்கை இஷ்டம்; அதற்கு விருத்தமானவற்றைச் செய்கை அநிஷ்டம்.

**279. புண்யத்துக் கஞ்சுகிறவன் பாபத்தைப் பண்ணுனிறே. 36**

279. வர்ணுச்ரம விருத்தங்களையும் ஸ்வரூப விருத்தங்களையும் செய்வது அநிஷ்டமென்று இவனுக்குச் சொல்லித் தவிர்ப்பிக்கைதான் வேணுமோவென்னில், வேண்டா; புண்யமானது பகவதநுக்ரஹ ஹேதுவாக சாஸ்த்ரஸித்தமா யிருக்கச் செய்தேயும் மோக்ஷவிரோதி என்னுமத்தாலே அப்புண்ணியத்தைச் செய்வதற்குங்கூட அஞ்சுகிற இவ்வதிகாரி, பகவானுடைய நிக்ரஹத்துக்கு ஹேதுவாக சாஸ்திர ஸித்தமாய், நரகஹேதுவென்று ஸாமாந்யருங்கூடச் செய்யாத பாபத்தைச் செய்ய எண்ணவும் மாட்டானே. ... ... .... ... (279)

**280. இவன் புண்யத்தைப் பாபமென்றிருக்கும்; அவன் பாபத்தைப் புண்யமென்றிருக்கும். அவனுக்கது கிடையாது; இவனது செய்யான். 37**

280. "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்யமுபைதி." என்று ஓதிக்கிடக்கையாலே பாபம்போலே புண்யமும் பகவத்ப்ராப்திக்கு இடையூருயிருக்கையாலே, ப்ரபந்நாதிகாரியானவன் புண்யத்தையும் பாபமென்றிருப்பன்; ஆச்ரிதவத்ஸலனுன எம்பெருமாஞேவென்னில் தோஷபோக்யனுகை

யாலே, இவ்வதிகாரி ஏதேனுமொரு பாபத்தைப் பண்ணினாலும் அதைக் குற்றமாக நினையாதே நற்றமாகவே நினைத்துக்கொண்டிருப்பன். அவன் அப்படி யிருந்தாலும் இவ்வதிகாரி பாபப்ரவ்ருத்தியில் அந்வயமற்று நியதனாய் வர்த்திக்கையாலே, குற்றத்தை நற்றமாகக்கொள்ளு மெம்பெருமானுக்கு அது ஆசைப்பட்டிருப்பது மாத்திரமேயொழிய, கிடைக்கமாட்டாது. ... ... .... (280)

281. கைங்கர்யந்தான் பக்திமூல மல்லாதபோது பீதிமூலமாய் வரவேணும். 38

282. அதுவுமில்லாதபோது அதிகாரத்திலும் உபாயோபேயங்களிலும் அந்வயமின்றிக்கே யொழியும். 39

281, 2. கைங்கர்யருசி பக்தியடியாக உண்டாகவேணும்; ஒருகால் அப்படி உண்டாகாவிட்டாலும், "கைங்கர்யமில்லாதபோது சேஷத்வம் குலைந்துவிடுமே" என்கிற அச்சமடியாகவாவது உண்டாகவேணும். அப்படியுமுண்டாகாவிடில், சேஷத்வமாகிற அதிகாரத்திலும், சேஷியின் க்ருபையாகிற உபாயத்திலும், அவனுடைய முகமலர்த்தியாகிற உபேயத்திலும் அந்வயம் ஒழிந்துவிடும். (281,2)

283. கைங்கர்யந்தன்னை பலஸாதநமாக்காதே பலமாக்கவேணும். 40

284. அதாவது—தான் கையேலாதே அவனைக் கையேற்கப் பண்ணுகை. 41

285. கொடுத்துக் கொள்ளாதே கொண்டத்துக்குக் கைக்கூலி கொடுக்கவேணும். 42

283—5. இப்படி அவச்யகர்த்தவ்யமாகக் கீழ்ச்சொல்லப்பட்ட கைங்கர்யத்தைப் பண்ணுமளவில், த்ருஷ்ட பலன்களிலோ அத்ருஷ்ட பலன்களிலோ ஏதேனுமொன்றுக்கு ஸாதநமாகக் கருதாமல் ஸ்வயம்ப்ரயோஜநமாகக் கருதிப் பண்ணவேணும். கைங்கர்யத்தை ஸாதநமாக்காமல் ஸ்வயம்ப்ரயோஜநமாக்குகையாவது—கைங்கரியம் பண்ணுகிற தான் அதற்குப் பலனாக அவனிடத்திலே ஒன்றை வேண்டாதே இதுவே பேறாகச்செய்யா நின்றுகொண்டு, கைங்கர்யங் கொள்ளுகிற அவ்வெம்பெருமானை "தாஸ் ஸர்வாச் சிரஸா தேவஃ ப்ரதிக்ருஹ்ணாதி வை ஸ்வயம்" என்கிறபடியே தன்னுடைய பூர்த்தியைப் பாராமல் ஸாபேக்ஷனாய் விரும்பிக் கைக்கொள்ளும்படி பண்ணுகை. ... ... (283—285)

286. ஸ்ரீவிதுரரையும் ஸ்ரீமாலாகாரரையும் கூனியையும் போலே கிஞ்சித்கரித்தால் ஸ்வரூபம் நிறம் பெறுவது. 43

287. மடிதடவாத சோறும் சுருள்நாறாத பூவும் சுண்ணம்பு படாத சாந்துமிறே யிவர்கள் கொடுத்தது. 44

286, 7. விதுரரும் மாலாகாரரும் கூனியும் எப்படி கிஞ்சித்கரித்தார்களோ அப்படி கிஞ்சித்கரித்தால்தான் ஸ்வரூபம் நிறம்பெறும். கண்ணபிரானுக்கு விதுரர் அன்னமளித்ததும், மாலாகாரர் புஷ்பம் ஸமர்ப்பித்ததும், கூனி சந்தனம் தந்ததும் அநந்ய ப்ரயோஜநமாகவிறே. ... ... ... (286, 7)

**288. கைங்கர்ய தசைபோலே முன்புள்ள தசைகளிலும் ஸ்வரூபத்தை உஜ்ஜ்வலமாக்க வேணும். 45**

**289. முன்பே நாலுதசை யுண்டு. 46**

**290. அதாவது ஜ்ஞாநதசையும் வரணதசையும் ப்ராப்திதசையும் ப்ராப்யாநுபவதசையும். 47**

288—90. கைங்கர்யம் பண்ணுகிற ஸமயத்தில் ஸ்வரூபத்தை நிறம்பெறச் செய்துகொள்வது போலவே கைங்கர்யத்துக்கு முந்தின நிலைமைகளிலும் ஸ்வரூபத்தை உஜ்ஜ்வலமாக்கிக்கொள்ளவேணும். கைங்கர்ய நிலைமைக்கு முன்னே எத்தனை நிலைமைகளுண்டென்னில்; ஆசார்யோபதேசத்தாலே தனக்கு ஞானம் பிறந்து செல்லுகையாகிற ஜ்ஞாநதசை, ஸித்தோபாயமான ஸர்வேச்வரனைத் தனக்கு உபாயமாக வரிப்பதாகிற வரணதசை, ஸம்ஸாரத் தொல்லைகளை விட்டொழிந்து அவன் திருவடிகளை யடைதலாகிற ப்ராப்திதசை, அவனைக்கிட்டி அநுபவித்தலாகிற ப்ராப்யாநுபவதசை என்பன நான்கு தசைகளுண்டு. இந்த நாலு தசைகளுமுண்டானபிறகு பரம புருஷார்த்தமான கைங்கர்ய தசையுண்டாகும். ... ... ... ... ... (288—90)

**291. ஜ்ஞாதசையில் அஜ்ஞாநத்தை முன்னிடும்; வரணதசையில் அபூர்த்தியை முன்னிடும்; ப்ராப்திதசையில் ஆர்த்தியை முன்னிடும்; ப்ராப்யாநுபவ தசையி லபிநிவேசத்தை முன்னிடும், 48**

291. கீழ்ச்சொன்ன நான்கு தசைகளில் ஸ்வரூபத்தை உஜ்ஜ்வலமாக்கும் விதமேதென்னில், முதலதான ஜ்ஞாநதசையில், ஆசார்யன் மேன்மேலும் தனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணும்படி தத்வஹித புருஷார்த்தங்களில் தன்னுடைய அஜ்ஞாநத்தைப் பலகாலும் விஜ்ஞாபிக்கவேணும்; ஸித்தோபாய ஸ்வீகார தசையில் "நோற்ற நோன்பிலேன்", "நதர்மநிஷ்டோzஸ்மி" இத்யாதிப்படியே தன்னுடைய ஆகிஞ்சந்யத்தை அநுஸந்திக்க வேணும்; மூன்றுவதான ப்ராப்தி தசையில், பெற்றபோது பெறுகிறேமென்றிராதே 'கூவிக்கொள்ளுங் காலமின்னங் குறுகாதோ' (திருவா. 6, 9, 9) இத்யாதிப்படியே துடிப்பைத் தெரிவிக்கவேணும்; நான்காவதான அநுபவதசையில், பெருவிடாயனுக்குக் குடித்த தண்ணீர் ஆராதாப்போலே அனுபவித்தவளவில் த்ருப்தி பிறவாமல் மேன்மேலும் தனக்கு விளைந்து செல்லுகிற அநுபவ ஆசையை வெளியிடவேணும். ஆக இப்படிச் செய்வதே அந்தந்த தசைகளில் ஸ்வரூபத்தை நிறம்பெறுவித்தலாம். (291)

**292. அஜ்ஞாநம் போவது ஆசார்யஜ்ஞானந்தாலே, அபூர்த்திபோவதுஈச்வர பூர்த்தியாலே; ஆர்த்திபோவது அருளாலே; அபிநிவேசம் போவது அநுபவத்தாலே. 49**

292. கீழ்ச்சொன்னபடியே ஜ்ஞாநதசையில் அஜ்ஞாநத்தை விஜ்ஞாபித்தால் ஆசார்யனுடைய ஜ்ஞாநத்தால் அந்த அஜ்ஞானம் அகன்றுவிடும். ஸித்தோபாய வரணதசையில் தன்னிடத்தில் ஒரு கைம்முதலுமில்லாமையை விஜ்ஞாபித்தால், ஒரு கைம்முதலையும் எதிர்பாராமல் காரியஞ் செய்யுமவனான எம்பெருமானுடைய ஸஹகாரி நிரபேக்ஷத்வமாகிற பூர்த்தியாலே அந்த ஆகிஞ்

சந்யம் அற்றுப்போம். ப்ராப்தி தசையில் காலவிளம்பம் பொறுக்கமாட்டாத ஆர்த்தியை விஜ்ஞாபித்தால் ஆர்த்தியைக்கண்டு எழும் அவனது க்ருபையாலே அந்த ஆர்த்தி தொலையும்; அநுபவ தசையில் அபிநிவேசத்தை வெளியிட்டால் அவ்வபிநிவேசம் மேன்மேலும் அநுபவத்தால் தீரும். ... ... (292)

**293. அஜ்ஞானத்துக்கடி அபராதம், அபூர்த்திக்கடி ஜ்ஞாநபூர்த்தி, ஆர்த்திக்கடி அலாபம், அபிநிவேசத்துக்கடி அழகு.** 50

293. கீழ்ச்சொன்ன அஜ்ஞாநம் முதலியன நான்கும் உண்டாவதற்குக் காரணம் யாதென்னில், அநாதிகாலமாக க்ருத்யங்களைச் செய்யாமையும் அக்ருத்யங்களைச் செய்கையுமாகிற அபராதம் அஜ்ஞானத்துக்கு மூலம், பேற்றுக்கு ஹேதுவாக நினைக்கக் கூடியதொன்றும் தன்னிடத்திலில்லாமையை வெளியிடுவதற்கு உறுப்பான அபூர்த்தியானது ஆகிஞ்சந்யத்துக்கு மூலம். ப்ராப்ய வஸ்துவை விரைவில் கிட்டப்பெறுமையாகிற அலாபமானது ஆர்த்திக்கு மூலம். அநுபவித்த வளவால் த்ருப்தி பிறவாதே மேன்மேலும் ஆசைப்படப்பண்ணுகிற அவனுடைய வடிவழகானது அபிநிவேசத்துக்கு மூலம். ... ... (293)

**294. ஆர்த்தியு மபிநிவேசமு மிருக்கும்படி அர்ச்சிராதிகதியிலே சொன்னோம்.** 51

294. இவற்றுள் ஆர்த்தியும் அபிநிவேசமும் இருக்கும் விதம் அர்ச்சிராதி கதியென்னும் ரஹஸ்யக்ரந்தத்திலே விரித்துரைக்கப்பட்டுள்ளது அங்கங்கேகாண்க.

**295. இவன்தனக்கு நாலுதசைபோலே நாலுகுணமுமுண்டு.** 52

**296. அதாவது ஜ்ஞாநமு மஜ்ஞாநமும் சக்தியு மசக்தியும்.** 53

295, 6. இவ்வதிகாரிக்கு நாலு தசையுண்டென்று கீழ்சொல்லப்பட்டது போல நான்கு குணங்களுமுண்டு; அவை— ஜ்ஞாநம், அஜ்ஞாநம், சக்தி, அசக்தி என்பனவாம். ... ... ... ... (295, 6)

**297. இதுதானவனுக்குமுண்டு.** 54

297. இந்த நான்கு குணங்கள் எம்பெருமானுக்கு முண்டு. ... (297)

**298. அவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய குணம்; அஜ்ஞாநத்துக்கிலக்கு இவனுடைய தோஷம். சக்திக்கிலக்கு இவனுடைய ரக்ஷணம். அசக்திக்கிலக்கு பரித்யாகம்.** 55

298. எம்பெருமானுக்குள்ள நான்கு குணங்களுக்கும் விஷயங்கள் எவை? இவ்வதிகாரிக்குள்ள நான்கு குணங்களுக்கும் விஷயங்கள் எவை? என்னில், கேண்மின் :—ஸர்வஜ்ஞனை எம்பெருமானுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயம்— இவனுடைய அத்வேஷம் முதலிய குணம். அவனுடைய அஜ்ஞானத்துக்கு விஷயம் இவனுடைய அக்ருத்யகரணம் முதலிய தோஷம். அவனுடைய அகடித கடநா ஸாமர்த்தியமாகிற சக்திக்கு விஷயம்— இவனுடைய அநிஷ்டங்களை யெல்லாம் போக்கி இஷ்டத்தைக் கொடுக்கையாகிற ரக்ஷணம், அவனுடைய அசக்திக்கு விஷயம்—தோஷங்களைக் கண்டு இவனைச் சீறிக் கைவிடுகை.

(அதாவது எம்பெருமான் இவனுடைய குணலேசத்தையே காண்பன்; தோஷங்களைக் காணமாட்டான்; இவனை ரக்ஷிப்பதிலேயே தனது சக்தியை விநியோகிப்பன்; இவனைச் சீறிக் கைவிடும் விஷயத்தில் அசக்தனாகவேயிருப்பன் என்றபடி.) (298)

299. இவனுடைய ஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்யகுணம்; அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்யதோஷம்; சக்திக்கிலக்கு ஆசார்ய கைங்கர்யம்; அசக்திக்கிலக்கு நிஷித்தாநுஷ்டாநம். 56

299. இனி சேதநனுடைய நான்கு குணங்களுக்கும் விஷயங்களாவன:— இவனுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயம் ஆசார்யனுடைய திருக்கல்யாண குணங்கள்; இவனுடைய அஜ்ஞாநத்துக்கு விஷயம் ஆசார்யனுடைய சரீரதோஷங்கள். இவனுடைய சக்திக்கு விஷயம் ஆசார்யனுக்கு உகப்பாகச் செய்யும் கைங்கர்யம். அசக்திக்கு விஷயம் சாஸ்த்ர நிஷித்தங்களான காரியங்களைச் செய்தல். (ஆசார்யனுடைய குணங்களையே இவன் அறியவேண்டுமென்றும், தோஷங்களை ஒருகாலும் அறியலாகாதென்றும், ஆசார்ய கைங்கர்யத்திலேயே தன்னுடைய சக்தியை உபயோகிக்க வேணுமென்றும் நிஷித்தாநுஷ்டானங்களில் அசக்தனாயிருக்க வேணுமென்றும் சொன்னபடி.) ... ... ... (299)

300. நிஷித்தந்தானும் நாலுபடியாயிருக்கும் 57

301. அதாவது அக்ருத்யகரணமும் பகவதபசாரமும் பாகவதாபசாரமும் அஸஹ்யாபசாரமும். 58

300, 1. அக்ருத்யகரணம், பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் என நிஷித்தம் நான்கு விதம். ... .... ... (300, 1)

302. அக்ருத்யகரணமாவது—பரஹிம்ஸை பரஸ்தோத்ரம் பரதார பரிக்ரஹம் பரத்ரவ்யாபஹாரம் அஸத்ய கதநம் அபக்ஷ்ய பக்ஷணம் தொடக்கமானவை. 59

303. பகவதபசாரமாவது—தேவதாந்தரங்களோடொக்க ஈச்வரனை நினைக்கையும் ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் மநுஷ்ய ஸஜாதீயதா புத்தியும், வர்ணாச்ரம விபரீதமான வுபசாரமும், அர்ச்சாவதாரத்தி லுபாதாந நிரூபணமும் ஆத்மாபஹாரமும் பகவத் த்ரவ்யாபஹாரமும் தொடக்கமானவை. 60

304. பகவத்த்ரவ்யத்தைத் தானபஹரிக்கையும் அபஹரிக்கிறவர்களுக்கு ஸஹகரிக்கையும் அவர்கள் பக்கலிலே யாசிதமாகவும் அயாசிதமாகவும் பரிக்ரஹிக்கையும் பகவானுக்கு அநிஷ்டமாயிருக்கும். 61

305. பாகவதாபசாரமாவது அஹங்காரார்த்த காமங்களடியாக ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம். 62

306. அஸஹ்யாபசாரமாவது நிர்நிபந்தநமாக பகவத் பாகவத விஷயமென்றால் அஸஹமாநனாயிருக்கையும் ஆசார்யாபசாரமும் தத்பக்தாபசாரமும். 63

302—6. பிராணிகளைப் பீடித்தல், அயோக்யர்களைத் துதித்தல், பரஸ்த்ரீகளைப் பரிக்ரஹித்தல், பிறர் பொருளைக் களவு செய்தல், பொய் சொல்லுதல், புக்ஷிக்கத் தகாதவற்றை பக்ஷித்தல் முதலியன அக்ருத்யகரணமாம், எம்பெரு

மானே தேவதாந்தரங்களோடு துல்யமாக நினைப்பது, ராமக்ருஷ்ணுதி அவதாரங்களில் மநுஷ்யஸஜாதீயத்வபுத்தி பண்ணுதல், வர்ணுச்ரமங்களுக்குத் தகாத விதமாக எம்பெருமானுக்கு உபசாரங்கள் பண்ணுதல், அர்ச்சாவதாரத்தில் உபாதாநத்ரவ்யத்தை ஆராய்ந்து இகழ்தல், ஸ்வஸ்வாதந்த்ரிய புத்தியுடைமை. எம்பெருமானுடைய அமுதுபடி சாத்துப்படிக்கு அர்ஹமானவற்றை அபஹரித்தல் முதலியன பகவதபசாரமாம். பகவானுடைய த்ரவ்யத்தைத்தானே நேரில் அபஹரிப்பதும் அபஹரிக்கிறவர்களுக்குத் துணையாயிருப்பதும், அவர்களிடமிருந்து சிலவற்றைப் பெற்றுக்கொள்வதும், எம்பெருமான் திருவுள்ளத்தைப் புண்படுத்துவதும், அஹங்காரமடியாகவும் அர்த்தகாமங்களடியாகவும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணுகிற விரோதம் பாகவதாபசாரமாம். பகவத் விஷயம் பாகவத விஷயமென்றால் ஒரு காரணமுமின்றியே பொருமை கொண்டிருக்கையும், ஆசார்யன் பக்கல் அபசாரப்படுகையும், ஆசார்யபக்தரான ஸப்ரஹ்மசாரிகளிடத்தில் அஸூயை கொண்டிருக்கையும் முதலானவை அஸஹ்யாபசாரமாம். ... ... (302—6)

**307. இவை யொன்றுக்கொன்று க்ரூரங்களுமாய் உபாய விரோதிகளுமாய் உபேய விரோதிகளுமாயிருக்கும். 64**

307. ஆகக் கீழ்ச்சொல்லப்பட்ட அபசாரங்களெல்லாம் மேன்மேலும் ஒன்றைவிட ஒன்று க்ரூரங்களுமாய், இவ்வாத்மாவினுடைய உஜ்ஜீவநத்துக்கு மேன்மேலும் க்ருஷிபண்ணுகிற எம்பெருமானுடைய க்ருபைக்கும் அவனுடைய முகோல்லாஸத்துக்கும் விலக்காயுமிருக்கும். .... .... ... (307)

**308 தான் ஹிதோபதேசம் பண்ணும்போது தன்னையும் சிஷ்யனையும் பலத்தையும் மாருடி நினைக்கை க்ரூர நிஷித்தம் 65**

308. [இனி, ஸதாசார்ய லக்ஷணம் ஸச்சிஷ்ய லக்ஷணம் இவ்விருவருடைய பரிமாற்றம் ஆகிய இவை நிருபிக்கப்படுகின்றன.] கீழே சொல்லப்பட்ட அதிகாரிலக்ஷணங்களெல்லாவற்றாலும் குறைவற்றிருக்கு மதிகாரியானவன், தன்னை வந்து பணிந்து நன்மை யுபதேசிக்கக் கேட்கும் சிஷ்யர்களுக்கு உபதேசிக்குங் காலத்தில், உபதேசிக்கிற தன்னையும் உபதேச பாத்ரனை சிஷ்யனையும் உபதேசத்தின் பலனையும் விபரீதமாகக் கருதுவதானது கீழ்ச்சொல்லப்பட்ட நிஷித்தங்களெல்லாவற்றிற்காட்டிலும் மிகவும் கொடிது. ... ... (308)

**309. தன்னை மாருடி நினைக்கையாவது தன்னை ஆசார்யனென்று நினைக்கை; சிஷ்யனை மாருடி நினைக்கையாவது தனக்கு சிஷ்யனென்று நினைக்கை. பலத்தை மாருடி நினைக்கையாவது த்ருஷ்ட ப்ரயோஜநத்தையும் சிஷ்யனுடைய உஜ்ஜீவனத்தையும், பகவத் கைங்கர்யத்தையும் ஸஹவாஸத்தையும் பலமாக நினைக்கை. 66**

309. தன்னையும் சிஷ்யனையும் பலனையும் விபரீதமாகக் கருதுகையாவது என்னென்னில், உபதேசிக்கும்போது ஸாக்ஷாத் தன்னுடைய ஆசார்யனே உபதேசிப்பதாகவும் தான் ஸ்வாசார்யனுக்குக் கரணபூதனாகவும் நினைத்துக் கொண்டு உபதேசிக்கவேண்டியிருக்க, அப்படி செய்யாமல் தன்னையே இவனுக்கு ஆசார்யனென்று நினைப்பதானது தன்னை மாருடி நினைக்கையாம். இப்போது

உபதேசங் கேட்கிற இவனையும் தன்னைப்போலவே ஸ்வாசார்யனுக்கு சிஷ்யனாக நினைக்கவேண்டியிருக்க அப்படி நினையாமல் தனக்கே சிஷ்யனென்று நினைப்ப தானது சிஷ்யனை மாறாடி நினைக்கையாம். உபதேசம் பண்ணுமளவில் இவ்வாத்மா திருந்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாகவேணுமென்னுமிதுவே பலனாக உபதேசிக்க வேண்டியிருக்க அந்தப் பலனைக் கருதி உபதேசியாமல், இவனால் நேரக்கூடிய த்ருஷ்ட ப்ரயோஜநத்தையாவது, இவன் ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டு உஜ்ஜீவித்துப்போவன் என்பதையாவது, ஓராத்மாவைத் திருத்துவதானது நந்தவனமமைத்தல் முதலியனபோலே பகவத் கைங்கர்யமாகுமென்றாவது, நமக்கு ஸஹவாஸத்துக்கு உபயுக்தனாவனென்றாவது கருதி உபதேசித்தல் பலனை மாறாடி நினைக்கையாம். (இதன் தெளிவை மேலே காண்க) ... ... (309)

**310. நினையாதிருக்க இந்நாலு பலமும் ஸித்திக்கிறபடி யென்னென்னில்; சேஷபூதனான சிஷ்யன் நினைவாலே த்ருஷ்டபலம் ஸித்திக்கும்; ஈச்வரன் நினைவாலே உஜ்ஜீவனம் ஸித்திக்கும்; ஆசார்யன் நினைவாலே பகவத் கைங்கரியம் ஸித்திக்கும்; உபகார ஸ்ம்ருதியாலே ஸஹவாஸம் ஸத்திக்கும். 67**

310. கருதக்கூடாதென்று கீழ் மறுத்த நான்கு பலன்களும் எவ்விதமாக ஸித்திக்குமென்னில், சுச்ரூஷை முதலிய த்ருஷ்ட ப்ரயோஜநம் சிஷ்யனுடைய நினைவாலே ஸித்திக்கும்; எம்பெருமானுடைய க்ருபாகார்யமான நினைவாலே சிஷ்யனுடைய உஜ்ஜீவநம் ஸித்திக்கும். இவன் ஹிதோபதேசம் பண்ணி மங்களாசாஸநத்துக்கு ஆளாம்படி சேதநரைத் திருத்துகிறவிது எம்பெருமான் திருவுள்ளத்துக்கு மிகவு முகப்பாகையாலே இது பகவத் கைங்கர்யமன்றோ? என்றநுஸந்தித்திருக்கிற ஸ்வாசார்யனுடைய நினைவாலே உபதேஷ்டாவான தனக்கு பகவத் கைங்கர்யம் சித்திக்கும். 'நெடுநாளாக அஹங்கார மமகாரங்களாலே கெட்டுப்போனவென்னை நிர்ஹேதுகமாக அங்கீகரித்துத் திருத்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாம்படி பண்ணின மஹோபகாரகனன்றோ' என்கிற உபகார ஸ்மிருதியாலே சிஷ்யனானவன் ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியமாட்டாமல் கூடி நடக்கையால் தத்ஸஹவாஸம் தன்னடையே ஸித்திக்கும். ... 310

**311. ஸாக்ஷாத்பலமும் ஆசார்யத்வமும் ஸித்திக்கிறபடி யென்னென்னில்; தன் நினைவாலும் ஈச்வரன் நினைவாலும் ஸித்திக்கும். 68**

311. உபதேசபாத்ரமான இந்த சிஷ்யன் திருந்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாகுகையாகிற ஸாக்ஷாத்பலன் எப்படி ஸித்திக்குமென்னில், உபதேஷ்டாவான தான் விப்ரதிபத்தியொன்றுமில்லாமல் இதுவே பலனாக நினைத்து உபதேசிக்கவே அவன் அப்படி திருந்தி மங்களாசாஸநாதிகாரியாய் விடுவன். தன்னை ஆசார்யனாக நினைத்துக்கொள்ளக்கூடாதென்றால் பின்னை தனக்கு ஆசார்யத்வம் எப்படி ஸித்திக்குமென்னில், "இப்படி தன்னையும் சிஷ்யனையும் பலனையும் மாறாடி நினையாமல் உள்ளபடி அநுஸந்தித்து உபதேசிக்கும் பரிபாகமுடையனான இவன் இவனுக்கு ஆசார்யன்" என்று எம்பெருமான் நினைப்பிட்டருளுகையாலே அந்த ஈச்வரன் நினைவாலே இவனுக்கு ஆசார்யத்வமுண்டாகும். ... ... (311)

312. இப்படி யொழிய உபதேசிக்கில் இருவர்க்கும் ஸ்வரூப ஸித்தியில்லை. 69

312. இப்படியல்லாமல், க்ரூர நிஷித்தமாக அடியிற்சொன்ன விபரீத வுணர்ச்சியோடே உபதேசித்தால் உபதேசிப்பவனுக்கு ஆசார்யத்வமாகிற ஸ்வரூப ஸித்தியில்லை; உபதேச சுத்தி யில்லாமையாலே உபதேசம் கேட்பவனுக்கும் சிஷ்யத்வமாகிற ஸ்வரூப ஸித்தியில்லை. ... ... ... (312)

313. ஆசார்யனுக்கு சிஷ்யன்பக்கல் க்ருபையும் ஸ்வாசார்யன் பக்கல் பாரதந்த்ரியமும் வேணும். 70

313. ஆசார்யனுக்கு முக்கியமாக இரண்டு குணங்கள் வேண்டியவை; உஜ்ஜீவிக்க விரும்பி வந்துசேர்ந்த சிஷ்யன்மீது ஐயோவென்றிரங்கி அவன் உய்வதற்கான உபதேசங்களைப் பண்ணுகைக் குறுப்பான க்ருபையும், தன்னை உபதேசகர்த்தாவாக நினையாதே ஸ்வாசார்யனுக்குக் கரண பூதனாக அநுஸந்திப் பதற் கீடான ஸ்வாசார்ய பாரதந்த்ரியமும். ... ... ... (313)

314. க்ருபையாலே சிஷ்யன் ஸ்வரூபம் ஸித்திக்கும்; பாரதந்த்ரியத்தாலே தன் ஸ்வரூபம் ஸித்திக்கும். 71

314. இவ்விரண்டு குணங்களாலும் என்னபலிக்குமென்னில், சிஷ்ய விஷயத்திலுள்ள க்ருபையினாலே நாளுக்கு நாளும் அவன் ஸ்வரூபம் நிர்மலமாகையினாலே சிஷ்யனுடைய ஸ்வரூபம் ஸித்திக்கும். ஸ்வாசார்ய பாரதந்த்ரியத்தாலே தன்ஸ்வரூபம் ஸித்திக்கும். ... ... ... ... (314)

315. நேரே ஆசார்யனென்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை யுபதேசித்தவனை. 72

316. ஸம்ஸார வர்த்தகங்களுமாய் க்ஷுத்ரங்களுமான பகவன்மந்த்ரங்களை யுபதேசித்தவர்களுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை. 73

317. பகவந் மந்த்ரங்களை க்ஷுத்ரங்களென்கிறது பலத்வாரா. 74

318. ஸம்ஸாரவர்த்தகங்களென்கிறதும் அத்தாலே. 75

319. இதுதான் ஔபாதிகம். 76

320. சேதநனுடைய ருசியாலே வருகையாலே. 77

315-20. திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை 'இது ஸம்ஸார நிவர்த்தகம்' என்னும் ப்ரதிபத்தியுடனே உபதேசிக்குமவனே ஸாக்ஷாதாசார்ய னெனப்படுவன். ஸம்ஸாரத்தை வளர்க்குமவையாய் க்ஷுத்ரங்களுமாயிருந்துள்ள இதரமந்த்ரங்களை உபதேசித்தவர்களுக்கு ஆசார்யத்வ பூர்த்தியில்லை. க்ஷுத்ர தேவதைகளின் மந்த்ரங்களையன்றோ க்ஷுத்ரமந்த்ர மென்னலாம், பகவந்மந்த்ரங்களை க்ஷுத்ர மென்னலாமோ வென்னில், அர்த்தம் காமம் ஸந்தானம் கல்வி முதலிய க்ஷுத்ர பலன்களைத் தருமவையென்னுங் காரணத்தாலே க்ஷுத்ரமந்த்ர மென்கிறதத்தனை. க்ஷுத்ர பலன்களைக் கொடுக்குமவை யென்பதுபற்றியே ஸம்ஸாரத்தை வளர்க்குமவை யென்றதும். ஆனால் பகவந்மந்த்ரங்களுக்கு க்ஷுத்ரபல ப்ரதத்வம் இயற்கையாகவுள்ளதன்று; பகவந்மந்த்ரங்களாகையாலே மோக்ஷ ப்ரதாந சக்தியுமுண்டு; இருந்தாலும் ப்ரக்ருதி வச்யனான சேதனனுடைய க்ஷுத்ரபல ருசியாலே

அவற்றுக்கு க்ஷுத்ரபலப்ரதத்வம் வருகையாலே இது ஔபாதிகம். ஐச்வர்ய காமர்க்கு கோபால மந்த்ராதிகளும், புத்ர காமர்க்கு ராமமந்த்ராதிகளும், வித்யா காமர்க்கு ஹயக்ரீவ மந்த்ராதிகளும், விஜய காமர்க்கு ஸுதர்சந நாரஸிம்ஹாதி மந்த்ரங்களும் இப்படி நியமேந க்ஷுத்ரபலன்களையே கொடுத்துக்கொண்டு வருவதானது சேதநருடைய ருசிக்கிடாக "இன்ன மந்த்ரங்கள் இன்ன பலன்களைத் தரக்கடவன" என்று எம்பெருமான் நியதமாகக் கல்பித்து வைக்கையினுலிறே. அதுதான் சேதநருடைய ருசிக்குத் தகுதியாகக் கல்பித்ததாகையாலே அவற்றுக்கு அவை ஸ்வாபாவிகமல்லவென்றும் ஔபாதிகமென்றும் சொல்லக் குறையில்லை. *

[இனி ஸச்சிஷ்ய லக்ஷணம் சொல்லப்படுகிறது]

**321. சிஷ்யனென்பது ஸாத்யாந்தர நிவ்ருத்தியும் பலஸாதந சுச்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும் அநஸூயையும் உடையவனை. 78**

321. ஐச்வர்யம் கைவல்யம் முதலிய இதர பலன்களில் வெறுப்பும், பேற்றுக்கு உபாயமானவற்றைக் கேட்க விருப்பமும் இவ்விருள்தருமா ஞாலத்தில் நின்றும் கடுகப் போகப் பெருமையாலான ஆர்த்தியும் ஆசார்யனிடத்தில் அளவு கடந்த ஆதரமும், பிறர் மினுக்கம் பொருமையில்லாமையுமுடையவன் சிஷ்யனெனப்படுவான். .... ... ... ... (321)

**322. மந்த்ரமும் தேவதையும் பலமும் பலாநுபந்திகளும் பலஸாதநமும் ஐஹிகபோகமுமெல்லா மாசார்யனே யென்று நினைக்கக்கடவன். 79**

322. இப்படிப்பட்ட சிஷ்யனுனவன் ஸ்வாசார்ய விஷயத்தில் எப்படிப் பட்ட ப்ரதிபத்தியை வஹிக்க வேணுமென்னில், திருமந்த்ரம் அதனுல் பிரதிபாதிக் கப்படுகிற தேவதை, அதனருளால் கிடைக்கக் கூடிய கைங்கர்யமாகிற பெரும் பேறு, அப்பேற்றை யநுஸரித்த அவித்யாதி நிவ்ருத்திபூர்வக ஸ்வஸ்வரூபாவிர்ப் பாவம் முதலியன, அப்பேற்றுக்கு ஸாதநமானவை, புத்ர தார க்ருஹ க்ஷேத்ராதி ரூபங்களான இஹலோக போகங்கள் ஆகிற இவையெல்லாம் நமக்கு ஆசார்யனே யென்று கொள்ளக்கடவன் ..... ... .... .... (322)

**323. "மாதா பிதா யுவதய:" என்கிற ச்லோகத்திலே இவ்வர்த்தத்தைப் பரமாசார்யரு மருளிச்செய்தார். 80**

323. இவ்வர்த்தத்தைப் பரமாசார்யரான ஆளவந்தாரும் ஸ்தோத்ர ரத்நத்தில் "மாதா பிதா யுவதய:" என்கிற ச்லோகத்தா லருளிச்செய்தார். (323)

**324. இதுக்கடி உபகார ஸ்ம்ருதி. 81**

324. இப்படி எல்லாம் ஆசார்யனேயென்று அநுஸந்திப்பதற்கு மூலம் யாதெனில், நித்ய ஸம்ஸாரியாய்க் கிடந்த தன்னை உபதேசாதிகளாலே திருத்தி நித்யஸூரிகளுடைய அநுபவத்துக்கு உரியனும்படி பண்ணின உபகார ஸ்ம்ருதி யேயாம். .... ... .... .... ... (324)

**325. உபகார ஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞதை;**
**முடிந்தநிலமீச்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை. 82**

325. உபகாரஸ்ம்ருதிக்கு முதலடியும் முடிவெல்லையுமுண்டு; இச்சேதநன் முந்துற அநுஸந்திப்பது ஆசார்யன் பண்ணின உபகாரத்தையாகையாலே அவ்வாசார்யன்பக்கல் நன்றிபாராட்டுதல் முதலடியாம்; ஆசார்யனுடையகௌரவம் நெஞ்சில் படப்பட அவ்விஷயத்திலே தன்னைக் கொண்டுவந்து சேர்த்த ஈச்வரன் பண்ணின க்ருஷிகளைப் பிறகு அநுஸந்திக்க நேருகையாலே எம்பெருமான் பக்கல் நன்றி பாராட்டுதல் முடிவெல்லையாகும். இத்தால்—பகவத் விஷயத்தை யுபகரித்த ஆசார்யன் பண்ணின உபகாரத்தை யநுஸந்திக்க இழிந்தால் அவனுடைய வைபவம் நெஞ்சிலே பட்டுக் கனியக்கனிய, "இவ்வாசார்யனை நாம் பெற்றது எம்பெருமானாலேயன்றோ" என்று எம்பெருமானைப்பற்றின நன்றி பாராட்டுதலிலே சென்று தலைக்கட்டுமென்றதாயிற்று. .... ... .... (325)

**[ஸதாசார்யனுடையவும் ஸச்சிஷ்யனுடையவும் பரிமாற்றமிருக்கும்படி என்னென்னில். அது சொல்லப்படுகிறது.]**

**326. சிஷ்யனு மாசார்யனும் அந்யோந்யம் ப்ரிய ஹிதங்களை நடத்தக் கடவர்கள். 83**

326. சிஷ்யன் ஆசார்யனுக்கு ப்ரிய ஹிதங்களிரண்டையும் நடத்தக் கடவன்; அப்படியே ஆசார்யனும் சிஷ்யனுக்கு ப்ரிய ஹிதங்களிரண்டையும் நடத்தக் கடவன். ... ... .... ... (326)

**327. சிஷ்யன் தான் ப்ரியத்தை நடத்தக்கடவன்; ஈச்வரனைக் கொண்டு**
**ஹிதத்தை நடத்தக்கடவன்; ஆசார்யன் மாருடி நடத்தக்கடவன். 84**

327. இருவரும் இரண்டையும் பரஸ்பரம் நடத்திக்கொள்ளுகிற கிரமம் என்னென்னில், சிஷ்யனானவன் ஆசார்யனுக்கு ப்ரிய ஹிதங்களிரண்டையும் நடத்துமிடத்தில் தன் ஸ்வரூபத்துக்குத் தகுதியாக "ஆசார்யனுடைய முகமலர்த்தியே புருஷார்த்தம்" என்று நினைத்துத் தனது கிஞ்சித்காரம் முதலியவற்றாலே தான் ஆசார்யனுக்கு ஸர்வகாலமும் ப்ரியமானதை நடத்திவரக் கடவன்; மங்களாசாஸநபரனாகையாலே "இவ்விபூதி ஸ்வபாவத்தால் திருவுள்ளத்தில் ஒரு கலக்கமும் வாராதிருக்க வேணும்" என்றும், அப்படி ஏதேனும் ஒன்று வந்த காலத்தில் "இத்தைப் போக்கித் தந்தருளவேணும்" என்றும் பிரார்த்தித்து எம்பெருமானைக் கொண்டு ஹிதத்தை நடத்தக்கடவன். ஆசார்யனானவன் சிஷ்யனுக்குத் தான் நேரில் ஹிதத்தை நடத்தக்கடவன். (அதாவது) தான் ஹிதைகபரனாகையாலே இவனுக்கு ஸ்வரூபஹாநி வாராதபடி நியமித்து நல்வழியில் நடத்திக்கொண்டு போருகையாகிற ஹிதத்தைத் தான் நடத்தவேணும்; சரீர தாரணத்துக்கு வேண்டிய ஸாமக்ரிகளின் குறைவினால் சிஷ்யன் மிகவும் நலங்குமளவில் "இருந்த நாளைக்கு இவன் நலங்காமல் இவையுமவனுக்கு உண்டாம்படி திருவுள்ளம் பற்றியருள வேணும்" என்று பிரார்த்தித்து எம்பெருமானைக்கொண்டு ப்ரியத்தை நடத்தக் கடவனென்கை. ... .... ... .... .... (327)

**328. சிஷ்யன் உகப்பிலே யூன்றிப்போரும்; ஆசார்ய னுஜ்ஜீவனத்திலே யூன்றிப்போரும். 85**

328. இப்படி செய்து போருமிடத்தில் இருவர்க்கும் இரண்டும் துல்ய ப்ரதாநமாயிருக்குமோ வென்னில், இல்லை; சிஷ்யன் சேஷபூதனுகையாலே சேஷியான ஆசார்யனுடைய ப்ரீதியிலே ஊற்றமாயிருக்கக் கடவன்; ஆசார்யன் பரம க்ருபாளுவாகையாலே தன்னுடைய சிஷ்யனுனவிவன் ஸம்ஸாரக் கடலில் நின்றுங் கரையேறி உஜ்ஜீவிப்பதிலே ஊற்றமாயிருக்கக் கடவன். ஆகையாலே சிஷ்யனுக்கு ப்ரியகரணமும் ஆசார்யனுக்கு ஹிதகரணமுமே ப்ரதாநமாம். ... (328)

**329. ஆகையால் சிஷ்யனுசார்யனுடைய ஹர்ஷத்துக்கு இலக்காகை யொழிய ரோஷத்துக் கிலக்காகைக் கவகாசமில்லை. 86**

329. சிஷ்யன் ஆசார்யனுடைய உகப்பிலேயே ஊன்றியிருக்க வேண்டிய வனுன பின்பு இவன் அவ்வாசார்யனுடைய ப்ரீதிக்கு விஷயமாயிருப்பதொழிய அநிஷ்டங்களைச்செய்து நிக்ரஹத்துக்கு விஷயமாயிருக்க அவகாசமேயில்லை. (329)

**330. நிக்ரஹத்துக்குப் பாத்ரமாம்போது அது ஹிதரூபமாகையாலே யிருவர்க்குமுபாதேயம். 87**

330. பிரகிருதி ஸம்பந்தத்தோடே யிருக்கிறவிவனுக்கு எப்போதும் ஒரே தன்மையாக இருக்க முடியுமோ? ஏதேனும் கலக்கங்களுண்டாகாதோ? அது காரணமாக நிக்ரஹிக்கப்பெறவும் நேரிடுமன்றோ? என்னில், அப்படி நிக்ரஹிக்க நேர்ந்தால் அந்த நிக்ரஹம் இரண்டு தலைக்கும் உபாதேயமாகும்; ஏனென்னில், சிஷ்யன் அநிஷ்டங்களைச் செய்து ஆசார்ய நிக்ரஹத்துக்குப் பாத்ரமாம்போது அந்த நிக்ரஹம் சிஷ்யனுன இவனை நல்வழிப்படுத்துகைக்கு உறுப்பாய்க்கொண்டு ஹிதரூபமாயிருக்குமதாகையாலே "இப்படி நம்மை நிக்ரஹிக்க நேர்ந்ததே!" என்று சிஷ்யனும் வருந்தவேண்டாமல் "இவனை இப்படி நிக்ரஹிக்க நேர்ந்ததே!" என்று ஆசார்யனும் வருந்தவேண்டாமல், இது மேன்மேலும் நன்மைக்குத்தானே உறுப்பாவதென்று கொண்டிருக்க ப்ராப்தம். ... .... ... (330)

**331. சிஷ்யனுக்கு நிக்ரஹகாரணம் த்யாஜ்யம். 88**

331. நிக்ரஹம் இப்படி உபாதேயமாகில் நிக்ரஹத்தின் காரணமான அபராதமும் உபாதேயமாகாதோவென்னில், ஆகாது. தன்னுடைய ப்ரமாதத்தால் நிக்ரஹ முண்டானுல் அதை வெறுக்காதிருக்கவேணுமென்று சொல்லிற்றத்தனை யொழிய, மறுபடியும் அந்த நிக்ரஹத்துக்குக் காரணமான அபராதத்தைச் செய்தல் வேண்டு மென்றதன்று. நிக்ரஹ காரணம் த்யாஜ்யமேயாம். ... .... (331)

**332. நிக்ரஹந்தான் பகவந் நிக்ரஹம்போலே ப்ராப்யாந்தர்க்கதம். 89**

332. ஸ்வாசார்யன் ஸ்வவிஷயத்தில் ஹிதரூபமாகப்பண்ணுகிற நிக்ரஹ மானது தன்னுடைய விரோதிகள் கழிவதற்குக் காரணமாகக் கூடியதாகையாலே "கொடிய வாய் விலங்கினுயிர் மலங்கக் கொண்ட சீற்றமொன்றுண்டு" (பெரிய திருமொழி 5, 8, 3) என்னப்பட்ட பகவந்நிக்ரஹம் போலே இதுவும் புருஷார்த்த கோடியிலே உட்புகுந்து நிற்கும். ... .... ... (332)

**333. ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணக்கடவன்; சிஷ்யன் ஆசார்யனுடைய தேஹத்தைப் பேணக்கடவன். 90**

333. [ஆசார்ய சிஷ்யர்களுக்கு ப்ரதாநக்ருத்யமாகக் கீழ்ச்சொன்ன ஹிதகரண ப்ரியகரணங்களின் ஸ்வரூபம் இனி விவரிக்கப்படுகிறது.] ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தை எவ்விதத்திலும் பழுதுபடாதபடி நோக்கிக்கொண்டு போரக்கடவன்; சிஷ்யன் ஸ்வாசார்யனுடைய திருமேனியை உசித கைங்கர்யங்களாலே நோக்கிக்கொண்டு போரக்கடவன். ... .... (333)

**334. இரண்டுமிருவர்க்கும் ஸ்வரூபமுமாய் பகவத்கைங்கர்யமுமாயிருக்கும். 91**

334. ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணுகையும், சிஷ்யன் ஆசார்யனுடைய திருமேனியைப் பேணுகையுமாகிற இரண்டும் இருவர்க்கும் ஸ்வரூபமாயிருப்பதோடு பகவத் கைங்கர்யமுமாயிருக்கும்; (எப்படி பகவத்கைங்கர்யமாகிறதென்னில்:) எம்பெருமானுக்கு போக்யமாயிருக்கவேண்டிய (சிஷ்யனாகிற ஒரு ஆத்மாவினுடைய) ஸ்வரூபம் அப்படி போக்யமாக விநியோகப்படாமல் கிடந்தது; அது அப்படிப்பட்ட விநியோகத்துக்கு உரியதாம்படி திருந்துமாறு (ஆசார்யன்) பேணிக்கொண்டு போருகையானது பகவத் கைங்கர்யமாக ஆகுமன்றோ. அப்படியே, "நன்கென்னுடலம் கைவிடான்" (திருவாய்மொழி 10-7-4) என்கிறபடியே எம்பெருமானுக்குப் பரம போக்யமாயிருக்கிற ஆசார்ய விக்ரஹத்தை (சிஷ்யன்) பேணிக்கொண்டு போருகையானது பகவானுக்கு மிகவு முகப்பாகையாலே இதுவும் பகவத் கைங்கர்யமாயிருக்கும். .... .... .... (334)

**335. ஆசார்யனுக்கு தேஹரக்ஷணம் ஸ்வரூபஹாநி; சிஷ்யனுக்கு ஆத்மரக்ஷணம் ஸ்வரூபஹாநி.**

335. ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணவேணுமென்றும் சிஷ்யன் ஆசார்யனுடைய தேஹத்தைப் பேணவேணுமென்றும் இப்படி ஒரு நியமம் பண்ணவேணுமோ? ஆசார்யனுக்குத் தன்னுடைய தேஹ ரக்ஷணத்திலும் சிஷ்யனுக்குத் தன்னுடைய ஸ்வரூப ரக்ஷணத்திலும் அந்வயமுண்டானால் என்ன கெடுதி? என்னில், ஆசார்யன் தன்னுடைய தேஹயாத்ரையில் தான் உபேக்ஷையாயிருக்க, சிஷ்யனானவன் "இதுவே நமக்கு ஸ்வரூபம்" என்று அதைப் பேணிக்கொண்டு போரவேணுமே தவிர, தன்னுடைய தேஹத்தைத் தானே ரக்ஷிக்கையாகிறவிது ஆசார்யனுக்கு ஆசார்யத்வமாகிற ஸ்வரூபத்துக்கு ஹாநி. சிஷ்யன் தான் ஆசார்யனிடத்திலே ந்யஸ்தபரனானபின்பு தன் ஸ்வரூபத்தை அவ்வாசார்யன் ரக்ஷித்துக்கொண்டு போகக் கண்டிருக்கையொழிய தன ஆத்ம ரக்ஷணத்தைத் தான் பண்ணத்தேடுவது சிஷ்யனுக்கு சிஷ்யத்வமாகிற ஸ்வரூபத்துக்கு ஹாநி. ஆகையால் மறந்தும் சிஷ்யனுக்குத் தன்னுடைய ஸ்வரூப ரக்ஷணமும் ஆசார்யனுக்குத் தன்னுடைய தேஹ ரக்ஷணமும் கர்த்தவ்யமன்று. ... (335)

**336. ஆசார்யனாத்மரக்ஷணம் பண்ணுமிடத்தில் அஹங்காரம் விரோதி; சிஷ்யன் தேஹரக்ஷணம் பண்ணுமிடத்தில் மமகாரம் விரோதி. 93**

336. ஆசார்யன் தன்னுடைய உபதேசாதிகளாலே சிஷ்யனுடைய ஆத்ம ரக்ஷணம் பண்ணுமளவில் "நான் ரக்ஷித்துக்கொண்டு போருகிறேன்" என்று அஹங்காரம் வஹிக்கலாகாது. அது ஸ்வாசார்ய பாரதந்த்ரியமாகிற தன்னதிகாரத்துக்கு விரோதி; சிஷ்யனுனவன் பொருள் முதலியவற்ருலே ஆசார்யனுடைய தேஹரக்ஷணம் பண்ணுமளவில் "என்னுடைய திரவியங்களாலும் கரணங்களாலும் இப்படி ரக்ஷித்துக்கொண்டு போருகிறேன்" என்று மமகாரம் வஹிக்கலாகாது. அது "சரீரம் அர்த்தம் பிராணன் முதலியவையெல்லாம் ஆசார்யனுக்கு சேஷபூதம்" என்றிருக்கக்கடவ தன் அதிகாரத்துக்கு விரோதி. .... ... (336)

**337. ஆசார்யன் தன்னுடைய தேஹரக்ஷணம் தன் வஸ்துவைக்கொண்டு பண்ணக் கடவன்; சிஷ்யன் ஸ்வதேஹரக்ஷணம் ஆசார்யன்வஸ்துவைக்கொண்டு பண்ணக்கடவன். 94**

337. "சரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத் குருப்யோ நிவேதயேத்" [சரீரத்தையும் பொருளேயும் பிராணனேயும் ஸதாசார்யனிடத்தில் ஒப்பிக்க வேண்டியது] என்கிறபடியே சிஷ்யனுடைய ஸர்வஸ்வமும் அடியிலேயே தனக்கு ஸமர்ப்பிதமாகையாலே, ஸ்வதேஹ ரக்ஷணத்துக்கு உறுப்பாக அவன் காலோசிதமாய்க் கிஞ்சித்கரிக்குமவற்றை அவனுடையதென்னும் நினைவின்றியே தன்னுடையதென்றே வாங்கி விநியோகப்படுத்திக்கொள்ள வேண்டியவன் ஆசார்யன். தனக்கு ஓர் உடைமையின்றியே எல்லாம் ஆசார்ய சேஷமாகையாலே ஸ்வதேஹ ரக்ஷணத்துக்காகத் தான் விநியோகப்படுத்திக் கொள்ளுமவற்றை ஆசார்யனுடைமை என்கிற ப்ரதிபத்தியோடே விநியோகங் கொள்ளவேண்டியவன் சிஷ்யன். ... .... ... ... ... (337)

**338. ஆசார்யன் சிஷ்யன் வஸ்துவைக் கொள்ளக் கடவனல்லன். சிஷ்யன் தன் வஸ்துவைக் கொடுக்கக் கடவனல்லன்.**

338. சிஷயன் தன்னுடையதாக அபிமாநித்திருக்கும் வஸ்துவை ஆசார்யன் அங்கீகரிக்கலாகாது. சிஷ்யன் "ஸ்வகீயம்" என்று அபிமாநித்திருக்கும் வஸ்து விஷத்தோடொக்குமாகையாலே அப்படிப்பட்ட வஸ்துவை ஆசார்யனுக்கு இடுவது விஷமிடுவது போலாகுமாதலால் அஹங்காரமமகாரமாகிற விஷந்தீண்டின வஸ்துவை சிஷ்யன் ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கக் கடவனல்லன். .... (338)

**339. கொள்ளில் மிடியனும், கொடுக்கில் கள்ளனும். 96**

**340. கொள் கொடையுண்டாகில் ஸம்பந்தம் குலையும். 97**

339, 40. சிஷ்யன் தன்னுடையதாக அபிமாநித்திருக்கும் பொருளை ஆசார்யன் ஸ்வீகரித்தால், "எம்பெருமான் யோகக்ஷேம நிர்வாஹகனுயிருக்கும் போது நமக்கு என்னகுறை?" என்றிருக்கும் பூர்ணனுன தான் தேஹ யாத்திரைக்குங்கூட முதலற்ற தரித்ரனுய்விடுவன். சிஷ்யன் என்னுடையதென்று புத்தி பண்ணி ஒன்றை ஆசார்யனுக்குக் கொடுத்தால், ஏற்கெனவே ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்கப்பட்டதான பொருளிலே மமகாரம் பாராட்டினபடியாலே ஆசார்ய

னுடைய ஸொத்தைக் களவாடின பாபியாய்விடுவன். இப்படி முறைகேடான கொள்கொடை யுண்டானபோது சிஷ்யாசார்யத்வரூப ஸம்பந்தமும் குலைந்துபோம்.

341. இவன் மிடியனுகையாலே கொடான், அவன் பூர்ணனுகையாலே கொள்ளான்,

341. சிஷ்யனுனவிவன் "எல்லாம் ஆசார்யனுடையது; நம்மதென்று ஸமர்ப்பிக்கக் கூடியது ஒன்றுமில்லை" என்றிருக்கும் அகிஞ்சநனுகையாலே "ஆசார்யனுக்கு நாம் ஒன்றை ஸமர்ப்பிக்கிறோம்" என்கிற எண்ணத்துடன் ஒன்றும் கொடுக்கமாட்டான். ஆசார்யனுனவன் "எம்பெருமான் ஸகல யோகக்ஷேம துரந்தரனுய்க்கொண்டு நடத்திக்கொண்டு போருகையாலே நமக்கினி என்ன குறையுண்டு" என்றிருக்கும் பரிபூர்ணனுகையாலே சிஷ்யனுடைய மமகார துஷ்டமானவை யொன்றையும் ஏற்றுக்கொள்ளமாட்டான். .... .... (341)

342. அவனுக்குப் பூர்த்தியாலே ஸ்வரூபம் ஜீவித்தது.
இவனுக்கு மிடியாலே ஸ்வரூபம் ஜீவித்தது. 99

342. சிஷ்யனுடைய மமகார துஷ்டமானவை யொன்றையும் கொள்ளாமைக்குடலான பூர்த்தியாலே ஆசார்ய ஸ்வரூபம் ஜீவித்தது; சிஷ்யனுனவிவனுக்கு ஸ்வகீயமென்னும் புத்தியோடே ஒன்றையும் ஸமர்ப்பிக்கைக்கு யோக்யதையில்லாத ஆகிஞ்சந்யத்தாலே சிஷ்யத்வமாகிற ஸ்வரூபம் ஜீவித்தது. .... (342)

343. ஆனுல் சிஷ்யன் ஆசார்யனுக்குப் பண்ணுமுபகாரம்
ஒன்றுமில்லையோவென்னில். 100

344. ஆசார்யன் நினைவாலே யுண்டு. 101

345. அதாவது ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்கள். 102

343—5. இப்படி கொள்கொடைகளுக்கு யோக்யதை யில்லையாகிலும் நன்றியறிவுள்ள சிஷ்யன் மஹோபகாரகனுன ஆசார்யனுக்குப் பண்ணுமுபகாரம் ஒன்றுமில்லையோவென்னில், ஸ்வரூபஜ்ஞனுன சிஷ்யனுடைய நினைவால் ஒருகாலு மொன்றுமில்லை; தன்னுடைய க்ருஷி பலித்ததென்று மகிழும் ஆசார்யனுடைய நினைவாலே யுண்டு. அது ஏதென்னில், ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநமும் அதற்கேற்ற உபாயாத்யவஸாயமும் உபேயப்ரேமமும், இவை மூன்றுக்கும் தகுதியான நல்லநுஷ்டாநமுமாம் .... .... ... (343—5)

346. ஆசார்யப்ரீத்யர்த்தமாக இவனுக்குத் தவிரவேண்டுவது பகவத் த்ரவ்யத்தை யபஹரிக்கையும் பகவத்போஜநத்தை விலக்குகையும் குருமந்த்ர தேவதா பரிபவமும். 103

347. பகவத் த்ரவ்யாபஹாரமாவது ஸ்வாதந்த்ரியமும் அந்ய சேஷத்வமும்; பகவத் போஜநத்தை விலக்குகையாவது அவனுடைய ரக்ஷகத்வத்தை விலக்குகை.

348. அவனுடைய ரக்ஷகத்வக்ரமம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னேம். குருபரிபவமாவது கேட்டவர்த்தத்தின்படி யனுஷ்டியாதொழிகையும் அநதிகாரிகளுக்கு உபதேசிக்கையும்; மந்த்ர பரிபவமாவது அர்த்தத்தில் விஸ்ம்ருதியும் விபரீதார்த்த ப்ரதிபத்தியும்; தேவதாபரிபவமாவது கரணத்ரயத்தையும் அப்ராப்த விஷயங்களிலே ப்ரவணமாக்குகையும், தத்விஷயத்தில் ப்ரணவமாக்கதொழிகையும். 105

346—8 ஆசார்யனுடைய திருவுள்ள வுகப்புக்காக சிஷ்யன் தவிரவேண்டு வது—பகவானுடைய த்ரவ்யத்தை அபஹரிக்கையும், பகவானுடைய போஜனத்தை விலக்குகையும், குரு மந்த்ர தேவதா பரிபவமும். பகவானுடைய த்ரவ்யத்தை யபஹரிக்கையாவது—ஸ்வதந்த்ரனு யிருக்கையும் அந்ய சேஷப்பட்டிருக்கையும். பகவானுடைய போஜநத்தை விலக்குகையாவது—ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம் எம்பெருமானுக்கு தாரகமாயிருக்கையாலே அவனுடைய ரக்ஷணத்துக்கு இடமில்லாதபடி ஸ்வயத்நத்தாலேயாதல் பிறராலேயாதல் தன்னை ரக்ஷிக்கையிலே தான் முயலுகை. ஸர்வரக்ஷகனை அவனுடைய ரக்ஷகத்வக்ரமம் ப்ரபந்நபரித்ராண மென்னும் ரஹஸ்யத்திலே சொல்லப்பட்டுள்ளது கண்டுகொள்க. குரு பரிபவ மாவது—குருவின்பக்கல் கேட்ட அர்த்தத்தின்படி அநுஷ்டியாதிருப்பதும் அநதி காரிகளுக்கு உபதேசிப்பதுமாம். மந்த்ர பரிபவமாவது—உபதேசித்த அர்த்தத்தை மறந்துபோவதும், விபரீதமான அர்த்தங் கொள்ளுதலுமாம். தேவதா பரிபவமா வது–மன மொழி மெய்களை இதர விஷயங்களிலே ப்ரவணமாக்குகையும் பகவத் விஷயத்தில் ப்ரணவமாக்காதிருப்பதுமாம். .... .... .... (345—8)

**349. இவனுக்கு சரீராவஸாநத்தளவும் ஆசார்ய விஷயத்தில் "என்னைத் தீமனம் கெடுத்தாய்" "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்று உபகாரஸ்ம்ருதி நடக்கவேணும். 106**

349 இவ்வதிகாரிக்கு ஆயுள் உள்ளவரையில் மஹோபகாரகனை ஆசார்யன் பக்கலில் "என்னுடைய தீய மநஸ்ஸைப் போக்கினுய்; அநந்ய ப்ரயோ ஜநமாக அநுகூல வ்ருத்திகளைப் பண்ணும் மநஸ்ஸைத் தந்தாய்" என்று நன்றி யறிவு நடந்து தீரவேணும். .... ... ... .... (349)

**350. மநஸ்ஸுக்குத் தீமையாவது ஸ்வகுணத்தையும் பகவத் பாகவத தோஷத்தையும் நினைக்கை. 107**

350. மநஸ்ஸுக்குத் தீமையாவது ஏதென்னில், தன்னுடைய குணங்களை யும் பகவத் பாகவத தோஷங்களையும் நினைக்கையாம். சமதமாதி ஆத்மகுணங்கள் தனக்கு உண்டானலும் 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' என்று தன் வெறு மையை அநுஸந்திக்க வேண்டியிருக்க, "இவையெல்லாம் நமக்கிப்போதுண்டு" என்று தனக்குண்டான ஸத்குணங்களைப் பெருமையாக நினைப்பதும் தீமை; ராம க்ருஷ்ணுதி யவதாரங்களி லெம்பெருமானிடத்திலும் பாகவதர்களிடத்திலும் மேலெழுந்தவாரியாகத் தோற்றும் தோஷங்களை நினைப்பதும் தீமை. ... (350)

**351. தோஷம் நினையாதொழிகிறது குணம்போலேயுண்டாயிருக்கவன்று, இல்லாமையாலே. 108**

351. ஆனல், தனக்குச் சில குணமுண்டாயிருக்க அதை நினைக்கக் கூடா தென்கிறப்போலே, பகவத் பாகவத விஷயங்களிலும் சில தோஷமுண்டாயிருக்க அதை நினைக்கக் கூடாதென்கிறதோ வென்னில், தோஷம் நினைக்கக் கூடா தென்றது—முதலிலே இவ்விஷயங்களில் தோஷமேயில்லாமையாலே. .... (351)

352. தோஷமுண்டென்று நினைக்கில் அது பரதோஷமன்று, ஸ்வதோஷம். 109

352. இங்ஙனன்றியே பகவத் பாகவத விஷயங்களில் தோஷமுண்டென்று நினைக்கில், அவர்கள் பக்கல் தனக்குத் தோற்றுகிற தோஷம் அவர்களுடைய தோஷமன்று, அதைக் காண்கிற தன்னுடைய தோஷமேயாம் ... (352)

353. ஸ்வதோஷமானபடி யென்னென்னில்; 110
354. ஸ்வதோஷத்தாலும் பந்தத்தாலும். 111

353, 4. அசலிடத்திலுள்ளதாகத் தோற்றுகிறவது தன் தோஷமாக எப்படி யாகுமென்னில்: கண்தோஷ முள்ளவனுக்கு இரண்டு சந்திரன் என்று தோற்றுவது போலவும், பித்த தோஷமுள்ளவனுக்குச் சங்கு மஞ்சள் நிறமாகத் தோற்றுவது போலவும் தோஷமற்ற விஷயங்களிலும் தோஷம் தோற்றும்படியான துர்வாஸநை யாகிற தன் தோஷத்தாலும், மக்களுடைய தோஷம் தாய்தந்தையருடையதாக ஆகிறுப்போலே அவர்களுக்குண்டான தோஷம் தன்னதாம்படி அவர்களோடு தனக்குண்டான உறவின் கனத்தாலும். ... ... ... (353, 54)

355. ஸ்வதோஷமில்லையாகில் குணப்ரதிபத்தி நடக்கும் 112

355. இரண்டு சந்திரனென்று காண்கைக்கு ஹேதுவான கண்தோஷ மில்லாதபோது ஒரு சந்திரனே தோற்றுவதுபோல, பகவத் பாகவத விஷயங்களில் தோஷம் காண்கைக் கடியான தன் மனக்குற்றமில்லாதபோது அவர்களிடத்தில் குணாநுஸந்தாநமே நடக்கும். [அது நடவாவிடில் ஸ்வதோஷமுண்டென்று கொள்க.] ... .... ... ... .... (355)

356. நடந்ததில்லையாகில் தோஷஜ்ஞாநமே தோஷமாம். 113

356. குணாநுஸந்தானம் நடவாவிடில் தோஷாநுஸந்தாநமேயன்றோ நடப்பது; அந்த தோஷ ஜ்ஞாநந்தானே இவனுக்கு பகவந்நிக்ரஹ ஹேதுவான தோஷமாம். .... ... .... ... ... (356)

357. இதுதனக்கு அவஸரமில்லை. 114

358. ஸ்வதோஷத்துக்கும் பகவத் பாகவத குணங்களுக்குமே காலம் போருகையாலே. 115

357, 58. இதெல்லாம் சொல்லவேண்டுவது இதற்கு அவகாசமுண்டானா லன்றோ; ஸ்வதோஷாநுஸந்தாநத்துக்கும் பகவத் பாகவத குணாநுஸந்தாநத்துக் குமே காலம் போருகையாலே பகவத் பாகவத தோஷ சிந்தநத்திற்கு அவஸரமே யில்லை. ... ... ... .... .... (357, 58)

359. ஸம்ஸாரிகள்தோஷம் ஸ்வதோஷமென்று நினைக்கக்கடவன். 116

360. அதுக்கு ஹேது பந்தஜ்ஞாநம். 117

361. *இறைப்பொழுது மெண்ணோம்* என்கையாலே அதுதான் தோன்றுது. 118

362. தோன்றுவது நிவர்த்தநார்த்தமாக. 119

**359—62.** ஸம்ஸாரிகளுக்குண்டான தேஹாத்ம புத்தி முதலான தோஷங்களைக் கண்டால் அந்த தோஷங்களையிட்டு அவர்களை யிகழ்ந்து "இவர்களுக்கும் நமக்கும் என்ன சேர்த்தி" என்றிராமல் அவர்களுடைய தோஷமும் தன்னுடைய தோஷமென்று அநுஸந்தித்திருக்கக் கடவன்.

அதற்குக் காரணமேதென்னில், நாராயணத்வ ப்ரயுக்தமான ஸம்பந்த ஜ்ஞாநம். எல்லார்க்கும் ஈச்வரனோடு ஸம்பந்தமொத்திருக்கையாலே அவ்வழியாலே தனக்குமவர்களுக்கும் ஸம்பந்தமுண்டாகையாலே தனக்கு அவர் ஜநீயரான ப்ரக்ருதி பந்துக்களுக்கு வந்த தோஷம் தனக்கு வந்ததாக நினைத்திருக்குமா போலே ஸம்ஸாரிகளுக்குண்டான தோஷம் தன்னுடைய தோஷமென்றே நினைக்கக் குறையில்லையாம். *மருவினிய தண்ணீர்ந்த கடன்மல்லைத் தலசயனத்துறைவாரை எண்ணாதேயிருப்பாரை இறைப்பொழுது மெண்ணோமே* என்று "கேவலம் தேஹ போஷணாதிகளே போதுபோக்காயிருக்கிற ஸம்ஸாரிகளை க்ஷணகாலமும் நினைக்க மாட்டோம்" என்கையாலே ஸம்ஸாரிகளின் தோஷம் இவ்வதிகாரிக்குத் தோன்றுவதற்கே வழியில்லை. ஆனால், *சொன்னால் விரோதம்* ஒரு நாயகம்* *கொண்ட பெண்டிர் மக்கள்* இத்யாதிகளான திருவாய்மொழிகளிலே ஆழ்வார்க்குமுட்பட ஸம்ஸாரிகளின் குற்றம் தோன்றியிருக்கிறதே யென்னில், அந்த தோஷங்களில் நின்றும் அவர்களை விலக்குவதற்காகத் தோன்றினவத்தனை. ... (359-62)

**363. பிராட்டி, ராக்ஷஸிகள்குற்றம் பெருமாளுக்கும் திருவடிக்கும் அறிவியாதாப் போலே, தனக்குப் பிறர்செய்த குற்றங்களை பகவத் பாகவத விஷயங்களில் அறிவிக்கக் கடவனல்லன். 120**

363. ஏகாக்ஷி ஏககர்ணி முதலான எழுநூறு ராக்ஷஸிகளால் பத்துமாஸம் ஏகரீதியாக நலிவுபட்டிருந்த பிராட்டி, இவர்கள் அப்படி செய்த குற்றத்தை பகவானை பெருமாளிடத்திலும் பாகவதனை திருவடியிடத்திலும் அணுமாத்ரமும் அறிவியாதாப்போலே, தன் விஷயமாகப் பிறர்செய்த குற்றங்களை பகவத் விஷயத்திலாவது பாகவத விஷயத்திலாவது மறந்தும் விண்ணப்பம் செய்யக்கடவனல்லன்.

**364. அறிவிக்க வுரியவனகப்பட வாய்திறவாதே ஸர்வஜ்ஞ விஷயங்களுக்கும் மறைக்குமென்றுநின்றதிறே. 121**

364. எம்பெருமான் *எதிர்சூழல் புக்கு* என்கிறபடியே தன்னுடைய சீல ஸௌலப்யாதிகளைக் காட்டி ஸம்ஸாரிகளைத் தப்பாமலகப்படுத்திக் கொள்ளுவதாக இவ்விபூதியில் வந்தவதரித்து இங்குள்ள ஸம்ஸாரிகளைச் சூழ்ந்துகொண்டு "எனக்கு நீங்கள் அடியாராக வேண்டும்" என்றபேக்ஷித்தவளவில் *த்வம் மே* என்றால் *அஹம் மே* என்கிற ஸம்ஸாரிகள் வணங்காமுடித் தனத்தினால் அநாதரவுகாட்டி அடியவர்களாக ஆகாவிட்டாலும் அதனால் திருவுள்ளத்தில் சிறிதும் வருத்தங்கொள்ளாமல் "நாம் அபேக்ஷித்தபடியே இந்த ஸம்ஸாரிகளெல்லாரும் அடியவர்களாக ஆய்விட்ட பக்ஷத்தில் இந்த லீலாவிபூதி ஆளற்று அழிந்து போய்விடுமன்றோ? இஃது அழியாதபடி நோக்குவதற்கு இவர்கள் அமைந்தார்கள்" என்று தேறி மகிழ்ந்தே செல்வன்; ஏகாந்தமான ஸங்கதிகளை யெல்லாம் கூசாமல் சொல்லுகைக்குரிய பிராட்டிமாரிடத்திலும் இப்பரிபவத்தைச் சொல்லிக்கொள்ள

வாய் திறக்கமாட்டான்; "ஸம்ஸாரிகள் என்னை அலக்ஷியம் பண்ணிக் கைவிட்டார்கள்" என்று ஒருபோதும் சொல்லமாட்டான் என்று பெரியதிருவந்தாதியில் *சூழ்ந்தடியார் வேண்டினக்கால் தோன்றுது விட்டாலும் வாழ்ந்திடுவர் பின்னும் தம்வாய்திறவார்* என்ற பாசுரத்திற் சொல்லப்படுகிறது. இப்படி எம்பெருமானுட்பட ஸம்ஸாரிகளின் தோஷங்களை ஸர்வஜ்ஞர்களான பிராட்டியிடத்திலும் நித்யஸூரிகளிடத்திலும் மறைப்பனென்றால், பின்னை என்சொல்லவேணும். (364)

**365. குற்றம் செய்தவர்கள்பக்கல், பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்.** 1"2

**365,** குற்றம் செய்தவர்கள் விஷயத்திலே (1) பொறுமையும் (2) க்ருபையும் (3) சிரிப்பும் (4) உகப்பும் (5) உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும். (அதாவது) (1) அவர்கள் செய்த குற்றத்திற்குத் தாம் ஒரு பதில் தீங்கு செய்யவாவது நெஞ்சிலே வருந்தி யிருக்கவாவது கூடாது. (2) "நாம் பொறுத்திருந்தாலும் இவர்களை எம்பெருமான் தகுந்தபடி தண்டிக்கப்போகிருனே, ஐயோ! இதுக்கு என்னபண்ணுவோம்" என்று இரங்கியிருக்கவேணும். (3) நம்முடைய பரலோக கதிக்கு இவர்களால் ஒரு கெடுதலும் செய்யமுடியாது, இஹலோக விரோதங்கள் ஏதாவது செய்யக்கூடும்; அப்படி சிலவற்றைச் செய்தால் அதை ஒரு ஹாநியாக நினைத்து நாமும் தங்களைப்போல வருத்தப்படுவோமாக நினைத்திருக்கிருர்களே! இப்படியும் ஒரு மூடபுத்தி இவர்களுக்கு இருக்குமோ என்று சிரிக்கவேண்டும். (4) அவர்கள் பண்ணும் பரிபவங்களுக்கு இலக்கான ஸ்வசரீரத்தைத் தனக்கு சத்ருவாகவும், அவர்கள் ஹாநி பண்ணும் த்ருஷ்ட பதார்த்தங்கள் தனக்கு ப்ரதிகூலங்களாகவும் நினைத்திருக்கவேண்டியவனுகையாலே, தன்னுடைய சத்ருவிஷயமாக ஒருவன் பரிபவங்கள் பண்ணும்போதும் தனக்கு ப்ரதிகூலங்களானவற்றைப் போக்கும்போதும் தான் உகக்குமாபோலே அவர்களிடத்தில் உகந்திருக்கவேணும். (5) "நம்முடைய தோஷங்களை நாம் மறந்திருக்கும் நிலைமையிலே அவற்றை நமக்கு நினைப்பூட்டி இவர்கள் நமக்குப் பண்ணுமுபகாரம் என்னே!" என்று நன்றி பாராட்டவேணும். ... ... ... ... (365)

(ஸச்சிஷ்யலக்ஷண ப்ரகரணம் முற்றிற்று)

---

[இனி பகவந்நிர்ஹேதுக விஷயீகார ப்ரகரணம்]

**366. ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது; பகவத் குணாநுஸந்தாநம் அபயஹேது.** 123

366. [கீழ் 358.ஆம் ஸூத்ரத்தில்—ஸ்வதோஷாநுஸந்தாநத்துக்கும் பகவத்பாகவத குணாநுஸந்தாநத்துக்குமே காலம் பர்யாப்தமாய்ப் போகுமென்று சொல்லிற்று; அதில் பாகவத குணாநுஸந்தாநம் விவக்ஷிதாம்சத்துக்கு உபயுக்தமல்லாமையாலே அதைவிட்டு, அதுக்கு உபயுக்தமான ஸ்வதோஷாநுஸந்தாநமும் பகவத் குணாநுஸந்தாநமுமாகிற இரண்டையு மங்கீகரித்துக்கொண்டு அவையிரண்டுக்கும் ப்ரயோஜநம் இன்னதென்று சொல்லப்படுகிறது.] தன்னுடைய தோஷங்க

ளான அநாத்ம குணங்களையும் அவற்றுக்கு மூலமான அவித்யாதிகளையும் அநுஸந்திப்பதானது—"இன்னமும் ஸம்ஸாரம் மேலிடில் என்ன செய்வோம்" என்கிற பயத்துக்கு ஹேதுவாம். எம்பெருமானுடைய தயை, க்ஷமை முதலிய குணங்களை அநுஸந்திப்பதானது கீழ்ச்சொன்ன பயம் கழிவதற்கு ஹேதுவாம், ... (366)

**367. பயாபயங்களிரண்டும் மாறுடில் அஜ்ஞதையே ஸித்திக்கும். 124**

367. கீழ்ச்சொன்னபடி யல்லாமல், "நெடுநாளாகவே கருமங்களை ஒரு வியாஜமாக்கி நம்மை ஸம்ஸாரத்தில் தள்ளினவனன்றோ இவன்; ஸ்வதந்த்ரனான இவன் இன்னமும் இப்படியே செய்தால் நாமென்ன செய்வது?" என்று ஈச்வரன் படியை நினைத்து பயப்படுகையும்; "முன்புபோலல்லாமல் நமக்கு இப்போது ஆத்ம குணங்களுண்டாகையால் பேறுதப்பாது" என்று தன் படியை நினைத்து பயம் கெடுகையுமாமளவில் தன்னுடைய அவிவேகமே வெளிப்படும். தான் தனக்கு நாசகனென்று பயப்படுகையும் ஈச்வரனே ரக்ஷகனென்று பயங்கெட்டிருக்கையுமன்றோ விவேகிக்ருத்யம். .... ... ... ... (367)

**368. ஆனால் "நலிவானின்ன மெண்ணுகின்றாய்" "ஆற்றங்கரைவாழ் மரம் போலஞ்சுகின்றேன்" என்கிற பாசுரங்களுக்கு அடியென்னென்னில்: 125**

**369. பந்தாநுஸந்தாநம். 126**

**370 ப்ரஜை தெருவிலே யிடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே, நிருபாதிக பந்துவாய் சக்தனுயிருக்கிறவன் விலக்காதொழிந்தால் அப்படிச் சொல்லலாமிறே. 127**

368—70. இப்படியானால்; ஆழ்வார்கள் எம்பெருமானை நோக்கி *உண்ணிலாவிய ஐவரால் குமைதீற்றி என்னையுன்பாத பங்கயம் நண்ணிலா வகையே நலிவானின்ன மெண்ணுகின்றாய்* (திருவாய் 7-1-1) என்றும், *மக்கள் தோற்றக் குழி தோற்றுவிப்பாய் கொலென்றின்னம் ஆற்றங்கரைவாழ்மரம்போ லஞ்சுகின்றேன்* (திருமொழி 11-8-1) என்றும் எம்பெருமான்படி பயஹேதுவாக அருளிச் செய்ததற்குக் காரணமேதென்னில், லாப நஷ்டங்களிரண்டும் அவனாலே யென்னலாம்படி நிருபாதிகரக்ஷகனான அவனோடு தங்களுக்குண்டான ஸம்பந்தத்தை யநுஸந்திக்கவே இப்படி சொல்லிற்றாயிற்று. ஸம்பந்தாநுஸந்தாநத்தாலே இப்படி தன்னால் வருமவற்றை அவன் குறையாகச் சொல்லலாமோவென்னில், விளையாட்டுக்காகத் தெருவிலே ஓடித்திரிகிற குழந்தை அங்கேயிடறிக் கால்நொந்தவாறே அழுதுகொண்டு அகத்திலே வந்து தனக்கு இத்துன்பம் வந்தது தாயாலேயாக நினைத்து அவள் முதுகிலே குத்துவது வழக்கம்; அதுபோலே, ஒழிக்க ஒழியாத வுறவை யுடையவனுமாய், இச் சேதநனுடைய கருமத்தோடு ப்ரக்ருதிப்ராக்ருதங்களோடு வாசியற ஸகலமும் ஸ்வாதீநமாகையாலே, கருமாநுகுணமாக ப்ரக்ருதி ப்ராக்ருதங்களாலே இவன் படுகிற நலிவைத் தவிர்க்கைக்கு ஸமர்த்தனுயிருக்கிற எம்பெருமான் நலிவுபட விட்டுவைத்து விலக்காதொழிந்தால் "அவன் இவற்றை யிட்டு நலிவிக்கிறான்" என்னலாமன்றோ. ... ... ... (370)

371. ப்ரஜையைக் கிணற்றின் கரையினின்றும் வாங்காதொழிந்தால்
தாயே தள்ளினளென்னக் கடவதிறே. 128

371. விலக்காத மாத்திரமே கொண்டு அவன் செய்தா னென்னலாமோ வென்னில், கிணற்றின் கரையிலே குழந்தை யிருப்பதைக்கண்ட மாதாவானவள் அப்போதே ஓடிச்சென்று கிணற்றங்கரையில் நின்றும் வாங்காவிட்டால் கிணற்றிலே குழந்தை விழுந்தவளவில் "தாய் அப்போதே சென்று எடுத்திருந்தால் குழந்தை விழுந்திருக்குமோ? கிணற்றங்கரையிலிருப்பை இவள் அநுமதி பண்ணியிருந்ததனு லன்றோ விழுந்தது; ஆனபின்பு இவளன்றோ தள்ளினள்" என்றும் உலகம் சொல்லக்கடவதன்றோ. ... ... ... ... (371)

372. இவனுடைய அநுமதி பேற்றுக்கு ஹேதுவல்லாதாப் போலே
அவனுடைய அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று. 129

372. ஆனால், 'அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி' என்கிற நியாயத்தாலே விலக்காததுவே அநுமதி செய்ததாக முடிந்தபின்பு, இவன் இழப்பதற்கு அவனுடைய அனுமதிதான் ஹேதுவோ வென்னில், அன்று; ரக்ஷ்யபூதனை இவனுடைய ரக்ஷ்யத்வாநுமதி அசித்வ்யாவ்ருத்த வேஷமாத்ரமாகையாலே பேற்றுக்கு எப்படி ஹேதுவன்றோ, அப்படியே ரக்ஷகனை எம்பெருமானுடைய ஸம்ஸார அநுமதியும் இழவுக்கு ஹேதுவன்று; தன்னுடைய ஆஜ்ஞாநுரூபமான சாஸ்த்ர மர்யாதை ஜீவிப்பதற்காக "காலக்ரமத்தில் அங்கீகரிப்போம்" என்று இவனுடைய ருசியை எதிர்பார்த்திருக்கு மிருப்பாமத்தனை. .... ... (372)

373. இரண்டு மிருவர்க்கும் ஸ்வரூபம். 130

373. இரண்டும் இருவர்க்கும் ஸ்வரூபம். பரதந்த்ரனை இவனுக்கு ஸ்வரக்ஷ்யத்வாநுமதியானது ஸ்வரூபத்திற்காட்டில் வேறுபட்டதன்று; ஸ்வதந்த்ரனை அவனுக்கு ஸ்வரக்ஷ்ய வஸ்துவை ரக்ஷிப்பதில் தன்னுடைய ஆஜ்ஞாரூபமான சாஸ்த்ரத்துக்குத் தகுதியாக நிர்வஹிப்பதற்கான ஸம்ஸாராநுமதியானது ஸ்வாதந்த்ரிய வேஷமாகையாலே ஸ்வரூபம் என்கை. ... . (373)

374. இழவுக்கடி கர்மம்; பேற்றுக்கடி க்ருபை. 131

374. ஆனால், லாபநஷ்டங்களுக்குக் காரணம் எவையென்னில், * முன் செய்த முழுவினை * என்னும்படி அநாதிகாலமாகத் திரட்டப்பட்ட இவனுடைய கருமமே பகவத் விஷயத்தை நெடுநாளாக இழப்பதற்கு ஹேது; இப்படி யிழந்து கிடந்தவிவன் அவ்விஷயத்தைப் பெறுகைக்கு ஹேது * விதிவாய்க்கின்று காப்பாரார் * என்னும்படி இந்கரையுமழியப் பெருகும் பகவத் க்ருபையாம். ... (374)

375. மற்றைப்படி சொல்லில் இழவுக்குறுப்பாம். 132

375. லாபநஷ்டங்களுக்கு ஹேது இன்னவை யென்பதைக் கீழ்ச்சொன்ன படியே கொள்ளாமல், ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியமே இழவுக்கடி யென்றும், சேதநனுடைய ஸத்குணமே பேற்றுக்கு அடியென்றும் மாறுபாடாகக் கொண்டால், ஈச்வரன் கைவாங்குகையாலே அவன் திருவடிகளைப் பெறுமல் இழந்துபோவதற்கு உடலாய்விடும். ... .... .... .... (375)

376. எடுக்க நினைக்கிறவனைத் தள்ளினுயென்கை எடாமைக்குறுப்பிறே. 133

376. ஊழ்வினையின் பயனுக ஆழ்ந்த கிணற்றில் வீழ்ந்தவொருவனை அருகே நிற்பாளெருவன் கருணையாலே எடுக்க நினைக்குமளவில், தான் கிணற்றில் விழுகிறபோது அவன் கூடவிருந்தானென்பது மாத்திரமே கொண்டு அவன்தன்னைத் தள்ளினுகை நினைத்து ''இக்கிணற்றில் என்னைத் தள்ளினவன் நீயேயன்றே'' என்றல் ''நாம் செய்யாத காரியத்தை இவன் ஆரோபிக்கிருனே!'' என்று சீற்றமுண்டாகி அவனைக் கிணற்றில் நின்றுமெடாமல் ஒதுங்கிப் போவதற்கு உறுப்பாவதுபோல், தன்னுடைய கருமத்தாலே ஸம்ஸாரமாகிற படுகுழியிலே விழுந்துகிடக்கிற தன்னை எடுக்க நினைக்கிற பரமக்ருபாளுவான ஈச்வரனைப் பார்த்து ''இத்தனை காலமும் ஸம்ஸாரத்திலே என்னைத் தள்ளிவிட்டு வைத்தவன் நீயே'' என்றல் சீறிக் கைவாங்கிப் போவதற் குறுப்பாகும். [ஆகையாலே இழவுக்கு அடி ஈச்வர ஸ்வாதந்திரியமென்று கொள்ளலாகாது.] ... .. (376)

377. சீற்றமுளவென்ற வநந்தரத்திலே யிவ்வர்த்தத்தைத் தாமே யருளிச்செய்தாரிறே. 134

377. நாம் ஸம்ஸாரியாய் இழந்துபோவதற்குக் காரணம் ஈச்வர ஸ்வாதந் திரியமே என்று சொன்னல் எம்பெருமானுக்குச் சீற்றம் பிறக்குமென்பது திருமங்கை யாழ்வார் அருளிச் செயலாலும் ஸித்தம்; ''இன்னம் மக்கள் தோற்றக் குழி தோற்று விப்பாய் கொல் என்று—ஆற்றங்கரைவாழ்மரம்போ லஞ்சுகின்றேன்'' என்று முதலிலே சொல்லி, அதற்கு அடுத்தபடியாகவே *சீற்றமுள* என்று சொன்னரிறே. [*மாற்றமுள* என்ற முதற்பாட்டிலே, ஈச்வரன் தன் ஸ்வாதந்திரியத்தாலே ஸம் ஸரிப்பிக்கிருனுகச் சொன்னதானது கர்மாநுகுணமாக ஸம்ஸரிக்கிற ஆத்மாவை ஸம்ஸாரத்தில் நின்றும் எடுக்கைக்கு இடம் பார்த்திருக்குமவனுடைய திருவுள்ளம் சீறுகைக்கு ஹேதுவென்பது *சீற்றமுள'' என்கிற அடுத்த பாசுரத்தினுலே தாமே அருளிச்செய்தாரிறே.] ... .... ... ... (377)

378. சீற்றமுண்டென்றறிந்தால் சொல்லும்படி யென்னென்னில், அருளும் ஆர்த்தியும் அநந்யகதித்வமும் சொல்லப்பண்ணும். 135

378. *சீற்றமுள* என்ற பின்பும் * ஆகிலும் செப்புவன்* என்று பின்னையும் அந்தவார்த்தையையே கூசாமல்சொன்னரே; அஃது எப்படிகூடுமென்னில்; அவன்

சீற்றத்தை ஜீவிக்கவொட்டாத அவனுடைய க்ருபையும், சீற்றங்கண்டு அஞ்சி வாய்மூடி யிருக்கவொட்டாதபடி கரையழிந்து செல்லுகிற ஸம்ஸார ஆர்த்தியும், சீறித் தள்ளினாலும் வேறு புகலில்லாமையாகிற அநந்யகதித்வமும் அப்படி சொல்லப்பண்ணும். .... ... ... ... (378)

**379. சீறினாலும் காலைக்கட்டிக் கொள்ளலாம்படி யிருப்பானொருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே. 136**

379. இப்படி அநந்யகதித்வம் முதலியவை உண்டானாலும் அவனுக்குச் சீற்றம்பிறக்கும்படி சிலவற்றைச் சொல்லலாமோவென்னில்; சீறித்தள்ளினாலுங்கூட அணுகிச்சென்று திருவடிகளைக் கட்டிக்கொள்ளலாம்படி பரமக்ருபாளுவா யிருப்பானொருவன் விஷயத்திலே நினைத்தபடியெல்லாம் சொல்லலாமிறே — (379)

**380. "க்ருபயா பர்யபாலயத்" "அரிசினத்தால்." 137**

380. "ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம், வதார்ஹமபி காகுத்ஸ்தః க்ருபயா பர்யபாலயத்" என்ற ஸ்ரீராமாயண வசநத்தாலும் * அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தேயழுங்குழவியதுவே போன்றிருந் தேனே * என்ற குலசேகரப் பெருமாளருளிச் செயலாலும் "சீறினாலும் காலைக் கட்டிக்கொள்லாம்படியிருப்பவ னெம்பெருமான்' என்னுமிடம் ஸித்தம். (380)

**ஸ்ரீவசநபூஷண தாத்பர்ய ஸாரத்தில் மூன்றும் ப்ரகரணம் முற்றிற்று.**

**பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.**

**ஜீயர் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீமல்லோககுரவே நம:

## நான்காம் ப்ரகரணம்

381. த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணநுபவம் நடவா நிற்க, அது உண்டது உருக் காட்டாதே, தேசாந்தரகதனை புத்ரன் பக்கலிலே பித்ரு ஹ்ருதயம் கிடக்குமா போலே, ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய், இவர்களைப் பிரிந்தால் ஆற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரண களேபரங்களைக் கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யாபரிக்கைக்கீடான சக்தி விசேஷங்களையும் கொடுத்து, கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்க ளென்று கண்ணுக்குத் தோற்றாதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முது கிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே, அகவாயிலே அணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்றென்று விடாதே, ஸத்தையை நோக்கியுடன்கேடனாய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே, அநுமதி தானத்தைப்பண்ணி உதாஸீநரைப் போலேயிருந்து மீட்கைக் கிடம்பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு தீமையும் காணாதே நெற்றியைக் கொத்திப் பார்த்தா லொருவழியாலும் பசைகாணா தொழிந்தால் அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது; தனக்கேற இடம்பெற்ற வளவிலே, என்னுரைச் சொன்னாய் என்பேரைச்சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றாப் போலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலே யுரைத்து மெழுகாலே யெடுத்து கால் கழஞ்சென்று திரட்டுமா போலே, ஜந்ம பரம்பரைகள் தோறும், யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநு ஷங்கிக மென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே யவற்றை ஒன்றுபத்தாக்கி நடத்திக்கொண்டு போரும். 1

381. [கீழ் 366-ஆம் ஸூத்திரத்தில் "பகவத் குணநு ஸந்தாநம் அபய ஹேது" என்றதை விளக்குதற்காக ஈச்வரன் இவ்வாத்மோஜ் ஜீவநத்துக்குப் பண்ணும் க்ருஷி பரம்பரை பேசப்படுகிறது] ஸ்ரீ வைகுண்டத்திலே எம்பெருமான் நித்யர்களோடும் முக்தர்களோடும் கூடிப் பரிபூர்ணநுபவம் பெருநிற்கச்செய்தேயும் அதனால் அப்பெருமான் சிறிதும் மகிழாது, பல பிள்ளைகளைப் பெற்ற ஒரு தகப்பனார் ஒரு மகன் மாத்திரம் தேசாந்தரத்திலிருக்க மற்ற எல்லாப் புத்திரர்களோடுங் கூடி வாழாநின்றாலும் அதனால் மகிழ்ச்சியடையாமல் தேசாந்தரத்திலுள்ள புத்திரனது பிரிவையே நினைத்துப் பரிதபித்திருக்குமாபோலே எம்பெருமானும் ஸம்ஸாரி களான அஸ்மதாதிகளின் பிரிவையே நினைத்துப் பரிதாபமுற்று நம் மோடே கலந்து பரிமாறுவதற்காகக் கரணகளேபரங்களை நமக்குத் தந்தருளி அவற்றைக்கொண்டு நாம் காரியம் செய்யும்படியான சக்தி விசேஷங்களையும் நமக்குக் கொடுத்து, மிகவும் அஹங்காரிகளான நம்மெதிரில் தான் பிரத்யக்ஷமாக வந்து நின்றால் நாம் பொறாமைகொண்டு ஆணையிட்டாகிலும் தன்னைத் துரத்தி விடுவோமென்றெண்ணி ஒருவர் கண்ணுக்குந் தோற்றாதபடி, உறங்குகிற குழந்தை

யைத் தாயானவள் முதுகிலே அணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே எம்பெருமான் ருனும் தானறிந்த ஸம்பந்தமே காரணமாக நம்மை விடமாட்டாமல் அந்தர்யாமியா யிருந்து தொடர்ந்துகொண்டு நம்மை யொருகாலும் கைவிடாமல் ஸத்தையை நோக்கிக்கொண்டு நமக்குத் துணையாய்ப் போருமளவில், நாம் கெட்ட காரியங் களிலே கைவைத்தோமாகில் நம்மைத் திருப்பமாட்டாமல் அநுமதிபண்ணி உதா ஸீநரைப் போலேயிருந்து திருப்புகைக்கு இடம் பார்த்துக்கொண்டேயிருந்து, நாம் செய்கிற தீமைகளிலே ஏதேனுமொரு தீமையாவது [1]நன்மையென்று பேரிடக் கூடியதாயிருக்குமோவென்று பார்த்துவந்து, அப்படிப்பட்ட தீமைகளைக் கண்டு பிடித்து "என் ஊரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய், என்னடியாரை ரக்ஷித்தாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றிப்படி சில ஸுக்ருதங்களை ஏறிட்டு மடிமாங்காயிட்டு, தட்டா னிடத்தில் யாரேனும் பரீக்ஷைக்குக் காட்டின பொன்னை அவன் உரைகல்லிலே உரைத்து ஒன்றும் சோராதபடி மெழுகாலே ஒத்தியெடுத்து நாள்வட்டத்திலே "கால் பொன்னாயிற்று, கழஞ்சு பொன்னாயிற்று" என்று திரட்டுமாபோலே சேதந ருடைய ஜந்ம பரம்பரைகள் தோறும் "விடாயைத் தீர்த்தாய், ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றாற்போலே உண்டாக்குகிற †யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநு ஷங்கிகம் என்கிற ஸுக்ருத விசேஷங்களைத் தானே கல்பித்தும் அப்படி கல்பித்த வற்றை ஒன்றை அநேகமாக்கியும் நடத்திக்கொண்டு போருவன். .... (381)

382. லலிதா சரிதாதிகளிலே இவ்வர்த்தம் சுருக்க மொழியக் காணலாம். 2

382. இப்படிப்பட்ட அஜ்ஞாத ஸுக்ருத மடியாக எம்பெருமான் அங்கீ கரித்தருள்வதென்பது ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் லலிதா சரிதம் முதலியவற்றில் விரிவாகக் காணத்தகும். [அதாவது—விதர்ப்ப ராஜனுடைய பெண்ணும் காசி மன்னனுடைய மனைவியுமான லலிதை யென்பவள் தன் சக்களத்திகளான முந்நூறு ஸ்த்ரீகளிற் காட்டில் மிக்க அழகுடையவளாயும் கணவனை நன்கு வசப்படுத்திக் கொண்டவளாயும் இரவும் பகலும் பகவத் ஸந்நிதியில் திருவிளக்கெரிக்கை முதலிய கைங்கரியங்களில் ஊற்றமுற்றவளாயு மிருக்கிறபடியைக் கண்டு "உனக்கு மாத்திரம் இப்படிப்பட்ட அழகு முதலியவை வாய்த்திருப்பதற்கும் கைங்கர்ய ப்ராவண்ய முண்டாயிருப்பதற்கும் என்ன காரணம்?" என்று ஸபத்நிகள் கேட்க, அவள் பூர்வஜந்ம ஸ்மரணத்தோடே பிறந்தவளாகையாலே சொல்லத்தொடங்கி, ஸௌவீர ராஜ புரோஹிதனான மைத்ரேயன் தேவியாற்றங்கரையிலே ஓரெம்பெரு மான் ஸந்நிதியை நிருமித்து அங்கே நாள்தோறும் ஸகல கைங்கரியங்களையும் பண்ணிக்கொண்டிருந்து கார்த்திகை மாஸத்திலே அந்த எம்பெருமான் ஸந்நிதியி

† விஷயப்ரவணனாய் வேசிகளைப் பின்தொடர்ந்து அடிக்கடி கோவில் களிலே நுழைந்து புறப்படுகை, வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத் திக்கொண்டு போகும்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு ஓடுகிறவளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே தானும் அக்கோவிலை வலஞ்செய்கை; (சிசுபாலாதிகளைப்போலே) நிந்தைசெய்வதற்காகவாவது திருநாமங் களைச் சொல்லுகை முதலியன.

லேற்றின திருவிளக்கு அணையப்போகிறபோது அந்தக் கோயிலிலே ஒரு பெண் ணெலியாய்க் கொண்டிருந்த நான் அத்திருவிளக்கில் திரியைக் கவ்விக்கொண்டு போவதாக நினைத்துச் சென்று கவ்வினவளவிலே ஒரு பூனை கத்தின குரலைக்கேட்டு அஞ்சி நான் மரணமடைய, அப்போது பயத்தாலே நடுங்குகிற என் மூஞ்சியாலே அந்தத் திரி தூண்டப்பட்டு முன்புபோலே அத்திருவிளக்கு பளபளத்தெரிய, செத்துப்போன நான் விதர்ப்பராஜனுக்கு மகளாய் ஜந்மாந்தர ஸ்ம்ருதி முதலியவற் றோடே பிறந்தேனென்றும், அந்த அஜ்ஞாத ஸுக்ருதத்தின் பலனாக எனக்கு இவ்வேற்றங்களெல்லாமுண்டாயின வென்றும் சொல்லித் தலைக்கட்டினாள். ஸுவ்ரதோபாக்யாநம் முதலியவையும் இங்ஙனே பலவுண்டு.] .... (382)

383. அஜ்ஞான மநுஷ்யர்கள் வாளாதந்தானென்றிருப்பர்கள். 3

383. இங்ஙனே யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்களை எம்பெருமான் தானே கல்பித்துக் காரியம் செய்து போருகையாகிய இந்த நிர்ஹேதுக விஷயீ காரத்தின் வாசியறியாதவர்கள் இதை யநுஸந்தித்து ஈடுபடாமலிருப்பர்கள்; "இப்படி உபகரித்தருளுவதே!" என்று தலைசீய்த்து ஈடுபட வேண்டியிருக்க, அதுசெய்யாமல், உபகரித்தானென்கிற மாத்திரத்தை அநுஸந்தித்து விடுவர்கள் அவிவேகிகள். (வாளா என்றது—நெஞ்சு ஊன்றுதே யென்றபடி.) ... (383)

384. ஜ்ஞானவான்கள் "இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தான்" "எந்நன்றிசெய்தேனா வென்னெஞ்சில் திகழ்வதுவே" "நடுவே வந்துய்யக்கொள்கின்ற நாதன்" "அறியாதன வறிவித்தவத்தா நீசெய்தன வடியேனறியேனே" "பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமை கொண்டாய்" "என்னைத் தீமனங் கெடுத்தாய்" "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்றீடுபடாநிற்பர்கள். 4

384. இதன் வாசியறிந்தவர்கள் எங்ஙனே ஈடுபடுவர்களென்னில்; "இன் றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தான்" (திருவாய் 10-8-9) "எந்நன்றி செய்தேனா வென்னெஞ்சில் திகழ்வதுவே" (திருவாய். 10-6-8) "நடுவே வந்து உய்யக் கொள்கின்ற நாதன்" (திருவாய். 1-7-5) "அறியாதன அறிவித்த அத்தா! நீ செய்தனவடியேனறியேனே" (திருவாய். 2-3-2) "பொரு ளல்லாத வென்னைப் பொருளாக்கி யடிமைகொண்டாய்" (திருவாய். 5-3-3) "என்னைத் தீமனங் கெடுத்தாய்" (திருவாய் 2-7 8) "மருவித்தொழும் மனமே தந்தாய்" (திருவாய். 2-7-7) என்று ஈடுபடுவர்கள். ... ... (384)

385 பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்த வளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது.

385. இந்த நிர்ஹேதுக விஷயீகார ஸ்தாபகமாக வொரு ஐதிஹ்யமு முண்டு; அதாவது—எம்பெருமானார் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பாட்டை ப்ரதீக்ஷித்துக் கொண்டு பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக ஜ்ஞாநாதிகரான முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், "கீழ்க்கழிந்த

காலமெல்லாம் ஆர்வாசலிலே யாருடைய புறப்பாட்டை எதிர்பார்த்திருந்தோமோ தெரியாது; இன்று ப்ராப்தசேஷியான பெருமாளுடையபுறப்பாட்டைப்ரதீக்ஷித்திருக்க என்னஸுக்ருதம் பண்ணினோமோ!'' என்று ப்ரஸங்கிக்க, அதன்மேலே "நித்யஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு ஒருநாளிலே பகவத்விஷயத்தில் ருசி பிறப்பதற்கு எது காரணம்?'' என்று விசாரியாநிற்கச்செய்தே, யாத்ருச்சிக ஸுக்ருதமென்று சிலரும் அஜ்ஞாத ஸுக்ருதமென்று சிலரும் சொல்ல, அவ்வளவிலே அங்கிருந்த கிடாம்பிப் பெருமாள் "நமக்கு பகவத் விஷயம் போலே ஸுக்ருத தேவரென்றும் ஒருவர் ஆச்ரயணீயருண்டோ?'' என்ன; பிள்ளை திருநறையூரரையர் "ஸுக்ருதமென்று சொல்லுகிறதும் அந்த எம்பெருமானையே'' என்றாராம். இத்தால்—அஜ்ஞாத ஸுக்ருதமுண்டாயிற்றாகிலும் அது புருஷார்த்த ஹேதுவன்று; அத்தை வ்யாஜமாக்கி அங்கீகரிக்குமெம்பெருமானே புருஷார்த்த ஹேது என்றதாயிற்று. (385)

**386. ஆகையால் அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக்கொண்டு கடாக்ஷியாநிற்கும். 6**

386. ஆகக் கீழ்ச் சொன்னபடியே, ஸர்வ முக்திப்ரஸங்காதிகள் வாராமைக்காக இச்சேதநன் அறியாமலே விளையுமவையான சில ஸுக்ருத விசேஷங்களையே எம்பெருமான் இவனை யங்கீகரிக்கைக்குப் பற்றாசாகப் பிடித்துக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணுவான். (386)

**387. இவையுங்கூட இவனுக்கு விளையும்படியிறே இவன்தன்னை முநலிலே அவன் ஸ்ருஷ்டித்தது. 7**

387. இப்படி அஜ்ஞாத ஸுக்ருதங்களையாகிலும் ஹேதுவாகக்கொண்டு கடாக்ஷிக்குமளவில் அங்கீகாரம் ஸஹேதுகமாகாதோவென்னில்; ஆகாது. இந்த யாத்ருச்சிகம்முதலியஸுக்ருதங்களுமுட்பட இவனுக்குண்டாம்படி ஆதியிலே கரண களேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டித்தவன் எம்பெருமானாகையாலே, கடாக்ஷ ஹேதுவாகச் சொன்ன யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்களும் அவனுடைய க்ருஷி பலமேயாம். [ஸ்ருஷ்டிப்பது சேதநருடைய கருமங்களுக்குத் தகுதியாகவன்றோவென்னில்; ஸ்ருஷ்டிப்பது கர்மத்தைக் கடாக்ஷித்தேயாகிலும், அவரவர்களுடைய கர்ம பரிபாகத்துக்குத் தகுந்தபடி வெவ்வேறு காலங்களிலே ஸ்ருஷ்டிக்க வேண்டியிருக்க, ஏககாலத்திலே ஸ்ருஷ்டித்தது அநுக்ரஹ காரியமென்பர்.] (387)

**388. அதுதன்னை நிரூபித்தால் இவன்தனக்கு ஒன்றும் செய்யவேண்டாதபடியா யிருக்கும் 8**

388. அசித்தோடு வாசியற்றுக் கிடக்கிற தசையிலே உஜ்ஜீவநத்துக்குக் கருவியான கரண களேபரங்களைப் பேரருளாலே அவன் தந்தபடியை அநுஸந்தித்தால் இவனுக்குத் தன் உஜ்ஜீவந விஷயத்தில் அவன் செய்தபடி பார்த்துக்கொண்டிருப்பது தவிர, தான் ஒரு முயற்சி பண்ணவேண்டாதபடியாயிருக்கும். .. (388)

**389. பழையதாக உழுவது நடுவது விளைவதாய்ப்போரும் க்ஷேத்ரத்திலே உதிரி முளைத்து பலபர்யந்தமாமாபோலே, இவைதான் தன்னடையே விளையும்படியாயிற்று பத்தியுழவன் பழம் புனத்தை ஸ்ருஷ்டித்த கட்டளை. 9**

390. அவைதா னெவை யென்றால்; 10

391. பூர்வக்ருத புண்யா புண்ய பலன்களை சிரகாலம் புஜித்து, உத்தரகாலத்தில் வாஸனை கொண்டு ப்ரவர்த்திக்குமத்தனை யென்னும்படி கையொழிந்த தசையிலே, நாமார்? நாம் நின்ற நிலையேது? நமக்கினிமேல் போக்கடியேது? என்று பிறப்பன சில நிரூபண விசேஷங்களுண்டு; அவையாதல் முன்பு சொன்னவையாதல். 11

389—91. [ஈச்வரஸ்ருஷ்டியாலிவனுக்கு விளையும் அங்கீகாரப்[1]பற்றாசுகள் யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்கள் மாத்திரமேயன்று; இன்னும் சிலவுண்டு.] புதிசாகத் தரிசு திருத்தினதல்லாமல் பழையதாக உழுவது நடுவது விளைவதாய்க் கொண்டு போருகிற க்ஷேத்திரத்தில் உழவனானவன் அதுக்கென்று ஒரு க்ருஷியும் பண்ணா திருந்தாலும் உதிர்ந்த தானியமே முளைத்து விளைந்து தலைக்கட்டுமா போலே, மேலே சொல்லப்படுகிற நிரூபண விசேஷங்களோ கீழே சொன்ன யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்களோ இச்சேதநர் பக்கலிலே தன்னடையே விளையும்படியாகவன்றோ [2]பத்தியுழவன்* என்று சொல்லப்படுகிற ஈச்வரன் அநாதி ஸம்ஸாரத்தை ஸ்ருஷ்டித்துத் திருத்தி நடத்திப்போருவது. [நிரூபண விசேஷங்களாவன:—முன்பு செய்யப்பட்ட புண்ய பாபரூப கருமங்களினுடைய பலன்களை ஸ்வர்க்க நரகாதிகளிலே நெடுங்காலம் அனுபவித்து, "இனிமேல் பூர்வகர்மவாஸநையினால் ஏதாவது புண்ய பாபரூப கருமங்களில் கைவைக்கலாகுமே யொழிய வேறில்லை" என்ன வேண்டும்படி கரும ஸம்பந்தமற்றுக் கருமபலாநுபவத்தினின்றும் கையொழிந்து நிற்குமளவிலே "நாம் தேஹமேயோ? தேஹத்திற் காட்டில் வேறுபட்டுள்ளோமோ? ஸ்வதந்த்ரரோ? பரதந்த்ரரோ? நாம் ஆர்?" என்றும் "நாம் நசிக்கும்படி நின்றோமோ, பிழைக்கும்படி நின்றோமோ? நாம் நின்ற நிலை ஏது?" என்றும், "இப்படி நின்ற நமக்கு இனிமேல் ஈடேறுகைக் குறுப்பான போக்கடி ஏது?" என்றும் தன்னடையே உண்டாவன சில நிரூபண விசேஷங்கள்.] ... (389—91)

392 "யதாஹி மோக்ஷகா: பாந்தே" என்று தொடங்கி இதினுடைய க்ரமத்தை பகவச் சாஸ்த்ரத்திலே சொல்லிற்று. 12

392. இந்த நிர்ஹேதுக விஷயீகார க்ரமம் சாஸ்த்ரத்தில் எங்கே சொல்லிற்றென்னில் ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் அஹிர்ப்புத்நிய ஸம்ஹிதையில் "யதா ஹி மோக்ஷகா: பாந்தே பரிபர்ஹமுபேயுஷி, நிவ்ருத்த மோக்ஷணோத்யோகாஸ் ததா ஸந்த உதாஸதே. அநுக்ரஹாத்மிகாயாஸ் து சக்தே: பாதக்ஷணே ததா, உதாஸாதே ஸமீபூய கர்மணீ தே சுபாசுபே" இத்யாதிகளாலே சொல்லிற்று. [அதாவது—* நுண்ணுணர்வின் நீலார் கண்டத்தம்மான் * என்கிறபடியே ஸத்வம் தலையெடுத்தபோது

1. பற்றாசு=வ்யாஜ ரூபமான ஹேது.

2. "பத்தியுழவன் பழம் புனத்து" என்பது நான்முகன் திருவந்தாதியில் 23-வது பாசுரம். ஸம்ஸாரமாகிற நிலத்திலே, பக்தியாகிற க்ருஷியைச் செய்பவனும் எம்பெருமான்.

ஸூக்ஷ்மதர்சியாயிருக்கும் ருத்ரனை ஸ்ரீ நாரதபகவான் சென்றநுவர்த்தித்துத் தன் ஸம்சயங்களெல்லாம் கேட்க; அப்போது அவன் நிர்ணயித்துக்கொண்டு வருகையில், பதினோமத்யாயத்தில் இவன் பண்ணின ப்ரச்நத்துக்கு உத்தரமாக, ஸம்ஸார மோக்ஷங்களுக்கு ஹேதுவாக நிக்ரஹசக்தியென்றும் அநுக்ரஹ சக்தியென்றும் இரண்டுசக்திகள் ஸர்வேச்வரனுக்குண்டென்று சொல்லி, அதில் நிக்ரஹ சக்தியாலே ஜீவாத்மாவானவன் ஸ்வஸ்வரூபாதிகள் மறைந்து ஸம்ஸாரியாய் இருக்கிறானென்பதை விரிவாகச் சொல்லி, பிறகு அநுக்ரஹ சக்தியாலே ஸம்ஸாரத்தில் நின்றும் முக்தனாகிறபடியைச் சொல்லி வருமளவிலே, [ 'யதாஹி மோக்ஷகா: பாந்தே' என்று தொடங்கி அத்யாய சேஷத்தாலே] வழிப்போக்கன் ஓரிடத்தில் மூட்டையை வைத்து மறைய நின்றவளவில், கள்ளர்கள்வந்து அந்த மூட்டையைக் கொள்ளை கொள்ள முயன்றபோது மூட்டைக்காரன் வந்து மூட்டையைக் கைப்பற்றினவளவில் அக்கள்ளர்கள் விலகி யொழிவது போல, எம்பெருமானுடைய அநுக்ரஹசக்தி இவன் பக்கலிலே வந்தவாறே, இவ்வாத்மாவைத் தன் வழியே இழுப்பதாக நின்ற புண்ய பாப கருமங்களிரண்டும் இவனை வந்து மேலிடாமல் விலகியொழியும்; அந்த அநுக்ரஹ சக்தி தன்பக்கல் வந்து சேர்ந்தபின் இச்சேதநன் மோக்ஷ ருசியுடையனாய் விவேகியாய் சாஸ்த்ரங்களிலூற்றமுடையனாய் ஸதாசார்யனைப் பணிந்து ஸத்தை பெறுமவனாய் அடைவிலே ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டுப் பரமபதத்தை யடைந்திடுவானென்று சொல்லித் தலைக்கட்டினான்.] .. ... . (392)

393. ''வெறிதேயருள் செய்வர்'' என்றிவ் வர்த்தத்தை ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே. 13

394. ''செய்வார்கட்கு'' என்று அருளுக்கு ஹேதுஸுக்ருத மென்னுநின்றதே யென்னில்; அப்போது ''வெறிதே'' என்கிற விடம் சேராது. 14

393, 4. இப்படி சாஸ்த்ரம் சொன்னதுமாத்திரமல்லாமல், நிர்ஹேதுக விஷயீகாரத்துக்கு நேரே பாத்திரரான ஆழ்வாரும் இவ்வர்த்தத்தைத் தெளிய வருளிச் செய்தார்,—*வெறிதே யருள்செய்வர்* (திருவாய். 8-7-8) என்னுந் திருவாய்மொழிப் பாசுரத்தாலே. (நிர்ஹேதுகமாக க்ருபை பண்ணுவரென்பது இதன் பொருள்) இதில் ஒரு சங்கையுண்டு; எடுத்த பாசுரத்தில் ''அருள் செய்வர் செய்வார்கட்குகந்து'' என்று சொல்லி யிருப்பதால் அருளுகைக் குறுப்பாகத் திருவுள்ள முகக்கும்படி சில உபாயங்களை அநுஷ்டிக்குமவர்களுக்கு அவன் க்ருபை பண்ணுவனென்று பொருள் படுதலால் சேதநனுடைய ஸுக்ருதமே க்ருபைக்கு ஹேதுவென்றதாகிறதே யென்பர் சிலர்; ''செய்வார்கட்கு'' எனகிற பதத்திற்கு அவ்விதமான பொருள் கொண்டால் ''வெறிதே'' என்று முன்னே சொன்னது சேரமாட்டாதாகையால் அது பொருளன்று; செய்வார்கட்கு = எம்பெருமான் தானே அருள்செய்ய நினைக்கப் பெறுமவர்களுக்கு என்பதே பொருத்தமான பொருள். ... (394)

**395. பகவதாபிமுக்க்யம் ஸுக்ருதத்தாலன்றிக்கே பகவத்க்ருபையாலே பிறக்கிறது, அத்வேஷம் ஸுக்ருதத்தாலே யென்னில்; இந்த பல விசேஷத்துக்கு அத்தை ஸாதநமாக்க வொண்ணாது. 15**

**395.** எம்பெருமான் விஷயத்தில் சேதநனுக்கு அத்வேஷம் என்பதொன்றும் ஆபிமுக்கியம் என்பதொன்றுமாக இரண்டு உண்டே; இவற்றுள் ஆபிமுக்கியமானது இவனுடைய யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்கள் மூலமாகவல்லாமல் பகவத்க்ருபையாலேயே பிறக்கிறதென்றும், அதற்கு முதற்படியான அத்வேஷம் யாத்ருச்சிகாதி ஸுக்ருதம் மூலமாகப் பிறக்கிறதென்றும், சிலர் சொல்லுவதுண்டு; அப்படி சொல்லவொண்ணாது. ஆத்மகுணங்களெல்லாவற்றுக்கும் அடிப்படையாயும் ஆத்மோஜ்ஜீவநத்துக்கு வேர்ப்பற்றுமாயுமிருக்கிற அத்வேஷத்திற்கு மிகவும் க்ஷுத்ரமான யாத்ருச்சிகாதி ஸுக்ருதத்தைக் காரணமென்பது உசிதமன்று; அத்வேஷத்துக்கும் பகவத் க்ருபையே காரணமென்று கொள்ளவேணும். ... (395)

**396. சாஸ்த்ரமும் விதியாதே நாமுமறியாதே யிருக்கிற வித்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்னென்னில், நாமன்று, ஈச்வரனென்று கேட்டிருக்கையாயிருக்கும். 16**

**396.** சாஸ்த்ரங்களால் விதிக்கப்பட்டும் சேதநன் அறிந்து அநுஷ்டித்ததுமான காரியத்தையன்றோ ஸுக்ருதமென்னலாம்; இதைச் செய்யென்று சாஸ்த்ரங்களாலும் விதிக்கப்படாமல், இன்ன ஸுக்ருதம் பண்ணினோமென்று தத்கர்த்தாக்களான நம்மாலுமறியப்படாமலிருக்கிற இந்த யாத்ருச்சிகாதிகளை ஸுக்ருதமென்று நாம் எப்படி வ்யவஹரிக்கலாமென்னில்; இதற்கு ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறோமல்லோம்; ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக ஸர்வஜ்ஞனான ஸர்வேச்வரன் ஸுக்ருதமென்று பேரிட்டு வைத்தானென்று ஆசார்யர்களருளிச் செய்வர்கள்.

**397. இவ்வர்த்த விஷயமாக ஆழ்வார்கள் பாசுரங்களில் பரஸ்பர விருத்தம் போலே தோற்றுமவற்றில் சொல்லுகிற பரிஹாரமும், மற்றுமுண்டான வக்தவ்யங்களும் விஸ்தரபயத்தாலே சொல்லுகிறிலோம். 17**

**397.** இந்த நிர்ஹேதுக விஷயீகார விஷயத்தில் ஆழ்வார்களருளிச் செயல்களில் ஒன்றோடொன்று விருத்தம்போல ஸாமாந்யஜ்ஞானிகளுக்குத் தோற்றும் பாசுரங்களும் சிலவுண்டு; அவற்றுக்குச் சொல்லவேண்டும் ஸமாதாநங்களும் மற்றும் சில விஷயங்களும் விரிவு பெரிதுடைத்தாமென்று இங்கே சொல்லப்படாமல் விடப்பட்டன. அருளிச் செயல்களிலும் மற்றுமுள்ள ப்ரமாணங்களிலும் நிர்ஹேதுக விஷயீகாரமே நிலைநாட்டப் பட்டிருக்கிறதென்று கொள்க. ... (397)

**398. ஆகையால் இவன் விமுகனான தசையிலுங்கூட உஜ்ஜீவிக்கைக்கு க்ருஷி பண்ணின ஈச்வரனை யநுஸந்தித்தால் எப்போதும் நிர்ப்பரனாயே யிருக்குமித்தனை. 18**

**398.** ஈச்வரன் இவ்வாத்மோஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணும் வகை இதுவாகையாலே இச்சேதநன் தன் பக்கல் விமுகனாயிருக்கும் நிலைமையிலுங்கூட

இவன் உஜ்ஜீவிக்கைக்கு க்ருஷிபண்ணிப்போந்த குணக்கடலான அவனை யநுஸந்தித்தால் "இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் நம்மைக் கர்மாநுகுணமாக இனி ஸம்ஸாரியாக்கிவிடான்" என்று விச்வஸித்து ஒருநாளுமஞ்சாதே மார்பிலே கைவைத்து உறங்கலாம். ... ... .... .... .... (398)

399. "எதிர் சூழல் புக்கு" 19

399. "எதிர் சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே யருள்கள் செய்ய, விதி சூழ்ந்ததாலெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே" (திருவாய். 2-7-6) என்கிற பாசுரத்தால் ஆழ்வார், நம்மை அகப்படுத்திக் கொள்வதற்காகவே எம்பெருமான் ஸர்வவ்யாபியாய் நிற்பதாக அநுஸந்திக்கையாலே இப்படியே ஸகல சேதநர் விஷயத்திலும் உஜ்ஜீவனத்துக்காக எம்பெருமான் தானே க்ருஷிபண்ணுகிறனென்பது ஸ்பஷ்டமாகும். ... .... .... (399)

400. ஒருவனைப்பிடிக்க நினைத்து ஊரைவளைவாரைப்போலே வ்யாப்தியும். 20

400. ஆழ்வாரை அகப்படுத்திக் கொள்வதற்காக எம்பெருமான் ஸர்வ வியாபியாக இருக்கவேணுமோ வென்னில்; ஒருவனைப் பிடிக்கவேண்டியவன் அவனைத் தவருமல் அவசியம் பிடிக்கவேணுமென்னும் விருப்பத்தாலே அவ்வூரை முழுதும் வளைந்துகொள்வது போல, ஓர் ஆத்மாவை அகப்படுத்திக் கொள்ளுகைக்காக ஸகல சேதநாசேதநங்களிலும் வியாபித்து நிற்கும்படி. ... (400)

401. ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப்போலே ஸ்வார்த்தமாக வென்றிறே ஜ்ஞாநாதிகரநுஸந்திப்பது. 21

401. எம்பெருமானுடைய ஜகத் ஸ்ருஷ்டியையும் அவதாரங்களையும் தங்களுக்காகச் செய்தவை யென்றே ஞானிகள் நினைப்பர்; அப்படியே ஸர்வ வ்யாபியாய் நிற்கும் நிலையும் தங்களை யகப்படுத்திக்கொள்ள வேண்டியேயென்று நினைத்திருப்பர்கள். ... .... ... ... (401)

402. கர்மபலம்போலே க்ருபாபலமு மநுபவித்தே யறவேணும். 22

402 இப்படி ஜீவன்விமுகனான தசையிலும் ஸ்ருஷ்டி அவதாரம் முதலியவற்றுலே இவனுடைய உஜ்ஜீவநத்துக்கு அவன் க்ருஷிபண்ணிப் போருகிறது தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலேயன்றே; அப்படிப்பட்ட க்ருபையின் பலன் இவனுக்கு அவசியம் அநுபவிக்கத் தக்கதேயாம். தான் செய்த புண்ய பாபரூப கர்மங்களின் பலன் எப்படி அனுபவித்தே அறவேண்டுமோ, அப்படியே நித்ய ஸம்ஸார ஹேதுவான கருமத்தைத் தள்ளி நித்யஸூரிகளோடு ஒரு கோவையாக்க வல்ல அவனுடைய க்ருபையின் பலனும் இவனுக்கு இச்சையில்லாமற்போனாலும் அவசியம் அநுபவித்தே விடவேணும். ... ... ... (402)

403. க்ருபை பெருகப்புக்கால் இருவர் ஸ்வாதந்த்ர்யத்தாலும் தகைய வொண்ணுதபடி யிருகரையுமழியப் பெருகும். 23

403. இப்படிப்பட்ட க்ருபை அநாதியாயிருக்கச் செய்தே சேதநனுடைய கருமங்களாலும் ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தாலும் தகையப்பட்டதன்றே

வந்தது; இன்னமும் அப்படியானலோ வென்னில்; கேட்பாரற்ற ஸ்வதந்த்ரனை ஈச்வரன் இச்சேதநனைக் கருமங்களுக்கிணங்க நடத்திக் கொண்டுபோகுமளவில் க்ருபாகுணம் இருவர் ஸ்வாதந்திரியத்தாலும் தகையப்பட்டு நிற்குமேயொழிய, இவனை அவன்தானே மேல்விழுந்து அங்கீகரிக்கும்படி க்ருபை பெருகத் தொடங்கினுல் ஒன்றுலும் தடுக்கவொண்ணுதபடி "விதிவாய்க்கின்று காப்பாரார்" (திருவாய் 5—1—1) என்கிறபடியே இருவர் ஸ்வாதந்திரிய ரூபமான இரண்டு கரையும் உடைந்து அழிந்து ஒருமட்டில் நில்லாமல் மேன்மேலும் பெருகாநிற்கும்.

**404. பயஹேது கர்மம்; அபயஹேது காருண்யம். 24**

404. [கீழ் "ஸ்வதோஷாநுஸந்தாநம் பயஹேது, பகவத் குணுநுஸந்தாநம் அபயஹேது" என்ற (369) ஸூத்ரத்தில் பயாபயஹேதுக்களாகச் சொன்ன ஸ்வதோஷாநுஸந்தாந பகவத் குணுநுஸந்தாநங்களுள் கர்ம காருண்யங்கள் ப்ரதாநங்களாகையாலே அவை உபபாதிக்கப்பட்டன கீழ்; இனி அவ்விஷயம் உபஸம்ஹரிக்கப்படுகிறது.] ஈச்வரனே உபாயமென்றிருக்கிற இவ்வதிகாரிக்கு "இன்னமும் ஸம்ஸாரம் தொடருமாகில் என்ன செய்வோம்" என்று அச்சமுண்டாவதற்கு ஹேது—அநாதிகாலம் ஸம்ஸாரியாய் வருவதற்குக் காரணமாய்ப்போந்த ஸ்வகர்மங்களை ஸ்மரிப்பதாம்; இனி ஸம்ஸாரம் நம்மருகும் வரமாட்டாது, மரணமானுல் வைகுந்தம் திண்ணம் என்று நிர்ப்பயனுயிருக்கைக்கு ஹேது—கர்மத்தைப் பாராமலங்கீகரித்து ஸம்ஸாரத்தை யடியறுத்துத் தன் திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளுகைக்குறுப்பான அவனது நிர்ஹேதுக க்ருபையை ஸ்மரிப்பதாம். ... (404)

**405. பயாபயங்களிரண்டும் மாறிமாறிப் ப்ராப்தியளவும் நடக்கும். 25**

405. இப்படி பயப்படுகையும் பயங்கெடுகையும் இவனுக்கு எதுவரையில் நடக்குமென்னில்; இருள் தருமா ஞாலத்திலே யிருக்கையாலே அநாதி காலம் ஸம்ஸார ஹேதுவாய்ப் போந்த ஸ்வகர்மத்தை அநுஸந்திப்பதும், அத்தைப் பாராதே அங்கீகரித்த பகவத் க்ருபையை அநுஸந்திப்பதுமாய் இருக்குமிவ்வதிகாரிக்கு—கருமங்களை நினைக்கும்போது பயமும் க்ருபையை நினைக்கும்போது அபயமுமாய் இரண்டும் மாறிமாறி பகவத் ப்ராப்திவரையில் நடக்கும். .... (405)

**406. நிவர்த்யஜ்ஞாநம் பயஹேது, நிவர்த்தக ஜ்ஞாநம் அபயஹேது. 26**

406. இப்படி பகவத் ப்ராப்தி வரையில் பயாபயங்களிரண்டும் மாறிமாறி நடப்பானேன்? எம்பெருமானுடைய குணத்தை விச்வஸித்து எப்போதும் நிர்ப்பயனுயே யிருக்கவொண்ணுதோ வென்னில்; அவனுடைய அருளாலே நிவர்த்திக்கப்படவேண்டியவையான அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்கள் கிடக்கையாலே இவற்றுல் இன்னமும் ஸம்ஸாரம் மேலிடுமோ என்கிற பயம் தொடர்ந்தேவரும்; "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற இவற்றுக்கு நிவர்த்தகமான அவனுடைய அருளைப்பற்றின ஞானம் அபயஹேதுவானுலும் ப்ரக்ருதி ஸம்பந்தம் கிடைக்குமளவும் பயமும் அபயமும் நடுநடுவே கலசிச்செல்லும். (406)

[இனி, சரமப்ராப்ய ப்ராபகப்ரகரணம்]

**407. ஸ்வதந்த்ரனை உபாயமாகத்தான் பற்றினபோதிறே இப்ப்ரஸங்கந்தானுள்ளது.**

[இப்பிரபந்தத்தில் முதலிலே பிடித்து இவ்வளவாக, ஸித்தோபாயமான ஸர்வேச்வரனே சேதநர்க்கு மோக்ஷஸித்திக்கு நிரபேக்ஷஸாதநமென்று சொல்லி, உபாயபூதனை ஸர்வேச்வரன் கருமங்களடியாக ஸம்ஸரிப்பிக்கவும் காருண்யமடியாக முக்தனுக்கவும் வல்ல ஸ்வதந்த்ரனுகையாலே அவனை உபாயமாகப் பற்றியிருப்பார்க்கு ஸ்வகர்மாநு ஸந்தாநத்தாலும் தத்க்ருபாநுஸந்தாநத்தாலும் உண்டாகிற பயாபயங்கள் முடிவுவரையில் மாறிமாறி நடக்கும்படியும் சொல்லப்பட்டது. இனிமேல், "ஸாக்ஷாந் நாராயணோ தேவஃ க்ருத்வா மர்த்ய மயீம் தநும்" என்றும், "திருமாமகள் கொழுநன் தானே குருவாகி" (ஞானஸாரம் 38) என்றும் சொல்லுகையாலே அந்த ஸித்தோபாயத்திற்காட்டில் வெளிப்பட்டதன்றியே அதனுடைய எல்லை நிலமாய், ஸம்ஸார மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கையன்றியே மோக்ஷத்துக்கு மாத்திரம் ஹேதுவாய், ஒருகாலும் அஞ்சவேண்டாதே எப்போதும் பயமற்றிருக்கும்படியான சரமோபாயம் ஸதாசார்யாபிமாநமே யென்று ஸர்வஜ்ஞரான பூர்வாசார்யர்கள் தங்களுக்குத் தஞ்சமாக அநுஸந்தித்தும் உபதேசித்தும் போந்த ரஹஸ்யார்த்தம் அனைவருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி உபபாதிக்கப் படுகிறது.]

407. கருமங்களுக்கிணங்க ஸம்ஸாரியாக்கவும் அருளுக்கிணங்க ஸம்ஸார நிவ்ருத்தியைப் பண்ணித் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவும் வல்ல ஸ்வதந்த்ரனை ஈச்வரனை உபாயமாகப் பற்றினபோதிறே பயாபயங்களிரண்டும் மாறி மாறி நடக்குமென்கிற இப் ப்ரஸங்கந்தானுள்ளது. (ஆசார்யனை உபாயமாகப் பற்றினுல் எப்போதும் நிர்ப்பயனுயே யிருக்கலாம்.) .... ... ... (407)

**408. உண்டபோ தொருவார்த்தையு முண்ணுதபோ தொருவார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே. அவர்கள் பாசுரங் கொண்டன்று இவ்வர்த்த மறுதியிடுவது.** 28

**409. அவர்களைச் சிரித்திருப்பா ரொருவருண்டிறே; அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்த மறுதியிடக்கடவோம்.** 29

408, 9. ப்ரமாணத்தைக் கொண்டன்றோ ப்ரமேயம் நிச்சயிக்கத்தக்கது; இவ்வர்த்தம் எதுகொண்டு நிச்சயிக்கக் கடவதென்னில்; "மயர்வற மதிநலமருளப் பெற்றவர்களாய் ப்ரதமபர்வத்திற்காட்டில் சரமபர்வத்துக்குள்ள ஏற்றமெல்லாம் தெளியக்கண்டு பேசினுர்களேயாகிலும் சரமபர்வத்தில் (மாத்திரம் ஊன்றினவர்களன்றியே, ப்ரதமபர்வத்திலும் ஊன்றி அதைப்பெற்று அநுபவித்துக் களிக்கும் போது ஒன்றைச் சொல்லுவது அது பெருமல் வருந்தும்போது ஒன்றைச் சொல்லுவதாய் ஒரு நிலையிலே நில்லாதவர்களான ஆழ்வார்களுடைய பாசுரங்கொண்டன்று ஆசார்யனே உபாயமென்கிற இவ்வர்த்தத்தை நிச்சயிப்பது; பின்னை யார் பாசுரங் கொண்டு நிச்சயிப்பதென்னில் :—"மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே,

தேவுமற்றறியேன்'' (கண்ணிநுண்சிறுத்தாம்பு 2) என்று ஸ்வாசார்யரான நம்மாழ்வாருடைய திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமாகப்பற்றி வேறொரு தெய்வமறியாதவராய் ஒரே நிலையில் நின்று, ஆழ்வார்களுடைய படிகளைப் பார்த்து ''இவர்களேன் இப்படி ப்ரதமபர்வத்திலும் சரமபர்வத்திலும் தோள்மாறுகின்றனர்'' என்று அவர்களைப் பரிஹஸித்திருக்கும் ஸ்ரீ மதுரகவியாழ்வாருடைய பாசுரமான கண்ணிநுண்சிறுத்தாம்பைக் கொண்டு இவ்வர்த்தத்தை நிச்சயிக்கக்கடவோம். (408, 9)

**410. ஸ்வரூபத்துக்கும் ப்ராப்யத்துக்கும் சேர்ந்திருக்கவேணுமிறே ப்ராபகம். 30**

410. ஸ்வரூபத்துக்கும் பலத்துக்கும் தகுந்திருக்கவேணுமிறே உபாயம். ஸ்வரூபத்தை ஆராய்ந்தால் பகவச்சேஷத்வமும் பஹிரங்கமென்னும்படி பாகவத சேஷத்வமேயிறே வடிவாயிருப்பது; இப்படிப்பட்ட ஸ்வரூபத்துக்குத் தகுந்த பலன் எதுவென்று நிரூபித்தால் பகவத் கைங்கர்யம் ப்ரதமாவதியாய் பாகவத கைங்கர்யமே சரமாவதியாயிருக்கும். ஆக, ஸ்வரூபத்தினுடையவும் பலத்தினுடையவும் உண்மை இதுவாகையாலே இவ்விரண்டுக்கும் பொருத்தமான உபாயம் ததீயரேயன்றோ ஆகவேண்டும்; அந்த ததீயர்களுள், முதலடியிலே தன்னை யங்கீகரித்து தத்வஜ்ஞாநத்தையுண்டாக்கி மஹோபகாரகனான ஸ்வாசார்யனுக்கு சேஷமாயிருக்கை ஸமஸ்த பாகவதருடைய உகப்பாயும் தன் ஸ்வரூபத்தினுடைய எல்லை நிலமாயுமிருக்கும். இந்த ஸ்வரூபத்துக்கு ஏற்ற பலன் ஸ்வாசார்யன் திருவடிகளிற் பண்ணும் கைங்கர்யமாம். ஸ்வரூப பலன்கள் இவையானால் இவையிரண்டுக்கும் பொருந்தின உபாயம் ஸ்வாசார்யன் திருவடிகளேயாகவேணும். .... (410)

**411. வடுகநம்பி ஆழ்வானையு மாண்டானையு மிருகரைய ரென்பர். 31**

411. ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீ மதுரகவிகளிருந்தாப்போலே ''உபாயோபேயங்களிரண்டும் உடையவர் திருவடிகளே'' என்று ப்ரதிபத்திபண்ணி அவரை விட்டு எம்பெருமானைக் கண்ணெடுத்தும் பாராதிருந்த வடுகநம்பி, கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் இருகரையரென்று சொல்லுவர்; அதாவது இவ்விருவரும் எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயமென்றிருந்தாலும், ஸம்ஸாரத்திலிருப்பு அடிக்கொதித்து அதனால் வந்த ஆர்த்தியின் மிகுதியாலே கலங்கிச் சிலபோது பெருமாள் பக்கலிலுஞ் சென்று பல்காட்டுவது தத்வைலக்ஷண்யம் கண்டவாறே அங்கே ஊன்றிப் போருவதாகிற இவ்வளவைக் கொண்டு ''எம்பெருமானார் திருவடிகளையே உபாயோபேயமாகக்கொண்டிருக்கிற இவர்கள் தேவுமற்றறியேனென்றிருக்கவேண்டாவோ? அப்படியிராமல் சரமாவதியிலும் ப்ரதமாவதியிலும் கைவைத்து நிற்கிற இவர்கள் இருகரையர்'' என்பர். ... ... (411)

**412. ப்ராப்யத்துக்கு ப்ரதமபர்வம் ஆசார்ய கைங்கர்யம்; மத்யமபர்வம் பகவத் கைங்கர்யம்; சரமபர்வம் பாகவத கைங்கர்யம். 32**

412. பலத்தில் ப்ரதமபர்வம் மத்யமபர்வம் சரமபர்வம் என்று மூன்று பர்வாக்களுண்டு; ஆசார்யனுடைய உகப்புக்குறுப்பான †பகவத்கைங்கர்யம் முதற் பருவம்; பகவானுடைய உகப்புக்குறுப்பான பாகவத கைங்கர்யம் நடுப்பருவம்; ஆசார்ய கைங்கர்யத்தின் ஏற்றமறியுமவர்களான பாகவதர்களெல்லார்க்கும் உகப்பாகப் பண்ணும் ஆசார்ய கைங்கரியம் சரமபர்வம். ... ... (412)

**413. ஸ்வரூப ப்ராப்தியை சாஸ்த்ரம் புருஷார்த்தமாகச் சொல்லாநிற்க, ப்ராப்திபல மாய்க் கொண்டு கைங்கர்யம் வருகிறப்போலே ஸாத்யவிவ்ருத்தியாய்க் கொண்டு சரமபர்வம் வரக்கடவது. 33**

413. இப்படி ஆசார்ய கைங்கர்யமே சரமபர்வமென்று சாஸ்த்ரம் சொல்லாதிருக்கச்செய்தே இது வருகிற வழி என்னென்னில்; "பரம் ஜ்யோதிருப ஸம்பத்ய ஸ்வேந ரூபேண அபிநிஷ்பத்யதே" என்று ஆத்மாவினுடைய அஸாதா ரணாகாரத்தின் ஆவிர்ப்பாவமாகிற ஸ்வரூபப்ராப்தியையே பேறாக சாஸ்த்ரம் சொல்லியிருந்தாலும், இப்படி ஆவிர்ப்பூதஸ்வரூபனான ஆத்மா சேஷத்வத்தைக் கொண்டே நிரூபணீயனாகையாலே சேஷிவிஷயத்தில் கிஞ்சித்கரித்தே நிறம்பெற வேண்டி யிருக்கையாலே அந்த ஸ்வரூபப்ராப்தியின் பலனாய்க்கொண்டு பகவதநு பவஜநிதப்ரீதிகாரித கைங்கர்யம் வருகிறப்போலே, சேஷியான பகவானுக்குத் தன் விஷயத்தில் கிஞ்சித்கரிப்பதிற் காட்டிலும் தன்னடியார் விஷயத்தில் கிஞ்சித் கரிப்பது மிகவுமுகப்பாகையாலே, முற்சொன்ன பகவத் கைங்கர்யமாகிய பலத்தின் வ்ருத்திரூபமாய்க் கொண்டு மத்யமபர்வமான பாகவதகைங்கர்யம் வரக்கடவதாய், அந்த பாகவதர்களெல்லார்க்கும் ஸ்வவிஷயகிஞ்சித்காரத்திற்காட்டிலும் ஆசார்ய விஷயத்தில் கிஞ்சித்காரமே உகப்பாகையாலே, அந்த பாகவத கைங்கர்யத்தின் விசேஷ வ்ருத்திரூபமாய்க்கொண்டு சரமபர்வமான ஆசார்ய கைங்கர்யம் வரக் கடவது. ... ... ... ... (413)

**414. இதுதான் துர்லபம் 34**

**415. விஷயப்ரவணனுக்கு அத்தைவிட்டு பகவத் விஷயத்திலே வருகைக்குள்ள அருமை போலன்று, ப்ரதமபர்வத்தைவிட்டு சரமபர்வத்திலே வருகைக்குள்ள அருமை. 35**

**416. அங்கு தோஷதர்சநத்தாலே மீளலாம்; இங்கது செய்யவொண்ணாது. 36**

414—6. இந்த சரமபர்வ நிஷ்டை எளிதில் உண்டாகக் கூடியதன்று; விஷயாந்தரங்களில் ஊன்றியிருப்பவன் அவற்றின் தோஷங்களைக்கண்டு வெறுத்

† இந்த பகவத் கைங்கர்யத்தை ஆசார்ய கைங்கர்ய சப்தத்தாலே மூலத்திற் சொன்னது—ஆசார்யப்ரீதிவிஷயமான பகவத்கைங்கரியம் ஆசார்யகைங்கரிய மென்னத் தகுமாகையாலே. மேலிரண்டும் இங்ஙனமே கண்டுகொள்வது.

துக் காறியுமிழ்ந்து பகவத்விஷயத்திலே வந்து சேரலாம். விலக்ஷணவிக்ரஹ யுக்தமாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனான பகவத்விஷயத்திலே தோஷம் காணமுடியாதாகையாலே இதைவிட்டு சரமபர்வத்திலே ஊன்றுவது மிக அருமை

**417. தோஷமுண்டானாலும் குணம்போலே உபாதேயமாயிருக்கும். 37**

417. க்ஷுத்ரவிஷயங்களுக்குச் சொல்லுகிற தோஷமொன்றும் பகவத் விஷயத்தில் சொல்லலாவதில்லையேயாகிலும், தன்னிடத்தில் ஆழ்ந்தவர்களுக்குத் தன்னுடைய ஸம்ச்லேஷஸுகத்தை நித்தியமாக நடத்தாதே பிரிந்து பிரிந்து துக்கத்தை விளைக்கையாலே, "கடியன் கொடியன்" (திருவாய்மொழி 5-3-5) இத்யாதிப்படியே சொல்லலாம்படி தோற்றுவன சில தோஷமுண்டே; அந்த தோஷங்கள் பகவத் விஷயத்தை விட்டு சரமபர்வத்திலே வருகைக்கு உடலாகாதோ வென்னில்; அப்படி ஆற்றாமையாலே தோற்றுவன சில தோஷமுண்டானாலும் "ஆகிலும் கொடிய வென்னெஞ்ச மவனென்றே கிடக்கும்" (திருவாய்மொழி 5-3-5) என்று அந்த தோஷங்களையே விரும்பி மேல்விழும்படி யிருக்கையாலே ஹேயமாயிராது; விஷயத்தை விரும்பி மேல்விழுகைக்குடலான குணம்போலே உபாதேயமாயிருக்கும்.

**418. லோகவிபரீதமாயிறே இருப்பது. 38**

**419. குணம் உபாதேயமாகைக்கீடானஹேது தோஷத்துக்கு முண்டிறே. 39**

418, 9. லோகத்தில் தோஷம் ஹேயமாய் குணம் உபாதேயமாயன்றோ யிருப்பது; தோஷமும் குணம்போலே உபாதேயமாயிருக்குமோ வென்னில்; தோஷம் விடத்தக்கதாய் குணம் பற்றத்தக்கதாயிருக்கிற லோகப்ரக்ரியையன்றியே தோஷமும் குணம்போலே உபாதேயமாயிறே பகவத்விஷயத்திலிருப்பது. குணம் உபாதேயமாவதற்கு எது ஹேதுவோ அது தோஷத்துக்குமுண்டு; "ப்ராப்தசேஷியான எம்பெருமான் பக்கலுள்ளது" என்பதேயிறே குணம் உபாதேயமாவதற்குக் காரணம்; அது தோஷத்துக்கு முண்டாகையாலே அதுவும் உபாதேயமாகக் குறையில்லை. ஆகையாலே பகவத் விஷயத்தில் தோஷம் உண்டானாலும் அது மீள்வதற்குடலாகாது. ... ... .... .... (418, 9)

**420. நிர்க்ருணனென்ற வாய் மூடுவதற்கு முன்னே க்ருணவானென்று சொல்லும்படியாயிருந்ததிறே. 40**

420. பகவத் விஷயத்தில் தோஷமுண்டென்பதும் ஆபாதப்ரதீதி கொண்டேயாம். திருவாய்மொழியில் திருத்தாயார் தன் மகளுடைய ஆற்றாமைக்கு உடனேவந்து உதவாதது கொண்டு "என தவளவண்ணர் தகவுகளே!" (திருவாய்மொழி 2-4-5) என்று எம்பெருமானைக் கருணையற்றவனாகச் சொல்லி வாய்மூடுவதற்குள்ளே அவள் வாயை அமுக்கினாற்போலே "தகவுடையவனே" (திருவாய்மொழி 2-4-6) என்று அவனிடத்தில் ஒருகாலும் அருள் மாறாதென்று மகள் சொல்லும்படியா யிருந்ததிறே ... ... ... (420)

**421. இப்படி சொல்லும்படி பண்ணிற்று க்ருபையாலேயென்று ஸ்நேஹமும் உபகாரஸ்ம்ருதியும் நடந்ததிறே. 41**

421 "தகவுடையவனே" என்று மகள் சொன்னதானது தாயார் சொன்ன குணஹாநிக்கு ஒரு பரிஹாரம் பண்ணின மாத்திரமோ? அல்லது உள்ளூறச் சொன்னதோ வென்னில்; அப்பாசுரத்தில் 'பின்னும் மிக விரும்பும்'' என்றும் ''பிரானென்னும்'' என்று மிருக்கையாலே, தாயார் குணஹானி சொன்னதைத் தள்ளி, தான் குணம் சொல்லும்படி பண்ணிற்று க்ருபையாலே யென்பது தோன்ற ஸ்நேஹமும் உபகார ஸ்மிருதியும் நடந்ததிறே ஆகையால் "தகவுடையவனே" என்றது ஸஹ்ருதயோக்தியேயாம். ... .. ... ... (421)

**422 நிர்க்க்ருணனாக சங்கித்துச் சொல்லு மவஸ்தையிலும் காரணத்தை ஸ்வகதமாகவிறே சொல்லிற்று. 42**

422. அசோக வனத்திலே துவண்டுகிடந்த பிராட்டி தன் ஆற்றாமைக்குப் பெருமாள் உதவ வந்து முகங்காட்டப் பெறாத வ்யஸநத்தாலே ''க்யாதா: ப்ராஜ்ஞா, க்ருதஜ்ஞச்ச ஸாநுக்ரோசச்ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசச் சங்கே' என்று பெருமாளைக் கண்ணற்றவராக சங்கித்துச் சொல்லும்போதும், 'மத்பாக்யஸம்க்ஷயாத்'' என்று இப்படி நான் சங்கிப்பதற்குக் காரணம் என்னுடைய பாக்யஹாநி—என்றுதானே சொல்லுகையாலே, உண்மையில் பகவத் விஷயத்தில் தோஷமில்லையென்பது ஸ்பஷ்டம். .... .... ... .. .. (422)

**423. குணதோஷங்களிரண்டும் க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும். 43**

423. எம்பெருமான் தான் செய்கிற ஸம்ச்லேஷமும் விச்லேஷமுமாகிற குணதோஷங்களிரண்டும், க்ஷுத்ர புருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும். அதாவது ஒரொன்றே இரண்டையும் குலைக்கும்; ஸம்ச்லேஷம் இரண்டையும் குலைக்கிறபடி எங்ஙனே யென்னில்; ''மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு'' (மூன்றாந் திருவந்தாதி 14) என்றும் ''மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார் தொழுதாரத்தோள்'' (இரண்டாந் திருவந்தாதி 42) என்றும் பகவத் விஷய அவகாஹநத்தாலே க்ஷுத்ரவிஷய வைராக்யம் பிறக்குமென்கையாலே ஸம்ச்லேஷம் க்ஷுத்ர புருஷார்த்தாந்வயத்தைக் குலைக்கும்; * பயிலுஞ் சுடரொளியிலே பாகவத சேஷத்வத்திலே ஊன்றின ஆழ்வார், அந்த பாகவதர்களுக்கு விசேஷணமிடுகிற க்ரமத்திலே ப்ரஸ்துதமான பகவத் ஸௌந்தர்ய சீலாதிகளாலே பாகவததாஸ்ய ரஸத்தை மறந்து அவனை அநுபவிக்கையில் ஆசை கரைபுரண்டு, அடுத்த (''முடியானே மூவுலகும்'') திருவாய்மொழியிலே தாமும் தம்முடைய கரணக்ராமங்களும் பெருவிடாய்ப்பட்டுக் கூப்பிடும்படி எம்பெருமான் பண்ணினுனைகையாலே, இப்படி வேறொன்றுக்காகப் புகுந்தாலும் தன்னைத்தவிர வேறொன்றுக்கு ஆளாகாதபடி பண்ணும் த்ருஷ்டிசித்தாபஹாரியான அவன் பக்கலிலே ஆழங்காற்படுத்திப் புருஷார்த்தகாஷ்டையான ததீய சேஷத்வத்தில் நிலையைக் குலைக்கும். இனி விச்லேஷம் இரண்டையும் குலைக்கிறபடி எங்ஙனேயென்னில்; அநுபவம் பெறாத வருத்தத்தாலே எப்போதும் தன் பக்கலிலே மநஸ்ஸாய் ''உண்டறியாளுறக்கம் பேணாள்'' (திருநெடுந்தாண்டகம் 12) ''பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பாலூட்டாள் பாவை பேணாள்''

(பெரியதிருமொழி 5, 5, 9) என்கிறபடியே முன்பு அநுபவித்துப் போந்த ப்ராக்ருத போகங்களாகிற க்ஷுத்ர புருஷார்த்தங்களில் பொருந்தாமையை விளைக்கையாலே க்ஷுத்ர புருஷார்த்தாந்வயத்தைக் குலைக்கும். "தனிமாத்தெய்வத் தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார், நனிமாக்கலவியின்பமே நாளும் வாய்க்க நங்கட்கு" (திருவாய்மொழி 8, 10, 7) என்று பகவத்விஷய ஸம்ச்லேஷரஸம் வேண்டாதபடி பாகவதவிஷய ஸம்ச்லேஷரஸமே அமையுமென்றிருக்குமவர்களையும் அந்த பாகவதர்களுடனே கூடியிருந்தாலும் அவர்கள்மேல் நெஞ்சொழிந்து அவனை அநுபவிக்கையிலாசையாலே "காணவாராய்" (திருவாய் 8, 5, 1) என்றும் "காணுமாறருளாய்" (திருவாய். 8, 1, 1) என்றும் கூப்பிடும்படி பண்ணுகையாலே புருஷார்த்த காஷ்டையைக் குலைக்கும். .... — .... .... (423)

**424. நித்யசத்ருவாயிறே யிருப்பது. 44**

424. [கீழே 'க்ஷுத்ரபுருஷார்த்தத்தையும் புருஷார்த்த காஷ்டையையும் குலைக்கும்'' என்றதில் க்ஷுத்ரபுருஷார்த்தத்தைக் குலைக்குமென்றவிது—தன் பக்கலிலே அகப்பட்டவர்களை வேறொரு விஷயமறியாதபடி பண்ணுகிற இவ்விஷய ஸ்வபாவத்தைச் சொல்லுகைக்காகக் கூட்டிக்கொண்டதேயொழிய, புருஷார்த்த காஷ்டையைக் குலைக்குமென்றவதுவே ப்ரக்ருதத்துக்கு அபேக்ஷிதம். ஆனபின்பு க்ஷுத்ர புருஷார்த்தத்தைக் குலைக்குமென்ற அது ப்ராஸங்கிகமாகையாலே அத்தை விட்டு, ப்ரகரணோபயுக்தமாகச் சொல்லப்பட்ட "**புருஷார்த்தகாஷ்டையைக் குலைக்கு**" மென்றவிது மூதலிக்கப்படுகிறது.] **நித்ய சத்ருவாயிறேயிருப்பது**=பாகவத கைங்கர்ய நிஷ்டனுக்கு பகவத் ஸௌந்தர்யம் நித்யசத்ருவாயிறேயிருப்பது. "சத்ருக்நோ **நித்யசத்ருக்நः**" என்ற ஸ்ரீராமாயண (2, 1, 1) ச்லோகத்தின் பொருள் உணர்க. பெருமாளுக்கு அபிமதவிஷயமான ஸ்ரீபரதாழ்வானையே தனக்கு உத்தேச்யமாகப் பற்றி அவனைத் தவிர வேறறியாதேயிருக்கிற சத்ருக்நாழ்வான் பரதாநுவ்ருத்திக்கு விரோதியான ராம ஸௌந்தர்யமாகிற நித்ய சத்ருவை வென்றிருப்பவனென்கை யாலே ததீய கைங்கர்ய நிஷ்டனுக்கு பகவத் ஸௌந்தர்யம் நித்ய சத்ருவென்பது திண்ணமாம். இவ்விஷய ஸ்வபாவமிதுவாகையாலே சரமபர்வமான ஆசார்ய கைங்கர்யத்தில் புத்தி செல்லுவது மேட்டுமடை என்றதாயிற்று. .... (424)

**425. இப்படி ப்ராப்யத்தை யறுதியிட்டால் அதுக்கு ஸத்ருசமாக வேணுமிறே ப்ராபகம். 45**

425. இப்படி ஆசார்ய கைங்கர்யமே ப்ராப்யமென்று நிஷ்கர்ஷிக்கப்பட்ட பின் இந்த ப்ராப்யத்துக்குத் தகுதியாக வேணுமே இதன் ப்ராபகம்=ஆசார்ய கைங்கர்யமாகிற சரமப்ராப்யத்துக்கு ஆசார்யனே ப்ராபகமாக வேணும். (425)

**426. அல்லாதபோது ப்ராப்ய ப்ராபகங்களுக்கு ஐக்யமில்லை. 46**

426. இப்படி இந்த ப்ராப்யத்துக்குத் தகுதியாக ஆசார்யனை ப்ராபகமாகக் கொள்ளாமல் ஈச்வரனை ப்ராபகமாகக்கொண்டால் ப்ராப்ய ப்ராபங்களுக்கு ஒற்றுமை யில்லாதொழியும். [ப்ரதம பர்வத்துக்குண்டான ப்ராப்ய ப்ராபக ஐக்யம் சரம

பர்வத்துக்கும் ஒக்கும்; ஆகையாலேயிறே இராமாநுச நூற்றந்தாதியில் "பேறொன்று மற்றில்லை நின் சரணன்றி, அப்பேறளித்தற்கு ஆறொன்றுமில்லை மற்றச் சரணன்றி" (45) என்று உபாயோபேயங்களிரண்டும் ஒரே விஷயமாக அமுதனு ரருளிச் செய்தது.] .... .. .... .... (426)

427. ஈச்வரனைப்பற்றுகை கையைப்பிடித்துக் காரியங்கொள்ளுமோபாதி; ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி. 47

427. ஈச்வரனைப் பற்றுகை அவன் கையைப் பிடித்துக் காரியங்கொள்வது போலே; ஆசார்யனைப் பற்றுகை காலைப்பிடித்துக் கார்யம் கொள்வதுபோலே. (கையைப் பிடித்தால் ஒருகால் உதறிவிட்டுப் போய்விடவுங் கூடும்; காலைப் பிடித்து வேண்டிக்கொண்டால் "'அநதிக்ரமணீயம் ஹி சரணக்ரஹணம்'" என்கிறபடியே தப்பாமல் காரியம் செய்தே தீரவேண்டியதாம்.) .... .... (427)

428. ஆசார்யன் இருவர்க்கும் உபகாரகன். 48

428. [இனிமேல் பல ஹேதுக்களாலும் ஆசார்ய வைபவம் விளக்கப்படு கிறது.] இப்படி உபாயமாகக் கீழ்ச்சொல்லப்பட்ட ஆசார்யன்—சேஷியான ஈச்வரனுக்கும் சேஷபூதனான சேதநனுக்கும் அபிமதவஸ்துக்களைப் பெறுவித்த மஹோபகாரகன். ... .... ... ... (428)

429. ஈச்வரனுக்கு சேஷவஸ்துவை யுபகரித்தான்; சேதநனுக்கு சேஷியை யுபகரித்தான். 49

429. இரண்டு தலைக்கும் இவன் உபகரித்தவை எவையென்னில்; மேன் மேலும் ஸ்ருஷ்ட்யவதாராதிகளைப் பண்ணி வசீகரிக்கப் பார்த்தவிடத்திலும் ஓராத்ம வஸ்துவும் கிடைக்காமையாலே இழவாளனாயிருக்கிற ஈச்வரனுக்கு சேஷமான ஆத்மவஸ்துவை இஷ்ட விநியோகார்ஹமாம்படி கைப்படுத்தினான். பகவத் விஷயஜ்ஞாநமில்லாமையாலே நெடுநாளாக அஸத்கல்பனாய்க்கிடந்த சேதநனுக்கு பகவத்ஸம்பந்தத்தை யறிவித்து சேஷியானவனைக் காட்டிக்கொடுத்தான். (429)

430. ஈச்வரன்தானும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டிருக்கும். 50

431. ஆகையிறே குருபரம்பரையிலந்வயித்ததும், ஸ்ரீகீதையும் அபயப்ரதானமு மருளிச்செய்ததும். 51

430, 1. ஆசார்யத்வத்துக்கு இட்டுப்பிறவாத ஈச்வரன் தானும் இவ் வாசார்யத்வத்தின் ஏற்றத்தை நோக்கி இதிலே ஆசைகொண்டிருப்பன். அது எங்ஙனே தெரிகிறதென்னில்; "லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்" என்னும்படி குருபரம்பரை யிலே த்வயோபதேஷ்டாவாக அந்வயித்திருக்கையாலும், ஆசார்ய க்ருத்யத்தை ஏறிட்டுக்கொண்டு அர்ஜுநனைக் குறித்து கீதையருளிச் செய்கையாலும், விபீஷ ணாழ்வான் நிமித்தமாக அபயப்ரதாநச்லோகமருளிச் செய்கையாலும். ஆக, ஈச்வரனும் ஆசைப்படும்படியன்றோ ஆசார்யத்வத்தின்பெருமையிருப்பது (430, 1)

**432. ஆசார்யனுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதி சதுஷ்டயமும் ஈச்வரத்வயமு முண்டாகில். 52**

432. உபயவிபூதியையும் உபயவிபூதி நாதனை ஈச்வரனையும் இட்ட வழக்காம்படி பண்ணிக்கொடுத்த ஆசார்யன் பண்ணின உபகாரத்துக்கு ஏற்ற கைம்மாறு செய்யலாவது இப்படியே இன்னமும் இரண்டு விபூதியும் அவ்விபூதி த்வய நாதனுயிருப்பானேரீச்வரனும் வேறேயுண்டாகில். ... ... (432)

**433. ஈச்வர ஸம்பந்தம் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருக்கும். ஆசார்ய ஸம்பந்தம் மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும். 53**

433 ஈச்வரன் கர்மாநுகுணமாக ஸம்ஸரிப்பிக்கவும் காருண்யாநுகுணமாக முக்தனுக்கவும் வல்ல ஸ்வதந்த்ரனுகையாலே அவனை ஆச்ரயிப்பது ஸம்ஸார பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் பொதுவாயிருக்கும்; ஆசார்யன் ஸர்வப்ரகாரத்தாலும் இவனை உஜ்ஜீவிப்பித்தேவிடும். கருணைக்கடலாகையாலே அவனைப் பற்றுவது மோக்ஷத்துக்கே ஹேதுவாயிருக்கும். ... ... (433)

**434. பகவல்லாபம் ஆசார்யனுலே. 54**

**435. ஆசார்யலாபம் பகவானுலே. 55**

**436. உபகார்யவஸ்து கௌரவத்தாலே ஆசார்யனில்காட்டில் மிகவுமுபகாரகன் ஈச்வரன் 56**

434—6. எம்பெருமானை லபிப்பது ஆசார்யனுலே; ஆசார்யனை லபிப்பது எம்பெருமானுலே. ஆனல் இருவரும் உபகாரத்தில் ஸமரோவென்னில்; இருவரும் உபகரித்தவஸ்துக்களைச் சீர்தூக்கிப் பார்த்தால், ஆசார்யனுபகரித்த பகவத் விஷயத்திற் காட்டில் பகவானுபகரித்த ஆசார்ய விஷயம் கனத்ததாகையாலே ஈச்வரனையுபகரித்த ஆசார்யனிற்காட்டில் ஆசார்யனையுபகரித்த ஈச்வரன் மஹோபகாரகன். [இத்தால் ஆசார்யனுக்கே வைபவம் சொல்லிற்றென்பதை உணர்க.]

**437. ஆசார்ய ஸம்பந்தம் குலையாதே கிடந்தால் ஜ்ஞானபக்தி வைராக்யங்களுண்டாக்கிக் கொள்ளலாம். ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால் அவை யுண்டானுலும் ப்ரயோஜனமில்லை. 57**

437. கீழ்ச்சொன்னபடியே உத்தாரகனுமாய் உபகாரகனுமாயிருந்துள்ள ஸ்வாசார்யன் "இவன் என்னுடையவன்" என்று அபிமானித்திருக்கும்படி அவன் திருவடிகளில் தனக்குண்டான ஸம்பந்தம் தன்னுடைய துர்ப்புத்தியாலே குலையாதபடி அதை ரக்ஷித்துக்கொண்டிருந்தால் ஜ்ஞாந பக்திவிரக்திகளாகிற ஆத்மகுணங்கள் இல்லாமற் போனுலும் அவ்வாசார்யாநுக்ரஹத்தாலே அவற்றை க்ரமேண உண்டாக்கிக்கொள்ளலாம்; ஸர்வமங்கள ஹேதுவான அந்த ஆசார்ய ஸம்பந்தம் பின் துர்ப்புத்தியாலே குலைந்தால் ஜ்ஞாநம் முதலியவை பூர்வஸுக்ருதங்களாலே சிறிது உண்டானுலும் அவை பகவதங்கீகார ஹேதுவாகாமையாலே பயனற்றவையாம். .... ... .... .... (437)

**438. தாலி கிடந்தால் பூஷணங்கள் பண்ணிப்பூணலாம்; தாலிபோனல் பூஷணங்களெல்லா மவத்யத்தை விளைக்கும். 58**

**438.** பயனற்றவை யென்பது மாத்திரமேயல்ல; அவத்யகரமுமாகும். பதிவ்ரதையான மங்கைக்குப் பதிஸம்பந்த ஸூசகமான தாலியொன்று போகாமல் கிடந்தால் பூஷணங்க ளில்லாமற்போனலும் முதலுண்டானபோது பண்ணிப் பூண்டுகொள்ளலாம். 'இத்தனை பூஷணமுண்டே' என்று நினைத்துத் தாலியை வாங்கிப்போகட்டால் விதவாலங்கார கல்பமாகையாலே பூண்ட பூஷணங்களெல்லாம் அவத்யத்தை விளைப்பனவாம். .... ... ... (438)

**439. தாமரையை அலர்த்தக்கடவ ஆதித்யன்தானே நீரைப்பிரிந்தால் அத்தை யுலர்த்துமாபோலே, ஸ்வரூப விகாஸத்தைப் பண்ணுமீச்வரன் தானே, ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால்அத்தை வாடப்பண்ணும். 59**

**439.** ஆசார்ய ஸம்பந்தம் கிடந்தாலும் ஈச்வரனேயன்றே ஸ்வரூப விகாஸகன்; ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தாலும் இத்தனை யாத்மகுணமுடைய வனுக்கு ஈச்வரன் ஸ்வரூப விகாஸத்தைப் பண்ணுனே வென்னில்; ஜலத்திலே பிறந்து ஜலத்தையே தாரகமாகவுடைய தாமரையை விகாஸப்படுத்துகிற ஸூர்யன் தானே அந்தத்தாமரை ஜலத்தைவிட்டுப் பிரிந்தால் அதை உலர்த்துமாபோலே, ஸ்வருபவிகாஸத்தைப்பண்ணுகிற ஈச்வரன்றனே ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தால் அந்த ஸ்வருபத்தை வாடப்பண்ணுவன். .... ... ... (439)

**440. இத்தையொழிய பகவத் ஸம்பந்தம் துர்லபம் 60**

**440.** இப்படி சொல்லுகிறதென்? ஆசார்யஸம்பந்தம் குலைந்ததாகிலும் "உன்றன்னேடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" (திருப்பாவை 28) எனப்பட்ட பகவத் ஸம்பந்தம் உஜ்ஜீவனத்துக்கு உடலாகாதோ வென்னில்; பகவத் ஸம்பந்தம் அநாதிஸித்தமாயிருந்தாலும் ஆசார்யன் உணர்த்துவதற்கு முன்பு அஸத்கல்பமாய் அவனுணர்த்தின பின்பு இவனுக்குக் கார்யகரமாகக் கடவதாகை யாலே இப்படிப்பட்ட ஆசார்ய ஸம்பந்தம் குலைந்தபோது இதுமூலமாக வந்த பகவத் ஸம்பந்தமும் குலைந்துபோமாகையாலே இவ்வாசார்ய ஸம்பந்தத்தை யொழிய பகவத்ஸம்பந்தம் இவனுக்கு நிலைநிற்கமாட்டாது. ... (440)

**441. இரண்டு மமையாதோ, நடுவில் பெருங்குடி யென்னெனென்னில்; 61**

**442. கொடியைக்கொள்கொம்பிலே துவக்கும்போது சுள்ளிக்கால் வேண்டுமா போலே, ஆசார்யாந்வயத்துக்கும் இது வேணும். 62**

**441, 2.** ஆத்மோஜ்ஜீவநத்துக்கு பகவத்ஸம்பந்தத்தை நிலைநிறுத்து மதான ஆசார்ய ஸம்பந்தமும் அந்த ஆசார்ய ஸம்பந்தத்தால் நிலைநிறுத்தப்படும் பகவத் ஸம்பந்தமுமாகிற இரண்டுமாத்திரம் போராதோ? ப்ரதமபர்வ சரமபர்வங்க ளென்னப்படுகிற இவற்றின் நடுவே மத்யமபர்வமென்கிற பாகவத ஸம்பந்தம் ஏதுக்காக வேண்டுமென்னில்; வளருவதொரு கொடியைக் கொள்கொம்பிலே

சேர்க்கும்போது சுள்ளிக்கால் அவச்யாபேக்ஷிதமாவதுபோல, • கோல்தேடி யோடுங்கொழுந்துபோல அபிமுகமான இச்சேதநன் ஆசார்யன் திருவடிகளில் அந்வயிக்கும்போதும் திருத்திப் பணிகொண்டு அவ்வாசார்யனோடே சேர்க்கும் பாகவதர்களின் ஸம்பந்தம் ஆவச்யகமேயாம். ... ... (441, 2)

443. ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக்கொண்ட விவனுக்கு, ஆசார்யாபிமாநமொழிய கதியில்லையென்று பிள்ளை பலகாலு மருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும். 63

443. நெடுநாளாக நானே யெனக்கு நிர்வாஹகனென்றிருக்குந் தன்னு டைய துரபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தை யழித்துக்கொண்ட இச்சேதநனுக்கு ஆசார்யாபிமாநமொழிய வேறு உஜ்ஜீவநோபாயமில்லையென்று நம்பிள்ளை திருவடி களிலே ஸகல சாஸ்த்ர தாத்பர்யங்களையுங் கேட்ட வடக்குத் திருவீதிப்பிள்ளை பலகாலுமருளிச் செய்வர். ... ... ... ... (443)

444 ஸ்வ ஸ்வாதந்த்ர்யபயத்தாலே பக்தி நழுவிற்று. 64

445. பகவத் ஸ்வாதந்த்ர்யபயத்தாலே ப்ரபத்தி நழுவிற்று. 65

444, 5. இப்படி ஆசார்யாபிமாநமொழிய கதியில்லை யென்பானேன்? சாஸ்த்ர ஸித்தங்களான பக்தி முதலிய உபாய விசேஷங்களுண்டே யென்னில்; பகவத் ப்ராப்தி ஸாதநமாக விதிக்கப்பட்டதாய் ஸ்வயத்நஸாத்யமான பக்தியானது பகவதேகபாரதந்த்ரிய விரோதியான ஸ்வஸ்வாதந்திரியத்தை உண்டாக்குமென்னு மச்சத்தாலே இவனுக்கு உபாயமன்றியிலே நழுவி நின்றது. தன்னுடைய பாரதந் திரியத்திற்குப் பொருந்தினதாய் மஹாவிச்வாஸ ரூபமான ப்ரபத்தியானது—ஸம் ஸரிப்பிக்கவும் மோக்ஷமடைவிக்கவும் வல்ல ஸ்வதந்த்ரனான பகவான் தன் ஸ்வா தந்திரியத்தாலே மறுபடியும் கர்மாநுகுணமாக ஸம்ஸரிப்பிக்கில் என்னசெய்வ தென்கிற மஹாபயத்தாலே இவனுக்கு உபாயமன்றியிலே நழுவி நின்றது. (444,5)

446. ஆசார்யனையும் தான் பற்றும்பற்று அஹங்கார கர்ப்பமாகையாலே, காலன்கொண்டு மோதிரமிடுமோபாதி. 66

447. ஆசார்யாபிமானமே யுத்தாரகம் 67

446, 7. ஆசார்யனையும் உபாயமாகத் தான் ஸ்வீகரிக்கிற ஸ்வீகாரமும் அஹங்காரத்தை உள்ளேயுடைத்தாயிருக்கையாலே தன்னுடைய ஸ்வரூபத்துக்கு அவத்யகரமா யிருக்கும். ஆக இவையெல்லாம் உபாயமன்றியிலேயொழிய, பரம காருணிகனாய் நிர்ஹேதுகமாகத் தன்னையங்கீகரித்தருளி நோக்கிக்கொண்டு போருகிற ஆசார்யன் இவன் நம்முடையவனென்று திருவுள்ளம் பற்றியிருக்கு மபிமாநமே உத்தாரகம். .... ... ... ... (446, 7)

448. கைப்பட்ட பொருளைக் கைவிட்டுப் புதைத்த பொருளைக் கணிசிக்கக் கடவனல்லன் 68

448. கையிலுள்ள பொருள்போலே அதிஸுலபனாயிருக்கிற ஆசார்யனைக் குறைய நினைத்து அநாதரத்தாலே கைவிட்டு, பூமியிலே பிறர் புதைத்துவைத்த பொருள்போலே துர்லபமான பகவத்விஷயத்தை ரக்ஷகமாகப்பற்ற விரும்பலாகாது.

**449. விடாய்பிறந்தபோது கரஸ்தமான உதகத்தை உபேக்ஷித்து, ஜீமூத ஜலத்தையும் ஸாகர ஸலிலத்தையும் ஸரித்ஸலிலத்தையும் வாபீ கூபபயஸ்ஸுக்களையும் வாஞ்சிக்கக் கடவனல்லன். 69**

449. விடாய் விஞ்சினபோது உடனே பருகலாம்படி பாத்ரஸ்தமாய்த் தன் கையிலிருக்கிற தீர்த்தத்தைவிட்டு மழை நீரையும் கடல் நீரையும் ஆற்று நீரையும் வாபீகூபஜலங்களையும் விரும்பலாகாது. [ஆசார்யனை உபேக்ஷித்து பரத்வத்தையும் வ்யூஹத்தையும் விபவத்தையும் அர்ச்சையையும் அந்தர்யாமியையும் விரும்பவேண்டாவென்கை.] ... ... ... (449)

**450. பாட்டுக்கேட்குமிடமும், கூப்பீடுகேட்குமிடமும், குதித்தவிடமும், வளைத்த விடமும், ஊட்டுமிடமும் எல்லாம் வகுத்தவிடமே யென்றிருக்கக்கடவன். 70**

450. நித்யமுக்தர்களுடைய ஸாமகாநம் கேட்குமிடமான பரமபதமும் அஸுர ராக்ஷஸபீடிதரான பிரமன் முதலானோருடைய ஆர்த்தநாதம் கேட்கச் செவி கொடுத்துக்கொண்டு கண்வளருமிடமான திருப்பாற்கடலும், அங்குநின்றும், வந்தவதரித்த அவதார ஸ்தலமும், நினைத்தது தலைக்கட்டுமளவும் மலையாளர் வளைப்புப்போலே இட்டஅடி பேராமல் வளைத்துக்கொண்டிருக்கிற அர்ச்சாவதார ஸ்தலங்களும், ஹ்ருதயகமலத்திலேயிருந்து தானுகந்தார்க்குத் தன்னமுதை புஜிப்பிக்கிற அந்தர்யாமித்வஸ்தலமுமாகிற இந்த ப்ராப்ய ஸ்தலங்களெல்லாம் ஆசார்யவிஷயமே யென்று துணிந்திருக்கவேணும். ... ... (450)

**451. இவனுக்கு ப்ரதிகூலர் ஸ்வதந்த்ரரும் தேவதாந்தரபரரும்; அநுகூலர் ஆசார்ய பரதந்த்ரர்; உபேக்ஷணீயர் ஈச்வர பரதந்த்ரர். 71**

451. இப்படி ஆசார்யாபிமாநநிஷ்டனாய் பரத்வாதிகளிலுள்ள ப்ராவண்யத்தை யெல்லாம் இவ்விஷயத்திலே ஒருமடைப்படுத்தி "தேவுமற்றறியேன்" என்றிருக்குமிவ் வதிகாரிக்கு ஆத்மாபஹாரிகளான ஸ்வதந்த்ரரும் தேவதாந்தர பரதந்த்ரரும் ப்ரதிகூலராவார்; ஆசார்ய பரதந்த்ரர் அநுகூலராவார்; சரமபர்வமான ஆசார்யபாரதந்த்ரியத்தி லூற்றமின்றியிலே ப்ரதமபர்வமான ஈச்வர பாரதந்த்ரியத்திலேயூன்றி நிற்குமவர்கள்—அநுகூலரும் ப்ரதிகூலருமல்லாத உபேக்ஷணீயர்கள்.

**452. ஜ்ஞாநாநுஷ்டாநங்களிரண்டும் அல்லாதார்க்கு உபாயாங்கமாயிருக்கும், இவனுக்கு உபேயாங்கமாயிருக்கும். 72**

452. தத்வஜ்ஞாநமும் அதற்கொத்த அநுஷ்டாநமும் ஆசார்யாபிமாந நிஷ்டனான இவனைத் தவிர்ந்த மற்ற அதிகாரிகளுக்கு எங்ஙனே விநியோகப்படு மென்றால்; உபாயம் அதிகாரிஸாபேக்ஷமாகையாலே உபேயம் கைபுகுமளவும் உபாயாதிகாரம் நழுவாமல் நடக்கைக்குறுப்பாய்க்கொண்டு அவ்வழியாலே உபாய

சேஷமாயிருக்கும்; இவனுக்கோ ஆசார்யாபிமாநமே உத்தாரகமாகையால் உபாயாதிகார சேஷமாக வேண்டுவதொன்றில்லாமையாலே இவ்வதிகாரிக்குண்டான ஜ்ஞாநாநுஷ்டாநங்களிரண்டும் ஆசார்யன் முகமலர்த்தியாகிற உபேயத்துக்கு சேஷமாயிருக்கும். [மூலத்தில்—"இவனுக்கு உபேயமாயிருக்கும்" என்றும் பாடமுண்டு; அப்போது, இவனுடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களிரண்டும் ஆசார்யனுக்கு அபிமதமாய்க்கொண்டு இவனுக்கு உபேயமாயிருக்குமென்றதாம்.] ... (452)

453. இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் தன்னையும் பிறரையும் நசிப்பிக்கையாலே த்யாஜ்யம். 73

453. இப்படி ஜ்ஞாநாநுஷ்டானங்களிரண்டும் ஆசார்ய ப்ரீதி ஹேதுவாக நினைத்துக் குறிக்கொண்டு வர்த்திக்கும் இவ்வதிகாரிக்குப் பரதாரபரிக்ரஹம் முதலிய நிஷித்தாநுஷ்டாநங்கள் தன்னையும் பிறரையும் நசிப்பிக்கையாலே த்யாஜ்யங்களாம். .... ... ... ... ... (453)

454. தான் நசிக்கிறது மூன்றபசாரத்திலும் அந்வயிக்கையாலே; பிறர் நசிக்கிறது தன்னை யநாதரித்தும் தன்னனுஷ்டானத்தை யங்கீகரித்தும். 74

454. நிஷித்தாநுஷ்டாநங்களாலே தான் நசிக்கிறதும் பிறரை நசிப்பிக்கிறதும் எங்ஙனேயென்னில்:—பகவானுக்கும் பாகவதர்களுக்கும் ஆசார்யனுக்கும் அபிமதவிஷயமாயிருக்கிற தான் அம்மூவர்க்கும் அநிஷ்டமான நிஷித்தாநுஷ்டாநங்களைப் பண்ணுவது மூவர்பக்கலிலும் அபசாரப்பட்டதாகத் தேறுமாகையாலே இவ்வழியாலே தான் நசிக்கிறபடி. பிறர் நசிக்கிறபடி எங்ஙனேயென்னில்; சரமபர்வ நிஷ்டை வரையிலும் வந்து நிற்கிற பாகவதோத்தமனான தன்னை நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினவனென்று அநாதரித்தும், "தத்வ வித்தான இவன் இப்படி செய்வது இதில் தோஷமில்லாமையாலன்றோ; நமக்குப் பின்னையென்" என்று தன்னுடைய அநுஷ்டாநத்தைத் தாங்கள் அங்கீகரித்தும் பிறர் நசிப்பர்கள்.

[அநாதரிப்பார் பாகவத வைபவமறியாதார்; அநுஷ்டாநத்தை யங்கீகரிப்பார் நன்று தீது பகுத்துணருமறிவிலாதார். "நிஷித்தாநுஷ்டாநத்தை அங்கீகரிப்பவர்கள் நசிப்பர்களென்றது ஒக்கும்; நிஷித்தாநுஷ்டாநம் செய்கிற இவ்வதிகாரியை அநாதரிப்பார் நசிப்பர்களென்றது ஒக்குமோ? தோஷம் கண்டால் அநாதரிக்கலாகாதோ?" என்னில்; ராஜபுத்திரனுக்கு தோஷமுண்டானால் ராஜா தான் சிக்ஷித்துக்கொள்ளுமத்தனையொழிய, அவனை அநாதரித்தவர்கள்மேலே நிக்ரஹம்பண்ணி தண்டிக்குமாபோலே ஸர்வேச்வராபிமதனான இவனுக்கு தோஷமுண்டானாலும் ஸர்வேச்வரன் தானே திருத்திக்கொள்ளுமதொழிய, பிறர் அநாதரிக்கப் பொறுமையாலே அநாதரித்தவர்களுக்கு விநாசமே பலிக்குமென்றுணர்க. "அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:" என்று உபாஸகன் விஷயத்திலே எம்பெருமானருளிச்செய்கிறபடி கண்டால் எல்லை நிலத்தில் வந்துநின்ற இவ்வதிகாரிவிஷயத்தில் அவனிருக்கும்படி சொல்லவேணுமோ? ஆகையால் இப்படி தானும் பிறரும் நசிக்கும்படி யிருக்கையாலே இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் பரித்யாஜ்ய மென்றதாயிற்று.] .... .... .... ... ... (454)

**455. விஹிதபோகம் நிஷித்தபோகம்போலே லோக விருத்தமுமன்று; நரகஹேதுவுமன்று; ஆயிருக்கச்செய்தே ஸ்வரூபவிருத்தமுமாய் வேதாந்தவிருத்தமுமாய் ப்ராப்யப்ரதிபந்தகமுமாய் இருக்கையாலே த்யாஜ்யம். 75**

455. இப்படி பரதாராதிபோகம் சாஸ்த்ர நிஷித்தமாகையாலன்றோ தனக்கும் பிறர்க்கும் நாசஹேதுவாகிறது; இங்ஙனன்றிக்கே, சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டுள்ளதேயான ஸ்வதாரபோகத்திற்குக் குறையில்லையேயென்னில்; விசிஷ்ட வேஷவிஷயியான சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டுள்ள ஸ்வதாரபோகம் அப்படிப் பட்ட சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்டுள்ள பரதாரபோகம்போலே லோக விருத்தமுமன்று, எரியெழுகின்ற செம்பினுலியன்ற பாவையைத் தழுவுகை முதலான கோரதுக்காநுபவம் பண்ணும் நரகத்திற்கு ஹேதுவுமன்று; ஆனாலும், அநந்யபோகத்வருபமான ஸ்வரூபத்துக்கு விருத்தமுமாய் "சாந்தோ தாந்த உபரத ஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பச்யேத்" (ப்ருஹதாரண்யக உபநிஷத்து 6-4) இத்யாதிகளாலும் மந்த்ராதிகளாலும் உபாஸகனோடு ப்ரபந்நனோடு வாசியற இருவர்க்கும் விஷயபோகம் ஆகாதென்பதை ப்ரதிபாதிக்கிற வேதாந்தத்துக்கு விருத்தமுமாய், தோஷத்தைக் கண்டும் அப்ராப்தியைக் கண்டும் விஷயபோகத்தை அருவருத்திருக்கிற ஆசார ப்ரதாநரான சிஷ்டர்களாலே ஹேயமென்று நிந்திக்கப்பட்டிருப்பதுமாய், அப்ராப்தவிஷய விரக்தியை உகக்குமவனான ஆசார்யனுடைய முகமலர்த்தியாகிற பேற்றுக்கு ப்ரதிபந்தகமுமாய் இப்படி பல அநர்த்தங்கட்கு ஆகரமாயிருக்கையாலே இவ்வதிகாரிக்கு ஸ்வதார போகமும் பரித்யாஜ்யம். ... ... ... ... (455)

**456. போக்யதாபுத்திகுலைந்து தர்மபுத்த்யா ப்ரவர்த்தித்தாலும் ஸ்வரூபம் குலையும். 76**

456. போக்யதா புத்தியைவிட்டு தர்மபுத்தியாலே ப்ரவர்த்திக்குமளவில் இவை யொன்றுமில்லையே யென்னில்; ஸ்வதாரபோகத்தில் காமப்ரயுக்தமான போக்யதா புத்தியைவிட்டு உபாஸகரான மஹர்ஷிகள் முதலான சிஷ்டர்கள் பித்ருக்களின் கடனைத் தொலைக்கவல்ல ப்ரஜோத்பத்திக்காகவும், ஸ்நாநதினத்தில் போகம் பண்ணுவிடில் ப்ருணஹத்யாதி தோஷம் உண்டாகுமேயென்று அஞ்சியும் தர்மபுத்தியாலே ப்ரவர்த்திப்பதுபோலே இவ்வதிகாரியும் அப்படி தர்மபுத்தியாலே ப்ரவர்த்தித்தாலும் ஸித்த தர்ம நிஷ்டனான இவனுக்கு வேறு தர்மங்களில் அந்வயம் விரோதியாகையாலே அநந்யோபாயத்வருபமான ஸ்வரூபம் குலையும். [இத்தால்—போக்யதா புத்தியுடன் ப்ரவர்த்தித்தால் அநந்ய போகத்வருபமான ஸ்வரூபம் குலைவதுபோல, தர்ம புத்தியால் ப்ரவர்த்திக்கில் அநந்யோபாயத்வருபமான ஸ்வரூபம் குலையுமான பின்பு, இவ்வதிகாரிக்கு ஒருவிதத்தாலும் ஸ்வதார போகம் கூடாதென்றதாயிற்று. ... ... ... (456)

**457. "க்ஷேத்ராணி மித்ராணி" என்கிற ச்லோகத்திலவஸ்தை பிறக்கவேணும் ஸ்வரூபம் குலையாமைக்கு. 77**

457. இப்படி ஸ்வரூபஹாநி விளையுமென்கிற பயத்தாலே விடுகிறவளவு போராது; ப்ராப்த விஷயத்தில் ப்ராவண்யத்தாலே ப்ராக்ருதங்களான போக்ய வஸ்துக்களெல்லாம் ப்ரதிகூலமாய்த் தோற்றுமவஸ்தை பிறக்கவும் வேணும் ஸ்வரூபம் குலையாமைக்கு. அது *க்ஷேத்ராணி மித்ராணி* என்கிற ஹஸ்திகிரி மஹாத்ம்ய ச்லோகத்தில் காணத்தக்கது. ... .... ... (457)

458. ப்ராப்யபூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்யபூமியில் ஜிஹாஸையும் அநுபவாலாபத்தில் ஆத்மதாரணயோக்யதையும், உபாய சதுஷ்டயத்துக்கும் வேணும். 78

458. தனக்கு வகுத்த சேஷியான விஷயம் எழுந்தருளியிருக்கிற தேசத்தைக் கிட்டியல்லது தரியாதபடியான அளவுகடந்த ஆசையும், அவ்விஷயத்தை அகன்றிருக்கைக்குடலான விடத்தைவிட்டே நிற்கவேணுமென்னும் விருப்பமும், ப்ராப்த சேஷியினுடைய திருமேனி முதலியவற்றின் அநுபவம் பெறுதபோது தரிக்கமாட்டாதிருக்கையும் உபாய சதுஷ்டயாதிகாரிகளுக்கும் தங்கள் தங்கள் அதிகாரத்துக்குத் தகுதியாக உண்டாகவேணும். உபாயசதுஷ்டயமாவது—பக்தி, ப்ரபத்தி, ஆசார்ய விஷயத்தில் ஸ்வகதஸ்வீகார, பரகதஸ்வீகாரங்கள்.] (458)

459. "பழுதாகாதொன்றறிந்தேன்" என்கிற பாட்டை பூர்வோபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது. 79

459. "பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான் பாதம், வழுவாவகை நினைந்து வைகல்—தொழுவாரைக் கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்தவினை கெடுத்து விண்திறந்து வீற்றிருப்பார் மிக்கு" (நான்முகன் திருவந்தாதி—89) என்று திருமழிசைப் பிரானருளிச்செய்த பாசுரத்தை ஆசார்ய விஷயத்தில் ஸ்வகதஸ்வீகாரமாகிற உபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது. இத்தால் ஆசார்யனைத்தான் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பமாய் அவத்யகரமா யிருந்ததேயாகிலும் பலன் கைபுகுவதில் பழுதுபோகாதென்பது சொல்லிற்றுயிற்று. "குரூண யோऽபிமந்யேத குரும் வா யோऽபிமந்யதே, தாவுபௌ பரமாம்ஸித்திம் நியமாதுபகச்சத;" என்று பரகதஸ்வீகாரம்போலே ஸ்வகதஸ்வீகாரமும் பலனைக் கொடுப்பதில் தப்பாதென்று பரத்வாஜ ஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டது. ... ... (459)

460. "நல்லவென் தோழீ" "மாருய தானவனை" என்கிற பாட்டுக்களையும் ஸ்தோத்ரத்தில் முடிந்த ச்லோகத்தையும் "பசுர்மநுஷ்ய:" என்கிற ச்லோகத்தையும் இதுக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது. 80

460. ஆசார்யன் தானுகவே விஷயீகரிக்கப் பெறுகையாகிற பரகதஸ்வீகாரமென்னும் பரமோபாயத்துக்கு ப்ரமாணங்கள் எவையென்னில்; "நல்லவென்தோழீ நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென், வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்ல பரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே" (நாச்சியார் திருமொழி 10-10) என்கிற நாச்சியார் பாசுரமும், "மாருயதானவனை வள்ளுகிரால் மார்விரண்டு கூறுகக் கீறிய கோளரியை, வேருக ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்" (நான்

முகன் திருவந்தாதி 18) என்கிற திருமழிசைப்பிரான் பாசுரமும், "பிதாமஹம் நாத முநீம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா" (ஆளவந்தார் ஸ்தோத்ரம் 65) என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியும், "பசுர் மநுஷ்ய: பக்ஷீவா யேச வைஷ்ணவ ஸம்ச்ரயா:, தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம் பதம்" என்கிற பௌராணிக ச்லோகமும் ப்ரமாணமாக அநுஸந்தேயங்கள். ... .... (460)

461. ஆசார்யாபிமானந்தான் ப்ரபத்திபோலே உபாயாந்தரங்களுக்கு அங்கமுமாய் ஸ்வதந்த்ரமுமாயிருக்கும். 81

461. ஏதேனுமொரு வித்யையைப் பற்றுமவனுக்கும் அதுக்கு ஆசார்யோபதேசம் வேண்டுகையாலே ஆசார்யாபிமாநமென்பது ஸகலோபாயங்களுக்கும் அங்கமாயிருக்க "தேநைவ தே ப்ரயாஸ்யந்தி" என்று ஸ்வதந்த்ரோபாயமாகச் சொல்லுவானென்? என்னில்; ப்ரபத்தியானது கர்மஜ்ஞாந பக்திகளாகிற உபாயாந்தரங்களுச்கு அங்கமுமாய், மற்ற உபாயங்களை யொழிந்து தன்னையே உபாயமாகக் கொள்ளுமளவில் அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்ட ப்ராப்திக்கும் தானே நிர்வாஹகமாய்க்கொண்டு ஸ்வதந்த்ரமுமாயிருப்பது போலே ஆசார்யாபிமாநமாகிற விதுவும்—ஏதேனுமொரு உபாயத்துக்கும் ஆசார்யோபதேசம் ஆவச்யகமாகையாலே அவ்வழியால் உபாயாந்தரங்களுக்கு அங்கமாயிருந்ததே யாகிலும் 'பாலமூக ஜடாந்தாச்ச பங்கவோ பதிராஸ் ததா, ஸதாசார்யேண ஸந்த்ருஷ்டா: ப்ராப்நுவந்தி பராங்கதிம்" இத்யாதிப்படியே தானே உத்தாரகமாகையாலே ஸ்வதந்த்ரோபாயமுமா யிருக்கும். ... (461)

462. பக்தியிலசக்தனுக்குப் ப்ரபத்தி; ப்ரபத்தியிலசக்தனுக்கு இது. 8

462. இப்படி ஸ்வதந்த்ரமான இவ்வுபாயத்துக்கு அதிகாரி ஆரென்னில்;—பக்தி துஷ்கரமென்றும் ஸ்வரூப விருத்தமென்றும் அறுதியிட்டு அவ்வுபாயத்தில் கைவாங்கினவனுக்கு ப்ரபத்தி; அந்த ப்ரபத்திதன்னிலும் மஹா விச்வாஸமுண்டாகை அரிதாகையாலும் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான ஈச்வரஸ்வாதந்திரிய பயத்தாலும் தியங்கினவனுக்கு இவ்வுபாயம். ... .... (462)

463. இது ப்ரதமம் ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும், பின்பு புஷ்பிதமாக்கும், அநந்தரம் பலபர்யந்தமாக்கும். 83

463. இப்படி கீழ்ச்சொன்ன ஆசார்யாபிமாந மாகிறவிது ஸ்வரூபத்தை முதலிலே துளிர்க்கச்செய்து பின்பு புஷ்பிதமாக்கி அநந்தரம் பலபர்யந்தமாக்கும்—அதாவது முதலில் பகவத் விஷயத்திலே அந்வயிப்பித்து, நெடுநாளாக பகவத் விஷயத்தில் அந்வயமில்லா திருந்ததனாலே "வாடினேன்" என்னும்படி உருவிக்கிடந்த ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும்; பின்பு பாகவத விஷயத்திலே ஊன்றுவித்து பலாந்வய யோக்யமாக்குகையாலே பல்லவிதமாயிருந்த வதனைப் புஷ்பிதமாக்கும். அநந்தரம் "நின்று தன்புகழேத்த" என்கிறபடியே சரமபர்வத்திலே நிலைபெறுத்திப் பலபர்யந்தமாக்கும்.

ஆக, ஸதாசார்யாபிமாநமே அனைவர்க்கும் உத்தாரகமென்னுமிடம் சொல்லப்பட்டதாயிற்று. த்வயத்தில் இரண்டு வாக்கியங்களாலும் சொல்லப்பட்ட உபாயோபேயங்களின் சரமாவதி சொல்லித் தலைக்கட்டிற்றுயிற்று. ... *

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

ஸ்ரீவசநபூஷண தாத்பர்யஸாரம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.







ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

அண்ணபுகழ்முடும்பை அழகிய மணவாளப்பெருமான் நாயனுர்
அருளிச்செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்

---

விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளருளிச்செய்த வியாக்கியானத்தைத் தழுவி ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய பதவுரையுடனும் தாத்பர்யஸாரத்துடனும்

நான்காவது பதிப்பு

மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு நிறைவு நினைவு
மலர்களுள் பதின்முன்ருவது மலர்


கிடைக்குமிடம்:—1. க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.
2. 213, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை, ஜி.டி.

சென்னை ரத்னம் ப்ராஞ்சு அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை ரூ. 8—00

1972

ஸ்ரீ:

# ஆசார்யஹ்ருதயத்தைப்பற்றின விண்ணப்பம்

---

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு அணிவிளக்காக அவதரித்துள்ள அநேக க்ரந்தங்களுள் ஆசார்ய ஹ்ருதயமென்னும் க்ரந்தத்தின் அருமை பெருமைகள் அளவிட்டுச் சொல்ல முடியாதவை. வேதம் போலே இந்த திவ்யக்ரந்தமும் ஸ்வயம் வ்யக்த ப்ராதுர்ப்பாவவிசேஷம் என்றே சொல்லலாம்படி யிராநின்றது. அறிவிற் சிறந்த ஆரியர்கள் அனுபவித்தே அறிய வேண்டியதான இதன் பெருமையை அறிவிலியான அடியேன் எடுத்துரைக்கப் புகுவது அபஹாஸ்யமாகும்,

இந்த நாடறிய மாறன்மறைப்பொருளை நன்குரைத்த ஈடுமுப்பத்தாறுயிரமென்று ஸுப்ரஸித்தமான பகவத்விஷய மஹா க்ரந்தத்தை அருளிச்செய்தவரான வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு இரண்டு திருக்குமாரர்கள்; பிள்ளை லோகாசாரியர் மூத்தவர்; அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் இளையவர். இவ்விருவரும் நைஷ்டிக ப்ரஹ்மசாரிகளென்று பெரியோர் பணிப்பர். இவ்விரண்டு ஆசார்ய சிகாமணிகளும் நம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்குச் செய்தருளின பேருதவிகளைச் சொலப்புகில் வாயமுதம் பரக்கும், இருவினை பற்றறவோடும்.

ஸ்ரீவசனபூஷணம் முதலிய அஷ்டாதச ரஹஸ்யக்ரந்தங்கள் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தவை ஸுப்ரஸித்தங்கள். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்தவை—திருப்பாவைக்கு ஆருயிரப்படி வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம், பட்டோலை, அருளிச்செயல் ரஹஸ்யம் ஆசார்ய ஹ்ருதயம் முதலியன,

இவற்றுள் ஆசார்ய ஹ்ருதயம் பலபடியாலும் ஒப்புயர்வற்றது. வைதிக ஸந்தானத்துக்கு ப்ரதமாசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக்கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே இது தனக்கு ஆசார்ய ஹ்ருதயமென்று திருநாமமாயிற்று. ஸகல ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வா ரருளிச்செயல்களும் அவற்றின் வியாக்கியானங்களும் எல்லாம் ஒருங்கே திரண்டு இவ்வாசார்ய ஹ்ருதயக்ரந்தமாக வடிவெடுத்த தென்றால் இது இறையும் அதிசயோக்தியாகாது. இதின் அர்த்தங்களை ஆழ்ந்து அறிந்து அநுபவித்து ஆனந்திப்பதென்பது ஒருபுறமிருக்கட்டும்; மூலமாகிய சொல் தொடைகளை மாத்திரம் கண்டபாடமாக்கி அநுஸந்தித்தால் அதன் இனிமையே அப்ரமேயமானது. 'செவிக்கினிய செஞ்சொல்' என்பது இதற்கே மிகத்தகும்.

இதனைக் கண்டபாடமாக்கி அநுஸந்தித்துவரும் முறைமை ஆழ்வார்திருநகரி வானமாமலை ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பிராந்தங்களில் விசேஷமாக வுள்ளதேயன்றி மற்ற விடங்களில் அவ்வளவு சிறப்பாகக் காணவில்லை. முமுக்ஷுப்படி ஸ்ரீவசநபூஷணம் முதலிய ரஹஸ்யங்களின் ப்ரசாரமே அரிதான விடங்களில் ஆசார்ய ஹ்ருதயத்தின் ப்ரசாரம் அருமையுற்றிருக்கின்றதென்றால் இதில் வியப்பொன்றுமில்லை.

உபய வேதாந்த ரஹஸ்யக்ரந்த காலக்ஷேபங்களை நிர்வஹிக்கும் பெரியோர்களும் ஆசார்ய ஹ்ருதயத்தில் வந்தவாறே சிரமப்படவேண்டிய நிலைமையைப் பெரும்பாலும் காணாநின்றோம். வடமொழி தென்மொழிக்கடல்களில் பரிபூர்ணமான அவகாஹநமுள்ளவர்க்கன்றி மற்றையோர்க்கு இந்த அரும்பெரும் பிரபந்தம் நிலமாவது அரிதே; ரஸிக்கவும் மாட்டாது.

இந்த க்ரந்தத்தை வியாக்கியானத்துடன் பலகால் ஸேவித்துப் பன்முறை பிரவசனம் செய்தருளின மஹான்களுள்ளும் மூலத்தின் பொருளை முகஸ்தமாகச் சொல்லவல்லவர்கள் மிகச் சிலரே யிருக்கக்கூடும். "ஒரொருவருண்டாகி லத்தனைகாண்."

மூலத்தைக் கண்டபாடம் செய்திருக்கின்ற பலரையும் அடியேன் பரீக்ஷித்துப் பார்த்திருக்கிறேன்; நெடுநாளைக்கு முன்பு அச்சிட்டிருக்கிற மூலப்பதிப்புகளில் காண்கிற அபத்தங்களெல்லாம் அவர்களது கண்ட பாடத்திலும் பெரும்பாலும் அப்படியே யுள்ளனவென்று கண்டேன். வியாக்கியானத்திற்கு இணங்கப் பாடங்களை சுத்தமாக அடியேன் நாலைந்து பதிப்புகள் வெளியிட்டிருக்கிறேன்.

இந்த திவ்யக்ரந்தத்திற்கு மணவாள மாமுனிகள் இட்டருளின வியாக்கியானம் அமுதிலுமாற்ற வினிது. அதனுடைய பரம போக்யதையை ஸர்வஜ்ஞர்களன்றோ கொண்டாட வேண்டும். உலகில் வியாக்கியானங்களருளிச் செய்த ஆசிரியர்கள் பலருளரெனினும் அவர்களுடைய வியாக்கியானங்களிலே பலவகையான க்லேசங்களை யநுபவியா நின்றோம். அப்படி ஒருவிதமான குறையும் கூறுதற்கிடமின்றியே ஒருவகையான க்லேசத்தையுங் கொடாதே ஸ்வச்ச கங்காப்ரவாஹமென்னவமைந்த வியாக்கியானம் மணவாள மாமுனிகளுடையதேயாம். ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் மிகத் தெளிவாகத் திருவுள்ளத்திலடக்கிக் கொண்டிருந்து தேனும் பாலுங் கன்னலுமமுதுமான ஸ்ரீஸூக்திகளைத் தொடுக்குந்திறன் மாமுனிகளொருவர்க்கே அஸாதாரணமாகும்.

அந்த வியாக்கியானம் காலக்ஷேப முறையிலேயே பலகால் அதிகரித்து அறிய வேண்டியதா யிருப்பதாலும் ஸம்ஸ்க்ருத வாக்ய பஹுளமாயிருப்பதாலும் ஸுகுமாரமதிகளுக்கு இந்த க்ரந்தத்தின் அர்த்த விசேஷங்களும் தாற்பரியமும் எளிதிலுணரலாம்படி செய்யவேணுமென்கிற விருப்பங் கொண்ட அடியேன் விரிவான ஒரு உரையும் ஸங்க்ரஹமானதொரு தாத்பர்ய ஸாரமும் எழுதினேன். விரிவுரை ஏற்கெனவே ஸ்ரீமுக வருஷத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டிருந்தது. அதற்கு இது மறுபதிப்பு. சுருக்கமான தாத்பர்ய ஸாரம் தனியே சிறுபுத்தகமாக வெளிவந்துளது. பழைய பதிப்புக்களொதுவும் இப்போது கிடைக்கமாட்டா.

எவ்வளவு எளிமைப்படுத்தி யெழுத நினைத்தாலும் விஷயங்கள் கனத்தவையாதலால் அவை எளிமைப்படுத்த வொண்ணாதவையாகவே யிருக்கின்றன. சில விடங்களிலே கஹனமாகவே தோன்றும். நல்லாசிரியர்களிடத்தில் நேரில் கேட்டே நன்குணரவேண்டிய விஷயங்களை நாம் எவ்வளவு எளியனவாக எழுதினாலும் பரிபூர்ண பலன் விளைவது அரிதே. பலகால் கேட்டே அறியவேண்டுமத்தனை. ஆனாலும், மிகுந்த ஆஸ்தையோடு ஊன்றிப் பார்க்குமவர்களுக்கு இத்தாத்பர்ய ஸாரமும் பதவுரையும் பெரும்பாலும் பயன்படுமென்று கருதுகின்றேன்.

மிகவுயர்ந்த இந்த திவ்ய க்ரந்தத்தின் ஆழ் பொருளையும் அரிய பெரிய கருத்தையும் அடியேனும் நன்கறியாதவனாயிருக்க, பிறர்களுக்கறிவிக்கப் பெருமுயற்சி கொண்டது உண்மையில் தகுதியற்றதே. இது ஸ்வரூப ப்ராப்தமான நைச்யாநுஸந்தானப் பேச்சன்று; உண்மையுரை. ஆயினும் இந்த திவ்ய க்ரந்தத்தில் அடியேனுக்குண்டான வ்யாமோஹம் அளவிறந்ததாதலால் அது படுத்துகிற பாடிது என்று உண்மைகாண்க

இங்ஙனம்:

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசார்ய தாஸன்.**

ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# ஆசார்யஹ்ருதயத் தனியன்கள்

---

[ஸ்ரீசைலேசேத்யாதி - ப்ரணதோஸ்மிநித்யம்.]

ஆசார்யஸ்வாந்தவக்தாரம் அபிராமவராபிதம்
ஸ்ரீ க்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்.

த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வக்ரமாகதம்
ரம்யஜாமாத்ருதேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா.

பணவாளரவணைப் பள்ளிபயில்பவற் கெவ்வுயிரும்
குணபோகமென்று குருகைக்கதிப னுரைத்ததுய்ய
உணர்பாவினுட்பொரு ளொன்றுமறியா வுலகறிய
மணவாளன் மாறன்மனமுரைத்தான் வண்முடும்பைவந்தே.

மாதவத்தோன் மாறன்மனங்கூறும் மணவாளன்
தோதவத்தித் தூய்மறையோ ரானபெற்ருர்—நீதியினுல்
ஆங்கவர்தாள் சேர்பெற்ரு ராயிமணவாளமுனி
பூங்கமலத்தாள்கள் நெஞ்சே போற்று.

---

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் தொகுத்தெழுதிய

# ஆசார்யஹ்ருதயப்பதவுரைதாத்பர்யஸாரங்களின் அவதாரிகை.

ஆத்மாக்களனைவரும் நித்யஸூரிகளைப்போலே மலர்ந்த ஞானத்தையுடைய ராய் எம்பெருமானுக்கு * ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்து * பேரின்ப வெள்ளத்தில் மூழ்கியிருக்கவேண்டிய யோக்யதைக்கு இட்டுப் பிறந்துவைத்தும் அநாதியான மாயையினால் மறைக்கப்பட்டவர்களாய் அவித்யை யினாலே நேர்ந்த புண்ய பாப ரூப கருமங்களுக்கு ஏற்பப் பலவகைப்பட்ட யோநிக ளில் மாறிமாறிப் பிறந்து வருந்திக்கிடக்க, அவர்கள் நல்வழிதெரிந்து உஜ்ஜீவிக் கும்பொருட்டு எம்பெருமான் தானே பல அவதாரங்கள் செய்தருளியும் வேதம் ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் முதலிய பல சாஸ்திரங்களை உபகரித்தருளியும் ஸம்ஸாரிகள் திருந்தக் காணுமையாலே அவர்களுக்கு ஸஜாதீயர்களாயிருப்பாரைக் கொண்டே திருத்தவேணுமென்று பார்த்து அதற்கு உரிய ஒருவரை உண்டாக்க வேணுமென்று கருதித் தன்னுடைய நிர்ஹேதுக ப்ரஸாதத்தாலே எங்கும் பார்த்து

இலக்குக்காணுமல் வாராநிற்க, அந்தப் பார்வை தனக்குப் பள்ளமடையான தென் திசையிலே யானவளவிலே, "மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து" என்று தாமே அருளிச்செய்தபடி ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப் போரு கிற நம்மாழ்வார்மேலேபட, அந்த நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே திவ்யஜ்ஞாந பக்திகளைப்பெற்ற ஆழ்வார் அந்த எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை நன்ருக அநுபவித்துக்கொண்டிருக்க, அவ்வநுபவம் உள்ளடங்காமல் பாசுரங்களாகப் புறம்பே வழிந்து ஸர்வலக்ஷண ஸம்பந்நமான திவ்ய ப்ரபந்தமாய்த் தலைக்கட்டிற்று.

அப்படிப்பட்ட திவ்யப்பிரபந்தமாகிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்களுள் ஸ்கலார்த்த புஷ்கலமும் ஸாமவேதஸாரமுமான திருவாய்மொழியின் பாசுரங்களின் அர்த்த விசேஷங்களை வெளியிடுவதற்கு ஆருயிரப்படி முதலிய பல வியாக்கியானங்கள் திருவவதரித்திருந்தாலும், ஆழ்வாருடைய பெருமையையும் அருளிச்செயல்களின் சீர்மையையும் திருவாய்மொழியின் ஒப்புயர்வற்ற சிறப்பையும் இதுதன்னில் ஸாரமாகக் குறிக்கொள்ளவேண்டிய அபூர்வமான பலபல ஸ்வாபதேசார்த்தங்களையும் விசேஷார்த்தங்களையும் விளக்கியருளத் திருவுள்ளம்பற்றி, நம்பிள்ளைதிருவடிகளில் நிழலும் அடிதாறுமாயிருந்த வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரரும் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியாருமான அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் **ஆசார்யஹ்ருதயம்** என்கிற அற்புதமான திவ்ய க்ரந்தத்தை அருளிச்செய்தருளினுர்.

வைதிக ஸந்தாநத்திற்கு ப்ரதம ஆசார்யரான ஆழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துகளைத் தெளிய வெளியிடுகையாலே இதுதனக்கு ஆசார்யஹ்ருதயமென்று திருநாமமாயிற்று.

இப் பிரபந்தத்தில் இவரருளிச்செய்கிற வாக்கியங்களெல்லாம் பெரும்பாலும் அருளிச்செயல் சந்தைகளைச் சேர்த்தே தொகுத்ததாயிருக்கும். இவ்வுலகில் எத்தனையோ பிரபந்தங்கள் அவதரித்திருந்தாலும் சொல்தொடையிலும் பொருள் நடையிலும் இதனையொத்த பிரபந்தம் இதுவேதான் என்னலாமத்தனையொழிய இதுபோன்ற வேறொரு க்ரந்தமும் அவதரித்திலது.

ஸகல ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வாரருளிச்செயல்களும் அருளிச்செயல்களின் வியாக்கியான்ங்களும் ஆசார்யர்களின் ஸ்தோத்ர ஸூக்திகளுமெல்லாம் ஒருங்கே திரண்டு இவ்வாசார்யஹ்ருதய ப்ரபந்தமாக வடிவெடுத்த தென்றுல் மிகையாகாது.

இதில் அர்த்தத்திற்காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனிதாயிருக்கும். இதனை ஆழ்ந்து அநுபவிக்கும்படியான பாக்கியம் வாய்ந்தவர்கள் இத்தையொழிய வேறென்றுலும் காலக்ஷேபம்பண்ணக் கருதார்கள். இதனை அறியக்கற்று வல்லாரானவர்கள் ஸர்வஜ்ஞர் என்னும் சிறப்புப்பெயர் பெறுதற்கு உரியராவர்.

**முக்கியமானதோர் விண்ணப்பம்.**

இந்த ஆசார்யஹ்ருதயத்திற்குப் பதவுரை (அதாவது பிரதிபதார்த்தம்) மிகவும் முக்கியமானது. அது இதுகாறும் சுத்தமாகவும் விளக்கமாகவும் வெளிவரவில்லை. இதற்கு முந்தின பதிப்பில் அக்குறையைத் தீர்த்தேன். இப்பதிப்பிலும் அப்பதவுரை சேர்க்கப்படுகிறது.

இங்ஙனம் :

ஸ்ரீவைஷ்ணவதாஸன்,

**அண்ணங்கராசார்ய தாஸன்.**

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளேசரணம்

## அன்னபுகழ் முடும்பை அழகியமணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த

# ஆசார்யஹ்ருதயம்

(மூலம்) 1. காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தாவேத விளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்த துளக்கமில்விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினா லருள்செய்தான்.

பதவுரை.

(எம்பெருமான் ஸம்ஸாரிகளுக்கு சாஸ்திரங்களை உதவினன் என்பது)

1. அறிவிலா மனிசர்—*அறிவிலாமனிசரெல்லாம்* என்னப்பட்ட அறிவிலிகளான ஸம்ஸாரிகள்,

உணர்வென்னும் சுடர் விளக்கு ஏற்றி—[உணர்வென்னும் விளக்கு, சுடர் விளக்கு ஏற்றி—என்று யோஜிப்பது.] * உய்த்துணர்வென்னு மொளிகொள்விளக்கேற்றி * என்றும், * ஞானச்சுடர் விளக்கேற்றினேன் * என்றும் சொல்லுகிற ஞானமாகிற உஜ்வல தீபத்தையேற்றி, அதனால்,

பிறங்கிருள் நீங்கி— * பிறங்கிருள் நிறங்கெட * என்றும் * பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க* என்றும் சொல்லுகிறபடியே மிகுந்த அஜ்ஞானந்தகாரம் தொலையப் பெற்று,

மேலிருந்த நந்தா வேத விளக்கைக் கண்டு—[மேலிருந்த விளக்கை, நந்தா விளக்கை, வேத விளக்கை—என்று யோஜிப்பது.] * வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு * என்றும் * நந்தா விளக்கு * என்றும் * மிக்கஞான மூர்த்தியாய வேதவிளக்கு * என்றும் விளக்காகச் சொல்லப்படுகிற தன்னை, * என் தக்க ஞானக் கண்களாலே கண்டு * என்கிறபடியே ஞானக்கண்ணாலே பார்த்து,

நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு—* இவை யன்றே நல்ல இவை யன்றே தீய* என்கிற நல்லது தீயதுகளை * ஸதஸதீ ச விவேக்தும் * என்கிறபடியே பகுத்தறிவதற்காக,

மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின—[மறையாய் விரிந்த விளக்கில், துளக்கமில் விளக்கில்—என்று யோஜிப்பது.] * மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை * என்றும் * துளக்கமில் விளக்கமாய் * என்றும் விளக்காகச் சொல்லுகிற அகாரத்தில் நின்று முண்டானதாய்,

ப்ரதீபமான கலைகளை—* மாநம் ப்ரதீபமிவ * என்கிறபடியே தீபாதுத்பந்நமான ப்ரதீபம் போலேயான * பன்னுகலை நால்வேதம் * என்றும் * கலைகளும் வேதமும் நீதிநூலும் * என்றும் சொல்லப்படுகிற வேதங்களும் அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களுமான சாஸ்த்ரங்களை,

காருணிகனான ஸர்வேச்வரன் நீர்மையினாலருள் செய்தான்—* காருணிகோ ததாதி * என்று சொல்லப்பட்ட காருணிகனான எம்பெருமான் * வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து* என்கிறபடியே இயற்கையின்னருளால் கொடுத்தான்.(1)

(தாத்பர்யம்) 1. பேரருளாளனான பரமபுருஷன், விவேகமற்ற ஸம்ஸாரிகள் ஞானமாகிற சுடர் விளக்கையுடையவர்களாய் அதனால் அஜ்ஞானவிருள் நீங்கப் பெற்று வேதாந்தங்களில் விளங்கும் விளக்கான தன்னை [பகவானை], தக்க ஞானக் கண்களாலே கண்டு நல்லது தீயதுகளைப் பகுத்துணர்வதற்காக [அதாவது 'பகவத் விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது' என்று விவேகம் பெறுவதற்காக] வேதமனைத்துக்கும் வித்தாகிய அகாரத்தில் நின்றும் தோன்றியவையாய், சிறு விளக்கில் நின்றுந் தோன்றின பெருவிளக்குப் போலேயான வேதங்களை வெளியிட்டருளினன். ... (1)

## (மூலம்) 2. விவேகபலம் வீடுபற்று.

### (அந்த விவேகத்திற்கு இன்னது பயன் என்பது)

(ப.) 2. விவேக பலம்—நல்லதும் தீயதும் பகுத்தறிவதற்குப் பலன் ஏதென்றால், வீடு பற்று—* வீடுமின் முற்றவும் * என்றும் * அற்றிறை பற்றே * என்றும் சொல்லுகிறபடியே த்யாஜ்யத்தை விடுகையும் உபாதேயத்தைப் பற்றுகையுமாம். 2

(தா.) 2. 'நல்லது தீயதுகளைப் பகுத்துணர்வதற்காக' என்று கீழ்ச் சொல்லப்பட்டது; அந்தப் பகுத்துணர்வுக்கு என்ன பயன்? என்னில், விடவேண்டியவற்றை விடுகையும் பற்ற வேண்டியவற்றைப் பற்றுகையுமே பயன். இதற்காகவே சாஸ்த்ரப்ரதான மென்றபடி. ... .... ... (2)

## (மூலம்) 3. த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுக்கங்கள்.

### (ஹேயம் இன்னது உபாதேயம் இன்னது என்பது)

(ப.) 3. த்யாஜ்யோபாதேயங்கள்—த்யாஜ்யம் எது? உபாதேயம் எது? என்னில், ஸுகதுக்கங்கள்—துக்கம் த்யாஜ்யம், ஸுகம் உபாதேயம். ... (3)

(தா.) 3. வெறுக்கத்தக்கது எது? விரும்பத்தக்கது எது? என்னில்; உலகில் ஒவ்வொருவரும் 'எனக்கு ஸுகமுண்டாகவேணும்; துக்கம் உண்டாகலாகாது' என்றிருக்கிறபடியால் அனைவர்க்கும் ஸுகம் இஷ்டமாய் துக்கம் அநிஷ்டமாகையாலே, ஸுகம் உபாதேயம், துக்கம் த்யாஜ்யம் என்று கொள்ளக்கடவது.(3)

(மூ.) 4. இவற்றுக்கெல்லை இன்புதுன்பளி பன்மாமாயத்தழுந்துகையும் களிப்புங் கவர்வுமற்றுப் பேரின்பத்தின்புறுகையும்.

(ஸுகதுக்கங்களின் எல்லை)

4. இவற்றுக்கு எல்லை—இந்த ஸுகதுக்கங்களுக்கு எல்லை யெது வென்னில், இன்பு துன்பளி பன்மாமாயத்தழுந்துகை—* ஓஓ! உலகின தியல்வே...இன்பு துன்பளி, பன்மாமாயத் தழுந்துமா நளிர்ந்தே * என்கிறபடியே இன்பதுன்பங்களை யளிக்குமவையாய் பலவகைப்பட்டவையான சப்தாதி விஷயங்களிலே அகப்பட்டு ஸம்ஸாரத்திலே அழுந்துகை துக்கத்துக்குப் பரமாவதி

களிப்புங் கவர்வு மற்றுப் பேரின்பத்து இன்புறுகை—* களிப்புங்கவர்வுமற்று * என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே க்ஷுத்ரவிஷயலாபத்தாலே வரும் கர்வமும் அதன் இழவாலே வரும் க்லேசமும் கழிந்து, * அந்தமில்பேரின்பத்து * என்கிற படியே அபரிமித ஆனந்தமயமான பரமபதத்திலே, *சூழ்பட்டோடுஞ்சுடர்ச் சோதி வெள்ளத்தின்புற்று * என்கிறபடியே ஆநந்தநிர்ப்பரனாயிருக்கை ஸுகத்துக்குப் பரமாவதி. ... ... ... ... ... (4)

(தா.) 4. 'இதற்கு மேற்பட்ட துக்கமில்லை' என்னும்படியாய் சரமாவதி யான துக்கமும், 'இதற்கு மேற்பட்ட ஸுகமில்லை' என்னும்படியாய் சரமாவதியான ஸுகமும் இன்னதென்று தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். துக்கத்திற்கு எது எல்லை யென்னில்; * இன்னமுதெனத் தோன்றி எப்படிப்பட்ட அறிவுடையாரை யும் கலங்கப்பண்ணும் சப்தாதி விஷயங்களிலே அகப்பட்டு ஸம்ஸாரத்திலே அழுந்துகைக்கு மேற்பட்ட துக்கமில்லாமையாலே இதுவே துக்கங்களுக்கு முடி வான எல்லை; ஸுகத்திற்குப் பரமாவதி ஏதென்னில்; * அந்தமில் பேரின்பமான பரமபதத்திலே அடியார்கள் குழாங்களுடன் கூடி இடையறாத பகவதநுபவத் தாலே ஆனந்தமயமாயிருப்பதற்கு மேற்பட்ட ஆநந்தமில்லாமையாலே இதுவே ஸுகத்துக்கு எல்லை என்று கொள்ளக்கடவது. .... ... (4)

(மூ.) 5. அநந்தக்லேசநிரதிசயாநந்த ஹேது—மறந்தே னறியகிலாதே உணர்விலேனேணி லேனயர்த்தென்றும் உய்யும்வகை நின்ற வொன்றை நன்கறிந்தனன் உணர்வி னுள்ளே ஆம்பரிசென்றுஞ் சொல்லுகிற ஜ்ஞாதவ்யபஞ்சகஜ்ஞாநாஜ்ஞாநங்கள்.

(அந்த ஸுகதுக்கங்களுக்கு ஹேது இன்னதென்பது)

(ப.) 5. [அநந்த க்லேச ஹேது - மறந்தே னறியகிலாதே உணர்விலே னேணிலேனயர்த்தென்று சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக அஜ்ஞாநம், நிரதிசயா நந்த ஹேது—உய்யும்வகை நின்றவொன்றை நன்கறிந்தன னுணர்வினுள்ளே ஆம்பரிசென்று சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞானம் - என்று யோஜிப்பது] அநந்த க்லேச நிரதிசயாநந்தஹேது—*அநந்த க்லேச பாஜநம்* என்கிற ஸம்ஸாரப்ரயுக்தமான அநந்த துக்கங்களுக்கு ஹேது எது?; *நிரஸ்தாதிசயாஹ்லாத ஸுகபாவைக லக்ஷணு * என்கிற மோக்ஷப்ரயுக்தமான நிரதிசயாநந்தத்திற்கு ஹேது எது? என்னில்; என்றபடி.

(மறந்தேனித்யாதி.) * மறந்தேனுன்னை முன்னம் * என்கிற பரஸ்வரூப அஜ்ஞானமும், *யானே யென்னையறியகிலாதே* என்கிற ஆத்மஸ்வரூப அஜ்ஞானமும், * ஓடியுமுழன்று முயிர்களே கொன்றேனுணர்விலேன் * என்கிற விரோதிவிஷய அஜ்ஞானமும், * பிறவி நோயறுப்பானேணிலேனிருந்தேன் * என்கிற உபாயவிஷய அஜ்ஞானமும், * ஆழியங்கையம்மானை யேத்தாதயர்த்து * என்கிற புருஷார்த்த விஷய அஜ்ஞானமுமாகிற ஜ்ஞாதவ்யபஞ்சக அஜ்ஞானம்; அர்த்தபஞ்சக ஜ்ஞானமானது, நிரதிசயானந்த ஹேதுவென்கிறது மேல்.

(உய்யும்வகையித்யாதி) * நின்னை நெஞ்சிலுய்யும்வகை யுணர்ந்தேன் * என்கிற பரஸ்வரூப ஜ்ஞானமும், * நின்றவொன்றை யுணர்ந்தேனுக்கு * என்கிற ஆத்மஸ்வரூபஜ்ஞானமும், * அகற்ற நீவைத்த மாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் * என்கிற விரோதிவிஷய ஜ்ஞானமும், * அவனதருளாலுறல் பொருட்டு என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் * என்கிற உபாய விஷய ஜ்ஞானமும் * ஆம்பரிசறிந்து கொண்டு * என்கிற புருஷார்த்த விஷயஜ்ஞானமுமாகிற, ஜ்ஞாதவ்யபஞ்சகஜ்ஞாநம்—அர்த்தபஞ்சக ஜ்ஞானமானது, நிரதிசயாநந்த ஹேது. (5)

(தா.) 5. இப்படிப்பட்ட துக்கமும் ஸுகமும் இவனுக்கு உண்டாகைக்குக் காரணம் ஏதென்னில்; பரஸ்வரூப ஸ்வஸ்வரூப விரோதிஸ்வரூப, உபாயஸ்வரூப, புருஷார்த்த ஸ்வரூபங்களை யறிதலாகிற அர்த்தபஞ்சக ஜ்ஞானமில்லாமை கீழ்ச் சொன்ன எல்லையான துக்கத்திற்குக் காரணமாம். அந்த அர்த்த பஞ்சகஜ்ஞானம் குறையற்றிருத்தல் கீழ்ச்சொன்ன எல்லையான ஸுகத்திற்குக் காரணமாம். ... (5)

(மூ.) 6. இவற்றுக்குக் காரணம் இரண்டிலொன்றினில் ஒன்றுகைகள்.

(அர்த்தபஞ்சகஜ்ஞாநமுண்டாவதற்கும் உண்டாகாவைக்கும் அடி இன்னதென்பது)

(ப.) 6 இவற்றுக்குக்காரணம்—அர்த்த பஞ்சக அஜ்ஞானத்துக்கும் அர்த்த பஞ்சக ஜ்ஞானத்துக்கும் காரணம் ஏதென்னில்; (இரண்டில் ஒன்றுகை, ஒன்றினில் ஒன்றுகை – என்று யோஜிப்பது.) இரண்டில் ஒன்றுகை—*முத்திறத்து வாணியத் திரண்டிலொன்று நீசர்கள் * என்கிற பாசுரத்திற் சொன்ன இரண்டிலொன்றுகையாகிற ரஜோகுணதமோகுண ப்ராசுர்யமானது அர்த்தபஞ்சக அஜ்ஞானத்துக்குக் காரணம்; ஒன்றினில் ஒன்றுகை—* முக்குணத்திரண்டவையகற்றி ஒன்றினிலொன்றி நின்று * என்கிற பாசுரத்திற்சொன்ன ஒன்றினிலொன்றுகையாகிற ஸத்வகுண ப்ராசுர்யம் அர்த்தபஞ்சகஜ்ஞானத்துக்குக் காரணம். (ஒன்றுகை—பொருந்துகை.)

(தா.) 6. ரஜஸ்தமோகுணங்கள் மலிந்திருக்கப்பெறுகையே அர்த்த பஞ்சகஜ்ஞான முண்டாகாமைக்குக் காரணம். ஸத்வகுணப்ராசுர்யமே அர்த்த பஞ்சக ஜ்ஞானத்திற்குக் காரணம். [ரஜஸ்தமோகுணங்கள் அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களுக்கு ஹேதுவாய், ஸத்வகுணம் யதார்த்தஜ்ஞானத்திற்கு ஹேது வாயிருக்கையாலே இப்படிச் சொல்லிற்று.] ... ... ... (6)

(மூ.) 7. ஸத்வாஸத்வநிதாநம் இருள்தருமமலங்களாகவென்னும்
ஜன்ம ஜாயமாநகால கடாக்ஷங்கள்.

(கீழ்ச்சொன்ன குணப்ராசுர்ய வைஷம்யத்திற்கு அடி இன்னதென்பது)

(ப.) 7. (ஸத்வநிதாநம் அமலங்களாகவென்னும் ஜாயமாநகாலகடாக்ஷம்; அஸத்வநிதாநம் இருள்தருமென்னும் ஜன்மம்-என்று யோஜிப்பது.) ஸத்வாஸத்வநிதாநம் — ஸத்வகுண ப்ராசுர்ய முண்டாவதற்கும் ரஜோகுணதமோகுணப்ராசுர்யமுண்டாவற்கும் காரணமேதென்னில் ;

இருள்தருமென்னும் ஜன்மம் — * இருள் தருமா ஞாலத்துளினிப்பிறவி * என்கிற அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் ஜன்மம் ஸத்வேதரங்களான ரஜஸ்தமஸ்ஸுக்களுக்கு நிதானம் ;

அமலங்களாகவென்னும் ஜாயமாநகாலகடாக்ஷம் — * அவன்கண்களாலே அமலங்களாக விழிக்கும் * என்கிற ஜாயமாநகாலத்திய பகவத்கடாக்ஷம் ஸத்வத்துக்கு நிதானம் ( * ஜாயமாநம் ஹி புருஷம் யம்பச்யேத் மதுஸூதநঃ, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸவை மோக்ஷார்த்த சிந்தகঃ * என்கிற ப்ரமாணமும் இங்கு விவக்ஷிதம்.) ... ... ... ... ... (7)

(தா.) 7. ஸம்ஸாரத்தில் ஜன்மம் ரஜஸ்தமோகுணங்கட்கு ஹேதுவாம் ; "ஜாயமாநம் ஹி புருஷம்"—(ஜனிக்கும்போது எவனை எம்பெருமான் கடாக்ஷிப்பனோ அவனே ஸாத்விகனுவன். அவனே முமுக்ஷுவாவன்.) என்கிறபடியே ஜாயமாநகாலத்தில் நேரும் பரமபாவநமான பகவத் கடாக்ஷமே ஸத்வகுண ப்ராசுர்யத்திற்கு ஹேதுவாம். ... ... .... ... ... (7)

(மூ) 8. இவற்றுக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்.

(ஜன்மத்திற்கும் ஜாயமாநகாலகடாக்ஷத்திற்கும் மூலம் இன்னதென்பது)

(ப.) 8. இவற்றுக்கு மூலம்—ஜன்மத்துக்கும் ஜாயமாநகாலகடாக்ஷத்துக்கும் மூலமேதென்னில் ; (இருவல்வினை, அருள்நல்வினை என்று பிரித்து யோஜிப்பது.) இருவல்வினை — * சார்ந்த விருவல்வினை * என்கிறபடியே ஆத்மாவோடு பிரிக்கவொண்ணுதபடி பொருந்திக்கிடக்கிற ப்ரபலங்களான புண்ணியபாபங்கள் ஜன்மத்துக்கு மூலம். அருள்நல்வினை — * தொல்லருள் நல்வினை * என்கிற அவனுடைய ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸுக்ருதம் ஜாயமாநகாலகடாக்ஷத்துக்கு மூலம். (8)

(தா.) 8. ஆத்மாவோடு பிரிக்கவொண்ணுதபடி பொருந்திக்கிடக்கிற ப்ரபலங்களான புண்ய பாபங்கள் பிறப்புக்கு ஹேதுவாம்; எம்பெருமானுடைய இயற்கையின்னருளாகிற ஸுக்ருதம் ஜாயமாந காலகடாக்ஷத்திற்கு ஹேதுவாம். ... (8)

(மூ.) 9. கர்மக்ருபா பீஜம் பொய்ந்நின்ற அருள்புரிந்தவென்கிற அவித்யாஸௌஹார்த்தங்கள்.

(இருவல்வினைகளுக்கும் எம்பெருமானருளுக்கும் பீஜம் இன்னதென்பது)

(ப.) 9. (கர்மபீஜம் - பொய்ந்நின்றவென்கிற அவித்யை ; க்ருபாபீஜம் - அருள்புரிந்த வென்கிற ஸௌஹார்த்தம் - என்று யோஜிப்பது.) கர்மக்ருபாபீஜம் —

புண்ய பாபரூபங்களான இருவல்வினைகளுக்கும் அருளுக்கும் மூலமேதென்னில் ; பொய்ந்நின்றவென்கிற அவித்யா-*பொய்ந்நின்ற ஞானமும்* என்கிற பாசுரத்திற் சொல்லுகிற அவித்யை கர்மத்துக்கு பீஜம்; அருள்புரிந்தவென்கிற ஸௌஹார்த்தம் * அருள் புரிந்த சிந்தையடியார்மேல் வைத்து * என்றும் * ஈச்வரஸ்ய ச ஸௌஹார்த்தம் * என்றும் சொல்லப்படுகிற ஸௌஹார்த்தம் க்ருபைக்கு பீஜம். ... ... (9)

(தா) 9. கீழ்ச்சொன்ன புண்யபாபரூப கருமங்களுக்கு பீஜம் *பொய்ந்நின்ற ஞானமுமென்கிற அவித்யை. பகவத்க்ருபைக்கு பீஜம் * அருள்புரிந்த சிந்தையென்கிற ஸௌஹார்த்தம். [ஆத்மாக்களின் உஜ்ஜீவநத்திற்கு எம்பெருமான் க்ருஷிபண்ண இழிகைக்கு மூலகாரணமாக ஸௌஹார்த்தமென்பது சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டது. இந்த ஸௌஹார்த்தமடியாகவே சேதநர்களின் விஷயமாக அவன் திருவுள்ளத்தில் இரக்கம் பிறப்பது.] ... ... ... (9)

(மூ.) 10. ஏதந்நிமித்தம் முன்னமே முதல்முன்னமேயான அசிதயநாநாதி ஸம்பந்தங்கள்.

(அந்த அவித்யைக்கும் ஸௌஹார்த்தத்திற்கும் அடிஇன்னதென்பது)

(ப.) 10. ஏதந்நிமித்தம்—கீழ்ச்சொன்ன அவித்யைக்கும் ஸௌஹார்த்தத்துக்கும் நிமித்தமேதென்னில்; (முன்னமேயான அசிதநாதி ஸம்பந்தம்; முதல் முன்னமேயான அயநாநாதி ஸம்பந்தம் - என்று அந்வயிப்பது.) முன்னமே ஆன அசித் அநாதி ஸம்பந்தம் — * மூதாவியில் தடுமாறு முயிர் முன்னமே * என்கிற அநாதியான அசித் ஸம்பந்தம் அவித்யைக்கு நிமித்தம் ; முதல் முன்னமேயான அயந அநாதிஸம்பந்தம்— * அடியேனடைந்தேன் முதல் முன்னமே * என்கிற அநாதியான நாராயண ஸம்பந்தம் ஸௌஹார்த்தத்துக்கு நிமித்தம். ... ... (10)

(தா.) 10. அநாதியான அசித்ஸம்பந்தம் அவித்யைக்கு நிமித்தமாம்; அதைவிட அநாதியான நாராயண ஸம்பந்தம் ஸௌஹார்த்தத்திற்கு நிமித்தமாம். [ஆக, அநாதியான அசித் ஸம்பந்தமடியாக அவித்யை, அது அடியாகப் புண்யபாபரூப கருமங்கள், அது அடியாக ஜன்மம், அது அடியாக ரஜஸ்தமோகுணப்ராசுர்யம், அது அடியாக அர்த்த பஞ்சகஜ்ஞாநமில்லாமையாய் அது அடியாக ஸம்ஸார துঃக்கம்வரும் ; மிக அநாதியான நாராயண ஸம்பந்தமடியாக பகவத் ஸௌஹார்த்தம், அது அடியாக க்ருபை, அது அடியாக விசேஷகடாக்ஷம் அது அடியாக ஸத்வகுணபூர்த்தி, அது அடியாக அர்த்தபஞ்சகஜ்ஞானமுண்டாய் அது அடியாக மோக்ஷஸுகமுண்டாம் என்றதாயிற்று.] ... ... ... (10)

(மூ) 11. இவை கிட்டமும் வேட்டுவேளானும்போலே ஒண்பொருள் பொருளல்லாதவை யென்னுதே நானிலாத யானுமுளனுவனென்கிற ஸாம்யம்பெறத் தின்றூதி அந்தமும் வாழ்வுமாகிற ஹாநிஸத்தைகளை உண்டாக்கும்.

(அசித்ஸம்பந்தமும் நாராயண ஸம்பந்தமும் ஆத்ம வஸ்துவுக்கு இன்னதுசெய்யுமென்பது.)

(ப.) 11. இவை—கீழ்ச்சொன்ன அசித்ஸம்பந்தமும் நாராயண ஸம்பந்தமும் செய்வது என்னென்னில்; (கிட்டம்போலே ஒண்பொருளென்னுதே நானிலாத வென்கிற ஸாம்யம்பெறத்தின்று அந்தமாகிற ஹாநியையுண்டாக்கும்; வேட்டுவேளான்போலே பொருளல்லாத வென்னுதே யானுமுளனுவனென்கிற ஸாம்யம்பெற ஊதி வாழ்வாகிற ஸத்தையையுண்டாக்கும் - என்று கூட்டுவது) (அசித் ஸம்பந்தமானது —) கிட்டம்போலே — தன்னோடே சேர்ந்த மாணிக்கத்தை ஒளியறத்தின்று உருவழித்துத் தன்னைப்போலேயாக்கும் கிட்டம்போலே, ஒண்பொருள் என்னுதே— * எண்பெருக்கந் நலந்தொண்பொருள் * என்கிற விலக்ஷணப்பொருளான ஆத்மவஸ்துவின் சீர்மைபாராதே, நானிலாத என்கிற ஸாம்யம்பெற— * இல்லது * என்று சொல்லப்படுகிற தன்னோடே * நானிலாத * என்னும்படி ஒற்றுமை பெறுமாறு, தின்று — ஜ்ஞானலேசமறத்தின்று, அந்தமாகிற ஹாநியை உண்டாக்கும் — * அந்தமும் வாழ்வுமாய * என்கிற பாசுரத்தில் சொன்னவற்றுள் அந்தமாகிற ஹாநியையுண்டாக்கும்; * அஸந்நேவ ஸ பவதி * என்கிறபடியே ஸத்தாஹாநியைப் பண்ணுமென்கை.

(இனி, நாராயணஸம்பந்தமோவென்னில்) வேட்டுவேளான் போலே—ஏதேனுமொரு புழுவைக் கொணர்ந்துவைத்து ஊதித்தன்னிறமாக்கும் குளவிபோலே, பொருளல்லாத என்னுதே — * பொருளல்லாதவென்னை * என்கிறபடியே அவஸ்துவாய்க் கிடக்கிறவிதின் சிறுமைபாராதே, யானுமுளனுவனென்கிற ஸாம்யம்பெற — * உள்ளவுலகளவும் யானுமுளனுவன் * என்னும்படியாகத் தன்னோடு (ஞானத்தால்) * விபுத்வஸாம்யம் பெறுமாறு, ஊதி — தன்னிறமாகவூதி, வாழ்வு ஆகிற ஸத்தையை உண்டாக்கும் — * அந்தமும் வாழ்வும் * என்கிறபாசுரத்தில் சொன்னவற்றுள் வாழ்வாகிற ஸத்தையையுண்டாக்கும். (* ஸந்தமேநம் ததோ விதுः * என்கிறபடியே ஆத்மஸத்தாஸித்தியுண்டாகுமென்க.) .... .... ... (11)

(தா) 11. தன்னோடு சேர்ந்த மாணிக்கத்தை ஒளியறத்தின்று உருவழித்துத் தன்னைப்போலேயாக்கும் கிட்டம்போலே அசித்ஸம்பந்தமானது ஆத்மவஸ்துவின் சீர்மைபாராமல் தன்னோடே அது ஸாம்யம் பெறும்படியாக ஜ்ஞானலேசமறத்தின்று அதற்கு ஸத்தாஹாநியை யுண்டாக்கும். ஏதேனுமொரு புழுவைக் கொண்டுவைத்து ஊதித் தன்னோடு ஒற்றுமை பெற்றதாக்குங் குளவியைப்போலே பகவத் ஸம்பந்தமானது—அவஸ்துவாய்க் கிடக்கிற ஆத்மவஸ்துவின் சிறுமை பாராதே தன்னோடொத்ததாம்படி செய்து ஸத்தாலாபத்தை யுண்டாக்கும். ... (11)

**(மூ.) 12. ஒன்று கூடினதாய்ப் பற்றறுக்க மீண்டொழிகையாலே பழவடியேனென்னுமதொன்றுமே ஒழிக்க வொழியாதது.**

**(ஆத்மாவுக்கு பகவத்ஸம்பந்தமே ஸ்திரம் என்பது.)**

(ப) 12. ஒன்று—கீழ்ச்சொன்ன அசித்ஸம்பந்த நாராயண ஸம்பந்தங்களுள் ஒன்றான அசித்ஸம்பந்தமானது, **கூடினதாய்** — * பெருந்துயரிடும்பையிற் பிறந்து கூடினேன் * என்னும்படி ஆத்மாவுக்கு ஸ்வரூப மன்றிக்கே வந்தேறியாய், **பற்றறுக்க மீண்டொழிகையாலே** — * வினைப்பற்றறுக்கும் விதியே * என்கிறபடியே ஸர்வ சக்தியானவன் ஸவாஸநமாகப்போக்கினவளவிலே * அடைந்தவருவினையோ டல்லல் நோய் பாவம் மிடைந்தவை மீண்டொழிய * என்கிறபடியே கழிந்துபோய் விடுகையாலே,

**பழவடியேனென்னுமதொன்றுமே** – * திருமாலே நானு முனக்குப் பழவடியேன் * என்னும்படி அநாதியாயிருக்கிற பகவத்ஸம்பந்தமொன்றே, **ஒழிக்கவொழியாதது**— * உன்றன்னோடு உறவேல் நமக்கிங்கொழிக்க வொழியாது * என்கிறபடியே ஒருவராலும் தவிர்க்க முடியாதது. .... .... ... .... (12)

(ஸா.) 12. இப்படி அநாதியாகச்சொல்லப்பட்ட அசித்ஸம்பந்த நாராயண ஸம்பந்தங்களாகிற இரண்டு ஸம்பந்தமும் ஆத்மாவுக்கு நித்யமாயிருக்குமோ வென்னில்; அசித்ஸம்பந்தமானது ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றியே வந்தேறியாய், ஸர்வ சக்தனான எம்பெருமானாலே ஒருநாளிலே ஸவாஸநமாகப் போக்கப்பட்டுக் கழிந்து போய்விடும்; பகவத் ஸம்பந்த மொன்றே கழிக்கப் போகாதது. [பிரக்ருதி ஸம்பந்தமானது வந்தேறியாயும் கருமமடியானதாயு மிருக்கையாலே அநித்யமாயிருக்கும்; பகவத் ஸம்பந்தம் அப்படியல்லாமல் அநாதியாய் நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்குமென்றதாயிற்று. ஆனால் வந்தேறியான பிரக்ருதி ஸம்பந்தத்தை அநாதியென்று சொல்லுவானேன்? என்னில்; வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதியென்று பிரமாணங்கள் சொல்லுகையாலே சொல்லுகிறோம். அடி தெரியாதபோது வந்தேறியென்று எப்படிச் சொல்லலாமென்னில்; ஒரு நாள் வரையிலே எம்பெருமானருளால் அது கழியக்காண்கையாலே வந்தேறியே.] ... (12)

**(மூ) 13. இந்த உதரத்தரிப்பு த்ரைகுண்ய விஷயமானவற்றுக்கு ப்ரகாசகம்.**

**(இந்த உறவே எம்பெருமான் கலைகளையருளினதற்கு ஹேதுவென்கிறது.)**

(ப.) 13. **இந்த உதரத்தரிப்பு**—நாராயணத்வப்ரயுக்தமான இந்த குடல்துடக்கு, **த்ரைகுண்ய விஷயமானவற்றுக்கு ப்ரகாசகம்** — * த்ரைகுண்யவிஷயா வேதா: * என்கிற படியே முக்குணங்களுக்கு வசப்பட்ட சேதநரை விஷயமாகவுடைய வேதங்களை ப்ரகாசிப்பிக்கைக்கு ஹேது.

**உதரத்தரிப்பு** — குடல்துடக்கு: அதாவது - தேஹஸம்பந்தம். 'உதிரத்தரிப்பு' என்பர் சிலர்; ....ரக்தஸம்பந்தமென்றபடி தெறிப்பு என்பராம் சிலர். (13)

(தா.) 13. இந்த நாராயணத்வப்ரயுக்தமான குடல்துடக்குத்தான் ஸத்வ ரஜஸ்தமஸ்ஸுக்களாகிற முக்குணங்கட்கும் வசப்பட்டொழுகுகின்ற சேதநரை இலக்காகக் கொண்ட வேதங்களை வெளியிட்டருளுகைக்கு ஹேதுவாயிற்று. (13)

**(மு.) 14. வத்ஸலையான மாதா பிள்ளை பேகணியாமல் மண்தின்னவிட்டு ப்ரத்யௌஷதமிடுமா போலே எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமானவிவனும் ருசிக்கீடாகப் பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே.**

**(மோக்ஷஹேதுவான சாஸ்திரங்களோடுகூட பந்தஹேதுவான சாஸ்திரங்களையும் எம்பெருமான் காட்டினதற்கு ஹேது இன்னதென்பது)**

(ப.) 14. **வத்ஸலையான மாதா** - வாத்ஸல்யமுடையளான பெற்றதாயானவள், **பிள்ளைபேகணியாமல்** - மண்ணைத்தின்ன ஆசைப்பட்ட தன் குழந்தை முகம் கன்றுத படிக்கு, **மண்தின்னவிட்டு** - முந்துற மண்ணைத் தின்னும்படியாக இசைந்திருந்து, **ப்ரத்யௌஷதம் இடுமாபோலே** - பின்னை அதுக்கு மாற்றுமருந்து இடுவதுபோல,

**எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமான இவனும்** - * எவ்வுயிர்க்கும் தாயோன் * என்றும் * தாயிருக்கும் வண்ணமே * என்றும் சொல்லுகிறபடியே ஸகலாத்மாக்களிடத்திலும் தாய்போலே வத்ஸலனான ஸர்வேச்வரனும்,

**ருசிக்கு ஈடாக** - சேதநருடைய ருசிக்குத்தகுதியாக. **பந்தமும் காட்டும், பந்தமறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே** - பந்தகங்களான சாஸ்த்ரங்களையும் காட்டி, பின்னை பந்த நிவர்த்தக பேஷஜமான சாஸ்த்ரங்களையும் காட்டுவன். ... (14)

(தா.) 14. எம்பெருமான், ஸம்பந்தமடியாக சாஸ்த்ரப்ரதானம் பண்ணுகில் மோக்ஷஹேதுவான சாஸ்திரங்களை மாத்திரமே காட்டவேண்டியிருக்க இஹலோக, (ஸ்வர்க்காதி) பரலோக போக ஸாதனங்களைவிதித்து பந்தஹேதுவுமாகின்ற சாஸ்த்ரங்களையும் காட்டினது என்னென்னில்; வாத்ஸல்யத்தோடு கூடின பெற்ற தாயானவள், தன் பிள்ளை மண்ணை யாசைப்பட்டதென்றால் அதன் முகம் கன்றாமல் முந்துற மண்ணைத் தின்னவிட்டுப் பின்னை அதற்கு மாற்று மருந்திடுமா போலே * எவ்வுயிர்க்கும் தாயோனான எம்பெருமானும் சேதநருடைய ருசிக்குத் தக்கபடி பந்தக சாஸ்திரங்களையும் காட்டிவைத்துப் பின்னை பந்தமறுப்பதோர் மருந்தான சாஸ்த்ரங்களையும் காட்டிவைத்தான். [ஸம்பந்தமடியான வாத்ஸல்யத்தாலே இப்படி செய்கையாலே ஸம்பந்தக்கொத்தை வாராதென்றவாறு.] ... (14)

**(மு.) 15. அதுதானும் ஆஸ்திக்ய விவேக அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி பாரதந்த்ர்யங்களையுண்டாக்கின வழி.**

**(பந்தக சாஸ்திரங்களைக் காட்டினதும் படிப்படியாக அவர்கள் ஈடேறுகைக்கு இட்டவழி என்கிறது.)**

(ப.) 15. **அதுதானும்** - மோக்ஷஹேதுவான சாஸ்த்ரங்களை மாத்திரம் காட்டாதே ச்யேநவிதிமுதலான பந்தகசாஸ்திரங்களையுங் காட்டினதுதானும்,

**ஆஸ்திக்ய......வழி**—முதலில் சாஸ்த்ரமுண்டு என்கிற ஆஸ்திக்யத்தை யுண்டாக்கி, பின்பு ப்ரக்ருதி புருஷ விவேகத்தை யுண்டாக்கி, பின்பு அந்ய சேஷத்வ நிவ்ருத்தியையுண்டாக்கி, பின்பு ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியையுண்டாக்கி, பின்பு பாரதந்த்ர்யத்தை யுண்டாக்கி இப்படி க்ரமத்திலே யீடேறுகைக்கு இட்ட வழியாம். .... ... .... ... ... (15)

(ஸா.) 15. இப்படி வாத்ஸல்யத்தாலே செய்தானாகிலும் முக்குணங்கட்கும் வசப்பட்ட சேதநர்க்கு ருசிக்கிணங்கின பலன்களையும் ஸாதநங்களையும் விதிக்கிற பந்தக சாஸ்திரங்களையும் காட்டிவைத்தால் அவர்கள் ஸம்ஸாரிகளாகவே ஒழிந்து போகக் காரணமாகாதோவென்னில்; ஆகாது. அதுவும் க்ரமேண அவர்கள் ஈடேறுகைக்கே இட்டவழியாகும். எங்ஙனேயென்னில்; ஒருவனைக் கொலை செய்கிற வழிகள். ஸ்வர்க்கபோகத்திற்குப் போகிற வழிகள் முதலானவற்றைக் காட்டும் சாஸ்த்ரங்களே யன்றோ பந்தக சாஸ்த்ரங்களெனப்படும்; இப்படிப்பட்ட சாஸ்த்ரங்களையும் எம்பெருமான் காட்டிவைத்திருப்பதற்கு ப்ரயோஜநம் கேண்மின்;— தமோகுணம் மிக்கவர்களாய்ப் பொருளீட்டுகைக்குப் பரஹிம்ஸையே போதுபோக்காய்த் திரிகிற நாஸ்திகரைக் குறித்து முதலிலே மோக்ஷத்தை விதித்தால் அவர்கட்கு அது ருசிக்கமாட்டாதாகையாலே அன்னவர்கட்கு உத்தேச்யமாயுள்ள பரஹிம்ஸைக்கு உபாயமான அபிசார கருமத்தை விதித்தது; பரஹிம்ஸை பண்ணித் தீருவதற்கு என்னவுபாயமென்று பார்த்துக்கொண்டிருந்த அவர்கள் ஒருவழியாலும் அது நிறைவேறக் காணாமையாலே 'ஏதோ சிலர் சாஸ்த்ரமென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்களே, அந்த சாஸ்த்ரத்தில் என்ன உபாயம் சொல்லியிருக்கிறதோ அதையாவது அநுஷ்டித்துப் பார்ப்போம்' என்று நினைத்து அந்த அபிசார கருமத்தை அநுஷ்டிக்க, அதன்படி பலன் கைபுகுகையாலே அவர்களுக்கு 'சாஸ்திரமுண்டு' என்கிற நம்பிக்கை பிறக்கிறது. அப்படி ஆஸ்திக்யமுண்டான பின்பு 'சாஸ்திரங்கள் சொல்லுகிற விஷயம் உண்மையாகவே யிருக்கிறதே, நாம் இப்படி பரஹிம்ஸை பண்ணி இஹலோக இன்பங்களை நண்ணி ஜீவிப்பதிற்காட்டிலும் இனிதான மேலுலக இன்பங்களை யடைந்து வாழலாமே என்று ஆசையை உண்டாக்கவல்ல மேல்சாஸ்திரங்களிற் கண்வைத்து ஸ்வர்க்கம் முதலிய புருஷார்த்தங்களையும் அவற்றின் உபாயங்களையும் ஆராயப்புக, அவ்வழியாலே 'தேஹத்திற் காட்டில் வேறுபட்டதான ஆத்மவஸ்து உண்டு' என்கிற விவேகம் பிறக்கிறது. இப்படி விவேகம் பிறந்தபின்பு அநித்யமான ஸ்வர்க்க புருஷார்த்தத்தைப் பெற்றுத் துன்பங்கலந்த இன்பத்தை அநுபவித்து மீள்வதிற்காட்டிலும் இன்பமயமான சாச்வத புருஷார்த்தத்தைப்பெற்று நிலைநின்று வாழலாமே! என்கிற ஆசையை உண்டாக்கவல்ல, [ஆத்மபோகமாகிற கைவல்ய மோக்ஷத்திற்கு வழிகாட்டியான] சாஸ்திரங்களிற் கண்வைத்து அவ்வழியாலே ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யுணர, அந்ய சேஷத்வ நிவ்ருத்தி பிறக்கிறது, அதற்குப்பிறகு, கேவலம் ஸ்வாத்மாநுபவமாகிற அதிற்காட்டிலும் பரமவிலக்ஷணமான பரமாத்மபோகத்தைக் காட்டுகிற சாஸ்திரங்களிற் கண்வைத்து அதன் சீர்மையையும் அதற்கு ஸாதநமான பக்தியையும் ஆராய்ச்சி செய்ய, அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்த்ரிய நிவ்ருத்தி

உண்டாகிறது. அதன் பிறகு * பத்தி முதலாமவற்றில் பதிகூடாமல் தளருமளவில் ஸ்வயத்நநிவ்ருத்தி ரூபமான ப்ரபத்தியைக் காட்டுகிற சாஸ்திரங்களில் கண்வைக்க ஸ்வரூப யாதாத்ம்ய வேஷமான பாரதந்த்ரியம் ஸித்தித்ததாகிறது. ஆக இப்படி க்ரமேண ஈடேறுகைக்கு இட்டவழியேயாம் சாஸ்திரங்கள். .... ... (15)

(மூ.) 16 சதுர்விதமான தேஹவர்ணாச்ரமாதிகாரபலமோக்ஷஸாதநகதி யுகதர்ம வ்யூஹ ரூப க்ரியாதிகளை யறிவிக்கிற பாட்டுப்பரப்புக்குப் பெரிய தீவினிலொன்பதாங்கூறும் மானிடப்பிறவியும் ஆக்கை நிலையும் ஈரிரண்டிலொன்றும் இளமையு மிசைவு முண்டாய்ப் புநவரேலுமென்கிறதுக்குள்ளே விக்நமற நின்றவாநில்லா ப்ரமாதியைக் கொண்டு அறக்கற்கை அரிதென்றிறே வேதஸாரோபநிஷத்ஸாரதராநுவாக ஸாரதமகாயத்ரியில் முதலோதுகிற பொருள் முடிவான சுருக்கைத் தெய்வ வண்டாய் அன்னமாய் அமுதங்கொண்டவன் சாகைகளிலும் ஓதம்போல் கிளர் நால் வேதக்கடலிலும் தேனும் பாலுமமுதுமாக வெடுத்துப் பெருவிசும்பருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது.

[பலபல அர்த்த விசேஷங்களை வெளியிடுகின்ற சாஸ்திரங்களைப் பயில்வது மிகவும் அரிதென்று எம்பெருமான் ஸகல சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரத்தை வெளியிட்டருளினன் என்பது.]

(ப.) 16. சதுர்விதமான—நான்கு வகைப்பட்ட, (இவ்விசேஷணம் மேலே ஒவ்வொன்றிலும் அந்வயிக்கும்.)

தேஹ—தேவமநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களென்று நான்கு வகைப்பட்ட தேஹங்களென்ன,

வர்ண—ப்ராஹ்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ரர்களென்று நான்கு வகைப்பட்ட ஜாதிகளென்ன,

ஆச்ரம—ப்ரஹ்மசர்ய கார்ஹஸ்த்ய வாநப்ரஸ்த ஸம்ந்யாஸங்களென்கிற நான்கு ஆச்ரமங்களென்ன,

அதிகார—* ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ * என்கிற நாலு வகைப்பட்ட அதிகாரமென்ன,

பல—தர்மார்த்த காமமோக்ஷங்களென்கிற நான்கு புருஷார்த்தங்களென்ன,

மோக்ஷ—ஸாலோக்ய ஸாமீப்ய ஸாருப்ய ஸாயுஜ்யங்களென்கிற நான்கு மோக்ஷங்களென்ன,

ஸாதந—கர்மஜ்ஞாநபக்திப்ரபத்திகளாகிற நான்கு உபாயங்களென்ன,

கதி—கர்ப்பகதி யாம்யகதி தூமாதிகதி அர்ச்சிராதிகதியென்கிற நான்கு கதிகளென்ன,

யுக—க்ருதத்ரேதாத்வாபரகலிகளென்கிற நான்கு யுகங்களென்ன,

(யுக) தர்ம—த்யானம் யஜநம் அர்ச்சநம் ஸங்கீர்த்தனமென்கிற நாலு யுக தர்மங்களென்ன,

வ்யூஹ—வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிற நாலு வகைப்பட்ட வ்யூஹமென்ன,

ரூப—க்ருதாதியுகங்களிற்கொள்ளும் ஸித பீத ச்யாம நீலங்களென்கிற நான்கு ரூபங்களென்ன,

க்ரியா—ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரமோக்ஷப்ரதத்வங்களென்கிற நான்கு க்ரியைகளென்ன,

ஆதிகளை அறிவிக்கிற—இவைமுதலான அர்த்தவிசேஷங்களை ப்ரகாசிப்பிக்கிற,

பாட்டுப்பரப்புக்கு— * பாட்டு முறையும் படுகதையும் * என்கிற பாட்டில் சொல்லுகிற சாஸ்த்ர விஸ்தாரத்துக்கு, (விஸ்தாரமான சாஸ்த்ரங்கங்களைக்கற்க)

பெரியதீவினில் ஒன்பதாங்கூறும்— * நாவலம் பெரிய தீவு * என்கிற ஜம்பூத்வீபத்தில் நவமகண்டமான பாரதவர்ஷமும்,

மானிடப்பிறவியும்— * மானிடப்பிறவி யந்தோ * என்று துர்லபமாகச்சொன்ன மநுயஷ்யஜன்மமும்,

ஆக்கைநிலையும்— * மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள் * என்று அஸ்திரமாகச்சொன்ன சரீரத்தினுடைய ஸ்தைர்யமும்,

ஈரிரண்டிலொன்றும்—* குலங்களாய வீரிரண்டிலொன்று * என்கிற ப்ராஹ்மண வர்ணமும்,

இளமையும்— * கிளரொளியிளமை * என்கிற பால்யமும்.

இசைவும்— * யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் * என்கிற இசைவும்,

உண்டாய்—ஆக இவ்வளவு முண்டாகி,

புகுவரேலு மென்கிறதுக்குள்ளே - * வேதநூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும் * என்று புகவரிதாகச் சொல்லப்பட்ட இவ்வாயுஸ்ஸுக்குள்ளே, விக்நம் அற - * பஹவச் ச விக்நா: * என்றும் * ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி * என்றும் சொல்லுகிற இடையூறுகளுமற்று, நின்றவா நில்லா ப்ரயாதியைக் கொண்டு - * நின்றவா நில்லா நெஞ்சினை * என்றும் * சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி * என்றும் சொல்லுகிறபடியே ஒரு விஷயத்தில் அரைக்ஷணமும் நில்லாதே இவனையடர்த்துத் தன்வழியேயிழுக்கும் மநஸ்ஸைக்கொண்டு, அறக் கற்கை - * கலை 'அறக்' கற்றமாந்தர் * என்கிறபடியே சாஸ்த்ரங்களைத் தாத்பரியம் கைப்படும்படி அதிகரிப்பதானது, அரிதென்றிறே - * ஆமாறறிவுடையாராவதரிதன்றே * என்கிறபடியே அஸாத்யமான காரியம் என்று திருவுள்ளம்பற்றி யன்றோ; [இதற்கு ' சிங்காமை விரித்தது என்கிறவிடத்திலே அந்வயம்.] வேதஸாரோபநிஷத்ஸாரதராநுவாக ஸாரதம காயத்ரியில் - வேதத்தில் ஸாரமான உபநிஷத்துக்களினுள்ளே ஸாரதமமான நாராயணநுவாகத்தில் ஸாரதமமான விஷ்ணு காயத்ரியிலே, முதல் ஓதுகிற - முதலிலே ஓதப்படுகிற, பொருள் முடிவான சுருக்கை - * ஒத்தின்பொருள் முடிவுமித்தனையே ....மாதவன் பேர் சொல்லுவதே ஒத்தின் சுருக்கு * என்கிறபடியே வேதாந்த தாத்பர்யமாய் ஸகலவேத ஸங்க்ரஹமுமான திருமந்த்ரத்தை,

[தெய்வவண்டாய் இத்யாதி.]

[1. தெய்வவண்டானவன் சாகைகளில் தேனுக வெடுத்து,

2. அன்னமானவன் ஓதம்போல் கிளர்வேதநீரிலே பாலாகவெடுத்து,

3. அமுதங்கொண்டவன் நால்வேதக்கடலிலே அமுதாக வெடுத்து என்று யோஜிக்கவேணும்.]

தெய்வவண்டானவன் சாகைகளில் தேனுக வெடுத்து — வண்டானது சாகா ஸஞ்சாரம் பண்ணி மதுவையெடுக்குமாபோலே * தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டு * என்று தெய்வண்டாகச் சொல்லப்பட்டவன் வேதசாகைகளிலே * தேனும்பாலுமமுதுமாய * என்று தேனுகச் சொல்லப்பட்டவிதனை யெடுத்தும்,

அன்னமானவன் ஓதம்போல்கிளர் வேதநீரிலே பாலாகவெடுத்து — அன்னமானது நீரிலே கலந்து கிடக்கிற பாலை விவேகித்தெடுக்குமாபோலே * அன்னமாயன்றங் கருமறை பயந்தான் * என்று ஹம்ஸரூபியானவன் * ஓதம்போல்கிளர்வேதநீரனே * என்னப்பட்ட வேதநீரிலே * எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய * என்று ஸர்வாதிகாரதயா பாலாகச் சொல்லப்பட்டவிதனை யெடுத்தும்,

அமுதங்கொண்டவன் நால்வேதக்கடலிலே அமுதாக வெடுத்து — பாற்கடலைக் கடைந்து அமுதமளித்ததனலே * அமுதங்கொண்ட பெருமான் * என்னப்பட்டவன், * நால்வேதக்கடல் * என்னப்பட்ட வேதக்கடலிலே * அமுதுமாய திருமால் திருநாமம் * என்று அமுதமாகச் சொல்லப்பட்டவிதனை யெடுத்தும்,

பெருவிசும்பருளும் பேரருளாலே — * அமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன் - வதரியாச்சிராமத்துள்ளானே * என்கிறபடியே பரமபதத்தைக் கொடுப்பதான பரமக்ருபையாலே,

சிங்காமை விரித்தது — * நரநாரணனு யுலகத்தறநூல் சிங்காமை விரித்தவன் * என்கிறபடியே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நரநாராயணரூபேண அவதரித்து ஸ்வரூப சாஸ்த்ரம் சுருங்காதபடி விஸ்த்ருதமாம்படி பண்ணிற்று. ... .... (16)

(தா) 16. முதல் சூர்ணிகையில் "கலைகளை நீர்மையினல் அருள் செய்தான்" என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட சாஸ்திரங்களில் பிரதிபாதிக்கப்படுகிற விஷயங்கள் எல்லையில்லாதவை. அந்த விஷயங்களை நிருபிக்கப்புகுவோமாயின் ஒவ்வொரு விஷயமும் நான்கு நான்கு வகையாயிருக்கும். அப்படிப்பட்ட அர்த்தவிசேஷங்களை யெல்லாம் விரிவாக விளக்குவதற்கே சாஸ்திரங்கள் ஏற்பட்டவை; அப்படிப்பட்ட அளவுகடந்த சாஸ்திரங்களை அதிகரிக்க வேண்டுமானல் அரியபெரிய அநேக யோக்யதைவேண்டும். ஜம்பூத்வீபத்தில் பாரதவர்ஷத்தில் ஜநிக்கப்பெறவேணும். இதில் பசுபக்ஷி முதலான யோநிகளிற் பிறவாமே மநுஷ்யயோநியிற் பிறக்கப்பெற வேணும். அதிற் பிறந்தாலும் அல்பாயுஸ்ஸாக ஒழியாமே சரீரம் நிலைபெற்றிருக்கப் பெறவேணும். அப்படி சரீரம் நிலைபெற்றிருக்கப் பெற்றாலும் இதரவருணத்திலன்றிக்கே ப்ராஹ்மண வர்ணத்தில் பிறவிபெறவேணும். அதிற்பிறந்துவைத்தும்

வாணுகை விணுளாக்காதபடி, புத்தி கொழுந்துவிட்டு சாஸ்திரங்களை அப்யஸிப்பதற் குறுப்பான * கிளரொளி யிளமையும் ஆஸ்தையும் வேணும். இவ்வளவும் வாய்த்து வாழ்நாளுக்குள்ளே இடையூறுகளொன்றுமில்லாமே சஞ்சலமான நெஞ்சைக்கொண்டு ச்ருதி ஸ்மிருதி முதலிய ஸகல சாஸ்திரங்களையும் ஆழ்ந்து அதிகரிப்பது மிகவும் அருமைப்படும். இப்படிப்பட்ட அருமையை எம்பெருமான் திருவுள்ளம் பற்றியே திருமந்திரத்தை வெளியிட்டருளினன் அந்தத் திருமந்திரம் எப்படிப்பட்டதென்னில் ;—

கர்மகாண்டமும் பிரஹ்மகாண்டமுமாகக் கலசியுள்ள வேதத்தில் ஸாரமானது உபநிஷத் பாகம் ; அதிலும் ஸாரதரமாகவுள்ளது நாராயணுநுவாகம். அதிலும் ஸாரதமமாகவுள்ளது வியாபக மந்த்ரங்கள் மூன்றையும் பிரதிபாதிக்கிற விஷ்ணு காயத்ரி. அப்படிப்பட்ட காயத்ரியிலே " நாராயணுய வித்மஹே " என்று முதலிலே ஓதப்பட்டதாய் ஸகலவேத ஸங்க்ரஹமாயிருப்பது அத்திருமந்திரம். இப்படிப்பட்ட திருமந்திரம் "எனக்கென்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம் ...நமோ நாராயணமே" என்கிற திருமங்கையாழ்வாரருளிச் செயலின்படியே தேனுகவும் பாலாகவும் அம்ருதமாகவும் ப்ரஸித்தம். பரமபோக்யதையைப் பற்றத் தேனுகவும், ஸர்வாதிகாரத்வத்தைப்பற்றப் பாலாகவும், அம்ருதத்வகாமர்களுக்கு அதையளித்து முத்தி பெறுவிப்பதைப்பற்ற அமுதாகவும் பேசப்பட்டதென்க.

இப்படி தேனும்பாலும் அமுதுமான இதனை எம்பெருமான் வேதத்தில் நின்றும் க்ரஹிக்கிறபோது எவ்வண்ணம் க்ரஹித்தான் என்னில், தேனை க்ரஹிப்பதில் சாகாஸஞ்சாரியான வண்டுதான் ஸமர்த்தமாகையாலே தேனுகிய திருமந்த்ரத்தை எம்பெருமான் வண்டாகி வேதசாகைகளிலிருந்து க்ரஹித்தான். இனி, பாலை க்ரஹிப்பதில் அன்னப்பறவையே ஸமர்த்தமாகையாலே * அன்னமாய் அன்றங்கருமறை பயந்தான் * என்கிறபடியே எம்பெருமானும் ஹம்ஸரூபியே ஹம்ஸமானது நீரிலேகலந்து கிடக்கிற பாலை விவேகித்து எடுப்பதுபோல, எம்பெருமான்ருனும் பால்போலேயிருக்கிற திருமந்திரத்தை * ஓதம்போல் கிளர்வேத நீரிலிருந்து க்ரஹித்தான். இனி, அம்ருதத்தை க்ரஹிப்பதில் * அமுதங்கொண்ட பெருமானுகிய எம்பெருமானே ஸமர்த்தனுகையால், அம்ருதமான திருமந்திரத்தை * நால்வேதக் கடலிலிருந்து க்ரஹித்தான். ஆகவிப்படி வேதஸாரமான திருமந்திரத்தை தானேயெடுத்து நிர்ஹேதுக க்ருபையினுலே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நரநாராயண ரூபேண அவதரித்துத் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று ஸ்வரூப சாஸ்திரம் சுருங்கிப்போகாமல் உபதேசத்தாலும் அநுஷ்டாநத்தாலும் விஸ்தரிப்பித்தருளினன். ... ... ... ... .. (16)

(மூ.) 17. முனிவரையிடுக்கியும் முந்நீர்வண்ணனுயும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு விசிஷ்ட நிஷ்க்ருஷ்டவேஷங்கள் விஷயம்.

(சாஸ்த்ரங்களுக்கும் சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரத்திற்கும் விஷயமின்னதென்பது.)

(ப) 17. [முனிவரையிடுக்கி வெளியிட்ட சாஸ்த்ரத்துக்கு விசிஷ்டவேஷம் விஷயம் ; முந்நீர்வண்ணனுய் வெளியிட்ட தாத்பர்யத்துக்கு நிஷ்க்ருஷ்ட வேஷம்

விஷயம் - என்று யோஜிப்பது] முனிவரையிடுக்கி வெளியிட்ட சாஸ்த்ரத்துக்கு— * இருள் கள்கடியும் முனிவர் * என்னப்பட்ட வ்யாஸாதிமஹர்ஷிகளை ஆவேசித்து அவர்கள் முகமாக வெளியிட்ட சாஸ்த்ரங்களுக்கு, விசிஷ்ட வேஷம் விஷயம்—சேதநருடைய தேஹவிசிஷ்டவேஷம் விஷயம்; முந்நீர்வண்ணனைய் வெளியிட்ட தாத்பர்யத்துக்கு— * வதரியாச்சிராமத்துள்ளானைக் கருங்கடல் முந்நீர் வண்ணனை * என்கிறபடியே பதரிகாச்ரமத்திலே ஸ்வேநருபேண நின்று வெளியிட்ட சாஸ்த்ரதாத்பர்யமான திருமந்த்ரத்துக்கு, நிஷ்க்ருஷ்ட வேஷம் விஷயம்—சேதநருடைய வடிக்கட்டின வேஷம் விஷயம். ... ... ... ... (17)

(தா) 17. வியாஸர் முதலிய மஹர்ஷிகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அவர்களைக்கொண்டு வெளியிட்ட சாஸ்த்ரத்துக்கு சேதநருடைய தேஹவிசிஷ்ட வேஷத்திலே நோக்கு; ஸ்ரீபதரிகாச்ரமத்திலே தானான தன்மையிலே நின்று வெளியிட்ட திருமந்திரத்திற்கு சேதநருடைய நிஷ்க்ருஷ்டவேஷத்திலே நோக்கு. [சாஸ்த்ரங்களுக்கு தேஹத்திலே நோக்கு; திருமந்திரத்திற்கு ஆத்மஸ்வருபத்திலே நோக்கு என்றபடி.] ... ... ... ... (17)

(மூ.) 18. தோல்புரையே போமதுக்குப் பழுதிலாயோக்யதைவேணும். மனமுடையீரென்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நானும் நமருமென்னும்படி ஸர்வருமதிகாரிகள்.

(அவை யிரண்டுக்கும் அதிகாரி நிஷ்கர்ஷம்)

(ப.) 18. தோல்புரையே போமதுக்கு - ஸ்வருபத்திலூற்றமின்றியே மேலெழ தேஹத்திலே நோக்காய் நடக்கிற சாஸ்த்ரத்துக்கு, பழுதிலா யோக்யதைவேணும் - *பழுதிலா வொழுகலாறு* என்னப்பட்ட பழுதற்ற யோக்யதை வேணும்; மனமுடையீரென்கிற - *கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்* என்கிறபடியே மனமுடைமையே வேண்டுமதாய், ச்ரத்தையே அமைந்த-*ச்ரத்தைவ காரணம் பும்ஸாம் அஷ்டாக்ஷர பரிக்ரஹே * என்கிறபடி ச்ரத்தாமாத்ரமே போதுமான, மர்மஸ்பர்சிக்கு - ஸ்வருபஸ்பர்சியான திருமந்த்ரத்துக்கு, நானும் நமருமென்னும்படி - *நானும் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே * என்னும்படியாக, ஸர்வரும் அதிகாரிகள் - யோக்யர் அயோக்யர் என்கிற பாகுபாடின்றியே அனைவரும் அதிகாரிகள் ... (18)

(தா.) 18 சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரமும் ஸர்வாதிகாரமோ அதிக்ருதாதிகாரமோ வென்னில்; ஸ்வருபத்தில் ஊற்றமில்லாமல் மேலெழுந்தவாரியாய் தேஹத்திலே நோக்காய் நடக்கிற சாஸ்த்ரத்திற்கு ஸத்குல ப்ரஸூதியும் ஸதாசார ஸம்பத்தியுமாகிற யோக்யதை வேணுமாகையாலே சாஸ்த்ரம் அதிக்ருதாதிகாரம். * கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்! * என்று சொல்லுகிறபடியே ச்ரத்தை மாத்திரமே போதுமானதாய் ஸ்வருபாவகாஹியான திருமந்த்ரத்திற்கு "நானுஞ் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே" என்னும்படி அனைவரும் அதிகாரிகளாவர். ... ... ... ... (18)

(மு) 19. **சாஸ்த்ரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக்கடலை நீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும் விட்டுக் கரைகுறுகுங்கால மெண்ணுவர்கள்.**

**(சாஸ்த்ர நிஷ்டருடையவும் திருமந்த்ர நிஷ்டருடையவும் படிகள் இன்னவையென்பது)**

(ப) 19. **சாஸ்த்ரிகள்** - சாஸ்த்ரங்களிலே ஊற்றமுடையவர்கள், **தெப்பக்கையரைப்போலே** - தெப்பம்பற்றி ஆறுநீஞ்சுமவர்கள் தெப்பத்தை ஒருகையிலே யிடுக்கித் தாங்களும் ஒருகை துழாவுமாபோலே, **இரண்டையுமிடுக்கி** - ஸ்வப்ரயத்நமென்ன அதனாலாகும் பகவத்க்ருபையென்ன ஆக இரண்டையும் அவலம்பித்துக்கொண்டு, **பிறவிக்கடலை நீந்த** - * பிறவிக்கடல் நீந்துவார்க்கே * என்கிறபடியே ஸம்ஸாரஸமுத்ரத்தைக் கடக்க நினைக்க; **ஸாரஜ்ஞர்**—சாஸ்த்ர தாத்பர்ய ஸாரமான திருமந்த்ரத்தையுணர்ந்தவர்கள், **விட்டத்தில் இருப்பாரைப்போலே**—ஓடமேறினவர்கள்போலே, **இருகையும் விட்டு**—ஸ்வயத்நரூபமான உபாஸநாதிகளென்ன அவற்றாலாகும் பகவத்க்ருபையை அவலம்பிப்பதென்ன ஆக இரண்டு கைகளையும் விட்டு, **கரை குறுகுங்காலம் எண்ணுவர்கள்**— * கூவிக் கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ * எனறும் * ஆக்கை விடும்பொழுதெண்ணே * என்றும் சொல்லுகிறபடியே பகவத்ப்ராப்தியாகிற கரையைக் கிட்டுகைக்கீடான காலத்தைச் சிந்தனை பண்ணியிருப்பர்கள். (18)

(ஸா.) ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமான பகவத்ப்ராப்திக்கு உபாயமாக அப்பெருமானுடைய உபாஸநத்தை விதித்தும், 'அதற்குப் பலன் கொடுப்பவன் பகவானே' என்று சொல்லியும் போருகிற சாஸ்த்ரத்திலே ஊன்றுமவர்கள், ஆறு நீஞ்சுமவர்கள் தெப்பத்தை ஒரு கையிலே யிடுக்கித் தாங்களும் ஒரு கைதுழாவுமாபோலே ஸ்வப்ரயத்நமும் அதனாலாகும் பகவத் க்ருபையுமாகிற இரண்டையும் பற்றிக்கொண்டு ஸம்ஸாரமாகிற கடலைக் கடக்கப் பார்ப்பர்கள். "இவ்வாத்மவஸ்து ஸ்வப்ரயத்நத்தை உதறித்தள்ளிவிட்டு பகவானொருவனையே உபாயமாகப்பற்றியிருக்கத்தக்கது" என்று தெரிவிக்கின்ற சாஸ்த்ரஸாரமான திருமந்திரத்தை உணர்ந்தவர்கள்,—ஓடமேறினவர்கள் அக்கரை சேர்வதற்கான ஸ்வயத்நத்தையும் தெப்பத்தையும் கைவிட்டு 'கரைகுறுகுவது எப்போது' என்று பார்த்துக்கொண்டு அதன் விட்டத்திலே யிருக்குமாபோலே, பிறவிக்கடலைத் தாண்டுவிக்கும் *வைகுந்தனென்பதோர் தோணியைப்பற்றி அந்த வைகுந்தனுடைய ஞானம் சக்தி முதலிய குணங்களை அநுஸந்தித்தும் தங்கள் பாரதந்த்ரியம் முதலிய ஸ்வரூபத்தை அநுஸந்தித்தும் நிற்பராகையாலே ஸ்வப்ரயத்நரூபமான உபாஸநாதிகளென்ன அவற்றாலாகும் பகவத் க்ருபையென்ன ஆகிய இரண்டு கையையும் விட்டு கேவல பகவத்க்ருபையே உத்தாரகம்' என்று அத்யவஸாயங்கொண்டு * கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ * என்று பகவத்ப்ராப்தியாகிற கரையைக் கிட்டலாங் காலத்தைச் சிந்தித்துக் கொண்டிருப்பர்கள். ... ... ... (19)

(மூ.) 20. இவை ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணரவும் உணர்வைப்பெறவூர மிகவுணரவுமுண்டாம்.

(கீழ்ச்சொன்ன இருவகுப்பினர்க்கும் இப்படிப்பட்ட நிலைமை உண்டாகைக்கு அடி இன்னதென்பது)

(ப) 20. இவை—சாஸ்த்ர நிஷ்டர்கள் இரண்டையுமிடுக்கிப் பிறவிக்கடலைக் கடக்கப் பார்ப்பதும், ஸாரஜ்ஞர் இருகையும் விட்டுக் கரை குறுகுங்காலமெண்ணி யிருப்பதுமான கீழே சொல்லப்பட்ட இவை, எத்தாலே உண்டாகின்றன வென்னில்;

[ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணர (முந்தியது) உண்டாம்; உணர்வைப் பெறவூர மிகவுணர (ப்பிந்தியது) உண்டாம்.] என்று யோஜிப்பது.

ஸ்வரூபத்தை—ஆத்ம ஸ்வரூபத்தை, உணர்ந்து உணர்ந்து உணர—* உணர்ந் துணர்ந்திழிந்தகன்று * என்கிற பாசுரத்தின்படியே தேஹத்திற் காட்டில் வேறு பட்டதாய் ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வங்களை யுடையதாயிருக்குமென்று ஸாக்ஷாத்கரிக்கவே, உண்டாம்—ஸ்வயத்நத்தாலே ஸம்ஸாரத்தைக் கடக்கத் தேடுகையாகிறவிது உண்டாகும்.

உணர்வைப் பெறவூர, மிகவுணர—* உணர்வு முயிரு முடம்பும் மற்றுலப்பிலன வும் பழுதேயாமுணர்வைப் பெறவூர்ந்து * என்கிற பாசுரத்திற்படியே எல்லாம் ஹேயமென்கிற அறிவைப் பெறும்படி நிர்ஹேதுகமாக ஈச்வரன் நடத்த, *மெய்ம் மையை மிகவுணர்ந்து * என்கிறபடியே பாரதந்த்ர்யமும் போக்யதையுமே ஆத்ம ஸ்வரூப வேஷமென்று உணரவே, உண்டாம்*—ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தரா யிருக்கையாகிறவது உண்டாம். ... ... ... (20)

(தா.) 20. சாஸ்த்ர நிஷ்டர்களுக்கு ஸ்வப்ரயத்நருசியும் திருமந்த்ரநிஷ்டர் களுக்கு மார்பிலே கைவைத்துறங்கல ம்படியான நிலைமையுமுண்டாவதற்கு ஹேது ஏதென்னில்; சாஸ்த்ரிகள் ஆத்மஸ்வரூபம் ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வ யுக்தமாயும் பகவத்சேஷமாயு மிருக்குமென்று ச்ரவணமநநங்களாலே ஸாக்ஷாத் கரிக்கிறார்களாகையாலே அவர்கள் ஸ்வப்ரயத்நத்தாலே பிறவிக்கடலை நீந்த நினைக்கிறார்கள். திருமந்திர நிஷ்டர்கள் ஆத்மஸ்வரூபம் பாரதந்திரியத்தையும் போக்யதையையும் வடிவாகவுடைத்தாயிருக்குமென்று உணருகிறார்களாகையாலே தங்கள் பாரத்தை அவன் மேலே போகட்டு ஸ்வப்ரயத்நமற்றவர்களாயிருக்கிறார் கள். [இத்தால் அவரவர்களுடைய ஸ்வரூபஜ்ஞாந தாரதம்யமே கீழ்ச்சொன்ன படிகள் உண்டாவதற்குக் காரணம் என்றதாயிற்று. ... ... (20)

(மூ) 21. சேஷத்வபோக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்த்ர்ய போக்யதைகள்.

(சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ர்யமும்; போக்த்ருத்வத்திற்காட்டில் போக்யதையும் சிறந்தது என்றுணர்த்துதல்)

(ப) 21. சேஷத்வம் போலன்றே பாரதந்த்ர்யம்; போக்த்ருத்வம் போலன்றே போக்யதை—என்று க்ரமேண அந்வயம். சேஷத்வத்திற் காட்டில் பாரதந்த்ரியம் ப்ரபலம்; போக்த்ருத்வத்திற் காட்டில் போக்யதை ப்ரபலம் என்றபடி. (இதை நன்கு விவரிக்கிறது அடுத்த சூர்ணிகை.) ... ... ... (21)

(தா.) 21. ஆத்மஸ்வரூபத்தை சாஸ்த்ரமுகத்தாலே அறியுமளவில் 'இவ்வாத்மா பகவானுக்கு சேஷப்பட்டது; பகவதநுபவத்தை புஜிக்குமது' என்பதாகிற சேஷத்வமும் போக்த்ருத்வமுமே ஆத்மஸ்வரூபமாக ப்ரகாசிக்கும். சாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தினுள்புக்கால் பாரதந்திரியமும் போக்யதையுமாகிற ஸ்வரூபயாதாத்மியம் பிரகாசிக்கும். இவற்றில், 'இஷ்டவிநியோகப்படுகைக்கு யோக்யமாயிருக்குந்தன்மை' என்னுமளவேயான சேஷத்வத்திற்காட்டில் சேஷிக்கு இஷ்டமானபடி விநியோகிக்கப்பட்டுத் தீருகையாகிற பாரதந்த்ரியம் சிறந்தது. இதுபோலவே போக்த்ருத்வத்திற் காட்டில் போக்யதை சிறந்தது; ஏனெனில்; ஆத்மா 'ஜ்ஞாதா' என்று தேறினபோதே 'போக்தா' என்றும் தேறுகிறது. ஜ்ஞாத்ருத்வபலத்தாலே போகதசையிலே விளைகின்ற ரஸங்களைத் தான் புஜிப்பவனாகையே போக்த்ருத்வம்; போக்யதையென்பது இப்படிப்பட்டதன்று:—ஒரு வஸ்துவிலுள்ள ரஸம் வர்ணம் முதலிய எல்லாம் போக்தாவுக்கே போக்யமாயிருப்பதுபோல ஆத்மாவிலுள்ள ஜ்ஞானம் முதலியனவும் எம்பெருமானுக்கே போக்யமாம்படியிருப்பதுதான் போக்யதையாவது. ஆகையால் போகத்தில் 'இந்த போகம் நம்முடைய போகம்' என்று அபிமாநமுண்டாவதற்கு ஹேதுவான போக்த்ருத்வத்திற் காட்டிலும் அந்த அபிமானத்தை வேரறுப்பதாய் போக்த்ருத்வத்தை சேஷியினுடைய உகப்புக்கு உபயோகியாக ஆக்கிக்கொடுப்பதான போக்யதைதான் சிறந்தது என்னத் தட்டில்லை. ... ... ... (21)

(மூ.) 22. ஜ்ஞாந சதுர்த்திகளின் மேலேயிறே ஆனந்த ஷஷ்டிகளுக்கு உதயம்.

(இந்தச்சிறப்பு திருமந்திரத்தின் அமைப்பில் நன்கு விளங்குகின்றதென்றல்)

(ப.) 22. ஜ்ஞானத்தின் மேலேயிறே ஆனந்தத்துக்கு உதயம்; சதுர்த்தியின் மேலேயிறே ஷஷ்டிக்கு உதயம்—என்று க்ரமேண அந்வயம்,

ஆத்மா போக்தா வென்னுமிடத்தைத் தெரிவிப்பது ஜ்ஞாத்ருத்வம்; (ஜ்ஞாநம்) அது ப்ரணவத்தில் மூன்றுவது அக்ஷரமான மகாரத்தில் தெரிவது. அது ஸ்வரூப விரோதியின் உதயத்தை ஸஹித்திருக்குமது அந்த ஸ்வரூப விரோதி எது வென்னில், போகத்தில் ஸ்வப்ரயோஜநத்வ ப்ரயுக்தமான ஆனந்தம்; அது காகாக்ஷி ந்யாயேந நமச்சப்தத்தாலே கழிக்கப்படுவதால் இங்ஙனம் கழிக்கப்பட வேண்டுவதான விரோதியின் உதயத்தை ஸஹித்திருக்குமது சிறந்ததன்று. முதலெழுத்தில் சேஷத்வ வாசியான (லுப்த) சதுர்த்தியும் விரோதியின் உதயத்தை ஸஹித்திருக்கும்; அந்த விரோதி எதுவென்னில்; ஸ்வ ரக்ஷணத்திற்கு ஹேதுவான ஸ்வாதந்த்ர்யம். (அதைச் சொல்லுமது ஷஷ்டி;) அது நஞ்ஞாலே கழிக்கப்படுவதால் இங்ஙனம் கழிக்கப்பட வேண்டுவதான விரோதியின் உதயத்தை ஸஹித்திருக்குமது சிறந்ததன்று. ... ... (22)

(தா.) 22. "ஜ்ஞாந சதுர்த்திகளின்மேலேயிறே ஆநந்த ஷஷ்டிகளுக்கு உதயம்" என்பது மூலத்திலுள்ள திவ்யஸூக்தி இதில் ஜ்ஞாநமென்று - ப்ரணவத்திலுள்ள மகாரத்தைக் காட்டினபடி. சதுர்த்தியென்று - அந்த ப்ரணவத்திலேயே

அகாரத்தின்மேல் ஏறிக்கழிந்த சதுர்த்தியைக்காட்டினபடி. ஆநந்தமென்று - நாராயண பதத்தின் மேலுள்ள சதுர்த்தீவிபக்தியைக் காட்டினபடி ஷஷ்டியென்று - (நம: என்றவிடத்திலுள்ள, ம: என்பதைக் காட்டினபடி. இனி இதன் கருத்தை விவரித்துரைப்போம் காண்மின்.

திருமந்திரத்திற்கு உள்ளீடான ப்ரணவத்தில் மறைந்துகிடக்கிற சதுர்த்தீவிபக்தியையும் முடிவில் கிடக்கிற மகாரத்தையும் எடுத்துக்கொள்வோம். இதில் சதுர்த்தீவிபக்தியானது சேஷத்வத்தை விளக்குகின்றது. மகாரமானது "மந—ஜ்ஞாநே" என்கிற தாதுவிலிருந்து தேறின பதமாதலால் ஆத்மாவை ஜ்ஞாதாவென்று வெளியிட்டு, ஜ்ஞாதாவானபோதே கர்த்தாவாக வேண்டுதலால், கர்த்தாவானபோதே போக்தாவாக வேண்டுதலால், ஆக இவ்வழியாலே 'ஆத்மா போக்தா' என்று வெளியிட்டதாகிறது. இவ்வளவால் ஏற்பட்ட சேஷத்வமும் போக்த்ருத்வமும் மேலே ஸ்வ விரோதிகளின் உத்பத்தியை உடைத்தாயிருக்கும். எங்ஙனேயென்னில், பிரணவத்திற்கு அடுத்தபடியாக நமஸ்ஸு இருக்கிறது. அந்த நம:பதமானது விரோதியைக் கழிக்கின்றதென்னுமிடம் ஸ்பஷ்டம். உலகத்தில் அப்ரஸக்தமானதற்கு ப்ரதிஷேதம் கிடையாது. இங்கு (நமஸ்ஸில்) ந என்று நிஷேதம் செய்திருப்பதால் ப்ரஸக்தமான விரோதியையே ப்ரதிஷேதிக்கின்றதென்று கொள்ளவேணும். ப்ரஸக்தமான விரோதி எதுவென்று ஆராய்ந்தால், ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் உபேய விரோதியும் என்று விளங்காநின்றது. நம:பதமானது காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் அந்வயிக்கக்கடவது. (அஷ்டச்லோகியில் இரண்டாவது ச்லோகத்தில் இது விசதம்) ஆகவே, நமஸ்ஸானது கீழுள்ள ப்ரணவத்தோடே அந்வயித்து ஸ்வரூப விரோதியைக்கழிக்கின்றதென்றும், மேல் * நாராயணுயவோடே அந்வயித்து உபேய விரோதியைக் கழிக்கின்றதென்றும் ஸ்வஸ்தானத்திலேயேயிருந்துகொண்டு உபாயவிரோதியைக் கழிக்கின்றதென்றும் சிக்ஷிக்கப்பட்டுள்ளது விரோதிகள் உதிக்கையாலன்றோ அவற்றைக் கழிக்கவேண்டும்படியாய் நேர்ந்தது. போக்த்ருத்வபர்யவஸாயியான ஜ்ஞாநம் மகாரத்தில் தோன்றியுள்ளது. அந்த மகாரத்தை விவரிப்பதும் நாராயண பதத்தின் மேலுள்ளதுமான சதுர்த்தியில் சொல்லப்படுகிற போகத்தில் ஸ்வப்ரயோஜநத்வப்ரயுக்தமான ஆனந்தம் உதிக்கிறது; அப்படி உதிக்கின்ற அந்த ஆனந்தத்தைத்தான் கீழுள்ள நம: பதம் கழிக்கின்றது. ஆகவே ஜ்ஞாத்ருத்வமடியாகவந்த போக்த்ருத்வமானது அந்த போகத்திலே ஸ்வார்த்தத்வமாகிற கல்மஷத்தின் உத்பத்தியை ஸஹித்துக்கொண்டிருந்து பிறது அதைக் கழிக்கின்றதாகவுள்ளது.

இப்படியே லுப்த சதுர்த்தியில் சேஷத்வம் தோன்றியிருக்கச்செய்தேயும், தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்வதில் முயற்சிசெய்வதற்கு ஹேதுவான ஸ்வாதந்திரியத்தைக் காட்டுகிற ம: என்கிற ஷஷ்டி ஏற்பட்டு, அப்படிப்பட்ட ஸ்வாதந்த்ரியத்தை 'ந' என்று கழிக்கவேண்டியதாயிற்று. ஆகவே சேஷத்வமும் ஒரு விரோதியின் உத்பத்தியை ஸஹித்துக்கொண்டிருந்து பிறகு அதைக் கழிக்கின்றதாகவுள்ளது. அப்படியிருந்தாலென்ன? விரோதிகளைக் கழித்தாயிற்றே என்னக்கூடாது. அடியோடு விரோதியே ஏற்படாமலும் அதைக் கழிக்கவேண்டாமலும் இருக்க

வேண்டுவதன்றோ முக்கியம். சேஷத்வம் மாத்திரம் ஏற்பட்டால் ஒரு விரோதி யுண்டாகி அதனைப் பாரதந்திரிய வேஷத்தால் கழிக்கலாகிறது. போக்த்ருத்வம் மாத்திரம் ஏற்பட்டால் அதன்மேல் ஒரு விரோதியுண்டாகி அதனை போக்யதாவேஷத்தால் கழிக்கலாகிறது. பாரதந்த்ர்யபோக்யதைகள் ஏற்பட்டுவிட்ட பின்பு இவற்றின்மேலும் ஏதாவது விரோதி ஏற்படுகிறதோவென்று பார்த்தால் ஒரு விரோதியும் உண்டாக வழியில்லை. ஆகவே சேஷத்வ போக்த்ருத்வங்கள் வடிக் கட்டவேண்டிய நிலைமையிலுள்ளன; பாரதந்திரிய போக்யதைகள் வடிக்கட்டியான நிலைமையிலுள்ளன; இதுகொண்டே இன்னது சிறந்ததென்பதை நாம் எளிதாகத் தெரிந்துகொள்ளலாமன்றோ?

[இப்படி உத்க்ருஷ்டமான பாரதந்திரிய போக்யதைகளை ஆத்மாவுக்கு வடிவாக ஸாரஜ்ஞரான திருமந்திரநிஷ்டர் உணர்ந்தமையால் அவர்களுக்கு ஸ்வயத்ந ராஹித்ய முண்டாயிற்று; இங்ஙனன்றியே கீழ்ப் படியான சேஷத்வ போக்த்ருத் வங்களை ஆத்மாவுக்கு வடிவாக சாஸ்த்ரிகள் உணர்ந்தமையாலே அவர்களுக்கு ஸ்வப்ரயத்நபரத்வ முண்டாயிற்று—என்று நிகமித்துக்கொள்க,] — (22)

(மூ.) 23. முனைத்தெழுந்த ஸூர்யதுல்ய யாதாத்ம்ய சரமம் விதியில்காணும் ப்ரதம மத்யம தசைகளைப் பகல்விளக்கும் மின்மினியுமாக்கும்.

[ஸ்வரூபத்தின் உண்மையுணர்ச்சி நிலைமையில் தோற்றுகிற பாரதந்திரிய போக்யதைகள் ஸ்வரூப ஸாமாந்ய ஜ்ஞாநதசையில் தோற்றுகிற சேஷத்வ போக்த்ருத்வங்களைக் கீழ்ப்படுத்தும் விதம்.]

(ப.) 23. முனைத் தெழுந்த ஸூர்யதுல்ய யாதாத்ம்ய சரமம்—* முனைத் தெழுந்த திங்கள் தானாய் * என்றும், * யதா ஸூர்யஸ்ததா ஜ்ஞாநம் * என்றும் சொல்லுகிற படியே சந்திரனையும் ஸூர்யனையுமொத்ததான ஸ்வரூபஸாக்ஷாத்காரஜ்ஞானத்தி னுடைய உண்மைநிலைமையாயும் கீழே வடிக்கட்டின வேஷமாகச் சொல்லப் பட்டதாயுமிருக்கிற பாரதந்த்ர்ய போக்யதைகளானவை.

விதியில் காணும் ப்ரதம மத்யமதசைகளை— * விளக்கினை விதியில் காண்பார் * என்கிறபடியே சாஸ்த்ரவிதிப்படியே ச்ரவணம் மனனம் முதலியவற்றாலே காணப்படுகிற முதல் தசையான சேஷத்வத்தையும் மத்யமதசையான போக்த்ருத் வத்தையும்,

பகல்விளக்கும் மின்மினியுமாக்கும்—பகல் விளக்குப்போலே அப்ரயோஜநமாகவும் மின்மினிபோலே அல்பப்ரகாசமாகவும் பண்ணும். ... ... (23)

(ஸா.) 23 திருநெடுந்தாண்டகத்தில் "முனைத்தெழுந்த திங்கள்" என்றது ஸ்வரூபஸாக்ஷாத்காரஜ்ஞாநம். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பராசரபகவான் "யதா ஸூர்யஸ் ததா ஜ்ஞாநம்" என்று அந்த ஜ்ஞாநத்தை ஸூர்யதுல்யமாகப் பணித் தான்; அகவிருளை அடியோடே ஒழிப்பதானதுபற்றி ஸூர்யனோடொக்கப் பேசப் பட்டது. ஆக, முனைத்தெழுந்த திங்களோடும் ஸூர்யனோடும் துல்யமான யாதொரு ஜ்ஞானமுண்டு - ஸ்வரூப ஸாக்ஷாத்காரஜ்ஞானம்; அதனுடைய யாதாத்

மிய சரமம் எதுவென்றால், ஸ்வரூப யாதாத்மிய வேஷமாக நிஷ்கர்ஷிக்கப்பட்டுக் கடைசியாகத் தேறின பாரதந்திரிய போக்யதைகள். இவையானவை, சாஸ்திரவிதிப்படியே ச்ரவணம் மனனம் முதலியவற்றால் காணப்படுகிற முதல்நிலைமையான சேஷத்வத்தையும் நடுநிலைமையான போக்த்ருத்வத்தையும் பயனற்றதாகப் பண்ணும்.

[இந்த சூர்ணிகையில் ப்ரதமம், மத்யமம், சரமம் என மூன்று பதங்கள் உள்ளன. திருமந்திரத்தில் முதல் அக்ஷரத்தில் லுப்தசதுர்த்தியிலே தோன்றின சேஷத்வம் ப்ரதமதசை என்பதனால் விவக்ஷிதம். பிறகு அந்த சேஷத்வத்திற்கு ஆச்ரயத்தைச் சொல்லுமதான மகாரத்தில் தோன்றின ஜ்ஞாத்ருத்வமடியாக வந்த போக்த்ருத்வம் ' மத்யமதசை ' என்பதனால் விவக்ஷிதம், அதற்குமேல் நமஃபத நாராயணாய பதங்களில் விளங்கின பாரதந்திரியமும் போக்யதையும் ' சரமம் ' என்பதனால் விவக்ஷிதம்.] ஆக, [இந்த சூர்ணிகையினால் தேறினது ஏதென்னில்;- ஸ்வப்ரயத்ந லவலேசத்தையும் ஸ்வப்ரயோஜன லவலேசத்தையும் ஸஹியாதவையாய் எம்பெருமானுடைய போகத்திற்கு மிகவும் பாங்காயிருந்துகொண்டு ஸ்வரூபத்தை நிறம்பெறுவிக்கும் பாரதந்திரியமும் போக்யதையும் கீழ்ச்சொன்ன தன்மைகளில்லாத சேஷத்வத்தையும் போக்த்ருத்வத்தையும் கீழ்ப்படுத்தித் தாமே மேலாயிருக்கு மென்றதாயிற்று.] .... ... ... ... .... (23)

(மூ.) 24. **நாலிலொன்று ப்ரவர்த்தகம், ஒன்று நிவர்த்தகம்.**

**[கீழே ப்ரவருத்திபரராகச் சொல்லப்பட்ட சாஸ்திரிகளுக்கும் நிவ்ருத்திபரராகச் சொல்லப்பட்ட ஸாரஜ்ஞர்களுக்கும் முறையே ப்ரவர்த்தக நிவர்த்தகங்கள் இன்னதென்கிறது]**

(ப.) 24. **நாலில்**—சேஷத்வ போக்த்ருத்வங்களும் பாரதந்த்ர்ய போக்யதைகளுமாகிற நான்கினுள்ளும், **ஒன்று**—போக்த்ருத்வமாகிற ஒன்றானது, **ப்ரவர்த்தகம்**—போக்தாவானவன் போக்யவஸ்து ஸித்திக்க முயல வேண்டாவோ வென்னும் நினைவாலே போக்யபூத பகவத்விஷய லாபார்த்தமான உபாயப்ரவ்ருத்தியிலே மூட்டும்; **ஒன்று**—முன்பு சொன்ன நாலில் ஒன்றான போக்யதையானது, **நிவர்த்தகம்**—' போக்தாவான எம்பெருமானன்றோ ஸ்வபோக்யமான இவ்வஸ்துவைப் பெறுகைக்கு முயல வேண்டும், தத்போக்யபூதமான இவ்வஸ்து அவனைப் பெறுதற்கு முயற்சி செய்ய ப்ராப்தியற்றது ' என்னும் நினைவாலே உபாயப்ரவ்ருத்தியில் நின்றும் மீளும்படி பண்ணும். ... ... ... ... ... (24)

(தா.) 24. கீழே: (19) " சாஸ்திரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையு மிடுக்கிப் பிறவிக் கடலைநீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும் விட்டு " என்று சாஸ்த்ர நிஷ்டர்களை ப்ரவ்ருத்திபரராகவும் திருமந்திர நிஷ்டர்களை நிவ்ருத்திபரராகவும் சொல்லியிருக்கிறதே, அதற்குக் காரணமேதென்னில்; சேஷத்வ போக்த்ருத்வங்கள் பாரதந்திரிய போக்யதைகள் என்கிற நான்கினுள் சேஷத்வபோக்த்ருத்வங்களே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று கண்ட சாஸ்த்ர

நிஷ்டர்களை, போக்த்ருத்வமானது "போக்தாவானவன் பேக்யவஸ்து கிடைப்பதற்கு முயற்சி செய்யவேண்டாவோ" என்னும் நினைவாலே போக்யபூதமான பகவத் விஷயத்தின் லாபத்திற்கு உறுப்பான உபாயப்ரவ்ருத்தியிலே கொண்டு மூட்டும். பாரதந்திரிய போக்யதைகளையே ஸ்வரூபவுண்மைவடிவென்று கண்ட ஸாரஜ்ஞர்களாகிய திருமந்திர நிஷ்டர்களை போக்யதையானது "போக்தாவான எம்பெருமானன்றோ தனக்கு போக்கியமான இவ்வாத்மவஸ்துவைப் பெறுகைக்கு முயற்சி பண்ணுவான்; அப்பெருமானுக்கு போக்யமாயிருக்கு மிவ்வாத்மவஸ்துவுக்கு அவனைப் பெறுவதற்கான முயற்சிகளைச்செய்ய அதிகாரமில்லை" என்னும் நினைவாலே உபாய ப்ரவ்ருத்தியில் நின்றும் மீள்விக்கும்; (அதாவது) நிவ்ருத்தியிலே மூட்டும்.

[சேஷத்வ போக்த்ருத்வ பாரதந்திரிய போக்யதைகளாகிற நாலில் ஒன்றான போக்த்ருத்வமானது சாஸ்த்ரிகளை உபாயாநுஷ்டாநத்தில் ப்ரவர்த்திப்பிக்கும், போக்யதையாகிற மற்றொன்று ஸாரஜ்ஞரை உபாயாநுஷ்டாநத்தில் நின்றும் நிவர்த்திப்பிக்கும் என்றதாயிற்று.] போக்த்ருத்வமென்றது—போக்த்ருத்வாநுஸந்தானமென்றபடி; போக்யதையென்றது போக்யாநுஸந்தானமென்றபடி. .... (24)

**(மூ) 25. முற்பாடர்க்கு க்ரியாங்கமானவை யிரண்டும் செயல்தீர்ந்தார் வ்ருத்தியில் ஸ்வநிர்ப்பந்தமறுக்கும்.**

**[திருமந்திர நிஷ்டர்களுக்கும் சேஷத்வ போக்த்ருத்வங்களுண்டாயினும் அவர்களுக்கு அவை செய்வது இன்னதென்பது.]**

(ப.) 25. **முற்பாடர்க்கு**—சாஸ்த்ரிகளென்று முதலிலே சொல்லப்பட்ட உபாஸகர்க்கு, **க்ரியாங்கமானவை இரண்டும்**—உபாஸனத்திற்கு முன்னே விளையக்கடவதான கர்மத்திற்கு உத்பத்தியிலே ஸஹகரித்துக்கொண்டு அதற்கு அங்கங்களாயிருக்கிற சேஷத்வ போக்த்ருத்வங்களாகிற அவையிரண்டும், **செயல்தீர்ந்தார் வ்ருத்தியில்**—* செயல் தீரச் சிந்தித்து வாழ்வாரே வாழ்வார் * என்றதை யநுஸந்தித்து உபாய ரூபப்ரவ்ருத்தியில் நிவ்ருத்தரான ப்ரபந்நருடைய கைங்கர்ய ரூபப்ரவ்ருத்தியில், **ஸ்வநிர்ப்பந்தம் அறுக்கும்**—அவனுகப்பைப் பின்செல்லுமதொழிய வேறொன்று மின்றிக்கேயிருக்கும். .... .... .... .... (25

(தா.) 25. சாஸ்திரிகளென்று முற்படச் சொல்லப்பட்ட உபாஸகர்களுக்குக் கருமத்திற்கு அங்கமாகவுள்ள சேஷத்வ போக்த்ருத்வங்களிரண்டும், 'செயல் தீரச்சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்" என்கிற திருமழிசைப்பிரானருளிச் செயலின்படியே "இவ்வாத்மா செய்யக்கடவதொன்றுமில்லை, எம்பெருமானே நிர்வாஹகன்" என்று அநுஸந்தித்து உபாயாநுஷ்டானமாகிறப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தரான ப்ரபந்நருடைய கைங்கரியமாகிற வ்ருத்தியில் எம்பெருமானுகப்பைப் பின்செல்லுமது தவிர, தம்முடைய நிர்ப்பந்தத்தைக் காட்டிக்கொள்ளமாட்டா, எதிர்த்தலைக்கு அதிசயத்தை விளைப்பதாகிற சேஷத்வம் தன்னுடைய அதிசயத்தில் விருப்பத்தாலே வரும் ஸ்வநிர்ப்பந்தத்தைத் தவிர்த்தே தீரும். இனி, போக்த்ருத்வம் ஸ்வநிர்ப்பந்

த்தைத் தவிர்ப்பது எங்ஙனே என்னில், திருமந்திரத்தின் ஸாரத்தை யுணர்ந்த வர்க்குப் பாரதந்திரிய போக்யதைகள் நன்கு கைவந்திருக்குமாகையாலே அப்படிப் பட்டவர்களுடைய போக்த்ருத்வம் தங்கள் ரஸத்திற்கு உறுப்பல்லாமல் எம்பெருமானுடைய ரஸத்திற்கே உறுப்பாயிருக்குமிறே. "ஆனந்தம் அவன் ப்ரீதியைத் துளிரெழுப்ப" என்று நம்பிள்ளை அருளிச்செய்வராம். அதாவது—சேதநனுடைய குணங்களிலே ஆனந்தமென்பதும் ஒரு குணமாகவுண்டே, அதை இல்லை செய்துவிட்டு போக்த்ருத்வ மன்றிக்கே போக்யதை மாத்திரமே வடிவு என்று சொல்லிவிடலாமோவென்னில்; சேதநனுக்கு ஆனந்தகுணம் இல்லையென்று சொல்லிவிடுகிறோமல்லோம்; அதுவுண்டு; எவ்விதமாக வுண்டெனில், இவ்வாத்மாவை அநுபவிப்பதனாலே எம்பெருமானுக்கு விளைகிற மகிழ்ச்சியை வளரச்செய்யுங் காரியத்திலே இந்த ஆனந்தம் உதவும். இவன் சிறிது ஆனந்தத்தைக் காட்டிக்கொள்ளாதபோது ஒரு மணைக்கட்டையை அநுபவிப்பதாக எம்பெருமானுக்கு இருக்குமேயொழிய ஒரு சேதநனோடு அநுபவித்ததாக இராதே. அதற்காக இவன் சிறிது ஆனந்தம் காட்டிக்கொள்ளவேணுமே; அவ்வளவுதான். ஆனதுபற்றியே * அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் * என்று தனது போக்யதையை முன்னிட்டு எம்பெருமானை உகப்பிக்க இழிந்தவன் அதற்கடுத்தபடியாக * "அஹமந்நாதஃ அஹமந்நாதஃ அஹமந்நாதஃ" * என்று தன்னுடைய போக்த்ருத்வத்தையும் முன்னிடுகிறது. இவற்றையெல்லாம் உட்கொண்டே "வ்ருத்தியில் ஸ்வநிர்ப்பந்தமறுக்கும்" என்று அருளிச்செய்யப்பட்டது.

மூலத்தில் "முற்பாடர்க்கு க்ரியாங்கமானவையிரண்டும்" என்பதால் சேஷத்வமும் போக்த்ருத்வமும் உபாஸகர்களுக்குக் கருமத்திற்கு அங்கமென்று பேசப்பட்டது. அது எங்ஙனேயெனின்; போக்த்ருத்வமானது போக்யவஸ்து கிடைப்பதற்கான முயற்சியிலே மூட்டுதலாலும் அந்த முயற்சி ஆத்மஜ்ஞாநபூர்வகமாக ஆகவேண்டுகையாலே சேஷத்வமும் அதுக்கு உறுப்பாகையாலும் ஆக இவையிரண்டும் உபாஸநத்திற்கு முதலிலேயாவதான் கருமத்திற்கு உத்பத்தியிலே உதவிசெய்யும் முகத்தால் அதற்கு அங்கங்களாயிருக்குமென்று உணர்க.] .... .... (25)

(மூ) 26. கர்மகைங்கர்யங்கள் ஸத்யாஸத்யநித்யாநித்யவர்ணதாஸ்யாநுகுணங்கள்.

(கர்ம கைங்கரியங்களின் அதிகாரப்பொருத்தம்)

(ப.) 26. [கர்மம் அஸத்யாநித்யவர்ணாநுகுணம்; கைங்கர்யம் ஸத்யநித்யதாஸ்யாநுகுணம் என்று யோஜிப்பது] கர்மம்—க்ரியாசப்தத்தாலே சொல்லப்பட்ட கர்மமானது, அஸத்ய அநித்ய வர்ணாநுகுணம்—அஸத்யமும் அநித்யமுமான ஜாதிக்கு ஏற்றிருக்கும்; கைங்கர்யம்—வ்ருத்தி சப்தத்தால் சொல்லப்பட்ட கைங்கர்யமானது, ஸத்யநித்யதாஸ்யாநுகுணம்—ஸத்யமும் நித்யமுமான தாஸத்வத்திற்கு ஏற்றிருக்கும். (பொருந்தியிருக்குமென்கை.) .... .... .... (26)

(தா.) 26. கீழ்ச் சூர்ணிகையில் க்ரியா என்னும் சப்தத்தால் சொன்ன கர்மமும், வ்ருத்தி என்னும் சப்தத்தால் சொன்ன கைங்கரியமும் முறையே சாஸ்த்ரஜ்ஞர்களுடையவும் ஸாரஜ்ஞர்களுடையவும் எந்த அம்சத்திற்கு ஏற்றிருக்குமென்னில்;

கர்மாநுஷ்டாநமானது அஸத்யமுமாய், அநித்யமுமான வருணத்திற்கு [ஜாதிக்கு] ஏற்றிருக்கும். கைங்கரியமானது ஸத்யமுமாய் நித்யமுமான அடிமைக்கு ஏற்றிருக்கும்.

[வருணத்தை அஸத்யமென்றும் அநித்யமென்றும் பேசுவது ஏனெனில்; அது ஆத்மாவுக்கு ஏற்பட்ட வடிவன்றே. வந்தேறியான தேஹத்தளவிலே நின்று அந்த தேஹத்தோடு கூடவே கழிந்து போவதன்றோ வருணமென்பது. ஆகவே அதனை அஸத்யமென்றும் அநித்யமென்றும் சொல்லக்குறையில்லை. அடிமையென்பது அப்படிப்பட்டதன்று; "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்று அது ஆத்மாவுக்கே ஏற்பட்ட வடிவாகி ஆத்மாவுள்ளவளவும் தொடருகையாலே அது ஸத்யமும் நித்யமுமாகப் பேசப்பட்டது.] .. ... (26)

(மூ.) 27. இவற்றுக்கு விதிராகங்கள் ப்ரேரகங்கள்.

(கருமத்திற்கும் கைங்கரியத்திற்கும் ப்ரேரகம் இன்னதென்பது)

(ப.) 27, இவற்றுக்கு—கர்மத்திற்கும் கைங்கர்யத்திற்கும் (ப்ரேரகம் எவையென்னில்;) விதிராகங்கள் ப்ரேரகங்கள்—சாஸ்த்ரவிதியானது கர்மத்துக்கு ப்ரேரகம்; பகவதநுபவத்தாலுண்டாகும் உகப்பானது கைங்கர்யத்துக்கு ப்ரேரகம். .. (27)

(தா.) வேதங்களில் "யஜேத" என்றும் "ஜுஹுயாத்" என்றுமுள்ள விதிகள் கர்மத்தை ப்ரேரிக்கின்றன. கைங்கரியம் அப்படி விதியினால் விளைவதன்று. பகவதநுபவ ஜநிதப்ரீதி காரிதகைங்கரியமென்றும் "உகந்து பணிசெய்து" என்றும் பெரியார் அருளிச் செய்கையாலே அநுராகமே கைங்கரியத்தை ப்ரேரிக்கின்றது. சாஸ்த்ரவிதிதூண்டக் கருமம் செய்வது; அன்புதூண்டக் கைங்கரியம் செய்வதென்கை. ... ... ... . (27)

(மூ.) 28. மண்டினாரும் மற்றையாருமாச்ரயம்.

(கருமத்திற்கும் கைங்கர்யத்திற்கும் ஆச்ரயபூதர் இன்னாரென்பது)

(ப.) 28 மண்டினாரும் மற்றையாரும் ஆச்ரயம்—* கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினார் * என்னப்பட்ட திவ்ய தேசப்ரவணர்களான ப்ரபந்நர்கள் கைங்கர்யத்திற்கு நிலம்; அந்தப் பாசுரத்திலேயே * மற்றையார்க்கு உய்யலாமே * என்ற மற்றையாரான உபாஸகர் கருமத்திற்கு நிலம். ... (28)

(தா.) 28. ப்ரபந்நர் கைங்கரியத்துக்கு ஆச்ரயபூதர் உபாஸகர் கருமத்திற்கு ஆச்ரயபூதர். ... ... ... ... (28)

(மூ) 29. அருள்முடியநிறுத்தியடையநின்றதும் நல்லதோரருள்தன்னாலே நன்று மெளியனாகிறதும் விஷயம்.

(கருமகைங்கர்யங்களுக்கு இலக்கு இன்னதென்பது)

(ப) 29 அருள்முடிய—*எத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவதாழியான்பால் * என்கிறபடியே ஆச்ரயணத்தின் பலஸித்தியானது தன்னுடைய அருளாலேயாம்படி

**நிறுத்தி**—* தன் மூர்த்தி நிறுத்தினன் தெய்வங்களாக * என்கிறபடியே தனக்கு உடலான தேவதைகளை நிறுத்தி,

**அடையநின்றது**—* அவரவர் விதிவழியடைய நின்றனர் * என்கிறபடியே அவரவர் ஆச்ரயித்துப் பலனடையும்படி தேவதாந்தர்யாமியாய் நின்றவிடம், **விஷயம்**—கர்மத்துக்கு இலக்கு.

**நல்லதோரருள்தன்னாலே நன்றும் எளியனாகிறது**—* நல்லதோரருள்தன்னாலே காட்டினான் திருவரங்கம் * என்றும் * கருத்துக்கு நன்று மெளியனாய் * என்றும் சொல்லுகிறபடியே கேவலம் தனது க்ருபையினாலே மிகவும் ஸுலபனாய்க்கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கிறவிடம். **விஷயம்**—கைங்கர்யத்துக்கு இலக்கு. .... (29)

(தா) 29. அவரவர்கள் ஏதேனும் தேவதைகளை ஆச்ரயித்துப் பெற நினைக்கும் பேறுகள் எம்பெருமான் தன்னுடைய அநுக்ரஹத்தாலே தேறுகின்றன என்னும்படி, தனக்குச் சரீரபூதர்களான தேவதைகளை நிறுத்தி அவர்களுக்கு அந்தர்யாமியாய் நின்றவிடம் கருமத்திற்கு இலக்கு: அங்ஙனன்றியே கேவலம் தன் கருணையாலே மிகவு மெளியனாய்க்கொண்டு அர்ச்சாவதாரமாய் நிற்கிற விடமே கைங்கரியத்திற்கு இலக்கு

[கர்மாநுஷ்டானங்களில் அக்நி, இந்திரன், ஸோமன், வருணன், ப்ரஜாபதி, பசுபதி, ப்ருஹஸ்பதி - என்கிற தேவதைகளின் பெயர் பலகாலும் வரும். அந்தத் தேவதைகளை நோக்கி வழிபாடுகள் செய்யப்படும். ஆனால் அந்த ஆராதனைகள் அந்தத் தேவதைகளுக்கு அந்தர்யாமியான எம்பெருமானிடமே போய்ச் சேருகின்றனவென்பது வேதாந்திகளின் ஸித்தாந்தம். ஆனதுபற்றியே கருமங்களுக்கு தேவதாந்தர்யாமிபகவான் இலக்கானவன் என்றது ... — (29)

(மூ.) 30. இவற்றாலே ஸாதாரண மஸாதாரணமென்னும்.

(ஸாதாரண அஸாதாரண வகுப்பு)

(ப.) 30. **இவற்றாலே** - இப்படி தேவதாந்தர்யாமியையும் அர்ச்சாவதாரத்தையும் இலக்காகவுடைமையாகிற இத்தன்மைகளாலே, **ஸாதாரணம் அஸாதாரணம் என்னும்**— கர்மம் ஸாதாரணமெனப்படும்; கைங்கர்யம் அஸாதாரணமெனப்படும். ... (30)

(தா.) 30. கருமங்கள் தேவதைகளுக்கு அந்தர்யாமியான பெருமானை இலக்காக வுடையனவாய் கைங்கர்யம் அர்ச்சாவதாரப்பெருமானை இலக்காக வுடையனவாய் இருத்தல்பற்றிக் கருமத்தை ஸாதாரணமென்றும் கைங்கர்யத்தை அஸாதரணமென்றும் சொல்லுவர்கள். அதாவது—ஸாதாரணமான வடிவோடு கூடிய பகவானை விஷயமாகவுடைய கருமம் ஸாதாரணமெனப்பட்டது; அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹத்தோடுகூடிய எம்பெருமானை விஷயமாக வுடைய கைங்கரியம் அஸாதாரணமெனப்பட்டது. ... ... (30)

(மூ.) 31. ஜாத்யாச்ரமதீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள்போலே அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்

(கைங்கரியபரர்க்குக் கருமாநுஷ்டானம் கழியும் விதம்.)

(ப.) 31. **ஜாதி ஆச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள்போலே**—ப்ராஹ்மண்யம் முதலிய ஜாதிதோறும் தர்மங்கள் பேதிக்குமாபோலவும், ப்ரஹ்மசர்யம் முதலிய ஆச்ரமந்தோறும் தர்மங்கள் பேதிக்குமாபோலவும், யஜ்ஞாதி தீக்ஷைகளிலே தர்மங்கள் பேதிக்குமாபோலவும்,

**அத்தாணிச்சேவகத்தில்**—அந்தரங்கஸேவையாயிருக்கிற கைங்கர்யத்திலே அதிகரித்தவர்களுக்கு, **பொதுவானது நழுவும்**—கீழே ஸாதாரணமென்று பேசப்பட்ட கர்மமானது உறங்குவான் கைப்பண்டம்போலே தன்னடையே நழுவிப்போம். (31)

(தா.) 31. ப்ராஹ்மண்யம் முதலிய ஜாதிகளிலும், ப்ரஹ்மசர்யம் முதலிய ஆச்ரமங்களிலும் ஜ்யோதிஷ்டோமம் முதலிய யஜ்ஞ கர்மங்களிற் கொள்ளும் தீக்ஷைகளிலும் தொழில்கள் எப்படி பேதப்பட்டிருக்கின்றனவோ, அப்படி அத்தாணிச் சேவகமென்கிற அந்தரங்க ஸேவையாகிற கைங்கரியத்திலே அதிகரித்தவர்களுக்கு—தேவதாந்தர்யாமியை விஷயமாகவுடைத்தாயும் எம்பெருமானுக்கு சரீரபூதர்களான தேவதைகளின் வழியாக அப் பெருமானுக்கு ஆராதனமாகிறபடியாலே ஸாதாரணமாயும் இராநின்ற கருமம் உறங்குவான் கைப்பண்டம்போலே தன்னடையே நழுவும்.

[இத்தால் — வர்ணாச்ரமாதி வ்யவஸ்தைகளிலே ஊன்றியிருப்பவர்களுக்கு தத்தமது அதிகாரத்திற்கு ஏற்ற தருமந் தவிர ஏலாத மற்றவை த்யாஜ்யமென்று கழிக்கப்படுமாபோலே, ஸ்வரூபவுண்மைநிலையைக் கண்டறிந்த விலக்ஷணர்கட்கு அதற்கேற்ற காரியந்தவிர, ஏலாதவை த்யாஜ்யமாய்த் தன்னடையே விட்டு நீங்குமென்றதாயிற்று இப்படியிருக்கச்செய்தே, ஸாரஜ்ஞர்களான சிஷ்டர்களும் கர்மாநுஷ்டாநம் செய்து போருவது லோகஸங்க்ஹார்த்தம் என்னுமிடம் இங்கு விரிப்பிற் பெருகும்] ... ... ... .... (31)

(மூ.) 32. ஸாதனஸாத்யங்களில் முதலும்முடிவும் வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது.

[கைங்கரிய நிஷ்டர்களுக்குக் கர்மநிஷ்டர்களோடு சேர்த்தியில்லாமை]

(ப) 32. [ஸாதனத்தில் முதல் வர்ணதர்மிகளென்று துறைவேறிடுவித்தது; ஸாத்யத்தில் முடிவு தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது—என்று யோஜிப்பது.] **ஸாதனத்தில் முதல்**—உபாயங்களில் முதலடியான கருமமானது, **வர்ண தர்மிகளென்று**—ஸாதாரண ஜாதி தர்மநிஷ்டர்களென்னும்படியாக்கி;

**ஸாத்யத்தில் முடிவு** — உபேயத்தில் முடிந்த நிலமான கைங்கர்யமானது, **தாஸவ்ருத்திகளென்று** — அஸாதாரண கைங்கர்ய நிஷ்டர்களென்னும்படியாக்கி (இவ்வகையாலே,)

துறை வேறிடுவித்தது—உறவறுத்துத் துறை வேறிட்டுப் போகப்பண்ணிற்று இங்கு அறியவேண்டிய ஐதிஹ்யம் கீழேகாண்க.) .... ... (32)

(தா.) 32. ஸாதநம் ஸாத்யம் [அதாவது, உபாயம் உபேயம்] என்ற இரண்டு வகுப்பினுள்ளே உபாய வகுப்பில் முதலடியான கருமமும் உபேய வகுப்பில் முடிந்த நிலமான கைங்கரியமும் இந்த நெடுவாசி யறிந்தவர்களை "நீங்கள் வர்ண தர்மிகள், நாங்கள் தாஸவ்ருத்திகள்" என்று உறவறுத்துத் துறைவேறிட்டுப் போகப்பண்ணிற்று. [அதாவது—திருவயிந்திரபுரத்திலே வில்லிபுத்தூர்ப்பகவரென்பாரொருவர் எல்லாருமொரு துறையிலே அநுஷ்டானம் பண்ண 'தாம் தனியே ஒரு துறையிலே அநுஷ்டானம் பண்ணுவாராய் ஒரு நாள் அநுஷ்டானம் பண்ணிவிட்டுத் தடாகத்தில் நின்றும் திருமாளிகைக்குத் திரும்பி யெழுந்தருளும்போது அங்கிருந்த அந்தணர்கள் "ஸ்வாமிந்! எங்கள் துறையிலே அநுஷ்டானம் பண்ண வாராதொழிவதேன்?" என்று கேட்க, அதற்கு அந்த வில்லிபுத்தூர்ப்பகவர் * விஷ்ணு தாஸா வயம் யூயம் ப்ராஹ்மணா வர்ணதர்மிணஃ- அஸ்மாகம் தாஸ வ்ருத்தீநாம் யுஷ்மாகம் நாஸ்தி ஸங்கதிஃ=நாங்கள் எம்பெருமா னடியார்களான ஸ்ரீவைஷ்ணவர்கள்; நீங்கள் வர்ணதர்மத்திலே ஊன்றின அந்தணர்கள்; ஆகவே உமக்கும் எமக்கும் சேர்த்தி பொருந்தாது காண்மின்" என்று சொல்லிவிட்டு எழுந்தருளினாராம். ... ... ... .... (32)

(மூ.) 33. வேதவித்துக்களும் மிக்க வேதியரும் ச்சந்தஸாம்மாதாவாலும் அதுக்குந் தாயாய்த் தாயினுமாயின செய்யுமத்தாலும் பிறப்பிக்குமது இருவர்க்கும் ச்ரேஷ்ட ஜந்மம்.

[கர்மநிஷ்டர்களுடையவும் கைங்கரிய நிஷ்டர்களுடையவும் ஜன்மவிசேஷம்]

(ப.) 33. [வேதவித்துக்கள் ச்சந்தஸாம் மாதாவால் பிறப்பிக்குமது ஒரு வகுப்பினர்க்கு ச்ரேஷ்டஜன்மம்; மிக்கவேதியர் அதுக்குந்தாயாய் தாயினுமாயின செய்யுமத்தால் பிறப்பிக்குமது மற்றொருவகுப்பினர்க்கு ச்ரேஷ்டஜன்மம்—என்று யோஜிப்பது.] வேதவித்துக்கள்— * யே ச வேதவிதோ விப்ராஃ * என்னப்பட்ட வேத வித்துக்களான கர்மகாண்ட நிஷ்டர்கள், ச்சந்தஸாம் மாதாவால் பிறப்பிக்குமது— * காயத்ரீம் ச்சந்தஸாம் மாதா * என்கிறபடியே சந்தஸ்ஸுக்களுக்கு மாதாவாயிருக்கிற காயத்ரியின் உபதேசத்தாலே பிறப்பிக்குமது, ச்ரேஷ்டஜன்மம்—கர்மநிஷ்டர்களுக்குச் சிறந்த ஜன்மமாகும்;

மிக்கவேதியர்—மிக்க வேதியரெனப்பட்ட வேததாத்பர்யவித்துக்கள், அதுக்கும் தாயாய் தாயினுமாயின செய்யுமத்தால் பிறப்பிக்குமது—ஸகலவேத ஸங்க்ரஹமாகையாலே அந்த காயத்ரிக்கும் தாயாகி * பெற்றதாயினுமாயின செய்யும் * என்னப்பட்டதான திருமந்த்ரத்தினுடைய உபதேசத்தாலே பிறப்பிக்குமது, ச்ரேஷ்டஜன்மம்—கைங்கர்ய நிஷ்டர்க்குச் சிறந்த ஜன்மமாகும். ... .... (33)

(தா.) 33. [கீழே "ஜாத்யா ச்ரமதீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே" இத்யாதியால் ஸூசிப்பிக்கப்பட்ட அதிகாரவாசிக்கும் துறை வேறிட்டுப்

போம்படியான நெடுவாசிக்கும் விளக்கம் பிறக்குமாறு கர்மநிஷ்டர்களுக்கும் கைங்கர்யநிஷ்டர்களுக்கு முண்டான பலவகை விசேஷங்களை நிரூபிக்கவேண்டி முதலில் ஜந்ம விசேஷம் நிரூபிக்கப்படுகிறது.] வேதவித்துக்களென்று வழங்கப்படுபவர்களான வேதத்திற் பூர்வபாகத்திலூன்றினவர்கள் சந்தஸ்ஸுக்களுக்கு மாதாவாயிருக்கிற காயத்ரியின் உபதேசத்தாலே பிறப்பிக்கும் பிறப்பு கருமநிஷ்டர்கட்குச் சிறந்த பிறப்பாகும். * மிக்கவேதியரென்று வழங்கப்படுகிற வேத தாத்பர்ய வித்துக்கள், ஸகல வேதஸங்க்ரஹமாய் ஆனதுபற்றியே அந்த காயத்ரிக்கும் தாய் போன்றதான திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் உபதேசத்தாலே உண்டாக்கும் பிறப்பு கைங்கரிய நிஷ்டர்க்குச் சிறந்த பிறப்பாம் [முற்சொன்ன பிறப்பு - ஜாதிக்கு ஏற்ற விதிநிஷேதங்களுக்கும் அதற்கிணங்கிய அநுஷ்டாநத்திற்கும் அதற்கீடான பேறு பெறுதற்கும் உறுப்பாகையாலே அது அவர்களுக்குச் சிறந்த பிறப்பு; பிற்சொன்ன பிறப்பு - ஸ்வரூபத்திற்கு ஏற்ற விதிநிஷேதங்கட்கும் அதற்கிணங்கின அநுஷ்டாநத்திற்கும் அதற்கீடான பேறு பெறுதற்கும் உறுப்பாகையாலே இது இவர்களுக்குச் சிறந்த பிறப்பு என்று தெளிவடையக்கடவது.] ... (33)

### (மூ.) 34, அந்தணர் மறையோரென்றும் அடியார் தொண்டரென்றும் இவர்களுக்கு நிரூபகம்.

(இங்ஙனே சிறந்தபிறப்பினரான இருவகுப்பினர்க்கும் நிரூபகங்கள் இன்னவையென்பது)

(ப.) 34. அந்தணர்மறையோரென்று ஒரு வகுப்பினர்க்கு நிரூபகம்; அடியார் தொண்டரென்று மற்றொரு வகுப்பினர்க்கு நிரூபகம் என்று யோஜிப்பது.] * தமர்களில் தலைவராய சாதியந்தணர் * துணைநூல் மார்வினந்தணர் * என்று அந்தணர்களாகவும், * தீயோம்பு கைம்மறையோர் * நந்தாவண்கைமறையோர் * என்று மறையோர்களாகவும் கர்மகாண்ட நிஷ்டர்கள் வழங்கப்படுவர்கள்; * திருமாலடியார் * அணியரங்கன் திருமுற்றத்தடியார் * என்று அடியார்களாகவும், * திருமாலுக்கு உரிய தொண்டர் * திருநாரணன் தொண்டர் * என்று தொண்டர்களாகவும் ஸாரவித்துக்கள் வழங்கப்படுவர்கள். ... ... (34)

(ஸா.) 34. * சாதியந்தணர் * துணைநூல்மார்வினந்தணர் * தீயோம்பு கைம்மறையோர் * நந்தாவண்கைமறையோர் * என்றிப்படி விசேஷணமாகிய சரீரத்தின் வழியாக வந்த ஜாதியும், தத்ப்ரயுக்தமான வைதிகத்வமும் முற்சொன்னவர்களுக்கு நிரூபகம். * திருமாலடியார் * அணியரங்கன் திருமுற்றத்தடியார் * திருமாலுக்குரிய தொண்டர் * திருநாரணன் தொண்டர் * என்று - ஆத்ம வஸ்துவுக்கு ஜ்ஞாநாநந்தங்களிற் காட்டிலும் அந்தரங்க நிரூபகமான சேஷத்வமும் தத்ப்ரயுக்தமான கிங்கர வ்ருத்தியும் பிற்சொன்னவர்களுக்கு நிரூபகம். ... (34)

**(மூ.) 35. ஒருதலையில் க்ராமகுலாதிவ்யபதேசம் குலந்தருமென்னும் மாசிற்குடிப் பழியென்று பதியாகக் கோயிலில் வாழுமென்பர்கள்.**

**[இருவகுப்பினருடையவும் வ்யபதேசபரிஷ்காரம்]**

(ப.) 35 **ஒரு தலையில்**—கர்மநிஷ்டரென்று சொல்லப்பட்ட ஒரு வகுப்பில் வழங்குமதான, **க்ராமகுலாதிவ்யபதேசம்**—சரீரத்தைப்பற்றின க்ராமம் குலம் முதலியவற்றையிட்டு வழங்குகிற அந்த வ்யபதேசத்தை, (கைங்கர்ய நிஷ்டரானவர்கள்)

**குலந்தருமென்னும் மாசில்குடி**—* குலந்தரும் * என்ற பாசுரத்தின்படியே விளைந்ததாய் * மாசில் குடிப்பிறப்பு * என்ற பாசுரத்தினால் மாசற்றதாகச் சொல்லப் பட்டதான இக்குலத்துக்கு. **பழியென்று**—அவத்யகரமென்று கருதி, (அந்தக்ராம குலாதிவ்யபதேசத்தைவிட்டு)

**பதியாகக் கோயிலில்வாழு மென்பர்கள்**—*வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்* *கோயிலில் வாழும் வைட்டணவன் * என்று பகவத் ஸம்பந்தமுள்ள தேசத்தின் ஸம்பந்தத்தையிட்டு வ்யவஹரிப்பர்கள். ... ... (35)

(தா.) 35. கருமநிஷ்டர்களுக்கு 'அந்தணர், மறையோர்' என்கிற வ்யவஹாரமும், கைங்கரியநிஷ்டர்களுக்கு 'அடியார், தொண்டர்' என்கிற வ்யவஹாரமுந் தானேயோ நிருபகம்? க்ராமம் குலம் முதலியவற்றாலும் வ்யபதேசங்கள் இல்லையோவெனில்; கருமநிஷ்டரென்று சொல்லப்பட்ட ஒரு தலையில் சரீரத்தைப் பற்றி வருகிற க்ராமம் குலம் முதலியவற்றையிட்டுச் செய்கிற வ்யவஹாரத்தை, கைங்கரிய நிஷ்டர்களான மற்றைத் தலையிலுள்ளவர்கள் * குலந்தரு மென்கிற பாசுரத்திற் படியே திருமந்த்ரஸித்த பகவத்ஸம்பந்த ஜ்ஞானமடியாக வந்ததும், சேஷத்வ விரோதியான அஹங்காராதிக ளில்லாமையாலே குற்றமற்றதுமாயிருக்கிற இக் குலத்திற்கு இழுக்காகத் கருதி * வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காளென்றும் * கோயிலில் வாழும் வைட்டணவனென்றும் எம்பெருமானோடு அந்வயமுள்ள தேச ஸம்பந்தத்தையிட்டு வ்யஹரிப்பர்கள். * ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராமகுலாதிபிঃ, விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யঃ தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி * என்ற பிரமாணம் இங்கு நோக்கத்தக்கது. ... ... (35)

**(மூ.) 36. விப்ரர்க்கு கோத்ரசரணஸூத்ரகூடஸ்தர் பராசரபாராசர்ய போதாயநாதிகள்; ப்ரபந்நஜநகூடஸ்தர் பராங்குச பரகால யதிவராதிகள்.**

**(இவ்விருவகுப்பினருடையவும் கூடஸ்தர் இன்னாரென்பது)**

(ப.) விப்ரர்க்கு கோத்ர கூடஸ்தர் பராசராதிகள், சரணகூடஸ்தர் பாராசர்யாதிகள்; ஸூத்ரகூடஸ்தர் போதாயநாதிகள் என்று அந்வயிப்பது. **ப்ரபந்நஜந கூடஸ்தர்**—ப்ரபந்நஜனங்களுக்குக் கூடஸ்தர் யாரென்னில்; **பராங்குச பரகால யதிவராதிகள்**—நம்மாழ்வார் கலியன் தொடக்கமான ஆழ்வார்களும் எம்பெருமானார் முதலான ஆசார்யர்களுமாவர். ... ... ... (36)

(தா.) 36. பிராமணர்க்கு கோத்ரகூடஸ்தர் பராசரமஹர்ஷி முதலானோர்; சரணகூடஸ்தர் பாராசர்யர் முதலானோர்; ஸூத்ர கூடஸ்தர் போதாயநர் முதலா

னுர். ப்ரபந்நஜநங்களுக்குக் கூடஸ்தர் — நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களும் எம்பெருமானுர் முதலான ஆசார்யர்களுமென்கை.

(மூ.) 37. அத்யயநஜ்ஞாநாநுஷ்டாநங்களாலேப்ராஹ்மண்யமாகிருப்போலே சந்தங்களாயிரமுமறியக்கற்றுவல்லாரானுல் வைஷ்ணவத்வஸித்தி.

(இரண்டுதலைக்கும் ப்ராஹ்மண்யமும் வைஷ்ணவத்வமும் ஸித்திக்கும் விரகு.)

(ப.) 37 அத்யயநஜ்ஞாநாநுஷ்டானங்களாலே — வேதமோதுதல் அதன் பொருளுணர்தல் உணர்ந்தபடியே யனுட்டித்தலாகிற விவற்றுல், ப்ராஹ்மண்யம் ஆகிருப்போலே—ப்ராஹ்மண்யம் ஸித்திக்குமாபோலே, சந்தங்களாயிரமும்—*குருகூர்ச் சடகோபன் சொற்சந்தங்களாயிரம் * என்கிறபடியே வேதரூபமாய் ஸஹஸ்ரசாகை யாயிருக்கிற திருவாய்மொழியை,

அறியக்கற்றுவல்லாரானுல் வைஷ்ணவத்வஸித்தி— * அறியக்கற்று வல்லார் வைட்டணவர் * என்கிறபடியே ஓதியுணர்ந்து அதன்படியே அனுட்டிக்கவும் வல்லரானுல்தான் ஸ்ரீவைஷ்ணத்வம் ஸித்திப்பது. .... ... (37)

(தா.) 37. முதலிலே வேதத்தை ஆசார்ய உச்சாரண அநூச்சரண முகத் தாலே அக்ஷரராசி க்ரஹணம் பண்ணுகையாகிற அத்யயநத்தைப் பண்ணி மீமாம்ஸா ச்ரவணம் முதலியவற்றுலே வேதப்பொருளுணர்ந்து அதற்கீடான அனுட்டானமுண்டானுல் ப்ராஹ்மண்யம் ஸித்திக்கும்; அதுபோலே, திருவாய் மொழியை ஆசார்ய முகத்தாலே ஓதி உபதேசமுகத்தாலே அதன் பொருளுணர்ந்து அதற்கீடாக அனுட்டிக்கவும் வல்லவரானுலாயிற்று வைஷ்ணவத்வம் ஸித் திப்பது. [இங்கு அனுட்டடானமாவது கைங்கர்ய நிஷ்டை.] ... (37)

(மூ.) 38. இந்தவுட்பொருள்கற்றுணர்ந்து மேலைத்தலைமறையோராகாதாரை அயற்சதுப்பேதிமாரென்று உத்பத்திநிரூபிக்கும.

[திருவாய்மொழிப் பொருளுணர்ச்சியின் ஆவச்யகத்வம்.]

(ப.) 38. இந்த உட்பொருள்— * மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் * என்னும்படி உபநிஷத்குஹ்யமான இந்த த்ராவிடவேதப்பொருளை, கற்று உணர்ந்து— ஆசார்யமுகமாக அதிகரித்தறிந்து, மேலைத்தலைமறையோராகாதாரை—* கற்றுணர்ந்த மேலைத்தலைமறையோர் * என்கிறபடியே சிறந்த வேதாந்திகளாகாதவர்களை, அயல்சதுப்பேதிமாரென்று — * அடிமையிற் குடிமையில்லா அயல் சதுப்பேதி மார்கள் * என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச் செய்தபடியே நான்கு வேதங் களுக்கும் அசலானவர்களென்று அறுதியிட்டு உத்பத்தி நிரூபிக்கும்— * தஸ்யோத் பத்திர் நிரூப்யதாம் * என்கிறபடியே இவர்கள் அத்தணரல்லரென்று உத்பத்தி ஆராயப்படும். (கர்ஹிக்கப்படுவர்களென்று கருத்து) ... ... (38)

(தா.) 38. வேதமோதுதற்குப் பயன் எம்பெருமானை யுள்ளபடி யறிந்து "ஸ்வரூபத்திற்கு ஏற்ற புருஷார்த்தம் கைங்கர்யமே" என்று அத்யவஸிப்பதேயாத லால் இப்படிப்பட்ட ஞானமில்லாமல் நான்கு வேதங்களையும் ஓதினவர்களாயினும் அந்த வேதங்களோடு தங்களுக்கு ஸம்பந்தமின்றி அவற்றுக்கு அசலானவர்க

ளென்று அறுதியிடலாகி * விஷ்ணுபக்திவிஹீநோ யஸ் ஸர்வசாஸ்த்ரார்த்த வேத்யபி - ப்ராஹ்மண்யம் தஸ்ய நபவேத் தஸ்யோத்பத்திர் நிரூப்யதாம்—(பகவத் பக்தி யில்லாதவன் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அறிந்தவனுயினும் பிராமண னுகமாட்டான் ; அவனது பிறப்பிலே குற்றமிருந்து தீரும்) என்கிறபடியே இவர்கள் பிராமணரல்லரென்று ஒதுக்கலாகும். [ * மிக்கவேதியர் வேதத்தினுட்பொரு ளென்று உபநிஷத்குஹ்யமான தமிழ்வேதத்தின் அர்த்தத்தைக் கற்றறிந்தவர்களே சிறந்த வேதாந்திகளாவர் என்றதாயிற்று.]

"உத்பத்திநிரூபிக்கும்" என்ற மூலத்தின் கருத்தை * யஃ புத்ரஃ பிதரம் த்வேஷ்டி தம் வித்யாத் அந்யரேதஸம், யஸ்து நாராயணம் த்வேஷ்டி தம் வித் யாத் அந்த்யரேதஸம்." என்ற பிரமாணத்தினுல் அறிவது. ... (38)

(மூ.) 39. எவ்வுலகத் தெவ்வெவையுமென்கையாலே வேதம் பஹுவிதம்.
[வேதங்கள் பலவகையென்பது]

(ப.) 39. எவ்வுலகத் தெவ்வெவையு மென்கையாலே—* ஓதுவாரோத்தெல்லா மெவ்வுலகத்தெவ்வெவையும் * என்று, வேதமானது அத்யயனம் பண்ணுகிறவர்க ளுடைய பேதத்தாலும் லோக பேதத்தாலும் பஹுவிதமாயிருக்குமென்று சொல்லி யிருக்கையாலே, வேதம் பஹுவிதம்—வேதமானது பலவகைப்பட்டிருக்கும். [அதிலே இதுவும் ஒருவிதமென்று கருத்து.] ... ... ... (39)

(தா.) 39. (இனிமேல் * சந்தங்களாயிரமென்று திருவாய்மொழிக்குச் சொன்ன வேதத்வத்தை ஸாதிப்பதற்காக, முந்துறமுன்னம் இப்படிப்பட்டதொரு வேதமுண்டோ வென்கிற சங்கைக்குப் பரிஹாரம் செய்யப்படுகிறது.)

"ஓதுவாரோத்தெல்லா மெவ்வுலகத் தெவ்வெவையும்" என்று ஆழ்வாரரு ளிச்செய்கையாலே வேதமானது ஓதுமவர்களின் பேதத்தாலும் லோகபேதத்தாலும் பலவகைப்பட்டிருக்கும். [ஆகையால் அதிலே இத் தமிழ்மறையும் ஒருவிதமென்ற கருத்து மேலே விசதமாகும்.] ... ... ... ... (39)

(மூ.) 40. அதில் ஸம்ஸ்க்ருதம் த்ராவிடமென்கிறபிரிவு ருகாதிபேதம்போலே.

[பாஷையினுலும் வேதங்களின் வேற்றுமை உண்டென்பது]

(ப.) 40. இதில்—இப்படி பஹுவிதமான இவ்வேதத்தில் ஸம்ஸ்க்ருதம், த்ராவிடமென்கிற பிரிவு—ஸம்ஸ்க்ருதவேதம் திராவிடவேதமென்கிற பிரிவு விளைந்த தானது, ருகாதி பேதம்போலே—ஸம்ஸ்க்ருத வேதத்திற்குள்ளே ருக்வேதம் யஜுர் வேதம் ஸாமவேதம் அதர்வணவேதம் என்கிற பிரிவுவிளைந்தது போலேயாம்.(40)

(தா.) 40. ஆனுல் ஒரே பாஷையாயிருக்கவேண்டாவோ? வடமொழியும் தென்மொழியுமாய் ஒன்றுக்கொன்று வேற்றுமைப்பட்டிராநின்றதே யென்னில் ; பல வகைப்பட்ட வேதத்தில் ஸம்ஸ்க்ருதவேதம் த்ராவிடவேதம் என்கிற பிரிவு உண்டானது எதுபோல வென்னில்; ஸம்ஸ்க்ருத வேதத்தினுள்ளேயே ருக்வே தம் யஜுர்வேதம் ஸாமவேதம், அதர்வணவேதம் என்று பிரிவுண்டானுப்போலே. [வேதராசி ஒன்ருயிருக்கச்செய்தே ஸம்ஸ்க்ருதபாஷா ரூபமான அதுதன்னிலே சில

பிரிவுகள் ஏற்பட்டாப்போலே பாஷாபேதத்தாலும் இப்படி பிரிந்திருக்கக் குறையில்லை யென்றதாம்.] ... ... ... ... (40)

(மூ.) 41. செந்திறத்ததமிழென்கையாலே ஆகஸ்த்யமுமநாதி.

[த்ராவிடமும் அநாதிபாஷையென்பது]

(ப.) 41. செந்திறத்த தமிழென்கையாலே— * செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி * என்று ஸம்ஸ்க்ருதத்தோடு ஸஹபடிதமாகையாலே, ஆகஸ்த்யமும் அநாதி—அகஸ்த்யராலே வெளியிடப்பட்ட வளவேகொண்டு ஆகஸ்த்யமென்று சொல்லப்படுகிற த்ராவிடமும் அநாதியாயுள்ளது. ... ... (41)

(ஸா.) 41. அப்படிச் சொல்லலாமோ? ஸம்ஸ்க்ருதபாஷைபோலே த்ராவிட பாஷை அநாதியன்றே; அகஸ்தியரால் ஆக்கப்பட்டதன்றோ வென்னில்; "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி" என்று திருமங்கையாழ்வார் ஸம்ஸ்க்ருதத்தோடே தமிழையும் ஒருங்கே எடுக்கிறவளவில் சிறந்த விசேஷணத்தோடும் முன்னே எடுக்கையாலே, அகஸ்தியராலே பிரகாசிப்பிக்கப்பட்ட மாத்திரமே கொண்டு ஆகஸ்தியமென்று சொல்லப்படுகிற த்ராவிடமும் அநாதியாயுள்ளதே. இரண்டு பாஷைகளும் துல்யமானவையே யென்க. ... ... 41)

(மூ.) 42. வடமொழிமறையென்றது தென்மொழிமறையை நினைத்திறே.

[திருவாய்மொழி வேதமேயென்பது]

(ப.) 42. வடமொழிமறை யென்றது—மறையென்று பொதுப்பட அருளிச்செய்யாதே ('வடமொழி மறைவாணர்' என்கிறவிடத்தில்) வடமொழிமறையென்று ஆழ்வார் நிர்தேசித்ததானது, தென்மொழி மறையை நினைத்திறே—தமிழ்வேதமுமுண்டென்று நினைத்தன்றோ. ... ... ... (42)

(ஸா.) தமிழ்ப்பாஷை அநாதியானால் ஆகுக; திருவாய்மொழி வேதமாகுமோ வென்னில்; ஆழ்வார்கள் வேதத்தைப்பற்றிச் சொல்லும்போது மறை என்றே சொல்லலாமாயிருக்கவும் வடமொழி மறை என்று விசேஷணமிட்டுச் சொல்லுகிறபடியைக் காணாநின்றோம்; இதனால், தென்மொழி மறையுண்டென்று நினைத்தன்றோ அங்ஙனம் சொல்லிற்றென்று கொள்ளவேணும். பிரதி கோடியில்லாதபோது இப்படி விசேஷிக்க வேண்டுவதில்லையே. .... ... (42)

(மூ.) 43 வேதசதுஷ்டயாங்கோபாங்கங்கள் பதினாலும்போலே இந்நாலுக்கும் இருந்தமிழ்நூற்புலவர்பனுவலாறும் மற்றையெண்மர் நன்மாலைகளும்.

(தமிழ்வேதத்திற்கும் அங்கோபாங்கங்கள் உண்டென்பது)

(ப.) 43. வேதசதுஷ்டய அங்கோபாங்கங்கள் பதினாலும் போலே—ருக்வேதம் முதலிய நான்கு வேதங்களுக்கும் ஆறு அங்கங்களும் எட்டு உபாங்கங்களுமான பதினாலும் அமைந்திருப்பதுபோல, இந்நாலுக்கும்—நம்மாழ்வாரருளிச்செய்த நான்கு வேதஸாரமான நான்கு திவ்யப்பிரபந்தங்களுக்கும், இருந்தமிழ் நூற்புலவர் பனுவலாறும்—* இருந்தமிழ் நூற்புலவன் மங்கையாளன் * என்கிற திருமங்கையாழ்வா

ருடைய * கலியன்வாயொலி செய்தபனுவல் * என்று சாஸ்த்ர ரூபமான ஆறு ப்ரபந்தங்களும், மற்றையெண்மர் நன்மாலைகளும்—மற்றையாழ்வார்களெண்மருடையவும் *நயநின்ற நன்மாலையான‖விலக்ஷண ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாக அமைந்தன. .. ... ... ... (43)

(தா.) 43. ஸம்ஸ்க்ருத வேதத்திற்கு அங்கங்களும் உபாங்கங்களும் இருப்பதுபோலே இதற்கும் அவை யுண்டோ வென்னில்; உண்டு. ருக்கு முதலான நான்கு வேதங்களுக்கும் சிக்ஷா வியாகரணம் நிருக்தம் ச்சந்தஸ் கல்பம் ஜ்யோதிஷம் என்கிற ஆறு அங்கங்களும், மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்த்ரங்கள் முதலிய உபாங்கங்கள் எட்டுமாயிருந்துள்ள பதினாலும் போலே, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழியாகிற இந்தத் தமிழ் மறை நான்கிற்கும் திருமங்கையாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களாறும் மற்றை யாழ்வார்கள் எண்மருடைய விலக்ஷண ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாம். ... (43)

(மூ) 44. ஸகலவித்யாதிகவேதம்போலே இதுவும திவ்யப்ரபந்த ப்ரதாநம்.

[நம்மாழ்வாரருளிச்செயல்களின் ஏற்றம்.]

(ப.) 44. ஸகல வித்யாதிக வேதம் போலே—வேதமானது தனக்கு அங்கோபாங்கங்களான ஸகல வித்யைகளிற் காட்டிலும் மேலாயிருக்குமாபோலே, இதுவும்—நம்மாழ்வாருடைய திருவாக்கும், திவ்யப்ரபந்த ப்ரதாநம்—தனக்கு அங்கோபாங்கங்களான ஸகல திவ்யப்ரபந்தங்களிற் காட்டிலும் ப்ராதாந்யம்பெற்று மேலாயிருக்கும். ... ... ... .. ... (44)

(தா.) 44. வேதமானது தனக்கு அங்கங்களும் உபாங்கங்களுமான ஸகல வித்யைகளிற் காட்டிலும் ஸ்வவைபவத்தாலே மேலாயிருக்குமாபோலே நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களும் தமது அங்க உபாங்கங்களான ஸகல திவ்ய ப்ரபந்தங்களிற் காட்டிலும் ஸ்வவைபவத்தாலே மேம்பட்டிருக்கும். ... (44)

(மூ.) 45. வேதநூல்இருந்தமிழ்நூல் ஆஜ்ஞையாணை வசையிலேதமில் சுருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மைபொய்யில்பாடல் பண்டைநிற்கும் முந்தையழிவில்லா வென்னும் லக்ஷணங்களொக்கும்.

(உபயவேதங்களுக்கும் பலவகைகளால் பரஸ்பர ஸாம்யம்)

(ப.) 45. இந்த சூர்ணைக்கு—[கீழே கருத்துரையிலுள்ளபடியே பதவுரை கண்டுகொள்க. ... .. ... .. (45)

(தா.) 45. ஸம்ஸ்க்ருத வேத வைபவத்திற்கு உடலாக அதை சாஸ்த்ரமென்றும் பகவதாஜ்ஞாரூபமென்றும் நிர்தோஷமென்றும் ச்ருதியென்றும் ஸத்யமென்றும் அநாதிநிதநமென்றும் சொல்லியிருப்பதுபோல இதற்கும் சொல்லியிருக்கிறதோ வென்னில்; ஆம். ''வேதநூல்'' என்று அதனை வேதசாஸ்த்ர மென்றுப்போலே இதனையும் '' இருந்தமிழ்நூல்'' என்று பெரிய த்ராவிட ச்ராஸ்த்ரமென்றது; அதனை ''ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா'' என்று பகவதாஜ்ஞா ரூபமாகச் சொன்னதுபோலே இதனையும் ''ஆணையாயிரம்'' என்று அந்த எம்பெருமானுடைய

ஆஜ்ஞாரூபமாகவே சொல்லிற்று. அதனை "வசையில் நான்மறை" என்று பௌருஷேயத்வ நிபந்தந தோஷங்களொன்றுமில்லாதது என்று சொன்னதுபோல இதனையும் "ஏதமிலாயிரம்" என்று நிர்த்தோஷமாகச் சொல்லிற்று. அதனை "சுடர்மிகு சுருதி" என்றதுபோலே இதனையும் "செவிக்கினிய செஞ்சொல்" என்றது. "வேதநூல் ஓதுகின்றதுண்மையல்லதில்லை" என்று அதனை ஸத்யவாதி யென்றது போலே இதனையும் "பொய்யில் பாடலாயிரம்" என்று சொல்லிற்று. "பண்டை நான்மறை" "நிற்கும் நான்மறை" என்று அதனை அநாதியாகவும் மேல் அழிவில்லாததாகவும் சொன்னதுபோலே இதனையும் "முந்தையாயிரம்" "அழிவில்லாவாயிரம்" என்றது. ஆக இவ்வகைகளாலே உபயவேதங்களுக்கும் ஒற்றுமை நயம் காண்க. ... .... ... ... (45)

(மூ.) 46. சொல்லப்பட்டவென்றவிதில் கர்த்ருத்வம் ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தானென்றதுபோலே.

[திருவாய்மொழியை ஆழ்வார் வெளியிட்டவளவேயென்றல்]

(ப.) 46. சொல்லப்பட்ட வென்றவிதில் கர்த்ருத்வம்—✻ சடகோபன் சொல்லப்பட்ட வாயிரம் ✻ என்று இதில் ஆழ்வார்க்குச் சொன்ன கர்த்ருத்வமானது, (எங்ஙனே பொருந்துகிற தென்னில்) அத்தை—அந்த ஸம்ஸ்க்ருத வேதத்தை, ஸ்ம்ருதி ஸ்வயம்பூபடைத்தா னென்றது போலே — பிரஹ்மாஸ்ருஷ்டித்தானென்று ஸ்ம்ருதி சொன்னது போலே பொருந்தும். ... ... (46)

(ஸா.) 46. ஆனால், ✻ சொல்லப்பட்ட வாயிரத்துள் என்று இதற்கு ஆழ்வார் கர்த்தாவாகச் சொல்லப்படுகிறதே; இதனால் நித்யத்வமும் அபௌருஷேயத்வமும் கூடாதேயென்னில்; "அநாதிநிதநா ஹ்யேஷா வாகுத் ஸ்ருஷ்டா ஸ்யம்புவா" என்று ஸ்மிருதியானது அந்த வேதத்தை நான்முகன் ஸ்ருஷ்டித்தானென்று சொன்னதுபோலேயாம் ✻ அந்தண்குருகூர்ச் சடகோபன் சொல்லப்பட்டவாயிர மென்றதும். [அநாதிநிதநமான ஸந்தர்ப்பம் ப்ரஹ்மாவின்வாக்கில் நின்று ஆவிர்ப்பவித்த மாத்திரமேகொண்டு பிரமனுக்கு அதிற்சொன்ன கர்த்ருத்வம் போலே இதிலும் ஆழ்வார்க்குச் சொன்ன கர்த்ருத்வம் ப்ரகாசகத்வ ப்ரயுக்த மாகையாலே இதனால் இதினுடைய நித்யத்வத்திற்கும் அபௌருஷேயத்வத்திற்கும் ஹாநிவாராதென்றதாயிற்று. ... ... ... (46)

(மூ) 47. நால்வேதங்கண்டபுராணரிஷி மந்த்ரதர்சிகளைப்போலே இவரையும் ருஷிமுநிகவியென்னும்.

[மஹர்ஷிகளைப்போலவே ஆழ்வாருமென்றல்]

(ப.) 47. நால்வேதங்கண்ட புராணருஷியை(யும்) மந்த்ரதர்சிகளை(யும்) போலே—நான்கு வேதங்களையும் ஸாக்ஷாத்கரித்து அஷ்டாதச புராணங்களினுடைய ஆநுபூர்வியையும் கண்டறிந்து சொன்ன வேதவ்யாஸ பகவானை ருஷியென்றும் முனியென்றும் கவியென்றும் சொன்னாப் போலவும், மந்த்ரதர்சிகளான சௌநகபகவான் முதலானவர்களையும் அங்ஙனே சொன்னாப்போலவும், இவரையும்—த்ராவிட வேத

ஸாக்ஷாத்கர்த்தாவான இவ்வாழ்வாரையும், ருஷி முனி கவியென்னும்—* ருஷிம் ஜுஷாமஹே * சடகோப முனிம் வந்தே * ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் கவியாயினேற்கு * என்னுமிடங்களிலே ருஷியாகவும் முநியாகவும் கவியாகவுஞ் சொல்லியுள்ளது காண்க. ... ... ... (47)

(தா.) 47. நான்குவேதங்களையும் ஸாக்ஷாத்கரித்த புராண கர்த்தாவான ஸ்ரீவேதவ்யாஸ பகவான் வேதாதிகளின் பூர்வஸித்தமான ஆநுபூர்வியைக் கண்டு சொன்னபடியாலே அவரை ருஷியாகவும் முநியாகவும் கவியாகவும் சொன்னாப் போலேயும், மந்த்ரதர்சிகளானவர்களை பூர்வஸித்த ஸந்தர்ப்பத்தை ஸாக்ஷாத்கரித்துச் சொன்னவர்களென்னுமிடம் தோற்ற ருஷி முநி யென்றாப்போலவும், தமிழ் வேதமானவிதின் பூர்வஸித்த ஆநுபூர்வியை ஸாக்ஷாத்கரித்துப் பேசின இவ்வாழ்வாரையும் * ருஷிம் ஜுஷாமஹே * என்றும் * சடகோபமுநிம் வந்தே * என்றும் * ஒன்றியொன்றியுலகம் படைத்தான் கவியாயினேற்கு என்றும்—முன்புண்டான ஸந்தர்ப்பத்தை ஸாக்ஷாத்கரித்துப் பேசினவரென்னுமிடம் தோற்ற ருஷியென்றும் முநியென்றும் கவியென்றும் சொல்லாநிற்கும். ... ... (47)

(மூ.) 48. படைத்தான்கவியென்றபோதே இதுவும் யதாபூர்வகல்பநமாமே.

(திருவாய்மொழியின் அநாதித்வ ஸூசநம்.)

(தா.) 48. 'பிரளயங்கொண்ட வுலகத்தை முன்போலே ஸ்ருஷ்டித்த எம்பெருமானுடைய கவி நான்' என்னும் பொருள்விளங்குமாறு "ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் கவியாயினேற்கு" என்று ஆழ்வார்தாம் அருளிச்செய்த பாசுரத்தை நோக்குமிடத்து - ஸ்ருஷ்டிதோறும் சந்திரன் ஸூரியன் முதலிய ஸகல பதார்த்தங்களும் யதாபூர்வகல்பநமாய் வருமாபோலே இந்தத் தமிழ்வேதமும் ஸ்ருஷ்டிதோறும் யதாபூர்வகல்பநமாய் வருமென்பது விளங்கும். ... (48)

(மூ.) 49. உறக்கந்தலைக்கொண்டபின்னை மறைநான்குமுணர்ந்த தங்களப்பனேடேயோதின சந்தச்சதுமுகன் கலங்கலந்தவெண்புரிநூல் மானுரிதிகழந்துண்ணும் காமனுட லிருக்கிலங்கு ஜ்யேஷ்டபுத்ராதிகளுக்கு மறைபயந்தாப்போலே ஆதுமில் காலத்தெந்தையான வாய்முதலப்பன் பிரமகுருவாய் இராப்பகல் முன்சொல்லக் கற்றனமே யென்றவிவரும் நாவினுல் நன்மையாலென்னுமோதவல்லபிராக்களைக் கன்மின்களென்று சொல்பயிற்ற, வேதம் ஓதுவாரோத்தாகையாலே ஆதர்வணாதிகள் போலே இதுவும் பேர்பெற்றது.

(திருவாய்மொழி எம்பெருமானருளாலே ஆழ்வாருக்கு ஸித்தித்து ஆழ்வாரருளாலே பின்புள்ளார்க்கெல்லாம் உபஜீவ்யமாய் இவரையிட்டு நிரூபிக்கும்படியானமையை த்ருஷ்டாந்தத்தோடு கூறுதல்.)

(ப.) 49. உறக்கம் தலைக்கொண்டபின்னை— * உன்னிய யோகத்துறக்கம் தலைக்கொண்ட பின்னை * என்கிறபடியே நரான்முகனைப் படைப்பதற்கு பூர்வாங்கமாக யோகநித்திரையைச் செய்தபின்பு, மறைநான்கு முணர்ந்த தங்களப்பனேடே யோதின— * உணர்ந்தாய் மறைநான்கும் * என்கிறபடியே நான்கு வேதங்களையும்

பழையபடியே ஸ்மரித்த, * திசைமுகனார் தங்களப்பன் * என்கிறபடியே தனக்குத் தந்தையான எம்பெருமானிடத்திலே யோதின, சந்தச்சதுமுகன்—ச்சந்தஸ்ஸை நிரூபகமாகவுடைய நான்முகனானவன், (இதற்கு 'மறைபயந்தாப்போலே' என்பதோடு அந்வயம்.)

சலங்கலந்த, வெண்புரிநூல், மானுரி, திரிதந்துண்ணும், காமனுடல், இருக்கிலங்கு— * சலங்கலந்த செஞ்சடை * என்கிற பாட்டின்படியே நித்யஸ்நானயுக்தனாயும், * வெண்புரிநூல்மார்வன் * என்கிறபடியே யஜ்ஞோபவீதயுக்தனாயும், * மானுரியதளுமுடையவர் * என்கிறபடியே க்ருஷ்ணாஜிந யுக்தனாயும், * பிறர் மனைதிரிதந்துண்ணு முண்டியான் * என்கிறபடியே பிக்ஷான்னபோஜந நிஷ்டனாயும் * காமனுடல்கொண்ட தவத்தார் * என்கிறபடியே இந்த்ரியஜயசீலனாயும், * இருக்கிலங்கு திருமொழிவாயெண்டோளீசர் * என்கிறபடியே ஸதா அத்யயநபரனாயும்— ஆகவிப்படியிருக்கையாலே ப்ரஹ்மசர்ய லக்ஷணஸம்பன்னனாய்,

ஜ்யேஷ்டபுத்ராதிகளுக்கு—தனக்கு மூத்தகுமாரனுமான ருத்ரன் முதலானார்க்கு,

மறை பயந்தாப்போலே—வேதத்தை ஓதுவித்தாப்போலே,

ஆதுமில் காலத்து எந்தையான—ஒன்றுமில்லாத ப்ரளயகாலத்திலே எந்தையான முறையாலே கரணகளேபரங்களைத்தந்து ஞான விகாஸத்தைப்பண்ணின, வாய்முதலப்பன்—வாய்த்த காரணபூதனான ஸர்வேச்வரன், பிரமகுருவாய்—தானே ஆசார்யனாய், இராப்பகல் முன்சொல்ல—இரவும் பகலும் முன்னுருச் சொல்ல, கற்றனமேயென்ற இவரும்— * திருநாமச்சொல் கற்றனமே * யென்று அநுச்சாரணம் பண்ணினதாகச் சொல்லி அவனிடத்தில் ஓதின இவ்வாழ்வாரும்.

நாவினுல் நன்மையாலென்னும் ஓதவல்ல பிராக்களை— * நாவினுல் நவிற்றின்பமெய்தினேன் * நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் * என்கிற பாசுரங்களினுல் ஸ்வாசார்ய ப்ரேமத்தையும் க்ருதஜ்ஞதையையும் முன்னிட்டுக்கொண்டு ச்ரத்தையோடு ஓதும் ஸ்ரீமதுரகவிகள் போல்வாரை,

கன்மின்களென்று சொல்பயிற்ற—இத்தை அப்யஸியுங்கோளென்று சொல்லி அப்யஸிப்பித்ததனுல், வேதம் ஓதுவாரோத்தாகையாலே—வேதமானது ஓதுகிறவர்களையிட்டு நிரூபிக்கப்படுமதாகையாலே, இதுவும்—இத்தமிழ் வேதமும்; ஆதர்வணாதிகள் போலே பேர்பெற்றது—ஆதர்வணம் தைத்திரீயம் காண்வம் என்று பேர் பெற்றாப்போலே (ஆழ்வார் இத்தமிழ் மறைக்கு முதல் அத்யேதாவானது பற்றி) சடகோபன் சொல்லென்று பேர் பெற்றது. ... ... ... (49)

(தா.) 49. ஸம்ஹாரஸமயத்தில் நாமரூபவிபாகத்திற்கு உரியதல்லாமல் ஸத்தென்னுமளவாய்க் கிடந்தவிதனை ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே விபக்தமாக்கி மஹான் முதலான ஸகலதத்துவங்களையும் அண்டத்தையும் ஸ்ருஷ்டித்து, சதுர்முகஸ்ருஷ்டிக்கு முன்னாக ஏகார்ணவத்திலே 'இவை நல்வழியாய்க் கரை சேரும் விரகு ஏதோ!' என்று அநுஸந்திக்கையாகிற யோகநித்திரையைச் செய்தபின்பு, 'உறங்கியெழுந்தவன் நியாயமாக' ஸம்ஸ்காரகதமாய்க்கிடந்த நான்கு வேதங்களையும் ஆநுபூர்விதப்பாமல் ஸ்மரித்த தன் தகப்பனான ஸர்வேச்வரன் பக்கலில் அவ்

வேதங்களை யோதின நான்முகன் நித்தியம் நீராடுதல், பூணூலையும் மானுரியையும் தரித்தல், பிக்ஷான்னங் கொள்ளுதல், இந்திரியங்களை வெல்லுதல், எப்போதும் வேதமோதித்திரிதலாகிற ப்ரஹ்மசர்யலக்ஷணங்களோடே கூடினவனுய்த் தனக்கு மூத்தபுதல்வனை ருத்ரன் முதலானுர்க்கு அந்த வேதத்தை ஓதுவித்தாப்போலே, ஸம்ஹாரகாலத்தில் நாமரூபங்களை இழந்தாப்போலே ஸத்தையையு மிழந்துபோகாமல் தந்தையான முறையாலே தன்மேலே ஏறிட்டுக்கொண்டு நோக்கி மீண்டும் கரணகளேபரங்களைத்தந்து ஜ்ஞானவிகாஸத்தைப்பண்ணின ஆதிபகவான் தானே ஆழ்வார்க்கு ப்ரஹ்மகுருவாய் இரவும் பகலும் முன்னுருச்சொல்ல, ஆழ்வாரும் பின்னுருச்சொல்ல, இப்படி அவன் பக்கல் ஓதின இவ்வாழ்வாரும் தம்மிடத்தில் க்ருதஜ்ஞரான மதுரகவிகள் போல்வாரைப் பயிற்றுவிக்க, வேதமானது ஓதுவாரையிட்டு நிருபிக்கப்படுமதாகையாலே * ஆதர்வணம் * காண்வம் * தைத்திரீயம் * என்று பேர்பெற்றுப்போலே ஆழ்வார் இந்தத் தமிழ் வேதத்திற்கு முதன்முதலாக ஓதுவாரானதுபற்றி இதுவும் * சடகோபன் சொல் * என்று பேர் பெற்றது. [ஆக, முப்பத்தேழாவது சூர்ணிகையில் ப்ரஸ்துதமான திருவாய்மொழியின் வேதத்வம் இவ்வளவாக ஸாதிக்கப்பட்டது] ... ... ... ... (49)

(மூ.) 50. இயற்பாமூன்றும் வேதத்ரயம்போலே ; பண்ணார்பாடல் பண்புரையிசைகொள்வேதம்போலே.

(நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களும் இன்னின்ன வேதங்களின் ஸ்தானீயமென்றல்)

(ப.) 50. இயற்பா மூன்றும்—இயற்பாவான திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதியாகிற மூன்று பிரபந்தங்களும், வேதத்ரயம் போலே—அடைவே ருக்கு, யஜுஸ், அதர்வணம் என்கிற மூன்று வேதங்களினுடையவும் ஸ்தானத்திலேயாம். பண்ணார் பாடல்—திருவாய்மொழியானது, பண்புரையிசைகொள் வேதம் போலே—* பண்புரைவேதம் *இசைகொள்வேதம்* என்கிற ஸாமவேத ஸ்தானீயம்.

(தா.) 50. நம்மாழ்வாருடைய பிரபந்தங்கள் நான்கினுள்ளும் இயற்பாவென்னுமாயிரத்திற் சேர்ந்த மூன்றில் முதலதான திருவிருத்தம் ருக்வேத ஸ்தானீயம்; இரண்டாவதான திருவாசிரியம் யஜுர்வேத ஸ்தானீயம், மூன்றுவதான பெரிய திருவந்தாதி அதர்வணவேத ஸ்தானீயம். சரம ப்ரபந்தமான திருவாய்மொழி கானப்ரதானமான ஸாமவேத ஸ்தானீயம். .... .... .... (50)

(மூ.) 51. ருக்கு ஸாமத்தாலே ஸரஸமாய் ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே சொல்லார்தொடையல்இசைகூட்ட அமர்சுவையாயிரமாயிற்று.

(ருக்கு ஸாமரூபமாகப் பரம்புந்தன்மை இங்குமொக்குமென்றல்.)

(ப.) 51. ருக்கு—ஸாமஸங்க்ரஹமான ருக்கானது, ஸாமத்தாலே ஸரஸமாய்—தனக்கு விவரணமாய் தனக்கு ரஸமுமாயிருந்துள்ள கானரூபமான ஸாமத்தாலே ரஸஸஹிதமாய்க்கொண்டு, ஸ்தோபத்தாலே பரம்புமாபோலே— * ஹாவு ஹாவு ஹாவு * இத்யாதியான ஸ்தோபத்தாலே விஸ்த்ருதமாகிறுப்போலே,

சொல்லார் தொடையல்—ருக்வேத ஸ்தானீயமாயிருக்கிற சொல்லார் தொடையலென்னப்பட்ட திருவிருத்தமானது, இசைகூட்ட—* இசைகூட்டிவண்சடகோபன்

சொல் * என்கிறபடியே இசையிலே கூட்டினவாறே, அமர்சுவையாயிரமாயிற்று—ஸாம வேதஸ்தாநீயமாய் * அமர்சுவையாயிரம் * என்கிறபடியே ஸரஸமாயிருந்துள்ள ஆயிரம் பாட்டாகப் பரம்பிற்று. ... .... ... (51)

(தா.) 51. ஸாம ஸங்கிரஹமான ருக்கானது தனக்கு விவரணமுமாய் ரஸமுமாயிருந்துள்ள காநரூபமான ஸாமத்தாலே ரஸஸஹிதமாய் "ஹாவு ஹாவு ஹாவு" இத்யாதியான ஸ்தோபத்தாலே விஸ்த்ருதமானுப்போலே ருக்வேத ஸ்தா நீயமான திருவிருத்தம் நூறுபாட்டும் இசையிலே கூட்டினவாறே ஸாமவேத ஸ்தா நீயமாய் ஸரஸமா யிருந்துள்ள திருவாய்மொழி யாயிரம் பாட்டாகப் பரம்பிற்று. (51)

(மூ.) 52. **சந்தோகனென்று ஸாமாந்யமாகாமல் முதலிலேபிரித்து யாழ்பயில் காநஸ்வரூபியைப் பாலையாகியென்று விசேஷிக்கையாலே வேதகீதச்சாமி நானென்றஸாமந்தோன்ற உத்கீதப்ரணவத்தை ப்ரதமத்திலே மாருடி சரமகதிமுடிவாகத் தொண்டர்க்கமுதென்ன தேவாந்நமாக்கி மஹாகோஷ நல்வேதவொலிபோலே மஹாத்யயநமென்னப் பாடுகையாலே இத்தைச் சாந்தோக்யஸமமென்பர்கள்.**

**[திருவாய்மொழிக்கும் சாந்தோக்யத்திற்கும் ஸாம்யமுளதென்பது]**

(ப.) 52. (ஸாமாந்யமாகாமல் சந்தோகனென்று முதலிலே பிரித்து— என்று அந்வயித்துக்கொள்வது.) **ஸாமாந்யமாகாமல்**—* சாமவேதகீதனுய * சாமியப்பன் * என்று ஆழ்வார்களும், * வேதாநாம் ஸாமவேதோஸ்மி * என்று அவன் தானும் சொன்ன ஸாமமானது ஸாமாந்யமாகாமல், **சந்தோகனென்று முதலிலே பிரித்து**—* சந்தோகன் பௌழியனைந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி * என்கிற பாசுரத்தில் சாமவேதியென்று மேலே சொல்லச்செய்தேயும் விசேஷம் தோற்ற * சந்தோகனென்று முதலிலே விசேஷித்துக்காட்டி,

**யாழ்பயில் கானஸ்வரூபியை**—* முன்னல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே * என்கிற பாட்டின்படியே கானஸ்வரூபம்போலே இனியனானவனை,

**பாலையாகியென்று விசேஷிக்கையாலே** — * பண்ணினின்மொழி யாழ்நரம்பில் பெற்ற பாலையாகி * என்று அந்த சந்தோக ஸாமத்தின் நிறமான பாலையாகிற பண்ணையிட்டு விசேஷிக்கையாலே,

**வேதகீதச்சாமி நானென்ற ஸாமம்தோன்ற**—* சாமவேதகீதன் * சாமியப்பன் * * ஸாமவேதோஸ்மி * என்றவிடங்களில் பொதுப்படையாகச் சொல்லப்பட்ட ஸாம சப்தமும் கீதசப்தமும் கீழ்ச்சொன்ன சந்தோகஸாம - தத்கீதங்களாகிற விசேஷத் திலே பர்யவஸிக்குமான பின்பு சந்தோக ஸாமமே இத்தால் சொல்லபபட்டதாகை யாலே இப்படி ஆழ்வார்களும் தானும் தன்னோடு அபேதமாகச் சொல்லும்படி மிகச் சிறந்ததாய் அவனுக்கு ஆதரணீயமான சந்தோகஸாமமே. இத்திருவாய்மொழி யென்பது விளங்கும்படியாக, (ஆழ்வார் என்ன செய்திருக்கிறரென்றுல்)

**உத்கீத ப்ரணவத்தை ப்ரதமத்திலே மாருடி**—உத்கீதாவயவமான ப்ரணவத்தை * ஓமித்யேததக்ஷர முத்கீதமுபாஸீத * என்று சாந்தோக்யத்தில் முதலிலெடுத்தாப் போலே இங்கும் முதலிலே [உயர்வறவுயர்நலமென்கிற பாட்டிலே] அகார உகார

மகாரங்களென்கிற அக்ஷரக்ரமத்தை மாருடி உகாரம் முதலாகவெடுத்து, சரமகதி முடிவாக—சாந்தோக்யத்தின் நடுவில் சொன்ன அர்ச்சிராதியான சரமகதியை * சூழ்விசும்பணிமுகிலிலே முடிவாகக்கொண்டு,

தொண்டர்க்கு அமுதென்ன தேவான்ன மாக்கி—அந்த ஸாமகானம் நித்ய முக்த ரான தேவர்களுக்கு போக்யமாயிருப்பதுபோல, இத்திருவாய்மொழியையும் * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன் * என்கிறபடியே பகவதநுபவ ரஸிகர்களுக்கு போக்யமாம்படியாக்கி,

மஹாகோஷ நல்வேதவொலி போலே—பெரிய கோஷத்தை யுடைத்தான ஸாம வேதம் போலே, மஹாத்யயநமென்னப் பாடுகையாலே—பெரிய திருவத்யயனமென் னும்படி பாடப்படுகையாலே (ஆக விப்படிப்பட்ட ஆகாரங்களைக்கொண்டு)

இத்தைச் சாந்தோக்ய ஸமமென்பர்கள்-திருவாய்மொழியை சந்தோக ஸாமத்தில் உபநிஷத்பாகமான சாந்தோக்யத்துக்கு ஸமமென்று பெரியார் கூறுவர்கள். (52)

(தூ.) 52. ஸாமம் அநேகவிதமாகையாலே திருவாய்மொழி எந்த ஸாமத் தோடொக்குமென்னில்; ச்சாந்தோக்ய ஸாமத்தோடொக்கும். *சாமவேதகீதனை* என்று திருமழிசைப் பிரானும், * சாமியப்பன் * என்று திருமங்கையாழ்வாரும் * ஸாமவேதோஸ்மி * என்று கீதாசார்யனுஞ் சொன்னஸாமம் ஸாமாந்யமாகாமல் *சந்தோகன் பௌழியனைந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி* என்ற திருமங்கை யாழ்வாரருளிச்செயலில் "சாமவேதி" என்று மேலே சொல்லாநிற்க முதலிலே 'சந்தோகன்' என்று சிறப்புறப் பிரித்துரைத்து "யாழ்பயில்நூல் நரம்பின்முதிர்சுவை" (திருவாய்மொழி) என்று யாழ்விஷயமாக அப்யஸிக்கப்படுவதான சாஸ்திரத்திற் சொன்ன லக்ஷணத்தையுடைய நரம்பிலே பிறந்த பண்பட்ட ரஸமென்னும்படி காநஸ்வரூபம் போலே பரமபோக்யனானவன் என்று - காநஸாமாந்யமாகாமல் "பண்ணினின்மொழி யாழ்நரம்பில்பெற்ற பாலையாகி" (பெரியதிருமொழி) என்று அந்த சந்தோக ஸாமத்தின் நிறமான பாலையாகிற பண்ணையிட்டு விசேஷிக்கை யாலே "சாமவேதகீதன்" "சாமி" "ஸாமவேதோஸ்மி' என்ற விடங்களில் பொதுப் படையாகச் சொல்லப்பட்ட ஸாம சப்தமும் கீத சப்தமும் கீழ்ச்சொன்ன சந்தோக ஸாமமும் அதன் கீதமுமாகிற விசேஷத்திலே பர்யவஸிக்குமான பின்பு சந்தோக ஸாமமே இத்தால் சொல்லப்பட்டதாகையாலே இப்படி ஆழ்வார்களும் தானும் தன்னோடு அபேதமாகச் சொல்லும்படி மிகச்சிறந்ததாய் அவனுக்கு ஆதரணீய மான சந்தோக ஸாமமே இத் திருவாய்மொழி என்பது தோன்றும்படியாக ஆழ்வார் என்ன செய்திருக்கிருரென்றால், உத்கீத ப்ரணவத்தை முதலிலே மாருடினார்;— ஒரு ஸாமத்திற்கே ப்ரஸ்தாவம், உத்கீதம், ப்ரதிஹாரம், உபத்ரவம், நிதநம் என்று ஐந்து பாகங்களுண்டாகையாலே அவற்றுக்குள்ளே (உத்கீதமும்) ஒன்றுயிருக்கச் செய்தே "ஸாம்நஃ உத்கீதோ ரஸஃ" என்று ஸாமத்திற்கு ரஸமாகச் சொல்லப்படும தாய் ப்ரணவத்தை முன்னிட்டு காநம் பண்ணப்படுமதாயிருப்பது உத்கீதமாகை யாலே அந்த உத்கீதத்தின் அவயவமான ப்ரணவத்தை "ஓமித்யேத தக்ஷரமுத்கீத முபாஸீத" என்று சாந்தோக்யத்தில் முதலிலே யெடுத்தாப்போலே திருவாய்மொழி

யிலும் முதலிலே யெடுக்கிறவளவில் 'ஓம்' என்று சேர்த்தேயெடுத்தால் திருவாய்மொழியின் ஸர்வாதிகாரத்வம் குன்றுமென்று அந்த ப்ரணவத்தை மூன்றக்ஷரமாகப் பிரித்து அம்மூன்றையும் [உயர்வறவுயர்நலமென்கிற பாசுரத்தில்] முதல் மூன்றடிகளில் எடாநிற்கச்செய்தே முதலெழுத்தான அகாரம் முதலாக எடாதே உகாரம் முதலாக எடுக்கையாலே அக்ஷர க்ரமத்தை மாருடினுர். இங்ஙனம் மாருடி உகாரம் முதலாக எடுத்தது ஏனென்னில்; அந்த சாந்தோக்யரஸமான உத்கீதத்திற்கு நோக்கான 'உத்' என்கிற திருநாமம் இதற்கு உள்ளுறையாயிருக்கின்றமைதோன்ற உகாரம் முதலாகவெடுத்து முடிவில் 'உயர்ந்தே' என்று தகார மிறுதியாக முடிக்கையிலே திருவுள்ளம். ஆகவிப்படி மூன்றக்ஷரமாக ப்ரணவத்தை முதலிலே மொழியாநிற்கச் செய்தே கீழ்விவரித்த கருத்தினுல் எழுத்து முறைமையை மாருடி, சாந்தோக்யத்தின் நடுவிற்சொல்லப்பட்ட அர்ச்சிராதியாகிற சரமகதியைத் திருவாய்மொழியில் * சூழ் விசும்பணிமுகிற் பதிகத்திற் பேசுகையாலே சரமகதியை முடிவாகக்கொண்டு, அந்த ஸாமம் * ஏதத்ஸாம காயந் ஆஸ்தே * என்கிறபடியே பகவதநுபவத்திலுண்டான மகிழ்ச்சிக்குப் போக்குவீடாக "ஹாவு ஹாவு ஹாவு" இத்யாதிப்படியே ஸாமகாநம் பண்ணி "அஹமந்நாத:" என்று களிக்கும் நித்ய முக்தரான தேவர்களுக்கு போக்யமாயிருப்பதுபோல இத் திருவாய்மொழியையும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே பகவதநுபவ ரஸிகர்களுக்கு போக்யமாம்படியாக்கி, "ஸர்வேப்யோபி ஹி வேதேப்ய: ஸாமகோஷோ மஹாநபூத். அந்வகோஷயதத்யர்த்தம் தேந ப்ரஹ்மாண்ட மண்டப:" [எல்லா வேதங்களின் ஒலியிற்காட்டிலும் ஸாமவேத வொலியே ப்ரஹ்மாண்ட மண்டலம் வரையில் எட்டும்படி மிகப்பெரிதாயிருந்தது] என்றும், "பாடு † நல்வேதவொலி பரவைத் திரைபோல் முழங்க" என்றும் "எங்குமெழுந்த † நல்வேதத்தொலிநின்ருேங்கு" என்றும் சொல்லுகிறபடியே பெரிய கோஷத்தையுடைத்தான ஸாமவேதம் போலே திருவாய்மொழியும் ‡ பெரிய திருவத்யயநமென்னப் பாடப்படுகையாலே ஆக இப்படிப்பட்ட ஆகாரங்களையிட்டுத் திருவாய்மொழியை சந்தோக ஸாமத்தில் உபநிஷத்பாகமான சாந்தோக்யத்தோடு ஒத்ததென்று மஹான்கள் நிர்வஹிப்பர்கள்.

(மு.) 53. **புரவியேழொருகாலுடைய தேரிலே திருச்சக்கரமொத்துக் காலசக்கரச் செங்கோல்நடாவி ஜ்யோதிச்சக்ரவொளிசுருக்கி அக்நீஷோமீயதேஜோம்ருதத்துக்கூற்றும் மந்தேஹர்க்குச் செந்தீயும் முக்தி மார்க்கத்தலைவாசலும் கண்ணுவான் கண்ணில் பிறந்த கண்மணியும் த்ரயீமயமுமான மண்டலத்திலே நண்டாமரைசுமக்கத் தோள்வளையும் குழையும் திருசெய்ய முடியுமாரமும் படையும் திகழும் பொன்மேனியும செஞ்சுடர்த் தாமரைக் கண்ணுமாய் அணிநிறமூர்த்தி யீதென்**

† **நல்வேத** மென்கையாலே ஸாமவேதம் விவக்ஷிதமென்று திருவுள்ளம்.

‡ நம்பெருமாள் ஸந்நிதியில் முதலாயிரமும் பெரிய திருமொழியும் ஸேவிக்கப்பெறுகிற பகற்பத்துத் திருநாள் சிறிய திருவத்யயனமென்றும், திருவாய்மொழி ஸேவிக்கப்பெறுகிற இராப்பத்துத் திருநாள் பெரிய திருவத்யயநமென்றும் வழங்கப்படுதலால் ஸாமகோஷத்திற்கும் திருவாய்மொழி கோஷத்திற்கும் பெருமை ஒக்குமென்க.

னும்படி இரண்டையும் தன்னிறமாக்குகிற செய்யாளான வித்யையோடே அருக்கன்மேவின ஸதாத்யேயதேஜஸ்ஸின் ஸாமரஸோத்காந நாமமுள்ளுறை யான ஆத்யந்தங்களாலே ஓராயிரமாமவற்றிலே ஒன்றை ஆயிரமுகத்தினால் அருளின தீர்த்தம்போலே தீர்த்தங்களாயிரமுமாக விஸ்தரிக்கிறரென்று வேதகுருபதேசம்.

(உத்கீதப்ரணவத்தை முதலிலே மாறுடினதாகக் கீழ்ச்சொன்னதின் கருத்தை ஆப்தோபதேசமுகத்தால் அறிவித்தல்)

(ப.) 53. [சாந்தோக்யமென்கிற உபநிஷத்தில் ஸூர்யமண்டலவர்த்தியான பரமபுருஷனைக் குறித்து "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மயঃ புருஷோ த்ருச்யதே" என்று ப்ரஸ்தாவித்து "தஸ்ய உத் இதி நாம" என்று சொல்லியிருக்கையாலே அதை முற்றுந்தமுலி இந்த சூர்ணிகையருளிச் செய்திருப்பது பரமபோக்யம்.]

புரவியேழொருகாலுடைய தேரிலே—* காரார் புரவியேழ் பூண்டதனியாழி * என்றும் * ஒரு காலுடைய தேரொருவனாய் * என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்த படியே ஏழுகுதிரைகளையும் ஒற்றைச் சக்கரத்தையு முடைத்தான தேரிலே,

(இனிமேல் எட்டுவாக்யங்கள் ஸூர்யமண்டலத்தின் விசேஷங்களைக் கூறுவன.)

திருச்சக்கரமொத்து— * செஞ்சுடரோன் திருமால் திருக்கைத் திருச்சக்கர மொக்கும் *என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே தன்னுடைய தேஜோவிசேஷத் தாலே சக்கரத்தாழ்வானோடொத்தும்,

காலசக்கரச் செங்கோல் நடாவி— * அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார்வினைகெடச் செங்கோல்நடாவுதிர் * என்கிற திருவிருத்தப் பாசுரப் படியே உபயவிபூதியிலும் எம்பெருமான் தன்னுடைய ஆஜ்ஞையை நடத்துகைக் குக் கருவியாகக் கொண்ட திருவாழியாழ்வானைப் போலே * காலசக்கரத்தாய் * என்றும் * கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே * என்று முள்ள பாசுரங்களின்படியே காலசக்ர நிர்வாஹகனான அப்பெருமானுடைய காலசக்ர விஷய மான ஆஜ்ஞையை * தனிவளர் செங்கோல் நடாவு தழல்வாயரசு * என்கிற பாசுரப்படியே [ஸூர்யனாகிற தான்] நடத்திக்கொண்டும்,

ஜ்யோதிச் சக்ரவொளி சுருக்கி—* சுடரொளி பரந்தன சூழ்திசையெல்லாம் துன் னிய தாரகை மின்னொளி சுருங்கி * என்று திருப்பள்ளியெழுச்சியி லருளிச்செய்த படியே நக்ஷத்ரம் முதலிய ஸகலதேஜঃபுஞ்ஜங்களினுடையவும் தேஜஸ்ஸுக்களை அஸத்ஸமமாக்கியும்,

அக்நீஷோமீய தேஜோம்ருதத்துக்கு ஊற்றும்—[அக்நிதேஜஸ்ஸுக்கு ஊற்றும், ஸோமாம்ருதத்துக்கு ஊற்றும் என்று யோஜனை] அக்நியினுடைய தேஜஸ்ஸுக் கும் ஸோமனாகிய சந்திரனுடைய அம்ருதத்திற்கும் பிறப்பிடமாகியும்,

மந்தேஹர்க்குச் செந்தீயும்— * மந்தேஹாருணே த்வீபே * இத்யாதியுபநிஷத் தின் படியும் * மீண்டவற்று ளெரிகொள் செந்தீவீழசுரரைப்போல * என்ற திரு விருத்தப்பாசுரப்படியும் மந்தேஹரென்கிற ராக்ஷஸர்கள் மடிந்துபோவதற்குரிய சிவந்த அக்நியாயும்,

**முக்திமார்க்கத்தலைவாசலும்**—அர்ச்சிராதியான மோக்ஷமார்க்கத்திற்கு முதல் வாசலாகியும்,

**கண்ணுவான் கண்ணில்பிறந்த கண்மணியும்**—* கண்ணுவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு * என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே அனைவர்க்கும் கண்போன்றவனான ஸர்வேச்வரனுடைய கண்ணில் நின்றும் * சக்ஷோஸ் ஸூர்யோ அஜாயத * என்கிற சுருதியின்படியே தோன்றின கண்மணியாகியும்,

**த்ரயீமயமுமான மண்டலத்திலே**—வேதமயமாயும் [இப்படி எட்டு விசேஷணங்களுக்கு உரியதாக] ப்ரஸித்திபெற்ற ஸூர்யமண்டலத்திலே; (இந்தஸப்தம்யந்தமானது மேலே "அருக்கன்மேவின" என்பதனோடு சேரக்கடவது) (ஸூர்யமண்டலத்திலே எம்பெருமானெழுந்தருளியிருக்கும் விதம் எப்படிப்பட்டதென்றால், அது சொல்லுகிறது மேல்)

**தண்டாமரை சுமக்க**—* தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமான் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே * ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்டனாய்,

**தோள்வளையும் குழையும் திருச்செய்யமுடியும் ஆரமும்படையும் திகழும் பொன்மேனியும்**—* செங்கமலக்கழலில் * என்கிற பெரியாழ்வார் பாசுரத்திலும் * திருச்செங்குன்றூரில் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திலும் கூறினபடியே, தோள்வளை மகரகுண்டலம் கிரீடம் ஹாரம் திருவாழி திருச்சங்கு ஆகிய திவ்யாபரணங்கள் விளங்கப்பெற்று * திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் * என்று பேசப்பட்ட பொன்னிறமான திருமேனியை யுடையவனுயும்,

**செஞ்சுடர்த் தாமரைக் கண்ணுமாய்**—* அஞ்சுடர வெய்யோனணி நெடுந்தேர் தோன்றுதால் * என்றவுடனே * செஞ்சுடர்த் தாமரைக்கண் செல்வனும் வாரானால் * என்று நம்மாழ்வார் ஸூர்ய மண்டலத்தோடே ஸமபிவ்யாஹரித்துச் சொல்லுகையாலும் * தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ * என்று ச்ருதி சொல்லுகையாலும் ஆதித்ய கிரணங்களாலே விகஸிதமானபோதைச் சிவந்த வொளியையுடைய தாமரைபோன்ற திருக்கண்களுமாய்,

**அணிநிறமூர்த்தி யீதென்னும்படி இரண்டையும் தன்னிறமாக்குகிற**—* திகழுமருக்கனணி நிறமும் கண்டேன் * என்று பேயாழ்வாரும் * செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி யீதென்னும் * என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்யலாம்படி பகவத் விக்ரஹத்தையும் ஆதித்ய மண்டலத்தையும் தன்னோடொத்த நிறத்தையுடையதாம்படி செய்கின்றவளான,

**செய்யாளான வித்யையோடே**—* கமலமலர்மேல் செய்யாள் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே ஹிரண்யவர்ணையாய் * வித்யாஸஹாயமாதித்யஸம்ஸ்தம் வித்யாப்ரஸாதகம் * என்கிறபடியே **வித்யா** சப்தத்தினுல் சொல்லப்பட்டவளுமான பிராட்டியோடு கூட,

**அருக்கன் மேவின**—* வானிடை யருக்கன் மேவி நிற்பாற்கு * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே ஸூர்யனுக்குள்ளே யெழுந்தருளியிருக்கின்ற,

**ஸதாத்யேய தேஜஸ்ஸின்**—* த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ நாராயணः * என்கிறபடியே எப்போதும் த்யானிக்கத்தக்க தேஜோரூபியாயிருக்கிற பரம புருஷனை ப்ரதிபாதிக்கின்ற,

ஸாமரஸோத்காநநாம முன்ளூறையான ஆத்யந்தங்களாலே — சந்தோகஸாமத்துக்கு ரஸமாயிருந்துள்ள உத்கீதத்தில் 'உத்' என்று சொல்லப்பட்ட திருநாமம் இத்திருவாய்மொழிக்கு அந்தரங்கமாயிருக்கின்ற தென்பது தோற்றும்படியாக உயர்வற வென்று உகாத்திலே தொடங்கி முடிவுபாசுரத்திலே 'உயர்ந்து' என்று தகாரத்திலே தலைக்கட்டியிருக்கிற ப்ரகாரங்களாலே,

ஓராயிரமாமவற்றிலே ஒன்றை—*ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங் கொண்டதோர் பீடுடையன் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே ஒரு திருநாமமே ஆயிரந் திருநாமங்களின் காரியஞ் செய்யுமென்னப்பெற்ற பெருமை வாய்ந்த திருநாமங்களுக்குள்ளே (உத் என்கிற அந்த) ஒரு திருநாமத்தை,

ஆயிரமுகத்தினலருளின தீர்த்தம் போலே — ஒருகங்கைதானே உலகத்தைப் புனிதமாக்குவதற்காக * அந்தரத்தமரரடியிணை வணங்க ஆயிரமுகத்தினலருளி * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே தன்னை ஆயிரமுகமாகப் பெருக்கினுப்போலே,

தீர்த்தங்களாயிரமுமாக விஸ்தரிக்கிருரென்று— * தீர்த்தங்களாயிரத்துள் * என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்யும்படி லோகபாவனமான ஆயிரம்பாட்டாக விரித்து அருளிச்செய்தாரென்று,

வேதகுருபதேசம்—வேதாசார்யபட்டர் உபதேசிக்கும்படி.

[கீழ்ச் சூர்ணையில் ''இத்தை ச்சாந்தோக்யஸமமென்பர்கள்'' என்று அருளிச் செய்ததானது இந்த சூர்ணையினுல் வெகு விரிவாகவும் ஸுஸங்கதமாகவும் விவரிக்கப்பட்டதாயிற்று.] ... ... ... ... (53)

(தா.) 53. ஏழு குதிரைகளையும் ஒரு சக்கரத்தையுமுடைத்தாகையாலே விலக்ஷணமான பெருமை வாய்ந்த தேரிலே, தேஜோ விசேஷத்தாலே திருவாழியோடொத்து, காலசக்ர நிர்வாஹகனுன எம்பெருமானுடைய காலசக்ர விஷயமான ஆஜ்ஞையை நடத்தி, நக்ஷத்திரம் முதலிய சோதிமண்டலங்களின் தேஜஸ்ஸைக் குறைத்து, அக்நியினுடைய தேஜஸ்ஸுக்கும் சந்திரனுடைய அம்ருதத்துக்கும் பிறப்பிடமாயும் மந்தேஹரென்னும் ராக்ஷஸர்க்குச் சிவந்த நெருப்பாயும் அர்ச்சிராதியான மோக்ஷவழிக்கு முதல்வாசலாயும், அனைவர்க்கும் கண்போன்றவனுன ஸர்வேச்வரனுடைய கண்ணிலேபிறந்த கண்மணியாயும் வேதமயமாயுமிருக்கின்ற ஸௌர்யமண்டலத்தில் * சீர்பூத்த செழுங்கமலத்திருத்தவிசில் வீற்றிருப்பவனுய், தோள்வளையும் மகரகுண்டலமும் கிரீடமும் ஹாரமும் திருவாழி திருச்சங்கும் பொன்னிறமான திருமேனியும் செந்தாமரைக்கண்களுமுடையனுய், பகவத் விக்ரஹத்தையும் ஆதித்ய மண்டலத்தையும் தன்னிறமாக்குகின்ற சிவந்த நிறத்தையுடையவளான பிராட்டியோடுகூட ஆதித்யனுள்ளே யிருப்பவனுய், எப்போதும் சிந்திக்கவுரிய தேஜோரூபியாயிருக்கிற விலக்ஷண பரம புருஷனை ப்ரதிபாதிக்கின்ற சந்தோக ஸாமத்துக்கு ரஸமாயிருந்துள்ள உத்கீதத்தில் 'உத்' என்று சொல்லப்பட்ட திருநாமம் இத்திருவாய்மொழிக்கு உள்ளூறயானமை தோற்றும்படியாக உயர்வு என்றெடுத்து உயர்ந்தே என்று தலைக்கட்டுகையால் உகாரம் ஆதியாயும் தகாரம் அந்தமாயுமிருக்கிற ஆத்யந்தங்களாலே, ஒரு திருநாமமே ஆயிரம்

முகமாக நின்று உலகேழளிக்கவல்ல திருநாமங்களிலே ஒரு திருநாமத்தை, ஒன்றான கங்கைதானே உலகத்தைப் புனிதமாக்குவதற்காகத் தன்னை ஆயிரமுகமாய்ப் பெருக்கினாப்போலே லோக பாவனமான ஆயிரம் பாட்டாக விஸ்தரிக்கிறாரென்று வேதாசார்யபட்டர் உபதேசிப்பராம்,

[ஆக இவ்வளவால் ஆழ்வாருடைய நான்கு திவ்யப்ரந்தங்களும் வேதரூபமென்பதும் அங்க உபாங்கஸஹித மென்பதும், வேதத்திற்குள்ள லக்ஷணங்களும் அமையப்பெற்றன வென்பதும், நித்யங்களும் அபௌருஷேயங்களுமாயிருக்குமென்பதும், இவற்றில் இன்ன ப்ரபந்தம் இன்ன வேதஸ்தாநீய மென்பதும், அதில் ஸாமவேத ஸ்தாநீயமான திருவாய்மொழி ஸாமச்ரேஷ்டமான சந்தோகஸாமோபநிஷத்துக்கு ஸமமென்பதும் நிரூபிக்கப்பட்டன.] ... .... (53)

(மு.) 54. அன்றிக்கே ஸ்வரூபகுணவிபூதிசேஷ்டிதங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ர புராணேதிஹாஸங்கள்போலே நீலபாருபோக்தி தெரியச்சொன்ன வேதோபப்ரும்ஹண மென்பர்கள்.

[ஆழ்வாருடைய நான்கு ப்ரபந்தங்களுக்கும் வேதஸாம்யம் தவிர, வேத உபப்ரும்ஹண ஸாம்யமும் உண்டென்பது]

(ப.) 54. அன்றிக்கே—கீழ்விவரித்தபடியே நம்மாழ்வாருடைய நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும் வேதஸாம்யம் சொல்லுகை மாத்திரமேயல்லாமல்; (வேத உபப்ரும்ஹண ஸாம்யமும் நிர்வஹிக்கப்படுவதுண்டு; எங்ஙனேயென்னில்;)

ஸ்வரூப குணவிபூதிசேஷ்டிதங்களை விசதமாக்குகிற பஞ்சராத்ரபுராண இதிஹாஸங்கள் போலே—எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலிய ஸகலத்தையும் கலந்தகட்டியாக ஓதியிருக்கிற ச்ருதியிலிருந்து ஒவ்வொன்றை யெடுத்துக் கொண்டு விசதமாக்குவதற்காக [வேதோபப்ரும்ஹணமாய்] ஸ்ரீபாஞ்சராத்ரமும் புராணங்களும் இதிஹாஸங்களும் அவதரித்து ஸ்வரூபத்தையும் குணங்களையும் பாஞ்சராத்ரம் விளக்கி, விபூதிவிஸ்தாரத்தைப் புராணங்கள் விளக்கி, சேஷ்டித விஸ்தாரத்தை இதிஹாஸங்கள் விளக்கிநின்றாப்போலே,

நீலபாருபோக்தி தெரியச்சொன்ன வேதோபப்ரும்ஹணமென்பர்கள்—* நீலதோயத மத்யஸ்தா பீதாபா ஸ்யாத் தநூபமா * பாருப: * இத்யாதி ச்ருதிகளில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீமந்நாராயண திவ்யமங்கள விக்ரஹத்தை * தெரியச்சொன்ன வோராயிரம் * என்கிறபடியே விளக்கித் தெரிவிக்கவே திருவாய்மொழி அவதரித்திருக்கையாலே இந்த வகையையிட்டு அப் பாஞ்சராத்ராதிகள்போல இத்தமிழ் வேதமும் வேதோபப்ரும்ஹணம் என்று நிர்வஹிப்பாருமுளர். எல்லாவற்றிலும் எல்லாமுண்டே யாகிலும், ஒவ்வொரு நூலுக்கு ஒவ்வொன்றை முக்கியமாகப் பேசுகையிலே விசேஷ நோக்கு என்று கொள்ளக் குறையில்லாமையாலே நம்மாழ்வாருடைய திவ்யப்ரபந்தங்களிலும் ஸ்வரூப, ரூப, குண, விபூதி, சேஷ்டிதங்களாகிற எல்லாமும் பேசப்பட்டிருந்தாலுங்கூட, இவற்றுக்கு எம்பெருமானுடைய வடிவழகைப் பற்றி விளக்கமாகப் பேசுகையிலே விசேஷ நோக்கு என்று நிர்வஹித்தவிது மிகவும் ஸமஞ்ஜஸம். ... ... ... (54)

(நா.) 54. ஆழ்வாரருளிச்செய்த திருவிருத்தம் முதல் திருவாய்மொழியீருன நான்கு திவ்யப் பிரபந்தங்கட்கும் இப்படி வேதஸாம்யம் சொல்லுகைமாத்திரமன்றியே வேதோபப்ரும்ஹண ஸாம்யமுஞ் சொல்லுவதுண்டு: எங்ஙனேயென்னில்; எம்பெருமானுடைய ஸ்வரூப குண விபூதி சேஷ்டிதங்களை ப்ரதிபாதியாநின்றுள்ள ச்ருதியிற் சொல்லப்பட்ட ஸ்வரூபத்தையும் குணங்களையும் விசதமாக்குவதற்குப் பாஞ்சராத்ரமும், விபூதி விஸ்தாரத்தை விளக்குவதற்குப் புராணங்களும், சேஷ்டித விஸ்தாரத்தை விளக்குவதற்கு இதிஹாஸங்களும் ஆவதரித்தாப்போலே, எல்லையற்ற தேஜோராசிமயமான ஸ்ரீமந்நாராயண திவ்யமங்களவிக்ரஹத்தை ப்ரதிபாதியா நின்றுள்ள வேதபாகங்களை விசதப்படுத்துவதற்கு இந்நான்கு திவ்யப்ரபந்தங்களும் அவதரித்தனவென்பர். [பஞ்சராத்ர புராண இதிஹாஸங்களிலும் இந்நான்கு ப்ரபந்தங்களிலும் ஸ்வரூபம் குணம் விபூதி சேஷ்டிதம் ஆகிய எல்லாமுமே சொல்லப்பட்டிருந்தனவாகிலும், பஞ்சராத்ரங்களுக்கு ஸ்வரூப, குணங்களிலே நோக்கு என்றும், புராணங்களுக்கு * ஸர்க்கச் ச ப்ரதிஸர்க்கச் ச வம்சோ மந்வந்தராணி ச - வம்சாநு சரிதஞ் சைவ புராணம் பஞ்சலக்ஷணம் * என்கிறபடியே விபூதி விஸ்தார ப்ரதிபாதநத்திலே நோக்கு என்றும் நம்மாழ்வாரருளிச்செயல்களுக்கு திவ்யமங்களவிக்ரஹத்திலே நோக்கு என்றும் பெரியோர்கள் நிஷ்கர்ஷித்திருக்கையாலே இப்படி வகையிட்டுச் சொல்லக்குறையில்லை. திருவிருத்தத்தில் தொடக்கத்தில் " முழுநீர்முகில் வண்ணன்" என்று திருமேனியை ப்ரஸ்தாவித்து, முடிவிலும் "மைப்படி மேனியும் செந்தாமரைக்கண்ணும்" என்று அதனையே ப்ரஸ்தாவிக்கையாலும், திருவாசிரியத்திலும் "மீதிட்டுப் பச்சைமேனி மிகப்பகைப்ப" என்று தொடக்கத்திலே திருமேனியை ப்ரஸ்தாவித்து, மேலேயும் "தாமரைக்காடு மலர்க்கண்ணொடு கனிவாயுடையதுமாய்" என்று அதனையே ப்ரஸ்தாவிக்கையாலும், பெரிய திருவந்தாதியிலும் "நற்பூவைப்பூவீன்றவண்ணன்" என்று திருமேனியைத் தொடங்கி முடிவிலும் "கார்கலந்த மேனியான்" என்று அதனையே பேசுகையாலும், திருவாய்மொழியிலும் "துயரறுசுடரடி" என்று திருமேனியிலே தொடங்கி "புனக்காயாநிறத்த" என்று அதுதன்னிலே தலைக்கட்டுகையாலும் நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களுக்கும் திவ்யமங்கள விக்ரஹத்திலே பெரும்பான்மையானநோக்கென்க.

(மூ.) 55. **கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸுபம் மோஹ சாஸ்த்ரப்ரவர்த்தகன் பிணச்சுடலை வெந்தாரக்குமாறுமணிந்து ஏறேறிச் சுழன்றுடுமாலமமர்பிச்சுத் தெளிந்து தான் வணங்குமாறுரைக்கக் கேட்ட ஸஜாதீயர் ப்ரஸாதமும் ஆர்ஷமூலம்.**

**[மஹர்ஷிகளின் க்ரந்தங்களுக்கு மூலம் இன்னதென்பது]**

(ப.) 55. **கல்பாதியில் தோற்றிற்று வர்ணிக்கும் சதுர்முகன் சந்தஸ்ஸுபம்**—ஸாத்விக ராஜஸ தாமஸங்களென்றும் ஸங்கீர்ணங்களென்றும் சொல்லப்படுகிற அஹஸ்ஸுக்களாகிற கல்பங்களின் ஆதியிலே எந்த குணம் தலைகாட்டுகிறதோ அந்த குணத்திற்குத் தக்கபடி நெஞ்சில் தோன்றினவாறெல்லாம் ஒவ்வொரு தேவதையின் மாஹாத்மியத்தை வருணித்துப் பேசுகின்றவனான நான்முகனுடைய வரப்ரஸாதமானது, * மச்சந்தாதேவ * இத்யாதிப்படியே,

ஆர்ஷமூலம்—வால்மீகி ப்ரோக்தமான ராமாயணத்தினவதாரத்திற்கு மூலமானது ;

மோஹசாஸ்த்ர ப்ரவர்த்தகன்—* த்வஞ்ச ருத்ர ! மஹாபாஹோ ! மோஹசாஸ்த்ராணி காரய * என்று எம்பெருமான் நியமித்தது வியாஜமாக ஆகமம் முதலிய மோஹ சாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்தவனான ருத்ரன்,

(பிணச்சுடலை வெந்தார் அக்கும்ஆறுமணிந்து ஏறேறிச் சுழன்றுடும் ஆலமமர் பிச்சுத் தெளிந்து=)

பிணம்—* பிணங்களிடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனோடு * என்றும்,

சுடலை—* சுடலையில் சுடுநீறன் * என்றும்,

வெந்தார்—* வெந்தாரென்புஞ் சுடுநீறும் மெய்யில்பூசி * என்றும்,

அக்கும்—* அக்கும்புலியினதளுமுடையா ரவரொருவர் * என்றும்,

ஆறும் அணிந்து—* ஆறும் பிறையுமரவமும் அடம்பும் சடைமேலணிந்து * என்றும்,

ஏறேறி—* எரியுருவத்தேறேறி * என்றும்,

சுழன்றுடும்— * மன்னுகுலவரையும் மாருதமும் தாரகையும் தன்னினுடனே சுழலச் சுழன்றுடும் கொன்னவிலும் மூவிலைவேல் கூத்தன் * என்றும்,

ஆலமமர்—* ஆலமமர்கண்டத்தரன் * என்றுமுள்ள பாசுரங்களில் சொல்லப்பட்டபடியே—சுடுகாடுகளிலே திரிந்து பிணங்களின் நீற்றை உடம்பெங்கும்பூசி எலும்புமாலையைப்பூண்டு புலித்தோலுடுத்து, கங்கை சந்திரன் ஸர்ப்பம் முதலானவற்றைச் சடைமீதணிந்து ரிஷப வாஹனனாய்க் கூத்தாடியாய் விஷகண்டனாயிருந்து,

பிச்சுத்தெளிந்து—' நம்மிற்காட்டில் மேற்பட்டாரில்லை ' என்று பிச்சேறிக்கிடந்த நிலைமை நீங்கி ஸத்வகுணம் தலையெடுத்து,

தான்வணங்குமாறு உரைக்க—* ஆலநிழற்கீழறநெறியை நால்வர்க்கு, மேலையுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞாலமளந்தானை ஆழிக்கிடந்தானை, ஆல்மேல்வளர்ந்தானைத் தான் வணங்குமாறு * என்கிற திருமழிசையாழ்வார் பாசுரப்படியும், * அறிவானுமாலமர நீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த, ஆலமமர் கண்டத்தான் * என்கிற பொய்கையாழ்வார் பாசுரப்படியும் (ருத்ரன்) தான் ர்வேச்வரனை யுபாஸிக்கும் வகையை உபதேசிக்க,

கேட்ட—அந்த ருத்ரனிடம் உபதேசங்கேட்டவர்களாய்,

ஸஜாதீயர் ப்ரஸாதம்—(பராசரரான தமக்கு) ஸஜாதீயர்களான அகஸ்த்ய புலஸ்த்ய தக்ஷமார்க்கண்டேயர்கள் நால்வரில் ஒருவனான புலஸ்த்யன் பண்ணின வரப்ரதானம், [* புராண ஸம்ஹிதாகர்த்தா பவாந் வத்ஸ ! பவிஷ்யதி, தேவதா பாரமார்த்த்யஞ்ச யதாவத் வேத்ஸ்யதே பவாந் * என்று புலஸ்த்ய முனிவர் பராசர முனிவர்க்கு அருளிச்செய்தது காண்க.]

ஆர்ஷமூலம் — பராசரமஹர்ஷியின் புராணம் அவதரிப்பதற்கு மூலம். [ஆழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களும் மஹர்ஷிகளின் இதிஹாஸ புராணங்களும் வேதங்களுக்கு உபப்ரும்ஹணங்கள் என்கிற ஸாம்யத்தை ஒருவாறு பெற்றிருந்தா

லும், நம்மாழ்வாருடைய திவ்ய ப்ரபந்தங்களுக்குண்டான ஏற்றம் மஹர்ஷிகளின் க்ரந்தங்களுக்குக்கிடையாதென்று மேலே விரிவாக நிரூபிக்கப்படும் விஷயத்திற்கு அடியிடுவது இந்த சூர்ணிகை. மேல் சூர்ணையையும் சேர்த்து இதன் தாத்பர்ய முணரவேணும். ராஜஸதெய்வமான சதுர்முகனுடைய வரப்ரஸாத மடியாக அவதரித்த வால்மீகி ப்ரபந்தமென்ன, தாமஸதெய்வமான ருத்ரனிடம் உபதேசங் கேட்ட ரிஷிகளில் ஒருவனான புலஸ்த்யனுடைய வரப்ரஸாத மடியாக அவதரித்த பராசரப்ரபந்தமென்ன, மற்றும் இப்புடைகளிலே தோன்றின இதர மஹர்ஷி ப்ரபந்தங்களென்ன அவையெல்லாவற்றிலுங் காட்டில் பரமஸாத்விக தேவதையான ஸ்ரீமந் நாராயணனுடைய திருவருளடியாகவே அவதரித்த ஆழ்வார் திருவாக்கு மிகச்சிறப்புப்பெற்றது என்பதே இங்கு விவக்ஷிதம். ... ... (55)

(நா) 55. ஆழ்வாரருளிச்செயல்களும் மஹர்ஷிகளின் க்ரந்தங்களும் வேதங்களுக்கு உபப்ரும்ஹணம் என்னுமாகாரத்தாலே ஒருவாறு ஸாம்யம்பெற்றிருந்தாலும் நம்மாழ்வாரருளிச்செயல்களுக்குள்ள ஏற்றம் ருஷிகளியற்றிய புராணாதிகளுக்கு இல்லையென்பதை அறிவிப்பதற்காக ருஷி க்ரந்தங்களினுடையவும் ஆழ்வாரருளிச் செயல்களினுடையவும் உத்பத்தி மூலங்களை வெளியிடவிரும்பி, முதலில் ருஷி க்ரந்தங்களின் உற்பத்திக்கு மூலம் இன்னதென்கிறது.—ஸங்கீர்ணங்களென்றும் ஸாத்விகங்களென்றும் ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் சொல்லப்படுகிற அஹஸ்ஸுக்களாகிற கல்பங்களினுடைய ஆதிகளிலே கிளர்கின்ற குணங்களுக்கு ஏற்ப * அக்நேः சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம், ராஜஸேஷு ச மாஹாத்ம்யம் அதிகம் ப்ரஹ்மணோவிதுः, ஸாத்விகேஷ்வதகல்பேஷு மாஹாத்ம்ய மதிகம் ஹரேः, தேஷ்வேவ யோகஸம்ஸித்தாः கமிஷ்யந்தி பராம் கதிம்; ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யாः பித்ருணாம் ச நிகத்யதே.'' என்கிறபடியே, தாமஸ கல்பங்களில் அக்நியினுடையவும் சிவனுடையவும் மாஹாத்மியத்தையும் ராஜஸ கல்பங்களில் தன்னுடைய [நான்முகனுடைய] மாஹாத்மியத்தையும், ஸாத்விக கல்பங்களில் ஸர்வேச்வரனுடைய மாஹாத்மியத்தையும், (முக்குணங்களும் கலசின) ஸங்கீர்ண கல்பங்களில் பித்ருக்களினுடையவும் ஸரஸ்வதியினுடையவும் மாஹாத்மியத்தையும் பேசுகின்ற நான்முகக்கடவுளின் அநுக்ரஹமும்,—ஆகமம் முதலிய மோஹசாஸ்திரங்களைப் பிரவர்த்திப்பித்தவனான ருத்ரன் சுடுகாடுகளிலே திரிந்து பிணங்களின் நீற்றை உடம்பெங்கும்பூசி எலும்புமாலையைப் பூண்டு புலித்தோலுடுத்து, கங்கை சந்திரன் ஸர்ப்பம் முதலானவற்றைச் சடைமீதணிந்து ரிஷபவாஹனனாய்க் கூத்தாடியாய் விஷத்தைக் கழுத்திலுடையனாய் 'நம்மிற் காட்டில் மேற்பட்டாரில்லை' என்று தன்னை ஈச்வரனாக நினைத்திருக்கும் மயக்கம் நீங்கி ஸத்வகுணம் தலையெடுத்து ஸர்வேச்வரனைத் தான் உபாஸிக்கும் வகையை உபதேசிக்கக்கேட்ட ஸஜாதீயர்களான அகஸ்த்ய புலஸ்த்ய தக்ஷ மார்க்கண்டேயர் நால்வரிலே ஒருவனான புலஸ்தியன் பண்ணின வரப்ரதானமும் ஆர்ஷ க்ரந்தங்களின் உத்பத்திக்கு மூலம். [வால்மீகிபகவானுக்கு நான்முகனுடைய அநுக்ரஹமும், பராசரபகவானுக்கு புலஸ்த்ய ப்ரஸாதமும் மற்றும் இப்புடையிலே அறியக்கடவது.] ... ... ... ... (55)

(மூ.) 56. பரமஸத்வத்தோடே உள்ளியுரைக்கும் நிறைஞானத்தயனுஞ் சிவனுந் திருமாலருள்கொண்டு இவர் பாடினர்.

[ஆழ்வாருளிச்செயல்களுக்கு மூலம் இன்னதென்கிறது]

(ப) 56. பரமஸத்வத்தோடே — * பரமஸத்வஸமாச்ரயः கः * என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி வடிக்கட்டின ஸத்வகுணத்தோடே கூடி,

உள்ளியுரைக்கும்— * நெறியுள்ளியுரைத்த கணக்கறு நலத்தனன் * என்கிற படியே வேதமார்க்கங்களை நன்கு விமர்சித்து அருள் செய்யுமவனாய்,

நிறைஞானத்து— * அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறி யெல்லாமெடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி * என்கிறபடியே பரிபூர்ண மான ஞானத்தை நிரூபகமாகவுடையனாய்,

அயனும் சிவனும் திருமால்— * அயனும் சிவனும் திருமாலால் * என்கிறபடியே ப்ரஹ்மருத்ராதிகளுக்கு அந்தர்யாமியாய்நின்று அந்தந்தக் காரியங்களை நிர்வஹிக் கையாலே அவரவர்களைச் சொல்லும் சப்தத்தாலும் சொல்லப்படுவானாய் ஸர்வேச் வரனான திருமாலினுடைய,

அருள்கொண்டு— * திருமாலாலருளப்பட்ட சடகோபன் * என்றும் * அருள் கொண்டு ஆயிரமின் தமிழ்பாடினான் * என்றும் சொல்லுகிறபடியே (அப்பெருமா னுடைய) திருவருளையே மூலமாகக்கொண்டு இவ்வாழ்வார் தமது திவ்யப்ரபந் தங்களை யருளிச்செய்தார். .... ... ... (56)

(தா.) 56. ரஜோகுண தமோகுணங்கள் சலசாமல் சுத்த ஸத்வகுணத் தோடு கூடி வேதமார்க்கங்களை நன்று விசாரித்து அருள்செய்யுமவனாய்ப் பரிபூர்ண ஜ்ஞானத்தை நிரூபகமாகவுடையனாய்ப் பிரம ருத்திரர்களுக்கு அந்தர்யாமியாய் நின்று அந்தந்தக் காரியங்களை நிர்வஹிக்கையாலே அவரவர்களைச் சொல்லும் சப்தத்தாலுஞ் சொல்லப்படுபவனாய் ஸர்வஸ்மாத்பரனான திருமகள் கொழுநனாலே மயர்வற மதிநலமருளப்பெற்றவராய் அந்த அத்வாரக [ஸாக்ஷாத்] பகவத்ப்ரஸா தத்தை மூலமாகக்கொண்டு ஆழ்வார் திவ்யப்ரபந்தங்கள் பாடினார். ... (56)

(மூ.) 57. கருவுள்வேறலாமை அரனயனெனச் செய்யுமவைபோலே மூவுருவா முதல்வன் துப்பரவாலே பரமகவிகளால் பாடுவியாது நேர்படச் சொல்லும் நீர்மையிலாவென்னைத் தன்னாக்கி யென்நாமுதல்வந்து புகுந்து தப்புதலறத் தன்னை வைகுந்தனாகத் தன் சொல்லால் தானே துதித்து மலக்கு நாவியல் மொய்யசொல்லால் சொல்லவல்லேனென்று நானுஞ்சொல்லி நாடுங் கையெடுக்கும்படி என்சொல்லால் யான்சொன்ன இன்கவியென்பித்தானென்றாரே

[ஆழ்வார் எம்பெருமானருளடியாகவே பாடினரென்பதற்கு ப்ரமாணம் மூதலித்தல்]

(ப.) 57. (ப்ரஹ்மாவினுடைய அநுக்ரஹமே வால்மீகி க்ரந்தத்திற்கு மூல காரணமென்னும் விஷயம் * மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந்! ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ * என்று ஸ்ரீராமாயணத்திலேயே யுள்ள விந்யாஸத்தினால் ஸித்தம். ஸஜாதீயரான மஹர்ஷியின் ப்ரஸாதமே பராசரப்ரபந்தத்திற்கு மூலகாரணமென்னும் விஷயம்,

* புராணஸம்ஹிதாகர்த்தா பவாந் வத்ஸ பவிஷ்யதி, தேவதாபாரமார்த்த்யஞ் ச யதாவத் வேத்ஸ்யதே பவாந் * என்று பராசரப்ரபந்தத்திலேயுள்ள விந்யாஸத்தினுல் ஸித்தம்; அப்படி ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளுக்கு மூலம் எம்பெருமான் திருவருளே யென்னு மிடம் ஆழ்வார் திருவாக்கினுலேயே ஸித்தமோ? என்ன; ஆம் என்கிறது இந்த சூர்ணையினுல்)

**கருவுள் வேறலாமை அரனயனெனச் செய்யுமவைபோலே** = *

**கருவுள்**—* திசைமுகன் கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும் * என்றும்,

**வேறலாமை**—* வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும் * என்றும்,

**அரனயனென**—* புரமொரு மூன்றெரித்து அமரர்க்கு மறிவியந்து அரனய னென வுலகழித்து அமைத்துளனே * என்று முள்ள பாசுரங்களின்படியே,

**செய்யுமவை போலே**—* பிரமனுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய்க் கொண்டு ஸ்ருஷ்டி, வேதோபதேசம், ஜகத்ஸம்ஹாரம், த்ரிபுரதஹனம் ஆகிய இவற்றைத் தானே செய்துவிட்டு இவற்றை அவர்கள் தாங்களே செய்தார்களாக உலகத்தார் சொல்லும்படி பண்ணிவைத்தது போலே,

**மூவுருவாம் முதல்வன்**—*என்முன் சொல்லும் மூவுருவா முதல்வனே* என்கிற படியே த்ரிமூர்த்தி ஸ்வரூபியாய் ஆதிகாரண பூதனான எம்பெருமான்,

**துப்பரவாலே**—* திறத்துக்கே துப்பரவாம் திருமால் * என்று ஆழ்வார்தாமே யருளிச்செய்தபடியே எந்த காரியத்தில் வந்தாலும் ஒரு த்ருணத்தைக் கொண்டும் கார்யம் தலைக்கட்டிக் கொள்ளவல்ல ஸாமர்த்திய முடைமையாலே,

**பரமகவிகளால் பாடுவியாது**—* இன்கவிபாடும் பரமகவிகளால் தன்கவி தான் தன்னைப் பாடுவியாது * என்கிறபடியே பரமகவிகளான வ்யாஸ பராசரவால்மீகி ப்ரப்ருதிகளும் முதலாழ்வார்களு முண்டாயிருக்க, அவர்களைக்கொண்டு பாடுவித்துக் கொள்ளாமல்,

**நேர்படச் சொல்லும் நீர்மையிலாவென்னைத் தன்னுக்கி**—தனக்குத் தகுதியாகக் கவிபாட வல்ல ஜ்ஞான சக்திகளில்லாத வென்னை, * நேர்படயான் சொல்லும் நீர்மையிலாமையின் ஏர்விலாவென்னைத் தன்னுக்கி * என்கிறபடியே தன்னோ டொத்த ஜ்ஞானசக்திகளையுடையேனும்படிபண்ணி,

**என்னுமுதல்வந்து புகுந்து**—* ஆ முதல்வனிவனென்று தற்றேற்றி என்நாமுதல் வந்து புகுந்து * என்கிறபடியே என்னுடைய வாக்கின் ப்ரவ்ருத்திக்கு முதலாய் வந்து புகுந்து,

**தப்புதலற**—* தப்புதலின்றித் தனைக்கவிதான் சொல்லி * என்கிறபடியே, என்னை ஒரு கருவியாகக்கொண்டு தான்பாடா நிற்கச் செய்தே என்னுடைய ஸம்பந் தத்தாலாகும் தோஷம் தட்டாதபடியாக,

**தன்னை வைகுந்தனுக** —* என்னுல் தன்னை வைகுந்தனுகப்புகழ * என்கிற படியே, நான் புகழ்ந்தமையாலே தான் ஸ்ரீவைகுண்டநாதனுய் அங்குற்ற ஐச்வரியம் பெற்றவனுக நினைத்து,

**தன்சொல்லால் தானே துதித்து**—*தன்சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன் * என்றும், * தானே யானென்பானாகித் தன்னைத் தானே துதித்து * என்றும் சொன்னபடியே தன்னுடைய சொற்களாலே தன்னைத் தானே துதித்து,

**மலக்கு நாவியல் மொய்யசொல்லால் சொல்லவல்லேனென்று நானும் சொல்லி**— * வலக்கையாழியிடக்கைச் சங்கமிவையுடைய மால்வண்ணனை மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ * என்றும், * நாவியலாலிசைமாலைகளேத்தி நண்ணப் பெற்றேன் * என்றும், * மொய்ய சொல்லாலிசைமாலைகளேத்தி யுள்ளப்பெற்றேன் * என்றும், * குடமாடியை வானக்கோனைக் கவிசொல்லவல்லேற்கு * என்றும் தாமே சொன்னபடியே, பாசுரம் பாடினதெல்லாம் எம்பெருமான்றன்னுடைய காரியமாயிருக்க, இனியபாசுரங்களை நான் பாடினேனாக நினைத்து நானும் சொல்லி,

**நாடும் கையெடுக்கும்படி**— *குருகூர்ச்சடகோபன் சொல் * என்றவாறே நான் இத்தைப் பாடினேனாக நினைத்து நாடெல்லாம் அஞ்ஜலிபண்ணும்படி,

**என்சொல்லால் யான் சொன்ன இன்கவியென்பித்தான்**—* என்சொல்லால் யான் சொன்ன இன்கவியென்பித்துத் தன்சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்தமாயன் * என்கிறபடியே, என்னுடைய வசநவ்யக்தியாலே நான் கர்த்தாவாக இருந்து சொன்ன இனியகவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினான்,

**என்றாரே**—என்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தாரன்றோ. திருவாய்மொழி ஏழாம்பத்தில், * என்றைக்கு மென்னை யென்கிற பதிகத்திலும், மற்றும் * பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத்தான்பாடி * என்பது முதலான பாசுரங்களிலும் இதுஸ்பஷ்டம். இத்தால் ஆழ்வாரருளிச் செயல்களுக்கு மூலம் எம்பெருமானருளே யென்பது மிகத் தெளிவாயிற்று. ... .... ... (57)

(ஸா.) 57. ப்ரஹ்மாவினுடையவும் ஸஜாதீயரான சில மஹர்ஷிகளினுடையவும் அநுக்ரஹமே ரிஷிகளின் க்ரந்தங்களுக்கு மூலமென்பது * மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந்! ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ * புராணஸம்ஹிதாகர்த்தா பவாந் வத்ஸ! பவிஷ்யதி, தேவதாபாரமார்த்த்யம் ச யதாவத் வேத்ஸ்யதே பவாந்;'' இத்யாதிகளான ப்ரமாணங்களாலே [வால்மீகி பராசர மஹர்ஷிகளின் வசனங்களினாலேயே] ஸித்தித்திருப்பதுபோல ஆழ்வாரருளிச்செயல்களுக்கு மூலம் எம்பெருமானருளே என்பது அருளிச்செயல்களினால் ஸித்தமோ வென்னில்; ஸித்தமே; பிரமனுக்கும் ருத்ரனுக்கும் அந்தர்யாமியாய்க் கொண்டு ஸ்ருஷ்டி, வேதோபதேசம் ஜகத்ஸம்ஹாரம் த்ரிபுரதஹனம் ஆகிறவற்றை ப்ரஹ்ம ருத்ரர்கள் தாங்களே செய்தார்களாக லோகத்தார் சொல்லும்படி செய்தாப்போலே, த்ரிமூர்த்தி ஸ்வரூபியான ஆதிகாரணபூதன் எந்த காரியத்தில் வந்தாலும் ஒரு த்ருணத்தைக்கொண்டும் காரியம் தலைக்கட்டிக்கொள்ளவல்ல ஸாமர்த்தியத்தையுடையனாகையாலே, தன்னைக் கவிபாடுவிக்க வேண்டினால் அதற்கீடான ஜ்ஞானசக்திகளால் குறைவற்றவர்களாய் இனிய கவிகளான வ்யாஸர் பராசரர் வால்மீகி முதலானாரும் முதலாழ்வார்களுமுண்டாயிருக்க, அவர்களைக்கொண்டு பாடுவித்துக்கொள்ளாதே, தனக்குத் தகுதியாம்படி கவிபாடுகைக்கு அடியான ஜ்ஞானம் முதலிய குணங்களில்லாதவனான என்னைத் தன்னோடொத்த ஜ்ஞான சக்திகளை யுடையனாம்படி பண்ணி

என்னுடைய வாக்கின் ப்ரவ்ருத்திக்கு முதலாய்வந்து புகுந்து என்னை ஒரு கருவியாகக்கொண்டு தான் பாடாநிற்கச் செய்தே என்னுடைய ஸம்பந்தத்தாலாகும் தோஷம் தட்டாதபடியாகக்கொண்டு, நான் புகழ்ந்தமையாலே தான் ஸ்ரீவைகுண்டநாதனாய் அங்குற்ற ஐச்வரியம் பெற்றானாக நினைத்து எனக்கு அந்தராத்மாவாய் நின்று தன்னைத் தானே துதித்து, இப்படி இவ்வளவும் எம்பெருமான்றன்னுடைய காரியமாயிருக்க இனிய பாசுரங்களை நான் பாடினேனாக நினைத்து நானுஞ்சொல்லி 'குருகூர்ச் சடகோபன் சொல்' என்றவாறே நான் இத்தைப் பாடினேனாக நினைத்து நாடெல்லாம் அஞ்ஜலிபண்ணும்படி என்னுடைய வசந வ்யக்தியாலே நான் கர்த்தாவாகச் சொன்ன இனிய கவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினானென்று ஆழ்வார்தாமே அருளிச்செய்தமை காண்க. [திருவாய்மொழி ஏழாம் பத்தில் * என்றைக்குமென்னை யென்கிற பதிகத்திலும், மற்றும் * பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான்பாடி * என்பது முதலான பாசுரங்களிலும் இது ஸ்பஷ்டம்.] ... (57)

(மூ.) 58. தர்மவீர்யஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலேமேலே தொடுப்பாரைப்போலன்றே அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறு மாஸம் மோஹித்து வருந்தியேங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிறவிவர்.

(ரிஷிகளிற் காட்டில் ஆழ்வார்க்குண்டான வைலக்ஷண்யம்.)

(ப.) 58. தர்மவீர்யஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய்—* ஹஸிதம் பாஷிதஞ் சைவ கதிர் யா யச்ச சேஷ்டிதம், தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி * (வால்மீகம்) என்கிறபடியே, தாம்தாம் அநுஷ்டித்த தபோரூபமான தர்மத்தினுடைய சக்தியினாலுண்டான ஞானத்தினாலே அறியவேண்டுமவற்றைத் தெளியவறிந்து அவ்வறிவினால் மகிழ்ச்சிகொண்டவர்களாய்,

மேலேமேலே தொடுப்பாரைப் போலன்றே—அந்தத் தெளிவும் மகிழ்ச்சியுமடியாக (பகவத் குணங்களில் மோஹிப்ப தொன்றுமில்லாமல்) மேன்மேலும் ச்லோகங்களைத் தொடுத்துக்கொண்டே சென்றார்கள் ரிஷிகள்; அப்படியல்லரே யாழ்வார்; பின்னை யெப்படி யென்னில்,

அருளினபக்தியாலே—* மயர்வற மதிநலமருளினன் * என்று தாமே சொல்லும்படியாக எம்பெருமான் அருள்செய்யப் பெற்ற ஞானத்தின் பரிபக்வ நிலைமையாகிய பக்தியினாலே,

உள்கலங்கி—* மதியெல்லா முள்கலங்கி மயங்கும் * என்று தாமே பேசும்படி, பகவத்விச்லேஷ காலத்தில் பிரிவாற்றாமையாலே ஞானமெல்லாம் அடிமண்டியோடே கலங்கப்பெற்று,

சோகித்து—நினைத்தபடி எம்பெருமானை யநுபவிக்கப் பெறாமையாலே * ஆடியாடியகங்கரைந்து * என்பது முதலான பதிகங்களிற்படியே சோகித்து,

மூவாறு மாஸம் மோஹித்து—*எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளியவே!* என்று சொல்லி ஆறுமாதமும், *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்று சொல்லி ஆறுமாதமும் *கண்கள் சிவந்து பெரியவாய்* என்று சொல்லி ஆறுமாதமுமாக மூவாறுமாஸம் மூர்ச்சையடைந்து கிடந்து,

**வருந்தி**—* வருந்தி நான் வாசகமாலைகொண்டு * என்று தாமே சொல்லும்படி, ஒரு சொல் எடுக்கும்போது ஒருமலை யெடுக்குமாபோலே வருத்தப்பட்டு,

**ஏங்கி**—* என்றென்றேங்கி யழுதக்கால் * என்று தாமே சொல்லும்படி, அநுபவம் கிடையாத வருத்தத்தினுல் எம்பெருமான் படிகளைப் பலகாலும் சொல்லிப் பொருமிப் பொருமி,

**தாழ்ந்த சொற்களாலே நூற்கிறவிவர்**—* அங்கே தாழ்ந்த சொற்களால் அந்தண் குருகூர்ச் சடகோபன்—சொன்ன * என்கிறபடியே தழதழத்த ஈரச்சொற்களாலே, * வண்டமிழ் நூற்க * என்றபடியே பிரபந்தங்களையருளிச் செய்த விவ்வாழ்வார். [நூற்கிறவிவர் தொடுபபாரைப் போலன்றே. என்று அந்வயம் காண்க.] .... (58)

(தா.) 58. எம்பெருமானருள் மூலமாக அவதரித்தவை அருளிச்செயல்கள் என்பதனுலுண்டான ஏற்றந்தவிர வக்த்ரு வைலக்ஷண்யத்தாலுண்டான ஏற்றமுமுண்டென்று அறிவிப்பதற்காக ரிஷிகளிற்காட்டில் ஆழ்வார்க்குண்டான வாசி சொல்லப்படுகிறது.—ரிஷிகளோவென்னில் தாம் தாம் அனுட்டித்த தபோரூபமான தர்மத்தினுடைய சக்தியினுல் ஜனித்த ஞானத்தாலே அறியவேண்டுமவற்றைத் தெளியவறிந்து மகிழ்ச்சிகொண்டவர்களாய் அந்தத் தெளிவும் மகிழ்ச்சியு மடியாக மேன்மேலும் ச்லோகங்களைத் தொடுத்துக்கொண்டே சென்றுர்கள்; ஆழ்வாரோ வென்னில் அதற்கு எதிர்த்தட்டாக * அயர்வறுமமரர்களதிபதியால் மயர்வறமதிநலமருளப்பெற்று ஞானம் பரிபக்குவமான நிலைமையாகிய பக்தியாலே பிரிவாற்ருமையில் ஞானமெல்லாம் அடிமண்டியோடே கலங்கி, நினைத்தபடி எம்பெருமானை அனுபவிக்கப்பெருமையாலே சோகித்து "எத்திறமுரலினே டிணைந்திருந்தேங்கிய வெளிவே!" என்று சொல்லி ஆறுமாதமும் "பிறந்த வாறும் வளர்ந்தவாறும்" என்று சொல்லி ஆறுமாதமுமாக "கண்கள் சிவந்து பெரிவாய்" என்று சொல்லி ஆறுமாதமுமாக மூவாறுமாதம் மோஹித்துக்கிடந்து ஒரு சொல் எடுக்கும்போது ஒருமலையெடுக்குமாபோலே வருத்தப்பட்டு, அனுபவம் கிடையாத வருத்தத்தினுல் அப்பெருமான்படிகளைப் பலகாலுஞ் சொல்லிப் பொருமிப் பொருமியழுது தழதழத்த ஈரச் சொற்களாலே பிரபந்தங்களை யருளிச்செய்தார். (ஆதலால் ரிஷிகளைப்போலல்லர் ஆழ்வார்.) ... ... ... ... (58)

(மூ.) 59. **ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றுந்தெளிந்தும் கண்ட மைமைப்பாலே ஓதி யுணர்ந்தவர் இன்று மாசாபாசபத்தர்; அவன்வழங்கும் திவ்ய சக்ஷுஸ்ஸாலே நேரே கார்செறிந்த நீருடி கட்கரிய அரும்பொருளைக் கண்ட போதே யாமுருமை யென்னும்படி இவர்க்கு வன்பாசங்கள் நீங்கிற்று.**

**(விஷயாந்தர விரக்தியாலும் ரிஷிகளிற்காட்டில் ஆழ்வார் வீறுடையரென்பது.)**

(ப.) 59. **ஸ்வாத்யாய யோகங்களைக் கற்றும் தெளிந்தும்**—* ஸ்வாத்யாயாத் யோகமாஸீத யோகாத் ஸ்வாத்யாயமாமநேத், ஸ்வாத்யாயயோகஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாசதே * என்றும், * கண்டும்தெளிந்துங் கற்ருர் * என்றும் சொல்லுகிறபடியே, வேதத்தையும் அஷ்டாங்க யோகத்தையும் அப்யஸித்து அவ்வழியாலே பரமாத்மாவை ஏவம்விதனென்று தெளிந்து,

**கண்ட மைமைப்பாலே**—இப்படி தம் முயற்சியாலே கண்டகாட்சியில் விளக்க மில்லாமையாலே,

**ஓதியுணர்ந்தவர் இன்னும் ஆசாபாசபத்தர்**—* ஓதியுணர்ந்தவர் முன்னு * என்றருளிச் செய்தபடியே ஓதியுணர்ந்தவர்களான மஹர்ஷிகள் * ஆசாபாச சதைர் பத்தா: * (கீதை—16—12) என்று பகவான் சொன்னதற்கிலக்காகி இன்றளவும் ஸம்ஸாரபோகவிஷயங்களான ஆசையென்கிற பலபலபாசங்களினுலே கட்டுண்டிருப்பர்கள்.

**இவர்க்கு**—இவ்வாழ்வார்க்கோவென்னில் ;

**அவன்வழங்கும் திவ்யசக்ஷுஸ்ஸாலே**—* திவ்யம் ததாமி தே சக்ஷு: * என்று கீதையில் அர்ஜுநனுக்குத் தந்தாப்போலே * காண்பனவன்கண்களாலே * என்கிறபடியே தன்னைக் காண்கைக் குறுப்பாக அப்பெருமான் கொடுத்தருளின திவ்யஜ்ஞாநரூபமான கண்ணுலே,

**நேரே கார்செறிந்த நீருடி கட்கரிய அரும்பொருளைக் கண்டபோதே**—* நேரே கடிக் கமலத்துள்ளிருந்துங் காண்கிலான் கண்ணனடிக் கமலந் தன்னை அயன் * என்றும் * கார்செறிந்த கண்டத்தானெண் கண்ணுன் காணுன் * என்றும், * நீருடிதான் காணமாட்டாத தாரகல சேவடியை * என்றும். * கட்கரிய பிரமன் சிவனிந்திர னென்றிவர்க்கும் கட்கரிய கண்ணனை * என்றும் சொல்லுகிறபடியே பிரமன் சிவனிந்திரன் முதலானுர்க்கும் காணக்கிடைக்காதவனுய், * அறிந்தன வேதவரும் பொருள் நூல்கள் அறிந்தன கொள்க வரும்பொருளாதல் * என்றும், * கேட்பார்க்கு அரும்பொருளாய் நின்ற * என்றுமுள்ள பாசுரங்களின்படியே துர்லபவஸ்துவான எம்பெருமானை, * கண்ணனை நான் கண்டேனே * கண்டேன் கமலமலர்ப்பாதம் * என்று தம்வாக்காலே சொல்லி மிகவும் விளக்கமாக ஸாக்ஷாத்கரித்தபோதே,

**யாமுருமையென்னும்படி வன்பாசங்கள் நீங்கிற்று** — * பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு மிந்நின்ற நீர்மையினியாமுருமை*என்று அவனைக் கால்கட்டும்படி தம் முயற்சியாலே கழிக்கவொண்ணுமல் பிரபலங்களான பாஹ்ய ஸங்கங்களானவை * பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்ற விட்டு * என்றும், * பாசங்கள் நீக்கியென்னை உனக்கேயறக் கொண்டிட்டு நீ * என்றும் தாமே பேசும்படி அவனருளாலே அடியோடுவிட்டு நீங்கப்பெற்றன. (59)

(தா.) 59 வேதத்தையும் அஷ்டாங்கயோகத்தையும் அப்யஸித்து அவ்வழியாலே பரமாத்மாவை இப்படிப்பட்டவனென்று தெளிந்து, இப்படித் தம் முயற்சியாலே கண்ட காட்சியில் விளக்கமின்மையாலே இன்றளவும் ஸம்ஸாரபோக விஷயங்களான ஆசையென்கிற பலபல பாசங்களாலே கட்டுப்பட்டிருப்பர் ஓதியுணர்ந்த ரிஷிகள் ; ஆழ்வாரோவென்னில், தன்னைக் காண்கைக்கு உறுப்பாக அப்பெருமான் கொடுத்தருளின திவ்ய ஜ்ஞாநரூபமான கண்ணுலே பிரமன்சிவன் முதலானுர்க்கும் அரியனுன ஸர்வேச்வரனை மிகவும் விளக்கமாக ஸாக்ஷாத்கரித்த போதே "இந்நின்றநீர்மை இனி யாமுருமை" என்று அவனைக் கால் கட்டும்படி தம்முயற்சியாலே கழிக்கவொண்ணுமே பிரபலங்களான புறம்புண்டான பற்றுக்கள் அவனருளாலே அடியோடு விட்டுநீங்கப்பெற்றுர். ... ... (59)

(மூ.) 60. அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாரகாதிகள் ; இவர்க்கெல்லாம் கண்ணனிறே.

(உணவின்வாசியாலும் ரிஷிகளிற்காட்டில் ஆழ்வார் விலக்ஷணரென்பது)

(ப.) 60 **அவர்களுக்கு**—அந்த பராசர பாராசர்ய வால்மீகி ப்ரப்ருதி மஹர்ஷிகளுக்கு,

**காயோடென்னுமிவையே தாரகாதிகள்**—* காயோடு நீடுகனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து * என்றும், * வீழ்கனியுமூழிலையு மென்னுமிவையேநுகர்ந்து * என்றும் அருளிச்செய்தபடியே, கனிகாய்கிழங்கு சருகுகாற்று தண்ணீராகிய இவையே தாரகபோஷக போக்யங்களாயிருக்கும்;

**இவர்க்கு**—ஆழ்வார்க்கு (அப்படியல்லாமல்)

**எல்லாம் கண்ணனிறே**—* உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன் * என்று தாமேயருளிச்செய்யும்படி தாரகபோஷக போக்யங்களெல்லாம் எம்பெருமானேயன்றோ. ... ... ... (60)

(தா.) 60. ரிஷிகளுக்குக் கனி காய் கிழங்கு சருகு காற்று தண்ணீர் ஆகிய விவையே தாரகபோஷக போக்யங்களாயிருக்கும் ; * ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணு தத்வமிவோதிதம் '' என்னும்படி எம்பெருமான் பக்கலுள்ள காதலே வடிவெடுத்தவரான ஆழ்வார்க்கோ வென்னில் * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன். ... ... ... (60)

(மூ.) 61. அழுநீர் துளும்பக் கடலும் மலையும் விசும்புந்துழாய் திருமாலென்று எங்கே காண்கேனென்னுமிவரலமாப்பு அவர்களுக்குப்புத்ரவியோகத்திலே

(ரிஷிகளின் தன்மையும் ஆழ்வார்களின் தன்மையும் )

(ப.) 61. **அழுநீர் துளும்ப**—*சேயரிக்கணழுநீர் துளும்பவலமருகின்றன * என்று ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் இரண்டாம்பாட்டிலேயே தாமே சொல்லும்படியாக எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங் கண்ணீருமாய்,

**கடலும் மலையும் விசும்புந் துழாய்**—* கடலும் மலையும் விசும்பும் துழாய் எம்போல் சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால் தண்வாடாய் * என்றருளிச்செய்தபடியே கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எல்லாவிடங்களிலும் எம்பெருமானைத் தேடி,

**திருமாலென்று**—* சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன் * என்றருளிச்செய்தபடியே நெஞ்சுகலங்கித் திருமாலே! யென்று கூப்பிடுவதும்,

**எங்கே காண்கேனென்னுமிவர்அலமாப்பு**—* எங்கே காண்கேனீன்துழாயம்மான் தன்னை யான் * என்றருளிச்செய்தபடியே அப்பெருமானை எங்கே காணக்கடவேன்! என்று கதறுவதுமாக எம்பெருமான் விஷயத்தில் ஆழ்வார்படுமாற்றாமையெல்லாம்,

**அவர்களுக்கு**—அந்த மஹர்ஷிகளுக்கு,

**புத்ரவியோகத்திலே**—பகவத் விரஹத்திலன்றிக்கே புத்ரவிரஹத்திலேயாகும். (இவ்விஷயம் வஸிஷ்ட வ்யாஸாதிகளின் இதிஹாஸங்களிலே ஸுப்ரஸித்தம்.) (61)

(நா) 61. எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் கண்ணுங் கண்ணீருமாய்க் கடலோடு மலையோடு ஆகாசத்தோடு வாசியற எங்கும்தேடி நெஞ்சு கலங்கி "திருமாலே!" என்று கூப்பிட்டு 'எங்கே காணக்கடவேன்!' என்று இவ்விதமாக எம்பெருமான் விஷயத்தில் ஆழ்வார்படும் ஆற்றாமையெல்லாம் ரிஷிகளுக்குப் புத்ர விரஹத்திலேயாயிருக்கும் வஸிஷ்டபகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது நெருப்பிலே குதிப்பது கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலேவிழுவது ஆகவிப்படியெல்லாம் தடுமாறினா ரென்பதும், வேதவ்யாஸபகவான் புத்திரவியோகம் பொறுக்கமாட்டாமல் 'புத்திரனே!' என்று வாய்விட்டுக் கூப்பிட்டு அழுதுகொண்டு காணப்பெறுமையால் அலமந்து திரிந்தா ரென்பதும் அவர்களே யெழுதிவைத்த புராணப்ரஸித்தம். ... .... (61)

(மூ) 62. பலஸாதநதேவதாந்தரங்களில் இவர்கள் நினைவு பேச்சிலேதோன்றும்.

(ஜ்ஞானவிசேஷத்தாலும் ரிஷிகளிற்காட்டில் ஆழ்வார் விலக்ஷணரென்பது.)

(ப) 62. பல ஸாதந தேவதாந்தரங்களில்—உபேய மென்ன உபாயமென்ன தேவதாந்தரங்களென்ன இவற்றின் விஷயத்திலே,

இவர்கள் நினைவு—மஹர்ஷிகளுடையவும் ஆழ்வாருடையவும் அத்யவஸாய மானது,

பேச்சிலே தோன்றும்— அவரவர்களுடைய் உக்திகளிலே விசதமாக விளங்கும்.

(நா) 62. கீழ்ச்சொன்னவை மாத்திரமன்றியே, பலன் ஸாதநம், தேவ தாந்தரம் ஆகிய இவ்விஷயங்களில் ரிஷிகளினுடைய ப்ரதிபத்தியிற் காட்டில் ஆழ்வாருடைய ப்ரதிபத்திக்கு நெடுவாசியுண்டு; எம்பெருமானை யடைவதே பலனாகவும் கர்ம ஜ்ஞாநாதிகளே உபாயமாகவும் இந்திரன் முதலிய தேவதை களுக்கு அந்தர்யாமியான ஈச்வரனே உத்தேச்யனாகையாலே அந்தத் தேவதைகள் அநுவர்த்திக்கவுரியராகவுமாயிற்று ரிஷிகள் பேசுவது; ஆழ்வார் அருளிச்செய்வதோ வென்னில், கைங்கரியமே புருஷார்த்தமாகவும், அதனைப் பெறுவிப்பது ப்ரபத்தியே யாகவும் இதர தேவதைகள் அநுவர்த்திக்கவுரியரல்லராகவுமாயிற்று ... (62)

(மூ). 63. ராமாயணம் நாராயண கதையென்று தொடங்கி கங்காகாங்கேய ஸம்பாவாத்யஸத் கீர்த்தநம் பண்ணின எச்சில்வாய் சுத்திபண்ணாமல் திருமாலவன்கவியென்ற வாயோலைப்படியே மாற்றங்களாய்ந்துகொண்டு உரியசொல்வாய்த்தவிது வேதாதிகளில் பௌருஷமாநவகீதா வைஷ்ணவங் கள்போலே அருளிச்செயலில்ஸாரம்.

[அருளிச்செயல்களுள் திருவாய்மொழியின் வைலக்ஷண்யம்]

(ப.) 63. ராமாயணமென்று தொடங்கி—வால்மீகி முனிவர் ராமகதையைச் சொல்லுவதாக ஆரம்பித்து,

கங்காஸம்பவாதி அஸத்கீர்த்தநம்பண்ணின—கங்கையின் உற்பத்தி ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி, புஷ்பகவிமானத்தின் வர்ணம முதலான வம்புக்கதைகளை விரிவாகப் பேசினதும்,

**நாராயணகதையென்று தொடங்கி**—வ்யாஸர், * நாராயணகதாம் இமாம் * என்று மஹாபாரதத்தினுல் நாராயணகதையைச் சொல்லுவதாக ஆரம்பித்து,

**காங்கேய ஸம்பவாதி அஸத்கீர்த்தநம்பண்ணின**—பீஷ்மர் முதலான பற்பலருடைய உற்பத்தி ப்ரகாரங்களையும் பாரத யுத்த ப்ரகாரங்களையும் விரிவாகப் பேசினதும்— ஆக இப்படி அஸத்கீர்த்தநம் பண்ணினத்தாலே,

**எச்சில் வாய் சுத்திபண்ணுமல்**—அசுத்தமாய்ப்போன வாயை * அஸத்கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம், வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே * [அஸத்கீர்த்தநத்திலே மிகவும் பரந்து அசுத்தமானவாக்கை பகவத்கதாகீர்த்தநமாகிற கங்கையாலே சுத்தமாக்குகிறேன்] என்று சொல்லிச் சுத்திபண்ணிக்கொண்ட அந்த ரிஷிகளைப்போலே யல்லாமல் [அஸத்கீர்த்தந ப்ரஸக்திலேசமும் இடம் பெருதபடி,

**திருமாலவன் கவியென்ற வாயோலைப்படியே** — ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில், * திருமாலவன் கவி யாது கற்றேன் * என்று பகவத்விஷயமான கவியைச் சொல்லுவதாக ப்ரதிஜ்ஞைபண்ணி யெழுந்தபடிக்குப் பொருந்த,

**மாற்றங்களாய்ந்துகொண்டு உரியசொல் வாய்த்தவிது**—* மாற்றங்கள் ஆய்ந்து கொண்டு மதுசூதபிரானடிமேல் குருகூர்ச்சடகோபன் சொன்ன * என்றும், * உரிய சொல்லாலிசைமாலைகளேத்தியுள்ளப் பெற்றேற்கு * என்றும், * வாய்த்தவாயிரம் * என்றும் அருளிச்செய்தபடியே இதரவிஷயஸம்பந்த முள்ள ஒரு சொல்லும் இடையே கலசாதபடி சொற்களை ஆய்ந்து ஆய்ந்து எடுத்து விஷயத்திற்குத்தகுதி யான சொற்களே சொல்லப்பட்டதாய் எம்பெருமானுக்கு வாய்த்ததான நம்மாழ்வாரருளிச்செயலானது,

**வேதாதிகளில் பௌருஷ மாநவ கீதா வைஷ்ணவங்கள்போலே**— * வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம் * என்கிறபடியே வேதங்களுக்குள் புருஷஸூக்தம் சிறப்புப்பெற்றது போலவும், தர்மசாஸ்த்ரங்களுக்குள் மநுஸ்ம்ருதி சிறப்புப் பெற்றதுபோலவும், மஹாபாரதத்தினுள் கீதை சிறப்புப் பெற்றதுபோலவும், புராணங்களுக்குள் ஸ்ரீவிஷ்ணு புராணம் சிறப்புப்பெற்றது போலவும்,

**அருளிச்செயலில் ஸாரம்**—திவ்யப்பிரபந்தங்களுக்குள் ஸாரமாகிச் சிறப்புப் பெற்றது. ... ... ... ... (63)

**(தா.)** 63. ராமகதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி, ஸுப்ரஹ்மண்யனுடைய உற்பத்தி புஷ்பக வர்ணநம் முதலான கதைகளைப் பரக்கப் பேசுவதால் அஸத்கீர்த்தநம் பண்ணி வாக்கில் அசுத்திபடைத்தான் வால்மீகி. 'நாராயண கதை' என்பதாகத் தொடங்கி ஸம்பவ பர்வத்திலே பீஷ்மர் முதலான பற்பலருடைய உத்பத்தி 'ப்ரகாரங்களை விரிவாகப் பேசுகையாலும் பூசல் பட்டோலை' [யுத்த புஸ்தகம்] என்னும்படி பாரதப்போர் வகைகளையே பரக்கநின்று வருணித்தபடியாலும் அஸத்கீர்த்தநத்திலே மிகவும் பரந்து அசுத்தமான வாக்கை பகவத்கதை மொழியாகிற கங்கையாலே சுத்தமாக்குகிறேனென்று சுத்திபண்ணினன் வேதவ்யாஸ பகவான். ஆகவிப்படி, தொடங்

கினபடிக்குச் சேராமே அஸத்கீர்த்தனத்தைப்பண்ணி வாக்கை அசுத்தமாக்கிப் பின்பு அதற்கு சுத்திபண்ண வேண்டாதபடி ''திருமாலவன் கவியாதுகற்றேன்'' என்று திருமால் விஷயமான கவியென்று அடியில் வாயோலையிட்டபடியே, இதர விஷய ஸம்பந்தமுள்ள ஒரு சொல்லும் ஊடு கலசாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து விஷயத்திற்குத் தகுதியான சொற்களாலே சொல்லப்பட்டதாய் ஸர்வேச்வரனுக்கு வாய்த்ததான நம்மாழ்வாரருளிச்செயலானது, வேதங்களில் புருஷஸூக்தமும் தர்மசாஸ்த்ரங்களில் மநுஸ்மிருதியும் மஹாபாரதத்தில் கீதையும் புராணங்களில் ஸ்ரீ விஷ்ணுபுராணமும் ஸாரமாயிருக்குமாபோலே, வேறு பேச்சின் வாஸனையுமற்ற திவ்யப்ரபந்தங்களுக்குள் ஸாரமாயிருக்கும் ... (63)

(மூ.) 64. குருசிஷ்ய க்ரந்தவிரோதங்களைப் பரமதாதிகளாலே பரிஹரியாமல் செஞ்சொல் செந்தமிழ்இன்கவி பரவியழைக்குமென்று அந்யோந்யம் கொண்டாடிப் பேசிற்றே பேசுமேககண்டரில் என்னில்மிகு வென்னுமிவ ருரைகொளின் மொழிகொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்க வேண்டுகையாலே வலங்கொண்ட விதுக்குச் சேராதவை மநுவிபரீதங்கள்போலே.

[ஆழ்வாரருளிச்செயலோடு இணங்காதவை தள்ளுபடி யென்றல்]

(ப.) 64. **குருசிஷ்யக்ரந்த விரோதங்களை**—ரிஷிகளில் குருவான வ்யாஸருடைய க்ரந்தத்திற்கும் அவரது சிஷ்யரான ஜைமிநியினுடைய க்ரந்தத்திற்கும் நேர்ந்த விரோதங்களை [அதாவது—ப்ரஹ்ம விசாரபரமாக வ்யாஸப்ரணீதமான சாரீரக மீமாம்ஸையோடு நிரீச்வரவாதமான பூர்வ மீமாம்ஸைக்கு அந்த நிரீச்வரவாதம் முதலியவற்றால் வந்த விரோதங்களை],

**பரமதாதிகளாலே பரிஹரியாமல்**—ஜைமிநிக்கு ஸ்வாசார்யக்ரந்த விருத்தமாக நிரீச்வர வாதத்தில் தாத்பர்யமில்லை, ஏதோ பரமதத்தை அவலம்பித்து வாதம் பண்ணினார் அந்யபரமாக அப்படி வாதம் பண்ணினார் என்று சொல்லி [விரோத] பரிஹாரம் பண்ணவேண்டி யிருக்கிறது; அப்படி ச்ரமப்பட்டு [ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில்] விரோத பரிஹாரங்கள் பண்ணவேண்டாதபடி [அதாவது பரஸ்பர விரோத ப்ரஸக்தியே யில்லாதபடி],

**செஞ்சொல் செந்தமிழ் இன்கவி பரவி யழைக்குமென்று அந்யோந்யம் கொண்டாடி**—* செஞ்சொற் கவிகாள்! * என்றும், * செந்தமிழ்பாடுவார்தாம் வணங்கும்தேவர் * என்றும், * இன்கவிபாடும் பரமகவிகள் * என்றும் * பதியே பரவித் தொழுந்தொண்டர் தமக்குக் கதியே * என்றும், * ஆடிப்பாடி அரங்கவோ வென்றழைக்குந் தொண்டர் * என்றும் இப்படி ஒருவர்க்கொருவர் சிலாகித்துக் கொண்டு,

**பேசிற்றே பேசும் ஏககண்டரில்**— * பேசிற்றே பேசலல்லால் * என்று திருமாலையிலருளிச் செய்தபடியே ஒருவர் சொன்னதற்கு விரோதமாக மற்றொருவர் ஒன்று சொல்லாமல் பரஸ்பரம் தழுவியே பேசுவதனால் '' ஆழ்வார்கள் யாவரும் ஏககண்டர்கள் '' என்று கொண்டாடப்படுகிற பதின்மர்களுக்குள்ளே,

**என்னில்மிகு வென்னுமிவர்**— * என்னில் மிகு புகழார் யாவரே * என்று (பெரிய திருவந்தாதியில்) தாமே பேசும்படி மஹாயசஸ்வியாய்த் தலைமைபெற்ற இந்த நம்மாழ்வாருடைய,

**உரைகோள் இன்மொழிகொண்டு**—* உரைகொளின்மொழியாலே * என்று அந்யாபதேசத்தில் தம்வாக்காலே தாமே சொல்லிக்கொள்ளவேண்டும்படி அதிவிலக்ஷண திவ்ய ஸூக்திகளைக் கொண்டு,

**சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கவேண்டுகையாலே**—வேதத்திலும் அதன் உபப்ரும்ஹணங்களிலும் ஸந்தேஹாஸ்பதமான அர்த்தங்களை நிர்ணயிக்கவேண்டியிருக்கையாலே,

**வலங்கொண்டவிதுக்குச் சேராதவை**— * நலங்கொள்சீர் நன்கூர்ச் சடகோபன் சொல்வலங் கொண்ட வாயிரம் * என்று தாமே யருளிச் செய்தபடி ப்ரதிபாத்ய வஸ்துவை உள்ளபடி ப்ரதிபாதிக்கும் ஸாமர்த்தியமாகிற பலமுடைய இவ்வருளிச் செயலுக்கு இணங்காத சாஸ்த்ரங்கள்,

**மநுவிபரீதங்கள்போலே**— * மந்வர்த்த விபரீதா து யா ஸ்ம்ருதிஸ் ஸா ந சஸ்யதே * என்று மநுதர்மசாஸ்த்ரவிபரீதமானது கொள்ளத்தகாதென்று கூறினகணக்கிலே தள்ளுபடியாகும். [ஆழ்வாரருளிச்செயலோடு பொருந்தும் சாஸ்த்ரங்களே உபாதேயங்களாமென்றபடி.] ... ... ... (64)

(தா.) 64. திவ்யப்ரபந்தங்களுள் ஸாரமான நம்மாழ்வார் ஸூக்திகளின் ப்ராமாண்யாதிசயத்தை விளக்குதற்காக ஆழ்வார்களின் ஐககண்டியத்தையும் அவர்களில் தலைவரான நம்மாழ்வாரருளிச்செய்த ப்ரபந்தங்களின் மேம்பாட்டையும் தெரிவித்துக்கொண்டு, இப்படிப்பட்ட விவற்றுக்குச் சேராத சாஸ்த்ரங்கள் உபேக்ஷிக்கவேண்டியவை யெனப்படுகிறது; ரிஷிகளில் ஆசார்ய சிஷ்யர்களான வ்யாஸ ஜைமினிகளில் ஆசார்யரான வியாஸருடைய க்ரந்தமான ப்ரஹ்மஸூத்ரத்தோடு சிஷ்யனான ஜைமினியினுடைய க்ரந்தமான பூர்வ மீமாம்ஸைக்கு நிரீச்வர வாதம் முதலியவற்றால் வந்த விரோதத்தைப் பரமதவாத - அந்ய பரத்வ வாதங்களாலே பரிஹரிக்க வேண்டினாப்போலே, ஆழ்வார்களில் பரஸ்பரம் வசன விரோதமுண்டாய் அதற்கொரு பரிஹாரம் பண்ணவேண்டாதபடி * செஞ்சொற்கவிகாள்! * என்றும் * செந்தமிழ்பாடுவார் * என்றும் * இன்கவிபாடும் பரமகவிகள் * என்றும் * பதியேபரவித் தொழுந்தொண்டர் * என்றும் * ஆடிப்பாடி அரங்கவோவென்றழைக்குந் தொண்டர் * என்றும் இப்படி ஒருவர்க்கொருவர் சிலாகித்துக் கொண்டு ஒருவர் பேசினதே எல்லாரும் பேசும்படி ஏககண்டரான ஆழ்வார்களுள் மிகச் சிறந்தவரான நம்மாழ்வாருடைய அதி விலக்ஷண திவ்ய ஸூக்திகளைக்கொண்டு வேதத்திலும் அதன் உபப்ரும்ஹணங்களிலும் ஸந்தேஹாஸ்பதமான அர்த்தங்களை நிர்ணயிக்கவேண்டும்படி யிருக்கையாலே, ப்ரதிபாத்ய வஸ்துவை உள்ளபடி ப்ரதிபாதிக்கும் ஸாமர்த்தியமுடைய இவ்வருளிச் செயலுக்குச் சேராத சாஸ்திரங்கள் மநுதர்ம சாஸ்த்ர விபரீதமான ஸ்மிருதிகள் போலே கழிக்கப்படுவனவாம். (64)

(மூ.) 65. **பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்கவிடுவர்.**

**(ஸ்ரீபாஷ்யகாரர்க்கும் அருளிச்செயலே கைவிளக்காயிருந்ததென்றல்)**

(ப.) 65 **பாஷ்யகாரர்**—ஸ்ரீபாஷ்யம் செய்தருளின எம்பெருமானார், (ஸ்ரீபாஷ்யம் செய்தருளும்போது)

இதுகொண்டு—இவ்வாழ்வார் ஸ்ரீஸூக்திகளைப் பற்றுக்கோடாகக் கொண்டு,

ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்—ஸூத்ரவாக்யங்களில் ஸந்தேஹாஸ்பதமான அர்த்தங்களை யெல்லாம் நிர்ணயித்து நிர்வஹித்தருள்வர். [இவ்விஷயத்தில் தெளிவு பிறக்கவேண்டுமவர்கள் நமது பன்னிருதிங்களனுபவநூலில் எம்பெருமானுர் பகுதியில் 67 முதலான பக்கங்களிற் காண்க.] ... ... (65)

(தா.) 65. அருளிச்செயல்கொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயித்தவர்கள் உண்டோவென்னில் உண்டு; பாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யம் செய்தருளும்போது ஸூத்ரவாக்கியங்களில் ஸந்தேஹ கோசரமான அர்த்தங்களையெல்லாம் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருள்வர். ... (65)

(மூ.) 66. அதுக்கு மூலம் 'விதயச்ச' என்கிற பரமாசார்யவசநம்.

(பாஷ்யகாரர்கொண்ட அவ்வழிக்கு மூலமின்னதென்றல்.)

(ப.) 66. அதுக்குமூலம்—அப்படி ஸ்ரீபாஷ்யகாரர்தாமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு ஸூத்ர வாக்யங்களை ஒருங்கவிட்டருளினதற்கு மூலமேதென்னில்;

விதயச்ச என்கிற பரமாசார்யவசனம்—ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் * விதயச் ச வைதிகாஸ் த்வதீயகம்பீரமநோநுஸாரிண: * என்று அருளிச்செய்ததேயாம். 'சாஸ்த்ரங்களெல்லாம் ஆழ்வார்கள் போல்வாரான உன்னுடையார்களின் கம்பீரமான நினைவைப் பின்செல்வன' என்பது அந்த ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியின் கருத்து. ... ... ... .... (66)

(தா.) 66. அந்த ஸ்ரீபாஷ்யகாரர் தாமும் அருளிச்செயலைக்கொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவதற்கு மூலமேதென்னில்: * விதயச் ச வைதிகா: த்வதீயகம்பீர மநோநுஸாரிண: * என்று ஸ்தோத்ர ரத்நத்தில் ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீஸூக்தியே மூலமாகும். [இவ்வாழ்வார்கள் போல்வார் நினைவை சாஸ்திரங்கள் தாம் பின்செல்லுமதாகவன்றோ ஆளவந்தாரருளிச்செய்தது. ... (66)

(மூ.) 67. ஆப்திக்கு இவர் சுருதி மார்க்கண்டேயன் பார்த்தனென்கிறவிவை வ்யாஸ மநுப்ரஹ்மவாதிகளை வேதம் சொல்லுமாபோலே.

(அருளிச்செயலில் சில ஸாக்ஷியங்கள் காட்டியுள்ளதற்கு அமைதிகூறல்)

(ப.) 67. இவர்—இந்த நம்மாழ்வார்,

ஆப்திக்கு-தாமருளிச்செய்யும் அர்த்தம் யதார்த்தமேயென்று காட்டுவதற்காக,

சுருதி மார்க்கண்டேயன் பார்த்தனென்கிற இவை—* உளன்சுடர்மிகு சுருதியுள் * என்று வேதத்தையும், * மார்க்கண்டேயனும் கரியே * என்று மார்க்கண்டேயனையும், * பார்த்தன் தெளிந்தொழிந்தபைந்துழாயான் பெருமை * என்று அர்ஜுநனையும் ஸாக்ஷிகளாக இட்டது,-(எதுபோல வென்னில்,)

வேதம் வ்யாஸமநு ப்ரஹ்மவாதிகளைச் சொல்லுமாபோலே—பரமாப்தமாக இசையப்பட்ட வடமொழி வேதந்தானும் ஆப்திக்கு உறுப்பாக * ஸ ஹோவாச வ்யாஸ:

பாராசர்ய: * என்று வ்யாஸ மஹர்ஷியையும், * யத் வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம் * என்று மநுமஹர்ஷியையும், * ப்ரஹ்மவாதிநோ வதந்தி * என்று பல் காலும் ஓதி ப்ரஹ்மவாதிகளையும் ஸாக்ஷிகளாகச் சொன்னுப்போலே யென்றுகொள்க.

(தா.) 67. இப்படி மஹாவித்வான்கள் இதுகொண்டு சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கவேண்டும்படி வேதோபப்ரும்ஹணங்க ளெல்லாவற்றிலும் மிகப் பிரபலமாயும் திராவிடவேதமாய்க் கொண்டு வேதஸாரமாயும் ஆப்ததமமாயு மிருக்கிற இத் திவ்யப் பிரபந்தத்திலே ஆப்திக்கு உறுப்பாக இவர் வேறே சில ஸாக்ஷியங்களை யெடுப்பானேன்? * உளன் சுடர்மிகு சுருதியுள் என்றும் * மார்க்கண்டேயனும் கரியே * என்றும் * பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை * என்றும் வேதத்தையும் மார்க்கண்டேயனையும் அர்ஜுநனையும் ஸாக்ஷிகளாக இட்டிருக்கிறதே, இது ஏன்? என்னில்; பரம ஆப்தமாக இசையப்பட்ட வேதமும் ஆப்திக்கு உறுப்பாக வ்யாஸரையும் மநுவையும் ப்ரஹ்மவாதிகளையும் சொன்னுப்போலே யென்று கொள்க. ... ... ... ... (67)

மூ. 68. பாரதகீதைகளின் வேதோபநிஷத்த்வம்போலே இதுவும் வ்யாக்யையானலும் வேதரஹஸ்யமாம்.

(அருளிச்செயல் வேதோபப்ரும்ஹணமாயும் வேதமாயுமிருக்கத் தட்டில்லையென்றல்)

(ப.) 68. பாரதகீதைகளின் வேதோபநிஷத்த்வம்போலே—(பாரதத்தின் வேதத்வம் போலவும், கீதையின் உபநிஷத்த்வம் போலவும் என்று யோஜிப்பது) மஹாபாரதமும் அதில் ஸாரமாயுள்ள கீதையும் வேதோபப்ரும்ஹணமாயிருக்கச் செய்தேயும் * வேதாந் அத்யாபயாமாஸ மஹா பாரத பஞ்சமாந் * என்றும், * பகவத் கீதாஸு உபநிஷத்ஸு * என்றும் சொல்லுகிறபடியே வேதமாயும் உபநிஷத்தாயு மிருக்கிறுப்போலே,

இதுவும்—இந்த ஆழ்வார் ஸ்ரீஸூக்தியும்,

வ்யாக்யை யானலும் வேதரஹஸ்யமாம்—வேதவ்யாக்யானமான உபப்ரும்ஹணமானலும் வேதரஹஸ்யமுமாகக் குறையில்லை. (வேத ரஹஸ்யமாவது—வேதத்தில் ரஹஸ்யமான உபநிஷத்து; கீழே சாந்தோக்யஸமமாகவன்றோ இதனைச் சொல்லிற்று.) ... ... ... ... (68)

(தா.) 68. ஆழ்வாரருளிச்செயலை உபப்ரும்ஹணமாகச் சொன்னபக்ஷத்தில் வேதத்திற்கு இதுவொரு வியாக்கியானமென்றதாகுமே யொழிய * வேதரூபமிதம் க்ருதம் * என்றும் * த்ராவிடம் ப்ரஹ்மஸம்ஹிதாம் * என்றும் மஹான்கள் இதனை வேதமாகச் சொல்வது கூடுமோ வென்னில்; வேதத்திற்கு உபப்ரும்ஹணமான மஹாபாரதமும் அதில் ஸாரமான கீதையும் * வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரதபஞ்சமாந் * என்றும் * பகவத்கீதாஸு உபநிஷத்ஸு என்றும் சொல்லுகிறபடியே வேதமும் உபநிஷத்துமாகிருப்போலே இதுவும் வேத வியாக்கியானமான உபப்ரும்ஹணமானலும் வேத ரஹஸ்யமாகக் குறையில்லை. [வேதரஹஸ்யமாவது வேதத்தில் ரஹஸ்யபாகமான உபநிஷத்து. கீழே ச்சாந்தோக்ய ஸமமாக வன்றோ இதனைச் சொல்லிற்று.] .. ... ... (68)

(மு.) 69. உதாத்தாதிபத க்ரமஜடாவாக்ய பஞ்சாதி பாதவ்ருத்த ப்ரச்நகாண்டாஷ்ட காத்யாயாம்ச பர்வாத்யலங்காரங்கள்போலே எழுத்தசை சீர்ப்பந்தமடி தொடை நிரைநிரையோசை தளையினம் யாப்புப் பாத்துறை பண்ணிசை தாளம் பத்துநூருயிரம்முதலான செய்கோலம் இதுக்குமுண்டு.

(வேதத்திற்கும் உபப்ரும்ஹணங்களுக்கு முள்ள அலங்காரங்கள் அருளிச்செயலுக்கும் ஒக்குமென்றல்)

(ப.) 69 உதாத்தாதி-பத-க்ரம ஜடா-வாக்ய-பஞ்சாதி பாத வ்ருத்த-ப்ரச்ந-காண்ட-அஷ்டக-அத்யாய—அம்ச-பர்வாதி அலங்காரங்கள் போலே—உதாத்த அநுதாத்த ஸ்வரித ப்ரசயங்களென்கிற ஸ்வர விசேஷங்களும், பதக்ரம ஜடா பஞ்சாதிகளும் ப்ரச்ந அஷ்டகங்களும் அத்யாயம் அம்சம் பர்வம் ஸ்கந்தம் முதலானவைகளும், பத வாக்ய பாத வ்ருத்தகாண்ட அத்யாயங்களுமாகிற அலங்காரங்கள் வேதத்திற்கும் தது பப்ரும்ஹணங்களுக்கு முண்டானாப்போலே,

எழுத்தசை ஆயிரம் முதலான செய்கோலம் இதுக்குமுண்டு—குற்றெழுத்து முதலான பதின்மூன்றெழுத்தும், நேரசை நிரையசை யென்கிற இரண்டசையும், ஆசிரியவுரிச்சீர் முதலான முப்பதுசீரும், குறளடிமுதலான ஐந்து அடியும் மோனை முதலான நாற்பத்து மூன்று தொடையும், நேர்நிரை நிரை நிரை முதலானவையும், செப்பலோசை முதலான வோசையும், நேரொன்றாசிரியத்தளை முதலான ஏழுதளையும், தாழிசை துறை விருத்தமென்கிற பாக்களினம் மூன்றும், ப்ரபந்தரூபத்வமாகிற யாப்பும், வெண்பா முதலான பாக்களும், முதிர்ந்த குறிஞ்சி முதலான பண்ணும், நிஷாதம் முதலிய இசைகளேழும், கஜகர்ணதி தாளமும், பத்து என்கிற அவாந்தரபரிச்சேதமும் நூறு என்கிற ப்ரதான பரிச்சேதமும் ஆயிரமென்கிற மஹா பரிச்சேதமுமாகிற கவிக்குச் சொல்லுகிற ஸகல அலங்காரங்களும் * செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடல் * என்னப்பட்ட இந்த திவ்யஸூக்திகளுக்கு முண்டு. ... (69)

(தா.) 69. வேதத்திற்கும் அதன் உபப்ரும்ஹணங்களுக்கும் உதாத்த அநுதாத்த ஸ்வரிதப்ரசயங்களென்கிற ஸ்வர விசேஷங்களும் க்ரம ஜடா பஞ்சாதிகளும் ப்ரச்ந அஷ்டகங்களும், அத்யாயம் அம்சம் பர்வம் ஸ்கந்தம் முதலானவைகளும், பத வாக்ய பாத வ்ருத்த காண்ட அத்யாயங்களுமாகிற பல அலங்காரங்கள் உண்டானாப்போலே அருளிச்செயலுக்கும், குற்றெழுத்து முதலான பதின்மூன்றெழுத்தும் நேரசை நிரையசை யென்கிற இரண்டசையும் ஆசிரியவுரிச்சீர் முதலான முப்பது சீரும் குறளடி முதலான ஐந்து அடியும் மோனை முதலான நாற்பத்து மூன்று தொடையும் நேர்நிரை நிரைநிரை முதலானவையும் செப்பலோசை முதலான ஓசையும் நேரொன்றாசிரியத்தளை முதலான ஏழு தளையும் தாழிசை துறை விருத்தமென்கிற பாக்களினம் மூன்றும் ப்ரபந்த ரூபத்வமாகிற யாப்பும் வெண்பா முதலான பாக்களும் முதிர்ந்த குறிஞ்சி முதலான பண்ணும் நிஷாதம் முதலிய இசைகளேழும் கஜகர்ணதிதாளமும் பத்து என்கிற அவாந்தர பரிச்சேதமும் நூறு என்கிற ப்ரதாந பரிச்சேதமும் ஆயிர மென்கிற மஹா பரிச்சேதமுமாகிற கவிக்குச் சொல்லுகிற ஸகல அலங்காரங்களுமுண்டு. ... ... (69)

(மூ.) 70. அதவா, வேதவேத்யந்யாயத்தாலே பரத்வபரமுதுவேதம் வ்யூஹவ்யாப்தி அவதரணங்களில் ஓதினநீதி கேட்டமனு படுகதைகளாய் ஆகமூர்த்தியில் பண்ணிய தமிழானவாறே வேதத்தை த்ராவிடமாகச் செய்தாரென்னும்.

(அருளிச்செயல் அபூர்வமான வொரு வேதாவிர்ப்பாவமென்றல்)

(ப.) 70. அதவா—கீழ்விவரித்தபடி திவ்யப்ரபந்தத்திற்கு வேதஸாம்யமும் உபப்ரும்ஹணஸாம்யமு முண்டென்று உபபாதித்த வழியல்லாமல்,

வேதவேத்யந்யாயத்தாலே—* வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா * என்று—வேத ப்ரதிபாத்யனான பரமபுருஷன் சக்ரவர்த்தி திருமகனாய் அவதரித்தவளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீவால்மீகி பகவானிடத்தினின்றும் ஸ்ரீராமாயணமாகத் திருவவதரித்ததென்று சொன்னபடியாலே ப்ரமேயபூதனான பகவானுக்குப் போலே ப்ரமாண பூதமான வேதத்திற்கும் அவதார பரம்பரைகள் உண்டென்று தேறுங்கணக்கிலே,

பரத்வபரமுதுவேதம்—பல விடங்களிலும் எம்பெருமானுடைய பரத்வநிலையைப் பேசுகையாலே பரத்வத்திலே நோக்கான புராதந வேதமானது,

வ்யூஹவ்யாப்தி அவதரணங்களில் — அப்பெருமானுடைய வ்யூஹாவஸ்தை அந்தர்யாம்யவஸ்தை விபவாவதாராவஸ்தை ஆகிய இந்த நிலைமைகளிலே,

ஓதின நீதி கேட்டமனு படுகதைகளாய்—* உணர்ந்தாய் மறைநான்குமோதினாய் நீதி * என்கிற பாசுரத்திற்படியே நீதியாகச் சொல்லப்பட்ட பாஞ்சராத்ரமாயும், * கேட்ட மனுவும் * என்கிற பாசுரத்திற்படியே மநுஸ்மிருதி முதலான ஸ்மிருதிகளாகவும், * பாட்டுமுரையும் படுகதையும் * என்கிற பாசுரத்திற்படியே படுகதையாகச் சொல்லப்பட்ட இதிஹாஸங்களாகவும் ஆவிர்ப்பவித்திருந்து,

ஆகமூர்த்தியில்—அப்படி விபவாவதாரங்களால் ரக்ஷித்தருளுமெம்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸுலபனாய் * மேல் ஆகமூர்த்தியாய வண்ணமென்கொலாதி தேவனே * என்றீடுபடும்படியான அர்ச்சாவதாரமான வளவில்,

பண்ணிய தமிழானவாறே—அந்த அர்ச்சாவதாரத்தின் பெருமையைப் பேசுவதற்காக அந்த வேதமே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகவேண்டி * பண்ணிய தமிழ் மாலை * என்கிறபடியே தமிழ் வடிவாய்க்கொண்டு ஆழ்வாரிடத்தில் ஆவிர்ப்பவித்ததாகையாலே,

வேதத்தை த்ராவிடமாகச் செய்தாரென்னும்—ஸம்ஸ்க்ருதவேதத்தை த்ராவிட வேதமாகச் செய்தாரென்பதுமுண்டு. [ப்ரமேயனான பகவானுக்குப் பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சைகளென்று பஞ்சப்ரகாரங்கள்போலே ப்ரமாணத்திற்கும் பஞ்சப்ரகாரங்களுண்டு; (1) பரத்வநிலைக்கு—வேதம். (2) வ்யூஹநிலைக்கு—பாஞ்சராத்ரம். (3) அந்தர்யாமி நிலைக்கு—மந்வாதிஸ்மிருதிகள். (4) விபவ நிலைக்கு—இதிஹாஸபுராணங்கள். (5) அர்ச்சாவதார நிலைக்கு—திவ்யப்ரபந்தங்கள் என்றதாயிற்று. வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சைகள் பரவாஸுதேவனுடைய ப்ராதுர்ப்பாவ விசேஷங்களானாற்போலே பாஞ்சராத்ர ஸம்ருதீதிஹாஸ புராண

திவ்யப்ரந்தங்கள் வேதத்தின் ப்ராதுர்ப்பாவ விசேஷங்கள்—என்று உபபத்திகளுடன் நன்கு நிருபிக்கப்பட்டதாயிற்று. ஆகமூர்த்தியென்று அர்ச்சாவதாரத்திற்குத் திருமழிசையாழ்வார் இட்டருளின வ்யபதேசம். ஆகமூர்த்தியென்றது யாகமூர்த்தி யென்றபடி. "யஜ—தேவபூஜாயாம்" ஆகையாலே யஜிக்கத்தக்க [அர்ச்சிக்கத் தக்க] மூர்த்தி என்றபடி. 'இப்படியாகவேணுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு தோன்றின மூர்த்தி' என்னவுமாம். .... ... ... (70)

(தா.) 70. கீழ்ச்சொல்லியபடி அருளிச்செயலுக்கு வேதஸாம்யமும் உபப் ரும்ஹண ஸாம்யமும் உண்டென்று உபபாதித்த வழியன்றியே, வேதத்தின் ஆவிர்ப்பாவ விசேஷமாய் இவ்வாழ்வாராலே நிர்மிதமாக ப்ரஸித்தமாயிருப்ப தொன்றென்று மற்றொரு யோஜனையுஞ்சொல்லப்படுகிறது.—" வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத் மநா" என்று வேதப்ரதிபாத்யனான பரமபுருஷன் சக்ரவர்த்தி திருமகனாய் அவ தரித்தவளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீவால்மீகிபகவான் பக்கல் நின்றும் ஸ்ரீராமாயணமாகத் திருவவதரித்ததென்கிற நியாயத்தினால், பலவிடங்களிலும் எம்பெருமானுடைய பரத்துவ நிலைமையைப் பேசுகையாலே பரத்வத்தில் நோக் கான வேதமானது அப்பெருமானுடைய வியூஹாவஸ்தையிலே அதன் குணம் ரூபம் க்ருத்யம் முதலியவற்றைப் பேசுதற்காக அதுவே பாஞ்சராத்ரமாக அவ தரித்தது. அப்பெருமானுடைய அந்தர்யாமித்வ நிலைமையில் வியாப்தியைப் பேசு தற்காக அந்த வேதமே மநுஸ்மிருதி முதலிய ஸ்மிருதிகளாக அவதரித்தது ; அப் பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதம் முதலியவற்றைப் பேசு தற்காக அந்த வேதமே ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஆவிர்ப்பவித்தது. அப்படி விபவாவதாரங்களால் ரக்ஷித்தருளு மெம்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸௌலபனாக அர்ச்சாவ தாரமானவளவில் அர்ச்சையின் பெருமையைப் பேசுதற்காக அந்த வேதந்தானே தானும் ஸர்வ ஸௌலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாகித் தமிழ்வடிவாய்க் கொண்டு ஆழ்வார் பக்கலிலே ஆவிர்ப்பவித்ததாகையாலே ஸம்ஸ்க்ருதவேதத்தை த்ராவிட வேதமாகச் செய்தாரென்று சொல்லுவதொரு ப்ரகாரமுமுண்டு. [அந்த வேதம் முதலானவை யெல்லாவற்றிலும் எல்லாம் சொல்லிற்றேயாகிலும் ஒவ்வொன் றுக்கு ஒவ்வொன்றிலே நோக்காகக் கடவது.] ... ... (70)

(மூ) 71. மண்ணாடின ஸஹ்யஜலம் தோதவத்திச்சங்கணி துறையிலே துகில்வண்ணத் தெண்ணீராய் அந்தஸ்ஸ்தத்தைக் காட்டுமாபோலே அல்பச்ருதர்கலக்கின ச்ருதி நன்ஞானத்துறைசேர்ந்து தெளிவுற்று ஆழ்பொருளையறிவித்தது.

[வேதமே அருளிச்செயலாக உருமாறியும் கலக்கமின்றியே தெளிந்து ஆழ்பொருளை அறிவித்ததென்றல்]

(ப.) 71. மண்ணாடின ஸஹ்யஜலம்—உயர்ந்த நிலத்தில் நின்றும் வேகத் தோடே வந்து பூமியிலே விழுகையாலே மண்ணோடே கூடியதாய்க் கலங்கின ஸஹ்யபர்வத தீர்த்தமானது,

**தோதவத்திச் சங்கணிதுறையிலே**—* தோதவத்தித் தூய்மறையோர் துறை * என்று பெரியாழ்வார் பாடின [திருவரங்கத்திலுள்ள] தோதவத்தித் துறையிலும்; * பொருநற் சங்கணி துறைவன் * என்று நம்மாழ்வார் பாடின [திருக்குருகூரிலுள்ள] திருச்சங்கணி துறையிலும், (வந்தவாறே)

**துகில் வண்ணத் தெண்ணீராய்**—* துகில் வண்ணத் தூநீர் * என்றும், * திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி * என்றும் சொல்லுகிறபடியே (துறைவாசியாலே) தெளிந்த நீராகி,

**அந்தஸ்ஸ்தத்தைக் காட்டுமாபோலே**—தனக்குள்ளே கிடக்கிற பொருள்களை நன்கு ப்ரகாசிப்பிக்குமாபோலே, [தெளிந்த தீர்த்தத்தினுள்ளே] மிக்க ஆழத்திலிருக்கும் வஸ்துக்களும் ஸ்பஷ்டமாகக் காணப்படுமே.]

**அல்பச்ருதர் கலக்கின ச்ருதி**—* பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி * என்கிறபடியே வேதம்தான் நடுங்கும்படி அதன் கருத்தறியாமல் தம் நெஞ்சில் தோற்றினதே சொல்லுகிற சிற்றறிவாளர் கலக்கக் கலங்கின வேதமானது,

**நன்ஞானத்துறை சேர்ந்து**—* காலை நன்ஞானத்துறை படிந்தாடி * என்கிறபடியே யதாத்த ஜ்ஞானத்துறையான ஆழ்வார் பக்கலிலே வந்து சேர்ந்து,

**தெளிவுற்று**—* தென்குருகூர்ச் சடகோபன் சொல் தெளிவுற்றவாயிரம் * என்னும்படி முன்புள்ள கலக்கம் தீர்ந்து தெளிவையடைந்து,

**ஆழ்பொருளை யறிவித்தது**—அகாதமாய்ப் பரமரஹஸ்யமான அர்த்த விசேஷங்களை யெல்லாம் * யரன்முகமாய் அந்தாதி மேலிட்டு அறிவித்தேனாழ்பொருளை * என்னும்படி அறிவிக்கவல்லதாயிற்று. [திருவாய்மொழியிலிருந்து உண்டாகும் ஞானம் தெளிந்திருக்கும் என்றதாயிற்று. .... ... (71)

(ஸா) 71. அபௌருஷேயமான வேதமே இப்படி அருளிச்செயலானவொரு நிலைமையை யடைந்ததாகில் கலங்கினதாய் உட்பொருளை ஸ்பஷ்டமாக வெளிக்காட்டுந்தன்மை குன்றப்பெருதோவென்னில்; ஆழ்வார் வக்தாவாக அமைந்த விசேஷத்தாலே அது வேறுபடியாக ஆயிற்றென்பது த்ருஷ்டாந்தத்தோடு மூதலிக்கப்படுகிறது உயர்ந்த நிலத்தில் நின்றும் வேகத்தோடே வந்து பூமியிலே விழுகையாலே மண்ணோடு கூடியதாய்க் கலங்கி ஸஹ்யபர்வதத்தில் நின்றும் வருகிற ஜலமானது † தோதவத்தித் தூய்மறையோர் துறையிலும் ‡ பொருநற்சங்கணி துறையிலும் வந்தவாறே துறைவாசியாலே தெளிந்த நீராய்த் தனக்குள்ளே கிடக்கிற பொருள்களை நன்கு பிரகாசிப்பிக்குமாபோலே * =பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி * என்று வேதம் தான் நடுங்கும்படி, அதன் கருத்தறியாமல் தம் நெஞ்சில் தோற்றினதே சொல்லுகிற சிற்றறிவாளர் கலக்கக் கலங்கின வேதமானது யதார்த்த ஞானத்துறையான இவ்வாழ்வார் பக்கலிலேவந்து சேர்ந்து முன்புள்ள கலக்கம் தீர்ந்து தெளிவையடைந்து அகாதமாய்ப் பரமரஹஸ்யமான அர்த்த விசேஷங்களையெல்லாம் அறிவிக்கவல்லதாயிற்று

† தோதவத்தித் துறையென்பது ஸ்ரீரங்கத்தில் திருக்காவேரியிலும்,
‡ சங்கணிதுறையென்பது ஆழ்வார் திருநகரியில் தாமிரபரணியிலும்ப்ரஸித்தம்.

[இதனால், தெள்ளிதான பொருளை வெளியிடுந்தன்மை வேதத்திற்கு அரிதென்றும் அருளிச்செயலே கலக்கமறத் தெளிந்தபொருளைக் காட்டவல்லது என்றும் கூறியபடி. "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்றார் பிறரும்.] ... (71)

(மூ.) 72. மேகம்பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே.

[வேதத்திற்குப்போல் அருளிச்செயலுக்குச் சில நியமங்களில்லாமைக்குக் காரணங்கூறுதல்]

(ப.) 72. மேகம்பருகின ஸமுத்ராம்புபோலே—வாய்க்கொள்ள வழங்காதபடி விரஸமாயும் ஸ்பர்சகாலாதி நியமங்களோடே கூடினதாயுமிருக்கிற கடல்நீரானது மேகத்தாலே க்ரஹிக்கப்பட்டு வர்ஷிக்கப்படுமளவில் அந்த மேக ஸம்பந்தத்தாலே வைரஸ்யம் நீங்கி எல்லாக் காலத்திலும் எல்லார்க்கும் போக்யமாவதுபோல,

நூற்கடல் சொல்—* நூற்கடலும் * என்று பேயாழ்வாரருளிச் செய்தபடி அத்யயநகால நியமத்தையும் அதிகாரி நியமத்தையு முடைத்தான வேத வித்யா ஸமுத்ர வசனமானது,

இவர் வாயனவாய்த் திருந்தினவாறே—* அவன் சின்னமுந் திருநாமமும் இவள் வாயனகள் திருந்தவே * என்று தாமேயருளிச் செய்யும்படி இவ்வாழ்வாருடைய திருவாக்கில் புகுந்து காலநியம அதிகாரி நியமங்களில்லாத தன்மையை யடைத லாகிற திருத்தம் பெற்றவாறே, (திருத்தம் பெற்றதனாலென்றபடி.)

ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே—எப்போதும் எல்லோரும் அதிகரிக்கலாம்படி யாயிற்று. ... ... ... ... ... (72)

(தா.) 72. வாயில் பருக வழங்காதபடி விரஸமாயும் ஸ்பர்சகாலாதி நியமங்களோடு கூடினதாயுமிருக்கின்ற கடல்நீரானது மேகத்தாலே உட்கொள்ளப் பட்டு வர்ஷிக்கப்படுமளவில் அந்த மேக ஸ்பர்சத்தாலே வைரஸ்யம் நீங்கி எல்லாக் காலத்திலும் எல்லார்க்கும் போக்யமாவதுபோல, அத்யயநகால நியமத்தையும் அதிகாரி நியமத்தையுமுடைய வேதவித்யா ஸமுத்ர வசனமானது ஆழ்வாருடைய திருவாக்கில் புகுந்து கால நியம அதிகாரி நியமங்களில்லாத தன்மையை அடைந்து திருத்தம் பெற்றதனால் எப்போதும் எல்லாரும் அதிகரிக்கலாம்படியாயிற்று. (72)

(மூ.) 73. ம்ருத்கடம்போலன்றே பொற்குடம்.

(அருளிச்செயல் ஸர்வாதிகாரமாயிருக்குந்தன்மைக்கு ஒருபொருத்தமான த்ருஷ்டாந்தம்)

(ப.) 73. ம்ருத்கடம் போலன்றே பொற்குடம்—நியதாதிகாரிகளே தொடக் கூடியதாய் எல்லார்க்கும் தொடவொண்ணாததாயிருக்கின்ற மண் குடத்தைக் காட்டிலும் எல்லார்க்கும் தொடவுரியதான ஸ்வர்ணகும்பம் நெடுவாசி பெற்ற தன்றோ. [இதனால் ஸர்வாதிகாரத்வம் சிறப்புக்கே உரியதென்று காட்டப்பட்ட தாயிற்று.] ... ... ... ... (73)

(தா.) 73. வடமொழிவேதம் போலன்றியே அருளிச்செயல் ஸர்வாதிகார மாயிருப்பதனல் இதற்கு யாதொரு குறையும் வாராது;—மண்குடம் நியதாதிகாரி களே தொடவுரியதாய் எல்லார்க்கும் தொடவொண்ணுதாயிருக்க, பார்த்திவமாயிரா நிற்கச்செய்தே பொற்குடம் எல்லார்க்கும் தொடவுரியதாயிரா நின்றதன்றோ. இத்தால், காரணமான வேதம் அதிக்ருதாதிகாரமானுலும் அதன் கார்யமான திவ்யப்ரபந்தம் ஸம்ஸ்கார விசேஷத்தாலே ஸர்வாதிகாரமாயிருக்கக் குறையில்லை யென்பதும், இந்த ஸர்வாதிகாரத்வம் சிறப்புக்கே உறுப்பென்பதும் தேறிற்றாகும்.

(மூ.) 74. பெரும்புறக்கடலும் ச்ருதிஸாகரமும் அலைத்தாழ்ந்தோடுமிடங்களில் அயோக்யர்க்குச் சமைத்தமடுவும் சாய்கரகமும் மாநமேயசரமம்.

(வ்யூஹ, அந்தர்யாமி, விபவநிலைமைகளில் அவகாஹிக்கப்பெருதார்க்கு ஸுலபமாக அர்ச்சாவதாரம் அமைந்ததுபோல் பாஞ்சராத்ர ஸ்மிருதி இதிஹாஸங்களில் அதிகார மற்றவர்களுக்கு எளிதாக அருளிச்செயல் அமைந்ததென்றல்.)

(ப.) 74. பெரும்புறக் கடல்—* பெரும்புறக் கடலை* என்று திருமங்கையாழ் வாரருளிச்செய்தபடி அப்ரமேய ஸமுத்ரமாகச் சொல்லப்படுகிற பரம புருஷன்,

அலைத்து ஆழ்ந்து ஓடுமிடங்களில்—கடலில் அவகாஹிக்க முடியாதபடி அலை யெறிந்து கிடக்கு மிடமும் நிலைகாணவொண்ணுதபடி ஆழ்ந்திருக்கு மிடமும் உபயோகப்படுத்திக் கொள்ளவொண்ணுதபடி கழிகளாய் ஓடுமிடமுமாயிருப்பது போல (பெரும்புறக் கடலென்று சொல்லப்பட்ட எம்பெருமானுகிற ப்ரமேயமானது) வ்யூஹமாய் நிற்கு மிடமென்ன அ தர்யாமியாய் நிற்கு மிடமென்ன கண்காண வந்து தோன்றி ஞாலத்தூடே நடந்து திரிந்த விபவாவதாரமென்ன ஆகிய இவற்றில்,

அயோக்யர்க்கு—தேசவிப்ரகர்ஷத்தாலும் இந்த்ரிய விப்ரகர்ஷத்தாலும் கால விப்ரகர்ஷத்தாலும் கிட்டியநுபவிக்க யோக்யதையற்றவர்களுக்கு,

சமைத்தமடு மேயசரமம்—"அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவ தாரம்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்தபடியே தேச காலாதிவிப்ரகர்ஷ லவலேசமுமில்லாதபடி மிகவும் ஸுலபமான தடாகம் போன்றதான அர்ச்சாவ தாரம் ப்ரமேயப்ராதுர்ப்பாவ பரம்பரையில் சரமாவஸ்தையாகும்;

ச்ருதிஸாகரம் அலைத்து ஆழ்ந்து ஓடுமிடங்களில் அயோக்யர்க்கு—* மதிமந்தாநமா வித்ய யேநாஸெள ச்ருதிஸாகராத் * என்கிற ப்ரமாணத்தின்படியே அப்ரமேய ஸமுத்ரமாகச் சொல்லப்படுகிற வேதமானது கடலின் அலைசெறிந்த விடம்போன்ற வ்யூஹத்தில் நோக்கான பாஞ்சராத்ரமான விடத்திலும், கடலில் ஆழ்ந்த விடம் போன்ற அந்தர்யாமியில் நோக்கான மந்வாதிஸ்மிருதிகளான விடத்திலும், கடல் கழிகளாயோடுமிடம்போன்ற விபவாவதாரங்களில் நோக்கான இதிஹாஸங்களான விடத்திலும் ஜ்ஞாநசக்திஸங்கோசங்களாலே அவகாஹிக்க யோக்யதை யில்லா தவர்களுக்கு,

சாய்கரகம் மாநசரமம்—வாய்க்கு நேராகக் கொண்டுவந்து சாய்க்கப்படும் கரகம்போலே ச்ரமமில்லாமல் உபஜீவிக்கலாம்படி மிகவும் எளிதான சாஸ்த்ரமான

திவ்யப்ரபந்தம் ப்ரமாண ப்ராதுர்ப்பாவ பரம்பரையில் சரமாவஸ்தையாகும். [இந்த சூர்ணையில் அவகாஹிக்கும்போது மூன்றுவிதமான கடல்களை நெஞ்சிற் கொள்ள வேணும். (1) எல்லாரும் காண்கிற உப்புக்கடல். (2) பெரும்புறக் கடலென்று சொல்லப்பட்ட எம்பெருமானாகிற கடல். (3) ச்ருதிஸாகரமென்று சொல்லப்பட்ட சாஸ்த்ரமாகிற கடல். ஆக இம்மூன்று கடல்களிலும் அவகாஹிக்க முடியாத சில நிலைமைகளும் அவகாஹிக்கக் கூடியவொரு நிலைமையும் உண்டு. (1) உப்புக் கடலில் அலைத்து ஆழ்ந்து ஓடுமிடங்கள் அவகாஹிக்க யோக்யமல்லாத நிலைமை கள். கடல்நீரே மேகம் வாயிலாக வரப்பெற்றுத் தடாகமாகத் தேங்கினவிடம் அவகாஹிக்க யோக்யமான நிலைமை. (2) எம்பெருமானாகிற கடலில் அலைத்த விடமான வ்யூஹமும் ஆழ்ந்தவிடமான அந்தர்யாமித்வமும் ஓடுமிடமான விபவா வதாரங்களும் நம்போல்வார்க்கு அவகாஹிக்க முடியாத நிலைமைகள்; அர்ச்சாவ தாரம் அவகாஹிக்க யோக்யமான நிலைமை. (3) சாஸ்த்ர ப்ரமாணமாகிற கடலில் அலைத்தவிடமான பாஞ்சராத்ரமும், ஆழ்ந்தவிடமான மந்வாதிஸ்ம்ருதியும், ஓடுமிடமான இதிஹாஸங்களும் அவகாஹிக்க யோக்யமல்லாத நிலைமைகள்; திவ்யப்ரபந்தமே அவகாஹிக்க யோக்யமான நிலைமை. ஆகவே உப்புக்கடலின் சரமாவஸ்தையாகத் தடாகமும், எம்பெருமானாகிற கடலின் சரமாவஸ்தையாக அர்ச்சாவதாரமும், ப்ரமாணமாகிற கடலின் சரமாவஸ்தையாக திவ்யப்ரபந்தமும் சொல்லிற்றாயிற்று. உபயோகங் கொள்ளவேண்டில் தடாகம் சிறந்தது போலவும் அர்ச்சாவதாரம் சிறந்தது போலவும் திவ்யப்ரபந்தமே சிறந்தது என்று நிரூபிக்கப் பட்டதாகத் தேறுதல் இந்த சூர்ணையின் பரமதாற்பரிய மென்க. மாந மேய சரம மென்றது—ப்ரமாண வரிசையிலும் ப்ரமேய வரிசையிலும் சரமாவஸ்தைகள் என்றபடி. ... ... ... ... ... (74)

(தா.) 74. ப்ரமாணமான வேதமும் ப்ரமேயமான எம்பெருமானும் பலபல அவதாரங்களைச் செய்கின்ற விஷயம் முன்னமே சொல்லப்பட்டது, அதாவது—வேதம் பாஞ்சராத்ரமாகவும் ஸ்மிருதியாகவும் இதிஹாஸ புராணமாகவும் அருளிச் செயலாகவும் வடிவெடுத்ததென்றும், வேதவேத்யனான பரமபுருஷனும் வ்யூஹ மாயும் விபவமாயும் அந்தர்யாமியாயும் அர்ச்சையாயும் வடிவெடுத்தனனென்றும் சொல்லிற்று. அளவிடமுடியாமையிலே வேதமும் ஒரு கடல், எம்பெருமானும் ஒரு கடல். "மதிமந்தாநமாவித்த்ய யேநாஸௌ ச்ருதி ஸாகராத்." என்ற பிரமா ணத்தினால் வேதம் கடலென்பது பெறப்பட்டது; "பெரும்புறக்கடலை" என்ற அருளிச்செயலினால் எம்பெருமான் கடலென்பது பெறப்பட்டது. அவகாஹிக்கமுடி யாத சில பாகங்களும் அவகாஹிக்கக்கூடிய ஒரு பாகமும் கடலுக்கு உண்டு. அலை யெறிந்து கிடக்குமிடமும், நிலைகாணவொண்ணாதபடி ஆழ்ந்திருக்குமிடமும் அவ காஹிக்கமுடியாத பாகமாகும்; கழிகளாய்க் கொண்டு ஓடுமிடம் அவகாஹிக்கக் கூடிய இடமாகும். அளவிடமுடியாமைபற்றிப் * பெரும்புறக்கடலென்று சொல்லப் பட்ட எம்பருமானாகிற ப்ரமேயமானது (1) கடல் அலை செறிந்து நிற்குமிடம்போலே ஞானம் முதலிய ஆறு குணங்கள் நிறைந்த தான் அவற்றிலே இரண்டிரண்டு குணங்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டு ஸங்கர்ஷணாதி ரூபத்தாலே வ்யூஹித் திருக்குமிடத்திலும் (2) கடலில் நிலைகாணவொண்ணாதபடி ஆழ்ந்திருக்குமிடம்

போலே கண்ணுற் காணவொண்ணுதே அந்தர்யாமியாய் நிற்குமிடத்திலும். (3) கடலானது கழிகளாய்க் கொண்டு ஓடுமிடம்போலே கண்காணவந்து தோன்றி ஞாலத்தூடே நடந்து திரிந்த அவதாரமான விடத்திலும் ( ) தேசதூரத்தாலும் (2) இந்த்ரியதூரத்தாலும் (3) காலவிபர்யயத்தாலும் கிட்டியநுபவிக்க முடியாத வர்களுக்கு "அதிலே தேங்கினமடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்கிறபடியே தேச காலாதி விப்ரகர்ஷ லவலேசமுமில்லாதபடி கல்பிக்கப்பட்டு மிகவும் ஸுலப மான விஷயம் ப்ரமேயத்தின் ஆவிர்ப்பாவ பரம்பரையில் கடைசி அவஸ்தை யான அர்ச்சாவதாரம். இப்படியே, அளவிடமுடியாததாய்ப் பரத்வபரமான வேத ஸமுத்ரமானது (1) கடலின் அலை செறிந்தவிடம்போலே வ்யூஹப்ரதிபாதகமாய்க் கொண்டு வேறொரு நிலைமையெய்திப் பாஞ்சராத்ரமானவிடத்திலும் (2) கடலில் ஆழ்ந்த விடம்போலே அந்தர்யாமித்வ ப்ரதிபாதகமாகி, அவகாஹித்து அர்த்தங் காணவொண்ணுதபடி மந்வாதிஸ்ம்ருதிரூபமான விடத்திலும் (3) ஸமுத்ரம் கழிக ளாயோடுமாபோலே அவதார ப்ரதிபாதகமாகி இதிஹாஸரூபமாய்ப் பரம்பின விடத்திலும் ஜ்ஞானசக்தி முதலியவற்றின் ஸங்கோசத்தினுல் அவகாஹித்து விடாய்தீர மாட்டாதவர்களுக்குச் சாய்கரகம்போலே சிரமமில்லாமல் உபஜீவிக்க லாம்படி மிகவும் எளிதான சாஸ்திரம் - ப்ரமாணபூதமான வேதத்தினுடைய ஆவிர்ப்பாவ பரம்பரையின் கடைசி அவஸ்தையான திருவாய்மொழி. ... (74)

(மூ). 75. வீட்டின்பவின்பப்பாக்களில் த்ரவ்யபாஷா நிரூபண ஸமம் இன்பமாரியிலாராய்ச்சி.

(ஆழ்வாருடைய ஜாதிநிரூபணம் பண்ணலாகாதென்றல்)

(ப.) 75. இன்பமாரியில் ஆராய்ச்சி— * வண்டமிழ்நூற்க நோற்றேனடியார்க் கின்ப மாரியே * என்று தாமே யருளிச்செய்யும்படி இன்பமாரியான [ப்ரஹ்மாநந்த வர்ஷுகவலாஹகமான] ஆழ்வாரிடத்தில் ஜாதிவிமர்சம் பண்ணப் புகுவதானது,

வீட்டின்பத்தில் த்ரவ்யநிரூபணஸமம், இன்பப்பாவில் பாஷாநிரூபணஸமம்— * கனி வார் வீட்டின்பமே * என்கிறபடியே கனிந்த நெஞ்சையுடையாருடைய க்ருஹங்கள் தோறும் அவர்களுகந்தவொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக் கொண்டிருந்து இன்பத்தை விளைக்கின்றதனுல் 'வீட்டின்பம்' என்று பேர்பெற்றதான அர்ச்சாவ தாரத்தில் 'இது இன்னலோஹமன்றோ' என்று உபாதாநத்ரவ்யத்தை நிருபிப்பது போலவும், * அந்தமிழினின்பப்பா * என்று குலசேகராழ்வாரருளிச் செய்தபடியே விசேஷஜ்ஞர்களுக்குப் பரமானந்தத்தை விளைக்குமதனுல் * இன்பப்பா வென்று பேர்பெற்றதான திவ்யப்ரபந்தத்தில் 'இது அஸம்ஸ்க்ருத பாஷையன்றோ' என்று பாஷா நிருபணம் செய்வது போலவும் மஹாபாபமாகும். [நம்முடைய ஸம்ப்ரதாயத் தில் ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்களை முறையே திவ்யப்ரபந்த மென்றும் திவ்யதேச மென்றும் திவ்யஸூரி யென்றும் திவ்யமென்கிற வட சொல்லைச் சேர்த்தே வழங்கி வருதல்போல, அந்த ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்களை முறையே இன்பப்பா வென் றும், வீட்டின்பமென்றும் இன்பமாரியென்றும் இன்பமென்கிற தமிழ்ச்சொல்லைச் சேர்த்தே வழங்கிவரும்படி இந்த சூர்ணையில் எடுத்துக்காட்டி யிருக்குமழகு வெகு

அற்புதமானது. எல்லாம் திவ்யமாயும் இன்பமாயுமிருக்கும்போது இவற்றில் குறை கூறுதல் துன்பமேயாகுமென்றவாறு.] ... ... ... (75)

(நா.) 75. ப்ரமாணத்தினுடையவும் ப்ரமேயத்தினுடையவும் வைபவம் விரித்துரைக்கப்பட்டதுகீழ்; இனி ப்ரமாதாவான ஆழ்வாருடைய வைபவம் விரித்துரைக்கப்படுகிறது. ப்ரமாணமும் ப்ரமேயமும் இப்படி விலக்ஷணமாயிருந்ததாகிலும் இந்தப்ரமாணமாகிய திருவாய்மொழியை அருளிச்செய்த ஆழ்வார் நான்காம் வருணத்தவரன்றோவென்னில்; இப்படி சங்கித்தாலும் மஹாபாபமுண்டென்னப் படுகிறது; பகவத் விஷயமென்றால் உள் கனிந்திருக்குமவர்களுடைய திருமாளிகைகளிலே அவர்களுகந்த வொரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கொண்டிருந்து இன்பத்தை விளைக்கிற அர்ச்சாவதாரத்தைப் பார்த்து 'இது இன்ன லோஹமன்றோ' என்றால் எப்படிப்பட்ட பாபமுண்டோ; விசேஷஜ்ஞர்களுக்குப் பரமானந்தத்தை விளைப்பதான திருவாய்மொழியை நோக்கி 'இது தமிழ்ப்பாஷையன்றோ' என்றிகழ்ந்தால் எப்படிப்பட்ட பாபமுண்டோ, அப்படிப்பட்ட பாபம் ஆழ்வார் பக்கல் ஜாதியைப்பற்றின இகழ்ச்சி செய்தலாலு முண்டாகும். ... (75)

(மூ) 76. **பேச்சுப்பார்க்கில் கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்;**
**பிறவி பார்க்கில் அஞ்சாமோத்தும் அறுமூன்றும் கழிப்பனும்.**

**[அருளிச்செயலின் பாஷையையும் ஆழ்வாருடைய ஜாதியையும் கணிசிக்கலாகாதென்பதைத் திடப்படுத்தல்]**

(ப.) 76. **பேச்சுப் பார்க்கில்**—விஷயவைலக்ஷண்யத்தைப் பாராமல் பாஷாமாத்ரத்தையே பார்க்குமளவில், [அதாவது ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ளது ஆதரணீயம், இதரபாஷையிலுள்ளது அநாதரணீயம் என்று கொள்ளுமளவில்],

**கள்ளப்பொய்ந்நூல்களும் க்ராஹ்யங்கள்**—* வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற கள்ளநூல் * என்றும் * பொய்ந்நூலை மெய்ந்நூலென்றென்று மோதிமாண்டு * என்றும் பாஹ்யங்களாகச் சொல்லப்பட்ட வடமொழி நூல்களும் க்ராஹ்யங்களாக வேண்டிவரும்; (அவையெல்லாம் ஸம்ஸ்க்ருத பாஷையிலிருப்பதால்.)

**பிறவி பார்க்கில்**—ஜாதிமாத்ரத்தையே பார்க்குமளவில், [அதாவது—உத்தம ஜாதியிற் பிறந்தவர்கள் சொல்லிற்றே ஆதரணீயம், கீழ்ச் சாதிகளிற் பிறந்தவர்கள் சொல்லிற்று அநாதரணீயம் என்று கொள்ளுமளவில்],

**அஞ்சாமோத்தும் அறுமூன்றும் கழிப்பனும்**—மத்ஸ்யகந்தை [வலைச்சி] யின் மகனாகத் தோன்றினதால் நீசஜாதீயனென்று கொள்ளப்படவேண்டிய வ்யாஸன் சொன்ன "அஞ்சாமோத்து" [*பாரதः பஞ்சமோ வேதः] என்னப்படுகிற மஹாபாரதமும், * கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான் * என்று நீசஜாதீயனாகச் சொல்லப்பட்ட க்ருஷ்ணன் சொன்ன "அறுமூன்று" [ஷட்கத்ரயம்] என்னப்படுகிற கீதோபநிஷத்தும் த்யாஜ்யங்களாகவேண்டி வரும். (ஆகவே, பாஷாநிரூபணமும் ஜாதிநிரூபணமும் அஸங்கதமென்றதாயிற்று.)

(தா.) 76. விஷய வைலக்ஷண்யத்தை நோக்காமல் ‘ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ளதும் ஜன்ம கௌரவமுடையார் சொல்லுவதுந்தான் ஆதரிக்கத் தக்கது’ என்று கொள்ளுகிற பக்ஷத்தில், * கள்ளநூல் * பொய்ந்நூல் * என்று கழிக்கப்பட்ட ஸம்ஸ்க்ருத பாஷாமயமான பாஹ்ய சாஸ்திரம் முதலானவையும் பரிக்ரஹிக்க வேண்டியவைகளாக ப்ரஸங்கிக்கும்; அப்படியே, மத்ஸ்யகந்தையின் மகனான வியாஸன்சொன்ன ஐந்தாம் வேதமான மஹாபாரதமும், * கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றுக் காடுவாழ் சாதியுமாகப்பெற்ற க்ருஷ்ணன் சொன்ன கீதோபநிஷத்தும் த்யாஜ்யமாகவும் ப்ரஸங்கிக்கும். .... ... (76)

(மூ.) 77. க்ருஷ்ண க்ருஷ்ணத்வைபாயநோத்பத்திகள்போலன்றே
க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வஜந்மம்.

[வியாஸருடையவும் கண்ணனுடையவும் உத்பத்தியிற்காட்டிலும் ஆழ்வாரவதாரத்திற்குண்டான சிறப்பு]

(ப.) 77. க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வஜந்மம்—* ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணாதத்வமிவோதிதம் * என்று பட்டர் க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வ மென்றே பெயரிடும்படி அவதரித்து * நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப் பெற்ற * என்று (திருவிருத்தத்தில்) தாமும் அருளிச்செய்தபடி பகவத் விஷயமான ஆசைதான் ஒரு வடிவுகொண்டாற் போலிருக்கின்றவரான ஆழ்வாருடைய திருவவதாரமானது,

க்ருஷ்ண க்ருஷ்ணத்வைபாயந-உத்பத்திகள் போலன்றே—க்ருஷ்ணனுடையவும் க்ருஷ்ணத்வைபாயன ரென்கிற வ்யாஸருடையவும் பிறப்புப்போன்றதன்றே; அதிற்காட்டிலும் பரம விலக்ஷண மென்றபடி. (இந்த வைலக்ஷண்யம் அடுத்த சூர்ணையில் உபபாதிக்கப்படுகின்றமைகாண்க.) ... ... ... (77)

(தா.) 77. கண்ணபிரான் * ஒருத்தி மகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனானவன்; வியாஸனோ கன்னிகையின் மகனாய்ப் பிறந்தவன். இவர்களுடைய உத்பத்திபோலன்று ஆழ்வாருடைய திருவவதாரம்; ஏனெனில்; “நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற” என்று (திருவிருத்தத்தில்) தாமே பேசலாம்படியாய், “ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ண த்ருஷ்ணாதத்வமிவோதிதம்” என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) பட்டர் அருளிச்செய்தபடியே பகவத்விஷயமான ஆசைதான் ஒருவடிவுகொண்டாற்போலிருக்கிறவராயிற்று ஆழ்வார். ஆதலால், இடைச்சி வயிற்றிற் பிறந்த க்ருஷ்ணனுடையவும் வலைச்சி வயிற்றிற்பிறந்த க்ருஷ்ணத்வைபாயநனுடையவும் உத்பத்தியிற் காட்டில் ஆழ்வாரவதாரம் மிகச் சிறந்ததே. ... ... ... .... ... (77)

(மூ.) 78. பெற்றும் பேறிழந்தும் கன்னிகையானவளும் எல்லாம் பெற்றாளாயும்
தத்துக்கொண்டாள் என்பர்நின்றாரென்னுமவளும் நெடுங்காலமும்
நங்கைமீரென்னுமவளுக்கு நேரன்றே.

[ஆழ்வாரவதாரச் சிறப்பை நன்கு நிலைநாட்டுதற்காக ஸ்ரீக்ருஷ்ண, வ்யாஸ மாதாக்களினுடையவும் ஆழ்வாரது திருத்தாயாருடையவும் தன்மைகளைத் தெரிவித்தல்]

(ப.) 78. பெற்றும்—* திருவின்வடிவொக்குந் தேவகிபெற்ற உருவுகரிய வொளிமணிவண்ணன் * என்கிறபடியே கண்ணனைப் பிள்ளையாகப்பெற்றிருந்தும்,

**பேறிழந்தவளும்**—* திருவிலேனொன்றும் பெற்றிலேன் * என்கிறபடியே பேறிழந்தவளாகிக் கதறியழுத தேவகியும், [இதற்கு "நேரன்றே" என்பதில் அந்வயம் ]

**பெற்றும் கன்னிகையானவளும்**—"த்வீபே பதரிகாமிச்ரே பாதராயணமச்யுதம், பராசராத் ஸத்யவதீ புத்ரம் லேபே பரந்தபம்" என்கிறபடியே வியாஸனைப் பிள்ளை யாகப்பெற்று வைத்தும் அவனுலுண்டாகும் ரஸமொன்று மநுபவிக்கப் பெருதபடி "புநঃ கந்யா பவிஷ்யதி" என்ற பராசரவசனத்தாலே மீண்டும் கன்னிகைப்பருவ மடைந்தவளான மத்ஸ்யகந்தையும், [இதற்கும் "நேரன்றே" என்பதோடந்வயம்.]

**எல்லாம்பெற்ருளாயும்**—* எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்ருளே * என்று சொன்னபடியே கண்ணனுடைய பாலசேஷ்டிதம் முதலியனவெல்லாம் அநுபவிக்கப்பெற்றிருந்தும்,

**தத்துக்கொண்டாள் என்பர் நின்ருரென்னுமவளும்**—* தத்துக் கொண்டாள் கொலோ தானே பெற்ருள்கொலோ * என்றும் * இம்மாயம்வல்ல பிள்ளைநம்பீ! உன்னையென்மகனே யென்பர் நின்ருர் * என்றுஞ் சொல்லுகிறபடியே அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்களடியாகத் தானும் பிறரும் சங்கிக்கவேண்டும்படியான மாத்ருத்வத்தையுடைய யசோதையும், [ஆக க்ருஷ்ணமாதாக்களும் வ்யாஸ மாதாவுமான இம்மூவரும்.]

**நெடுங்காலமும் நங்கைமீரென்னுமவளுக்கு நேரன்றே**—"நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்றும் "நங்கைமீர் நீருமோர் பெண் பெற்று நல்கினீர் எங்ஙனே சொல்லுகேன் யான்பெற்றவேழையை" என்றும் பெருமைசொல்லிக்கொண்ட ஆழ்வார் திருத்தாயார்க்கு ஒப்பாகமாட்டார்களே. [க்ருஷ்ணமாதாக்களுள் தேவகிக்குப் பேறிழந்த குற்றம், யசோதைக்கு உள்ளபடி மாதாவாகப் பெருமையாகிற குற்றம், வ்யாஸமாதாவுக்கு உடனே கன்னிகையாகப் பெற்றமையாகிற குற்றம்—ஆக விப்படி அவரவர்களுக்கு ஒவ்வொரு கொத்தை சொல்லக்கூடியதாயிருப்பதுபோல ஆழ்வாரைப்பெற்ற தாய்க்கு ஒரு கொத்தையும் சொல்ல இடமில்லாமை காட்டப்பட்டதாயிற்று.] ... ... (78)

(தா.) 78. "திருவின்வடிவொக்குந் தேவகிபெற்ற" என்கிறபடியே க்ருஷ்ணனைப் பிள்ளையாகப் பெற்றிருக்கச் செய்தேயும் அவனுடைய பால்யரஸம் ஒன்றும் அநுபவிக்கப் பெருமையாலே "திருவிலேனொன்றும் பெற்றிலேன்" என்று பேறிழந்த வளான தேவகியும், "த்வீபே பதரிகா மிச்ரே பாதராயணமச்யுதம், பராசராத் ஸத்ய வதீ புத்ரம் லேபே பரந்தபம்" என்கிறபடியே வியாஸனைப் பிள்ளையாகப் பெற்றிருக் கச்செய்தேயும் அவனுலுள்ள ரஸமொன்றும் அநுபவிக்கப் பெருதபடி "புநঃ கந்யா பவிஷ்யதி" என்ற பராசர வசனத்தாலே மீண்டும் கன்னிகையான மத்ஸ்யகந்தை யும், "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்ருளே" என்னும்படியாக க்ருஷ்ண னுடைய பாலசேஷ்டிதம் முதலியனவெல்லாம் அநுபவிக்கப்பெற்றிருக்கச் செய்தே

யும் "தத்துக்கொண்டாள் கொலோ தானே பெற்றாள்கொலோ" என்றும் "இம் மாயம்வல்லபிள்ளை நம்பீ! உன்னை யென்மகனே என்பர் நின்றார்" என்றும் அவனு டைய அதிமாநுஷ சேஷ்டிதங்களடியாகத் தானும் பிறரும் சங்கிக்கும்படியான மாத்ருத்வத்தையுடைய யசோதையும் ஆகிய மூன்று தாய்மார்களும் "நெடுங் காலமுங் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்றும் "நங்கைமீர்! நீரும் ஓர் பெண்பெற்று நல்கினீர், எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற வேழையை" என்றுஞ் சொன்ன ஆழ்வார் திருத்தாயார்க்கு ஒப்பாகமாட்டார்களே. .... (78)

**(மூ.) 79 மீந நவநீதங்கள் கந்திக்குமிடமும் வெறிகொள்துழாய்கமழுமிடமும் தன்னிலொக்குமோ?**

**[வ்யாஸ, க்ருஷ்ண, சடகோபர் மூவருடையவும் உத்பத்தி ஸ்தல வாஸநா விசேஷங்களைக் கொண்டு மற்றையவை யிரண்டினும் ஆழ்வாரது உத்பத்திஸ்தலத்திற்குண்டான வைபவம் விலக்ஷண மென்றல்]**

(ப.) **79. மீந நவநீதங்கள் கந்திக்குமிடமும்**—மீன் வெறிநாறுகிற வ்யாஸர் பிறப்பிடமும், வெண்ணெய் முடைநாறுகிற கண்ணன் பிறப்பிடமும்,

**வெறிகொள்துழாய் கமழுமிடமும்**—* வெறிகொள்துழாய் மலர்நாறும் வினையுடை யாட்டியேன் பெற்ற * என்றும் * அன்றி மற்றோருபாயமென் இவளந்தண்டுழாய் கமழ்தல் * என்றும் அருளிச்செய்தபடியே பகவத் ஸம்பந்தத்தைக் கோட்சொல்லித் தருமதான திருத்துழாய்ப் பரிமளம் கமழப்பெற்ற ஆழ்வாரிருப்பிடமும்,

**தன்னிலொக்குமோ?**—இவை பரஸ்பரம் ஈடாகுமோ? ஆகாது. ... (79)

(தா.) **79.** மீன் வெறி நாறுகிற வ்யாஸர் பிறப்பிடமும் வெண்ணெய் முடை நாறுகிற கண்ணன் பிறப்பிடமும் "வெறிகொள்துழாய் மலர்நாறும் வினையுடை யாட்டியேன்பெற்ற" என்றும், "அன்றிமற்றோருபாயமென் இவளந்தண்டுழாய் கமழ்தல் குன்றமாமணிமாடமாளிகைக் கோலக் குழாங்கள்மல்கித், தென்திசைத் திலதம்புரை குட்டநாட்டுத் திருப்புலியூர், நின்ற மாயப்பிரான் திருவருளாம் இவள் நேர்பட்டதே" என்றும் தாமே அருளிச்செய்யுமாறு பகவத்ஸம்பந்த ப்ரகாசகமான திருத்துழாய்ப் பரிமளம் கமழப்பெற்ற ஆழ்வாரவதார ஸ்தலத்திற்கு ஈடாகுமோ? ஆகமாட்டாதென்றபடி. .... ... ... .... (79)

**(மூ.) 80. ஆற்றில் துறையில் ஊரிலுள்ள வைஷம்யம் வாசாமகோசரம்.**

**[கீழ்ச்சொன்ன மூவருடையவும் உத்பத்தி ஸ்தலங்களுக்குள்ள வைஷம்யாதிசயத்தை இன்னமும் மூதலிந்தல்]**

(ப.) **80. ஆற்றிலுள்ள வைஷம்யம், துறையிலுள்ள வைஷம்யம், ஊரிலுள்ள வைஷம்யம் வாசாமகோசரம்**—வ்யாஸருடைய பிறப்பிடமான ஆறு அசிஷ்ட பரிக்ரஹ முடைய கங்கை; துறையோ ஓடத்துறை; ஊரோ வலைச்சேரி. கண்ணன் பிறப் பிடமான ஆறு ஜன்ம சத்ருவான கம்ஸனுடைய மாளிகையின் கீழே பெருகிச் செல்லுமதாய் தமோமயமான யமுனை; துறையோ அதில் காளிய விஷ தூஷிதமான துறை; ஊரோ * அறிவொன்றுமில்லாத இடைச்சேரி. இப்படியன்றிக்கே ஆழ்வார்

திருவவதாரஸ்தல நதியானது * பவள நன்படர்க்கீழ்ச் சங்குறை பொருநல் * என்று விலக்ஷண பதார்த்தங்களுக்கு ஜன்மபூமியாகி மிகச் சிறந்ததான தாம்ரபரணி; துறையோ மிகச்சிறந்த * பொருநல் சங்கணிதுறை. ஊரோ * நல்லார் நவில் குருகூரென்று கொண்டாடப்பட்ட திருநகரி. (இப்படிப்பட்ட வைஷம்யங்களால் ஆழ்வார் பெருமை அதிசயிக்கத்தக்கதேயா மென்றபடி. ... ... (80)

(தூ.) 80 வியாஸர் பிறப்பிடம்—ஆறுதான் அசிஷ்ட பரிக்ரஹமுடைய கங்கையாய், துறை ஓடத்துறையாய், ஊர் வலேச்சேரியா யிருக்கும் கண்ணன் பிறப்பிடம்—ஆருனது க்ருஷ்ண ஜலப்ரவாஹமுடைத் தாகையாலே தமோமயமான யமுனேயாய், துறையும் அதில் காளியவிஷ தூஷிதமான துறையாய், ஊர்தானே * அறிவொன்று மில்லாத ஆய்க்குலமாயிருக்கும். இனி இவ்வாழ்வாருடைய உத்பத்தி ஸ்தலத்தை ஆராய்ந்தாலோ, ஆறு 'பவளநன்படர்க்கீழ்ச் சங்குறை பொருநல்'' என்று விலக்ஷண பதார்த்தங்களுக்கு ஜன்மபூமியாகி மிகச் சிறந்ததான தாம்ரபர்ணியாய், துறை சுத்தஸ்வபாவமாயிருக்கிற சங்குகள் வந்து சேருகிற திருச்சங்கணி துறையாய், ஊர் * நல்லார்நவில் குருகூராயிருக்கும். ஆகையாலே வ்யாஸ க்ருஷ்ணர்களினுடைய ஆறுகளையும் துறைகளையும் ஊர்களையுங்காட்டில் ஆழ்வாருடைய ஆற்றுக்கும் துறைக்கும் ஊருக்கு முள்ள வைஷம்யம் பேச்சுக்கு நிலமல்ல. ... ... ... .... .... (80)

**(மூ.) 81. தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜநிகள்போலே ப்ரஹ்மஜந்மமும் இழுக்கென்பார்க்குப் பண்டைநாளிற்பிறவி உண்ணுட்டுத்தேசிறே.**

**[ஆழ்வாருக்குண்டான சதுர்த்தவருணப் பிறப்பு அடிமைச்சுவடறிந்தவர்கட்குத் தேஜஸ்கரமென்பதை த்ருஷ்டாந்தத்தோடு மூதலித்தல்]**

(ப) 81. **தேவத்வமும் நிந்தையானவனுக்கு**—ராவணவதமானபின்பு பிரமன் முதலானோர் * பவாந் நாராயணோ தேவঃ * என்று தேவனெக் கூறிப்புகழ்ந்ததைப் பொருமல் அதைத் தனக்கு நிந்தையாக நினைத்து * ஆத்மாநம் மாநுஷம் மந்யே* என்றவனும் கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்து நின்றபோது இடையர்கள் 'தேவனே நீ?' என்று சங்கித்தது பொருமல் அதையும் தனக்கு நிந்தையாக நினைத்து * அஹம் வோ பாந்தவோ ஜாதঃ * என்றவனுமான எம்பெருமானுக்கு,

**ஒளிவரும் ஜநிகள்போலே**—* பலபிறப்பாயொளிவரும் * என்றும் * ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாநঃ * என்றும் சொல்லுகிறபடியே மீனும் ஆமையும் ஏனமும் மானிடமுமாகப் பிறக்கும் பிறவிகள் ஒளிபெற்று விளங்குமாபோலே,

**ப்ரஹ்மஜன்மமும் இழுக்கென்பார்க்கு**—''மா ஸ்ம பூதபி மே ஜன்ம சதுர்முகாத்மநா'' என்று ப்ரஹ்மாவாய்ப் பிறக்கையும் அஹங்காரஹேதுவாகையாலே ஆத்மாவுக்கு அவத்யமென்று இகழும்படி அடிமைச்சுவடு அறிந்தவர்களுக்கு,

**பண்டைநாளில் பிறவி**—திருவாய்மொழியில் * பண்டை நாளாலே * என்கிற பதிகத்தில் ''நின்கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடிவழிவந்தாட் செய்யுந்

தொண்டர்'' "நின்தீர்த்த வடிமைக் குற்றேவல் செய்து தொல்லடிமை வழிவரும் தொண்டர்' "தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமை வழிவருந் தொண்டர்'' என்றிப்படி பலகாலும் புகழ்ந்து பேசப்பட்ட கைங்கரியத்திற்கு அநுரூப மான குடிப்பிறப்பானது.

உண்ணுட்டுத் தேசிறே — * உண்ணுட்டுத் தேசன்றே ..மண்ணுட்டிலாராகி யெவ்விழிவிற்றுலும் ஆழியங்கைப் பேராயற்காளாம் பிறப்பு * என்றருளிச் செய்த படியே பரமபதத்தில் பரிக்ரஹிக்கும் அப்ராக்ருத தேஹம்போலே ஆத்மாவுக்குத் தேஜஸ்கரமாம். [உயர்ந்த ஜன்மத்தில் பிறப்பது அஹங்கார ஹேதுவாகிக் கைங்கர்ய விரோதியாகும்; தாழ்ந்த ஜன்மத்தில் பிறப்பதே ஸ்வரூபாநுரூபகைங்கர் யோசிதமாகு மென்றபடி.] ... ... ... ... (81)

(ஸூ.) 81. ராவண ஸம்ஹாரம் தலைக்கட்டின பின்பு பிரமன் முதலான தேவர்கள் வந்து="பவாந் நாராயணோதேவః'' என்று மேம்படச்சொல்லிப் போற்றி னது அஸஹ்யமாகி, "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்'' என்று தன்னைத் தயரதன் மகனாகவே சொல்லிக்கொள்ளுகையாலும், *கோவர்த்தன மென் னுங் கொற்றக்குடை யெடுத்துக் கோநிரை காத்தபின் அந்த அதிமாநுஷ சேஷ்டிதங் கண்டு ஆச்சரியப்பட்ட இடையர்கள்="பாலத்வஞ்ச அதிவீர்யஞ்ச ஜந்ம சா அஸ் மாஸு அசோபநம், சிந்த்யமாநம் அமேயாத்மந் சங்காம் க்ருஷ்ண! ப்ரயச்சதி— தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா?''—கண்ணா! நீ தேவனா? அஸுரனா? யக்ஷனா? கந்தர்வனா? சொல்லவேணும்; எங்கள் இழிகுலத் தையும் உன்றன் செயல் வன்மையையும் நோக்குமிடத்து எங்களுக்கு மிக்க அதி சங்கையாயிருக்கின்றதே யென்று சங்கித்துச் சொல்ல, அது அஸஹ்யமென்பது தோன்றச் சிறிதுபோது வாய் திறவாமலிருந்து, பின்பு "நாஹம் தேவோ ந கந்தர்வః ந யக்ஷோ ந ச தாநவః, அஹம் வோ பாந்தவோ ஜாதః நைவ சிந்த்யமதோந்யதா'' [நான் தேவனுமல்லேன், கந்தர்வனுமல்லேன், யக்ஷனுமல்லேன், அஸுரனுமல் லேன்; உங்களிலே ஒருவனேயாவேன்; வேறுவிதமாக வொன்றும் எண்ண வேண்டா] என்கையாலும் தேவர்க்குத் தேவனான தான் லோகஸம்ரக்ஷணார்த்த மாக மநுஷ்ய ஸஜாதீயனாய் அவதரித்தவளவில் தேவனாகச் சொல்லுகையும் தனக்கு நிந்தையாம்படி புரையறப்பிறக்கும் சீலவானான ஈச்வரனுக்கு * ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாநః * என்கிறபடியே கல்யாண குணங்கள் ஒளிபெற்றுவரும் தாழ்ந்த ஜன்மங்கள்போலே, ப்ரஹ்மாவாய்ப்பிறக்கையும் சேஷத்வ விரோதியான அஹங்காரத்திற்கு ஹேதுவாகையாலே ஆத்மாவுக்கு அவத்யமென்று இகழும்படி அடிமைச் சுவடு அறிந்தவர்களுக்கு * பண்டைநாளாலே * என்கிற திருவாய் மொழியில் "பல்படிகால் குடிகுடி வழிவந்தாட்செய்யும்'' என்றிது முதலாகச் சொன்னபடியே சேஷத்வத்திற்கு விரோதியான ஜந்மாதி அபிமானமின்றிக்கே கைங்கர்யாநுரூபமான குடிப்பிறப்பானது பரமபதத்தில் பகவத் கைங்கரியத்திற்குத் தகுதியாகப் பரிக்ரஹிக்கும் தேஹம்போலே சேஷவஸ்துவான ஆத்மாவுக்குத் தேஜஸ்கரமாம். ... .... .... ... (81)

(மூ.) 82. ஜனகதசரத வஸுதேவ குலங்களுக்கு மூத்தபெண்ணும் நடுவிற் பிள்ளையும் கடைக்குட்டியும் போலே இவரும்பிறந்து புகழுமாக்கமுமாக்கி அஞ்சிறையுமறுத்தார்.

[ஆழ்வாரவதாரம் பரோபகாரகமென்றல்]

(ப.) 82. ஜநக குலத்துக்கு மூத்தபெண் பிறந்து புகழாக்கினாப்போலேயும்— ஜாநகியான பிராட்டி பிறந்து * ஜநகாநாம் குலே கீர்த்தி மாஹரிஷ்யதி மே ஸுதா, ஸீதா பர்த்தாரமாஸாத்ய * என்றபடியே தான் பிறந்த குலத்துக்குக் கீர்த்தியை யுண்டாக்கினாப்போலேயும்,

தசரத குலத்துக்கு நடுவிற் பிள்ளை பிறந்து ஆக்கமாக்கினாப்போலேயும்—தசரத மன்னவனுடைய நடுவிற் பிள்ளையான பரதாழ்வான் பிறந்து * கதம் தசரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக: * என்று சொல்லி மூத்தாரிருக்க இளையார் முடி சூடக் கடவதன்றென்கிற குல மரியாதையை நடத்தினவளவேயல்லாமல் மூத்தவரான பெருமாளுடைய பிரிவில் சடை புனைந்து மரவுரியுடுத்துக் கண்ணநீர் பெருக்கி இப்படிகளாலே அக்குலத்துக்கு முன்பில்லாத ஏற்றங்களை யுண்டாக்கினாப்போலேயும், (ஆக்கமாவது—சிறப்பு.)

வஸுதேவ குலத்துக்குக் கடைக்குட்டி பிறந்து அஞ்சிறையறுத்தாப்போலேயும்— * மக்களறுவரைக் கல்லிடைமோத இழந்தவள் தன் வயிற்றில் சிக்கன வந்து பிறந்து நின்றாய் * என்கிறபடியே வஸுதேவ குலத்துக்குக் கடைக்குட்டியாகப் பிறந்த கண்ணபிரான் * தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல் * என்கிறபடியே பிறந்தவுடனே மாதாபிதாக்களின் கால்விலங்கை யறுத்தாப்போலேயும்,

(இம் மூவர் செய்த மூன்று காரியங்களையும் ஆழ்வாரொருவரே செய்தாரென்கிறது இனி.)

இவரும்பிறந்து—பிராட்டியோ! பரதனோ! கண்ணனோ வென்று சங்கிக்கவேண்டும்படியான பெருமை வாய்ந்த இவ்வாழ்வாரும் திருவவதரித்து

புகழாக்கி—* ஏற்கும் பெரும்புகழ் வண்குருகூர்ச் சடகோபன் * மலிபுகழ் வண்குருகூர்ச் சடகோபன் * என்னும்படி தாம் பிறந்த குடிக்குப் புகழையுண்டாக்கினார் ;

ஆக்கமாக்கி—* குடிக்கிடந்து ஆக்கஞ் செய்து * என்று தாமே யருளிச் செய்தபடி சேஷத்வ குல மரியாதை தப்பாதபடி நின்றவளவேயல்லாமல் எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தின் கனத்தாலே * கங்குலும் பகலும் கண்துயிலறியாது கண்ணநீர் கைகளாலிறைத்து இட்டகாலிட்ட கைகளாயிருந்து இக்குடிக்கு முன்பில்லாத ஏற்றத்தையுண்டாக்கினார்;

அஞ்சிறையுமறுத்தார்—* அமர்சுவையாயிரத்தவற்றினுளிவை பத்தும் வல்லார் அமரரோடுயர்விற்சென்று அறுவர் தம்பிறவி யஞ்சிறையே * என்கிறபடியே தம்முடைய திவ்யப்ரபந்த அப்யாஸ முகத்தாலே தம்மோடு அந்வயமுடையாருடைய ஸம்ஸாரமாகிற சிறையை யறுத்தும் போந்தார். [த்ருஷ்டாந்த பூதரான மூவர் செய்ததும் இவரொருவரே ஸ்வரூபாநுரூபமாகச் செய்கையாலே இவரது அவதாரம் பரோபகாரகமென்றதாயிற்று.] ... ... ... (82)

(தா.) 82. ஜநக குலத்திற்கு மூத்தபெண்ணான (1) பிராட்டி பிறந்து "ஜநகாநாம் குலேகீர்த்திம் ஆஹரிஷ்யதி மே ஸுதா" என்கிறபடியே தான் பிறந்த குலத்துக்குக் கீர்த்தியுண்டாக்கினாப் போலேயும், தசரத குலத்திற்கு நடுவிற் பிள்ளையான (2) பரதாழ்வான் பிறந்து 'மூத்தாரிருக்க இளையார் முடிசூடக் கடவதன்று' என்கிற குலமர்யாதையை நடத்தினவளவுமல்லாமல் மூத்தவரான பெருமாளுடைய பிரிவில் சடைபுனைந்து மரவுரியுடுத்துக் கண்ணநீராலே யுண்டான சேற்றிலே தரைக்கிடை கிடந்து குலத்துக்கு முன்பில்லாத ஏற்றங்களை யுண்டாக்கினாப்போலேயும், வஸுதேவகுலத்துக்குக் கடைக்குட்டியான (3) க்ருஷ்ணன் பிறந்து தாய் தந்தையரின் கால்விலங்கை அறுத்திட்டாப்போலவும் இவ்வாழ்வாரும் திருவவதரித்து 'மலிபுகழ் வண்குருகூர்'' என்னும்படி தாம்பிறந்தவூருக்குப் (1) புகழுண்டாக்கி, ''குடிக்கிடந்து ஆக்கஞ்செய்து'' என்று (2) சேஷத்வ குலமரியாதை தப்பாதபடி நின்றவளவே யல்லாமல் எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தின் கனத்தாலே * காணவாரா யென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து, கண்ணநீர் கைகளாலிறைத்து, இட்டகாலிட்ட கையாய்த் தரைக்கிடை கிடந்த ப்ரேம விசேஷத்தாலே இக்குடிக்கும் முன்பில்லாத ஏற்றத்தையுமுண்டாக்கி ''அறுவர் தம் பிறவியஞ் சிறையே'' என்கிறபடியே தம்முடைய திவ்யப்ரபந்த அப்யாஸ முகத்தாலே தம்மோடு அந்வயமுடையாருடைய (3) ஸம்ஸாரமாகிற சிறையையு மறுத்தார். [த்ருஷ்டாந்த பூதரான மூவர் செய்ததும் இவரொருத்தரே செய்கையாலும். இத்தனையும் ஸ்வரூபாநுகூலமாகச் செய்கையாலும் இவரது அவதாரம் மிகவும் பரோபகாரகமாயிற்றென்க.] ... ... .... ... (82)

**(மூ) 83 ஆதித்யராமதிவாகராச்யுதபாநுக்களுக்குப் போகாதவுள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல்வற்றி விகஸியாத போதிற்கமல மலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே.**

[ஆழ்வாரவதாரத்தினால் உலகுக்குண்டான நன்மைகளைப் பேசுதல்]

(ப) 83. **வகுளபூஷணபாஸ்கரோதயத்திலே** — * யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாமென்கிற ச்லோகத்திற் காணப்படுகிற உபபாதநத்தின்படியே விலக்ஷண ஸூர்யனான நம்மாழ்வாருடைய திருவவதாரத்திலே,

**ஆதித்யனுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி(ற்று)**—* கதிரவன்குணதிசைச்சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றது * என்கிறபடியே இருளைப் போக்கிக்கொண்டு உதிக்கிற ஸூர்யனுக்குத் தொலையாத அஜ்ஞாநாந்தகாரமாகிற உள்ளிருளுங்கூட * தமோ பாஹ்யம் விநச்யேத்து பாவகாதித்யஸந்நிதௌ, ஸபாஹ்யாப்யந்தரஞ்சைவ விஷ்ணுபக்தார்க்க ஸந்நிதௌ * என்றபடியே (ஆழ்வாரால்) தொலைந்திட்டது.

**ராமதிவாகரனுக்கு சோஷியாத பிறவிக் கடல்வற்றி(ற்று)**—* சரஜாலாம்சுமாந் சூரஃ கபே **ராமதிவாகரஃ**, சத்ருரக்ஷோமயம் தோயம் உபசோஷம் நயிஷ்யதி * என்கிற ஸ்ரீராமாயண வசனத்தின்படியே ராக்ஷஸக்கடலைவற்றுவிக்கத் தோன்றின ராமனாகிற திவாகரனுக்கும் வற்றாத ஸம்ஸார ஸாகரமானது * பறவையேறு பரம்புருடா ...பிறவி யென்னுங் கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால் * என்கிறபடியே (ஆழ்வாரால்) வற்றிற்று.

அச்யுதபாநுவுக்கு விகஸியாத போதிற்கமலமலர்ந்தது—* ததோகில ஜகத்பத்ம போதாய அச்யுதபாநுநா, தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்ப்பூதம் மஹாத்மநா * என்கிறபடியே அகிலஜகத்துக்களுமாகிற பத்மத்தை விகஸிக்கச் செய்யத் தோன்றின அச்யுதபாநு வென்கிற கண்ணபிரானாகிற ஸூர்யனுக்கும் விகஸியாத ஸம்ஸாரிகளின் ஹ்ருதய புண்டரீகமானது (ஆழ்வாராலே) விகஸித்ததாயிற்று. இது, * போதிற்கமலவன் னெஞ்சம் புகுந்துமென் சென்னித்திடரில் பாதவிலச்சினை வைத்தான் * என்கிற பாசுரத்தினால் ஸித்தம். நம்மாழ்வாருடைய பெருமைபேசுமிவ்விடத்திலே வேறு ஆழ்வார்களின் பாசுரங்களைக்கொண்டு பெருமை கூறலாமோ வென்று சங்கிக்கவேண்டா; மற்றையாழ்வார்கள் நம்மாழ்வார்க்கு அவயவபூதர்களேயன்றோ. (ஆக இந்த சூர்ணையால், அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி ஸம்ஸார ஸாகரத்தை சோஷிப்பித்து ஹ்ருதயபுண்டரீகத்தை விகஸிக்கச் செய்த வகுளபூஷண பாஸ்கரருடைய வைபவம் வாசாமகோசரமென்றதாயிற்று.) (83)

(தா.) 83. "யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் நாராயணோ வஸதி யத்ர ஸசங்க சக்ரः, யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராः தஸ்மை நமோ வகுளபூஷண பாஸ்கராய." என்றருளிச்செய்த நாதமுனிகள் நம்மாழ்வாரை ஒரு ஸூர்யனாக உருவகப்படுத்தினார்கள். [திருவாய்மொழி யாயிரமாகிற ஆயிரங்கிரணங்களை யுடையராய், மஹிஷீபூஷணாயுத விசிஷ்டனான நாராயணனை * கண்கள் சிவந்து பெரியவாய் * என்ற பாசுரத்தின்படியே உள்ளேயுடையராய் வேதவித்துக்களான ஸகல சிஷ்டர்களும் கேட்டபோதே தாமிருந்த தேசத்தை நோக்கி வணங்கும்படியான வைபவத்தை யுடையராய், ஆக இப்படிப்பட்ட தன்மைகளாலே ஸூர்யனாகச் சொல்லலாம்படி யிராநின்ற ஆழ்வாரைத் தொழுகின்றேனென்பது இந்த ச்லோகத்தின் கருத்து.] இந்த வகுளபூஷண பாஸ்கரன் தவிர மூன்று ஸூர்யர்கள் இவ்வுலகிலுண்டு. (1) ப்ரஸித்தனான ஸூர்யன். (2) "சரஜாலாம்சுமாந் சூரः கபே! ராமதிவாகரः, சத்ருரக்ஷோமயம் தோயம் உபசோஷம் நயிஷ்யதி." என்று ஸ்ரீராமாயணத்திற் சொன்னபடியே அம்புகளாகிற கிரணங்களை யுடையனாய்க்கொண்டு சத்ரு ராக்ஷஸ ஸமூஹமாகிற ஸமுத்ரத்தை வற்றப்பண்ணின ராமஸூர்யன். (3) ததோகில ஜகத் பத்மபோதாய அச்யுத பாநுநா, தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் மஹாத்மநா." என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திற் சொன்னபடியே ஸகலலோகமாகிற தாமரைப்பூ மலரும்படி தேவகியாகிற கீழ்த்திரையிலே ஆவிர்ப்பவித்த ஸ்ரீக்ருஷ்ண ஸூர்யன். ஆகவிப்படி ப்ரஸித்தர்களான மூன்று ஸூரியர்களுக்கு ஆகாத காரியங்கள் வகுளபூஷண பாஸ்கரன் உதயமாயினவாறே ஆயின. எங்ஙனே யென்னில்; "கதிரவன் குணதிசைச்சிகரம் வந்தணைந்தான் கனவிருளகன்றது" என்னும்படி ஸூரியன் (1) வெளியிருளை மாத்திரமே போக்கிக்கொண்டு உதிப்பன்; உள்ளிருள் அவனால் நீங்காது. ஆழ்வாராகிற ஸூர்யனாலேயே அது நீங்கப்பெற்றது. *"தமோ பாஹ்யம் விநச்யேத்து பாவகாதித்ய ஸந்நிதௌ, ஸபாஹ்யாப்யந்தரஞ் சைவ விஷ்ணுபக்தார்க்கஸந்நிதௌ, * [அக்நியாலும் ஸூர்யனாலும் வெளியிருள் மாத்திரமே தொலையும்; விஷ்ணுபக்தர்களாகிற ஸூர்யர்களாலே புறவிருள் அகவிருளாகிய எல்லாவிருளும்

தொலையும்,] என்றது காண்க. (2) ஸ்ரீராமாயணஸித்த ராமஸூர்யனானவன் சத்ரு ராக்ஷஸராகிற ஸமுத்ரத்தை வற்றப்பண்ணினவளவே யல்லது, ஸம்ஸார ஸமுத்ரத்தை வற்றப்பண்ணினபடியில்லை; * ‡ பறவையேறு பரம்புருடா நீயென்னைக் கைக்கொண்டபின், பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால் * என்கிறபடியே ஸம்ஸார ஸமுத்ரம் வற்றிற்று ஆழ்வாராகிற ஸூரியனால். (3) ஸ்ரீவிஷ்ணுபுராணஸித்த ஸ்ரீக்ருஷ்ண ஸூரியன் * அகில ஜகத் பத்மத்தை விகஸிக்கச் செய்தானத்தனையல்லது ஹ்ருதய புண்டரீகத்தை விகஸிக்கச்செய்தானென்றில்லை; * போதிற்கமலவன்னெஞ்சமும் விகஸிக்கப்பெற்றது ஆழ்வாராகிற ஸூரியனால். [இத்தால், அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி ஸம்ஸார ஸாகரத்தை சோஷிப்பித்து ஹ்ருதய புண்டரீகத்தை விகஸிக்கச்செய்த வகுளபூஷண பாஸ்கரருடைய வைபவம் வாசாமகோசரமென்றதாயிற்று.] ... (83)

**(மூ.) 84. வம்சபூமிகளையுத்தரிக்கக் கீழ்க்குலம்புக்க வராஹகோபாலரைப்போலே இவரும் நிமக்நரையுயர்த்தத் தாழவிழிந்தார்.**

**[இப்படி பரம விலக்ஷணரான ஆழ்வார் மூன்று வருணங்களுள் ஒன்றிலே அவதரியாமல் நான்காம் வருணத்தில் தாழவிழிந்ததற்கு ஹேது கூறுதல்]**

(ப.) 84. **பூமியை உத்தரிக்கக் கீழ்புக்க வராஹனைப்போலேயும்**—ஹிரண்யாக்ஷ பலத்தாலே நிலைகுலைந்து கிடந்த பூமியை உயரவெடுக்கைக்காக * பாரென்னும் மடந்தையை—கேழலாய்க் கீழ்புக்கிடந்திடும் * என்றபடியே பாதாளத்திலே தாழ விழிந்த வராஹரூபி பகவானைப் போலேயும்,

**வம்சத்தையுத்தரிக்கக் கீழ்க்குலம்புக்க கோபாலனைப்போலேயும்**—யயாதி சாபத்தாலே ராஜ்யார்ஹமல்லாதபடி இழிவாய்க்கிடந்த யதுவம்சத்தை * கோபாலோ யாதவம் வம்சம் மக்நம் அப்யுத்தரிஷ்யதி * என்கிறபடியே உத்தரிக்கைக்காக * வேண்டித் தேவரிரக்கவந்து.... அங்கோராய்க்குலம் புக்கதும் * என்றபடியே அறிவொன்றுமில்லாமைக்கு எல்லை நிலமாகக் கீழ்மைபெற்ற ஆய்க்குலத்திலே புகுந்த கோபாலனைப்போலேயும்,

**இவரும்**—உத்துங்கஸ்தாநவர்த்தியா யிருந்த இவ்வாழ்வாரும்,

**நிமக்நரையுயர்த்த**—குலந்தாங்கு மபிமானத்தாலே அதோகதியையடைந்து கிடப்பவர்களை அந்நிலை தொலைத்து * அபிமானதுங்கன் என்னுமுயர்த்தியையுடையராக்குகைக்காக,

**தாழஇழிந்தார்**—அஹங்கார ஹேதுவான வருணங்கள் அநர்த்தகரமென்று தோற்றும்படி அஃதில்லாத சதுர்த்த வருணத்தில் தாழவிறங்கினார். (அதோகதியிலே கிடக்குமவர்களை உயர்ந்த நிலத்திலுள்ளவர்கள் தாங்களுமொக்கக் குதித்துக் கீழ்ப்பட்டு எடுக்கவேண்டுமன்றோ; வராஹ கோபாலர்களின் பிறவி போலவே ஆழ்வாருடைய பிறவியுமென்க. ... .... ... (84)

‡ இது பெரியாழ்வார் ஸ்ரீஸூக்தியாகிலும் மற்ற ஆழ்வார்களெல்லாரும் நம்மாழ்வார்க்கு அவயவ பூதர்களாகையாலே நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியாகவுங் கொள்ளுதற்கிடமுண்டு. இந்த நியமம் கீழும் மேலும் பலவிடங்களுக்குமொக்கும்.

(தா.) 84. யயாதி சாபத்தாலே ராஜ்யார்ஹமல்லாதபடி இழிவாய்க்கிடந்த யதுவம்சத்தை உத்தரிக்கைக்காக ஆய்க்குலம்புக்க கோபாலனைப் போலேயும், ஹிரண்யாக்ஷ பலத்தாலே நிலைகுலைந்து கிடந்த பூமியை உத்தரிக்கைக்காகப் பாதாளத்திலே தாழவிழிந்த வராஹரூபியைப்போலேயும் இவ்வாழ்வாரும், குலந் தாங்கு மபிமானத்தாலே மூழ்கிக் கிடப்பவர்களை அந்நிலையில் நின்றும்பேதித்து *அபிமானதுங்கன் என்னு முயர்த்தியை யுடையராக்குகைக்காக அஹங்கார.ஹேது வான வருணங்கள் அநர்த்தகரமென்று தோற்றும்படி அஂதில்லாத சதுர்த்த வருணத்திலே தாழ விழிந்தார். .... ... ... (84)

(மூ.) 85. ம்லேச்சனும் பக்தனானால் சதுர்வேதிகளநுவர்த்திக்க வறிவுகொடுத்துக் குலதெய்வத்தோடொக்கப் பூஜைகொண்டு பாவநதீர்த்த ப்ரஸாதனா மென்கிற திருமுகப்படியும், விச்வாமித்ர விஷ்ணுசித்த துளஸீப்ருத்ய ரோடே உள்கலந்து தொழுகுலமானவன் நிலையார் பாடலாலே ப்ராஹ்மண வேள்விக்குறை முடித்தமையும், கீழ்மகன் தலைமகனுக்கு ஸமஸகாவாய்த் தம்பிக்கு முன்பிறந்து வேலும் வில்லுங்கொண்டு பின்பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கிளையோன்ஸத்பாவம் சொல்லும்படி ஏககுலமானமையும் தூதுமொழிந்து நடந்துவந்தவர்க ளுடைய ஸம்யக்ஸகுண ஸஹபோஜநமும், ஒருபிறவியிலே இருபிறவி யானாிருவர்க்கு தர்மஸூநு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும், ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் ஸந்தேஹியாமல் ஸஹஜ ரோடே புரோடாசமாகச்செய்த புத்ரக்ருத்யமும் புஷ்பத்யாகபோக மண்டபங்களில் பணிப்பூவு மாலவட்டமும் வீணையுங்கையுமான அந்தரங்கரை முடிமன்னவனும் வைதிகோத்தமரும் மஹாமுநியும் அநுவர்த்தித்த க்ரமமும், யாகாநுயாகோத்தர வீதிகளில் காயாந்நஸ்தல சுத்திபண்ணின வ்ருத்தாசாரமும் அறிவார்க்கிறே ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது.

[இன்னமும் ஆழ்வாரது வைபவத்துக்குறுப்பாகப் பொதுவிலே பாகவத வைபவத்தைப் பல வுதாஹரணங்களாலும் வெளியிடுதல்]

(ப.) 85. ம்லேச்சனும் பக்தனானால்—(இந்த முதல் வாக்யத்தினால் பாகவத வைபவ பரமாகவுள்ள [பகவத்வாக்யம்] எம்பெருமானுடைய நியமனமொன்று எடுத்துக்காட்டப்படுகிறது.) * மத்பக்தஜந வாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோ தநம்...பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே * என்கிற பகவத் வாக்கியத்தின்படியே, நீசஜாதீயனும் அஷ்டவிதபக்தியுக்தனானால்,

**சதுர்வேதிகள் அநுவர்த்திக்க**—* பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார் கள்! இழி குலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் தொழுமினீர் * என்று பகவத் வாக்யமாகத் திருமாலையிலருளிச் செய்தபடியே அந்த மிலேச்சனும் சதுர்வேதிக ளால் அநுவர்த்திக்கப் படலாமென்றும்,

அறிவுகொடுத்து—* தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் * என்றும் *கொடுமின் கொள்மின் * என்றும் சொன்னபடியே அந்த மிலேச்சன் சதுர்வேதிகளுக்கு ஞானோபதேசமும் செய்யலாமென்றும்,

குலதெய்வத்தோடொக்கப் பூஜை கொண்டு—* கடல் மல்லைத் தலசயனம் ஆரெண்ணும் நெஞ்சுடையார் அவரெங்கள் குலதெய்வமே * ஸச பூஜ்யோ யதா ஹ்யஹம் * என்கிறபடியே தெய்வஸமமாக அவன் பூஜிக்கப்பெறலாமென்றும்,

பாவநதீர்த்த ப்ரஸாதனும் என்கிற திருமுகப்படியும்—* தத்பாதாம்பு அதுலம் தீர்த்தம் தஸ்யோச்சிஷ்டம் ஸுபாவநம் * போனகஞ்செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே * என்கிறபடியே அவன் ஸ்ரீபாத தீர்த்தம் தந்தும் தளிகைப்ரஸாதம் தந்தும் புனிதமாக்கக் கூடியவனென்றும் இப்படி எம்பெருமான் தானே அருளிச் செய்திருக்கிறபடிகளையும், [அறிவார்க்கிறே.......தெரிவது] என்று முடிவு.

விச்வாமித்ரனோடே—* கௌஸல்யாஸுப்ரஜாராம ...உத்திஷ்ட நரசார்த்தூல * என்று இராமபிரானைத் திருப்பள்ளியுணர்த்தின விச்வாமித்ர முனிவனோடும்,

விஷ்ணுசித்தனோடே—* அரவணையாய் ஆயரேறே! அம்மமுண்ணத் துயிலெழாயே * என்று கண்ணபிரானைத் திருப்பள்ளியுணர்த்தின பெரியாழ்வாரோடும்,

துலஸீப்ருத்யனோடே—* அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே * என்று ஸ்ரீரங்கநாதனைத் திருப்பள்ளியுணர்த்தின * துளபத் தொண்டாய தொல் சீர்த் தொண்டரடிப்பொடியாழ்வாரோடும்,

உள்கலந்து—அபரராத்திரியிலே சென்றுபாடித் திருக்குறுங்குடி நம்பியைத் திருப்பள்ளியுணர்த்துகையாலே (கீழ்ச் சொன்ன மூவரோடும்) ஸாம்யம் பெற்று,

தொழுகுலமானவன்—*எம் தொழுகுலந்தாங்களே* என்கிறபடியே ஜந்மஸித்தமான நைச்சியத்தையுடையனாய் மேம்பட்டவனான நம்பாடுவான்,

நிலையார்பாடலாலே—* குறுங்குடிமேல் .. நிலையார் பாடல்பாட * என்கிறபடியே நிலைநின்ற கீர்த்தி பெற்ற பாடலாகச் சொல்லப்பட்ட கலியன் ஸூக்திபோன்ற கைசிகப்பண்ணாலே,

ப்ராஹ்மண வேள்விக்குறை முடித்தமையும்—ஸோமசர்மாவாகிற பிராமணனுக்கு யாகவைகல்ய தோஷத்தால்வந்த ப்ரஹ்மராக்ஷஸத்வத்தைப் போக்கினபடியையும்,

கீழ்மகன்—* ஏழையேதலன் கீழ்மகன் * என்கிறபடியே ஜன்மவ்ருத்த ஜ்ஞானங்களால் மிகவும் கீழ்ப்பட்டவனான குஹன்,

தலைமகனுக்கு ஸமஸகாவாய்—* வானோர் தலைமகன் * என்னப்பட்ட ஸர்வோத்க்ருஷ்டனான ஸ்ரீராமனுக்கு * ஆத்மஸமஸ் ஸகா * என்று ஆத்ம ஸமாநஸ்நேஹிதனாய்,

தம்பிக்கு முன்பிறந்து—* மாழை மான் மடநோக்கி உன் தோழி உம்பியெம்பியென்று * என்கிறபடியே இளைய பெருமாளுக்குத் தமையன் என்கிற விருதை அந்த ராமவசனத்தினாலேயே பெற்றவனாய்,

வேலும் வில்லுங்கொண்டு பின் பிறந்தாரைச் சோதித்து—(ஸ்ரீராமாயணத்தில் கூறிய படியே) ச்ருங்கிபேரபுரத்திலே பெருமாள் பள்ளிகொண்டருளாநிற்கக் கண்ணுறக்கமற்றுக் கையும் வில்லுமாய்க் காத்துக்கொண்டிருக்கிற இளைய பெருமாளையும் அதி

சங்கித்துத் தாம் ஆயுதபாணியாய்க் கொண்டு அவர்மேலே கண்ணுய் நின்று அவ ருடைய நினைவை சோதிக்கும்படி அவ்வளவு அந்தரங்கனுய்,

**தமையனுக்கு இனையோன்ஸத்பாவம் சொல்லும்படி**— * ஆசசக்ஷே அத ஸத் பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:, பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர: * என்கிறபடியே ஸ்ரீராம விரஹக்லேசத்தோடே சித்திர கூடத்திற்கு வந்த பரதாழ்வா னுகிற தமையனுக்கு (இளையோன் ஸத்பாவம் சொல்லும்படி) இளைய பெருமாள் பெருமாளிடத்தில் ப்ரேம பாரதந்த்ர்யங்களை நிருபகமாம்படியிருந்தாரென்பதைத் தான் (குஹன்) சொல்லும்படி,

**ஏககுலமானமையும்**—இக்ஷ்வாகுவம்சஸ்தர்களோடு ஒருகுலமாகப் பெற்றபடி யையும்,

**தூது மொழிந்தவனுடைய**— * முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து* என்கிற பாசுரத்தில் தூதுமொழிந்தவனுகச் சொல்லப்பெற்றுப் பிராட்டிக்குத் தூது மொழியைத் திருவடிவாயிலே சொல்லிவிட்டவனு ஸ்ரீராமன்,

**ஸம்யக்போஜநமும்**— * சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ: * என்கிறபடியே சபரிகையில் பண்ணின ஸம்யக்போஜனத்தையும்,

**தூது நடந்தவனுடைய**— * கோதில் செங்கோல் குடைமன்னரிடை நடந்த தூதா * என்கிற பாசுரத்தில் தூது நடந்தவனுகச் சொல்லப்பட்டுப் பாண்டவர்க்குத் தூதுபோன கண்ணன்,

**ஸகுணபோஜநமும்**— * விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச * என்கிறபடியே பீஷ்மத்ரோணுதிக்ருஹங்களையும் விட்டு ஸ்ரீவிதுரரிட்டப்ரஸாதத்திலே பாவநத்வ போக்யத்வங்கள் கண்டுகந்து பண்ணின ஸகுணபோஜநத்தையும், [ஸகுண போஜநமாவது—பாவநத்வ போக்யத்வங்களாகிற குணங்களோடு கூடின அன்னத் தின் போஜனம்.]

**தூது வந்தவனுடைய ஸஹபோஜநமும்**— * ஓதமாகடலைக் கடந்தேறி.. ...தூது வந்த குரங்குக்கே * என்கிற பாசுரத்தில் தூதுவந்தவனுகச் சொல்லப் பெற்ற திருவடியோடே * உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணுய ஹநுமாந் தத்துல்யம் ஸஹபோஜநம் * என்றும் * வாதமாமகன் மற்கடம் விலங்கு...கோதில்வாய்மையினுயொடுமுடனே யுண்பன் நானென்ற வொண் பொருள் * என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீராமன்செய்த ஸஹபோஜனத்தையும் [அறிவார்க்கிறே...தெரிவது.] (அனுமானோடே ராமன்செய்த ஸஹபோஜனம் என் ருவது, ராமனோடே அனுமான்செய்த ஸஹபோஜனம் என்ருவது கொள்ளக்குறை யில்லை. ஸஹபோஜநமென்ற இவ்விஷயத்தில் பெரியதொரு விசாரமுண்டு; இது எவ்விதமான போஜனம்? எப்போது செய்த போஜனம்? எந்த புராணத்தில் சொல்லப்பட்டுள்ளது? என்பதைப்பற்றின விசாரம். அது அடியேனுடைய பிற நூல்களில் விரிவாகக் காணத்தக்கது.)

**ஒரு பிறவியிலே இருபிறவியானுரிருவர்க்கு**—யதுகுலத்திலே பிறந்து இடைக் குலத்திலே வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான கண்ணனென்ன, ரிஷி புத்திரராய்ப் பிறந்து பிரம்பன் குடியிலே தஜ்ஜாதீயராய் வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான திருமழிசைப்பிரானென்ன ஆகிய இவ்விருவர்க்கும்,

**தர்மஸூநு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமையும்**—(கண்ணனுக்கு தர்மஸூநு அக்ரபூஜை கொடுத்தமை, திருமழிசையர்க்கு ஸ்வாமிகள் அக்ரபூஜை கொடுத்தமை என்று முறையே அந்வயம் காண்க.) தர்ம புத்திரர் தம்முடைய யாகத்திலே சிசுபாலாதிகளுடைய இகழ்ச்சியைப் பொருள்படுத்தாமல் கண்ணனுக்கு இடைக் குலப்பிறப்பு தோஷமன்றென்று கருதி முதல் மரியாதை செய்தபடியையும், பெரும் புலியூரடிகள் என்கிற ப்ராஹ்மணோத்தம ஸ்வாமிகள் தம்முடைய யாகத்திலே திருமழிசைப்பிரானுக்கு அக்ரபூஜை கொடுத்தபடியையும், [அறிவார்க்கிறே ....... தெரிவது.]

**ஐவரில் மூற்பட்டவர் ஸந்தேஹியாமல் செய்த புத்ர க்ருத்யம்**—பஞ்சபாண்டவர்களாகிற ஐவரில் முதல்வரான தரும புத்திரர் விதுரர்க்குச் செய்யவேண்டி நேர்ந்த ஸம்ஸ்காரத்திலே ஸந்தேஹங்கொண்டு தளும்பி நிற்கையில் அசரீரி வாக்கியமாகிற ஆகாசவாணியைக் கொண்டு ஸந்தேஹம் தீர்ந்து செய்த புத்ர க்ருத்யமான ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம்.

**நால்வரில் மூற்பட்டவர் ஸஹஜரோடே செய்த புத்ர க்ருத்யம்**—தசரத புத்ரர்கள் நால்வரில் மூத்தவரான ஸ்ரீராமபிரான் உடன் பிறந்த லக்ஷ்மணன் கூட இருக்கச் செய்தேயும் அவர்கையில் காட்டிக்கொடாமல் தானே ஜடாயுவுக்குச் செய்த புத்ர க்ருத்யம்.

**மூவரில் மூற்பட்டவர் புரோடாசமாகச் செய்த புத்ர க்ருத்யம்**—பெரியநம்பி திருக்கோட்டியூர்நம்பி பெரியதிருமலைநம்பி யென்று ஸப்ரஹ்மசாரிகளாய் ஆளவந்தார் திருவடிகளாய் உடையவர்க்கு ஆசாரியர்களாய் ப்ரஸித்தர்களான நம்பிகள் மூவரிலும் தலைவரான பெரியநம்பிகள் "புரோடாசத்தை நாய்க்கிடாதே கொள்ளும்" என்றதற்கிணங்க மாறனேரிநம்பிக்குப் புரோடாசமாக நினைத்துச்செய்த புத்ர க்ருத்யம். (ஆகிய இவற்றை அறிவார்க்கிறே . தெரிவது.)—

**புஷ்ப மண்டபத்தில்**—* சிந்து பூமகிழுந் திருவேங்கடம் * என்று ஆழ்வாரருளிச் செய்கையாலே புஷ்ப மண்டபமென்று ப்ரஸித்தமான திருமலையில்,

**பணிப்பூவுங் கையுமான அந்தரங்கரை முடிமன்னவன் அநுவர்த்தித்த க்ரமம்**—*குயவனாய்ப் பிறந்து செட்டிபானைகளைச் செய்யும்போது கையில் மிச்சப்பட்ட மண்ணைப் பூவாகத் திரித்துத் திருவேங்கடமுடையானுக்கு இட்டவனை குறும்பறுத்த நம்பியை * துளங்கு நீண்முடியரசர்தங் குரிசில் தொண்டைமன்னவன் * என்று சொல்லப்பட்ட தொண்டமான் சக்ரவர்த்தி அநுவர்த்தித்தது,

**த்யாக மண்டபத்தில்**—வரதராஜனென்கிற திருநாமத்திற்கு ஏற்றவாறு த்யாகம் செய்தருளும் பேரருளாளன் வர்த்திக்கையாலே த்யாக மண்டபமென்று பேர்பெற்ற கச்சிப்பதியில்,

**ஆலவட்டமும் கையுமான அந்தரங்கரை வைதிகோத்தமர் அநுவர்த்தித்த க்ரமம்**—திருவாலவட்டமுங் கையுமாய்ப் பேரருளாளனுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சி நம்பிகளை வைதிக சிகாமணியான உடையவர் அநுவர்த்தித்தது;

**போகமண்டபத்தில்**—* தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளி கொள்ளும் * என்கிறபடியே பெரியபெருமாள் பெரும்போகமாகப் பள்ளிகொண்

டருளுமிடமாகையாலே போகமண்டபமென்று பேர்பெற்ற திருவரங்கம் பெரிய கோயிலில்,

**வீணையுங்கையுமான அந்தரங்கரை மஹாமுநி அநுவர்த்தித்த க்ரமம்** — யாழிசை பாடிக்கொண்டு பெரியபெருமாளுக்கு அந்தரங்கராய் வர்த்தித்த திருப்பாணாழ்வாரை லோகஸாரங்க மஹாமுனிகள் அநுவர்த்தித்தது, (ஆகிய இவற்றை அறிவார்க்கிறே ...தெரிவது) —

**யாகத்தில்**—* யஜ—தேவபூஜாயாம் * என்கிற திருவாராதனத்தில்,

**காயசுத்திபண்ணின வ்ருத்தாசாரம்**—உடையவர் பிள்ளையுறங்கா வில்லிதாஸ ருடைய ஸ்பர்சத்தாலே தமக்குச் சுத்தியென்று அபிமானித்து அனுட்டித்ததொன்று;

**அநுயாகத்தில்**—அநுயாக மென்னப்படுகிற ப்ரஸாதஸ்வீகாரத்தில்,

**அந்நசுத்திபண்ணின வ்ருத்தாசாரம்** — நம்பிள்ளை பரமபாகவதோத்தமரனா பிள்ளையேறுதிருவுடையார் தாஸருடைய கரஸ்பர்சத்தாலே அந்நசுத்தி செய்து கொண்டது,

**உத்தரவீதியில்**—திருவரங்கத்தில் உத்தரவீதியில் அமைத்தருளின நூதன க்ருஹப்ரவேச காலத்தில்,

**ஸ்தலசுத்திபண்ணின வ்ருத்தாசாரம்** — அந்த க்ருஹஸ்வாமியான நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் பரமபாகவதோத்தமரான பிள்ளை வானமாமலை தாஸருடைய ஸ்ரீபாதஸஞ்சாரத்தாலே பண்ணிவைத்த ஸ்தலசுத்தி யென்கிறவனுஷ் டானம் ஆகிற இவற்றை,

**அறிவார்க்கிறே**—சாஸ்த்ர உபதேசமுகத்தாலே அறிந்துகொள்ள வல்லவர் களுக்கன்றோ,

**ஜன்மோத்கர்ஷ அபகர்ஷங்கள் தெரிவது**—இன்னஜன்மம் சிறந்தது, இன்ன ஜன்மம் தாழ்ந்தது என்று ஜன்மத்தினுடைய ஏற்றத்தாழ்வுகள் தெரியக்கூடும். (85)

(தா.) 85. "மத்பக்தஜனவாத்ஸல்யம் பூஜாயாஞ்ச அநுமோதநம், ஸ்வய மப்யர்ச்சநஞ்சைவ மதர்த்தே டம்பவர்ஜனம், மத்கதாச்ரவணே ஸக்திः ஸ்வரநேத் ராங்கவிக்ரியா, மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி, பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, ஸவிப்ரேந்த்ரோ முநிः ஸ்ரீமாந் ஸயதிஸ் ஸச பண்டிதः, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸச பூஜ்யோ யதா ஹ்யஹம்." என்று—மிலேச்ச ஜாதியிற்பிறந்தவனாயினும் அஷ்டவித பக்தியையுடையவனானல் அவனை உத்க்ருஷ்ட வருணத்தவரான சதுர்வேதிகள் அபிஜநாதி அபிமாந தூஷிதமான ஸ்வஸ்வரூபத்தின் சுத்திக்காக அநுவர்த்திக்கலாம், அவனிடத்தில் ஞானம் பெறலாம்; குலதைவதுல்யமாக அவனைப்பூஜித்து ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீக ரிக்கலாம். அவனுடைய தளிகை ப்ரஸாதம் ஸ்வீகரிக்கலாம், பரமபாவனமாம் என் றருளிச்செய்த எம்பெருமானுடைய திருமுகப் பாசுரத்தையும்;

அபர ராத்ரியிலே சென்று பாடித் திருக்குறுங்குடி நம்பியைத் திருப்பள்ளி யுணர்த்துகையாலே முன்பு இராமபிரானையும் கண்ணபிரானையும் அரங்கத்தம்மா னையும் திருப்பள்ளியுணர்த்தின விச்வாமித்ரன் பெரியாழ்வார் தொண்டரடிப்

பொடியாழ்வார் ஆகிற இவர்களோடே ஸகோத்ரியாய், அநந்யப்ரயோஜன வ்ருத்தியிலே அந்விதனாய் உள்கலந்து ஜந்மஸித்தமான நைச்சியத்தை யுடையனான நம்பாடுவான், ஸோமசர்மாவாகிற பிராமணனுடைய யாகவைகல்ய தோஷத்தால் வந்த ப்ரஹ்மராக்ஷஸத்வத்தை கைசிகப் பண்ணாலே போக்கி யாகத்தைத் தலைக்கட்டினபடியையும்;

ஜந்மவ்ருத்த ஜ்ஞானங்களால் தண்ணியரான குஹப்பெருமாள் ஸகல ப்ரகாரங்களாலும் உத்க்ருஷ்டனான சக்ரவர்த்திதிருமகனுக்கு ஸமாந ஸ்நேஹிதராய் அந்த ராமவசனத்தாலே 'இளைய பெருமாளுக்குத் தமையன்' என்ற விருதைப் பெற்றவராய், இங்ஙனம் தம்மை அங்கீகரித்தவன்றிரவு அவ்விடத்திலே பெருமாள் பள்ளிகொண்டருளாநிற்க, பரிவாலே கண்ணுறக்கமற்றுக் கையும் வில்லுமாய்க் காத்துக்கொண்டிருக்கிற இளையபெருமாளையும் அதிசங்கைபண்ணித் தாம் ஆயுதபாணியாய்க்கொண்டு அவர்மேலே கண்ணாய்நின்று அவருடைய நினைவை சோதித்து, ராம விரஹக்லேசத்தோடே சித்திரகூடத்தேறவந்த பரதாழ்வானுக்கு இளையபெருமாள் திருத்தமையனார் பக்கலில் ப்ரேமபாரதந்திரியங்களை நிருபகமாம் படியிருக்குமிருப்பைத் தான் (குஹன்) சொல்லும்படி இக்ஷ்வாகுவம்சஸ்தர்களோடு ஏககுலமான படியையும்;

* முன்னோர் தூது வானரத்தின் வாயின்மொழிந்து * என்கிறபடியே பிராட்டிக்குத் தூதுமொழியைத் திருவடிவாயிலே சொல்லிவிட்ட சக்ரவர்த்தி திருமகன் * சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ: * என்று சபரிகையில் பண்ணின ஸம்யக்போஜநத்தையும்,

"கோதில் செங்கோல் குடைமன்னரிடை நடந்த தூதா!" என்னும்படி பாண்டவர்களுக்காகத் தூதுபோன கண்ணபிரான் பீஷ்மர் த்ரோணர் முதலானாருடைய க்ருஹங்களை விட்டு * விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச * என்கிற படியே பாவநத்வ போக்யத்வங்கள் கண்டுகந்து ஸ்ரீவிதுரர் திருமாளிகையில் பண்ணின † ஸகுண போஜநத்தையும்;

* ஓதமாகடலைக்கடந்தேறி உயர்கொள்மாக் கடிகாவையிறுத்துக், காதல் மக்களுஞ் சுற்றமுங்கொன்று கடியிலங்கை மலங்கவெரித்துத் தூதுவந்த குரங்கு * என்று சொல்லப்பெற்ற திருவடி * த்ருஷ்டா ஸீதா * என்று வந்த ப்ரீதியாலே * தத்துல்யம் ஸஹபோஜநம் * என்று திருவுள்ளம்பற்றிக் * 'கோதில் வாய்மையினாயொடு முடனே யுண்பன்நா' னென்ற பெருமாளோடே பண்ணின ஸஹபோஜநத்தையும்;

யதுகுலத்திலே பிறந்து இடைக்குலத்திலே வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான க்ருஷ்ணனுக்குத் தருமபுத்திரர் தம்முடைய யாகத்திலே அக்ர பூஜை கொடுத்தபடியையும்,

ரிஷிபுத்திரராய்ப் பிறந்து பொருந்தரிடத்திலே தஜ்ஜாதீயராய் வளருகையாலே ஒரு பிறவியிலே இரு பிறவியான திருமழிசைப்பிரானுக்குப் பெரும்புலியூரடிகள் தம்முடைய யாகத்திலே அக்ரபூஜை கொடுத்தபடியையும,

† "விதுராந்நாநி புபுஜே" என்ற ச்லோகத்தில் குணவந்தி என்றதை நோக்கிய நிர்தேசமிது.

பஞ்ச பாண்டவர்களில் முதல்வரான தர்மபுத்ரர் விதுரர்க்கு ஞானப் பெருமையையும் அசரீரிவாக்கையுங் கொண்டு ஸந்தேஹியாமல் புத்ரக்ருத்யம் [சரமகைங்கர்யம்] செய்தபடியையும்,

தயரதன் புதல்வர் நால்வரில் முதல்வரான பெருமாள் ஸஹஜரான இளைய பெருமாள் கூட நிற்கச்செய்தேயும் அவர்கையில் காட்டிக்கொடாமல் தானே பெரியவுடையார்க்கு [-ஜடாயுவுக்கு]ப் புத்ரக்ருத்யம் செய்தபடியையும்,

பெரியநம்பி திருக்கோட்டியூர்நம்பி பெரியதிருமலை நம்பி யென்று ஸப்ரஹ்மசாரிகளாய் ஆளவந்தார் திருவடிகளாய் உடையவர்க்கு ஆசார்யர்களாய் ப்ரஸித்தரான நம்பிகள் மூவரிலும் ப்ரதானரான பெரியநம்பிகள் மாறனேரிநம்பிக்கு "புரோடாசத்தை நாய்க்கிடாதே கொள்ளும்" என்று ஆளவந்தாரருளிச்செய்து போனபடியே புரோடாசமாக நினைத்துப் புத்ரக்ருத்யம் செய்தபடியையும்,

சிந்துபூமகிழுந் திருவேங்கடமாகையாலே புஷ்பமண்டபமான திருமலையில் பணிப்பூவுங் கையுமாய்த் திருவுள்ளமறியப் பரிமாறுகையாலே திருவேங்கடமுடையானுக்கு அந்தரங்கரான குறும்பறுத்த நம்பியைத் தொண்டமான் சக்ரவர்த்தி அநுவர்த்தித்தபடியையும்,

*வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வபூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிறபடியே த்யாகமண்டபமான பெருமாள்கோயிலில் திருவாலவட்டமுங் கையுமாய்ப் பேரருளாளனுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதிக சிகாமணியான உடையவர் அநுவர்த்தித்தபடியையும்,

* தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும் என்கிறபடியே போகமண்டபமான கோயிலில் வீணையுங் கையுமாய்ப் பெரியபெருமாளுக்கு அந்தரங்கராய் வர்த்தித்த திருப்பாணாழ்வாரை லோகஸாரங்க மஹாமுனிகள் அநுவர்த்தித்தபடியையும்,

*யஜ—தேவபூஜாயாம் என்கிற தாதுவின்படியே யாகமென்னப்படுகிற திருவாராதநத்தில் பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய ஸ்பர்சத்தாலே காயசுத்திபண்ணின உடையவரும், அநுயாக சப்தவாச்யமான ப்ரஸாத ஸ்வீகாரத்தில் பிள்ளையேறு திருவுடையார்தாஸருடைய கரஸ்பர்சத்தாலே அந்நசுத்திபண்ணின நம்பிள்ளையும், உத்தரவீதி குடிபுகுகிறபோது பிள்ளைவானமாமலைதாஸருடைய ஸஞ்சரணத்தாலே ஸ்தலசுத்தி பண்ணின நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டருமாகிற ஞானவ்ருத்தர்களினுடைய ஆசாரக்ரமத்தையும் அறியவல்லவர்களுக்கன்றோ 'இன்ன ஜன்மம் உத்க்ருஷ்டம், இன்ன ஜன்மம் அபக்ருஷ்டம்' என்று ஜன்மத்தினுடைய ஏற்றத்தாழ்வுகள் தெரியக்கூடும். .... ... .... ... (85)

**(மூ.) 86. அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரம வித்யா வ்ருத்தங்களை சுர்த்தப ஜந்மம் ச்வபசாதமம் சில்ப நைபுணம் பஸ்மாஹுதி சவவிதவாலங்காரமென்று கழிப்பர்கள்.**

**[பகவத்விஷய ஸ்பர்சமற்ற வர்ணாச்ரமங்களும் ஜ்ஞாந வ்ருத்தங்களும் ஹேயம் என்றல்]**

(ப.) 86. அஜ்ஞர்—ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகமென்று அறியகில்லாதவர்கள்,

**ப்ரமித்கிற**—ஸாமாந்ய லௌகிகப்ரக்ரியையாலே உத்க்ருஷ்டமென்று ப்ரமிக்கப் பெற்ற,

**வர்ண ஆச்ரம வித்யா வ்ருத்தங்களை**—ஜாதி ஆச்ரமம் ஒழுக்கம் ஆகிய இவைகளை,

**கர்த்தபஜன்மமித்யாதி**—(வர்ணத்தை கர்த்தபஜந்மமென்றும் ஆச்ரமத்தை ச்வபசாதமமென்றும் வித்யையை சில்பநைபுணமென்றும் வ்ருத்தத்தை பஸ்மா ஹுதியென்றும் இவையித்தனையையும் சவாலங்காரம் விதவாலங்காரம் என்றும் கழிப்பர்கள் என்று யோஜிப்பது.)

**கர்த்தபஜந்மம்**—* சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் ந விந்ததி, வேத பாரபராக்ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மணகர்த்தப: * நான்கு வேதங்களையும் அதிகரித்து வைத்தே வேதவிழுப்பொருளாகிய எம்பெருமானை யறியாதவன் குங்குமஞ்சுமந்த கழுதைபோலே தான் சுமந்துகொண்டிருக்கிற வேதத்தின் மணமறியாதவனென்றது.

**ச்வபசாதமம்**— ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணு பக்தி விஹீநஸ் து யதிச் ச ச்வபசாதம: * உத்தமாச்ரமியானாலும் எம்பெருமானிடத் தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் கீழ்ப்பட்டவனென்றது

**சில்பநைபுணம்**— * தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம் * மோக்ஷார்த்தமாக உபயோகப் படும் வித்யையே வித்யையாகும்; அப்படி யல்லாதது செருப்புக்குத் தக்கற்ற கல்வி போன்றதேயாகும் என்றது.

**பஸ்மாஹுதீ**—* ஆம்நாயாப்யஸநாநி * என்கிற முகுந்தமாலா ச்லோகத்தில் "விநா யத்பதத்வந்த்வாம்போருஹ ஸம்ஸ்ம்ருதீ;—ஸர்வே ஹுதம் பஸ்மநி" என்று எம்பெருமானுடைய சிந்தனையில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டாநம் சாம்பலி லிட்ட ஆஹுதிபோலே ப்ரயோஜநமற்றது என்றது.

**சவவிதவாலங்காரம்**—* யஸ்யாகிலாமீவஹபிஸ் ஸுமங்களைர் வாசோ விமிச்ரா குணகர்ம ஜந்மபி:, ப்ராணந்தி சும்பந்தி புநந்தி வை ஜகத் யாஸ் தத்வியுக்தாச் சவசோபநா மதா: * விஷ்ணுபக்தி விஹீநஸ்ய வேதச் சாஸ்த்ரம், ஜபஸ் தப:, அப்ராணஸ்யேவ தேஹஸ்ய மண்டநம் லோகரஞ்ஜநம் * பகவத் விஷயத்தில் அந்வயம் பெறுத உக்திகளும் பகவத் பக்தியில்லாதவனுடைய அறிவும் நடத்தை யும் பிணக்கோலஞ் செய்வதொக்கு மென்றது *ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா: ஜாத்யா வ்ருத்தைரபி ச குணதஸ் தாத்ருசோ நாத்ர கர்ஹா, கிந்து ஸ்ரீமத், புவந பவநத்ராணத:, அந்யேஷு வித்யாவ்ருத்தப்ராயோ பவதி விதவாகல்பகல்ப: ப்ரகர்ஷ: * பகவத் விஷயத்தில் அந்வயமற்றவர்களுடைய கல்வி யொழுக்கச் சிறப்புகள் பகவத் ஸம்பந்த ஜ்ஞானமாகிற ஸுமங்கலி லக்ஷணமில் லாமைபற்றி விதவாலங்கார துல்ய மென்றது.

**என்று கழிப்பர்கள்**—ஆக இங்ஙனே காட்டப்பட்ட ப்ரமாணவசனங்களின்படி ஞானிகள் இகழ்வார்கள். [ஆக இப்படி பகவத் விஷய ஸம்பந்தமற்ற வர்ணாச்ர மங்களும் ஞான வொழுக்கங்களும் ஹேயமென்கையாலே கீழே தாழ்ந்த ஜன்ம மாகக் கருதப்பட்ட ஜன்மம் இன்னதென்று நிருபிக்கப்பட்டதாயிற்று.] ... (86)

(தா.) 86. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தலே ஆத்மாவுக்கு நிரூபகமென்று நிஷ்கர்ஷித்து அதற்குத் தகுதியாக த்யாஜ்ய உபாதேயங்களைப் பகுத்துணரத்தக்க ஞானமில்லாதவர்கள், எம்பெருமானது ஸம்பந்தமின்மையாலே நிக்ருஷ்டங்களாயிருக்கிற வர்ண, ஆச்ரம, வித்யா, வ்ருத்தங்களை உத்தமவர்ணமென்றும், உத்தமாச்ரமமென்றும், ஸத்வித்யையென்றும், ஸத்வ்ருத்தமென்றும் உத்க்ருஷ்டமாக ப்ரமித்திருப்பர்கள்; ஆனால் அவற்றை ஞானிகள் இகழ்வர்கள்: எங்ஙனே யென்னில்;—* சதுர்வேததரோ விப்ரோ வாஸுதேவம் நவிந்ததி, வேதபாரபராக்ராந்தஸ் ஸவை ப்ராஹ்மண கர்த்தப: * என்று நான்கு வேதங்களையும் அதிகரித்து வைத்தே வேத விழுப்பொருளாகிய எம்பெருமானை அறியாதவன் குங்குமஞ்சுமந்த கழுதைபோலே தான் சுமந்துகொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமாணக் கழுதையென்றும்,

* ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்திவிஹீநஸ் து யதிச்ச ச்வபசாதம: * என்று உத்தமாச்ரமியானாலும் எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவன் சண்டாளனிற் காட்டிலும் கீழ்ப்பட்டவனென்றும்,

* தத் கர்ம யந் ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே, ஆயாஸாய அபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம் * என்று மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும், அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்விபோன்றதேயாகும் என்றும்,

* ஆம்நாயாப்யஸநாநி அரண்ய ருதிதம் வேதவ்ரதாந்யந்வஹம் மேதச்சேத பலாநி பூர்த்த விதயஸ் ஸர்வே ஹுதம் பஸ்மநி, தீர்த்தாநாமவகாஹநாநி ச கஜஸ்நாநம் விநா யத்பதத்வந்த் வாம்போருஹ ஸம்ஸ்ம்ருதீர் விஜயதே தேவஸ் ஸ நாராயண: * (முகுந்தமாலை) என்று எம்பெருமானுடைய சிந்தனையில்லாதவர்கள் செய்கின்ற கர்மாநுஷ்டானம் சாம்பலிலிட்ட ஆஹுதிபோலே பிரயோஜநமற்றது என்றும்,

* யஸ்யாகிலாமீவஹபிஸ் ஸுமங்கலை: வாசோ விமிச்ரா குணகர்ம ஜந்மபி:, ப்ராணந்தி சும்பந்தி புநந்தி வை ஜகத் யாஸ் தத்வியுக்தாச் சவசோபநா மதா: * — *விஷ்ணுபக்திவிஹீநஸ்ய வேதச் சாஸ்த்ரம் ஜபஸ் தப:, அப்ராணஸ்யேவ தேஹஸ்ய மண்டநம் லோகரஞ்ஜநம் * என்று பகவத்விஷயத்தில் அந்வயம் பெறாத உக்திகளும் பகவத்பக்தி யில்லாதவனுடைய அறிவு நடத்தையும் பிணக்கோலம் செய்வதொக்குமென்றும்,

*ப்ராதுர்ப்பாவைஸ் ஸுரநரஸமோ தேவதேவஸ் ததீயா ஜாத்யா வ்ருத்தைரபி ச குணதஸ் தாத்ருசோ நாத்ர கர்ஹா, கிந்து ஸ்ரீமத் புவநபவநத்ராணத:, அந்யேஷு வித்யாவ்ருத்த ப்ராயோ பவதி விதவாகல்பகல்ப: ப்ரகர்ஷ: * என்று பகவத்விஷயத்தில் அந்வயமற்றவர்களுடைய கல்வியொழுக்கச் சிறப்புகள் பகவத்ஸம்பந்த ஜ்ஞானமாகிற ஸுமங்கலி லக்ஷண மில்லாமைபற்றி விதவாலங்கார துல்யமென்றும் ஞானிகள் இகழ்வர்கள்.—ஆக இப்படி பகவத்விஷய ஸம்பந்தமற்ற வர்ணாச்ரமங்களும் ஞான வொழுக்கங்களும் ஹேயமென்கையாலே கீழே தாழ்ந்த ஜன்மமாகக் கருதப்பட்ட ஜன்மம் இன்னதென்று நிரூபிக்கப்பட்டதாயிற்று. (86)

முதல் பிரகரணம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீः
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# இரண்டாம் பிரகரணம்

(மூ.) 87. அணைய வூரப் புனைய அடியும் பொடியும்படப் பர்வதபவநங்களிலே ஏதேனுமாக ஜநிக்கப் பெறுகிற திர்யக் ஸ்தாவர ஜந்மங்களைப் பெருமக்களும் பெரியோரும் பரிக்ரஹித்து ப்ரார்த்திப்பர்கள்.

[ஆத்மாவுக்கு நிரூபகமான சேஷத்வத்திற்குப் பாங்கான பிறவியே உத்க்ருஷ்ட ஜன்மமென்பதை விளக்குதல்]

(ப.) 87. அணையப்பெறுகிற திர்யக்ஜன்மத்தை—* அணைவ தரவணைமேல் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே திருமால் கண்வளர்ந்தருளுகைக்குப் பாங்காய் அணையப்பெறுகிற திருவனந்தாழ்வானுகிற திர்யக் ஜன்மத்தையும்,

ஊரப்பெறுகிற திர்யக் ஜன்மத்தை — * ஊரும்புட்கொடியுமஃதே * என்கிற படியே திருமால் பலகாலும் மேற்கொண்டு நடத்துகைக்குப் பாங்காய் வாஹனமாகப் பெறுகிற கருத்மானுகிற திர்யக் ஜன்மத்தையும்,

புனையப்பெறுகிற ஸ்தாவர ஜன்மத்தை—* தோளிணைமேலும் நன்மார்பின் மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் * என்கிற படியே அவன் ஆதரித்துச் சாத்துகைக்குப் பாங்கான திருத்துழாயாகப் பெறுகிற ஸ்தாவர ஜன்மத்தையும்,

பெருமக்கள் பரிக்ரஹித்தார்கள்—* பெருமக்களுள்ளவர் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே எப்போதும் ஸத்தை பெற்றிருக்கிற மஹாத்மாக்களான நித்ய ஸூரிகள் பகவத் கைங்கரியத்தில் ருசியாலே பரிக்ரஹித்தார்கள்;

அடிபடப்பெறுகிற ஸ்தாவரஜன்மத்தை—* பத்யுः ப்ரஜாநாமைச்வர்யம் பசூநாம் வா ந காமயே, அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநாதடே * [ப்ரஜாபதி பசுபதிகளின் ஐச்வர்யத்தையும் வேண்டேன்; யமுனைக்கரையில் அவன் திருவடிகளால் மிதித்தேறின கடம்ப மரமாகவோ குருந்தமரமாகவோ பிறக்கப்பெறவேணும்] என்று இப்படிப்பட்ட பிறப்பையும்,

பொடிபடப் பெறுகிற ஸ்தாவர ஜன்மத்தை — * ஆஸாமஹோ சரணரேணு ஜுஷாம் அஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்ம லதௌஷதீநாம் * [கண்ணன் போனவழியைப் பின் தொடர்ந்த ஆய்ச்சிகளின் பாதரேணுபடப்பெற்ற ப்ருந்தாவனத்திலிருக்கும் சிறுசெடிகள் கொடிகள் ஓஷதிகளில் ஏதேனுமொன்றாகப் பிறக்க வேணும்] என்று இப்படிப்பட்ட பிறப்பையும்,

பர்வதத்திலே ஏதேனுமாகப்பெறுகிற திர்யக்ஸ்தாவர ஜன்மங்களை—* வேங்கடத்துக் கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே * மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே * செண்பகமாய் நிற்குந் திருவுடையேனாவேனே * தம்பகமாய் நிற்குந் தவமுடையேனாவேனே * எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே *

என்று திருவேங்கட மலையோடு ஸம்பந்தமுடைய திர்யக் ஸ்தாவர ஜன்மங்களில் ஏதேனுமொன்றாகப் பெறவேணுமென்று இப்படிப்பட்ட பிறப்பையும்,

**பவனங்களிலே ஜனிக்கப்பெறுகிற திர்யக்ஜன்மத்தை—** * தவ தாஸ்யஸுகைக ஸங்கிநாம் பவநேஷு அஸ்த்வபி கீடஜந்ம மே * [பகவானே! உன்னுடைய அடிமைச் சுவடுதன்னில் ஊன்றின ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகைகளில் உத்பத்தி விநாசங்களிரண்டும் அங்கேயாம்படியான கீடஜன்மமே எனக்குண்டாகவேணும்] என்று இப்படிப்பட்ட பிறப்பையும்,

**பெரியோர் ப்ரார்த்திப்பர்கள்—** * பேராளன்பேரோதும் பெரியோர் * என்று திருமங்கையாழ்வாரால் புகழப்பட்ட பெரியோரான ஸ்ரீசுகமுனிவர் உத்தவர் குலசேகரப்பெருமாள் ஆளவந்தார் முதலான முமுக்ஷுக்கள் ப்ரார்த்தித்தார்கள். [இத்தால் பிறப்புகளில் ஒரு ஏற்றத்தாழ்வு இல்லை; அடிமைக்குப் பாங்கான ஜன்மமே சிறந்தது என்றதாயிற்று. ... ... ... ... (87)

(மூ) 8.. நித்ய விபூதியிலே எம்பெருமான் கண்வளர்ந்தருளுகைக்குப் பாங்காயிருக்கும் அரவணையாயும், அவன் பலகாலும் மேற்கொண்டு நடத்துகைக்கு வாஹநமான கருத்மானையும் அவன் ஆதரித்துச் சாத்துகைக்கு உரிய திருத்துழாயாயும் இரா நின்றுள்ள திர்யக் ஸ்தாவர ஜன்மங்களை மஹாத்மாக்களான நித்ய ஸூரிகள் பகவத்கைங்கர்ய விருப்பத்தினால் பரிக்ரஹித்தார்கள். யமுனைக்கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதித்தேறின கடம்பமரமாகவாதல் குருந்தமரமாக வாதல் (1) ஆகவேணுமென்றும், ப்ருந்தாவனத்தில் கண்ணபிரான் போனவழியைப் பின்தொடர்ந்த பெண்களினுடைய பாததூளியை வஹியா நின்றுள்ள சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகளில் ஏதேனுமொன்றாக (2) ஆகவேணுமென்றும், * கோனேரிவாழுங் குருகாய்ப்பிறப்பேனே * திருவேங்கடச்சுனையில் மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே * வேங்கடத்துச் செண்பகமாய்நிற்குந் திருவுடையேனாவேனே * வேங்கடமலைமேல் தம்பகமாய் நிற்குந் தவமுடையேனாவேனே * * வேங்கடத்துள் அன்னனைய பொற் குவடா மருந்தவத்தனாவேனே * திருவேங்

(1) * பத்யுః ப்ரஜாநாமைச்வர்யம் பசூநாம் வா ந காமயே, அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநாதடே * என்று ஸ்ரீபாகவதத்திலுள்ளது. இதன் பொருள் :—நான் பிரமனுடைய செல்வத்தையாவது சிவனுடைய செல்வத்தையாவது வேண்டுகின்றிலேன்; யமுனைக்கரையில் (கண்ணபிரான் மிதித்தேறின—திருவடிபடப்பெற்ற) கடம்பமரமாகவாவது குருந்தமரமாகவாவது பிறக்கப்பெறுவேனாகவேணும் என்பதாம்.

(2) * ஆஸாமஹோ சரணரேணுஜுஷாம் அஹம் ஸ்யாம் ப்ருந்தாவநே கிமபி குல்மலதௌஷதீநாம், யாః துஸ்த்யஜம் ஸ்வஜநமார்யஜநஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம் * என்று ஸ்ரீபாகவதத்திலுள்ளது, இதன்பொருள் :—வேதங்களும் தேடவேண்டும்படியான கண்ணன் போனவழியை ஸ்வஜநாதிகளையும் அதிக்ரமித்து யாவர் சில பெண்கள் பின்தொடர்ந்தார்களோ அவர்களுடைய பாததூளி படப்பெற்ற—ப்ருந்தாவனத்திலுள்ள—சிறுசெடிகள் கொடிகள் ஓஷதிகளுள் ஏதேனுமொன்றாகப் பிறக்கப்பெற வேணுமென்கை.

கடமலைமேல் கானாருய்ப் பாயுங் கருத்துடையேனாவேனே * திருவேங்கடமலைமேல் நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே * படியாய்க்கிடந்து உன் பவள வாய் காண்பேனே * திருவேங்கடமென்னு மெம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே * என்று திருமலையோடு ஸம்பந்தமுடைய திர்யக் ஸ்தாவரஜன்மங்களில் ஏதேனுமொன்றாக வேணுமென்றும், ஸ்ரீவைஷ்ணவருடைய திருமாளிகைகளிலே (3) கீட ஜந்மமாகிலுமெனக்கு உண்டாகவேணுமென்றும் ஸ்ரீசுகபரஹ்மர்ஷி, குலசேகரப்பெருமாள், ஆளவந்தார் முதலான முமுக்ஷுக்கள் ப்ரார்த்தித்தார்கள்.

[திர்யக் ஸ்தாவர ஜன்மங்களை வாசிகமும் காயிகமுமான பாபங்களின் பலனாக சாஸ்திரம் சொல்லாநின்றபோதிலும் இந்த ஜன்மங்களை நித்யஸூரிகள் பகவத்விநியோகார்ஹமாக ஸ்வேச்சையாலே ஏறிட்டுக்கொள்ளுவர்களென்றும், அடிமைச்சுவடு அறிந்தவர்களான முமுக்ஷுக்கள் பகவத்பாகவத ஸம்பந்தமுள்ள திர்யக் ஸ்தாவர ஜன்மங்களை ப்ரார்த்திப்பர்களென்றுஞ் சொல்லுகையாலே அடிமைக்கு உரிய பிறவியே சீரியதென்றதாயிற்று. ... (87)

(மூ.) 88. சேஷத்வ பஹிர்ப்பூத ஜ்ஞாநாநந்தமயனையும் ஸஹியாதார் த்யாஜ்யோபாதியை ஆதரியார்களே.

[சாஸ்திரங்களில் சிறந்த ஜன்மமாகச் சொல்லப்பட்டுள்ள வருணத்தை இழித்துரைப்பதற்குக் காரணமுரைத்தல்]

(ப) 88. சேஷத்வ பஹிர்ப்பூத ஜ்ஞாநாநந்த மயனையும் ஸஹியாதார்—* ந தேஹம் ந ப்ராணம் ந ச ஸுகமசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வ விபவாத், பஹிர்ப்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே யாது சததா விநாசம்* என்று—தேவரீருடைய சேஷத்வத்திற்குப் புறம்பான தேஹமோ ப்ராணனோ ஸுகமோ எதையும் க்ஷணகாலமும் ஸஹித்திருக்கமாட்டேன்; அவ்வளவன்றியே ஜ்ஞாநாநந்தமயமான ஆத்மவஸ்துவையும் ஸஹிக்கமாட்டேன் என்று சொல்லி சேஷத்வத்திலே இவ்வளவு ஊற்றத்தைக் காட்டுமவர்கள்,

த்யாஜ்யோபாதியை ஆதரியார்களே—சேஷத்வத்திற்கு விரோதியான அஹங்காரத்திற்கு ஹேதுவாகையாலே த்யாஜ்யமாய், கர்ம நிபந்தனமாகையாலே ஔபாதிகமாயிருக்கிற வருணத்தை ஒரு பொருளாக மதியார்களன்றோ [இத்தால், ஜாதிக்குத் தனியே ஓரேற்றம் கிடையாதென்றதாயிற்று.] ... .. (88)

(தா.) 88. முமுக்ஷுக்களாயுள்ளவர்கள் பகவத் பாகவத சேஷத்வத்தில் விருப்பத்தினால் திர்யக் ஸ்தாவர ஜன்மங்களைப் பிரார்த்தித்தார்களாகிலும், உத்க்ருஷ்டமாக சாஸ்த்ரஸித்தமான வருணத்தை இப்படி கழிப்பானேன்? என்னில்; ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்நத்தில் * ந தேஹம் ந ப்ராணம் ந ச ஸுகம் அசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வவிபவாத் பஹிர்ப்பூதம்

(3) * தவ தாஸ்யஸுகைகஸங்கிநாம் பவநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே, இதராவஸதேஷு மாஸ்ம பூத் அபி மே ஜந்ம சதுர்முகாத்மநா * என்கிற ஆளவந்தார் ஸ்தோத்ரரத்ந திவ்யஸூக்தி இங்கு விவக்ஷிதம். [இதற்கு அடியேனது உரையைக் கடாக்ஷிப்பது.]

நாத! க்ஷணமபி ஸஹே யாது சததா விநாசம் தத் ஸத்யம் மதுமதந! விஜ்ஞாபந மிதம் * என்றருளிச்செய்திருக்கிருர். (இதன் கருத்தாவது—) எம்பெருமானே! திருமுன்பே ஸத்யமாக ஒரு விண்ணப்பஞ்செய்கிறேன், கேட்டருளவேணும்; அஃது என்னென்னில்; "சரீரமாத்யம்கலு தர்மஸாதநம்" என்கிறபடியே தர்மாநுஷ்டானங்களுக்கு முதல் ஸாதனமான சரீரமும் அதற்குத் தாரகங்களான பிராணன்களும், பிராணிகளெல்லாரும் மிகவிரும்பும் ஸுகமும், இவை யெல்லாவற்றிற்கும் ஆச்ரயமாக நிற்கும் ஆத்மாவும், மற்றும் புத்ர மித்ர களத்ராதிகள் எதுவாகிலும் உன்னுடைய சேஷத்வத்திற்கு உபயுக்தமாகில் வேண்டும்; அதற்குப் புறம்பாகில் வேண்டா; இவையெல்லாம் உருமாய்ந்து ஒழியட்டும். இது கழுத்துக்கு மேலே சொல்லுகிற வார்த்தையன்று; அடிவயிற்றிலிருந்து ஸத்யமாகச் சொல்லுகிற வார்த்தை, இது பொய்சொன்னதாகில், உன்னிடத்தில் மது என்னும் அசுரன் பட்டபாடு படுவேனத்தனை—என்பதாம். இதனுல் சேஷத்வத்துக்குப் புறம்பான போது * ஜ்ஞாநாநந்தமயஸ் த்வாத்மா * என்று ஜ்ஞாநாநந்தமயத்வத்தாலே சிறப்புற்றிருக்கின்ற ஆத்மாவையும் ஸஹிக்கமாட்டாமை விளங்குகின்றது. இப்படி ஆத்மாவையே ஸஹியாதவர்கள், சேஷத்வத்திற்கு விரோதியான அஹங்காரத்திற்கு ஹேதுவாகையாலே த்யாஜ்யமாயும் கர்மநிபந்தனமாகையாலே ஔபாதிகமாயுமிருக்கின்ற வருணத்தை எங்ஙனே ஆதரிப்பர்கள்? ஆதரிக்கவேமாட்டார்கள்.

(மூ) 89. இதின் ஔபாதிகத்வம் ஒருராஜா தன்னை மறைமுனிவனுக்கினவன் நீசனுக்குவித்த ராஜாவை வாரே உறுப்பாக யஜிப்பித்து ஸ்வர்க்க மேற்றினபோதே தெரியும்.

[வருணம் ஔபாதிகமென்று கீழ்ச்சொன்னதை உதாஹரணமுகத்தாலே தெளிவித்தல்]

(ப.) 89. இதின் ஔபாதிகத்வம்—வர்ணம் ஔபாதிகமென்கிற விஷயம்.

ஒரு ராஜா—ராஜாவாய்ப்பிறந்த விச்வாமித்ரனென்பானெருவன்.

தன்னை மறைமுனிவனுக்கினவன் நீசனுக்குவித்த — ப்ரஹ்மரிஷியாகவேண்டி நெடுங்காலம் தபஸ்ஸு பண்ணின தன்னை * மந்திரங்கொள் மறைமுனிவன் * என்று குலசேகராழ்வாரருளிச்செய்யும்படி ப்ரஹ்மரிஷியாக்கின சக்திமானுன வஸிஷ்டன் தன் வார்த்தை கேளாமல் தன்னை அவமதித்ததற்காகத் தன் புத்திரர்கள் கொடுத்த சாபத்தினுல் மார்விலிட்ட யஜ்ஞோபவீதமே வாராம்படி சண்டாளனுகச் செய்வித்த,

ராஜாவை—இக்ஷ்வாகுவம்ச்யனுயிருந்துள்ள த்ரிசங்குவாகிற ராஜாவை,

வாரே உறுப்பாக யஜிப்பித்து—அந்த வார்தானே யஜ்ஞாங்கமான உறுப்புத் தோலாகக் கொண்டு தன் தவவலிமையினுல் யாகம் செய்வித்து,

ஸ்வர்க்கம் ஏற்றினபோதே தெரியும்—ஸசரீரஸ்வர்க்காரோஹணம் பண்ணுவித்த போதே ஸ்பஷ்டமன்ரே. [இத்தால், ஒரு க்ஷத்ரியன் ஸுக்ருத விசேஷத்தாலே அந்த சரீரத்திலேயே ப்ரஹ்மர்ஷியாவது, மற்றொரு க்ஷத்ரியன் துஷ்க்ருத விசேஷத்தாலே அந்த சரீரத்திலேயே சண்டாளனுவது, க்ஷத்ரியத்வம் கழிந்து ப்ரஹ்மர்ஷியானவன் அப்படி ப்ரஹ்மர்ஷியாவதற்கு முன்பே, க்ஷத்ரிய வேஷங்கழிந்து சண்டாள

வேஷமாய் நிற்கிறவனை அந்த வேஷத்தோடேயே யாகஞ்செய்வித்து ஸ்வர்க்க மேற்றுவது—ஆக இப்படிப்பட்ட கதைகளினுல் வர்ணம் கர்மோபாதிகமென்பது யாவர்க்கும் அறிய வெளிது என்றதாயிற்று.] .... ... (89)

(தா.) 89. வருணம் ஔபாதிகமென்பது எங்ஙனே தெரிந்ததென்னில்; ஸ்ரீராமாயணத்தில் த்ரிசங்குவின் உபாக்கியானம் ஸ்பஷ்டமாகவுள்ளதன்றோ? அதாவது, த்ரிசங்கு என்னும் ஸூர்யவம்சத்து மன்னன் தனது குலகுருவாகிய வஸிஷ்டமஹாமுநியை வரவழைத்து 'இந்த வுடலோடு யான் ஸ்வர்க்கலோகம் செல்லுமாறு அருள்புரிய வேணும்' என்று வேண்ட, வசிட்டன் அங்ஙனஞ் செல்லுதல் இயலாதென்று மறுத்துக்கூற, த்ரிசங்கு குருபுத்திரர்களைச் சார்ந்து வஸிஷ்டர் நிராகரித்ததைச் சொல்லித் தன் கருத்தை நிறைவேற்றுவிக்குமாறு வேண்ட, அவர்களும் கடிந்துகூற, த்ரிசங்கு 'என் குருவும் எனது குருபுத்திரர்களாகிய நீங்களும் என்கருத்தை முற்றுவிக்க முடியாதென்று நிராகரித்ததனுல் என் கருத்தை நிறைவேற்றுவிக்கவல்ல வேறொரு குருவைத் தேடிக்கொள்ளுகிறேன்' என்ன' வஸிஷ்ட குமாரர்கள் நூற்றுவரும் அரசனை நோக்கி 'மதிகேடனே! நீ குலகுருவை விட்டு வேறொரு புரோஹிதரை யடுக்குமாறு நினைத்தாயாதலால் சண்டாளனுகக் கடவாய்' என்று சபித்துவிட்டுப்போக, த்ரிசங்குராஜன் முன்னைய வடிவம் நீங்கிச் சண்டாள வடிவத்துடனே அயோத்திசேர, நகரத்தவர் சீசீ என்று இகழ்ந்ததனுல் நகரத்தைவிட்டுக் காடுசேர்ந்து வஸிஷ்டருக்கு விரோதியான விச்வாமித்ரமுநியை நாடி யடைய, அவரும் 'இவ்வுடலோடு சுவர்க்கஞ் சேருமாறு வேட்பிப்பேன்' என்று சொல்லி அந்த யாகத்திற்கு முனிவர்களை வரவழைக்கக்கருத, விச்வாமித்ரனுடைய சிஷ்யர்கள் பல விடங்கட்குஞ் சென்று வேள்விக்கு அந்தணர்களை யழைக்க, அந்தணர் யாவரும் வர, 'தான் யாகஞ் செய்தலே யொழியச் செய்விக்கும் உரிமை யில்லாதவனுன க்ஷத்ரியன் [விச்வாமித்ரன்] சண்டாளனுக்கு யாகஞ் செய்விக்கிறது மிக நன்று; இந்த வேள்வியில் எங்ஙனம் தேவர்கள் ஹவிர்ப்பாகம் பெறுவார்கள்? சண்டாளனது அன்னத்தை எங்ஙனம் புஜிப்பார்கள்?' என்றுற்போலச் சொல்லி மஹோதயனென்ற முனிவனும் வஸிஷ்ட குமாரர்கள் நூற்றுவரும் வரமாட்டோ மென்ன; அதனை அச்சீடர்கள் விச்வாமித்திரனிடம் வந்து சொல்ல, பெருஞ்சினங் கொண்ட அம்முனிவன் 'மஹாநுபாவர்களின் தேஜோவிசேஷத்தினுல் எத்தொழிற் கும் எவ்வகைத் தீங்கும் உண்டாகாது' என்ற நியாயத்தை மறந்து என்னை இகழ்ந் ததனுல் வஸிஷ்ட குமாரர்கள் முஷ்டிகரென்னும் ஈனசாதியராகி உலகத்தில் வெகு காலம் உழலுமாறும், மஹோதயன் வேடனுகி யுழலுமாறும் சாபம் கொடுத்துவிட்டுத் தான் அத்வர்யுவாகநின்று யாகஞ்செய்யத் தொடங்கி ஹவிஸ்ஸைப் பெறுமாறு தேவர்களை மந்திரஞ்சொல்லி வெகு நேரமாக அழைத்தும் ஹவிர்ப்பாகத்தைப் பெறு மாறு தேவர்கள் வராமையால் முனிவன் பெருஞ்சினங்கொண்டு ஹோமஞ்செய்யும் அகப்பையை உயரவெடுத்து 'யாகம் இருக்கட்டும்; என் தவத்தின் பயனுல் இச் சரீரத்துடனே சுவர்க்கஞ் செல்லுக' என்ன; முனிவர் யாவரும் பார்த்துக்கொண் டிருக்கையில் த்ரிசங்கு சுவர்க்கஞ் சேர, தேவர்களும் இந்திரனும் 'குரு சாபத்தினுல் நீசனுகிய நீ இங்கு இருக்கத் தக்கவனல்லை, தலைகீழாக விழுந்திடுக' என்ன, த்ரிசங்கு விழுகையில் கதற, அதுகேட்ட விச்வாமித்திரன் 'அங்குத்தானே நில்'

என்றுசொல்லித் தவமகிமையால் அவனை வானத்தில் தான்கண்ட இடத்தில் தானே நிறுத்தினன் என்பது வரலாறு.

இக்ஷ்வாகு வம்சத்தவனான அந்த த்ரிசங்குவாகிற அரசன், சாபத்தாலே மார்பிலிட்ட யஜ்ஞோபவீதமே வாராம்படி சண்டாளனாய் நிற்க, அந்த வார்தானே யஜ்ஞாங்கமான உறுப்புத் தோலாகக்கொண்டு விச்வாமித்திரன் தனது தபோபலத்தாலே அவனை வேட்பித்துச் சுவர்க்கமேற்றினன் என்றுள்ள இந்த வரலாற்றையும், இப்படிச் செய்வித்த விச்வாமித்திரன் முதலில் க்ஷத்ரியனாயிருந்து ப்ரஹ்மர்ஷித்வ காமனாய் நெடுங்காலம் தவம்புரிந்து வஸிஷ்ட வாக்கினாலே * மந்திரங்கொள் மறை முனிவன் * என்னும்படி ப்ரஹ்மர்ஷியாகப் பெற்றான் என்கிற வரலாற்றையும் ஆராய்ந்தால் வருணம் ஔபாதிகமென்பது செவ்வனே விளங்கத் தட்டில்லை.

இத்தால், ஒரு க்ஷத்ரியன் ஸுக்ருத விசேஷத்தாலே அந்த சரீரந் தன்னோடே ப்ரஹ்மர்ஷியாய் விட்டபடியாலும், மற்றொரு க்ஷத்ரியன் துஷ்க்ருத விசேஷத்தாலே அந்த சரீரந்தன்னோடே சண்டாளனாகையாலும், இவ்விருவருள் க்ஷத்ரியத்வம் நீங்கி ப்ரஹ்மர்ஷியாகப்பெற்ற முதல்வன் [விச்வாமித்திரன்] அங்ஙனம் தான் ப்ரஹ்மர்ஷியாவதற்கு முன்னே க்ஷத்ரிய வேஷம் போய் சண்டாளவேஷமாய் நிற்கிறவனை [த்ரிசங்குவை] அந்த வேஷந்தன்னோடே யாகஞ் செய்வித்துச் சுவர்க்கமேற்றினனாதலாலும் வருணம் கருமோபாதிக மென்பது நிராக்ஷேபமாய் விளங்குமென்றதாயிற்று.] .... ... .... (89)

**(மூ.) 90. மாவுருவில் கள்ளவேடம் திருந்துவேதமலமான மானிடம்பாடல், ஸர்வ வர்ண சூத்ரத்வம், காடுவாழ்சாதியில் கடல்வண்ணன்வேடம், தென்னுரையில் ஹரிகீர்த்தி, ச்வபசரில் பத்திபாசனமும்அறிவார் ஆராரமரரென்னவேற, அறியாதார் சாதியந்தணர்களேலும் தகர விழுவர்.**

**[எல்லா வகுப்பிலும் த்யாஜ்யங்களுமுண்டு, உபாதேயங்களுமுண்டு என்று நிரூபித்தல்]**

(ப.) 90. மாவுருவில் கள்ளவேடம்—* எம்மாவுருவும் வேண்டுமாற்றாலாவாய் எழிலேறே * என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே எல்லாரூபமும் அப்ராக்ருதமாகையாலே சிறந்திருக்கப்பெற்ற பகவதவதார விக்ரஹங்களுக்குள்ளே * கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப் புறம்புக்கவாறும் * என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே திருட்டுவேஷமாகப் பரிக்ரஹித்த புத்தமுநிவிக்ரஹம் ப்ரமேயத்தில் த்யாஜ்யாம்சம்;

**திருந்துவேத மலமான மானிடம்பாடல்**—* திருந்து வேதமும் வேள்வியும் * என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே பகவத் ஸ்வரூபம் முதலானவற்றை உள்ளபடி ப்ரதிபாதிக்கையாலே சிறந்துள்ள வேதத்தினுள் * ந ஸ்மர்த்தவ்யோ விசேஷேண வேதமந்த்ரோபி அவைஷ்ணவः * என்கிறபடியே ஸ்மரிக்கவும் தகாதபடி மலாம்சமான * மானிடம்பாட லென்னாவது * என்ற நம்மாழ்வாரருளிச் செயலின்படியே பகவான் தவிர மற்றையோர்களை ப்ரசம்ஸிக்கிற வாக்யங்கள் ப்ரமாணத்தில் த்யாஜ்யாம்சம்.

ஸர்வவர்ண சூத்ரத்வம்—* ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்த்தநே * என்று பகவத்பக்தி யில்லாதவர்கள் எந்த வருணத்தவரானாலும் சூத்ரர்களே என்று சொல்லப்படுகிற ஸர்வ வர்ண சூத்ரத்வம் ப்ரமாதாக்களில் த்யாஜ்யாம்சம்.

காடுவாழ் சாதியில் கடல்வண்ணன் வேடம்—* காடுவாழ் சாதியுமாகப் பெற்றான்* என்று ஆண்டாளருளிச்செய்தபடியே ஏசுகின்றவர்களுக்கு இழிவாகத்தோற்றுகிற இடைச்சாதியில் ஸஜாதீயனாய் வந்து அவதரித்து நிற்கிற கண்ணபிரானுடைய * காலிப்பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை வந்து காணீர் * என்று கொண்டாடத்தக்க விக்ரஹமானது ப்ரமேயத்தில் உபாதேயாம்சம்.

தென்னுரையில் ஹரிகீர்த்தி—* தென்னுரையில் கேட்டறிவதுண்டு * என்கிற பெரியதிருமடல் ஸ்ரீஸூக்தியின்படியே தென்னுரையென்று சொல்லப்படுகிற தமிழ்ப் பாஷையான ப்ரபந்தங்களில் * ஹரிகீர்த்திம் விநைவாந்யத்—ப்ராஹ்மணேந பாஷாகாநம் நகாதவ்யம் * என்கிறபடியே எம்பெருமானைப்பற்றிய வசனங்கள் ப்ரமாணங்களில் உபாதேயாம்சம்,

ச்வபசரில்பத்திபாசனமும்—*ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:* என்கிறபடியே இழிகுலத்தவர்களில் * பெறற்கரிய நின்னபாத பத்தியான பாசனம்* என்று திருமழிசைப்பிரானருளிச்செய்தபடியே பெறுதற்கரிய பகவத்பாதாப்ஜ பக்தி யாகிற தனமுடையவர்கள் ப்ரமாதாக்களில் உபாதேயாம்சம்;

அறிவார்—ஆகக்கீழ் விவரிக்கப்பட்ட த்யாஜ்யோபாதேய விபாகங்களை அறிய வல்லவர்கள்,

ஆராரமரரென்ன ஏற—* நீரார்முகில்வண்ணன் பேராரோதுவார் ஆராரமரரே* என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே ஏதேனும் ஜன்மவ்ருத்தங்களை யுடையரே யாகிலும் நித்ய ஸூரிகளோடொப்பர்கள் என்னும்படி ச்லாக்யராய் * இலங்குவான் யாவருமேறுவர் சொன்னாலே * என்கிறபடியே உயர்கதியடையா நிற்க,

அறியாதார்—கீழ்ச்சொன்ன த்யாஜ்யோபாதேயவிபாகமறியாமே பாகவத ஜன்ம நிருபணம் பண்ணுமவர்கள்,

சாதியந்தணர்களேலும் நகர விழுவர்—அமரவோரங்கமாறும் வேதமோர் நான்கு மோதித் தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும் நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோரளவில் ஆங்கே அவர்கள்தாம் புலையர்போலும் * என்று திருமாலையி லருளிச்செய்தபடியே உத்க்ருஷ்டயோநியிற் பிறந்தவர்களாகிலும் கர்ம சண்டாள ராய் இனியொரு காலமும் கரையேற யோக்யதை யில்லையென்னும்படி அதோகதி யடைவார்கள். ... ... ... .... (90)

(தா.) 90. உலகத்திலுள்ள பொருள்கள் ப்ரமேயம், ப்ரமாணம், ப்ரமாதா என மூன்று வகுப்பாகப் பிரிவுறும் சாஸ்திரங்களைக் கொண்டு பரம்பொருளாக அறியப்படுகிற வஸ்து ப்ரமேய மெனப்படும். அந்த வஸ்துவை அறிவிப்பதற்கு ஸாதனமாயிருக்கின்ற சாஸ்திரம் ப்ரமாண மெனப்படும். ப்ரமாணத்தைக்கொண்டு ப்ரமேயத்தை நிஷ்கர்ஷிப்பவர் ப்ரமாதா எனப்படுவர். ப்ரக்ருதத்தில் ஆழ்வாரை ப்ரமாதாவாகக் கொள்க. இவருடைய வைபவம் இனி ஸ்தாபிக்கப் படப்போகிறது. அதற்குறுப்பாக ப்ரமாண ப்ரமேயங்களையுங் கூட்டிக்கொண்டு, மூன்றிலும் த்யாஜ்ய

மான அம்சங்களுமுண்டு, உபாதேயமான அம்சங்களுமுண்டு என்பதை வகுத்துக் காட்டி, இவ்விசேஷமறிவார் பெறக்கூடிய பேறும் இஃததறியாமல் பாகவத ஜந்ம நிரூபணம் பண்ணுவார் அதோகதியை யடையும்படியும் நிரூபிக்கப்படுகின்றன. (1) எம்மாவுருவும் வேண்டுமாற்றாலாவாய் எழிலேறே'' என்கிறபடியே எல்லாரூபமும் அப்ராக்ருதமாகையாலே சிறப்புப் பெற்றுள்ள பகவதவதார விக்ரஹங்களுள்' வேதம் பிரமாணமல்லவென்று உபபாதித்து வைதிகருசியைக் குலைப்பதற்காகக் *கள்ளவேடமாகப் பரிக்ரஹித்த புத்தமுநியான விக்ரஹம், ப்ரமேயத்தில் த்யாஜ்யமான அம்சம். (2) எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை உள்ளபடி பேசுவதற்கென்று ஏற்பட்ட வேதத்தில் * ந ஸ்மர்த்தவ்யோ விசேஷேண வேத மந்த்ரோபி அவைஷ்ணவ: [வேத மந்திரமாயிருந்தாலும் விஷ்ணு ஸம்பந்தியல்லாதது விசேஷித்து ஸ்மரிக்கத்தக்கதன்று] என்கிறபடியே ஸ்மரிக்கவுமாகாதபடி க்ஷேத்ரஜ்ஞர்களை ப்ரசம்ஸிக்கிற வாக்கியங்களாய் மானிடம்பாட லென்னப்பட்ட வேதமலாம்சமானவை ப்ரமாணத்தில் த்யாஜ்யமான அம்சம். (3) * ந சூத்ரா பகவத்பக்தா: விப்ரா: பாகவதா: ஸ்ம்ருதா:, ஸர்வவர்ணேஷு தே சூத்ரா: யே ஹ்யபக்தா ஜநார்த்தநே. என்று— பகவத் பக்தியில்லாதவர்கள் எந்த வருணத்தவர்களாயிருந்தாலும் சூத்ரர்களே என்று சொல்லப்படுகிறபடியால் ப்ரமாதாக்களில் பகவத்பக்தியற்ற வருணம் த்யாஜ்யமான அம்சம்.

(இப்படி உபாதேயகோடியில் த்யாஜ்யமான அம்சம் இருப்பதுபோலவே, த்யாஜ்யகோடியிலும் உபாதேயமான அம்சம் உண்டு. எங்ஙனே யென்னில்;) (1) ஊர்மனையில் வஸியாமல் பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருமுள்ள காடுகளிலே வாழ்கையாலே * காடுவாழ் சாதியுமாகப் பெற்றான் * என்னும்படியே இடையரிலே ஒருவனாய் வந்து அவதரித்து நிற்கின்ற கண்ணபிரானுடைய "காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்'' என்று தாமனுபவித்துப் பிறர்க்கும் அழைத்துக்காட்டும்படி பசுமேய்த்துவருகிறபோதுண்டான அலங்காரத்தோடு கூடியிருக்கிற விக்ரஹம் ப்ரமேயத்தில் உபாதேயமான அம்சம். (2) தமிழ்ப் பாஷையான ப்ரபந்தங்களில் † பகவத்விஷயமானவை ப்ரமாணத்தில் உபாதேய

---

† "ஹரிகீர்த்திம் விநைவ அந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம!, பாஷாகாநம் ந காதவ்யம் தஸ்மாத் பாபம் த்வயா க்ருதம்'' என்ற புராணவசனம் இங்கு விவக்ஷிதம். முற்காலத்தில் தருமநெறி தவறாமல் செங்கோல் செலுத்திவந்த ஓரரசன் 'பிராமணர்கள் ஸம்ஸ்க்ருத பாஷையாலன்றி வேறு எந்த பாஷையாலும் வ்யவஹரிக்கலாகாது' என்கிற ஒரு சாஸ்த்ரவிதியைப் பார்த்துவிட்டு, தனது நாட்டிலிருந்த அந்தணர்களை ஸம்ஸ்க்ருதபாஷையினாலேயே ஸகல வ்யவஹாரங்களுஞ் செய்யவேண்டுமென்று கட்டாயப்படுத்தினதுமல்லாமல் இதர பாஷைகளில் பகவத் பஜனைகள் செய்த அந்தணர்களைச் சிறையிலிட்டு நலிந்தும் போந்தான். இங்ஙனம் தான்செய்தது மிகவும் தருமம் என்றே எண்ணியிருந்தான். இவன் உயிர்நீத்தபின் யமகிங்கரர்களால் நரகத்திற்கு இழுத்துக்கொண்டு போகப்பட்டான். அப்போது இவ்வரசன் அவர்களை நோக்கி 'நான் ஒரு பாவமும் பண்ணவில்லையே, என்னை ஏதுக்கு

மான அம்சம். (3) * ச்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிகஃ [சண்டாளனுயினும் விஷ்ணு பக்தியுக்தன் அந்தணரிற்காட்டில் மேம்பட்டவன்] என்கிற படியே சண்டாளர்களில் "பெறற்கரிய நின்னபாதபத்தியான பாசனம்" என்னப்படுகிற பக்தியோடு கூடினவர்கள் ப்ரமாதாக்களில் உபாதேயமான அம்சம். ஆக விப்படிப்பட்ட த்யாஜ்யோபாதேய விபாகங்களை அறியவல்லவர்கள் "நீரார்முகில் வண்ணன் பேராரோதுவார் ஆரார் அமரரே' என்கிறபடியே ஏதேனும் ஜன்ம வ்ருத்தங்களுடையரேயாகிலும் நித்யஸூரி ஸமாநர் என்னும்படி சிறந்தவர்களாய் "இலங்குவான் யாவருமேறுவர்" என்கிறபடியே நற்கதியெய்த, இவ்வாசியை அறியாதவர்களாய்க் கொண்டு பாகவத ஜன்ம நிரூபணம் பண்ணுமவர்கள் "அமர வோரங்கமாறும்" என்கிற திருமாலைப்பாசுரத்திற் கூறியபடியே சிறந்த ஜன்மம் படைத்தவர்களாகிலும் கரும சண்டாளர்களாய் இனியொரு காலமும் கரையேற யோக்யதையில்லை யென்னும்படி அதோகதியை யடைவர்களத்தனை. .... (90)

(மூ.) 91. **தமிழ்மாமுனிதிக்கு சரண்யமென்றவர்களாலே க்வசித்க்வசித்தென்று இவராவிர்ப்பாவம் கலியுங்கெடும்போலே ஸூசிதம்.**

**[ ஆழ்வார் வைபவ ஸூசகமாக ஆர்ஷ ப்ரமாணங்காட்டுதல் ]**

(ப.) 91. **தமிழ்மாமுனி திக்கு சரண்ய மென்றவர்களாலே** — * வண்டமிழ் மாமுனி * என்று குலசேகராழ்வாரால் த்ராவிட சாஸ்த்ரப்ரவர்த்தகனுகச் சொல்லப் பட்ட அகஸ்த்யமஹர்ஷியைப்பற்றிப் பேசுமிடத்து * **தக்ஷிணு திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணு** * [அகஸ்த்யனிருக்கிற திக்கு யாவர்க்கும் புகலிடம்] என்று சொன்ன வால்மீகி போன்ற மஹர்ஷிகளாலே,

**க்வசித்க்வசித்தென்று** — * க்ருதாதிஷு நரா ராஜந் கலாவிச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணுஃ, க்வசித் க்வசித் மஹாராஜ ! த்ரவிடேஷு ச பூரிசஃ, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ * என்பது முதலான ச்லோகங்களினுல்,

**இவராவிர்ப்பாவம்**— இவ்வாழ்வார் அவதரிக்கப்போகிருரென்பது,

**கலியுங்கெடும்போலே ஸூசிதம்**— திருவாய்மொழியில் * கலியுங்கெடுங் கண்டு கொண்மின் * என்கிற பாசுரத்தினுல், திருமங்கையாழ்வார் உடையவர்போல்வார்

---

இங்ஙனே நலிகின்றீர்கள்!' என்று கேட்க, 'பகவத்பஜனம் பண்ணின அந்தணர்களை நீ சிறையிலிட்டு நலிந்தது பெரும்பாதகமல்லவா?' என்றுர்கள். அதற்கு இவன் 'அது எப்படி பாதகமாகும்? அவர்கள் சாஸ்த்ரவிஹிதமான ஸம்ஸ்க்ருத பாஷையை விட்டு இதர பாஷைகளினுல் பஜனை பண்ணினதற்காகவன்றே நான் தண்டித்தேன், அசாஸ்த்ரீயமான காரியத்தைச் செய்தவர்களைத் தண்டிப்பதுகூடவா பாதகம்? என்றுன்; அதற்கு அவர்கள் விடையளித்த ச்லோகமிது : 'பகவத்விஷயந் தவிர மற்ற விஷயங்களில் இதர பாஷைகளை உபயோகிப்பதுதான் அந்தணர்கட்குப் பாதகம்; பகவத் விஷயத்தில் பாஷாந்தரம் உபாதேயமே. இத் தத்துவத்தை நீ அறியாது பக்தர்களை நலிந்தமையால் நீ பாதகியேயாவாய்' என்றுர்களென்பது இந்த ச்லோகத்தின் கருத்து.

அவதரித்துக் கலியுக ஸ்வபாவமும் கழியுமென்று பவிஷ்யத்தான விஷயத்தைக் கண்டு பேசினுப்போலே (த்ரிகாலஜ்ஞரான சுகமஹர்ஷிமுதலானவர்களாலே) ஸூசிப்பிக்கப்பட்டது. [இவ்விஷயம் ஸ்ரீபாகவதம் பதிநோராவது ஸ்கந்தத்திலே காணத்தக்கது தாம்ரபர்ணீதீரத்தில் மஹா ப்ரபாவசாலியான ஆழ்வார் அவதரிக்கப் போகிறாரென்பதை மஹர்ஷிகளும் முன்னமே கண்டு தெரிவித்திருக்கையாலே ஆழ்வாருடைய ப்ரபாவம் அளவிடமுடியாததென்றவாறு.] இங்கு * தக்ஷிணு திக் க்ருதா யேந சரண்யா புண்ய கர்மணு * என்கிற ஸ்ரீராமாயண வசனத்தையுட் கொண்டு "தமிழ்மா முனிதிக்கு சரண்யமென்றவர்களாலே" என்று எதற்காகச் சொல்லப்பட்டதென்னில்; வைதிகரான மஹர்ஷிகள் தமிழ்ப் பிரபந்தமிட்டருளு மிவரை கௌரவித்துச் சொல்லக்கூடுமோவென்று சிலர் சங்கிக்கக்கூடுமாகை யாலே அப்படிப்பட்ட சங்கைக்குப் பரிஹாரமாகவே இது சொல்லப்பட்டது; ஒரு த்ராவிடஜ்ஞனாலே தென்திசைக்கு நன்மையுண்டானதாகச் சொன்ன ரிஷிகள் இதுவும் சொல்லத் தட்டில்லையென்று காட்டினபடி.] .... ... (91)

(தா) 91 ஆழ்வாருடைய வைபவ விசேஷத்தை விளக்கவல்ல ஆர்ஷ ப்ரமாணம் ஏதேனு முண்டோ வென்னில்; உண்டு. * தக்ஷிணு திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணு" என்று *வண்டமிழ் மாமுனியாகிய அகஸ்தியன் இருக்கிற திசை எல்லார்க்கும் புகலிடம் என்று சொன்ன வியாஸர் முதலிய மஹர்ஷிகளாலே * க்ருதாதிஷு நரா ராஜந் கலாவிச்சந்தி ஸம்பவம். கலௌகலு பவிஷ்யந்தி நாராயணபராயணுः-க்வசித்க்வசிந்மஹாராஜ! த்ரமிடேஷு ச பூரிசः, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ, யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர!, தேஷாம் நாராயணே பக்திः பூயஸீ நிருபத்ரவா.' என்று ஞானிகள் வந்து ஆவிர்ப்பவிக்கும் ஸ்தலவிசேஷங்களை அந்தந்த நதீ விசேஷங்களாலே பிரகாசிப்பித்து, அந்த நதீ விசேஷங்களிலுள்ள தீர்த்தத்தைப் பருகுமவர்க்கு பகவத் பக்தி அதிகரிக்குமென்பதையும் சொல்லுகிற வளவில், முந்துறமுன்னம் "தாம்ரபர்ணீ நதீ யத்ர" என்று இவ்வாழ்வாருடைய ஆவிர்ப்பாவஸ்தலத்தைச் சொல்லுகையாலே, முக்காலமுமறியும் சுகர் முதலிய மஹர்ஷிகளால் இவருடைய திருவவதாரமானது ஸூசிப்பிக்கப்பட்டது; இஃது எது போலவென்னில்; இவ்வாழ்வார் தாமும் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே தம்முடைய திருவாய்மொழியில் ‡ "கலியுங்கெடும்" என்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்து அதனால் கலியுக ஸ்வபாவமும் கழியுமென்று மேல் வரும் விஷயத்தைக்கண்டறிந்து அருளிச்செய்ததுபோலே. ... (91)

(மூ) 92. அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸு நந்தஸூநுவானவனுடைய யுகவர்ண க்ரமாவதாரமோ வ்யாஸாதிவதாவேசமோ மூதுவர் கரைகண்டோர் சீரியரிலேயொருவரோ? முன்னம்நோற்ற அநந்தன் மேல் புண்ணியங்கள் பலித்தவரோ வென்று சங்கிப்பர்கள்.

[ஆழ்வாருடைய அவதாரத்தில் பலவகை உல்லோகங்கள்]

‡ 5—2—1 பொலிக பொலிகவில்.

(ப.) 92. **அத்ரிஜமதக்நீ** —(ஸூநுவாய்) க்ருதயுகத்திலே ப்ராஹ்மணோத்தமர்களான அத்ரிக்கும் ஜமதக்நிக்கும் புத்திரனாய்க்கொண்டு தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய்,

**பங்க்திரத** (ஸூநுவாய்)—த்ரேதாயுகத்திலே க்ஷத்ரியனான தசரதசக்ரவர்த்திக்குத் திருமகனாய்,

**வஸுநந்த ஸூநுவானவனுடைய**—த்வாபரயுகத்திலே யயாதிசாபத்தாலே அபிஷேகப்ராப்தியற்ற யதுகுலத்தில் பிறந்து க்ஷத்ரியரில் தாழ்ந்தவராய் வைச்யப்ராயராயிருக்கிற வஸுதேவர்க்கும், கோரக்ஷணவ்ருத்தியாலே ஸாக்ஷாத்வைச்யரான ஸ்ரீநந்தகோபர்க்கும் திருமகனாய்,

**யுகவர்ணக்ரமாவதாரமோ ?**—இப்படி க்ருதத்ரேதாதியுகக்ரமத்திலே ப்ராஹ்மண க்ஷத்ரியாதி வர்ணக்ரமேண அவதரித்துவந்த எம்பெருமான் நான்காவதான வருணத்திலே வந்தவதரித்தபடியோ!;

**வ்யாஸாதிவத் ஆவேசமோ !**—வேதங்களை வகுப்பது முதலான காரியங்களை நிர்வஹிப்பதற்காக வ்யாஸர் முதலான முனிவர் பக்கலில் ஆவேசித்தாப்போலே இவரைக்கொண்டு தமிழ் வேதத்தை ப்ரவர்த்திப்பிக்கைக்காக இவர் பக்கலில் ஆவேசித்தபடியோ?

**மூதுவர் கரைகண்டோர் சீரியரிலேயொருவரோ!**—[மூதுவரிலே யொருவரோ! கரைகண்டோரிலே யொருவரே! சீரியரிலே ஒருவரோ! என்று யோஜிப்பது.] * விண்ணுட்டவர் மூதுவர் * என்னப்பட்ட நித்ய ஸூரிகளிலே இவ்விபூதியைத் திருத்துகைக்காக எம்பெருமானுடைய நியமனத்தாலே வந்தவதரித்தாரொருவரோ!, * கலக்க மில்லா நல்தவ முனிவர் **கரைகண்டோர்** * என்கிற பாட்டில் கரைகண்டோரென்று சொல்லப்பட்டவர்களாய் ஸம்ஸாரத்தைக் கடந்து அக்கரைப்பட்டிருக்குமவர்களான முக்தாத்மாக்களிலே ஸம்ஸாரிகளைத் திருத்துவதாக பகவதாஜ்ஞையாலே வந்தவதரித்தாரொருவரோ?, * பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும் சீதனையே தொழுவார் **விண்ணுளாரிலுஞ் சீரியரே** * என்கிற பாசுரத்தில் நித்யமுக்தர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களாகச் சொல்லப்பட்ட ச்வேதத்வீபவாஸிகளிலே, இங்குள்ளாரைத் திருத்துகைக்காக வந்தவதரித்தாரொருவரோ!

**முன்னம் நோற்ற அனந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவரோ!**—[முன்னம் நோற்ற புண்ணியம், அனந்தன்மேற் புண்ணியம் பலித்தவரோ! என்று யோஜிப்பது] கீழ்ச் சொன்னவர்கள் ஒருவருமன்றிக்கே ஸம்ஸாரிகளுக்குள்ளேயே, * முன்னம் நோற்ற விதி கொலோ* என்கிறபடியே அனேக ஜன்மஸஞ்சிதமான தம்முடைய ஸுக்ருதம் பலிக்கப் பெற்றவராய்க்கொண்டு இப்படி திருந்தினரொருவரோ!, அல்லது, * அனந்தன்மேல் கிடந்த வெம்புண்ணியா! * என்று அனந்தசாயியான ஸநாதந புண்யமென்று சொல்லப்பட்ட ஸர்வேச்வரன்தானே நித்ய ஸம்ஸாரியை நித்ய ஸூரியாக்க வல்ல தன்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷம் பலிக்க இப்படி திருந்தினரொருவரோ !,

என்று சங்கிப்பர்கள்—இப்படிக் கீழ்ச்சொன்ன வகைகளாலே இவரை இன்னாரென்று நிச்சயிக்கமாட்டாமல் பலபடியாக மாஜ்ஞானிகளும் சங்கிப்பர்கள். ... (92)

(தா.) 92. இப்படி அவதரித்த இவர்தாம் ஆரென்னில்; மாஞானிகளுங் கூட இவரை இன்னாரென்று அளவிடமாட்டாமல் அதிசங்கை பண்ணிக்கொண்டே யிருப்பர்களென்பது சொல்லப்படுகிறது.—கிருதயுகத்திலே அத்ரியும் ஜமதக்நியு மாகிற பிராமணோத்தமர்களுக்குப் பிள்ளையாய்க்கொண்டு தத்தாத்ரேயனும் பரசு ராமனுமாய்த் திருவவதரித்தும், த்ரேதாயுகத்திலே க்ஷத்ரியனான தசரத சக்ரவர்த் திக்குப் பிள்ளையாய்த் திருவவதரித்தும், த்வாபர யுகத்திலே யயாதி சாபத்தாலே அபிஷேகப்ராப்தியற்ற யதுகுலத்தில் பிறக்கையாலே க்ஷத்ரியரில் தண்ணியராய் வைச்யப்ராயராயிருக்கிற வஸுதேவர்க்கும் (*) "க்ருஷி கோரக்ஷ வாணிஜ்யம் வைச்யம் கர்ம ஸ்வபாவஜம்" என்கிறபடியே கோரக்ஷணம் முதலிய தருமத்தை யுடைய ஸாக்ஷாத் வைச்யரான ஸ்ரீநந்தகோபர்க்கும் புத்திரனாய்த் திருவவதரித்தும் ஆகவிப்படி முதல்யுகத்தில் முதல் வருணத்தில் அவதரிப்பது, இரண்டாவது யுகத் தில் இரண்டாவது வருணத்தில் அவதரிப்பது, மூன்றாவது யுகத்தில் மூன்றாவது வருணத்தில் அவதரிப்பது என்கிற முறையாக அவதரித்துவந்த ஸர்வேச்வரன் நான்காவதான இக்கலியுகத்திலே நான்காம் வருணத்திலே வந்து அவதரித்த படியோ! என்று சிலர் சங்கிப்பர்கள்; "க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும்" என்றும், * "ஸோயம் நாராயணஸ் ஸாக்ஷாத் வ்யாஸரூபீ மஹாமுநி:" என்றும் சொல்லுகிறபடியே வேதங்களைப் பகுத்தல் முதலான அரிய பெரிய காரியங்களை நிர்வஹிப்பதற்காக வியாஸர் முதலிய முனிவர்கள் பக்கலில் ஆவேசித்தது போலே இவரைக்கொண்டு தமிழ்மறையை வெளியிடுவதற்காக இவர் பக்கல் ஆவேசித்தானோ! என்று சிலர் சங்கிப்பர்கள்; "விண்ணாட்டவர் மூதுவர்" என்று பரமபதத்தவர்களான நித்யஸூரிகளிலே ஒருவர்வந்து இந்நிலத்தைத் திருத்து கைக்காக எம்பெருமானது கட்டளையினால் அவதரித்தபடியோவென்று சிலர் சங்கிப் பர்கள். "கரைகண்டோர்" என்று சொல்லப்பட்டவர்களாய் ஸம்ஸாரத்தைக்கடந்து அக்கரைப்பட்டிருப்பவர்களான முக்தர்களிலே ஒருவர் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்ளுதற்காக இங்கு வந்து அவதரித்தபடியோவென்று சிலர் சங்கிப் பர்கள். "பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளுஞ்சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியர்" (திருவிருத்தம்) என்று சொல்லப்பட்ட ச்வேதத்வீப வாஸிகளிலே ஒருவர் நம் போலியரைத் திருத்துகைக்காக ஈச்வரேச்சையாலே அவதரித்தபடியோவென்று சிலர் சங்கிப்பர்கள். [இவ்வாழ்வாருடைய வைபவத்

(*) பகவத்கீதையில் பதினெட்டாவது அத்யாயத்தில் க்ருஷியையும் பசு ரக்ஷ ணத்தையும் வர்த்தகத்தையும் வைச்ய தர்மமாகச் சொல்லியிருத்தலால் கோரக்ஷ ணத்திற்கு இட்டுப்பிறந்த நந்தகோபர் வைச்யர் ஆவர்.

"கலௌ புந: பாபரதாபிபூதே ஸ உத்பபூவாச்ரிதவத்ஸலத்வாத், பக்தாத் மநா ஸர்வஜநாந் ஸுகோப்தும் விச்வாதிகோ விச்வமயோ ஹி விஷ்ணு:" என்று கலியுகத்திலே எம்பெருமான் பக்தரூபியாய் அவதரித்தானென்று ரிஷிகள் சொல்லு கையாலும் இப்படி சங்கிக்கக் குறையில்லை. "சேமங்குருகையோ செய்ய திருப்பாற் கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ? தாமம் துளவோ வகுளமோ தோளி ரண்டோ நான்கு முளவோ பெருமானுனக்கு" என்ற பாடலும் இதனை வற்புறுத்தும்.

தைப் பார்த்தால் எல்லார்படியும் சொல்லலாம்படியிருக்கையாலே இப்படியும் தனித் தனியே சங்கிப்பார்க்குச் சங்கிக்கக் குறையில்லை யென்றுணர்க. ''பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்' என்கிறபடியே பிராட்டிமாரோடு சேர்த்துப் பார்க்கும்போதும் தனித்தனியே சங்கிக்கலாம்படியன்றோ இருப்பது.] கீழ்ச்சொன்னவர்கள் ஒருவருமல்லாமல் ஸம்ஸாரிகளுக்குள்ளேயே 'முன்னம் நோற்ற விதிகொலோ!' என்கிறபடியே கீழ்க்கழிந்த பல ஜன்மங்களில் திரட்டின ஸுக்ருதத்தின் பயனைக்கொண்டு இப்படி இருந்தினொருவரோ! என்றும் சங்கிப் பர்கள். அன்றியே ''அனந்தன்மேல்கிடந்த வெம்புண்ணியா'' என்று—நிர்ஹேதுக கடாக்ஷவிசேஷத்தினால் நித்யஸம்ஸாரியை நித்யஸூரியோடொக்கச் செய்யவல்ல அநந்தசாயியான ஸநாதநபுண்யம் முழுநோக்காகப்பலித்து இங்ஙனே திருந்தினொ ரொருவரோ! என்றும் சிலர் சங்கிப்பர்கள். [இங்ஙனம் கீழ்ச்சொன்னவைகளாலே இவரை இன்னாரென்று அறுதியிடமாட்டாமல் மஹாமேதாவிகளும் சங்கித்துக் கொண்டே யிருப்பர்களென்றதாயிற்று.] ... .... .. (92)

(மூ.) 93. **இதுக்குமூலம் யான் நீயென்று மறுதலைத்து வானத்து மண்மிசைமாறும நிகருமின்றி நிலையிடந்தெரியாதே தெய்வத்தினம் ஒருவகைக்கொப்பாக இனத்தலைவ னந்தாமத்தன்புசெய்யச் சேர்ந்தமைக் கடையாள முளவாக உகந்துகந்து திமிர்கொண்டாலொத்து நாட்டியல்வொழிந்து சடரையோட்டி மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு நடாவிய கூற்றமாய்த் தீயன மருங்கு வாராமல் கலியுகம் நீங்கிக் கிதயுகம்பற்றிப் பட்டெழுபோதறியாதிருந்த ப்ரபாவம்.**

**[ஆழ்வார்திறத்திலுண்டாகும் பலவகையான சங்கைகளுக்கு ஹேது இன்னதென்றல்]**

(ப.) 93. இதுக்கு மூலம்—இவ்வாழ்வாரைக் கண்ட ஞானிகள் இவரின்னா ரென்று நிர்ணயிக்கமாட்டாமல் இங்ஙனே சங்கிப்பதற்கு ஹேதுவேதென்னில்;

**யான்னீயென்று மறுதலைத்து**—(இந்த மஹாசூர்ணையிலுள்ள ஒவ்வொரு வாக் யத்திற்கும் 'இருந்த ப்ரபாவம்' என்ற முடிவிலே அந்வயம் காணவேணும். யான்னீ யென்று மறுதலைத்திருந்த ப்ரபாவம், வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றியிருந்த ப்ரபாவம், நிலையிடம் தெரியாதே யிருந்த ப்ரபாவம்.......என்றிப்படி கூட்டி அந்வயிப் பது ) பெரிய திருவந்தாதியில் * புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீயென் செவி யின் வழிபுகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார் * என்கிற பாசுரத்தில்—உன்னை யென்னுள்ளே யடக்கியிருக்கிற நான் பெரியவனா? என்னுள்ளே அடங்கியிருக்கிற நீ பெரியவனா? என்று உபய விபூதி யுக்தனோடே மறுதலைக்கிற வைபவம்;

**வானத்து மண்மிசை மாறும் நிகருமின்றி**—(வானத்து நிகரின்றி, மண்மிசை மாறின்றி என்று யோஜிப்பது ) * தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானைச் சொன் மாலைகள் சொல்லுமாறமைக்கவல்லேற்கு இனியாவர் நிகர் அகல் வானத்தே * என்றும், * வலக்கையாழி யிடக்கைச் சங்கமிவையுடைய மால்வண்ணனை மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ விம்மண்ணின்மிசையே * என்றும் தாமே சொல்லிக் கொள்ளலாம்படி உபயவிபூதியிலும் ஒப்பில்லாதவராயிருந்த வைபவம்;

**நிலையிடம் தெரியாதே**—* அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடமே * என்று திருவிருத்தத்தில் அந்யாபதேசத்தாலே பேசும்படி வாஸஸ் தலம் தெரியாதபடியான வைபவம்; (ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் கலசி நடக்கப் பெற்ற ஆழ்வாரை நித்யஸம்ச்லேஷாநந்தசாலிகளான நித்யஸூரிகள் படியிலே நினைக்கமுடியாமையாலும், உண்ணுஞ் சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றிருக்கிற விவரை உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தார்படியிலே நினைக்கமுடியாமையாலும் ஆழ்வாருடைய வாஸஸ்தலம் வைகுந்தமா வையமாவென்று ஸந்தேஹிக்க வேண்டியதாயிற்றென்று உணர்க]

**தெய்வத்தினம் ஒருவகைக் கோப்பாக**—* தெய்வத்தினம் ஓராயிரங்களாய் * என்று அந்யாபதேசத்திலிட்டுத் திருவிருத்தத்திலருளிச் செய்தபடியே, ஒருவர் இருவரன்றிக்கே நித்யஸூரிகளெல்லாருங் கூடினாலும் தமக்கு ஒருவகைக்கோப்பாம் படியான வைபவம்;

**இனத்தலைவன் அந்தாமத்தன்பு செய்ய**—* வானோரினத்தலைவன் கண்ணன் * என்கிற பாசுரப்படி நித்யஸூரித் திரள்களுக்கு நிர்வாஹகனான ஸர்வேச்வரன் * அந்தாமத்தன்புசெய் தென்னாவி சேரம்மானுக்கு * என்கிறபடியே பரமபதத்தில் பண்ணும் வ்யாமோஹத்தையெல்லாம் தம் பக்கலிலே ஒருமடைசெய்து பண்ணும் படியான வைபவம்;

**சேர்ந்தமைக்கு அடையாள முளவாக**—* திருவருள்களுஞ் சேர்ந்தமைக்கு அடையாளம் திருந்தவுள * என்கிற பாசுரப்படியே மேன்மேலும் அவனுடைய விஷயீகாரங்களைப் பெற்றமைக்கு நல்ல அடையாளமான கலவிக்குறிகளுண்டென்று காட்டும்படியான வைபவம்;

**உகந்துகந்து திமிர்கொண்டாலொத்து**—*உகந்துகந்து உள்மகிழ்ந்து குழையுமே* என்றும், * திமிர்கொண்டா லொத்துநிற்கும் * என்றும் சொன்னபடியே அவனுடைய வடிவழகு சீலம் முதலானவற்றை யநுஸந்தித்து மேன்மேலும் விளைகிற மகிழ்ச்சியினாலே சிதிலராவது, பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்தவர்களைப்போலே ஸ்திமிதராவதாய் இருந்த வைபவம்;

**நாட்டியல்வொழிந்து**—*நாட்டாரோடியல் வொழிந்து நாரணனை நண்ணினமே* என்கிறபடியே அன்னபானங்களுக்கும் அஹங்கார மமகாரங்களுக்கும் வசப்பட்டிருக்கிற லௌகிகரோடு சேர்த்தியற்றிருக்கையாகிற வைபவம்;

**சடரையோட்டி**—சடகோபராகையாலே, சுஷ்கதர்க்கங்களாலே தங்கள் தங்கள் மதங்களைப் பேசும் பாஹ்ய குத்ருஷ்டிகளாகிற சடரைத் தம் அருளிச்செயல்களாலே நிரஸித்த வைபவம்;

**மதாவலிப்தர்க்கு அங்குசமிட்டு**—பராங்குசராகையாலே வஞ்சமுக்குறும்பினர்களான மத்த வாரணங்களுக்கு மாவட்டியிட்டு அடக்கின வைபவம்;

**நடாவிய கூற்றமாய்**—* பறவையின்பாகன் மதனசெங்கோல் நடாவிய கூற்றங் கண்டீர் * என்று திருவிருத்தத்தில் அந்யாபதேசத்திலே பேசும்படி தம்முடைய கண்ணுக்கிலக்கானவர்களின் ஸம்ஸாரத்துக்கு ம்ருத்யு என்னலாம்படியான வைபவம்;

தீயன மருங்குவாராமல்—கொன்றுயிருண்ணும் விசாதி பகைபசி தீயனவெல்லாம் * என்கிற பாசுரத்திற்சொன்ன வியாதி முதலான ஸகல தோஷங்களும் ஸகல பாபங்களும் * வானோ மறிகடலோ - வன்துயரை மருங்கு கண்டிலமால் * என்கிற பாசுரப்படியே அருகும் வாராதபடியாயிருந்த வைபவம்;

கலியுகம்நீங்கிக் கிருதயுகம்பற்றி—கலியுகமொழிந்து க்ருதயுகம் புகுந்ததென்னும் படியான வைபவம்,

பட்டெழுபோதறியாதிருந்த ப்ரபாவம்—* பட்டபோதெழுபோதறியாள் விரை மட்டலர் தண்டுழாயென்னும் * என்கிற பாசுரப்படியே உதயாஸ்தமன காலங்கள் அறியாதிருந்த வைபவம். [இதுக்கு மூலம்-இப்படியிருந்த ப்ரபாவம் என்று வாக்ய ஸம்பந்தம் காண்க.] ... ... .... .... (93)

(தா.) 93. ஞானிகள் இப்படியிவரைச் சங்கிப்பதற்கு ஹேது ஏதென்னில், இதற்கு மூலம் இவருடைய ப்ரபாவ விசேஷமே எனப்படுகிறது.—அந்த ப்ரபாவ விசேஷம் ஏதென்னில்;—இவ்வாழ்வார் பெரிய திருவந்தாதியில் "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன் நீ பெரியையென்பதனை யாரறிவார்? ஊன்பருகு நேமியாய்! உள்ளு" என்று 'நீ பெரியவனா? நான் பெரியவனா? என்று எம்பெருமானோடு போராடுகிறார்; உபய விபூதியையும் உள்ளே அடக்கிக்கொண்டிருக்கிற நீ எனது செவிப்புலன்வழியாக என்னுள்ளே புகுந்து அடங்கிக்கிடக்கின்றாயாதலால் விபூதியுக்தனான உன்னைக் காட்டிலும் விபூதியுட்பட உன்னையுஞ்சேர்த்து அடக்கிக்கொண்டிருக்கின்ற நானன்றோ பெரியவனென்னத் தகுதியுடையேன் என்கிறார். ஆக இப்படிப்பட்ட பெருமையுடையராயும்;

"பெருமானைச் சொல்மாலைகள் சொல்லுமாறமைக்கவல்லேற்கு இனியாவர் நிகர் அகல் வானத்தே" என்றும், "வலக்கை யாழியிடக்கைச் சங்கமிவையுடை மால்வண்ணனை, மலக்குநாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே" என்றும் தாமே பரவசராய்ப் பேசலாம்படி எம்பெருமானை ஸ்வாதீனப்படுத்துகிற திருவாய்மொழியைப் பாடுகிற நாவீறுடைமையாலே உபயவிபூதியிலும் தமக்கு ஒப்பாவார் ஒருவருமில்லாதவராயும்,

இவர்க்கு எம்பெருமானோடு கலவியும் பிரிவும் கலசி நடக்கையாலே, கலவியால்வந்த ரஸமே பெருகிச்செல்லும் அங்குள்ளார்படியுமல்லாமல் அன்னபாநாதிகளாலே தரிக்கின்ற இங்குள்ளார்படியுமல்லாமல் இப்படி உபயவிபூதியிலுமடங்காமையாலே 'அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடமே' என்று தாமே அந்யாபதேசத்தாலே பேசவேண்டும்படி வாஸஸ்தலம் தெரியாதபடியாயும்,

(*) "தெய்வத்தினம் ஓரனையீர்களாய்" என்று ஒருவரிருவரல்லாமல் நித்ய ஸூரிகளெல்லாருங் கூடினாலும் தமக்கு எல்லாப்படியாலும் ஒப்பாகமாட்டாமல் ஒருவகைக்கு ஒப்பாகும் படியாயும்;

வானோரினத்தலைவனான அந்த ஸர்வேச்வரன் "அந்தாமத்தன்பு செய்து என்னாவி சேரம்மானுக்கு" என்னும்படியே பரமபதத்தில்பண்ணும் வியாமோ

(*) திருவிருத்தம் 23.

ஹத்தையெல்லாம் தம் பக்கலிலே ஒருமடைகொள்ளப்பண்ண, "திருவருள்மூழ்கி வைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான் திருவருள்களுஞ் சேர்ந்தமைக்கு அடையாளம் திருந்தவுள" என்று மேன்மேலும் அவனது விஷயீகாரங்களைப் பெற்றபடிக்குப் போதுமான அடையாளங்கள் வாய்கரையிலே தோன்றுகை முதலான கலவிக் குறிகள் உண்டாய்ச்செல்ல, அவனது அழகு சீலம் முதலியவற்றை அநுஸந்தித்து மேன்மேலும் விளைகின்ற ஸந்தோஷத்தினால் சிதிலராவது, பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பிறந்தாரைப்போலே ஸ்திமிதராவதாய், உண்டியே உடையே உகந்தோடி, யானேயென்றனதேயென்று அஹங்காரமமகாரவச்யராயிருக்கின்ற லௌகிகருடைய ஸம்பந்தமற்று, சடகோபராகையாலே பாஹ்யகுத்ருஷ்டிகளாகிற சடரைத் தமது ஸூக்தி விசேஷங்களாலே துரத்தி, பராங்குசராகையாலே முக்குறும்பினால் கொழுத்துத்திரியுமவர்களுக்கு மதமொழிந்து தலைவணங்குமாறு உபதேசரூபமான அங்குசமிட்டு, ஸர்வேச்வரன் விஷயத்திலே எல்லார்க்கும் பக்தியை யுண்டாக்கி நடத்தாநின்றுகொண்டு தமது கடாக்ஷத்தில் அகப்பட்டவர்களின் ஸம்ஸாரத்திற்கு ம்ருத்யுவாய், ஸாம்ஸாரிகதுஃக்கஹேதுவான பாபம் முதலியவை அருகிலும் தலைகாட்டமாட்டாதபடியாய் பகவத்ருசி விரோதியான கலியுகம் கழிந்தொழிந்து கேவல வைஷ்ணவ தருமமே நடக்குமதான க்ருதயுகம் பிரவேசிக்கும்படியாய், இரவு பகலென்பதுமறியாமல் அகாலகால்யமான தேசத்திற்போலே எம்பெருமானுடைய அநுபவமே போதுபோக்காக இருக்கப்பெற்றவராயும் அமைந்த அமைதியேயாயிற்று கீழ்ச்சொன்ன சங்கைக்குக் காரணம். .... ... (93)

(மூ.) 94. அதுக்குஹேது - ஊழிதோறுஞ் சோம்பாது ஒன்றிப் பொருளென்று அளிமகிழ்ந்து முற்றுமாய் நின்று நூலுரைத்து யோகு புணர்ந்து கண்காணவந்து ஆள்பார்க்கிறவன் உலகினதியல்வை நல்வீடுசெய்ய இணக்குப்பார்வைதேடிக் கழலலர் ஞானமுருவின முழுது மோட்டின பெருங்கண் எங்குமிலக்கற்று அன்போடு நோக்கான திசையிலே ஆக்கையில் புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறவர்மேலே படப் பக்கநோக்கறப் பண்ணின விசேஷ கடாக்ஷம்.

[எம்பெருமானுடைய நிர்ஹேதுககடாக்ஷமே ஆழ்வார் பக்கலில் பலித்ததென்றல்]

(ப.) 94. இதுக்குஹேது—கீழே விரிவாகச் சொல்லப்பட்ட ப்ரபாவம் ஆழ்வார்க்கு உண்டாகைக்கு ஹேதுவேதென்னில்;

ஊழிதோறும் சோம்பாது ஒன்றிப்பொருளென்று அளிமகிழ்ந்து—* ஊழிதோறும் தன்னுள்ளே படைத்து * என்றும், *சோம்பாதிப் பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா * என்றும், * ஒன்றியொன்றி யுலகம்படைத்தான் * என்றும், * பொருளென் றிவ்வுலகம் படைத்தவன் * என்றும் * அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்து * என்றுமுள்ள பாசுரங்களின்படியே கல்பந்தோறும் ஸ்ருஷ்டிக்கச் செய்தேயும் ஸபலமாகாதிருக்கவும் என்றேனுமொருநாள் ப்ரயோஜனப்படுமென்று ஜகத்ஸ்ருஷ்டியை அடுத்தடுத்துப் பண்ணியும்,

முற்றுமாய்நின்று—* நிலநீரெரிகால் விண்ணுயி ரென்றிவைதான் முதலாமுற்று மாய் நின்ற வெந்தை * என்கிறபடியே ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்களிலே அநு ப்ரவேசித்து நின்றும்,

நூலுரைத்து—* அன்னமதாயிருந்து அங்கற நூலுரைத்த * என்கிறபடியே ஹம்ஸரூபியாய் சாஸ்த்ரத்தை யுபதேசித்தும்,

யோகுபுணர்ந்து—* குறைவில் தடங்கல் கோளரவேறித் தன்கோலச் செந்தா மரைக் கண் உறைபவன் போலவோர் யோகுபுணர்ந்த வொளிமணிவண்ணன் * என்கிறபடியே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறப்போலே ஜகத்ரக்ஷணோ பாய சிந்தைபண்ணியும்,

கண்காணவந்து—* துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காண வந்து * என்கிறபடியே மானிடப்பிறவியிலே பிறந்து அவர்களுடைய மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்கு விஷயமாம்படி வந்தும்,

ஆள்பார்க்கிறவன்—இப்படி அவதாரம் முதலியவற்றாலே * ஆள்பார்த்துழி தருவாய் * என்கிற பாசுரப்படியே 'எனக்கடிமை யாவாருண்டோ'வென்று இதுவே வேளாண்மையாகத் தேடித்திரிகிற ஸர்வேச்வரன்,

உலகினதியல்வை நல்வீடுசெய்ய—* ஓஒவுலகினதியல்வே * என்கிற பாசுரத் தில் விரிவாகக் கூறி நிர்வேதப்படுகைக் குடலான லோகஸ்வபாவத்தை * யாதா னும் பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடு செய்யும் * என்கிற பாசுரப்படியே ஸவாஸந மாகப் போக்குகைக்காக;

இணக்குப்பார்வைதேடி—ம்ருகபக்ஷிகளைப் பிடிப்பார் பார்வைவைத்துப் பிடிக்கு மாபோலே ஸம்ஸாரிகளைப் பிடிக்கைக்குப் பார்வையாகக் கூடியவர் 'யாரென்று தேடி,

கழல் அலர்ஞானமுருவின முழுது மோட்டின பெருங்கண் எங்குமிலக்கற்று—உலக ளந்த திருவடியும் தன்னுடைய விகஸிதஜ்ஞானமும் மறுபாடுருவின பரப்பெங்கும் ஓட்டிப்பார்த்த பெரிய திருக்கண்களானவை ஓரிடத்திலும் அதுக்கு ஆவாரைக் காணாமல், (ஒரு வ்யக்தியை அப்படிக்காக்குவதாகப் பார்க்கிறவளவிலே,)

அன்பொடு நோக்கான திசையிலே—* அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும் * என்று ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக எப்போதும் அன்போடு பார்த்துக் கொண்டு கிடக்கையாலே தனக்குப் பள்ளமடையான தென்திக்கிலே,

ஆக்கையில் புக்குழன்று மாறிப்படிந்து துளங்குகிறவர்மேலே பட—* யாதானு மோராக்கையில் புக்கு * என்றும், * அந்நாள் நீதந்தவாக்கையின் வழியுழல்வேன் * என்றும், * மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து * என்றும், * பல்பிறவியில் படிகின்ற யான் * என்றும், * பிறவிக்கடலுள் நின்று நான்துளங்க * என்றும் சொல்லுகிற படியே கர்மாநுகுணமாக ஏதேனு மொரு சரீரத்திலே புகுந்து அந்த சரீரத்தின் வழியேபோய் ஜன்ம பரம்பரைகளிலே படிந்து ஸம்ஸார ஸாகரத்தில் துவண்டு நடுங்குகிற இவர் மேலேபட, (இவர்மீது கடாக்ஷம் விழுந்தவளவிலே)

பக்கநோக்கறப் பண்ணின விசேஷ கடாக்ஷம்—* எங்கும் பக்கநோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே * என்கிறபடியே பிராட்டிமார்கள் திருமுலைத்தடத் தாலே நெருக்கி யணைத்தாலுங்கூட புரிந்துபார்க்கவறியானென்னும்படி ஸ்வேச்சை யாலே நிர்ஹேதுகமாகப் பண்ணப்பட்ட விசேஷ கடாக்ஷம். [இதுக்கு ஹேது— இப்படிப்பண்ணின விசேஷகடாக்ஷம் என்று வாக்யாந்வயம்.] ... (94)

(நா.) 94. இவ்வாழ்வாருக்கு இவ்வளவு ப்ரபாவம் விளைந்தமைக்குக் காரணமெதென்னில்:—பயிர்செய்பவன் தான் பண்ணின க்ருஷிகள் தப்பினாலும் சோம்பலுற்றுப் பின்வாங்காமல் பின்னையும் க்ருஷியை விடாமல் நடத்துமாபோலே, எம்பெருமான் கல்பந்தோறும் ஸ்ருஷ்டிக்கச்செய்தே ஸபலமாகாதிருக்க, அவ்வளவோடே கைவாங்காமல் மிகவும் முயற்சியுற்று என்றேனுமொருநாள் பலிக்குமென்று க்ருஷியையுகந்து உலகப்படைப்புத் தொழிலைநடத்தி, அங்ஙனம் படைக்கப்பட்ட ஜகத்தில் அநுப்ரவேசித்து, அவற்றைச் சொல்லும் வாசகசப்தம் தன்னளவிலே பர்யவஸிக்கும்படி ப்ரகாரியாய்நின்று, அறியவேண்டிய அர்த்தங்களை வெளியிடவல்ல சாஸ்திரங்களை யுபதேசித்து திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீதேறிப் படுக்கைவாய்ப்பாலே கண்வளர்ந்தருளுகிருப்போலே ஜகத்ரக்ஷணசிந்தைசெய்து, சிந்தித்த வுபாயத்திற்குத்தகுதியாக * என்றேனும் கட்கண்ணால் காணக்கூடாத தான் * துயரில்மலியும் மனிசர்பிறவியில் தோன்றிக் கண்காணவந்து, இப்படி அவதாராதிகளாலே 'எனக்கு அடிமையாவாருண்டோ?' என்று இதுவே காரியமாகத் தேடித்திரிகிறவன் சப்தாதி விஷயங்களிலே துக்கப்பட்டு அழுந்துகிற லோகஸ்வபாவத்தை வாஸநையோடே போக்குகைக்காக, மிருகபட்சிகள் பிடிப்பார் ஸஜாதீயபுத்தியாலே தம்முடனே இணக்கவற்றுன ம்ருகபட்சிகளைப் பார்வையாக வைத்துப் பிடிக்குமாபோலே ஸம்ஸாரிகளையும் ஸஜாதீயரைக்கொண்டு பிடிப்பதாகத் திருவுள்ளம்பற்றி அதற்கு ஆவாரார்? என்று தேடி, "கழறலமொன்றே நிலமுழுதாயிற்று" என்கிற பாசுரத்திற்படியே தனது திருவடித் தாமரையும் ஜ்ஞானதீபமும் மறுபாடுருவின பரப்பெங்கும் ஓட்டிப்பார்த்த புண்டரீகாக்ஷனுடைய திருக்கண்களானவை ஓரிடத்திலும் அதற்கு ஆவாரைக்காணுமல், ஒரு வ்யக்தியை அப்படிக்கு ஆக்குமதாகப் பார்க்கிறவளவிலே, ஸ்ரீவிபீஷணாழ்வான் விஷயமாக எப்போதும் அன்புடன் நோக்கிக்கொண்டு கிடக்கையாலே தனக்குப் பள்ளமடையான தென்திசையிலே கர்மாநுகுணமாக ஏதேனுமொரு சரீரத்திலே பிரவேசித்து அந்த சரீரத்தின் வழியேபோய் ஜன்மபரம்பரைகளிலே தோள்மாறி அந்த அநர்த்தத்திலே வெறுப்பின்றியே அதிலே அவகாஹித்துத் தரைகாணவொண்ணுத ஸம்ஸாரக் கடலினுள்ளே ஆழ்ந்து நடுங்குகிற இவ்வாழ்வார்மேலேபட, இப்படி இவர்மேலே பட்ட இதனை "நம்மேலொருங்கே பிறழவைத்தார்" என்கிறபடியே ஒரு மடைப்படுத்தி "எங்கும் பக்கநோக்கறியான்" என்று நாச்சிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத்தாலும் புரிந்துபார்க்க அறியானென்னும்படி ஸ்வேச்சையாலே நிர்ஹேதுகமாகப் பண்ணப்பெற்ற விசேஷகடாக்ஷமாய்த்து கீழ்ச்சொன்ன ஆழ்வார் பிரபாவத்திற்கு ஹேது. [இதநால் "அத்ரிஜமதக்நி......" இத்யாதி சங்காஸூத்ரத்திற்சொன்ன சங்கைகளெல்லாங்கிடக்க, அநந்தன்மேல் புண்ணியங்கள் பலித்தவர் இவர் என்று நிச்சயிக்கப்பட்டதாயிற்று.] ... ... ... (94)

(மூ.) 95. ஶ்ரமணீவிதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு, சாபமிழிந்தென்னப்பண்ணுமிறே.

[பகவத் கடாக்ஷத்தின் பெருமை கூறுதல்]

(ப.) 95. ச்ரமணியை—* ச்ரமணீம் தர்மநிபுணாமபிகச்ச * என்று கபந்தன் சொன்னபடி சென்று விஷயீகரித்த [வேடுவிச்சியான] சபரியையும்,

விதுரனை—அன்னமிட்ட விதுரரையும்,

ரிஷிபத்னியை—பக்தவிலோசனத்திலிருந்து வேண்டடிசில் கொணர்ந்த ரிஷி பத்னிகளில் ஒருத்தியையும்,

பூதராக்கின—பரிசுத்தர்களாகச்செய்த,

புண்டரீகாக்ஷன்நெடுநோக்கு—புண்டரீகாக்ஷனை பகவானுடைய கடாக்ஷ மானது,

சாபமிழிந்தென்னப்பண்ணுமிறே—* அங்கணிரண்டுங்கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேல் சாபமிழிந்து * என்கிறபடியே அநுபவித்தே தீரவேண்டிய ஸகல பாபங்களும் தீரும்படி பண்ணுமன்றோ. [இந்த சூர்ணிகையில் ''பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு'' என்ற சொல்தொடரமைப்பு வெகு ஆச்சரியமானது இம்மூன்று சொற்களும் மூன்று ப்ரமாணவசனங்களை நினைப்பூட்டி சபரிமுதலிய மூன்று வ்யக்திகளிடத்தும் பொருத்தமாக அந்வயிக்கும். சபரியானவள் ''சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி'' என்று கூறினபடியாலே அத்தை நினைப்பூட்டுகிறது பூதராக்கின என்கிற சொல். விதுர வ்ருத்தாந்தத்திலே ''கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்'' என்கிற ப்ரமாணம் வருகையாலே அதில் உயிரான புண்ரீகாக்ஷ பதத்தை நினைப்பூட்டுகிறது புண்டரீகாக்ஷன் என்பது. ரிஷிபத்னியின் செய்தியைச் சொல்லுகிற ''வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும்' என்ற பாசுரத்தில் உயிரான நெடுநோக்கு என்பதை நினைப்பூட்டுகிறது மூன்றுவது பதம். இங்ஙனே சொல்தொடையமைத்தது வெகு சாதுர்யமானது.(95)

(ஸா.) 95. நித்யஸம்ஸாரியாய்ப் போந்த வொருவர்க்கு பகவத்கடாக்ஷ விஷயமான வளவிலே ப பங்ககளல்லாம் நீங்கி இத்தகைய வைபவம் உண்டாகக் கூடுமோவென்னில்; ஸ்ரீராமபிரான் தானே சென்று விஷயீகரித்த வேடுவிச்சியான சபரி ''தேவரீருடைய அழகிய திருக்கண் பார்வையினால் என்னுடைய ப்ராப்திப்ரதிபந்தகங்கள் யாவும் தொலைந்து பரிசுத்தையானேன்'' என்று சொல்லும்படியாகவும், கண்ணபிரான் தானே சென்று க்ருஹத்திலே புகுந்து விரும்பி அமுதுசெய்யப்பெற்ற ஸ்ரீவிதுரர் அழகிய திருக்கண்களின் கடாக்ஷத்தாலே ஸகல ஸாம்ஸாரிக தோஷங்களும்போய் பரிசுத்தராக்கும்படியாகவும், பக்த விலோசனமென்னும் ஸ்தானத்திலுள்ள ரிஷி பத்நிகளில் ஒருத்தி ''தத்ரைகா வித்ருதா பர்த்ரா பகவந்தம் யதாச்ருதம், ஹ்ருதோபகூஹ்ய விஜஹௌ தேஹம் கர்மநிபந்தநம்' என்று கண்ணபிரான் விஷயத்தில் ப்ராவண்யத்தாலே அப்போதே ஸம்ஸாரத்தில் நின்று விடுபட்டவளாம்படியாகவும் ஆகவிப்படி ச்ரமணீ விதுரர்களை க்ஷீணபாபராய் முக்திக்கு அர்ஹராம்படி பரிசுத்தராகவும் ரிஷிபத்நியை முக்தையாகவும் பண்ணின ஸர்வேச்வரனுடைய கடாக்ஷமானது அநுபவித்தே அறவேண்டும்படியான ஸகல பாபங்களையும் நிவர்த்திப்பிக்கத் தட்டில்லை. ... .... ... ... (95)

(மூ.) 96. கோவ்ருத்திக்கு நெரிஞ்சியைப் புல்லாக்கினவன் ஜகத்திதார்த்தமாக எனக்கே நல்லவருள்களௌென்னும்படி ஸர்வ ஸௌஹார்த்தப்ரஸாதத்தை ஒருமடை செய்து இவரைத்தன்னாக்க லோகமாகத் தம்மைப்போல் ஆக்கும்படியானார்.

[எம்பெருமானது கடாக்ஷம் ஆழ்வார் பக்கலில் பலித்த பரிசுகளைப் பேசுதல்]

(ப.) 96 கோவ்ருத்திக்கு நெரிஞ்சியைப் புல்லாக்கினவன்— * ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா, சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்தி அபீப்ஸதா * என்கிறபடியே கோரக்ஷணத்துக்காக நெரிஞ்சிக்காட்டை *உத்பந்ந நவசஷ்பாட்யமாக்கின ஸர்வேச்வரன்,

ஜகத் ஹிதார்த்தமாக— ஜகத்தினுடைய ஹிதத்திற்காக,

எனக்கே நல்லவருள்களௌென்னும்படி— * எதிர்சூழல் புக்கெனைத்தோர்பிறப்பும் எனக்கே யருள்கள் செய்ய * நல்லவருள்கள் நமக்கே தந்து * என்று பேசும்படியாக,

ஸர்வ ஸௌஹார்த ப்ரஸாதத்தை ஒருமடை செய்து— * ஸுஹ்ருதம் ஸர்வபூதா நாம் * என்கிறபடியே ஸர்வபூதங்களின் பக்கலிலும் நடக்கிற தன்னுடைய ஸௌஹார்த பலமான ப்ரஸாதமாகிற க்ருபையை இவ்வாழ்வாரொருவர் விஷய மாகவே ஒருமடைப்படுத்தி,

இவரைத் தன்னாக்க— * என்னைத் தன்னாக்கி * என்கிறபடியே அஜ்ஞாந அசக்திகளுக்கு எல்லையாயிருக்கிற விவரைத் தன்னோடொத்த ஜ்ஞாந சக்திகளை யுடையராம்படி பண்ண, (இப்படி அவனால் திருந்தினவிவர்),

லோகமாகத் தம்மைப்போல ஆக்கும்படியானார்— *ஊரும்நாடுமுலகமுந் தன்னைப் போல் * என்கிறபடியே தம்மோடு அந்வயித்த லோகத்திலுள்ளவர்களை யெல்லாம் தம்மைப்போலே பகவத் ப்ரவணராகப் பண்ணும்படியானார். .. (96)

(தா.) 96. இப்படி ஆழ்வாரை ஈச்வரன் நிர்ஹேதுகமாக விசேஷ கடாக்ஷம் பண்ணினது ஏதுக்காக? கடாக்ஷத்தின் ரீதிதான் எப்படிப்பட்டது? கடாக்ஷிக்கப் பெற்ற பின்பு இவர் எங்ஙனேயானார்? என்னில்; பசுக்களை ரட்சிக்கக் கருதின கண்ணபிரான் ஒவ்வொரு பசுவுக்கும் தனித்தனியே புல்லுந் தண்ணீருமிட்டு ரக்ஷணம் செய்வதென்றால் மிகவும் சிரமமாகுமென்று பார்த்து நல்லதோருபாயமாக நெரிஞ்சிக் காட்டைப் பசும்புற் காடாம்படி ஸங்கல்பித்தாப்போலே ஜகத்தினுடைய ஹிதார்த்தமாக, "எதிர்சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பு மெனக்கேயருள்கள் செய்ய விதிசூழ்ந்ததாலெனக்கேலம்மான் திருவிக்கிரமனையே' என்று இவர்தாம் பேசும்படி ஸர்வபூதங்களின் பக்கலிலும் நடக்கிற தன்னுடைய ஸௌஹார்த்தபலமான ப்ரஸாதமாகிற க்ருபையை இவரொருவர் விஷயமாக ஒருமடைப்படுத்தி அஜ்ஞான அசக்திகளுக்கு எல்லையாயிருக்கிற விவரைத் தன்னோடொத்த ஜ்ஞாநசக்திகளை யுடையராம்படிபண்ண, இப்படி அவனாலே திருந்தின விவர் "ஊரும் நாடு முலகமுந் தன்னைப்போல் அவனுடைய பேருந்தார்களுமேபிதற்ற" என்கிறபடியே தம்மோடு அந்வயித்த இவ்வுலகத்தாரை யெல்லாம் தம்மைப்போலே பகவத் ப்ரவணராகப் பண்ணும்படியானார். ... ... ... (96)

(மூ.) 97. அதாவது மயர்வற மதிநலமருளுகை.

[ஆழ்வாரை எம்பெருமான் தன்னுக்குவதாவது இன்னதென்றல்]

(ப.) 97. அதாவது மயர்வறமதிநலமருளுகை—தன்னுக்குகையாவது அஜ்ஞா னத்தைப்போக்கி பக்தி ரூபாபந்நஜ்ஞானத்தைக் கொடுக்கை. ... (97)

(ஸா.) 97. ஆழ்வாரை எம்பெருமான் தன்னோடொத்த ஜ்ஞான சக்திகளை யுடையராம்படி பண்ணுகையாவது என்னவென்றால், * மயர்வு அற மதிநலமருளு கைதான் அது. அஜ்ஞாநத்தை ஸவாஸநமாகப் போக்கி பக்திரூபாபந்ந ஜ்ஞானத் தைக் கொடுக்கையாம். ... .. ... (97)

(மூ.) 98. இருள் துயக்கு மயக்கு மறப்பு என்கிற அநுதய ஸம்சய விபர்யய விஸ்ம்ருதிகளற்று மலர்மிசை யெழுகிற ஞானத்தைக் காதல் அன்பு வேட்கை அவாவென்னும் ஸங்ககாமாநுராக ஸ்நேஹாத்யவஸ்தா நாமங்களோடே பரமபக்திதசையாக்குகை.

[மயர்வறமதிநலமருளுகையாவது இன்னதென்று விவரித்தல்]

(ப.) 98. இருள்துயக்கு மயக்குமறப்பு என்கிற—* இருள்தருமாஞாலம் * என் பது முதலான பாசுரங்களில் இருள் என்றும், * துயக்கன் மயக்கன் * என்பது முத லான பாசுரங்களில் துயக்கு என்றும் மயக்கு என்றும், * மறப்பும் ஞானமும்....மறப்பற வென்னுள்ளே மன்னினான் * என்பது முதலான பாசுரங்களில் மறப்பு என்றும் ஆகிய இந்நான்கு சொற்களால் சொல்லப்படுகிற,

அநுதய ஸம்சய விபர்யய விஸ்ம்ருதிகள் அற்று—அடியோடு ஞான முண்டா காமை யென்ன, உண்டான ஞானம் ஸந்தேஹ ரூபமாயிருக்கை யென்ன, அந்த ஞானம் விபரீதமாகவே யிருக்கை யென்ன, விஸ்மரண மென்ன ஆகிய நால்வகைப் பட்ட ஸங்கோசாவஸ்தையுமற்று; [இருளென்னப்படுகிற ஜ்ஞாநாநுதய மென்ன, துயக்கென்னப்படுகிற ஸம்சய மென்ன, மயக்கென்னப்படுகிற விபர்யய மென்ன மறப்பென்னப்படுகிற விஸ்மரணமென்ன ஆகிய இவை கழிந்து என்றபடி.]

மலர்மிசை யெழுகிற ஞானத்தை—* மனனக மலமற மலர்மிசை யெழுதரும் * என்கிற பாசுரப்படியே மனத்தூய்மையினாலே மலர்ந்ததாகிக் கொழுந்துவிட்டுத் தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கிக் கிளருகிற ஞானத்தை,

காதலன்பு வேட்கை அவாவென்னும்—* காதல் கடல்புரைய விளைவித்த * என் பது முதலான பாசுரங்களில் காதலென்றும், * ஆராவன்பி னடியேன் * என்பது முதலான பாசுரங்களில் அன்பு என்றும் * வேவாரா வேட்கை நோய் * என்பது முதலான பாசுரங்களில் வேட்கையென்றும் *அதனிற் பெரியவென்னவா * என்பது முதலான பாசுரங்களில் அவா வென்றும் சொல்லப்படுகிற,

ஸங்க காமாநுராகஸ்நேஹாதி அவஸ்தா நாமங்களோடே—ஸங்கம், காமம், அநுரா கம், ஸ்நேஹம் முதலான அவஸ்தைகளுக்கு அநுரூபமான நாமங்களை யுடைத் தாய்க் கொண்டு,

பரமபக்தி தசையாக்குகை—பரமபக்தி தசையளவாம்படி பண்ணுகை. (98)

(தா.) 98. *மயர்வறமதிநல மருளுகையாவது 'இருள்' என்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிற ஜ்ஞாநாநுதயமும் [அடியோடு ஞானம் பிறவாமையும்], 'துயக்கு' என்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிற ஸம்சயமும், 'மயக்கு' என்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிற பிரமமும் 'மறப்பு' என்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிற விஸ்மரணமுமாகிற, நால்வகைப்பட்ட ஸங்கோசாவஸ்தையும் அற்று, மனத்தின் தூய்மையினால் விகஸிதமாய்க் கொழுந்துவிட்டு ப்ராப்த விஷயத்தை நோக்கிக் கிளர்கிற ஞானத்தைப் பரமபக்தி தசாபர்யந்த மாகும்படி பண்ணுகை. இதற்குப் படிப்படியாகச் சில அவஸ்தாபேதங்களுண்டு; அவை தமிழில் காதல் அன்பு வேட்கை அவா எனப்படும்; ஸம்ஸ்க்ருதத்தில், ஸங்கம் காமம் அநுராகம் ஸ்நேஹம் எனப்படும். ஒரு விஷயத்தைக் கண்டவாறே மூந்துற முன்னம் உண்டாகுமதாய் ஸ்நேஹத்திற்கு அங்குரமான நிலைமை காதல் எனப்படும்; அதுதான் ஸங்கம்; அதற்குப் பிறகு உண்டாகுமதாய் அவ்விஷயத்தை அநுபவித்தன்றி நிற்க வொண்ணுதபடி யிருக்குமதாய், காதலுக்கு ஒருபடி மேற்பட்டதான நிலைமை அன்பு எனப்படும்; அதுதான் காமம். பிறகு அதனாலுண்டாகக்கூடியதாய் அநுபவிக்கவேண்டிய விஷயத்திற் காமம் இடைவிடாது தொடர்ந்து செல்லும் நிலைமை வேட்கை எனப்படும்; இதுதான் அநுராகம். அதற்குப் பிறகு அவ்விஷயத்தை மேன்மேலும் அநுபவிக்குமதொழிய விட்டுப்பிடிக்கப் பொருதபடி விளையும் நிலைமை அவா எனப்படும்; இதுதான் ஸ்நேஹம். ஆக விப்படிப்பட்ட அவஸ்தைகளுக்குத் தகுதியான நாமங்களையுடைத்தாகின்ற * மலர்மிசையெழுகிற ஞானத்தை க்ரமேண பரமபக்தி தசாபர்யந்தமாம்படி பண்ணுகைதான் மயர்வறமதிநலமருளுகை. ... (98)

(மூ.) 99 ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவங்களாலே க்க்யாத குலங்களிலே பிறந்து எழுதி வாசித்துத் தத்வஜ்ஞராய்க் குளித்தோதி யுருவெண்ணுமந்தி ஐவேள்வி அறுதொழில்களால் மிக்கு ஊன்வாடப் பொருப்பிடைத் தாம் வருந்தித் துன்பவினைகளை விடுத்து விவேகசமாதிகள் வளர எட்டு நீக்கி யெட்டு மிட்டு எட்டியை பேதப்பூவிற் சாந்தொடு தேவகாரியஞ்செய்து உள்ளம் தூயராய் வாரிப் புன்புலவகத்தினுள் இனைப்பிலையடையே விளக்கினைக் கண்டு யோக நீதி நண்ணி அறந்திகழுமறையோர் மனந்தன்னுள் அமர்ந்துறையும் அரும்பெருஞ்சுடரைக் கண்கள் சிவந்திற்படியே மனவுட்கொண்டு நிரந்தரம் மறவாமை தொடக்கருஸ்ம்ருதியாய்க் கனவில் மிக்க தர்சந ஸமமாய் ஆகத்துப் புல்கு மத்யர்த்தப்ரியமாய் வைகுஞ்சிறப்பு விட்டுக் குற்றேவலென்றதை அநந்ய ப்ரயோஜநமாய் வேதநோபாஸந ஸேவா த்யாநாதிகளென்று சொல்லுமது ஸாத்யஸாதந பக்தியாக சாஸ்த்ரஸித்தம்.

[ஸாதநபக்தியின் ஸ்வரூப நிரூபணம் பண்ணுதல்]

(ப.) ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவங்களாலே—*ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:, நராணும் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே * என்கிற ப்ரமாணத்திற்குச் சேர்ந்ததான * ஒன்றி நின்று நற்றவஞ் செய்து ஊழியூழிதோ

றெலாம் * என்கிற திருமழிசைப் பிரான் பாசுரத்தில் சொல்லுகிறபடியே ஜன்மாந்தர ஸஹஸ்ரங்களிலே பகவத்ஸமாராதன ரூபமாக அனுஷ்டிக்கப்பட்ட ஸத்கர்மங்களாலே, [ஸத்கருமங்களுக்குப்பயனாக]

**க்க்யாதகுலங்களிலே பிறந்து**—* சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோபி ஜாயதே, அதவா யோகிநாமேவ குலே மஹதி தீமதாம் * * ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதிக்க்யாத யசஸாம் * என்கிறபடியே தத்வஜ்ஞானிகளாய் பரமயோகிகளென்று ஜகத்ப்ரஸித்தரானவர்களுடைய குலங்களிலே பிறந்து,

**எழுதி வாசித்துத் தத்வஜ்ஞராய்**—*தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும்* என்கிற திருமழிசையார் பாசுரப்படியே பகவத் விஷயத்தை யநுஸந்தித்து அது விஷயமான சொற்களை எழுதுவது வாசிப்பது பிறர் சொல்லக் கேட்பதாய்க்கொண்டு இங்ஙனே பிறந்த தத்துவஞானத்தை யுடையவராய்,

**குளித்து 'ஓதியுருவெண்ணும் அந்திஜபவேள்வி அறுதொழில்களால் மிக்கு**—* குளித்து மூன்றனலையோம்பும் * என்கிற திருமாலைப் பாசுரத்தின்படியே உபாஸநாங்கமான நித்யகர்மாநுஷ்டானத்திற் குறுப்பாக ஸ்நானத்தைப்பண்ணி, * ஓதியுரு வெண்ணு மந்தியால் * ஐவேள்வியோடறங்கம் வல்லவர் * அறு தொழிலந்தணர் * என்கிற பாசுரங்களிற் சொல்லுகிறபடியே ஸந்த்யாவந்தந காயத்ரீஜபமென்ன, பஞ்சமஹா யஜ்ஞமென்ன, அத்யயனம் முதலிய ஷட்கர்மங்களென்ன இப்படியிருந்துள்ள நித்யநைமித்திக கர்மாநுஷ்டானங்களினால் பரிபூர்ணராய்,

**ஊன்வாடப் பொருப்பிடைத் தாம் வருந்தி**—* ஊன்வாடவுண்ணா துயிர்காவலிட்டு * பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும் ஐந்து நெருப்பிடையே நிற்கவும் * வீழ்கனியு மூழிலையு மென்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி * என்கிற பாசுரங்களின்படியே, தவம்புரிகைக் குடலாக உணவைக் குறைத்தும் உஷ்ண காலங்களில் மலையுச்சியிலும் பஞ்சாக்நிமத்யத்திலும் நின்றும், சீதகாலங்களிலே தடாகங்களில் மூழ்கிக் கிடந்தும் சருகிலை தின்றும் இப்படி தவத்தினால் உடம்பை யுலர்த்தி,

**துன்ப வினைகளை விடுத்து**—கீழ்ச்சொன்ன கர்மாநுஷ்டானங்களினால் * மேவு துன்பவினைகளை விடுத்து * என்கிறபடியே ஆத்மாவோடு பிரிக்க முடியாதபடி பொருந்திக்கிடக்கிற துக்கஹேதுவான பாபங்களைப் போக்கி,

**விவேக சமாதிதன் வளர**—மனத்தூய்மைக்கு ஹேதுவான விவேகம் முதலிய ஏழும் சமதமாதிகளான ஆத்மகுணங்களும் வளர,

**எட்டு நீக்கி**— * ஈனமாய வெட்டு நீக்கி * (திருச்சந்தவிருத்தம்) என்கிற பாட்டிற்சொன்னபடியே அவித்யை முதலான எட்டையும் போக்கி,

**எட்டுப் இட்டு**— * இனமலரெட்டு மிட்டு * கந்தமாமலரெட்டுமிட்டு * என்கிற பாசுரங்களிற் படியே அஹிம்ஸை முதலான எட்டுப் புஷ்பங்களையும் ஸமர்ப்பித்து,

**எட்டினைய பேதப்பூவில் சாந்தொடு தேவகாரியஞ் செய்து**—* எட்டினைய பேதமோடிறைஞ்சி நின்று * என்கிற அஷ்டாங்கப்ரணாமத்தைப் பண்ணியும், * பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து * சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை மலர்கள் நல்ல வாய்ந்துகொண்டு * தேவகாரியஞ் செய்து * என்கிற பாசுரங்களிற்

படியே தூபதீப சந்தன தீர்த்தாதி ஸமாராதநோபகரணங்களைக் கொண்டு பகவதாராதனத்தைச் செய்தும்,

**உள்ளம் தூயராய்**—* ஒன்றிநின்று நல்தவஞ்செய்து .......உள்ளிஉள்ளந் தூயராய் * என்கிற திருச்சந்தவிருத்தப் பாசுரப்படியே பரிசுத்தமநஸ்கராய்,

**வாரிப் புன்புலவகத்தினு வினைப்பினையடைவே**—* வாரிசுருக்கி மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ * புன் புலவழியடைத்து அரக்கிலச்சினை செய்து நன்புல வழி திறந்து ஞான நற்சுடர் கொளீஇ * ஐம்புலனகத்தினுள் செறுத்து * * இளைப்பினை யியக்கம் நீக்கி * என்கிற பாசுரங்களிற் சொல்லுகிற **வடைவிலே,**

**விளக்கினைக்கண்டு**—* விளக்கினை விதியிற் காண்பார் * என்கிறபடியே ஆத்மஸ்வருபத்தை சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே ஸாக்ஷாத்கரித்து,

**யோக நீதிநண்ணி**—* நன்றிருந்து யோகநீதி நண்ணுவார்கள் * என்கிறபடியே **யோகமாகிற வுபாயத்தாலே** கிட்டி,

**அறந்திகழு மறையோர் மனந்தன்னுளமர்ந்துறையு மரும்பெருஞ்சுடரைக் கண்கள் சிவந்திற்படியே மனவுட்கொண்டு**—* மறந்திகழு மனமொழித்து வஞ்சமாற்றி வன் புலன்களடக்கி யிடர்ப்பாரத் துன்பந் துறந்து இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான அறந்திகழுமனத்தவர் தம்கதியை * என்றும், * மறையோர் மனந்தன்னுள் விண்ணுளார் பெருமானை * என்றும், * மாதவமானவர் தங்கள் சிந்தை அமர்ந்துறைகின்ற வெந்தை * என்றுமுள்ள பாசுரங்களிற் படியே பரம யோகிகளின் ஹ்ருதயங்களிலே * ஆரமார்வனரங்க னென்னுமரும்பெருஞ் சுடரொன்றினைச் சேரு நெஞ்சினர் * என்னும்படியே உறைந்திருக்கிற பரஞ்சுடரை * கண்கள் சிவந்து * என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே அவயவசோபை ஆபரணசோபை ஆயுதசோபைகளோடே கூடி நீலமேகச்யாமமா யிருந்துள்ள திவ்ய விக்ரஹத்துடனே * கற்றவர் தந்தம் மனவுட்கொண்டு * என்று அறிவுடையரான யோகிகள் தங்கள் தங்கள் ஹ்ருதயங்களிலே கொள்வதாகச் சொல்லியிருக்கிறபடியே ஹ்ருதய கமலத்திலே த்யானம் பண்ணி,

**நிரந்தரம் மறவாமை தொடக்கரு ஸ்ம்ருதியாய்**—* நிரந்தரம் நினைப்பதாக * என்றும் * நின்மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாய் * என்றும், * சோர்விலாத காதலால் தொடக்கருமனத்தராய் * என்றுமுள்ள பாசுரங்களிற்படியே இடையறுத அநுஸந்தானமாய்,

**கனவில் மிக்க தர்சனஸமமாய்**—* கனவில் மிகக் கண்டேன் * என்று பூதத்தாழ்வாரருளிச்செய்தபடியே ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய்,

**ஆகத்துப்புல்கும் அத்யர்த்தப்ரியமாய்**—* நாடோறும் ஞானத்தால் ஆகத்தணைப்பார்க்கு * என்றும், ஆகத்தணைப்பாரணைவரே * என்றும், * எல்லையிலந்நலம்புல்கு * என்றும் * ஆர்வமு புரிய பாசிறுல் புல்கில் * என்றுமுள்ள பாசுரங்களில் அணைப்பதாகவும் புல்குவதாகவுஞ் சொல்லுகையாலே மாதரைப் புல்குவதுபோலே * ப்ரியோஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் * என்னும்படி மிகவும் ப்ரியமாய்,

**வைகுஞ்சிறப்பு விட்டுக் குற்றேவ லென்னுத அநந்யப்ரயோஜநமாய்**—* நின்புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்த மென்றருளும் வான் *

என்றும் * அமுத வெள்ளத்தானும் சிறப்பு விட்டு ஒருபொருட்கு அசைவோரசைக ......நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே * என்றும், * உனது பாலே போல் சீரில் பழுத்தொழிந்தேன் மேலால் பிறப்பின்மைபெற்று அடிக்கீழ்க் குற்றேவலன்று மறப்பின்மை யான் வேண்டும் மாடு * என்றுமுள்ள பாசுரங்களிற்படியே திருநாட்டில் அநுபவத்தையும் உபேக்ஷிக்கும்படி தானே பரம ப்ரயோஜநமாய் ரஸிக்கையாலே அநந்யப்ரயோஜநமாய்,

**வேதநோபாஸந ஸேவா த்யாநாதிகளென்று** சொல்லுமது—வேதநமென்றும் உபாஸநமென்றும் ஸேவையென்றும் த்யானமென்றும் இப்படிப்பட்ட சொற்களாலே சொல்லப்படுகிற பக்தியானது,

**ஸாத்ய ஸாதந பக்தியாக சாஸ்த்ரஸித்தம்**—சேதநப்ரயத்ந ஸாத்யமாய் பகவத் ப்ராப்தி ஸாதனமான பக்தியாக வேதாந்த சாஸ்த்ரத்திலே சொல்லப்பட்டது. (98)

(**நா.**) **99.** (இனிமேல் இவ்வாழ்வாருடைய பக்தியானது உபாஸகர்களுடைய பக்தியென்ன, ப்ரபந்நர்கள் எம்பெருமானிடத்துப் பெறும் கைங்கர்யோபகரணமான பக்தியென்ன இவ்விரண்டு பக்திகளிற் காட்டிலும் விலக்ஷணமென்பதையறிவிக்கைக்காக, முதலில் ஸாதநபக்தியின் நிலைமை காட்டப்படுகிறது.) அநேக ஜன்மங்களிலே பகவதாராதந ரூபமாக அநுஷ்டித்த ஸத்கர்மங்களாலே ப்ரஹ்ம வித்துக்களாக ப்ரஸித்தரானவர்களுடைய வம்சங்களிலே பிறந்து பகவத் விஷயமான சப்தங்களை எழுதுவது வாசிப்பது பிறர் சொல்லக் கேட்பதாய்க் கொண்டு இந்த சாஸ்த்ராப்யாஸமுகேந பிறந்த தத்த்வஜ்ஞானத்தை யுடையராய், நித்ய கர்மாநுஷ்டாநோபயுக்தமா யிருந்துள்ள காய சுத்த்யர்த்தமான ஸ்நானத்தைப் பண்ணி, ஸந்தியாவந்தந காயத்ரீ ஜபம், பஞ்ச மஹாயஜ்ஞம், ஷட்கர்மங்களென்றிப்படி யிருந்துள்ள நித்ய நைமித்திக கர்மாநுஷ்டாநங்களால் பரிபூர்ணராய், நித்ய கர்மாதிகளைக் குறைவற அநுஷ்டிக்கையாலே தபஸ்ஸில் யோக்யதை பிறந்தவாறே காயசோஷணார்த்தமாக ஆஹாரத்தைக் குறைத்து ப்ராணதாரணத்துக்குத் தக்க வளவாக்கி உஷ்ணகாலங்களில் மலையுச்சியிலும் பஞ்சாக்நிமத்யத்திலும் நின்று சீதகாலங்களில் குளங்களிலே முழுகிக் கிடந்து ஜீர்ண பர்ண பலாசநராயும் இப்படி தபஸ்சர்யையாலே உடம்பை யுலர்த்தி, கீழ்ச்சொன்ன கர்மாநுஷ்டாநத்தாலே துக்க ஹேதுவான பாபங்களைப்போக்கி, இப்படி ப்ரதிபந்தக பாபநிவ்ருத்தியாலே மநஸ் சுத்திஹேதுவான விவேகாதிகளும் சமதமாதிகளும் அபிவ்ருத்தமாக, காமக்ரோத லோப மோஹ மத மாத்ஸர்ய அஜ்ஞாநாஸூயைகளாகிற எட்டையும் போக்கி, அஹிம்ஸை முதலான அஷ்டவித புஷ்பங்களையுமிட்டு ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணி, புஷ்பாங்கராகாதிகளான ஸமாராதநோபகரணங்களை ஸம்பாதித்துக் கொண்டு பகவத் ஸமாராதநத்தைச் செய்து பரிசுத்தாந்தஃகரணராய், விஷயாந்தர வனங்களிலே ஓடாநிற்கிற மிகக்கொடிய இந்த்ரியங்களாகிற மத்தகஜத்தை ஜ்ஞாநமாகிற அங்குசத்தாலே வசப்படுத்தி விஷய போகங்களைக் குறைத்து பகவத் விஷய ப்ரவணமாக்கி இந்த்ரிய மார்க்கத்தைத் தடுத்து, இப்படி ஜிதேந்த்ரியராய் அவித்யா அஸ்மிதா ராகத்வேஷாபிநிவேசரூப க்லேச பஞ்சக ஸஞ்சாரத்தைத் தவிர்த்து ஸ்வயம்பிரகாசமான ஆத்ம ஸ்வரூபத்தை சாஸ்த்ரோக்த ப்ரக்ரியையாலே ஸாக்ஷாத்கரித்து, யோகமாகிற உபாயத்தாலே கிட்டி ஆந்ருசம்ஸ்யரூப தர்மத்தை

யுடையவர்களான தார்மிகாக்ரேஸரருடைய ஹ்ருதயத்திலே பொருந்தியிராநின்றுள்ள பெறுதற்கரிய அத்யுஜ்ஜ்வல விக்ரஹமுடையனுயிருக்கும் ஸர்வேச்வரனை ''கண்கள் சிவந்து'' என்ற பாட்டில் சொல்லுகிறபடியே ஹ்ருதய கமலத்திலே த்யானம்பண்ணி, அந்தத்யாநத்துக்கு விச்சேதமும் விஸ்ம்ருதியுமற்று அநுஸ்யூதமாக நடக்கும் த்ருவாநுஸ்ம்ருதியாய், ஸ்வப்னத்திற் காட்டிலும் அதிசயிதமாக ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், அப்படி தர்சந ஸமமான அதுதான் அங்கநா பரிஷ்வங்கம் போலே ஸ்மர்த்தவ்ய விஷய ஸாரஸ்யத்தாலே மிகவும் ப்ரியமாய், பரமபதத்திலநுபவத்தையு முபேட்சிக்கும்படி தானே பரமப்ரயோஜநமாம்படி ரஸிக்கையாலே அநந்ய ப்ரயோஜநமாய், வேதநமென்றும் உபாஸநமென்றும் ஸேவையென்றும் த்யாநமென்று மித்யாதி சப்தங்களால் சொல்லப்படுகிற பக்தியானது கர்மஜ்ஞாந ஸம்ஸ்க்ருதாந்தஃகரணனுக்குப் பிறக்குமதொன்ருகையாலே சேதந ஸாத்யமாய் பகவத்ப்ரஸாதநோபாயதயா தத் ப்ராப்திஸாதநமான பக்தியாக வேதாந்த சாஸ்த்ரத்திலே சொல்லப்பட்டது.

[இத்தால் கர்மஜ்ஞாந ஸாத்யையாய் பகவத்ப்ராப்தி ஸாதநமான உபாஸகருடைய பக்தியின் வேஷம் காட்டப்பட்டது. ப்ரபந்நர் எம்பெருமானிடத்தில் ப்ரார்த்தித்துப் பெறுகிது கைங்கர்யோபகரண பக்தி விசேஷம் மேல் ப்ரதிபாதிக்கப்படுகிறது. .... ... ... ... ... (99)

(மூ.) 100. ஸ்வீக்ருத ஸித்தஸாதநர் இத்தை ஸாத்யமாக இரக்க ப்ராப்திக்கு முன்னே ஸித்திக்கும்.

[ப்ரபந்நர்களுடைய பக்திஸ்வரூபத்தின் நிரூபணம்.]

(ப.) 100 ஸ்விக்ருதஸித்த ஸாதனர்—ஸித்தோபாயஸ்வீகாரம் பண்ணின ப்ரபந்நர்கள்.

இத்தை ஸாத்யமாக இரக்க—இந்த பக்தியும் கைங்கர்யம் போலே நமக்குப் பலன் என்றெண்ணி * பகவந் பக்திமபி ப்ரயச்ச மே * என்று எம்பெருமானிடத்திலே ப்ரார்த்திக்க,

ப்ராப்திக்கு முன்னே ஸித்திக்கும்—சரீரவியோகமான பின்பு எம்பெருமானை யடைவதற்கு முன்னே கைகூடும். ... .... ... (100)

(தா.) 100. (ப்ரபந்நர்களுடைய பக்தி ஸ்வரூபம் நிருபிக்கப்படுகிறது.) ''த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே'' என்று ஸித்தோபாய ஸ்வீகாரம் பண்ணின ப்ரபந்நர், போஜனத்துக்குப் பசிபோலே இந்த பக்தி கைங்கர்யத்துக்கு உபகரணமாகையாலே ப்ராப்யமான கைங்கர்யம்போலே இதுவும் நமக்கு ப்ராப்யமென்று கருதி ''பகவந்! பக்திமபி ப்ரயச்ச மே'' இத்யாதிகளிற்படியே இந்த பக்தியை பகவான் பக்கலில் ப்ரார்த்திக்க, சரீர வியோகத்துக்குப் பிறகு பகவத் ப்ராப்தி பண்ணுவதற்கு முன்னே ஸித்திக்கும். ... .... ... ... (100)

(மூ) 101. இது உபயமுமன்றிக்கே அறியாக்காலத்தே ஒக்கப்பிறந்து நழுவிநின்று கட்டமே நோயா யுலர்த்தி வீழ்ந்தலப்பாய் த்யாக ஸ்வீகார நிஷ்டா ஹாநிகளாக்கி ஸத்தா போகவ்ருத்த்யுபகரணமாவதொன்று.

[ஆழ்வாருடைய பக்திவிசேஷத்தின் பரிசு]

(ப.) 101. இது உபயமுமன்றிக்கே—கீழே சொல்லப்பட்ட இவ்வாழ்வாருடைய பக்தியானது, ஸ்வயத்நஸாத்யமாய் உபாய பூதமான பக்தி போலவும், பலமாக ப்ரார்த்திக்கப்பட்டுவரும் பக்தி போலவுமல்லாமல்,

**அறியாக்காலத்தே ஒக்கப்பிறந்து**—* அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து * என்கிறபடியே அறியாக்காலமே பிடித்துக் கூடவே பிறந்து,

**தழுவி நின்று**—* தழுவி நின்ற காதல் தன்னால் * என்று தாமே சொல்லும்படி திருத்துழாய்க்குப் பரிமளம் போலே ஸஹஜமாய்ப் பிறந்து,

**கட்டமே நோயாய்**—* கட்டமே காதலென்று மூர்ச்சிக்கும் * என்று கஷ்டமென்பது, * வேட்கை நோய்கூர * வேவாரா வேட்கை நோய் * என்று வியாதியென்பதாம்படி வெறுப்பை விளைத்து,

**உலர்த்தி வீழ்ந்து அலப்பாய்**—* மெல்லாவியுள்ளுலர்த்த * என்னும்படி ஆத்ம வஸ்துவைக் குருத்துவற்றாக வுலர்த்தி, * உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து* என்று, கடலிலே விழுந்தாற்போலே கரையேற வொண்ணாதபடி விழுந்து, * உன்னைக் காண்பான் நானலப்பாய் * என்று அவ்விஷயத்தைக் காணவேணுமென்று அலமாக்கப்பண்ணி,

**த்யாக ஸ்வீகாரநிஷ்டா ஹாநிகளாக்கி**—(த்யாக நிஷ்டாஹாநியும் ஸ்வீகார நிஷ்டாஹாநியுமாக்கி என்று பிரித்துக்கொள்வது.) உபாயாந்தரங்களை விட்டு அவனே உபாயமென்று அறுதியிட்டிருக்குமிவரை மடலெடுக்கச் செய்கையாலே [விட்டவற்றிலே மறுபடியும் மூட்டுகையாலே] த்யாக நிஷ்டாஹாநியை விளைத்தும், ஒரு முறையே செய்யவேண்டியதான ஸித்தோபாய ஸ்வீகாரத்தை * நோற்ற நோன்புபதிகம் தொடங்கி நான்கு பதிகங்களிலே அடுத்தடுத்துச் செய்கையாலே ஸ்வீகார நிஷ்டாஹாநியை விளைத்தும்,

**ஸத்தாபோகவ்ருத் த்யுபகரணமாவ தொன்று**—ஆழ்வாருடைய ஸத்தைக்கும் அநுபவத்திற்கும் கைங்கர்ய வ்ருத்திக்கும் உபகரணமாயிருக்குமது. ... (101)

(தா.) 101. முன் சொல்லப்பட்ட ஆழ்வாருடைய பக்தியானது உபாய பக்தியும் பலபக்தியுமாகிற இவ்விரண்டு பக்தியுமல்லாமல், திருத்துழாய்க்குப் பரிமளம் போலே கூடப்பிறந்து விடவொண்ணாததாய், மநோரதப்படி அநுபவிக்கப் பெறாதபோது போஜநம் பெறாத தசையிற் பசிபோலே கஷ்டமென்பது வ்யாதியென்பதாம்படி வெறுப்பைவிளைத்து, அசோஷ்யமான ஆத்மவஸ்துவை சோஷிப்பித்து, அபிநிவேசு ஸாகரத்திலே விழுந்து துவளும்படி பண்ணி, இதரோபாய பரித்யாக பூர்வகமாக 'அவனே உபாய' மென்று அறுதியிட்டிருக்குமிவரை "குதிரியாய் மடலூர்துமே" என்னும்படி த்யஜித்த வுபாயத்திலே மூட்டுகையாலே த்யாக நிஷ்டாஹாநியையும், "உன பாதம் சேர்ந்தேனே" "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று அடிக்கடி ப்ரபத்திபண்ணும்படி யாக்குகையாலே ஸக்ருத் கர்த்தவ்யமான ஸ்வீகாரத்தில் நிஷ்டாஹாநியையு முண்டாக்கி ஸத்தைக்கும் போகத்துக்கும் வ்ருத்திக்கும் உபகரணமா யிருப்பதொன்று.

[ஆக, இவருடையபக்தி ஸாதித்துப் பெற்றதுமன்று, அபேட்சித்துப் பெற்றதுமன்று; ஸஹஜையா யிருப்பதொன்று என்றதாய்த்து.] ... ... (101)

(மு) 102. இடகிலேன் நோன்பறிவிலேன் கிற்பன் கீழ்நாள்களென்கையாலே ஸாதநத்ரய பூர்வாப்யாஸஜமல்ல.

[ஆழ்வாருடைய பக்தியைப்பற்றி அவர் தாமே அருளிச்செய்திருப்பவை]

(ப.) 102. இடகிலேன் என்கையாலே—* இடகிலே னொன்றட்டகில்லேன் ஐம்புலன் வெல்லகில்லேன் * என்றருளிச் செய்கையாலும்,

நோன்பறிவிலே னென்கையாலே—* நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் * என்றருளிச் செய்கையாலும்,

கிற்பன் என்கையாலே—* கிற்பன் கில்லே னென்றிலன் முனநாளால் * என்றருளிச் செய்கையாலும்,

கீழ்நாள்க ளென்கையாலே—*தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன்—ஆழியங்கையம்மானை யேத்தாதயர்த்து—வாளாவிருந் தொழிந்தேன் கீழ்நாள்க ளெல்லாம் * என்றருளிச்செய்கையாலும்,

ஸாதநத்ரய பூர்வாப்யாஸஜ மல்ல—முற்பிறவிகளில் கர்ம ஜ்ஞாந பக்திகளாகிற மூன்று உபாயங்களின் அப்யாஸத்தாலுண்டானதுமல்ல இவருடைய பக்தி. (102)

தா. (102) இங்ஙனன்றிக்கே இவருடைய பரம பக்தி—கர்மஜ்ஞாந பக்திகளாகிற ஸாதநத்ரயத்தையும் இந்த ஜந்மத்தி லநுஷ்டிக்கையாலேயாதல் பூர்வ ஜந்மங்களி லப்யாஸத்தாலே யாதல் உண்டானதா யிருக்கக்கூடாதோ வென்னில்; "இடகிலே னொன்றட்டகில்லே னைம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித் தேத்தகில்லேன்" "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" இத்யாதி பாசுரங்களிலே கர்மஜ்ஞாந பக்தியோகங்க ளொன்றிலும் தமக்கு நிவேச மில்லை யென்னுமிடத்தை ஆழ்வார் தாமே அருளிச் செய்கையாலே வர்த்தமாந ஜந்மத்தில் கர்மஜ்ஞாந பக்திகளாகிற ஸாதநத்ரயாநுஷ்டாநத்தா லுண்டானதல்ல; "கிற்பன் கில்லே னென்றிலன் முனநாளால்" என்றும், தெரிந்துணர் வொன்றின்மையால் தீவினையேன் வாளா விருந்தொழிந்தேன் கீழ்நாள்க ளெல்லாம்" என்று மருளிச்செய்கையாலே பூர்வ ஜந்மங்களி லப்யாஸத்தாலுண்டானது மல்ல. (102)

(மு) 103. இப்பிறப்பே சிலநாளிலென்றபோதே யிரண்டுங்கழியும்.

[ஆழ்வாருடைய பக்தியின் வைலக்ஷண்யம்]

(ப.) 103. இப்பிறப்பே சிலநாளி லென்றபோதே—* குறிக்கொள் ஞானங்களால் எனையூழி செய்தவமும் கிறிக்கொண்டிப்பிறப்பே சில நாளிலெய்தினன் யான் * என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கையாலே,

இரண்டும் கழியும்—முற்பிறவிகளில் அப்யாஸத்தினாலுண்டான தென்றும் இந்த ஜன்மத்திலே உபாயத்ரயத்தின் அனுஷ்டானத்தினாலுண்டானதென்றும் சொல்லுகையாகிற இரண்டும் போம். ... ... ... (103)

(தா.) 103. இன்னமும், "குறிக்கொள் ஞானங்களா லெனையூழி செய்தவமும் கிறிக் கொண்டிப் பிறப்பே சிலநாளிலெய்தினன் யான்" என்று யமநியமாத்ய

வஹிதராய்க் கொண்டு ஸம்பாதிக்க வேண்டிய வேதநத்யாந உபாஸநாத்யவஸ்தா விசேஷங்களான ஜ்ஞாநங்களாலே அநேக கல்பம்கூடி ச்ரவணமாய் மநநமாய் த்ருவாநு ஸ்ம்ருதியாய் வரக்கடவதான பக்தியோகமாகிற தபஸ்ஸினுடைய பலத்தை ஒருயத்நமுமில்லாமல் ஸதுபாயபூதனான அவ்வெம்பெருமானாலே இஜ் ஜந்மத்திலே ஸ்வல்ப காலத்திலே பெற்றேனென்று ஆழ்வார் தாமே ஸ்பஷ்டமாக அருளிச்செய்து வைக்கையாலே வர்த்தமாந ஜந்மத்தில் ஸாதந த்ரயாநுஷ்டாநத்தாலுண்டானதென்றும் பூர்வ ஜந்மாப்யாஸத்தாலுண்டானதென்றும் சொல்லுகிற இரண்டு வாதமும் கழியுண்டதாய்த்து. ... .... .... (103)

(மூ.) 104. பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய், கலியாரேவ ஆளும் வன்குறும்பர் குடியேறிப் பெருங்குடியும் தங்கள் சுருத்துள்ளேயாக்கிப் படிந்துண்ணும் போகத்தே தூராதே பொறுக்கொணுப் போகத்துக்குக் காவல்செய்து குமைத்துத் திரித்து வீழ்த்தி வலித்தெற்றி அருவி யறுத்துக் கடனுயின இறுப்பிக்கப் பாழ்த்த விதியானவாறே தன்பால் மனம் வைப்பிப்பதாகத் தேய்ந்தறமன்னி ஒள்வாளுருவி வினைத் தூற்றை வேரறுவித்துத் தீக்கொளீஇக் கவ்வை யெருவிட்டு அமுதவாறு தலைப்பற்றி ஈரியாய்க் கசிந்ததிலே ஈரநெல்வித்தி யெழுநாற்றுக்களை யையும் வேர்முதல் மாய்த்துப் பட்டிச் சேவதக்கி மீதுகொள்ளாமல் குறிக்கொள்வித்துக் கடல்புரைய விளைந்து தலைவணக்கினவாறே நாளுநாள் கோட்குறையாக நின்றுரறியாமல் குந்தங்கொண்டு ஆராமை யுண்டு காலக்கழிவாலே நிலத்துகாமல் பற்றறுத்துத் தண்டாலடித்துப் பதராறுத்துப் போர்த்ததோல் விடுத்து ஸூக்ஷ்ம வொட்டும் நீரிலே கழுவி வேரேர் கலத்திட்டுப் பைந்தொடி மடந்தையரைக்கொண்டு ஷட்குண ரஸாந்நமாக்கி வானேர்க்கு ஆராவமுதானவாறே முற்றுமுண்ண முன்னம் பாரித்து உழுவதோர் நாஞ்சில்கொண்டு பொருக முயலும் பத்தி யுழவன் க்ருஷி பலமிறே.

[ஆழ்வார்க்கு இந்த பக்தி உண்டானது ஈச்வரனுடைய க்ருஷிபலமென்று விவரித்தல்]

(ப.) பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செய்—*முடிவில் பெரும்பாழ்* என்கிற படியே சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைத்துக் கொள்ளலாம் நிலமான ப்ரக்ருதியில் க்ஷேத்ரஜ்ஞனுகிற பத்தசேதநனுடைய * நெஞ்சப்பெருஞ்செய் * என்று, பக்திக்கு விளைநிலமான மனஸ்ஸானது; (இதற்கு "பாழ்த்த விதியானவாறே" என்பதோடு ஸம்பந்தம்)

கலியாரேவ ஆளும் வன்குறும்பர் குடியேறி—*ஏவினார் கலியார் நலிக வென்றென் மேல் * என்கிறபடியே கலியுகமாகிற பகைவன் 'இவனை நலியுங்கோள்' என்று ஏவ, * மனமாளுமோரைவர் வன்குறும்பர் தம்மை * என்கிறபாட்டில் சொல்லப்படுகிற இந்திரியங்களாகிற குறும்பர்கள் *கோவாய் ஐவரென் மெய் குடியேறி * என்கிறபடியே; தேஹத்திலே குடிபுகுந்து,

பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளேயாக்கி — பெருங்குடிபோலே தங்களுக்கு ப்ரதானமான மனஸ்ஸையும் * ஐம்புலன் கருதுங் கருத்துளே திருத்தினேன் மனத்தை * என்கிறபடியே தாங்கள் நினைத்தவழியே நடக்கும்படியாகப்பண்ணி,

படிந்துண்ணும் போகத்தே தூராதே பொறுக்கொணுப் போகத்துக்குக் காவல் செய்து— * புலன் படிந்துண்ணும் போகம் * என்கிறபடியே விஷயங்களிலே அவகாஹித்து அநுபவிக்கிற அநுபவங்களிலே * தூராக்குழி * என்கிறபடியே ஒருகாலும் நிரம்பாதே, * பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக் கொணுப் போகமே நுகர்வான் * என்கிறபடியே இவற்ருல் வந்த ஹிம்ஸையைப் பொறுத்திருப்போமென்ருல் பொறுத்திருக்க வொண்ணுதபடியான விஷயபோகங்களை புஜிக்கவேணுமென்று, * கடியார் காளைய ரைவர் புகுந்து காவல் செய்த* என்கிறபடியே இந்த சேதனனைச் சிறைசெய்து,

குமைத்துத் திரீந்து வீழ்த்தி வலித்தெற்றியருவியறுத்துக் கடனுயின இறுப்பிக்க— *கூறை சோறிவை தாவென்று குமைத்துப் போகார் *செக்கிலிட்டுத் திரிக்குமைவர்* *கொடு வன்குழியினில் வீழ்க்குமைவர்* ஐவர் திசை திசை வலித்தெற்றுகின்றனர்* * ஐவர் அறுத்துத் தின்றிட * என்கிற பாசுரங்களிற்படியே பலவிதமான ஹிம்சைகளைச் செய்து * பொருளின்பமென விரண்டுமிறுத்தேன் ஐம்புலன்கள் கடனுயின * என்கிறபடியே அர்த்த காமங்களிரண்டையும் கடமையிறுப்பாரைப் போலே கொடுத்தொழிந்தே னென்னும்படி தங்களுக்கான கப்பங்களை இறுப்பித்துக்கொள்ள,

பாழ்த்த விதியானவாறே—* இப்படியாகையாலே * வாழ்த்தியவனடியைப் பூப்புனைந்து நின்தலையைத் தாழ்த்து இருகை கூப்பென்ருல் கூப்பாத பாழ்த்தவிதி * என்கிறபடியே எம்பெருமான் அங்கீகரிப்பதற்குப் பற்ருசான ஸுக்ருதம் சிறிதுமற்று மனஸ்ஸு பாழ்பட்டவாறே,

தன்பால் மனம் வைப்பிப்பதாகத் தேய்ந்து அறமன்னி— * தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி * என்கிறபடியே இப்படி பாழ்பட்ட மனஸ்ஸைப் பயிர்படும்படி தன் பக்கலிலே வைக்கப் பண்ணுகைக்காக * எனதேழை நெஞ்சாளும் திருந்தாத வோரைவரைத் தேய்ந்தறமன்னி இருந்தான் * என்கிறபடியே இந்திரியங்களாகிற ஐவர் க்ஷயித்து முடிந்து போம்படி ஸ்தாவரப்ரதிஷ்டையாயிருந்து,

ஒள்வாளுருவி வினைத்தூற்றைவேரறுவித்து—* நீபணித்த அருளென்னு மொள்வாளுருவி * என்கிறபடியே க்ருபையாகிற வாளையுருவி, *கொடு வினைத்தூறு* என்கிறபடியே கொடிய பாபமாகிற தூற்றை * வினைகளை வேரறப் பாய்ந்து * என்றும் * தொன் மாவல்வினைத் தொடர்களை முதலரிந்து * என்றும் சொல்லுகிறபடியே மறுகிளை யுண்டாகாதபடி வேரோடும் அறுப்பித்து,

தீக்கொளீஇ— வெட்டின காட்டைச் சுட்டுப் போகடுவது போலே * இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால் * என்கிறபடியே முன்பு வேரறுவித்தவற்றை உருமாய்ந்து போம்படி கொளுத்தி,

கவ்வை யெருவிட்டு—பயிருக்கு எருவிடுவது போல பக்தியாகிற பயிருக்கு * ஊரவர் கவ்வை யெருவிட்டு * என்கிறபடியே ஸம்ஸாரிகள் சொல்லும் பழிமொழியை எருவாகவிட்டு,

அமுதவாறு தலைப்பற்றி—பயிர்த்தலையிலே தண்ணீரைத் தேக்கிச் சேடையாக்குவது போல * அறிவையென்னு மமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே * என்கிறபடியே ஞானமாகிற அம்ருதநதியை வாயளவாய்த் தலைக்குமேலே போம்படி பெருகப்பண்ணி,

ஈரியாய்க் கசிந்ததிலே—*காரியம் நல்லனகள் அவை காணில் என் கண்ணனுக்கென்று ஈரியாயிருப்பாள் * என்றும் * கசிந்த நெஞ்சினளாய் * என்றும் சொல்லுகிறபடியே அந்த ஜ்ஞான வாரியாலே பதஞ்செய்து செவ்வி வாய்த்த நெஞ்சிலே.

ஈரநெல்வித்தி—* ஈரநெல்வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செயுள் * என்கிறபடியே ஈரமென்று சொல்லப்படுகிற ஸங்கமாகிற நெல்லை விரைத்து,

எழு நாற்றுக்களையையும் வேர் முதல் மாய்த்து—* செய்த்தலை யெழுநாற்று * என்கிறபடியே எம்பெருமானுக்கு போக்யமாய் வளருகிற இப்பயிரில் உண்டாகக்கூடிய அஹங்கார மமகாரங்களாகிற களைகளை * நீர்நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து * என்கிறபடியே வேரோடுங் களைந்தொழித்து,

பட்டிச்சே அதக்கி—களைபறித்தாலும் போராமல் பட்டிபுகாது நோக்கவேண்டுமாகையாலே * வன்புலச் சேவையதக்கி* என்கிறபடியே பக்தியாகிற இப்பயிருக்குப் பட்டியான இந்திரியங்களாகிற காளைமாடுகளின் செருக்கைத் தொலைத்து,

மீது கொள்ளாமல் குறிக் கொள்வித்து—பயிர் பலித்தாலும் பிறர் கொள்ளாமே ரக்ஷை பண்ணிவைக்க வேண்டுகையாலே * விளைந்த தானியமு மிராக்கதர் மீது கொள்ளகிலார்களே * என்கிறபடியே அநந்யார்ஹமாம்படி * அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் * என்று ராக்ஷஸப்ரக்ருதிகளும் ஆஸுரப்ரக்ருதிகளுமாகச் சொல்லத்தக்க அபாகவத ஜனங்கள் ஸஹவாஸத்தாலே கெடுக்க அவகாசமில்லாதபடி பக்தியாகிற பயிர் விளைந்து கிடக்கிற நெஞ்சுக்கு * பறவையரையா! உறகல் பள்ளியறை குறிக்கொள்மின் * என்று காவலடைத்து,

கடல் புரைய விளைந்து தலைவணக்கின வாறே—* காதல் கடல் புரைய விளைவித்த காரமர் மேனி * என்கிறபடியே எருவும் நீருமுண்டாலும் மேல் மழை இல்லாத போது பயிர்த்தலை குளிர்ந்து வளராதென்று காளமேகத் திருவுருவை இடையிடையே காட்டி அம்மழையைப் பெய்து வளர்க்கையாலே அந்த பக்தியாகிற பயிர் கடல் போலே எல்லைகடந்து பலித்து * வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள் சாய்த்துத் தலைவணக்கும் * என்கிறபடியே, பலித்த பயிரானது பரிபக்குவமாய்த் தலைவணக்குமாபோலே * நமந்தி ஸந்தஃ * என்னும்படி தலைவணங்கப் பெற்றவாறே,

நாளுநாள் கோட்குறையாக நின்றுரறியாமல் குந்தங்கொண்டு ஆராமையுண்டு—பெரும்பசியரானவர்கள் விளைந்த நெல்லை அறுத்துக்கொண்டுபோய்ச் சமைத்து உண்ணுமளவும் தரித்திருக்கமாட்டாமல் முற்றின வளவுகளை வயற்காட்டிலேயே கிள்ளி யெடுத்து புஜிக்குமாபோலே இந்த பக்தாத்மா முக்தனான பிறகு அநுபவிக்கப் பற்றாத தன்னபிநிவேசத்தாலே இவ்வுடலோடே யிருக்கச் செய்தே * நாளுநாள் வந்து என்னை முற்றவும் தானுண்டான் * என்றும், * கோட்குறைபட்ட தென்னுருயிர் * என்றும் * நின்றுரரியாவண்ணம் என்னெஞ்சுமுயிருமவையுண்டு * என்றும், * மனக்காராமை மன்னியுண்டிட்டாய் * என்றும் சொல்லுகிறபடியே இடையிடையே வந்து விரும்பி புஜித்து,

**காலக்கழிவாலே நிலத்து உகாமல் பற்றறுத்து**—பரிபக்வமான நெல்லை அறுக்க வேண்டிய காலத்தில் அறுக்காவிடில் தரையில் சிந்தி மங்கிப் போய்விடுமாகை யாலே யதாகாலம் அறுவடை செய்வதுபோல * ஞானக்கை தா காலக்கழிவு செய் யேலே * என்றும், * கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்தன் பொன்னகலம் தோயாவேல்—மன்னும் வறுநிலத்து வாளாங்குஉகுத்ததுபோல் * என்றும் சொல்லு கிறபடியே பரிபக்குவமான இவ்வாத்மவஸ்து காலக்கழிவினால் தரைப்பட்டு மங்கிப் போகாதபடி *வினை பற்றறுக்கும் விதியே * என்கிறபடியே ப்ராப்திவிரோதியான கருமங்களைக் களைகையாகிற அறுவடையைச் செய்து,

**தண்டாலடித்துப் பதரறுத்து**—அறுத்த நெற்கதிரைத் தடியாலடித்துப் பதரும் மணியும் பிரிக்குமா போலே * அருளென்னும் தண்டாலடித்து * என்கிறபடியே தன்னுடைய க்ருபையாகிற ஸாதனத்தாலே, அஸாரமான பதர்போலேயிருக்கிற கைவல்யாநுபவத்தில் ருசியையறுத்து,

**போர்த்த தோல்விடுத்து**—நெல்லின் உமியை விடுவிக்குமா போலே * போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடிறப்பிவை பேர்த்து * என்கிறபடியே (அரிசிக்கு உமி போன்ற) ஸ்தூலதேஹத்தினுடைய விமோசனத்தைப் பண்ணி,

**ஸூக்ஷ்ம வொட்டும் நீரிலே கழுவி**—அரிசியைத் தவிடறக் கழுவவேண்டுவது போல ஸ்தூலசரீரம் தொலைந்த பின்பும் தொடர்ந்து வருகிற ஸூக்ஷ்மசரீரத்தை விரஜாஜலஸ்பர்சத்தாலே போக்கி,

**வேறூர் கலந்திட்டு**—* சீரார் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை வேரார்நுதல் மடவாள் வேறூர் கலத்திட்டு* என்கிறபடியே இவ்வாத்ம வஸ்துவை அமாநவகர ஸ்பர்சத்தாலே அப்ராக்ருத தேஹத்திலே ப்ரவேசிப்பித்து,

**பைந்தொடி மடந்தையரைக் கொண்டு ஷட்குண ரஸாந்நமாக்கி** — ஸ்த்ரீகளைக் கொண்டு ஷட்ரஸோபேதமான அன்னமாக்குவது போல * அணைவர் போயம ருலகில் பைந்தொடி மடந்தையர்தம் வேய்மரு தோளிணையே * என்கிறபடியே ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்களைக் கொண்டு ஷாட்குண்ய ஆவிர்ப்பாவ முண்டாக்கு வித்து * அஹமந்நம் * என்கிற அன்னமாம்படி அவர்கள் கரஸ்பர்சத்தாலே பக்வமாக்கி,

**வானோர்க்குஆராவமுதான வாறே**—* வைகல்பாட வல்லார் வானோர்க்கு ஆரா வமுதே * என்கிறபடியே நித்யஸூரிக ளெல்லார்க்கும் பரமபோக்ய மாம்படியான வாறே,

**முற்று முண்ண முன்னம் பாரித்து**—* என்னைமுற்று முயிருண்டு * என்கிறபடியே இவ்வாத்ம வஸ்துவை முழுக்க புஜிப்பதாக * என்னையொழிய என்னில் முன்னம் பாரித்து * என்கிறபடியே இவ்வாத்மாவுக்கு ருசி பிறப்பதற்கு முன்னே பிடித்தும் பாரித்து,

**உழுவதோர் நாஞ்சில் கொண்டு பெருகமுயலும் பத்தியுழவன் க்ருஷிபலமிறே**— உலகில் க்ருஷிஸாதனம் கலப்பையாகையாலே அதுவும் இப்பெருமான் பக்கலிலே யுண்டென்று காண்பதற்காக * உழுவதோர் படையும் உலக்கையும் * ஒற்றைக் குழையும் நாஞ்சிலும் * என்கிறபடியே க்ருஷிஸாதனமான கலப்பையைக் கையிலே

கொண்டு, * அரிய தெளிதாகுமற்றலால் மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்ருல் * என்கிறபடியே இவ்வாத்மோஜ்ஜீவனத்திற்கு மிகவும் முயற்சி செய்பவனுய், *வித்துமிட வேண்டுங்கொலோ விடையடர்த்த பத்தியுழவன் பழம்புனத்து*என்கிற படியே இவ்வாத்மாவுக்குத் தன் விஷயமான பக்தியை விளைக்கைக்கு க்ருஷிபண்ணிப் போரும் ஸர்வேச்வரனுடைய க்ருஷிபலமன்ரே இவ்வாழ்வார்க்குண்டான இந்த பக்தி பரியாகம். ... .... .... ... (104)

(தா.) 104. (ஆனுல் இவர்க்கு இந்த பக்தி உண்டாகைக்கு ஹேதுவென்? என்னில்; பலனையனுபவிப்பவனுன எம்பெருமானுடைய க்ருஷி பலித்தபடி இது என்பது க்ஷேத்ரமும் பயிர் செய்பவனும் பயிரும் அதன் பலனுமாக ரூபித்துக் கூறப் படுகிறது.) அளவிட முடியாததாய் போகமோக்ஷங்களை விளைத்துக் கொள்ளலாம் நிலமான ப்ரக்ருதி தத்வத்தில், கலியுகமாகிற வன்னியன் "இவனை நலியுங்கோள்" என்று ஏவ, மநஸ்ஸைத் தங்களுக்கு சேஷமாக ஆளுகிற மிடுக்கரான இந்திரியங்க ளாகிற குறும்பர் இச் சேதநனுக்கு நியாமகராய்க் கொண்டு தேஹத்திலே குடி புகுந்து தங்களுக்கு ப்ரதாநமான மநஸ்ஸையும் தாங்கள் நினைத்த வழியே நடக்கும் படியாகப் பண்ணி விஷயங்களிலே படிந்து புஜிக்கிற போகத்திலே ஒருகாலும் த்ருப்திபெருதே, இவற்ருல் வந்த நலிவை ஆற்றியிருப்போமென்ருல் ஆற்றவொண் ணுதபடி விஷய போகங்களை புஜிக்கவேணுமென்று இவனைச் சிறைசெய்து தனக்கு அபீஷ்டமானவற்றைத் தாவென்று துகைத்திழுத்து சரீரமாகிற செக்கிலே யிட்டுச் சுழற்றி க்ருரமாய்க் கரையேறவொண்ணுதபடியாயிருக்கும் விஷயங்களாகிற படுகுழியிலே தள்ளி வெகுவிதமாக தண்டித்து அர்த்த காமங்களிரண்டையும் கடன் செலுத்திக் கொள்வாரைப் போலே செலுத்திக் கொள்ள பத்தசேதநனுடைய பக்திக்கு விளைநிலமான மநஸ்ஸானது ஸுக்ருத கந்தமற்றுப் பாழ்பட்டவாறே, இந்த்ரிய வச்யதையாலே இப்படிப் பாழ்பட்ட மனஸ்ஸைத் தன்வசமாக்குவதற்காக, இந்த்ரியங்களாகிற ஐவர் க்ஷயித்து முடிந்து போம்படி ஸ்தாவர ப்ரதிஷ்டையாக விருந்தான்; க்ருபையாகிற வாளையுருவிப் பாபமாகிற தூறுகளை நிர்மூலமாக்குவித்து உருமாய்ந்து போம்படி தக்தமாக்கினுன்; பகவதாபிமுக்யம் பிறந்தவளவிலே "இவன் பாகவதனுனுன்" என்று ஸம்ஸாரிகள் சொல்லும்படி பழிமொழியை பக்தி யாகிற பயிர் வளருவதற்கு எருவாக விட்டு ஜ்ஞாநமாகிற அம்ருதநதியை வாயள வாய்த் தலைக்குமேலே போம்படி பெருகப் பண்ணினுன்; மநஸ்ஸானது ஆர்த்ர மாய்ப் பதம் செய்து வாய்த்தவாறே அந்நெஞ்சிலே ஸங்கமாகிற நெல்லை விரைத்து, ததேக பரதந்த்ரமாய் ததேகபோகமாய் வளருகிற இப்பயிரில் கர்த்ருத்வ போக்த் ருத்வ புத்தியை விளைக்கும் அஹங்கார மமகாரங்களாகிற களையையும் ஊசிவே ரோடே பறித்துப் பொகட்டான்; களை பறித்தாலும் பட்டிபுகாமல் நோக்கினு லன்றிப் பயிர் தலைப்பெற்றுச் செல்லாதாகையாலே பக்தியாகிற இப்பயிருக்குப் பட்டியான இந்த்ரியங்களாகிற சேக்களினுடைய ஸ்வச்சந்த ஸஞ்சார ஹேதுவான கர்வத்தைப் போக்கினுன்; பக்தியாகிற பயிர் விளைந்து கிடக்கிற நெஞ்சு அந்யார்ஹமாகாத படி "பள்ளியறை குறிக் கொள்மின்" என்கிறபடியே காவலடைத்து, காளமேக நிபச்யாம மான வடிவழகை வர்ஷித்து வளர்க்கையாலே அந்த பக்தியாகிற பயிர் கடல்போலே

அபரிச்சேத்யமாம்படி பலித்து பக்தி பரிபாக நிபந்தநமான ஆர்த்தியால் வரும் பாரவச்யம் பிறந்தவாறே, ஒரு நாள் புஜித்து விடுகையன்றிக்கே நாள்தோறும் புஜியா நிற்கச் செய்தேயும் அத்ருப்தனாய் இத்தலையில் ஸ்வல்பம் சேஷித்துக் கிடக்கிறதென்று நிருபித்தறிய வேண்டும்படியாக, அருகேயிருந்த பிராட்டிமார் முதலானாருமறியமாட்டாதபடி, பெரும்பசியரானவர்கள் விளைந்த நெல்லைச் சேரவறுத்துக் கொண்டுபோய் புஜிக்கப் பற்றாமல் முற்றினவளவுகளைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டு புஜிக்குமாபோலே, முக்தனானவாறே பின்பு பூர்ணமாக புஜிப்போமென்றிருக்கமாட்டாத தன் அபிநிவேசத்தாலே இச்சரீரத்தோடே இருக்கச்செய்தே விளைந்த பரிபாகாநுகுணமாக மனஸ்ஸுக்கு த்ருப்தி பிறவாமல் மேன்மேலும் விரும்பி புஜித்து, பரிபக்வமான இவ்வஸ்து காலக்கழிவாலே தரைப்பட்டு மங்கிப் போகாமல் ப்ராப்தி விரோதியான கருமங்களை யறுத்தான்; அறுத்த நெற்கதிரைத் தடியாலே யடித்துப் பதரும் மணியும் பிரிக்குமாபோலே "அருளென்னும் தண்டாலடித்து" என்கிறபடியே தன்னுடைய க்ருபையாகிற த்ருடமான ஸாதநத்தாலே பதர்போன்ற ஆத்மாநுபவத்தில் ருசியை அறுத்தான்; அந்த நெல்லில் உமியை விடுவிக்குமாபோலே ஆத்மாவைப் பொதிந்து கிடக்கிற ஆதிவ்யாதி ஷட்பாவ விகாரங்களுக்குக் காரணமான ஸ்தூலதேஹத்தை விடுவித்தான்; பிறகு அரிசியைத் தவிடறக் கழுவுமாபோலே ஸம்ஸரண ஹேதுவாய்ப்போந்த ஸூக்ஷ்ம சரீரத்தை விரஜாஜல ஸ்பர்சத்தாலே வாஸநாரேணுக்களோடேபோக்கி ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபையான ப்ரக்ருதியில் நின்றும் விவேகித்து வாங்கின இவ்வாத்ம வஸ்துவை அமாநவ கர ஸ்பர்சத்தாலே அப்ராக்ருத தேஹத்திலே ப்ரவேசிப்பித்து, ஸத்கார ஸாமக்ரியோடு எதிரேவருகிற அப்ஸரஸ்ஸுக்களைக்கொண்டு ஜ்ஞாநாதி ஷட்குணங்களாகிற அறுசுவைகளோடு "அஹமந்நம்" என்கிற அன்னமாம்படி பக்வமாக்கி நித்ய ஸூரிகளுக்குப் பரமபோக்யமாம்படி யானவாறே, இவ்வாத்மவஸ்துவை முழுக்க புஜிப்பதாக இவ்வாத்மாவுக்கு ருசி பிறப்பதற்கு முன்னே பிடித்தும் பாரித்து இவன் கர்ஷகனென்று தோற்றும்படி க்ருஷிஸாதனத்தைக் கையிலே கொண்டு இவ்வாத்மோஜ் ஜீவநத்துக்கு மிகவும் முயலாநிற்கும் ஸ்வபாவனாய் ஸ்வவிஷய பக்தியை விளைக்கைக்கு க்ருஷி பண்ணித் திரியும் ஸர்வேச்வரனுடைய க்ருஷியின் பலமிறே இவ்வாழ்வார்க்குண்டான இந்த பக்தி. [இத்தால் ஆழ்வாருடைய பக்தியின் உத்பத்திக்குக் காரணம் பகவானுடைய க்ருஷி யென்றதாயிற்று.] ... (104)

**(மூ.) 105. கோஸல கோகுல சராசரம் செய்யுங்குணமொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்.**

**[எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரம் பலிக்கக்கண்டவிடங் காட்டுதல்]**

(ப.) 105. **கோஸல கோகுல சராசரம்**—கோஸல நாட்டிலும் கோகுலத்திலுமுள்ள சராசரங்களெல்லாம்,

**செய்யுங்குணம் ஒன்றின்றியே**—கர்மஜ்ஞானபக்தி முதலான குணங்களொன்றுமின்றிக்கே யிருந்தும்,

**அற்புதமென்னக் கண்டோம்**—ஆச்சரியமான பேறு பெற்றமை கண்டோம். (இது, மேல்நோக்கில் கிடைக்கும் பொருள்; மற்றொரு ஆழ்ந்தபொருளும் காணத்தக்கதுண்டு; அதாவது,)

கோஸலசராசரம் ஒன்றின்றியே கண்டோம்—* நற்பாலயோத்தியில்வாழும் சராசரம் முற்றவும்—புற்பாமுதலாப்புல்லெறும்பாதியொன்றின்றியே நற்பாலுக்குய்த்தனன் * என்கிற பாசுரத்திற்படியே கோஸலநாட்டிலுள்ள புல்பூண்டு முதலானவைகளும் * அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: * அகாலபலிநோ வ்ருக்ஷா: * என்கிறபடியே இராமனுடைய பிரிவில் வாடியும் அவனுடையகலவியில் செழித்துமிருந்தபடியை ஸ்ரீராமாயணத்தில் கண்டோம்;

கோகுலசராசரம் செய்யுங்குணம் அற்புதமென்னக் கண்டோம்—கோகுலத்திலுண்டான சராசரங்களெல்லாம் * அவனொருவன் குழலூதினபோது மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர்கொம்புகள் தாழும் இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற பக்கம் நோக்கி அவைசெய்யுங்குணமே * என்றும், *மருண்டு மான்கணங்கள் மேய்கைமறந்து மேய்ந்தபுல்லும் கடைவாய்வழிசோர இரண்டு பாடும் துலுங்காபுடை பெயரா எழுது சித்திரங்கள் போலநின்றனவே * என்றும் * பறவையின் கணங்கள் கூடுதுறந்துவந்து சூழ்ந்து படுகாடுகிடப்பக் கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக் கவிழ்ந்திறங்கிச் செவியாட்டகில்லாவே * என்றும் * இதோ ரற்புதங்கேளீர், கோவலர் சிறுமியர்.. எங்கும் காவலுங்கடந்து கயிறுமாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே * என்றும் சொல்லும்படி நிர்ஹேதுக விஷயீகாரம் பெற்றமைகண்டோம் என்கை. .... ... .... (105)

(தா.) 105. இப்படி இத்தலையில் ஒரு ஸுக்ருதமுமில்லாமலிருக்க ஈச்வரனுடைய க்ருஷி பலிக்கக் கண்டவிடமுண்டோ வென்னில்; திருவயோத்யாதி கோஸல தேசவர்த்திகளான சராசரங்களெல்லாம் "புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே...... நற்பாலுக் குய்த்தனன்" என்னும்படி நிர்ஹேதுகமாக பகவத் விஷயீகாரம் பெற்றபடியும், கோகுலத்திலுண்டான சராசரங்களெல்லாம் அவனொருவன் குழலூதினபோது நிர்ஹேதுக பகவத்ப்ராவண்ய பரவசங்களான படியைக் கண்டு "நங்கை மீர்களிதோ ரற்புதம் கேளீர்" என்று விசேஷஜ்ஞர் ஈடுபட்டுச் சொல்லும்படியும் கண்டோமன்றோ.

[இத்தால் எம்பெருமானது நிர்ஹேதுக விஷயீகாரம் இப்படிபலிக்கக் காண்கையாலே, ஆழ்வாருடைய பக்தியும் அவனது நிர்ஹேதுக க்ருஷிபல மென்னத் தட்டில்லை யென்றதாய்த்து.] ... ... ... ... (105)

(மூ.) 106. பட்டத்துக்குரியவானையு மரசும் செய்யுமவை ஆராயாது.

[ஆழ்வாரொருவரைமாத்திரம் விஷயீகரித்ததற்குக் காரணம் கேட்கலாகாது]

(ப.) 106. பட்டத்துக்குரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது—அராஜகமான தேசத்திலே பட்டத்து யானையைக் கண்ணைக் கட்டிவிட்டால் அவ்வானை யெடுத்தவனொருவன் ராஜாவாகுமிடத்தில் மற்றபேர்களிருக்க இவனை யெடுத்தது என்னென்று கேட்பாரில்லையே; அரசன் தன் செருக்காலே ஒருத்தியைத் தனக்கு மஹிஷியாகப் பரிக்ரஹித்தால் மற்ற ஸ்த்ரீகளிருக்க இவளைப் பரிக்ரஹிப்பதென்

னென்று கேட்பாரில்லையே. (அதுபோலவே ஆழ்வாரை விஷயீகரித்தவிதுவும் கேட்பாரற்ற ஸ்வாதந்த்ர்யகார்யம் என்றபடி.) ... ... (106)

(தா.) 106. ஆனால் இப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரிக்குமளவில் எல்லாரையும் விஷயீகரிக்கலாயிருக்க, இங்ஙனே இவரொருவரை விஷயீகரிக்கைக்கு ஹேதுவென்னென்னில்; அராஜகமான தேசத்திலே பட்டத்துக்குரிய ஆனையைக் கண்ணைக் கட்டிவிட்டால் அவ்வானையால் எடுக்கப்பட்டவனொருவன் ராஜாவாகும்போது, 'அல்லாதாரெல்லாம் கிடக்க, இவனை இப்படி எடுக்கைக்கு அடியென்?' என்று ஆராயாதாப் போலவும், ராஜாவானவன் தன் செருக்காலே ஒருத்தியைத் தனக்கு மஹிஷியாகப் பரிக்ரஹிக்குமளவில், 'இப்படிக் கொத்த ஸ்த்ரீகள் பலருமுண்டாயிருக்க, இவளை இவன் இப்படி பரிக்ரஹிக்கைக்கு அடியென்? என்று ஆராயாதாப்போலவும், நிரங்குச ஸ்வதந்த்ரனான ஸர்வேச்வரன் ஸ்வாதீநமுமாய் ஸ்வார்த்தமுமான ஆத்ம வஸ்துக்களிலே ஒரொன்றை ஸ்வேச்சையாலே தன் விநியோகத்திற்கு உரித்தாம்படி விஷயீகரித்தால் அதுக்கு ஹேது ஆராயமுடியுமோ?

(மூ.) 107. முந்நீர் வாழ்ந்தார் சூட்டுங் கோவை யாழியென்கிற ஸாக்ஷாத்க்ருத ஸ்வபர வ்ருத்தாந்தர்க்கு யாத்ருச்சிகாதிகளுண்டாகில் தோன்றும்.

[ஆழ்வாரை எம்பெருமான் விஷயீகரித்தது நிர்ஹேதுகந்தான் என்பதைத் திடப்படுத்தல்]

(ப.) 107. முந்நீர் வாழ்ந்தார் சூட்டும் கோவை ஆழியென்கிற ஸாக்ஷாத்க்ருதஸ்வபரவ்ருத்தாந்தர்க்கு—* முந்நீர்ஞாலம்படைத்த * வாழ்ந்தார்கள் வாழ்ந்தது * சூட்டு நன்மாலைகள் * கோவை வாயாள்பொருட்டு * ஆழியெழ * என்றிவை முதலான பாசுரங்களிலே தம்முடைய வ்ருத்தாந்தங்களையும் எம்பெருமானுட்பட இதரர்களினுடைய வ்ருந்தாந்தங்களையும் ஸாக்ஷாத்கரித்தருளிச்செய்கிற இவ்வாழ்வார்க்கு,

யாத்ருச்சிகாதிகள் உண்டாகில் தோன்றும்—தம்மை எம்பெருமான் அங்கீகரிக்கைக்கடியான யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் முதலான ஸுக்ருதவிசேஷங்கள் இருந்திருக்குமாகில், திருவுள்ளத்தில் தோன்றியிருக்கும்; அவை அருளிச்செய்யப்பட்டுமிருக்கும். அப்படி யருளிச் செய்யக்காணாமையாலே அவையும் இவர்க்கில்லை யென்றதாயிற்று. ... ... ... ... (107)

(தா.) 107. இப்படி சொல்லுவானேன்? இவர் தமக்கு ஜ்ஞாதஸுக்ருதங்கள்ன்றோ இல்லை யென்றது; யாத்ருச்சிகாதி அஜ்ஞாத ஸுக்ருதங்களடியாக அங்கீகரித்தானாகாதோ வென்னில்; "முந்நீர் ஞாலம் படைத்த" "வாழ்ந்தார்கள் வாழ்ந்தது" "சூட்டுநன்மாலைகள்" "கோவைவாயாள் பொருட்டு" "ஆழியெழ" இத்யாதிகளாலே தமது வ்ருத்தாந்தங்களையும் பிறரது வ்ருத்தாந்தங்களையும் ஸாக்ஷாத்கரித்து அருளிச்செய்கிற ஆழ்வார்க்கு அஜ்ஞாதமான அம்சமொன்றுமில்லாமையாலே தம்மை ஈச்வரனங்கீகரிக்கைக் கடியான யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்களுண்டாகில் மற்றவைபோலே அவையும் ப்ரகாசிக்கும்; ப்ரகாசித்தால் ஆழ்வார் அருளிச்செய்வர்; அப்படி அருளிச்செய்யக் காணாமையாலும் கேவல நிர்ஹேதுக விஷயீகார ப்ரகாசக ஸ்ரீஸூக்திகள் பலவுமருளிச் செய்தமை காண்கையாலும் அவையுமிவர்க்கில்லை யென்றதாயிற்று. ... ... ... ... (107)

(மூ.) 108 செய்தநன்றி தேடிக் காணாதே கெடுத்தாய் தந்தாயென்ற அத்வேஷாபிமுக்யங்களும் ஸத்கர்மத்தாலல்ல.

[ஆழ்வாருடைய அத்வேஷ ஆபிமுக்யங்களும் ஸுக்ருதத்தாலல்ல]

(ப.) 108. செய்தநன்றிதேடிக் காணாதே—* வாட்டாற்றாற்கு எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே * என்று, எம்பெருமான் தம்மை விஷயீகரிக்கைக் குடலாகத் தாம் செய்தஸுக்ருதம் ஏதேனுமுண்டோ வென்று தேடிப்பார்த்து அப்படியொன்றுங் காணாமல்,

கெடுத்தாய் தந்தாய் என்ற அத்வேஷாபிமுக்யங்களும்—*என்னைத் தீமனங்கெடுத்தாய் * என்று தீமனம்போகையாகிற அத்வேஷமும், * மருவித் தொழும்மனமே தந்தாய்* என்று, மருவித்தொழும் மனமுண்டாகையாகிற ஆபிமுக்யமுமான இரண்டும் அவனாலே யுண்டாயிற்றென்று தாமே நிஷ்கர்ஷிக்கையாலே அந்த அத்வேஷ ஆபிமுக்க்யங்களும்,

ஸத்கர்மத்தால் அல்ல—இவருடைய ஸத்கர்மமடியாக வந்ததல்ல. ... (108)

(தா.) 108. இப்படி அங்கீகார ஹேதுவா யிருப்பதொரு ஸுக்ருதமில்லையே யாகிலும் அத்வேஷமும் ஆபிமுக்யமும் ஸுக்ருத மடியாக வாறாலோ வென்னில்; "வாட்டாற்றாற்கு எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே" என்று எம்பெருமான் தம்மை விஷயீகரிக்கைக்கு உடலாகத் தாம் செய்த ஸுக்ருத மேதேனு முண்டோ வென்று தேடிக் காணாமல் "என்னைத் தீமனம் கெடுத்தாய்" "மருவித் தொழும் மனமேதந்தாய்" என்று தீமனம் போகையாகிற அத்வேஷமும், மருவித் தொழும் மனமுண்டாகையாகிற ஆபிமுக்யமும் இரண்டு மவனாலே யுண்டாய்த் தென்று தாமே நிஷ்கர்ஷிக்கையாலே அத்வேஷ ஆபிமுக்யங்களும் ஸத்கர்மத்தாலே வந்ததன்று. ... ... ... ... .... (108)

(மூ.) 109. எண்ணிலும் வருங் கணனைக்கு எண்டானுமில்லை.

[ஆழ்வார்க்கு ஓர் எண்ணுகைதானுமில்லையென்பது]

(ப.) 109. எண்ணிலும் வரும் கணனைக்கு எண்தானுமில்லை—*எண்ணிலும் வரும் என்னினி வேண்டுவம் * என்று எம்பெருமானுடைய குணப்பெருமை சொன்னதே யொழிய அந்த எண்ணுகைதானும் தம்மிடத்திலில்லை யென்பதை * கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று ஓர் எண்தானுமின்றியே வந்தியலுமாறு * என்று தெரிவிக்கையாலே அதுவும் ஹேதுவாகச் சொல்லக்கூடியதாயில்லை. ... (109)

(தா.) 109. ஆனால் பரமபக்திக்கு முகம் காட்டுமாபோலே பரிகணனைக்கும் முகம் காட்டுமென்றாரே இவர்தாமே; அந்த பரிகணனைதானிவர்க்கு உண்டானாலோ வென்னில்; "எண்ணிலும் வருமென்னினி வேண்டுவம்" என்றது எம்பெருமானுடைய குணப்ரகர்ஷத்தைச் சொன்னவித்தனையே யன்றோ. அந்த பரிகணனைக்குத் தம்மோடு அந்வயமில்லாமை கண்டு "கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று, ஓரெண்டானு மின்றியே வந்தியலுமாறு" என்று தம் திருவுள்ளத்துக்கு மூதலிக்கையாலே அதுவும் இவர்க்கில்லை யென்க. .... ... (109)

(மூ.) 110. மதியாலிசைந்தோமென்னும் அனுமதீச்சைகள் இருத்துவமென்னுத வென்னை யிசைவித்தவென்னிசைவினது.

[ஆழ்வாருடைய அனுமதியும் இச்சையும் பகவத்க்ருஷிபலமென்றல்]

(ப.) 110. (மதியாலென்னும் அநுமதியும், இசைந்தோமென்னும் இச்சையும் என்று பிரித்து யோஜிப்பது.)

மதியாலென்னும் அநுமதியும்— * வைத்தேன்மதியாலெனதுள்ளத் தகத்தே * என்று, அநுமதிமாத்ரத்தாலே அவனை என்னெஞ்சுக்குள்ளே வைத்தேனென்று தமக்குள்ளதாகச் சொன்ன அநுமதியும்,

இசைந்தோமென்னு மிச்சையும்— * யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் * என்று, தமக்குள்ளதாகச் சொன்ன இச்சையும்,

இருத்துவமென்னுத, என்னை யிசைவித்த, என்னிசைவினது— * யானொட்டி யென்னுளிருத்துவமென்றிலன் * என்கிறபடியே அவனை உள்ளே யிருத்துவோ மென்றிசையாத தம்மை * இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழ் * என்கிறபடியே வருந்தியிசையப்பண்ணி * என்னிசைவினை * என்று, நானகலாதபடி என்னிசைவு தானுய்ப்புகுந்தவனை யென்னும்படி யத்தனித்த ஈச்வரனுடைய க்ருஷிபலம். (110)

(தா.) 110. அதுதான் வேண்டுமோ? தமக்கு அநுமதீச்சைகள் இருப்பதாக அருளிச்செய்தாரே, அவைதான் ஹேதுவானுலோ வென்னில்; "வைத்தேன் மதியால் எனதுள்ளத்தகத்தே" என்றும், "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந் தோம்" என்றும் தமக்கிருப்பதாகச்சொன்ன அநுமதியும் இசைவும் ஈச்வரக்ருஷிபல மென்னுமிடம் "யானொட்டி யென்னுளிருத்துவமென்றிலன்" "இசைவித்தென்னை யுன்தாளிணைக் கீழிருத்து மம்மானே" "என்னிசைவினை" இத்யாதிஸ்வஸூக்திக ளாலே விளங்கும். ... ... ... — (110)

(மூ.) 111. மாதவன்மலை நீர்நிழலென்று ஏறிடுமது - வ்யாவ்ருத்த்யுக்தி அந்யார்த்தம் அபுத்திபூர்வம் அவிஹிதம் பலவிஸத்ருசம் பலாந்தரஹேது.

[மாதவனென்றதேகொண்டு, இத்யாதியின் கருத்தை விளக்குதல்]

(ப.) 111. மாதவன்மலைநீர்நிழலென்று ஏறிடுமது— * மாதவனென்றதே கொண்டு * என்கிறபடியே, மாதவனென்றதாகக்கொண்டு ஏறிடுமதும், * திருமா லிருஞ்சோலை மலையென்றே னென்னத் திருமால் வந்தென்னெஞ்சுநிறையப் புகுந் தான் * என்கிறபடியே திருமலையைச் சொன்னதாகக் கொண்டு ஏறிடுமதும், மற்றும் என்னடியார் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய்" என்றேறிடுமவையும்,

வ்யாவ்ருத்த்யுக்தி—(மாதவன் மலையென்றேறிடுமது வ்யாவ்ருத்த்யுக்தி) எம் பெருமானுகந்த திருநாமமென்றும் அவனுகந்து வாழ்கிற திருமலையென்றும் சொன்னவையல்ல; பேருக்கும் பேருக்கும் மலைக்கும் மலைக்கும் வாசி சொன்ன வளவே;

அந்யார்த்தம்—(நீர் வார்த்ததும் நிழல் கொடுத்ததும்) தன் பயிர் தீயாமைக்காக நீருள்ள விடத்தில் நின்றும் நெடுந்துலையிட்டு இறைக்கிறதும் தனக்குச் சூது சதுரங்கமாடுகை முதலானவற்றுக்காகப் புறந்திண்ணை கட்டிவைக்கிறதும் தவிர, பாகவதர்களின் விடாயைத் தீர்க்கைக்கும் அவர்களுக்கொதுங்க நிழலாகைக்கும் செய்ததல்லாமையாலே அந்யார்த்தம்.

அபுத்தி பூர்வம்—இவையெல்லாம் இத்தலையில் நினைவில்லாமலிருக்க அவனாக ஏறிடுகிறவையாகையாலே புத்தி பூர்வகமுமல்ல;

அவிஹிதம்—இவை பலனுக்கு ஸாதனமாக சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவையுமல்ல;

பலவிஸத்ருசம்—எம்பெருமானது விஷயீகாரமாகிற பெரும்பலனுக்கு இவை ஈடுமல்ல;

பலாந்தரஹேது—இவை சில அல்பப்ரயோஜனங்களுக்கு ஹேதுவாமித்தனை.

(ஸா.) 111 இவையொன்றுமில்லையாகிலும், மாதவனென்றும் திருமாலிருஞ் சோலையென்றும் சொன்ன உக்திமாத்திரத்தைப் பற்றாசாகக்கொண்டு எம்பெருமான் தம்மை விஷயீகரித்தானாக ஆழ்வாரருளிச் செய்கையாலே அவைதானுண்டேயென்னில்; “மாதவனென்றதே கொண்டு என்னையினி இப்பாற்பட்டது, யாதவங்களும் சேர்கொடேனென்று என்னுள் புகுந்திருந்து” என்றும் “திருமாலிருஞ் சோலை மலையென்றேனென்ன, திருமால் வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்” என்றும் சொல்லும்படி, மாதவனென்று நம் பேரைச் சொன்னான், திருமாலிருஞ் சோலைமலையென்று நம் ஊரைச் சொன்னான் என்று ஏறிடுகிறவை ஈச்வரனுகந்த திருநாமமென்றும் அவன் உகந்து வர்த்திக்கிற திருமலையென்றும் சொன்னவையல்ல; பேருக்கும் மலைக்கும் வ்யாவ்ருத்தி சொன்னமாத்திரமே; மற்று மிவற்றோடு ஸஹபடிதமாய்ப் போருமவையான ‘என்னடியார் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்’ என்றேறிடுகிறவை தன் பயிர் கெடாமைக்காகத் தண்ணீர் இறைக்கிறதும், சூது சதுரங்க மாடுகைக்காகத் தெருத் திண்ணை கட்டிவைக்கிறது மொழிய, பாகவதர்களுடைய விடாயைத் தீர்க்கைக்கும் அவர்கள் ஒதுங்க நிழலாகைக்கும் செய்கிறதல்லாமையாலே அந்யார்த்தம்; இவையித்தனையும் இத்தலையில் நினைவின்றியிருக்க அவனடித்து ஏறிடுகிறவை யாகையாலே புத்தி பூர்வகமல்ல; இவைதான் பலஹேதுவாக சாஸ்த்ர விஹிதங்களுமன்று; பகவத் விஷயீகாரமாகிற மஹாபலத்துக்கு இவை ஸத்ருசமுமல்ல; இவையுண்டானால் இவ்வருகே சில அல்பப்ரயோஜநங்களுக்கு ஹேதுவாமித்தனை; ஆகையாலிவை பகவதங்கீகார ஹேதுவாக மாட்டாது. ... ... ... (111)

(மூ) 112. இவன் நடுவேயடியானென்ன ஒலைப்பட்ட ப்ரமாணம் பக்ஷபாதி ஸாக்ஷிவன்களவிலனுபவமாக இந்திர ஞாலங்கள் காட்டிக் கொள்ளக் காப்பாரற்று விதி சூழ்ந்தது.

[எம்பெருமானுக்குத் தன்னையுமறியாமல் ஆழ்வார்மீது அருள்வாய்த்ததென்பது]

(ப,) 112. **இவன்**—ஏதேனுமொன்றை ஏறிட்டாகிலும் **விஷயீகரிக்குமவ னை இந்த** எம்பெருமான்,

**நடுவே அடியானென்ன**—* நடுவே வந்து உய்யக்கொள்கின்ற நாதன்* என்கிற படியே நாதனுகையாலே நிர்ஹேதுகமாக வந்து * அடியானிவனென்றெனக்காரருள் செய்யும் * என்கிறபடியே இவனென்னடியானென்று மடிபிடிக்க,

**ஓலைப்படா ப்ரமாணம்**—(அது காரணமாகத் தொடர்ந்த பரஸ்பர விவாதத் திலே) ஓலைப்படா ப்ரமாண மென்று கண்ணழிவு சொல்லலாம்படியான எழுதா மறையும்,

**பக்ஷபாதிஸாக்ஷி**—* ஹந்த! த்வத்பக்ஷபாதீ ஸ: * என்று கண்ணழிவு சொல்ல லாம்படியான பக்ஷபாதியான ஸாக்ஷியும், (காட்டின விடத்திலும் அவை பயன் படாமே.)

**வன்களவிலநுபவமாக**—* வன்கள்வனேன் * என்னும்படி ஆத்மாபஹாரக் களவாகிற அநாதியநுபவம் காட்டப்பட,

**இந்திரஞாலங்கள் காட்டிக் கொள்ள**—* இந்திரஞாலங்கள் காட்டியிவ்வேழுலகுங் கொண்ட* என்று இந்த்ரஜாலம்போலே கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான வடிவழகையும் சீலத்தையும் செயலையும் காட்டி வாய்மாளப்பண்ணி ஸ்வாதீனப் படுத்திக் கொள்ளும்படியாக,

**காப்பாரற்று**—* விதி வாய்க்கின்று காப்பாரார் * என்கிறபடியே தடுப்பாரில் லாதபடி.

**விதி சூழ்ந்தது**—* எதிர் சூழல்புக்கு எனைத்தோர் பிறப்புமெனக்கேயருள்கள் செய்ய விதி சூழ்ந்ததால் * என்கிறபடியே ஸ்வாபாவிகமான க்ருபை வளைந்து கொண்டது. — ... ... ... ... (112)

(தா) 112. ஆனால் இவரை இப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரிக்க வேண்டு வானேன்? என்னில்; இப்படி ஒன்றை ஆரோபித்தாகிலும் விஷயீகரிக்குமிவன் நிர்ஹேதுகமாக வந்து "த்வம் மே" இத்யாதிப்படியே 'இவன் என்னடியான்' என்று மடிபிடிக்க, அதுக்கு இவர் இசையாமல் 'என்னை நீ உன்னடியானென்றது எத் தாலே?' என்ன; இவரை இசைவிக்கைக்காக வேதத்தை ப்ரமாணமாகக் காட்ட; அது எழுதாமறையாகையாலே 'அது ஓலைப் படாப்ரமாணம்' என்று இவர் அத்தை அந்ய தாகரித்துத் தம்முடைய அநாத்யநுபவத்தை ப்ரபலமாகக் கொண்டு நிற்கையாலே ஆட்சியிலும் ப்ரபலமான தொடர்ச்சியை முன்னிட்டவளவில் அதுக்கு ஸாக்ஷி யாரென்று கேட்டவாறே தத்வதர்சிகளான ஜ்ஞானிகளை ஸாக்ஷியாகக் காட்ட, 'அவர்கள் உனக்குப் பக்ஷபாதிகள்' என்று அதுக்குமிவர் கண்ணழிவு சொல்லுகை யாலே, அநாதுகாலம் தாம 'அஹம் மம' என்றிருந்து போந்தவநுபவம் ஆத்மாப ஹாரமாகிற வலியகளவாலே வந்ததென்று இவர் அநுதபிக்கும்படி இந்த்ரஜாலங் கள்போலே த்ருஷ்டி சித்தாபஹாரிகளான வடிவழகையும சீலத்தையும சேஷ்டிதத் தையும் காட்டி வாய்மாளப் பண்ணி, இவர் தம்மதாக நினைத்திருந்த ஆத்மாத்மீ யங்களைத் தன்னதாக்க கொள்ளும்படியாக அந்வா[illegible] க்ருபையானது எம் பெருமானைச் சூழ்ந்துகொண்டது. ... ... ... (112)

(மூ.) 113. வரவாறில்லை வெறிதே யென்றறுதியிட்டபின் வாழ்முதலென்கிற ஸுக்ருதமொழியக் கற்பிக்கலாவதில்லை.

[ஆழ்வாருடைய ஸுக்ருதம் ஈச்வரனேயென்றுரைப்பது]

(ப) 113. வரவாறில்லை வெறிதேயென்று—* வரவாறென்றில்லையால் வாழ்வினிதால் * என்கிற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தினாலும், * வெறிதே யருள் செய்வர் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தினாலும்,

அறுதியிட்டபின்—எம்பெருமானுடைய விஷயீகாரம் நிர்ஹேதுகமென்று தாமே திர்ணயித்தருளினராதலால்,

வாழ்முதலென்கிற ஸுக்ருதமொழிய—* தனியேன் வாழ்முதலே * என்று தம்முடைய பேற்றுக்கு மூலஸுக்ருதமாக ஆழ்வார்தாமே யருளிச்செய்த அவனைத் தவிர்த்து,

கல்பிக்கலாவதில்லை—வேறு கல்பிக்கலாவதொரு ஸுக்ருதமில்லை. ... (113)

(தா.) 113. எல்லாம் செய்தாலும் இப்படிப்பட்ட க்ருபையானது அநாதி காலம் இவ்வாத்ம விஷயமாகப் பெருகாமல் இன்று பெருகுமளவில் இதுக்கு ஒரு ஹேது வேண்டுகையாலே இதுக்குடலாகக் கல்பிக்கலாவதொரு ஸுக்ருதமில்லையோவென்னில்; "வரவாறென்றில்லையால் வாழ்வினிதால்" "வெறிதேயருள் செய்வர்" இத்யாதிகளாலே பகவத்விஷயீகாரம் நிர்ஹேதுகமென்று ஆழ்வார்தாமே அறுதியிட்ட பின்பு "தனியேன் வாழ்முதலே" என்று தம்முடைய பேற்றுக்கு மூல ஸுக்ருதமாக இவரருளிச்செய்த அவ்வீச்வரனையொழிய வேறு கல்பிக்கலாவதொரு ஸுக்ருதமில்லை. .... .... ... .... (113)

(மூ.) 114. நலமருளினன் என்கோலென்று ஆமூலசூடம் அருளால் மன்னுமிவர்க்கு அன்புக்கடியானதுவே அடிசேருகைக்கும் ஸாதனம்.

[ஆழ்வார்க்கு ப்ராப்திஸாதநமும் பகவத்க்ருபையேயென்பது]

(ப.) 114. நலமருளினன்—* மயர்வற மதிநல மருளினன் * என்று அருளிலே தொடங்கி,

என்கோல் என்று—* என் கொலம்மான் திருவருள்கள் * என்று அருளிலே தலைக்கட்டி, இவ்வண்ணமாக,

ஆமூல சூடம்—ஜ்ஞானதசையோடு ப்ராப்தி தசையோடு வாசியற ஆதியோடந்தமாக,

அருளால் மன்னுமிவர்க்கு—* மாலருளால் மன்னுகுருகூர்ச் சடகோபன் * என்கிறபடியே அவனருள் கொண்டே தரிக்கவேண்டுமியல்வினரான இவ்வாழ்வார்க்கு,

அன்புக்கு அடியானதுவே—தம்முடைய பக்திக்குக் காரணமாகச் சொல்லப்பட்ட அந்த க்ருபையே,

அடி சேருகைக்கும் ஸாதனம்—* அடியேன் உன்னடி சேர்வண்ணமருளாயே * என்கிறபடியே அடி சேருகையாகிற ப்ராப்திக்கும் ஸாதனம். ... (114)

(தா.) 114. இப்படி நிர்ஹேதுக விஷயீகாரபாத்ரபூதரான இவருடைய பக்தி எம்பெருமானது அருளினுலேயே பெறப்பட்டதாகிலும் உபாஸகனுக்கு கர்மஜ்ஞாநஜநித பக்திபோலே இவர்க்கு ப்ராப்திஸாதநம் இதுவோவென்னில், "மயர்வற மதிநலமருளினன்" என்று 'தம்முடைய பக்த்யுத்பத்திகாரணம் கேவல பகவத்க்ருபை' என்று உபக்ரமித்து, "என்கொலம்மான் திருவருள்கள்" என்னுமளவாக ஜ்ஞாநதசையோடு, வரண தசையோடு, ப்ராப்தி தசையோடு வாசியற ஆமூலசூடம் "மாலருளால் மன்னுகுருகூர்ச் சடகோபன்" என்று நின்ற நின்ற நிலைதோறும் அவனருள்கொண்டே தரிக்கவேண்டும் ஸ்வபாவரான இவர்க்கு "ஆருவன்பினடியேனுன்னடிசேர் வண்ணமருளாயே" என்கையாலே "மதிநலமருளினன்" என்று முதலிலே பக்தி காரணமாகச்சொன்ன க்ருபையே தச்சரண கமலப்ராப்திக்கும் ஸாதநம்.

(மூ.) 115. **புணர்தோறு மென்னக் கலந்து பிரிந்து ஜ்ஞாந பக்திகளை வளர்த்தது கனங்குழையிடக் காது பெருக்குதலும் மாஸோபவாஸி போஜனப்புறப் பூச்சும்போலே ஆற்றநல்ல மாபோகச்சிரமமாக.**

**[ஆழ்வாரை உடனே திருவடி சேர்த்துக்கொள்ளாமைக்குக் காரணம்]**

(ப.) 115. **புணர்தோறு மென்னக் கலந்து பிரிந்து**—* தடமுலை புணர்தொறும் புணர்ச்சிக்காரா * என்கிறபடியே பலகால் ஸம்ச்லேஷிப்பதும் பலகால் விச்லேஷிப்பதுமாகி,

**ஜ்ஞாந பக்திகளை வளர்த்தது**—கலவியாலே ஜ்ஞானத்தையும் பிரிவாலே பக்தியையும் வளர்த்ததானது,

**கனங்குழையிடக் காது பெருக்குதலும்**—கனமான கர்ணாபரண மிடுகைக்குக் காதைச் சிறிது சிறிதாகப் பெருக்குமா போலவும்,

**மாஸோபவாஸி போஜனப் புறப்பூச்சும் போலே**—ஒரு மாதம் உபவாஸமிருந்தவர்களுக்குச் சோற்றையரைத்து உடம்பிலே பூசிப் பொரிக்கஞ்சி கொடுத்துப் பொரிக்கூழ் கொடுத்து போஜனம் பொறுப்பிக்குமா போலவும்,

**ஆற்ற நல்ல மாபோகச் சிரமமாக**—* ஆற்ற நல்ல வகை காட்டுமம்மான் * என்கிறபடியே பொறுக்கப் பொறுக்கத் தன் குணசேஷ்டிதாதிகளைக் காட்டுமவன் * எம்மா வீடு * கட்டெழில் வானவர் போகம் * என்னும்படியான மஹாபோகம் ஸாத்மிக்கைக்காகச் சிரமம் செய்வித்தபடி. ... ... ... (115)

(தா.) 115 இப்படி ப்ராப்தி ஸாதநம் க்ருபையேயாகில், "இந்நின்ற நீர்மையினியாமுருமை" என்ற போதே இவரபேக்ஷிதம் செய்துவிடலாயிருக்க, இவரை இந்நிலத்திலேவைத்து ஸ்வஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஜ்ஞாநபக்திகளை வளர்த்தது ஏதுக்காகவென்னில்: கனமான கர்ணபூஷண மிடுகைக்கு இடமாம்படி நூலிட்டுத் திரியிட்டுக் குதம்பையிட்டுக் காது பெருக்குமாபோலவும், மாஸோபவாஸிகளுக்கு முதலிலே போஜநமிட்டால் பொருதென்று சோற்றையறைத்து உடம்பிலே பூசிப் பொரிக்கஞ்சி கொடுத்துப் பொரிக்கூழ் கொடுத்து நாளடைவிலே போஜநம் பொறுப்பிக்குமாபோலவும், "ஆற்றநல்ல வகைகாட்டுமம்மான்" என்று எனக்குப் பொறுக்கப் பொறுக்கத் தன்குணசேஷ்டிதாதிகளைக் காட்டி அவ்வழியாலே

என்னை அடிமைகொண்டவனென்னும்படி பகவதநுபவம் கனக் கண்டறியாத விவர்க்கு அதிச்லாக்யமாய் நித்யஸூரிகள் அநுபவிக்கிற போகத்தை முதல் மூதலிலே கொடுத்தால் ஸாத்மியாதென்று கருதி அது ஸாத்மிக்கைக்காக ச்ரமம் செய்வித்தபடி. [ஆனபின்பு ஜ்ஞாநபக்திகளை வளர்த்தது ப்ராப்திஸாதநதயா அன்றென்று கருத்து.] ... ... ... ... (115)

(மூ.) 116, இவற்றால் வரும் ஸம்ச்லேஷ விச்லேஷங்களாகிறன எளியனாய் நிற்குமரியனாய் எய்தானென்கிற தர்சன ஸமமான மாநஸாநுஸந்தானமும் திண்கொள்ளப்பெறாத மநச்சைதில்யமும்.

[ஆழ்வார்க்கு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் இன்னதென்று விளக்குவது]

(ப.) 116. இவற்றால் வரும் ஸம்ச்லேஷ விச்லேஷங்களாகிறன—கீழ்ச்சொன்ன காரியங்களால் வரும் கலவியும் பிரிவுமாவது என்னவென்றால், (எளியனாய் நிற்குமரியனாய் எய்தானென்கிற தர்சநஸமமான மாநஸாநுஸந்தாநம் ஸம்ச்லேஷம்; திண்கொள்ளப்பெறாத மநச்சைதில்யம் விச்லேஷம்—என்று யோஜிப்பது.)

எளியனாய்—* கருத்துக்கு நன்று மெளியனாய் * என்றும்,

நிற்கும்—* நிற்கும் முன்னே வந்து * என்றும்,

அரியனாய்—* கண்கள் காண்டற்கரியனாய் * என்றும்,

எய்தானென்கிற—* என் கைக்கு மெய்தான் * என்றுமுள்ள பாசுரங்களிற் சொல்லப்படுகிற,

தர்சந ஸமமான மாநஸாநுஸந்தானம்—நெஞ்சுக்கு மிகவும் விசததமமாநுபவ விஷயமாய்க் கொண்டு தம்முன்னே வந்து நின்று கண்ணுக்கு அவிஷயமாய்க் கொண்டு கையாலணைக்கைக்கு எட்டாமலிருக்கிற ப்ரத்யக்ஷதுல்யமான மாநஸாநுஸந்தாநம் ஸம்ச்லேஷ மெனப்படும்;

திண் கொள்ளப் பெறாத மநச்சைதில்யம்—* என் கண்கட்குத் திண் கொள்ள வொருநாள் அருளாயுன் திருவுரு * என்று அபேக்ஷித்த பாஹ்யாநுபவம் பெறாமையாலே உள்ளநுபவமும் அடிமண்டியோடே கலங்கும்படி பிறந்த அந்தஃகரண சைதில்யம் விச்லேஷமெனப்படும். ... ... ... (116)

(தா.) 116. கீழ்ச்சொன்ன இக்காரியங்களடியாக வரும் ஸம்ச்லேஷமும் விச்லேஷமும் எவையென்னில்;—ப்ரத்யக்ஷதுல்யமான மாநஸாநுஸந்தானம்-ஸம்ச்லேஷம்; அபேக்ஷிதமான பாஹ்யாநுபவம் பெறாமையாலே உள்ளநுபவமும் அடிமண்டியோடே கலங்கும்படி பிறந்த அந்தஃகரண சைதில்யம்-விச்லேஷம்.

(மூ.) 117. புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை அவை சரித்தவர்க்கு ப்ரியஹிதபரன்தான் துளக்கற வெங்குந்தலைமுக்க நடத்தும்.

[ஆழ்வாருடைய ஸம்ச்லேஷ விச்லேஷங்களுக்கு நிதாந முரைத்தல்]

(ப) 117. புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவை — * புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய் * என்கிற பாசுரத்தின்படியே நாட்டார்க்குப் புண்ய பாப பலமாய்க்கொண்டு வருகிற ஸம்ச்லேஷ விச்லேஷங்களை,

**அவை சரித்தவர்க்கு**—* சார்ந்த இருவல்வினைகளும் சரித்து * என்கிறபடியே அந்த புண்ய பாபங்களிரண்டு மற்றிருக்கிற விவர்க்கு (எம்பெருமான் உண்டாக்கக் கூடாதே யென்னில்;)

**ப்ரிய ஹிதபரன் தான்**—ப்ரியகரனும் ஹிதபரனுமான ஸர்வேச்வரன் தான், (ஜ்ஞாந பக்திகளை வளர்க்கையில் நினைவாலே)

**துளக்கற நடத்தும்**—* துளக்கற்றமுதமாய் எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே * என்கிற பாசுரத்திற்படியே இவர் அதிப்ரீதியுக்தராம் படியாக ஸம்ச்லேஷத்தை நடத்துவன்;

**எங்கும் தழைக்க நடத்தும்**—* இழை நல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது, தழைநல்ல வின்பந்தலைப் பெய்து எங்குந் தழைக்கவே * என்கிற பாசுரத்திற்படியே அதிக துக்க நிமக்நராம்படியாக விச்லேஷத்தை நடத்துவன். ஸம்ச்லேஷத்தை நடத்துவது ப்ரியபரத்வகார்யம்; விச்லேஷத்தை நடத்துவது ஹிதபரத்வகார்யம் என்றபடி.) ... ... ... ... ... (117)

(தா) 117. ஆனால் அபிமதவிஷய ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் புண்ய பாபநிபந்தநமாகவன்றோ லோகத்தார்க்கு வருவது; லோகவிலக்ஷணரான இவர்க்கு அவை வருகைக்கு நிதாநமேதென்னில்; நாட்டார்க்கு புண்யபாப பலமாய்க் கொண்டுவருகிற ஸம்ச்லேஷ விச்லேஷங்களை, புண்ய பாபரூபமான ப்ரபலகர் மங்கள் அற்றிருக்கிற இவ்வாழ்வார்க்கு ப்ரியபரனும் ஹிதபரனுமான ஈச்வரன் தானே நடத்திக்கொண்டு போவன்; கிம்நிமித்தமென்னில்; "துளக்கற்றமுதமா யெங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணன்" என்று ஸ்வஸம்ச் லேஷத்தாலே இவர் அதிப்ரீதராகைக்காகவும், "தழைநல்ல வின்பம் தலைப் பெய்து எங்கும் தழைக்கவே" என்று—'விச்லேஷவ்யஸநத்தாலே நான் முடியா நின்றேன், இனி என் துக்கம் காணுமையாலே லோகமெல்லாம் ஸுகித்து ஸம்ருத்த மாகக் கடவது' என்னும்படி மிகவும் துக்கநிமக்நராகைக்காகவும் [இப்படி ப்ரீதி துக்கங்களை வளர்ப்பதும் ஜ்ஞாந பக்திகளை வளர்க்கையில் நினைவாலேயென்பது கீழ்ச் சொல்லப்பட்டது.] ... ... ... ... (117)

(மு.) 118. **ஜ்ஞாநத்தில் தம்பேச்சு; ப்ரேமத்தில் பெண்பேச்சு.**

**[ஆழ்வாருடைய பேச்சின் வாசிகள் கூறுதல்]**

(ப.) 118. **ஜ்ஞானத்தில் தம் பேச்சு**—ஜ்ஞாநதசையில் தாமான தன்மையிலே நின்று பேசுவர்;

**ப்ரேமத்தில் பெண்பேச்சு**—ப்ரேம தசையில் பெண் பேச்சாகப் பேசுவர். (118)

(தா.) 118. இவர் ஜ்ஞாந தசையிலே தாமான தன்மையில் நின்று பேசு வர்; ப்ரேம தசையில் அவஸ்தாந்தராபந்நராய்ப் பெண் பேச்சாகப் பேசுவர். (118)

(மு.) 119. **தேறுங் கலங்கியென்று தேறியுந் தேருதும் ஸ்வரூபங் குலையாது.**

**[பேச்சில் வாசியிருந்தாலும் ஸ்வரூபம் ஒருபடிப்பட்டதே யென்றுரைத்தல்]**

(ப.) 119. **தேறும் கலங்கியென்று**—* தேறுங் கை கூப்பும் * என்கிற பாசுரத் திலும், * கண்ணீர் மிகக் கலங்கிக் கைதொழும் * என்கிற பாசுரத்திலும் தெளிந்த

தசையோடு கலங்கின தசையோடு வாசியற எப்போதும் அஞ்சலி மாருதென் கையாலே,

தேறியும் தேருதும்—* தேறியும் தேருதும் மாயோன் திறத்தனளே இத் திருவே * என்கிறபடியே தெளிவு கலக்கமாகிற இரண்டவஸ்தையிலும்,

ஸ்வரூபம் குலையாது—சேஷத்வருபமான ஸ்வரூபம் நிலை குலையாது. (119)

(தா.) 119. இப்படி தெளிவும் கலக்கமுமான இத்தசைகளில் பேச்சில் வாசியொழிய ஸ்வரூபத்திலும் வாசியுண்டோவென்னில்; "சிந்திக்கும் திசைக்கும் தேறும் கைகூப்பும்" "கண்ணீர் மிகக் கலங்கிக் கைதொழும் நின்றிவளே" என்று— தெளிந்த தசையிலும் கலங்கின தசையிலும் சேஷத்வ ப்ரகாசகமான அஞ்சலி மாருமையாலே "தேறியும் தேருதும் மாயோன்திறத்தினளே இத்திருவே" என்கிற படியே தெளிந்த தசையோடு கலங்கின தசையோடு வாசியற இரண்டு அவஸ்தை களிலும் சேஷத்வ ருபஸ்வருபம் நிலைகுலையாது. ... ... (119)

(மு.) 120. அடியோம் தொடர்ந்து குற்றேவல் அடிச்சியோ மடிக்கீழ்க் குற்றேவலாகை அவஸ்தாந்தரம்.

[ஆழ்வாருடைய அவஸ்தைவேறுபாட்டின் தத்துவம்]

(ப) 120. அடியோம் தொடர்ந்து குற்றேவல்—'அடியோம் தொடர்ந்து குற் றேவல்' என்று ஆண் பேச்சாலே சொல்லுகிறவிது,

அடிச்சியோ மடிக்கீழ் குற்றேவலாகை—'அடிச்சியோம் அடிக்கீழ் குற்றேவல்' என்று பெண் பேச்சாலேயாகிற இவ்வளவே,

அவஸ்தாந்தரம்—பெண்ணிலைமை யெய்துவதாகும். (அடியோமென்கிற ஆண்பேச்சு அடிச்சியோமென்று பெண்பேச்சாகுமத்தனை; தொடர்ந்து குற்றேவ லென்ருே, அடிக்கீழ் குற்றேவலென்ருே கைங்கர்ய ப்ரஸ்தாவம் செய்வது இரண் டவஸ்தையிலும் துல்யமே யென்றபடி.) .... ... .. (120)

(தா.) 120. ஆனுல் இவர்க்கு அவஸ்தாந்தரமாவதேதென்னில்; "அடி யோம் போற்றி யோவாதே" "தொடர்ந்து குற்றேவல் செய்து" என்று தாமான தன்மையில் சொல்லுகிருப்போலே "அடிச்சியோம் தலைமிசை நீ யணியாய்" "திருவடிக்கீழ் குற்றேவல் முன் செய்ய" என்று ஸ்த்ரீத்வ தசையிலும் சொல்லுகை யாலே ஸ்வரூபத்திலும் ஸ்வருபானுருப வ்ருத்திப்ரார்த்தனையிலும் பேதமில்லை; பிராட்டியான பாவனையாலே தம் பேச்சானவிது போய் பெண் பேச்சாகை இவர்க்கு அவஸ்தாந்தரமாவதென்கை. ... .... ... (120)

(மு.) 121. வித்யை தாயாகப்பெற்றுப் பாலுமமுதுமான திருநாமத்தாலே திருமகள் போல வளர்த்த தஞ்சமாகிய தந்தை மற்ருருவர்க்குப் பேச்சுப் படாமல் விச்வபதி லோகபர்த்தாவென்னும் மணவாளரை நாலிரண்டிழை கொண்டு முப்புரியான ப்ரஹ்ம ஸூத்ர பந்தத்தோடே வரிப்பிக்க, பரம்புருடன் கைக்கொண்டபின் சதுர்த்தியுள்புக்கு இடையீடு நடுக் கிடக்கும் நான்கழித்து ஜன்மபூமியை விட்டு அகன்று சூழ்விசும்பித்

படியே உடன் சென்று குடைந்து நீராடி வியந்துழாய் அஞ்சனத்தின் நீறு நானப்பொடி பீதகவாடை பல்கலன்கொண்டு நோக்கியர் அலங் கரித்துப் பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய நிறைகுட விளக்கமேந்தி யிளமங்கைய ரெதிர்கொள்ள வைகுந்தம் புக்கிருந்து வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர் போகமுண்டு கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மிதித்து ஆரோஹித்து பரதாக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங் கித்த மணிமிகு மார்பிலே ருருமாமணியாயவனையும் வஸ்துவுக்கு மணிவல்லிப் பேச்சு வந்தேறியன்று.

[ஆழ்வார்க்குப் பெண் பேச்சு வந்தேறியன்று என்று நிரூபித்தல்]

(ப.) 121 வித்யை தாயாகப்பெற்று—* ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம * என்கிறபடியே வித்யையே மாதாவாக இவ்வாத்ம வஸ்துவை ஜனிப்பித்து,

பாலும் அமுதுமான திருநாமத்தாலே—*எனக்கென்றும் தேனும்பாலு மமுதுமாய திருமால் திருநாமம்* என்கிற மதுர பதார்த்தமான திருமந்த்ரத்தாலே,

திருமகள் போல வளர்த்த—* திருமகள் போல வளர்த்தேன் * என்கிறபடியே அநந்யார்ஹ சேஷத்வம் முதலான தன்மைகளாலே பிராட்டியோடொக்க வளர்த்து வந்த,

தஞ்சமாகிய தந்தை—ஆபத்ரக்ஷகனான ஆசார்யனாகிற பிதா,

மற்றொருவர்க்குப் பேச்சுப்படாமல்—* அன்றிப்பின் மற்றொருவர்க் கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற் கல்லால் * என்றும், * மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் * என்றும் சொல்லுகிறபடியே அந்யசேஷத்வ ப்ரஸங்கமும் அஸஹ்யமாம்படியான நிலையிலே நிறுத்தி,

விச்வபதி லோகபர்த்தா வென்னும் மணவாளரை—* பதிம் விச்வஸ்ய * கௌஸல்யா லோக பர்த்தாரம் * என்று, பதி யென்கிற சப்தத்தாலும் பர்த்தா என்கிற சப்தத்தாலும், ஸர்வலோக நாயகராகச் சொல்லப்படுகிற * பணவாளரவணைப் பற்பல காலமும் பள்ளி கொள்ளும் அழகிய மணவாளரை,

நாலிரண்டிழை கொண்டு முப்புரியான ப்ரஹ்மஸூத்ரபந்தத்தோடே வரிப்பிக்க— "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கல ஸூத்ரம் போலே திருமந்த்ரம்" (முமுக்ஷுப்படி) என்கிறபடியே அப்படிப்பட்டதொரு ஸூத்ரம் போலே எட்டெழுத்தாய் மூன்று பதமாய் ஈச்வரஸம்பந்தப்ரகாசகமான திருமந்த்ரமாகிற மங்கள ஸூத்ர பந்தத்தோடே பாணிக்ரஹணம் பண்ணுவிக்க,

பரம்புருடன் கைக்கொண்ட பின்—* பறவையேறு பரம்புருடா நீ யென்னைக் கைக்கொண்டபின் * என்கிறபடியே பரமபுருஷரான மணவாளர் பரிக்ரஹித்த பின்பு,

சதுர்த்தியுள்புக்கு—திருமந்த்ரத்தில் நாராயணாய என்றுள்ள சதுர்த்தியானது கைங்கர்ய ப்ரார்த்தனையைக் காட்டுமதாகையாலே அதிலே உள்புகுந்து அநவரதம் கைங்கர்யப் பாரிப்பேயாய்,

இடையீடு நடுக்கிடக்கும் நாள் கழிந்து—பகவானாகிற பர்த்தாவோடு சேர்ந்து பரிமாற முடியாதபடி * நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு*

என்கிறபடியே அநுபவ விரோதியாய் இடையீடான சரீரம் நடுவே கிடக்கும்படியான நாலு நாளையும் * நாள் கடலைக் கழிமினே * என்கிறபடியே கழித்து,

**ஜன்மபூமியை விட்டு அகன்று**—பெண் பிறந்தகத்தைவிட்டுப் புக்ககம்செல்லுமா போலே தனக்கு ஜ்ஞாந லாபத்தாலே பிறந்தவிடமாகிய இந்த விபூதியை * முற்றிலும் பைங்கிளியும் பந்து மூசலும் பேசுகின்ற சிற்றில்மென்பூவையும் விட்டகன்ற * என்கிறபடியே முன்பு ஆதரித்திருந்த வஸ்துக்களோடே கூட விட்டுநீங்கி,

**சூழ்விசும்பிற்படியே உடன்சென்று**—* சூழ்விசும்பணிமுகில் * என்கிற திருவாய் மொழியில் சொல்லுகிறபடியே அர்ச்சிராதிமார்க்கத்தாலே வழியிலுள்ளாரெல்லாம் ஸத்கரிக்க * அங்கவனோடு முடன் சென்று * என்கிறபடியே நாயகன் முன்னே போகப் பின்னே போய்,

**குடைந்து நீராடி**—புக்ககம் போகிற பெண் அவ்வூரெல்லையிலே சென்றவாறே அவர்கள் குளிப்பாட்டக் குளிக்குமாபோலே * குள்ளக்குளிரக் குடைந்து நீராடி * என்னுமாபோலே அம்ருதவாஹிநியான விரஜையில் இப்பாலுள்ள அழுக்கு அறும்படி நீராடி,

**வியன்துழாய் அஞ்சனத்தின்நீறு நானப்பொடி பீதகவாடை பல்கலன் கொண்டு நோக்கியர் அலங்கரித்து**—* வியன்துழாய் கற்பென்று சூடும் * ஆராரயில் வேற்கணஞ்சனத்தின் நீறணிந்து * மெய்திமிருநானப்பொடி * உடுத்துக் களைந்த நின்பீதக வாடை * பல்கலனும் யாமணிவோம் * என்கிறபடியே அலங்கார வகைகளான திவ்யமால்யம் திவ்யாஞ்ஜனம் திவ்ய சூர்ணம் திவ்ய வஸ்த்ரம் திவ்யாபரணம் ஆகிய இவற்றை * தம் பஞ்ச சதாநி அப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி * இத்யாதியான உபநிஷத்திலோதினபடியே ஏந்திக்கொண்டு * மானேய நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரே வந்து * தம் ப்ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி * என்கிறபடியே போக்தாவான ஈச்வரனுக்குப் போக்யமானபடி அலங்கரித்து,

**பல்லாண்டிசைத்துக் கவரிசெய்ய**—தொக்குப் பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வ ரேழையரே * என்கிறபடியே (அந்த திவ்யாப்ஸரஸ்ஸுக்கள்) திரள நின்று மங்களாசாஸனம் பண்ணிச் சாமரம் பணிமாற,

**நிறை குடவிளக்க மேந்தி இளமங்கையரெதிர் கொள்ள**—புக்ககத்தை அணுகச் சென்ற பெண்ணை அங்குள்ள பெண்டுகள் மங்கள தீபாதிகளை ஏந்திக் கொண்டு எதிரே வந்து ஸத்காரம் செய்வது போல * நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே * என்கிறபடியே மங்களகரமான பூர்ணகும்பம் தீபம் முதலானவற்றை யெடுத்துக்கொண்டு * சதிரிளமங்கையர் தாம் வந்தெதிர் கொள்ள * என்கிறபடியே வேறு சில திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிர்கொள்ள,

**வைகுந்தம் புக்கிருந்து**—(கொண்டாட்டத்துடனே சென்ற பெண் பர்த்தாவின் மாளிகையில் புகுமாபோலே) * மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே * என்கிறபடியே ஸ்ரீவைகுண்டத்திலே புகுந்து அப்பெருமானோடே கூடியிருந்து,

**வாய்மடுத்துப் பெருங்களிச்சியாக வானவர் போகமுண்டு**—(பர்த்தாவின் மாளிகை கையிலே பெண்வந்து சேர்ந்த பின்பு தம்பதிகளும் மற்றுமுள்ள பந்துக்களும் கூடி

யிருந்து பெருங்களிச்சியுண்ணுமாபோலே, அடியார்கள் குழாங்களும் அவனுமாக விருக்கிற சேர்த்தியிலே) * அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே * என்று பெருங்களிச்சியாகப் பூர்ணநுபவஞ் செய்து * கட்டெழில் வானவர் போகமுண் பாரே * என்கிற நித்யஸூரிகள் புஜிக்கிற போகத்தைப் புஜித்து,

**கோப்புடைய கோட்டுக்கால் கட்டில் மீத்து ஆரோஹித்து**—* கோப்புடைய சீரிய சிங்காசனம் * என்றும் * கோட்டுக்கால் கட்டில்மேல் * என்றும் சொல்லுகிறபடியே திவ்யபர்யங்கத்திலே * பாதேந அத்யாரோஹதி * என்கிறபடியே பாதபீடத்திலே அடியிட்டேறி,

**பரத அக்ரூர மாருதிகளைப் பரிஷ்வங்கித்த மணிமிகுமார்விலே**—பரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் அணைத்துக் கொண்ட அழகிய திருமார்விலே,

**குருமாமணியாய் அணையும் வஸ்துவுக்கு**—* குருமாமணிப்பூண் * என்கிற ஸ்ரீகௌஸ்துபம்போலே போக்யமாய்க் கொண்டு அணைகிற ஆத்ம வஸ்துவுக்கு,

**மணிவல்லிப்பேச்சு வந்தேறியன்று**—முதற்பிரபந்தமான திருவிருத்தத்திலே * வண்பூமணிவல்லி * என்று தாமே சொல்லிக்கொள்ளும்படி ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமாய் வரும்பேச்சு வந்தேறியன்றிக்கே ஸ்வாபாவிகமாயிருக்கும். ... (121)

(தா) 121. ஆனால் இவர்க்குத் தம் பேச்சன்றோ ஸ்வாபாவிகம்; பிராட்டிமார் தசையை அடைந்து பேசும் பேச்சு வந்தேறியன்றோவென்னில்; அன்று; ஆசார்யன் திருமந்த்ர முகத்தாலே ஸ்வரூபஜ்ஞானத்தை யுண்டாக்கினபோது இவ்வாத்மஸத்பாவமாகையாலே வித்யையை மாதாவாகக் கொண்டு இவ்வாத்ம வஸ்துவை ஜநிப்பித்து * தேனும் பாலு மமுதுமாய திருமால் திருநாமமென்கிற போக்ய பதார்த்தமான திருமந்த்ரத்தாலே—அநந்யார்ஹ சேஷத்வாதிகளால் லக்ஷ்மீ ஸத்ருசமாக வளர்த்துக்கொண்டு போந்த ஆப்த ரக்ஷகனான ஆசார்யனாகிற பிதா, அந்யசேஷத்வ ப்ரஸங்கம் வாராதபடி, ஸர்வலோகநாயகனாகச் சொல்லப் படுகிற * பணமாடரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளரை எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே எட்டக்ஷரமாய் மூன்று பதமாய் ஈச்வர ஸம்பந்த ப்ரகாசகமான திருமந்த்ரமாகிற மங்கள ஸூத்ரபந்தத் தோடே வரிக்கும்படி பண்ண, பரமபுருஷரான மணவாளர் பரிக்ரஹித்த வனந்தரம் கைங்கர்ய ப்ரார்த்தனையோடே செல்லும் சரம சதுர்த்தியிலே உள்புகுந்து, பகவதநுபவவிரோதியாய் இடையீடான சரீரம் நடுவே கிடக்கிற நாலு நாளையும் கழித்து, ஒருவராலும் விடமுடியாத ஜந்ம பூமியான இவ்விபூதியை முன்பு ஆதரணீயமாய்ப் போந்த வஸ்துக்களோடே கூடவிட்டு நீங்கி "சூழ்விசும் பணிமுகில்" என்கிற திருவாய்மொழியில் சொல்லுகிறபடியே அர்ச்சிராதி மார்க்கத்தாலே வழியிலுள்ளா ரெல்லாரும் ஸத்கரிக்க "நயாமி பரமாம் கதிம்" என்கிற நாயகன் முன்னே போகப் பின்னேபோய், பர்த்ரு க்ருஹத்துக்குப் போகிற பெண் அவ்வூரெல்லையிலே சென்றவாறே அவர்கள் குளிப்பாட்டக் குளிக்குமாபோலே அம்ருதவாஹிநியான விரஜையிலே இப்பாலுள்ள அழுக்கு அறும்படி நீராடி, குளித்தேறின பெண்ணை பர்த்ரு பந்துக்களான ஸ்த்ரீகள் வந்து அலங்கரிக்குமாபோலே அலங்காரோபகரணங்களான திவ்யமால்ய திவ்யாஞ்ஜந திவ்ய சூர்ண திவ்யவஸ்த்ர திவ்யாபரணங்களை

ஏந்திக்கொண்டு திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரேவந்து போக்தாவான ஈச்வரனுக்கு போக்யமாம்படி அலங்கரித்து, இவ்விஷயத்தில் கிஞ்சித்கரிக்கையிலுண்டான சாபலம் தோற்றத் திரளநின்று மங்களாசாஸனம் பண்ணி சாமரம் பணிமாற, அலங்க்ருதையாய் உபலாலநத்தோடே செல்லுகிற பெண் பர்த்ருக்ருஹத்தை அணுகச் சென்றவாறே அங்குள்ள ஸ்த்ரீகள் மங்கள தீபாதிகளை ஏந்திக் கொண்டு எதிரேவந்து ஸத்கரிக்குமாபோலே பூர்ண கும்பாதிகளைத் தரித்துக் கொண்டு நித்ய நவயௌவநைகளான வேறே சில ஸ்த்ரீகள் எதிர்கொள்ள, உபலாலநத்தோடே சென்ற பெண் பர்த்ருக்ருஹத்தில் புக்கிருக்குமாபோலே ச்ரியஃபதியானவனுக்கு போகஸ்தானமான ஸ்ரீவைகுண்டத்தை ப்ராபித்து அவனோடே கூடியிருந்து, பர்த்ருக்ருஹத்திலே பெண் வந்த பின்பு தம்பதிகளும் மற்றுமுள்ள பந்துக்களும் கூடியிருந்து பெருங்களிச்சியுண்ணுமாபோலே * அடியார் குழாங் களும் அவனுமாக இருக்கிற சேர்த்தியிலே பெருங்களிச்சியாகப் பூர்ணநுபவம் பண்ணி, நித்ய ஸூரிகள் புஜிக்கிற போகத்தை "ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ, ப்ரஹ்மணா விபச்சிதா" என்கிறபடியே புஜித்து பர்த்ருஸம்ச்லேஷத்துக்குப் படுக்கையில் ஏறுமாபோலே உபயவிபூத்யாதிபத்ய ப்ரகாசகமாய் ஸர்வாச்சர்யமயமான திவ்யபர்யங்கத்திலே பாதபீடத்திலே அடியிட்டேறி, ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்தணைத்துக்கொண்ட ஸ்ரீ கௌஸ்துபோஜ்ஜ்வலமான திருமார்பிலே ஸ்ரீ கௌஸ்துபம் போலே போக்யமாய் அணைகிற ஆத்ம வஸ்துவுக்கு நாயகிப் பேச்சு ஸ்வாபாவிகமேயொழிய வந்தேறியன்று. .... ... (121)

122. (மூ.) இன்புமன்பும் மூற்படுவது கொழுந்துவிடுவதாகிறது கடிமாமலர்ப் பாவையோடுள்ள ஸாம்ய ஷட்கத்தாலே.

[கேவலம் ஸ்த்ரீஸாமயம் மாத்திரமே யல்லாமல் பிராட்டியோடு ஸாம்யமும் பரிசுத்தாத்ம ஸ்வருபத்திற்கு உண்டென்பது.]

(இன்பும் அன்பும் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது—இன்பு முற்படுவது அன்பு கொழுந்து விடுவதாகிறது என்று யோஜிப்பது.)

(ப.) 122. இன்பு முற்படுவது—*நமக்கும் பூவின்மிசை நங்கைக்குமின்பனை* என்கிற பாட்டிற்படியே பிராட்டிக்கு முன்னே ஆழ்வாரிடத்தில் இன்பனுவது,

அன்பு கொழுந்து விடுவதாகிறது—* கோலமலர்ப் பாவைக் கன்பாகிய என்னன் பேயோ* என்கிற பாட்டிற்படியே பிராட்டி பக்கலிலே பண்ணின ஸ்நேஹம் ஆழ்வாரளவும் வளரவருவதாகிறது.

கடிமாமலர்ப்பாவையோடுள்ள ஸாம்ய ஷட்கத்தாலே—* காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள் * என்கிறபடியே பிராட்டியோடு இத்தலைக் குள்ள ஸாம்யத்துக்குடலான அநந்யார்ஹ சேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்ய போக்யத்வம், ஸம்ச்லேஷத்தில் தரிக்கை, விச்லேஷத்தில் தரியாமை, ததேக நிர்வாஹ்யத்வம் ஆகிற ஆறு ப்ரகாரத்தாலே. ... .... (122)

(ஸா.) 122. "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பனை" என்னும்படி பிராட்டிக்கு முன்னே இவர்பக்கல் இன்பனுவது, "கோலமலர்ப் பாவைக்கன்பாகிய

என்னன்பே'' என்னும்படி அவள் 'பக்கல் பண்ணினஸ்நேஹம் இவரளவும் வர வளருவதாய் இப்படி இன்புமுற்படுவது, அன்பு கொழுநது விடுவதாகிறது-பிராட்டியோடு இத்தலைக்குள்ள ஸாம்யத்துக்கு உடலான ஆறுப்ரகாரத்தாலே யாய்த்து. [அநந்யார்ஹசேஷத்வம், அநந்யசரணத்வம், அநந்யபோக்யத்வம், ஸம்ச்லேஷத்தில் தரிக்கை, விச்லேஷத்தில் தரியாமை, ததேகநிர்வாஹ்யத்வம் ஆகிற இவை யாய்த்து ப்ரகாரஷட்கம்.] ... .. ... .... (122)

(மூ) 123. **உண்ணாது கிடந்து ஓர்மாயையினு லென்னும் வீறுடைய முடிக்கு உரியாரோடு இத்திரு மண்ணேரன்னவொண்ணுதல் பின்னைகொலென் கிறவொப்பு, தென்பால் நெடுமாடங் கடுஞ்சிலை அம்பெரியூட்டி நீறெழ வெரித்த பெருந்தோற்றத்தாருயிர்க் காகுத்தன் ஆதியங்காலம் மண்புரை பொன்மாதின்துகளாடி ஏருதேழ்தழீஇச் சறையினுரென்னு மவற்றிலே தோன்றும்.**

**[ஸ்ரீதேவி பூமிதேவி நீளாதேவிகளோடு ஆழ்வார்க்குண்டான ஸாம்யம் இவர்பாசுரங்களிலே விளங்குகிறதென்பது ]**

(ப.) 123. **உண்ணாது கிடந்து ஓர் மாயையினுலென்னும் வீறுடைய முடிக்கு உரியாரோடு**—* உண்ணாதுறங்கா தொலிகடலையூடறுத்து * என்கிற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தில் சொல்லப்பட்ட வைலக்ஷண்யத்தையுடைய பிராட்டியென்ன, * கிடந்திருந்து நின்றளந்து கேழலாய் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் சொல்லப்பட்ட வைலக்ஷண்யத்தையுடைய பூமிப்பிராட்டியென்ன, * ஓர் மாயையினு லீட்டிய வெண்ணெய் * என்கிற திருவிருத்தப் பாசுரத்தில் சொல்லப்பட்ட வைலக்ஷண்யத்தையுடைய நப்பின்னைப் பிராட்டியென்ன—ஆக இப்படிப்பட்ட மஹிஷிகள் மூவரோடும்,

**இத்திரு மண்ணேரன்ன வொண்ணுதல் பின்னைகொலென்கிற வொப்பு**—* மாயோன் திறத்தனளேயித்திருவே என்கிற சந்தையிலும், *மண்ணேரன்ன வொண்ணுதலே* என்கிற சந்தையிலும், * பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல் * என்கிற சந்தையிலும் ஆழ்வார்க்குச் சொல்லப்படுகிற ஸாம்யம் (எந்தெந்தப் பாசுரங்களில் தோன்றுமென்றுல்)

**தென்பால்.........சறையினுரென்னுமவற்றிலே தோன்றும்**—* தென்பாலிலங்கை வெங்களஞ் செய்த * இலங்கைக்குழா நெடுமாடமிடித்த பிரானுர் * காயுங் கடுஞ்சிலையென் காகுத்தன் வாரானுல் * இலங்கை நகர் அம்பெரியுய்த்தவர் தாளிணை மேலணி * தீ முற்றத் தென்னிலங்கையூட்டினுன் தாள் நயந்த * மாறில் போரரக்கன் மதிள்நீறெழச்செற்று கந்த ஏறு சேவகனுர்க்கு * கிளரரக்கன் நகரெரித்த களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன் *காண்பெருந்தோற்றத் தென்காகுத்த நம்பிக்கு * என்னுருயிர்காகுத்தன் நின்செய்யவாயொக்கும் வாயன் * என்னுமிப் பாசுரங்களிலே பிராட்டியோடு ஸாம்யம் தோன்றும்; * ஆதியங்காலத் தகலிடங் கீண்டவர் * மண்புரைவையமிடந்த வராகர்க்கு * ஞாலப்பொன்மாதின் மணாளன் துழாய் * ஏனமொன்ருய்மண்துகளாடி * என்னுமிப் பாசுரங்களிலே பூமிப்பிராட்டியோடு ஸாம்யம் தோன்றும். * தோளிசேர் பின்னை பொருட்டெருதேழ்தழீஇக்

கோளியார் * கறையினுர் துவருடுக்கை கடையாவின் கழிகோற்கைச் சறையினுர் என்னுமிப் பாசுரங்களிலே நப்பின்னைப் பிராட்டியோடு ஸாம்யம் தோன்றும். (123

(தா) 123. [கீழ்ச்சொன்ன ஆகாரத்தாலே பெரிய பிராட்டியாரோடுள்ள ஸாம்யமேயன்றிக்கே, தம்முடைய பாவவிசேஷங்களாலே பகவதபிமததிவ்ய மஹிஷிகளான பிராட்டிமார் மூவரோடு மிவர்க்குண்டான ஸாம்யம் இவர் பாசுரங்களிலே தோற்றும்; எங்ஙனேயென்னில்; "உண்ணுதுறங்கா தொலிகடலூடறுத்து" "கிடந்திருந்து நின்றளந்து" "சூட்டுநன் மாலைகள்" என்னுமிப் பாட்டுக்களில் ப்ரதிபாதிக்கப்பட்ட வைலக்ஷண்யாதிசய சாலிநிகளாய், ஸர்வேச்வரஸாம்ராஜ்யத்தில் அவனோடொக்க முடிசூடுகையாலே முடிக்கு உரியரான ஸீதா பிராட்டி, பூமிப் பிராட்டி, நப்பின்னைப் பிராட்டி என்னுமிவர்களோடு, "மாயோன் திறத்தினளே யித்திருவே' என்றும், "மண்ணேரன்ன வொண்ணுதலே" என்றும், 'பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்' என்றும் சொல்லுகிறபடி இவ் வாழ்வாருக்குண்டான ஸாம்யமாவது—"தென்பாலிலங்கை வெங்களம் செய்த" "இலங்கைக் குழா நெடுமாடமிடித்த பிரானுர் கொடுமைகளே" "காயும் கடுஞ்சிலையென் காகுத்தன் வாராஞல்" "இலங்கைநகர் அம்பெரியுய்த்தவர் தாளிணை மேலணி" 'தீமுற்றத் தென்னிலங்கையூட்டினுன் தாள்நயந்த" "மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த" "கிளரரக்கன் நகரெரித்த" "காண்பெருந் தோற்றத் தென் காகுத்த நம்பிக்கு" "என்னுருயிர்க் காகுத்தன் நின்செய்ய வாயொக்கும் வாயன்" இத்யாதி பாசுரங்களிலும், "ஆதியங்காலத் தகலிடம் கீண்டவர்" "மண்புரை வையமிடந்தவராகர்க்கு" "ஞாலப்பொன்மாதின் மணுளன் துழாய்" "ஏனமொன்ருய் மண்துகளாடி" இத்யாதி பாசுரங்களிலும், "எருதேழ் தழீஇக் கோளியார்" "சறையினுர் கவராத" இத்யாதி பாசுரங்களிலும் தோற்றும். [இத்தால், திவ்யமஹிஷிகள் மூவரோடு மிவர்க்குண்டான ஸாம்யம் ஸீதாபிராட்டிக்கு அஸாதாரணமான ராமாவதார ததபதாநங்களிலும்-ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு அஸாதாரணமான வராஹாவதார, ததபதாநங்களிலும், நப்பின்னைப் பிராட்டிக்கு அஸாதாரணமான க்ருஷ்ணவதார-ததபதாநங்களிலும், அந்தப பிராட்டிமார் தங்களைப்போலே மிகவும் ப்ரவணராய் அருளிச்செய்த அவ்வவதிவ்ய ஸூக்திகளிலே அபிவ்யக்தமென்றதாய்த்து.] ... ... ... ... (123)

(மூ.) 124. இவர்கள் தேடிநிற்கப் பொய்கை முதுமணல் முல்லைப் பந்தல் முற்றம் மச்சொடு மாளிகை யவ்வவ்விடம்புக்கு வாரிச் சிதைத்துப் பறித்துக் கிழித்துக் கோயின்மை குறும்பு செய்து அல்லல் விளைத்துக் கவடு மூகக்கு நல்லவர், முழுசி ஆவரென்னும் தேன்மொழியாலே கோகுலத்தை மறப்பிக்கும் நகரஸ்த்ரீகள் நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினறு பல்லாயிர மெண்ணிறந்தார் பாவம் கடல்ஞாலம் மின்னிடை மல்லிகை வேய்மரு பேய்முலை முனிந்து மற்பொரு விறல்கஞ்சனை மங்கநூற்ற வாயுந் தீர்ப்பாரென்னுமவற்றிலே தோன்றும்.

[மற்றும் பல தேவிமார்களோடும் ஆழ்வார்க்குண்டான ஸாம்யம்]

(ப.) 124. இவர்கள் தேடிநிற்க—கீழ்ச்சொன்ன திருமகளும் மண்மகளும் ஆய்மகளுமான பிரதான மஹிஷிகள் மூவரும் * தேடித்திருமாமகள் மண்மகள் நிற்ப * என்கிறபடியே தன்னைத் தேடி நிற்கும்படி இவர்களை யுபேக்ஷித்து,

**பொய்கை**—* இதுவென் புகுந்த திங்கந்தோ இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய் * என்னும்படியாக (கோபிகள்) ஜலக்ரீடை பண்ணுமிடமான பொய்கையிலும்,

**முதுமணல்**—* மூத்தவை காண முதுமணல் குன்றேறி * என்னும்படியான மணல் குன்றிலும்,

**முல்லைப்பந்தல்**—* என்னை வருகவெனக் குறித்திட்டு இனமலர் முல்லையின் பந்தர்நீழல் மன்னியவளைப் புணரப்புக்கு * என்னும்படியான முல்லைப் பந்தலிலும்,

**முற்றம்**—* முற்றத்தூடு புகுந்து நின்முகம் காட்டி * முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர் * என்னும்படியான முற்றத்திலும்,

**மச்சொடு மாளிகை**—* மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்கு * என்னும்படியான மச்சு மாளிகைகளிலும்,

**அவ்வவ்விடம்**—* அவ்வவ்விடம் புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கணுக்கனாய் * என்னும்படியான மற்றும் பல விடங்களிலும்,

**புக்கு**—பிரவேசித்து

**வாரி**—* துளையார் கருமென் குழலாய்ச்சியர் தம் துகில் வாரியும் * என்கிற படியே பொய்கைகளிற் குடைந்து நீராடுமவர்களின் கூறைகளை வாரிக்கொள்வது,

**சிதைத்து**-- * பாவைமாரொடு பாடியில் சிற்றில் சிதைத்து * என்கிறபடியே அவர்களிழைத்த சிற்றிலைச் சிதைப்பது,

**பறித்து**—* பந்துபறித்துத் துகில்பற்றிக் கீறிப் படிறன்படிறு செய்யும் * என்கிறபடியே பந்து கழல் முதலான லீலோபகரணங்களைப் பறிப்பது,

**கிழித்து**—* கச்சொடு பட்டைக் கிழித்து * என்கிறபடியே பட்டுக்களையும் கச்சுக்களையும் வலித்துக் கிழிப்பது,

**கோயின்மை குறும்பு செய்து** — * குழகியெங்கள் குழமணன் கொண்டு கோயின்மை செய்து * என்கிறபடியே கேட்பாரற்ற காரியங்களைச் செய்வது. * கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகன் * என்கிறபடியே பலவகைக் குறும்புகளைச் செய்வது—ஆக இப்படிப்பட்ட அநீதிகளைச் செய்து,

**அல்லல் விளைத்து**—* அல்லல் விளைத்த பெருமானை * என்கிறபடியே பேராரவாரங்களை விளைத்து,

**கவரும்**—இப்படிப்பட்ட தீம்புகளாலே * ஆயர்பாடி கவர்ந்துண்ணும் * என்கிறபடியே திருவாய்ப்பாடியாக ஈடுபடுத்தப் பெற்று,

**உகக்கும்நல்லவர்**—* நீயுகக்கு நல்லவரொடு முழிதராயே * என்னும்படி அப்பெருமானுடைய உகப்புக்கு உரிய நல்லவர்களாகச் சொல்லப்பட்ட கோபிமார்களென்ன,

**முழுசி ஆவரென்னும் தேன்மொழியாலே**—(மதுரையில் ஸ்ரீமாலாகாரர் கொடுத்த மாலையையும் கூனி கொடுத்த சாந்தையும் சாத்திக்கொண்டு ராஜமார்க்கத்தாலே யெழுந்தருளிக் குவலயபீட மதயானையை முடித்து நிற்கிறபோது) * முழுசிவண்டாடிய * ஆவரிவை செய்தறிவார் * என்கிற பெரிய திருமொழிப் பாசுரங்களிற் சொல்லுகிறபடியே திருமேனியலங்கார வகைகளிலும் வடிவழகிலும் யானையை

முடித்த சேஷ்டிதத்திலும் தோற்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுகிற * மழறு தேன்மொழியார்கள் நின்னருள் சூடுவார் * என்று மழலைத்தேன் போலே இனிதான பேச்சாலே,

**கோகுலத்தை மறப்பிக்கும் நகர ஸ்த்ரீகள்**—* மதுராம் ப்ராப்ய கோவிந்தః கதம் கோகுல மேஷ்யதி, நகரஸ்த்ரீகலாலாபமது ச்ரோத்ரேண பாஸ்யதி * என்று திருவாய்ப்பாடியிற் பெண்கள் பேசும்படி அவன் கோகுலத்தை மறக்கும்படி பண்ணவல்ல வடமதுரையிற் பெண்களென்ன,

பாவம் — ஆகிய இத்தேவிமாருடைய பாவனையும் (ஆழ்வார்க்கு உண்டென்பது)

**கடல் ஞாலம்...... தீர்ப்பாரென்னுமவற்றிலே தோன்றும்**—திருவாய்ப்பாடி ஆய்ச்சிகளின் பாவனை, * கடல் ஞாலம் செய்தேனும் யானே யென்னும் * மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் * மல்லிகை கமழ்தென்றலீருமாலோ * வேய்மரு தோளிணை மெலியுமாலோ * என்கிற பதிகங்களிலும், * பேய்முலையுண்டு சகடம் பாய்ந்து * முனிந்து சகட முதைத்து * என்கிற பாசுரங்களிலும் புலனாகும். மதுரையிற் பெண்களினுடைய பாவனை இவர்க்கு உண்டென்னுமிடம் * மற்பொரு தோளுடை மாயப்பிரானுக்கு என்கற்புடையாட்டி யிழந்ததுகட்டே * விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர்! உம்மைத் தஞ்சமென்றிவள் பட்டனவே * என்கிற பாசுரங்களிலே புலனாகும். பதினாறாயிரம் தேவிமாருடைய பாவனை இவர்க்குண்டென்பது * நூற்றுவரையன்று மங்கநூற்ற நிகரில் முகில்வண்ணன் நேமியான் என்னெஞ்சங் கவர்ந்து எனையூழியானே * என்கிற பாசுரத்திலும் * வாயுந்திரையுகளும் * என்கிற பதிகத்திலும், * தீர்ப்பாரையாமினி * என்கிற பதிகத்திலும், * போர்ப்பாகுதான் செய்து அன்று ஐவரை வெல்வித்த மாயப்போர்த் தேர்ப்பாகனார்க்கிவள் சிந்தை துழாய்த் திசைக்கின்றதே * வண்துவராபதி மன்னனையேத்துமின் ஏத்துதலும் தொழுதாடுமே * என்னும் பாசுரங்களிலும் புலனாகும். (எவ்விதமாகப் புலனாகுமென்பது தாத்பர்ய ஸாரவுரையில் விரியக் காண்க. .... ... (124)

(தா.) 124. (இப்படி ப்ரதாநமஹிஷிகளான இவர்களோடுள்ள ஸாம்யமே யன்றிக்கே அவனுக்கு இவர்களிற் காட்டிலும் அபிமதைகளான கோபிமார்களுடையவும், மதுரா நகரஸ்த்ரீகளுடையவும், நரகவதத்திற்குப் பிறகு பரிக்ரஹித்த பதினாறாயிரம் தேவிமாருடையவும் பாவங்கள் இவர்க்கு உண்டென்னுமிடம் இவர் தம் பேச்சிலே தோன்றும்.) "தேடித் திருமாமகள் மண்மகள் நிற்ப" என்கிறபடியே ப்ரதாநமஹிஷிகளான ஸ்ரீ பூ்யாதிகள் தன்னைத் தேடி நிற்கவேண்டும்படி இவர்களை யுபேக்ஷித்து, பொய்கை, மணல் குன்று, முல்லைப்பந்தல், திருமுற்றம், மச்சு, மாளிகை முதலான அவ்வவ ஏகாந்த ஸ்தலங்களிலே சென்றுபுக்கு, துகில்களை வாரியும், சிற்றிலை யழித்தும், பந்தைப் பறித்தும், கச்சொடுபட்டைக் கிழித்தும், இப்படி நியாமகரற்ற ஸ்வதந்த்ரர் செய்யுமவற்றையும் நியாமகர் கீழடங்காமல் மூலையடியே நடத்துவார் செய்து, பேராரவாரம் விளைந்து விரும்பியநுபவிக்கப்பெற்ற பரமவிலக்ஷணைகளான திருவாய்ப்பாடியிற் பெண்களுடைய பாவனை இவர்க்குண்டென்னுமிடம், "மின்னிடைமடவார்கள் நின்னருள் சூடுவர்" "மல்லிகை கமழ்

தென்ற வீருமாலோ" என்கிற திருவாய் மொழிகளிலும், "பேய்முலையுண்டு சகடம் பாய்ந்து" "முனிந்து சகடமுதைத்து' என்கிற பாட்டுக்களிலும் தோன்றும்; ஸ்ரீமாலாகாரரும் கூனியும்கொடுத்த திருமாலையையும் சாந்தையும் சாத்திக்கொண்டு ராஜமார்க்கத்தாலெழுந்தருளிக் குவலயாபீடநிரஸநம் பண்ணி நிற்கிறபோது, "முழுசி வண்டாடிய தண்டுழாயின்" "ஆவரிவை செய்தறிவார்" என்கிற பாட்டுக்களில் சொல்லுகிறபடியே ரூபஸௌந்தர்ய சேஷ்டிதாதிகளில் தோற்றுத் தாங்கள் பேசுகிற இனிய பேச்சுக்களாலே அவர் கோகுலத்தை மறக்கும்படி பண்ணவல்ல ஸ்ரீ மதுரையிற் பெண்களுடைய பாவனையிவர்க் குண்டென்னுமிடம் - "மற்பொரு தோளுடை மாயப் பிரானுக்கு" "விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர்" என்னும் பாசுரங்களிலே தோன்றும்; நரகாஸுரன் கந்யகைகளாய்க் கொண்டுவந்து திரட்டி வைக்க, அவனை நிரஸித்தொழித்துப் பரிக்ரஹிக்கப்பட்ட பதினாறாயிரம் தேவிமார் பாவனை இவர்க் குண்டென்னுமிடம் - "நூற்றுவரையன்று மங்கநூற்ற நிகரில் முகில் வண்ணன் நேமியான்" என்ற பாசுரத்திலும், "வாயுந்திரையுகளும்" என்ற திருவாய் மொழியிலும், * தீர்ப்பாரையாமினியிலும் தோற்றும். ... (124)

125. (மூ) இராமனெனில் நசவாகக்குழைத்தவன் பின்தொடரவிருந்த வன்சிறையிலும் விதிதன் புணைவனென்று ஜீவிதாதிகளாற் குறைவின்றி மாயும் வகை விஷசஸ்த்ரங்கள் தேடி வில்வலவா ஹாவென்று இரக்கமெழாக் கொடுமைகள் சங்கித்து என்னையும் ஜீவந்தீமென்று ஆள்விட்டுச் சுடரை யடைந்து அகலகில்லா முற்றுவமை பெருமகளோடே.

[ஆழ்வார்க்கு மிகவும் பொருந்தின ஸாம்யம் ஸீதாபிராட்டியோடே என்று விரிவாக நிரூபித்தல்]

(ப.) 125. இராமனெனில் நசவாக—* நச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ, முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந் மத்ஸ்யா விவோத்த்ருதௌ * என்கிற படியே பெருமானை விட்டுப் பிரியில் ஸத்தையில்லையாம்படியிருந்த தன்மை பிராட்டிக்குப்போலே ஆழ்வார்க்கு முண்டென்பது * மராமரமெய்த மாயவன் என்னுளிரானெனில் பின்னை யானொட்டுவேனோ * என்கிற பாசுரத்தினால் விளங்குகையாலே இவ்வகையினால் ஒப்புமை பெற்று பிரிவில் ஸத்தாஹாநி பிறக்கும்படியாயிருக்க,

குழைத்தவன்—அந்தப் பிராட்டியோடே கலந்து பரிமாறினதுபோல * எத்தாய் ............ இலங்கை செற்றாய்........... உன்னையென்னுள்ளே குழைத்த வெம்மைந்தா* என்னும்படி ஆழ்வாரோடும் ஒரு நீராகக் கலந்த எம்பெருமான்,

பின்தொடரவிருந்த வன்சிறையிலும்—இலங்கையளவும் பின் தொடர்ந்து வரும்படி * தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள் * என்கிறபடியே பிராட்டி சிறையிருந்தாப்போலே * வன் சிறையிலவன் வைக்கில் * என்னும்படியாக ஆழ்வாரும் சிறையிருந்த காலத்தும்,

விதிதன் புணைவனென்று—பிராட்டி விமுகனான ராவணனுக்கும் * விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞः * என்பது முதலான ச்லோகங்களினால் உபதேசம் செய்தாப்போலே ஆழ்வாரும் விமுகரான ஸம்ஸாரிகளுக்கும் * புணைவன் பிறவிக்கடல்நீந்துவார்க்கே* என்பது முதலான பாசுரங்களினாலே ஹிதோபதேசம் பண்ணுகையாலும்,

**ஜீவிதாதிகளால் குறைவின்றி**—பிராட்டி * ந ஹி மே ஜீவிதேநார்த்த: என்று பெருமாளைப் பிரிந்து ராக்ஷஸிகளின் நடுவேயிருக்கிறவெனக்கு பிராணன் முதலிய வற்றால் என்ன பலனென்று வெறுத்தாப்போலே இவரும் * ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியிலே * மாறுளன் கவராத மணிமாமை குறைவிலமே * என்று தொடங்கி * உயிரினால் குறைவிலமே * என்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் வெறுத்து உதறித்தள்ளினபடியாலும்,

**மாயும் வகை விஷசஸ்த்ரங்கள் தேடி**—பிராட்டி ஆற்றாமையின் கனத்தாலே * விஷஸ்ய தாதா நஹிமேஸ்தி கச்சித் சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய * என்று விஷத்தையும் சஸ்த்ரத்தையும் தேடினாப்போலே ஆழ்வாரும் * காயுங் கடுஞ்சிலையெங் காகுத்தன் வாரானால் மாயும் வகையறியேன் * என்று முடியும் வகைதேடுகையாலும்,

**வில்வலவா ஹாவென்று**—பிராட்டி மிகவும் இடருற்று * ஹா ராம! * என்று பெருமாளுடைய சௌர்யவீர்ய பராக்ரமாதிகளை நினைத்துக் கூப்பிட்டாப்போலே, இவரும் * புணரா நின்ற மரமேழன்றெய்த வொருவில் வலவா ஓ * என்று அவனது வீரப் பாட்டைச் சொல்லிக் கூப்பிடுகையாலும்,

**இரக்க மெழாக் கொடுமைகள் சங்கித்து**—பிராட்டி தன்னாற்றாமைக்குப் பெருமாள் உதவவந்து முகங்காட்டாமையாலே * க்க்யாத; ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச் சாநுக்ரோசச் ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோச: சங்கே பத்பாக்யஸம்க்ஷயாத் * என்று பெருமாளைக் கருணையற்றவராகச் சங்கித்தாப்போலே ஆழ்வாரும் * இரக்க மெழீர் இதற்கென் செய்கேன் அரக்கனிலங்கை செற்றீருக்கே * இரங்காரம்மனோ இலங்கைக் குழா நெடுமாடமிடித்தபிரானார் கொடுமைகளே * என்று இந்நிலைமை யில் க்ருபை பண்ணாமலிருக்கிற கொடுமையாலே * அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன் * என்கிறபடியே சங்கிக்கையாலும்;

**என்னையும் ஜீவந்தீமென்று ஆள்விட்டு**—பிராட்டி * ஜீவந்தீம் மாம் யதா ராமஸ் ஸம்பாவயதி கீர்த்திமாந், தத் த்வயா ஹநுமந் வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி * என்று சொல்லித் தூதுவிட்டாப் போலே ஆழ்வாரும் * மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே * என்று சொல்லித் தூது விடுகையாலும்,

**சுடரையடைந்து**—பிராட்டி * அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா * என்று ஸூர்யனோடு ப்ரபைபோலே நான் பெருமாளோடே ஏகதத்வமா யிருப்பேனென்றாப்போலே, ஆழ்வாரும் * சோர்ந்தே புகல் கொடாச் சுடரை அரக்கியை மூக்கீர்ந்தாயை அடியேனடைந்தேன் முதல் முன்னமே * என்று அப்படியே பேசுகையாலும்,

**அகலகில்லா முற்றுவமை**—* அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா * என்கிறபடியே பிராட்டி இறையும் அலகில்லேனென்றிருக்குமா போலே, ஆழ்வாரும் * அந்தோவடியேனுன பாதம் அகலகில்லேனிறையுமே * என் றிருக்கையாலும் இவ்வகைகளாலே ஸர்வப்ரகாரத்தாலும் பரிபூர்ண ஸாம்யம்,

**பெருமகளோடே**—* பெருமகள் பேதை மங்கை * என்கிற பெரிய பிராட்டியா ரோடேயாம் ஆழ்வார்க்கு. ... ... ... ... (125)

(தா.) 125. (இப்படி ப்ரதாந மஹிஷிகளோடும் மற்றும் பகவத் பரிக்ரஹ முடையாரோடும் இவர்க்கு ஸாம்யமுண்டேயாகிலும் அல்லாதாரெல்லாம் இவர்க்கு ஒருவகைக் கொப்பா மித்தனையாகையாலே ஸர்வதாஸாம்யம் ஸீதாபிராட்டியோடே யென்கிறது.) "ந ச ஸீதா த்வயா ஹீநா" இத்யாதி ச்லோகத்திற்படியே நீரில் நின்று மெடுக்கப்பட்ட மீன்போலே விச்லேஷத்தில் ஸத்தா ஹாநி பிறக்கும்படி யானுள் பிராட்டி; ஆழ்வாரும் "மராமரமெய்தமாயவன் என்னுளிரானெனில் பின்னை யானொட்டுவேனோ" என்று அவனைப் பிரிந்தால் தாம் உளராகாதபடியானூர். "இலங்கைசெற்றாய்! உன்னையென்னுள்ளேகுழைத்தவெம்மைந்தா"என்றுஇவரோடு ஏகதத்த்வமென்னலாம்படி ஸம்ச்லேஷித்த பெருமாள், லங்காத்வாரத்தளவும் அவளைத் தேடிப்பின்தொடர்ந்தாப்போலே "எதிர்சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பும்" என்று இவர் பிறந்த ஜன்மங்கள்தோறும் தானும் பின்தொடரும்படி. அவள் ராவண பவநத்திலே சிறையிருந்தாப்போலே இவரும் "வன்சிறையிலவன் வைக்கில்" என்று ஸம்ஸாரத்திலே சிறையிருந்தார். அப்போது ப்ரதிகூலனான ராவணனுக்கு **"விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸலः, தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி"** என்று ஹிதம் சொன்னாப்போலே இவரும் ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளுக்கு "புணைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கே" என்று ஹிதமருளிச் செய்தார். **"ந ஹி மே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர் ந ச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம்"** என்று சக்ரவர்த்தி திருமகனை யொழிய ராக்ஷஸிகள் நடுவே யிருக்கிற வெனக்கு ப்ராணாதிகளாலென்ன ப்ரயோஜநமென்று பிராட்டி அவற்றை உபேக்ஷித் தாப்போலே இவரும் "ஏருளுமிறையோனும்" என்கிற திருவாய்மொழியிலே "மணி மாமை குறைவிலமே" "மடநெஞ்சால் குறைவிலமே" "உடம்பினால் குறைவிலமே" "உயிரினால் குறைவிலமே" என்று அவனுக்கு உறுப்பல்லாத நானும் என்னுடை மையும் வேண்டாவென்று ஆத்மாத்மீயங்களை யுபேக்ஷித்தார். **"விஷஸ்ய தாதா ந ஹி மேஸ்தி கச் சித் சஸ்த்ரஸ்ய வா வேச்மநி ராக்ஷஸஸ்ய"** என்று ராவண பவநத்திலே பிராட்டி மரணோபாயங்களைச் சிந்தித்தாப்போலே இவரும் "மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே" என்று முடியும் வகைதேடினார். **"ஹா ராம! ஸத்ய வ்ரத தீர்க்கபாஹோ! ஹா பூர்ணசந்த்ர ப்ரதிமாநவக்த்ர"** என்று பிராட்டி பெருமாளு டைய சௌர்யாதிகளைச் சொல்லிக் கூப்பிட்டாப்போலே இவரும் "புணராநின்ற மர மேழன்றெய்த ஒருவில்வலவா ஓ!" என்று அவனுடைய வீரப்பாட்டைச் சொல்லிக் கூப்பிட்டார். **"க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச் ச ஸாநுக்ரோசச் ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரனுக்ரோசச் சங்கே மத்பாக்யஸம்க்ஷயாத்"** என்று பெருமாளைப் பிராட்டி நிர்தயராக சங்கித்தாப்போலே இவரும், "இரக்கமெழீர் இதற்கென் செய்கேன்" என்றும் "இலங்கைக் குழா நெடுமாடமிடித்த பிரானார் கொடுமைகளே" என்றும், "அறி வொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்றும் அவனை நிர்க்ருணனாக சங்கித்தார். "ஜீவந்தீம் மாம் யதா ராமஸ் ஸம்பாவயதி கீர்த்திமாந், தத் த்வயா ஹநுமந் வாச்யோ வாசா தர்மமவாப்நுஹி" என்று தம்முடைய ரக்ஷ்யவர்க்கத்திலே நானு மொருத்தியிருப்பதாகப் பெருமாளுக்கு விண்ணப்பம் செய்யென்று பிராட்டி ஆள் விட்டாப்போலே, இவரும், "மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்களே" என்று தூதுவிட்டார். "அநந்யா

ராகவேணஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்று ஆதித்யனோடு ப்ரபைபோலவே நான் பெருமாளோடு அநந்யையாயிருப்பேன் என்று பிராட்டி சொன்னாப்போலே இவரும் "சோர்ந்தே போகல் கோடாச் சுடரை யரக்கியை மூக்கீர்ந்தாயை அடியே னடைந்தேன் முதல் முன்னமே" என்று சேஷத்வத்தாலே அவனோடு தாம் நித்ய ஸம்யுக்தராகப் பேசினார். அவள் "அகலகில்லே னிறையுமென்றலர்மேல் மங்கை யுறைமார்பா" என்கிறபடியே உன்னை க்ஷணகாலமும் பிரிந்திருக்கவல்லேனல்லேன் என்றாப்போலே இவரும், "அந்தோவடியேனுன பாதமகலகில்லே னிறையுமே" என்று பேசினார். ஆகையாலே இவர்க்கு ஸர்வதா ஸாத்ருச்யம் பெரிய பிராட்டியா ரோடேயாய்த்து. ... ... ... .... (125)

(மூ) 126. பிரியில் இலேனுக்கு இளங்கோவும் அக்குளத்தில் மீனிறே.

(ப.) 126. பிரியில்—எம்பெருமானைப் பிரியுமளவில்,

இலேனுக்கு—*கன்னலேயமுதே கார்முகிலேயென் கண்ணா! நின்னலாலிலேன் காண் * என்று இலேன் என்னும்படிக்கு,

இளங்கோவும்—* நேரிழையுமிளங் கோவும் பின்பு போக * என்கிறபடியே பிராட்டியைப் போலவே பின் தொடர்ந்துபோன இளையபெருமாளும்,

அக்குளத்தில் மீனிறே—கீழ்ச்சூர்ணையில் உதாஹரிக்கப்பட்ட * நச ஸீதா த்வயா ஹீநா* என்கிற ச்லோகத்திற்படியே அந்த ஜலத்தை விட்டுப் பிரிக்கப்பட்ட மத்ஸ்யமேயன்றோ. [பிராட்டியைப்போலே பிரியில் முடிகைக்கு இளையபெருமாளும் ஆழ்வாரும் ஒத்திருப்பார்களென்றதாயிற்று.] .... ... (126)

(தா.) 126. இப்படி பிராட்டியைப்போலே பிரியில் தரியாதவர் இவரொருவ ரேயோ? பின்னையுமுண்டோ வென்னில்; அவனைப் பிரியுமளவில் "நின்னலாலி லேன்காண்" என்னுமிவரைப்போலே ஸத்தையழிகைக்கு "ந சாஹமபி ராகவ!" என்று சொன்ன இளையபெருமாளும் கீழ்ப்ரஸ்துதமான ஜலாதுத்த்ருத மத்ஸ்யமிறே. [இத்தால் பிராட்டியைப்போலே பிரியில் முடிகைக்கு இளையபெருமாளும் இவரும் ஒக்குமென்ற தாய்த்து.] ... .... ... ... (126)

(மூ.) 127. அழுந்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்ஜலியோடே ருசிரஸாநுக்களிலே கூவிக்கொள்ளும் பிரியாவடிமைக்குச் சரணே சரணென்று வாளும் வில்லுங்கொண்டு பந்துவும் பிதாவுமவரே யென்கையும், அன்னை யென் செய்யிலென் ராஜ்யமும் யானேயென்று பெருஞ்செல்வமி மிச்சியாமல் வேண்டிச் சென்று திருவடியே சுமந்து விரைந்து வருமளவுங் கண்ணநீர் பங்கமாக நிலந்துழாவிக் குடிக்கிடந்த கையறவும், கோதிலடிமை யுறுமோவென்பித்த புலன்கொள் நித்யசத்ரு விசிந்தநமுமான ப்ராதாக்கள்; அப்பொழுதைக்கப்பெரமுது போனு யென்னும் மாதாபிதாக்கள்; செந்தீத்தண்காற்று இளநாகம் முதலான பகையறச் சிந்தை செய்து எங்குமுளனென்னும் பள்ளிப்பிள்ளை முற்றலிட்டு மற்றிலேனென்னும் தர்மாத்மா, வாலிபொழிந்த நீர்குண

விச்வர்த்மா உள்ளேயுறைய வீரசரிதம் ஊனகக் கற்பார் பாவம் மற்றிலேனென்னும் ராமதாஸன், பல்வகையுங்கண்டு வெண்சங் கேந்தின ரூபபரனான ச்வேதன் முதலானார் படிகளுங் காணலாம்.

[லக்ஷ்மண பரத சத்ருக்ந தசரத யசோதா ப்ரஹ்லாத விபீஷண ஹநுமத் அர்ஜுனர்களுடைய படிகளும் ஆழ்வார் பக்கலிலே உண்டென்பது]

(லக்ஷ்மண ஸாம்ய நிருபணம்)

(ப.) 127. அழுந்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்ஜலியோடே — இளையபெருமாள் * பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த: * என்று அறியாக்காலந் தொடங்கிப் பிரியில் தரிக்கமாட்டாத ஸ்நேஹத்தை யுடையராய், பிரிவின் பேச்சு வந்தவளவிலும் * பாஷ்பர்யாகுலமுக: * என்று கண்ணீர் சொரிய நிற்பவராய், * ப்ரஹ்வாஞ்ஜலி புடம் ஸ்திதம் * என்று அஞ்ஜலியும் கையுமானவராய்,

ருசிரஸாநுக்களிலே கூவிக்கொள்ளும் பிரியாவடிமைக்கு—*ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத * என்றும், * பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே * என்றுமுள்ள பிரமாணங்களின்படியே சித்ரகூட கிரித்தாழ்வரை முதலான அழகியவிடங்களில் அடியேன் ஸகலவித கைங்கரியங்களுஞ் செய்ய வேணும். அது செய்யுமிடத்தில் ஏவிக்கொண்டருளவேணும் என்று பிரார்த்தித்து,

சரணே சரணென்று—அவ்வடிமைத் தொழிலைப் பெறுகைக்காகப் பிராட்டி புருஷகாரமாகப் பெருமாளுடைய திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்தாப்போலே ஆழ்வாரும் * அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து * என்கிற படியே மிக்க இளமையிலேயே அன்புபெற்று * அழுந்தொழுமாவியனல வெவ் வுயிர்க்கும் * என்கிறபடியே விச்லேஷம் பொறுமல் கண்ணும் கண்ணீரும் கையு மஞ்ஜலியுமாய் * திருவேங்கடத்தெழில்கொள்சோதி யெந்தை தந்தைதந்தைக்கு— ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம் * என்று * மொய்த்த சோலையும் மொய்பூந்தடந்தாழ்வரையுமான போகஸ்தலங்களை யுடைய திருமலையிலே * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பனானவனுக்கு எல்லா வடிமைகளும் செய்ய விரும்பி * முகப்பே கூவிப்பணி கொள்ளாய் * என்று ஏவிக்கொள்ளவும் வேணுமென்று பிரார்த்தித்து இவ்வடிமை யைப் பெறுகைக்கு உபாயமாக * நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு * என்று புருஷகாரம் முன்னாக அவன் திருவடிகளைப்பற்றி,

வாளும் வில்லுங்கொண்டு—(இளைய பெருமாள் * ப்ருஷ்டதஸ் து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாம ஹ * என்று ஆயுதபாணியாய்ப் பெருமாளைப் பின்சென்றாப் போலே இவரும்) * வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை நாளும் நாளும் நாடுவனடியேன் ஞாலத்தே * என்று திவ்யாயுதங்களைக்கொண்டு தாம் பின்னே திரியவாசைப்பட்டு.

பந்துவும் பிதாவுமவரே யென்கையும்—(இளைய பெருமாள் ப்ராதா பர்த்தா ச பந்துச் ச பிதா ச மம ராகவ: * என்று ஸகலவித பந்துக்களும் பெருமாளே யென் றாப்போலே இவரும்) * சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரேயினி யாவாரே * என்று எம்பெருமானே தமக்கு

ஸகலவித பந்துவுமென்கையாலும்: (மூலத்தில் என்கையும் என்பது, மேலே விசிந்தனமுமான ப்ராதாக்கள் என்றவிடத்துள்ள உம்மையோடு சேர்ந்து அந்வயிக்கும். "பந்துவும் பிதாவும் அவரேயென்கையான ப்ராதா, குடிக்கிடந்தகையறவான ப்ராதா, நித்யசத்ரு விசிந்தனமான ப்ராதா" என்று க்ரமேண அந்வயித்து லக்ஷ்மண பரத சத்ருக்நர்களாகிற ப்ராதாக்களைச் சொல்லி அவர்களோடு ஸாம்யம் ஆழ்வார்க்கு நிரூபிக்கப்படுகிறது.)

(இனி பரதாழ்வானோடு ஸாம்ய நிரூபணம்)

**அன்னை யென்செய்யிலென் ராஜ்யமும் யானேயென்று**—(பரதாழ்வான் மாதாவான கைகேயியைச் சீறி யுபேக்ஷித்து * ராஜ்யஞ் சாஹஞ்ச ராமஸ்ய * என்றுப் போலே இவரும்) ஸ்வாபதேசத்திலே மாதாவாகச் சொல்லப்படுகிற அத்யவஸாயத்தை * அன்னையென் செய்யிலென்? * என்று உபேக்ஷித்தும், * யானே நீ யென்னுடைமையும் நீயே * என்று அநுஸந்தித்தும் போருகையாலும்,

**பெருஞ்செல்வமு மிச்சியாமல்**—(பரதாழ்வான் * இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ் ஸசைலவநகாநநா * என்று சொல்லப்பட்ட மஹத்தான ஐச்வர்யத்தையும் இச்சியாததுபோல இவரும்) * கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பு* என்கையாலும்,

**வேண்டிச்சென்று**—(பரதாழ்வான் பெருமாளை மீட்டுக்கொண்டு வரவேண்டிச் சித்திரகூட மலையை நோக்கிச் சென்றதுபோல இவரும்) * வேங்கடவாணனை வேண்டிச் சென்றே * என்று திருமலையப்பனை வேண்டிச் சென்றமையாலும்,

**திருவடியே சுமந்து**—(பரதாழ்வான் திருவடி நிலைகளைப் பெற்று மகிழ்ந்து மீண்டதுபோல இவரும்) * திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை நான் கண்டேனே * என்று அவன்கொடுத்த திருவடிகளை சிரஸா வஹிக்கையாலும்,

**விரைந்து வருமளவும் கண்ணநீர் பங்கமாக நிலந்துழாவி**—(பரதாழ்வான், பெருமாள் விரைந்து மீண்டெழுந்தருளும் வரையில் * பங்கதிக்தஸ் து ஜடிலோ பரதஃ * என்னும்படி கண்ணீராலுண்டான சேற்றிலே தரைக்கிடை கிடந்ததுபோல இவரும்) * இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் * என்னும்படி வீடு திருத்தப்போன எம்பெருமான் விண்ணுலகந்தர விரைந்து வருமளவும் *கண்ணநீர் கைகளாலிறைக்கும், *இருநிலம் கைதுழாவிருக்கும்* என்கிறபடியே கண்ணீர் வெள்ளத்தாலுண்டான சேற்றிலேயிருந்து ஆற்றாமையாலே நிலந்துழாவி யிருந்தபடியாலும்,

**குடிக்கிடந்த கையறவும்**—(பரதாழ்வான் மூத்தாரிருக்க இளையார் முடிசூடலாகாதென்கிற இக்ஷ்வாகு குலமர்யாதை தப்பாமல் நோக்கிக்கொண்டு * ஸ காமமநவாப்யைவ * என்கிறபடியே தான் ஆசைப்பட்ட பொருள் கைபுகுராத இழவோடேயிருந்தாப் போலே இவரும்) * குடிக்கிடந்தாக்கஞ் செய்து * என்கிறபடியே ப்ரபந்ந குலமரியாதை தப்பாமலிருந்து * காமுற்ற கையறவோடு * என்கிறபடியே தாம் ஆசைப்பட்ட பொருள் கைபுகாத இழவோடே யிருந்தபடியாலும், இவ்வகைகளாலே பரதாழ்வானோடொப்பர்.

(இனி சத்ருக்ந ஸாம்ய நிரூபணம்)

**கோதிலடிமை உறுமோ என்பித்த**—* கோதிலடியார்தம் தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே * என்கிற பாட்டிற்படியே கோதிலடிமையாகச் சொல்லப்படுகிற பாகவத சேஷத்வமானது, * செந்தாமரைக்கண் திருக்குறளன் நறுமாவிரை நாண் மலரடிக்கீழ்ப்புகுதல் பாவியேனுக்கு-உறுமோ? * என்று சொல்லப்பண்ணிற்றுகை யாலே இப்படி தகாதாக ஏற்பட்டதான.

**புலன்கொள் நித்ய சத்ரு**—* புலன்கொள் வடிவு என்று ஆழ்வாராலும் * * சத்ருக்நோ நித்ய சத்ருக்நஃ * என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தில் நித்யசத்ருவென்று வான்மீகி முனிவராலும் சொல்லப்பட்ட பகவத் ஸௌந்தர்யத்தை,

**வீசிந்தனமான ப்ராதா**—* நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந் * என்கிறபடியே நெஞ்சில் கொண்டிருந்த சத்ருக்நாழ்வானைப் போலே * புலன்கொள் வடிவு என்மனத்ததாய் * என்று ஆழ்வார் தாமும் மனத்திற் கொண்டிருந்தபடியாலே சத்ருக்நனுகிற ப்ராதாவோடொப்பர்

(இனி தசரத யசோதாஸாம்ய நிரூபணம்)

**அப்பொழுதைக்கப்பொழுது போனுயென்னும் மாதா பிதாக்கள்**—தசரதனுகிற பிதா * **ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிபஃ** * என்கிறபடியே பெருமானை எத்தனை போது பார்த்தாலும் த்ருப்தியடையாதே யிருந்தாப்போலே இவரும் * எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழு தென்னுரா வமுதமே* என்கையாலே அந்தப் பிதாவோடொப்பர். கண்ணன் இரட்டை மருதமரங்களின் நடுவே உரலையுமிழுத்துக்கொண்டு நடந்தபோது, யசோதையாகிற தாய்ஓடிச் சென்று எடுத்துக்கொண்டு இப்படிப்பட்ட ஸாஹஸத்தைச் செய்தாயே! என்று சொல்லி வயிறெரிந்தது போல. இவரும் * போனுய்மாமருதின் நடுவே என் பொல்லாமணியே * என்று அந்தப் பாவனையோடே சொல்லுகையாலே அந்தத் தாயோடொப்பர்;

(இனி ப்ரஹ்லாதஸாம்ய நிரூபணம்)

**செந்தீத் தண்காற்று இளநாகம் முதலான பகையறச் சிந்தை செய்து எங்குமுளனென்னும் பள்ளிப்பிள்ளை**—* பள்ளியி லோதிவந்த தன் சிறுவன் * என்கிற பாட்டில் பிள்ளையென்று சொல்லப்பட்டுப் பள்ளிப் பிள்ளையான ப்ரஹ்லாதாழ்வான் நெருப்பு பெருங்காற்று பாம்பு முதலான பயங்கர வஸ்துக்கள் பாதகமாகாதபடி எல்லாவற்றையும் பகவதாத்மகமாக அநுஸந்தித்து * எங்குமுளன் கண்ணன் * என்று பிறர்க்கு முபதேசித்தாப்போலே இவரும் * அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதனென்னும் மெய்வேவாள் எறியுந்தண் காற்றைத் தழுவி யென்னுடைக் கோவிந்தனென்னும் * போமிள நாகத்தின் பின்போய் அவன் கிடக்கையீதென்னும் * என்று சொல்லி, * என் முன்னைக் கோளரியே; உன்னைச் சிந்தை செய்து செய்து * என்று நரஸிம்ஹனை அநவரதாநுஸந்தானம் பண்ணி, * கரந்த சிலிடந்தொறும் இடந்திகழ்பொருடொறும் கரந்தெங்கும் பரந்துளன் * என்று அவனுடைய ஸர்வவ்யாபகத்வத்தைப் பிறருமறியும்படி யருளிச்செய்கையாலே அந்தப்ரஹ்லாதனேடொப்பர்;

(இனி விபீஷண ஸாம்யம்)

முற்றவிட்டு மற்றிலேனென்னும் தர்மாத்மா—* விபீஷணஸ்து தர்மாத்மா * என்று தர்மாத்மாவாகச்சொல்லப்பட்ட விபீஷணுழ்வான் *த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச ராகவம் சரணம் கத: * பரித்யக்தா மயா லங்கா * என்று எல்லாவற்றையும் விட்டுப் பெருமாளையே எல்லாமாகப்பற்றினுப்போலே, இவரும் * பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன் பாசங்கள் முற்றவிட்டு * என்று ஸகல ஸங்கங்களையும் விட்டு தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே * என்று பெருமாளையே பற்றுகையாலே விபீஷணுழ்வானேடொப்பர்;

(இனி ஹநுமத் ஸாம்யநிரூபணம்)

வாளிபொழிந்த நிர்க்குணவிச்வாத்மா உள்ளேயுறைய வீரசரித மூணுகைக் கற்பார் பாவம் மற்றிலேனென்னும் ராமதாஸன்—* தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய * என்று ராமதாஸனை திருவடி * நிர்க்குண: பரமாத்மாஸௌ தேஹம் தே வ்யாப்ய திஷ்டதி * என்கிறபடியே ராவணவதமான பின்பு ஏறிட்ட நாணியை இறங்கிட்ட விச்வாத்மாவான பெருமாளை உள்ளேயுடையனுய், * ஸோத்ரைவ ஹந்த ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவ ஸேவதேஸௌ * என்கிற அதிமாநுஷஸ்தவ ஸூக்திப்படியே அந்த பெருமாளுடைய வீரசரிதத்தையே போக்யமாகவுடையனுய் * பாவோ நான்யத்ர கச்சதி * என்று இவ்விஷயத்தைவிட்டுப் பரத்வத்தில் தன்னெஞ்சு போகாமை சொல்லுகிறவிடத்தில் பரத்வத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் "அந்யத்ர" என்னும்படி சக்ரவர்த்தி திருமகனையல்லதறியே னென்றிருந்தாப்போலே இவரும் * செருக்கடுத்தன்று திகைத்த வரக்கரை உருக்கெட வாளிபொழிந்த வொருவன்-உள்ளேயுறையும்பிரான் கண்டீர் * என்று, மூலபலம் முதலறும்படி சரவர்ஷத்தை வர்ஷித்த பெருமாளைத் தம்முள்ளே யுடையராய், * கணைநாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே ஓவாத வூணுகவுண் * என்கிறபடியே அவனது வீரசரிதத்தை போக்யமாகவுடையராய் * கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ * என்றிருக்கையாலே திருவடியோடொப்பர்;

(இனி அர்ஜுந ஸாம்ய நிரூபணம்)

பல்வகையுங்கண்டு வெண்சங்கேந்தின ரூபபரனுன ச்வேதன்—* சினப்போர்ச்சுவேதன் * என்று திருமழிசைப்பிரானுல் ச்வேதனென்று சொல்லப்பட்டு ச்வேதவாஹநனை அர்ஜுநன் * பச்யாமி தேவாந் தவ தேவ தேஹே * என்று விச்வரூபங்கண்ட பின்பு * ததேவ மே தர்சய தேவ ரூபம் * என்று பூர்வபரிசிதமான ஸௌம்யஸ்வரூபத்தைக் காணவாசைப்பட்டு சதுர்ப்புஜமாய் சங்கசக்ரகதாதரமான திவ்யரூபத்தைக் காட்டி யருளவேணுமென்றது போலே, இவரும் * நல்குரவுஞ் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய் * என்று தொடங்கி * பல்வகையும் பரந்த பெருமானைத் திருளிண்ணகர்க்கண்டேனே * என்று கண்டு, மேலே * நீராய் நிலனுய் * என்றதில் * கூராழி வெண்சங்கேந்திக்கொடியேன்பால் வாராய் * என்றபேக்ஷிக்கையாலே அர்ஜுநனேடொப்பர்.

முதலானுர்படிகளும் காணலாம்—மற்றுமுள்ள பலபல பக்தர்களின் படிகளும் இவ்வாழ்வார் பக்கலிலே காணலாம். .... .... .... (127)

(நா.) 127. (இனிமேல் லக்ஷ்மண பரதசத்ருக்ந தசரத யசோதா ப்ரஹ்லாத விபீஷண ஹநுமதர்ஜுநர்களுடைய படிகளும் ஆழ்வார் பக்கலிலே யுண்டென்கிறது.) 1.—இளைய பெருமாள் "பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:" என்கிறபடியே பால்யமே தொடங்கிப் பிரியில் தரியாதஸ்நேஹத்தாலே "பாஷ்பபர்யாகுலமுக:" என்றும், "ப்ரஹ்வாஞ்ஜலிபுடம் ஸ்திதம்" என்றும் சொல்லுகிறபடியே விச்லேஷப்ரஸங்கத்தாலுண்டான சோகவேகத்தாலே சொரிகிற பாஷ்பத்தோடே அஞ்சலியும் கையுமாய்க் கொண்டு "ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத" என்றும், "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே" என்றும் சொல்லுகிறபடியே திருச்சித்திரகூடகிரித் தாழ்வரை முதலான ருசிரதேசங்களிலே இருவருமான சேர்த்தியிலே ஸர்வவித கைங்கர்யங்களுமடியேன் செய்யும்படி ஏவிக்கொண்டருள வேணுமென்று ப்ரார்த்தித்து, அப்படிப்பட்ட அவிச்சிந்ந கைங்கர்யத்தைப் பெறுகைக்காக "ஸ ப்ராதுஸ் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:, ஸீதாமுவாசாதியசா:ராகவம் ச மஹாவ்ரதம்" என்கிறபடியே புருஷகார பூர்வகமாகத் திருவடிகளைக்கட்டிக்கொண்டு "அக்ரத: ப்ரயயௌ ராமஸ் ஸீதா மத்யே ஸுமத்யமா, ப்ருஷ்டதஸ் து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோ நுஜகாம ஹ" என்கிறபடியே ஆயுதபாணியாய்க் கொண்டு பெருமாளைப் பின்சென்று, "ப்ராதா பர்த்தா ச பந்துஸ் ச பிதா ச மம ராகவ:" என்று-தமக்கு ஸர்வவித பந்துவும் பெருமாளே என்றாப்போலே, இவ்வாழ்வாரும், "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து" என்கிறபடியே பருவம் நிரம்புவதற்கு முன்னே பிரியில் தரியாதபடி பிறந்தஸ்நேஹத்தாலே விச்லேஷம் பொறுமல் "அழுந்தொழு மாவியனல வெவ்வுயிர்க்கும்" என்று கண்ணும் கண்ணீரும் கையுமஞ்சலியுமாய் "திருவேங்கடத்தெழில்கொள் சோதிஎந்தை தந்தைதந்தைக்கு—ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம்" என்று *மொய்த்த சோலையும் மொய்ம்பூம் தடம் தாழ்வரையுமான போகஸ்தலங்களையுடைய திருமலையிலே, * அலர்மேல் மங்கையுறைமார்பனுகையாலே பிராட்டியோடே கூடியிருக்கிற பரமசேஷியானவனுக்கு ஸர்வதா ஸகல சேஷவ்ருத்திகளையும் பண்ண வேணும்; அதுதன்னிலும் "முகப்பே கூவிப் பணிகொள்ளாய்" என்று ஸந்நிதியிலே ஏவிக்கொள்ளவும் வேணுமென்று ப்ரார்த்தித்தபடி தத்கைங்கர்யத்தைப் பெறுகைக்கு உபாயமாக "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்று புருஷகாரம் முன்னாக அவன் திருவடிகளைப்பற்றி "வாளும் வில்லும் கொண்டு பின் செல்வார் மற்றில்லை" என்று திவ்யாயுதங்களைக் கொண்டு தாம் பின்னே திரிய ஆசைப்பட்டு "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையுமவரே" என்று ஸர்வேச்வரனே தமக்கு ஸர்வவித பந்துவுமென்கையாலே இளையபெருமாளோடே ஒப்பர். 2.—ஸ்ரீபரதாழ்வான் - பெருமாள் முடிசூடியிருக்கத் தாமடிமை செய்து வாழப் பெறாதபடி, கைகேயி அவரைக் காட்டிலே துரத்தித் தம்மேலே ஸ்வாதந்த்ர்யத்தை ஆரோபித்த கொடுமையாலே "ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்ட சாரிணீம்" என்று மாதாவானவளைச் சீறி உபேக்ஷித்து தமக்கு ஸ்வாதந்த்ர்யம் அஸஹ்யமென்னுமிடம் தோற்ற "ராஜ்யஞ் சாஹஞ் ச ராமஸ்ய" என்று சொல்லி, வஸிஷ்டாதி புரோஹிதர் 'நீ ராஜாவாக வேணும்' என்று

நியமியாநிற்க மஹத்தான ஐச்வர்யத்தையும் விரும்பாமல் பெருமாளை மீட்டுக் கொண்டுவந்து பட்டாபிஷேகம் பண்ணுவிக்க விரும்பி அவர் திருவடிகளிலே சென்று மீண்டெழுந்தருள வேணுமென்றபேக்ஷித்தவிடத்தில், அவர் அது செய்யாமல் திருவடிநிலைகளைக் கொடுத்துவிட, அந்தப் பாதுகைகளை சிரஸாவஹித்துக் கொண்டு மகிழ்ந்து மீண்டுவந்து, பெருமாள் வநவாஸம் முடிந்து த்வரையோடே திரும்பிவருமளவும் "பங்கதிக்தஸ் து ஜடிலோ பரதঃ" என்கிறபடியே கண்ணநீரா லுண்டானசேற்றிலே அழுந்தி, "மூத்தாரிருக்க இளையார் முடிசூடலாகாது" என்கிற இக்ஷ்வாகு குலமர்யாதை தப்பாமல் நோக்கிக்கொண்டு தம்முடைய மநோரதம் தலைக் கட்டப்பெறாத இழவோடே யிருந்தாப்போலே, இவ்வாழ்வாரும்,—பகவத் ப்ராவண்யாதிசயத்தாலே வழியல்லா வழியே யாகிலும் கிட்டுமத்தனையென்கிற த்வரைக்கு இசையாமல் விலக்கும் மாதாவை சத்ரு பக்ஷமாகக் காண்பவராய் "அன்னையென் செய்யிலென்?" என்று சீறியுபேக்ஷித்து, "யானே யென்றனதே" என்கிற ஸ்வாதந்த்ர்யத்தை ஸஹியாதவராய் "யானே நீ யென்னுடைமையும் நீயே" என்று ஆத்மாத்மீயங்களிரண்டும் அங்குத்தைக்கு சேஷமென்று, "கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு" என்று நிரவதிகைச்வர்யத்தையும் அக்நிஸமமாகக்கொண்டு, "வேங்கட வாணனை வேண்டிச் சென்று" என்று திருச் சித்திரகூடத்திலிருந்தாப்போலே திருமலையிலிருக்கிற அவனை அநுபவிக்க விரும்பிச் சென்று, தம் அபேக்ஷிதம் அவனப்போது செய்யாமல் ஒரு வைாத்ய முகத்தாலே "உன் திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை" என்று திருவடிகளைத் தந்தாயென்று ஹ்ருஷ்டராம்படிபண்ணிவிட, அப்படி அவன் கொடுத்த திருவடிகளை சிரஸா வஹித்து, வீடுதிருத்தப் போனவன் விண்ணுலகம் தரவிசைந்து வருமளவும் "கண்ணநீர் கைகளாலிறைக்கும்" "இருநிலம் கைதுழாவிருக்கும்" என்கிறபடியே கண்ணீர் வெள்ளத்தாலுண்டான சேற்றிலேயிருந்து ஆற்றாமை யாலே தரையைத்துழாவி, "குடிக் கிடந்தாக்கம்செய்து"என்கிறபடியே ப்ரபன்னகுல மர்யாதை தப்பாமலிருந்து, "காமுற்ற கையறவோடு" என்கிறபடியே தாமாசைப் பட்ட பொருள் கைபுகுராத இழவோடேயிருக்கையாலும் பரதாழ்வானோடு ஒப்பர். (3) ஸ்ரீ சத்ருக்நாழ்வான் பாகவத சேஷத்வமே பரமபுருஷார்த்தமென்று ஸ்ரீபரதாழ் வானுக்கே சேஷபூதராய் அவருடைய பாவநத்வ போக்யத்வங்களிலே கால்தாழ்ந்து பெருமாளுடைய வடிவழகிலும் துவக்குண்ணுதே தம்முடை நிஷ்டைக்கு அது நித்ய சத்ருவென்று நிஷ்கர்ஷித்திருக்கச் செய்தே ஸ்ரீ பரதாழ்வானுக்கு உகப்பாகை யாலே உத்தேச்யப்ரீதியென்று புரிந்து பெருமாள் வடிவிலே நெஞ்சு சென்று "நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந், இத்யேவமப்ரவீத் ப்ராதா சத்ருக்நோ பரதப்ரியঃ" என்கிறபடியே எப்போதும் அத்தை மநஸ்ஸில் கொண் டிருக்குமாபோலே, இவ்வாழ்வாரும் ஸ்வரூபத்தினுடைய எல்லைநிலமாகையாலே 'கோதிலடிமை' என்று சொல்லப்படுகிற பாகவத சேஷத்வத்தினுடைய ரஸம் "அவனடியார் சிறுமாமனிசரா யென்னையாண்டாரிங்கே திரிய" (அவர்களைத் தவிர்ந்து) செந்தாமரைக் கண் திருக்குறளன், "நறுமாவிரை நாண்மலரடிக் கீழ் புகுதல்—பாவியேனுக்கு உறுமோ" என்று சொல்லுவிக்கப்பட்டதாய், அந்த பாகவத நிஷ்டாவிரோதியான பகவத் விக்ரஹத்தை உத்தேச்யப்ரீதி யென்னுமற்றைப்பற்ற

● திரிதந்தாகிற்படியே மீண்டு "புலன் கொள்வடிவென் மனத்ததாய்" என்று எப்போதும் மனஸ்ஸுக்கு விஷயமாகக் கொண்டிருக்கையாலே சத்ருக்நாழ்வானோடொப்பர். (4) தசரத சக்ரவர்த்தி "ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிபः" என்கிறபடியே வைத்தகண் வாங்காதே மேன்மேலு மநுபவியாநிற்கச் செய்தேயும் ஒருகாலும் த்ருப்தி பெறுமல் இன்னமுமநுபவிக்க வேணுமென்கிற விருப்பத்துடனே செல்லுமாபோலே இவ்வாழ்வாரும் "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே" என்று அநுக்ஷண மெனக்கு ஆசையைப் பெருக்குமதான போக்யவஸ்து வென்று மேன்மேலும் அபிநிவிஷ்டராகையாலே சக்ரவர்த்தியோ டொப்பர். (5) க்ருதஸங்கேதமாய் நலிய வந்துநின்ற யமளார்ஜுநங்களின்நடுவே க்ருஷ்ணன் போனபோது யசோதைப் பிராட்டி ஓடிச்சென்று எடுத்துக்கொள்ளா நிற்க, மருத மரங்களின் பெருமையையும் இவனது இளமையையுங் கண்டு வயிறெரிந்து முகத்தைப் பார்த்து "இப்பெரிய மருதுகளின் நடுவே போனுயே" என்று வெறுத்தாப்போலே இவரும் அதீத காலஸ்தமாயிருக்கவும் ஸமகாலத்திற்போல ப்ரகாசிக்கையாலே அப்படி வயிறெரிந்து கொண்டு "போனாய் மாமருதின் நடுவே என் பொல்லாமணியே!" என்கையாலே யசோதைப் பிராட்டியோ டொப்பர் (6) ஸ்ரீ ப்ரஹ்லாதன் "நாக்நிர் தஹதி நைவாயம் சஸ்த்ரைஸ் சிந்நோ மஹோரகைः" இத்யாதிப்படியே அக்நி முதலானவை பாதகமாகாதபடி ஸர்வமும் பகவதாத்மகதயா அநுகூலமாக அநுஸந்தித்து "உர்வ்யாமஸ்தி—ஸர்வத்ராஸ்தீ" என்று பிறர்கு முபதேசித்தாப்போலே இவரும்—"அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதனென்னும் மெய்வேவாள், எறியும் தண் காற்றைத் தழுவி என்னுடைக் கோவிந்தனென்னும்" "போமிளநாகத்தின் பின் போயவன் கிடக்கையீதென்னும்" என்று அக்நி முதலான பாதக பதார்த்தங்கள் பகவதாத்மகத்வேந அநுகூலமாம்படி அவனை இடையறுது அநுஸந்தித்து "பரந்த தண்பரவையுள்" என்கிற பாட்டாலே எங்கு முளனென அவனது தன்மையைப் பலருமறியப் பேசுகையாலே *பள்ளியிலோதிவந்த சிறுவனான அந்த ப்ரஹ்லாதனோடொப்பர். (7) ஸ்ரீ விபீஷணழ்வான் லங்கையோடேகூட புத்ரதாராதிகளான ஸர்வத்தையும் விட்டு சக்ரவர்த்தி திருமகனைத் தமக்கெல்லாமாகப் பற்றினுப் போலே இவரும் "பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டு" என்று ஸாம்ஸாரிக ஸகல ஸங்கங்களையும் ஸவாஸநமாக விட்டு "தயரதற்கு மகன் றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே" என்று சக்ரவர்த்தி திருமகனையே தமக்கு ஸர்வப்ரகார ரக்ஷகனுகப் பற்றுகையாலே தர்மாத்மாவான விபீஷணனோடொப்பர். (8) திருவடி, சக்ரவர்த்தி திருமகனைத் தன்னுள்ளே யுடையனாய், அவனுடைய வீரசரிதத்தையே போக்யமாக வுடையனாய், ஸ்நேஹத்தாலும் பக்தியாலும் இவ் விஷயத்தை விட்டு பரத்வத்தில் தன் நெஞ்சு போகாமை சொல்லுகிறவிடத்தில் பரத்வத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் "அந்யத்ர" (பாவோ நாந்யத்ர கச்சதி) என்னும்படி சக்ரவர்த்தி திருமகனையல்லது அறியேனென்றிருந்தாப்போலே இவரும்—"செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை, உருக் கெட வாளி பொழிந்த வொருவன், திருக்கடிதானமுமென்னுடைச் சிந்தையுமொருக்கடுத் துள்ளேயுறையும் பிரான் கண்டீர்" என்று ஏகவீரனை சக்ரவர்த்தி திருமகனைத் தம்முள்ளே

யுடையராய், "கணை நாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே! ஓவாதவூணுகவுண்" என்கிறபடியே அவனுடைய வீரசரிதத்தை போக்யமாகவுடையராய், "கற்பாரிராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ" என்று தமக்கு இவ்விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தாலே பரத்வாதிகளைக் கழிக்கிறவிடத்தில் அவற்றின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாய் "மற்று" என்னும்படி * தயரதற்கு மகன்றன்னையன்றி மற்றிலராயிருக்கையாலே ராமதாஸரான திருவடியோடொப்பர். (9) அர்ஜுநன், "பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ! தேஹே" என்று விச்வரூபம் கண்டபிறகு, திவ்ய சக்ஷுஸ்ஸாலே இப்போது கண்ட விச்வரூபம் முன்பு ஒருகாலும் கண்டதல்லாமையால் ஹர்ஷபயங்களிரண்டையும் விளைக்கையாலே பூர்வ பரிசிதமான ஸௌம்ய ரூபத்தைக் காணவிரும்பி, சதுர்புஜமாய் சங்கசக்ர கதாதரமான திவ்ய விக்ரஹத்தைக் காட்டவேணுமென்று வேண்டினாப்போலே, இவரும்—"நல்குரவும் செல்வும்" என்று தொடங்கி "பல்வகையும் பரந்த பெருமானை—திருவிண்ணகர்க் கண்டேனே" என்று விருத்த விபூதியுக்தனாய்க் கொண்டு விபூதி முகத்தாலே பலபடியாக விஸ்த்ருதனாயிருக்கிறவனைக் கண்டு "நீராய் நிலனாய்" என்று தொடங்கி "சிவனாயனாய்" என்று—காரண கார்யங்களிரண்டையும் சரீரமாகக் கொண்டு நீ ஜகதாகாரனாயிருக்குமிருப்பை எனக்குக் காட்டித் தந்தாயாகிலும் இது எனக்கு ஆகர்ஷகமாய் அநுபாவ்யமாயிருக்கிறதில்லை; ஆனபின்பு "கூராராழி வெண்சங்கேந்தி—வாராய்" என்று அஸாதாரண விக்ரஹத்தை அநுபவிப்பிக்கக்கடவாய் என்று அபேக்ஷிக்கையாலே அர்ஜுனனோடொப்பர். இங்ஙனே மற்றும் பலஜ்ஞானிகளின் படியுமிவர் பக்கலிலே காணவடுக்கும். .... ... ... ... (127)

(மூ.) 128. குழலில் நெஞ்சும் அருகலில் சுவையுமான விவர் அவர்களளவல்லர்.

[கீழ்ச்சொன்னவர்களோடு ஆழ்வார்க்கு ஸாம்யமாத்ரமேயன்று! ஆதிக்யமுமுண்டு]

(ப.) 128. குழலில்நெஞ்சும்—* குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் நிழல்போல் வனர் கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல்—அப்புள்ளின் பின் போன தனிநெஞ்சமே * என்ற திருவிருத்தப் பாசுரப்படியே பிராட்டிமாரும் நித்ய ஸூரிகளும் அவனுமான திரளிலேபற்றின நெஞ்சையுடையராயும்,

அருகலில் சுவையுமான இவர்—* அருகலிலாய பெருஞ்சீர் அமரர்களாதி முதல்வன்..... ஒருகதியின் சுவை தந்திட்டொழிவிலனென்னோடுடனே * என்கிற திருவாய்மொழிப் பாசுரப்படி பிராட்டிமாரோடும் திருவடி திருவநந்தாழ்வான் முதலான நித்யஸூரிகளோடும் ஓரொருவராகையாலே பரிமாறுமவன் அவர்களெல்லார் பக்கலிலும் பண்ணும் ஆதரத்தை என்னொருவன் பக்கலிலே பண்ணாநின்றானென்னும்படி அநுபவரஸம் அதிசயிக்கப்பெற்றவராயுமிருக்கிற இவ்வாழ்வார்,

அவர்களளவல்லர்—ஒவ்வோரவதாரத்தளவிலே நிற்பவர்களும், எம்பெருமானிடத்தில் மாத்திரமே ப்ராவண்யமுடையவர்களும், அதுதானும் சிலஸமயங்களிலேயாய் விஷயாந்தர ப்ராவண்யமும் கலசியிருப்பவர்களுமான கீழ்ச்சொன்ன தசரதாதிகளிற் காட்டிலும் நெடுவாசி பெற்றவர் (பரம விலக்ஷணர்) ... ... (128)

(தா.) 128. கீழ்ச்சொன்னவர்களோடு இவர்க்கு ஸாம்யம் மாத்திரமேயன்று; ஆதிக்யமுமுண்டு.) "குழற் கோவலர்" என்கிற பாட்டிற்படியே—பிராட்டிமாரும் நித்யஸூரிகளும் அவனுமான திரளிலே பற்றின நெஞ்சையுடையராய், "அருகலிலாய பெருஞ்சீர்" என்ற பாட்டிற்படியே .. பிராட்டிமாரோடும் நித்யஸூரிகளோடும் ஓரோவகையாலே பரிமாறுமவன் அவர்களோடு பரிமாறுமாபோலே ஒரு வழியால் வந்த ரஸத்தைத் தந்துவிட்டு என்னளவில் அவ்வளவோடே ஒழிகிறுனில்லை; அவர்களெல்லார் பக்கலிலும் பண்ணுமாதரத்தை என்னளவில் பண்ணு நின்றுனென்னும்படி எல்லாவழிகளாலுமுள்ள ஸம்ச்லேஷரஸத்தை அவன் தமக்கு விளைக்கையாலே போகரஸமும் விசேஷிக்கப் பெற்றவரான இவ்வாழ்வார்—கீழ்ச் சொன்ன லக்ஷ்மணுதிகளில் அத்யந்தவ்யாவ்ருத்தர். .. ... (128)

(மூ) 129. எற்றைக்குமென்றது தோன்றப்பிறந்து ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக் காட்டுக்கு முற்பட்டு தர்மஞ்சொல்லிக் கேட்டு சிஷ்யதாஸிபக்ஷைகளாய்ப் பாடிவருடி யின்றுவந்தேன்பாரையும், சென்றுலூரும் நீளாஸதாஸபேதங் கொள்வாரையும் தாமவராகப் பாவிப்பர்.

[பிராட்டிமாரையும் நித்யஸூரிகளையும் இவ்வாழ்வார் அவர்தாமென்னலாம்படி பாவிப்பரென்கிறது]

(ப.) 129. எற்றைக்குமென்றது தோன்றப் பிறந்து—பூமிப்பிராட்டியின் அவதாரமான ஆண்டாள் * எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன்றன்னோ டுற்றோமேயாவோ முனக்கே நாமாட் செய்வோம் * என்று பிரார்த்தித்தது மற்ற திவ்ய மஹிஷிகளுக்கு மொக்குமாகையாலே அவர்களும் இப்படிப்பட்ட அபேக்ஷையோடே வராஹ, ராம கிருஷ்ணுவதாரங்களில் பூமிப்பிராட்டியாகவும் ஸீதையாகவும் ஆண்டாளாகவும் பிறந்து.

ஒப்பித்து வீசிக் காப்பிட்டுக் காட்டுக்கு முற்பட்டு தர்மம்சொல்லி—ஸீதாபிராட்டியானவள் பெருமாளுக்கு (ஒப்பித்து) *வராஹருதிராபேண சுசிநா ச ஸுகந்திநா, அநுலிப்தம் பரார்த்த்யேந சந்தநேந பரந்தபம் * என்கிறபடியே சந்தநாலங்காரம் செய்தது போல இவரும் * நீடுமதிள் திருவாறன்விளை மாகந்த நீர்கொண்டு தூவி வலஞ்செய்து * என்று சந்தனம் ஸமர்ப்பிக்கப் பாரிக்கையாலும் (வீசி) * ஸ்திதயா பார்ச்வத்ச் சாபி வாலவ்யஜந ஹஸ்தயா * என்கிறபடியே பிராட்டி பெருமாளுக்குத் திருவாலவட்ட கைங்கர்யம் செய்ததுபோல இவரும் * ஒழிவில் காலமெல்லாமுடனுய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம் * என்று பாரிக்கையாலும், (காப்பிட்டு) * ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாநி அபிதத்யுஷீ * என்கிறபடியே பிராட்டி பெருமாளுக்குக் காப்பிட்டது போலே இவரும் * ஆளுமாளார் ஆழியுஞ் சங்குஞ் சுமப்பார் தாம் * இத்யாதிகளாலே காப்பிட்டபடியாலும்,

காட்டுக்கு முற்பட்டு—* அக்ரதஸ் தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குசகண்டகாந் * என்கிறபடியே பிராட்டி வநப்ரஸ்தானத்திற்கு முற்பட்டதுபோல, இவரும் ஸம்ஸாரச் சிறையிருப்புக்குப் பின்வாங்காதே முற்கோலி வந்தபடியாலும், (தர்மம் சொல்லி) பெருமாள் தண்டகாரணியத்தி லெழுந்தருளியிருக்கிறபோது ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு நிற்கிற நிலையைக்கண்ட பிராட்டி என்ன பூசல் விளையுமோ வென்று

அதிசங்கையாலே பயப்பட்டு * தர்மாத் அர்த்தஃ ப்ரபவதே * என்று தொடங்கி தர்மஞ் சொன்னதுபோல, இவரும் * அவத்தங்கள் விளையும் என் சொற்கொள் அந்தோ * என்று அவன்தனக்கு தர்மம் சொல்லுகையாலும்; (பிராட்டியைத் தாம் அவராக பாவிப்பர் என்று முடிவு.)

இனி பூமிப்பிராட்டி விஷயம்—

கேட்டு சிஷ்யாதாஸீபக்தைகளாய்—* அஹம் சிஷ்யா ச தாஸீ ச பக்தா ச த்வயி மாதவ!, மத்க்ருதே ஸர்வபூதாநாம் லகூபாயம் வத ப்ரபோ * என்று சொல்லி ஸ்ரீவராஹநாயனார் பக்கலிலே பரமதர்மம் கேட்டு தந்மூலமாக சிஷ்யையும் தாஸியும் பக்தையுமானாள் பூமிப்பிராட்டி; அவள்போலே இவ்வாழ்வாரும் * பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் * என்றும் * ஞானப்பிரானை யல்லாலில்லை நான்கண்ட நல்லதுவே * என்றும் வராஹப்பெருமாள் பக்கலிலே ஞானம்பெற்று தத்ப்ரவணரா யிருக்கையாலே, (பூமிப்பிராட்டியைத் தாம் அவராக பாவிப்பர் என்று முடிவுகாண்க.)

இனி ஆண்டாள் விஷயம்—

பாடி வருடி இன்றுவந்தென்பாரையும்—ஆண்டாள் * உன்றன்னைப்பாடிப் பறை கொண்டு * என்று அவனைக் கவிபாடினாப்போலே இவரும் கவிபாடுகையாலும், * கேசவநம்பியைக் கால்பிடிப்பாளென்னு மிப்பேறெனக்கருள்கண்டாய் * பள்ளி கொள்ளுமிடத்து அடிகொட்டிடக்கொள்ளுமாகில் * என்று ஆண்டாள் திருவடி வருடப் பாரித்தாப்போலே இவரும் * வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க * என்று பாரித்தபடியாலும், ஆண்டாள் * நாறுநறும்பொழிற் பாசுரத்தில் நூறுதடாவில் வெண்ணெயும் நூறு தடாநிறைந்த அக்காரவடிசிலும்வாய் நேர்ந்து * இன்று வந்தித்தனையுமமுது செய்திடப்பெறில், நான் ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னுமாளுஞ் செய்வன் * என்றாப்போலே இவரும் * தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னேன் * என்று தொண்டர்களுக்கு வாயமுதம் தந்து, அதை அவர்கள் கைக்கொண்டால் * ஓதவல்ல பிராக்கள் நம்மையாளுடையார்கள் பண்டே * என்று, அடிமை செய்வதையே கொண்டதற்குக் கைக்கூலியாகச் சொல்லுகையாலும் (பூமிப்பிராட்டியின் ப்ராதுர்ப்பாவ விசேஷமான ஆண்டாளைத் தாம் அவராக பாவிப்பர் என்று முடிவு காண்க.)

இனி நித்யஸூரிகள் விஷயம்—

சென்றால் நிவாஸபேதம் கொள்வாரையும்—* சென்றால் குடையாம் * என்கிற பாட்டிலும் * நிவாஸ சய்யாஸந * இத்யாதி ஸ்தோத்ரரத்ந ச்லோகத்திலும் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய விநியோகங்களுக்குத் தகுதியாக, குடை சிங்காசநம் பாதுகை முதலான சரீரபேதங்கொண்டு ஸகலவித கைங்கரியங்களையுஞ் செய்யும் திருவனந்தாழ்வானையும்,

ஊரும் தாஸபேதம் கொள்வாரையும்—* ஊரும் புட்கொடியுமஃதே * என்கிற சந்தையிலும் * தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜஃ * இத்யாதி ஸ்தோத்ர ரத்ந ச்லோகத்திலும் சொல்லுகிறபடியே வாஹநம் த்வஜம் விதாநம் வ்யஜநம் முதலான

தேஹபேதங்களைக் கொண்டு ஸகலவித கைங்கரியங்களைச் செய்யும் பெரிய திருவடியையும்,

**தாம் அவராக பாவிப்பர்**—இவ்வாழ்வார் தாமும் * பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள் * என்னும்படி பிறந்து * தெய்வத்தினமோ ரனையீர்களாய் * என்னும்படி நித்யஸூரி ஸமுதாயத்தின் ஸாம்யமும் பெற்று * ஒழிவில்கால மெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்யவேண்டு நாம் * என்று ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் உசிதமான ஸகல வடிமை களையும் பண்ணவேணு மென்னும் விருப்பத்தையுடையராகையாலே அவர்களுக் கும் தமக்கும் ஒரு விசேஷமின்றிக்கே அவர்கள் தாமாகவே பாவிப்பர். .... (129)

(தா.) 129. ஸ்ரீ பூமிப் பிராட்டி யவதாரமான ஆண்டாளுடைய ப்ரார்த் தனை மூவர்க்குமொக்கு மாகையாலே "எற்றைக்கு மேழேழ்பிறவிக்கு முன்றன்னோ டுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்று அபேக்ஷித்தது தோன்றும் படி எம்பெருமானுடைய அவ்வவ அவதாரங்களுக்கு அநுகுணமாக ஸ்ரீ பூம்யாதி ரூபேண அவதரிப்பாளென்றபடியே அவன் சக்ரவர்த்தி திருமகனாயவதரித்தபோது தானும் ஸீதா பிராட்டியாக அவதரித்து, பெருமாளைத் திருவபிஷேகார்த்தமாக அலங்கரித்து அருகேஸேவித்துநின்று திருவெண்சாமரம்பணிமாறி,பிறகு சக்ரவர்த்தி மாளிகைக் கெழுந்தருளுகிறபோது பெருமாள் வடிவழகைக் கண்டு 'இது நமக்குத் தொங்கப் புகுகிறதோ!' என்னும் வயிறுபிடியாலே அந்தஃபுரத்வாரத்தளவும் பின் சென்று மங்களாசாஸனம் பண்ணி, அதன்பிறகு காட்டுக்கெழுந்தருளுகிறபோது "அக்ரதஸ் தே கமிஷ்யாமி" என்று தான்முற்பட்டு—ஸ்ரீ தண்டகாரண்யத்தில் எழுந் தருளுகிறபோது அவர் ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு நிற்கிறநிலையைக் கண்டு, இவர் ஸாயுதராய் நின்றால் ஆரேனும் மேல்விழுந்து ப்ரமாதம் விளையக்கூடுமென்று பயப்பட்டு, எல்லாவற்றுக்கும் தர்மமே மூலமென்னுமிடத்தை ஸ்மரிப்பித்து, ஆயுதத்தை வைத்து தாபஸ வேஷத்தோடே தர்மத்தை யநுஷ்டிக்கவமையு மென்று தர்மோபதேசத்தையும் பண்ணின பெரியபிராட்டியாரையும்; ஸ்ரீ வராஹ நாயனார் பக்கலிலே பரமதர்மம் கேட்டு, அதற்காக சிஷ்யையும் தாஸியும் பக்தையு மாய், "உன்றன்னைப்பாடி" என்கிறபடியே கவிபாடி "செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொற்றிருவடியினிணைவருட" என்கிறபடியே பெரியபிராட்டியாரைப் போலே அவன் திருவடிகளைப்பிடித்து, "இன்று வந்தித்தனையுமமுது செய்திடப் பெறில் நானொன்று நூறுயிரமாக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்" என்று தன்னை அடிமை கொண்டால் அதுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணுவேனென்று சொன்ன ஸ்ரீ பூமிப்பிராட்டியாரையும்; "சென்றால் குடையாம்" என்கிற பாட்டிலும் "நிவாஸ சய்யாஸந" இத்யாதி ச்லோகத்திலும் சொல்லுகிறபடியே பகவத்விநியோகத்துக்குத் தகுதியாகச் சத்ரஸிம்ஹாஸந பாதுகாதி சரீரபேதங்களைக்கொண்டு ஸகலவித கைங் கரியங்களையும் செய்யும் திருவனந்தாழ்வானையும், "ஊரும் புட்கொடியுமஃதே" என்கிற சந்தையிலும், "தாஸஸ் ஸகா" இத்யாதி ச்லோகத்திலும் சொல்லுகிற படியே வாஹநத்வஜவிதாநவ்யஜநாதி தேஹ பேதங்களைக்கொண்டு அநேக கைங் கர்யங்களைச் செய்யும் பெரியதிருவடியையும் போலே இவரும் பிறந்து பிராட்டிமார் தசையிலே நின்று பேசும்படியான பல பாவவ்ருத்திகளையும் "ஒழிவில் காலமெல்லா

மூடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்னு மபிநிவேசாதி சயத்தையுமுடையராகையாலே பிராட்டிமாரையும் அநந்தாதிஸூரிகளையும் அவர் களுக்கும் தமக்குமொரு விசேஷமற அவர்கள்தாமாகவே பாவிப்பர். ... (129)

(மூ.) 130. எழுவதோருரு அழிக்க, செய்கிற வழுவிலாவடிமைக்குப் பாஞ்சாலி படுத்துமதும் கௌஸல்யாநுவ்ருத்தியு மொப்பாக்குகை பரிசு.

[ஆழ்வார்க்குண்டான பாவனைகளுக்கு த்ருஷ்டாந்தமிடப் போகாதென்பது]

(ப.) 130. எழுவதோருரு அழிக்க—*குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு * என்னும்படியான எம்பெருமானது அப்ராக்ருத திவ்ய விக்ரஹம் இவ்வாழ்வாருடைய ஆண்மையை அழித்துப் பெண் மையை விளைத்ததற்கு,

பாஞ்சாலி படுத்துமது ஒப்பாகுகை பரிசு—ப்ராக்ருதமாய் மாம்ஸ பிண்டமான தேஹத்தை யுடையளான த்ரௌபதி தன் வடிவழகாலே சில ஸ்த்ரீகளை *பும்பாவம் மநஸா யயு: * என்கிறபடியே ஸ்த்ரீத்வத்தை யழித்துப் புருஷ பாவனையை யடை வித்ததை த்ருஷ்டாந்தமாக்குகை ஸ்தூலம்; (ஏலாதென்றபடி.)

செய்கிற வழுவிலாவடிமைக்கு—நிருபாதிக சேஷியான எம்பெருமான் விஷயத் திலே அளவற்ற ப்ரேமத்தாலே * வழுவிலாவடிமை செய்ய * என்கிறபடியே தம்மு டைய அபிஸந்தி விசேஷங்களால் இவர் செய்கிற பலவகை யநுவ்ருத்திகளுக்கு,

கௌஸல்யாநுவ்ருத்தி ஒப்பாக்குகை பரிசு—* யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவச, பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச் சோபதிஷ்டதி * என்கிறபடியே கௌஸல்யையானவள் தன்னுடைய ஔபாதிக பர்த்தா விஷயத்தில் பண்ணின சில அநுவ்ருத்திகளை த்ருஷ்டாந்தமாக்குகை ஏலாது. ... ... (130)

(ஸா.) 130. "சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்று—தேஜ: புஞ்ஜமத்யத்தில் உந்நேயமாம்படியிருப்பதாய் ஆண்களையும் பெண்ணுடை யுடுத்துமதான அவனுடைய அப்ராக்ருதவிக்ரஹம் இவ்வாழ்வாருடைய பும்ஸ்த் வத்தை அழித்து ஸ்த்ரீத்வபாவனையை விளைத்ததற்கும், அவன் விஷயத்தில் ப்ரீதியாலே "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்கிற தம்முடைய பாவ விசேஷங்களால் இவர் செய்கிற நாநாவித அநுவ்ருத்திகளுக்கும்—த்ரௌபதி யானவள் ஸ்வதேஹ ஸௌந்தர்யத்தாலே புருஷ பாவத்தையடைவித்ததையும், கௌஸல்யையானவள் ஔபாதிக பர்த்ருவிஷயத்தில் பண்ணின சில அநுவ்ருத்தி களையும் ஒருபுடை ஒப்பச் சொல்லுவோமென்றாலும் இதுக்கு அது பற்றாது (130)

(மூ.) 131. பெருக்காறு பலதலைத்துக் கடலை நோக்குமாபோலே நெக்கோசிந்து கரைந்தலைந்திடிந்து உடையப் பெருகு காதல் கடலிடங் கொண்ட கடலை பஹுமுகமாக அவகாஹிக்கும்.

[ஆழ்வார் பெண்ணிலைமையடைந்தாலும் தாமானதன்மையால் செல்லும் அபிநிவேசமும் இவர்க்குக் குறையாதென்பதை த்ருஷ்டாந்த பூர்வகமாகக் கூறுவது.]

(ப.) 131, பெருக்காறு பலதலைத்து—மஹாப்ரவாஹங் கொண்டு பெருகுகிற ஆறு பலதலையாய்ப் பரந்து செல்லா நிற்க,

கடலை நோக்குமாபோலே—* பெயருங் கருங்கடலே நோக்குமாறு * என்கிற படியே அவ்வாறானது தனக்கொரு குறைவின்றியே தனக்குப் புகலான கடலை நோக்கிச் சென்று சேர்வதுபோல,

நெக்கு ஓசிந்து கரைந்து அலைந்து இடிந்து உடையப் பெருகு காதல்—* இவன் தேவதேவ பிரானென்றே நிமியும் வாயொடு கண்கள் நீர்மல்க நெக்கொசிந்து கரையுமே * என்றும், நீராயலைந்து கரைய வுருக்குகின்ற நெடுமாலே * என்றும், * நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்து உகும் * என்றும், * என்மன முடைவதும் அவர்க்கே * என்றும் சொல்லுகிறபடியே உடைகுலைப்பட்டு சிதில ராய்ப் பரவசராய் த்ரவீபூதராய் நிலைகலங்கி நெஞ்சுகட்டழிந்து உருக்குலைந்து போம்படி * பெருகுமால் வேட்கையுமென் செய்கேன் * கழியமிக்கதோர் காதலளிவ ளென்று * என்கிறபடியே கரையழியப் பெருகுகிற காதல் வெள்ளமானது,

கடலிடங் கொண்ட கடலை—* கடலிடங் கொண்ட கடல்வண்ணா * என்கிற படியே கடல்போலே அபரிச்சேத்யராயிருக்கிற பெரிய பெருமாளை,

பஹுமுகமாக அவகாஹிக்கும்—தாமான தன்மையாலும் தோழி தாயார் மக ளென்னு மவஸ்தாந்தராபத்தியாலு முண்டான பேதத்தாலே பலமுகமாகச் சென்று சேரும். ... ... ... ... ... (131)

(தா.) 131. பெருவெள்ளங் கொண்ட ஆறு பலதலையாய்ப் பாய்ந்து செல்லா நிற்க, தனக்கொரு குறைவில்லாமல் தனக்குப் புகலான கடலை நோக்கிச் சென்று சேருமாபோலே சிதிலராய் த்ரவீபூதராய் நிலைகலங்கி நெஞ்சு கட்டழிந்து உருக் குலைந்து போம்படி அபாரமாகப் பெருகுகிற ஆழ்வாருடைய காதலானது க்ஷீராப்தி சாயியான எம்பெருமானாகிற கடலைத் தாமான தன்மையாலும் அவஸ்தாந்தரா பத்தியாலுமுண்டான பேதத்தாலே பலமுகமாகச் சென்று சேரும் [அவஸ்தாந் தரத்தை யடைந்தாலும் தாமான தன்மையால் செல்லுமபிநிவேசமும் இவர்க்குக் குறையாதென்றபடி.] ... ... ..... ... (131)

(மூ.) 132. அச்சேத்ய மென்னுமாது எரும் வேம் ஈரியா யுலர்ந்த வென்னப்பட, சீத்தம் சிந்தாய் அல்லையென்று நீங்க. காணங்கள் முடியானேயிலவை யாக, உடலமாத்மதர்மங்கொள்ள, காற்றுங் கழியுங் கட்டியழுக் கொண்ட பெருங்காதலுக்குப் பக்திமை நூல்வரம்பில்லையே.

(ஆழ்வாருடையபக்தி கட்டுக்கடங்காததென்பது.)

(ப.) 132. அச்சேத்யமென்னுமது—* அச்சேத்யோயமதாஹ்யோயம் அக்லேத்யா அசோஷ்ய ஏவச * என்கிற கீதையின்படியே கத்தியால் வெட்டுதற்கும் நெருப்பி னால் கொளுத்துதற்கும் நீரால் நனைப்பதற்கும் வெயிலினாலுலர்த்துவதற்கு மொண் ணாததாகச் சொல்லப்படுகிற ஆத்மவஸ்து,

எரும் வேம் ஈரியாய் உலர்ந்த என்னப்பட—* சிவனொடு பிரமன் வண் திருமடந்தை சேர் திருவாகம் எம்மாவியீரும் * வேம் எமதுயிர் அழல்மெழுகில் உக்கே * காரியம் நல்லனகள் அவை காணில் என் கண்ணனுக்கென்று ஈரியாயிருப்பாள் * வேவாரா வேட்கை நோய் மெல்லாவியுள்ளுலர்த்த * என்கிற பாசுரங்களில் ச்சேதநத்திற்கும்

தஹநத்திற்கும் க்லேதநத்திற்கும் சோஷணத்திற்கும் அர்ஹமாயிற்றென்று தாமே சொல்லும்படியாகி,

சித்தம் சிந்தாய் அல்லேனென்று நீங்க—அசேதனமான சித்தமானது சேதந ஸமாதியை யடைந்து * என்னெஞ்சு என்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கி * என்கிறபடியே இனி நான் உனக்குக் கரணமாவேனல்லேனென்று உறவறச் சொல்லித் தம்மை விட்டு நீங்கும்படியாகி,

கரணங்கள் முடியானேயிலவையாக—பாஹ்ய கரணங்கள் * முடியானே * என்கிற பதிகத்திற்சொல்லுகிறபடி சேதநஸமாதியாலே ஒரு கரணத்தினுடைய வ்ருத்தியை மற்றொரு கரணம் ஆசைப்படும்படி விடாய்மிகுந்ததாகி,

உடலம் ஆத்மதர்மங்கொள்ள—* ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன் பாயே * என்கிறபடியே அன்பு தானே ஒரு வடிவு கொண்டாற்போலேயாய் ஆத்மாவின் தன்மையை ஏறிட்டுக் கொண்டதாகி,

காற்றுங்கழியுங் கட்டியழ—* வாயுந்திரையுகளுமென்கிற பதிகத்திலே காற்று கழி கடல் நாரை விளக்கு முதலான பொருள்களையும் தம்மைப்போல் எம்பெருமானைப் பிரிந்து படுகிறனவாகக்கொண்டு * எம்மாற்றுமை சொல்லியழுவோமை * என்று தாம் அவற்றைக் கட்டிக்கொண்டு கிடந்து கதறும்படியாகி, ஆக இவ் வண்ணமாக.

கொண்ட பெருங்காதலுக்கு—* அலர் தூற்றிற்றது முதலாக்கொண்ட வென் காதலுரைக்கில் தோழீ! மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள்விசும்பும் கழியப்பெரிதால் * என்றும் * மயல்பெருங்காதலென்பேதை * என்றும் சொல்லுகிறபடியே அபரிச்சேத்யமாக வளர்ந்த ஆழ்வாருடைய பக்திக்கு,

பத்திமைநூல்வரம்பில்லையே—* ந சாஸ்த்ரம் நைவச க்ரம: * என்கிறபடியே பக்தி சாஸ்த்ரம் நூல்பிடித்துப் பரிமாறும்படி வரம்புகட்டவொண்ணாதே. (132)

(ஸா.) 132. "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோ சோஷ்ய ஏவ ச" (கீதா) என்று—வெட்டுதல் கொளுத்துதல் நனைத்தல் உலர்த்துதலாகிற இக்கார்யங்களுக்கு அநர்ஹமாகச் சொல்லப்படுகிற ஆத்மவஸ்து—'சிவனொடு பிரமன் வண் திருமடந்தை சேர் திருவாக மெம்மாவீரும்'' "வேமெமது உயிரழல் மெழுகிலுக்கு" "காரியம் நல்லனகள்அவைகாணிலென் கண்ணனுக்கென்று ஈரியாயிருப்பாள்" "வேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த" என்னும் பாசுரங்களில் "ஈரும், வேம், ஈரியாய், உலர்த்த' என்று ச்சேதநார்ஹமாகவும் தஹநார்ஹமாகவும் க்லேதநார்ஹமாகவும் சோஷணார்ஹமாகவும் ஆயிற்றென்று தாமே சொல்லும்படியாக:—அதுக்கு மேல் அசேதநமான மநஸ்ஸானது சேதநஸமாதியை யடைந்து "என்னெஞ்சென்னை நின்னிடையேனல்லேனென்று நீங்கி" என்கிறபடியே உறவறுத்துக் கொண்டு தம்மைவிட்டுநீங்கும்படியாக, அதுக்குமேலே சக்ஷுச்ச்ரோத்ராதிபாஹ்ய கரணங்கள் "முடியானே" என்னும் திருவாய்மொழியிற்படியே சேதநஸமாதியாலே ஒரு கரணத்தினுடைய வ்ருத்தியை மற்றொரு கரணமாசைப்படும்படி விடாய்க்க; அதுக்கு மேலே சரீரமானது "ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய" என்று அன்புதான் ஒருவடிவு கொண்டாற்போலேயாய் மேன்மேலும் சைதில்யத்தையடைந்து ஆத்மதர்மத்தை யேறிட்

டுக்கொள்ள; ''வாயுந்திரையுகளும்'' என்கிற திருவாய்மொழியில் ''கடலும் மலையும் விசும்பும்'' ''இருளின்திணிவண்ணம்'' இத்யாதிகளிற்படியே அசேதநமான காற்று முதலியவற்றைத் தமக்கு ஸமதுக்கிகளாகக்கொண்டு தாமவற்றைக் கட்டிக்கொண்டு கிடந்து கதறும்படியாக விளைந்த அபரிமித பக்திக்கு நூல் பிடித்துப் பரிமாறும்படி வரம்புகட்டவொண்ணாது; ' அத்யந்த பக்தியுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம:'' என்றது காண்க. ... ... .... ... (132)

(மூ) 133. ஸம்பந்தோபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்குத் தோழி தாயார் மகளென்றுபேர்.

(அருளிச்செயல்களில் தோழி தாய் மகளான பேச்சுக்களின் உட்கருத்து)

ஸம்பந்தத்தில் உணர்த்தி, உபாயத்தில் துணிவு, பலத்தில் பதற்றம் ஆகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்கு என்று யோஜிப்பது. ஸம்பந்தத்தில் உணர்த்தியாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்குத் தோழியென்று பேர்; உபாயத்தில் துணிவாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்குத் தாயாரென்று பேர்; பலத்தில் பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்கு மகளென்று பேர்—என்று யோஜித்தபடியாம்)

(ப) 133. ஸம்பந்தத்திலுணர்த்தியாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்குத் தோழி என்று பேர்—நாயக நாயகிகளை இணக்கிச் சேர்க்குமவள் தோழியாகையாலே, திருமந்த்ரத்தில் ப்ரணவத்தால் சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வாதி ஸம்பந்த ஜ்ஞானமே எம்பெருமானோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்த ஜ்ஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்தை ஆழ்வார்க்கு நடக்கின்றதென்னுமிடம்—தோழி பாசுரமாக வெளிவரும் (மூன்று) திருவாய்மொழிகளிலே தெரியும்.

உபாயத்தில் துணிவாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்குத் தாயாரென்று பேர்—பெற்று வளர்க்கப்பட்ட பெண்பிள்ளை நாயக விஷயத்தில் மிகுந்த ப்ராவண்யத்தாலே அவனிருந்தவிடம் தேடிப் போகவேணுமென்று பதறுமளவில் அவன் தானே வரக்கண்டிருக்கை யொழியப் படிகடந்து புறப்படுகை குலமர்யாதைக்குத் தகாதென்று தடுப்பவள் தாயாகையாலே, ஸித்தோபாயமான எம்பெருமானைப்பெறுவதில் பதற்றத்தைத் தடைசெய்து உபாயாத்யவஸாயத்தை யூட்டுகையாகிற ப்ரஜ்ஞாவஸ்தை ஆழ்வார்க்கு நடக்கிறதென்னுமிடம் தாய் பாசுரமாக வெளிவரும் (ஏழு) திருவாய்மொழிகளிலே தெரியும்;

பலத்தில் பதற்றமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைக்கு மகளென்று பேர்—தலைவியானவள் தலைவனுடைய வைலக்ஷண்யத்தி லீடுபட்டுக் குலமர்யாதைகளையும் பாராமல் பதறுபவளாகையாலே 'அத்தலையாலே பேறு' என்றிருக்கு முபாயாத்யவஸாயத்தையும் மீறிக் கிட்டியநுபவித்தல்லது தரியாதபடி நடக்கிற ப்ராப்யத்வரையாகிற ப்ரஜ்ஞாவஸ்தை நடக்கிறதென்னுமிடம் தலைமகள் பாசுரமாக வெளிவரும் (பதினேழு) திருவாய்மொழிகளிலே தெரியும். .... ... ... (133)

(தா) 133. இப்படிப்பட்ட பக்தி தசையில் இவர் பெண்பேச்சாகப் பேசுமிடத்தில், தோழி தாய் மகளென்று மூவகையாகப் பேசுகிறவிதுக்குக் கருத்தென்னென்னில்; அநந்யார்ஹசேஷத்வாதி ஸம்பந்தத்தில் ஜ்ஞாநமும், ஸித்தோபாயத்

தில் த்ருடாத்யவஸாயமும், பலத்தில் த்வரையுமாகிற ப்ரஜ்ஞாவஸ்தைகளுக்கு, முறையே தோழியென்றும் தாயாரென்றும் மகளென்றும் பேர். அதாவது தோழியாவாள் நாயகநாயகிகளை இணக்கிச் சேர்ப்பவளாகையாலே திருமந்த்ரத்தில் முதற் பதமான ப்ரணவத்தால் ஈச்வரனோடு ஆத்மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வாதி ஸம்பந்தஜ்ஞாநமே அவனோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்தஜ்ஞாநமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தோழியென்கிறது. தாயாராவாள் பெற்று வளர்த்து, பெண்பிள்ளை யௌவநப் பருவமடைந்து கணவனிடத்தில் மிக்க ப்ராவண்யத்தாலே அவனிருந்த இடத்தேறப் போகவேணுமென்று பதறுமளவிலும் அவன்றானே வந்து கைப்பற்றும்படி நிற்கையொழிய மர்யாதை தப்பிப்புறப்படுகை தகாதென்று தடுப்பவளாகையால், ஸித்தோபாயத்தைப் பற்றினவர்கள் ப்ராப்யத்துக்குப் பதறுமளவில் இது ப்ரபந்நகுல மர்யாதைக்குச் சேராதென்று தடுத்து இவளது துடிப்பையடக்கப் பார்க்கிற நம:பதத்தால் ப்ரதிபாதிக்கப்பட்ட உபாயாத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாயாரென்கிறது. தலைமகளாவாள் இயற்கையிற் புணர்ந்து நாயகனுடைய வைலக்ஷண்யத்திலே யீடுபட்டுக் குலமர்யாதைகளையும் பாராமல் அவனைக் கிட்டியல்லது தரிக்கமாட்டேனென்னும் பதற்றத்தை யுடையளாகையாலே, ப்ரணவநம:பதங்களா லறியப்பட்ட சேஷித்வ சரண்யத்வங்களை யுடையவனுக்கு சரமமான நாராயணபதத்தால் சொல்லப்பட்ட ரூப குண விபூதிகளால் வந்த வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து அவனை யநுபவிப்பதில் விளம்பம் பொறுக்க மாட்டாமையாலே ததேகோபாயத்வாத்யவஸாயத்தையுமதிக்ரமித்து, கிட்டியநுபவித்தல்லது தரிக்க முடியாதபடி நடக்கிற ப்ராப்யத்வரையாகிற ப்ரஜ்ஞாவஸ்தையை மகளென்கிறது. ... (.33)

(மூ) 134. ஸகி வெறிவிலக்கி ஆசையறுத்து அறத்தொடு நின்ற மூன்றில் அநந்யார்ஹத்வமும், வாடிமெலிந்து பித்தேறி ஏறப்பேசிக் கட்டிழந்து தகவின்று சார்வதே வலித்தமை ஸாதநமோவென்று மாதா அஞ்சி முறைப்பட்டு முறையிடுகிற ஏழில் அத்யவஸாயமும், புத்ரி பலகாலன்விட்டு ஆற்றுமைசொல்லிக் கவராதவைவிட்டு இரைக்க மடலெடுத்துக் கண்புதையப் போக்கற்று உருநெஞ்சுள்ளெழுக் கூடு நாள்தேடித் தாழ்ந்ததுக்கு ஊடி உசாத்துணையற்றுச் சூழவும் பகைமுகஞ் செய்யத் தடை நில்லாதே புயக்கற்று பாலையுங் காலையும் பூசலிடுகிற பதினேழில் த்வரையும் தெரியும்.

[மேற்கூறிய அவஸ்தைகள் தோழி தாய் மகள் பேச்சான திருவாய்மொழிகளிலே தெரியுமென்பதை விளங்கவைத்தல்]

(ப) 134. ஸகி வெறிவிலக்கி ஆசையறுத்து அறத்தொடு நின்ற மூன்றில்—தோழியானவள் வெறியாடலை விலக்கின * தீர்ப்பாரையாமினிப்பதிகமென்ன, * இவளைநீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ * என்று தாய்மாரோடே உறுதியறுத்துச் சொன்ன * துவளில் மாமணிமாடப் பதிகமென்ன, மத்யஸ்தையாய் நின்று தர்மமுரைத்த * கருமாணிக்கமலைப் பதிகமென்ன ஆகிய [தோழி பாசுரமான] இம்மூன்று திருவாய் மொழிகளில்,

அநந்யார்ஹத்வம் தெரியும்—அநந்யார்ஹத்வம் விளங்கும்; [தோழி பாசுரங்கள் ஸம்பந்த ஜ்ஞாநதசையிற் பேச்சென்னுமிடம் ஸ்பஷ்டம் என்கை ]

வாடி மெலிந்து பித்தேறி ஏறப்பேசிக் கட்டிழந்து அகன்று சார்வதே வலித்தமை—(வாடி) தாயானவள் * வாடி வாடு மிவ்வாணுதலே * என்று மகள் வாடினபடியைச் சொன்ன * ஆடியாடிப் பதிகமென்ன, (மெலிந்து) * கண்ணன் கழல்துழாய் பொன் செய் பூண்மென் முலைக்கென்று மெலியுமே * என்று மெலிந்தபடியைச் சொன்ன * பாலனாயேழுலகு பதிகமென்ன, (பித்தேறி) * என் பெண்கொடி ஏறிய பித்தே * என்று பித்தேறினபடியைச் சொன்ன * மண்ணையிருந்து துழாவிப்பதிகமென்ன, (ஏறப்பேசி) * ஈசன் வந்தேறக் கொலோ * என்று ஈச்வரனாவேசித்தானோ வென்று சொன்ன * கடல்ஞாலப்பதிகமென்ன, (கட்டிழந்து) * இழந்தது சங்கே * என்று தொடங்கி * இழந்தது கட்டே * என்னுமளவாக எல்லாமிழந்தமை சொன்ன * மாலுக்கு வையப்பதிகமென்ன, (அகன்று) * இன்றெனக்கு உதவாது அகன்ற * என்று தன்னைவிட்டு அகன்று திருக்கோளூர்க்கு நடந்தமை சொன்ன * உண்ணுஞ் சோற்றுப்பதிகமென்ன, (சார்வதே வலித்தமை) * சந்தித்து உன் சரணம் சார்வதே வலித்த தையல் * என்னும்படி அவனைக் கிட்டி அவன் திருவடிவாரத்திலே முடிய வேணுமென்று வ்யவஸாயங் கொண்டமையைச் சொன்ன * கங்குலும் பகலும் பதிகமென்ன,

ஸாதநமாமோவென்று மாதா அஞ்சி முறைப்பட்டு முறையிடுகிற ஏழில்—(ஆகக் கீழ்ச்சொன்ன பதிகங்களில் பேசப்பட்ட வாட்டம் மெலிவு முதலானவை) உபாஸகர்க்குப் பரபக்தி தசையிலுண்டாமவை போலே உபாயகோடியில் சேர்ந்துவிடுமோ வென்று (தாயார்) பயப்பட்டு எம்பெருமானைக் குறித்தும் வினவ வந்தவர்களைக் குறித்தும் இது முறையோவென்று சொல்லிக் கூப்பீடு செய்த ஏழு திருவாய்மொழிகளிலும்,

அத்யவஸாயம் தெரியும்—உபாயாத்யவஸாயம் விளங்கும். [தாய் பாசுரங்கள் உபாயாத்யவஸாயப் பேச்சு என்னுமிடம் ஸ்பஷ்டம் என்றவாறு ]

புத்தி பலகால் ஆள்விட்டு—தலைவி தூதுவிட்ட பதிகங்களான * அஞ்சிறைய மடநாரை, * வைகல் பூங்கழிவாய், * பொன்னுலகாளீர், * எங்கானலகங்கழிவாயாகிய நான்கு பதிகங்களென்ன,

ஆற்றாமை சொல்லி—* எம்மாற்றாமை சொல்லி யழுவோமை * என்று தம் ஆற்றாமை சொல்லி யழுத * வாயுந்திரையுகளும் பதிகமென்ன,

கவராதவை விட்டு—* மாறாளன் கவராத மணிமாமை குறைவிலம் * என்று தொடங்கி * உடம்புடையான் கவராத உயிரினால் குறைவிலம் * என்னுமளவாக எம்பெருமான் விரும்பாத ஆத்மாத்மீயங்களை யெல்லாம் உபேக்ஷித்தமை சொன்ன * ஏறாளுமிறையோன் பதிகமென்ன,

இரக்கமடலெடுத்து—* நாடு மிரைக்கவே யாம் மடலூர்தும் * என்று ஜகத் க்ஷோபம் பிறக்கும்படி மடலூர்வேனென்று சொன்ன * மாசறு சோதிப்பதிகமென்ன.

கண்புதையப் போக்கற்று—* பின்னின்ற காதல் நோய் நெஞ்சம் பெரிதடுமால், முன்னின்றிராவூழி கண்புதைய மூடிற்றால் * என்றுப்ரேமவ்யாதியும் காளராத்ரியும்,

கண்ணை மறைக்கையாலே போக்கற்றமை சொன்ன * ஊரெல்லாந் துஞ்சிப் பதிக மென்ன,

உரு நெஞ்சுள்ளெழ—* சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு என்னெஞ் சுள்ளெழும் * என்று ஜ்யோதிர் மயமான அப்ராக்ருத விக்ரஹம் உரு வெளிப்பாடாய் நெஞ்சிலே ப்ரகாசித்தமை சொன்ன * எங்ஙனேயோ பதிகமென்ன,

கூடுநாள் தேடி—திருவல்லவாழுறையுங் கோனுரை அடியேன் அடுகூடுவ தென்றுகொலோ * என்று, அவனைக் கூடும் நாளைப் பாரித்த * மானேய் நோக்கு பதிகமென்ன,

தாழ்த்ததுக்கு ஊடி—காலதாமதமாக வந்ததற்காகப் * போகு நம்பீ * யென்று ப்ரணயரோஷம் காட்டின * மின்னிடை மடவார் பதிகமென்ன,

உசாத்துணையற்று—* என்னெஞ்சினாரு மங்கே யொழிந்தார்—இனி யாரைக் கொண்டு என்னுசாகோ* என்று, உசாத்துணையான நெஞ்சு மொழிந்தமை சொன்ன * வெள்ளைச் சுரிசங்கு பதிகமென்ன,

சூழவும் பகைமுகஞ் செய்ய—எம்பெருமானுடைய திருமுகமண்டலத்திலே யுள்ள திருக்கண் முதலான அவயவங்கள் * இணைக்கூற்றங் கொலோவறியேன்—சூழவும் தாமரை நாண் மலர் போல் வந்து தோன்றுங் கண்டீர் * என்று பகை யானமை சொன்ன * ஏழையராவி பதிகமென்ன,

தடை நில்லாதே—* காலம் பல சென்றுங் காண்பதாணை உங்களோடெங்க ளிடையில்லையே * என்று, தோழிமார் தாய்மாரை அதிக்ரமித்தமை சொன்ன * நங்கள் வரிவளை பதிகமென்ன,

புயக்கற்று—* இழை நல்ல வாக்கையும் பையவேபுயக்கற்றது * என்று போலிகண்டு நொந்து முடியுமளவானமை சொன்ன * இன்னுயிர்ச் சேவல் பதிக மென்ன,

மாலையும் காலையும் பூசலிடுகிற—மாலைப் பூசலான * மல்லிகை கமழ் பதிக மென்ன, காலைப் பூசலான * வேய்மரு தோளிணை பதிகமென்ன,

பதினேழில் த்வரை தெரியும்—ஆகிய இப்பதினேழு திருவாய்மொழிகளில் பேற்றுக்கு த்வரிக்கை விளங்கும். தலைவிபாசுரமாக வருமவை ப்ராப்யத்வராதசையில் பேச்சென்னுமிடம் ஸ்பஷ்டம் என்றபடி.) .... ... ... (134)

(தா) 134. இவ்வவஸ்தைகள் மூன்றும் இவர் பேச்சிலே தோன்றுபோ வென்னில்; தோழியானவள் "தீர்ப்பாரையாமினி" என்ற திருவாய் மொழியில் வெறிவிலக்கியும், "துவளில் மாமணிமாடம்" என்ற திருவாய் மொழியில் ஆசை யறுத்தும், "கருமாணிக்க மலைமேல்" என்ற திருவாய்மொழியில் அறத்தொடு நின்றும், "இவ்வஸ்து அந்யசேஷமுமன்று, ஸ்வசேஷமுமன்று, பகவதேகசேஷம்" என்று சொன்னபடியால் ஸம்பந்தஜ்ஞாந தசையில் வரும் பேச்சாகிய இம்மூன்று திருவாய்மொழிகளிலும் அநந்யார்ஹசேஷத்வம் தெரியும். * அடியார்கள் குழாங் களையுடன் கூடப் பெருமையால் வந்த க்லேசத்தாலே ஆச்ரயத்தை இழந்த தளிர் போலே வாடுகிறபடியைப் பேசின *[1] ஆடியாடியும், அதீதங்களை ஆசைப்பட்டு மெலிந்தபடியைப் பேசின *[2] பாலனாயேழுலகும், ஸத்ருசபதார்த்தங்களையுமவனாக

நினைத்துக் கிட்டும்படி பிச்சேறினபடியைச் சொன்ன * [3] மண்ணையிருந்து துழாவி யும், ஆற்றாமையாலே அநுகரிக்கிறபடியை யறியாமல் ஈச்வரனாவேசித்தானோ வென்னும்படி அவன்றானாகப் பேசுகிறபடியைச் சொன்ன * [4] கடல்ஞாலமும், எம் பெருமானைப் பெறாத இழவாலே ஸகலத்தையுமிழந்தமையைச் சொன்ன * [5] மாலுக்கு வையமும், 'என் மகள் எனக்கு உதவாமற்போனாள்' என்னும்படி தன்னை விட்டுப் பிரிந்து போனபடியைச் சொன்ன * உண்ணுஞ்சோறும், "சந்தித் துன் சரணம் சார்வதேவலித்த தையல்" என்னும்படி அவனைக்கிட்டி அவன் ஸன் னிதியிலே முடியவேணுமென்று கொண்ட வ்யவஸாயம் ஸாதநகோடியில் புகுகிறதோவென்று மாதாவானவள் பயப்பட்டு, அவனைக் குறித்தும் வினவவந்த வர்களைக் குறித்தும் 'என் பெண் வாடாநின்றாள்; மெலியாநின்றாள்' என்றாப்போலே முறைப்பட்டுக் கூப்பிடுகிற * [7] கங்குலும் பகலுமாகிய—தாய்ப் பேச்சான ஏழு திருவாய்மொழிகளிலும் உபாயாத்யவஸாயம் தோற்றும்; தலைமகள் தூதுவிடும் திருவாய்மொழிகளான * [1] அஞ்சிறையமடநாராய், * [2] வைகல் பூங்கழிவாய், * [3] பொன்னுலகாளீரோ, * [4] எங்கானலகங்கழிவாய், என்கிற திருவாய்மொழிகளும், தன்னாற்றாமையைச் சொன்ன, * [5] வாயும் திரையுகளும், அவன் விரும்பாதவற்றை உபேக்ஷித்த * [6] ஏழுளுமிறையோனும், ஜகத்க்ஷோபம் பிறக்கும்படி மடலெடுத்த * [7] மாசறு சோதியும், ப்ரேமவ்யாதியும் காளராத்ரியும் கண்ணை மூடுகையாலே வேறு கதியில்லாமையைச் சொன்ன * [3] ஊரெல்லாம் துஞ்சியும், அப்ராக்ருதவிக்ர ஹம் நெஞ்சினுள்ளே ப்ரகாசிக்கும்படியைச் சொன்ன *[9] எங்ஙனேயோவன்னைமீரும் அவனோடு கூடிவாழும் நாளைத் தேடின * [10] மானேய் நோக்கும், அவன் விளம் பித்து வந்ததற்கு ஊடின * [11] மின்னிடை மடவாரும், உசாத்துணையற்று வருந்தின * [12] வெள்ளைச் சுரிசங்கும், அவனுடைய உருவெளித் தோற்றத்தில் பாதைப்படு வதைப் பேசின * [13] ஏழைபராவியும், ஹிதம் சொல்லுகிற தாய்மார் தோழிமாரை அதிக்ரமித்த * [14] நங்கள் வரிவளையும், ஸ்மாரகபதார்த்த தர்சநத்தால் தளர்ந்த * [15] இன்னுயிர்ச்சேவலும், மாலைப் பூசலென்று ப்ரஸித்தமான * [16] மல்லிகை கமழும், காலைப்பூசலென்று ப்ரஸித்தமான * [17] வேய்மருதோளிணையும், ஆகிற மகள் பேச் சான பதினேழு திருவாய்மொழிகளிலும் ப்ராப்யத்வரை தெரியும். ... (134)

(மு) 135. தோழிமாரன்னைய ரென்கிற பன்மை ரக்ஷகத்வாதிபந்தவாத்ஸல்யாதி வ்யவஸாய புத்தி பேதத்தாலே.

[தோழிமார் அன்னையர் என்கிற பன்மைக்குக் கருத்து விளம்புதல்)

(ப.) 135. தோழிமார் அன்னையர் என்கிற பன்மை—* தோழிமார்களு மன்னை யரும் முனிதிர் * ஆரென்னையாராய்வார் அன்னையருந் தோழியரும் * இத்யாதி பாசுரங்களில் பலதோழிகளும் பல தாய்மார்களு மிருப்பதுபோல் சொல்லுகிறது எதனாலென்னில்,

ரக்ஷகத்வாதி பந்த வாத்ஸல்யாதி வ்யவஸாய புத்தி பேதத்தாலே—(தோழிமாரென்கிற பன்மை ரக்ஷகத்வாதி பந்த புத்தி பேதத்தாலே; அன்னையரென்கிற பன்மை வாத் ஸல்யாதி வ்யவஸாய புத்தி பேதத்தாலே என்று பிரித்து யோஜிப்பது) ரக்ஷகத்வம் சேஷித்வம் காரணத்வம் முதலான ஸம்பந்தங்கள் பலவாகையாலே அந்தந்த ஸம்

பந்தங்களை விஷயீகரித்த ஜ்ஞானங்களில் பன்மையையிட்டுத் தோழிமாரென்கிற பன்மை பொருந்தும்; ஸித்தோபாயமான எம்பெருமானுடைய வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம் முதலான திருக்குணங்களைப்பற்றிவரும் துணிவுகள் பலவாகையாலே அப்பன்மையையிட்டு அன்னையரென்கிற பன்மை பொருந்தும். ... (135)

(ஸா) 135. தோழியென்றும் தாயென்றும் சொல்லுவது ஸம்பந்தஜ்ஞானத்தையு முபாயாத்யவஸாயத்தையுமாகில் 'தோழிமார்' 'அன்னையர்' என்கிற பஹுவசநத்துக்குக் கருத்தென்? என்னில்; திருமந்த்ரத்தில் சொல்லுகிறபடியே இவ்வாத்மாவோடு ஈச்வரனுக்கு ரக்ஷகத்வ சேஷித்வ காரணத்வ சரீரித்வாதி ஸம்பந்தங்கள் பலவுமுண்டாகையாலே அந்தந்த ஸம்பந்தங்களை விஷயீகரித்தஜ்ஞாநத்தினுடைய பேதத்தாலே 'தோழிமார்' என்கிற பஹுவசநம் உபபந்நம்; உபாயபூதனான அவனுடைய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யஜ்ஞாந சக்திக்ருபாதிகளைப் பற்றிவரும் வ்யவஸாய ரூபமானஜ்ஞாநத்தினுடைய பேதத்தாலே 'அன்னையர்' என்கிற பஹுவசநம் உபபந்நம். ... ... (135)

(மூ.) 136. அபிலாஷா சிந்தநா நுஸ்ம்ருதீச்சா ருசி பர பரமபக்திகளிலே பேதை முதலான பருவங்கொள்ளும்.

[தலைமகளுக்குச் சொன்ன ஸ்வாபதேசத்தின் விவரணம்]

(ப.) 136. அபிலாஷா, சிந்தநா, அநுஸ்ம்ருதி, இச்சா, ருசி, பரபக்தி, பரமபக்திகளிலே—முதலில் பார்த்தவாறே பிறக்கும் ஆசையாகிய அபிலாஷையென்ன, பார்த்த விஷயத்தை ஸ்மரிக்கையாகிற சிந்தனையென்ன, அந்த சிந்தனை இடையறுது நடக்கையாகிற அநுஸ்ம்ருதியென்ன, அவ்விஷயத்தை அவசியமநுபவித்தே நிற்கவேணுமென்னு மாசையாகிற இச்சையென்ன, அவ்வாசை வேறொன்றால் மாற்றவொண்ணாதபடி முதிருகையாகிற ருசியென்ன, அவ்விஷயத்தில் ஸம்ச்லேஷ விச்லேஷங்களே ஸுகதுக்கங்களாகையாகிற பரபக்தி யென்ன, அவ்விஷயத்தைப் பிரிந்தவாறே மூச்சடங்கும்படியான பரமபக்தியென்ன—ஆகிய இந்த ஏழவஸ்தைகளிலே,

பேதை முதலான பருவங்கொள்ளும்—* பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் * என்கிற ஏழு பருவமும் தலைமகளான ப்ராப்யத்வரைக்குக் கொள்ளப்படும். ... ... ... (136)

(ஸா.) 136. தலைமகளென்கிறது ப்ராப்யத்வரையையாகில், "பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்" என்கிற பருவமேழும் இங்கே கொள்ளும்படியென்? என்னில்; அநுபாவ்யமான விஷயத்தை முதலில் காணும்போது பிறக்குமாசையாகிற அபிலாஷையும், கண்டபின்பு அவ்விஷயத்திலுண்டான ஸ்மரணமாகிற சிந்தனையும் 2, அந்த ஸ்மரணத்தின் அநவரத ப்ரசாரமாகிற அநுஸ்ம்ருதியும் 3, அவ்விஷயத்தை அவச்யமநுபவித்தே நிற்கவேணுமென்னுமாசையாகிற இச்சையும் 4, அவ்வாசைதான் வேறொரு ரஸத்தால் மாற்ற முடியாதபடி முதிருகையாகிற ருசியும் 5, அவ்விஷயத்தில் ஸம்ச்லேஷ விச்லேஷங்களே ஸுகதுக்கங்களாகையாகிற பரபக்தியும் 6, அவ்விஷயத்தைப்

பிரிந்தால் ஸத்தையழிகையாகிற பரமபக்தியுமாகிற ஏழு அவஸ்தையிலும் பேதை முதலான ஏழு பருவமும் தலைமகளான ப்ராப்யத்வரைக்குக் கொள்ளலாம். [பக்தி ரூபமான ப்ராப்யத்வரைக்கு பக்தியினுடைய ஒவ்வொரு தசையும் ஒவ்வொரு பர்வமாகக் கொள்ளலாமென்கை.] ... .... ... (136)

(மு.) 137. மயில் பிறை வில் அம்பு முத்துப் பவளஞ் செப்பு மின் தேரன்னம் தெய்வவுரு—விகாஸ சுத்தி தாந்தி ஜ்ஞாநாநந்தாநுராக பக்த்யணுத்வ போக்யதாகதிகளையுடைய அகமேனியின் வதுப்பு.

[தலைமகளான நிலைமையில் வருணிக்கும் அவயவ விசேஷங்களுக்கு ஸ்வாபதேசம்]

(மயில்—விகாஸம், பிறை—சுத்தி, வில்—தாந்தி, அம்பு—ஜ்ஞாநம், முத்து—ஆனந்தம், பவளம்—அநுராகம், செப்பு—பக்தி, மின்—அணுத்வம், தேர்—போக்யதை, அன்னம்—கதி என்கிற முறையே ஸ்வாபதேசங்காணவேணும்

(ப) 137. மயில் பிறை .... தேரன்னம் தெய்வவுரு—மயில் பிறையித்யாதி வர்ணனைக்கு அர்ஹமான அவயவவிசேஷங்களோடு கூடியதாய், * என் தெய்வவுருவிற் சிறுமான் * என்ற பாசுரத்தில் தெய்வவுருவென்று அப்ராக்ருத ரூபமாகச் சொல்லப்பட்ட ரூபமாவது, ஞானவிகாஸம் சுத்தி முதலானவற்றுக்கு ஆச்ரயமாய் * என்னக மேனி யொழியாமே * என்ற பாசுரத்தில் அகமேனி யென்று சொல்லப்பட்ட ஆந்தரமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தின் வதுப்பு, (என்றபடி.) ... (137)

(தா) 137. இனி தலைமகளான அவஸ்தையில் வருணிக்கும் அவயவ விசேஷங்கள் எவையென்னில்; "தோகைமாமயிலார்கள்" என்று ஸ்த்ரீகளை மயிலாகச் சொல்லுகிறது கூந்தலின் விஸ்தாரத்தைப் பற்றியாகையாலே அத்தால் இவ்வாத்மாவினுடைய ஜ்ஞாநவிகாஸம் சொல்லுகிறது; "பிறையுடை வாணுதல்" என்று நெற்றியைப் பிறையாகச் சொல்லுகையாலே அதின் வெண்மையையிட்டு ஸ்வாதந்த்ர்யாந்யசேஷத்வங்களாகிற தோஷஸ்பர்சமற்றிருக்கும் சுத்தியைச் சொல்லுகிறது. "விற்புருவக்கொடி" என்று புருவத்தை வில்லாகச் சொல்லுகிறது வளைவைப் பற்றியாகையாலே பாஹ்யாப்யந்தரகரணங்களை அடக்குகையாகிற தாந்தியைச் சொல்லுகிறது. "அம்பன்னகண்ணாள்" என்று கண்ணை லக்ஷ்யத்தில் விழுகிற அம்பாகச் சொல்லுகையாலே "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்று தனக்கு வகுத்த விஷயத்தைப் பற்றினஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. "பவளவாயாள்" என்று அதரத்தை ப்ரவாளமாகச் சொல்லுகிறது சிவப்பையிட்டாகையாலே அவ்விஷயத்திலுண்டான அநுராகத்தைச் சொல்லுகிறது. "செப்பென்ன மென்முலை" என்று பரிபக்வமான முலையைச் செப்பாகச் சொல்லுகையாலே சேஷியானவன் விரும்பி மேல்விழும்படி முதிர்ந்த பக்தியைச் சொல்லுகிறது. "மின்னனைய நுண்மருங்குல்" என்று இடையை மின்னலாகச் சொல்லுகிறது ஸூக்ஷ்மத்வத்தைப் பற்றியாகையாலே கீழ்ச்சொன்ன ஜ்ஞாநாவஸ்தா விசேஷங்களுக்கெல்லாம் ஆதாரமான ஆத்மஸ்வரூபத்தின் அணுத்வத்தைச் சொல்லுகிறது. "தேரணங்கல்குல்" என்கிற நிதம்ப வைலக்ஷண்யம் போக்தாவுக்கு போக்யமா யிருக்கு

மதாகையாலே சேஷிக்கு மிகவும் ரஸாவஹமாம்படி யிருக்கிற ஆத்மவஸ்துவின் போக்யதையைச் சொல்லுகிறது. "அன்னமென்னடையாள்" என்று ஹம்ஸத்தை ஒப்பிடுவதானது. நடையழகுக்காகையாலே சேஷியும் ததீயரும் சிலாகிக்கும்படி ஸ்வரூபாநுரூபமாக நடக்கையைச் சொல்லுகிறது. ஆக இப்படி மயில் பிறை இத்யாதி வர்ணனத்துக்கு உரிய அவயவ விசேஷங்களோடு கூடி அப்ராக்ருதமாகச் சொல்லப்பட்ட ரூபமாவது—ஜ்ஞாந, விகாஸ, சுத்த்யாதிகளுக்கு ஆச்ரயமாய் ஆந்தரமாயிருக்கிற ஆத்மஸ்வரூபத்தின் வகுப்பு. ... .. (37)

(மூ) 138. சூழ்ச்சி அகற்றினீரென்னும் பழி, இணக்கி யெங்ஙனே யென்னும் மேலெழுத்து, முன்னின்று யிவளை நீரென்னு மிருபடை மெய்க்காட்டு, நீரென்னேயென்னு முடன்பாடு, இடையில்லை யென்னுமுதறுதல், இருந்திருந்து நடந்தாளென்னுங்கொண்டாட்டம் அவஸ்தாத்ரயவ்ருத்தி

[தோழி தாயார் மகள் என்கிற மூன்று அவஸ்தைகளின் வ்ருத்திவிசேஷங்கள் கூறுதல்]

(ப) 138. சூழ்ச்சி அகற்றினீ ரென்னும் பழி—என் பெண்மகளை யெள்கித் தோழிமார் பலர் கொண்டு போய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்கு உரைக்கேன் * என்று தாயானவள் தோழிமார்மேலே பழியிடுவது, * குமிறு மோசை விழவொலித் துலை வில்லி மங்கலங் கொண்டு புக்கு அமுதமென் மொழியாளை நீருமக்காசையின்றி யகற்றினீர் * என்று தோழியானவள் தாய்மார் மேலே பழியிடுவது ஆக இங்ஙனம் பரஸ்பரம் பழியிட்டுக் கொள்வதும்,

இணக்கி யெங்ஙனே யென்னும் மேலெழுத்து—* இணக்கி யெம்மை யெந்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை * என்கிற பாசுரத்தாலும் * எங்ஙனேயோ வன்னைமீர்கா ளென்னை முனிவது நீர் * என்கிற பாசுரத்தாலும் கீழ்ச் சொன்னபழி தோழியர்க்கும் தாய்மார்க்கு மொக்குமென்று தலைவியானவள் இசைந்து காட்டுவதும், [* எங்ஙனேயோ வென்னைமீர்கா ளென்னை முனிவது நீர் * என்பதற்கு-எனக்கு ஆதியிலே எம்பெருமானைக் காட்டிக்கொடுத்து இந்த ப்ராவண்யத்தை விளைத்த தாய்மாரான நீங்கள்தாமே என்னை இப்போது கண்டிக்கலாமோ? என்பதாகப் பொருளாகையாலே இந்தப் பாசுரத்தை இங்கெடுத்தது பொருந்துமென்க.]

முன்னின்றுய் இவளை நீரென்னும் இருபடை மெய்க்காட்டு—* முன்னின்றுயென்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர் * என்கிற பாசுரத்தினுல் தோழியானவள் தாய்மாரோடே கூடி நின்று தலைமகளைக் கண்டிப்பது, * இவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ * என்கிற பாசுரத்தினுல் தோழியானவள் தாய்மார்க்குக் கார்யோபதேசம் பண்ணுகிறப்போலே தலைமகளுக்குத் துணைசெய்வது ஆக விப்படி இரண்டு தலைக்கும் ஒரொருபோதிலே அநுகூலித்திருக்கையாகிற இருபடை மெய்க்காட்டும்,

நீரென்னே யென்னு முடன்பாடு—* ஆரென்னை யாராய்வார் அன்னையருந் தோழியரும் நீரென்னே யென்னுதே * என்கிற பாசுரத்தினுல் தாய்மாரோடும் தோழிமாரோடும் தலைமகளுக்கு ஆநுகூல்ய மிருப்பதாகக் காட்டப்படுவதும்,

**இடையில்லையென்று மூதறுதல்**—*ஏலமலர்க்குழலன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்! உங்களோடெங்களிடையில்லையே * என்கிற பாசுரத்தினுலே தலைவியானவள் தாய்மார் தோழிமாராகிற இரண்டு தலையையும் உதறிக் கைவிடுவதும்,

**இருந்திருந்து நடந்தானென்னுங் கொண்டாட்டம்**-- * கருந்தடங்கண்ணி கைதொழுதவந்நாள் தொடங்கி யிந்நாடொறும், இருந்திருந்து அரவிந்த லோசனவென்றென்றே நைந்திரங்குமே * என்று தோழியானவள் தலைவியினீடுபாட்டைக் கண்டு கொண்டாடுவது, *திருக்கோளூர்க்கே நேரிழை நடந்தாள் * என்று தாயார் கொண்டாடுவது ஆகிறவிவை.

**அவஸ்தாத்ரயவ்ருத்தி**--தோழி தாயார் மகளென்கிற மூன்றவஸ்தைகளின் செயலாகும். .... ... ... ... ... (138)

(தா.) 138. "தோழிமார் பலர்கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்" என்று தாயானவள் தோழிமார்மேலே பழியிடுவது, "துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு அமுதமென்மொழியாளை நீருமக்காசையின்றி அகற்றினீர்" என்று தோழியானவள் தாய்மார்மேலே பழியிடுவதாகிறவிதுவும், "இணக்கியெம்மை எம்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை' என்று—"எம்பிரானே! உன்னை வெறுப்பானேன்? என்னை உன் பக்கலில் அகப்படுத்தின தோழிமாராலே வந்ததன்றோவிது என்பது, "எங்ஙனேயோ வன்னைமீர்காள்! என்னை முனிவதுநீர்" என்று 'எனக்கு அவ்விஷயத்தைக்காட்டி இந்த ப்ராவண்யத்தை விளைத்த தாய்மாரான நீங்கள் இப்போது என்னை வெறுப்பானேன்? என்பதாய், கீழ்ச் சொன்னபழி—தோழி தாய்மாராகிற இரண்டு தலைக்கும் ஒக்குமென்று தலைமகள் மேலெழுத்திடுகையும், "முன்னின்றாயென்று தோழிமார்களு மன்னையரும் முனிதிர்" என்னும்படி தோழி தாய்மாரோடு கூடிநின்று தலைமகளைச் சீறுவது, "இவளை நீரினியன்னைமீர்! உமக்காசையில்லை விடுமினோ" என்று தாய்மார்க்கு கார்யோபதேசம் பண்ணுவாரைப்போலே தோழி தலைமகளுக்குத் துணை செய்வதாய்க்கொண்டு இரண்டுதலைக்கும் ஒவ்வொரு ஸமயத்திலே உதவிசெய்கையாகிற இருபடைமெய்க்காட்டும் அன்னையரும் தோழியரும் நீரென்னேயென்றதே நீளிரவும் துஞ்சுவரால்' என்று தாய்மாரோடும் தோழிமாரோடும் தலைமகளுக்குண்டான உடன்பாடும், [அதாவது—உறவு கொண்டாடுதல்] "உங்களோடெங்களிடையில்லை" என்று தோழிமார் அன்னையராகிற இரண்டு தலையையும் உதறிவிடுகையையும், "இருந்திருந்தரவிந்தலோசன வென்றென்றே நைந்திரங்கும்" என்று தோழி கொண்டாடுவது, "திருக்கோளூர்க்கே நேரிழை நடந்தாள்" என்று தாயார் கொண்டாடுவதாகிறவிதுவும், தோழி தாய், மகளென்கிற அவஸ்தாத்ரயத்தினுடையவும் வ்யாபாரம். ... .... ... (138)

(மூ) 139 **தாயாரேதலர் உற்றிகளென்னுஞ் ஸாத்ய ஸித்த ஸாதநநிஷ்டரை; மகள் நம்முடையேதலர் யாழுடைத்துணையென்னும் ஸித்தஸாதந ஸாத்யபரரை.**

**[தாயும், மகளுமான நிலைமைகளில் சத்ருக்களும் பந்துக்களுமாகச் சொல்லுகிறவற்றுக்கு ஸ்வாபதேசம் கூறுதல்]**

(ப.) 139. தாயார்—தாய்ப்பாசுரமாக நிகழும் பதிகங்களில்,

ஏதலர் என்னும்—* ஏதலர் முன்னா வென்னிளைந்திருந்தாய் * என்று சத்துருக்களாகச் சொல்லுகிறது, (யாரையென்னில்;)

ஸாத்ய ஸாதந நிஷ்டரை—ஸித்தோபாய நிஷ்டைக்கு ப்ரதிகூலர்களான ஸாத்யோபாய நிஷ்டர்களை;

உற்றீரகளென்னும்—(தாய்ப்பாசுரத்திலேயே * உற்றீர்கட்கு என்சொல்லிச் சொல்லுகேன் யான் * என்று பந்துக்களாகச் சொல்லுகிறது, (யாரையென்னில்;)

ஸித்த ஸாதந நிஷ்டரை—அநுகூலரான ஸித்தோபாய நிஷ்டரை,

மகள்—தலைமகள் பாசுரமாக நிகழும் பதிகங்களில்,

நம்முடை யேதலர் என்னும்—* நங்கள் வரிவளையாயங்காளோ நம்முடை யேதலர்முன்பு நாணி * என்று [நம்முடையேதலராக] அந்தரங்க சத்துருக்களாகச் சொல்லுகிறது. (யாரையென்னில்;)

ஸித்தஸாதநபரரை—பேற்றுக்கு த்வரிக்கை கூடாதென்று நிஷேதிக்கும் ஸித்தோபாயபரரை;

யாமுடைத்துணை யென்னும்—(மகள் பாசுரத்திலேயே) * யாமுடைத்துணை யென்னுந் தோழிமார் * என்று தன்னோடொத்த ஸுக துக்கமுடைய பந்துக்களாகச் சொல்லுகிறது, (யாரையென்னில் ;)

ஸாத்யபரரை—தன்னைப்போலே பேற்றிலே யூன்றியிருக்கும் உபேய பரரை.

(ஸா) 139. இந்த அவஸ்தாத்ரயத்திலும் தாய் என்றும், மகளென்றும் சொல்லுகிற அவஸ்தைகளில் தந்தமக்கு சத்ருக்களும் பந்துக்களுமாகச் சொல்லுகிறது ஆரையென்னில்; தாயாரான உபாயாத்யவஸாயதசையில் "ஏதலர் முன்னா என்னிளைந்திருந்தாய்" என்று சத்ருக்களாகச் சொல்லுகிறது—ஸித்தோபாய நிஷ்டைக்கு ப்ரதிகூலரான ஸாத்யோபாயநிஷ்டரை; "உற்றீர்கட்கென் சொல்லிச் சொல்லுகேன்யான்" என்று பந்துக்களாகச் சொல்லுகிறது—அநுகூலரான ஸித்தோபாய நிஷ்டரை. மகளான ப்ராப்யத்வராதசையில் 'நம்முடையேதலர் முன்பு நாணி" என்று அந்தரங்க சத்ருக்களாகச் சொல்லுகிறது—பகவதேக பரராயிருக்கச் செய்தே அவனுடைய உபாயத்வத்திலே யூன்றிநின்று, "பதறுதல் பாரதந்த்ரியத்துக்குச் சேராது" என்று நிஷேதிக்கிற ஸித்தஸாதநபரரை; "யாமுடைத்துணை யென்னும் தோழிமார்" என்று தன்னோடொத்த ஸுகதுக்கங்களையுடையவர்களாகச் சொல்லுகிறது—தன்னைப்போலே அவனுடைய உபேயத்வத்திலே உடன்பட்டிருக்கிற ஸாத்யபரரை. ... .... ... ... (139)

(மூ) (140.) நாலயலார் அயற்சேரியார் உபாய சதுஷ்டயாந்தர்யாமித்வபரர்.

[நாலயலார்க்கும் அயற்சேரியார்க்கும் ஸ்வாபதேசங் கூறுதல்]

(நாலயலார் உபாய சதுஷ்டயபரர்; அயற் சேரியார் அந்தர்யாமித்வபரர்—என்று பிரித்து யோஜித்துக்கொள்வது )

(ப) 140 நாலயலார்—* நாணி யினியோர் கருமமில்லை நாலயலாரு மறிந்தொழிந்தார் * என்ற விடத்துச் சொல்லப்பட்ட நாலயலார் ஆரென்னில்;

உபாய சதுஷ்டய பரர்—கர்ம ஜ்ஞான பக்திகளிலும், தான் பற்றும் பற்ருன ப்ரபத்தியிலும் ஊன்றி யிருக்குமவர்கள்;

அயற்சேரியார்—* நானக்கருங்குழல் தோழிமீர்காள்! அன்னையர்காள்! அயற் சேரியீர்காள் * என்ற பாட்டில் அயற்சேரியாராகச் சொல்லப்பட்டவர்கள் யாரென்னில்;

அந்தர்யாமித்வபரர்—அர்ச்சாவதாராதிகளில் அபேக்ஷையற்று தேவதாந்தர அந்தர்யாமித்வத்திலே ஊன்றியிருக்குமவர்கள். .. .... (140)

(தா) 140 "நாணியினியோர் கருமமில்லை நாலயலாருமறிந்தொழிந்தார்" என்கிற நாலயலாராகிறர்—கர்மஜ்ஞாந பக்தி ப்ரபத்திகளாகிற நாலுபாயங்களிலு மூன்றி யிருப்பவர்; "நானக் கருங்குழல் தோழிமீர்காளன்னையர்காளயற் சேரியீர் காள்" என்கிற அயல் சேரியாராகிருர்—அர்ச்சாவதாராதிகளில் ஊற்றமற்று தேவ தாந்தர்யாமித்வத்திலே ஊன்றியிருப்பவர். ... ... .... (140)

(மூ) 141. கீழைமேலை வடக்கிலவை புறம்பாகத் தன்பற்று உள்ளசல்.

[ப்ரபத்திபரரையும் அயலாராகச் சொல்லலாமோ வென்கிற சங்கைக்கு ஸமாதானம்]

(ப) 141. கீழை மேலை வடக்கிலவை—(கீழையது, மேலையது, வடக்கிலது ஆகிய இவை புறம்பசலாக, தன் பற்று உள்ளசல்=என்று பிரித்து யோஜிப்பது) * கெண்டையொண்கண் மடவாளொருத்தி கீழையகத்துத் தயிர் கடையக்கண்டு* * தானுமோர் கன்னியும் கீழையகத்துத் தயிர்கடைகின்ருன் போலும் * என்கிற பாசுரங்களினுல் ஸ்புரிக்கிற கர்ம யோகமென்ன * மேலையகத்து நங்காய் வந்து காண்மின்கள் * மேலையகத்தே நெருப்பு வேண்டி * என்கிற பாசுரங்களினுல் ஸ்புரிக்கிற ஜ்ஞானயோகமென்ன, * வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண் ணிடையாளொரு கன்னியை வேற்றுருவம் செய்துவைத்த * என்கிற பாசுரத்தில் ஸ்புரிக்கிற மக்தியோகமென்ன ஆகிய இந்த வுபாயாந்தரங்களானவை,

புறம்பு அசல் ஆக;—ஸித்த ஸாதநபரர்க்கு பாஹ்ய சத்ருக்களாயிருக்கும்; இவை யிப்படி யிருக்க,

தன்பற்று:—அவ்விஷயந்தன்னில் ஸ்வகத ஸ்வீகாரமானது,

உள்ளசல்:—அந்தரங்க சத்ருவாயிருக்கும். [ஆகவே கீழ்ச் சூர்ணையில் ப்ரபத்தி பரரையும் அயலாரில் சேர்த்தது பொருந்து மென்றபடி.] ... (141)

(தா.) 141. ப்ரபத்திபரரையும் அசலாகச் சொல்லலாமோவென்னில்; "கீழையகத்துத் தயிர்கடைய" என்கிற பாசுரத்தில் சொல்லுகிற தயிர்கடைதலென் னும் க்ரியையாகிற கர்மயோகமும், "மேலையகத்து நங்காய் வந்து காண்மின்கள்" என்கிற பாசுரத்தில் சொல்லுகிற காணுதலென்னும் தர்சநமாகிற ஜ்ஞாநயோகமும் "வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவம் செய்துவைத்த" என்கிற பாசுரத்தில் சொல்லுகிற ஒரு கந்யகையை விகாரப்படுத் துகையென்னும் அநுபவமாகிற பக்தியோகமும், ஸித்தோபாயபரர்க்கு பாஹ்ய சத்ருவாய், அவ்விஷயத்தில் ஸ்வகதஸ்வீகாரமானது அந்தரங்க சத்ருவாயிருக்கும். [ஆகையால் ஸ்வகதஸ்வீகார ரூபப்ரபத்திபரரை அசலாகச்சொல்லக் குறையில்லை யென்கை.] ... ... .... — .... (141)

(மூ.) 142. **ஊரார் நாட்டார் உலகர் கேவலைச்வர்யகாம ஸ்வதந்த்ரர்.**

**[ஊரார் நாட்டார் உலகர் என்பவற்றுக்கு ஸ்வாபதேசம் கூறுதல்]**

(ஊரார்-கேவலர், நாட்டார்-ஐச்வர்யகாமர், உலகர்-ஸ்வதந்த்ரர் = என்று பிரித்து யோஜிப்பது,)

(ப) 142. **ஊரார்**—*ஊராரிகழிலும்* ஊரவர்கவ்வை யெருவிட்டு* என்னு மிடங்களில் ஊராராகச் சொல்லுவது. (யாரையென்னில்;)

**கேவலர்**—கைவல்ய நிஷ்டர்களை;

**நாட்டார்**—* நாட்டாரோடியல்வொழிந்து * என்னுமிடத்தில் நாட்டாராகச் சொல்லுவது, (யாரையென்னில்;)

**ஐச்வர்யகாமர்**—இஹலோகைச்வர்ய காமர்களை;

**உலகர்**—* இம்மடவுலகர் * ஊரும் நாடு முலகமும் * என்னுமிடங்களில் உலகரென்று சொல்லுவது, (யாரையென்னில்;)

**ஸ்வதந்த்ரர்**—ஸ்வர்க்காதி பரலோகைச்வர்யகாமரான ஸ்வதந்த்ரரை. (142)

(தா.) 142. "ஊராரிகழிலும்" "ஊரவர் கவ்வை" "நாட்டாரோடியல் வொழிந்து" "எங்கள் கண் முகப்பே உலகர்களெல்லாம்" "இம்மடவுலகர்" "ஊ நம் நாடுமுலகமும்" என்னுமிடங்களில் ஊரார் என்பது ஆத்மப்ராப்திகாமரான கேவலரை; நாட்டாரென்பது—புத்ரபச்வந்நாதிரூப இஹலோகைச்வர்யகாமரை; உலகர் என்பது—ஸ்வர்க்காதி பரலோகைச்வர்யகாமரான ஸ்வதந்த்ரரை. (142)

(மூ) 143. **இறுகலிறப்புக்கும் இறந்தால் தங்குமூரொக்குமே.**

**[கைவல்ய நிஷ்டரை ஓர் ஊராகச் சொல்லுவானேன்? என்கிற சங்கைக்கு ஸமாதானம்]**

(ப.) 143. **இறுகலிறப்புக்கும்**—* குறுகமிகவுணர்வத்தொடு நோக்கி * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் இறுகலிறப்பென்று ஸங்கோச ரூபமான மோக்ஷமாகச் சொல்லப்படுகிற கைவல்ய மோக்ஷத்துக்கும்,

**இறந்தால் தங்குமூர் ஒக்குமே**—* யோகிநாம் அம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்ம ஸந்தோஷகாரிணும் * என்கையாலே * இறந்தால் தங்குமூர் அண்டமேயாகி மோக்ஷஸ்தான மொக்கும். (ஆகவே கீழ்ச் சூர்ணையில் கேவலரை ஒருராகச் சொன்னது பொருந்து மென்க.) ... ... ... (143)

(தா.) 143. கைவல்ய நிஷ்டரை ஒருராகச் சொல்லுவானேன்? எனில்; அபரிச்சிந்நமான ஸ்வரூப ரூபகுண விபூதிகளையுடைய எம்பெருமானுடைய அநுபவம்போலல்லாமல் அணுவான ஆத்மாவின் அநுபவமாத்ரமேயாகையாலே "இறுகலிறப்பு" என்கிற ஸங்கோச ரூபமான அந்த கைவல்ய மோக்ஷத்துக்கும் = ஜராமரணாதிகளில் அந்வய மொழிந்து அநுபவிக்கும்போது ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கு ஆளாகிற ப்ரக்ருதி மண்டலத்துக்கு மேற்பட்ட பரமாகாசத்திலேயிருந்து அநுபவிக்க வேண்டுகையாலே 'யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணும்' என்கையாலே "இறந்தால் தங்கு மூரண்டமே கண்டுகொள்மின்" என்கிறபடியே ப்ரக்ருதி ஸம்பந்தமற்றால் பின்பு போய் வஸிக்கும் தேசம் ஸமாநமாயிறே ... (143)

(மு.) 144. சிறுசீரார்சுளகுகள் உபயவிவேக பரிகரம்.

[சிறுசுளகு, சீரார்சுளகு என்னுமிவற்றுக்கு ஸ்வாபதேசம் கூறுதல்]

(சிறு சுளகு, சீரார்சுளகு ஆகிய விவை உபயவிவேக பரிகரம் என்று பிரித்து யோஜிப்பது.)

(ப.) 144. சிறுசுளகு—* சிறுசுளகு மணலுங் கொண்டு * என்ற விடத்தில் சிறுசுளகாகச் சொல்லப்படுவது ஏதுவென்னில்;

உபயவிவேக பரிகரம்—தேஹத்திற் காட்டில் ஆத்மாவை வேறுபட விவேகிப்பதற்குப் பரிகரமான ப்ரமாணம்;

சீரார் சுளகு—*சீரார் சுளகில் சில நெல் பிடித்தெறியா* என்னுமிடத்தில் சீரார் சுளகாகச் சொல்லப்படுவது எதுவென்னில்;

உபயவிவேக பரிகரம்—ஜீவாத்ம பரமாத்ம விவேகத்துக்குப் பரிகரமான ப்ரமாணம், (உபயவிவேக மென்றது-பொதுவாக த்யாஜ்யோபாதேய விவேக மென்றபடி.)

(நா.) 144. "சிறுசுளகுமணலும் கொண்டு" என்றும், "சீரார் சுளகில் சில நெல் பிடித்தெறியா" என்றும் சொல்லுகிற விடங்களில் சிறுசுளகாவது—பெரிய மணலையும் சிறிய மணலையும் பிரிப்பதொரு வஸ்துவாகையாலே தேஹாத்மவிவேகத்துக்குப் பரிகரமான ப்ரமாணத்தைச் சிறுசுளகென்கிறது; சீரார் சுளகானது—'இவனுக்கு இந்த வ்யாமோஹத்தை விளைத்தவன் யார்?" என்று ஆராயுமளவில், "சில நெல் பிடித்தெறியா" என்று தொடங்கி "பேராயிரமுடையானென்றாள்" என்று—"தேவதாந்தரங்களன்று; ஸர்வேச்வரன்" என்று விவேகிக்கிற போதைக்கு உபகரணமாகையாலே ஆத்மபரமாத்ம விவேகத்துக்குப் பரிகரமான ப்ரமாணத்தைச் சீரார்சுளகு என்கிறது. ... ... ... ... (144)

(மு.) 145. மாலை கங்குல் காலை பகல்—ரஜஸ் தமஸ் ஸத்வ சுத்தஸத்வ ஜ்ஞானங்கள்.

[மாலைகங்குல் காலைபகல்களுக்கு ஸ்வாபதேசம் கூறுதல்]

(மாலை—ரஜோஜ்ஞானம்; கங்குல்—தமோஜ்ஞானம்; காலை—ஸத்வஜ்ஞானம்; பகல்—சுத்தஸத்வஜ்ஞானம்—என்று பிரித்து யோஜிப்பது)

(ப.) 145. மாலை—*செல்கதிர்மாலையும் மயக்குமாலோ* என்பது முதலான விடங்களில் மாலையாகச் சொல்லுகிறது எதுவென்னில்;

ரஜோஜ்ஞானம்—பதார்த்தங்கள் அவிசதமாகத் தெரிவதற்குறுப்பான ராஜஸ ஜ்ஞானம்;

கங்குல்—* செல்கின்ற கங்குல்வாய் * என்பது முதலான விடங்களில் கங்குலாகச் சொல்லுகிறது எதுவென்னில்;

தமோஜ்ஞானம்—பதார்த்தங்கள் மாறுபாடாகத் தெரிவதற்குறுப்பான தாமஸ ஜ்ஞானம்;

காலை—* காலை நன்ஞானத்துறை படிந்தாடி* என்பது முதலான விடங்களில் காலையாகச் சொல்லுகிறது எதுவென்னில்;

ஸத்வஜ்ஞானம்—பதார்த்தங்கள் உள்ளபடி தோற்றுகைக் குறுப்பான ஸாத்விக ஜ்ஞானம்;

பகல்—* பகல் கண்டேன் * என்பது முதலான விடங்களில் பகலாகச் சொல்லுகிறது எதுவென்னில்,

சுத்தஸத்வஜ்ஞானம்—ஸர்வேச்வரனை நன்ருக ஸாக்ஷாத்கரிக்கைக் குறுப்பான சுத்த ஸாத்விகஜ்ஞானம். ... ... ... ... (145)

(தா.) 145. "செங்களம்பற்றி நின்றெள்கு புன்மாலை" "செல்கதிர் மாலை" இத்யாதிகளில் சொல்லுகிற மாலையாவது—பதார்த்தங்களை உள்ளபடி விசதமாக ப்ரகாசிப்பியாமல் மாருகத்தோற்றுவிக்கிற ஸந்த்யாகாலமாகையாலே பதார்த்தங்களில் அந்யதாப்ரதிபத்திக்கு உறுப்பான ராஜஸஜ்ஞானத்தை மாலை யென்கிறது. "சூழ்கின்ற கங்குல்" இத்யாதிகளில் சொல்லுகிற கங்குலாவது—பதார்த்தங்கள் ஒன்றும் தோற்ருதபடியாய் ஏதேனும் தோற்றுவதுண்டாகில் விபரீதமாகத் தோற்றும்படியிருக்கும் இருள்மூடின ராத்திரியாகையாலே, அறியவேண்டுமர்த்தத்தை அறிவியாதவளவேயன்றி விபரீதப்ரதிபத்தி ஹேதுவுமாயிருக்கும் தாமஸஜ்ஞானத்தைக் கங்குலென்கிறது. "காலையெழுந்திருந்து" இத்யாதிகளில் சொல்லுகிற காலையாவது—ப்ராஹ்மமுஹூர்த்தமாகையாலே பதார்த்தங்களுடைய உண்மையுணர்ச்சிக்கு உறுப்பாயிருக்கும் ஸாத்விக ஜ்ஞானத்தைக் காலையென்கிறது. "பகல் கண்டேன்" இத்யாதியில் சொல்லும் பகலாவது—பதார்த்தங்களை ஸம்சயவிபர்யயமின்றி விசதமாக ப்ரகாசிப்பிக்கும் காலமாகையாலே "நாரணனைக் கண்டேன்" என்கிறபடியே ஸமஸ்தகுண விக்ரஹ விபூதிகளோடு கூடின எம்பெருமானை நன்ருக ஸாக்ஷாத்கரிக்கிற சுத்தஸத்வ ஜ்ஞானத்தைப் பகல் என்கிறது. ... (145)

(மூ.) 146. நிலாமுற்றம் ப்ரஜ்ஞாப்ரஸாதமென்னு மெல்லை நிலம்.

[நிலாமுற்றத்துக்கு ஸ்வாபதேசம் கூறுதல்]

(ப) 146. நிலாமுற்றம்—* நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினுள் * என்றவிடத்து நிலாமுற்ற மென்கிறது எதுவென்னில்;

ப்ரஜ்ஞாப்ராஸாத மென்னும் எல்லை நிலம்—* ப்ரஜ்ஞாப்ராஸாத மாருஹ்ய......... ப்ராஜ்ஞ: ப்ரபச்யதி * என்கிறபடியே உயரநின்று எல்லாவற்றையும் காண்கைக் குறுப்பாகச் சொல்லப்படுமதாய், அதிலேநின்று நோக்கினவளவில் * காணுமோ கண்ணபுரமென்று காட்டினுள் * என்று, பகவானைத் தள்ளி பாகவத் ஸம்பந்திய ன விஷயமே பரமப்ராப்யமென்று காட்டினதாகச் சொல்லுகையாலே சரமாவதியான புருஷார்த்த ஜ்ஞானமே நிலாமுற்றமென்பது. ... ... (146)

(தா.) 146. "நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினுள்" என்கிற நிலா முற்றமாவது—"ப்ரஜ்ஞாப்ரஸாதமாருஹ்ய அசோச்ய: சோசதோ ஜநாந். பூமிஸ்தாநிவ சைலஸ்தோ ஹ்யஜ்ஞாந் ப்ராஜ்ஞ: ப்ரபச்யதி" என்கிறபடியே உயரநின்று எல்லாவற்றையும் காண்கைக்கு உறுப்பாகச் சொல்லப்படுவதாய் அதிலே நின்று பார்த்தவளவில் "காணுமோ கண்ணபுரமென்று காட்டினுள்" என்கையாலே ததீய விஷயமே பரமப்ராப்யமென்று பிறர்க்கும் விளங்கும்படி சரமாவதியான புருஷார்த்த ஜ்ஞாநம்.

(மூ.) 147. கலைவளை அஹம் மமக்ருதிகள்.

[கலைவளைகளுக்கு ஸ்வாபதேசம்]

(ப.) 147. கலை வளை– *கைவளையும் மேகலையுங் காணேன் *கலையாளாவக லல்குல் கனவளையுங் கையாளா* என்னுமிடங்களில் கலையும் வளையுமாகச் சொல்லு மவை எவை யென்னில்;

அஹம்மமக்ருதிகள்—அஹங் க்ருதியும் மமக்ருதியுமாம், (அஹங்கார மமகா ரங்களென்கை) ... ... ... .... (147)

(தா.) 147. "கைவளையும் மேகலையும் காணேன்" "கலையாளாவகலல்குல் கனவளையும் கையாளா" இத்யாதிகளில் சொல்லுகிற கலையும் வளையுமாவன— பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்காரமும் மமகாரமும். ["கழல்வளை பூரிப்பயாம்கண்டு" இத்யாதி ஸ்தலங்களில் த்யாஜ்யமான அஹங்கார மமகாரங்க ளல்லாமல் "சேஷோஹம்" "என்னுடைய திருவரங்கர்" என்ருற்போன்ற அஹம் மமதைகளைச் சொல்லுவதாகக் கொள்ளலாமாகையாலே அவ்விடத்துக்கு மிதுவே ஸ்வாபதேசமாகக் குறையில்லை. .... ... ... (147)

(மூ.) 148. பட்டம் சூடகமாவன பராவர குருக்கள் பூட்டுமாத்ம பூஷணங்கள்.

[பட்டம் சூடகம் முதலியவற்றுக்கு ஸ்வாபதேசம்]

(ப.) 148. பட்டம் சூடகமாவன—* பட்டங்கட்டிப் பொற்ருேடு பெய்து இவள் பாடகமுஞ் சிலம்பும் இட்டமாக வளர்த்தெடுத்தேனுக்கு * என்றும், * சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே பாடகமே யென்று அனைய பல் கலனும்யாமணிவோம் * என்றும் சொல்லுகிற ஆபரணங்களாவன.

பராவர குருக்கள் பூட்டும் ஆத்ம பூஷணங்கள்—பரகுருக்களான ப்ரதாநாசார்யர் களும், அவரகுருக்களான [சிந்தநாசார்யர்களான] அப்ரதாநாசார்யர்களும் உண் டாக்கிக் கொடுக்கிற ஆத்மாலங்காரங்கள். ... ... (148)

(தா) 148. "பட்டங்கட்டிப் பொற்ருேடு பெய்து இவள் பாடகமும் சிலம் பும்" "சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே' இத்யாதியாகச் சொல்லுகிற ஆபரணங்களாவன—"க்ருஷ்ணுங்க்ரிதுலஸீ மௌலிஃ பட்டம் க்ருஷ்ணுபி வந்தநம், குண்டலே க்ருஷ்ணசரித ச்ரவணம் கங்கணேஞ்ஜலிஃ" என்கிறபடியே இவ்வாத் மாவை அங்கீகரித்த ஆசார்யனுண்டாக்குகிற சேஷத்வஜ்ஞாநாதிகளாகிற ஆத்மா லங்காரங்கள். ... ... ... .... (148)

(மூ.) 149. பந்துகழல் பாவை குழமணன் யாழ் தென்றல் மதியமடிசில் சாந்தம் பூணகில் சிற்றில் தூதைமுதலாவன—குணத்ரய விசித்ர கர்மஸூத்ரத்தாலே கட்டி லீலையாகப்ரேரிக்க விழுந்தெழுந்தும் சுழன்றுழன்றும் பறிபட்டும் அற்பசாரமாமவையுமாய் மதீயமென்னில் விட்டகலவும் ததீயமென்னிலிகழ்வறவும் முனிவது மிக்கால மீதோவென்னப்படும் பொங்கைம்புலனில் போக்யாதிஸமூஹம்.

[பந்து கழல் பாவை முதலியவற்றுக்கு ஸ்வாபதேசம்]

(ப.) 149. பந்து கழல் பாவை குழமணன் யாழ் தென்றல் மதியமடிசில் சாந்தம் பூண் அகில் சிற்றில் தூதை முதலாவன:—திவ்யப்ரபந்தங்களில் வரும் இச்சொற்களுக்கு ஸ்வாபதேசம் யாதெனில்;

குணத்ரய விசித்ர கர்மஸூத்ரத்தாலே கட்டி லீலையாக ப்ரேரிக்க—(செந்நூல் வெண்ணூல் கருநூலாலே விளையாட்டுக் கருவியாகக் கட்டப்படுவது பந்தாகையாலே) * த்வம் ந்யஞ்சத்பி ருதஞ்சத்பிः கர்மஸூத்ரோபபாதிதைः, ஹரே விஹரஸி க்ரீடா கந்துகைரிவ ஜந்துபிः * என்கிற ச்லோகத்தின்படியே ரஜஸ்தமஸ் ஸத்வகுணங்களோடே விசித்ரமான கர்மஸூத்ரத்தாலே கட்டி * இன்புறு மிவ்விளையாட்டுடையானான எம்பெருமான் தன்னுடைய ஸங்கல்பத்தாலே ப்ரேரிக்க.

விழுந்தெழுந்தும் சுழன்றுழன்றும்—தாழவிழிந்தும் உயரவெழுந்தும் சக்ரப்ரமம் போலே சுழன்றும், ஒருகால் போன யோனியிலே பலகால் போவது வருவதாயுழன்றும் போருகிற ஆத்மாவோடுண்டான அந்வயத்தாலே விழுந்தெழுகை முதலான ஸ்வபாவங்களோடு கூடியதாய், [பந்துக்களின்படியும் இதுவேயன்றோ.]

பறிபட்டும்—* பந்துபறித்து * என்கிறபடியே ஈச்வரன் தன்னுடைய போக விரோதியென்று வலிய விடுவிக்க அதற்கு இணங்கியும்,

அற்பசாரம் ஆமவையுமாய்— * அற்பசாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன் * * அகற்ற நீ வைத்த மாய வல்லைம்புலன்களாமவை * என்கிறபடியே அல்பரஸங்களாயும் பகவத் விஷயத்தில் நின்றும் அகற்றுமவையாயும்,

மதீயமென்னில் விட்டகலவும்—மதீயமென்று ஸ்வஸம்பந்தத்தை யிட்டுப் பார்க்கும்போது * சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற * என்கிறபடியே த்யாஜ்யங்களாயும்,

ததீயமென்னில் இகழ்வு அறவும்—ததீயமென்று அத்தலையில் ஸம்பந்தத்தை யிட்டுக் காணும்போது * இகழ்விலிவ்வனைத்து மென்கோ * என்கிறபடியே முழுதும் உபாதேயங்களாயும்,

**முனிவதும் இக்காலம் ஈதோவென்னப்படும்**—* அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும் * பனிப்பியல்வாக வுடையதண்வாடை இக்கால மிவ்வூர் பனிப்பியல் வெல்லாம் தவிர்ந்தெரிவீசும் * என்கிறபடியே அவனை யொழியக் கண்டபோது ப்ரதிகூலங்களாகவும் * சேமம் செங்கோனருளே......அவ்வாடை யீதோவந்து தண்ணென்றதே* என்று அவனோடே சேர்த்துக் கண்டபோது அநுகூலங்களாயும் சொல்லப்படுமவையான,

**பொங்கைம்புலனில் போக்யாதி ஸமூஹம்**—* பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதிமானாங்கார மனங்களே * என்னும் பாசுரத்தில் சொல்லப்பட்ட போக்ய போகோபகரண போகஸ்தான ஸமூஹம். ... ... ... ... ... (149)

(நா.) 149. "என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ" இத்யாதி பாசுரங்களிற் சொல்லப்படுகிற பந்து, கழல், பாவை, குழமணன் (மரப்பாச்சி), யாழ், மதியம், அடிசில், சாந்தம், பூண், அகில், சிற்றில், தூதை முதலான விளையாட்டுக் கருவிகளாயும் போக்யங்களாயும் போகோபகரணங்களாயுமுள்ளவை எவை? யென்னில்; "அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம்" என்கிறபடியே செந்நூல் வெண்ணூல் கருநூலென்னலாம்படியான ஸத்த்வரஜஸ்தமோகுணங்களோடேகூடி விசித்ரமான கர்மஸூத்ரத்தாலே கட்டி ஈச்வரன் தன்னுடைய விளையாட்டுக்காக— அஜ்ஞனாய் அசக்தனானவிவன் கர்மாநுகுணமாக மேலுலகங்களில் போவது மீளுவதாம்படி தன் ஸங்கல்பத்தாலே ப்ரேரிக்க, தாழவிழுந்தும் உயர எழுந்தும் சக்ர ப்ரமம்போலே சுழன்றும், ஒருகால் போனத்திலே பல தடவை போவது வருவதாய் உழன்றும் போருகிற ஆத்மாவோடுண்டான ஸம்பந்தத்தாலே விழுந்தெழுகை முதலான ஸ்வபாவங்களோடு கூடியதாய், ஈச்வரன் தன்னுடைய போகவிரோதி யென்று விடுவிக்குமளவில் விடுபட்டும் அல்ப ரஸங்களுமாய், மதீயமென்று ஸ்வஸம்பந்தத்தையிட்டுப் பார்க்கும்போது "சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற" என்கிறபடியே த்யாஜ்யங்களாய், ததீயமென்று தத்ஸம்பந்தத்தை யிட்டுக் காணும்போது "இகழ்விலிவ்வனைத்துமென்கோ" என்கிறபடியே முழுவதும் உபாதேயமாமவையாய், "அன்னை முனிவது மன்றிலின் குரலீர்வதும்" "பனிப் பியல்வாக வுடைய தண்வாடை, இக்கால மிவ்வூர் பனிப்பியல் வெல்லாம் தவிர்ந்தெரி வீசும்" என்னுமிப் பாசுரங்களிற்படியே அவனில்லாமல் கண்டபோது ப்ரதிகூலங்களாகவும், "அவ்வாடை ஈதோ வந்து தண்ணென்றதே" என்று அவனோடு சேர்த்துக் கண்ட போது அநுகூலங்களாகவும் சொல்லப்படுமவையான "பொங்கைம்புலனும் பொறி யைந்தும்" என்கிற பாட்டில் சொல்லப்பட்ட போக்ய போகோபகரண போகஸ்தா

ஸமூஹம். [மூன்றுவகை நூல்களாலே செய்யப்பட்ட பந்தாவது—குணத்ரய மயமாய் போகஸ்தாநமான தேஹம்; அம்மானை யென்கிற கழலாவது ஐந்தாயிருப்ப தாகையாலே போகோபகரணமான பஞ்சேந்த்ரியங்கள்; பாவை குழமணன்கள்—லீலோபகரண விசேஷங்கள்; யாழ் முதலிய ஏழும் போக்யங்களான சப்தாதி விஷயங்கள்; சிற்றிலாவது—போகஸ்தாநம்; சிறுசோறு சமைப்பதற்கு உபகரண மான தூதை—இந்த்ரியங்கள் தவிர மற்ற போகோபகரணங்களுக்கு உபலக்ஷணம் என்று கண்டுகொள்வது.] ... ... (149)

அழகியமணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.


ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
ஆசார்யஹ்ருதயப்பதவுரை
தாத்பர்யஸாரங்களில்
இரண்டாம் ப்ரகரணம்
முற்றுப்பெற்றது.

---

**சிறு குறிப்பு ;**—ஆசார்யஹ்ருதயமென்பது ஸகலப்ரமாண புஞ்ஜமாயிருக்கையாலே இதற்கு எவ்வளவு எளிதாக உரையெழுதினு லும் ஆசார்யஹ்ருதய மூலமும் நாலாயிரதிவ்யப்ரபந்தமூலமும் கண்டஸ்த மாயிருக்கப் பெற்றவர்களுக்கே இவ்வுரைகள் ரஸிக்கும். பல அருளிச் செயற்சந்தைகளும் ஸ்ரீராமாயண ஸ்ரீவிஷ்ணுபுராண பகவத்கீதாதி அநேக ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களும் கலசாத சூர்ணிகை இதில் தேடிப்பிடிக்க வேண்டியிருக்குமாதலால் அவற்றின் உபஸ்திதி இன்றியமையாததாகும். மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தை ஸதாசார்ய ஸகாசத்திலே காலக்ஷேபமுறையில் கேட்பவர்களுக்கு இந்தப் பதவுரையும் தாத்பர்ய ஸாரமும் மிகப் பயன்படும். மூன்று நான்கு பிரகரணங்கள் விரைவில் வெளிவரும்.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.
ஸ்ரீகாஞ்சீ, அண்ணங்கராசாரியர் எழுதிய

# ஆசார்யஹ்ருதயப் பதவுரையும்—ஸாரமும்

## மூன்றும் பிரகரணம்

(மூ) 150. சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞாநகர்மங்களைச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்.

[பக்ஷிகளுக்குப் பொதுவான ஸ்வாபதேசம் கூறுவது]

(ப.) 150. சேர்ப்பாரை—* விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழெம்மைச் சேர்விக்கும் வண்டுகளே * என்ற திருவிருத்தப் பாசுரப்படியே எம்பெருமான் திருவடிகளில் சேர்ப்பிக்குமவர்களை.

பக்ஷிகளாக்கி—பக்ஷிகளாக ப்ரதிபத்திபண்ணி.

ஜ்ஞான கர்மங்களைச் சிறகென்று—* உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆகாசே பக்ஷிணாம் கதி:, ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம: * என்கிற படியே ஜ்ஞாநாநுஷ்டானங்களைப் பக்ஷங்களென்றிட்டு.

குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்—குருக்களுடையவும் ஸப்ரஹ்ம சாரிகளுடையவும் புத்ரர்களுடையவும் சிஷ்யர்களுடையவும் ஸ்தானத்திலே சொல்லப்படுகிறது. .... ... ... ... (150)

(தா) 150. (எம்பெருமானிடம் தூதுவிடப்படுகிற பக்ஷிகளுக்கு ஸ்வாப தேசம் இனிவருவது.) * விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர் விக்கும் வண்டுகளே! (திருவிருத்தம்) என்று ஆழ்வார் தாமேயருளிச் செய்கை யாலே பகவத் விஷயத்திலே கொண்டுசேர்க்குமவர்கள் பக்ஷிகளாகக் கொள்ளப் படுவர்கள்; சிறகாகச் சொல்லப்படுபவை ஞானமும் அனுட்டானமுமாம்; ஆங்காங் குள்ள பதச் சேர்த்திகளுக்குத் தகுதியாக ஆசார்யர்களையோ ஸப்ரஹ்மசாரி களையோ புத்ரர்களையோ சிஷ்யர்களையோ ஸ்வாபதேசமாகக் கொள்க. ... (150)

(மூ.) 151. விவேகமுகராய் நூலுரைத்து அள்ளலில் ரதியின்றி அணங்கின் நடையைப் பின் சென்று குடைநீழலிலே கவரியசையச் சங்கமவை முரல வரிவண்டிசைபாட மாநஸ பத்மாஸநத்திலேயிருந்து விதியினு லிடரி லந்தரமின்றி யின்பம்படக் குடிச்சீர்மையிலேயாதல் பற்றற்ற பரமஹம்ஸராதலான நயாசலன் மெய்ந்நாவன் நாதயாமுநர் போல் வாரை அன்னமென்னும்.

[அன்னப்பறவைகளுக்கு ஸ்வாபதேசம் கூறுவது.]

(ப.) 151. விவேகமுகராய்—ஹம்ஸம் நீரையும் பாலையும் பிரிக்குமாபோலே ஸாராஸார விவேகத்தில் உந்முகராய்,

நூலுரைத்து—* அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த* என்று பகவான் ஹம்ஸரூபியாய் சாஸ்த்ரப்ரதானம் பண்ணினாப்போலே சிஷ்யர்களைக் குறித்து சாஸ்த்ரங்களை யுபதேசிக்குமவர்களாய்.

அவ்வளலில்ரதியின்றி— * ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்தமாம்பஸி * என்கிறபடியே ஹம்ஸம் சேற்றுநிலத்தில் பொருந்தாதாப்போலே * அழுந்தார் பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே * என்று, ஸம்ஸாரச் சேற்றில் அழுந்தாதவர்களாய்.

அணங்கின் நடையைப் பின்சென்று—அன்னம் மாதர்களின் நடையழகைக் கண்டு அப்படியே தானும் நடைபயிலுமாபோலே * அன்ன நடைய வணங்கான பிராட்டியின் புருஷகாரத்வமாகிற நடத்தையை யநுஸரிப்பவர்களாய்.

குடைநீழலிலே கவரியசைய—* அன்னமென் கமலத்தணி மலர்ப்பீடத்து அலை புனலிலைக் குடைநீழல் செந்நெலொண் கவரியசைய வீற்றிருக்கும் * என்கிறபடியே ஹம்ஸமானது மேலே யெழுந்த தாமரையிலை குடையாகவும் செந்நெற் கதிர்களின் அசைவு சாமரம் பணிமாறுதலாகவும் தாமரை மலரில் வீற்றிருப்பதுபோல * அக்கமலத்திலை போலுந் திருமேனியடிகள் * என்று தாமரையிலைபோல் சாமளமான எம்பெருமானது திருமேனியை ஸம்ஸாரதாபம் வாராதபடி தங்களுக்கு ஒதுங்க நிழலாகவுடையராய், சிஷ்யர்கள் சாமரம் வீசப்பெற்றவர்களாய்.

சங்கமவை முரல—* சங்கமவை முரலச் செங்கமல மலரையேறி அன்னம் * என்கிறபடியே ஹம்ஸமானது சங்குகளின்ஒலி ஜயகோஷமாக இருக்குமாபோலே * பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்றீண்டிய சங்கமெடுத்தூத * என்கிறபடியே ஜயகோஷமாகச் சங்கநாதம் செய்யப் பெற்றவர்களாய்,

வரி வண்டிசை பாட—* மன்னுமுதுநீரரவிந்த மலர்மேல் வரிவண்டிசைபாட அன்னம் பெடையோடுடன் * என்கிறபடியே ஹம்ஸமானது வண்டுகளின் இசைப் பாட்டிடையே வர்த்திக்குமாபோலே வண்டுகள் போன்ற ஸாரக்ராஹிகளான சிஷ்யர்கள் தம்முடைய கீர்த்திகளை யெடுத்துப் பாடப்பெற்றவர்களாய்,

மாநஸ பத்மாஸனத்திலேயிருந்து—ஹம்ஸமானது மாநஸஸரஸ்ஸிலுள்ள பத்மம் ஆஸனமாக இருக்குமாபோலே தங்களை த்யானிக்கும் சிஷ்யர்களின் ஹ்ருதயாப்ஜ கோசத்திலே வஸிப்பவர்களாயிருந்து,

விதியினால்— * விதியினால் பெடை மணக்கும் மென்னடைய வன்னங்காள் * என்பதற்கு ஸ்வாபதேசமாக க்ருஹஸ்தாச்ரமிகளாய்,

இடரில்—* இடரில் போகம் மூழ்கி யிணைந்தாடும் மடவன்னங்காள் * என்பதற்கு ஸ்வாபதேசமாக சிஷ்யர்களோடே நிரந்தர பகவதநுபவம் பண்ணி அதிலேயே அவகாஹித்துக் களிக்குமவர்களாய்,

அந்தரமின்றி—* அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையு மன்னங்காள் * என்பதற்கு ஸ்வாபதேசமாக புஷ்பம்போன்ற சாஸ்த்ரங்களிலே நிரந்தரானுபவம் பண்ணுமவர்களாய்,

இன்பம்பட—* மிகவின்பம் படமேவும் மென்னடைய வன்னங்காள் * என்பதற்கு ஸ்வாபதேசமாக * மச்சித்தா: மத்கதப்ராணா:.......துஷ்யந்தி ச ரமந்தி ச * என்ற கீதாசார்யன் வாக்குப்படியே பரமானந்தசாலிகளாய்,

குடிச்சீர்மையிலேயாதல்—* குடிச்சீர்மையிலன்னங்கள் * என்ற திருவிருத்தப் பாசுரத்திற்கு ஸ்வாபதேசமாகக் குடும்ப வாழ்க்கையிலிருந்து பகவதநுபவம்பண்ணு மவர்களாகவோ, (அல்லது)

பற்றற்ற பரமஹம்ஸராதலான—* அற்றபற்றர் சுற்றிவாழும் * என்று ஸம்ஸார ஸங்கமெல்லாமற்று உத்தமாச்ரமிகளாய்ப் பரமஹம்ஸ சப்தவாச்யர்களாகவோ இருந்த,

நயாசலன்—* நளிர்ந்த சீலன் நயாசலன் * என்கிற பாட்டிற் சொன்ன செல்வ நம்பி,

மெய்ந்நாவன்—* மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன் * என்னப் பட்ட பெரியாழ்வார்,

நாதயாமுனர்—ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார்,

போல்வாரை அன்னமென்னும்—ஆகிய இவர்கள் போல்வாரை இந்த குண ஸாம்யத்தையிட்டு அன்னமாகச் சொல்லும் ... ... (151)

(தா.) 151. (இனி, பக்ஷிகளின் உட்பிரிவான அன்னம், கிளி, பூவை, குயில், மயில் முதலானவற்றுக்கு ஸ்வாபதேசம் க்ரமேண கூறப்படுகிறது) செல்வ நம்பி பெரியாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார்போல்வாரை அன்னமென்று கொள்ளலாம். நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்கவல்லது அன்னம்; அதுபோல ஆசாரியர்கள் ஸாராஸாரவிவேக குசலர்கள். வேதசாஸ்த்ரங்களை வெளியிட்டது பகவதவதாரமான ஹம்ஸம். அதுபோல சிஷ்யர்களைக்குறித்து சாஸ்த்ரோபதேசம் பண்ணுவர்கள். ஹம்ஸம் சேற்றில் பொருந்தாது; அதுபோல மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்து அழுந்தார்கள். அன்னம் மாதர்களின் நடையழகைக்கண்டு அப்படியே தானும் நடைபயிலும்; அதுபோலே அன்னநடைய வணங்கான பிராட்டியின் புருஷகாரத்வமாகிற நடத்தையை யநுசரிப்பர்கள். அன்னமானது மேலேயெழுந்த தாமரையிலையைக் குடையாகவும் பக்குவமான செந்நெற் பயிர் அசைந்தாடுவதைச் சாமரம் வீசுதலாகவும் சங்குகளின் முழக்கத்தை விஜயகோஷமாகவும் வண்டுகளின் மிடற்றோசையைப் பாட்டாகவுங் கொண்டு [மாநஸ] ஸரஸ்ஸிலுள்ள தாமரையே ஆஸனமாக வீற்றிருக்குமென்று அருளிச்செயல்களிற் சொல்லப்படுகிறது; அப்படியே தாமரையிலைபோற் சாமளமான பகவானது திருமேனியைத் தமக்கு ஸம்ஸாரதாபஹரமாகவும், செந்நெற்பயிர் போலே அஹமந்நமஹமந்நமஹமந்நம் என்னும்படி பரிபக்வஜ்ஞானமுடையவர்கள் அநுகூலவ்ருத்தி செய்யவும், சங்குபோலே சுத்த ஸ்வபாவமுடையவர்கள் தோத்திரம் செய்யவும் வண்டுபோலே ஸாரக்ராஹிகளாயிருப்பார் போற்றவும் பெற்று "குருபாதாம்புஜம் த்யாயேத்" என்கிறபடியே ஆசார்யர் திருவடியிணையை எப்போதும் நெஞ்சுக்குள்ளே கொண்டிருக்கும் சிஷ்யர்களுடையதாயும் பிரமகுருவுக்கு இருப்பிடமானதாயுமுள்ள * போதிற்கமல வன்னெஞ்சமென்கிற மாநஸபத்மத்தை வாஸஸ்தானமாகவுடையரா யிருப்பர்கள். * விதியினால் பெடைமணக்குமென்னடைய வன்னங்காள் என்கையாலே சாஸ்த்ரமுறைப்படி க்ருஹஸ்தாச்ரமத்திலிருப்பவர்களாகவுமாம். * அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையுமன்னங்காள் என்கையாலே ஸம்ஸாரப் பற்று அற்ற யதிகளாகவுமாம். ... .... (151)

(மூ.) 152. என்பெறுதியென்ன ப்ரமியாது உள்ளத்துளூறிய மதுவ்ரதமாய் தூமதுவாய்கள் கொண்டு குழல்வாய் வகுளத்தின் ஸாரம் க்ரஹித்துத் தேதெனவென்று ஆளம் வைத்துச் சிறுகாலெல்லியம்போது குறிஞ்சிமருள் காமரம் கந்தாரம் தலைக்கொள்ளப்பாடித் துன்னிட்டு நெருக்க நீக்கென்று கடந்து புகும் தகைவறப்புக்கு வண்டொத் திருண்ட குழலிலே சங்கையற மருவி அருளாத யாமென்ருேடி வந்து வாசமேயூதி வண்டேசுரியான தெய்வவண்டோடே சேர்விக்கும் சேமமுடை நாரதன் முனிவாஹநர் தம்பிரான்மார்போல்வாரை வண்டு தும்பியென்னும்.

[வண்டு தும்பிகளுக்கு ஸ்வாபதேசம் கூறுவது.]

(ப.) 152. **என்பெறுதியென்ன ப்ரமியாது**—*கோல்தும்பீ! விண்டமலரெல்லா மூதி நீயென் பெறுதி *கோல்தும்பீ! ஏரார்மலரெல்லாமூதி நீ யென்பெறுதி* என்று சொல்லி மீட்கவேண்டும்படி அப்ராப்த விஷயங்களிலே சுழலுமவைபோல் அல்லாமல் ப்ராப்த விஷயங்களிலேயே ஊன்றியிருக்குமவர்களாய், [இதொன்றுமாத்திரம் வைதர்ம்யத்ருஷ்டாந்தம். மற்றவை ஸாதர்மியத்ருஷ்டாந்தம்.]

**உள்ளத்துளூறிய மதுவ்ரதமாய்**—தேன் தவிர மற்றொன்றை உணவாகக் கொள்ளாமையினாலே வண்டுகள் மதுவ்ரதமென்று பேர் பெற்றிருக்குமாபோலே * உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறிய தேன் * என்று தேனாகச் சொல்லப்பட்ட பகவத் விஷயமதுவை யநுபவிப்பதையே விரதமாகக் கொண்டவர்களாய்,

**தூமதுவாய்கள் கொண்டு**—* தூமது வாய்கள் கொண்டு வந்தென் முல்லைகள் மேல் தும்பிகாள்! * என்கிற பாசுரத்திற்கு ஸ்வாபதேசமாக அமுதம்போன்ற வாய்மொழிகளை இனிமையாக இசைக்குமவர்களாய்,

**குழல்வாய்வகுளத்தின்ஸாரம் க்ரஹித்து**—* வண்டுகளோ வம்மின் .....வைகுந்த மன்னாள் குழல்வாய் விரைபோல் விண்டு கள்வாரும் மலருளவோ நும் வியலிடத்தே* என்கிற பாசுரத்திற்கு ஸ்வாபதேசமாக வகுளாபரண ஸ்ரீஸூக்தி ஸாராக்ராஹிகளாய்,

**தேதெனவென்று ஆளம் வைத்து**—* வரிவண்டு தேதெனவென்றிசை பாடும் * என்றும் * யாழினிசை வண்டினங்கள் ஆளம்வைக்கும் * என்றும் சொல்லுகிறபடியே யாழினிசை வேதத்தியல்களை வாயாரச் சொல்லிக்கொண்டிருக்குமவர்களாய்,

**சிறுகாலெல்லியம்போது**—* அறுகால் வரிவண்டுகளாயிரநாமஞ் சொல்லிச் சிறுகாலைப் பாடும் * எல்லியம் போதருஞ் சிறைவண்டு எம்பெருமான் குணம்பாடி * என்கிற பாசுரங்களுக்கு ஸ்வாபதேசமாக அல்லும் பகலும் பகவத் குணாநுபவபரர்களாய்,

**குறிஞ்சி மருள் காமரம் கந்தாரம் தலைக்கொள்ளப்பாடி**—*வண்டு குறிஞ்சி மருளிசை பாடும் * வண்டினங்கள் காமரங்களிசைபாடும் * கந்தார மந்தேனிசைபாட * என்கிறபடியே வண்டுகளானவை குறிஞ்சி, மருள், காமரம், கந்தாரம் என்னும் ராகங்களைப் பாடுமாபோலே * பண்கள் தலைக்கொள்ளப்பாடி * என்கிறபடியே (நம்பாடுவானைப்போலே) பலராகங்கள் தலைமை பெறும்படி பாடுமவர்களாய்,

துன்னிட்டு நெருக்க. நீக்கென்று கடந்து புகும் தகைவறப் புக்கு—* பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய * என்றும் * சுந்தரர் நெருக்க விச்சாதரர் நூக்க * என்றும் சொல்லும்படி மிகவும் நெருக்கமான ஸ்தலங்களிலும் (வண்டுகளானவை தாராளமாகச் சென்று புகுமாபோலே) * நீ நேச நிலைக்கதவம் நீக்கு * என்று கதவைத் திறக்கப் பிரார்த்தித்து ச்ரமப்பட்டுப் புகவேண்டிய அருமை யின்றிக்கே ஸ்வதந்திரமாக ப்ரவேசிக்குமவர்களாய்,

வண்டொத்திருண்ட குழலிலே சங்கையற மருவி—வண்டானது * வண்டொத் திருண்ட குழல் * என்னும்படி தனக்கு ஸஜாதீயமான குழலிலே நிச்சங்கமாகச் சென்று படியுமாபோலே * அறுகால சிறுவண்டே! நீமருவியஞ்சாதே நின்று * என்கிற பாசுரத்திற்கு ஸ்வாபதேசமாக பகவத் பாகவத ஸமீபங்களிலே கூசாமல் நிற்பவர்களாய்,

அருளாத யாமென்றோடி வந்து வாசமேயூதி—* அருளாழி வரிவண்டே! அருளாத நீரருளி * முல்லைகள்மேல் தும்பிகாள்! யாமிதுவோ தக்கவாறென்னவேண்டும் * என்கிற பாசுரங்களிற்படியே " இத்தலையிலார்த்தியை அவனுக்கறிவித்து * ஓடிவந் தென் குழல்மே லொளிமாமல ரூதீரோ * என்கிறபடியே அவன் வரவையறிவிக்க முன்னோடியே விரைந்து வந்து தங்கள் வரவாலே இத்தலையில் பிறந்த செவ்வியை யநுபவித்து, *பூந்துளவின் வாசமே வண்டு கொண்டுவந்து ஊதுமாகில்-கெண்டை யொண்கணுந்துயிலும் * என்கிறபடியே அத்தலையில் தாங்களனுபவித்த போக்ய தையை இத்தலைக்கு வெளியிட்டு ஆச்வஸிப்பிக்குமவர்களாய்,

வண்டே கரியான தெய்வவண்டோடே சேர்விக்கும்—*கொங்குண்வண்டே கரியாக வந்தான் * என்கிறபடியே பரமபாகவதர்களை முன்னிட்டு அங்கீகரிக்குமவனாய் * தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு * என்று தெய்வவண்டாகச் சொல்லப்பட்ட வனை எம்பெருமானோடே சேர்விக்குமவர்களான,

சேமமுடை நாரதன் முனிவாஹனர் தம்பிரான்மார் போல்வாரை—நாரதப்ரஹ்மர்ஷி, திருப்பாணாழ்வார், அரையர்கள் போல்வாரை,

வண்டு தும்பியென்னும்—* வண்டினங்காள் தும்பிகாள் * என்பது முதலான விடங்களில் வண்டாகவும் தும்பியாகவும் சொல்லும். .... .. (152)

(நா.) 152. வண்டுகளாகவும் தும்பிகளாகவும் சொல்லுகிறது நாரத முனிவர் திருப்பாணாழ்வார் அரையர்கள் போல்வாரை யென்கிறது. வண்டுகள் அலைந்துகொண்டே யிருக்கும் ஆசிரியர்கள் அப்படியன்றிக்கே ஒரேபொருளில் ஊன்றியிருப்பர்கள். [என்கிற இஃது ஒன்றே வ்யாவ்ருத்தி. மற்ற அம்சங்களில் ஸாம்யம் நிரூபிக்கப்படுகிறது.] மதுவ்ரதமென்று பேர்பெற்ற வண்டானது தேன் தவிர மற்றொன்றை உணவாகக் கொள்ளாதவாறு போல * உளங்கனிந்திருக்குமடி யவர் தங்கள் உள்ளத்துளூறிய தேனான பகவத் விஷயாநுபவத்தையே விரத மாகக் கொண்டவர்களாய், பரிசுத்தமான வாயைக்கொண்டு மகிழ்மாலை மார்பினனு டைய சொல் மாலையின் ஸாரத்தை க்ரஹிக்குமவர்களாய், வண்டுகள் தேதெனவென்று ஆலாபனை பண்ணுமாபோலே 'தே, தே' என்று [அதாவது உனக்கே நாம் என்று மமகார மொழிந்து] இதையே வாய் வெருவுகின்றவர்களாய், காலோசிதமான

பண்களைப் பாடுகின்றவர்களாய், திருவாசல்களிலே பிரமன் சிவனிந்திரன் முதலான ஸேவகர்கள் நிறைந்து தலை நுழைக்கவொண்ணாதபடி நெருக்க, திருவாசல்காப்பானைக் கதவு திறக்கவேணுமென்று அபேக்ஷித்து ச்ரமப்பட்டு உள்ளே புக வேண்டாதபடி தகைவொன்று மின்றிக்கே தாராளமாகவுள்ளே புகும் அந்தரங்கராய், எம்பெருமானது தலைமேலும் ஏறவல்லவர்களாய் அவனோடே சேர்ப்பிக்குமவர்களான நாரதாதிகள் வண்டாகவும் தும்பியாகவும் கொள்ளத்தகுவர்கள். ... (152)

(மூ.) 153. **கண்வலைப்படாதே அகவலைப்பட்டு வளர்த்தெடுப்பார்கையிருந்து தயிர் நெய்யமர் பாலமுதுண்டு ஒருமிடருய், போற்றி ஒருவண்ணம் திருந்த நுவலாதது்க்கு என்பிழைக்கும் நீயலையே நல்வளந்துரப்பனென்னுமவற்றுக்குமுகந்து, சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியாவைத்த மாற்றங் கைகூப்பி வணங்கப்பாடி ஆலியாவழையா பராபிமாநத்திலே யொதுங்கின நம்பிக்கன்பர் தலைமீதடிப்பொடி உடையவருடையார் போல்வாரைக் கிளிபூவை குயில் மயிலென்னும்.**

[கிளி பூவை குயில் மயில்களுக்கு ஸ்வாபதேசம் கூறுவது]

(ப.) 153. **கண்வலைப்படாதே அகவலைப்பட்டு**—* மாதரார் கயற்கணென்னும் வலையுள்பட்டு * என்று மாதர்களின் கண்களாகிற வலையிலகப்படாதே * உன் தாமரைத்தடங்கண் விழிகளின் அகவலைப்படுப்பான் * என்கிறபடியே எம்பெருமானுடைய திருக்கண்களாகிற வலைக்குள்ளே அகப்படுமவர்களாய். (கிளிகள் வலைப்படுமாபோலே யென்க.)

**வளர்த்தெடுப்பார் கையிருந்து**—(கிளி பூவை முதலானவை வளர்த்தெடுப்பாருடைய கையிலே யிருக்குமாபோலே) * வளர்த்ததனால் பயன்பெற்றேன் * எடுத்த வென்கோலக்கிளியை * கிளிகாள்! மங்கைமார் முன்பென்கையிருந்து * என்கிற பாசுரங்களுக்கு ஸ்வாபதேசமாக இட்டமாக வளர்த்தெடுத்துப் போரும் ஆசாரியர்களுக்கு விதேயராய்,

**தயிர் நெய்யமர் பாலமுதுண்டு**—* குயிற்பைதல்காள்! தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும் தந்து * கிளிகாள்! நெய்யமரின்னடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ * * இன்னடிசிலொடு பாலமுதூட்டி யெடுத்த வென்கோலக்கிளியை * என்கிற பாசுரங்களுக்கு ஸ்வாபதேசமாக ஆசாரியர்கள் அநுபவிப்பிக்கும் அர்த்த விசேஷங்களை யநுபவிக்குமவர்களாய்,

**ஒருமிடருய்**—(சொல்லிற்றையே சொல்லும் கிளிப்பிள்ளைகள்போலே) * முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசும் ஏககண்டர்களாய்,

**போற்றி யொருவண்ணம் திருந்த** (என்னுமதுக்கும்)—* போற்றி யானிரந்தேன் புன்னை மேலுறை பூங்குயில்காள்! * ஒரு வண்ணஞ் சென்று புக்கெனக்கொன்றுரையொண்கிளியே! * திருந்தக் கண்டெனக் கொன்றுரையாய் ஒண்சிறுபூவாய் * என்று ஆதரந் தோற்றச் சொன்னதசையிலும்,

**நுவலாததுக்கு என்பிழைக்கும் நீயலேயே நல்வளம்** (என்னுமதுக்கும்)—* நோயெனது நுவலென்ன நுவலாதேயிருந்தொழிந்தாய் * என் பிழைக்கு மிளங்கிளியே யான் வளர்த்த நீயலேயே * நீயலேயே சிறுபூவாய் * குயிற்பைதல்காள் சொல் பயிற்றிய நல்வளமூட்டினீர்* என்று சிறிது வருத்தந்தோற்றச்சொன்ன தசையிலும்,

**துரப்பன் என்னுமவற்றுக்கும் உகந்து**—* குயிலே! இன்று நாராயணனை வரக் கூவாயேல் இங்குத்து நின்றுந் துரப்பன் * என்று பரிபூர்ண நிக்ரஹமாகச் சொன்ன தசையிலும் சிறிதும் மனோவிகாரமின்றிக்கே ஆசார்யனுடைய நிக்ரஹத்தோடு அநுக்ரஹத்தோடு வாசியற எல்லாம் நமக்கு உபாதேயமே' என்று கொண்டு உகந்திருக்குமவர்களாய்,

**சொல்லெடுத்துச் சோர்ந்தவாறே கற்பியாவைத்தமாற்றம் கைகூப்பி வணங்கப்பாடி**—* சொல்லெடுத்துத் தன்கிளியைச் சொல்லேயென்று துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே * என்று, திருநாமத்தைச் சொல்லத் தொடங்கி பலஹானியாலே ஒரு சொல் சொல்லும்போது மலையெடுக்குமாபோலேயாய் அதுவும் மாட்டாதே தளர்ந்தவாறே * கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம் * என்கிற படியே முன்பே கற்பித்து வைத்த சொல்லான திருநாமத்தைச் சொல் என்ன, * திருமாலைப் பாடக்கேட்டு வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே * என்று, ஆசாரியர்களும் கைகூப்பி வணங்கும்படி பாடுமவர்களாய்,

**ஆலியாவழையா**—* ஆலியா வழையா அரங்காவென்று * என்கிறபடியே (மயில்கள் ஆலித்தல் அழைத்தல் செய்யுமாபோலே) அரங்காவென்று சொல்லி ஆலித்தலு மழைத்தலும் செய்யுமவர்களாய்,

**பராபிமாநத்திலே ஒதுங்கின**—('பரப்ருத:' என்று பேர்பெற்றிருக்கும் குயில் போலே) * தேவுமற்றறியேன் * என்று ஆசார்யாபிமாநமும் பாகவதாபிமாநமுமாகிற பராபிமாநத்திலே ஒதுங்கினவர்களான,

**நம்பிக்கன்பர் தலைமீதடிப்பொடி உடையவருடையார் போல்வாரை**—* தென்குருகூர் நகர்நம்பிக்கு அன்பரான மதுரகவிகள், * நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே * என்னுஞ் செருக்குடைய தொண்டரடிப்பொடிகள், இராமாநுச னுடையாரென்றே நிருபகமாம்படி உடையவர்க்குப் பரதந்த்ரரான ஆழ்வான் ஆண்டான் எம்பார் அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலானவர்கள் போல்வாரை,

**கிளி பூவை குயில் மயிலென்னும்**—கிளியாகவும் பூவையாகவும் குயிலாகவும் மயிலாகவும் சொல்லும் (பூவை—நாகணவாய்ப்புள்.) ... ... (153)

(தா.) 153. கிளி பூவை முதலானவையாகச் சொல்லுவது ஸ்ரீமதுரகவிகள் தொண்டரடிப் பொடியாழ்வார் ஆழ்வானாண்டானெம்பார் அருளாளப்பெருமாளெம் பெருமானார் போல்வாரையென்கிறது. கிளிகள் வலையிலகப்படுமாபோலே இவர்கள் எம்பெருமானது தாமரைத் தடங்கண்விழிகளாகிற வலையில் அகப்படுவர்கள். [மாதரார் கயற்கணென்னும் வலையில் அகப்படமாட்டார்கள்.] வளர்த்தெடுப்பார் கையிலே விதேயராயிருப்பர்கள். தயிர்ப்பழம் சோற்றொடு பாலடிசில் நெய்யம

ரின்னடிசில் பாலமுது இவைபோல பரமபோக்யமான பகவத்குணங்களை அநுப விப்பிக்க அநுபவிக்குமவர்களாய், 'சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை' என் னுமாபோலே *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமத னைப் பேசுமவர்களாய், ஆசாரியனுடைய நிக்ரஹாநுக்ரஹங்க ளிரண்டையும் ஸம மாகப் பாவிக்குமவர்களாய், கற்பித்தவர்கள் தளர்ந்திருக்கும்போது அவர்களுக்குச் செவிக்கினிதாகச் சொல்லி அவர்களும் கைகூப்பி வணங்கும்படி யிருப்பாராய், மயில்கள் ஆலிப்பதும் அழைப்பதும் செய்யுமாபோலே எம்மானைச் சொல்லிப் பாடி யெழுந்தும் பறந்தும் துள்ளுமவர்களாய், குயில்கள் பரப்ருத மென்கிற பேருக்குத் தக்கபடி பிறரால் வளர்க்கப்படுவது போலப் பராபிமாநத்திலே யொதுங்கியிருப்பா ரான மதுர கவிகள் போல்வாரைச் சொல்லுவது பொருத்தம். .... (153)

**(மூ) 154. ஆசறு தூவியென்னும் பாஹ்யாப்யந்தர சுத்தியோடே திரையுகளும் வ்யஸநவ்யதையற்றுத் தாய்வாயி லுண்ணும் பிள்ளைக் கிரைதேடி வைகலுடன் மேய்ந்து நுங்கால் பைங்கானமென்று ப்ரஹ்மரதம் பண்ணிக் கொடுத்தவைகொண்டு நல்லபதத்தையும் வேண்டே னென்னுந் தனிப்பெரும் பித்தர் நம்முதலிகள் போல்வாரை நாரை கொக்கு குருகென்னும்.**

**[நாரை கொக்கு குருகுகளுக்கு ஸ்வாபதேசம் கூறுவது.]**

(ப) 154. **ஆசறுதூவியென்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியோடே**—* ஆசறு தூவி வெள்ளைக் குருகே! * என்பதற்கு ஸ்வாபதேசமாக * ஸ பாஹ்யாப்யந்தரச் சுசி: * என்று, உள்ளும்புறமுமொத்த சுத்தியையுடையவர்களாய்,

**திரையுகளும் வ்யஸநவ்யதையற்று**—* வாயுந்திரையுகளுங் கானல் மடநாராய் * என்று, நாரைகளானவை அலைகளுக்கு அசையாதே யிருக்குமாபோலே * கிரயோ வர்ஷதாராபிர் ஹந்யமாநா ந விவ்யது:, அபிபூயமாநா வ்யஸநைர் யதா அதோக்ஷ ஜசேதஸ: * என்று ஸம்ஸாரஸமுத்ரதரங்கங்களுக்கு இடையாதே யிருப்பவர்களாய்,

**தாய்வாயிலுண்ணும் பிள்ளைக்கு இரைதேடி**—* தக்கமரத்தின் தாழ்சினையேறித் தாய்வாயில் கொக்கின்பிள்ளை வெள்ளிற வுண்ணும் * என்று, கொக்கானது தன் வாயாலே இரையையெடுத்துக் கொடுக்க ஜீவிக்கின்ற தன் குட்டிக்கு * பழனக்கழனி யதனுள் போய்ப் புள்ளுப் பிள்ளைக்கிரைதேடும் * என்று, வாய்க்கு அடங்குமிரை தேடியிடுமாபோலே, சிஷ்யர்களுக்கு அதிகாராநுகுணமாக பகவத் விஷயார்த்தங் களை சாஸ்த்ரங்களிலே தேடி ஆராய்ந்து உபகரிக்குமவர்களாய்,

**வைகலுடன் மேய்ந்து**—* வைகல் பூங்கழிவாய் வந்துமேயுங் குருகினங்காள்! * என்றும் * காதல் மென்பெடையோ டுடன்மேயுங் கருநாராய்! * என்றுமுள்ள பாசுரங்களுக்கு ஸ்வாபதேசமாக இடைவீடின்றிக் காலக்ஷேப கூடங்களிலே தாங்களேசென்று, தங்களைப் பிரியில் தரியாத ப்ரேமமுடைய சிஷ்யர்களுடனேகூட பகவத்குணாநுபவம் பண்ணுமவர்களாய்,

**நுங்கால் பைங்கானமென்று ப்ரஹ்மரதம் பண்ணிக் கொடுத்தவை கொண்டு**—* மட நாராய்! நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே * என்கிற பாசுரத்திற்கு

ஸ்வாபதேசமாக, தங்களாலுஜ்ஜீவித்த சிஷ்யர்கள் உபகார ஸ்மிருதியாலே சிரஸா வஹிக்கையாகிற ப்ரஹ்மரதம் பண்ணி, * நாளும் பைங்கானமீதெல்லா முனதே யாகப் பழனமீன் கவர்ந்துண்ணத்தருவன் * என்ற பாசுரப்படி * சரீரமர்த்தம் ப்ராணஞ் ச ஸத்குருப்யோ நிவேதயேத் * என்கிற க்ரமத்திலே ஸமர்ப்பித்தவற்றை அங்கீகரிக்குமவர்களாய்,

நல்லபதத்தையும் வேண்டேனென்னும்—* நல்லபதத்தால் மனைவாழ்வர் * என்று பாகவத கைங்கர்யத்துக் குறுப்பான குடும்ப வாழ்க்கையையும் * இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன் * என்று உபேக்ஷிக்குமவர்களாயுள்ள,

தனிப்பெரும் பித்தர் நம் முதலிகள் போல்வாரை—* அங்கையாழி யரங்கனடியிணை தங்கு சிந்தைத் தனிப்பெரும் பித்தரான குலசேகரப் பெருமாள், ஆசார்ய பதஸ்தரான நம் முதலிகள் போல்வாரை,

நாரை கொக்கு குருகென்னும்—நாரை யென்றும் கொக்கென்றும் குருகென்றும் சொல்லும். ... ... ... ... ... (154)

(தா.) 154. நாரை கொக்கு குருகென்று சொல்லுகிறது ஸ்ரீ குலசேகரப் பெருமாள் போல்வாரை. உள்ளும் புறம்புமொக்கப் பரிசுத்தர்களாய், நாரையானது திரைகள் வந்து கிட்டி மேலே தாவிப்போகா நிற்கிற கானலிலே அசையாமலிருக்குமா போலே ஸம்ஸார ஸமுத்ர தரங்கங்களான தாபத்ரய ரூபவ்யஸனங்கள் வந்து மிடைந்து மேலிடா நின்றாலும் எம்பெருமான் பக்கலிலேயே சிந்தையூன்றியிருக்கப் பெறுகையாலே அந்த வ்யஸனங்களுக்குக் கலங்காதே யிருப்பவர்களாய், கொக்கானது தன்வாயாலே யெடுத்துக்கொடுக்க ஜீவித்திருக்கும் தன் பிள்ளைக்கு வாய்க் கடங்கு மிரைதேடி யிடுமாபோலே தங்கள் வாக்காலேயுதவும் பகவத் விஷயத்தைக் கொள்ளும் இளைய சிஷ்யர்களுக்கு அதிகாராநுகுணமாக ஸாத்மிக்கக்கூடிய பகவத் விஷயார்த்தங்களை சாஸ்த்ரங்களிலே ஆராய்ந்து உபகரிக்குமவர்களாய், இடைவீடின்றிக் காலக்ஷேப கூடங்களிலே தாங்களே சென்று தங்களைப் பிரியில்தரியாத ப்ரேமமுடைய சிஷ்யர்களுடனேகூட பகவத்குணாநுபவம் பண்ணுமவர்களாய், தங்களாலுஜ்ஜீவித்த சிஷ்யர்கள் உபகார ஸ்ம்ருதியாலே சிரஸாவஹிக்கையாகிற ப்ரஹ்மரதம் பண்ணி யதாசக்தி ஸமர்ப்பித்தவற்றை அங்கீகரிக்குமவர்களாய், நல்லபதத்தால் மனைவாழ்வரென்று பாகவத கைங்கரியத்துக் குறுப்பான க்ருஹஸ்த தர்மத்தையும் ஸம்ஸார வெக்காயமடியான பயத்தாலே இன்பமருஞ் செல்வமு மிவ்வரசும் யான் வேண்டேனென்று உபேக்ஷிக்குமவர்களாயுள்ள ஸ்ரீ குலசேகரப் பெருமாள் போல்வார் இங்குக் கொள்ளப்படுவது பொருத்தம். .... (154)

(மூ.) 155. பூண்டநாள் சீர்க் கடலையுட் கொண்டு திருமேனி நன்னிறமொத்து உயிரளிப்பான் தீர்த்தகரராய் எங்கும்திரிந்து ஜ்ஞாநஹ்ரதத்தைப் பூரித்துத் தீங்கின்றிவாழ நீதிசோர்ந்து கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து வெளுத்தொளித்துக் கண்டுகந்து பரஸம்ருத்தியே பேருன அன்புகூருமடியவர் உறையிலிடாதவர் புயற்கை யருள்மாரி குணந்திகழ் கொண்டல் போல்வாரை மேகமென்னும்.

[மேகத்துக்கு ஸ்வாபதேசம் கூறுவது.]

(ப.) 155. **பூண்ட நாள் சீர்க்கடலை உட்கொண்டு**—(மேகமானது வர்ஷிக்க வேண்டுங் காலங்களில் கடலிலேபுக்கு அதில் நீரைப் பருகுமாபோலே) * நீண்ட தோள் மால்கிடந்த நீள்கடல் நீராடுவான் பூண்டநாளெல்லாம் புகும் * என்றும் * திருமால் சீர்க்கடலையுட் பொதிந்த சிந்தனையேன் * என்றும் சொல்லுகிறபடியே நாள்தோறும் எம்பெருமான் கண்வளர்ந்தருளுகிற கடலிலே அவகாஹித்து அவனுடைய திருக்கல்யாண குணக்கடலை * மனவுட்கொண்டு * என்கிறபடியே உள்ளே யடக்கிக் கொண்டவர்களாய்,

**திருமேனி நன்னிற மொத்து**—* திருமால் திருமேனியொக்கும் * என்றும் * கண்ணன்பால் நன்னிறங்கொள் கார் * என்றும் சொல்லுகிறபடியே மேகமானது எம்பெருமானுடைய திருமேனியோடொத்த நிறத்தை யுடைத்தா யிருக்குமாபோலே, உள்ளே தியானிக்கப்படுகிற முகில் வண்ணனுடைய நிழலீட்டாலே அவனோ டொத்த நிறத்தை யுடைத்தா யிருக்குமாபோலே, உள்ளே தியானிக்கப்படுகிற முகில்வண்ணனுடைய நிழலீட்டாலே அவனோடொத்த நிறத்தையுடையவர் களாய்,

**உயிரளிப்பான் தீர்த்தகரராய் எங்கும் திரிந்து**—மேகமானது வர்ஷித்து ப்ராணிகளை ரக்ஷிப்பதற்காக * உயிரளிப்பான் மாகங்களெல்லாந் திரிந்து * என்கிறபடியே ஆகாசப் பரப்பெங்கும் ஸஞ்சரிக்குமாபோலே, ஸம்ஸாரிகளான சேதநர்களை ரக்ஷிக் கைக்காக * தீர்த்தகரராமின் திரிந்து * தீதில் நன்னெறி காட்டி யெங்குந்திரிந்து * என்கிறப்படியே லோகபாவநராய் எங்கும் ஸஞ்சரிப்பவர்களாய்,

**ஜ்ஞாநஹ்ரதத்தைப் பூரித்து**—மேகமானது வர்ஷித்துத் தடாகம் முதலியவற்றைப் பூரிக்குமாபோலே * ஜ்ஞாந ஹ்ரதே த்யாநஜலே ராக த்வேஷ மலாபஹே, யஃஸ்நாதி மாநஸே தீர்த்தே ஸயாதி பரமாம் கதிம் * என்று மாநஸ தீர்த்த வர்ணனத்தில் சொன்னபடி ஞானமாகிற மடுவைத் தாங்கள் வர்ஷிக்கிற பகவத்குண தீர்த்தங்களாலே நிறைப்பவர்களாய்,

**தீங்கின்றி வாழ நிதி சொரிந்து**—* தீங்கின்றி நாடெல்லாம்திங்கள் மும்மாரி பெய்து * என்றும் * வாழ வுலகினில் பெய்திடாய் * என்றும் * மாமுத்தநிதி சொரியும் மாமுகில்காள் * என்றும் சொல்லுகிறபடியே அனர்த்தலேசமுமில்லாமல் அனைவரு முஜ்ஜீவிக்கும்படி பகவத்குண ரத்னங்களை வர்ஷிப்பவர்களாய்,

**கொடுத்தது நினையாதே லஜ்ஜித்து**—மேகமானது எத்தனை மழை பொழிந்தாலும் பெய்தோமென்று நினையாதாப்போலே அல்லும் பகலும் அர்த்த விசேஷங்களை வர்ஷித்தாலும் அதை நினையாதவர்களாய், அவ்வளவேயல்லாமல் 'இன்னமும் உபகரிக்கப்பெற்றிலோம்' என்று லஜ்ஜிக்கப்பெற்றவர்களுமாய்,

**வெளுத்தொளித்து**—மேகம் வர்ஷிக்காதபோது (சரற்காலத்தில்) வெளுத்துப் போய்க் கண்ணுக்கும் புலப்படாமலிருப்பதுபோல, அர்த்தங்களை உபதேசிக்கப் பெறுதபோது உடம்பு வெளுத்து வெளியே முகங்காட்டாதவர்களாய் [சிஷ்யஹ்ரு தயவாஸிகளாய்]

**கண்டுகந்து பரஸம்ருத்தியே பேருன**—மேகமானது தனக்கென்று காரியம் செய்யாதே பரஸம்ருத்தி கண்டு உகப்பதற்கே செய்வதுபோல உபதேசம் கேட்டுகந்த சிஷ்யர்களின் ஸம்ருத்தி கண்டு உகப்பதே பேறு யிருக்குமவர்களான,

**அன்புகூருமடியவர்**—* ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூருமடியவர் * என்னப்பட்ட முதலாழ்வார்கள்,

**உறையிலிடாதவர்**—உருவின வாளை உறையிலிடாதே தேவதாந்தரங்களின் தாழ்வையும் எம்பெருமானுடைய பரத்வத்தையும் திண்ணமாக உபபாதித்துப் போரும் திருமழிசைப்பிரான்,

**புயற்கை அருள்மாரி**—* காரார் புயற்கைக்கலிகன்றி * என்றும் * அருள்மாரி * என்றும் வள்ளல் தனத்தில் மேகமாகவே சொல்லப்பட்ட திருமங்கையாழ்வார்,

**குணந்திகழ் கொண்டல் போல்வாரை**—* குணந்திகழ் கொண்டலிராமானுசன் * என்று மேகமாகச் சொல்லப்பட்ட எம்பெருமானுர்—ஆகிய இவர்கள் போல்வாரை,

**மேகமென்னும்**—(இந்த குண ஸாம்யத்தையிட்டு. திவ்ய ப்ரபந்தங்களில்) மேகமென்று சொல்லும். .... ... ... ... (155)

(நா.) 155 மேகமாகச் சொல்லுகிறது முதலாழ்வார்கள் திருமழிசைப் பிரான் கலியன் இராமாநுசன் போல்வாரை யென்க. பெய்யவேண்டிய காலங்களில் கடலிலே புக்கு அதில் நீரைப்பருகிக் கொள்ளும் மேகம்போலே பகவத்குண ஸாகரத்தை உள்ளேயடக்கிக் கொண்டிருப்பவர்களாய், மேகமானது அவன் திருமேனி யோடொத்த நிறத்தையுடைத்தாயிருக்குமாபோல, உள்ளுறையும் பெருமானுடைய நிழலீட்டாலே அவனோடு ஸாம்யம் பெற்றவர்களாய், மேகமானது பிராணிகளை ரக்ஷிக்க ஆகாசப் பரப்பெங்கும் ஸஞ்சரிக்குமாபோலே ஸம்ஸாரி சேதநர்களை ரக்ஷிக்கைக்காக உலகமெங்கும் ஸஞ்சாரம் பண்ணுமவர்களாய், மேகம் வர்ஷத்தாலே தடாகம் முதலியவற்றை நிறைக்குமாபோலே ஞானமாகிற தடாகத்தைத் தாங்கள் வர்ஷிக்கிற பகவத்குண தீர்த்தங்களாலே நிறைக்குமவர்களாய், மேகமானது தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரிபெய்து வாழவுலகில் பெய்து மாமுத்தநிதி சொரியுமாபோலே அநர்த்தலேசமுமின்றிக்கே அனைவரு முஜ்ஜீவிக்கும்படி பகவத் குணரத்னங்களை வர்ஷிக்குமவர்களாய், மேகமானது எவ்வளவு வர்ஷித்தாலும் வர்ஷித்தோமென்று நினையாதாப்போலே தங்களுடைய ஔதார்யாதிசயத்தை நினையாதவர்களாய் அவ்வளவுமன்றிக்கே 'இன்னமும் உபகரிக்கப்பெற்றிலோமே, நாம் செய்தது போருமோ?' என்று வெள்கியிருப்பாராய், உபகரிக்கப் பெருதபோது உடம்பு வெளுத்து ஒளித்திருப்பாராய் எதிர்த்தலை வாழ்வதையே தங்களுக்குப் பேருக நினைத்திருப்பவர்களான தன்மையினுல் அன்னவர்களுக்கு மேகஸாம்யம் பொருந்தும். ... ... ... ... (155)

[ஆக இதுவரையில் தூதுவிடப்படுகிற அன்னம் முதலானவற்றுக்கு ஸ்வாபதேசம் அருளிச் செய்யப்பட்டதாயிற்று. இனி, பலகால் தூதுவிட வேண்டும்படி முகங்காட்டாமைக்கு ஹேதுவும், தூதுவிடுகைக்குப் பற்றுசும், அதுக்கு விஷயமும் வகையிட்டு அருளிச் செய்யப்படுகிறது.]

(மூ.) 156. தம்பிழையுஞ் சிறந்தசெல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாஸமும் மறப்பித்த க்ஷமாதீக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை யுணர்த்தும் வ்யூஹ விபவ பரத்வ த்வயார்ச்சைகள் தூதுநாலுக்கும் விஷயம்.

[தூது நாலுக்கும் விஷய நிரூபணம் செய்வது.]

[தம்பிழை மறப்பித்த க்ஷமையை யுணர்த்தும் வ்யூஹம் முதல்தூதுக்கு விஷயம், சிறந்த செல்வம் மறப்பித்த தீக்ஷையை யுணர்த்தும் விபவம் இரண்டாம் தூதுக்கு விஷயம்; படைத்த பரப்பு மறப்பித்த ஸாரஸ்யத்தை யுணர்த்தும் பரத்வ த்வயம் (—பரத்வமும் தத்துல்யமான அந்தர்யாமித்வமும்) மூன்றாம் தூதுக்கு விஷயம்; தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்தும் அர்ச்சை நாலாந்தூதுக்கு விஷயம்—என்றிப்படி நான்கு வாக்யங்களாகப்பிரித்து யோஜிப்பது]

(ப.) 156. தம்பிழை மறப்பித்த க்ஷமையை யுணர்த்தும் வ்யூஹம் முதல் தூதுக்கு விஷயம்—* அஞ்சிறையமடநாராய் * என்னும் பதிகத்திலே * என் பிழையே நினைந்தருளி யருளாத * என்று தம் அபராதத்தையே பார்த்துத் தனது க்ஷமையையும் மறந்து உபேக்ஷித்ததாகச் சொல்லி, அபராத ஸஹத்வமாகிற அந்த க்ஷமையை யறிவித்தால் உடனே அவன் வரக்கூடு மென்றெண்ணி * என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்று அபராத ஸஹத்வம் பற்றாசாக * கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளருமடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லி * என்று தூது விடுகையாலே முதலதான தூதுபதிகத்திற்கு வ்யூஹம் விஷயம்.

சிறந்தசெல்வம் மறப்பித்த தீக்ஷையை யுணர்த்தும் விபவம் இரண்டாம் தூதுக்கு விஷயம்—* வைகல் பூங்கழிவாய் * என்னும் பதிகத்திலே * சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூருறையும் * என்று, திருவண்வண்டூரின் ஐச்வர்யத்தைக் கண்டு தனது ரக்ஷண தீக்ஷையையும் மறந்து தம்மை உபேக்ஷித்ததாகச் சொல்லி, ஆர்த்த ரக்ஷணைக தீக்ஷிதத்வத்தை நினைப்பூட்டினால் உடனே அவன் வரக்கூடுமென்றெண்ணி * புணர்த்த பூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக்கண்டு * என்று ஆர்த்த ரக்ஷண தீக்ஷிதத்வம் பற்றாசாக * மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையு முளளென்மின்களே * என்று ஸ்ரீராமனாகிற விபவாவதாரத்திலே தூது விடுகையாலே, சிறந்த செல்வம் மறப்பித்த தீக்ஷையை நினைப்பூட்டி விபவத்திலே தூது விடுகை இரண்டாவதான தூது பதிகத்திற்கு விஷயம்;

படைத்த பரப்பு மறப்பித்த ஸாரஸ்யத்தை யுணர்த்தும் பரத்வத்வயம் மூன்றாந் தூதுக்கு விஷயம்—* பொன்னுலகாளீரோ * என்னும் பதிகத்திலே * முன்னுலகங்களெல்லாம் படைத்த முகில் வண்ணன் கண்ணன் என்னலங்கொண்டபிரான் தனக்கு * என்று தான் படைத்த உலகப் பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே அடியார்களோடு தனக்குண்டான ஐகரஸ்யத்தை மறந்து தம்மை யுபேக்ஷித்ததாகச்சொல்லி அடியார்களோடு ஏகரஸனாயிருக்குமிருப்பை நினைப்பூட்டினால் உடனே அவன் வரக்கூடுமென்றெண்ணி * தன்மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான் * என்று அடியார்களோடுண்டான ஐகரஸ்யம் பற்றாசாக * வானவர் கோனைக்கண்டு யாமிதுவோ தக்கவாறென்னவேண்டும் * என்று பரத்வத்திலும்

எங்குச் சென்ருகிலுங் கண்டு இதுவோ தக்கவாறென்மின் * என்று அதீந்த்ரியத் வேந பரத்வ பர்யாயமான அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுகையாலே, படைத்த பரப்பு மறப்பித்த ஸாரஸ்யத்தை நினைப்பூட்டிப் பரத்வத்வயத்திலே தூதுவிடுகை மூன்ருந் தூதுக்கு விஷயம்;

தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்தும் அர்ச்சை நான்காந் தூதுக்கு விஷயம்—* எங்கானலகங்கழிவாய் * என்னும் பதிகத்திலே * தமரோடங் குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே * என்று தன்னையுகந்த பாகவதர்களோடுண் டான சேர்த்தியில் இனிமையாலே, பிரிந்தார்க்குப் பிழைத்திருக்கவொண்ணுதபடி யான தன் வடிவழகை மறந்து தம்மை யுபேக்ஷித்ததாகச் சொல்லி, இவ்வடிவழ கைப் பிரிந்தார் தரிப்பரோவென்று அவ்வடிவழகை நினைப்பூட்டினுல் உடனே அவன் வரக்கூடுமென்றெண்ணி * செக்கமலத்தலர்போலுங் கண் கைகால் செங் கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகளுக்கு—தக்கிலமே கேளீர்கள் * என்றும் * பூந்துழாய் முடியார்க்கு * என்று தொடங்கியும் ஸௌந்தர்யம் பற்ருசாக * திருமூழிக்களத்தார்க்கு * என்று அர்ச்சாவதாரத்திலே தூதுவிடுகையாலே, தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை நினைப்பூட்டி அர்ச்சையிலே தூதுவிடுகை நாலாந் தூதுக்கு விஷயம். ... ... (156)

(தா.) 156. திருவாய்மொழியில் * அஞ்சிறைய மடநாராய் * வைகல்பூங் கழிவாய் * பொன்னுலகாளீரோ * எங்கானலகங்கழிவாய் என்கிற நான்கு பதிகங் களில் தூதுவிடுதலுள்ளது. அஞ்சிறைய மடநாரையில் * கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே கண்வளரு மடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லி * என்றரு ளிச் செய்கையாலே அப்பதிகம் வ்யூஹநிலையான க்ஷீராப்திநாதனை நோக்கித் தூது விடுவதாகும். * வைகல் பூங்கழிவாயில் * மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனுர்க்கு * என்றருளிச் செய்கையாலே அது விபவாவதாரத் தில் தூது விடுவதாகும். * பொன்னுலகாளீரில் * வானவர் கோனைக்கண்டு யாமிதுவோ தக்கவாறென்னவேண்டும் * என்றருளிச் செய்கையாலே பரமபத நிலயனை பரவாஸுதேவனை நோக்கி அப்பதிகம் தூதுவிடுவதாகும். அதுதன்னி லேயே * எங்குச் சென்ருகிலுங்கண்டு என்றுமருளிச் செய்கையாலே இப்பதிகமே அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுவதாகும். இப்படி தூதுவிட வேண்டும்படி முகங்காட்டாமைக்கு அடைவே ஹேதுக்களாவன; (1) * என்பிழையே நினைந் தருளி அருளாத திருமாலார்க்கு என்னும்படியான தம்பிழையும், * சிறந்தசெல்வம் மல்கு திருவண்வண்டூருறையும் என்னும்படி ஆர்த்தரக்ஷணத்திலே எம்பெருமா னைத் தடைசெய்து கால்தாழப்பண்ணின திருவண்வண்டூரின் சிறந்த செல்வமும், * முன்னுலகங்களெல்லாம் படைத்த முகில்வண்ணன் கண்ணன் என்னலங் கொண்டபிரான் தனக்கு * என்னும்படி தான்படைத்த ஜகத்தின் பரப்பை ரக்ஷிக்கிற பராக்கும், * தமரோடு அங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே * என் னும்படி தன்னையுகந்த பாகவதர்களோடு கூடி வாழ்கையாலே நம்மை மறந்தா னென்கைக் கடியான தமரோட்டை வாஸமுமாம். தூது விடுகைக்குப் பற்ருசு அடைவே எவையென்னில், * என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்

னும்படியான அபராத ஸஹத்வமும், * புணர்த்த பூந்தண்டுழாய் முடி நம்பெருமானைக் கண்டு என்னும்படியான ஆர்த்தரக்ஷண தீக்ஷிதத்வமும், * தன் மன்னு நீள் கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான் * என்னும்படி அடியார்களோடு ஏகரஸனுயிருக்குந் தன்மையும், * செக்கமலத்தலர் போலுங் கண் கை கால் செங்கனி வாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகளுக்குத் தக்கிலமே கேளீர்கள் * என்னும்படியான வடிவழகும். ஆக, தம்பிழை மறப்பித்த க்ஷமாகுணத்தை உணர்த்தப் பெற்ற வ்யூஹம் முதல் தூதுக்கு விஷயம், சிறந்த செல்வம் மறப்பித்த ரக்ஷா தீக்ஷா குணத்தை உணர்த்தப்பெற்ற விபவாவதாரம் இரண்டாந் தூதுக்கு விஷயம்; தாம்படைத்த பரப்பில் பராக்கு மறப்பித்த ஸாரஸ்ய குணத்தை யுணர்த்தப்பெற்ற பரத்வமும் அதற்குத் தோள்தீண்டியான அந்தர்யாமித்வமும் மூன்றாந் தூதுக்கு விஷயம். தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்தப்பெற்ற அர்ச்சாவதாரம் நான்காந் தூதுக்கு விஷயம் என்றதாயிற்று. ... (156)

(மூ). 157 **பகலோலக்கமிருந்து கறுப்புடுத்துச் சோதித்துக் காரியம் மந்த்ரித்து வேட்டையாடி ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி, ஆதுஞ் சோராமல் செங்கோல் நடாவுகிற பாரளந்த வென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு வீண்மீதென்கிற ஐந்திலும் காணலாம்.**

**[ப்ராப்யவஸ்துவின் ஐக்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக நிரூபித்தல்]**

(பகலோலக்கமிருக்கும் ராஜநீதி, கறுப்புடுத்துச் சோதிக்கும் ராஜநீதி, கார்யம் மந்த்ரிக்கும் ராஜநீதி, வேட்டையாடும் ராஜநீதி, ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி—என்று பிரித்து யோஜிப்பது)

(ப.) 157. **பகலோலக்கமிருந்து**—ஸகல பரிஜனங்களும் புடைசூழத் தன் வீறுதோற்றப் பகலிலே மஹா கோஷ்டியாக விருந்து அரசாட்சி புரிகையும்

**கறுப்புடுத்துச் சோதித்து**—ராஜ்யத்திலுள்ளாருடைய குண தோஷங்களை யறிகைக்காக இரவிலே பிறரறியாதபடி கறுப்பு வஸ்த்ரமுடுத்து நகரசோதனம் பண்ணுகையும்,

**கார்யம் மந்த்ரித்து**—ராஜ்யத்தில் சிக்ஷை ரக்ஷைகளுக்கு ஏகாந்தமாக விருந்து காரியம் செய்கையும்,

**வேட்டையாடி**—துஷ்ட ஜந்துக்களை வதைக்க வேட்டையாடுகையும்,

**ஆராமங்களிலே விளையாடும் ராஜநீதி**—வேட்டையாடின விடாய் தீரப் பூந்தோப்புக்களிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகையுமாகிற ராஜநீதியானது, (இதற்கு, ஐந்திலுங் காணலாமென்பதிலே அந்வயம்.)

**ஆதுஞ் சோராமல் செங்கோல் நடாவுகிற**—* பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே யாள்கின்ற வெம்பெருமான் * என்றும் * அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் * என்றும் சொல்லுகிறபடியே உபய விபூதியிலும் தன்னுடைய திவ்யாஜ்ஞையை நடத்துகிற,

**பாரளந்த வென்னும் மூன்று முடிக்கு உரிய இளவரசுக்கு—** * பாரளந்த பேரரசே எம் விசும்பரசே எம்மை நீத்து வஞ்சித்தோரரசே * என்கிற பாசுரப்படியே ஸௌலப்யத்திற்காகவும் பரத்வத்திற்காகவும் ப்ரணயித்வத்திற்காகவும் மூன்று திருவபிஷேகங்களைத் தரிக்கக்கூடிய * வானிள வரசான ஸர்வேஸ்வரனுக்கு,

**விண்மீதென்கிற ஐந்திலுங் காணலாம்—** * விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * என்கிற பாட்டிற் சொன்ன பரத்வாதி பஞ்சகத்திலும் காணலாம். [பகலோலக்கமிருக்கும் ப்ரகாரம் விண்மீதிருக்கையாகிற பரத்வத்திலே காணலாம்; கறுப்புடுத்துச் சோதிக்கும் ப்ரகாரம் இவற்றுளெங்கும் மறைந்துறைகையாகிற அந்தர்யாமித்வத்திலே காணலாம்; கார்யம் மந்த்ரிக்கும் ப்ரகாரம் கடல் சேர்ப்பாயென்கிற வ்யூஹத்திலே காணலாம்; வேட்டையாடும் ப்ரகாரம் * களிறும்புள்ளுமுடன் மடிய வேட்டையாடும் விபவாவதாரங்களிலே [மண்மீதுழல்வா யென்றதிலே] காணலாம். ஆராமங்களிலே விளையாடும் ப்ரகாரம் * ஆராமஞ் சூழ்ந்த வரங்கம் முதலான திவ்ய தேசத்திலே [மலைமேல் நிற்பாயென்றதிலே] காணலாம் என்றதாயிற்று. இத்தால் பரத்வாதிகளில் ஸ்தலபேதமே யொழிய வஸ்து பேதமில்லாமை காட்டப் பட்டது.] ... .. ... ... ... (157)

(தா.) 157. (இப்படி பலவிடங்களிலும் தூதுவிட்டாலும் இடங்களில் பேதமேயன்றி வஸ்துவில் பேதமில்லையென்பது த்ருஷ்டாந்தத்துடன் நிரூபிக்கப் படுகிறது.) ஸகல பரிஜனங்களும் ஸேவிக்கத் தன் வீறு தோற்றப் பகலோலக்க மிருக்கையும், ராஜ்யத்திலுள்ளாருடைய குணதோஷங்களை யறிகைக்காக இரவிலே பிறரறியாதபடி கறுப்புடுத்து நகரசோதனம் பண்ணுகையும், ராஜ்யத்தில் சிக்ஷை ரக்ஷைகளுக்காக ஏகாந்தமாகவிருந்து கார்ய விசாரம் செய்கையும் துஷ்ட ஜந்துக்களை வதைக்க வேட்டையாடுகையும், அந்த ச்ரமந்தீரப் பூந்தோப்புகளிலே அபிமத விஷயங்களோடே விளையாடுகையும் ஆகிற இந்த ஐந்து ப்ரகாரங்கள் உலகில் அரசனுக்கு இருக்குமாபோலே * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார் * என்று ராஜாவாகச் சொல்லப்பட்ட ஸர்வேச்வரனுக்கும் * விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய் மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * என்கிற பாசுரத்திற் சொல்லப்படுகிற பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்கிற ஐந்து நிலைகளிலும் இவ்வைந்து ப்ரகாரங்களுங் காணலாம். (1) பகலோலக்கமிருக்கும் ப்ரகாரம் பரத்வத்திலே. (2) கறுப்புடுத்துச் சோதிக்கும் ப்ரகாரம் அந்தர்யாமித்வத்திலே. (3) காரியம் மந்த்ரிக்கும் ப்ரகாரம் வ்யூஹத்திலே. (4) வேட்டையாடும் ப்ரகாரம் விபவாவதாரங்களிலே (5) ஆராமங்களிலே விளையாடும் ப்ரகாரம் அர்ச்சாவதாரத்திலே யென்று காண்க. [இத்தால் பரத்வாதிகளில் ஸ்தல பேதமொழிய வஸ்துபேதமில்லாமை காட்டப்பட்டது. (157)

**(மூ.) 158. தமருகந்த அடியோமுக்கே யென்னும் பின்னானார் வணங்குமிடத்திலே யெல்லாம் பூர்ணம்.**

[அர்ச்சாவதாரத்தின் குணபூர்த்தியைப் பேசுதல்]

(ப.) 158. தமருகந்த—* தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந்தானே * என்கிற பொய்கையாழ்வார் பாசுரத்திலும்,

அடியோமுக்கே யென்னும்—* அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீரிந்தளூரீரே * என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்திலும் பெருமை பாராட்டப்பெற்ற,

பின்னானார் வணங்கு மிடத்திலே—* பின்னானார் வணங்குஞ் சோதி * என்று அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுக்கும் அநுபவிக்கத் தக்கதாயமைந்த அர்ச்சாவதாரத்திலே,

எல்லாம்—பரத்வம் முதலானவற்றில் அநுபவிக்கக்கூடிய எல்லாத் திருக்குணங்களும்,

பூர்ணம்—* ஸர்வம் பூர்ணம் ஸஹோம் * என்கிற உபநிஷத்தின்படியே நிறைந்திருக்கும். ... .. ... ... (158)

(தா.) 158. (ஆழ்வார் அர்ச்சாவதாரத்திலே விசேஷமாக மண்டியிருப்பதற்குக் காரணம் அதிலுள்ள குணபூர்த்தியே யென்கிறது.) * தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே தமருகந்த தெப்பேர் மற்றப்பேர் * என்று அடியாருகந்த த்ரவ்யமே திருமேனியாகவும் அவர்களுகந்த திருநாமங்களே தனக்குத் திருநாமமாகவுங் கொண்டிருக்குமென்றும் * அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீரிந்தளூரீரே * என்று—பரத்வம் முதலியவற்றில் அணுகுகைக்கு ஆளல்லாமல் அநந்யகதிகளாயிருக்கிற வெங்களுக்கு ருசி பிறந்தபோதே நினைத்தவகைகளெல்லாம் அநுபவிக்கைக்காகவன்றோ திருவிந்தளூரிலே வந்து நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறது! என்றுஞ் சொல்லப்பட்ட * பின்னானார் வணங்குஞ்சோதியான அர்ச்சாவதாரத்திலே இருட்டறையில் விளக்குப்போலே எல்லாக்குணங்களும் பூர்ணமாக விளங்கும். [இந்த சூர்ணையின் மணவாள மாமுனிகளது வியாக்கியானத்தில் பல அச்சுப்பிழைகள் காணப்படுகின்றன. ''ஸர்வம் பூர்ணம் ஸஹோம்'' என்கிற ப்ரமாணமிருக்கவேண்டுமிடத்தில் ''ஸர்வம் ஸஹோ'' என்று விழுந்திருக்கிறது. ''முற்பட்டவற்றிலுள்ளவையும்'' என்றிருக்க வேண்டுவது 'முற்பட்டவைந்திலுள்ளவையும்' என்று கிடக்கிறது. திருத்திக்கொள்க.] ... .. (158)

(மூ.) 159. வன்பெருவானக முதலுய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி—வடிவுடைக் கடலிடங் கட்கிலீயென்னுமவற்றில் இவன்திறத் தென்கொலோ வென்பிக்கிற வ்யூஹஸௌஹார்த்தப்ரதாநம்.

[ஒவ்வொரு திருப்பதியில் ஒவ்வொரு குணம் ப்ரதானமாகப் பிரகாசிக்கும்படியை நிருபிக்கத் தொடங்கி, கோயிலில் பிரகாசிக்குங் குணத்தைப் பேசுதல்.]

(ப.) 159. வன்பெருவானகமுதலுய்ய—* வன்பெருவானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய * என்கிறபடியே எல்லாரு முஜ்ஜீவிக்கும்படியாக,

**இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி**—* திருவாளனினி தாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கம் * என்றும் * திருவாளன் திருப்பதி * என்றும் சொல்லுகிறபடியே திருவுள்ளமுகந்து திருக்கண் வளர்ந்தருளுகிற திருமாலின் திருப்பதியான தென்னரங்கமானது, (வ்யூஹஸௌஹார்த்த ப்ரதாநம் என்பதிலே இதற்கு அந்வயம்.)

**வடிவுடை கடலிடம் கட்கிலியென்னுமவற்றில்**—*வடிவுடை வானோர் தலைவனே* என்று பரத்வமும், * கடலிடங்கொண்ட கடல்வண்ணா * என்று வ்யூஹமும், * கட்கிலீ * என்று அந்தர்யாமித்வமும், (அப்பாசுரத்திலேயே) * காகுத்தா கண்ணனே என்று விபவாவதாரமுமாக எல்லாம் சொல்லப்பட்டிருந்தாலும் இவற்றுக்குள்ளே,

**இவள் திறத்து என்கொலோ என்பிக்கிற**—* இவள் திறத்து என்செய்கின்றாயே, என் சிந்தித்தாயே * என்கொலோ முடிகின்றதிவட்கே? * என்று சொல்லும்படி பண்ணுகிற,

**வ்யூஹ ஸௌஹார்த்தப்ரதாநம்**—* பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்யும் வ்யூஹத்தின் குணமான ஸௌஹார்த்தத்தை ப்ரதானமாக வுடையது. [கோயிலில், வ்யூஹத்தின் குணமான ஸௌஹார்தம் முக்கியமாக ப்ரகாசிக்குமென்றபடி.]

(தா.) 159. (இப்படி அர்ச்சாவதாரத்தில் எல்லாம் பூர்ணமாகில் எல்லாத் திருப்பதிகளிலும் எல்லாக் குணங்களும் ஏக ரூபமாக ப்ரகாசிக்குமோ வென்ன, பரத்வம் முதலியவற்றிற்கு அஸாதாரணமாயும் ஸாதாரணமாயுமிருக்கின்ற குணங்களில் ஒவ்வொரு குணம் ஒவ்வொரு திருப்பதியில் பிரதானமாகப் பிரகாசிக்கும் விதம் நம்மாழ்வார் திருவாய்மொழியில் அருளிச்செய்துள்ள திருப்பதிகள் தோறும் அடைவே காட்டப்படுகிறது. ஸகல திவ்ய தேசப்ரதானமான கோயிலில் பிரகாசிக்கின்ற குணம் ஆதியிலே கூறப்படுகிறது.) * பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்யும் வ்யூஹகுணமான ஸௌஹார்த்தம் கோயிலில் ப்ரதானமாகப் பிரகாசிக்கும். எங்ஙனேயென்னில்; திருப்பாற்கடலில் எம்பெருமான் ஜகத்ரக்ஷண சிந்தை பண்ணுவதாக ப்ரஸித்தம்; கோயிலிலும் அந்த சிந்தனையையே செய்துகொண்டு சாய்ந்தருள்வதாக திருவரங்கத்தாய்! இவள் திறத்து என் சிந்தித்தாயே?'' 'திருவரங்கத்தாய் என்கொலோ முடிகின்ற திவட்கே?'' என்னும் பாசுரங்களினால் புலப்படுகின்றது, தென் திருவரங்கம் எப்படிப்பட்டதென்னில் * வன்பெரு வானக முதலுய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதியாகவுள்ளது. இதுதான் அர்ச்சாவதாரமாயிருக்கச் செய்தேயும் பரவ்யூஹ விபவாந்தர்யாமியென்கிற மற்றை நான்கு நிலைமைகளின் அநுபவமும் ஆழ்வார்க்கு இங்கே உள்ளதென்பது பாசுரங்களினால் விளங்குகின்றது. எங்ஙனேயென்னில், (இத்திருப்பதி விஷயமான * கங்குலும் பகலுமென்கிற பதிகத்தில்). "வடிவுடை வானோர் தலைவனே!'' என்கையாலே பரவாஸுதேவனுடைய அநுபவம் இங்கு ஆயிற்று; கடலிடங் கொண்ட கடல்வண்ணா!'' என்கையாலே வ்யூஹாநுபவமும் இங்கு ஆயிற்று, "கட்கிலீ! உன்னைக் காணுமாறருளாய்'' என்கையாலே அந்தர்யாம்யநுபவமும் இங்கு ஆயிற்று. ஆக இங்ஙனே அநுபவிக்கப்படுகின்ற பரத்வாதிகளில்

வைத்துக்கொண்டு வ்யூஹத்தின் குணமான ஸௌஹார்த்தத்தின் அநுபவமே ஆழ்வார்க்கு இங்கு உறைத்திருக்கும் .... ... ... (159)

(மு.) 160. மண்ணோர் விண்ணோர் வைப்பில், போகின்ற ஏழுலகுக் குயிர் பாசம் வைத்த நிகரில் வாத்ஸல்ய முஜ்வலம்.

[திருமலையில் விளங்கும் திருக்குணம்]

(ப.) 160. மண்ணோர் விண்ணோர் வைப்பில்—* கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு * என்றும் * தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு * என்றும்; உபய விபூதியிலுள்ளார்க்கும் சேமித்துவைத்த நிதிபோலே ப்ராப்யமாயிருக்கிற திருமலையில்,

போகின்ற ஏழுலகுக்குயிர்—* போகின்ற காலங்கள் போயகாலங்கள் போகு காலங்கள் தாய் தந்தை யுயிராகின்றாய் * என்றும், * கண்ணாயேழுலகுக்குயிராய வெங்கார் வண்ணனை * என்றும் சொல்லுகிறபடியே ஸர்வர்க்கும் ஆத்மாவாயிருக்கிற அந்தர்யாமியின் குணமாயிருப்பதாய்,

பாசம்வைத்த நிகரில் வாத்ஸல்யம்—* என்கண் பாசம் வைத்த * என்றும் * நிகரில் புகழாய் * என்றும் சொல்லப்பட்ட வாத்யல்யமானது,

உஜ்ஜ்வலம்—* பரஞ்சுடர்ச்சோதி யென்னும்படியான வடிவிலே தொடைகொள்ளலாம்படி மிகவிளங்கும், [திருமலையிலே அந்தர்யாமி குணமான வாத்ஸல்யம் ப்ரகாசிக்குமென்றதாயிற்று] ... ... ... ... (160)

(தா.) 160. உபய விபூதியிலுள்ளார்க்கும் சேமித்து வைத்த நிதிபோலே ப்ராப்யமாயிருக்கிற திருமலையில் வாத்ஸல்ய குணம் விளங்கும். "போகின்ற காலங்கள்............தாய் தந்தையுயிராகின்றாய் ......... தண்வேங்கடமேகின்றாய்", "கண்ணாயேழுலகுக்குயிராய எங் கார்வண்ணனை ........வேங்கட வேதியனை" "என்கட் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே" "நிகரில் புகழாய் ...திருவேங்கடத் தெம்பெருமானே" என்கையாலே. வாத்ஸல்யத்திற்கு நிகரில் புகழென்றுபெயர்

(மு.) 161. உபய ப்ரதாந ப்ரணவமான உறைகோயிலில் எத்தேவுமென்னும் பரேசத்வம் பொலியும்.

[திருக்குருகூரில் பிரகாசிக்கும் குணம்]

(ப.) 161. உபயப்ரதாநப்ரணவமான—ஜீவாத்மா பரமாத்வாகிய இருவருடைய ப்ராதாந்யத்தையும் ஸ்பஷ்டித்திருக்கிற ப்ரணவம்போலே, பொலிந்துநின்ற பிரானுடையவும் நம்மாழ்வாருடையவும் ப்ராதாந்யம் விளங்கா நிற்கிற,

உறைகோயிலில்—* அவன் மேவியுறை கோயில் * என்னப்பட்ட திருக்குருகூராகிற ஆழ்வார் திருநகரியில்,

எத்தேவுமென்னும் பரேசத்வம் பொலியும்—* உறுவதாவ தெத்தேவும் * என்கிற பாசுரத்தில் சொல்லப்பட்ட * திருக்குருகூரதனுள்பரன் * திருக்குருகூரதனுளீசன் * என்கிற பரத்வலக்ஷணமான ஈசத்வம், பொலியும்—'பொலிந்து நின்ற பிரான்" என்கிற திருநாமத்திற்குச் சேர மிக விளங்கும். ... ... (161)

(தா.) 161. ஜீவனென்ன ஈச்வரனென்ன ஆக இருவர்க்கும் வாசகமாய்க் கொண்டு இருவருடையவும் ப்ராதான்யத்தைத் தோற்றுவிக்கிற ப்ரணவம்போலே ஆழ்வாருடையவும் பொலிந்துநின்ற பிரானுடையவும் ப்ராதான்யம் தோற்றநின்ற திருக்குருகூரிலே * உறுவதாவதெத்தேவும் என்கிற பாசுரத்தில் சொல்லப்பட்ட பரத்வலக்ஷணமான ஈச்வரத்வம் விளங்கும். ... ... (161)

(மூ.) 162. வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநக விபவலாவண்யம் பூர்ணம்.

[திருக்குறுங்குடியில் பிரகாசிக்கும் குணம்]

(ப.) 163, வைஷ்ணவ வாமனத்தில்—வைஷ்ணவ வாமநக்ஷேத்ரமான திருக்குறுங்குடியில்.

நிறைந்த நீலமேனியின்—நிறைந்த சோதி வெள்ளஞ்சூழ்ந்த நீண்ட பொன் மேனியொடும் நிறைந்தென்னுள்ளே நின்றொழிந்தான் * என்றும் * நீலமேனியும் நான்கு தோளும் என்னெஞ்சம் நிறைந்தனவே * என்றும் சொல்லுகிறபடியே இவர் திருவுள்ளத்திலே மற்றொன்றுக்கு இடமில்லாதபடி விளங்குகிற காளமேக நிபச்யாமமான திருமேனியினுடையதான,

ருசிஜநகவிபவலாவண்யம் பூர்ணம்—மேன்மேலும் அநுபவ ருசியை விளைவிப்பதாய் விபவத்தில் ப்ரகாசிக்குமதாகச் சொல்லப்பட்டதான லாவண்யம் பூர்ணமாயிருக்கும். ... ... ... ... ... (162)

(தா.) 162. திருக்குறுங்குடியிலே ஆழ்வார் திருவுள்ளத்திலே வேறொன்றுக்கு இடமறும்படி விளங்காநின்ற காளமேகநிபச்யாமமான விக்ரஹத்தினுடைய அநுபவருசியை மேன்மேலும் விளைவிக்குமதாய் ஸ்ரீ வாமந ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் ப்ரகாசிக்குமதாகச் சொல்லப்பட்ட ஸமுதாய சோபையான லாவண்யம் பரிபூர்ணமாயிருக்கும் * எங்ஙனேயோவன்னைமீர்காள் பாசுரந்தோறும் இதுவேயன்றோ பேசப்பட்டது. .. ... ... ... (162)

(மூ.) 163 ருசிவிவசர்க்குப் பாதமே சரணாக்கு மௌதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்.

[வானமாமலையிலே விளங்கும் குணம்]

(ப.) 1 3. ருசிவிவசர்க்கு—கீழ்ச்சொன்ன லாவண்யத்தாலே ஒருவராலும் நிவர்த்திப்பிக்க வொண்ணாதபடி பிறந்த ருசியாலே பரவசராய் அநந்யகதிகளானவர்களுக்கு,

பாதமே சரணாக்கு மௌதார்யம்—* ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் * என்கிறபடியே திருவடிகளே உபாயமாகக் கொடுக்கும் ஔதார்ய குணம் [அதாவது, * கருளப்புட்கொடி சக்கரப்படை வானநாடவெங்கார் முகில் வண்ணா! * என்னப்பட்ட வள்ளல்தனம்].

வானமாமலையிலே கொழுந்துவிடும்—சிரீவரமங்கையி லெழுந்தருளியிருக்கிற வானமாமலைப் பெருமாள் பக்கலிலே, * வந்தருளி யென்னெஞ்சிடங்கொண்ட

வானவர் கொழுந்தே! * என்று, தானேவந்து இடங்கொண்டு தன்னையுபகரிக்கும்படி கொழுந்து விட்டு வளரும். ... ... ... ... (163)

(தா.) 163, கீழ்ச்சொன்ன லாவண்யத்தாலே ஒருவராலும் நிவர்த்திப்பிக்க வொண்ணாதபடி பிறந்த ருசியாலே பரவசராய் அநந்ய கதிகளானவர்களுக்குத் திருவடிகளையே உபாயமாகக் கொடுக்கும் ஔதார்யகுணம் வானமாமலைப்பெருமாள் பக்கலிலே கொழுந்துவிடும். ["ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந் தாய்" என்கிற பாசுரம் * நோற்ற நோன்புக்கு உயிரானது.] ... (163)

(மூ.) 164, களைகணற்றாரை யுருக்கும் மாதுர்யம் குடமூக்கிலே ப்ரவஹிக்கும்.

[திருக்குடந்தையில் விளங்கும் குணம்]

(ப.) 164. களைகணற்றாரையுருக்கும் மாதுர்யம்—* களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன் * என்று வேறொரு ரக்ஷகனை யுடையோமல்லோ மென்றிருப்பாரை. * நீராயலைந்து கரையவுருக்குகின்ற * என்று சிதிலராம்படி பண்ணுகிற * ஆராவமுதான மாதுர்யம்.

குடமூக்கிலே ப்ரவஹிக்கும்—திருக்குடந்தையிலே வெள்ளமிடும். ... (164)

(தா.) 164. வேறொரு ரக்ஷகனை யுடையோமல்லோம் என்றிருப்பாரை "நீராயலைந்து கரையவுருக்குகின்ற" என்று சிதிலராம்படி பண்ணுகிற ஆராவமுதான மாதுர்யம் கும்பகோணத்திலே மேன்மேலும் ஆராமல் புஜிக்கும்படி பெருகாநிற்கும். [எம்பெருமானுடைய திருநாமம் மாத்திரம் ஆராவமுதன்று; பதிகமும் ஆராவமுது காணீர்.] *குடமூக்கில் கோயிலாக்கொண்டு* என்ற பூதத்தார் பாசுரம் நினைப்பது.

(மூ.) 165. மெலிவிலும் சேமங்கொள்விக்கும் க்ருபை தென்னகரிலே நித்யம்.

[திருவல்லவாழில் விளங்கும் குணம்]

(ப.) 165. மெலிவிலும் சேமங்கொள்விக்கும் க்ருபை—* மானேய் நோக்கு நல்லீர் வைகலும் வினையேன் மெலிய * என்று நாள்தோறும் மெலியுமளவிலும் * அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் * என்று அவனே ரக்ஷகனென் கிற அத்யவஸாயம் குலையாதிருக்கப் பண்ணும் க்ருபையானது,

தென்னகரிலே நித்யம்—* திருவல்லவாழ்ச் சேமங்கொள் தென்னகர்மேல் * என்று தென்னகராகச் சொல்லப்பட்ட திருவல்லவாழிலே * சுழலில் மலிசக்கரப் பெருமானது தொல்லருளே * என்னும்படியாக நித்யமாயிருக்கும். ... (165)

(தா.) 165. கீழ்ச்சொன்ன பரம போக்யமான விஷயத்தை விரைவில் கிட்டி அநுபவிக்கப்பெறாமையாலே நாடோறும் மெலியுமளவிலும் அவனே ரக்ஷகனென்று அத்யவஸித்திருக்கும்படி பண்ணுமதான க்ருபை திருவல்லவாழிலே நித்யமாயிருக் கும். [* மானேய் நோக்கில் * வைகலும் வினையேன் மெலிய * என்ற பாசுரத்திலும் * அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் * என்ற பாசுரத்திலும் * பெருமானது தொல்லருளே * என்ற பாசுரத்திலும் நோக்கு.] ... (165)

(மூ.) 166. வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷணஸ்தைர்யம் பம்போத்தர தேசஸ்தம்,

[திருவண்வண்டூரில் விளங்கும் குணம்]

(ப.) 166. வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷணஸ்தைர்யம்—* ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா* என்னப்பட்ட பிராட்டியைப்போலே * ஏறுசேவகனுர்க்கு என்னையுமுளளென்மின்களே * என்று ஆர்த்த ரக்ஷணத்தில் தன்னுடைய வ்யவஸாயத்தை உள்ளபடி அறிந்திருக்குமவர்களை ரக்ஷிப்பதிலுண்டான உறுதி.

பம்போத்தரதேசஸ்தம்—* தேறுநீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூரிலே நிலைபெற்று நிற்கும். ... .. ... .... (166)

(தா.) 166. ஆர்த்தர்களை ரக்ஷிப்பதில் தன்னுடைய ஊற்றத்தை உள்ளபடி அறிந்திருக்குமவர்களுடைய ரக்ஷணத்தில் அநுகூலராலும் சலிப்பிக்கவொண்ணுத படியிருப்பதான அவனுடைய ஸ்தைர்யகுணம், திருவண் வண்டூரில் நிலைபெற்று நிற்கும். [* வைகல்பூங்கழிவாயில் * ஏறு சேவகனுர்க்கு என்றதில் நோக்கு.]

(மூ) 167. விளம்பவிரோதமழிக்கும் விருத்த கடநாஸாமர்த்த்யம் நன்கரிலே விஸ்தீர்ணம்.

[திருவிண்ணகரிலே விளங்கும் குணம்]

(ப.) 167. விளம்ப விரோத மழிக்கும் விருத்தகடநாஸாமர்த்த்யம்—விரைந்து வந்து முகங்காட்டாமல் விளம்பித்து வருகையாலே * போகு நம்பீ * கழகமேறேல் நம்பீ * என்னும்படி ப்ரணய ரோஷத்தால் பிறந்த விரோதத்தை * அழித்தாயுன் திருவடியால் * என்று அழித்துப் பொகட்ட, விருத்தங்களைச் சேர்த்துக்கொள்ள வல்ல ஸாமர்த்த்யம்,

நன்னகரிலே விஸ்தீர்ணம்—* நல்குரவுஞ் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய் * என்று தொடங்கி, சேராதவற்றைச் சேர்த்துக்கொண்டு நிற்கிற விருத்த விபூதி யோகத்தை ப்ரகாசிப்பித்த * திருவிண்ணகர் நன்னகரே * என்று நன்னகராகச் சொல்லப்பட்ட திருவிண்ணகரிலே பரந்திருக்கும். ... ... (167)

(தா.) 167. வைகல் பூங்கழிவாயில் தூது விட்டவிடத்தும் கடுகவந்து முகங்காட்டாமல் தாமதித்து வருகையாலே "போகுநம்பீ" "கழகமேறேல் நம்பீ" என்னும்படி ப்ரணய ரோஷத்தால் பிறந்த விரோதத்தை "அழித்தாய் உன் திருவடியால்" என்று அழித்துப் பொகட்டவிருத்தகடநா ஸாமர்த்தியம் தன்னில்தான் சேராதவற்றைச் சேர்த்துக்கொண்டு நிற்கிற விருத்த விபூதியோகத்தை ப்ரகாசிப்பித்த திருவிண்ணகரிலே பரந்திருக்கும். [*நல்குரவும் செல்வும் என்று தொடங்கிப் பாசுரந்தோறும் விருத்த விபூதியோகம் சொல்லிற்றுக் காண்க.] .... (167)

(மூ.) 168. கடிதகடக விகடநாபாந்தவம் அவ்வூரிலே த்விகுணம்.

[துலைவில்லிமங்கலத்தில் விளங்கும் குணம்]

(ப.) 168. கடிதகடக விகடநாபாந்தவம்—[சேர்க்கப்பட்டவர்களுக்கு கடிதரென்று பெயர்; சேர்த்தவர்களுக்கு கடகரென்று பெயர்; ] * இமைகொள் சோதிச் செந்தாமரைக்கண்பிரானிருந்தமை காட்டினீர் * என்று கடகராகச் சொல்லப்பட்ட

வர்களாலே தன்பக்கல் சேர்க்கப்பட்டவர்களுக்கும் சேர்த்த அவர்களுக்கும் * இவளை நீரினியன்னைமீர்! உமக்காசையில்லை விடுமினோ * என்னும்படி விகடனையை [பொருந்தாமையை] ப்பண்ணுவதான * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்த * என்னும்படியான ஆவனுடைய பந்துத்வம்.

அவ்வூரிலே த்விகுணம்— * அவ்வூர்த்திருநாமங் கேட்பது சிந்தையே * என்ற பாசுரத்தில் அவ்வூராகச் சொல்லப்பட்ட துலைவில்லிமங்கலமென்னும் இரட்டைத் திருப்பதியிலே இரட்டித்திருக்கும். ... ... .. (168)

(தா.) 168. "குழையும் வாண்முகத் தேழையைத் துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு, இழைகொள் சோதிச் செந்தாமரைக் கட்பிரானிருந்தமை காட்டினீர்" என்னும் பாசுரத்திற் சொல்லப்பட்ட கடகராலே தன் பக்கலில் கடிதராணர்க்கும் கடகராணர்க்கும் "துவளில் மாமணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம் தொழுமிவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ" என்னும்படி விகடனையைப் பண்ணுமதான பந்துத்வகுணம் துலைவில்லி மங்கலத்திலே விளங்கும். [கடிதரென்று ஆழ்வாரைச் சொல்லுகிறது. கடகரென்று தோழிதாய்மார்களைச் சொல்லுகிறது. இவர்களுக்குப் பரஸ்பரம் பொருந்தாமையை விளைத்திட்டது பகவத்பந்துத்வம். "இவளை நீர் இனியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ" என்ற பாசுரத்தினால் அந்தப் பொருந்தாமை ஸ்பஷ்டம்.] ... ... .... (168)

(மூ.) **169. கைம்முதலிழந்தாருண்ணும் நிதியின் ஆபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்தம்.**

**[திருக்கோளூரில் விளங்கும் குணம்]**

(ப.) **169. கைம்முதலிழந்தாருண்ணும் நிதியின்**—கையிருப்பான காசு அற்றவர்கள் நிதியையெடுத்துண்ணுமாபோலே, * என் கொங்கலரேலக் குழலியிழந்தது சங்கே * என்று கையில் வளை முதலாக * என் கற்புடையாட்டியிழந்தது கட்டே * என்று எல்லாமுமிழந்தவர் * உண்ணுஞ்சோறு பருகு நீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்று உண்கிற வைத்தமா நிதியாம் மதுசூதனனுடைய.

**ஆபத்ஸகத்வம்**—ஆபத்துக்கு உதவுகையாகிற பெருங்குணமானது;

**புகுமூரிலே ஸம்ருத்தம்**—* திண்ணமென்னிளமான்புகுமூர் திருக்கோளூரே * என்னப்பட்ட திருக்கோளூரிலே புஷ்கலம், ... ... ... (169)

(தா.) 169. திருக்கோளூரெம்பெருமானுக்கு வைத்த மாநிதிப்பெருமாள் என்று திருநாமமாகையாலும் நிதியானது ஆபத்துக்கு உதவுமதாகையாலும் இத்திருப்பதியில் ஆபத்ஸகத்வம் என்கிற குணம் விளங்கும் [* உண்ணுஞ்சோறு பருகுநீர்.] நிதியுள்ளவிடமாகையாலே ஸம்ருத்தமென்றது. ... (169)

(மூ.) **170. சென்று சேர்வார்க்கு உசாத்துணை யறுக்கும் ஸௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்.**

**[தென் திருப்பேரையில் விளங்கும் குணம்]**

(ப.) **170 சென்று சேர்வார்க்கு உசாத்துணையறுக்கும் ஸௌந்தர்யம்**— * தென் திருப்பேரெயில் சேர்வன் சென்றே * என்று கொண்டு க்ரமப்ராப்தி பற்றாத ப்ரேமாதி

சயத்தாலே ஹிதபரர் வார்த்தைகளையுங் கேளாதே சென்று சேருமவர்க்கு * என் னெஞ்சினூருமங்கே யொழிந்தார் யாரைக்கொண்டு என்னுசாகோ? * என்னும்படி உசாத்துணையான நெஞ்சைக் கொள்ளை கொள்ளவல்லதாய் * செங்கனிவாயின் திறத்ததாயும் * என்பது முதலான பாசுரங்களினால் சொல்லப்பட்டதான அவனு டைய ஸௌந்தர்யம்.

மாநகரிலே கோஷிக்கும்—* தென் திருப்பேரெயில் மாநகரே * என்று மாநக ராகச் சொன்ன தென் திருப்பேரையிலே முறையிடும் ... .... (170)

(தா) 170. சென்று சேர்ந்தவர்கட்கு உசாத்துணையான நெஞ்சைக் கொள்ளை கொள்ளுமதான ஸௌந்தர்யம் தென் திருப்பேரையில் விளங்கும். [* வெள்ளைச் சுரிசங்கில்* என்னெஞ்சினூருமங்கே யொழிந்தார் உழந்தினியாரைக் கொண்டென் உசாகோ * என்றதிலும் * செங்கனிவாயின் திறத்ததாயுமித்யாதியிலும் நோக்கு.]

(மு) 171. ப்ரவணசித்தம் பரத்வ விமுகமாக்கும் ஆநந்தவ்ருத்தி நீணகரிலே.

[திருவாறன்விளையிலே விளங்கும் குணம்]

(ப) 171. ப்ரவணசித்தம் பரத்வவிமுகமாக்கும் ஆனந்த வ்ருத்தி—* தீவினை யுள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும் பேறலுற்றால் ......திருவாறன் விளையதனை மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொலென்னும் என் சிந்தனையே * என்று தன்பக்கல் ப்ரவணரானூருடைய சித்தத்தை * சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரானறியும் * என்று பரத்வத்தில் விமுகமாகப்பண்ண வல்லதாய் * இன்பம் பயக்க வெழிமலர் மாதருந்தானுமிவ்வேழுலகை யின்பம்பயக்க இனி துடன் வீற்றிருந்து * என்னப்பட்டதான ஆனந்த வளர்ச்சி,

நீணகரிலே—* திருவாறன் விளையென்னும் நீணகரமதுவே* என்று நீணகராகச் சொல்லப்பட்ட திருவாறன்விளையிலே வ்யக்தம். .... ... (171)

(தா.) 171. தன் பக்கல் ப்ரவணரானவர்களது சித்தத்தை "சித்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை" என்று பரமபதத்தின் பேர் சொல்லுகையும் அஸஹ்யமாம்படி பரத்வத்தில் விமுகமாகப் பண்ணும் ஆனந்தப் பெருக்கம் திருவாறன் விளையிலே வ்யக்தம். ... ... ... (171)

(மு.) 172. ஸாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம் குளத்தேகொடிவிடும்,

[திருக்குளந்தையில் விளங்கும் குணம்]

(ப) 172. ஸாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம்—ஆழிவலவனை யாதரித்து-கூடச்சென்றேன் * என்று தன்பக்கல் ஆதரத்தோடே கூடியிருப்பாரை * பல்வளை யார் முன்பரிசழிந்தேன் * என்னும்படி லஜ்ஜை முதலானவற்றையழிக்கும் மாயக் கூத்தனுடைய சேஷ்டிதாச்சர்யம்.

குளத்தே கொடிவிடும்—* மாடக்கொடி மதிள் தென்குளந்தை * என்கிற திருக் குளந்தையிலே விளங்கும், ... ... ... .... (172)

(தா) 172. "பல்வளையார் முன்பரிசழிந்தேன்" என்னும்படி ஸ்த்ரீத்வ ப்ரகாரமான லஜ்ஜை முதலியவற்றை யழிக்கும் மாயக் கூத்தனென்கிற சேஷ்டி தாச்சர்யம் பெருங்குளமென்கிற திருக்குளந்தையிலே விளங்கும். ... (172)

(மூ.) 173. ச்ரமமனஞ் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம் ஆய்ச்சேரியிலே.

[திருவண்பரிசாரத்திலே விளங்கும் திருக்குணம்]

(ப.) 173. ச்ரமமனஞ் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம்—*பணியாவமரர் பணிவும் பண்பும் * என்கிற பாசுரத்தின்படியே, நித்யஸூரிகள் உபசரிக்கப் பரமபதத்திலே யிருக்குமவன் பரமஸுகுமாரமான திருமேனியோடே ஸம்ஸாரிகளின் துக்கத்தைப் போக்குகைக்காகத் தன் வாசியறியாத இந்த வுலகத்திலே வந்தவதரித்து * அடியாரல்லல் தவிர்த்தவசவோ? இப்படிதான் நீண்டு தாவியவசவோ * என்று கேட்க வேண்டும்படி விளைந்த சிரமத்தை அநுஸந்தித்த மநஸ்ஸானது * என்மனம் சூழ வருவாரே * என்று வியாகுலிதமாய் ப்ரமிக்கும்படியாய் *ஆழியுஞ் சங்கும் சுமப்பார் தாம் என்று வயிறெரிய வேண்டும்படியான ஸௌகுமார்யப்ரகாசமானது,

ஆய்ச்சேரியிலே—உடையநங்கையார் பிறந்தகமாகையாலே ஆழ்வார்க்கு ஆய்ச்சேரியா யிருப்பதான திருவண்பரிசாரத்திலே காணலாம். ... (173)

(தா.) 173. எம்பெருமானுடைய சிரமத்தை யநுஸந்தித்த ஆழ்வாருடைய திருவுள்ளமானது சுழற்சியடைவதற் குறுப்பான பகவத் ஸௌகுமார்ய ப்ரகாசமானது திருவண்பரிசாரத்திலே விளங்கும். [அங்குமிங்குமென்கிற பதிகத்தில் * கொடியார்மாட மித்யாதி பாசுரத்திலும் * ஆளுமாளார் இத்யாதி பாசுரத்திலும் நோக்கு.] ... .... ... ... ... (173)

(மூ.) 174. மஹாமதிகள் அச்சங் கெட்டு அமரும் சௌர்யாதிகள் சிற்ருற்றிலே கொழிக்கும்.

[திருச்சிற்ருற்றில் விளங்கும் குணம்]

(ப.) 174. மஹாமதிகள் அச்சங்கெட்டு அமரும் சௌர்யாதிகள்—* விதுரஸ் ஸ மஹாமதி: * என்னும்படி அஸ்தாநே பயசங்கை பண்ணும் மஹாமதிகள் * எங்கள் செல்சார்வு * என்று தங்களுக்கு நிர்ப்பய ஸ்தானமான புகலாக நினைத்து அச்சங் கெட்டு * திருச்சிற்ருற்றங்கரையானை .......... அமர்ந்தேனே * என்று அமரும்படியாய் * வார்கடா வருவி யானை மாமலையினென்கிற பாசுரத்திலே அநுஸந்திக்கப் பட்ட சௌர்யவீர்ய டராக்ரமங்கள்,

சிற்ருற்றிலே கொழிக்கும்—திருச்செங்குன்றூர்த் திருச்சிற்ருறென்கிற திருப்பதியிலே ப்ரகாசிக்கும். ... ... ... ... (174)

(தா.) 174. திருச்செங்குன்றூர்த் திருச்சிற்ருற்றில் எம்பெருமானுடைய சௌர்யவீர்ய பராக்கிரமங்கள் விளங்கும். [* வார்கடா வருவியென்கிற முதற் பாசுரத்தில் நோக்கு.] .... .... ... ... (174)

(மூ.) 175. ஸாத்ய ஹ்ருதிஸ்தனையும் ஸாதநமொருக்கடுக்கும் க்ருதஜ்ஞதா கந்தம் தாயப்பதியிலே.

[திருக்கடித்தானத்தில் விளங்கும் குணம்]

(ப.) 175 ஸாத்யஹ்ருதிஸ்தனையும்—தனக்குப் பரம ப்ரயோஜநமான ஆழ்வார் திருவுள்ளத்தில் வாஸம் கிடைத்திருக்கச் செய்தேயும்,

ஸாதந மொருக்கடுக்கும் க்ருதஜ்ஞதாகந்தம்—'இப்படி நாம் திருவுள்ளத்தில் வாஸம் பெற்றது திருக்கடித்தான மென்னும் திவ்யதேசத்தில் நிலையாலேயன்ரே' என்று கொண்டு அந்த திவ்யதேசத்தையும் விடாதே * திருக்கடித்தானமு மென்னுடைச் சிந்தையு மொருக்கடுத்து உள்ளேயுறையும் பிரான் கண்டீர் * என்னும் படியான க்ருதஜ்ஞதாபரிமளமானது,

தாயப்பதியிலே—* திருக்கடித்தான நகரும் தனதாயப்பதியே * என்று தாய ப்ராப்தமான ஸ்தலமாகச் சொல்லப்பட்ட திருக்கடித்தானத்திலே (விளங்குவதாம்.)

(தா) 175. தனக்கு தாயப்ராப்தமான ஸ்தானமாக நினைத்திருக்கும் திருக்கடித்தானத்தில் எம்பெருமானுடைய க்ருதஜ்ஞத்வம் பரிமளிக்கும். [* திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும் ஒருக்கடுத்துள்ளே யுறையும் பிரான் * என்ற பாசுரம் * எல்லியுங்காலைக்கு உயிரானது ]

(ஆழ்வார் போன்ற அடியார்களுடைய திருவுள்ளத்தில் வாஸமே எம்பெருமானுக்குப் பரமப்ராப்யமென்றும், ஸமயம் பார்த்து அங்கே குடிபுகுவதற்காகவே ஆங்காங்குத் திருப்பதிகளில் உறைந்திருக்கிறபடியென்றும், அடியவருள்ளத்தில் வாஸம் கிடைத்துவிட்டால் பிறகு திவ்யதேசங்களில் விருப்பமும் எம்பெருமானுக்கு மட்டமாய்விடுகிறதென்றும், ஆனாலும் இந்தத் திருப்பதிகளில் வாஸம் பண்ணினத்தாலே யன்ரே நாம் அடியவருள்ளத்தில் வாஸம் பெற்றது' என்று அத்தேசம் தனக்குப்பண்ணின உபகாரத்தை நினைத்து, பின்னையும் அத் திவ்யதேசங்களில் விருப்பம் செல்லாநின்றது என்றும் ஸம்ப்ரதாயார்த்தஸாரம் குறிக்கொள்ளவுரியது.) ஸாத்யஹ்ருதிஸ்தனுயும்-ஸாத்யமான [பலமான] ஹ்ருதயவாஸம் லபித்திருக்கச் செய்தேயும் என்றபடி. ஸாதனம் ஒருக்கடுக்கும் க்ருதஜ்ஞதா—இந்த ஹ்ருதய வாஸத்திற்கு ஸாதனமாயிருந்த (திருக்கடித்தானத்) திருப்பதியில் ஹ்ருதயத்திற்போல அநுராகங்கொண்டு வர்த்திக்கும்படியான க்ருதஜ்ஞதை என்றபடி. கடித்தானம் என்பதற்கு மணத்தை யுடைத்தான ஸ்தானமென்று பொருளாகையாலே அதற்கு இணங்க (மூலத்தில்) "க்ருதஜ்ஞதாகந்தம்" எனப்பட்டது. ... (175)

(மூ.) 176 அவகாஹித்தாரை அநந்யார்ஹமாக்கும் நாயகலக்ஷணம் வளம்புகழு மூரிலே குட்டமிடும்

[குட்டநாட்டுத் திருப்புலியூரில் விளங்கும் குணம் கூறுவது]

(ப.) 176. அவகாஹித்தாரை—* மூனைவன் மூவுலகாளியப்பன் திருவருள் மூழ்கினளே * என்னும்படி தன்ப்ரஸாதத்தில் ஆழ்ந்தவர்களை,

அநந்யார்ஹமாக்கும் நாயக லக்ஷணம்—* அருமாயன் பேரன்றிப் பேச்சிலள் * என்றும் * திருப்புலியூர்ப் புகழன்றி மற்று பரவாளிவள் நின்றிராப்பகல் * என்றுய சொல்லும்படி அநந்யார்ஹமாக்குமதாய், * கருமாணிக்கமலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள்போல் * என்பது முதலான பாசுரங்களாற் சொன்ன அவயவ சோபை ஆபரணசோபை முதலான நாயக லக்ஷணமானது.

வளம்புகழுமூரிலே குட்டமிடும்—* திருப்புலியூர்வளம்—புகழும் * என்று இவர் கொண்டாடும்படியான குட்டநாட்டுத் திருப்புலியூரில் பூர்ணமாயிருக்கும். (176)

(தா.) 176. தன் ப்ரஸாதஸாகரத்திலே மூழ்கினவர்களை மற்றொருவர்க்கு ஆகாதபடி யீடுபடுத்துமதான அவயவ சோபை ஆபரண சோபை முதலான நாயக லக்ஷணம் குட்டநாட்டுத் திருப்புலியூரில் பூர்ணமாயிருக்கும். [* கருமாணிக்க மலையென்னும் பதிகத்தின் சுவையறிக.] ... ... ... (176)

(மூ.) 177. போக்யபாகத்வரை தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்.

[திருப்புளிங்குடி, வரகுணமங்கை, ஸ்ரீவைகுண்டம் என்ற மூன்று திருப்பதிகளிலும் விளங்கும் குணம் கூறுதல்]

(ப.) 177 போக்ய பாக த்வரை—பசி கனத்தவன் அன்னம் பக்குவமாவதற்கு முன்னே பதற்றத்தாலே அணுகிவந்து நிற்பதுமிருப்பதும் கிடப்பதுமாய்ப் பதறுமாபோலே, போக்ய பூதரான ஆழ்வார்க்குப் பரமபக்தியாகிற பரிபாகம் பிறக்குமளவும் எம்பெருமானுக்குண்டான பதற்றம்.

தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்—* தெளிந்த வென்சிந்தையகங்கழியாதே * என்கிற சந்தைக்கு முன்சொன்ன * புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை யிருந்து வைகுந்தத் துண்ணின்று * என்று, கிடப்பது இருப்பது நிற்பதான திருப்புளிங்குடி, வரகுணமங்கை, ஸ்ரீவைகுண்டம் ஆகிற திருப்பதிகள் மூன்றிலும் விளங்கக்காணலாம். ... ... .... . .... (177)

(தா.) 177. உலகில் கனத்த பசியை யுடையவன் அன்னம் பக்குவமாவதற்கு முன்னே பதற்றத்தினால் அதன் அருகே வந்து கிடப்பது இருப்பது நிற்பதாமாப்போலே, போக்யபூதரான ஆழ்வார்க்குப் பரமபக்தியாகிற பாகம் பிறக்குமளவும் அநுபோக்தாவான எம்பெருமானுக் குண்டான பதற்றம் திருப்புளிங்குடியிலும் வரகுணமங்கையிலும் ஸ்ரீ வைகுண்டத்திலும் விளங்கும். [இம்மூன்று திருப்பதிகளிலும் நின்றுமிருந்தும் கிடந்தும் போருவதற்கு இதுவே கருத்து என்கை] .. (177)

(மூ.) 178. போகத்தில் தட்டுமாறுஞ் சீலம் காட்கரையிலே கரையழிக்கும்.

[திருக்காட்கரையில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப.) 178. போகத்தில் தட்டுமாறும் சீலம்—கீழ்ச்சொன்னபடி போக்யரான ஆழ்வாருடனே கலந்து பரிமாறுமிடத்தில் * வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற வென்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான். காரொக்குங் காட்கரையப்பன் கடியனே * என்னும்படி மாறுடிப் பரிமாறும் சீல குணமானது.

காட்கரையிலே கரையழிக்கும்—* திருக்காட்கரை மருவிய மாயன் தன் மாயம் நினைதொறே—உருகுமால் நெஞ்சம் * என்று உருகிப்பேசின திருக்காட்கரையிலே கரையழியப் பெருகும். .... ... .... .. (178)

(தா.) 178 இப்படி போக்யபூதரான ஆழ்வாருடனே கலந்து பரிமாறுமிடத்தில் "ஆட்கொள்வானொத்து என்னுயிருண்ட மாயன்" என்றும், "வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற என்னை யொழிய என்னில் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான், காரொக்கும் காட்கரையப்பன்

கடியனே' என்றும் சொல்லும்படி அத்தலை இத்தலையாய் சேஷசேஷிபாவம் மாருடிப் பரிமாறும் சீலகுணம் திருக்காட்கரையில் கரையழியப் பெருகும். [* உருகுமால் நெஞ்சமென்கிற பதிகம் காண்க] .. ... .. (178)

(மூ) 179. மஹாத்மாக்கள் விரஹம் ஸஹியாத மார்த்தவம் வளத்தின்களத்தே கூடு பூரிக்கும்.

[திருமூழிக்களத்தில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப) 179. மஹாத்மாக்கள் விரஹம் ஸஹியாத மார்த்தவம்—ஸ்தோத்ர ரத்னத்தில் * ஸக்ருத் த்வாதாகார விலோகநாசயா த்ருணீ க்ருதா நுத்தம புக்தி முக்திபி:, மஹாத்மபி: * என்று சொல்லப்பட்ட மஹாத்மாக்களின் பிரிவைப் பொருமலிருக்கையாகிற ஸௌகுமார்ய குணம் * தமரோடங் குறைவார்க்கு * என்னும்படியே திருமூழிக்களத்திலே ஸம்ருத்தமாயிருக்கும். ... ... ... (179)

(தா.) 179. பாகவதர்களை க்ஷணகாலமும் விட்டுப்பிரிந்திருக்கமாட்டாமையாகிற ஸௌகுமார்யம் திருமூழிக்களத்தில் பூரணம். [* எங்கானலகங்கழிவாயில், * தமரோடங்குறைவார்க்கு * என்ற பாசுரம் உயிரானது.] ... ... (179)

(மூ) 180. பிரிந்த துன்பக்கடல்கடத்தும் விஷ்ணுபோதாந்ருசம்ஸ்யம் நாவாயிலே நிழலெழும்.

[திருநாவாயில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப) பிரிந்த துன்பக்கடல் கடத்தும்—திருநாவாய்ப் பதிகமாகிய * அறுக்கும் வினைப்பதிகத்திற்குக் கீழ்ப்பதிகமாகிய * எங்கானலகங்கழிவாய் * என்னும் பதிகத்தில் நடந்த விச்லேஷவ்யஸனமாகிற துன்பக்கடலைக் கடத்துவிக்கின்ற,

விஷ்ணுபோத ஆந்ருசம்ஸ்யம்—* விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம் * என்று நாவாயாக [படகாக] ச்சொல்லப்பட்ட எம்பெருமானுடைய க்ருபா குணமானது,

நாவாயிலே நிழலெழும்—திருநாவாயிலே விளங்கும். ... (180)

(தா) 180. மேன்மேலும் ஆள்விட வேண்டும்படி தன்னைப் பிரிகையால் வந்த துக்க ஸாகரத்தைக் கடத்தும் விஷ்ணுபோதமான அவனுடைய பரமக்ருபை திருநாவாயிலே ஊரின் பெயர்கொண்டே அறியக்கிடக்கும் [நாவா யென்பதற்குப் படகு என்றன்றோ பொருள்.] ... ... .... (180)

(மூ.) 181. சரண்யமுகுந்தத்வம் உத்பலாவதகத்திலே ப்ரஸித்தம்.

[திருக்கண்ணபுரத்தில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப) 181. சரண்ய முகுந்தத்வம்—* சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் * என்கிற பாசுரப்படியே சரண்யனுடைய மோக்ஷப்ரதத்வமாகிற மஹாகுணமானது,

உத்பலாவதகத்திலே ப்ரஸித்தம்—உத்பலாவதகமென்கிற விமானத்தில் நிற்கிற நிலையிலே [திருக்கண்ணபுரத்திலே] ப்ரஸித்தமாயிருக்கும். .... (181)

(தா.) 181. திருக்கண்ணபுரத்தில் சரண்யனுடைய முக்திபூமிப்ரதத்வம் விளங்கும். [* மாலை நண்ணியில் * மரணமானல் வைகுந்தங் கொடுக்கும்பிரான் என்ற பாசுரம் உயிரானது] .... ... ... ... (181)

(மூ.) 182. மார்க்கபந்துசைத்யம் மோஹனத்தே மடுவிடும்.

[திருமோகூரில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப.) 182. மார்க்கபந்து சைத்யம்—அர்ச்சிராதி மார்க்கத்திற்குத் துணைவனாகக் கொள்ளப்பட்டு வழித்துணையான காளமேகப் பெருமாளுடைய ஸாம்ஸாரிக ஸகல தாபஹரத்வமாகிற குணமானது,

மோஹனத்தே மடுவிடும்—மோஹநக்ஷேத்ரமாகிய திருமோகூரிலே நிறைந்து நிலைபெற்றிருக்கும். ... ... ... ... (182)

(தா.) 182. திருமோகூரில், வழித்துணைவனான எம்பெருமானுடைய சீதளத்வம் என்னும் குணம் விளங்கும். (இவ்வூர்த் திருப்பதிகமான * தாளதாமரையில், "தயரதன் பெற்ற மரதகமணித்தடம்" என்றும் * அவனடி நிழல் தடம்* என்றுமுள்ள பாசுரங்கள் உயிரானவை. தேவர்களுக்கு அமுதமளிக்கும் ஸமயத்தில் அசுரர்களை மோஹிப்பித்த அபதானத்தோடே ஸேவை ஸாதிக்கும் இத்தலத்திற்கு மோஹனக்ஷேத்திரமென்று புராண ப்ரஸித்தி. மோகூரென்பது தமிழ் வழக்கு.)

(மூ.) 183. ஸஸைந்யபுத்ரசிஷ்ய ஸாத்யஸித்தபூஸுரார்ச்சனத்துக்கு முகநாபி பாதங்களை த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்தசயநத்திலே வ்யக்தம்.

[திருவனந்தபுரத்தில் விளங்கும் குணம் கூறுதல்]

[ஸஸைந்ய ஸாத்ய அர்ச்சநத்துக்கு முகத்தைக் காட்டும், ஸபுத்ர ஸித்த அர்ச்சநத்துக்கு நாபியைக்காட்டும், ஸசிஷ்யபூஸுர அர்ச்சநத்துக்கு பாதத்தைக் காட்டும் என்று பிரிந்து யோஜிப்பது]

(ப.) 183. ஸஸைந்ய ஸாத்ய அர்ச்சநத்துக்கு முகத்தை—* அனந்தபுரத்து அமரர் கோனர்ச்சிக்கின்று அங்கு அகப்பணி செய்வர் விண்ணோர் * என்ற பாசுரத்தில் 'அமரர்கோன்' என்று ஸேனை முதலியாராகிற நித்யஸூரித்தலைவர் வந்து அர்ச்சிக்கின்றமை சொல்லுகையாலே, தம்முடைய ஸேனைகளோடு கூடினவராயும் * யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா: * என்று ஸாத்யராயும் சொல்லப்பட்ட ஸேநாபதியாழ்வானுடைய அர்ச்சனைக்காகத் திருமுகமண்டலத்தையும்,

ஸபுத்ரஸித்த அர்ச்சநத்துக்கு நாபியை—* அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதிசேர் அனந்தபுரத்து * என்று பிரமன் தன்னுடைய புத்திரர்களான அமரர்களோடு வந்து சேர்வதாகச் சொல்லுகையாலே ஸபுத்ரனும், ஸித்தகோடியில் சேர்ந்தவனுமான பிரமனுடைய அர்ச்சனைக்காகத் திருநாபியையும்,

ஸசிஷ்ய பூஸுர அர்ச்சநத்துக்குப் பாதத்தை—* படமுடையரவிற் பள்ளி பயின்றவன் பாதங்காண நடமினோ நமர்களுள்ளீர் * என்று இவருபதேசம் கேட்ட சிஷ்யர்களோடே கூடின நிலத்தேவர்களின் அர்ச்சனைக்காகத் திருவடியையும், [ஆக, முகநாபி பாதங்களை]

த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம்—திருவாசல்கள் மூன்றினாலும் காட்டுகிற ஸாம்ய குணம் [அதாவது, நித்யஸூரிகள், ப்ரஹ்மாதி தேவர்கள் இந்நிலத்தவர்கள் என்று வாசிபாராத ஸாம்யகுணமானது],

அனந்தசயனத்திலே வ்யக்தம்—திருவனந்தபுரத்தில் கண்வளருகிற ப்ரகாரத்திலே வ்யக்தமாயிருக்கும். ... ... ... ... (183)

(தா.) 183. அனந்தசயனத்தில், நித்யஸூரிகள் ஸம்ஸாரிகளென்று வாசி பாராத ஸாம்யகுணம் விளங்கும். இத்தலம் திருமுகமும் திருநாபியும் திருவடிகளுமாகிற விவற்றைத் திருவாசல் மூன்றினால் காட்டும் தலமாதலும், இத் திருப்பதியில் மூன்று வகைப்பட்ட அதிகாரிகள் வந்து பணிவதாக ஆழ்வார் அருளிச்செய்திருக்கிறார். எங்ஙனே யென்னில்; "அனந்தபுரத்து, அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்ககப்பணி செய்வர் விண்ணோர்" என்ற பாசுரத்தினால் நித்யஸூரிகளில் தலைவரான ஸேனைமுதலியார் வந்து அர்ச்சிக்கின்றாரென்பது சொல்லப்பட்டது; அவர்க்காகத் திருமுகமண்டல வாசல், அந்தப்பாசுரத்திலேயே "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதி" என்கையாலே பிரமன் முதலான தேவர்களும் வந்து அர்ச்சிக்கின்றாரென்பது காட்டப்பட்டது. அவர்கட்காகத் திருநாபிக்கமலவாசல். "படமுடையரவில் பள்ளிபயின்றவன் பாதங்காண நடமினோ நமர்களுள்ளீர்" என்று இவ்வுலகத்தவர்கட்கும் ப்ராப்யமென்பது சொல்லப்பட்டது. இவர்கட்காகத் திருவடிவாசல்; * பாதங்காண நடப்பார்க்குப் பாதவாசல். உந்திமேல் வந்துதித்த நான்முகனுக்கு நாபிவாசல். முகம் நோக்கிப் பேசுமவனான ஸேனாபதியாழ்வானுக்குத் திருமுக வாசல்—என்கிற பொருத்தமும் உணர்க.] ... ... (183)

(மூ.) 184. மோக்ஷதானத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்.

[திருவாட்டாற்றில் விளங்கும் குணம் கூறுதல்]

(ப.) 184. மோக்ஷதானத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம்—* ஆழியானருள் தருவானமைகின்றான் அது நமது விதிவகையே * என்றும் * இன்று விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான் விதிவகையே * என்றும் சொல்லும்படி, எம்பெருமான் மோக்ஷப்ரதானம் பண்ணுமளவில் அவர்கள் விதிக்கிறபடி செய்வானாய் நிற்கிற ஆச்ரித பாரதந்திரிய குணமானது * மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் * என்று வளம்மிக்க நதியாகச் சொல்லப்பட்ட திருவாட்டாற்றிலே கரையழியப் பெருகும்.

(தா.) 184. திருவாட்டாற்றில், கீழே விவரித்தபடி ஸர்வஸமனான எம்பெருமான் அடியவர்களுக்கு மோக்ஷம் தருமளவில் அவர்கள் விதித்தபடி செய்வானாய் நிற்கிற ஆச்ரித பாரதந்திரியம் என்னும் குணம் விளங்கும் [அருள்பெறுவாரடியாரில் * ஆழியானருள் தருவானமைகின்றான் அது நமது விதிவகையே * இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே * என்ற பாசுரங்கள் உயிரானவை.] ... ... ... ... (184)

(மூ.) 185. த்யாஜ்யதேஹவ்யாமோஹம் மருள்கள்கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்.

[திருமாலிருஞ்சோலையில் திகழும் திருக்குணம் கூறுதல்]

(ப.) 185. த்யாஜ்ய தேஹவ்யாமோஹம்—முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யமான தேஹத்தில் எம்பெருமானுக்குண்டான வியாமோஹம் [அதாவது, * மங்கவொட்

டுன் மாமாயை * என்று கால்கட்டி விடுவித்துக்கொள்ள வேண்டும்படி அவனுக் குண்டான வ்யாமோஹமானது],

மருள்கள்கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்—* மருள்கள் கடியும் மணி மலை திருமாலிருஞ்சோலை மலையே * மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை * என் னப்பட்ட தெற்குத் திருமலையிலே ஸம்ருத்தம். .... ... (185)

(தா.) 185. திருமாலிருஞ்சோலையில், மஹிஷியின் உச்சிஷ்டத்தை விரும் பும் ராஜகுமாரனைப் போலே முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யமான தேஹத்திலே எம்பெருமானுக்குண்டான வ்யாமோஹசாலித்வம் விளங்கும். "திருமாலிருஞ் சோலை வஞ்சக் கள்வன் மாமாயன்" என்கிறபடியே வஞ்சக் கள்வனாய் * நெஞ்சு முயிரு முள்கலந்தவனாய், 'மாயவாக்கை யிதனுள் புக்கு" என்கிறபடியே தேஹ தோஷம் பாராமல் உள்ளே புகுந்தவனாய், "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற் கடலே என் தலையே" என்ற பாசுரத்தின்படியே உகந்தருளின நிலங்களெல்லா வற்றிலும் பண்ணும் விருப்பத்தை இதில் [தேஹத்தில்] ஏகதேசத்திலே பண்ணி "மங்கவொட்டு உன் மாமாயை" என்று கால்கட்டி விடுவிக்க வேண்டும்படி அவ னுக்குண்டான வ்யாமோஹம் "த்யாஜ்யதேஹ வ்யாமோஹம்" என்கிற பதத்தினால் காட்டப்பட்டது. இது திருமாலிருஞ்சோலையில் விளங்கும் .... (185)

(மூ.) 186. அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம் பெருநகரிலே பேர்பெற்றது.

[திருப்பேர் நகரில் விளங்கும் குணம் கூறித் தலைக்கட்டுதல்]

(ப.) 186. அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம்—தம்மை யங்கீகரிக் கைக்குடலான ஸுக்ருதலேசமில்லாதாரையும் மடிமாங்காயிடுமாபோலே 'என்னூ ரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய்' என்றாற்போன்ற அஜ்ஞாத ஸுக்ருதங் களை யேறிட்டும் அங்கீகரிக்கைக்கு இடம் பார்க்குமவனுடைய ஸ்வாமித்வகுணம் * திருமாலிருஞ் சோலைமலை யென்றேன் என்னத் திருமால்வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான் * என்னும்படியே திருப்பேர்நகரில் பெருமைபெற்றது. (186)

(தா) 186. (அப்பக்குடத்தான் ஸந்நிதி யென்கிற) திருப்பேர் நகரில் தம்மை அங்கீகரிக்கைக் குடலான ஸுக்ருத லேசமில்லாதாரையும் மடிமாங்கா யிடுமாபோலே 'என்னூரைச் சொன்னாய்' 'என் பேரைச்சொன்னாய்' என்றாற்போன்ற அஜ்ஞாதஸுக்ருதங்களை ஆரோபித்தும் அங்கீகரிக்கைக்கு இடம்பார்க்குமவனு டைய ஸ்வாமித்வம் விளங்கும். ["திருமாலிருஞ்சோலைமலை யென்றேன், என்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்" என்ற பாசுரத்தில் நோக்கு.]

(மூ.) 187. இவற்றில் ப்ராவண்யம் இவன்பரமேயென்னவுண்டாய் ஷோடசகலா பூர்ணமான சந்த்ரமண்டலம்போலே பதினாறு திருநக்ஷத்ரம் நிரம்பின வாறே தேவபோக்யமானவதில் அம்ருதம் போலன்றிக்கே என்னாத் தமிழரிசைகாரர் முதற்பத்தர் வானவரென்னம்மான்பார்பரவென்னும்படி ஸேச்வரவிபூதி போக்யமான பாலோடமுதன்ன மென்மொழி முகஞ்செய்தது.

[இத்திருப்பதிகளில் ப்ராவண்யம் ஆழ்வார்க்கு உண்டானது எப்போது? இவர் தாம் ஸ்ரீஸூக்தியருளிச்செய்யத் தொடங்கினது எத்தனை பிராயத்திலே? இவரது ஸ்ரீஸூக்திகளுக்கு போக்தாக்கள் யாவர்? போக்யதை யிருக்கும்படி யாது? என்னும் வினாக்களுக்கு விடையிறுத்தல்]

(ப.) 187. இவற்றில் ப்ராவண்யம்—கீழ்க்கூறிய திவ்யதேசங்களில் ஊற்றம், இவள்பரமே என்ன வுண்டாய்—* மூலையோ முழுமுற்றும் போந்தில ... .. ...... பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகம் இவள்பரமே * (திருவிருத்தம்—61) என்னும்படி பருவம் நிரம்புவதற்கு முன்னே யுண்டாய்,

ஷோடசகலா பூர்ணமான சந்த்ர மண்டலம் போலே—பதினாறு கலைகளும் நிரம்பின சந்திர மண்டலம் போலே,

பதினாறு திருநக்ஷத்ரம் நிரம்பினவாறே—பதினாறு பிராயம் நிரம்பினவளவிலே,

தேவபோக்யமான அதில் அம்ருதம் போலன்றிக்கே—தேவர்களுக்குமட்டும் போக்யமானதுபற்றி போக்தாக்களின் நியமத்தையுடைத்தான அந்த சந்திரமண்டலத்திலமிருதம்போலல்லாமல்,

என்னா—* என்னாவிலின் கவி * என்றும்,

தமிழர் இசைகாரர்—* பாலேய்தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம் * என்றும்,

முதற் பத்தர்—* தூமுதற் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன * என்றும்,

வானவர்—*கேட்டு ஆரார்வானவர்கள்செவிக்கினியசெஞ்சொல்லே* என்றும்,

என்னம்மான்—* பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடித் தென்னாவென்னு மென்னம்மான் திருமாலிருஞ் சோலையானே * என்றும்,

பார்பரவு என்னும்படி—* பார்பரவின்கவிபாடும் * என்றும் சொல்லுகிறபடியே,

ஸேச்வர விபூதி போக்யமான—தாம் பிறர் என்கிற வாசியும், ஸூரிகள் ஸம்ஸாரிகளென்கிற வாசியும், ஈசேசிதவ்ய விபாபகமுமில்லாமல் ஈச்வரனோடுகூட உபய விபூதியும் புஜிக்கைக்கு யோக்யமாய்,

பாலோடமுதன்ன மென்மொழி—* பாலோடமுதன்னவாயிரம் * அமுதமென்மொழி * என்கிறபடியே பாலும் அமுதமும் கலந்தாற்போலேயிருக்கிற மிருதுவான சொல் தொடர்,

முகஞ்செய்தது—இவர் திருமுகத்தினின்று வெளிவந்ததாயிற்று. ... (187)

(தா.) 187. (இத்திருப்பதிகளில் ப்ராவண்யம் ஆழ்வார்க்கு உண்டானது எப்போது? இவர்தாம் ஸ்ரீஸூக்தி யருளிச்செய்யத் தொடங்கினது எத்தனை பிராயத்திலே? இவர் ஸ்ரீஸூக்திகளுக்கு போக்தாக்கள் யார் யார்? போக்யதை யிருக்கும்படி யாது? என்னும் வினாக்களுக்கு விடையிறுத்தல்.) கீழ்க்கூறிய அர்ச்சாவதார ஸ்தலங்களில் ஊற்றம்—பருவம் நிரம்புவதற்கு முன்னே [மிக்க இளம்பிராயத்திலே] உண்டாயிற்று. இனி ப்ரபந்தமருளிச்செய்யத் தொடங்கினது பதினாறு கலைகளாலும் பரிபூர்ணமான சந்திரமண்டலம் போலே பதினாறு திருநக்ஷத்திரம் நிரம்பின பின்பு. அந்த சந்திரமண்டலத்தில் அமிருதம் தேவர்களுக்கே போக்யமானமையாலே

போக்தாக்களில் நியமமுடைத்தாயிருப்பதுபோலன்றிக்கே இதற்கு அநுபோக்தாக்கள் அருளிச்செய்கிற ஆழ்வார் தாமும், கற்பவர்களான ஸம்ஸாரிகளும், கேட்பவர்களான நித்யஸூரிகளும், பாட்டுண்பவனான ஸர்வேச்வரனுமாக உபயவிபூதியும் உபயவிபூதிநாதனும், [முகஞ்செய்தது—முகத்தில் நின்றும் வெளிவந்தது.] (187)

**(மூ.) 188. நீர்பால் நெய்யமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே பரபக்த்யாதிமய ஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரை மிடைந்து மொழிபட்டு அவாவிலந்தாதியென்று பேர்பெற்றது.**

**[இங்ஙனே நாம் அவனைக் கவிபாடவேணுமென்று ஆழ்வார் ஸங்கல்பித்திருந்து பாடினாரல்லர் என்று நிருபித்தல்]**

(ப.) 188. **நீர் பால் நெய் அமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே**—நீர் பாலாய், பால் நெய்யாய், நெய் அம்ருதமாய் அத்தாலே நிறைந்ததோர் ஏரி தரிக்க மாட்டாமல் நெளித்து உடையுமாபோலே,

**பரபக்த்யாதிமய ஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரை**—எம்பெருமானருளின ஞானம் பரபக்திரூபமாய், அந்த பரபக்தி பரஜ்ஞானமாய், அந்த பரஜ்ஞானம் பரமபக்தியாய், இப்படி நிறைந்த அமுதக்கடலானது * அபரிமிதாச்யுத பக்தி தத்வஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹ சுபைர் வசோபி: * என்கிற கணக்கிலே ஆச்ரயமழியாமல் பரிவாஹாபேக்ஷை பிறந்து * நிமியும் வாயொடு கண்கள் நீர் மல்க * என்கிறபடியே நெளிகிற வாய் கரையாலே,

**மிடைந்து மொழிபட்டு**—*மிடைந்த சொல்தொடை * என்கிறபடியே சொற்கள் தான் என்னைக்கொள் என்னைக்கொள் என்று மேல் விழுகையாலே நெருக்கிக் கொண்டு * மொழிபட்டோடுங்கவியமுதம் * என்கிறபடியே ஸ்ரீஸூக்திரூபமாய் வெள்ளமிட்டு,

**அவாவிலந்தாதியென்று பேர்பெற்றது**—* அவாவிலந்தாதிகளாலிவை யாயிரமும் * என்று பக்தி பலாத்காரத்தாலே பிறந்தவந்தாதியான ஆயிரமென்று நிருபகமாம்படியாயிற்று. ... ... ... ... ... (188)

(ஸா.) 188. (திருவாய்மொழி அவதரித்த க்ரமம் வெளியிடப்படுகிறது.) நீர் பாலாய், பால் நெய்யாய், நெய் அம்ருதமாய் அத்தாலே நிரம்பின ஓர் ஏரியாக ஆழ்வாரைக் கொள்ளவேண்டும். "மயர்வற மதிநல மருளினன்" என்கிற விடத்தில் கர்மஜ்ஞாநாநுக்ருஹீதையான பக்தியின் ஸ்தானத்திலே பகவத் ப்ரஸாதமாய் அது அடியாகப் பரபக்தி தொடங்கிப் பிறக்கையாலே, ஞானம் முதலிலே பரபக்தி ரூபமாய், பரபக்தியானது பரஜ்ஞாநமாய், பரஜ்ஞாநமானது பரமபக்தியாய் முதிர்ந்த படியை நோக்குங்கால், நீர்பால் நெய்யமுதமாய் நிரம்பின ஏரியாகவே ஆழ்வார் கொள்ளத் தகுந்தவராவர். [நீரின் ஸ்தானத்தில் ஞானம்; பாலின் ஸ்தானத்தில் பரபக்தி; நெய்யின் ஸ்தானத்தில் பரஜ்ஞானம்; அமுதின் ஸ்தானத்திலே பரமபக்தி என்று காண்க.] நிரம்பின ஏரி தரித்திருக்கமாட்டாமல் நெளித்து உடைந்துபோம்; அதுபோலவே ஆழ்வாராகிற ஏரியும் உடையத்தொடங்கிற்று. ஆச்ரயம் அழியாமைக்காகப் பரீவாஹாபேக்ஷை பிறந்து வாய்கரை நெளியத்தொடங்கி, அங்ஙனம் நெளிகிற வாய் கரையாலே அருளிச்செயல் அவதரிக்க ஆரம்பித்து, சொற்களா

னவை நாம் இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோமாக வேணுமென்று, என்னைக் கொள் என்னைக்கொள் என்று மேல் விழுகையாலே "மிடைந்த சொல் தொடையாயிரம்" என்று ஆழ்வார் தாமே அருளிச் செய்யும்படியாகி உள்ளே தேங்கியிருக்கின்ற அம்ருதவெள்ளமே ஸ்ரீஸூக்தி ரூபமாகப் பெருக்காறெடுத்து இங்ஙனம் பரபக்தி முதலிய மூன்று நிலைமையைப்பெற்ற பக்தியினால் தூண்டப்பட்டுத் திருவாய்மொழி அவதரித்ததென்பது "அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும" என்ற பாசுரத்தினால் விளங்கும். ஆகவே பக்திபலாத்காரத்தாலே பிறந்த அந்தாதியான ஆயிரமென்று நிருபகமாம்படியாயிற்று. (இத்தால் ஆழ்வார் நாம் அவனைக் கவி பாடவேணுமென்று ஸங்கல்பித்திருந்து பாடினாரல்லர்; பக்தி பலாத்காரத்தாலே அவதரித்த தத்தனை என்று நிருபித்ததாயிற்று.) ... (188)

**(மூ.) 189. மனஞ்செய் எல்லையில் ஞான வின்பத்தை நின்மலமாக வைத்தவர் ஞானப்பிரானை ஞானத்துவைம்மி னென்றவிது, தத்வவிவேக நித்யத்வா நித்யத்வ நியந்த்ருத்வ ஸௌலப்ய ஸாம்யாஹங்கார இந்த்ரிய தோஷபல மநஃப்ராதாந்ய கரணநியமந ஸுக்ருதிபேத தேவாஸுர விபாக விபூதியோக விச்வரூப தர்சந ஸாங்கபக்தி ப்ரபத்தி த்வைவித்யாதிகளாலே அன்றேதிய கீதாஸமமென்னும்.**

**[திருவாய்மொழி கீதோபநிஷத்தோடொக்குமென்று பொருளொற்றுமைகளினால் நிரூபித்தல்]**

(ப.) 189. **மனஞ்செய் எல்லையில் ஞானவின்பத்தை நின்மலமாக வைத்தவர்—** * நினைந்த வெல்லாப் பொருள்களுக்கும் வித்தாய் முதலிற் சிதையாமே மனஞ்செய் ஞானத்துன் பெருமை * என்றும், * எல்லையில் ஞானத்தன் * என்றுஞ் சொல்லுகிற படியே அபரிச்சேத்யமான ஸங்கல்பரூபஜ்ஞானத்தையுடையவனாய், * சூழ்ந்த தனிற் பெரிய சுடர் ஞானவின்பம் * என்கிறபடியே ஜ்ஞாநாநந்த லக்ஷணமாயிருக்கிற ஸ்வரூபத்தையுடையனான ஸர்வேச்வரனை * யானெனதாவி யுள்ளே நிறைந்த ஞானமூர்த்தியாயை நின்மலமாக வைத்து * என்கிறபடியே ஸாக்ஷாத்கரித்த வாழ்வார்,

**ஞானப்பிரானை ஞானத்து வைம்மின்என்ற விது—** * இருங்கற்பகஞ் சேர் வானத்தவர்க்கு மல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும் ஞானப்பிரானை யல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே * என்று முதற் பிரபந்தமான திருவிருத்தத்திலருளிச் செய்த விஷயத்தை உபாயமாகப் பற்றச் சொல்லுகிறவளவில் * திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்து வைம்மின் உம்மையுய்யக்கொண்டு போகுறில் * என்று ஸம்ஸாரிகளைக் குறித்து உபதேசித்த இப்பிரபந்தம், (இந்த வாக்யங்களிலெடுத்த சந்தைகளெல்லாம் ஞானம் பொலிந்திருக்குமழகு காண்க; திருவாய்மொழி கேவலம் பக்தி சாஸ்த்ரமேயன்று, தத்வஜ்ஞாந ஸாதந சாஸ்திரமுமென்று காட்டுதற்காக)

**அன்றேதிய கீதாஸமமென்னும்—** * மாயனன்றோதிய வாக்கு * என்கிற **கீதை**யோடொக்கச் சொல்லப்படும்; (எதனாலே யென்னில்;)

**தத்வவிவேக .... ஸாங்கபக்திப்ரபத்தித்வைவித்யாதிகளாலே;—தத்வவிவேக—**பரமாத்**மாவிற்காட்டில் ஜீவாத்மாவுக்குண்டான பேதம். ஜீவாத்மாக்களுக்குள் பரஸ்பர பேதம், சேதநாசேதநபேதம் ஆகிற தத்வவிவேக**மென்ன,

**நித்யத்வ அநித்யத்வ**—ஆத்மாவின் நித்யத்வமும் தேஹத்தின் அநித்யத்வமு மென்ன,

**நியந்த்ருத்வ**—ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் நடத்திக்கொண்டு போருகையாகிற நியாமகத்வமென்ன,

**ஸௌலப்ய**—பக்தர்களின் நெஞ்சிலே ப்ரகாசிக்கையும் அவதாரங்கள் பண்ணி எளியனாகையு மாகிற ஸௌலப்யமென்ன,

ஸாம்ய—ஆச்ரயிக்குமளவில் எல்லார்க்கும் ஸமனாயிருக்கை யென்ன,

அஹங்கார தோஷ—அஹங்காரத்தினுடைய தோஷ மென்ன,

**இந்த்ரியபல**—இந்த்ரியங்களின் ப்ராபல்ய மென்ன,

**மந:ப்ராதாந்ய**—மற்றை யிந்த்ரியங்களிற் காட்டில் மநஸ்ஸினுடைய ப்ராதாந்யமென்ன,

**கரண நியமந**—கரணக்ராமங்களை யடக்குவதென்ன,

**ஸுக்ருதிபேத**—* சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந * என்று ஸுக்ருதிகளின் பேதமென்ன,

**தேவாஸுர விபாக**—தேவப்ரக்ருதிகளையும் ஆஸுரப்ரக்ருதிகளையும் பிரித்துக் காட்டுகையென்ன,

**விபூதி யோக**—ஐச்வர்யப்பரப்பென்ன,

**விச்வரூபதர்சந**—விச்வரூபக் காட்சியென்ன,

**ஸாங்க பக்தி**—அங்கங்களோடு கூடின பக்தி யென்ன.

**ப்ரபத்தித்வைவித்ய**—அங்கப்ரபத்தி ஸ்வதந்த்ர ப்ரபத்தி என்கிற ப்ரபத்தியின் இரண்டு பாகுபாடுகளென்ன,

**ஆதிகளாலே**—மற்றும் அவதார ரஹஸ்ய வைபவம் முதலானவை யென்ன, ஆகிய இவற்றாலே,

(அன்றேதிய கீதாஸமமென்னும்)

[மேலே குறித்த விஷயங்களுக்குச் சார்பாக கீதாச்லோகங்களும் திருவாய் மொழிச் சந்தைகளும் விரிவுரையில் காணத்தக்கன.] ... ... (189)

(தா.) 189. (திருவாய்மொழியின் பொருள்களை இனி விரிவாக வெளியிடத் திருவுள்ளம்பற்றி முந்துறமுன்னம்—பகவத் தத்வத்தைக் கையிலங்கு நெல்லிக் கனியாக ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உஜ்ஜீவனமான அர்த்த விசேஷங்களை உபதேசம் பண்ணினதான இத்திருவாய்மொழியானது ப்ரதிபாத்யங்களான அர்த்தங்களின் ஸாம்யத்தாலே கீதோபநிஷத்துக்கு ஸமமாகச் சொல்லப் படுமென்கிறது.) ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம், ஜீவர்களுக்குள் பரஸ்பர பேதம், அசித்திற்காட்டில் சித்துக்குண்டானவாசி, ஆத்மாக்களின் நித்யத்வம் தேஹங்களின் அநித்யத்வம், ஸர்வேச்வரனுடைய நியாமகத்வம் [அதாவது ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் பண்ணுவித்தல்], அவனுடைய ஸௌலப்யம், ஆச்ரயிக்குமிடத்தில் ஸர்வஸமனாயிருக்குந் தன்மை. அஹங்கார தோஷம், இந்த்ரியப்ராபல்யம், மநஸ்ஸினுடைய ப்ராதாந்யம், மநோவாக்காயங்களை அடக்கவேண்டியதன் அவசியம், நால்வகைப்பட்ட ஸுக்ருதிகளின் பேதம். தேவாஸுரவிபாகம், விபூதியோகம், விச்வரூபதர்சனம் ஸாங்கபக்தி, அங்கப்ரபத்தி

ஸ்வதந்த்ரப்ரபத்திகளாகிற இரண்டுவகையான ப்ரபத்தி ஆகிய இவை கீதையில் ஆங்காங்கு ச்லோகங்களினுல் சொல்லப்பட்டிருப்பதுபோல, திருவாய்மொழியிலும் ஆங்காங்குப் பல பாசுரங்களினுல் சொல்லப்பட்டிருக்கையாலே இந்த அர்த்தஸாம்யத்தைக்கொண்டு கீதையோடொக்கச் சொல்லப்படும் திருவாய்மொழி. ... (189)

(மூ.) 190. அது தத்வோபதேசம்; இது தத்வதர்சி வசநம்.

[கீதையிற் காட்டில் திருவாய்மொழிக்குண்டான ஏற்றம் கூறுதல்]

(ப.) 190. அது தத்வோபதேசம்—அந்த கீதையானது * தத்வமேகோ மஹாயோகீ ஹரிர் நாராயண: பர: * என்று தத்வமாகச் சொல்லப்பட்ட ஸர்வேச்வரன் தானே உபதேசித்தது;

இது தத்வதர்சிவசநம்—இத்திருவாய்மொழியோ வென்னில், * தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா, உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந: * என்று அந்த கீதையில்தானே கொண்டாடப்பட்ட தத்வதர்சிகளில் தலைவரான ஆழ்வாருடைய அருளிச்செயல், [தன் பெருமையைத் தானே சொல்லப்பிறந்த கீதையிற் காட்டில் திருவாய்மொழிக்குண்டான ஏற்றம் இதனுல் விளங்கும்.] ... ... ... .... — (190)

(நா.) 190. (கீதையோடு திருவாய்மொழிக்குண்டான ஸாம்யம் சொல்விற்று கீழ்; கீதையிற் காட்டில் மேன்மை இனிப் பல ஹேதுக்களால் மூதலிக்கப்படுகிறது. முதலில் வக்த்ரு வைலக்ஷண்யத்தாலுண்டான ஏற்றம் நிருபிக்கப்படுகிறது) ஸாக்ஷாத் தத்வமான எம்பெருமான் தானே சொன்னது கீதை; அத் தத்துவத்தை உள்ளபடி கண்ட ஆழ்வாரருளிச் செய்தது திருவாய்மொழி. [கீதையில் *தத் வித்தி ப்ரணிபாதேந* என்கிற ச்லோகத்தில் தத்வதர்சிகளின் உபதேசத்தை எம்பெருமான் தானே புகழ்ந்து கூறியுள்ளதனுல் தத்வதர்சிகளில் தலைவரான ஆழ்வாருடைய திருவாக்கே மிகச் சிறந்ததென்பது நிர்விவாதமென்க.] ... ... (190)

(மூ.) 191. அது ஐவரை வெல்வித்துப் பதிற்றைந்திரட்டிபடச்சொன்னது.
இது நாடாகத் தோற்றுமென்று ஐயைந்து முடிப்பான் சொன்னது

[இதுவும் கீதையிற்காட்டில் ஏற்றமுரைப்பது]

(ப.) 191. அது ஐவரை வெல்வித்துப் பதிற்றைந்திரட்டி படச் சொன்னது—அந்த கீதையானது, ராஜ்யத்தை விரும்பிச் சரணம்புக்கு நின்ற பாண்டவர்களைவரையும் வெற்றி பெறுவிக்க வேண்டியும் எதிரிகளான நூற்றுவரையும் பொடிபடுத்த வேண்டியும் சொல்லப்பட்டது;

இது நாடாகத் தோற்றுமென்று ஐயைந்து முடிப்பான் சொன்னது—இத்திருவாய்மொழியோவென்னில், * தோற்றும் மடநெஞ்சமெம்பெருமான் நாரணற்கு* என்று, எம்பெருமான் பக்கலிலே எல்லோரும் நெஞ்சு பறியுண்டு போம்படியாக * முடிப்பான் சொன்னவாயிரம் * என்கிறபடியே ஸ்வரூப விரோதிகளில் ஸங்கத்தை முடிப்பதற்காகவே அருளிச் செய்யப்பட்டது. [இரண்டும் மோக்ஷ சாஸ்த்ரமேயாகிலும், அவதரிக்கிறபோது மோக்ஷார்த்தமாகவன்றிக்கே அந்யார்த்தமாக அவதரித்த கீதையிலும் காட்டில் ஏற்றமுண்டு திருவாய்மொழிக்கு என்றதாயிற்று.] (191)

(தா.) 191. கீதை அவதரித்ததற்கு எது காரணம்? திருவாய்மொழி அவதரித்ததற்கு எது காரணம்? என்று ஆராயுமளவில் அவதார ஹேது வைலக்ஷண்யத்தாலும் திருவாய்மொழியின் ஏற்றம் அறுதியிடப்படலாகும். கீதை அவதரித்ததன் காரணம் ஸுப்ரஸித்தமே; ராஜ்யத்தை விரும்பிச் சரணம் புக்குநின்ற பாண்டவர்கள் ஐவரையும் வெற்றி பெறுவிக்கவேண்டி நேர்ந்தது; அதற்காகப் பாரத யுத்தம் ஸஜ்ஜம் செய்யப்பட்டது; அப்போது அர்ஜுனன் யுத்தஞ் செய்யமாட்டேனென்று நின்றான்; அன்னவனை யுத்தத்திலே மூட்டி ஐவரை வெல்வித்து அவர்கட்கு எதிரிகளான நூற்றுவரையும் பொடிபடுத்த வேண்டியதாகநேர்ந்தது; இதற்காகவே கீதை அவதரித்தது; இனி, திருவாய்மொழி அவதரித்தபடியோவென்னில், "தோற்றோம் மட நெஞ்ச மெம்பெருமான் நாரணற்கு" என்று எம்பெருமான் பக்கலிலே எல்லோரும் நெஞ்சுபறியுண்டு போம்படியாக "முடிப்பான் சொன்னவாயிரம்" என்கிறபடியே ஸ்வரூப விரோதிகளில் ஸங்கத்தை முடிப்பதற்காகவே திருவாய்மொழி அவதரித்தது ஆக, இரண்டும் மோக்ஷ சாஸ்த்ரமேயாகிலும் அவதரிக்கிறபோது மோக்ஷார்த்தமாகவன்றிக்கே அந்யார்த்தமாக அவதரித்த கீதையிற்காட்டில் ஏற்றமுண்டு திருவாய்மொழிக்கு என்றதாயிற்று.

(மூ.) 192. அங்கு நம்பிசரணென்று தொடங்கி முடிவில் அப்ரியமென்றது;
இங்கு பரமேயென்றிழிந்து பொலிகவென்றுகந்தது,

[உபக்ரமோபஸம்ஹார ப்ரக்ரியையால் வந்த வைபவங்கூறுவது]

(ப.) 192. அங்கு நம்பி சரணென்று தொடங்கி முடிவில் அப்ரியமென்றது—கீதையில் உபதேசம் தொடங்குகிறபோது * நாந்தகமேந்திய நம்பி சரணென்று தாழ்ந்த தனஞ்சயற்காகி * என்கிறபடியே தாழ்ந்து * சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் * என்ற அர்ஜுனனுடைய அநுவர்த்தனங்கண்டு ப்ரீதியோடே ஆரம்பஞ் செய்து (உத்தர கீதையில்) * நூநம்அச்ரத்ததாநோஸி துர்மேதாச்சாஸி பாண்டவ, அபுத்த்யா யந்ந ஜாநீஷே தந்மே ஸுமஹதப்ரியம் * என்று அர்ஜுநன் பக்கல் அவதானமில்லாமை கண்டு அப்ரீதியை வெளியிட்டுத் தலைக்கட்டிற்று;

இங்கு பரமேயென்றிழிந்து பொலிகவென்றுகந்தது—திருவாய்மொழியிலோவென்னில்; (விமுகரைக் குறித்துப் பரமக்ருபையாலே உபதேசிக்கையாலே) உபதேசத் தொடக்கத்திலே * ஏபாவம் பரமே! * [ஐயோ! இது என்ன கஷ்டகாலம்! இப்பாவிகளுக்கு உபதேசம் செய்யவேண்டும்படி நமக்கு நேர்ந்ததே!] என்று நிர்வேதம் காண்கையாலே உபதேசாரம்பத்திலே அப்ரீதியாயிற்று; அவ்வுபதேசங்கேட்டு உலகமாகத் திருந்துகையாலே அங்ஙனம் திருந்தினவர்களைக் கண்டு * பொலிக பொலிக பொலிக * என்று மங்களாசாஸனம் பண்ணி * உற்றேனுகந்து பணி செய்து * என்னும்படி உகப்போடே தலைக்கட்டிற்று. [இத்தால் கீதை கேட்டு அர்ஜுநன் யுத்தஞ்செய்ய ஸன்னத்தனான வத்தனையொழிய ஸித்த தர்மபர்யந்தம் உபதேசத்தின் பலன் ஸித்திக்கப்பெறாமையாலே உபதேசம் ஸபலமாகாத அப்ரீதி அங்கு; அது ஸபலமாகப்பெற்ற ப்ரீதி இங்கு என்று இவ்வழியாலும் திருவாய்மொழிக்கு ஏற்றம் நிரூபிக்கப்பட்டதாயிற்று.] ... .... (192)

(தா.) 192. (உபக்ரமோப ஸம்ஹார ப்ரக்ரியையால் வந்த வைபவங் கூறுவது.) கீதையில் உபதேசம் தொடங்குகிறபோது "நாந்தகமேந்திய நம்பி

சரணென்று தாழ்ந்த தனஞ்சயற்காகி" என்கிறபடியே தாழ்ந்து "சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்ற அர்ஜுநனுடைய அநுவர்த்தனங் கண்டு ப்ரீதியோடே ஆரம்பம் செய்யப்பட்டது; முடிவிலோ வென்னில் அப்ரீதி யோடே தலைக்கட்டிற்று. (உத்தரகீதையில்) "நூநமச்ரத்ததாநோஸி துர்மேதாச் சாஸிபாண்டவ!, அபுத்த்யா யந்ந ஜாநீஷே தந்மே ஸுமஹதப்ரியம்" என்று அர்ஜுனன் பக்கல் அவதானமில்லாமை கண்டு இங்ஙனே பேசுகையாலே அப்ரீதி யோடே தலைக்கட்டினமை அறியத்தக்கது. திருவாய்மொழியிலோ வென்னில், விமுகரைக்குறித்துப் பரமக்ருபையாலே உபதேசிக்கையாலே உபதேசத் தொடக் கத்திலே "ஏ பாவம்! பரமே!" என்று ஆரம்பம் செய்யப்பட்டது. 'ஐயோ! இது என்ன கஷ்ட காலம்! இப்பாவிகளுக்கு உபதேசம் செய்ய வேண்டும்படி நமக்கு நேர்ந்ததே!' என்று ஆரம்பம் செய்கையாலே அப்ரீதியோடே உபதேசாரம்ப மாயிற்று. அவ்வுபதேசங்கேட்டு உலகமாகத் திருந்துகையாலே அங்ஙனம் திருந்தினவர்களைக் கண்டு "பொலிக பொலிக பொலிக" என்று மங்களாசாஸநம் பண்ணி "உற்றேனுகந்து பணி செய்து" என்னும்படி ப்ரீதியோடே தலைக்கட்டிற்று. இத்தால், கீதை கேட்டு அர்ஜுநன் யுத்தஞ் செய்ய ஸித்தனானவத்தனை யொழிய ஸித்த தர்மபர்யந்தம் உபதேசத்தின் பலன் ஸித்திக்கப் பெறுமையாலே உபதேசம் ஸபலமானதில்லை அங்கு; அது ஸபலமானது இங்கே என்றதாயிற்று. ... (192)

(மூ.) 193. அதில் ஸித்தநர்மவிதியே; இதில் வித்த்யநுஷ்டாநங்கள்.

[அர்த்த கௌரவத்தால் வந்த வைபவஞ்சொல்லுதல்]

(ப.) 193. அதில் ஸித்ததர்மவிதியே—அந்த கீதையில் * மாமேகம் சரணம் வ்ரஜ * என்று ஸித்த தர்மத்தைப் பற்றும்படியாக விதித்தவத்தனையே யுள்ளது;

இதில் வித்யனுஷ்டானங்கள்—திருவாய்மொழியிலோவென்னில்; *திருநாரணன் தான் காலம்பெறச் சிந்தித்துய்மினோ * என்று விதியும், * புகலொன்றில்லாவடி யேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்று அதன் அனுட்டானமுமாக இரண்டுமுள்ளன. ... .... ... (193)

(தா.) 193. (அர்த்த கௌரவத்தால் வந்த வைபவஞ் சொல்லுதல்.) கீதையில் "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று ஸித்த தர்மத்தைப் பற்றும்படியாக விதித்தவத்தனையே யுள்ளது; திருவாய்மொழியிலோ வென்னில்; "திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்மினோ" என்று விதியும் "அடிக்கீழமர்ந்து புகுந் தேனே" என்று அநுஷ்டாநமும் ஆக இரண்டும் காணலாம்; இத்தால், விதியொன் றையே பிரதிபாதிக்குமதான கீதையிற்காட்டில் விதி அனுட்டானம் என்ற விரண் டையும் பிரதிபாதிக்குமதான திருவாய்மொழிக்கே ஏற்றமுண்டென்றதாயிற்று.

(மூ.) 194. பகவன் ஞானவிதி பணிவகையென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்.

[கீதைக்கும் ஏற்றம் ஆழ்வாரங்ககாரத்தாலே யென்றல்]

(ப.) 194. பகவன், ஞானவிதி, பணிவகையென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்—* அந்தமிலாதி அம்பகவன் வணக்குடைத்தவநெறி வழிநின்று *

என்றும், * ஞானவிதி பிழையாமே * என்றும், * பண்டேபரமன் பணித்த பணி வகையே * என்றும் திருவாய்மொழியில் மூன்றிடங்களில் பரம வைதிகரான இவ்வாழ்வார் கீதையை ப்ரசம்ஸித்துப் பேசினதுபற்றியே அதுக்கு ஏற்றமுண்டாயிற்று. [புத்தமுநியாயும் கபிலமுனியாயும் சொன்ன பௌத்த சாஸ்த்ரமும் ஸாங்க்ய சாஸ்த்ரமும் அவன்தான் அருளிச்செய்திருந்தும் வைதிகர்கள் அவற்றைப் பரிக்ரஹியாமையாலன்றோ அவை அப்ரமாணமாயின. ... ... (194)

(தா.) 194. (கீதைக்கும் ஏற்றம் ஆழ்வாரங்கீகாரத்தாலே யென்னல்) அந்த கீதைக்கு உத்கர்ஷமும் இவரங்கீகாரத்தாலே யென்று அறியக் கடவது. எங்ஙனே யென்னில்; "அந்தமிலாதியம் பகவன் வணக்குடைத் தவநெறிவழி நின்று" என்றும், "ஞானவிதி பிழையாமே" என்றும் "பண்டே பரமன் பணித்த பணிவகையே—கண்டேன் கமல மலர்ப்பாதம்" என்றுமுள்ள பாசுரங்களில் பரம வைதிகரான இவ்வாழ்வார் அந்த கீதையை ப்ரமாணமாகக் கொள்ளுகையாலே யாயிற்று அது தனக்கும் உத்கர்ஷ முண்டாயிற்று. [புத்தமுநியாயும் கபிலமுநியாயும் சொன்ன பௌத்த சாஸ்த்ரமும் ஸாங்க்ய சாஸ்த்ரமும் அவன்தான் அருளிச் செய்ததாயிருக்கச் செய்தேயும் வைதிகர்கள் அவற்றைப் பரிக்ரஹியாமையாலே யன்றோ அவை அப்ரமாணமாயின.] ... ... ... (194)

(மூ.) 195. **வேதவேத்ய வைதிகோபதேசம் ஆவித்யரளவிலே; அஜ்ஞர் ஜ்ஞாநிகள் ஜ்ஞாநவிசேஷயுக்தர் ஸர்வஜ்ஞ னென்னுமல் இவர் திருத்துவர்.**

**[உபதேச வைசால்யத்தாலும் திருவாய்மொழி யாசிரியரான ஆழ்வார்க்கு ஏற்றமுண்டென்றல்]**

(ப.) 195. **வேத, வேத்ய, வைதிக-உபதேசம்**—வேதம் உபதேசிப்பதும் வேத வேத்யனுன எம்பெருமான் உபதேசிப்பதும் வைதிகர்களான மஹர்ஷிகள் உபதேசிப்பதும்,

**ஆவித்யரளவிலே**—* ஆவித்யஃ ப்ராக்ருதஃ ப்ரோக்தஃ * என்கிறபடியே தத்வஹித புருஷார்த்தங்களில் அறிவில்லாதவர்களான ஸம்ஸாரிகள் மாத்திரத்திலேயாம்;

**இவர்**—இவ்வாழ்வாரோ வென்னில்;

**அஜ்ஞர் ஜ்ஞானிகள் ஜ்ஞானவிசேஷயுக்தர் ஸர்வஜ்ஞனென்னுமல் திருத்துவர்**—அறிவிலிகளான ஸம்ஸாரிகளும், எம்பெருமானே உபாயமென்று கடைப்பிடித்திருக்கும் ஞானிகளும், எம்பெருமானுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளை ஸாக்ஷாத்கரித்து பகவதநுபவமே போதுபோக்காயிருக்கும் ஜ்ஞான விசேஷ யுக்தர்களும், ஸர்வஜ்ஞனை ஸர்வேச்வரனுமாக எல்லார்க்கும் வேண்டும் அம்சங்களை யுபதேசித்துத் திருத்துவர். ... ... ... ... (195)

(தா.) 195. (உபதேச வைசால்யத்தாலும் திருவாய்மொழி யாசிரியரான ஆழ்வார்க்கு ஏற்றமுண்டென்னல்) ஹிதாநுசாஸநபரமான வேதம் உபதேசிப்பதும், வேதவேத்யனுன எம்பெருமான் உபதேசிப்பதும், வைதிகர்களான மஹர்ஷிகளின் உபதேசமும் தத்வஹித புருஷார்த்தங்களில் அறிவில்லாதவர்களான ஸம்ஸாரிகள் மாத்திரத்திலேயாம்; அறிவிலிகளான ஸம்ஸாரிகளும், எம்பெருமானே உபாய

மென்று கடைப்பிடித்திருக்கும் ஞானிகளும், எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை ஸாக்ஷாத்கரித்து பகவதநுபவமே போது போக்கா யிருக்கும் ஜ்ஞாந விசேஷயுக்தர்களும், ஸர்வஜ்ஞனை ஸர்வேச்வரனும் ஆக எல்லார்க்கும் வேண்டும் அம்சங்களை யுபதேசித்து ஆழ்வார் திருத்துவர். ... ... (195)

(மூ.) 196. **அறியாதார்க்கு உய்யப்புகுமாறும் இக்கரையேறினர்க்கு இன்ப வெள்ளமும் நிலையறியாதார்க்கு ஆழங்காலும் கரையேற்றுமவனுக்கு நாலாறு மறிவிக்கவேணும்.**

**[ஆழ்வாருடைய உபதேச லக்ஷ்யபூதர்களின் விவரணம்]**

(வ.) 196. **அறியாதார்க்கு உய்யப்புகுமாறு**—எம்பெருமானைப்பற்றின ஞானம் அடியோடில்லாத ஸம்ஸாரிகளுக்கு * அஃதே உய்யப்புகுமாறு * என்று * திருநாரணன் தாளாகிறவதுவே உஜ்ஜீவநோபாயமென்று (அறிவிக்கவேணும்.)

**இக்கரையேறினர்க்கு இன்பவெள்ளம்**—* அக்கரையென்னு மனத்தக் கடலுளழுந்தி உன்பேரருளால் இக்கரையேறி யிளைத்திருந்தேனை * என்று, இங்கிருக்கச் செய்தே அக்கரையை இக்கரையென்னும்படியாக ஸம்ஸாரம் தூரஸ்தமாய் பரமபதம் ஸமீபஸ்தமாயிருக்கையாலே எம்பெருமானொருவனே உபாயமென்கிற அத்யவஸாயத்தையுடையராய் அதனாலே ஸ்வப்ரவ்ருத்தியிலே அந்வயமற்றிருப்பார்க்கு வ்யவஸாயம் குலைந்து பதற்றமுண்டாகும்படி *முகில்வண்ண வானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்ப வெள்ளத்தே * என்று ப்ராப்ய வைலக்ஷண்யம் (அறிவிக்கவேணும்.)

**நிலையறியாதார்க்கு ஆழங்காலும்**—ஆற்றிலே யிழிந்து போகா நிற்கச் செய்தே நிலைக்குமிடமும் நிலையாதவிடமும் அறியாதாரைப்போலே, ப்ராப்யத்தைப் பெற்று, அநுபவியா நிற்கச்செய்தே அதில் நிலைகொள்ளலாமிடமும் ஆழங்கால் படுத்துமிடமும் அறியாதவர்களுக்கு * செஞ்சொற்கவிகாள்! உயிர்காத்தாட் செய்மின் * என்று சீலகுணமாகிற ஆழங்கால் (அறிவிக்கவேணும்.)

**கரையேற்றுமவனுக்கு நாலாறு அறிவிக்கவேணும்**—ஸம்ஸார ஸாகரத்தைக் கடத்தி அக்கரைப்படுத்துமவனை எம்பெருமானுக்கு * மங்கவொட்டு உன் மாமாயை * என்கிற பாட்டிற்படியே இருபத்துநான்கு தத்துவமும் அறிவிக்க வேணும். [ஆக, அறிவுகேடரை உபாயத்திலே மூட்டுவர்; உபாயத்திலே ஊன்றுவாரை உபேயபரராக்குவர்; உபேயத்திலே அவகாஹிக்குமவர்களுக்கு ஆழங்கால் அறிவிப்பர்; ப்ராப்தியை உண்டாக்குமவனுக்கு த்யாஜ்யத்தை யறிவிப்பர் என்றதாயிற்று.] ... ... ... ... (196)

(தா.) 196. (ஆழ்வாருடைய உபதேச விஷயங்களின் விவரணம்) கீழ்ச் சொன்ன நான்கு வகைப்பட்ட அதிகாரிகளுக்கும் ஆழ்வார் அறிவிக்க வேண்டிய அர்த்த விசேஷங்கள் கூறப்படுகின்றன;—(1) எம்பெருமானைப்பற்றின ஞானம் அடியோடு இல்லாத ஸம்ஸாரிகளுக்கு "அஃதே உய்யப்புகுமாறு" என்று திருநாரணன் தாளாகிறவதுவே உஜ்ஜீவிப்பதற்கு உபாயமென்று ஸம்ஸார நிஸ்தரணோபாயம் உபதேசிக்கலாகிறது; (2) "அக்கரையென்னு மனத்தக்கடலுளழுந்தி யுன்பேரருளால் இக்கரையேறி யிளைத்திருந்தேனை" என்று ஸம்ஸாரக்கடலில்

அழுந்துகிறவர்களுக்கு 'எம்பெருமானொருவனே உபாயம்' என்கிற ஞானம் பிறந்தால் இங்கேயிருக்கச் செய்தே அக்கரை இக்கரை யென்னும்படி ஸம்ஸாரம் தூரத்திலுள்ளதாய் பரமபதம் ஸந்நிஹிதமாம்படி யிருக்கையாலே எம்பெருமானொருவனே உபாயமென்கிற வ்யவஸாயத்தை யுடையராய் ஸ்வப்ரவ்ருத்தியில் நிவ்ருத்தரா யிருக்கிறவர்களுக்கு அந்த வ்யவஸாயம் குலைந்து பதற்றமுண்டாம்படி "முகில்வண்ணவானத்து இமையவர் சூழவிருப்பர் பேரின்ப வெள்ளத்தே" என்னும்படியான ப்ராப்ய வைலக்ஷண்யம் உபதேசிக்கலாகிறது; (3) ஆற்றிலே யிழிந்து போகாநிற்கச் செய்தே நிலைக்குமிடமும் நிலையாதவிடமும் அறியாதாரைப் போலே, ப்ராப்யத்தைப்பெற்று அநுபவியா நிற்கச்செய்தே அதில் நிலை கொள்ளலாமிடமும் ஆழங்கால் படுத்துமிடமும் அறியாதவர்களுக்கு "செஞ்சொற்கவிகாளுயிர் காத்து ஆட்செய்மின்" என்று சீலகுணமாகிற ஆழங்கால் உபதேசிக்கலாகிறது; (4) ஸம்ஸாரஸாகரத்தைக் கடத்தி அக்கரைப்படுத்துமவனை எம்பெருமானுக்கு "மங்கவொட்டு உன்மாமாயை" என்கிற பாட்டிற்படியே இருபத்துநான்கு தத்துவமும் உபதேசிக்கலாகிறது. [ஆக, அறிவு கேடரை உபாயத்திலே மூட்டுவர்; உபாயத்திலே அவகாஹிக்குமவர்களுக்கு ஆழங்கால் அறிவிப்பர்; ப்ராப்தியை உண்டாக்குமவனுக்கு த்யாஜ்யத்தை யறிவிப்பர் என்றதாயிற்று. ... (196)

(மூ.) 197. **அவன் முனிந்தார்க்குத் தாம்கண்டது, தம்மை முனிவார்க்குத் தம் கண், காணாதது காண்பார்க்குக் கண்மாறுமிடம், ராகாந்தனுக்கு மாயாதோஷம் இவர் காட்டுமவை.**

[இதுவுமது]

(ப.) 197. **அவன் முனிந்தார்க்குத் தாம்கண்டது**—எம்பெருமானுடைய முனிவுக்கு [நிக்ரஹத்திற்கு] இலக்கான ஸம்ஸாரிகளுக்கு, * ஞானப்பிரானை யல்லாலில்லை நான்கண்ட நல்லதுவே * என்று தாம் கண்டதை (இவர் காட்டுவர்;)

**தம்மை முனிவார்க்குத் தம் கண்**—* எங்ஙனேயோ வன்னைமீர்காள்! என்னை முனிவது நீர் * என்கிறபடியே தம்மை முனிகின்ற [—கோபிக்கின்ற] தாய்மார்க்கு *என்னெஞ்சினால் நோக்கிக் காணீர்* என்று தம்முடைய உட்கண்ணைக் காட்டுவர்; (அதாவது, ப்ராப்ய வைலக்ஷண்யாவகாஹியான என்னெஞ்சாலே பார்க்கமாட்டீர்களோ வென்று தம்முடைய உட்கண்ணான ப்ராப்ய வைலக்ஷண்ய ஜ்ஞானத்தைக் காட்டுவரென்றபடி.)

**காணாதது காண்பார்க்குக் கண்மாறுமிடம்**—* கவி: க்ராந்ததர்சீ * என்கிறபடியே பிறர் யாரும் காணமாட்டாததும் காணவல்லவர்களான கவிகளைச் * செஞ்சொற் கவிகாள்! * என்றழைத்து, அவர்களுக்கு * உயிர்காத்தாட் செய்மின் * என்று, சீலகுணத்திலே கண்வைக்க வேண்டாமென்று கண்மாறுமிடத்தைக் காட்டுவர்;

**ராகாந்தனுக்கு மாயாதோஷம் இவர்காட்டுமவை**—ப்ரேமாந்தனாய்க் கொண்டு த்யாஜ்ய தேஹதோஷம் காணமாட்டாதவனுக்கு [எம்பெருமானுக்கு], * மங்கவொட்டுன் மாமாயை * என்று ப்ரக்ருதி தோஷம் காட்டுவர்; ஆகவிவை இவர் காட்டுமவை. ... ... ... ... (197)

(நா) 197. (கீழ்ச்சொன்ன நால்வர்க்கும் அந்த நான்கு அர்த்தங்களையு முபதேசிப்பதற்கான ஹேதுக்களோடே அதுதானே மற்றொருபடியாக அருளிச் செய்யப்படுகிறது.) (1) எம்பெருமானுடைய முனிவுக்கு [நிக்ரஹத்திற்கு] இலக்கான ஸம்ஸாரிகளுக்கு "ஞானப்பிரானை யல்லாலில்லை நான்கண்ட நல்லதுவே" என்று தாம்கண்டதை இவர் காட்டுவர். (2) "எங்ஙனேயோ வன்னைமீர்காள்! என்னை முனிவது நீர்" என்கிறபடியே தம்மை முனிகின்ற [கோபிக்கின்ற] தாய்மார்க்கு "என்னெஞ்சினால் நோக்கிக் காணீர்" என்று தம்முடைய உட்கண்ணைக் காட்டுவர். (அதாவது—ப்ராப்ய வைலக்ஷண்யாவகாஹியான என்னெஞ்சாலே பார்க்கமாட்டீர்களோவென்று தம்முடைய உட்கண்ணான ப்ராப்ய வைலக்ஷண்ய ஜ்ஞானத்தை யுண்டுபண்ணுவர் என்றபடி) (3) "செஞ்சொற் கவிகாள் உயிர் காத்து ஆட்செய்மின்" என்று—புறம்பு ஒருவர் காணாததும் காண வல்லவர்களான கவிகளுக்கு, 'அவனுடைய சீலகுணத்திலே கண்வையாதே கொள்ளுங்கோள்' என்று கண்மாறுமிடம் காட்டுவர். (4) தம்மிடத்தில் அநுராகத்தாலே தேஹ தோஷம் காணமாட்டாத எம்பெருமானுக்கு "மங்கவொட்டு உன் மாமாயை" என்று ப்ரக்ருதி தோஷம் காட்டுவர். [ஸம்ஸாரிகள் எம்பெருமானுடைய நிக்ரஹத்திற்கு இலக்காயிருந்தபடியாலே அவர்களுக்கு அந்த நிக்ரஹத்தை மாற்றுவதற்காக உபதேசிக்கவேண்டியதாயிற்று; தாய்மார்கள் பகவத்விஷய வைலக்ஷண்யம் அறியமாட்டாமல் தம்மை முனிந்தபடியாலே அவர்களுக்கு உபதேசிக்கவேண்டியதாயிற்று; செஞ்சொற்கவிகள் எம்பெருமானுடைய சீலகுணமறியாமல் பகவத் விஷயத்தில் இழியப்புகுந்தபடியாலே அவர்களுக்கு உபதேசிக்கவேண்டியதாயிற்று; எம்பெருமான் ஸர்வஜ்ஞனாயிருந்தும் தம்முடைய தேஹதோஷம் காணாமையினாலே அவனுக்கு உபதேசிக்க வேண்டியதாயிற்று என்றவாறு] ... (197)

(மூ.) 198. ஸாதந ஸாத்யஸ்த மத்யஸ்தரைவிட்டு அவற்றிற்கலங்கும் ஜீவேச்வரர்க்கு வீடுமின் நினைமின் பிடித்தேன் விடுவேனோ வைத்தெழ ஊது வாடி நிற்கக் கன்மமன்று ஆன்பின் கைகழியேல் உழிதராய் என்சொற் கொளென்று இவர் பலகாலும் ஹிதாஹிதங்கள் சொல்லுவர்.

[ஆழ்வார் அதிகமாக உபதேசிப்பது ஸம்ஸாரிகளுக்கும் எம்பெருமானுக்குமே யென்பது.]

(வ.) 198. ஸாதநஸாத்யஸ்த மத்யஸ்தரைவிட்டு—ஸாதநத்தில் ஊன்றியிருப்பவர்களும் ஸாத்யத்தில் ஊன்றியிருப்பவர்களுமாக நடுவில் சொல்லப்பட்ட ஜ்ஞானிகளையும் ஜ்ஞான விசேஷ யுக்தர்களையும்விட்டு, [அவர்களுக்கு அதிகமாக உபதேசியாமலென்றபடி.]

அவற்றில் கலங்கும் ஜீவேச்வரர்க்கு—கர்ம பரவசராய் ஸாதந ஸாத்யங்களின்னதென்றறியாதே கலங்கி நிற்கிற ஸம்ஸாரி சேதநர்க்கும் ஈச்வரனுக்கும், (இவர் பலகாலும் ஹிதாஹிதங்கள் சொல்லுவர் என்று அந்வயம்.)

வீடுமின் நினைமின் என்று ஜீவர்களுக்குப் பலகாலும் ஹிதாஹிதங்கள் சொல்லுவர்—• வீடுமின் முற்றவும் • என்று தொடங்கி • சுனைநன்மலரிட்டு நினைமின் நெடியானே • என்னுமளவாக த்யாஜ்யோபாதேயங்களைப் பலபடியாலும் ஜீ[illegible]களுக்குச் சொல்லுவரிவ்வாழ்வார்; (அதற்குமேல் எம்பெருமானுக்கு)

பிடித்தேன் விடுவேனே—* உன்னை நான் பிடித்தேன் கோள் சிக்கனவே * என்றும், * உன்னை நானடைந்தேன் விடுவேனே * என்றும், (இவை * வைகுந்தா மணி வண்ணனில்.)

வைத்தெழவூது, வாடிநிற்க கன்மமன்று—தோகைமாமயிலார்கள் நின்னருள் சூடுவார் செவியோசை வைத்தெழ ஆகள்போகவிட்டுக் குழலூது போயிருந்தே * என்றும், * மழறுதேன் மொழியார்கள் நின்னருள் சூடுவார் மனம்வாடி நிற்க எம்குழறு பூவையொடுங் கிளியோடுங் குழகேலே * என்றும், * கன்மமன்றெங்கள் கையில் பாவை பறிப்பது * என்றும், [இவை * மின்னிடை மடவார்கள் பதிகத்தி லுள்ள பாசுரங்கள்.]

ஆன்பின்கைகழியேல் உழிதராய் என்சொற்கொள் என்று—* ஆன்பின் போகேல்* என்றும் * என்கைகழியேல் * என்றும் * நீ உகக்கு நல்லவரொடு முழிதராய் * என்றும் * அவத்தங்கள் விளையுமென் சொற்கொள் * என்றும், [இவை * வேய்மரு தோளிணைப் பதிகத்திலுள்ள பாசுரங்கள்.]

இவர் பலகாலும் ஹிதாஹிதங்கள் சொல்லுவர்—இவ்வாழ்வார் அஜ்ஞர்க்கும் ஸர்வஜ்ஞனுக்கும் அடிக்கடி நன்மை தீமைகளையுபதேசிப்பர். [ஞானிகளுக்கும் ஜ்ஞான விசேஷ யுக்தர்களுக்கும் ஆழ்வாருபதேசிப்பது சிறுபான்மை; ஸம்ஸாரி களுக்கும் ஸர்வேச்வரனுக்குமுபதேசிப்பது பெரும்பான்மை என்றதாயிற்று.] (198)

(தா.) 198. (ஆழ்வார் அதிகமாக உபதேசிப்பது ஸம்ஸாரிகளுக்கும் எம் பெருமானுக்குமே யென்பது.) (அறிவிலிகளான ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்குமா போலே கீழ்ச்சொன்ன எல்லார்க்கும் பலகாலும் உபதேசிப்பரோ வென்ன; அதற்கு விடை கூறப்படுகிறது.) உபாயமும் உபேயமும் கைபுகுந்திருக்கப் பெற்றவர் களுக்கு அறிவிக்கவேண்டுவது மிகவும் சிறிதேயாதலால் அவர்களிருவரையும் விட்டு, கர்ம பரவசர்களாய் உபாயோபேயங்கள் இன்னதென்றறியாதே கலங்கி நிற்கிற ஸம்ஸாரி சேதநர்களுக்கும், ப்ரேமபரவசனாய் அவற்றில் கலங்கிநிற்கிற ஈச்வரனுக்கும் பலகாலும் உபதேசம் செய்வதுண்டு. [மூலத்தில், "ஸாதநஸாத்யஸ்த மத்யஸ்தரை" என்பதற்கு "ஸாதநஸ்தரென்ன, ஸாத்யஸ்தரென்ன, மத்யஸ்த ரென்ன ஆகிய இவர்களை" என்று பொருள் அன்று. "ஸாதநஸ்தரும் ஸாத்யஸ் தருமாகிற மத்யஸ்தர்களை" என்பது பொருள். "அஜ்ஞர், ஜ்ஞாநிகள், ஜ்ஞாந விசேஷயுக்தர், ஸர்வஜ்ஞன்" என்று உபதேச விஷய பூதர்களாகச் சொல்லப்பட்ட நால்வருள் இரண்டாமவரும் மூன்றாமவரும் இடையிலே யுள்ளவர்களாதலால் அவர்களே இங்கு மத்யஸ்தர்க ளென்னப்படுகின்றனர்; அவர்களுள் ஒருவர் ஸாதநஸ்தர்; மற்றொருவர் ஸாத்யஸ்தர்; தாய்மார் உபாயாத்யவஸாய தசையிலே நின்று ஸ்வயத்ந பீருக்களாய் ப்ராப்யவைலக்ஷண்ய மறியாதே இத்தனை அதிப்ரா வண்யம் தகாதென்று ஹிதஞ் சொல்லுகிறவர்க ளாகையாலே அவர்கள் ஸாதநஸ்தர் என்னத் தகுதியுடையார்; "உயிர்காத்து ஆட்செய்மின்" என்று உபதேசிக்கப்படுகிற செஞ்சொற் கவிகள் ப்ராப்ய வைலக்ஷண்யத்தை நன்கறிந்து அதன் அநுபவத்தில் இழிந்தவர்க ளாகையாலே அவர்கள் ஸாத்யஸ்தர் என்னத் தகுதியுடையார். ஆகவே, ஸாதநஸ்தரும் ஸாத்யஸ்தருமாகிற மத்யஸ்தர்களை (இடையிலுள்ளவர் களை)—என்று பொருள் கொள்க.] ... ... ... (198)

(மூ.) 199. கதிர்ஞான மூர்த்திக்கு உணர்த்துவது ப்ரேமத்தாலே;
தமமுடுவார்க்கு வேட்கையெழுவிப்பது ஞானத்தாலே.

[ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கும் பலகாலுமுபதேசிக்கைக்கு ஹேது இன்னதென்பது]

(ப்.) 199. கதிர் ஞானமூர்த்திக்கு உணர்த்துவது— * கணக்கில் கீர்த்தி வெள்ளக் கதிர் ஞானமூர்த்தியினாய் * என்று ஸர்வஜ்ஞனாகச் சொல்லப்பட்ட ஸர்வேச்வரனுக்கு * உனக்கொன்றுணர்த்துவன் நான் * என்று உபதேசிப்பதானது,

ப்ரேமத்தாலே—அவன்திறத்துள்ள அன்பினாலே;

தமமுடுவார்க்கு வேட்கையெழுவிப்பது — * கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாகக் கொள்ளென்று தமமுடுமிவை யென்னவுலகியற்கை * என்கிறபடியே தாமஸப்ரக்ருதிகளாயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு * நின்கண் வேட்கை யெழுவிப்பனே* என்று தம் உபதேசத்தாலே பகவத்பக்தியை யுண்டாக்குவதானது,

ஞானத்தாலே—அவர்களை விடமாட்டாதே திருத்தித் தம்மோடொக்க அவர்களையும் பகவதநுபவபரராக்க வேணுமென்கிற ஞானத்தாலே. ... (199)

(தா) 199. (ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கும் பலகாலு முபதேசிக்கைக்கு ஹேது இன்னதென்பது.) ''கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞான மூர்த்தியினாய்!'' என்கிறபடியே ஸர்வஜ்ஞனா யிருக்கிறவனுக்கு ''திண்சக்கரநிழறு தொல் படையாய் உனக்கொன்றுணர்த்துவன் நான்'' என்று உபதேசிக்கிறது அவன் விஷயத்திலுள்ள ப்ரேமத்தினாலாகும். ''கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பாகக் கொள்ளென்று தமமூடும்'' என்று—ஐச்வர்யம் விநாச ஹேதுவாகக் காணாநிற்கச் செய்தே பின்னையும் அத்தை ஸ்வீகரிக்கும்படி தமோ குணம் மேலிடப்பெற்றிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு ''நின்கண் வேட்கை யெழுவிப்பன்'' என்று தம் உபதேசத்தாலே பகவத் பக்தியை விளைவிப்பது—அவர்களை விடமாட்டாதே திருத்தித் தம்மோடொக்க அவர்களையும் பகவதநுபவபரராக்க வேணுமென்கிற ஜ்ஞானத்தாலே. ... ... ... (199)

(மூ.) 200. உயிர்மாய்தல் ஆழு மென்னுருயிரென்னும்
பரதுஃக்கம்ஸஹியாமை இரண்டிலுமுண்டு.

[எந்த வுபதேசத்திற்கும் பரதுஃக்காஸஹிஷ்ணுத்வமே ஹேதுவென்பது]

[உயிர்மாய்த லென்னும் பரதுக்கம் ஸஹியாமை ஸம்ஸாரிகளிடத்திலுண்டு; ஆழுமென்னுருயிரென்னும் பரதுக்கம் ஸஹியாமை ஸர்வேச்வரனிடத்திலுண்டு; என்று இரண்டு வாக்கியமாகப் பிரிப்பது, உபதேசத்திற்குக் காரணமான பரதுஃக்காஸஹிஷ்ணுத்வம் ஆழ்வார்க்கு ஸம்ஸாரிகளிடத்திற்போலவே ஸர்வேச்வரனிடத்திலுமுண்டென்று நிரூபிக்கிறது.]

(ப.) 200. உயிர்மாய்தலென்னும் பரதுக்கம் ஸஹியாமை—கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும் வண்டார் பூங்குழலாளும் மனையொழிய வுயிர்மாய்தல் கண்டாற்றேனுலகியற்கை * என்று சொன்ன (ஸம்ஸாரிகள் விஷயத்தில்) துக்கம் ஸஹியாமையும்,

ஆழுமென்னருயிரென்னும் பரதுக்கம் ஸஹியாமை—* அசுரர்கள் தலைப்பெய்யில் யவங்கொலாங்கென்று ஆழுமென்னருயிர் * என்று (ஸர்வேச்வரன் விஷயத்தில்) துக்கம் ஸஹியாமையும்,

இரண்டிலுமுண்டு—ஸம்ஸாரிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கும் உபதேசிக்கைக்கு ஹேதுவாகக் கீழ்ச்சொன்ன ஞானமும் ப்ரேமமுமாகிய இரண்டிலுமுண்டு. (200)

(தா.) 200. (எந்த வுபதேசத்திற்கும் பரதுஃக்கா ஸஹிஷ்ணுத்வமே ஹேது வென்பது.) ஆழ்வார் ஸர்வேச்வரனைக் குறித்து உபதேசிப்பது ப்ரேமத்தாலே யென்றும், ஸம்ஸாரிகளைக் குறித்து உபதேசிப்பது ஞானத்தாலே யென்றும் ஏன் சொல்லவேணும்? பரதுஃக்கம் ஸஹியாமையன்றோ பரோபதேசத்திற்கு முக்கிய காரணம் என்ன; அதுவும் உண்டு எனப்படுகிறது. அதாவது—கீழே ஹேதுவாகச் சொல்லப்பட்ட ஜ்ஞான ப்ரேமங்களிரண்டும் பரதுஃக்காஸஹிஷ்ணுத்வததை யொழிந்திராது என்று மூதலிக்கப்படுகிறது. எங்ஙனே யென்னில்; "கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும் வண்டார் பூங்குழலாளும் மனையொழிய வுயிர்மாய்தல்கண்டு ஆற்றேன்" என்கிற பாசுரத்தில் ஸம்ஸாரிகள் பாரிக்கிற பாரிப்பும் திடீரென முடிந்துபோகிறபடியும்கண்டு ஸஹிக்கமாட்டுகிறிலேன்' என்கையாலே பரருடைய துஃக்கம் ஸஹியாமை ஸம்ஸாரிகளைக் குறித்து உபதேசிக்கைக்கு ஹேதுவாகச் சொன்ன ஜ்ஞானத்திலுமுண்டு; "அசுரர்கள் தலைப்பெய்யில் யவங்கொலாங்கென்று ஆழுமென்னருயிர்" என்கிற பாசுரத்தில் 'அசுரர்கள் உன்னை வந்து கிட்டினால் அங்கு என்னாகுமோவென்று என் ஆத்மா வானது வருந்துகின்றது' என்கையாலே பரனான ஈச்வரனுடைய துஃக்கம் ஸஹியாமை அவனைக்குறித்து உபதேசிக்கைக்கு ஹேதுவாகச் சொன்ன ப்ரேமத்திலுமுண்டு. ... ... ... ... (200)

(மூ.) 201. என்னதுன்னதாவியிலே அறிவாராத்மாவென்று அவன் மதம் தோன்றும்.

[ஆழ்வார் எம்பெருமான் நினைவாலே அவனுக்கு உயிராகையாலும் அவனுக்கு ஒரு தீங்குவரப் பொறுக்கமாட்டாரென்கிறது.]

(ப) 201. என்னதுன்னதாவியிலே—* என்னதுன்னதாவியும் * என்ற திருவாய்மொழிப் பாசுரத்திலே (எம்பெருமானே! உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபம் நானிட்ட வழக்காயிருக்குமென்று சொன்னவிடத்திலே யென்றபடி.)

அறிவாராத்மாவென்று—* அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய் * என்று அறிவாரை [ஞானிகளை] உயிராகவுடையவனென்னும்படி,

அவன் மதம் தோன்றும்—*ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம் * என்று கீதாசார்யனருளிச்செய்தபடியே இவரை அவன் தனக்கு ஆத்மாவாக நினைத்திருக்கிற ஆசாரம் தோன்றும், ... — ... (201)

(தா.) 201. (ஆழ்வார் எம்பெருமானது நினைவாலே அவனுக்கு உயிராகை யாலும் அவனுக்கு ஒரு தீங்குவரப் பொறுக்கமாட்டா ரென்கிறது.) திருவாய்

மொழியில் "உன்னதென்னதாவியும் என்ன துன்னதாவியும்" என்ற பாசுரத்தில் 'என்னுடைய ஆவி உன்னது உன்னுடைய ஆவி என்னது' என்கிறார். (அதாவது) என் ஸ்வரூபம் நீ இட்ட வழக்கு. உன் ஸ்வரூபம் நானிட்ட வழக்கு என்றவாறு. "அறிவிலேனுக்கருளாய் அறிவாருயிரானாய்" என்றும் ஆழ்வார் அருளிச்செய்கிறார். 'அறிவாருயிரானாய்' என்பதற்கு 'அறிவாரையுயிராக வுடையவன்' என்கிற பொருளே பொருந்தும்; ஏனென்னில் "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்ற கீதா ஸூக்தியோடு பொருந்தவேண்டுகையாலே. ஆகவே இவற்றால் ஆழ்வாரை எம்பெருமான் ஆத்மாவாக நினைத்திருக்கிறபடி தெரிகையாலே அவனுக்கு ஒரு துக்கம் வரப் பொறுக்கமாட்டாரென்பது தெளிவாயிற்று. ... ... (201)

(மூ.) 202. இருத்து மெண்டானாய்ப் பொய்கலவாது அன்புசெய்து பற்றிலனாய் க்ஷுத்த்ருட்பீடித நிர்த்தநரைபபோலே கண்டுகொண்டுண்டு பருகிப் பரிஜநாதிகளோடே தன்னைத்தந்து என்செய்வனென்றேயிருந்து அகிலபரத்தையும் ஸமர்ப்பிக்க அது சுமந்து அல்லுநன்பகலும் போகு என்றாலும் அகல்வானு மல்லனாய் போகே லென்றால் உகப்பையுந் தவிர்ந்து விதிவகையே நடத்துமவனே உபதேசஸத்பாத்ரம்.

[எம்பெருமானுக்கே சிஷ்யலக்ஷண பூர்த்தியுண்டென்று நிருபித்தல்]

(ப.) 202. இருத்தும்—ஸச்சிஷ்யன் ஆசார்யனை அவனுகந்த ஸ்தலத்திலே வைக்குமாபோலே, ஸச்சிஷ்யனான எம்பெருமான் ஸ்வாசார்யரான ஆழ்வாரை * இருத்தும் வியந்தென்னைத் தன் பொன்னடிக்கீழ் * என்று இவர்க்கு அபிமதமான விடத்தே இவரையிருத்தினவனாய்,

எண்டானாய்—ஸச்சிஷ்யன் ஆசார்யனுடைய எண்ணத்தின்படியே ஒழுகுவது போலே எம்பெருமானும் * தண்டாமஞ் செய்து என்னெண் தானானானே * என்று இவர் நினைவின்படியே ஒழுகுவானாய்,

பொய் கலவாது—ஸச்சிஷ்யன் ஆசார்யனுடைய திருமேனியிலே புரையற்ற விருப்பமுடையனாயிருப்பதுபோல எம்பெருமானும் * பொய்கலவாது என்மெய் கலந்தானே * என்று இவர் திருமேனியிலே புரையற்ற விருப்பமுடையனாய்,

அன்பு செய்து—ஸச்சிஷ்யன் ஆசார்யன் பக்கலிலே ஸகல ஸ்நேஹத்தையும் பண்ணுமாபோலே, எம்பெருமான் * அந்தாமத்தன்பு செய்து என்னாவிசேரம்மானுக்கு * என்று பரமபதத்தில் பண்ணும் வியாமோஹத்தை இவர் பக்கலிலே பண்ணுவானாய்,

பற்றிலனாய்—ஸச்சிஷ்யன் ஆசார்யன் தவிர இதர விஷயங்களில் ஸங்கமற்றிருப்பதுபோல எம்பெருமான் * பற்றிலனீசனும் * என்கிறபடியே இவர் பக்கல் ஸங்கத்தாலே அங்குள்ளார் பக்கலில் ஸங்கத்தையும் விட்டவனாய்,

க்ஷுத்த்ருட்பீடித நிர்த்தனரைப்போலே கண்டுகொண்டு உண்டு பருகி—(க்ஷுத்பீடிதனைப்போலே உண்டு, த்ருட்பீடிதனைப்போலே பருகி, நிர்த்தனனைப்போலே கண்டுகொண்டு என்று பிரித்து யோஜிப்பது.) க்ஷுத்பீடிதன்—பசித்தவன்; அவன் சோறு கண்டு உகந்து உண்ணுமாபோலே எம்பெருமானும் * நாளுநாள் வந்து

என்னை முற்றவுந்தானுண்டான் * என்று ஆழ்வாரை உண்டு களித்தான்; த்ருட் பீடிதன் தாஹித்தவன்; அவன் தண்ணீர் கண்டு உகந்து பருகுமாபோல எம்பெருமானும் * தானென்னை முற்றப்பருகினுன் * என்று பருகிக்களித்தான்; நிர்த்தநன்—அகிஞ்சநன்; அவன் நிதி பெற்ருல் அதை அப்படியே கண்ணுரக் கண்டுகொண்டிருப்பதுபோல எம்பெருமானும் * இருந்தான் கண்டுகொண்டு * என்று வைத்த கண் வாங்காதே பார்த்துக்கொண்டிருந்தான்; ஆக, க்ஷுத் த்ருட் பீடித நிர்த்தனரைப்போலே கண்டுகொண்டு உண்டு பருகினவனுய்,

பரிஜநாதிகளோடே தன்னைத் தந்து—ஸச்சிஷ்யன் * சரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத் * என்கிறபடியே தன் ஆத்மாத்மீயங்களை ஆசார்யனுக்கு ஸமர்ப்பிக்குமாபோலே * பரிஜந பரிபர்ஹா பூஷணாநி—வரத ஸகல மேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த * எனக்கே தன்னைத்தந்த கற்பகம் * என்னும்படி தன் விபூதியையும் தன்னையும் இவர்க்கே தந்தவனுய்,

என் செய்வனென்றேயிருந்து—ஆசார்யனுக்கு என்ன செய்தாலும் அவன் பண்ணின பேருதவிக்கு ஈடில்லாமையாலே இன்னமுமென் செய்வோமென்று ஸச்சிஷ்யன் குறைவாளனுகவேயிருக்குமாபோலே எம்பெருமானும் * உன்னடியார்க்கு என்செய்வேனென்றேயிருத்தி நீ * என்கிறபடியே இவர்க்கு எல்லாஞ்செய்தாலும் தான் இழவாளனுய்,

அகில பரத்தையும் ஸமர்ப்பிக்க அது சுமந்து—ஸச் சிஷ்யனுனவன் தனது ஆசார்யன் தன்னுடைய தேஹயாத்ராபாரமெல்லாம் தன் மேலே பொகட்டிருக்க அதையெல்லாம் தான் சுமந்திருப்பதுபோலே, ஆழ்வாராகிற ஆசார்யர் ஆத்மாத்மீய ஸகல பாரங்களையும் நமச்சப்தமுகேந எம்பெருமானுகிற ஸச்சிஷ்யன் பக்கலிலே ஸமர்ப்பிக்க, வேங்கடத் துறைவார்க்கு நம வென்னலாங் கடமையது சுமந்தார் கட்கே * என்னும்படியாக நமஉக்தி தனக்குக் கனத்துத் தோற்றுகையாலே அவ் வழியாலே அந்த அகில பாரங்களையும் சுமப்பவனுமாய்,

அல்லுநன்பகலும் போகு என்ருலும் அகல்வானுமல்லனுய்—ஸச்சிஷ்யன் இரவும் பகலும் ஆசார்யனைப் பிரியாதேயிருந்து ஆசார்யன் நிக்ரஹித்துத் தள்ளினுலும் போகாதே யிருக்குமாபோலே, எம்பெருமான் * அல்லு நன்பகலுமிடை வீடின்றி நல்கி யென்னை விடான் * என்று இவரை விடமாட்டாதேயிருந்து, * போகுநம்பீ * என்று சீற்றங்கொண்டு போகச் சொன்னுலும் * அகல்வானுமல்லனினி * என்கிறபடி அகலமாட்டாதவனுய்,

போகேலென்ருல் உகப்பையும் தவிர்ந்து—ஸச்சிஷ்யன் ஆசார்ய ப்ரீதிக்காகத் தனக்கு உகப்பானவற்றையும் தவிர்ந்திருக்குமாபோலே, எம்பெருமானும் * ஆன்பின் போகேல் * என்று இவர் மறுத்தால் * திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி * என்கிறபடியே தனக்கு உகப்பான அதையும் தவிர்ந்திருப்பவனுய், (இது * வேய் மருதோளிணையில்),

விதிவகையே நடத்துமவனே—ஸச்சிஷ்யன் ஆசார்யன் விதித்தபடியே நடத்துமாபோலே எம்பெருமானும் * ஆழியானருள் தருவானமைகின்ருன் அது நமது விதிவகையே * இன்று விண்ணுலகம் தருவானுய் விரைகின்ருன் விதி வகையே *

என்னும்படி இவர் விதித்தபடியே நடத்துகிறவனாய், ஆக இப்படி ஸச்சிஷ்ய லக்ஷணங்களில் குறையற்றவனான ஸர்வேச்வரனே,

உபதேச ஸத்பாத்ரம்—உபதேசத்திற்கு உரிய பாத்திரம். ... (202)

(தா.) 202. (எம்பெருமானுக்கே சிஷ்ய லக்ஷண பூர்த்தியுண்டென்று நிரூபித்தல்.) நல்ல சிஷ்யன் ஆசார்ய விஷயத்தில் எவ்விதமாக நடந்துகொள்ள வேணுமோ அவ்விதமாகவே ஆழ்வார் விஷயத்தில் எம்பெருமான் நடந்துகொண்டதாக அருளிச்செயல்களினால் விளங்குகின்றது. ஸச்சிஷ்யனானவன் ஆசார்யனை அவனுக்கு அபிமதமான ஸ்தலத்திலே வைத்து, அவனுடைய இஷ்டப்படி நடந்து, அவனுடைய திருமேனியிலே சிறந்த விருப்பமுடையனாயிருந்து, ஸகல ஸ்நேஹத்தையும் அவன் பக்கலிலே பண்ணி, வேறு விஷயங்களில் ஸங்கமற்று, தரித்ரன் செல்வம் பெற்றாற் போலேயும் பசியன் சோறு பெற்றாற் போலேயும் விடாய்த்தவன் தண்ணீர் பெற்றாற்போலேயும் மிகுந்த அபிநிவேசத்தோடே அவனையநுபவித்து, தன் ஆத்மாத்மீயங்களை அவ்வாசார்யனுக்கு ஸமர்ப்பித்து, எல்லாம் செய்தாலும் ஆசார்யன் பண்ணின மஹோபகாரத்துக்கு நேரல்லாமையாலே குறைவாளனாயிருந்து, ஆசார்யன் தன்னுடைய தேஹயாத்ராபாரமெல்லாம் தன் மேலே பொகட்டிருக்கத் தான் அஃதடங்கலும் சுமந்து, அல்லும் பகலும் அவனைப் பிரியாதேயிருந்து, ஆசார்யன் நிக்ரஹித்துத் தள்ளினாலும் போகாதேயிருந்து, அவனுக்கு அநிஷ்டமானால் தனக்கு உகப்பானவற்றையும்விட்டு, ஆசார்யன் விதித்தபடியே நடத்துமவனாக இருக்கவேண்டுமென்பது அனைவருமறிந்த விஷயமாகும். ஆழ்வார் விஷயத்திலே எம்பெருமான் நடப்பதுமிப்படியே காண்மின். ... (202)

(மூ.) 203. நண்ணாதார் மெய்யிலூன் ஆசை நிர்வேதத்தோடே ஆஸ்திக்ய அமாநித்வாதிகள் விஞ்சின ப்ரணிபாதாபிவாதந பரிப்ரச்நஸேவாபரர்க்கு உளங்கொள் பேசுமளவன்றென்னும் அர்த்தத்தை வம்மின் விரோதமினச்சொல் எவ்வுயிர்க்குமறியவென்று அடைவுகெட அதபஸ்கர்க்கு உபதேசிக்கிறது ஞாலத்தார் பந்தபுத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையுமிறே.

[ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உபதேசிப்பதற்கு ஹேதுக்கள் இன்னவையென்பது]

(ப.) 203. நண்ணாதார் மெய்யில் ஊன் ஆசைநிர்வேதத்தோடே—*நண்ணாதார் முறுவலிப்ப * மெய்யில் வாழ்க்கை * ஊனேறு செல்வம் * ஆசைவாய்ச் சென்ற சிந்தை * என்கிற பதிகங்களிற் சொல்லுகிறபடியே பகவத் விமுக லோகயாத்ரையிலும், அழுக்குடம்பிலும், கர்மோபாதிக தேஹாநுபந்தங்களிலு முண்டான தோஷங்களைக்கண்டு *பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்* என்னும்படி பிறந்த நிர்வேதத்தோடே,

ஆஸ்திக்ய அமாநித்வாதிகள் விஞ்சின—* ஆஸ்திகோ தர்மசீலச்ச சீலவாந் வைஷ்ணவச் சுசி:, கம்பீரச் சதுரோ தீரச் சிஷ்ய இத்யபிதீயதே * என்றும் * அமாநித்வம் அதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்தி ரார்ஜவம், ஆசார்யோ பாஸநம் சௌசம் ஸ்தைர்ய மாத்ம விநிக்ரஹ: * என்றுமுள்ள பிரமாணங்களிற் சொல்லப்

படுகிற ஆஸ்திக்யாதிகளும் அமாநித்வாதிகளுமாகிற சிஷ்ய லக்ஷணமான ஆத்ம குணங்கள் விஞ்சப் பெற்றவராய்,

ப்ரணிபாத அபிவாதந பரிப்ரச்ந ஸேவாபரர்க்கு—* ப்ரணிபத்ய அபிவாத்ய ச * என்றும், * தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா * என்றும் சொல்லுகிற படியே வணங்கி வழிபாடுகள் செய்து நீண்ட காலம் அநுவர்த்தித்தவர்களுக்கு,

உளங்கொள் பேசுமளவன்று என்னுமர்த்தத்தை—* உளங்கொள் ஞானத்து வைம்மின் * என்றும் * பேசுமள வன்றிதுவம்மின் நமர்! பிறர் கேட்பதன்முன் * என்றும் இப்படி ஏகாந்தமாக உபதேசிக்கவேண்டிய அர்த்த விசேஷத்தை,

வம்மீன் விரோதமினச் சொல் எவ்வுயிர்க்கு மறியவென்று—* வம்மின் புலவீர் * என்று வலிய அழைத்து * சொன்னால் விரோதமிது ஆகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ * என்று அபேக்ஷித்து, *ஈனச்சொல்லாயினுமாக* மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத் தெவ்வுயிர்க்கும் * திண்ணம் நாமறியச் சொன்னோம் * என்றிப்படி அடைவு கேடாக,

அதபஸ்கர்க்கு உபதேசிக்கிற இது—*இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, நசாசுச்ருஷவே வாச்யம் நச மாம் யோப்யஸூயதி * என்று கீதையில் அநதிகாரிகளாகச் சொல்லப்பட்டவர்களுக்கும் ஆழ்வார் உபதேசங்கள் செய்தருளினதற்குக் காரணமேதென்னில்;

ஞாலத்தார் பந்த புத்தியும்—* ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை * என்று விண்ணுலகி லுள்ளார்க்குப் போலே மண்ணுலகி லுள்ளார்க்கும் அவனோடு ஸம்பந்தமொத்திருக்க இவர்கள் அவனை இழந்து கிடக்க வொண்ணாதென்கிற ஸம்பந்தஜ்ஞானமும்,

அனர்த்தங்கண்டு ஆற்றாமையும்—* கண்டாற்றேனுலகியற்கை * என்று இவர்கள் ஸம்ஸாரத்தில் படுகிற அனர்த்தங்கண்டு பொறுக்கமாட்டாமையும்,

மிக்க க்ருபையுமிறே—* அருள் கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதே * என்னும்படியான பரம க்ருபையுமன்றோ. ... ... ... (203)

(தா.) 203. (ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உபதேசிப்பதற்கு ஹேதுக்கள் இன்னவையென்பது.) அறிவிலிகளான ஸம்ஸாரிகளுக்கு உபதேசிக்கிறவளவில், விரக்தர்களாய் ஆத்ம குணங்கள் நிரம்பியவராய் அணுகிவந்து ஆதரத்தோடு அபேக்ஷிக்குமவர்களுக்கு உபதேசிக்கவேண்டிய அர்த்தங்களை, பகவத் விமுகர்களாய்ப் ப்ரயோஜநாந்தர பரர்களாய், அநுவர்த்திப்பது மில்லாதவர்களான ஸம்ஸாரிகளுக்கு வலியப் பிடித்து உபதேசிப்பானேன்? என்னில்; அதற்குக் காரணம் கூறப்படுகிறது. இப்படி உபதேசிப்பதற்கு மூன்று காரணங்களுண்டு: "ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமான்" என்று நித்யவிபூதியிலுள்ளார்க்குப் போலே லீலாவிபூதியிலுள்ளார்க்கும் அவனோடு ஸம்பந்தம் ஒத்திருக்க இவர்கள் அவனை இழந்து கிடக்கவொண்ணாதென்கிற ஸம்பந்தவுணர்ச்சி ஒரு காரணம். "கண்டு ஆற்றேனுலகியற்கை" என்று இவர்கள் ஸம்ஸாரத்தில் படுகிற அநர்த்தங்கண்டு பொறுக்கமாட்டாமை மற்றொரு காரணம். அவ்வளவேயன்றிக்கே "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்கிறபடியே எம்பெருமான் கைவிட்ட

வர்களையும் திருத்தியல்லது நிற்கமாட்டாத கரைபுரண்ட காருண்யம் மற்றொரு காரணம். ... ... ... ... (203)

(மூ.) 204. தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது.

[ஆழ்வாரைப்போலே உபதேசிப்பவர்கள் மற்றுஞ்சிலருமுண்டென்றல்]

(ப) 204. தாய்க்கும்—* அகிலஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் * என்றும் * நித்யைவைஷா ஜகந்மாதா * என்றும் தாயாகச் சொல்லப்பட்ட பிராட்டிக்கும்,

மகனுக்கும்—* மீளவவன் மகனை * என்று ஹிரண்ய புத்ரனை ப்ரஹ்லாதாழ்வானுக்கும்,

தம்பிக்கும்—* மீண்டுமவன் தம்பிக்கே * என்று தம்பியான விபீஷணாழ்வானுக்கும்,

இவர்க்கும்—இந்நம்மாழ்வார்க்கும்,

இவரடிபணிந்தவர்க்குமே—* மாறனடி பணிந்துய்ந்த விராமானுசன் * என்னப்பட்ட எம்பெருமானார்க்குமே,

இவை உள்ளது—கீழ்ச்சூர்ணையில் சொல்லப்பட்ட ஞாலத்தார் பந்தபுத்தியும் அனர்த்தங்கண்டு ஆற்றாமையும் மிக்கக்ருபையுமாகிற இவையுள்ளது [பிராட்டியும் விபீஷணாழ்வானும் இராவணனுக்கு வலிய உபதேசித்தமையும், ப்ரஹ்லாதாழ்வான் இரணியனுக்கு வலிய உபதேசித்தமையும்; நம்மாழ்வார் * சொன்னால் விரோதமிது ஆகிலுஞ் சொல்லுவன் கேண்மினோ * என்று உபதேசித்ததும், எம்பெருமானார் * பாருலகிலாசையுடையோர்க் கெல்லாமாரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்ததும் இங்கு நினைக்கத்தக்கன.] ... ... (204)

(தா.) 204. (ஆழ்வாரைப் போலே உபதேசிப்பவர்கள் மற்றுஞ்சிலருமுண்டென்னல்) (1) ஸர்வலோக ஜநநியான ஸீதாபிராட்டி, (2) பிள்ளையான ப்ரஹ்லாதாழ்வான், (3) தம்பியான விபீஷணாழ்வான், (4) ப்ரக்ருதரான நம்மாழ்வார், (5) "மாறனடி பணிந்துய்ந்த விராமானுசன்" என்று ஆழ்வாரை அடி பணிந்து உய்ந்தவராக ப்ரஸித்தரான எம்பெருமானார் ஆகிய இவர்களுக்கே கீழ்ச் சொன்ன மூன்றும் உண்டு. [அபேக்ஷையின்றிக்கே காருண்யமே கொண்டு உபதேசித்தவர்கள் இந்த ஐவரேயென்றபடி.] ... ... (204)

(மூ.) 205. க்யாதிலாபபூஜாபேக்ஷயற மலர்நாடியாட்செய்ய, உய்யக்கொண்டு ஆரைக்கொண்டு வாளும் வில்லுங்கொண்டென்கிற இழவுகள் தீரப்பெற்றது.

[ஆழ்வாருடைய உபதேசம் பலித்தமை]

(ப.) 205. க்யாதி லாப பூஜாபேக்ஷயற—(க்யாதியில் அபேக்ஷையும் லாபத்தில் அபேக்ஷையும் பூஜையில் அபேக்ஷையும் அற—என்று யோஜிப்பது.) * நீசனேன் நிறையொன்றுமிலேன் * என்று தம்மை நைச்யத்திற்கு எல்லையாக நினைத்திருக்கை

யாலே க்யாதியில் அபேக்ஷையற்று, * கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ் செல்வம் நெருப்பாக நினைத்திருக்கையாலே லாபத்தில் அபேக்ஷையற்று, * ஓத வல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள் பண்டே * என்று, தம்முடைய பிரபந்தத்தில் அந்வயித்தவர்களைத் தமக்கு சேஷிகளாக நினைத்திருக்கையாலே பூஜையிலும் அபேக்ஷையற்று,

மலர்நாடி ஆட்செய்ய—* நறிய நன்மலர்நாடி * என்றும் நாடாதமலர்நாடி * என்றும் சொல்லுகிறபடியே சேஷத்வபரிமளயுக்தமான ஆத்ம புஷ்பங்களைத் தேடியிட்டு * ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன் என்னும்படி வாசிக கைங்கரியம்பண்ண,

(உய்யக்கொண்டென்கிற இழவும், ஆரைக்கொண்டென்கிற இழவும், வாளும் வில்லுங்கொண்டென்கிற இழவும் தீரப்பெற்றது என்று பிரித்து யோஜிப்பது;)

உய்யக்கொண்டென்கிற இழவு தீரப்பெற்றது—* உம்மை உய்யக்கொண்டு போகுறிலே * என்று ஸம்ஸாரிகளின் உஜ்ஜீவனத்தைப்பற்றின இழவு தீர்ந்தது;

ஆரைக்கொண்டென்கிற இழவும் தீரப்பெற்றது—* ஆரைக்கொண்டு என்னுசாகோ?* என்று, தமக்கு உசாத்துணையில்லாமையினாலுண்டான இழவும் தீர்ந்தது;

வாளும் வில்லுங்கொண்டென்கிற இழவும் தீரப்பெற்றது—* வாளும் வில்லுங் கொண்டு பின்செல்வார் மற்றில்லை * என்று, அவனுக்கு மங்களாசாஸன பரர்கள் இல்லையேயென்கிற இழவும் தீர்ந்தது. ... .... ... (205)

(தா.) 205. (இப்படி விமுகரான ஸம்ஸாரிகளைக் குறித்து ஆழ்வார் உபதேசித்தவிது ஸபலமாயிற்றோ வென்னில்.) தமக்கு ஒரு ப்ரஸித்தியுண்டாக வேணுமென்றாவது, தமக்கொரு லாபமுண்டாகவேணு மென்றாவது, தம்மைச் சிலர் பூஜிக்கப் பெறவேணு மென்றாவது அபேக்ஷையில்லாதவர் ஆழ்வார்; இப்படிப் பட்ட விவர் சேஷத்வபரிமள யுக்தமான ஆத்ம புஷ்பங்களைத்தேடி * ஆட்செய் தாழிப்பிரானைச் சேர்ந்தவன் * என்கிறபடியே கைங்கர்ய ரூபமாக உபதேசிக்கையாலே உலகமெல்லாம் திருந்திற்று; அதனால் ஆழ்வாருடைய மூன்று இழவுகள் தீர்ந்தனவாயின: (எங்ஙனேயென்னில்;) "திருக்குருகூரதனை உளங்கொள் ஞானத்துவைம்மின் உம்மையுய்யக்கொண்டு போகுறிலே" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்தில், ஸம்ஸாரிகள் உஜ்ஜீவிக்கப் பெறவில்லையே யென்கிற இழவு ஆழ்வார்க்கு இருந்ததாகத் தெரியவருகிறது; அந்த இழவும் தீர்ந்ததாயிற்று. 'இழந்த வெம்மாமைத் திறத்துப்போன என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார், உழந்தினியாரைக்கொண்டு என்னுசாகோ?" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்தில் தமக்கு உசாத்துணை யில்லாமையால் இழவு உள்ளதாகத் தெரிகின்றது; அதுவும் தீர்ந்ததாயிற்று "வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை" என்கிற பாசுரத்தை நோக்குமிடத்தில் எம்பெருமானுடைய ஸௌகுமார்யமறிந்து பரிகைக்கு ஒருவருமில்லையே யென்கிற இழவு இருந்ததாகத் தெரிகின்றது; அதுவும் தீர்ந்த தாயிற்று. தம்முடைய உபதேசபலமாக எல்லாரு முஜ்ஜீவித்துத் தமக்கு உசாத் துணையாயுமிருந்து அவனுக்கு மங்களாசாஸநமும் பண்ணுகையாலே மூன்று இழவு களும் தீர்ந்தனவாகக் குறையில்லையே. ... .... (205)

(மூ.) 206. ப்ரஹ்மநிஷ்டரும் ஸம்வத்ஸர வாஸிகளுமாகில், ஏபாவம் பயனன்ருகிலுஞ் சேராது.

[ஆழ்வாருடைய நிர்ஹேதுக கருணையை நிலைநாட்டுதல்]

(ப.) 206. ப்ரஹ்மநிஷ்டரும் ஸம்வத்ஸரவாஸிகளுமாகில்—உபதேசித்த ஆழ்வாரை சாஸ்த்ரப்ரகாரேண உபதேசித்தவராகவும், உபதேசம் கேட்டவர்களை யதா சாஸ்த்ரம் ஸம்வத்ஸர வாஸிகளாயிருந்து உபதேசம் பெற்றவர்களாகவும் கொள்ளுவதானுல்,

ஏபாவாம் பயனன்ருகிலும் சேராது—* ஏபாவம் பரமே! * என்று ஆழ்வார் வருந்திச்சொன்னதும், * பயனன்ருகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்ருகத் திருத்திப் பணிகொள்வான் * என்று ஆழ்வாருடைய சிஷ்யர் உகந்து சொன்னதும் பொருந்தாமற் போய்விடும். ... .... ... (206)

(தா.) 206. (ஆழ்வாருடைய நிர்ஹேதுக கருணையை நிலைநாட்டுதல்.) ஆழ்வாருடைய உபதேசம் ஸ்பலமாயிற்றென்று கொள்ளுமளவில், இவரிடத்தில் உபதேசம் கேட்ட சிஷ்யர் [ஸம்ஸாரிகள்] சாஸ்த்ரமுறையின்படியே உபஸத்தி பண்ணிஞர்களென்றும், இவரும் அந்த உபஸத்திகளிஞல் ப்ரஸந்நராகி சாஸ்த்ரம் விதித்த கட்டளையிலே நின்று உபதேசித்தாரென்றும் கொள்ளலாமே; அப்படியல்லாமல் (203, 204 சூர்ணிகைகளிற்படியே) * ஞாலத்தார் பந்த புத்தியும் அநர்த்தங்கண்டு ஆற்ருமையும் மிக்க க்ருபையுமடியாகவே உபதேசித்தாரென்றும், ஸம்ஸாரிகள் விமுகர்களாகவே யிருந்தார்களென்றும் ஏன் கொள்ளவேணுமென்னில்; இங்ஙனே கொள்ளவேண்டிய ஆவச்யகதைக்கு நிதாநம் சொல்லுகிறது.—(1) ஆழ்வார் ப்ரஹ்மநிஷ்டராகில் * ஏபாவம் பரமே * என்கிற பாசுரம் சேராது (2) ஆழ்வார்கள் பக்கலில் உபதேசம் கேட்டவர்கள் ஸம்வத்ஸரவாஸிகளாகில் * பயனன்ருகிலும் பாங்கல்லராகிலும் செயல்நன்ருகத் திருத்திப்பணிகொள்வான் * என்கிற பாசுரம் சேராது—(என்று இங்ஙனே யோஜித்துக்கொள்ளவேணும்.

(மூ.) 207. மெய்ந்நின்று மங்கவொட்டுக்கு நடுவு அநுபவகர்ப்போபதேசம்.

[பரோபதேச தசையிலும் பகவதநுபவம் இடையருதென்றல்]

(ப.) 207. மெய்ந்நின்று மங்கவொட்டுக்கு நடுவு—* மெய்ந்நின்று கேட்டருளாயடியேன் செய்யும் விண்ணப்பமே* என்றது முதல் * மங்கவொட்டுன் மாமாயை * என்றதளவாக நடுவுள்ள நாலு ப்ரபந்தமும்,

அநுபவ கர்ப்ப உபதேசம்—அநுபவம் உள்ளே செல்லா நிற்கச் செய்தே யுண்டான பரோபதேசம். .... ... . .... (207)

(தா.) 207. (பரோபதேச தசையிலும் பகவதநுபவம் இடையருதென்னல்) ஆழ்வார் பரோபதேச பரராமளவில் இவர்க்கு (அக்காலத்தில்) பகவதநுபவம் இடையற்றதாகாதோவென்னில்; ஆகாது. * மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணபபமே * என்றது முதல் மங்கவொட்டுன்மாமாயை * என்கிறதளவாக நடுவுள்ள நான்கு திவ்யப்ரபந்தங்களும், அநுபவமுள்ளே செல்லாநிற்கச் செய்தே யுண்டான பரோமதேசம். ஆழ்வார் தமக்கு அநுபவகர்ப்பமான உபதேச

மும் உபதேச கர்ப்பமான அநுபவமுமாய்ச் செல்லும் என்றிறே நம் முதலிகள் அருளிச்செய்வது. ஆகையால் இவர்க்கு அநுபவவிச்சேதம் ஒருகாலுமில்லை. (207)

(மூ.) 208. இவற்றுக்கு மந்த்ர வித்யாநுஸந்தாந ரஹஸ்யங்களோடே சேர்த்தி.

[ஆழ்வாருடைய நான்கு ப்ரபந்தங்களும் ரஹஸ்யத்ரயார்த்த ப்ரதிபாதகமென்றல்]

(ப.) 208. இவற்றுக்கு—திருவிருத்தம் முதலான நான்கு திவ்யப்ரபந்தங்களுக்கும்,

மந்த்ர ரஹஸ்ய, விதிரஹஸ்ய, அநுஸந்தாந ரஹஸ்யங்களோடே சேர்த்தி—திருமந்த்ரம், சரமச்லோகம், த்வயம் ஆகிய ரஹஸ்யத்ரயத்தோடே சேர்த்தி. ... (208)

(தா.) 208. (ஆழ்வாருடைய நான்கு ப்ரபந்தங்களும் ரஹஸ்யத்ரயார்த்த ப்ரதிபாதகமென்னல்.) நம்மாழ்வாருடைய பிரபந்தங்கள் நான்குக்கும் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகமாகிற ரஹஸ்யத்ரயத் தோடே சேர்த்தி (அதாவது—ரஹஸ்ய த்ரயத்தில் ஸங்க்ரஹமாகவும் நுட்பமாகவும் காட்டப்பட்டிருக்கின்ற பொருள்களே இந்த நான்கு ப்ரபந்தங்களில் விரிவாக உரைக்கப்படுகின்றன வென்றவாறு. ['மந்த்ர வித்யநுஸந்தான ரஹஸ்யங்களோடே'' என்ற மூலத்திற்கு—மந்த்ரரஹஸ்யமென்ன, விதிரஹஸ்யமென்ன, அநுஸந்தானரஹஸ்யமென்ன இவற்றோடே என்று பொருள். மந்த்ரரஹஸ்யமென்றது திருமந்த்ரமாகிற ரஹஸ்யம் என்றபடி. விதி ரஹஸ்ய மென்றது ஸித்தோபாய வரணத்தை ஸாங்கமாக விதிக்கிற சரமச்லோகம் என்றபடி அநுஸந்தாநரஹஸ்யமென்றது உபயவரணத்தையும் உபேய ப்ரார்த்தநை யையும் ஸக்ரமமாக ப்ரகாசிப்பியா நின்றுகொண்டு காலக்ஷேபத்துக்கும் போகத் துக்குமாக ஸாரஜ்ஞராலே ஸதா அநுஸந்தானம் செய்யப்படும் த்வயம் என்றபடி.]

(மூ.) 209. அளிப்பானடியேனடைக்கலம் சூடிய பொய்யாதானுமழுந்தாரென்று ஸ்வரூபவிரோதி நிவ்ருத்திகளையும், தாமரையுந்திப் பெருமாமாயன் ஆளாகவே வாழியவென்று ப்ராப்யபலங்களையும், நெறிகாட்டி மனத்துக்கொண்டு கண்ணனுலடித்துக் கண்டிலமால் யாதாகிலென்று உபாயத்தையுஞ் சொன்னவை மந்த்ரச்லோகங்களோடே சேரும்.

[இன்ன ப்ரபந்தத்திற்கு இன்னரஹஸ்யத்தோடே சேர்த்தியென்பதை வகையிட்டு விளக்குதல்]

[எந்த ப்ரபந்தத்திற்கு எந்த ரஹஸ்யத்தோடே சேர்த்தி யென்னில்; திருவிருத்தமும் திருவாசிரியமும் சேர்ந்து திருமந்த்ரார்த்த விவரணமாகின்றது; (அதாவது, திருவிருத்தம் பிரணவத்தையும் நமஃபதத்தையும் விவரிக்கிறது; திருவாசிரியம் 'நாராயணாய' என்பதை விவரிக்கிறது;) பெரிய திருவந்தாதி சரம ச்லோகத்தை விவரிக்கிறது ]

(ப.) 209. அளிப்பான் அடியேன்—(திருவிருத்தத்தில்) "உயிரளிப்பான்" என்பது அகாரார்த்தம்; "அடியேன்" என்பது மகாரார்த்தம்;

அடைக்கலம்—"அடியேனடியாவி யடைக்கலமே" என்பது ஆத்ம ஸமர்ப் பணம்; (ப்ரணவத்திற்கு முழுப்பொருள் ஆத்ம ஸமர்ப்பணமென்க)

சூடிய—"திருமால் திருப்பேர் வல்லாரடிக் கண்ணி சூடிய மாறன்" என்று பிரணவத்தில் அநுஸந்தேயமான பாகவத சேஷத்வம்;

பொய்யாதானும் அழுந்தார்—* பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும் * என்றும் * யாதானுமோ ராக்கையில்புக்கு அங்காப்புண்டு மாப் பவிழ்ந்தும் * என்றும் *வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்து அழுந்தார்* என்றும் நமः பதார்த்தமான விரோதி நிவ்ருத்தி;

என்று ஸ்வரூப-விரோதி நிவ்ருத்திகளையும்—ஆக இவ்வளவும் ஸர்வரக்ஷகனை ஸர்வேச்வரனுக்கு அநந்யார்ஹ சேஷமாய் ததீய சேஷத்வபர்யந்தமாயிருக்கும் ஆத்மஸ்வருபத்தையும், ஸம்ஸாரத்திற்கடியான அவித்யை முதலான விரோதி களின் நிவ்ருத்தியையும் சொல்லுகிற திருவிருத்தம் திருமந்த்ரத்தில் ப்ரணவ நமஸ் ஸுக்களோடு சேர்ந்திருக்கும்;

தாமரையுந்தி, பெருமாமாயன்—(திருவாசிரியம்) * தாமரையுந்தித் தனிப்பெரு நாயக * என்று தொடங்கி * எம்பெருமா மாயனையல்லது * என்று தலைக்கட்டுகை யாலே நாராயணபதத்தில் சொல்லப்படுகிற உபய விபூதி யுக்தமான ப்ராப்ய வஸ்துவையும்,

ஆளாகவே வாழியவென்று—* தனிமாத் தெய்வத்தடியவர்க்கினி நாமாளாகவே யிசையுங்கொல் * என்றும் * ஊழி தோறூழி யோவாது வாழியவென்று யாந்தொழ விசையுங்கொல் * என்றும் நாராயண பதத்தில் சதுர்த்தியின் அர்த்தமான பல ஸ்வருபத்தையுஞ் சொல்லுகையாலே,

ப்ராப்ய பலன்களையும் சொன்னவை—ப்ராப்யம் பலன் ஆகிற விரண்டையும் பேசுகிற திருவாசிரியமானது ப்ரக்ருதி ப்ரத்யயாம்சங்களாலே இவ்விரண்டையும் சொல்லுகிற * நாராயணுயவோடே சேர்ந்திருக்கையாலே இரண்டு ப்ரபந்தமும்,

மந்த்ரத்தோடே சேரும்—திருமந்த்ரத்தோடே சேரும்;

நெறிகாட்டி—(பெரிய திருவந்தாதி) * நெறிகாட்டி நீக்குதியோ * என்று, உபாயாந்தரங்களைக் காட்டி என்னை அகற்றப்பார்க்கிருயோ? என்கையாலே * ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய * என்கிற உபாயாந்தரங்களின் பரித்யாஜ்யத்வம் சொல்லிற்று;

மனத்துக்கொண்டு—* வெங்கோட்டேறேழுடனே கொன்றுனையே மனத்துக் கொண்டு * என்று * மாமேகம் சரணம் வ்ரஜ * என்கிற உபாய ஸ்வீகாரம் சொல்லிற்று;

கண்ணனல் அடித்து கண்டிலமால் யாதாகில் என்று—* சீரார் மனத்தலை வன்துன் பத்தை மாற்றினேன் வானேரினத்தலைவன் கண்ணனல் யான் * என்றும் *எம்பிறை யார் தந்த அருளென்னுந் தண்டாலடித்து—வல்வினையைக் கானும் மலையும் புகக் கடிவான் * என்றும் * வானே மறிகடலோ—வன்துயரை மருங்கு கண்டிலமால் * என்றும், * அடர் பொன்முடியானை—யாதாகில் யாதேயினி * என்றுமுள்ள பாசுரங் கள் சரமச்லோகத்தின் பிற்பகுதியைப் பூர்த்தியாக விவரிப்பன;

என்று உபாயத்தையும் சொன்னவை—ஆகவிப்படி உபாய ப்ரதிபாதகமாயிருக்கிற பெரிய திருவந்தாதி,

ச்லோகத்தோடே சேரும்—சரமச்லோகத்தோடே சேரும். ... (209)

(தா.) 209. எந்த ப்ரபந்தத்திற்கு எந்த ரஹஸ்யத்தோடே சேர்த்தியென்னில், அது நிருபிக்கப்படுகிறது திருவிருத்தமும் திருவாசிரியமும் சேர்ந்து திருமந்த்

ரார்த்த விவரணமாகின்றது, ப்ரணவத்தையும் நமః பதத்தையும் விவரிக்கிறது திருவிருத்தம். நாராயணாய என்பதை விவரிக்கிறது திருவாசிரியம். சரமச்லோகத்தை விவரிக்கிறது பெரிய திருவந்தாதி. ... ... ... (209)

(மூ.) 210. **த்வயார்த்தம் தீர்க்க சரணாகதி யென்றது ஸாரஸங்க்ரஹத்திலே.**

[திருவாய்மொழி த்வயார்த்த விவரணமென்பது]

(ப.) 210. **தீர்க்க சரணாகதி**—தீர்க்க சரணாகதி ப்ரபந்தமென்று ஸம்ப்ரதாய வித்துக்களால் கொண்டாடப்பட்ட திருவாய்மொழியாயிரமும்,

**த்வயார்த்தம்**—த்வயம் என்கிற ரஹஸ்யத்தின் விவரணம்,

**என்றது**—என்று நிரூபணம் பண்ணியிருப்பது,

**ஸாரஸங்க்ரஹத்திலே**—பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யங்களுள் ஒன்றான ஸாரஸங்க்ரஹமென்னும் ரஹஸ்யத்திலே காணத்தக்கது. (210)

(தா.) 210. (திருவாய்மொழி த்வயார்த்த விவரணமென்பது) சரமப்ரபந்தமான திருவாய்மொழியானது த்வயத்தின் பொருளை ப்ரதிபாதிக்கிற தென்னுமிடம் விரிவாக உபபாதிக்க வேண்டுகையாலும், இதைப்பற்றித் தம்முடைய திருத்தமையனாரான பிள்ளைலோகாசார்யர் ஏற்கனவே ஒரு ப்ரபந்தம் இட்டருளியிருக்கையாலும் அதிலே கண்டு கொள்வது என்கிற திருவுள்ளத்தோடே "**த்வயார்த்தம் தீர்க்க சரணாகதி யென்றது ஸாரஸங்க்ரஹத்திலே**" என்றாராயிற்று. ... ... (210)

(மூ.) 211. **மூன்றில் சுருக்கிய ஐந்தையும் உயர் திண்ணணை ஒன்று பயிலேறு கண் கருவீடு சொன்னால் ஒருக்கொண்ட நோற்ற நாலும் எம்மாவொழிவில் நெடுவேய் என்கிற இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும், அருளினன் வீடு பெற்றவென்கையாலே ஐந்திலுமிரண்டையும், தொழுது களித்தேன் சொல்லுப்பெற்றேன் பணிசெய் என்கிற முக்தலக்ஷண வ்ருத்தியாலே இரண்டிலொன்றையும் இதுக்கு ப்ரமேயமென்னும்.**

[திருவாய்மொழிக்கு மற்றும் சில அர்த்தயோஜனைகளுமுண்டென்றல்.]

(ப.) 211. **மூன்றில் சுருக்கிய ஐந்தையும்**—திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதியாகிற மூன்று திவ்வியப் பிரபந்தங்களில் சுருக்கமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தையும், (இருபதிலே விசதமாக்கி என்பதோடே இதற்கு அந்வயம்.)

**உயர் திண் அணை ஒன்று**—* உயர்வறவுயர்நலம் * திண்ணன்வீடு * அணைவதரவணைமேல் * ஒன்றுந்தேவு * ஆகிய நான்கு பதிகங்களினால் பரஸ்வரூபம்.

**பயில் ஏறு கண் கரு**—* பயிலுஞ் சுடரொளி * ஏறாளுமிறையோன் * கண்கள் சிவந்து * கருமாணிக்கமலை * ஆகிய நான்கு பதிகங்களினால் ஸ்வஸ்வரூபம்,

**வீடு சொன்னால் ஒரு கொண்ட**—* வீடுமின் முற்றவும் * சொன்னால் விரோதம் * * ஒருநாயகம் * கொண்ட பெண்டிர் * ஆகிய நான்கு பதிகங்களினால் விரோதி ஸ்வரூபம்,

**நோற்ற நாலும்**—* நோற்ற நோன்பு * என்கிற பதிகந் தொடங்கி வரிசையாக நான்கு பதிகங்களினுல் உபாய ஸ்வரூபம்,

**எம்மா ஒழிவில் நெடு வேய் என்கிற**—* எம்மா வீட்டுத்திறமும் * ஒழிவில் கால மெல்லாம் * நெடுமாற்கடிமை * வேய்மரு தோளிணை * என்கிற நான்கு பதிகங்களினுல் புருஷார்த்த ஸ்வரூபம்—ஆக இப்படி,

**இருபதிலே விசதமாக்கி**—இருபது பதிகங்களிலே விசதமாக விளக்கி, (மூன்றில் சுருக்கிய ஐந்தையும் விசதமாக்கி என்று அந்வயமாயிற்று.)

**எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும் இதுக்கு ப்ரமேயமென்னும்**—மற்றை யெண்பது பதிகங்களினுலும் அத்தை விஸ்தரிக்கையாலே திருவாய்மொழி யாயிரத்திற்கும் அர்த்த பஞ்சகம் ப்ரமேயமென்று சொல்லப்படும்;

**அருளினன் வீடுபெற்ற வென்கையாலே ஐந்திலு மிரண்டையும் இதுக்கு ப்ரமேய மென்னும்**—* மயர்வற மதிநல மருளினன் * என்று தொடங்கி அருளாகிற உபாயத்தைச் சொல்லி, * அவாவற்று வீடு பெற்ற * என்று உபேயத்தைச் சொல்லித் தலைக் கட்டுகையாலே [உபக்ரமோப ஸம்ஹார த்ருஷ்டியாலே] அர்த்த பஞ்சகத்தினுள்ளும் ப்ரதாநமான உபாயோபேயங்க ளிரண்டே திருவாய்மொழி யாயிரத்திற்கும் ப்ரமேய மென்று சொல்லப்படுவது முண்டு;

**தொழுது களித்தேன் சொல்லுப் பெற்றேன் பணிசெய் என்கிற முக்த லக்ஷண வ்ருத்தியாலே இரண்டி லொன்றையும் இதுக்கு ப்ரமேயமென்னும்**—* தொழுதெழென் மனனே * * விருப்பே பெற்றமுதமுண்டு களித்தேனே * மேலைத்தொண்டு உகளித்து அந்தி தொழுஞ் சொல்லுப் பெற்றேன் * என்று சொல்லப்படுகிற * பத்தாஞ்ஜலி புடத்வஹ்ருஷ்டத்வ நம இத்யேவ வாதித்வங்களாகிற (ச்வேதத்வீபவாஸி) முக்தலக்ஷணத்தாலும், * தத்விப்ராஸோ விபந்யவ:* என்கிற அவர்களைப் போலே * சொற்பணி செயாயிரம் * என்று சொல்லப்படுகிற வாசிகவ்ருத்தியாலும், கீழ்ச்சொன்ன இரண்டர்த்தங்களுள் கைங்கர்யமென்னும் உபேயமாகிற ஓரர்த்தமே திருவாய்மொழி யாயிரத்திற்கும் ப்ரமேயமென்று சொல்லப்படுவதுமுண்டு. ... (211)

(நா.) 211. (திருவாய்மொழிக்கு மற்றும் சில அர்த்தயோஜனைகளு முண்டென்னல்.) திருமந்த்ரத்திலும் சரம ச்லோகத்திலும் ஸங்க்ரஹமாகக் கூறப்பட்ட அர்த்த விசேஷங்களை த்வயத்தில் விவரிப்பது போலே, திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதியாகிற முந்தின பிரபந்தங்கள் மூன்றிலும் சுருக்கமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தைத் திருவாய்மொழியில் இருபது பதிகங்களிலே விசதமாகவுரைத்து, மற்றை யெண்பது பதிகங்களாலும் அது தன்னையே விஸ்தரிக்கிறபடியினுல் அர்த்த பஞ்சகத்தையும் திருவாய்மொழிக்கு ப்ரமேயமாக நிர்வஹிக்கிற புடையொன்றுண்டு. அந்த ஐந்து அர்த்தங்களினுள்ளும் ப்ரதானமான உபாயோபேயங்களிரண்டையுமே இதற்கு ப்ரமேயமாக நிர்வஹிக்கிற புடையுமுண்டு. அவ்விரண்டினுள்ளும் உபேயமொன்றையுமே இதுக்கு ப்ரமேயமாக நிர்வஹிக்கிற புடையுமுண்டு. ... ... ... (211)

(மூ) 212. ரஹஸ்யத்துக்கு ஓரெழுத்தும் அதுக்கு ஒருருவும் போலேயானவற்றிலே, இமையோரதிபதி அடியேன் மனனே பொய்மயர்வு பிறந்தருளினன் விண்ணப்பம் தொழுதெழென்ற பஞ்சகத்தோடே, அவித்யாதிஸ்வரூப ஸ்வபாவ, ஆத்மேச்வரபந்த, ரக்ஷணக்ரம, குண, விக்ரஹ, விபூதியோக, ததீயாபிமாந, உபதேசவிஷய, அந்யாபதேச ஹேத்வாதிகளும் ஸங்க்ருஹீதம்.

[திருவிருத்தத்தின் முதற்பாசுரத்திலும் திருவாய்மொழியின் முதற்பாசுரத்திலுமுள்ள அர்த்த விசேஷங்களை அருளிச்செய்தல்]

(ப.) 212. ரஹஸ்யத்துக்கு ஓரெழுந்துப்போலே—திருமந்த்ரமாகிற ரஹஸ்யத்துக்கு ஸங்க்ரஹமாக ஏகாக்ஷரமான ப்ரணவம் அமைந்தது போலவும்,

அதுக்கு ஒருருவும்போலேயானவற்றிலே—அந்த ப்ரணவத்துக்கும் ஸங்க்ரஹமாக * ஓரெழுத்தோருருவானவனே * என்னும்படியான அகாரம் அமைந்ததுபோலவும் திருவிருத்தம் திருவாய்மொழியாகிற ப்ரதம சரமப்ரபந்தங்களிரண்டுக்கும் ஸங்க்ரஹமாயமைந்த முதற்பாட்டுக்களிலே, [* பொய்ந்நின்ற ஞானமும் * உயர்வற வுயர்நலம் * என்கிற பாட்டுக்களிலே யென்றபடி.]

இமையோர் அதிபதி—* இமையோர் தலைவா * அயர்வறுமமரர்களதிபதி * என்று பரஸ்வரூபத்தையும்,

அடியேன் மனனே—* அடியேன் செய்யும் * என்றும் * என்மனனே * என்றும் ஸ்வஸ்வரூபத்தையும்,

பொய் மயர்வு—*பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்* என்றும் * மயர்வு * என்றும் விரோதி ஸ்வரூபத்தையும்,

பிறந்து அருளினன்—* உயிரளிப்பானெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் * என்றும் * மதிநலமருளினன் * என்றும் உபாய ஸ்வரூபத்தையும்,

விண்ணப்பம் தொழுதெழு—* செய்யும் விண்ணப்பம் * தொழுதெழு * என்று புருஷார்த்த ஸ்வரூபத்தையுமாகக் கொண்டு,

என்ற பஞ்சகத்தோடே—இப்படி ஸங்க்ரஹித்துச் சொன்ன அர்த்த பஞ்சகமும்,

அவித்யாதி ஸ்வரூப ஸ்வபாவ ஆத்மேச்வர பந்த ரக்ஷணக்ரம குண விக்ரஹ விபூதி யோக ததீயாபிமாந உபதேச விஷய அந்யாபதேச ஹேத்வாதிகளும் ஸங்க்ருஹீதம்—அவித்யை முதலானவற்றின் ஸ்வரூப ஸ்வபாவங்களென்ன, ஆத்மாவுக்கு மீச்வரனுக்கு முண்டான சேஷ சேஷி பாவ ஸம்பந்தமென்ன, எம்பெருமான் அவதாரங்களைப் பண்ணி ரக்ஷிக்கும்படி யென்ன, அவனுடைய திருக்குணங்கள் திருமேனி விபூதிகள் இவையென்ன, அவனடியார்களை முன்னிடுகையாகிற ததீயாபிமாந மென்ன, ஆழ்வாருடைய உபதேசத்திற்கு லக்ஷ்யமானவை யென்ன, அந்யாபதேசப் பாசுரங்களுக்கு ஹேதுவென்ன இவை முதலானவையும் ஸங்க்ரஹேண சொல்லப்பட்டுள்ளன. [இதன் விவரணம் தாத்பர்யஸாரத்திலே கண்டுகொள்வது]

(தா.) 212. இனி, ப்ரதம ப்ரபந்தமும் சரமப்ரபந்தமுமான திருவிருத்தம் திருவாய்மொழிகளினுடைய ஸங்க்ரஹங்களான முதற்பாட்டுக்களில் பிரதிபாதிக்கப் பட்டுள்ள அர்த்த விசேஷங்கள் பலவும் நிரூபிக்கப்படுகின்றன.—ரஹஸ்யத்துக்கு

ஓரெழுத்தும், அதுக்கு ஒருருவும் போலேயானவற்றிலே என்கிற மூலத்திற்குப் பொருளாவது -: ரஹஸ்யத்துக்கு—திருமந்த்ரமாகிற ரஹஸ்யத்துக்கு, ஓரெழுத்துப்போலே—"ஓமித்யேகாக்ஷரம்" என்று ஓரெழுத்தாயிருக்கிற ப்ரணவம் எப்படி ஸங்க்ரஹமாயிருக்கிறதோ, அப்படியும்; அதுக்கு—அந்த ஏகாக்ஷரமான ப்ரணவத்துக்கு, ஓருருவும்போலே—ஓர் அவயவமாயிருக்கிற அகாரம் எப்படி ஸங்க்ரஹமாயிருக்கிறதோ அப்படியும்; ஆனவற்றிலே—நூறுபாட்டுக்கு ஸங்க்ரஹமாயிருக்கின்ற * பொய்நின்ற ஞானத்திலும், ஆயிரம் பாட்டுக்கு ஸங்க்ரஹமாயிருக்கின்ற * உயர்வறவுயர் நலத்திலும் என்றபடி.

மேற்குறித்த முதற்பாட்டுக்களிரண்டிலும் அர்த்த பஞ்சகம் ஸங்க்ரஹேண ப்ரதிபாதிக்கப்பட் டிருக்கின்றமை காண்க. அவ்வளவேயுமல்லாமல், அவித்யாதி ஸ்வரூப ஸ்வபாவம் ஆத்மேச்வர பந்தம் ரக்ஷணக்ரமம் குணயோகம் விக்ரஹ யோகம் விபூதியோகம் ததீயாபிமாநம் உபதேச விஷயம் அந்யாபதேச ஹேது இவை முதலான விஷயங்களும் ஸங்க்ரஹிக்கப்பட்டிருக்கின்றமை காண்க. (இவை நமது விரிவுரையிலே பரக்கக் காண்க.) ... ... (212)

(மூ.) 213. அடி தொழுதெழென்றவிதிலே வஸ்துநிர்த்தேச,
நமஸ்கார, ஆசீஸ்ஸுக்களுமுண்டு.

[மங்களாசரணமும் உண்டென்று காட்டுதல்]

(ப.) 213. அடிதொழுது எழு என்றவிதிலே—* துயரறு சுடரடி தொழுதெழென் மனனே * என்ற இப்பாசுரத்திலே,

வஸ்துநிர்தேச நமஸ்கார ஆசீஸ்ஸுக்களுமுண்டு—* துயரறு சுடரடி * என்கையாலே வஸ்து நிர்தேசமும், * தொழுது * என்கையாலே நமஸ்காரமும், * என் மனனே எழு * என்கையாலே ஆசீஸ்ஸும் ஆகவிப்படி ப்ரபந்தாரம்பத்திலே ஆசரிக்கப்படும் ஆசீர் நமஸ்க்ரியா வஸ்துநிர்தேசங்களாகிற மங்களாசாரங்களும் இதிலேயுண்டு. ... ... ... ... (213)

(நா.) 213. [மங்களாசரணமும் உண்டென்று காட்டுதல்) நூல்கள் இடையூறின்றித் தலைக்கட்டுதற்காகவும், மிக்க தாமதமின்றி விரைவில் நிறைவேறுதற்காகவும் பிரபந்தத்தொடக்கத்திலே ஆசீர் நமஸ்கார வஸ்துநிர்த்தேசங்களாகிற மங்களாசரணம் அனுட்டிப்பதொரு முறைமையுண்டு; ஆழ்வார் 'நாம் ஒரு ப்ரபந்தம் பண்ணவேணும்' என்று கருதியிருந்து நிருமித்ததன்றிக்கே * நிரம்பினவேரி தெளிக்குமாபோலே நிமிகிறவாய்கரைமிடைந்து புறப்பட்ட சொற்கள் இவர் பாசுரத்தாலே லோகத்தைத் திருத்தத் திருவுள்ளம்பற்றின எம்பெருமானுடையநினைவாலே ஸகல லக்ஷண ஸம்பந்நமாய்த் தலைக்கட்டின ப்ரபந்தமாகையாலே இந்த மங்களாசரணமும் கோல்விழுக்காட்டாலே பலித்தது. எங்ஙனேயென்னில்; *துயரறுசுடரடி* என்பதனுல் வஸ்துநிர்த்தேசருபமான மங்களம்; * தொழுது * என்பதனுல் நமஸ்காரருபமங்களம்; * எழு * என்பதனுல் ஆசீஸ் எனப்படும் மங்களம். ... (213)

(மூ.) 214. சாதுசனம் நண்ணு, மயர்வற மாசறுக்கும் தெருள் கொள்ளப் பத்தராவர், அடிமையறவுரிய, நோய்களறுக்கும் உடைந்து, ஏற்றரும்

வானின் தாளின் கீழடிக்கீழ் இன்பக்கதி பயக்கும் ஊடுபுக்கு மூவுலகு முருகா நீர்பரேன்னும் ஸாம்யத்தாலே வாச்யன் பத்தினைய தோற்றம் போலே தோற்றங்களாயிரத்தின் பத்துப் பத்தான வீதின் ஆவிர்ப்பாவம்

[திருவாய்மொழி பத்துப்பத்தாக அவதரித்தவழகை நிருபித்தல்]

(ப) 214. சாதுசனம் நண்ணு— * சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு * என்றும் * பரித்ராணாய ஸாதூநாம் * என்றும் சொல்லுகிறபடியே ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களை சிக்ஷிப்பதற்காகவும் எம்பெருமான் அவதரித்தாப்போலே, திருவாய்மொழியும் * நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த—பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத்தான் பாடி * என்கிற படியே ஆஸுரப்ரக்ருதிகள் மாளவும் தேவப்ரக்ருதிகள் வாழவும் அவதரித்தது;

மயர்வற மாசறுக்கும் தெருள்கொள்ளப் பத்தராவர்— * மயர்வற மதிநலமருளினன் * என்று எம்பெருமான் அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞானபக்திகளைக் கொடுக்குமா போலே, திருவாய்மொழியும் * ஒலிபுகழாயிரத்திப்பத்து உள்ளத்தைமாசறுக்குமே * * தெருள்கொள்ளச் சொன்னவோராயிரம் * தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர் * என்கிறபடியே அஜ்ஞானத்தைப்போக்கி ஜ்ஞானபக்திகளை யுண்டாக்க அவதரித்தது;

அடிமையற உரிய— * வெறித்துளப முடியானே வினையேனை யுனக்கடிமை யறக் கொண்டாய் * என்கிறபடியே எம்பெருமான் தனக்கு அநந்யார்ஹ சேஷமாக அங்கீகரிக்குமாபோலே, திருவாய்மொழியும் * தெரியச்சொன்ன வோராயிரத்துளிப்பத்து உரிய தொண்டராக்கு முலகமுண்டாற்கே * என்று. அநந்யார்ஹ சேஷமாக்க அவதரித்தது;

நோய்களறுக்கும் உடைந்து— * அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்து * என்று எம்பெருமான் ஸம்ஸார வியாதிக்கு மருந்தாமாப்போலே, திருவாய்மொழியும் * மிடைந்த சொல்தொடையாயிரத்துளிப்பத்து உடைந்து நோய்களை யோடுவிக்குமே * என்று, ஸாம்ஸாரிக ஸகல துரிதங்களையும் உருமாய்ந்துபோம்படிபண்ண அவதரித்தது;

ஏற்றரும் வானின்— * ஏற்றரும் வைகுந்தத்தை யருளும் நமக்கு * என்று எம்பெருமான் பரமபதத்தைக் கொடுக்குமாபோலே, திருவாய்மொழியும் * கோனைவண் குருகூர்வண் சடகோபன் சொன்ன வாயிரத்துளிப்பத்தும் வானின் மீதேற்றி யருள் செய்து * என்கிறபடியே பரமபதப்ராப்தியைப் பண்ணுவிக்க அவதரித்தது;

தாளின்கீழ் அடிக்கீழ்— * பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யும் சேமத்தை * என்கிறபடியே எம்பெருமான் தன் திருவடிகளின் கீழே சேர்த்துக்கொள்ளுமாபோலே, திருவாய்மொழியும் * ஆயிரத்துளிப்பத்து அருளியடிக் கீழிருத்தும் * என்று, அவன் திருவடிகளின் கீழே சேர்த்துவைக்க அவதரித்தது;

இன்பக்கதி பயக்கும்— * இன்பக்கதி செய்யுந் தெளிவுற்ற கண்ணனை * என்கிற படியே எம்பெருமான் தன்னோடு அந்வயித்தவர்களுக்குத் தன்னுடைய அநுபவமாகிற ஆனந்தத்தைக் கொடுக்குமாபோலே திருவாய்மொழியும் * எங்ஙனே சொல்லிலு மின்பம்பயக்குமே * என்று பகவதநுபவானந்தத்தை யுண்டாக்க அவதரித்தது;

ஊடுபுக்கு மூவுலகுமுருகாநிற்பர்—* ஊடுபுக்கெனதாவியை யுருக்கி யுண்டிடுகின்ற நின்றன்னை * என்று, எம்பெருமான் தன்னையநுபவிக்க இழிந்தவர்களை நீர்ப் பண்டமா யுருக்குமாபோலே திருவாய்மொழியும் *ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே * இவையுமொரு பத்தும்வல்லார் ஊற்றின்கண் நுண்மணல்போலுருகா நிற்பர் நீராயே * என்கிறபடியே தன்னை யநுபவிக்க விழிந்தவர்களை நீராயுருகச் செய்ய அவதரித்தது;

என்னும் ஸாம்யத்தாலே—ஆகவிப்படி அவனோடு ஸாம்யத்தையுடைத்தாகை யாலே,

வாச்யன்பத்தினையதோற்றம்போலே—திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனான ஸர்வேச்வரனுடைய பத்தவதாரம்போலே,

தோற்றங்களாயிரத்தின் பத்துப்பத்தானவிதின் ஆவிர்ப்பாவம்—* பத்தினையதோற்றமோடு * என்று அவனுக்குச் சொன்னதுபோலவே * தோற்றங்களாயிரம் * என்னப் பெற்றவித் திருவாய்மொழியினுடைய பத்துப்பத்தான ஆவிர்ப்பாவமென்னத்தகும்.

(தா.) 214. (திருவாய்மொழி பத்துப் பத்தாக அவதரித்தவழகை நிருபித்தல்.) திருவாய்மொழி பத்துப் பத்தாக அவதரித்திருப்பதை நோக்கினால் எம்பெருமான் தசாவதாரங்கள் செய்தது போலே இதுவும் இங்ஙனே பத்து அவதாரங்கள் செய்ததோ! என்னலாம்படி யிராநின்றது. இவ்வளவுமாத்திரமேயன்று; எம்பெருமானுடைய அவதாரங்களுக்கு என்ன என்ன ப்ரயோஜனங்களோ அந்த ப்ரயோஜனங்களெல்லாம் திருவாய்மொழியின் ப்ராதுர்ப்பாவத்திற்குமுள்ளன—என்னுமிடம் ஆழ்வா ரருளிச்செயல்களையே கொண்டு வெகு அழகாக நிருபிக்கப்படுகிறது.

(மூ.) 215. ஐந்தினோடு ஒன்பதோடு ஒருபத்தென்னுமவைபோலே
நூறே சொன்ன பத்துநூறு ஓராயிரமென்றதும் ஸாபிப்ராயம்.

[சில நிர்த்தேசங்களுக்கு ஸாபிப்ராயத்வ முண்டென்றல்]

(ப.) 215. ஐந்தினோடு என்னுமதுபோலே—முன்னே ஐந்து பாட்டுக்கொரு கருத்தும் பின்னே ஐந்து பாட்டுக்கொரு கருத்துமாக இருப்பதுகொண்டு * ஐந்தினோடைந்தும் வல்லார் * என்று சொல்லது போலவும்,

ஒன்பதோடு என்னுமதுபோலே—ஒன்பது பாட்டுக்கொருகருத்தும் ஒருபாட்டுக்கொரு கருத்துமாக இருப்பதுகொண்டு * ஒன்பதோடொன்றுக்கும் * என்று சொன்னது போலவும்,

ஒருபத்துஎன்னுமதுபோலே—பத்துப்பாட்டுக்கும் சேர ஒரு கருத்தாயிருப்பது கொண்டு * பாடலோராயிரத்துளிவையு மொருபத்து* என்று சொன்னது போலவும்,

நூறே சொன்ன என்றதும்—* நூறே சொன்ன வோராயிரம் * என்றதும்,

பத்து நூறு என்றதும்—* பத்து நூற்றுளிப்பத்து * என்றதும்,

ஓராயிர மென்றதும்— * தெரியச் சொன்ன வோராயிரம் * மிக்க வோராயிரம் * * அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் * என்றதும்,

ஸாபிப்ராயம்—பத்துக்கள் தோறும் வெவ்வேறு கருத்தாயும் ஆயிரத்துக்கும் சேரவொரு கருத்தாயும் இருப்பது பற்றியாகையாலே ஸாபிப்ராயம். .... (215)

(தா) 215. திருவாய்மொழியில் ஆங்காங்கு நிகமனப் பாசுரங்களில் பல வகையான நிர்த்தேசங்கள் காணப்படுகின்றன. "குருகூர்மாறன் சொல்லாயிரத்துள் ஐந்தினோடைந்தும் வல்லார்" என்று ஓரிடத்திலுள்ளது. "தென்குருகூர்ச் சடகோபன் சொல்லாயிரத்துளிவை, ஒன்பதோடொன்றுக்கும்" என்று ஓரிடத்திலுள்ளது. * 'பாடலோராயிரத்துள் இவையுமொருபத்தும்" என்றுப்போலே, 'ஒரு பத்தும் ஒரு பத்தும்' என்றே பலவிடங்களில் வருவதுண்டு;

"நூறே சொன்ன வோராயிரம்" என்றும், [பத்து நூற்றுளிப் பத்து என்றவிடத்தில்] பத்து நூறு என்றுமுள்ளது, * தெரியச் சொன்ன வோராயிரம் * மிக்க வோராயிரம் * அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் * என்றுமுள்ளது. இப்படி வகைவகையாகக் கூறுவதற்கெல்லாம் ஒவ்வொரு அபிப்ராய விசேஷமுண்டு. அவை ஆழ்ந்து ஆராய்ந்து அறியத்தக்கன. ... ... (215)

(மூ) 216. பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும்போலே
நூற்றுக்கு உபதேசப்பத்து

[ஒவ்வொரு சதகத்திற்கும் உசதேசபரமான பதிகம் பிரதானமென்றல்]
பாட்டுக்கு க்ரியை போலேயும், பத்துக்குக் கருத்துப்போலேயும் என்று பிரிக்க.)

(ப) 216. பாட்டுக்கு க்ரியை போலேயும்—பாட்டானல் க்ரியை யோடே [வினைமுற்றோடே] தலைக்கட்ட வேண்டுகையாலே பாட்டுக்கள் தோறும் க்ரியாபதம் முக்கியமாயிருப்பது போலவும்,

பத்துக்குக் கருத்துப் போலேயும்—ஓரொரு பதிகத்திற்கு உயிரான வொருபாட்டு முக்கியமாயிருப்பது போலவும்,

நூற்றுக்கு உபதேசப்பத்து—ஒவ்வொரு நூறு பாட்டுக்கும் உபதேச பரமான ஒவ்வொரு பதிகம் முக்கியமாயிருக்கும். .... ... (216)

(தா.) 216. (ஒவ்வொரு சதகத்திற்கும் உபதேச பரமான பதிகம் பிரதானமென்னல்.) ஒரு செய்யுள் இருந்தால் அதிலே வினைமுற்று ப்ரதானமாயிருக்கும்; க்ரியையோடே தலைக்கட்ட வேண்டுகையாலே. ஆகவே பாட்டுக்கள் தோறும் க்ரியாபதம் ப்ரதானமாயிருக்கு மென்னத்தட்டில்லை. ஒவ்வொரு பதிகத்திலும் ஒவ்வொரு பாட்டு ப்ரதானமாயிருக்கும். அதாவது, * அஞ்சிறையமடநாராய் என்கிற பதிகத்திற்கு அபராதஸஹத்வம் என்கிற குணம் ப்ரமேயம் என்றால் "என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்கிற பாசுரத்தில் நோக்காக அந்த ப்ரமேய நிஷ்கர்ஷம் பண்ணுகையாலே, இப்படி ஒவ்வொரு பதிகத்திற்கும் ஒவ்வொரு பாசுரம் உயிர்நிலையா யிருக்கும். இதுபோலவே நூறுபாட்டுக்குப் பரோபதேசபரமான பத்துப்பாட்டுக்கள் ப்ரதானமாயிருக்கும்.—செய்யுள்களுக்கு வினைமுற்றில் நோக்காயிருப்பதுபோலவும், பதிகத்திற்கு நிதானஞ்சொல்லு மொரு பாட்டிலே நோக்காயிருப்பதுபோலவும், நூறு பாட்டுக்குப் பரோபதேசபரமான பத்துப்பாட்டிலே நோக்காயிருக்குமென்றதாயிற்று.

முதற்பத்தில்—வீடுமின்முற்றவும்
இரண்டாம்பத்தில்—கிளரொளியிளமை.
மூன்றாம்பத்தில்—சொன்னால் விரோதம்.

நாலாம்பத்தில்—ஒன்றுந்தேவு.
அஞ்சாம்பத்தில்—பொலிகபொலிக.
ஆறும்பத்தில்—நல்குரவுஞ்செல்வும்.
ஏழாம்பத்தில்—இன்பம்பயக்க
எட்டாம்பத்தில்—எல்லியுங்காலையும்.
ஒன்பதாம்பத்தில்—மாலைநண்ணி.
பத்தாம்பத்தில்—கண்ணன்கழலிணை.

ப்ரகரணத்தில் ஒவ்வொரு சூர்ணிகையிலும் இவ்வர்த்தம் விசதமாகும்.(216)

(மூ.) 217. பகவத்பக்தபரங்கள் ஆச்ரயண விதிசேஷங்கள்.

[பாகவதப்ரபாவபரங்களான திருவாய்மொழிகளுக்குத் தாத்பர்யமின்னதென்றல்]

(ப) 217. பகவத் பக்த பரங்கள்—பகவத் பக்தர்களான பாகவதர்களின் பெருமையை விளக்குவதில் நோக்கான *பயிலுஞ்சுடரொளி* முதலான பதிகங்கள்,

ஆச்ரயண விதிசேஷங்கள்—பகவானை ஆச்ரயிக்கும்படி விதித்த * திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித்துய்மினோ * என்பது முதலான பாசுரங்களுக்கு சேஷ பூதங்கள். [பாகவத பக்தியுண்டானாலல்லது பகவத் பக்தி ஸபலமாக மாட்டா தாகையாலேயென்று கொள்க.] ... ... ... (217)

(தா.) 217. (பாகவதபரங்களான திருவாய்மொழிகளுக்குத் தாத்பர்ய மின்னதென்னல்.) எம்பெருமானைப்பற்றின ஸ்துதியாக ப்ரவ்ருத்தமான திருவாய் மொழியாயிரத்தில் * பயிலுஞ்சுடரொளி முதலான பாகவதபரங்களான திருவாய் மொழிகள் பகவதாச்ரயண விதிக்கு சேஷபூதங்கள். அதாவது, "திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்துய்மினோ" என்பது முதலான பாசுரங்களினால் விதிக்கப் படுகிற பகவதாச்ரயணமானது பாகவதர்களை யடிபணிந்தாலல்லது ஸித்திக்க மாட்டாதாகையாலே பகவதாச்ரயணவிதிக்கு இவை சேஷபூதங்களென்கை (217)

(மூ) 218. பரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியந்த்ருத்வ காருணிகத்வ சரண்யத்வ சக்தத்வ ஸத்யகாமத்வ ஆபத்ஸகத்வ ஆர்த்திஹரத்வ விசிஷ்டன் மயர்வை யறுக்க, தத்வவேதநமறப்பற்று ஜுகுப்ஸிபலமுக்தி தலைசேர நிஷ்கர்ஷித்து, மோக்ஷபலவ்ருத்த்செய்ய அர்த்தித்து, புருஷார்த்த பலாந்ய ருசியொழிந்து, விரக்திபலராகம் கழியமிக்கு, ப்ரேமபலோ பாயத்தே புகுந்து, ஸாதநபலோபகாரக் கைம்மாறின்றி, க்ருதஜ்ஞதா பல ப்ரதிக்ருதமானத்தை யுணர்த்து, ஆத்மதர்சநபலப்ராப்தி மரணாவதியாகப்பெற்று, காலாஸத்தி பலகதிக்குத் துணைகூட்டின தம்பேற்றைப் பிறரறியப் பத்துத்தோறும் வெளியிடுகிறார்.

[பரத்வம் முதலிய குணங்களோடுகூடிய எம்பெருமான் தமக்குப்பிறப்பித்த தசா விசேஷங்களைப் பத்துத்தோறும் வெளியிடுகிறாரென்று சுருக்கமாக வாக்கியார்த்த மருளிச்செய்தல்]

(பரத்வவிசிஷ்டன், காரணத்தவிசிஷ்டன், வ்யாபகத்வவிசிஷ்டன் என்று தனித்தனியே யோஜித்துக் கொள்க )

(ப.) 218. பரத்வவிசிஷ்டன்—திருவாய்மொழி முதற்பத்திலே ப்ரதிபாதிக்கப் பட்ட பரத்வகுணத்தோடு கூடினவனும்,

காரணத்வ விசிஷ்டன்—இரண்டாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட காரணத்வ குணத்தோடு கூடினவனும்,

வ்யாபகத்வவிசிஷ்டன்—மூன்ரும்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட வ்யாபன குணத் தோடு கூடினவனும்,

நியந்த்ருத்வவிசிஷ்டன்—நான்காம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட நியாமகத்வ குணத்தோடு கூடினவனும்,

காருணிகத்வவிசிஷ்டன்—ஐந்தாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட காருணிகத்வ குணத்தோடு கூடினவனும்,

சரண்யத்வவிசிஷ்டன்—ஆரும்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட சரண்யத்வ குணத் தோடு கூடினவனும்,

சக்தத்வவிசிஷ்டன்—ஏழாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஸர்வ சக்தியுக்தத்வ குணத்தோடு கூடினவனும்,

ஸத்யகாமத்வவிசிஷ்டன்—எட்டாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஸத்ய காமத்வ குணத்தோடு கூடினவனும்,

ஆபத்ஸகத்வ விசிஷ்டன்—ஒன்பதாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆபத் பந்துத்வ குணத்தோடு கூடினவனும்,

ஆர்த்தி ஹரத்வ விசிஷ்டன்—பத்தாம்பத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆர்த்தி ஹரத்வ குணத்தோடு கூடினவனுமான எம்பெருமான்,

மயர்வையறுக்க—* மயர்வற மதிநல மருளினன் * என்னும்படி பக்திரூபா பந்நஜ்ஞானத்தைக் கொடுத்து அஜ்ஞானத்தை ஸவாஸநமாகப்போக்க,

தத்வ வேதந மறப்பற்று—(அப்படி அஜ்ஞானம் போகப் பெற்றதனுலே) * மறப்பனேவினி யானென் மணியையே * என்னும்படி (முதற்பத்தில்) எம்பெரு மான் விஷயமான ஜ்ஞானத்தில் மறப்பில்லாதவராகி,

ஜ்ஞப்திபல முக்தி தலைசேர நிஷ்கர்ஷித்து—அந்த ஜ்ஞானத்தின் பலனுன மோக்ஷத்தை (இரண்டாம்பத்தில்) * நின்செம்மாபாதபற்புத் தலைசேர்த்து * என்று ஸ்வரூபாநுரூபமாக நிஷ்கர்ஷித்தவராகி,

மோக்ஷபலவ்ருத்தி செய்ய அர்த்தித்து—அந்த மோக்ஷத்திற்குப் பலன் கைங்கர்ய ரூப வ்ருத்தியாகையாலே அதனை (மூன்ரும்பத்தில்) * வழுவிலாவடிமை செய்ய வேண்டு நாம் * என்று வேண்டினவராகி,

புருஷார்த்த பல அந்ய ருசி யொழிந்து—அந்த புருஷார்த்தத்திற்குப் பலன் அந்யருசி யொழிகையாகையாலே அதன் பலமாக * ஐங்கருவி கண்ட வின்பம் சிற்றின்பம் ஒழிந்தேன் * என்று அந்ய புருஷார்த்தங்களில் ருசி குலையப் பெற்றவ ராகி, (நாலாம்பத்தில்;)

**விரக்தி பல ராகம் கழியமிக்கு**—கீழே சொன்ன இதர விஷய விரக்திக்குப் பலன் பகவத்விஷயராகமாகையாலே * கழியமிக்கதோர் காதலன் * என்னும்படி அது மிகப் பெற்றவராகி, (அஞ்சாம்பத்தில்;)

**ப்ரேம பல உபாயத்தே புகுந்து**—கீழ்ச்சொன்ன பகவத்விஷயாநுராகமிகுதிக்குப் பலன் ஸித்தோபாய ஸ்வீகாரமாகையாலே * அலர்மேல் மங்கையுறை மார்பா! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன் * என்று உபாய வரணம் பண்ணினவராகி, (ஆரும்பத்தில்;)

**ஸாதநபலோபகாரக் கைம்மாறின்றி**—அந்த ஸாதன பலமான உபகாரத்துக்குக் கைம்மாருக * உதவிக்கைம்மாறென்னுயிர் * என்று ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணப் பார்த்து அவ்வாத்மவஸ்துவும் அவனுடையது என்றிருக்கையாலே * அதுவுமற்றங்கு அவன்தன்னது எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே * என்று கைம்மாறு காணுமல் தடுமாறினவராகி (ஏழாம்பத்தில்;)

**க்ருதஜ்ஞதாபலப்ரதிக்ருதமானத்தையுணர்ந்து**—அந்த க்ருதஜ்ஞதைக்குப் பல ஞைப்ரத்யுபகாரமாக * தோள்களையாரத் தழுவியென்னுயிரையறவிலை செய்தனன் * என்று ப்ரீதியாலே கலங்கி ஸமர்ப்பித்த ஆத்மவஸ்துவை * நின்ற வொன்றை யுணர்ந்தேன் * என்று தேஹாதிகளில் விலக்ஷணமாய் அவனுக்கு அநந்யார்ஹ சேஷமாய் பாகவத சேஷமாயிருக்குமென்று உணரப்பெற்றவராகி, (எட்டாம்பத்தில்)

**ஆத்மதர்சநபலப்ரதி மரணுவதியாகப்பெற்று**—கீழ்ச்சொன்ன ஆத்மதர்சநத்திற் குப் பலனுன பகவத்ப்ராப்தியை * மரணமாஞல் வைகுந்தங் கொடுக்கும்பிரான் * என்கிறபடியே, தேஹாவஸாநத்திலே பண்ணித்தருகிறேம் என்று அவன் நாளிட்டுக் கொடுக்கப் பெற்றவராகி, (ஒன்பதாம்பத்தில்;)

**காலாஸத்திபலகதிக்குத்துணைகூட்டின**—இப்படி பகவத்ப்ராப்திகாலம் அணித் தானதற்குப் பலன் அர்ச்சிராதிமார்க்கத்தாலே தேசவிசேஷத்தேறப் போவதாகை யாலே அவ்வர்ச்சிராதிகதிக்கு * காளமேகத்தையன்றி மற்ருென்றிலங்கதி * என்றும் * ஆத்தன் தாமரையடியன்றி மற்றிலமரண் * என்றும் பரமாப்தனுன அப்பெரு மானையே துணை கூட்டிக்கொண்டார் பத்தாம்பத்தில்; ஆக இப்படியான,

**தம்பேற்றை**—பத்துப்பத்துக்களிலும் தாம் பெற்ற பேற்றை,

**பிறர் அறிய**—பிறருமறிந்து வாழும்படி,

**பத்துத்தோறும் வெளியிடுகிருர்**—முதல் பத்தே தொடங்கிப் பத்துப்பத்தாலும் வெளியிட்டருளுகிருர் (நம்மாழ்வார்) ... ... .... (218)

(தா.) 218. ஒவ்வொரு பத்திலும் எம்பெருமானுக்கு இன்ன இன்ன குணம் பிரதிபாதிக்கப்படுகின்றதென்பதும், அந்தந்த குணத்தோடு கூடியவனுக அநுஸந் திக்கப்பட்ட எம்பெருமான் ஒவ்வொருபத்திலும் ஆழ்வார்க்கு உண்டாக்கின பேறு இன்னதென்பதும் இந்த சூர்ணிகையில் நிருபிக்கப்பட்டதாயிற்று. .... (218)

மூன்ரும் பிரகரணம் முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## நான்காம் பிரகரணம்

(மு) 219 பரபரனுய்நின்ற வளவேழ் வைப்பாமவையுளும்பர்வானவ ரதிபதி, மயர்வறமன்னி மனம்வைக்கத்திருத்தி மறக்குமென்று நல்கிவிடாதே மன்ன, அயர்ப்பிலனறுந்தேன் என்சொல்லி மறப்பனே வென்னும்படி தத்வஜ்ஞானவர், கடரடியெம்பிரானை விடாது கண்டாய் நீயும்நானு மென்கிற ஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி வீடுமினென்று த்யாஜ்யோபாதேய தோஷகுண பரித்யாக ஸமர்ப்பணக்ரமத்தை ஸாலம்பந மந்த்ரமாக வுபதேசித்து, எளிதாகவவதரித்துப் பிழைகளை ஸஹித்துப் புரையறக்கலந்து அல்பஸந்துஷ்டனுய் அம்ருதமே ஔஷதமாக்கி நீர்புரையத் தன்னை நியமித்து போகத்தை ஸாத்மிப்பித்து பக்திகணைநைகளுக்கொக்க வருமவனுடைய ஸேவைக்கு எளிமையும் இனிமையுமுண்டு, தொழுதால் அரும்பயனுய தரும், உத்யோகத்தே வினைகளும்மாளும், அவனுரைத்த மார்க்கத்தே நின்று இருபசை மலமறவுணர்வுகொண்டு நலஞ்செய்வதென்று தாம் மயர்வற மதிநலமருளி பஜநத்திலே சேர்க்கிருர் முதற்பத்தில்.

இந்த ப்ரகரணத்தில் ஒவ்வொரு சூர்ணிகையினுலும் ஒவ்வொரு பத்தின் ப்ரமேயத்தை ஸாரமாகத் தொகுத்தருளிச்செய்கிருர். இந்த சூர்ணிகையினுல் முதற் பத்தின் ஸாரம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. முதற்பத்தின் ஸாரமான கருத்தாவது:— பராத்பரனுன எம்பெருமான் தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினுலே ஆழ்வார்க்கு அகவிருளைப்போக்கி, பக்தியாக வடிவெடுத்த ஞானத்தைக்கொடுத்து, இன்னமும் இவர் நம்மை மறந்துபோய்விடக் கூடுமென்றெண்ணி அங்ஙனம் மறவாமைக்காக இடைவிடாதே இவர் தம்முடைய ஹ்ருதயத்திலே நிரந்தரவாஸம் பண்ணினுன், அத்தாலே இவர் நிஷ்களங்கமான தத்வஜ்ஞானத்தையுடையராகி அவனுடைய திருக்கல்யாண குணங்களைத் தமது திருவுள்ளத்தோடே அநுபவித்தார்; அவ் விஷயம் தனியிருந்து அநுபவிக்கவொண்ணுமையாலே ஸம்ஸாரிகளையுங் கூட்டிக் கொண்டு பெருந்திரளாயிருந்து அநுபவிக்க விரும்பினுராகையாலே அவர்களை நோக்கி த்யாஜ்யமான ஸம்ஸாரத்தின் தோஷத்தையும் உபாதேயமான பகவத் விஷயத்தின் குணத்தையும் அவ்வெம்பெருமானை பஜிக்கவேண்டிய ப்ரகாரத்தையும் பஜனத்துக்குப் பற்றுக்கோடான திருமந்திரத்தையுமுபதேசித்து, பஜநீயனுன அவனுடைய ஸௌலப்யமென்ன, அபராதங்களைப் பொறுக்குந் தன்மையென்ன, நீசர்களோடும் கலந்துபரிமாறும் சீலகுணமென்ன, எளிதாக ஆராதிக்கக்கூடியவனுயிருக்குந் தன்மையென்ன, ஆச்ரயணம் போக்யமாயிருக்கப்பெற்ற தன்மையென்ன, கோணலேவடிவெடுத்த ஸம்ஸாரிகளோடு செவ்வியனுய்ப் பரிமாறுகையாகிற ருஜுத்வகுணமென்ன, தன்னுடைய போகங்களைப் பொறுக்கப்பொறுக்க அடைவே

கொடுத்தருளுந் தன்மையென்ன, பரமபக்திக்கும் பரிகணனைக்கு மொக்க முகங் காட்டுகையாகிற ஸாம்யமென்ன—ஆகிற இக்குணங்களை ஒவ்வொரு திருவாய்மொழியாலும் நிரூபணம் செய்துகொண்டு அவ்வழியாலே பஜநத்தினுடைய ஸௌகர்ய போக்யதைகளையும், பஜிக்கவே ஸகல பலன்களும் கைகூடுமென்பதையும், பஜிக்கத் தொடங்கும்போதே பஜநவிரோதிகளெல்லாம் தொலைந்தொழியுமென்பதையும் அறிவித்து, ஆகவே ஸ்ரீகீதையில் அவனருளிச்செய்த பக்திமார்க்கத்திலே நின்று தேவதாந்தரங்கள் பக்கலில் பரத்வசங்கையைத் தவிர்த்து அவன் விஷயமான ஞானத்தைக்கொண்டு அவன் பக்கலிலே அநந்ய ப்ரயோஜன பக்தியைப் பண்ணுங்கோளென்று சொல்லி, தமக்கு அவன் மயர்வற மதிநலமருளினாற் போலே தாமும் இந்த ஸம்ஸாரிகளுக்கு அஜ்ஞாந நிவ்ருத்தி பூர்வகமாக ஜ்ஞான பக்திகளை உபதேசத்தாலே உண்டாக்கி பஜநத்திலே மூட்டுகிறார் முதற்பத்தினால்—என்பது மூல சூர்ணிகையின் தேர்ந்த கருத்து. இப்பத்தில் ஆழ்வார் முக்கியமாக எடுத்துப்பேசின பகவத்குணம் பரத்வம் என்பதும், அவ்வெம்பெருமான் ஆழ்வார்க்குச் செய்த உபகாரம் மயர்வற மதிநலமருளுகை என்பதும், ஆழ்வார் ஸ்வாநுபவத்தளவிலே நிற்கமாட்டாமல் ஸம்ஸாரிகளுக்கும் உபதேசித்து அவர்களையும் திருத்தித் தமக்குத் துணைவராகக் கூட்டிக்கொள்ள விரும்பி உபதேசித்தவை எம்பெருமானுடைய ஸௌலப்யக்ஷமாசீலாதி குணங்கள் என்பதுமாக மூன்று ப்ரணாளியாய் மூல சூர்ணிகை அமைந்திருக்கின்றது. இப்படியே மேல் ஒவ்வொரு சூர்ணிகையும் மூன்று ப்ரணாளியாகவே யிருக்கும்; விஷயங்கள் மாத்திரம் வேறுபடும் ]

(ப.) 219. **பரபரன், ஆய்நின்ற, வளவேழ், வைப்பாம், அவையுள், உம்பர் வானவரதிபதி**—* வரன்முதலா யவைமுழுதுண்ட பரபரன் * கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை வரனவில் திறல்வலியளி பொறையாய் நின்றபரன் * வளவேழுலகின் முதலாயவானோரிறை * வைப்பாம்மருந்தாம்... - எப்பால் யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்தப்பாலவன் * அவையுள் தனிமுதலெம்மான் * உம்பர்வானவராதியஞ்சோதி * அயர்வறு மமரர்களதிபதி * என்னும் பாசுரங்களினால் பிரதிபாதிக்கப்படுகிற பரத்வத்தையுடையனான எம்பெருமானானவன்,

**மயர்வற மன்னி மனம் வைக்கத்திருத்தி மறக்குமென்று நல்கிவிடாதே மன்ன**—* மயர்வற மதிநல மருளினன் * என்கிற பாசுரப்படியே அஜ்ஞாநத்தை அடியோடேபோக்கி பக்திரூபமான ஞானத்தைக் கொடுத்து * மயர்வறவென் மனத்தே மன்னினான் * என்கிற பாசுரப்படியே இவர் தம் திருவுள்ளத்திலே புகுந்து, * சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து மாயப்பற்றறுத்துத் தீர்ந்து தன்பால் மனம்வைக்கத் திருத்தி * என்கிற பாசுரப்படியே இவரோடு பொருந்திக்கிடக்கிற புண்ய பாபரூப கருமங்களையும் பாஹ்யவிஷய ருசிவாஸநைகளையும் போக்கி, 'நான் அயோக்கியன்' என்று இவர் அகன்றவளவிலும் தன் சீலத்தைக்காட்டி மீட்டுத் தன் பக்கலிலே யாக்கிக்கொண்டு திருத்தி, * மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடும் * நல்கி யென்னைவிடான் நம்பி நம்பியே * மறப்பற வென்னுள்ளே மன்னினான் * என்கிற பாசுரங்களிற்படியே இவர் ஒருகாலும் நம்மை மறந்தாராகக் கூடாதென்று கருதி இவரை விடாதே அழகிய திருக்கண்களாலே குளிரநோக்கிக் கொண்டு ஒருநாளும் மறக்கவொண்ணாதபடி இவரது திருவுள்ளத்திலே ஸ்தாவரபிரதிஷ்டையாக இருக்க;

[இப்படி எம்பெருமான் அருள்புரிந்த பிறகு ஆழ்வார் என்னவிதமாக ஆனுரென்னில்]

அயர்ப்பிலன் அறுத்தேன் என்சொல்லிமறப்பனோ வென்னும்படி தத்வஜ்ஞானவர்—* பெருநிலங்கடந்த நல்லடிப்போது அயர்ப்பிலன் * என்றும், * தூயவமுதைப் பருகிப்பருகி என்மாயப் பிறவி மயர்வறுத்தேனே * என்றும், * எம்பிரானை யென் சொல்லி மறப்பனோ * என்றும் பேசும்படி நிஷ்களங்கமான தத்வ ஜ்ஞாநத்தை யுடையவரான ஆழ்வார்;

[இப்படிப்பட்ட ஆழ்வார் தாம் திருவுள்ளத்தோடே அநுபவித்த அநுபவம் ஸம்ஸாரிகளுக்கும் ஆகவேணுமென்று கோலினுரென்பது மேலேசொல்லுகிறது]

சுடரடி யெம்பிரானை விடாது கண்டாய் நீயும் நானுமென்கிற ஸஹ்ருதயாநுபவம் ஸம்ஸாரிகளுக்குமாம்படி—* சுடரடி தொழுதெழு என்மனனே * என்றும், * எம்பிரானைத்தொழாய் மடநெஞ்சமே * என்றும், * நெஞ்சமே நல்லை நல்லை—மலராள் மணவாளனைத் துஞ்சும்போதும் விடாது தொடர் * என்றும்; * கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று * என்றும்; * நீயும் நானுமிந்நேர் நிற்கில் மேல் மற்றோர் நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன் * என்றும் இங்ஙனே திருவுள்ளத்தைக்குறித்து உபதேசித்துத் திருவுள்ளமும் தாமும் கூடியநுபவித்த பகவதநுபவம் தனியே யநுபவிக்கவொண்ணுமையாலே 'இவ்வநுபவம் ஸம்ஸாரிகளுக்கும் ஆக வேணும்' என்று திருவுள்ளம்பற்றி,

(இப்படிப்பட்ட ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உபதேசித்தபடியை விரிவாகக் கூறுகிறது மேல்—)

வீடுமினென்று த்யாஜ்யோபாதேய தோஷகுண பரித்யாக ஸமர்ப்பண க்ரமத்தை ஸாலம்பந மந்த்ரமாக உபதேசித்து—இன்னது த்யாஜ்யம் என்பதையும், அதினுடைய தோஷத்தையும், த்யஜிக்கவேண்டிய ப்ரகாரத்தையும், இன்னது உபாதேயம் என்பதையும், அதினுடைய குணத்தையும், அவ்விஷயத்தில் ஆத்மாவை ஸமர்ப்பிக்கும் க்ரமத்தையும், அந்த ஸமர்ப்பண ரூபமான பஜநத்திற்கு ஆலம்பனமான திருமந்த்ரத்தையும் உபதேசித்து, (இவ்வளவும் * வீடுமின் முற்றவும் * என்கிற திருவாய்மொழியிலே உபதேசித்ததாகையாலே "வீடுமினென்று" என்றுர். * வீடுமின் முற்றவுமென்று தொடங்கி என்றபடி.)

(இனிமேல் பத்துடையடியவர் முதலாக ஒவ்வொரு பதிகத்தினுடையவும் ப்ரமேயம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது)

எளிதாக அவதரித்து—(ஒவ்வொரு வினையெச்சமும் மேலே "ஒக்கவருமவனுடைய" என்றதோடே அந்வயிக்கும்.) எம்பெருமான் அவதாரமுகத்தாலே எளியவனுகிருனென்பதை * பத்துடையடியவரில் 'எளிவருமியல்வினன் நிலைவரம்பில பல பிறப்பாய்' என்று வெளியிட்டு;

பிழைகளை ஸஹித்து—ஆச்ரயிக்குமிடத்தில் ஸுலபனுயிருந்து பின்பு அபராதம் கண்டவாறே கைவிடுமவனன்றிக்கே அபராதங்களைப் பொறுக்குமவன் என்பதை, * அஞ்சிறைய மடநாரையில் "என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு" என்பதனுல் வெளியிட்டு,

**புரையறக்கலந்து**—அயோக்யதாநுஸந்தானம் பண்ணித் தாங்களே அகல்கின்றவர்களையும் தன் சீல குணத்தைக்காட்டி அணுகப்பண்ணி அவர்களோடே புரையறக் கலக்குமவன் என்பதை * வளவேழுலகுபதிகத்தில் * திசைகளெல்லாம் திருவடியால்தாயோன் தானேருருவனே * இத்யாதியால் வெளியிட்டு;

**அல்பஸந்துஷ்டனாய்**—அடியாரோடே ஒருநீராகக் கலக்குமவனேயானாலும் அவன் உகக்கும்படி பச்சையிடப் போகாமையாலே ஆராதிக்கை அரிது என்ன வேண்டாதபடி நம் பக்கல் பெற்றதுகொண்டு ஸந்தோஷிக்குமவன் என்பதை, * பரிவதிலீசன்பதிகத்தில் "புரிவதுவும் புகைபூவே" என்பதனால் வெளியிட்டு,

**அம்ருதமே ஔஷதமாக்கி**—எம்பெருமானுடைய ஆச்ரயணமானது வருத்தமாக இராமல் மிகவும் இனிதாகவேயிருக்குமென்று ஆச்ரயணத்தின் ஸாரஸ்யத்தை * பிறவித்துயரறபதிகத்தில் "தூயவமுதைப் பருகிப் பருகியென் மாயப்பிறவி மயர்வறுத்தேனே" என்பதனால் அருளிச்செய்து. (மிகவும் இனிதாயிருக்கிற ஆச்ரயணந்தன்னையே பிறவியென்னும் நோய்க்கு மருந்தாக்கி என்று சப்தார்த்தம்.)

**நீர்புரையத் தன்னை நீயமித்து**—ஸம்ஸாரிகள், நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டிராமல் பலவகைப்பட்டிருத்தலால் அன்னவர்களோடு எம்பெருமான் தான் பரிமாறுமிடத்தில் அவர்கள் போனவழியே தனக்கு வழியாம்படி தான் அவர்களுக்குச் செவ்வியனாய்ப் பரிமாறுமவன் என்பதை, * ஓடும்புள்ளேறிப் பதிகத்தில் "நீர் புரைவண்ணன்" என்பதனாலே வெளியிட்டு;

**போகத்தை ஸாத்மிப்பித்து**—அடியார்களுக்குத் தன்னையநுபவிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணாநுபவம் கொடுத்துவிடுகையன்றியே பொறுக்கப்பொறுக்கச் சிறிதுசிறிதாகக் கொடுக்குமவன் என்பதை' * இவையுமவையும் பதிகத்தில் "என்னுடைச் சூழலுளானே" என்று தொடங்கி "உச்சியுளானே" என்னுமளவாக ஸ்வாநுபவமுகேந அருளிச்செய்து;

**பக்திகணனைகளுக்கு ஒக்கவருமவனுடைய**—(எம்பெருமான் அடியார்களுக்குக் காட்சிதருந் தன்மை எப்படிப்பட்டதென்றால், பரமபக்தியுக்தர்க்கு முகங்காட்டுவது போலவே எண்ணிக்கையினால் தன்னைக் குறிப்பிடுமவர்களுக்கும் முகங்காட்டுந் தன்மையுள்ளது:—(அதாவது) ஒன்று இரண்டு மூன்று என எண்ணிக்கொண்டே போனால் 'இருபத்தாறு' என்னுமளவில் இருபத்தாறாவது தத்துவமான தன்னைக் குறித்ததாகக்கொண்டு, வந்துநிற்பன் என்கிற விதுதான் பரிகணனைக்கு முகங்காட்டுவது;) ஆகவிப்படிப்பட்ட நிர்ஹேதுக விஷயீகாரத்தை, * பொருமா நீள்படையிலே வெளியிட்டு, ஆக இப்படிப் பதிகந்தோறும் வெளியிடப்பட்ட ஸ்வபாவங்களையுடையனான எம்பெருமானுடைய;

**ஸேவைக்கு எளிமையும் இனிமையுமுண்டு**— ஆச்ரயணம் ஸுலபமாயும் போக்யமாயுமிருக்கும்" என்று உபதேசித்து,

**தொழுதால் அரும்பயனாய தரும்**—"தொண்டீர்கள்—தொழுமின் அவனைத் தொழுதால் வழிநின்ற வல்வினை மாள்வித்து அழிவின்றியாக்கந் தருமே" என்றும் "தரும் அவ்வரும் பயனாய * என்றுமுள்ள பாசுரங்களாலே, அவனை பஜித்தால் ப்ராப்திப்ரதிபந்தகங்களையும் நிச்சேஷமாகப்போக்கி அழிவில்லாத பலன்களையும் தரும்—என்றும் உபதேசித்து;

**உத்யோகத்தே வினைகளும் மாளும்**—"நாளுநின்றடும் நம பழமையங் கொடுவினை உடனேமாளும் * என்கிற பாசுரத்திலே, நாள்தோறும் இவ்வாத்மாவை முடிக்கிற கொடிய சருமங்களெல்லாம் பக்திபண்ண முயலுமளவிலேயே மாண்டுபோம்—என்றும் உபதேசித்து;

**அவனுரைத்த மார்க்கத்தே நின்று**—அவ்வெம்பெருமானாலே (கீதையில்) அருளிச் செய்யப்பட்ட பக்தி மார்க்கத்திலே நின்று; (இதற்கு **நலம் செய்வது** என்பதோடே அந்வயம்.)

**இருபசை மலமற உணர்வுகொண்டு நலஞ்செய்வது என்று**—* நன்றெழில் நாரணன் நான்முகன் அரனென்னுமிவரை, ஒன்ற நும்மனத்து வைத்துள்ளி நும்மிருபசை யறுத்து * என்கிற பாசுரத்தில் "ஸ்ரீமந் நாராயணன் பிரமன் ருத்ரன் என்கிற மூன்று தெய்வங்களை மத்யஸ்த த்ருஷ்டியாக உங்களது நெஞ்சில் வைத்து, அத்தெய்வங் களின் ஸ்வரூபஸ்வபாவங்களை ப்ரமாணங்கொண்டு ஆராய்ந்துபார்த்தால் (நாராய ணன் தவிர) இரண்டு தெய்வங்கள் பக்கலில் ஈச்வர புத்தியை யொழிக்க நேரும்" என்றருளிச்செய்து, * மனனகமலமறக்கழுவி நாளும் நந்திருவுடையடிகள் தம் நலங்கழல்வணங்கி * என்ற பாசுரத்தில்—மும்மூர்த்திகளும் ஸமமாவர் என்னும் விப்ரதிபத்தியாகிற அழுக்கு ஒழியும்படி மனத்தை விவேகத்தாலே பரிசுத்தப்படுத்து மாறு அருளிச்செய்து, * உணக்குமின் பசையற அவனுடை யுணர்வு கொண் டுணர்ந்தே * என்கிற பாசுரத்தில் அவனளித்த கீதையைக் கொள்ளும்படி அருளிச் செய்து, * நன்றென நலஞ்செய்வது * என்ற பாசுரத்தில் அநந்ய ப்ரயோஜந பக்தியைப் பண்ணுங்கோளென்று அருளிச்செய்து;

**தாம் மயர்வற மதிநலமருளி பஜனத்திலே சேர்க்கிறார் முதற்பத்தில்**—தமக்கு எம் பெருமான் மயர்வற மதிநலமருளினாப்போலே ஸம்ஸாரிகளுக்குத் தம்முடைய க்ருபை யாலே தாம் அஜ்ஞானத்தைப் போக்கி ஜ்ஞானபக்திகளை யுபதேசித்து பகவத் பஜனத்திலே மூட்டுகிறார்; இதுவே முதற்பத்தின் ஸாரார்த்தம் என்றதாயிற்று.

(மூ.) 220. சோராத மூவா வேர்முதலாய் உலகம் படைத்தவனென்கிற சிதசித் த்ரய த்ரிவிதகாரணமானவன் அறியாதனவறிவிக்க, உள்ளம்தேறி, தூமனம் மருளிலென்னும் ஜ்ஞானபலமான வொளிக்கொண்ட மோக்ஷம் தேடிவாட, உலராமலாவி சேர்ந்து சிக்கனப்புகுந்து ஸம்பந்திகளும சேர்தல்மாறினரென்ன வாழ்வித்து உபகரிக்கிற நீந்தும் கெடலில் எம்மா வீட்டை உபயாநுகுணமாக்கினவர், ஆச்ரயணீய னுக்குப் பூர்வோக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற ஸகலபல ப்ரதத்வ காரணத்வ சேஷசாயித்வ ச்ரிய:பதித்வ ஸௌலப்யாதிகளைத் திண்ணனணைவதென்று வெளியிட்டு, கள்வாதீர்த்தனென்று வசன ப்ரத்யக்ஷங்களுங்காட்டி, புலனைநதென்று ஸம்ஸாரமோக்ஷஸாதந துஃக்காநந்தரஸம் முன்னாக விதிக்கிற அந்தர்கதஜ்ஞோபாஸநத்தை மதித்துப்பெருக்கி மூழ்கியழுந்திக் கீழ்மைவலஞ் சூதுஞ் செய்து இளமை கெடாமல் செய்யும் க்ஷேத்ரவாஸ ஸங்கீர்த்தநாஞ்ஜலி ப்ரதக்ஷிண கதிசிந்தநாத்யங்கயுக்தமாக்குகிறார் இரண்டாம்பத்தில்.

இரண்டாம்பத்தின் ஸாரமான கருத்தாவது :—அனைத்துக்கும் காரண பூதனான எம்பெருமான் கீழ்ப்பத்திலே தமக்கு அறியாதவற்றை அறிவித்தருள, அதனாலே அறிவுபெற்ற ஆழ்வார் அந்த அறிவுக்குப் பலனான மோக்ஷத்தை அப்போதே பெறவேணுமென்று ஆசைப்பட்டுப் பெருமையாலே விஷண்ணரானார்; அந்த விஷாதமெல்லாம் தீரும்படி எம்பெருமான் வந்து ஸம்ச்லேஷித்து ப்ரீதனானான்; அந்த ப்ரீதி இவரொருவரளவிலே நில்லாதே இவரோடு ஸம்பந்த ஸம்பந்தமுடையாரளவிலும் வெள்ளமிட்டு, அந்த ப்ரீதியாலே இவர்க்கு அவன் மோக்ஷத்தைக் கொடுக்கப் புகுந்தான்; ஆழ்வார் அந்த மோக்ஷத்தை அவனுடைய சேஷத்வத்துக்கும் தம்முடைய சேஷத்வத்துக்கும் தகுதியாம்படி * தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே * என்று நிஷ்கர்ஷித்தார். ஆச்ரயணீயனான அவனுக்குக் கீழ்ப் பத்தில் சொன்ன பரத்வத்தை நிலைபெறுத்துவனவான லக்ஷணங்களை வெளியிட்டு அவற்றுக்குப் பொருத்தமான வசனப்ரத்யக்ஷங்களையும் காட்டினார். ஆச்ரயிப்பார்க்கு ருசி பிறக்கைக்காக த்யாஜ்யமான ஸம்ஸாரத்தினுடைய துஃக்கபஹுளத்வத்தையும், ப்ராப்யமான மோக்ஷத்தினுடைய ஆநந்த ப்ராசுர்யத்தையும், ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமோக்ஷப்ராப்திக்குறுப்பான ஸாதநத்தினுடைய ஸாரஸ்யத்தையும் முன்னிட்டுக்கொண்டு ஸகுண ப்ரஹ்மோபாஸநத்தை விதித்து, அதற்கு அங்கமாக நி த்தாநுஷ்டாநத்யாகமும் க்ஷேத்ர வாஸம் முதலானவையும் செய்யவேணுமென்று அருளிச்செய்கிறாரென்பது.

(ப.) 220. சோராத, மூவா, வேர்முதலாய், உலகம்படைத்தவனென்கிற — * சோராதவெப்பொருட்கு மாதியாஞ்சோதி * மூவாத்தனிமுதலாய் * வேர்முதலாய் வித்தாய் * பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் * என்னும் பாசுரங்களிற்படியே,

சிதசித் த்ரயத்ரிவிதகாரணமானவன் =(சித் த்ரயத்துக்கும் அசித் த்ரயத்துக்கும் த்ரிவிதகாரணமானவன் என்று பிரித்து யோஜிப்பது.) பக்தர், முக்தர், நித்யர் என்று மூவகைப்பட்ட சேதநவர்க்கத்திற்கும், ப்ராக்ருதம், அப்ராக்ருதம், காலம் என்று மூவகைப்பட்ட அசேதந வர்க்கத்திற்கும் உபாதாநகாரண—ஸஹகாரி காரண—நிமித்தகாரணங்களென்று மூவகைப்பட்ட காரணமும் தானேயான ஸர்வேச்வரன்,

அறியாதன அறிவிக்க—* என்னைப்பெற்றவத்தாயாய்தந்தையாய் அறியாதன வறிவித்த அத்தா! * என்று சொல்லும்படி தாமறியாதிருந்த தத்வஹித புருஷார்த்தங்களை விசதமாக அறிவிக்க,

உள்ளம் தேறி=அதனால் * அடியையடைந்துள்ளந்தேறி * என்கிறபடியே நெஞ்சில் தெளிவை யுடையராய்க்கொண்டு (ஆழ்வார்),

தூமனம் மருளிலென்னும் ஜ்ஞானபலமான ஒளிக்கொண்ட மோக்ஷம் தேடிவாட— * தூமனத்தனனாய் * என்றும் * மருளில் வண்குருகூர்வண்சடகோபன் * என்றும் சொல்லும்படி பரிசுத்தமான அந்தஃகரணத்தையுடையராகப் பெற்ற தம்முடைய ஞானத்திற்குப் பலனான மோக்ஷத்தை * களிப்புங் கவர்வுமற்று......ஒளிக்கொண்ட சோதியமாய்—அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்றுகொலோ * என்று அபேக்ஷித்து அப்போதே கிடையாமையாலே * வாடிவாடுமிவ்வாணுதலே * என்கிறபடியே வாடினவளவிலே,

**உலராமல் ஆவிசேர்ந்து**—* வேவாராவேட்கை நோய்மெல்லாவி யுள்ளுலர்த்த * என்றும் * உள்ளுளாவியுலர்ந்துலர்ந்து * என்றும் உலர்ந்துபோகைக்கீடான தாப மாறும்படி * அந்தாமத்தன்புசெய்து என்னுவிசேரம்மானுக்கு * என்கிறபடியே பரமபதத்திலே பண்ணும் வியாமோஹத்தை இவர்தம்மிடத்தே செய்து இவரோடே ஸம்ச்லேஷித்து,

**சிக்கெனப்புகுந்து**—* சிறிதோரிடமும் புறப்படாத் தன்னுள்ளே உலகுக ளொக்கவேவிழுங்கி—சிக்கெனப்புகுந்தான் * என்கிறபடியே பேராதபடி புகுந்து,

**ஸம்பந்திகளும் சேர்தல்மாறினரென்ன**—* செடியார்நோய்களெல்லாந் துறந்து எமர்கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்து என்றுஞ் சேர்தல்மாறினரே * என் னும்படி இவர் தம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளும் முக்தராஞர்களென்று இவர் தாமே சொல்லும்படி,

**வாழ்வித்து**—* கீழ்மேலெமரேழெழுபிறப்பும் கேசவன்தமர்—மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா! * என்று இந்த வாழ்ச்சிக்குத் தாமே ஆச்சரியப் படும்படி தம்மை வாழ்வித்து,

**உபகரிக்கிற**-தமக்கு அப்பெருமான் உபகரிப்பதாகத்திருவுள்ளம்பற்றியிருக்கிற,

**நீந்துங்கெடலிலெம்மாவீட்டை**—* நீந்துந்துயரில்லாவீடு * கெடலில்வீடு * * எம்மாவீடு * என்னப்பட்ட மோக்ஷத்தை,

**உபயானுகுணமாக்கினவர்**—* அம்மாவடியேன் வேண்டுவதீதே * என்றும் * தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே * என்றும் சேஷசேஷிகளான இருவருடைய ஸ்வரூபத்துக்கும் தகுதியாக நிஷ்கர்ஷித்தவரான ஆழ்வார்,

**ஆச்ரயணீயனுக்குப் பூர்வோக்த பரத்வத்தை ஸ்தாபிக்கிற**—அடிபணியத் தக்க வஞன அப்பெருமானுக்கு முதற்பத்தில் சொல்லப்பட்ட ஸர்வஸ்மாத்பரத்வத்தை நிலைபெறுத்துவனவான,

**ஸகலபலப்ரதத்வ காரணத்வ சேஷசாயித்வ ச்ரிய:பதித்வ ஸௌலப்யாதிகளை**—ஸகல பலன்களையு மளிக்கவல்லனுகை, ஸர்வகாரணபூதனுகை, சேஷசாயியாகை, லக்ஷ்மீபதியாகை, ஸுலபனுகை முதலானவற்றை,

**திண்ணனணைவதென்று வெளியிட்டு**—* திண்ணன்வீடு * அணைவதரவணைமேல் * என்கிற இரண்டு பதிகங்களிலேயுள்ள பாசுரங்களாலே வெளியிட்டு,

**கள்வா தீர்த்தனென்று வசநப்ரத்யக்ஷங்களுங் காட்டி**—(கள்வாவென்று வசனமும், தீர்த்தனென்று ப்ரத்யக்ஷமும்காட்டி என்று பிரித்து யோஜிப்பது.) அவனே ஸர்வ ஸ்மாத்பர னென்னுமிவ்வர்த்தத்துக்கு * கள்வாவெம்மையு மேழுலகும் * என்கிற பாட்டிஞல் தேவதாந்தரங்களின் வசனத்தையும், * தீர்த்தனுலகளந்த....பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை * என்கிற பாட்டிஞல் அர்ஜுனனுடைய ப்ரத்யக்ஷத்தையுங்காட்டி,

**புலனைந்தென்று**—* புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி * என்கிற பாட்டிலே

**ஸம்ஸார மோக்ஷஸாதந துஃக்காநந்தரஸம் முன்னுக**—(ஸம்ஸாரதுக்கம், மோக்ஷா நந்தம், ஸாதநரஸம் முன்னுக என்று பிரித்து யோஜிப்பது.) ஸம்ஸாரத்தின் துக்க

மயத்வ மென்ன, மோக்ஷத்தின் ஆனந்தமயத்வமென்ன, உபாயாநுஷ்டானத்தின் ரஸகநத்வமென்ன ஆகிய இவற்றைத் தெரிவித்துக்கொண்டு,

விதிக்கிற—கர்த்தவ்யமாக விதித்தருளுகிற,

அந்தர்கத குணோபாஸநத்தை—* தஸ்மிந் யதந்தஸ் ததுபாஸிதவ்யம் * என்ற உபநிஷத்வாக்யத்தில் அந்தர்கத வஸ்துவாக விவக்ஷிதமான அபஹதபாப்மத்வம் முதலான குணங்களின் உபாஸநத்தை, (இதற்கு "அங்கயுக்தமாக்குகிறார்" என்பதிலே அந்வயம்.)

மதித்துப் பெருக்கி மூழ்கி யழுந்திக் கீழ்மை வலஞ் சூதுஞ்செய்து இளமைகெடாமல் செய்யும்—* சதிரிளமடவார் தாழ்ச்சியை மதியாது * திறமுடைவலத்தால் தீவினை பெருக்காது * வழக்கென நினைமின் வல்வினை மூழ்காது * நலமென நினைமின் நரகழுந்தாதே * கிறியென நினைமின் கீழ்மை செய்யாதே * வலஞ்செய்து வைகல் வலங்கழியாதே * சூதென்று களவுஞ் சூதுஞ் செய்யாதே * கிளரொளி யிளமை கெடுவதன் முன்னம் * என்கிற பாசுரங்களிற்படியே நிஷித்தாநுஷ்டானங்களைச் செய்து இளமையைப் பாழே போக்காதபடி இளமையிலே செய்யவேண்டுவதான,

க்ஷேத்ரவாஸ ஸங்கீர்த்தன அஞ்ஜலி ப்ரதக்ஷிண கதிசிந்தநாதி அங்கயுக்தமாக்குகிறார் இரண்டாம் பத்தில்—* மாலிருஞ்சோலை சார்வது சதிரே * என்று க்ஷேத்ரவாஸ மென்ன, *மாலிருஞ்சோலைப் பதியதுவேத்தி* என்று க்ஷேத்ர ஸங்கீர்த்தனமென்ன, * மாலிருஞ்சோலை தொழக்கருதுவதே * என்று க்ஷேத்ர அஞ்சலியென்ன, * மாலிருஞ்சோலை வலஞ்செய்து * என்று க்ஷேத்ரப்ரதக்ஷிணமென்ன, * மாலிருஞ் சோலை நெறிபடவதுவே நினைவது நலமே * என்று க்ஷேத்ரகதி சிந்தனையென்ன ஆகிற இவை முதலான உபாஸநாங்கத்தோடே சேர்க்கிறார் இரண்டாம் பத்தில் (குணோபாஸநத்தை அங்கத்தோடே விதிக்கிறார், என்றபடி.) ... (220)

(மு.) 221. முழுதுமால் எங்கணுமொழிவற அருவாகி நின்று தோய்விலனும் ஸர்வ வ்யாபகன் தீர்ந்தவடியார்களைத் தாளிணைக் கீழ்க்கொள்ளும் தன்படிக்கும் நீதந்த மாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அலமருகின்றேன் வேரறவரிந்து எந்நாளெங்குவந்து தலைப்பெய்வ னென்று கழித்துப்புகும் தங்காதலுக்கும் ஸத்ருசமாகக் கண்டுகொள்ளென்னும் ஊனமில்மோக்ஷ பலமான முடிச்சோதியி லநுபவத்தாலே நித்யவஸ்து நீடுபெற்று அவச்சேதமற்றவடிமை செய்யவேண்டும்படி ஸர்வாத்ம பாவத்தைப் புகழ்ந்து, சொல்லிப்பாடி யேத்திப்பிதற்றி யெழுந்தும் பறந்தும் துள்ளிக் குனித்துத் தடுகுட்டக்கும்பிடு நட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்து நையும் ப்ரீதியுகளத் தம்மடியாரென்ன உடன் கூடும் ஸாத்யம்வளர, பைகொள் பாம்புபோலே இந்த்ரியவ்ருத்தி நியமமறப் பாடவந்த கவியன்றிக்கே படைத்தான் ச்லோகக்ருத் தாய், குறைமுட்டுப் பரிவிடர் துயர் துன்பமல்லல் துக்கம் தளர்வு கேடுகளின்றி அம்ருதாநந்த மக்நரானவர், செய்யதாமரைக் கண்ணன் அமரர் குலமுதலென்று அஞ்சாதபடி எளிவருமீணவனு மென்றவை பரத்வமாம்படி அவனுக்கும் ஸௌலப்ய காஷ்டையைக் காட்டி, வழியைத்தருமவன் நிற்க இழியக்கருதுவதென்னுவது,

**வேண்டிற்றெல்லாம் தரும், தன்னாகவே கொள்ளும், கவிசொல்ல வம்மினென்று முக்தைச்வர்யத்தை முன்னிட்டு ச்வவ்ருத்தியைமாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிருர் மூன்றும்பத்தில்.**

மூன்றும்பத்தின் ஸாரமான கருத்தாவது:—கார்ய வர்க்கங்களான ஸகல சேதநா சேதநங்களையும் வியாபித்து அவற்றிலுள்ள தோஷங்கள் அணுவளவும் தன்னை ஸ்பர்சிக்கப் பெருதபடி ஸர்வவ்யாபகனாயிருக்கின்ற எம்பெருமான்; கீழ்ப் பத்தில் இருவருடையவும் ஸ்வரூபத்திற்குத் தகுதியாக ஆழ்வார் நிஷ்கர்ஷித்த மோக்ஷத்திற்குப் பலனான தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவத்தை இவர் தாம் பெற்ருராம்படி செய்தவளவில், இவரும் அவ்வநுபவத்தைப் பெற்றுத்தரித்து, அதனாலுண்டான உவப்பின் மிகுதியாலே எல்லாவடிமைகளும் செய்யவேண்டும் படியான ஆவல் கிளர்ந்தவராய், அந்த ஆவலுக்குத் தகுதியாக அப்பெருமான் காட்டிக்கொடுத்த தன்னுடைய விபூதி விஸ்தாரத்தைப் பேசி அத்தாலே கரை புரண்ட ப்ரேமமுடையராய், அந்த ப்ரேமம் அவ்வெம்பெருமானளவிலே அடங்கி யில்லாமல் எல்லையான பாகவத சேஷத்வத்தளவும் சென்று அந்த பாகவதர்களுக்கு திருபகம் பகவானுடைய வைலக்ஷண்யமாகையாலே அத்தை அநுஸந்திக்கவே ஒரு கரணத்தினுடைய செயலை மற்றொரு கரணம் ஆசைப்படவேண்டும்படியான பெருவிடாய் படைத்தவராய், எம்பெருமானையன்றி மற்று எவரையும் துதிக்க மாட்டாத தம்முடைய வைலக்ஷண்யத்தை வெளியிட்டவராய், எம்பெருமானை யனுபவிப்பதற்கு ஒருவகையான இடையூறுமின்றிக்கே அபரிமிதமான ஆனந்தத்தை யடைந்தவராய், ஸம்ஸாரிகள் எம்பெருமானுடைய பரத்வத்தைக்கண்டு அஞ்சிப் பின்வாங்காமல் மேல்விழுந்து ஆச்ரயிக்கும்படி அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அவர்களுக்கு உபதேசித்து, அர்ச்சிராதிகதியாலே திருநாட்டைப் பெறுவிக்குமவனான எம்பெருமானை யொழியப் பிறருடைய ஸ்தோத்ரத்திலே கைவைப்பது பயனற்றதென்று, எம்பெருமான் விஷயத்திலே வாக்கு ஸபலமாம்படி அடிமை செய்வதே உரியதென்றும் உபதேசித்து அவர்களைத் தம்மைப்போலே கைங்கர்ய பரராம்படி செய்தருளுகிருரென்பது.

(ப.) 221. **முழுதுமாய், எங்கணும், ஒழிவற அருவாகிநின்று, தோய்விலனும் ஸர்வவ்யாபகன்**—* முழுதுமாய் முழுதியன்ருய் * ஏழ்ச்சிக்கேடின்றி யெங்கணும் நிறைந்த வெந்தாய் * எஞ்ஞான்று மெங்குமொழிவற நிறைந்து நின்ற * அளவுடையைம்புலன்களறியாவகையால் அருவாகி நிற்கும் * யாவையும் யவருந்தானாய் அவரவர் சமயந்தோறும் தோய்விலன் * என்கிற பாசுரங்களால் தெரிவிக்கப்பட்ட ஸர்வ வ்யாபகத்வத்தை யுடைய ஸர்வேச்வரன்,

**தீர்ந்தவடியார்களைத் தாளிணைக்கீழ்க்கொள்ளும் தன்படிக்கும்**—* தீர்ந்தவடியார் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல * சன்மசன்மாந்தரங்காத் தடியார்களைக் கொண்டுபோய்த் தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க் கொள்ளுமப்பன் * என்கிற பாசுரங்களிற்படியே உபாயோபேயங்களிரண்டும் தானேயாக வுறுதி கொண்ட அடியார்களைத் தன்திருவடிகளின் கீழே யிட்டுக்கொள்ளும் சேஷியான தன்னுடைய ஔதார்யத்துக்கும்,

நீதந்த மாமாயப் புணர்வினைப் பிறப்பழுந்தி அலமருகின்றேன் வேரற அரிந்து எந்நாள் எங்குவந்து தலைப்பெய்வனென்று கழித்துப்புகும் தம் காதலுக்கும் ஸத்ருசமாக—(ப்ரக்ருதி ஸம்பந்தம் தொலையவேணு மென்பதற்காகவும் மோக்ஷம் பெறவேணு மென்பதற்காகவும் ஆழ்வார் தாம் வெளியிட்ட விருப்பத்தைப்பற்றின சந்தைகள் இங்குக் காட்டப்படுகின்றன.) * அந்நாள் நீதந்த ஆக்கையின் வழியுழல்வேன் * என்றும், * பன்மாமாயப் பல் பிறவியிற் படிகின்றயான் * என்றும், * பொல்லா வாக்கையின் புணர்வினை * என்றும், * வினையியல் பிறப்பழுந்தி * என்றும், * கொடு வினைத் தூற்றுள் நின்று பாவியேன் பல காலம் வழி திகைத்து அலமருகின்றேன் * என்றும், * வினைகளை வேரறப்பாய்ந்து * தொன்மாவல்வினைத் தொடர்களை முதலரிந்து நின்மாதாள் சேர்ந்துநிற்பது எஞ்ஞான்று கொலோ * எந்நாள் யானுன்னை யினிவந்து கூடுவனே * யானுன்னை எங்குவந்தணுகிற்பனே * உலகமெல்லாம் தாவியவம்மானை எங்கினித் தலைப்பெய்வனே * என்றுமுண்டான பாசுரங்களாலே நான் உன்னைக் கிட்டுவதொருநாள் அறுதியிட்டுத் தரவேணுமென்றும், நான் உன்னை எங்கே வந்து கிட்டக்கடவேனென்றும் இனிக்கிட்டுகையென்று ஒரு பொருளுண்டோவென்றும் சரீரஸம்பந்தத்துக்கு நொந்து, அதிலுண்டான அருசி யோடே, * காயங்கழித்து அவன் தாளிணைக் கீழ்ப்புகுங்காதலன் * என்று, 'பகவத் குணநுபவமே யாத்திரையாகப் போதைப்போக்கி இவ்வுடலைவிட்டு அவன் திருவடி களின் கீழே புகவேணுமென்கிற காதலையுடையேன்' என்று சொல்லிக்கொண்ட ஆழ்வாருடைய ஆசைக்குத் தகுதியாகவும்,

கண்டுகொள் என்னும் ஊனமில்மோக்ஷபலமான முடிச்சோதியிலநுபவத்தாலே— * வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்ளென்று வீடுந்தரும் நின்று நின்றே * என்கிறபடியே எம்பெருமான் மோக்ஷத்தைக்காட்டிக் கொடுக்க, அந்த மோக்ஷத் திற்குப்பலன் பகவதநுபவ கைங்கர்யங்களே யாதலால், * முடிச்சோதியாய் * என்கிற திருவாய்மொழியிலே அவனது வடிவழகையும் ஆபரணச் சேர்த்தியையும் அநுபவித்த வதனால்;

நித்யவஸ்து நீடுபெற்று—(இவ்வாக்கியம், * முந்நீர்ஞாலம் படைத்த * என்கிற இரண்டாம் பதிகத்தின் ப்ரமேயத்தைத் தெரிவிப்பது.) கீழ் * முடிச்சோதியில் அநுபவிக்கத்தொடங்கின விஷயத்தைப் பரிச்சேதித்து அநுபவிக்கப் போகாமை யாலே 'ப்ரக்ருதி ஸம்பந்தம் காரணமாக நம்முடைய கரணங்கள் ஸங்குசிதங்களா யிருக்கையாலன்றோ பகவத்விஷயத்தை நாம் பரிபூர்ணமாக அநுபவிக்க முடியாமல் துவள்கிறோம்' என்றுகொண்டு ஆழ்வார் வருத்தமுற்றிருக்க, எம்பெருமான், ஆழ்வீர்! நீர் ஏன் துவள்கின்றீர்? நம்மைப்பூர்ணமாக அநுபவிக்க முடியாமைக்குக் காரணம் கரணஸங்கோசமென்று நீர் நினைக்கின்றீர் போலும்; அங்ஙனம் நினைக்க வேண்டா; விஷயம் அளவிடமுடியாததாகையாலே பரிபூர்ணநுபவம் செய்ய முடியவில்லையேயென்கிற தளர்ச்சி உமக்குப்போலே நித்யமுக்தர்களுக்கு முண்டு காணும்' என்று அறிவித்து ஆழ்வாருடைய வருத்தத்தைமாற்ற, அதனால் ஒருவாறு மகிழ்வுற்ற ஆழ்வார், * நிலைப்பெற்றென்னெஞ்சம் பெற்றது நீடுயிரே * என்று சொல்லும்படி ஏற்கனவே நித்யமாயிருக்கின்ற ஆத்மவஸ்து இப்போதுதான் நித்யத்வம் பெற்றதென்னலாம்படி தரிப்புப்பெற்று;

அவச்சேதமற்ற அடிமை செய்யவேண்டும்படி—(இவ்வாக்கியம், * ஒழிவில்கால மெல்லாம் * என்கிற மூன்றும்பதிகத்தின் ப்ரமேயத்தைத் தெரிவிப்பது. கீழ்ப்பதிகத்தில், * பெற்றது நீடுயிரே * என்று சொல்லிவிட்டாலும் கைங்கரியம் பண்ணியே அது பலிக்கவேண்டுகையாலே, ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும் நாம் * என்று ஸகலதேச ஸகலகால ஸகல அவஸ்தைகளிலும் ஸகலவித கைங்கர்யங்களும் செய்யவேண்டும்படியான அபிநிவேசம் அதிகரிக்கப்பெற்று;

ஸர்வாத்மபாவத்தைப் புகழ்ந்து - கீழ் * ஒழிவில் காலத்தில் ஸகலவித கைங்கர்யங்களையும் செய்வதற்காகக் கொண்ட பாரிப்புக்கீடாக எம்பெருமான் எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்து எங்கும் நிற்கின்ற நிலையைக் காட்டிக்கொடுக்கக் கண்ட ஆழ்வார், * புகழு நல்லொருவனென்கோ பொருவில் சீர்ப்பூமியென்கோ, குன்றங்களனைத்துமென்கோ, சாதிமாணிக்கமென்கோ, சவிகொள்பொன்முத்தமென்கோ, நளிர்மதிச்சடையனென்கோ, நான்முகக்கடவுளென்கோ * என்று அவனுடைய ஸர்வாத்மத்வத்தைப்புகழ்ந்து பேசி;

சொல்லிப்பாடியேத்திப் பிதற்றியெழுந்தும் பறந்தும் துள்ளிக்குனித்துத் தடுகுட்டக் கும்பிடுநட்டமிட்டுச் சிரிக்கக் குழைந்துநையும் ப்ரீதி உகள—(இவ்வாக்கியம் * மொய்ம்மாம் பூம்பொழிலென்னும் பதிகத்தின் ப்ரமேயத்தைப் பேசுகிறது) * எம்மானைச் சொல்லிப்பாடி * என்றும் * பண்கள் தலைக்கொள்ளப்பாடி * என்றும் * முனிவின்றியேத்தி * என்றும் * பேர்பல சொல்லிப்பிதற்றி * என்றும் * எழுந்தும் பறந்தும் துள்ளாதார் * என்றும் * ஏத்திக் குனிப்பார் * என்றும் * தடுகுட்டமாய் * என்றும் * கும்பிடுநட்டமிட்டாடி * என்றும் * உலோகர்சிரிக்கநின்றாடி * என்றும் * நெஞ்சங்குழைந்து நையாதே * என்றும் அருளிச்செய்தபடியே வாசிக காயிக மாநஸவ்யாபாரங்களாலே களிக்கும்படியாக, * புகழுநல்லொருவனிலுண்டான ப்ரீதி தலைமண்டையிட்டுச்செல்ல;

தம்மடியாரென்ன வுடன்கூடும் ஸாத்யம்வளர—(* பயிலுஞ் சுடரொளியின் ப்ரமேயமருளிச் செய்யப்படுகிறது.) கீழ் இரண்டாம்பத்தில் * அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்று கொலோ * என்று பிரார்த்தித்த பேறுனது * தம்மடியாரடியார் தமக்கடியாரடியார்தம் அடியாரடியோங்களே * என்று, 'ததீய சேஷத்வத்தின் எல்லையிலே நிற்கிறவர்கள் நமக்கு உத்தேச்யர்' என்னும்படி வளர்ந்து செல்ல; (உடன்கூடும் ஸாத்யம் தம்மடியாரென்ன வளர—என்று அந்வயம்.)

பைகோள் பாம்புபோலே இந்த்ரிய வ்ருத்தி நியமமற—(இவ்வாக்கியம், முடியானே! என்கிற பதிகத்தின் ப்ரமேயத்தைத் தெரிவிக்கிறது) 'ஸுசக்ஷுச்ரவா:' என்று பேர் பெற்றிருக்கின்ற திருவனந்தாழ்வான் ஒரு கரணத்தாலே மற்றொரு கரணத்தின் காரியத்தையும் கொள்ளுமாபோலே வாக்கின் செயலை மனமும், அதன் செயலை வாக்கும், கண்ணின் செயலைக் கையும், கையின் செயலைக் கண்ணும் ஆசைப்படும்படியாகப் பெருவிடாயை யுடையராக;

பாடவந்த கவியன்றிக்கே படைத்தான் ச்லோகக்குத்தாய் —(இது * சொன்னால் விரோதத்தின் பிரமேயத்தைச் சொல்லுகிறது.) * வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன் * என்ற பாசுரத்தின்படி நீசரான மானிசரைப் பாடவந்த

கவியல்லாமல் * ஒன்றியொன்றி யுலகம்படைத்தான் கவியாயினேற்கு * என்ற பாசுரப்படியும், * அஹம் ச்லோக க்ருத் ...* என்கிற தைத்திரீயோபநிஷத் வாக்யத்தின்படியும் ஸர்வேச்வரன் விஷயத்திலே கவிபாடுமவன் நான் என்று அருளிச்செய்தவராய்,

குறைமுட்டுப் பரிவிடர் துயர்துன்ப மல்லல் துக்கம் தளர்வு கேடுகளின்றி அம்ருதானந்த மக்நரானவர்—(* சன்மம் பலபல * என்கிற திருவாய்மொழியிலே பத்துப் பாட்டிலும் அடைவே) * நானேர் குறைவிலனே * யானொரு முட்டிலனே * யானென் மனத்துப் பரிவிலனே * யானிறையேனுமிடரிலனே * ஒன்றும் துயரிலனே * * யானேர் துன்பமிலனே * ஏதுமல்லலிலனே * யானேர் துக்கமிலனே * தளர்விலனே * யானென்றுங் கேடிலனே * என்று தாமே பேசும்படியாய் அம்ருதரான முக்தர் பகவதநுபவம் பண்ணி ஆனந்திக்குமாபோலே அப்படிப்பட்ட ஆனந்தக் கடலிலே மூழ்கினவரான ஆழ்வார்,

செய்யதாமரைக் கண்ணன் அமரர்குல முதலென்று அஞ்சாதபடி—புண்டரீகாக்ஷத்வம் முதலிய பரத்வ சின்னங்களையுடையவனன்றே, நித்யஸூரிநிர்வாஹகனன்றே, ஸம்ஸாரிகளான நம்மால் அவனை ஆச்ரயிக்கப்போமோவென்று அஞ்சாதபடி,

எளிவருமிணைவனு மென்றவை பரத்வமாம்படி—* பத்துடையடியவரில் * எளிவருமியல்வினன் * என்றும், * அணைவதரவணையில் * இணைவனுமெப்பொருட்கும் * என்றும் வெளியிட்ட அவதார ஸௌலப்யம் அர்ச்சாவதாராபேக்ஷயா பரத்வ பர்யாயமேயொழிய ஸௌலப்யமன்று என்னலாம்படியாக,

அவனுகும் ஸௌலப்ய காஷ்டையைக் காட்டி—*செய்யதாமரைக் கண்ணன் பதிகத்திலே * நெஞ்சினுல் நினைப்பான்யவனவனுகும் நீள்கடல் வண்ணனே* என்கிற பாசுரத்தினுல் அர்ச்சாவதாரமாகிய ஸௌப்ய காஷ்டையை எடுத்துச் சொல்லி,

வழியைத்தருமவன் நிற்க இழியக் கருதுவது என்னுவது—*போம் வழியைத் தரும் நங்கள் வானவரீசன் நிற்க—இழியக்கருதியோர் மானிடம்பாடலென்னுவதே * என்று, அர்ச்சிராதி மார்க்கத்தைத் தருகிற பெருமான் தன்னை ஒரு சொல் சொல்லுவரோ வென்று அவஸர ப்ரதீக்ஷனுய் நிற்க, அவனை விட்டு அப்ராப்தர்களான க்ஷுத்ர மநுஷ்யரைக் கவிபாடி முன்பு நின்ற நிலையிற்காட்டிலும் தாழவிழிய நினைப்பதனுல் என்ன பயனுண்டாம்?

வேண்டிற்றெல்லாம் தரும்—அற்ப பலன்களையும் குறையறக் கொடுக்கமாட்டாத பிறர்களைப் போலன்றிக்கே ஸர்வாபேக்ஷிதங்களையும் பூர்த்தியாகக் கொடுத்தருள்வனெம்பெருமான்;

தன்னுகவே கொள்ளும்—* தன்னுகவே கொண்டு * என்கிறபடியே தன்னோடு பரமஸாம்யா பத்தியையும் பண்ணிக்கொடுக்கும் எம்பெருமான்,

கவிசொல்லவம்மின் என்று—வீணுக நரஸ்துதிபண்ணிப் புழுதிபடைக்கின்ற நாவைக்கொண்டு பகவத் விஷயத்திலே கவிசொல்லு மத்தனையே வேண்டுவது; அதற்காக வாருங்கோள் என்று சொல்லி,

முக்தைச்வர்யத்தை முன்னிட்டு—ஒன்றைவிட்டு மற்றென்றைப் பற்றும்படி விதிக்குமவர்கள் 'இதைப்பற்றினுல் இன்ன பெருமையுண்டாகும்' என்று ருசி காட்டு

மாபோலே, ஆழ்வாரும் * வழியைத்தரும் நங்கள் வானவரீசன் நிற்க * சன்மஞ் செய்யாமையுங் கொள்ளுமே * இத்யாதி பாசுரங்களால் முக்தைச்வர்யப்ரதாநத்தை முன்னிட்டு,

ச்வவ்ருத்தியை மாற்றி ஸ்வவ்ருத்தியிலே மூட்டுகிறார் மூன்றாம்பத்தில்—"ஸேவா ச்வவ்ருத்திராக்க்யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்" என்று மநுமஹர்ஷியால் கூறப்பட்டபடி நிஹீநரான ஸம்ஸாரிகளை வழிபடுவது நாய் வேலையாகையாலே அப்படிப்பட்ட அப்ராப்ய விஷய ஸேவையை மாற்றி ப்ராப்தமான பகவத்விஷயத்திலே வாசிகமாக அடிமை செய்கையாகிற ஸ்வரூபாநுரூப வ்ருத்தியிலே ருசியையுண்டாக்குகிறார் மூன்றாம்பத்தில். ... ... ... (221)

(மூ·) 222. ஈசனையீச னீசன்பாலென்ன ஏர்கொள்வானத்தும் ஆயேயென்கிற வ்யாப்தி நிறம்பெறத் தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தா, ஒழிவில் காலத்துக்குச் சேரப் பூர்வபோகங்களை யோதுமாலெய்தின காலத்துக்குச் சேர ஸமகாலமாக்கிப் போதால் வணங்காமை தீர்த்த ப்ரணயித்வத்திலே காதல் மையல் ஏறியபித்தாய், தேசதூரத்துக்குக் கூவியுங் கொள்ளாயென்றதுதீரக் கண்டசதிரையும் ஒரு நிலயாகக் காட்ட, வீவிலின்பம் கூட்டினையென்று முக்தபோகமாநஸப்ராப்தி பலமான தேவதாந்தர ஆத்மாத்மீயலோகயாத்ரை ச்வர்யாக்ஷரங்களில் வைராக்யம், உன்னித்து உயிருடம்பினால் கொடுவுலகம் வேட்கையெல்லா மொழிந்தே னென்னவுடையரானவர். ஒரு நாயகமென்று ராஜ்ய ஸ்வர்க்காத்மாநுபவ அல்பாஸ்திரத்வ ஸாவதிகத்வாதிகளையும், ஆடுகள்ளிறைச்சி கருஞ் செஞ்சோறுகிற நிந்த்யங்களாலே இளந்தெய்வத்துக்கு இழைத்தாடும் நிஹீநதையையும் பேசநின்ற தேவராஜ் ஞாநாசக்தி ஸாபேக்ஷத்வாதிகளையும் இலிங்கத்து விளர்பும் பாஹ்ய குத்ருஷ்டிமத தமோநிஷ்டதையையும் சொல்லி, ஒடிக்கண்டீர் கண்டும் தெளியகில்லீர் அறிந்தோடுமின் ஆட்செய்வதே உறவதாவதென்று விரக்திபூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில்.

கீழ் மூன்றாம்பத்தில் எம்பெருமானுடைய வ்யாபகத்வமென்னும் குணம் கூறப்பட்டதாக நிருபிக்கப்பட்டது; ஆகாசமென்கிற பூதமும் வ்யாபகமாயிருப்பது போலவன்று எம்பெருமான் வ்யாபகனாக இருப்பது; இவன் தன்னுடைய வ்யாப்தி நிறம்பெறும்படி ஸகல வஸ்துக்களினுடையவும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகள்யாவும் தன் அதீனமாம்படி நியமித்துக்கொண்டு போருகையாலே இப்படி ஸர்வ நியந்தாவாயிருக்கிற ஸர்வேச்வரன், தன் விஷயத்திலே ஆழ்வார் * ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம் என்று (கீழ்ப்பத்தில்) கைங்கர்யத்திலே அதிகமாகப் பாரித்ததுபோலே, வேறு தேசங்களிலும் வேறு காலங்களிலும் கைகழிந்துபோன அபதாநங்களையும் அந்தந்த தேசகாலங்களிற் போலவே அநுபவிக்கவேணுமென்று பாரிக்க, அப்படியே காலோபாதியைக் கழித்து ஸமகாலமாக்கி அநுபவிப்பித்து இவருடைய இழவைத்தீர்த்து இவருடைய

த்ரிகரண வ்யாபாரங்களையும் போக்யமாகக்கொள்ள, ஆழ்வார் அந்த ப்ரணயித்வ குணத்திலே தோற்று விரஹாவஸ்தையில் எம்பெருமானுக்குப் போலியான பொருள் களையும் அவனோடு ஸம்பந்தமுள்ள பொருள்களையும் அவனாகக் கருதும்படி பித்தேறி, திருநாட்டிலநுபவத்தையும் ஆசைப்பட்டுக் கூப்பிட, அவ்விழவும் தீரும் படி எம்பெருமான் தேசவிசேஷத்திலே பெரியபிராட்டியாரும் தானுமே போக்தாக்க ளாயிருக்கிற இருப்பைக் கிட்டியனுபவித்தாப்போலே ப்ரத்யக்ஷமாம்படி அநுபவிப் பிக்க, அநுபவித்து இப்படி முக்தபோகத்தை மாநஸமாக ப்ராபித்து அதற்குப் பலனான தேவதாந்தராதி விரக்தியையுடையரான ஆழ்வார் ஐச்வர்ய கைவல்யங்க ளின் அல்பத்வம் அஸ்திரத்வம் ஸாவதிகத்வம் முதலிய தோஷங்களையும், ஆடு, கள், இறைச்சி முதலியநிந்திதபதார்த்தங்களாலே க்ஷுத்ரதெய்வங்களை பஜிப்பதன் நிஹீநத்வத்தையும், பிரமன் ருத்ரன் முதலிய தேவதைகளின் அஜ்ஞாநாதிகளையும், பாஹ்யகுத்ருஷ்டி மதங்களின் தாமஸத்வத்தையும் வெளியிட்டு, "பாவிகளே! தேவதாந்தரங்களை ஆச்ரயித்து அதன்பலனும் கைகண்டீர்களே!, ஸர்வேச்வரனே ரக்ஷகன், அல்லாதாரடங்கலும் அவனுக்கு ரக்ஷ்ய பூதர்கள் என்னுமிடத்தைக் கண்டுவைத்தும் தெளிவுபெறமாட்டீர்கள்; இப்படி நீங்கள் தெளிவு பெறாமைக்குக் காரணம் அவனிட்ட வழக்கான ப்ரக்ருதி ஸம்பந்தம், அதுவிட்டு நீங்குவதற்கு உபாயமும் அவனது திருவடிகளில் ஆச்ரயித்தல் என்றறிந்து அங்ஙனே ஆச்ர யித்து இத்தைத் தப்பப்பாருங்கள்; அவன் திருவடிகளில் கைங்கரியமே உங்களுக் குச் சீரிய புருஷார்த்தம்" என்று உபதேசித்து பகவத்ஸமாச்ரயணத்தை ருசிப்பிக் பிக்கிறார் நாலாம்பத்தில் என்கிறவிது நாலாம்பத்தின் தாத்பர்ய ஸாரம்,

(பு.) 222. ஈசனையீசனீசன்பாலேன்ன—* மறுகலிலீசனைப்பற்றி * ஈசன் ஞால முண்டுமிழ்ந்த வெந்தை *ஈசன்பாலோரவம்பறைதல்* என்னுமிடங்களில் 'நியந்தா' என்னும் பொருளதான ஈசசப்தத்தாலே சொல்லும்படி,

ஏர்கோள்வானத்தும் ஆயேயென்கிற வ்யாப்தி—* ஏர்கொளேழுலகமும் துன்னி முற்றுமாகி நின்ற சோதிஞான மூர்த்தியாய் *வானத்தும் வானத்துள்ளும்பரும் மண் ணுள்ளும் மண்ணின் கீழ்த்தானத்தும் எண்டிசையும் தவிராது நின்றான் * ஆயே யிவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே * என்கிற பாசுரங்களினால் அநுவதிக் கப்பட்டதான வ்யாபதியானது,

நிறம்பெற—ஆகாச வியாப்திபோலாகாமல் (நியாமகத்வ ஸஹக்ருதமாய்) நிறம்பெறும்படியாக,

தனிக்கோல் செலுத்தும் ஸர்வநியந்தா—* வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல * என்கிறபடியே உபய விபூதியும் தன் நியமனத்திலேயாம்படி தன் கட்டளையை நடத்துகிற ஸர்வ நியந்தாவான ஸர்வேச்வரன்;

ஒழிவில் காலத்துக்குச் சேர—(கீழ்மூன்றாம்பத்தில்) * ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி * என்றவிடத்தில் கீழ்க்கழிந்த காலத்தையும் வரவழைத்துக் கொடுக்க வேணுமென்றும் அதிலும் அடிமை செய்யப்பெறவேணுமென்றும் ஆசைப் பட்டதற்குச் சேர,

**பூர்வபோகங்களை ஓதுமாலெய்தின சாபலத்துக்குச் சேர**—(இவ்வாக்யம் * பாலனு யேழுலகு பதிகத்தின் ப்ரமேயத்தைச் சொல்லுகிறது) என்றைக்கோ கடந்துபோன அவனுடைய அபதாநங்களை அந்தந்த தேசகால விசிஷ்டமாக அநுபவிக்கவாசைப் பட்டு * ஆதியங்காலத்த கலிடங் கீண்டவர்பாதங்கள் மேலணி பைம்பொன் துழா யென்றே ஓதுமாலெய்தினள் * என்று, முற்காலத்துப்போகங்களையே வாய்புலற்றும் படி வ்யாமோஹமடைந்த சாபலத்துக்குத் தகுதியாக,

**ஸமகாலமாக்கி**—காலோபாதியைக் கழித்து ஒரு போகியாய் ஸமகாலமாக்கி யநுபவிப்பித்து,

**போதால்வணங்காமை தீர்த்த ப்ரணயித்வத்திலே**—* பூவைவீயாநீர் தூவிப் போதால் வணங்கேனேலும், நின்பூவைவீயாமேனிக்குப் பூசுஞ்சாந்து என்னெஞ் சமே * என்று தொடங்கி * பூத்தண்மாலைகொண்டுன்னைப் போதால் வணங்கேனே லும் நின்பூத்தண்மாலை நெடுமுடிக்குப் புனையுங்கண்ணியெனதுயிரே * என்று அந்தந்த காலங்களிலே எம்பெருமானுக்கு உதவி சிசிரோபசாரம்பண்ணப்பெற்றிலே னாகிலும் ஸர்வேச்வரனாயிருக்கிறவவன் என்னுடைய கரணத்ரயவ்யாபாராதி களையே தனக்கு போக்யவஸ்துக்களெல்லாமுமாகக் கொள்ளுகிறபடி என்னே! இப்படியும் ஒரு ப்ரணயித்வகுணமுண்டோ! என்று இவர் தாமே யீடுபடும்படிபண்ணி அந்தந்த காலங்களிலே தனக்கு உதவி அடிமை செய்யப் பெறுதவிழவை அவன் தீர்த்துக்கொடுக்க, அந்த ப்ரணயித்வகுணத்திலே,

**காதல்மையலேறிய பித்தாய்**—(காதல்மையலாய், ஏறியபித்தாய் என்று இரண்டு வாக்கியமாகப் பிரித்துக்கொள்ளவேணும்; "காதல்-மையல்" என்றது * கோவை வாயாள் பதிகத்தின் ப்ரமேயம் சொல்லிமுடித்தபடி.) * உரைக்கவல்லேனல்லே னுன்னுலப்பில் கீர்த்திவெள்ளத்தின் கரைக்கணென்று செல்வனுன் காதல்மைய லேறினேன் * என்கிறபடியே (எம்பெருமானது ப்ரணயித்வகுணத்திலே) ப்ரேமம் மேலிடப்பெற்று, (அத்தாலே அறிவு கலங்கினவாறே வெள்ளக்கேடாக வொண்ணு தென்று அபபெருமான் சிறிது மறைந்து நிற்க, அவனோடு போலியாயும் ஸம்பந்திக ளாயுமுள்ள பொருள்களை அவனாகவே கருதிப் பேசும்படியான நிலைமையுண்டாக, * மண்ணையிருந்துதுழாவி பதிகத்திலே * பேய்ச்சிமுலை சுவைத்தார்க்கு என்பெண் கொடி ஏறியபித்தே * என்னும்படி பித்தேறப் பெற்றவராய்,

**தேசதூரத்துக்குக் கூவியுங்கொள்ளாயென்றது தீர** — திருநாட்டிலநுபவத்தை யாசைப்பட்டு தேசதூரத்தைப்பற்ற * கோலமேனிகாணவாராய் கூவியுங்கொள் ளாயே * என்று கூப்பிட்ட இழவுந்தீர,

**கண்டசதிரையும் ஒருநிலமாகக் காட்ட**—* ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக் கண்டசதிர் கண்டு * என்று திருநாட்டில் நிலையையுங் கண்டதாகப் பேசும்படி, கீழ் காலோபாதியைக்கழித்து ஸமகாலமாக்கினாப்போலே திருநாட்டி லநுபவத்தையும் இங்கிருந்தே யனுபவிக்கலாம்படி ஒரு நிலமாக்கி ப்ரகாசிப்பிக்க,

**வீவிலின்பம் கூட்டினையென்று முக்தபோகமாநஸப்ராப்தி பலமான... வைராக்யம்**— * வீவிலின்பம்மிகவெல்லை நிகழ்ந்தனன் மேவியே * கூட்டரிய திருவடிக்கண் கூட்டினை நான் கண்டேனே * என்று ஆழ்வார் அதை ஸாக்ஷாத்கரித்ததாக அருளிச்செய்தது மாநஸாநுபவமாகையாலே இப்படி முக்தருடைய போகமான

அவ்வநுபவத்தில் மாநஸமாகவுண்டான ப்ராப்திக்குப் பலனாக ஆழ்வார் தேவதாந்தரங்களில் வைராக்யத்தையும் ஆத்மாத்மீயங்களில் வைராக்யத்தையும் லோகயாத்ரையில் வைராக்யத்தையும் ஐச்வர்யத்தில் வைராக்யத்தையும் கைவல்யத்தில் வைராக்யத்தையுமுடையரானார். எங்ஙனேயென்னில் ;—

**உன்னித்து உயிருடம்பினால் கொடுவுலகம் வேட்கையெல்லாமொழிந்தேனென்னவுடையரானவர்**— * உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனையல்லால் * என்கிற பாசுரத்தினால் தேவதாந்தரங்களில் வைராக்யம், * உயிரினால் குறைவிலமே * * உடம்பினால் குறைவிலமே * இத்யாதி பாசுரங்களால் ஆத்மாத்மீயங்களில் வைராக்யம், * கொடுவுலகம் காட்டேலே * என்கையாலே லோகயாத்ரையில் வைராக்யம், * வேட்கையெல்லாம் விடுத்து * என்று பொதுப்படையாகவும் * ஐங்கருவிகண்டவின்பமொழிந்தேன்; சிற்றின்பமொழிந்தேன் * என்று சிறப்பாகவும் சொல்லுகையாலே ஐச்வர்யத்திலும் அக்ஷரசப்தவாச்யமான ஆத்மாநுபவரூப கைவல்யத்திலும் வைராக்யம், ஆக இப்படிப்பட்ட வைராக்யங்களையுடையரான ஆழ்வார், [இனி பரோபதேசம் செய்தபடிகளைச் சொல்லுகிறது.]

**ஒரு நாயகமென்று ராஜ்ய ஸ்வர்க்காத்மாநுபவ அல்பாஸ்திரத்வ ஸாவதிகத்வாதிகளையும்**—* ஒருநாயகமாய் ஓடவுலகுடனாண்டவர் பெருநாடுகாண விம்மையிலே பிச்சைதாங் கொள்வர் * என்று தொடங்கி ராஜ்ய ஐச்வர்யத்தினுடைய அல்பத்வத்தை மூதலித்தும், * குடிமன்னுமின் சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள் * என்று ஸ்வர்க்காநுபவத்தினுடைய அஸ்திரத்வத்தை மூதலித்தும், * இறுகலிறப்பு * என்று ஆத்மாநுபவத்தினுடைய ஸாவதிகத்வத்தை [அதாவது ஸங்குசிதத்வத்தை] மூதலித்தும்; அன்றியும்;

**ஆடுகள்ளிறைச்சி கருசெஞ்சோறுகிற நீசத்யங்களாலே இளந் தெய்வத்துக்கிழைத்தாடும் நிஹீநதையையும்**— ஆடு, கள், மாம்ஸம் முதலிய பதார்த்தங்களைக்கொண்டு க்ஷுத்ர தேவதைகளுக்கு பலியிட்டு தைவாவிஷ்டராய் ஆடுகிற ஆட்டத்தின் தண்மையை * தீர்ப்பாரையாமினி * என்கிற பதிகத்தினால் மூதலித்தும்,

**பேச நின்றதேவதா அஜ்ஞாநாசக்திஸாபேக்ஷத்வாதிகளையும்**—சிவன் பிரமன் முதலான தேவதைகளின் அஜ்ஞானமென்ன, அசக்தியென்ன, ஸாபேக்ஷத்வமென்ன கர்மவச்யத்வமென்ன இவற்றை * பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே, கபால நன்மோக்கத்துக் கண்டு கொண்மின் * என்கிற பாசுரத்தினால் மூதலித்தும். [அந்த தேவதாந்தரங்களுக்கு அஜ்ஞானமாவது—அந்யோந்யம் தங்களுக்கு வருகிற வருத்தம் அறியாமை. அசக்தியாவது வந்த வருத்தத்தைத் தாங்கள் தவிர்த்துக்கொள்ளமாட்டாமை. ஸாபேக்ஷத்வமாவது—அத்தைத் தவிர்த்துக்கொடுக்கைக்காக ஈச்வரனையபேக்ஷிக்கை.]

**இலிங்கத்து விளம்பும் பாஹ்ய குத்ருஷ்டிமத நமோநிஷ்டதையையும் சொல்லி**—ஸ்ரீ விஷ்ணு புராணத்திலே * யந்மயஞ் ச ஜகத் ஸர்வம் * என்று பொதுவிலே கேள்வி கேட்க, * விஷ்ணோஸ் ஸகாசாத் உத்பூதம் * என்று கோல்விழுக்காட்டாலே உத்தரமானதுபோல் அல்லாமல், எருமையை யானையாகக் கவிபாடித்தரவேணுமென்பாரைப் போலே லிங்கமென்று ஒரு வ்யக்தியைக் குறிப்பிட்டு இதுக்கு ஏற்றஞ்சொல்லித் தரவேணுமென்று—கேட்கிறவனும் தாமஸனாய்க் கேட்க, சொல்லுகிறவனும்

தாமஸனுய்ச் சொல்ல, இப்படிப்பிறந்த லிங்கபுராணம் முதலிய குத்ருஷ்டிஸ்ம்ருதிகளையும், க்ஷபணக பௌத்தாதிகளுடைய பாஹ்யஸ்ம்ருதிகளையும் * இலிங்கத்திட்ட புராணத்தீரும் * என்கிற பாசுரத்தாலும் * விளம்புமாறு சமயமும் * என்கிற பாசுரத்தாலும் ப்ரஸ்தாவித்து அவற்றினுடைய தாமஸத்வத்தைத் தெரிவித்தும் (மநுஸ்ம்ருதியில் * யா வேதபாஹ்யாஃ ஸ்ம்ருதயஃ யாச்ச காச்ச குத்ருஷ்டயஃ, தாஸ் ஸர்வா நிஷ்பலாஃ ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தாஸ் ஸ்ம்ருதாஃ * என்ற ச்லோகத்தின் நான்காவது பாதத்தைத் திருவுள்ளம்பற்றி மூலத்தில் "தமோநிஷ்டதையையும் சொல்லி" எனப்பட்டது )

**ஓடிக்கண்டீர்**— * ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம் பாடியாடிப் பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர் * என்று ஸ்வர்க்க நரகங்களில் போவது கர்ப்பத்தேற வருவதாய்க்கொண்டு அனேக ஜன்மங்களில் பிறந்து தேவதாந்தரங்களைப்பணிந்து அதன்பலனும் கைகண்டீர்களே! என்று தெரிவித்தும்;

**கண்டுந் தெளியகில்லீர்**— * கரந்துமிழ்ந்து கடந்திடந்தது கண்டுந் தெளியகில்லீர் * என்று, எம்பெருமானுடைய சேஷ்டிதங்களை சாஸ்த்ரமூலமாக ப்ரத்யக்ஷித்தும் இவனே ஆச்ரயிக்கவுரியவனென்று தெளியமாட்டுகிறிலிகோள் என்று வெறுத்துரைத்தும்;

**அறிந்தோடுமின்**— * போற்றிமற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டு உம்மையின்னே தேற்றி வைத்தது எல்லீரும் வீடுபெற்றாலுலகில்லை யென்றே— அதறிந்தறிந்தோடுமினே * என்று, ப்ரக்ருதியையிட்டு அவன் மயக்கி வைத்தபடி காணுங்கோள்; அந்த மாயையைத் தப்பும் உபாயமும் அவன் திருவடிகளைப் பற்றுகை என்றறிந்து அவனை ஆச்ரயித்து இந்த மாயையைத் தப்பப்பாருங்கோள் என்று சொல்லியும்,

**ஆட்செய்வதே உறுவதாவதென்று**— * நீள் குடக்கூத்தனுக்காட் செய்வதே உறுவதாவது * என்று, போக்யமான சேஷ்டிதத்தையுடையவனுக்கு அடிமை செய்கையே இவ்வாத்மாவுக்கு உற்றது என்று தெரிவித்தும்,

**விரக்தி பூர்வகமாக ஆச்ரயணத்தை ருசிப்பிக்கிறார் நாலாம்பத்தில்**—ஆக இப்படி உபதேசங்களைப்பண்ணி ப்ரயோஜநாந்தரங்களிலும் தேவதாந்தரங்களிலும் பாஹ்ய குத்ருஷ்டி மதங்களிலும் விரக்தியை யுண்டாக்கி பகவத் ஸமாச்ரயணம் ஸம்ஸாரிகளுக்கு ருசிக்கும்படியாகச் செய்கிறார் நாலாம்பத்தில். ... ... (222)

(மூ.) 223. **ஆவாவென்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லருளென்று பரத்வாதிகளையுடையவன் எவ்விடத்தானென்னும் பாவியர்க்கும் இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹமுடையவன் பொய்கூத்து வஞ்சக் களவு தவிர முற்றவுந்தானாய் உன்னை விட்டேனனப் பண்ணின விரக்திபலபரமாத்மராகம் பேரமர்பின்னின்று கழியமிக்கு யானே யென்ன வாய்ந்து ஆற்றகில்லாது நீராய்மெலிய ஊடுபுக்குவளர விஷ வ்ருக்ஷபலங்கள் கைகூடினவர் அடிமை புக்காரையும் ஆட்செய்வாரையும் காண லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர் குழாங்களைக் கண்டு காப்பிட்டு, ப்ரஹ்லாத விபீஷணர் சொற்கேளாத**

அரக்கரசுரர் போல்வாரைத் தடவிப்பிடித்து தேசகாலதோஷம் போக எங்குமிடங் கொண்டவர்களை மேவித்தொழுது உஜ்ஜீவியுங்கோள், நீங்கள் நிறத்துகிறவர்களை தேவதைகளாக நிறத்தினவனை மேவிப் பரம்புமவரோடொக்கத் தொழில் யுகதோஷமில்லையாமென்று விஷ்ணு பக்திபரராக்கிக் கண்ணுக்கினியன காட்டலாம்படியானர் கண்ணிலே நோக்கிக்காணும் பக்திஸித்தாஞ்ஜனத்தை யிடுகிருர் அஞ்சாம்பத்தில்

ஐந்தாம்பத்தின் ஸாரமான கருத்தாவது—கீழ் நான்கு பத்துக்களில் சொல்லப்பட்ட பரத்வம் காரணத்வம் வ்யாபகத்வம் நியாமகத்வமாகிற குணங்களால் வந்த தன்னுடைய ஏற்றத்தையும் தங்கள் தங்களுடைய தாழ்வையும் அநுஸந்தித்து அகன்றுபோக நினைக்குமவர்கள் திறத்திலும் மேல் விழுந்து விஷயீகரிக்கும்படி பரமகாருணிகனுயிருக்கின்ற எம்பெருமான், கீழேயிவர்க்கு “தேவதாந்தர ஆத்மாத்மீய லோகயாத்ரைச்வர்யாக்ஷரங்களில் வைராக்யம்” என்னும்படி பிறப்பித்த வைராக்யத்திற்குப் பலனான ஸ்வவிஷயமான பக்தியைப் பரம்பரயா வளரச்செய்ய, அந்த பக்தியையும் பாகவதஸமாகமத்தையும் உடையரான ஆழ்வார் தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களையும் திருத்தின தம்மையும் காண்பதற்காக வந்த நித்யஸூரிகளையும் ச்வேதத்வீபவாஸிகளான ஸித்தரையுங்கண்டு மங்களாசாஸநம் பண்ணி, திருந்தாத அஸுரராக்ஷஸ ப்ரக்ருதிகளையும் உபதேச முகத்தாலே திருத்தி, பாகவத ஸமாஜதர்சனம் இனிதாம்படியான ஞானம் பிறந்தவர்களுக்கு ப்ராப்யத்வரைக்கு அடியான பக்தியையும் உபதேசித்துத் தலைக்கட்டுகிருரென்கை.

(மு·) 223. ஆவாவென்று தானே தன்னடியார்க்குச் செய்யும் தொல்லருளென்று— • ஆவாவென்றருள் 'செய்து • தானே யின்னருள் செய்து • கலியுகமொன்று மின்றிக்கே தன்னடியார்க்கருள் செய்யும் • சுழலின்மலி சக்கரப்பெருமானது தொல்லருளே * என்கிற பாசுரங்களிற்படியே,

பரத்வாதிகளையுடையவன் எவ்விடத்தானென்னும் பாவியர்க்கும் இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹமுடையவன்—• அம்மானாழிப் பிரானவ னெவ்விடத்தான் யானார் எம்மா பாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர் • என்று, பரத்வ காரணத்வ வ்யாபகத்வ நியாமகத்வாதிகளாலுண்டான பெருமையையும் தங்களுடைய தாழ்வையும் நினைத்துப் பின்வாங்கும்படியான மஹாபாபிகள் திறத்திலும் இருகரையுமழியப் பெருகாநிற்கிற அருள்வெள்ளத்தை யுடையனான ஸர்வேச்வரன்,

பொய், கூத்து, வஞ்சக், களவு தவிர—• பொய்யே கைம்மை சொல்லி • தேனே யின்னமுதே யென்றென்றே சில கூத்துச் சொல்ல • வள்ளல் மணிவண்ணனே யென்றென்றே உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனந் தவிர்ந்தே * என்கிறபடியே மெய்கலவாத பெரும் பொய்யைச் சொல்லி ஸர்வஜ்ஞனை அவனையும் பகட்டும் க்ருத்ரிமமான மனஸ்ஸை இவர் தவிரும்படி,

முற்றவுந்தானுய் உன்னைவிட் டென்னப்பண்ணின விரக்திபல பரமாத்மராகம்— • தானே யின்னருள் செய்து என்னை முற்றவுந் தானானான் • என்று இவர்க்கு ஸகல வித போக்யமும் தானாய், • இனியுன்னை விட்டென் கொள்வனே * என்று தாமே

பேசும்படி பண்ணின (கீழ்ப்பத்தில் பிறந்த) வைராக்யத்திற்குப் பலமான பரமாத்ம விஷயக ராகமானது, (இதற்கு "ஊடுபுக்குவளர" என்பதோடே அந்வயம்.)

பேரமர் பின்னின்ற கழியமிக்கு—• பேரமர் காதல் கடல்புரையவிளைவித்த • பின்னின்ற காதல்நோய் • கழியமிக்கதோர் காதலளிவள் • என்னும்படி மிகவும் வளர்ந்து,

யானேயென்ன வாய்ந்து—• கடல் ஞாலஞ் செய்தேனும் யானே • என்று தொடங்கி • வாய்ந்த வழுதி வளநாடன் • என்று, எம்பெருமான் செய்த அத்புத கர்மங்களை யெல்லாம் தாமே செய்ததாகச் சொல்லி அநுகாரமுகத்தாலே விஷயத்தைக் கிட்டிப் பேசும்படியாகி,

ஆற்றகில்லாது—* நோற்ற நோன்பிலேன்......இனியுன்னை விட்டொன்று மாற்ற கிற்கின்றிலேன் • என்று அவனையொழிய ஒருக்ஷணமும் தரித்திருக்கமாட்டாதபடியாய்,

நீராய்—• ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராய் * என்று சரீரம் சிதிலமாம்படியாய்,

மெலிய—• மானேய் நோக்கு நல்லீர் வைகலும் வினையேன்மெலிய * என்று ஸதா மெலியும்படியாய்,

ஊடுபுக்குவளர—• நிறந்தனூடுபுக் கெனதாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற * என்னும்படி வளர; (விரக்திபல பரமாத்மராகம் வளர என்று அந்வயம்.)

விஷவ்ருக்ஷபலங்கள் கைகூடினவர்—* ஸம்ஸார விஷவ்ருக்ஷபலமாகச் சொல்லப்பட்ட பகவத் பக்தியும் பாகவத ஸமாகமமுமாகிற இரண்டும் கைபுகுரப்பெற்றவிவர்,

அடிமைபுக்காரையும் ஆட்செய்வாரையும் காண—கீழ்ப்பத்திலே • ஒன்றுந்தேவு பதிகத்தில் உபதேசங்கேட்டுத் திருந்தி அடிமை புகுந்த ஸ்ரீ வைஷ்ணவர்களையும், அவர்கள் திருந்தும்படியாக அடிமை செய்தவரான தம்மையும் காண்கைக்கு,

லோகத்வீபாந்தரங்களில்நின்றும் போந்த—லோகாந்தரமான ஸ்ரீ வைகுண்டத்திலுள்ளாரும் த்வீபாந்தரமான ச்வேதத்வீபத்திலுள்ளாருமாய் வந்து சேர்ந்த,

தேவர்குழாங்களைக் கண்டுகாப்பிட்டு—நித்ய ஸூரிகளும் முக்தப்ராயருமான தேவர்களின் திரளைக்கண்டு • பொலிக பொலிகவென்று மங்களாசாஸனம் செய்து,

ப்ரஹ்லாதவிபீஷணர் சொல்கேளாத அரக்கசுரர் போல்வாரைத் தடவிப்பிடித்து—ப்ரஹ்லாதாழ்வானுடையவும் விபீஷணாழ்வானுடையவும் உபதேசங்கேட்டும் திருந்தாத இரணியனையும் இராவணனையும் போன்று ஆஸுரப்ரக்ருதிகளாயுள்ளவர்களை • அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் * என்று தேடிப்பிடித்து,

தேச கால தோஷம் போக—• கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசி தீயனவெல்லாம் நின்றிவ்வுலகில் கடிவான் • என்று இவ்விருள் தருமாஞாலத்தின் தோஷங்கள் போகவும் • திரியுங் கலியுகம் நீங்கி • என்று கலிகாலதோஷம்போகவும்,

எங்குமிடங்கொண்டவர்களை மேவித்தொழுது உஜ்ஜீவியுங்கோள்—• இரியப்புகுந்திசைபாடி யெங்குமிடங்கொண்டனவே * என்று ஸர்வப்ரதேசங்களிலும் பரம்பின பாகவதோத்தமர்களை ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோள்;

நீங்கள் நிறுத்துகிறவர்களே தேவதைகளாக நிறுத்ினவனே மேவிப் பரம்புமவரோ டொக்கத் தொழில் யுகதோஷமில்லையாமென்று விஷ்ணுபக்திபரராக்கி—(தேவதாந்தர ப்ராவண்யத்தாலே எம்பெருமானது வைபவத்தை யறியமாட்டாதவர்களை நோக்கி உபதேசித்தபடியைச் சொல்லுகிறது இது) * நிறுத்தி நும்முள்ளத்துக் கொள்ளும் தெய்வங்கள் * என்று நீங்கள் உபாஸிக்கும் தேவதைகளை, * நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன் தானே * என்று, உங்களுக்கு ஆச்ரயணீயராக நிறுத்திவைத்திருக்கிற ஸர்வேச்வரனை, [மிக்க வுலகுகள் தோறுமென்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே] சிவனும் பிரமனு மிந்திரனும் முதலாகத் திரண்ட தேவதா ஸமூஹங்கள் எம்பெருமானுடைய அஸாதாரண விக்ரஹத்தை சுபாச்ரயமாகப் பற்றித் தங்கள் தங்கள் பதவி பெற்றார்களாகையாலே அவர்களைப்போலே நீங்களும் அப்பெருமானை ஆச்ரயிக்கப்பெறில் விபரீத ப்ரவர்த்தகமான கலியுகதோஷம் உங்களுக்குத்தட்டாது என்று உபதேசித்தும் பகவத்பக்தி பரராகத்திருத்தி,

கண்ணுக்கினியன காட்டலாம்படி யானார்கண்ணிலே நோக்கிக்காணும் பக்தி ஸித்தாஞ்ஜனத்தை யிடுகிறார் அஞ்சாம்பத்தில்—திருந்தாதவர்களைத் திருத்தினவளவேயல்லாமல், முன்பே திருந்தினவர்களையும் "கண்ணுக்கினியன கண்டோம் தொண்டீரெல்லீரும் வாரீர்" என்று ஆதரத்தோடு அழைத்துக்காட்டலாம்படி யுள்ளவர்களா யிருக்குமவர்கள் "கண்ணுக்கினியன காட்டலாம் படியானார்" என்பதனால் விவக்ஷிதர்கள். அவர்கள் உபாயாத்யவஸாய தசையிலே நிற்பவர்கள்; பதற்றத்திலே நிற்கிற தம்மை * எங்ஙனேயோவன்னைமீர்காள் என்னைமுனிவது நீர் * என்னும்படியே பொடியுமவர்கள். அவர்களுடைய கண்ணிலே யென்றது—உபாயாத்யவஸாயஜ்ஞானத்தின்மேலே யென்றபடி. நோக்கிக்காணும் பக்திஸித்தாஞ்ஜநமாவது—* என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே * என்றும் * மநஸி விலஸதாக்ஷ்ணு பக்திஸித்தாஞ்ஜநேந * என்றும் சொல்லுகிறபடியே காணக்கூடாத அர்த்தத்தை ஸித்தாஞ்ஜனம் போலே பிரகாசிப்பிக்குமதாய் ப்ராப்ய வைலக்ஷண்யத்தை விஷயீகரித்திருக்குமதான பக்தி; அதை உபதேச முகத்தாலே உண்டாக்குகிறார் அஞ்சாம் பத்திலென்கை.

(மூலத்தில், "மேவிப்பரம்பு மவரோடொக்க" என்றவிடத்தில் சிறிது பாடப் பிறழ்வு இருக்கும்போல் தோன்றுகிறது. * எங்கும் பரந்தன * என்கிற ஸிஷயவாக்யத்திற்குச் சேர "மேவிப்பரவுமவரோ டொக்க" என்று பாடமிருந்திருக்க வடுக்கும். விஷய வாக்யத்தில் "எங்கும் பரம்பின தொண்டீர்" என்றிருந்திருக்குமாகில் "மேவிப்பரம்புமவரோ டொக்க" என்கிற பாடம் ஏற்கும். மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலும் 'பரவுமவரோடொக்க'' என்கிற பாடமே ஸித்திக்கின்றதாகத் தோன்றுகின்றது. பிராமாணிகர்கள் ஆராய்க.) .... (223)

**(மூ.) 224. என்னையும் யாவர்க்கும் சுரர்க்காய் அடியீர் வாழ்மினென்று கருணையாலே *ஸர்வலோக பூதேப்ய:* என்றவை கடலோசையும் கழுத்துக்கு மேலுமாகாமல் உபாயத்வம் கல்வெட்டாக்குகிற சரண்யன் அஜ்ஞாநாசக்தி யாதாத்ம்ய ஜ்ஞானங்களளவாலன்றிக்கே அங்குற்றேன் என்றான்**

புணராயென்னும்படி மெய்யமர் பக்தி பூமபலமாகவும் அநந்ய கதித்வமுடைய தமக்குப் பாதமே சரணாக்க அவையே சேமங்கொண்டு ஏகசிந்தையராய் திர்யக்குக்களையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து, விளம்பரோஷம் உபாயத்தாலேயழிய, உருகாமல் வரித்ததும் நண்ணி வணங்க பலித்தவாறே ஸப்ரகாரமாக ஸக்ருத் கரணீயமென்று—புராணபௌராணிகர் த்யாஜ்யாம்சமாக்கின சிதசித் ப்ராப்ய ப்ராபகாபாஸங்களைக் கைவலிந்து கைகழலக்கண்டும் எல்லாங் கிடக்க நினையாதகன்றும் ஆவிர் மேவிர் ஊதிர் என்று ததீய சேஷமாக்கியும், புறத்திட்டுக் காட்டியென்று, ப்ரஸங்கிக்கில் முடியும் படிவிட்டு, தந்தைதாய் உண்ணுஞ்சோறு மாறி பூவையாவையு மொன்றேயாக்கி, தனர்வேறே குறுகாதோ முதல்வாவோ வென்னு மார்த்தியோடே திரிவிக்கிரமனைக் குறட் கோலப்பிரானைய் அடியை மூன்றை யிரந்த வன்கள்வன் கண்முகப்பே அகல்கோன் திசைவையம் விண்ணும் தடவந்த தடந்தாமரைகளை இணைத் தாமரைகள் காண இமையோரும்வருமபடி சென்று சேர்ந்த உலகத்திலதத்தே கண்டு அகலகில்லேனென்று பூர்வவாக்யமநுஸந்தித்தவர், பிணக்கறத் தொடங்கி வேதப்புனித விறுதி சொன்ன ஸாத்யோபாய ச்ரவண ஸசோகஸஜாதீயர்க்கு, தந்தனன் மற்றோர்களைகணிலம் புகுந்தே னென்று ஸ்வஸித்தோபாய நிஷ்டையை உக்த்யநுஷ்டாநங்களாலே காட்டுகிறார் ஆறும்பத்தில்.

ஆறும்பத்தின் ஸாரமான கருத்தாவது—கீழ்ப்பத்திற்பேசின குணமாகிய பரம க்ருபையினாலே அனைவரும்வந்து ஆச்ரயிக்கும்படியிருக்கிற ஸர்வசரண்யனான ஸர்வேச்வரன் பக்தி பாரவச்யத்தாலே அநந்யகதியான ஆழ்வார்க்குத் தன் திருவடிகளையே நிரபேக்ஷோபாயமாகக் காட்டிக்கொடுத்தான். அங்ஙனம் காட்டிக்கொடுக்கப்பெற்ற ஆழ்வார் அவ்வுபாயத்திலே விச்சேதமில்லாதபடி நடக்கிற வ்யவஸாயத்தையுடையவராக ஆகி, அந்தத் தம்முடைய வ்யவஸாயத்தைத் தூதுவிடும் முகத்தாலே எம்பெருமானுக்கு அறிவித்தார். அறிவித்தும் அவனெழுந்தருளத் தாமதிக்கையாலே ப்ரணய ரோஷமுடையவரானாராழ்வார். அந்த ப்ரணய ரோஷத்தை எம்பெருமான் வந்து பரிஹரித்தவாறே அவனுடைய ஸாமர்த்தியத்தை அநுஸந்தித்தார். கீழே ஐந்தாவதுபத்தில் • பிறந்தவாற்றிலே தரித்துநின்று குணங்களை அநுபவிக்கவல்லேனும்படி பண்ணியருள வேணுமென்று பண்ணின ப்ரபத்தியும் * குரவையாய்ச்சியரிலே பலித்தது. அது பலித்தவாறே ப்ராப்திக்கு ப்ரபத்தி பண்ணுவதாகக் கோலினார். ஸித்தோபாயவரணம் பண்ணும்போது இதரங்களைப் பரித்யஜித்தே யாகவேண்டுகையாலே உபாய விரோதிகளான த்யாஜ்யாம்சங்களை ஸவாஸநமாக விட்டார். விட்டவையெல்லாம் தமக்குப் பற்றுகிற விஷயமேயாக நினைத்து, தமக்கு உபாயமாக நினைத்திருக்கும் ஸர்வஸுலபமான உலகளந்த திருவடிகளை நித்யஸூரிகளும் வந்தநுபவிக்கும்படி நிற்கிற திருமலையிலே கண்டு த்வயத்தில் பூர்வவாக்ய ப்ரக்ரியையாலே சரணம்புகுந்தார். • பத்

துடையடியவர் தொடங்கி அஞ்சாம்பத்தளவும் உபதேசித்த பக்தியுபாயத்தின் துஷ்கரத்வாதி தோஷவுணர்ச்சி காரணமாக சோகிக்கும்படியான நிலைமை பிறந்த வர்களுக்குத் தம்முடைய ப்ரபத்திநிஷ்டையை ப்ரகாசிப்பிக்கிறார்; இதுவாயிற்று ஆறும்பத்தின் தாத்பர்ய ஸாராம்சம்.

(ப.) 224. என்னையும் யாவர்க்கும் சரர்க்காய் அடியீர்வாழ்மினென்று—• ஏறு சேவகனுர்க்கு என்னையுமுள ளென்மின்களே • திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும் வன்சரணே * வன்சரண்சுரர்க்காய் • * அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மினென்றென்றருள்கொடுக்கும் * என்கிற பாசுரங்களிற்படியே,

கருணையாலே—தன்னுடைய க்ருபையாலே,

ஸர்வலோகபூதேப்யஃஎன்றவை கடலோசையும் கழுத்துக்குமேலுமாகாமல்—(ஸர்வ லோக என்றது கடலோசையாகாமலும், ஸர்வபூதேப்யஃ என்றது கழுத்துக்குமேலா காமலும் என்று பிரித்து யோஜிப்பது.) சரணுகதனுன விபீஷணன் • ஸர்வலோக சரண்யாய ராகவாய • என்று ஸர்வலோகசரண்யனென்கிற உக்தி ஸமுத்ரகோஷம் போலே நிரர்த்தகமாகாமலும், சரண்யனுன தான் சொன்ன * அபயம் ஸர்வபூதேப்யஃ ததாமி • என்ற உக்தி அஹ்ருதயமாகாமலும்,

உபாயத்வம் கல்வெட்டாக்குகிற சரண்யன்—• சுமந்துமாமலர் நீர்சுடர்தூபங் கொண்டு அமர்ந்து வானவர் வானவர்கோனெடும் நமன்றெழுந்திருவேங்கடம் * * போதறிந்துவானரங்கள் * என்றுமுள்ள பாசுரங்களிற்படியே நித்யஸூரி என்றும், * எழுவார் விடை கொள்வார் ஈன்துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார் வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே* என்றும், நித்யஸூரி கள் நித்யஸம்ஸாரிகள், ப்ரயோஜநாந்தபரர் அநந்யப்ரயோஜநர், மநுஷ்யர்கள் திர்யக்குகள் என்கிற வாசியின்றிக்கே அனைவரும் ஆச்ரயிக்க நிற்கையாலே தன்னு டைய உபாயத்வம் கல்வெட்டாம்படி திருமலையிலே நிற்கிற அசேஷலோக சரண்ய னுன ஸர்வேச்வரன்,

அஜ்ஞாநசக்தி யாதாத்ம்யஜ்ஞானங்களளவாலன்றிக்கே-அஜ்ஞாநசக்திகளென்ன ஸ்வரூப வுண்மையுணர்ச்சியென்ன இவைமாத்திரமே காரணமாகவல்லாமல்,

அங்குற்றேனென்னுன் புணராயேன்னும்படி—* அங்குற்றே னல்லே னிங்குற்றே னல்லேன் உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து நானெங்குற்றேனுமல்லேன் • என்னுன் செய்கேன் * பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறு புணராயே • என்று சொல்லும்படி,

மெய்யமர்பக்திபூமபலமாகவும் அநந்யகதித்வமுடைய தமக்கு—"ஸ்வபக்தேர் பூம்நா வா" • மெய்யமர்காதல் சொல்லி • என்று திருமேனியோடே அணைய வேண்டும்படியான காதலென்னும்படி (கீழ்ப்பத்தில் தமக்குப்) பிறந்த பக்தியின் கனம் காரணமாகவும் உபாயாந்தரங்களில் கைவைக்கமாட்டாதபடியான தமக்கு,

பாதமேசரணுக்க அவையே சேமங்கொண்டு ஏகசிந்தையராய் — • ஆறெனக்கு நின்பாதமே சரணுகத் தந்தொழிந்தாய் • என்னும்படி திருவடிகளையே ஸாதன மாகக் காட்டிக்கொடுக்க, • கழல்களவையே சரணுகக்கொண்ட • அடிமேல் சேமங்

கொள் தென்குருகூர்ச்சடகோபன் * நாகணைமிசை நம்பிரான் சரணேசரண் நமக்கென்று நாடொறுமேகசிந்தையனாய் * என்கிறபடியே அத்திருவடிகளையே உபாயமாகக்கொண்டு மாறுபடாத அத்யவஸாயத்தை யுடையராய்,

**திர்யக்குகளையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து**—விபீஷணன் திர்யக்குக்களான வானரமுதலிகளையிட்டுத் தன் கருத்தை * நிவேதயத மாம் க்ஷிப்ரம் * என்று நிவேதனம் செய்தாப்போலே இவரும் * வைகல்பூங்கழிவாயில் பக்ஷிகளையிட்டுத் தம் கருத்தையறிவித்து,

**விளம்பரோஷம் உபாயத்தாலேயழிய**—இப்படியறிவித்தும் அவன் விரைந்து வாராமல் தாழ்த்து வந்ததனாலுண்டான ப்ரணயரோஷம் * அழித்தாயுன் திருவடியால் * என்கிறபடியே உபாயமான திருவடியாலேயழிய [திருவடிகளால் திருமேனியை நினைக்கிறது; வடிவழகைக் காட்டி ப்ரணயரோஷத்தைக் குலைத்துப் பொருந்தவிட்டுக்கொள்ள அவனோடே பொருந்தியென்றபடி.]

**உருகாமல்வரித்ததும் நண்ணிவணங்க பலித்தவாறே**—கீழே * பிறந்தவாறு மென்ற பதிகத்திலே * பிறந்தனாடுபுக்கெனதாவியை நின்று நின்றுருக்கியுண்கின்ற * என்று பலகாலுஞ்சொல்லி உருகாமல் தரித்திருந்து அநுபவிக்க வல்லேனும்படி பண்ண வேணுமென்று அவனை உபாயமாக வரித்ததும் * குரவையாய்ச்சியரிலே * நண்ணி நான் வணங்கப்பெற்றேன் * என்று தம் வாக்காலே சொல்லும்படி பலித்ததாக,

**ஸப்ரகாரமாக ஸக்ருத்கரணீய மென்று**—இதரோபாயங்களை விடுகையாகிற ப்ரகாரத்தோடே கூட ஸித்தோபாயவரணம் ஒருகால் பண்ணவேணுமென்று பார்த்து,

**புராண பௌராணிகர் த்யாஜ்யாம்சமாக்கின சிதசித் ப்ராப்ய ப்ராபகாபாஸங்களை**—* பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந், ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணிச க்ருஹாணிச, ஸர்வதர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்ச ஸாக்ஷராந் * என்கிற ச்லோகமுகத்தாலே (பவிஷ்யத்) புராணமும் அப்புராணவசனத்தைப் பின்பற்றுகிற பௌராணிகரும் ஸித்தோபாயவரணத்துக்கு அங்கமாக த்யஜிக்கப்படுமம்சமாக்கின சேதநமாயும் அசேதநமாயுமிருந்துள்ள ப்ராப்யாபாஸங்களையும் ப்ராபகாபாஸங்களையும், (இதற்கு, மேலே "முடியும்படி விட்டு" என்றத்தோடே அந்வயம்.)

**கைவலிந்து கைகழலக்கண்டும்**—* அன்னைமீரணிமாமயில் சிறுமானிவள் நம்மைக் கைவலிந்து * என்கிறபடியே தாமாகக் கைவிட்டும், * இழந்தது சங்கே * என்று உறங்குவான்கைப் பண்டம்போலே அவை தன்னடையே கைநெகிழ்ந்து போகக் கண்டும்,

**எல்லாங்கிடக்க நினையாது அகன்றும்** — * இதெல்லாங்கிடக்க வினிப்போய் * என்றும், * எம்மை யொன்றும் நினைத்திலளே * என்றும், * இன்றெனக்கு உதவாதகன்ற * என்றும் சொல்லுகிறபடியே உபேக்ஷித்து அகன்றுபோயும்,

**ஆளீர் மேவிருந்ீரென்று ததீயசேஷமாக்கியும்**—இதில் ததீயர்க்கு போக்யமாக ஸமர்ப்பிக்கத் தக்கவற்றை * பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ * நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடு மேவீரோ * ஓடிவந்தென்குழல்மேலொளிமாமலரூதீரோ * என்று தமக்கு உபாதேயமான பரமபதமுமுட்பட அவர்களுக்குப் பரிசிலாக ஸமர்ப்பித்தும்,

புறத்திட்டுக் காட்டியென்று, ப்ரஸங்கிக்கில் முடியும்படி விட்டு — * கிறிசெய்தென்னைப் புறத்திட்டு இன்னங்கெடுப்பாயோ *பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ* என்று சொல்லுகையாலே விஷயாந்தரங்களின் ப்ரஸங்கமாத்ரத்திலும் தாம் முடியும்படியைத் தெரிவித்து அவற்றைவிட்டு,

தந்தைதா யுண்ணுஞ்சோறு மாதித் பூவையாவையு மொன்றேயாக்கி—* சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையினாலும் தேவபிரானையே தந்தை தாயென்றடைந்த * உண்ணுஞ்சோறு பருகுநீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்* * வைத்தமாநிதியாம் மதுசூதனையே * பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால் திருநாமங்களே * என்கிற பாசுரங்களிற்படியே * த்வமேவ மாதாச பிதா த்வமேவ த்வமேவ பந்துச்ச குருஸ் த்வமேவ, த்வமேவ வித்யா த்வவிணம் த்ரமேவ த்வமேவ ஸர்வம் மம தேவதேவ * என்னுமாபோலே, கீழ்விட்டவையெல்லாம் பற்றுகிற விஷய மொன்றேயாக நினைத்து,

தளர்வேனோ தீவேனோ குறுகாதோ முதல்வாவோ வென்னுமார்த்தியோடே — *சாலப் பலநாள் அடியேனின்னம் தளர்வேனோ! * தீயோடுடன் சேர்மெழுகாயுலகில் திரிவேனோ! * கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ * புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே போன முதல்வாவோ! * என்று கதறும்படியான ஆர்த்தியோடே,

திரிவிக்ரமனுக்கு குறட்கோலப்பிரானாய் அடியை மூன்றையிரந்த வன்கள்வன் கண் முகப்பே அகல் கொள்திசை வையம் விண்ணும் தடவந்த தடந்தாமரைகளை—(புராண பௌராணிகர்கள் சரணாகதி செய்யும்போது * லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ! * என்று சொல்லி உலகமளந்த திருவடிகளை நோக்கிச் சரணம் புகுந்தபடிக்குச் சேர ஆழ்வாரும் உலகமளந்த திருவடியை நோக்கியே சரணாகதி செய்வது விரிவாக நிரூபிக்கப்படுகிறது.) * தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன் * மாண்குறள் கோலப்பிரான் * அடியை மூன்றையிரந்தவாறும் * மின்கொள் சேர்புரிநூல் குறளாய் அகல் ஞாலங்கொண்ட வன்கள்வன் * காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்த * அகல்கொள் வையமளந்த மாயன் * திசைஞாலம் தாவியளந்ததும் * தாவிவையங்கொண்ட * மண்ணும் விண்ணுங் கொண்ட * * ஓரடியாலெல்லாவுலகும் தடவந்த * என்று பலகாலும் வாய் வெருவும்படியான தாவிவையங்கொண்ட தடந்தாமரைத் திருவடிகளை,

இணைத்தாமரைகள் காண இமையோரும் வரும்படி—* எந்நாளே நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கென்று * என்று உலகளந்த திருவடிகளை நாம் ஸேவிப்பதெப்போதோவென்று நித்யஸூரிகளும் பாரித்துக்கொண்டுவரும்படி,

சென்று சேர்ந்த—* அன்று ஞால மளந்த பிரான்பரன் சென்று சேர்திருவேங்கடமாமலை * என்று உலகளந்த விடாய்தீர விடாயர் மடுவிலேசேருமாபோலே உகந்துவந்து நிற்கிற,

உலகத்திலகத்தே கண்டு—* திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடம் * என்னப்பட்ட திருமலையிலே கண்டு,

அகலகில்லேனென்று பூர்வவாக்ய மநுஸந்தித்தவர்—த்வயத்தின் பூர்வகண்டமான "ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்னும் வாக்யத்தின்

பொருளை * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா! * என்று தொடங்கியுள்ள பாசுரத்திலும் அநுஸந்தித்த ஆழ்வார், [பூர்வவாக்ய ப்ரக்ரியை யாலே ப்ரபத்தி பண்ணின ஆழ்வார் என்றபடி.]

பிணக்கறத்தொடங்கி வேதப்புனித விருத்திசொன்ன—* பிணக்கறவறுவகைச் சமயமும் * என்கிற பாட்டிலே * வணக்குடைத்தவநெறி வழிநின்று * என்று தொடங்கி * வேதப்புனித இருக்கை நாவில்கொண்டு அச்சுதன் தன்னை ஞானவிதி பிழையாமே மேவித் தொழுதுய்ம்மினீர்கள் * என்னும் பாசுரமளவாகக் கீழுபதேசித்த,

ஸாத்யோபாயச்ரவண—ஸாத்ய ஸாதந பக்தியைக் கேட்டதனாலே,

ஸசோக—அதினுடைய ஸ்வரூப விரோதித்வத்தை நினைத்துச் சோகித்தவர்களாய்,

ஸஜாதீயர்க்கு—* என்னான் செய்கேன் * என்றிருக்கும் தம்மோடு ஸஜாதீயர்களான அதிகாரிகளுக்கு,

தந்தனன் மற்றோர்களைகணிலம்புகுந்தேனென்று உக்தி அநுஷ்டானங்களாலே—* தந்தனன் தனதாள்நிழல் * திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்களன்றி மற்றோர்களைகணிலங் காண்மின்கள் * என்கிற தம் உக்தியாலும், * அடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்கிற தம் அநுஷ்டாநத்தாலும்,

ஸ்வஸித்தோபாய நிஷ்டையைக் காட்டுகிறார் ஆறாம்பத்தில்—தமக்கு இந்த ஸித்தோபாயத்திலுண்டான நிஷ்டையை ப்ரகாசிப்பிக்கிறார் ஆறாம்பத்தில். ... (224)

(மூ.) 225. எண்ணிலாச் சூழ்ச்சியால் துன்பமேவியவன் மாயாப்பல்யோகு செய்தியென்னும் ஆச்சர்ய சக்தியோகத்தாலே தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தையருளும் ப்ராபகத்வம் புற்பாவெறும்பு பகைவனுக்கும் ஆக்கவல்ல ஸர்வஸக்தி, பாதமகலகில்லாத தம்மை அகற்றமவற்றின் நடுவேயிருத்தக்கண்டு நலிவான் சுமடுதந்தாய் ஓவென்று ஸாதநபலமான ஆக்ரோசத்தோடே பழியிட்டுக் கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியைக் கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கித் தேற்றவொண்ணாதபடி தோற்று ஒன்றிரக்கப்பண்ணின பலாதாநம் மற்றுங்கற்பாரிழவிலே சுவரிப் பழைய தனிமைக் கூப்பீடு தலையெடுத்து, சூழவும் பகைமுகஞ் செய்ய, எடுப்புஞ் சாய்ப்புமான க்லேசம் நடக்க, உபாயாதிகாரதோஷமொழிய மாயங்கள் செய்துவைத்த வைசித்ரியைக் கேட்க, இச்சமாக இருத்தி உறக்கொண்ட ஸ்வபரப்ரயோஜனத்தை அருளிச்செய்ய, என்சொல்லி எந்நாள் பார்விண்ணீர் இறப்பெதிர் எதுவுமென்கிற உபகாரஸ்ம்ருதியோடே தன் சரிதை கேள்வியாகாமல் இன்பம் பயக்க விருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக்கேட்பிப்பதாக கானகோஷ்டியையும் தேவபிரானறிய மறந்தவர், சரமோபாயபரானுர்க்கு நிணகரமது, துணித்தான் சரணன்றி மற்றொன்றிலம் உன்னித் தொழுமினென்று ப்ராப்யஸாதநாவதியை ப்ரீதியாலே ப்ரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்.

ஏழாம்பத்தின் ஸாரமான கருத்தாவது—விசித்ரசக்தி யுக்தனான ஸர்வேச்வரன், தன் திருவடிகளை க்ஷணகாலமும் பிரியமாட்டாதே ப்ரபத்திபண்ணின தம்மை விஷயங்களிலே மூட்டித் தன்பக்கல் சேராதபடி அகற்றுமவையான இந்திரியங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைக்கக்கண்டு வருந்திக் கூப்பிட்டு, தம் நிலைமை தாம் பேசமாட்டாதபடி தளர்ந்து, பிறரால் மீட்கவொண்ணாதபடி நெஞ்சுபறியுண்டவராக, அவன் தன் விஜயங்களைக்காட்டி இவரைத் தரிப்பிக்க, அந்தத் தரிப்பும் ஸம்ஸாரிகளின் இழவை நினைத்துச் சுவறிப்போய் பழைய ஆர்த்தியே தலையெடுத்து, அவனுடைய அவயவங்களெல்லாம் ஸ்ம்ருதிவிஷயமாகி ஒருமூகஞ்செய்து நலிய நோவுபட்டு, இப்படி எடுப்பும் சாய்ப்புமாக வருத்தம் செல்லச் செய்தே "உபாயபூதனான உனக்கோ ஜ்ஞானசக்திகளில் குறையில்லை, எனக்கோ ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்களிலும் ஆர்த்தியிலும் குறையில்லை; இப்படியிருக்க என்னை ஸம்ஸாரத்திலே வைத்தது எதற்காக'' என்று கேட்க, அவனும் ''நமக்கும் நம்முடையார்க்கும் இன்பமாகத் திருவாய்மொழி பாடுவிக்க வைத்தோங்காணும்'' என்றருளிச்செய்ய, 'வியாஸர் முதலான முனிவர்களும் முதலாழ்வார்களு முண்டாயிருக்க, கவிபாட வல்லவர்களான அவர்களைக் கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளாதே நம்மைக்கொண்டு கவிபாடுவித்துக் கொள்வதே!' என்று அவன் பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்து அதுக்குப் பிரதியுபகாரம் பண்ணத் தேடி ஒன்றும் காணாமையாலே, திருவாறன் விளையிலே பெரிய பிராட்டியாருடனே யெழுந்தருளி யிருக்கிற பேரோலக்கத்திலே திருவாய்மொழி கேட்பித்து அடிமை செய்வது தவிர வேறொரு கைம்மாறில்லை யென்று துணிந்து அங்ஙனே செய்யத் திருவுள்ளம் ப்ரவணமாகையாலே, பரமபதத்திலிருப்பையும் உபேக்ஷிக்கும்படியானவராகி, கீழ்த் தம்முடைய உபாயநிஷ்டையை வெளியிடும்படிக்குப் பாங்காக நின்றவர்களுக்கு 'திருவாறன் விளையே ப்ராப்யம், அங்கெழுந்தருளி நிற்கிறவனே உபாயம், என்று தாம் அறுதியிட்ட ப்ராப்யப்ராபகங்களினுடைய முடிவைத் தம் உகப்பாலே வெளியிடுகிறாரென்பதாயிற்று ஏழாம்பத்தின் தாத்பர்ய ஸாராம்சம்.

(ப·) **225. எண்ணிலாக்குணங்கள் பாலதுன்ப வேறவன் மாயாப்பல்யோகு செய்தி** யென்னும் ஆச்சர்யசக்தி யோகத்தாலே—எண்ணிலாப்பெருமாயனே! * குணங்கள்—கொண்டமூர்த்தியோர் மூவராய்ப் படைத்தளித்துக் கெடுக்கும் * பாலதுன்பங்களின் பங்கள் படைத்தாய் * ஊழிதோறூழி யுருவும்பேரும் செய்கையும் வேறவன் வையங்காக்கும் *மாயாவாமனனே!* உள்ளப்பல்யோகுசெய்தி* என்றிப்படி பஹுவிதமாகச் சொல்லப்பட்ட-உபாயக்ருத்யத்துக்கு அபேக்ஷிதமான ஆச்சர்யசக்தியோகத்தாலே,

**தெளிவுற்றவர்க்கு ஏற்றரும் வைகுந்தத்தை அருளும் ப்ராபகத்வம்**—* தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக்கதிசெய்யும் * ஏற்றரும் வைகுந்தத்தையருளும் நமக்கு * என்கிற பாசுரங்களிற்படியே, தெள்ளியார்க்கு ஸ்ரீ வைகுண்டத்தைத் தன்னருளாலே கொடுக்கையாகிற தன் உபாயத்வத்தை,

**புற்பாமுதலாப் புல்லெறும்பு பகைவனுக்கு மாக்கவல்ல ஸர்வசக்தி**—* புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே நற்பாலுக்குய்த்தனன் * என்றும், * சேட்பால் பழம்

பகைவன் சிசுபாலன் திருவடிதாட் பாலடைந்த * என்றும் சொல்லுகிறபடியே ஞானமேயில்லாத திர்யக் ஸ்தாவரங்களுக்கும் ப்ரதிகூலர்களில் தலைவனான சிசுபாலனுக்கு மாகும்படி பண்ணவல்ல ஸர்வசக்தியுக்தனான ஸர்வேச்வரன்,

**பாதமகலகில்லாத தம்மை**—* அந்தோவடியேனுனபாதம் அகலகில்லேனிறையுமே * என்று சொல்லிச் சரணம்புகுந்தவராய், திருவடியைவிட்டுப் பிரியமாட்டாதவரான தம்மை,

**அகற்றுமவற்றின் நடுவேயிருத்தக் கண்டு**—* அகற்ற நீவைத்த மாயவல்லைம் புலன்களாமவை * என்னப்பட்ட இந்திரியங்களின் நடுவே இவ்வுடம்போடேயிருக்கும்படி வைக்கக்கண்டு,

**நலிவான் சுமடுதந்தாய் ஒவென்று**— * உண்ணிலாவிய ஐவரால் குமைதீற்றியென்னையுன்பாத பங்கயம் நண்ணிலாவகையே நலிவானின்ன மெண்ணுகின்றாய் * *உன்னிணைத்தாமரைகட்கு அன்புருகி நிற்குமது நிற்கச் சுமடுதந்தாய் * விண்ணுளார் பெருமானே ஓ! * முன்பரவை கடைந்து அமுதங்கொண்ட மூர்த்தீ ஓ!* என்று பாசுரமிட்டு,

**ஸாதஸபலமான ஆக்ரோசத்தோடே பழியிட்டு**—(விளம்ப ஹேதுவில்லாத ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹித்தால் பலன்கைபுகுமளவும் கிடந்து கூப்பிடவேண்டிய தொழிய வேறில்லாமையாலே) கீழே தாம் பரிக்ரஹித்த ஸித்தோபாயத்தின் பலமாய் விளைந்த பெரிய ஆக்ரந்தனத்தோடே கூடிக்கொண்டு அவன்மேலே பழியிட்டு,

**கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியை**—* கங்குலும் பகலும் பதிகத்திலே * கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளால்இறைக்கும் * இட்டகாலிட்ட கையளாயிருக்கும் * சிந்திக்கும் திசைக்கும் * இத்யாதிப்படியே பகலிரவென்கிற வாசியற அழுவது தொழுதது மோஹிப்பது ப்ரலபிப்பது அடைவுகெடப் பேசுவது நெடுமூச்செறிவது ஸ்தம்பித்திருப்பது ஆக இப்படியெல்லாம் விஞ்சிச் செல்லுகிற ஆர்த்தியை,

**கோயில் திருவாசலிலே முறைகெட்டகேள்வியாக்கி**—பெரியபெருமாள் திருக்கண் வளர்ந்தருளுகிற கோயில் திருவாசலில் பெண்பிள்ளையைப் பொகட்டுந் திருத்தாயார் கூச்சம் தவிர்ந்து தானே இவள் தசையை அவர்க்குச் சொல்லி * திருவரங்கத்தாய்! இவள்திறத்து என் செய்கின்றாயே, என் சிந்தித்தாயே, என்செய்கேன் என் திருமகட்கே * என்று அவர் தம்மையே கேட்கும்படி அளவுகடந்த அவஸாதம் பிறந்து,

**தேற்றவொண்ணாதபடி தோற்று**—*சேர்வன் சென்றென்னுடைத் தோழீமீர்காள்! அன்னையர்காளென்னைத் தேற்றவேண்டா* என்றும், *கனிந்த விளவுக்குக் கன்றெறிந்த கண்ணபிரானுக்கென்பெண்மை தோற்றேன் * என்றும் சொல்லுகிறபடியே யாராலும் தேற்றித் தரிப்பிக்கவொண்ணாதபடி நெஞ்சுபறியுண்டு பாரதந்த்ரியத்தையுமிழந்து, (இது * வெள்ளைச் சுரிசங்கு பதிகத்தின் ப்ரமேயமருளிச்செய்தபடி.)

**ஒன்றிநிற்கப் பண்ணின பலாதாநம் மற்றுங்கற்பாரிழவிலே சுவறி**—* வெள்ளைச் சுரிசங்கிலே பிரிவாற்றாகையினாலே மிகவும் தளர்ச்சியடைந்திருக்கின்ற ஆழ்வா

ரைத் தரிப்பிக்கும் பொருட்டு எம்பெருமான் தன்னுடைய விஜயசரித்திர பரம்பரை களையெல்லாம் காட்டிக்கொடுக்க, ஆழ்வாரும் அவற்றைக் கண்டு உள்ளம் பூரித்து * குன்றமெடுத்த பிரானடியாரோடும் ஒன்றி நின்ற சடகோபன் * என்னும்படி தன் விஜயத்திலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடே பொருந்தி நிற்கும்படி வலிமையூட்டினதானது *கற்பார் இராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ* என்கிற திருவாய்மொழியிலே, அந்தோ! ஸர்வ ஸுலபனுய் நிர்ஹேதுக க்ருபாளுவான எம்பெருமானையொழிய விஷயாந்தரங்களைக் கற்று ஸம்ஸாரிகள் பாழாய்ப்போகிறார் களே! என்று அவர்களின் இழவை அநுஸந்தித்ததிலே அஸத்கல்பமாயொழிந்து' (வலிமையூட்டினதானது அஸத்கல்பமாகியென்று அந்வயம்)

**பழைய தனிமைக் கூப்பீடு தலையெடுத்து**—அதனால் பழைய கூப்பீடே தலை யெடுக்க; (அதாவது, உண்ணிலாவியில் எவ்விதமாக ஆக்ரந்தனம் பண்ணினரோ அவ்விதமாகவே * பாமரு மூவுலகில் "பற்பநாபா ஓ!" "பற்ப பாதா ஓ!" "தாமரைக் கண்ணா ஓ!" "தாமரைக்கையா ஓ!" என்று ஆக்ரந்தனம் பண்ணினரென்கை. இதில் * தனியேன் தனியாளாவோ! * என்றதைக்கொண்டு "தனிமைக் கூப்பீடு" என்றது)

**சூழவும் பகைமுகஞ் செய்ய**—(சூழவும்—நான்கு பக்கங்களிலும், பகை—விரோதி கள், முகஞ்செய்ய—முன்னின்று நலிய என்றபடி.) (* ஏழையராவியுண்ணும் * என்கிற திருவாய்மொழியின் பிரமேயம் சொல்லுகிறபடி.) * இணைக்கூற்றங் கொலோவறியேன் * என்றும் * கண்ணன் கோளிழைவாண்முகமாய்க் கொடியே னுயிர் கொள்கின்றதே * என்றும், முன்பு அனுபவித்தவனுடைய முகாவயவ சோபையானது விசதஸ்ம்ருதி விஷயமாய் கண்ட கண்ட விடமெங்கும் தோன்றி நின்று நலிந்ததைச் சொன்னவாறு. திருமுக மண்டலத்திலுள்ள உறுப்புக்களான திருக்கண், திருமூக்கு, திருவாய், திருப்புருவம், திருக்காது, திருநெற்றி முதலியவை தோன்றி நலிகிறபடியை * ஏழையராவியில் அருளிச்செய்திருக்கையாலே "பகை முகஞ் செய்ய" என்றது. * சூழவும் தாமரை நாண்மலர்போல் * என்ற முதற் பாசு ரத்திலுள்ள 'சூழவும்' என்கிற சொல் மேற்பாசுரங்களிலும் யதோசிதம் அந்வயித் துக் கொள்ளத்தக்கதென்று திருவுள்ளம்பற்றி 'சூழவும் பகைமுகஞ்செய்ய' என்றது.)

**எடுப்பும் சாய்ப்புமான க்லேசம் நடக்க**—ஆழ்வாருடைய க்லேசமானது சில போது தலைமடிந்தும், சிலபோது தலைதூக்கியும், நின்றதாயிற்று. அதாவது எம் பெருமான் * ஆழியெழத் திருவாய்மொழியிலே தன் விஜயங்களைக் காட்டித் தரிப் பித்தபோது க்லேசம் தலைசாய்ந்தது; மீண்டும் கூப்பிடும்படி தலையெடுத்தது. ஆக இப்படி எடுப்பும் சாய்ப்புமாய்ச் செல்லுகிற க்லேசம் நடவாநிற்கச் செய்தே, [இதற்கு, 'வைசித்திரியைக் கேட்க' என்றத்தோடே அந்வயம்]

**உபாய அதிகாரதோஷமொழிய மாயங்கள் செய்துவைத்த வைசித்திரியைக்கேட்க**— உபாய தோஷமும் அதிகார தோஷமும் இன்றிக்கேயிருக்கும்போது, அதாவது ஸித்தோபாய பூதனை உன்னிடத்திலே அஜ்ஞாநம் அசக்தி முதலிய தோஷ மொன்றுமில்லை; ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் ஆர்த்தியும் பூர்த்தியாயிருக் கப்பெற்ற சரணாகதனை என்னிடத்திலே அதிகாரதோஷமொன்றுமில்லை. ஆக

இப்படியிருக்கும்போது, அவித்யா கர்ம வாஸநா ருசிகளை வாஸனையோடே போக்கி என்னை உனக்கு அநந்யார்ஹசேஷமாகக் கொண்டபின்பு இன்னமும் ஸம்ஸாரத்திலே வைத்த ஆச்சரியத்திற்கு யாது காரணம்? அருளிச்செய்யவேணும் என்று ஆழ்வார் எம்பெருமானை மடிபிடித்துக் கேட்க, (இது * மாயா வாமனனே! என்ற திருவாய்மொழியின் பிரமேய முரைத்தபடி.)

ஐச்சமாக இருந்து உறக்கொண்ட ஸ்வபரப்ரயோஜனத்தை யருளிச்செய்ய—கருமமடியாகவன்றிக்கே தன் இச்சையாலே (ஆழ்வாரை) இந்நிலத்தில் இருக்கச்செய்து * உறப் பலவின் கவி * என்கிறபடியே தனக்குத் தகுதியான கவிகளைப் பாடுவித்துக் கொண்ட ஸ்வப்ரயோஜனத்தையும் பரப்ரயோஜனத்தையும் ['தமக்கும் நம்முடையார்க்கும் போதுபோக்காக உம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ள வைத்தோங்காணும்' என்று] அருளிச்செய்ய,

என்சொல்லி எந்நாள் பார்விண்ணீர் இறப்பெதிரேதுவுமென்கிற உபகாரஸ்ம்ருதியோடே—'ஆழ்வீர்! திருவாய்மொழி பாடுவித்துக்கொள்ளுகைக்காகவே உம்மை நாம் இங்கு வைத்தது' என்று எம்பெருமானருளிச் செய்ததைச் செவியுற்ற ஆழ்வார் 'வ்யாஸர் பராசரர் வால்மீகி முதலானாரும் முதலாழ்வார்களும் உண்டாயிருக்க, என்னைக் கொண்டு கவிபாடுவித்துக் கொள்வதே! இந்த உபகாரத்திற்கு நான் என்ன கைம் மாறு செய்வேன்!' என்று தடுமாறி, * என்சொல்லி நிற்பனோ * எந்நாள் சிந்தித்தார்வனோ * பார்விண்ணீர் முற்றுங்கலந்து பருகிலுமார்வனோ * இறப்பெதிர் காலம் பருகிலுமார்வனோ * என்கிற பாசுரங்களினால், 'அவன் பண்ணின உபகாரத்தை அநுஸந்தித்தால் நான் எங்ஙனே தரையில் கால் பாவுவது? அந்த உபகாரத்தை ஸதாகாலமும் அநுஸந்தித்தாலும் பர்யாப்தி பெறுகின்றிலேன்; ஸகலஸ்தலங்களிலுமுண்டான ஸகல சேதநருடையவும் வாக்கு முதலிய உபகரணங்களை நான் ஒருவனே உடையேனாய்க்கொண்டு காலத்ரயத்திலும் பேசியநுபவித்தாலும் த்ருப்தி பெறுகின்றிலேனே!' என்று சொல்லியும், * உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றாங்கவன்தன்னது.........அப்பனுக்கு எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே * என்று, இதற்குக் கைம்மாறாக ஆத்மஸமர்ப்பணத்தைப் பண்ணுவோமென்னில் அவ்வாத்மாதானும் அவனுடையதாகவே யிருக்கையாலே உபயவிபூதியிலும் செய்யலாவதொன்றில்லை என்று சொல்லியும் இப்படி உபகார ஸ்ம்ருதியோடே கூடினவராகி,

தன் சரிதை கேள்வியாகாமல் இன்பம் பயக்கவிருந்த நிலத்தேவர் குழுவிலே பாட்டுக் கேட்பிப்பதாக—''மிதிலைச் செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்தமக்கள் செம் பவளம் திரள்வாய்தன் சரிதைகேட்டான்' என்கிறபடியே பண்டு குசலவர்கள் முகமாகத் தன் சரிதையான ஸ்ரீராமாயணத்தைப் பெரிய ஸபைகூட்டிக் கேட்டது பிராட்டியைப் பிரிந்து தனியிருப்பிலேயாகையாலே இப்போது திருவாய்மொழி கேட்பிப்பது அங்ஙனே யாகாமல் பிராட்டியோடு கூடியிருக்குமிருப்பிலே ஆகவேணுமென்று கருதி * இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து * என்கிறபடியே பிராட்டியும் தானுமான சேர்த்தியிலே லோகமடங்க வாழும்படி யெழுந்தருளி யிருக்குமிடமாய், * நிலத்தேவர் குழுவணங்கும் சிந்தைமகிழ் திருவாறன்விளை * என்கிற

படியே நிலத்தேவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரண்டுவாழுமிடமான திருவாறன்விளை யென்னும் (மலைநாட்டுத்) திருப்பதியிலே அந்த ஸ்ரீவைஷ்ணவ மஹாகோஷ்டியிலே திருவாய்மொழி கேட்பித்து அடிமைசெய்யப்பாரித்து,

காந கோஷ்டியையும் தேவபிரானறியமறந்தவர்—அப்போது எம்பெருமான் ஆழ்வாருடைய ஹ்ருதயத்தைப் பரீக்ஷிக்க விரும்பி, திருவாய்மொழி கேட்பிப்பதிலேயே இவர் ஊன்றி யிருக்கிறாரோ அல்லது பரமபதத்திலும் ஆசைவைத்திருக்கிறாரோ பார்ப்போம்' என்று நினைத்து 'ஆழ்வீர்! உமக்குப் பரமபதம் கொடுப்பதாக இருக்கிறோம்' என்ன, *திருவாறவிளையுறை தீர்த்தனுக்கு அற்றபின்—சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரானறியும் * என்று பரமபதத்தின் பேர் சொல்லுகைதானும் தமக்கு அஸஹ்யமாய் 'மற்றொன்று' என்கிற சொல்லாலே சொல்ல வேண்டும்படி ஸாமகாநகோஷ்டியான பரமபதத்தையும் உபேக்ஷித்த ஆழ்வார்,

சரமோபாய பரரானுர்க்கு நீணகரமது, துணித்தான் சரணன்றி மற்றொன்றிலம், உள்ளித்தொழுமின் என்று ப்ராப்யஸாதநாவதியை ப்ரீதியாலே ப்ரகாசிப்பிக்கிறார் ஏழாம்பத்தில்—சரமோபாயமாவது கீழே தாம் அருளிச்செய்த ஸித்தோபாயம். (* அகலகில்லேனென்கிற பாசுரத்திலே காட்டியது.) அதிலே ஊன்றியிருக்குமவர்களுக்கு ப்ராப்யத்தினுடைய அவதியையும் ப்ராபகத்தினுடைய அவதியையும் வெளியிட்டருளுகிறார் ஏழாம்பத்தில். (அதாவது) எம்பெருமானைக் காட்டிலும் அவனுடைய ஸம்பந்தம் பெற்ற ததீயவிஷயமே ப்ராப்யத்தினுடைய எல்லைநிலமாகையாலே * நீணகரமதுவே மலர்ச்சோலைகள் சூழ்திருவாறன்விளை * என்று அந்தத் திருப்பதியே ப்ராப்யம் என்றார்; அர்ச்சாவதார ஸௌலபனானவனே ப்ராபகத்தினுடைய எல்லையாகையாலே * வாணனையாயிரந் தோள்துணித்தான் சரணன்றி மற்றொன்றிலம் உள்ளித்தொழுமின் தொண்டீர் * என்று ப்ராபகத்தின் அவதியையும் வெளியிட்டாரென்கை. [ஏழாம்பத்துக்கு உபதேசபரமான திருவாய்மொழி * இன்பம் பயக்க வெழில் மலர் * என்பதேயாகும். அதுதன்னில் * உள்ளித் தொழுமின் தொண்டீர் * என்று முன்னிலையாக அருளிச்செய்திருப்பதே உபதேசபரத்வ ஸ்தாபகம் என்று காட்டுதற்கே அந்தச் சந்தையையும் எடுத்துக்காட்டியருளினார்.] ... (225)

(மூ.) 226. தேவிமார் பணியா நேர்பட்ட நல்ல கோட்பாடென்னும்படி சத்தியாலே நித்யமாகக் கல்பித்த பத்நீபரிஜநாதிகளையுடைய ஸத்யகாமன் கொண்ட வாக்வ்ருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும் அச்சமுந்தீரத் தலைச்சிறப்பத்தந்தவதில் க்ருதஜ்ஞதா பல ப்ரத்யுபகாரமாக வேந்தர் தலைவன் கந்யகாதானம் போலே ஆத்தமுனி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே அதீவ விளங்கிப் பணைத்து ஜன்மபாசம்விட்டு ஆத்வாரம் ஆளுமாளாரென்று பரிந்து அநுரூபனோடே அமர்ந்து பிரிவில் க்ருபணதசையாகத் துவரும் ஸீதா குணங்களாலே ப்ரீதி வர்த்தித்துத் தித்திக்க வுள்ளே உறைந்து கண்டு கொண்டிருந்து அமாநுஷ போகமாக்கினவன் மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய் மறுவலிடாமல் சிறியேனென்றதின் பெருமையைக் காட்ட, தேஹாதிகளில் பரமாய் நின்று நினைக்கில் லக்ஷ்மீ

துல்யமாய் அவர்க்கே குடிகளாம் பரதந்த்ரஸ்வருபத்தை யநுஸந்தித்தவர் ஸ்வஸாதந ஸாத்யஸ்த்தர் இருகரையராகாமல் மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மின் உள்ளத்தென்று ப்ராப்யைக பரராக்குகிருர் எட்டாம்பத்தில்.

எட்டாம்பத்தின் ஸாரமான கருத்தாவது—கீழ்ப்பத்திற் பேசின குணமாகிய ஸர்வ சக்தியோகத்தாலே நித்யமாகக் கல்பிக்கப்பட்ட போக்ய போகோபகரண போகஸ்தானங்களையுடையவனுகையாலே ஸத்யகாமனுன ஸர்வேச்வரனுனவன் ஆழ்வாரைத் தரிப்பிக்க நினைத்தான்; ஏதற்காகவென்னில், ஆழ்வார், கீழே தமக்குண்டான வாசிகமான அடிமையையும் மறந்து பகவதநுபவம் கிடைக்காமையினுலே கலங்கி, பகவத்குணத்திலும் பகவத் ஸ்வருபத்திலும் அதிசங்கை பண்ணி ஸம்ஸார தோஷங்களை யநுஸந்தித்து அஞ்சினுராகையாலே அவரைத் தரிப்பிக்க நினைத்தானெம்பெருமான். அதற்காக முந்தின உபகாரத்தை ஆழ்வாருக்கு நினைப்பூட்டினுன்; ஆழ்வாரும் அத்தாலே க்ருதஜ்ஞராய் அதற்குப் பலனுக ஆத்மஸமர்ப்பணம் பண்ணினுர்; அத்தாலே எம்பெருமான் பெருப்பேறு பெற்றுனுய் இவர்க்குண்டான ஆத்மகுணங்களாலே மிகவும் மகிழ்ந்தவனுய் ஆழ்வார் திருவுள்ளத்திலேயிருந்து அநுபவித்து, இனி இவர் அயோக்யதாநுஸந்தானம் பண்ணி அகலாமைக்காக ஆத்மஸ்வருப வைலக்ஷண்யத்தை ப்ரகாசிப்பித்தான்; அப்போது ஆத்மஸ்வருபத்தின் உண்மையை அநுஸந்தித்த ஆழ்வார் கீழ் தம்முடைய ப்ராப்ய ப்ராபகங்களைக் கேட்டு உகந்தவர்கள் ப்ராப்யம் ஒன்றும் ப்ராபகம் வேறொன்றுமாய் இருகரையராயலையாதபடி ப்ராப்யமாகச் சொன்ன விஷயமொன்றிலேயே அவர்களை ஊன்றச் செய்தருளுகிருர்; என்கை.

(ப) 236. தேவிமார் பணியா நேர்பட்ட நல்லகோட்பா டென்னும்படி சக்தியாலே நித்யமாகக் கல்பித்த பத்நீபரிஜநாதிகளையுடைய ஸத்யகாமன்—* தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றமரராட்செய்வார், மேவியவுலகம் மூன்றவையாட்சி * என்றும், * பணியாவமரர் பணிவும் பண்பும் தாமேயாம் * என்றும், * நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன் * என்றும், * நல்லகோட் பாட்டுலகங்கள் மூன்றினுள்ளும் தான் நிறைந்த * என்றும் சொன்னபடியே பத்நீ பரிஜநஸ்தாந போக்ய போகோபகரணங்களை நித்யமாகக் கல்பிக்கப் பெற்றுடைய ஸத்யகாமனுயிருக்கிற ஸர்வேச்வரனுனவன், (இதற்கு, ''ஆத்மலாபத்தாலே அதீவ விளங்கிப்பணைத்து'' என்பதனேடே அந்வயம்.)

கொண்ட வாக் வ்ருத்தியையும் மறப்பிக்கும் கலக்கமும் சங்கையும அச்சமும் தீர—கீழ்ப்பத்திலே 'என்னை நீ இங்கு வைத்தது ஏதுக்கு?' என்று கேட்கையில் 'உம்மைக் கொண்டு கவிபாடுவித்துக்கொள்ள வைத்தோங்காணும்' என்று உத்தரமுரைத்தானுகையாலே தான் இவரிடத்திற்கொண்ட வாசிகமான அடிமை யாதொன்றுண்டு, அதையும் மறக்கும்படியாக்கின கலக்கமும் சங்கையும் அச்சமுந் தீர; கலக்கமாவது * காணுமாறருளாய் என்றென்றே கலங்கி* என்ற பாசுரத்திற் சொன்னது, தன்னைக் கண்ணுல் கண்டு அநுபவிக்கப் பெருமையாலாகிய கலக்கம். சங்கையாவது—* உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி உன்றனக்கன்பரானுரவர் உகந்தமர்ந்த

செய்கை உன் மாயை யறிவொன்றும் சங்கிப்பன் வினையேன் * என்ற பாசுரத்திலும் * இறந்ததும் நீயே யெதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீயின்னேயானால், சிறந்த நின் தன்மை அதுவிதுவுது வென்றறிவொன்றும் சங்கிப்பன் வினையேன் * என்ற பாசுரத்திலும் சொன்னது. எம்பெருமான் ஆச்ரித பரதந்திரன் என்று சொல்லிப்போருவதொன்றுண்டு; அந்த ஆச்ரித பாரதந்திரியத்திலும் தமக்கு அதிசங்கையுண்டானதாக * உமருகந்துகந்த * என்கிறபாட்டிலே அருளிச்செய்தார் ஸகல பதார்த்தங்களையும் எம்பெருமான் தனக்கு ப்ரகாரமாகவுடையவன் என்று சொல்லிப் போருவதொன்றுண்டு; அந்த ஸர்வப்ரகாரித்வத்திலும் தமக்கு அதிசங்கை யுண்டானதாக * இறந்ததும் நீயே * என்கிற பாட்டிலருளிச்செய்தார். இனி அச்சமாவது—* நன்று மஞ்சுவன் நரகம் நானடைதல் * என்றபடி ஸம்ஸார தோஷாநுஸந்தானத்தால் வந்த அச்சம்; ஆக இந்த கலக்கமும் சங்கையும் அச்சமும் தீரும்படியாக; (இதற்கு "தலைச்சிறப்பத்தந்த" என்ற அடுத்த வார்த்தையிலேயே அந்வயம்.)

**தலைச் சிறப்பத்தந்தவதில் க்ருதஜ்ஞதாபலப்ரத்யுபகாரமாக**—* தாள்களை யேனக்கே தலைத்தலைச் சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறு * என்று ப்ரஸ்தாவித்தபடியே க்ருதஜ்ஞதைக்குப் பலமான ப்ரத்யுபகாரமாக,

**வேந்தர் தலைவன் கந்யகாதானம் போலே**—* வேந்தர் தலைவன் சனகராசன் * என்னப்பட்ட ஜநக சக்ரவர்த்தி தன் மகளல்லாத பிராட்டியைத் தன் மகளாகச் சொல்லிக் கந்யாதானம் செய்ததுபோலே,

**ஆரத்தழுவி அறவிலை செய்த ஆத்மலாபத்தாலே**— * பேருதவிக்கைம்மாறாத் தோள்களையாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன் * என்று சொல்லி ஸமர்ப்பித்த ஆத்மவஸ்துவைப் பெறுகையாலே,

**அதீவ விளங்கி**—* தயா ஸ ராஜர்ஷி ஸுதோபிராமயா ஸமேயிவாந் உத்தம ராஜகந்யயா, அதீவ ராமச் சுசுபே* என்கிறபடியே பிராட்டியைப்பெற்றுப் பெருமாள் மிக விளங்கினாப்போலே * (அறவிலை செய்தனன்) சோதீ! என்று இவர் பேசும்படி மிகவும் உஜ்ஜ்வலனாய்.

**பணைத்து**—* தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய்! என்னும்படி திருமேனிபூரித்து,

**ஜன்மபாசம் விட்டு**—பிராட்டி பெருமாளைக் கைபிடித்தபின்பு அவர் திறத்து ப்ரேமத்தாலே ஜன்மபூமியான மிதிலையை நினையாதிருந்தாப்போலே இவரும் * பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன் பாசங்கள் முற்றவிட்டு * என்று, புறம்புண்டான ஸங்கங்களை நிச்சேஷமாகவிட்டு,

**ஆத்வாரம் ஆளுமாளாரென்று பரிந்து**—பிராட்டி * ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ * என்று பெருமாளுடைய அழகைக்கண்டு மங்களாசாஸநம் பண்ணினாப்போலே, இவரும் * ஆளுமாளார் * என்கிற பாசுரத்திலே பரிந்து,

**அநுரூபனோடே அமர்ந்து**—பிராட்டி பெருமாளுடைய விக்ரமங்கண்டு பயம் கெட்டு * துல்யசீல வயோவ்ருத்தாம் * இத்யாதிப்படியே தனக்கு அநுரூபரான பெருமாளோடே பொருந்தி யநுபவித்தாப்போலே இவரும் * வார்கடாவருவிப் பாசுரத்திலே அவனுடைய விக்ரமத்தை யநுஸந்தித்து நிர்ப்பயராய் * அமர்ந்த மாயோனை

மூக்கணம்மானை நான்முகனை அமர்ந்தேனே * என்று அவனோடே பொருந்தி யநுபவித்து,

**பிரிவில் க்ருபணதசையாகத் துவரும் ஸீதாகுணங்களாலே ப்ரீதி வர்த்தித்து**—பிராட்டி பெருமாளுடைய பிரிவில் * ஹிமஹததளிநீவ நஷ்டசோபா......ஜநகஸுதா க்ருபணாம் தசாம் ப்ரபந்நா * என்று, இரக்கமற்றவர்களும் இரங்கவேண்டும்படி யான நிலைமையை யடைந்தாப்போலே இவரும் * காணவாரா யென்றென்று கண் ணும் வாயுந் துவர்ந்து * என்று, அவனைக் காணவாசைப்பட்டுத் திசைகள்தோறும் பார்ப்பது கூப்பிடுவதாகையாலே கண்ணும்வாயும் நீர்ப்பசை யறுகையால்—ஆக விப்படி ஸீதாபிராட்டியின் குணங்களெல்லாம் இவர் பக்கலிலே காண்கையாலே * குணைத் ரூபகுணைச் சாபி ப்ரீதிர் பூய: அப்யவர்த்தத * என்று, குணங்கண்டு பெரு மாளுக்குப் பிராட்டியிடத்தே ப்ரீதி வளர்ந்தாப்போலே இவரளவிலும் எம்பெருமா னுக்கு ப்ரீதி வளர்ந்ததாகி,

**தித்திக்க உள்ளே உறைந்து**—(* மநஸ்வீ தத்கதஸ் தஸ்யா நித்யம் ஹ்ருதி ஸமர்ப்பித: * என்ற ஸ்ரீராமாயணப்படியே பெருமாள் எப்போதும் பிராட்டியின் நெஞ் சுக்கு இனிதாம்படி யிருந்தாப்போலே) * உருவு கரந்து உள்ளுந்தோறும் தித்திப் பான் * என்கிறபடியே அநுஸந்திக்குந்தோறும் பரமபோக்யனாய்க் கொண்டு * ஒருக் கடுத்துள்ளே யுறையும் பிரான் கண்டீர் * என்கிறபடியே இவர் திருவுள்ளத்தே நித்யவாஸம்பண்ணி,

**கண்டுகொண்டிருந்து அமாநுஷ போகமாக்கினவன்**—* ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநீ * என்று, பிரிந்த காலத்தும் பிராட்டி இங்ஙனே பேசித் தரிக்கும்படியாக திவ்யபோகங் களை அவள் புஜித்தாளாம்படி பெருமாள் செய்தாப்போலே * இருந்தான் கண்டு கொண்டு ...தருந்தானருள் தானினியானறியேனே * செவ்வாய் முறுவலோடு என துள்ளத்திருந்த அவ்வாயன்றி யானறியேன் மற்றருளே * என்று பேசும்படி (ஆழ் வாரையும்) அப்ராக்ருத போகங்களை புஜிப்பித்தவன்,

**மூன்றுதந்துக்குப் பிழைத்த அருவினைநோய்**—* வளவேழுலகு பதிகத்திலும் * பொருமா நீள்படை பதிகத்திலும் * அந்தாமத்தன்பு பதிகத்திலுமாக மூன்றுவிசை அயோக்யதாநுஸந்தானமாகிற வியாதி வந்து பரிஹரிக்கப்பட்டதாகையாலே, மூன்று தத்துக்கு இவர் பிழைத்த அயோக்யதாநுஸந்தான வியாதியானது, (தந்து—கண்டம்.)

**மறுவலிடாமல்**—மறுபடியும் வந்து புகாமைக்காக,

**சிறியேனென்றதின் பெருமையைக்காட்ட**—* இருத்தும் வியந்து பதிகத்திலே * சிறி யேனுடைச் சிந்தையுள் * என்கிறபாசுரத்தில் 'சிறியேன்' என்கிறசொல்லால் அயோக் யதாநுஸந்தான சங்கைக்கு அர்ஹமாம்படி ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஆத்ம ஸ்வருபத் தின் வைலக்ஷண்யத்தை எம்பெருமான் காட்டிக்கொடுக்க, (இதற்கு "அநுஸந்தித் தவர்" என்பதோடே அந்வயம்.)

**தேஹாதிகளில் பரமாய்**—* சென்று சென்று பரம்பரமாய் * என்கிறபடியே தேஹேந்த்ரியாதிகளில் வ்யாவ்ருத்தமாய் ஜ்ஞாநாநந்தமயமாய், (இது * கண்கள் சிவந்து பதிகத்தின் ப்ரமேயம் சொன்னபடி.)

நின்று நினைக்கில் லக்ஷ்மீதுல்யமாய்—* கருமாணிக்கமலைப் பதிகத்தில் * புனையிழைகளணிவு மாடையுடையும் புதுக்கணிப்பும் நினையும் நீர்மையதன்று இவட்கிது நின்று நினைக்கப்புக்கால் * அருமாயன் பேரன்றிப் பேச்சிலள் * அன்றி மற்றோருபாயமென் * என்று, உள்ளபடி நிரூபித்துப் பார்க்கில் பிராட்டியோடொக்கச் சொல்லலாம்படி அநந்யார்ஹமாய்,

அவர்க்கே குடிகளாம் பரதந்த்ரஸ்வரூபத்தை அநுஸந்தித்தவர்—(அவ்வளவுமல்லாமல்) * நெடுமாற்கடிமைப் பதிகத்திலே * மாகாயாம்பூக்கொள்மேனி நான்கு தோள் பொன்னாழிக் கையென்னம்மான் நீக்கமில்லா வடியார்தம் அடியாரடியாரடியாரெங்கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடு—ஊழிதோறூழி—வாய்க்க தமியேற்கு * என்று ததீயசேஷத்வகாஷ்டையளவுஞ் செல்ல நிற்கும்படி பரதந்த்ரமான ஸ்வரூபத்தை யநுஸந்தித்த ஆழ்வார்,

ஸ்வஸாதநஸாத்யஸ்தர் இருகரையராகாமல்—ஆழ்வாருடைய உபாயோபேயங்களே தமக்கும் உபாயோபேயங்கள் என்றிருக்குமவர்கள் (கீழே ஏழாம்பத்திலுபதேசங்கேட்டபடி) உபாயம் வேறும் உபேயம் வேறுமாய் இருகரையராகாதபடி, (எம்பெருமான் உபாயம், அவனுடைய திவ்யதேசம் உபேயம் என்று உபாயோபேயங்களை வெவ்வேறாகக் கொள்ளாதபடி யென்கை.)

மண்ணவரும் வானவரும் நண்ணுமத்தையே குறிக்கொண்மினுள்ளத்தென்று—ப்ராப்யமான திவ்யதேசமே ப்ராபகமுமென்று காட்டி ப்ராப்யவிஷயமொன்றிலேயே தத்பரராக்குகிறார் எட்டாம்பத்தில். ... ... ... (226)

(மூ.) 227. எண்டிசையுமகல்ஞாலம் எங்குமளிக்கின்ற ஆலின்மேலென்னும்படி நித்யபோகபாதலீலோபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்ஸகன் ஆருயிரென்னப்படுத்தின ஆத்ம தர்சநபலாநுபவ பரம்பரையைக் கூவுதல் வருதலென்று முடுகவிட்டு ஏகமெண்ணிக் கருதி எழ நண்ணி நினைதோறுமுருகி யலற்றிக் கவையில் மனமின்றிப் பதினலாண்டு பத்துமாஸமோருபகல் பொறுத்தவர்கள் ஒரு மாஸதிநஸந்த்யையில் படுமது க்ஷணத்திலேயாகவிரங்குகிற த்வரைக்கீடாக இனிப்பத்திலொன்று தசமதசையில் பேறென்று நாட்கடலாகத் தம்பிக் கிட்டாதாகாமல் நாளைவதுவை போலே நாளிடப்பெற்றவர், இம்மடவுலகர் கண்டதோடுபட்ட அபாந்தவாரக்ஷகாபோக்யாஸாதுபாய ப்ரதிஸம்பந்தியைக் காட்டி மற்றொன்று கண்ணனல்லாலென்கிற வைகல் வாழ்தலான ஸித்தோபாயம், அதில் துர்ப்பலபுத்திகளுக்கு மாலை நண்ணி காலை மாலை விண்டு தேனை வாடாமலரிட்டு அன்பராம் ஸாங்கபக்தி, அதில் அசக்தர்க்குத் தாளடையும் ப்ரபத்தி, அதில் அசக்தர்க்கு உச்சாரணமாத்ரம், ஸர்வோபாய சூந்யர்க்கு இப்பத்தும் பாடியிடும் தெண்டனென்று கீதாசார்யனைப்போலே அதிகாராநுகுணம் தெரியெல்லாமுரைக்கிறார் ஒன்பதாம்பத்தில்.

ஒன்பதாம்பத்தின் தாத்பர்ய ஸாரமாவது—அவாப்தஸமஸ்தகாமனுகையாலே அத்தலையில் ஒன்றையும் அபேக்ஷியாமல் பிரளயம் முதலிய ஆபத்துக்

களிலே உதவி ரக்ஷிக்கின்ற ஆபத்ஸகனுன எம்பெருமான், கீழ் ப்ரகாசிப்பித்த ஆத்மஸ்வரூப யாதாத்மியத்தைக் கண்டதற்குப் பலன் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத்தை அநுபவிக்கை யாகையாலே அவ்வநுபவத்திலுண்டான த்வரையாலே ஒரு நொடிப்பொழுதும் விளம்பம் பொறுக்கமாட்டாமல் ஆழ்வார் துடிக்க, அவ்வளவிலே எம்பெருமான் "சரீராவஸானத்திலே பேறு தப்பாது" என்று நாளவதியிட்டுக் கொடுக்க, அங்ஙனம் நாளிடப்பெற்ற ஆழ்வார், கீழ் தம் உபதேசத்தால் திருந்தினவர்களை யொழிய அல்லாதாரையும் விடமாட்டாத பரமக்ருபையாலே அதிகாராநுகுணமாக எல்லாவுபாயங்களையும் அருளிச்செய்கிருரென்பது.

(ப) 227. எண்டிசையுமகல் ஞாலமெங்குமளிக்கின்ற ஆலின்மேலென்னும்படி நித்யபோகபாத லீலோபகரணத்தின் லயாதிகளைப் போக்கும் ஆபத்ஸகன்—*எண்டிசையும் கீழும்மேலும் முற்றவுண்டபிரான்* அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான் அவனே அஃது உண்டுமிழ்ந்தானளந்தான் * அகலிடம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்து எங்குமளிக்கின்ற ஆயன்* ஆலின்மேலாலமர்ந்தான்* என்று, ஸகலலோகங்களையும் பிரளயங் கொள்ளாமல் திருவயிற்றிலே வைத்து நோக்கி உமிழ்ந்தவற்றை மீண்டுமுண்டாக்கியும், ஹிரண்யாக்ஷனுலே தள்ளுண்டு அண்டபித்தியிலே சேர்ந்த பூமியை ஒட்டுவிடுவித்தெடுத்தும், மஹாபலி பலாத்கரித்து ஆளுகிறபோது எல்லை நடந்து மீட்டும், இப்படி பிரளயம் முதலிய ஆபத்துக்களிலே உதவி ரக்ஷித்தவனென்னும்படி கீழ்ச்சொன்ன ஸத்யகாமத்வத்தால் வந்த நிரபேக்ஷதை தோற்ற இத்தலையில் அபேக்ஷயின்றிக்கே கைம்மாறு கருதாமல் தன்பேருக உதவிசெய்து, * பாதோஸ்ய விச்வா பூதாநி, த்ரிபா தஸ்யாம்ருதம் திவி * என்கிறபடியே அம்ருத சப்தத்தாலே சொல்லும்படி நித்யபோகமான த்ரிபாத்விபூதியையபேக்ஷித்து மிகவும் அல்பமாகையாலே பாதசப்தத்தால் சொல்லப்பட்ட லீலோபகரணமான இந்த விபூதியின் பிரளயம் முதலியவற்றைப் போக்குகின்ற ஆபத்ஸகனுன எம்பெருமான்.

ஆருயிரென்னப்படுத்தின ஆத்மதர்சந பலாநுபவ பரம்பரையைக் கூவுதல் வருதலென்று முடுகவிட்டு—* இருத்தும் வியந்தென்னை * என்கிற திருவாய்மொழியில் தம்மோடு கலந்த கலவியை நினைப்பூட்டினவளவிலே மிகவும் அவஸந்நராய்ப் பேசுகிறவளவில் அவன் தட்டுமாறி நின்று பரிமாறின சீலத்திலே யீடுபட்டு "ஆருயிர் பட்டது எனதுயிர்பட்டது" என்று என் ஆத்மா பட்டது நித்யஸூரிகளின் ஸ்வரூபந்தான் பட்டதோ! என்னும்படியாகத் தான் மேல்விழுந்தநுபவித்த ஆத்மவைலக்ஷண்யத்தைக் கீழ்ப்பத்தில் உள்ளபடியாகக் காட்டக்கண்டதற்குப் பலன் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத்தை அநுபவிக்கையாகையாலே, * பண்டைநாளாலேயென்கிற திருவாய்மொழியிலே * தொண்டரோர்க்கருளிச் சோதிவாய்திறந்து உன் தாமரைக்கண்களால் நோக்காய் * என்றும், * உன்தாமரைமங்கையும் நீயும் இடங்கொள்மூவுலகும் தொழ இருந்தருளாய் * என்றும், * கனிவாய்ச்சிவப்ப நீ காண வாராய் * என்றும், * நின்பன்னிலாமுத்தம் தவழ்கதிர் முறுவல் செய்து நின் திருக்கண் தாமரை தயங்கநின்றருளாய் * என்றும், இப்படி அநுபவ பரம்பரையை ஆசைப்பட்டு 'காலக்ரமத்திலே இவையெல்லாம் பெறலாகும்' என்று ஆறியிருக்கப்

பெருமையாலே * வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே * [ உன்திருவடிகளிலே நானும்வந்து அடிமைசெய்யும்படி என்னை அங்கே அழைத்துக் கொள்ளவாவது வேணும். நீ இங்கே வரவாவது வேணும்] என்று இரக்கும் படி வளரவிட்டு,

**ஏகமெண்ணி**—* மாக வைகுந்தம் காண்பதற்கு என்மனம் ஏகமெண்ணு பிராப்பகலின்றியே * என்று அவன் நித்யவாஸம் பண்ணுகிற பரமபதத்தைக் காண்கையிலே ஸர்வகாலமும் ஏகரூபமாக மநோரதித்து. (இது * ஓராயிரமாயென்கிற திருவாய்மொழியின் பரமேயத்தைச் சொன்னபடி.)

**காணக்கருதி**—* சுடராழி சுரிசங்கமேந்தும் கையா! உன்னைக் காணக் கருதுமென் கண்ணே * என்று, பெரியபிராட்டியோடும் திவ்யாயுதங்களோடும் திவ்ய விக்ரஹத்தோடும் கூடியிருக்கிறவனைக் காணவேணுமென்று ஆசைப்பட்டு. (இது * மையார் கருங்கண்ணி என்ற திருவாய்மொழியின் ப்ரமேயத்தைச் சொன்னபடி.)

**எழநண்ணி**—* எழநண்ணி நாமும் நம் வான நாடனோடொன்றினோம் * என்று, எம்பெருமானை நினைப்பூட்டும் பதார்த்தங்களைக் காண்கையாலே நோவு படுகையாலே முடிந்துபோக முயன்று. (இது * இன்னுயிர்ச் சேவலும் என்கிற திருவாய்மொழியின் ப்ரமேயம் சொன்னபடி.)

**நினைதொறுமுருகி**—* திருக்காட்கரை மருவிய மாயன்றன் மாயம் நினைதொறே— உருகுமால் நெஞ்சம் * என்று அவன் அநுபவிக்கும்போது பரிமாறின சீலம் முதலியவற்றை நினைக்குந்தோறும் அநுபவோபகரணமான நெஞ்சு சிதிலமாய்க் கரைந்து. (இது * உருகுமால் நெஞ்சம் என்கிற திருவாய்மொழியின் ப்ரமேயம் சொன்னபடி.)

**அலற்றி**—* தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமே கேளீரே * என்று தூதனுப்பும் முகத்தாலே * கிளிமொழியாளலற்றிய சொல் * என்று, ஆற்றாமையாலே அக்ரமமாகக் கூப்பிட்டு. (இது * எங்கானலகங்கழிவாய்ப் பதிகத்தின் ப்ரமேயம் சொன்னபடி.)

**கவையில் மனமின்றி**—* கவையில் மனமின்றிக் கண்ணீர்கள் கலுழ்வன் * என்று, இருதலைத்த நெஞ்சு இன்றிக்கே ஏகாக்ரசித்தராய். (இது * அறுக்கும் வினையாயின என்கிற திருவாய்மொழியின் ப்ரமேயம் சொன்னபடி )

**பதினாலாண்டு பத்துமாஸமொருபகல் பொறுத்தவர்கள் ஒரு மாஸ தீந ஸந்த்யையில் படுமது க்ஷணத்திலேயாக இரங்குகிற த்வரைக்கீடாக**—பெருமாளைப் பிரிந்து பதினாலு ஸம்வத்ஸரம் பொறுத்திருந்த ஸ்ரீ பரதாழ்வான் அந்த அவதிகழிந்த ஒருநாளில் பட்டவருத்தமும், பத்துமாஸம் பொறுத்திருந்த பிராட்டி "ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே" என்று திருவடியிடம் சொல்லிவிட்டபின்பு அவ்வொரு மாஸத்தில் பட்ட வருத்தமும், கண்ணபிரான் பசுமேய்க்கப்போக ஒரு பகலெல்லாம் பொறுத்திருந்த ஆய்ச்சிகள், அவன் பசுக்களின் பிற்குழையிலே வாரா நிற்க முற்கொழுந்திலே காணாமையாலே ஒரு ஸந்த்யையிலேபட்ட வருத்தமும்=ஆக இந்த வருத்தங்களெல்லாம் ஆழ்வார்க்கு ஒரு க்ஷணத்திலேயாம்படி * அவனை விட்டு அகல்வதற்கே யிரங்கி அணிகுருகூர்ச் சடகோபன் மாறன் * என்று ஈடுபடுகிற த்வரைக்கு

ஈடாக, (இது * மல்லிகை கமழ்தென்றல் என்கிற திருவாய்மொழியின் ப்ரமேயம் சொன்னபடி, ''த்வரைக்கீடாக'' என்பதற்கு 'நாளிடப் பெற்றவர்' என்பதிலே அந்வயம்.)

இனிப் பத்திலொன்று தசமதசையிலே பேறென்று நாட்கடலாகத் தாப்பிக்கிட்டதாகாமல் நாளை வதுவைபோலே நாளிடப்பெற்றவர்—காமுகராயிருப்பார்க்குப் பத்தாவது அவஸ்தை மரணமாகிருப்போலே 'நம்பக்கலில் பரபக்தியோடு கூடியிருக்கிறவுமக்கும் நம்மைப்பெருவிடில் முடியும்படியான பரமபக்திதசை பத்தாம்பத்திலே பிறக்கப் போகிறது. ஆகையால் கீழ்ச்சொன்ன விளம்பமில்லை; இனியுள்ளது பத்திலொன்று தசமதசையான மரணாவஸ்தையிலே பேறு' என்று, தம்பியான பரதாழ்வானுக்கு நெடுக நாளிட்டுக் கொடுத்தாப்போலே யாகாமல் ''நாளை வதுவைமணமென்று நாளிட்டு'' என்று நாய்ச்சியாருக்கு நாளையென்று நாளிட்டாப்போலே * மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்பிரான் * என்று இந்த சரீரத்தின் முடிவிலே பேருவதாக நாளிட்டுக் கொடுக்கப்பெற்று ஹ்ருஷ்டரான ஆழ்வார்,

இம்மடவுலகர் கண்டதோடுபட்ட அபாந்தவ, அரக்ஷக, அபோக்ய, அஸுக, அநுபாய ப்ரதிஸம்பந்தியைக் காட்டி—தாம் அருளிச்செய்த ஹிதவசனங்களைக் கேட்டுத் திருந்தினவர்களை யொழிய அல்லாதாரையும் விடமாட்டாத தம்முடைய க்ருபையாலே * இம்மடவுலகர் * என்று ஸம்ஸாரத்தில் அறிவுகேடரானவர்களுக்கு * கொண்டபெண்டிர் மக்களுற்றார் * என்று தொடங்கி, மேலெழஸ்நேஹிக்குமதொழிய காணாதபோது ஸ்நேஹம் ஒன்றுமின்றிக்கேயிருக்கிற களத்ரபுத்ராதிகள் பந்துக்களன்று, ப்ரளயாபத்ஸகனானவனே பரமபந்து வென்றும், அவனே ரக்ஷகனென்றும், அவனே போக்யனென்றும், அவனே ஆனந்தரூபனென்றும், அவனே உபாயமென்றும்—இப்படி அவனை யொழிந்தாருடைய அபந்துத்வ, அரக்ஷகத்வ, அபோக்யத்வ, அஸுகத்வ, அநுபாயத்வங்களையும், அதுக்கு ப்ரதிகோடியான அவனுடைய பந்துத்வ, ரக்ஷகத்வ, போக்யத்வ, ஸுகரூபத்வ, உபாயத்வங்களையும் நிரூபித்து,

மற்றொன்று கண்ணனல்லாலென்கிற வைகல் வாழ்தலான ஸித்தோபாயம்—* மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும் சிற்றவேண்டா சிந்திப்பேயமையுங் கண்டீர்கள் * என்றும், * கண்ணனல்லாலில்லை கண்டீர் சரண் * என்றும், * வடமதுரைப் பிறந்தான் குற்றமில் சீர்கற்று வைகல்வாழ்தல் கண்டீர் குணமிதந்தோ * என்றும் ஸித்தோபாயத்தை உபதேசித்தும்;

அதில் துர்ப்பல புத்திகளுக்கு மாலை நண்ணி காலை மாலை விண்டு தேனை வாடாமலரிட்டு அன்பராம் ஸாங்கபக்தி—* ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்தः க்ருதோயம் தாரயேந்நரம், நராணும் புத்தி தௌர்பல்யாத் உபாயாந்தரமிஷ்யதே * என்கிறபடியே அந்த ஸித்தோபாயத்தில் மஹா விச்வாஸம்பிறக்கும்படியான பாக்யமில்லாமையாலே உபாயாந்தரங்களை விட்டு இதில் இழிகையில் விச்வாஸமில்லாமையாகிற புத்தி தௌர்பல்யமுடையவர்களுக்கு * மாலை நண்ணித் தொழுதெழுமினோ காலைமாலை கமலமலரிட்டு நீர் * விண்டு வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் * தேனை வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் * என்று அங்க ஸஹிதமான பக்தியை உபதேசித்தும்,

அதில் அசக்தர்க்குத் தாளடையும் ப்ரபத்தி—அதில் துஷ்கரத்வம் விளம்பபய மாகிற விவற்றாலே அநுஷ்டிக்க சக்தரல்லாதார்க்கு * சரணமாகும் தனதாளடைந் தார்க்கெல்லாம் மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் * என்று ஸுகரமுமாய் ஸர் வாதிகாரமுமாய் சரீர முடிவிலே பலனளிக்குமதுவுமான ப்ரபத்தியை வெளியிட்டும்,

அதில் அசக்தர்க்கு உச்சாரணமாத்ரம்—'உபாயம் சிறிதாய், பலன் பெரிதாய், விரோதிகளும் கனத்ததாயிருக்கச்செய்தே எங்ஙனே கூடும்படி?' என்று உண்டான சங்கையினாலே அந்தப்ரபத்தியில் வ்யவஸாயத்துக்குடலான சக்தியில்லாதார்க்கு * திருக்கண்ணபுரஞ் சொல்ல நாளுந் துயர் பாடு சாராவே * என்று உச்சாரணத்தை வெளியிட்டும் ; அதாவது, வாயாரத் துதிக்கவேண்டியதென்று உபதேசித்தும் என்றபடி.

ஸர்வோபாய சூந்யர்க்கு இப்பத்தும்பாடியீடும் தெண்டன்—உச்சாரணந்தனக்கும் தானாக வொருபாசுரமிட்டுச் சொல்லமாட்டாதே கீழ்ச்சொன்ன உபாயங்களெல்லா வற்றிலும் அயோக்யராயிருப்பார்க்கு * இப்பத்தும் பாடியாடிப் பணிமினவன் தாள் களே * என்று இத்திருவாய்மொழியை ப்ரேமத்தோடுபாடி அவன் திருவடிகளிலே விழுங்கோளென்று சொல்லியும்,

என்று கீதாசார்யனைபபோலே அதிகாராநுகுணம் நெறியெல்லா முரைக்கிறார் ஒன்பதாம் பத்தில்—ஆகவிப்படி கீதாசார்யன் தன் பரமக்ருபையாலே நெறியெல்லா மெடுத் துரைத்தாப் போலே இவரும் ப்ராப்தி அணித்தானவாறே ஸம்ஸாரிகளொருவரும் இழக்கவொண்ணாதென்கிற க்ருபையாலே எல்லா மெடுத்துரைத்து அவ்வவர்களு டைய அதிகாராநுகுணமாக உபாயங்களையெல்லா முபதேசித்தருளுகிறார் ஒன்பதாம் பத்தில். ... .. ... .... (227)

(மு.) 228. சுரிகுழல் அஞ்சனப்புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயாவென் னும் ஆபத்திற் கொள்ளும் காமரூப கந்தருபத்தாலே ப்ரபந் நார்த்தி ஹரனானவன், அருள்பெறும் போதணுகவிட்டநுக்குப் பலமான வானேறுங்கதிக்கு அண்டமூவுலகும் முன்னோடிக் கால் விழுந்திடத்தே நிழல் தடங்களாக்கி அமுதமளித்த தயரதன் பெற்ற கோவலனாகையாலே வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடைச்சி இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகன் அவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்ற மைந்தனுகிற பதினெட்டுநாடன் பெருங்கூட்டம் நடத்துமாத்தனை வழித்துணையாக்கி, அறியச்சொன்ன ஸுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கொழித்து, மீள்கின்றதில்லையென்று நீச்சித்திருந் தவர் ஸஞ்சிதங்காட்டும் தசையானவாறே முந்துற்ற நெஞ்சுக்குப் பணிமறவாது மருளொழி நகு கைவிடேல் என்று க்ருத்யாக்ருத்யங் களை விதித்து, நெஞ்சு போல்வாரைத் தொண்டீரென்றழைத்து வலஞ் செய்து எண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுது மென்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் ச்ரோதவ்யம் த்ரஷ் டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டுப் பிணக்கறவைச்

சார்வாக நிகமித்து எண்பெருக்கில் எண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி மாதவனென்று த்வயமாக்கி, கரணத்ரய ப்ரயோக வ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலை செய்துகொடுத்துச் செஞ்சொற்கவிகளுக்குக் கள்ளவழி காவலிட்டு, மனந்திருத்தி வீடு திருத்தப் போய் நாடுதிருந்தினவாறேவந்து விண்ணுலகந்தர விரைந்து அத்தை மறந்து குடிகொண்டு தாம்புறப்பட்டவாக்கையிலே புக்குத் தான நகர்களை அதிலே வகுத்துக் குரவைதுவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்கு தேஹதோஷமறிவித்து, மாயையைமடித்து வானேதரக் கருதிக் கருத்தின்கண்பெரியனுனவனை இன்று அஹேதுகமாக வாதரித்த நீ அநாத்யநாதரஹேது சொல்லென்று மடியைப்பிடிக்க; இந்த்ரிய கிங்கரராய்க் குழிதூர்த்துச் சுவைத்தகன்றிரென்னில், அவை யாவரையும் அகற்ற நீ வைத்தவையென்பர்; அது தேஹயோகத்தாலே யென்னில், அந்நாள் நீ தந்த சுமடென்பர்; முன்செய்த முழுவினையாலென்னில், அது துயரமே உற்றவிருவினை உன்கோவமும் அருளுமென்பர்; ஈவிலாத மதியிலேனென்னுமும்மதன்றே கர்த்ருத்வ போக்த்ருத்வங்களென்னில், ஆங்காரமாய்ப்புக்குச் செய்கைப் பயனுண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தா வென்பர்; யானே எஞ்ஞான்றுமென்றத்தாலே என்னில் அயர்ப்பாய்ச் சமயமதி கொடுத்து உள்ளம் பேதஞ்செய்கை உன் தொழிலென்பர்; ஜீவ ப்ரக்ருதி சைதன்யம் நீங்குப்வ்ரதஹேது, அகமேனியிலழுக்கறுக்கை அபிமாநி க்ருத்யம், தான் நல்கும் பந்தம் நிருபாதிகம், ஸௌஹார்த்தம் எஞ்ஞான்றும் நிற்கும், பிணக்கிப் பேதியாத ஜ்ஞாநாதி வைகல்யமில்லை, ஏகமூர்த்தியில் அல்லல்மாய்த்த யத்ந பலித்வங்கள் நம்மது, நாம் தனிநின்ற ஸ்வதந்த்ரர் என்று அவனே யறிந்தனமே யென்னும் ஸர்வஜ்ஞரிவர்; நெறிகாட்டி அகுகுஞ் சுவடும் போலே இதுவும் நிருத்தரமென்று கவிழ்ந்து நிற்க; அமந்த்ர ஜ்ஞோத்ஸவ கோஷம்போலே ஏறப்பெறுகிற வெழுச்சியை ஸூசிப்பிக்கிற மேக ஸமுத்ரபேரீகீத காஹள சங்காசிஸ்ஸ்துதிகோலாஹலம் செவிப்பட்டவாறே ஸாக்ஷாத்கரித்த பரப்ராப்திக்குத் தலைமிசையாய்வந்த தான் களைப்பூண்டு போகாமல் தடுத்துத் திருவாணையிட்டு, கூசம்செய்யாத செய்திப்பிழை, பற்றுக்கொம்பற்ற கதிகேடு, போரவிட்ட பெரும்பழி, புறம்போனல் வருமிழவு, உண்டிட்ட முற்றீம்பு, அன்புவளர்ந்த அடியுரம், உயிருறவு முதலளவு துரக்கைகளாலே பெருவாணை யல்லவாக்கின பேரவா குளப்படியாம்படி கடல்போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம்பத்தில்.

பத்தாம்பத்தின் ஸாரமான கருத்தாவது;—இப்படி ஆபத்ஸகனுகையாலே ஆபத்தைத் தவிர்க்கைக்குத் தகுதியாகப் பரிக்ரஹிக்கும் விக்ரஹங்களுக்கெல்லாம் மூலபூதமாய் சிறந்த வைலக்ஷண்யத்தோடு கூடியதான திவ்ய விக்ரஹத்தோடே

வந்துதோன்றி, தன்னடியார்கள் ஸம்ஸாரத்தி லடிக்கொதிப்பாலும் தன் திருவடிகளைக் கிட்டியநுபவிக்கப் பெருமையாலும் படும் ஆர்த்தியைப் போக்கு மியல்வினனான அவன் கீழ்ப்பத்தில் தம்முடைய த்வரைக்குத் தக்கபடி நாளிட்டுக் கொடுத்ததுக்குப் பலன் அர்ச்சிராதிகதியாலே தேசவிசேஷத்தேறப் போவதாகையாலே அதுக்கு ஆப்ததமனான அவன் தன்னை வழித்துணையாகப்பற்றி, இனி ப்ராப்தியில் தடையில்லையென்று தமக்குள் நிச்சயித்தவர் மறைத்துவைத்த அர்த்தமுள்ளதும் [வெளியிட வேண்டும்படியான தசையானவாறே ப்ரதமோபதேச பாத்ரமான தம் திருவுள்ளத்திற்கு க்ருத்யாக்ருத்யங்களை விதித்து, அந்தத் திருவுள்ளம்போலே விதேயரான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குக் கர்த்தவ்யம் முதலியவற்றை வெளியிட்டு, முதற்பத்திலே * பிணக்கறவறுவகையென்னும் பாசுரத்தில் உபக்ரமித்த பக்தியோகத்தை * சார் வேதவ நெறியோடே உபஸம்ஹரித்து, ஸம்ஸாரிகளுக்கு ஸுகரமாக ஆச்ரயணத்தை உபதேசித்து, அநுபவ கைங்கர்யங்களிலே நிற்கிறவர்களுக்கு சீல குணமாகிற ஆழங்காலையுங் காட்டி ஜாகரூகதையை விதித்து தம்பக்கல் விருப்பத்தாலே தம் திருமேனியில் அதிகவியாமோஹம் பண்ணுகிற எம்பெருமானுக்கு அதன் தோஷத்தையுணர்த்தி, இப்போது தமக்குப் பரதந்த்ரனாய்த் தம்மைப் பரமபதத்திலே கொண்டு போவதாக மிகவும் ஆதரம் பண்ணுகிறவனை, அநாதிகாலம் தம்மை ஸம்ஸரிக்கவிட்டு உபேக்ஷித்திருந்ததற்கு ஹேதுவென்னென்று கேட்க, அவனும் இந்த்ரியவச்யதை முதலான ஹேதுபரம்பரையை யெண்ணி அதுவும் நம் அதீனமென்று அறியும் ஸர்வஜ்ஞரானவிவர்க்குப் போக்கடி சொல்லுகை அரிதென்று நிருத்தரனாய் அர்ச்சிராதி மார்க்கத்தையும் அங்குள்ளாருடைய ஸத்காரத்தையும் அவ்வழியாலே போய்ப்பெறும் ஸ்வசரணகமல ப்ராப்தியளவாகக் காட்டிக்கொடுக்க அத்தை ஸாக்ஷாத்கரித்து, அது மாநஸாநுபவமாத்ரமாய் பாஹ்யகரணயோக்யமல்லாமையாலே அத்தை உள்ளபடி ப்ராபிக்கவேணுமென்று பதறி அவனுக்கு மறுக்கவொண்ணாத திருவாணையிட்டுத் தடுத்து, அது பெருவாணையல்லாமைக்கு ஹேதுக்களையுஞ் சொல்லும்படியான தம்முடைய பரமபக்தியெல்லாம் மிகச் சிறிதென்னும்படி கரைபுரண்ட அபிநிவேசத்தோடே வந்து தம்முடைய தாபங்களைப் போக்கினபடியை வெளியிட்டமையாயிற்று.

(பு.) 228. சுரிகுழலஞ்சனப்புனல் மைந்நின்ற பொல்லாப் புனக்காயா வென்னும் காமரூப கந்தரூபத்தாலே ப்ரபந்நார்த்தி ஹரனானவன்—(ஸம்ஸாரத்தில் அடிக் கொதிப்பாலும் தன் திருவடிகளைக்கிட்டி அநுபவிக்கப்பெருமையாலும் பக்தர்கள் படும் ஆர்த்தியை, பரமவிலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹத்தோடே வந்துதோன்றிப் பரிஹரிப்பதே ஆர்த்திஹரத்வமாகையாலே அதற்கீடான விக்ரஹவைலக்ஷண்யம் அநுபவிக்கப் படுகிறது.) * சுரிகுழல் கமலக்கட் கனிவாய் * உன் அஞ்சனமேனி * புனல் மைந்நின்றவரை போலுந் திருவுருவம் * பொல்லாக் கனிவாய்த்தாமரைக்கட் கருமாணிக்கமே * புனக்காயா நிறத்த புண்டரீகக்கட்செங் கனிவாய் * என்கிற பாசுரங்களின்படியே * காமரூபங்கொண்டு எழுந்தளிப்பான் * என்று ஆச்ரிதருடைய ஆபத்ரக்ஷணாநுரூபமாக வேண்டினபடி பரிக்ரஹிக்கும் விக்ரஹங்களுக்கெல்லாம் கந்தமாயிருக்கும் திவ்ய விக்ரஹத்தைக்கொண்டு ப்ரபந்நர்களின் ஆர்த்தியைத் தீர்க்கும் ஸ்வபாவனான எம்பெருமான்,

**அருள்பெறும்போது அணுகவிட்டதுக்குப் பலமான வானேறுங்கதிக்கு**—(கீழ்ப்பத்திலே) * அவனுடையருள்பெறும் போதரிதால் * என்றும் * அவனருள் பெறுமளவு ஆவி நில்லாது * என்றும் சொன்னபடியே க்ஷணகால விளம்பமும் பொருதபடி ஆர்த்தி மிகப்பெற்ற தமக்கு * மரணமானல் வைகுந்தம் கொடுக்கும்பிரான் * என்று ஆரப்தசரீரத்தின் முடிவிலே மோக்ஷம் தருகிறேமென்று அணித்தாக நாளிட்டுக் கொடுத்ததுக்குப்பலன் பரம பதத்திலே சென்று புகுகைக்கு வழியாக அவன் காட்டிக்கொடுத்த அர்ச்சிராதிகதியாலே போகப்பெறுகையாலே அந்த அர்ச்சிராதிகதிக்கு

**அண்டமூவுலகும் முன்னேடிக் கால்விழுந்திடத்தே நிழல் தடங்களாக்கி**—ராஜகுமாரன் வழிபோம்போது வழிக்குக் கடவார் முன்னேடி நிலம் சோதித்து நிழலும் தடாகமும் பண்ணிப் பிறகு அழைத்துக்கொண்டு போமாபோலே * அண்ட மூவுலகளந்தவன் * என்று உலகளப்ப தென்கிற வியாஜத்தாலே முன்னேடி நிலம் சோதித்து * அவனடி நிழல் தடம் * என்று காளமேகமான தன் கால்விழுந்த விடத்தே நிழலும் தடாகமுமாம்படி பண்ணி,

**அமுதமளித்த தயரதன் பெற்ற கோவலனுகையாலே**—("அமுத மளித்தவனுகையாலே, தயரதன் பெற்றவனுகையாலே, கோவலனுகையாலே" என்று மூன்று வாக்யமாக யோஜித்துக் கொள்ளவேணும்.) இப்போது வழித்துணையாகப் பற்றப்படுகிற திருமோகூ ரெம்பெருமான் மோஹநக்ஷேத்ரவாஸி யாகையாலே—[அதாவது, மோஹிநி யவதாரமெடுத்து அமுதமளித்த பெருமானுகையாலே] *பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநாம்ருதம்*என்கிறபடியே வழிப்போக்குக்கு உணவாகத் தன் திவ்யகுணங்களாகிற அம்ருதத்தை வர்ஷிக்குமவனுனென், [**தயரதன் பெற்றவனுகையாலே, கோவலனுகையாலே**] வழித்துணையாகப்பற்றின திருமோகூரெம்பெருமானை * தயரதன்பெற்ற மரதகமணித்தடம் * என்று ஸ்ரீராமபிரானுகவும் * கூத்தன் கோவலன் * என்று கண்ணபிரானுகவும் கூறியிருக்கையாலே என்றபடி. இந்த ஹேது, மேலே அந்வயிக்கும்.

**வேடன் வேடுவிச்சி...பெற்ற மைந்தனுகிற பதினெட்டு நாடன் பெருங் கூட்டம் நடத்தும் ஆத்தனை வழித்துணையாக்கி**—முற்காலத்தில் பாஷைகள் பதினெட்டாம்; அவற்றிற்கு உரிய நாடுகள் பதினெட்டாம்; அப்பதினெட்டு நாடுகளுக்கும் கடவன் எவனே அவன் ஸார்வபௌமனென்று வழங்கப்படுவான். அன்னவன் மஹோத்ஸவயாத்திரை புறப்பட்டால் தனக்கு விதேயர்களான பதினெட்டு நாட்டுச் சிற்றரசர்களும் தன்னைத் தொடர்ந்து வழிபாடுகள் செய்துவர நேருமென்று ஒரு ப்ரஸித்தியுண்டு; இவ்விடத்தில் ஆழ்வாருக்கு வழித்துணையாகின்ற எம்பெருமானைப் பதினெட்டு நாடன் என்று ஒரு சமத்காரமாகச் சொல்லுகிறபடி எங்ஙனே யென்னில், வழித்துணையாகின்ற இக்காளமேகப் பெருமாள் உறையுமிடமான திருமோகூரானது பாண்டிநாட்டைச் சேர்ந்தது; * ஈரிருபதாஞ் சோழமீரொன்பதாம் பாண்டி * என்கிறபடியே பாண்டிய நாடானது பதினெட்டு திவ்யக்ஷேத்திரங்களை யுடையதாதலால் இத்திருமோகூ ரெம்பெருமானைப் பதினெட்டு நாடனென்று ஒருவாறு சொல்லலாம் போலும். ஸ்ரீராமகிருஷ்ணுவதாரங்களில் ஏற்கெனவே **அடிமைப்**

பட்ட பக்தர்கள் ஒரு பதினெண்மராக இங்குக் கொள்ளப்படுகிறுர்கள். (வேடன் வேடுவிச்சி யென்று தொடங்கி அவர்கள் கணக்கிடப்பெறுகின்றுர்கள்.)

வேடன்—குஹப்பெருமாள். வேடுவிச்சி—சபரி. பக்ஷி—ஜடாயு. குரங்கு—ஸுக்ரீவ மஹாராஜரும் மற்றுமுள்ள வானரவர்க்கமும். சராசரம் —அயோத்தியில் வாழ்ந்த சராசரம். இடைச்சி—சிந்தயந்தி. இடையர்—ததிபாண்டர். தயிர்த்தாழி—அந்த ததிபாண்டருக்காக மோக்ஷம் கொடுக்கப்பெற்ற அவருடைய தயிர்த்தாழி. கூனி—மதுரையில் கம்ஸவதத்திற்கு முன்னே சாந்து கொடுத்த குப்ஜை. மாலாகாரர்—அங்கே குறுந்தெருவிலே புஷ்பமிட்ட ஸ்ரீமாலாகாரர். பிணவிருந்திட்டவர்—கண்டாகர்ணர். வேண்டடிசிலிட்டவர்—பக்தவிலோசன மென்கிற ஸ்தானத்தில் அடிசில்கொண்டுவந்து இட்ட ரிஷிபத்னிகள். அவன் மகன்—ப்ரஹ்லாதாழ்வான். அவன் தம்பி—ஸ்ரீவிபீஷணுழ்வான். ஆனை—கஜேந்திராழ்வான். அரவம்—பெரிய திருவடிக்கு அஞ்சிவந்து திருவடிகளைச் சரணமாக வடைந்த ஸுமுகன். மறையாளன்—* மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்மலரடிக்கண்ட மாமறையாளன் * என்று பெரியதிருமொழியில் பேசப்பட்ட கோவிந்தஸ்வாமி. பெற்ற மைந்தன்—*மன்னு நான்மறை மாமுனிபெற்ற மைந்தன் * என்று, ம்ருகண்டுபுத்திரனுய் மோக்ஷார்த்தமாகத் தன்னை வந்தடைந்த மார்க்கண்டேயன். ஆக இவர்களாகிற—பதினெட்டு நாடன் பெருங்கூட்டம்போலே யிருந்துள்ள இத்திரளை அர்ச்சிராதி மார்க்கத்தாலே தானே துணையாகக் கொண்டு நடத்துமவனை திருமோகூராத்தனை வழித்துணையாகக் கொண்டாராயிற்று ஆழ்வார். * திருமோகூராத்தன் தாமரையடியன்றி மற்றிலமரண் * என்றும் * திருமோகூர்க் காளமேகத்தையன்றி மற்றென்றிலங்கதியே * என்றுமுள்ள பாசுரங்களாலே அப்பெருமானை வழித்துணையாகக் கொண்டமை விளங்கும். (ஆக இவ்வளவும் * தாளதாமரை யென்கிற முதல் திருவாய்மொழியின் பிரமேயம் சொல்லிற்று.)

அறியச்சொன்ன ஸுப்ரபாதத்தே துணைபிரியாமல் போக்கொழித்து—(இரண்டாவதான * கெடுமிடராய வென்கிற பதிகம் உபதேசபரமாகையாலே அது இங்கு விடப்பட்டிருக்கிறது.) கீழே * நாளேலறியேன் * என்றும் * மரணமானுல் * என்றும் நான் உங்களுக்குச் சொன்னநாள் அணித்தாய்விட்ட தென்பதை * தாழுமக்கறியச் சொன்ன நாள்களும் நணியவான * என்கிற பாசுரத்தினுல் பிறர்க்கும் பேசும்படியாய், பகவத் ப்ராப்தி அணித்தான நாள் எதுவோ அதுவே நல்விடிவு என்னுமிடம், * ஸுப்ரபாதா ச மே நிசா * ஸுப்ரபாதாத்ய ரஜநீ மதுராவாஸயோஷிதாம் * என்கிற ப்ரமாணஸித்தமாகையாலே அப்படிப்பட்ட நல்விடிவு தமக்குண்டாயிற்றென்று காட்டிக்கொண்டு, அந்த நல்விடிவான நாளிலே தமக்குத் துணையானவனைப் பிரியாமைக்காக * எம்பெருமான்! பசு மேய்க்கப்போகேல் * என்று, பசுமேய்க்கையாகிற ஸ்வாபிமதத்திற்காகவும் போகாதபடி தடுத்து,

மீள்கின்றதில்லையென்று நிச்சித்திருந்தவர்—* மீள்கின்றதில்லைப் பிறவித்துயர் கடிந்தோம் * நிலை பேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே * என்கிற பாசுரங்களால் ஸம்ஸார துரிதம் இனி மறுவலிடா தென்று நிச்சயித்திருந்த ஆழ்வார்,

**ஸஞ்சிதம் காட்டும் தசையானவாறே**—இனி நமக்கு பகவத்ப்ராப்தி தப்பாதென்று துணிந்தவர்கள் (மரணதசை யானவளவிலே) புதைத்துக்கிடக்கும் மஹாநிதிகளை மகன் முதலானோர்க்குக் காட்டுமாபோலே இவரும் ஒருவருமிழவாதபடி எல்லார்க்கும் ஹிதாஹிதங்கள் அறிவிக்கவேணுமென்று பார்க்கும் தசை விளைந்ததாக

**முந்துற்ற நெஞ்சுக்குப் பணி மறவாது மருளொழி நகு கைவிடேலென்று க்ருத்யாக்ருத்யங்களை விதித்து**—* தொழுதெழென்மனனே * என்று முந்துற உபதேசிக்கும்படி தம்மிலும் பகவத் விஷயத்திலே முற்பட்டு நிற்கிற தம் திருவுள்ளத்திற்கு * பணி நெஞ்சே நாளும் பரமபரம்பரனை * வாழியென்னெஞ்சே மறவாது வாழ்கண்டாய் * * மருளொழி நீ மடநெஞ்சே * நரகத்தை நகுநெஞ்சே * வாழிமனமே கைவிடேல் * என்கிற பாசுரங்களாலே க்ருத்யங்களைச் செய்யும்படிக்கும் அக்ருத்யங்களை வர்ஜிக்கும்படிக்கும் விதித்து,

**நெஞ்சுபோல்வாரைத் தொண்டீரென்றழைத்து**—திருவுள்ளத்திற்குத் தெரிவிக்க வேண்டியவற்றைத் தெரிவித்த பின்பு அத்திருவுள்ளம்போலே அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்களைத் * தொண்டீர்வம்மின் * என்றழைத்து,

**வலஞ்செய்தெண்ணுமின் பேசுமின் கேண்மின் காண்மின் நடமின் புகுதுமென்று கர்த்தவ்யம் ஸ்மர்த்தவ்யம் வக்தவ்யம் ச்ரோதவ்யம் த்ரஷ்டவ்யம் கந்தவ்யம் வஸ்தவ்யமெல்லாம் வெளியிட்டு**—* கொண்டகோயிலை வலஞ்செய்து இங்காடுதும் கூத்தே * என்று கர்த்தவ்யமும், * எண்ணுமின் எந்தை நாமம் * என்று ஸ்மர்த்தவ்யமும் * பேசுமின் கூசமின்றி * என்று வக்தவ்யமும் * நமர்களோ சொல்லக்கேண்மின் * என்று ச்ரோதவ்யமும், * படமுடையரவிற் பள்ளி பயின்றவன் பாதங் காண நடமினோ * என்று த்ரஷ்டவ்யமும் கந்தவ்யமும், * அனந்தபுரநகர் புகுதுமின்றே * என்று வஸ்தவ்யமும் ஆகிறவையெல்லாம் அவர்களுக்குவெளியிட்டு,

**பிணக்கறவைச் சார்வாக நிகமித்து**—எந்த அர்த்தம் உபக்ரமிக்கப்பட்டதோ அதனை உபஸம்ஹரிக்கவேண்டுவது சாஸ்த்ரக்கட்டளை யாகையாலே தம்முடைய மஹாசாஸ்த்ரத்திற்குச் செய்யவேண்டிய அதனையுஞ் செய்து (அதாவது, * பிணக்கற வறுவகைச் சமயமும் * என்கிற பாட்டிலே * வணக்குடைத்தவநெறி * என்று தொடங்கின பக்தியோகத்தை * சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள் * என்று ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியைச் சொல்லி நிகமித்தென்றபடி.)

**எண்பெருக்கில் எண்ணும் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி**—முதற்பத்திலே * எண்பெருக்கந்நலத் தொண்பொருளீறில வண்புகழ் நாரணன் * என்று பஜனத்திற்கு ஆலம்பனமாகச் சொல்லப்பட்டு, * எண்ணும் திருநாமம் * என்று பஜந தசையில் அநுஸந்திக்கப்படும் திருநாமமான திருமந்திரத்தினுடைய சப்தத்தை * நாரணம் * என்றும், அதன் அர்த்தத்தை * எம்மான் * என்றும் ஸங்க்ரஹமாம்படி சுருங்க உபதேசித்து,

**மாதவனென்று த்வயமாக்கி**—த்வயத்தில் பூர்வவாக்கியத்திலும் உத்தரவாக்கியத்திலுமுள்ள ஸ்ரீமத் பதத்தின் அர்த்தங்களைத் திருவுள்ளம் பற்றிக்கொண்டு, * மாதவனென்றென்று ஓதவல்லீரேல் * என்று கீழ்ச்சொன்ன நாராயண சப்தத்தோடே மாதவனென்கிறவித்தை இரண்டு தடவை சேர்த்துச் சொல்ல வல்லீர்க

ளாகில் என்கையாலே அந்தத் திருமந்திரத்தை அதினுடைய விசதாநுஸந்தாந மான த்வயரூபேண வெளியிட்டவராகி,

கரணத்ரய ப்ரயோகவ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலை செய்துகொடுத்து— எம்பெருமான் தம்மைக் கொண்டுபோகையிலே விரைகின்றபடியாலும் கேட்கிறவர்களுக்கு எளிதாகச் சொல்லவேண்டுகைக்காகவும் சுருக்கமாகக் காட்டவேண்டி * தாள்வாய் மலரிட்டு நாள்வாய் நாடீர் * நாடீர்—பாடீரவன் நாமம் * சுனை நன் மலரிட்டு நினைமின் நெடியானே * என்றிப்படி மநோவாக்காயங்களாகிற கரண த்ரயத்தாலும் ப்ரயோகிக்கப்படும் பகவதாச்ரயண ப்ரவ்ருத்தியை ஸம்ஸாரிகளுக்குக் காட்டிக்கொடுத்து,

செஞ்சொற் கவிகளுக்குக் கள்ளவழி காவலிட்டு— அனுபவ கைங்கர்யங்களிலே தமக்குத் தோள்தீண்டிகளானவர்களை * செஞ்சொற் கவிகாள்! * என்றழைத்து * உயிர்காத்து ஆட்செய்மின் * என்று, அவனுடைய சீலகுணத்தில் அகப்பட்டு அழுந்திப்போகாமல் உங்களுயிரை நோக்கிக்கொண்டு அடிமை செய்யப் பாருங்கோள் என்று உபதேசிக்கையாலே வஞ்சக்கள்வன் உள்கலந்தழிக்கும் வழிக்குக் காவலிட்டு,

மனந்திருந்தி வீடு திருத்தப்போய் நாடு திருந்தினவாறே வந்து விண்ணுலகம் தரவிரைந்து அந்தை மறந்து குடிகொண்டு தாம் புறப்பட்ட வாக்கையிலே புக்குத் தான நகர்களை அதிலே வகுத்துக் குரவைதுவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்கு தேஹதோஷ மறிவித்து—* வளவேழுலகு பதிகத்திலே அயோக்யதை கூறி அகன்ற தம்மைத் தன் சீலகுணத்தைக்காட்டி, * தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி * என்கிற படியே மனஸ்ஸைத் திருத்திச் சேர்த்துக்கொண்டு இன்னமும் இவர் இங்கேயிருக்கில் அயோக்யரென்று அகலுவராகையாலே அகலவொண்ணாத தேசத்திலே கொண்டுபோகவேணும் என்று * வீடு திருத்துவான் * என்கிறபடியே பரமபதத்தைக் கோடிப்பதாகப் போய் அது செய்து திரும்புவதற்கு முன்னே, * ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல் * என்கிறபடியே தம் உபதேசத்தாலே நாடெல்லாம் திருந்தி இவ்விடத்தில் ஆகவேண்டிய காரியமும் தலைக்கட்டினவாறே வந்து, * இன்று விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான் * என்கிறபடியே பரமபதத்தேறக் கொண்டுபோகையிலே பதறி சரமசரீரமாகையாலே தம்முடைய திருமேனியில் தனக்குண்டான வியாமோஹத்தாலே அந்த த்வராதிசயத்தையும் மறந்து ஸபரிகரனாய்க்கொண்டு தேஹத்திலே புகுந்து * திருமாலிருஞ் சோலைமலையே * என்கிற பாட்டின் படியே தனக்கு வாஸஸ்தானமான திவ்ய நகரங்களில் பண்ணும் விருப்பத்தையெல்லாம் ஓரோரவயவங்களிலே பண்ணி எல்லா மிதுக்குள்ளேயாக வகுத்து, திருக்குரவையில் பெண்களோடே அநேக விக்ரஹ பரிக்ரஹம் பண்ணி அநுபவித்தாப்போலவும் ஸ்ரீத்வாரகையில் தேவிமாருடனே பதினாறாயிரம் விக்ரஹங்கொண்டு அநுபவித்தாப்போலவும் அனேக விக்ரஹங்கொண்டு தம்முடைய அவயவங்கள்தோறும் அநுபவிக்கும்படி தம் திருமேனியிலே மிகவும் சபலனை அவனுக்கு * பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களான உன் மாமாயை மங்கவொட்டு * என்று தம்

தேஹத்தின் தோஷத்தை யறிவித்து, (இதில் ஆசையை விட்டுத்தொலைக்க வேணும் என்று கால்கட்டியென்கை )

**மாயையை மடித்து வானே தரக்கருதிக் கருத்தின்கட் பெரியனுனவனை இன்று** அஹேதுகமாக ஆதரித்த நீ அநாத்யநாதரஹேது சொல்லென்று மடியைப்பிடிக்க—* மடித்தேன் மனைவாழ்க்கையுள் நிற்பதோர் மாயையை * என்று தாம்பேசும்படி அசித் ஸம்பந்தத்தை யறுத்துத் தமக்குப் பரமபதத்தைத் தருவானாக உத்யோகித்துத் தம்மைக்கொண்டு போகையிலே மிகவும் பாரிக்கிற மஹாநுபாவனை நோக்கி * இன்றென்னைப் பொருளாக்கி * என்கிற பாசுரத்தாலே, இன்று இப்படி நிர்ஹேதுகமாக விஷயீகரித்த நீ அநாதிகாலம் என்னை உபேக்ஷித்திருந்ததற்கு ஹேது சொல்ல வேண்டுமென்று மடிபிடித்துக்கேட்க;

எம்பெருமான் அங்ஙனம் கேள்விகேட்ட ஆழ்வாருக்கு என்ன உத்தரம் சொல்லலாமென்று தனக்குள்ளே நிருபித்து, தன்னுடைய வாதங்களுக்கு ஆழ்வார் சொல்லக்கூடிய பதில் வாதங்களையும் தானே நிருபித்துப் பார்த்துப் பார்த்து, இவர்க்கு நம்மால் பதில் சொல்லிப் பிழைக்கவொண்ணாதென்று தேறி நிருத்தரனாய்த் தலைகவிழ்ந்து நின்றபடியைப் பரக்கச் சொல்லுகிறதுமேல்—[இந்த்ரிய கிங்கரராய் இத்யாதியாலே ]

[ஆழ்வார்க்கும் எம்பெருமானுக்கும் ஸம்வாதமாக வைத்துக் காட்டப்படுகிறது]

**இந்த்ரியகிங்கரராய்க் குழிதூர்த்துச் சுவைத்தகன்றீரென்னில் ;**

**எம்பெருமான்—**ஆழ்வீர்! இன்று இப்படி யாதரிக்கிற நீ அநாதிகாலம் அநாதரித்தமைக்கு ஹேது சொல்லென்று கேட்டீர்; உம்மை நான் அநாதரித்தேனல்லேன்; அநாதிகாலம் நீர்தாமே இந்திரியங்களுக்கு வசப்பட்டு சப்தாதி விஷய ப்ரவணராய்க் கை கழிந்து போனீரத்தனை; * தூராக்குழி தூர்த்து எனை நாள் அகன்றிருப்பன் * என்றும், * அற்பசாரங்கள் அவைசுவைத்து அகன்றொழிந்தேன் * என்றும் நீர்தாமே பேசியிருக்கிறீர் காணும்.

**அது யாவரையுமகற்ற நீ வைத்தவையென்பர்.**

**ஆழ்வார்—**பிரானே! என் வார்த்தையைக்கொண்டே என்வாயை மூடுவிக்கப் பார்க்கிறாய்; நன்று; நான் சொல்லியிருப்பதை யெல்லாம் நீ நன்றாகப் பார்க்க வேணும்; * இன்னமுதெனத் தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க, நீ வைத்த முன்னமாயம் * என்றும் * அகற்ற நீவைத்த மாயவல்லைம் புலன்கள் * என்றும் நான் சொல்லியிருக்கிறேனல்லவா? விஷயங்களும் அவற்றில் ப்ராவண்யத்துக்கு அடியான இந்திரியங்களும் நீ வேண்டாதாரை அகற்றுகைக்கு நீயே வைத்தவை யென்று சொல்லியிருக்கிறேன்காண்.

**அது தேஹயோகத்தாலே யென்னில் :**

எம்பெருமான்—இந்திரியங்களுக்கு நீர் வசப்பட்டிருப்பதற்கு ஹேது சரீர ஸம்பந்தங்காணும்.

அந்நாள் நீதந்த சுமடென்பர் :

**ஆழ்வார்**—ஆமாம்; அந்த சரீரம் நீ கொடுத்ததத்தனையன்றோ? * அந்நாள் நீ தந்தவாக்கை * என்றும் * அதுநிற்கச் சுமடுதந்தாய் * என்றும் சொல்லியிருக்கிறேன் காண்.

முன்செய்த முழுவினையாலென்னில் :

**எம்பெருமான்**—அந்த தேஹஸம்பந்தத்துக்கு அடி * முன்செய்த முழுவினை * என்று நீர் சொன்னபடி அநாதிகாலார்ஜித புண்ய பாபரூப கருமங்காணும்.

அது துயரமே உற்றவிருவினை உன்கோவமுமருளுமென்பர் ;

**ஆழ்வார்**—அசேதநமுமாய் அசக்தமுமாய் நச்வரமுமாயிருந்துள்ள புண்ய பாபரூப கருமங்கள் உன்னுடைய நிக்ரஹமாகவும் அநுக்ரஹமாகவும் பலிக்குமவையாகையாலே கருமமும் நீயிட்ட வழக்குக்காண். * துயரமேதரு துன்பவின்ப வினைகளாய் * என்றும் * உற்ற விருவினையாய் * என்றும் சொல்லியிருக்கிறேனல்லவா?

ஈவிலாதமதியிலே னென்னுமும்மதன்றோ கர்த்ருத்வபோக்த்ருத்வங்களென்னில் ;

**எம்பெருமான்**—ஆழ்வீர்! *ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன்கொல்* என்றும் * மதியிலேன் வல்வினையே மாளாதோ * என்றும் நீரே சொல்லியிருக்கையாலே கர்த்ருத்வமும் போக்த்ருத்வமும் உம்மதன்றோ?

ஆங்காரமாய்ப்புக்குச் செய்கைப் பயனுண்பேனும் கருமமும் கருமபலனுமாகிய நீ கர்த்தா போக்தாவென்பர்;

**ஆழ்வார்**—* தானுங்காரமாய்ப்புக்குத் தானே தானேயானான் * என்று சொல்லியிருக்கிறேன்; நீயே அபிமானியாய்ப்புக்கு ஆத்மாத்மீயங்களில் எனக்குண்டான அபிமானத்தைத் தவிர்த்து நீயே அபிமானியாயானாய் என்று பொருள்படச் சொல்லியிருக்கிறேனல்லவா? அன்றியும் உன்னுடைய படியை நான் அநுகரித்துச் சொல்லுகிற விடத்திலே (* கடல் ஞாலத்தில்) * செய்கைப் பயனுண்பேனும் யானே * என்று சொல்லியிருக்கிறேன். ஸகல கர்மங்களினுடையவும் பலபோக்தா நீயேகாண்; * கருமமும் கரும பலனுமாகிய காரணன் தன்னை * என்றும் சொல்லியிருக்கிறேன் காண்.

யானே யெஞ்ஞான்று மென்றத்தாலே யென்னில்;

**எம்பெருமான்**—ஆழ்வீர்! நீர் அப்படிச்சொல்லி யிருப்பது வாஸ்தவம்; * யானே யென்னை யறியகிலாதே யானே யென்றனதே யென்றிருந்தேன் * என்றும், * எஞ்ஞான்று நாமிருந்திருந்திரங்கி நெஞ்சே! மெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி * என்றும் நீர் சொன்ன அஜ்ஞான அந்யதாஜ்ஞானாதிகளாலே காணும் உமக்கு அந்த கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் உண்டாயின.

அயர்ப்பாய்ச் சமயமதிகொடுத்து உள்ளம் பேதஞ்செய்கை உன் தொழிலென்பர் ;

**ஆழ்வார்**—பிரானே! * அயர்ப்பாய்த் தேற்றமுமாய் * மாட்டாத பல சமயமதி கொடுத்தாய் * உள்ளம் பேதஞ்செய்திட்டு உயிருண்ட வுபாயங்களும் * என்று,

ஞானம் அஜ்ஞானம் இரண்டும் நீயிட்ட வழக்காகையாலே அஜ்ஞான அந்யதாஜ்ஞாநாதிகளை விளக்கை உன் க்ருத்யமென்று நான் தெரிவித்திருக்கிறேன்காண்.

(ஆக இப்படிப்பட்ட ஸம்வாதம் எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் நடைபெறவில்லையாகிலும் 'நாம் இப்படிச்சொன்னால் அதற்கு ஆழ்வார் இன்னபடி விடைகூறுவர் என்று இவ்வளவும் எம்பெருமான் தானே ஊஹித்துக்கொண்டபடி.)

இன்னமும் சில விஷயங்களை எம்பெருமான் குறிக்கொண்டான்;—உண்மையான பல விஷயங்களை ஆழ்வார் நன்கு தெரிந்து கொண்டவராகையாலே இவருக்கு ஏதோ ஸமாதானம் சொல்லி இவரை வஞ்சித்துவிட நம்மாலாகாது என்று குறிக்கொண்டான். அந்த விஷயங்கள் எவையென்றால்:—)

**ஜீவப்ரக்ருதி சைதந்யம் நீங்கும் வ்ரதஹேது ......அவனே அறிந்தனமே யென்னும் ஸர்வஜ்ஞரிவர்**—(ஜீவப்ரக்ருதி சைதந்யம் நீங்கும் வாதஹேதுவென்று ஆழ்வார் நன்றாகத் தெரிந்துகொண்டவர்; அகமேனியில் அழுக்கறுக்கை அபிமாநிக்ருத்யமென்று ஆழ்வார் நன்கு தெரிந்து கொண்டவர் என்றிப்படி வாக்யந்தோறும் யோஜிக்க வேணும்.) அசித்தென்றும் ஜீவனென்றும் எம்பெருமானுக்குள்ள இரண்டு ப்ரக்ருதிகளுக்குள்ளே ஜீவனாகிற ப்ரக்ருதியில் கிடக்கிற சைதன்யமானது * யாதானும்பற்றி நீங்கும் விரதம் * என்கிறபடியே ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் ஏதேனுமொன்றைப் பற்றிக்கொண்டு நம்மைவிட்டு நீங்குவதற்கு ஹேதுவேயன்றி நம்மைப் பற்றிக் கொண்டு உஜ்ஜீவிப்பதற்கு உறுப்பாயிருப்பதன்று என்று தெரிந்து கொண்டவரிவர்.

**அகமேனியிலழுக்கறுக்கை அபிமாநிக்ருத்யம்**—"அகமேனி" என்னும்படி நமக்கு அந்தரங்க சரீரமாயிருக்கிற இவ்வாத்மவஸ்துவில் கிடக்கிற ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற அழுக்கைப் போக்குகை இதுக்கு அபிமாநியான நம்முடைய காரியம் என்றும் தெரிந்து கொண்டவர்;

**தான் நல்கும் பந்தம் நிருபாதிகம்**—* நல்கித் தான் காத்தளிக்கும் பொழிலேழும் வினையேற்கே நல்கத்தானாகாதோ நாரணனைக் கண்டக்கால் * என்கிற பாசுர மருளிச் செய்தவராகையாலே, நாம் ஸ்நேஹத்தோடு ரக்ஷிக்கைக்கு அடியான நாராயணத்வ ப்ரயுக்தமான ஸம்பந்தம் நிருபாதிகமாயிருந்த தென்றும் தெரிந்து கொண்டவர்;

**ஸௌஹார்தம் எஞ்ஞான்றும் நிற்கும்**—* தனிமாப்புகழே யெஞ்ஞான்றும் நிற்கும்படியாய்த் தான் தோன்றி * என்கிற பாசுர மருளிச்செய்தவராகையாலே, நாமரூபங்களை யிழந்துகிடந்த ஸமயத்திலே இவற்றை யுண்டாக்க நினைத்த மிகச் சிறந்த குணமான ஸௌஹார்த்தமானது அடியார்கள் கொண்டாடும்படி யானதாகையாலே 'அப்படிப்பட்ட ஸௌஹார்த்த முடைய இவனன்றோ நம் காரியம் செய்ய வேணும், என்றும் தெரிந்து கொண்டவரிவர்;

**பிணக்கிப் பேதியாத ஜ்ஞாநாதி வைகல்யமில்லை**—* பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும் பேதியாததோர் கணக்கில் கீர்த்தி வெள்ளக்கதிர்ஞான மூர்த்தியினாய் * என்கிற பாசுரத்தில்—ஸம்ஹார ஸமயத்திலே ஸகல சேதநா சேதநங்களும் நாம ரூபவிபாக மின்றிக்கே யிருக்கும்படி கலசி, ஸ்ருஷ்டி தசையிலே

ஒருவர் கருமம் ஒருவர்க்குத் தட்டாதபடி பிரித்து ஸ்ருஷ்டித்தும் தனக்கொரு அவத்யமின்றிக்கே யிருக்கும்படியான ஜ்ஞாநசக்தி பூர்த்தியை யுடையவனென்று பேசினவராகையாலே நமக்கு ஜ்ஞாந சக்திகளில் குறைவு சொல்ல இடமில்லாதபடி நம்முடைய ஜ்ஞாநசக்தி பூர்த்தியையும் தெரிந்து கொண்டவரிவர்;

ஏகமூர்த்தியில் அல்லல்மாய்த்த யத்ந பலித்வங்கள் நம்மது— * ஏகமூர்த்தி யிரு மூர்த்தி... ஆவியல்லல் மாய்த்ததே * என்கிற பாசுரத்தில் ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்து அவற்றினுடைய தாரணார்த்தமாக அந்தராத்மாவாய் நின்று, ஸ்ருஷ்டமான அந்த பதார்த்தங்களினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளி இப்படி ஸர்வகாலமும் ஏகரீதியாக அநுக்ரஹ சீலனாயிருக்கின்ற உன் திருமேனிக்கு வேண்டும் போகோபகரணங்களெல்லாம் * பூசுஞ்சாந் தென்னெஞ் சமே * என்கிற பாட்டிற்படியே என்பக்கலுண்டாக்கி உன் துக்கம் தீரப்பெற்றாயன்றோ என்று பேசினவராகையாலே இவரைப் பெறுகைக்கு யத்நம் பண்ணுகையும், பெற்றால் உகக்கும் பலித்வமும் நமக்கேயுள்ளது என்றும் தெரிந்துகொண்டவரிவர்;

நாம்தனிநின்ற ஸ்வதந்த்ரரென்று அவனே யறிந்தனமே யென்னும் ஸர்வஜ்ஞரிவர்— * தனிநின்ற சார்விலா மூர்த்தி! * என்றும் * அவனே யகல்ஞாலம்......அவனே மற்றெல்லாமு மறிந்தனமே * என்றும் பேசினவராகையாலே ஸர்வப்ரகாரத்தாலும் நமக்குள்ள ஸ்வாதந்திரியத்தை நன்றாகத் தெரிந்துகொண்டவரிவர்? (ஆகையாலே இவர்க்குச் சப்பை சாடியான ஸமாதானங்களைச் சொல்லி நாம் பிழைக்க வழியில்லை;)

நெறிகாட்டி அருகுஞ்சுவடும் போலே இதுவும் நிருத்தரமென்று கவிழ்ந்து நிற்க— (பெரிய திருவந்தாதியில்) *நெறிகாட்டி நீக்குதியோ * என்கிற பாட்டிலும், * அருகுஞ் சுவடும் * என்கிற பாட்டிலும் முன்பு இவர் கேட்டவற்றுக்கு எப்படி உத்தரமில்லையோ அப்படியே * இன்றென்னைப் பொருளாக்கி * என்கிற கேள்விக்கும் உத்தரமில்லைதான் என்று எம்பெருமான் தலைகவிழ்ந்து தரையைக்கீறி நின்றானாக; (நெறி காட்டி நீக்குதியோ என்கிற பாட்டில் கேட்ட கேள்வியாவது—உபாயாந்தரத்தைக் காட்டி அகற்றப் பார்க்கிறாயோ? உன்னுடைய விலக்ஷணமான திருமேனியை நீயே காட்டி அநுபவிப்பிக்கத் திருவுள்ளம் பற்றுகிறாயோ? என்பதாம். * அருகுஞ் சுவடும் என்கிற பாட்டில் கேட்ட கேள்வியாவது=எம்பெருமானே! நான் உன்னருகே வரவுமில்லை, உன்னுடைய சுவடுகளை அறிந்தேனுமல்லேன்; இப்படியிருக்க உன்னளவிலே அன்பு அதிகரித்து வாரா நின்றது; இதற்கு என்ன காரணம் சொல்லாய் என்பதாம்.)

அமந்த்ரஜ்ஞோத்ஸவ கோஷம்போலே ஏறப்பெறுகிற எழுச்சியை ஸூசிப்பிக்கிற மேக ஸமுத்ர பேரீநாதகாஹள சங்காசீஸ்ஸ்துதி கோலாஹலம் செவிப்பட்டவாறே—கல்யாண காலங்களில் உபாத்தியாயர்களுக்கு மந்த்ரம் தோன்றாவிட்டால் மேளம் கொட்டச் சொல்லி வாத்ய கோஷத்தாலே அத்தை மறைத்துவிடுவதுண்டு; அதுபோலே எம்பெருமானும் தான் ஆழ்வார்க்கு உத்தர முரைக்கமாட்டாது நின்றமை தோற்றாதபடி மறைக்கைக்காகச் சில முழக்கங்களை உண்டு பண்ணினானாயிற்று. அது * சூழ்விசும் பணிமுகில் * என்கிற திருவாய்மொழியிலே விசதம். * சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கின ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின * என்று, ராஜகுமாரர் போம்போது

வாத்யம் முதலிய மங்கள கோஷம் பண்ணுவாரைப்போலே பரம பதத்துக்குப் போமவர்களைக்கண்ட ப்ரீதியாலே முழங்குகிற மேகங்களென்ன ஸமுத்ரங்களென்ன இவையாகிற பேரிகளினுடையவும், * கீதங்கள் பாடினர் கின்னரர் கருடர்கள் * என்கிற கீதங்களினுடையவும், * காளங்கள் வலம்புரிகலந் தெங்கு மிசைத்தனர் * என்கிற காஹள சங்கங்களினுடையவும், * வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் * என்கிற ஆசீஸ்ஸினுடையவும், * தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர் * என்கிற ஸ்தோத்திரத்தினுடையவும் கலந்த கட்டியான கோஷமாகிற கோலாஹலம் செவிப்பட்டதாயிற்று ஆழ்வார்க்கு [ஏறப்பெறுகிற எழுச்சியை ஸூசிப்பிக்கிற] * நானேறப் பெறுகின்றேன் * என்று தாம் கீழ்ச்சொன்னபடியே பரமபதத்தாலே ஏறப்பெறுகிற எழுச்சியை [புறப்பாட்டை]த் தெரிவிக்கின்ற என்றபடி.

**ஸாக்ஷாத்கரித்த பரப்ராப்திக்கு**—கீழ்ச்சொன்ன கோலாஹலம் செவிப்பட்டவுடனே அர்ச்சிராதி கதியென்ன ஆதிவாஹிக ஸத்காரமென்ன திவ்யதேசப்ராப்தியென்ன. அங்குள்ளாருடைய பஹுமாநமென்ன, ஆநந்தமயமான ஆஸ்தானத்தில் இருப்பென்ன, பகவச்சரணாரவிந்த ப்ராப்தியென்ன ஆக இவ்வளவும் பெற்றாராகப் பேசும்படி பரப்ராப்தியை ஸாக்ஷாத்கரித்தாராயிற்று ஆழ்வார். அப்படி ஸாக்ஷாத்கரித்த பரப்ராப்திக்கு,

**தலைமிசையாய்வந்த தாள்களைப் பூண்டு போகாமல் தடுத்துத் திருவாணையிட்டு**—(அந்த பரப்ராப்தியானது மாநஸாநுபவ மாத்திரமாய் பாஹ்யஸம்ச்லேஷ யோக்யமல்லாமையாலே அத்தைப் பெறுகைக்காக, மாநஸாநுபவ வைசத்யத்யாலே) தம் தலைமேல் ஆகும்படி வந்த திருவடிகளைக் கட்டிக்கொண்டு போகாமல் தடுத்து * திருவாணை நின்னாணை கண்டாய் * என்று அவனுக்கு மறுக்கவொண்ணாத ஆணையிட்டு, (இப்படி ஆணையிட்டவாறே 'சேஷபூதரான நீர் சேஷியான நாம் செய்தபடி கண்டிருக்க வேண்டுமேயொழிய நம்மை ஆணையிட்டுத் தடுக்கை உம்முடைய ஸ்வரூபத்தோடு விருத்தமாகையாலே இது பெறுவாணைகாணும்' என்று எம்பெருமான் சொல்ல; அதற்கு ஆழ்வார் * நேசஞ் செய்துன்னோடென்னை உயிர் வேறன்றியொன்றாகவே கூசஞ் செய்யாது கொண்டாய் * என்று தொடங்கி * முதல்தனி வித்தேயோ * என்கிற பாசுரமளவாக ஒவ்வொரு பாசுரத்திலும் எம்பெருமான் வாய் திறக்க வொண்ணாதபடியான கோடிகளைச்சொல்லி, தாம் இட்ட ஆணை பெறுவாணையன்று என்னுமிடத்தை ஸாதித்தாரென்கிறது இனி.)

**கூசஞ்செய்யாத செய்திப்பிழை**—எம்பெருமானே! ஸர்வஜ்ஞனான நீ என்னுடைய அயோக்யதையைப் பார்த்துக் கூசி என்னை ஒதுக்கவேண்டியிருக்க அப்படி ஒதுக்காமல் உன்னோடு ஆத்மபேத மில்லாதபடி என்னைப் பரிக்ரஹித்தாய்; இது உன்னுடைய பிழையல்லவா? இந்தப்பிழையை நீ பரிஹரித்துக் கொள்ளவேண்டாவா? என்றார்—* கூசஞ்செய்யாது கொண்டாய் * என்பதனால்.

**பற்றுக்கொம்பற்ற கதிகேடு**—கொடியானது கொள்கொம்பையொழியத் தரிக்கமாட்டாதாப்போலே என்னாத்மாவுக்கு ஜீவன ஹேதுவாயிருக்கிற உன்னையொழிய நான் தரிக்கமாட்டேனென்று தம்முடைய அநந்யகதித்வத்தைக் கூறினார் * ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்யான் * என்பதனால்.

**போரவிட்ட பெரும்பழி**—பிரானே! என் காரியத்தை நீ செய்வதாக ஏறிட்டுக் கொண்டு. உன்பக்கல்நின்றும் என்னைப்பிரித்து உன்குணங்கள் நடையாடாத ஸம்ஸாரத்திலே தள்ளி உபேக்ஷிக்கிறாயே இது உனக்குப் பரிஹரிக்கவொண்ணாத பெரும் பழியன்றோ வென்றார்— * எம்பரஞ்சாதிக்கலுற்று என்னைப் போர விட்டிட்டாயே * என்ற பாசுரத்தினால்.

**புறம்போனால் வருமிழவு**—அநந்யகதியான வென்னை ஸ்ருஷ்டியே தொடங்கி இவ்வளவும் நிர்வஹித்த நீ என் காரியம் நான் செய்வேனாகப் பார்த்து என்னை உபேக்ஷித்தால் ஸர்வ சக்தியான நீ அநாதரித்தபின்பு அசக்தனான நான் எந்த வுபாயத்தைக் கொண்டு என்ன புருஷார்த்தத்தை ஸாதிப்பது? ஐயனே! என்னை என்கையிலே காட்டித்தந்தால் இழவேயன்றோவுள்ளது என்று பேசினார்—* போர விட்டிட்டென்னை நீ புறம்போக்கலுற்றால் பின்னையாரானொருவரைக் கொண்டென்த்தை யந்தோ எனதென்பதென் யானென்பதென் * என்கிற பாசுரத்தினால்.

**உண்டிட்ட முற்றீம்பு**—பிரானே! என்னுடைய ஹேயமான சரீரத்தையும் ஆத்மாவையும் நிரந்தரமாக புஜித்த நீ தொடங்கினதைக் குறைகிடக்கவிடாதே விஷயீகரித்து விடுவதே நலம்; புக்தசேஷமாக்கின உன்னதன்றோ முதல் தீம்பு என்று பேசினார் * என தாவியையின்னுயிரை மனக்காராமை மன்னியுண்டிட்டாயினியுண்டொழியாய் * என்கிற பாசுரத்தினால். [முன் + தீம்பு, முற்றீம்பு]

**அன்புவளர்ந்த அடியுரம்**—பெரிய பிராட்டியார் பக்கல் ஸ்நேஹாதிசயத்தாலே அவள் பரிக்ரஹமான என் பக்கல் அதிப்ரவணனானவனே! நான் அந்தஃபுரபரிகரமன்றோ? என் பக்கலுண்டான அன்புக்கு அடியில்லையா? ஆகையால் அவள் பரிக்ரஹமென்கிற அடியுரம் பாராய் என்று பேசினார் * கோலமலர்ப் பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ * என்றதனால். [அடியுரம்—மூலபலம்.]

**உயிருறவு**—எனக்கு தாரகனாக உன்னைப்பெற்றவைத்து இனி விடுவேனோ? உயிரை விட்டு உடல் தரிக்கவற்றோ வென்று சரீராத்மபாவ ஸம்பந்தத்தைக் காட்டிப் பேசினார் * பெற்றினிப் போக்குவனோ உன்னையென் தனிப்பேருயிரை * என்பதனால். (ஆக)

**முதலளவு துரக்கைகளாலே**—* முதல் தனிவித்தேயோ * என்கிற பாட்டளவாக அப்பெருமானுக்கு மறுவாய்திறக்க வொண்ணாதபடியான கோடிக்ரமங்களாலே. (**துரக்கை**—கக்ஷி.)

**பெருவாணையல்லவாக்கின பேரவா குளப்படி யாம்படி**—தாம் இட்ட ஆணை பெருவாணையல்லாமையை ஸாதித்தாராழ்வார். இவ்வளவு பேசுகைக்குக்காரணம் * அதனில் பெரிய வென்னவா * என்னலாம்படி தத்வத்ரயத்தையும் விளாக்குலை கொண்டு மிகப்பெரிதான தம்முடைய பரமபக்தியே. அதுவும் அற்பமென்னலாம்படி மிகமிகப் பெரிதாயிருந்தது எம்பெருமானது அபிநிவேசம். ஆக, ஆழ்வார் தம்முடைய அவா மிகச் சிறிதென்னலாம்படி, [குளம்பு + அடி, குளப்படி.]

**கடல்போன்ற ஆதரத்தோடே சூழ்ந்து தாபங்களை ஹரித்தமையை வெளியிடுகிறார் பத்தாம்பத்தில்**—இவருடைய அபிநிவேசத்தையும் அவனது ஆதரத்தையும் பார்த்தால் ஆழ்வாருடையது குளப்படியென்றும் அவனுடையது ஒரு கடலென்றும்

சொல்லலாம்படியாயிற்றே; அப்படிப்பட்ட அபிநிவேசத்தோடே எம்பெருமான் வந்து ஸம்ச்லேஷித்து, தம்முடையவிடாய் கெடும்படி அநுபவிப்பித்து, முன்பு இழவோடே கூப்பிட்டவாயாலே * அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சடகோபன் * என்று, பேசும்படியாகி, * அவாவறச் சூழரியை * என்று, ஹரியென்கிற திருநாமத்துக்குத் தகுதியாகத் தம்முடைய ஸகலதாபங்களையும் ஹரித்தமையை எல்லாருமறிய ப்ரகாசிப்பித்தருளுகிறார் பத்தாம்பத்தில். ... .. .... (238)

(மு,) 229 உருமையோடே உற்றேனுக்கா தொழிந்தது நாடுதிருந்த நச்சுப் பொய்கை யாகாமைக்கு ப்ரபந்தம் தலைகட்ட வேர்சூடுவார் மண் பற்றுப்போலே யென்னுமவற்றிலும் இனி யினியென்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தியதிகாரபூர்த்திக் கென்னுமது முக்யம்

[ப்ரார்த்தித்தபோதே ஆழ்வார்க்கு மோக்ஷமளிக்காமைக்குக் காரணங்கள் கூறுதல்.]

(ப,) 229. உருமையோடே உற்றேனுக்காதொழிந்தது—* பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை யினியாமுறாமை * என்று ஆழ்வார் பிரார்த்தித்த போதே * உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன் * என்னும்படி யருள்செய்யாமல் இவரை இந்நிலத்திலே வைத்திருந்தது (எதற்காக வென்னில்);

**நாடுதிருந்த**—தன்னுடைய ஸ்ருஷ்டி அவதாரம் முதலானவற்றாலும் திருந்தாத ஜகத்து இவருடைய உபதேசங்களாலே திருந்துகைக்காக;

**நச்சுப்பொய்கை யாகாமைக்கு**—ப்ரார்த்தித்தவுடனே மோக்ஷம் கொடுத்துவிட்டால் ப்ரபத்தியை விஷப்பொய்கையாக நினைத்துத் தன்பக்கலிலே ஒருவரும்வந்து ப்ரார்த்திக்கக்கமாட்டார்களென்று நினைத்து அது அப்படியாகாமைக்காக;

**ப்ரபந்தம் தலைக்கட்ட**—தானும் தன் விபூதியும் வாழும்படி இவரைக்கொண்டு கவிபாடுவிக்கத் தொடங்கின ப்ரபந்தம் முடிவதற்காக;

**வேர்சூடுவார் மண்பற்றுப்போலே**—வேர்சூடுமவர்கள் பரிமளத்தில் விருப்பத்தாலே மண்பற்றுக் கழற்றாதாப்போலே ஜ்ஞாநிகளை சரம சரீரத்தோடே வைத்து அநுபவிக்குமவனுகையாலே இவருடைய ஜ்ஞான ப்ரேம பரிமள மெல்லாம் தோற்றும்படி யிருக்கிற திருமேனியில் தனக்குண்டான விருப்பத்தாலே,

**என்னுமவற்றிலும்**—என்றிப்படி சொல்லப்படும் ஹேதுக்களிற்காட்டிலும்,

**இனியினியென்று இருபதின்கால் கூப்பிடும் ஆர்த்தி அதிகார பூர்த்திக்கென்னுமது முக்யம்**—* இனியாமுறாமை * என்று தொடங்கி * உன்னைப் பெற்று இனிப்போக்குவனோ * என்னுமளவாக || இருபதின்கால் இனியென்று சொல்லிக் கூப்பிடும்படியான ஆர்த்தி பரம்பரையை விளைத்தும் பரமபக்தியளவான அதிகார பூர்த்தியை

|| இனியினியென்று இருபதின்கால் கூப்பிட்ட பாசுரங்களின் விவரணம் வியாக்கியானத்திலே காண்க. அடுத்த சூர்ணையில் கண்டேனென வருவதாகக் கூறும் பத்துப்பாசுரங்களும் காணவிரும்புவதான இருபது பாசுரங்களும் அப்படியே.

விளக்கைக்காகவே (பேறு பெறுவிக்கத் தாமதித்தது) என்று சொல்லுமிக்காரணமே முக்கியமானது. ... ... ... ... (229)

(மு.) 230. **கமலக்கண்ணனென்று தொடங்கிக் கண்ணுள் நின்றிறுதி கண்டேனென்ற பத்தும் உட்கண்ணாலேயாய் காண்பானவாவுதல் அதிவிரட்டியாகையாலே கண்டு களிப்பவளவும் பரஜ்ஞான கர்ப்ப பரபக்தி.**

(ப) 230. **கமலக்கண்ணனென்று தொடங்கி**—* கமலக்கண்ணனென் கண்ணினுள்ளான் * என்று, கண்டதாகச் சொல்லுகிற இப்பாசுரம் தொடங்கி,

**கண்ணுள் நின்றிறுதி**—* கண்ணுள் நின்றகலான் * என்பதளவாக,

**கண்டேனென்றபத்தும்**—பத்துப்பாசுரங்களினுல்சொன்ன ஸாக்ஷாத்காரமானது

**உட்கண்ணாலேயாய்**—* நெஞ்சென்னு முட்கண் * என்கிற உட்கண்ணான மனஸ்ஸாலே யுண்டானதாய்,

**காண்பானவாவுதல் அதிவிரட்டியாகையாலே**—* கையபொன்னாழி வெண்சங்கொடுங் காண்பானவாவுவன் நான் * என்று தொடங்கி வெளிக்கண்ணாலே அவனைக்காணவாசைப் பட்டுக் கூப்பிட்ட பாசுரங்கள் அதிவிரட்டிப்பாய் இருபது சந்தைகளாக வுண்டாகையாலே,

**கண்டுகளிப்பவளவும்**—* கண்டுகளிப்பக் கண்ணுள் நின்றகலான் * என்கிற வரையில்,

**பரஜ்ஞாநகர்ப்ப பரபக்தி**—(உள்ளே அநுபவம் செல்லாநிற்கப் பெற்றன்றித் தரியாத பாஹ்யாநுபவ அபேக்ஷை நடக்கையாலே) பரஜ்ஞானத்தை உட்கொண்டிருக்கிற பரபக்தி தசையாம். .... ... ... (230)

(மு.) 231. **இருந்தமையென்றது பூர்ணபரஜ்ஞானம்.**

(ப.) 231. **இருந்தமை யென்றது**—* அந்தமில் பேரின்பத்தடியரோ டிருந்தமை * என்று, நித்யஸூரிகள் திரளிலே கூடியிருந்ததாகக் கண்டுபேசின * சூழ் விசும்பணிமுகிற் பதிகமானது,

**பூர்ணபரஜ்ஞானம்**—பரிபூர்ணமான பரஜ்ஞானதசை. ... (231)

(மு.) 232. **முடிந்தவவாவென்றது பரம பக்தி.**

(ப) 232. **முடிந்த அவாவென்றது**—பிறகு பேற்றோடே தலைக்கட்டின * முடிந்தவவாவிலந்தாதியிப்பத்து * என்கிற * முனியே நான்முகன் பதிகம்,

**பரமபக்தி**—பக்தியினுடைய சரமாவதியான பரமபக்தி தசை. .... (232)

(மு.) 233. **இவை ஜ்ஞானதர்சந ப்ராப்த்யவஸ்தைகள்**

(ப.) 233. **இவை**—கீழ்ச்சொன்ன பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள்,

**ஜ்ஞாந தர்சந ப்ராப்தி அவஸ்தைகள்**—* ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப * என்று கீதையிலும், * மத் ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு * என்று

கத்யத்திலும் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜ்ஞாநாவஸ்தையும் தர்சநாவஸ்தையும் ப்ராப்த்யவஸ்தையுமாம். [பரபக்தியானது ஜ்ஞாநாவஸ்தையாகவும், பரஜ்ஞாநமானது தர்சநாவஸ்தையாகவும் பரமபக்தியானது ப்ராப்த்யவஸ்தையாகவும் சொல்லப்படுமென்கை] ... ... ... ... (233)

(மூ.) 234. அவித்யா நிவர்த்தக ஜ்ஞாந பூர்த்திப்ரத பகவத் ப்ரஸாதாத் மோக்ஷலாபமென்கை மயர்வற வீடுபெற்றவென்ற ப்ரபந்தைகார்த்தயம்.

(ப.) 234. அவித்யா நிவர்த்தக ஜ்ஞாநபூர்த்திப்ரத பகவத்ப்ரஸாதாத் மோக்ஷலாபமென்கை—ஸம்ஸாரத்திற்கு அடியான அஜ்ஞானத்தைப் போக்கவல்லதான ஜ்ஞாந பூர்த்தியை யுபகரித்த பகவானுடைய நிர்ஹேதுகமான அநுக்ரஹத்தாலே ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வக பகவத் ப்ராப்தி ரூபமான மோக்ஷத்தினுடைய பேறு—என்று தெரிவிப்பதுதான்,

மயர்வற வீடுபெற்ற வென்ற ப்ரபந்த ஐகார்த்த்யம்—* மயர்வற மதிநல மருளினன் * என்று தொடங்கி * அவாவற்று வீடுபெற்ற * என்று தலைக்கட்டின திருவாய்மொழியாகிய திவ்ய ப்ரபந்தத்திற்கு ஒன்றான பரமதாத்பர்யம். ... (234)

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்யர் இயற்றிய
ஆசார்யஹ்ருதயப் பதவுரை
முற்றிற்று.

— சாத்துத் தனியன் —

தந்தருள வேணும் தவத்தோர் தவப் பயனாய்
வந்த முடும்பை மணவாளா சிந்தையினால்
நீயுரைத்த மாறன்நினைவின் பொருளனைத்தென்
வாயுரைத்து வாழும் வகை.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்